உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மீநாக்ஷிஸுந்தரேஸ்வராயநம:

---

சுத்தசைவராகிய

## ஸ்ரீபரஞ்சோதிமாமுனிவர்

அருளிச்செய்த

மதுரைச் சோமசுந்தரக்கடவுள்

# திருவிளையாடற்புராணம்.

---

## கூடற்காண்டமூலம்.

---

சென்னை கிரிஸ்டியன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதர்

ஈக்காடு - இரத்தினவேலுமுதலியார்

இயற்றிய பொழிப்புரையோடும்,

---

தா-குப்புசாமிநாயகரவர்களால்

தமது

சென்னை ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1899.

# கூடற்காண்டப் படல அகராதி.

சிவமயம்.

# திருவாலவாய்க்காண்டப் படல அகராதி.



நான்மாடக்கூடலான படலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீமீநாக்ஷிஸுந்தரேஸாயநம:

---

# கூடற்காண்டம்.

## பத்தொன்பதாவது,

## நான்மாடக்கூடலான படலம்.

### பரசிவவணக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல விவையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ணோவ வளையிந்த ஞதி பகர்வர்ளை யாயு மவரே.

(இ-ள்.) மதுராபுரியின் திருவீதியில் (தமது) திருவடிகள், நோவ வளையயும் விறகும் முதலியனவற்றை விற்றருளிய சோமசுந்தரப்பெருமானை (நூன்முறையால்) ஆராய்ந்தறியும் அறிவுடையோர், (பிருதிவி) முதலிய ஐம்பூதங்களுமல்ல; ஞானேந்திரியங்களுமல்ல; பிறபுலன்களுமல்ல; மனமுதலிய அந்தக்கரணங்களின் விகற்பங்களுமல்ல; (அப்பூத முதலிய மேற்கூறிய) இவையல்லாமலும் (சேடித்து) நின்ற ஆன்மாவுமல்லவென்று, பெருமைபொருந்திய நூலாகிய வேதமானது (நிச்சயிக்கமாட்டாமல்) கிடந்து தடுமாறிநிற்கும் வெறுவெளியெனக்கூறுவர். எ-று.

முதலியன வென்றதனால் மாணிக்கமும் குதிரையும் விற்றதுங்கொள்க.

மதுரைக்காண்டத்தில், "சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பரமுத்தி யானமுதல்" என்ற செய்யுளிற்போந்த "முதல்" என்னும் நிஷ்கள சிவத்தி னிலக்கணத்தை வற்புறுத்தற்கு இப்பாயிரம் எழுந்தது என்க.

இனி பிருதிவி - அப்பு - தேயு - வாயு - ஆகாய மென்னும் பூதங்கள் ஒன்றி னொன்று தோன்றி முத்தொழிற் கேதுவாகித் தோன்றிய முறையே லயமடைதலின், அவற்றிற்கு மேம்பாடுடையானொருவன் கருத்தாவாக நின்று அவற்றைத் தொழிற்படுத்தவேண்டுமாதலின் உலோகாயதனை மறுத்து "பூதங்களல்ல" என்றும், மெய்-வாய்-கண் - மூக்கு - செவி என்னும் ஐம்பொறிகளில் ஒன்றனையுணரும் பொறி பிறி தொன்றினை யுணராமையின், அவற்றைத் தொழிற்படுத்துவானொருவன் வேண்டுமாதலின் சங்கிராந்தவாதியை மறுத்து "பொறியல்ல" என்றும், சுவை - ஒளி - ஊறு - ஓசை - நாற்றமென்னும் புலன்கள் மூலப்பகுதியாகிய சடத்திற் றோன்றினமையால் அவற்றையுந் தொழிற்படுத்துவோ னொருவன் வேண்டி சாங்கியனை மறுத்து "புலனல்ல" என்றும், இந்திரியங்கள் அந்தக்கரணங்களையின்றிச் சத்தாதி விடயங்களை

யரிதலின்மையின் அவற்றையுந் தொழிற்படுத்துவான்வேண்டி அச் சங்கிராமவாதியை மறுத்து "உள்ளமதியின் பேதங்களல்ல" என்றும், ஆன்மாவானது தனக்கு வேண்டிய இந்திரியங்களைப் பொருந்தி விஷயங்களை நுகர்ந்தும் ஓர் வினைமுதல் அறிவிக்க அறியும் சதசத்தாகலின் ஈஸ்வர அவிகாரவாதியை மறுத்து "பிறிதல்ல" என்றும், இவ்வாறு சமயவாதிகளை மறுத்தவர், மேல் நிஷ்கள் சிவத்தின்லக்ஷணத்தை வற்புறுத்தவேண்டி, அச்சிவம் பிரபஞ்ச காரியத்திற்குத் தனக்கோர் உபாதான காரணமாய் நின்ற சுத்தமாயை அசுத்தமாயை சுத்தாசுத்தமாயை என்னு மிவற்றிற்கு அப்பாற்பட்ட நிலையாதலின் "வஞ்சவெளி" என்றுங் கூறினர்.

இச்செய்யுளால், உலோகாயதன் முதலிய புறமதகண்டனங்கூறிப் பரசிவ வணக்கஞ் செய்யப்பட்டது. இதன் கருத்தை "அல்லையீ தல்லையீதென மறைகளு மன்மைச் - சொல்லினாற் றுதித்திளைக்குமிச் சுந்தரன்" என இந்நூலாரும்; "வேதங்களையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என மணிவாசகரும் முதலிய மேலோர்கூற்றானறிக.

இம் மதுரைத்திருநகரத்திற்குச் சிவலோக முதலிய பல திருநாமங்களிருந்தும் இச்செய்யுளிற் கூடல் என்று கூறவந்தது இக் காண்டத்தின் பெயரும், இப்படலத்தான் அத்திருநாமம் எய்திய காரணமும் விளங்குதல் வற்புறுத்தற்கெனக் கொள்ளக்கிடந்தது. (க)

## சிவசத்திவணக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் ஞானப்
பெருமக ளுதற்க ணாகப் பெற்றுவான் செல்வங் கல்வி
யருமைவீ டளிப்பாள் யாவ ளவளுயிர்த் துணைவன் காண
வொருமுலை மறைந்து நாணி யொசிந்தபூங் கொம்பி னின்றாள்.

(இ-ள்.) இலக்குமியே வலக்கண்ணும் சரஸ்வதியே இடக்கண்ணும்பரஞானமாதே நெற்றிக்கண்ணுமாகப்பெற்று, பெருஞ்செல்வத்தையும் கல்வியையும் அடைதற்கரிய மோக்ஷத்தையும் அனுக்கிரகிப்பவள் எவள் அத்தலைவியே (தனது) உயிர்த்துணைவராகிய சிவபெருமான் நோக்கியருள (மூன்று திருத்தனங்களில்) ஒரு திருத்தனம் மறைந்து நாணமுற்றுத் துவண்ட பூங்கொம்பைப்போல நின்றருளினாள். எ-று.

"பரையாதி விருப்பறிவு தொழிலாகி யுலகமெலாம் படைத்துக் காத்து - வரையாது துடைத்துமறைத் தருளியவை நின்றுந்தன் வடிவு வேறு-யுரையாதி மறைகடந்த வொருமுதல்வி" என இந்நூலிற் கூறியவாறு, சிற்சத்தியே சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்கட்கு இச்சை முதலிய ஐவகைச் சத்திபேதமுற்று நிற்றலின், இச்சாசத்தியாகத் திருமகளையும், கிரியாசத்தியாகக் கலைமகளையும் கூறினர். இன்னும் இச்செய்யுளுக்கு வேண்டுவனவாகிய விஷயங்கள் முன்னும் பின்னும் விரவிக்கிடத்தலின் ஆண்டுக் கண்டுகொள்க. (௨)

ஒளிர்மதி மிலைந்த வேணிக் கண்ணுதல் வருண னேய
வதிர்கடல் வறப்பச் செய்த வாடலீ தனையா னேய
முதிர்மழை யேழின் மேலு முன்னைநான் முகிலும் போக்கி
மதுரைநான் மாடக் கூட லாக்கிய வண்ணஞ் சொல்வாம்.

(இ-ள்.) பிரகாசிக்குஞ் சந்திரனைத் தரித்த சடைமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள் வருணன் விடுத்த சத்திக்கின்ற கடலை வற்றச்செய்தருளிய திருவிளை

யாடல் இது. அவ்வருணன் ஏவிய முதிர்ந்த சத்தமேகங்களின் மேலும் முன்போல (அப்புட்கலாவர்த்தமுதலிய) நான்கு மேகங்களையும் விடுத்து, மதுரையை நான்மாடக் கூடலாகச் செய்தருளிய திருவிளையாடலை (இனி யாம்) கூறுவாம். எ-று.

"கதிர்மதி மிலைந்த வேணி" என்னும் விசேடணம் குற்றஞ்செய்த சந்திரன் தன்னைச் சரணடைந்த காலத்து, குற்றஞ் செய்தோனெனக் கருதாது சிவபெருமான் அவனைச் சிரமேலணிந்ததுபோல, யாவர் சரணடையினும் அவரை யெல்லாங்காப்பர் என்னுங் கருத்துத் தோன்றக் கூறப்பட்டதாதலின், இச்செய்யுள் கருத்துடையணி யென்க. (௫)

எற்றுதெண் டிரைநீர்ச் சேர்ப்பன் றன்செய லிழுக்கி நாணு
முற்றிரு கண்ணுஞ் சேப்ப வுடன்றெழு கோபச் செந்தீப்
பற்றிட வாகம் வெம்பிப் பரவையும் யாறும் வெந்து
வற்றிட வெகுண்டு நின்றான் மானமும் வலியுங் குன்றான்.

(இ-ள்.) (கரையை) மோதுகின்ற தெள்ளிய அலைகள் பொருந்திய கடற்றுறைக்குத் தலைவனாகியவருணன், தனதுசெயல் தவறுபாடுற்று நாணங்கொண்டு இரு விழிகளும் சிவக்கக் கொதித்தெழுந்த செவ்விய கோபாக்கினி மூள, தேகங்கருகிக் கடலும் யாறும் (அக்கோபத்தீயால்) வெந்துவற்ற, தனதுமானமும் வலிமையுங் குறையாதவனாகிக் கோபித்து நின்றான். எ-று. (௬)

நளிர்புனன் மதுரை மூதூர் நாயக னாட றன்னைத்
தெளிகில னாகிப் பின்னுஞ் செழுமுகி லேழுங் கூவிக்
குளிர்கடல் வறந்த தென்னக் குடித்தெழுந் திடித்துப் பெய்யா
வொளிவளர் மதுரை முற்று மொல்லெனக் களைமி னென்றான்.

(இ-ள்.) தண்ணிய நீர்சூழ்ந்த மதுரையாகிய பழைய திருநகரில் எழுந்தருளிய சோமசுந்தரப்பெருமானது திருவிளையாடலைச் சிறிதும் தெளியாதவனாகி, மீண்டும் குறைவில்லாத சத்தமேகங்களையும் விளித்து, குளிர்ந்த கடலும் வறந்ததென்று (கண்டோர்) சொல்ல (நீரை) ப்பருகிமேலெழுந்து, இடித்துப் பொழிந்து கீர்த்தி மிகுந்த மதுரைநகர முழுவதும் விரைவாக அழியுங்களென்று கட்டளையிட்டான். எ-று.

ஒளி - உவமையாகு பெயர். (௭)

பொள்ளென மேக மேழும் புகுந்துபார் தெரிய முந்நீர்ப்
பள்ளமும் வறப்ப முற்றப் பருகிமெய் கருகி மின்னித்
தெள்ளருந் திசையும் வானுஞ் செவிடுறப் பிலமும் பாரும்
விள்ளமால் வரைக ளெட்டும் வெடிபட மேருச் சாய.

(இ-ள்.) சத்த மேகங்களும் விரைவாகக் (கடலில்) சென்று நிலந்தோன்றக் கடலாகிய பள்ளமும் வற்ற (நீரை) முற்றப் பருகி (மேலே கிளம்பி) உடல்கருகி (சூல் கொண்டு) மின்னலைவீசி (கட்புலன்களுக்கு) த்தோன்றுதற்கரிய (அஷ்ட)திசைகளும் ஆகாயமும் செவிடுபடவும், பாதலலோகமும் பூலோகமும் பிளவுபடவும், பெரிய (அஷ்டகுல) பர்வதங்களும் பொடிபடவும், மேருமலை சாயவும். எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் ஒருதொடர். (௮)

ஊழிநாள் வெடிக்கு மண்ட கடாகத்தி னொலிபோ லார்த்துப்
பாழிவா னுருமு வீழப் பணாடவி மணிகள் சிந்தி
யாழிநீர் ஞாலந் தாங்கு மராவுட னெளியத் திக்கிற்
சூழிமால் யானை நின்ற நிலைகெடத் துணுக்கங் கொள்ள.

(இ-ள்.) ஊழிக்காலத்தில் வெடிபட்டுடையும் அண்டகடாகத் தோசைபோலக்கோஷித்து, மிகவும் பெரிய இடியேறுகள் விழவும், கடல்சூழ்ந்த பூமியைத் தாங்கும் ஆதிசேடன் (தனது) ஆயிரம் படங்களிலுமுள்ள சிரோமாணிக்கங்களைச் சிதறி (தனது) உடலை நெளிக்கவும், திக்குகளில் நின்ற முகபடாமணிந்த பெரிய அஷ்டகஜங்கள் நிலைகெடும்படி நடுக்கங் கொள்ளவும். எ-று. (எ)

வெள்ளிய நீறுபூத்து முழவென வீங்கு காய்போற்
றெள்ளிய வாலி சிந்தத் திரண்டதிண் பளிக்குத் தூண்போ
லொள்ளிய தாரை சோர வும்பர்மீன் கணங்க ளோடுந்
துள்ளிய திரையி லாடு மீன்கணந் துடித்து வீழ.

(இ-ள்.) வெண்ணிறம்பொருந்திய நீற்றினைப் (புறத்திற்) பூத்து, மத்தளம் போலப்பருத்த பூசனிக்காய்போலத் தெளிந்த மழைத்துளிகளைச் சிந்தவும், திரண்ட திண்ணிய பளிக்குக்கல்லாலாகிய தூணைப்போல ஒளி பொருந்திய மழைத்தாரைகள் சோரவும், மேலிடத்துள்ள நக்ஷத்திரங்களாகிய (நாண்)மீன் கூட்டங்களோடுந் துள்ளிச்செல்லும் அலைகளில் ஆடுகின்ற மீன்கூட்டங்கள் தாவிவிழவும். எ-று. (அ)

ஆர்த்தெழு கொண்மூ வேழுஞ் சராசர மனைத்துஞ் சூழ்ந்து
போர்த்தன, ஞால முண்ணப் புக்கதோர் வடிவங் கொண்ட
தீர்த்தனில் விசும்பும் பாருந் திசைகளுந் தெரியா வாகப்
பார்த்தகண் ணுழையா வாகப் பரந்திருள் கான்ற வன்றே.

(இ-ள்.) கோஷித்தெழுந்த சத்தமேகங்களும் சராசரங்களை யெல்லாம் சூழ்ந்து புறத்திற் போர்த்தன. உலகமுழுதும் அழிக்கும்படிசென்ற ஒப்பற்ற திருவுருவங்கொண்டருளிய பிரளயகால ருத்திரமூர்த்தியைப்போல ஆகாயமும் பூமியும் (எட்டுத்)திசைகளும் மறைபடவும், பார்த்தகண் (இருள் நெருக்கத்தால்) செல்லாதொழியவும் பரவிய விருளை (அம்மேகங்கள்) வெளிப்படுத்தின. எ-று. (கூ)

பைஞ்சுட ரெறிக்கும் பச்சை காரொளி பரப்பு நீலம்
புஞ்சவா ளுடுக்க ளன்ன நித்திலம் பொன்னங் குப்பை
செஞ்சுடர் மணிக டுப்புச் சிதறுவ கணவ ரோடும்
விஞ்சையர் மகளி ரூடி வெறுத்தெறி கலன்கள் போல.

(இ-ள்.) பசிய கிரணங்களை வீசும் மரகதங்களையும், கரிய ஒளியை வீசும் நீலங்களையும், திரண்ட ஒள்ளிய நக்ஷத்திரங்கள் போன்ற முத்துக்களையும், அழகிய பொற்குப்பைகளையும், சிவந்த கிரணங்களையுடைய பதுமராகங்களையும், பவளங்களையும், வித்தியாதரஸ்திரீகள் (தத்தமக்குரிய) கணவர்களோடும் பிணக்குற்று, வெறுத்து (கழற்றி) வீசின ஆபரணங்களைப்போலச் (சத்தமேகங்களும் அஷ்டதிக்குக்களிலும்) சொரிந்தன. எ-று. (க0)

கடியசக லுதைப்பப் பெய்யுங் கடுஞ்செல வெழிலி மாடக்
கொடியநீ ணகரைச் சூழ்ந்து புதைத்தலுங் கோலொன் றோச்சிப்
படியெலாம் புரக்குங் கோனு நகருளார் பலரு ஞால
மடியுநா ளிதுவோ வென்று மயங்கினா ருயங்கி னாரே.

(இ-ள்.) அச்சத்தைத்தரும் (பெருங்)காற்றடித்துத் தாக்க விரைந்து செல்லுதலையுடைய பெய்யாநின்ற சப்தமேகங்களும் கொடிகள் கட்டிய மாடங்கள் நெருங்கிய நெடிய மதுரைநகரத்தைச்சூழ்ந்து போர்க்கவும், ஒப்பில்லாத செங்கோலைச்செலுத்தி உலகமுழுவதையும் பாதுகாக்கும் அபிடேகபாண்டியனும் அந்நகரிலுள்ளோர்

எல்லாரும் உலகமுழுதும் அழியும்(சங்கார) காலம் இக்காலமேயென்று மயங்கிச்சோ ர்ந்தார்கள். எ-று. (கக)

கண்ணுதன் மூர்த்தி தானே யின்னமுங் காக்கு மென்னுப்
புண்ணிய நகரா ரோடும் பொருக்கெனக் கோயி லெய்தி
விண்ணிழி விமான வாழ்க்கை விடையவ னடிக்கீழ் வீழ்ந்தா
னண்ணலா ராடன் முன்னு மறிந்துகை கண்ட வேந்தன்.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுள் (தனது நிமித்தம்) முன்னமே செய்தருளிய திருவிளையாடலைத்தெரிந்து கைவந்த அபிடேகபாண்டியன், நெற்றிக்கண்ணையுடைய அச் சோமசுந்தரமூர்த்தியே இன்னமுங் காத்தருளுவாரென்று புண்ணியஸ்தலமாகிய அம்மதுரையில் உள்ளாரோடும் விரைந்து திருக்கோயிலையடைந்து, விண்ணுலகத்தி னின்றிழிந்த இந்திரவிமானத்தின்கண் வாழ்க்கையையுடைய இடபவாகனராகிய அச்சோமசுந்தரக்கடவுள் திருவடிக்கீழ் (சாஷ்டாங்கமாக)ப் பணிந்தான். எ-று. (கஉ)

விடையினை யால முண்ட மிடற்றினை கங்கை தாங்குஞ்
சடையினை கூற்றை வென்ற தாளினை மேருச் சாபப்
படையினை யடியேந் துன்பப் பாட்டினை நீக்கி யாளு
நடையினை யாகி யெங்க ணல்லுயிர் காத்தல் வேண்டும்.

(இ-ள்.) இடபவாகனருடனே! ஆலால விடபானஞ் செய்த ஸ்ரீ கண்டத்தை யுடையவரே! கங்காநதியைத் தாங்கிய சடைமுடியையுடையவரே! யமனை உதைத்தருளிய திருவடியை யுடையவரே! மகம் மேருவாகிய விற்படையை யுடையவரே! அடியேங்களது துன்பத்தை விலக்கி ஆட்கொண்டருளும் நடையினை யுடையவராகி, எங்களது நல்ல உயிர்களைக் காத்தருளல் வேண்டும். எ-று. (கந)

என்னலுந் தென்னர்க் கென்று மெய்திய விடுக்கண் டீர்க்கு
முன்னவன் முன்போ னன்கு முகிலையு நோக்கி யின்ன
தொன்னக ரெல்லை நான்குஞ் சூழ்ந்துநான் மாட மாகி
விண்ணெடு மாரியேழும் விலக்குமி னெனவி டுத்தான்.

(இ-ள்.) என்று விண்ணப்பஞ் செய்யவும், பாண்டியர்களுக்குச் சம்பவிக்குந் துன்பங்களை எக்காலத்துந் தீர்த்தருளுஞ் சோமசுந்தரக்கடவுள் முன்போல (புஷ்கலாவர்த்த முதலிய) நான்கு மேகங்களையும் பார்த்தருளி, இந்தத் தொன்றுதொட்டுள்ள மதுராபுரியின் நான்கு எல்லைகளிலும் (புறத்திற்) சூழ்ந்து, நான்குமாடங்களாய் (இந்த) ஒள்ளிய சப்தமகாமேகங்களையும் விலக்குங்கள் என்று கட்டளையிட்டருளினர்.

முன்னவன் - முதற்கடவுள். (கச)

வந்துநான் மாட மாகி வளைந்துநாற் றிசையுஞ் சூழ்ந்து
சந்துவாய் தெரியா தொன்றித் தாமொரு குடிலாய் மாடப்
பந்திகோ புரஞ்செய் குன்றங் கால்கள்போற் பரிப்பப் போர்த்த
விந்துவார் சடையோ னேவ வெழிலிமா நகரு மெங்கும்.

(இ-ள்.) சந்திரனை நெடிய சடையிற்றரித்த சோமசுந்தரப் பெருமான் ஏவிய மேகங்கள் (நான்கும்) வந்து நான்குமாடங்களாகி வளைந்து, நாற்றிசையிலுஞ் சூழ்ந்து, தாம் ஒரு குடிசையாகி, பொருத்துவாய் தெரியாமல் ஒன்றுபட்டு, மாடவரிசைகளும் கோபுரங்களும் செய்குன்றுகளும் கால்கள்போல்ச் சுமக்க, பெரிய அந்நகர் முழுமையும்போர்த்தன. எ-று.

வளைந்து நாற்றிசையுஞ் சூழ்ந்து - என்பதை இரண்டு யோசனை தூரம் சுற்றிலும் வளைந்து என வடநூல்கூறும். (கரு)

அன்னநான் மாடத் துள்ளு நகருளா ரமைச்சர் வேந்தன்
றன்னைநாற் கருவித் தானைச் சராசரம் பிறவுந் தாழ்ந்து
முன்னைநாட் டனினு மின்ப மூழ்கினன் கிருந்தா ரூழிற்
பொன்னனாள் பாகன் றாளிற் புக்கமர்ந் திருந்தா ரொத்தார்.

(இ-ள்.) அந்த நான்கு மாடங்களினுள்ளும் அந்நகரவாசிகளும் மந்திரிகளும் பாண்டியனும் அவனுடைய சதுரங்கசேனைகளும் (இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமான) சரம் அசரங்களும் மற்றுள்ளனவுந் தங்கி, முந்திய தினத்தில் (உண்டாகிய இன்பத்தைக்) காட்டிலும் அதிகவின்பத்தில் மூழ்கி நன்றாகவிருந்தனர். (ஆதலின்) ஊழிக்காலத்தில் உமாதேவியாரை அர்த்தபாகமுடைய சிவபெருமான் திருவடிநிழலில் இரண்டறக்கலந்தவரை ஒத்திருந்தார்கள். எ-று.

ஊழின் என்றதற்கு - தமது ஜன்மாந்தர நல்லூழின்படி எனினும் பொருந்தும். முன்னைநாள் என்றதற்கு வருணன் விட்ட கடலை வற்றச்செய்த காலத்தினும் என்றாவது நான்மாடக் கூடலான தினத்திற்கு முற்பட்ட தினத்திலும் என்றாவது பொருள்கொள்க. (கசு)

கழைகெழு வரையி னுச்சி கவிழ்கின்ற புயல்போற் கார்சூழ்ந்
திழைமணி மாடத் தும்ப ரொறிதுளி யுடைந்து துள்ளத்
தழைகடல் வறப்ப வாங்கித் தன்னுடல் வறப்பப் பெய்து
புழைகளும் வெள்கி நின்ற வருணனும் வெள்கி நின்றான்.

(இ-ள்.) மூங்கில்கள் நெருங்கிய மலையுச்சியிற்பெய்கின்ற மழைத்துளிகள் (உடைந்து துள்ளுவது) போல, மேகங்கள் சூழ்ந்து இரத்தினங்களழுத்திய மாடங்களின்மேலிற் பெய்யும் மழைத்துளிகள் உடைந்து துள்ள, பெருங்கடல் வற்ற முகந்து தமது தேகங்கள் பசையறப்பெய்து மேகங்களும் நாணிநின்றன. வருணனும் (தனது செயல் நிறைவேறாமையால்) நாணுற்று (அசைவற) நின்றான். எ-று. (கஎ)

நடுங்கினன் கழிந்த வச்ச நாணமீ தூர மான
மொடுங்கின னுள்ளத் துள்ளோ ருவகைவந் தெய்தப் பொற்பூத்
தடங்கரை குறுகா முன்னோய் தணிந்துபின் றோய்ந்து பாச
மடங்கினன் மடங்கா வன்பின் வள்ளலைப் பூசை செய்வான்.

(இ-ள்.) நடுங்கி மிகுந்த அச்சமும் நாணமும் அதிகரிக்க மானம் ஒழிந்து தன் மனத்துள்ளே ஒரு மகிழ்ச்சிவந்தடைய பொற்றாமரைத் தீர்த்தத்தின் பரந்த கரையை அடைதற்குமுன்னே நோயினின்றும் நீங்கி, பிறகு (அதில்) ஸ்நானஞ்செய்து அவிச்சையும் நீங்கி, நீங்காத பேரன்புடன் சோமசுந்தரக்கடவுளை அருச்சிக்கத்தொடங்கினான். எ-று.

இச்செய்யுளில் நடுங்கினன் - ஒடுங்கினன் - மடங்கினன் என்னும் வினைமுற்றுக்கள் வினையெச்சப்பொருளில் வந்தன. (கஅ)

புனிதநீ ராடிக் கண்டி பூண்டுவான் கங்கை யாதி
வனிதையர் பசும்பொற் கும்ப வாசநீர் வடித்து நீட்டப்
பனிமலர் சந்தங் கந்த மணிகலன் பசும்பொ னாடை
யினையன பிறவு மீன்று கற்பக மெடுத்துக் காட்ட.

(இ-ள்.) பரிசுத்தமாகிய திருவெண்ணீறணிந்து, ருத்திராக்ஷகண்டிகை தரித்து, ஆகாயகங்கை முதலிய (நதி) மங்கையர் பசும்பொன்னாற்செய்த கலசத்தில் வாசமூட்டிய நீரை வார்த்து (ஒருபக்கலில்) கொடுக்கவும், குளிர்ச்சிபொருந்திய மலரையும் சந்தனத்தையும் வாசனைத்திரவியங்களையும் இரத்தினாபரணங்களையும் பசிய பீதாம்பரத்தையும் இவைபோன்றனவாகிய பிறவற்றையும் பெற்றுக் கற்பகவிருக்ஷம் (ஒருபக்கலில்) எடுத்துக்கொடுக்கவும். எ-று. (கக)

ஐங்கனி யமுத மைந்துங் கௌவிய மமுது தூபஞ்
செங்கதிர் விளக்க மின்ன தேவரான் கொடுப்பச் சேற்க
ணங்கைதன் பதியைப் பூசித் தாயிர நாமங் கூறிப்
பைங்கதிர் முத்தஞ் சாத்தித் தொழுதடி பணிந்து நின்றான்.

(இ-ள்.) (வாழை முதலிய) ஐந்து கனிகளும் பஞ்சாமிர்தங்களும் பஞ்சகவ்வியங்களும் திருவமுதும் தூபமும் செவந்த வொளியையுடைய தீபமும் (ஆகிய) இவைபோல்வனவற்றைக் காமதேனு (ஒருபக்கலில்) வழங்கவும், அங்கயற்கண்ணம்மையார் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளை (ஆகமமுறைப்படி) பூசித்து, ஸஹஸ்ரநாமங்களால் துதித்து,(ஒவ்வொரு திருநாமத்திற்கும்) பசிய ஒளிபொருந்திய முத்துக்களைச் சாத்தி (அருச்சனைசெய்து) திருவடியிற்றொழுது பணிந்து நின்றனன் வருணன்.

அருச்சனை யுவந்த வாதி யமலனீ யாது வேண்டிற்
றுரைத்தியென் றோத நீர்க்கோ னொல்லைதாழ்ந் தொன்றி னாலும்
களைத்திட வரிய விந்தக் கடியவென் வயிற்று நோய்நின்
றிரைத்தட மாடி யின்னே தீர்ந்திடப் பெற்றே னென்றான்.

(இ-ள்.) (அவன் செய்த) அருச்சனையை மகிழ்ந்தருளிய முதற்கடவுளும் நிமலமூர்த்தியுமாகிய சோமசுந்தரப்பெருமான் நீ இச்சித்தது யாது? சொல்லுவாய் என்று வினவ, வருணன் விரைவில் பணிந்து ஒருவகையினாலும் நீங்குதலில்லாத இந்தக் கொடிய எனது வயிற்றுநோய் உனது அலைகள் பொருந்திய (பொற்றாமரைத்) தீர்த்தத்தில் நீராடி இப்பொழுதே தீரப்பெற்றேன். எ-று.

ஒன்றினாலும் என்றது மணி-மந்திரம்-ஔஷதாதிகளையுணர்த்தற்கென்க.

மேற்படி - வேறு.

வேதமுதற் கலைகாட்சி முதலளவை விரிஞ்சன்முதல் விண்ணோர் செய்
யுஞ், சோதனையு ளகப்படாச் சோதியுனைச் சோதிக்கத் துணிந்தேனந்தோ,
பேதைமையே னிடத்தென்ன குணங்கண்டென் பிணிதீர்த்தென் பெற்றா யா
சை, கோதமிலாய் குற்றமே குணமாகக் கொள்வதுநின் குணமோ வையா.

(இ-ள்.) வேதமுதலிய கலைகளுக்கும், காக்ஷி முதலிய பிரமாணங்களுக்கும், பிரமன் முதலிய தேவர்கள் செய்கின்ற ஆராய்ச்சிகளுக்கும் அகப்படாத ஒளிப்பிழம்பே! உனது நிலைமையை நான் ஆராயத்துணிந்தேன்;ஐயோ!(அத்தகைய) அறிவிலேனிடத்தில் யாது (நற்)குணங்கண்டு என்னுடைய (வயிற்று) நோயைத்தீர்த்து என்ன பலனை அடைந்தாய்? விருப்பு வெறுப்புகளில்லாதவனே! ஐயனே! (அடியவர்கள் செய்யும்) குற்றத்தைக் குணமாகக் கொண்டருளுவது உன்னுடைய குணமோ? (அறிகிலேன்.) எ-று. (உஉ)

பொன்னகரான் காலந்தாழ்த் துனையருச்சித் தயர்ச்சியொடும் போன வாறு
மென்னெனயான் வினவியதும் வலாரியிறை கொடுத்ததும்மவ் விறைக்கு நேர்
பின்னைவினை யதுமவன்சொல் வழியுன்னைச் சோதித்த பெற்றி தானு [யான்
முன்னவனே யுன்னருளா லென்பிணிக்கு மருந்தாகி முடிந்த வாறே.

(இ-ள்.) (யாவர்க்கும்) முதல்வனே ! பொன்னகரத்தையுடைய இந்திரன் காலந்தாழ்த்து உம்மை யருச்சனை செய்து மனத்தளர்வுடன் (தன்னகரத்திற்கு) சென்றவிதமும், (அச்சோர்வு நோக்கி) என்னகாரணம் ? என்று நான் வினவியதும், (அதற்கு) இந்திரன் (காலந்தாழ்த்துப் பூசித்தேன் என்று) விடைகொடுத்ததும், அவ் விடைக்கு நேராக (உனதுபிரபாவங்களை) யான் பின்னும்வினவியதும், அவன்விடை வழியினின்று உன்னைச்சோதித்ததன்மையும் (ஆகிய இவையொவ்வொன்றும்) உனது திருவருளால் எனது நோய்க்கு மருந்தாகி முடிந்தவகையாம். எ-று. (உரு)

ஆறுமதி முடியணிந்த வருட்கடலே வயிற்றுநோ யன்றி மேனாள்
மாறுபடு மிருவினையு மலவலியுங் கெடவீட்டின் வழியும் பெற்றேன்
வேறினிமந் திரமென்னை மணியென்னை மருந்தென்னை மெய்ம்மை யாகத்
தேறுமவர்க் கிப்புனித தீர்த்தமே பிணியனைத்துந் தீர்ப்ப தன்றோ.

(இ-ள்.) கங்கையையும் சந்திரனையும் சடைமுடியிலணிந்த கிருபா சமுத்திரமே! (எனது) வயிற்றுநோயே யல்லாமல், அநாதியே (என்னுடன்) மாறுபட்டுநிற்கும் இருவினைகளும் மலவன்மையுங் கெட,மோக்ஷமார்க்கத்தையு மடைந்தேன்; இனி வேறு மந்திரம் யாதுளது? மணி யாதுளது? மருந்து யாதுளது? உண்மையாகத் தெளிந்தவர்க்கு இந்தப் புனிதமாகிய (பொற்றாமரைத்) தீர்த்தமே நோய் முற்றும் தீர்ப்பதல்லவா? எ-று. (உச)

மேற்படி - வேறு.

அடியனேன் முன்னஞ் செய்த வபராத மிரண்டுந் தீரும்
படிபொறுத் தருள்வா யென்று பன்முறை பரவித் தாழ்ந்து
மடிவிலா மகிழ்ச்சி பொங்க வரங்களுஞ் சிறிது வேண்டிக்
கடியதன் னகரம் புக்கான் குடதிசைக் காவல் வேந்தன்.

(இ-ள்.) மேற்றிசைக்காவலனாகிய வருணன், அடியேன் முன்பு (அறிவில்லாமல்) செய்த இரண்டு குற்றங்களையும் தீரும் வண்ணம் பொறுத்துக் கிருபைசெய்வாய் என்று பலமுறையும் துதித்துப்பணிந்து, அழிவில்லாத மகிழ்ச்சி யோங்கும்படி சிறிது வரங்களையும் (வேண்டி) பெற்று ஒளியையுடைய தன்னகரிற்குச் சென்றான்.

இரண்டு அபராதம் என்றது முன்மதுரையை யழிக்கக்கடலைவிடுத்ததும் மீண்டு மேகங்களை விடுத்ததுமாம். (உரு)

வன்றிறல் வருணன் விட்ட வாரியை விலக்க வீசன்
மின்றிகழ் சடையி னின்று நீங்கிய மேக நான்குங்
குன்றுபோ னிவந்து நான்கு கூடமாக் கூட லாலே
யன்றுநான் மாடக் கூட லானதான் மதுரை மூதூர்.

(இ-ள்.) வன்மை பொருந்திய வருணன் விடுத்த சத்தமேகங்களையும் விலக்குதற்பொருட்டு, சோமசுந்தரப் பெருமானுடைய மின்னல்போல விளங்கும் சடையிலிருந்து நீங்கிய (புஷ்கலாவருத்த முதலிய)நான்கு மேகங்களும் மலைபோல மேலேறி நான்கு கூடங்களாய்க் கூடுதலாலே மதுரையாகிய பழைய நகரம் அன்றுமுதல் நான் மாடக்கூடல் என்னும் பெயருடையதாயிற்று. எ-று. (உசு)

நான்மாடக்கூடலானபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கருரு.



எல்லாம்வல்லசித்தரானபடலம்.

உ

சிவமயம்.

# இருபதாவது,

# எல்லாம்வல்லசித்தர் திருவிளையாடற்படலம்.

கலிநிலைத்துறை.

சத்த நான்மறைப் பொருள்வரை தள்ளுநீண் முடிமேல்
வைத்த கார்கணான் மாடமா மதுரைமேல் வருண
னுய்த்த மாரியைத் தடுத்தவா றுரைத்துமே றுயர்த்தோர்
சித்த ராய்விளை யாடிய செயல்சிறி துரைப்பாம்.

(இ-ள்.) நாதமாத்திரையாகிய நான்கு வேதங்களின் பொருளெல்லையைக் கடந்த நெடிய சடாமுடியில் அணிந்த (புஷ்கலாவருத்த முதலிய மேகங்கள் நான்கும்) நான்கு மாடங்களாய், மதுராபுரியின்பேரில் வருணன் விடுத்த மேகங்களைத் தடைசெய்த திருவிளையாடலைக் கூறினோம். இடபத்தைக் கொடியாக வுயர்த்திய சோமசுந்தரக்கடவுள் (எல்லாம் வல்ல) சித்தமூர்த்தியாய் திருவிளையாடல் செய்த செயலை (யாம் இனி) சிறிது கூறுவாம். எ-று. (க)

தேட ருங்கதிர் மணிமுடிச் செழியனும் பாண்டி
நாட ருந்திரு வெய்திமே னல்லவீ டெய்தக்
கூட லம்பதி மேவிய குணங்குறி கடந்த
வேட ரங்கொரு சித்தமெய் வேடராய் வருவார்.

(இ-ள்.) தேடிக்கிடைத்தற்கரிய ஒளிபொருந்திய நவரத்தினங்க ளிழைத்த கிரீடத்தை யணிந்த அபிஷேகபாண்டியனும் பாண்டிநாட்டி லுள்ளாரும் செல்வ மடைந்து மறுமையில் நல்ல மோக்ஷத்தைப் பெற, அழகிய மதுரைப்பதியில் எழுந் தருளிய குணங்குறிகட்கதீதப்பட்ட திருவேடத்தையுடைய சோமசுந்தரப்பெருமா னார் அந்நகரில் ஒரு சித்தவடிவமாகிய திருவேடமுடையவராய் வருகின்றார். எ-று.

குணம் குறிகடந்த வேடர் - என்றதில், குணம் என்றது, இரஜசு, தமசு, சத்துவம் என்னுமுக்குணங்களையும், குறியென்றது ஆண் பெண் என்னும் பகுப்பினை யும் உணர்த்தலின், வேடர் என்றது குணங்குறிகடந்து நின்ற நிஷ்கள சிவத்தை யென்க. (உ)

வட்ட வார்சடைக் குஞ்சியும் பூணனூன் மார்பு
மிட்ட நீறணி திலகமு மிணைக்குழை தாங்க
விட்ட வெள்ளைமுத் திரையுந்தோல் விரித்தபட் டிகையுஞ்
சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும்.

(இ-ள்.) வட்டமாகக் கட்டிய நீண்ட சடையாகிய சிகையும், உபவீதம் அணிந்த திருமார்பும், இட்டதிருநீற்றின்மேல்அணிந்ததிலகமும், பொருத்துதலுடைய குண்டலங்கள் தொங்கவிட்ட சங்காலாகியதோடும், புலித்தோலாற் செய்த யோக பட்டிகையும், நீற்றியதாவள்ளியமாகிய விபூதிப்பொக்கணந் தொங்கவிட்ட திருத்தோ ளும். எ-று.

இதுமுதல் பதினெட்டுச்செய்யுள்கள் குளகம்.

பொக்கணம் - இப்பிவடிவமாகத் தலையோட்டா லமைத்துப் பிறர்க்குத் திருவெண்ணீறு தருவதற்கு உபயோகிக்கும் ஓர் கருவி என்பர் பேராசிரியர். ஐந்து முகங்கள் தலையிற் பொருந்தச்செய்த வட்டவடிவாகிய ஓர் பை என்லுமொன்றும்.

துய்ய வெண்பொடி யழிந்துமெய் செவந்திடச் சுவடு
செய்யும் வெண்டிரட் படிகநீள் மாலையுஞ் செவந்த
கையி லங்குகட் டங்கமுங் கண்டவர் மனஞ்சென்
றுய்ய வன்புற வீக்கிய் வுதரபந் தனமும்.

(இ-ள்.) பரிசுத்தமாகிய வெள்ளிய திருநீறு அழிந்து திருமேனி செவக்கச் சுவடு செய்யாநின்ற வெள்ளிய திரண்ட படிகமணிகள் கோத்த நீண்டமாலையும், செவந்த கையில்விளங்கும் மழுவும், கண்டவர்களுடைய மனம் சென்று (பதிந்து) உச்சீவிக்கச் சிக்கெனக் கட்டிய திருவுதரபந்தனமும். எ-று. (ச)

அட்ட வேங்கையி னுரிவைகீண் டசைத்தகோ வணமு
மொட்ட வீக்கிய புலியத ளுடுக்கையு மிடத்தோ
ளிட்ட யோகபட் டிகையும்பொன் னிடையிடை கட்டப்
பட்ட சஃஜெறலி வேத்திரப் படைக்கையும் படைத்து.

(இ-ள்.) தான்கொன்ற வேங்கையி னின்றீர்ந்த தோலைக் கிழித்துக் கட்டிய திருக்கோவணமும், (இடையில்) பொருந்தக் கட்டிய புலித்தோல் ஆடையும், இடத் தோளிலிட்ட யோகபட்டிகையும், (கம்பியாகச் செய்த) பொன்னால் இடையிடையே கட்டப்பட்ட சஃஜெறன்னும் ஒலிக்குறிப்பையுடைய பிரம்பாயுதந் தாங்கிய திருக்கரமும், (ஆகிய இவற்றை) கொண்டருளி. எ-று.

சஃஜெறலி என்றது பிரம்பை வீசுகையில் உண்டாகும் ஒலிக்குறிப்பு. (ரு)

வேத கிண்கிணி சிலம்புசூழ்ந் தடிகளின் மிழற்ற
வோத ரும்பத முளரியூ றருண்மது வொழுகப்
பேர்த வானந்த மதுநுகர்ந் தலர்முகம் பொலியப்
பாத பங்கய முபனிடப் பாதுகை சூட.

(இ-ள்.) வேதமே கிண்கிணியாகவுஞ் சிலம்பாகவுஞ் சூழ்ந்து திருவடிகளிற் சத்திக்கவும், சொல்லுதற்கரிய அத்திருவடித் தாமரையினின்று ஊற்றெடுக்கின்ற திருவருளாகிய தேன் சிந்தவும், சிதானந்தமாகிய தேனைப்பருகி, மலர்ந்த திருமுகம் விளங்கவும், திருவடித்தாமரைகள் உபநிடதமாகிய பாதுகையைச் சூடவும். எ-று.

சிவஞானசித்தியார்.

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரிவ தோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னாற்போற் செய்த வினையினை வீட்ட லோரார்
ஊகியா மூடரெல்லா மும்பரி னொருவ னென்பார்"—என்றபடி பரசிவம் பலமூர்த்தங்களாகச்சகளீகரித்தல்ஆன்மாக்களுக்கு அருள்செய்தற் பொருட்டாகலின், அவ்வமயத்து தமது திருவடியைத் தேடிக் கண்டறியாது தமொறிநின்ற வேதமும் உபநிடதமும் முறையே கிண்கிணியும் பாதுகையுமாக உருமாறிச் சூழ்ந்து நின்றனவென்பார் "வேதகிண்கிணி சிலம்புசூழ்ந் தடிகளின் மிழற்ற" என்றும், "பாத பங்கய முபநிடப் பாதுகை சூட" என்றுங் கூறினர். (சா)

சிறிது மூரலும் வெயர்வையுந் திருமுகத் தரும்பக்
குறுகி யாவணஞ் சித்திர கூடநாற் சந்தி
மறுகு சூளிகை யுபரிகை மாளிகை வாயி
லறுகு சூழ்நிரைத் தெற்றியிவ் விடந்தொறு மடைந்து.

(இ-ள்.) சிறிது புன்சிரிப்பும் வேர்வையுந் திருமுகத்தில் அரும்பச்சென்று, கடைவீதியும், சித்திரகூடமும், நாற்றெருக்கள் கூடுமிடமும், வீதியும், இறப்பினையுடைய உபரிகையும், மாளிகை வாயிலும், சிங்கத்தால் வரிசைபடச் சுமக்கப்பட்ட திண்ணையும், (ஆகிய) இந்த இடங்களிலெல்லாஞ் சேர்ந்து. எ-று. (எ)

தெற்கி ருப்பவர் போல்வட திசைவயிற் சென்று
புக்கி ருப்பதுங் கிழக்குளார் போல்மேற் றிசையி
னக்கி ருப்பதும் யாவரு நாடின ரறியத்
தக்க தன்றியே யிந்திர சாலமாத் தணந்தும்.

(இ-ள்.) தென்றிசையி லிருப்பார்போல வடதிசையிற்போய்ச் சேர்ந்திருத்தலும், கீழ்த்திசையி லிருப்பார்போல மேற்றிசையிற்போய்ச் சிரித்திருத்தலும், (கண்டறியும்படி கண்ணிமை கொட்டாது) பார்த்துநின்ற எவரும் (மீட்டுந் தேடி) அறியக்கூடாத வகையாக இந்திரசாலமாய் மறைந்தருளியும். எ-று. (அ)

சேய வெற்பினை யணியதாச் செய்துமற் றணித்தாய்
மேய வெற்பினைச் சேயதா விடுத்துமெய் முதுமூப்
பாய மக்களை யிளையவ ராக்கியுங் குதலை
வாய மக்களைக் கழிமுது மக்களா வகுத்தும்.

(இ-ள்.) தூரத்திலிருக்கும் மலையைச் சமீபத்திலிருப்பதாகச் செய்தும், சமீபத்திலுள்ளதாய்ப் பொருந்திய மலையைத் தூரத்திலுள்ளதாகச் செய்தும், தேகமுதிர்ந்த கிழப்பருவம் வாய்ந்த மானுடரை வாலிபராக்கியும், குதலைச்சொல் பேசும் வாயையுடைய குழந்தைகளை மிக்க கிழவர்களாகச் செய்தும். எ-று.

தூரத்திலுள்ள பொருளைச் சமீபத்து வருவித்தல் ஆகருஷணம்-கிழவனைப் பாலராகவும் பாலனைக் கிழவராகவுஞ் செய்தல் **வயஸ்தம்பம்** எனப்படும். (கூ)

ஆணைப் பெண்ணுரு வாக்கியும் பெண்ணையா ணுருவ
மாணக் காட்டியு மலடியை மகப்பெறச் செய்துங்
கோணற் கூன்செவி டூமைகண் குருடுபங் கெவருங்
காணத் தீர்த்துநா லுலோகமுங் கனகமாச் செய்தும்.

(இ-ள்.) ஆணினைப் பெண்ணின் வடிவாகச் செய்தும், பெண்ணினை மாட்சிமைப்பட ஆண்வடிவாகச்செய்தும், மலடியைக் குழந்தைபெறச் செய்தும், (முதுகு) வளைந்த கூன் - செவிடு - ஊமை - கண்குருடு - முடம் (ஆக உள்ளவர்களின் குறைபாடுகளை) யாவரும் பார்க்கத் தீர்த்தருளியும், நான்கு உலோகங்களையும் பொன்னாகச் செய்தும். எ-று.

நாலுலோக மாவன - வெள்ளி - செம்பு - இரும்பு - ஈயம். இவற்றைப் பொன்னாக்குதல் **வாதம்** எனப்படும். (கல)

செல்வர் தம்மனைப் பொருளெலாம் வறுமையிற் சிறந்தோ
ரில்ல மெய்தவு நட்டவ ரிகலின்றித் தம்மின்
மல்லு வெஞ்சம ரிழைப்பவுங் காஞ்சிர மரத்தி
னல்ல தீங்கனி பழுப்பவும் விஞ்சைக ணயந்தும்.

(இ-ள்.) தனிகர்களுடைய வீட்டிலுள்ள செல்வமெல்லாம், தரித்திரத்தில் மேம்பட்டோர் வீட்டிலடையவும், சினேகித்தவர்கள் தம்முட் சிறிதும் விரோதமில்லாமலே கொடியமல்யுத்தஞ்செய்யவும், எட்டிமரத்திலே நல்ல மதுரமாகிய பழங்கள் பழுக்கவும், (இவ்வகைய அரிய) வித்தைகளைச் செய்தருளியும். எ-று. (கக)

பருவ மாறிய பருவத்தில் வைகைநீர் பரந்து
வருவ தாக்கிடி மீளவும் வறந்திடச் செய்தும்
பொருவி றீஞ்சுவை யோடையும் பொய்கையு முவர்ப்புத்
தருவ வாக்கிடு முவரியின் சுவையவாத் தந்தும்.

(இ-ள்.) (நீர் பெருகுதற்கு) காலமல்லாத காலத்திலும் வைகைநதி சலப்பெருக்கெடுத்து வரச்செய்தருளியும், திரும்பவும் (அப்பெருக்கை) வற்றச்செய்தருளியும், சமானமில்லாத மதுரமாகிய சுவையையுடைய ஓடைநீரும் பொய்கை நீரும் உவர்ப்புத்தருவனவாகச் செய்தருளியும், உவர்ப்பையுடைய (கடல்) நீரை இனிய சுவையுடையதாகச் செய்தருளியும். எ-று. (கஉ)

வீசி மாத்திரைக் கோலினை விண்ணினட் டதன்மே
லூசி நாட்டியிட் டூசிமேற் பெருவிர லூன்றி
யாசி லாடியு மூசிமேற் றலைகிழக் காக
மாசில் சேவடிப் போதுவான் மலர்ந்திடச் சுழன்றும்.

(இ-ள்.) மாத்திரைக்கோலை ஆகாயத்தில் வீசிநட்டு அம்மாத்திரைக்கோலின்மேல் ஊசியை நாட்டி, அவ்வூசியின்மேல் பெருவிரலை யூன்றிக் குறைவின்றி விளையாடியருளியும், அவ்வூசியின்மேல் தலைகீழாகக் குற்றமில்லாத தம்முடைய செவந்த திருவடிக்கமலங்கள் ஆகாயத்தில் மலரச்சுழன்றுடியருளியும். எ-று. (கங)

சண்ட வெம்பணிப் பகையெனப் பறந்துவிண் டாவிக்
கொண்ட லைப்பிடித் திடியொடுங் குடித்தநீர் பிழிந்து
கண்ட வர்க்கதி சயம்பெறக் காட்டியுங் காண
விண்ட லத்தினிற் பண்டுபோ லிறைகொள விடுத்தும்.

(இ-ள்.) கொடிய வேகத்தையுடைய கருடன்போலப் பறந்து, ஆகாயத்தில் தாவி (ச்சென்று) மேகத்தைப்பிடித்து, இடியுடன் அவை பருகிய நீரைப்பிழிந்து பார்ப்போர்க்கு வியப்புண்டாக (அம்மேகங்களைக்) காட்டியருளியும், (யாவரும்) பார்க்கும்படி (அந்த) ஆகாயத்தில் (அவற்றை) முன்போல உலாவிவசிக்க விடுத்தருளியும்.

எல்லி டைப்படும் பொருள்களை யிராவெழப் பார்த்து
மல்லி டைப்படும் பொருள்களைப் பகல்வர வமைத்தும்
வல்ல ழற்புன லுளர்வளி வலிகெடப் பார்த்து
நல்ல போதுகாய் கனியிலா நாள்படக் கண்டும்.

(இ-ள்.) பகலிற்றோன்றும் (சூரியன் முதலிய) பொருள்களை இரவில் வரப்பார்த்தருளியும், இரவிற்றோன்றும் (சந்திரன் முதலிய) பொருள்களைப் பகலில் வரச்செய்தருளியும், கொடிய அக்கினியும், சலமும், சஞ்சரிக்குங் காற்றும் (ஆகிய இவற்றின்) வேகவன்மைகள் கெடப்பார்த்தருளியும், மணம்பொருந்திய மலர்களும், காய்களும், கனிகளும் இல்லாதபருவங்களில் (மலரவும், காய்க்கவும், பழுக்கவும்) உளவாகச் செய்தருளியும். எ-று. (கசு)

பிணை கால்விழிக் கிழவரைப் பிரம்பினல் வருடிக்
காளை யாக்கவ ராக்கியக் கணவருக் கிசைய

விளை வாய்முது கற்பினர் கருவடைந் திளமை
யாளை வேத்திரம் வருடிநீ றளித்தருள் செய்தும்.

(இ-ள்.) பீளைசொரியுங் கண்களையுடைய விருத்தர்களை (தாம் ஏந்திய) பிரம்பினால் தட்விக் காளைப்பருவத்தை யுடைய வாலிபர்களாகச் செய்தருளி, (வாலிபர்களாகிய) அந்தக்கணவர்கள் மனதிற்கினிய விளைவாய்ந்த வாயையுடைய கிழத்தன்மைவாய்ந்த கற்பமைந்த மனைவியர் கருப்பமுற்று மங்கைப் பருவத்தையடையப் பிரம்பால் தடவித் திருவெண்ணீறு பிரசாதித்துக் கிருபை செய்தருளியும். எ-று.

வேத்திரம் - பிரம்பு. (கக)

அகர மாதிமூன் றாகிய வாகரு டணமே
புகரி லாவதி ரிச்சிய மஞ்சனம் பொருவில்
வகர மாதிமூன் றாகிய வசியமே வாத
மிகலி லாவயத் தம்பமென் றின்னவை செய்தும்.

(இ-ள்.) அகரத்தை முதலாகவுடைய மூன்றாகிய ஆகருடணமும், குற்றமில்லாத அதிரிசியமும், அஞ்சனமும், சமானமில்லாத வகரத்தை முதலாகவுடைய மூன்றாகிய வசியமும், வாதமும், தம்முள் மாறுபடாத வயஸ்தம்பமும் என்று சொல்லப்பட்ட இவைபோல்வனவற்றைச் செய்தருளியும். எ-று.

அகரத்தின் விகாரமே ஆகாரமாதலால் ஆகாரத்தை அகரத்துள்ளடக்கி "அகரமாதி மூன்று" என்றார். "வகரமாதி மூன்று" என்றதில் இப்படியே வாகாரமும் வகரத்துள் ளடங்குதல்பற்றிக் கூறப்பட்டதென்க.

ஆகருஷணம்-தூரத்திலுள்ளதைச் சமீபத்து வருவித்தல்.
அதிரிச்சியம்-கண்களுக்குப் புலப்படுவதைப் புலப்படாமற் செய்தல்
அஞ்சனம்-மறைந்து கிடக்கும் பொருள்களை விளக்கிக் காட்டுதல்.
வசியம்-பகைவரைத் தன்வயமாக்கல்.
வாதம்-இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்கல்.
வயஸ்தம்பம்-வயதைத் தம்பித்தல் ; [யவ்வனமாக இருக்கச்செய்தல்.] (கஎ)

வேத நூறெளி யார்களைக் கலைகளும் விளங்கப்
பூதி நாவினிற் சிதறியும் பூழியன் காதன்
மாத ராரொடும் பயில்புது மணமலர்க் காவிற்
காத நீண்டகோட் டெங்கினைக் கரும்பனை செய்தும்.

(இ-ள்.) வேதநூலை (முறையே) உணராதவர்களுக்கு அறுபத்துநான்கு கலைகளும் (ஐயம் திரிபு அறியாமைகளின்றி) விளங்கத் திருவெண்ணீற்றினை அவர்களுடைய நாவிற் சிதறியும், அபிஷேகபாண்டியன் (தனது) ஆசைபொருந்திய மனைவியுடன் சஞ்சரித்துலவும் அன்றலர்ந்த மணமமைந்த மலர்கள் நிறைந்த பூஞ்சோலையிலுள்ள காததூரம் உயர்ந்த வலியதென்னமரத்தைக்கரியபனைமரமாகச் செய்தருளியும்.

ஏனை வான்றருக் குலங்களைப் புட்களை யிருகோட்
டானை யாதிபல் விலங்கினை யொன்றையொன் றாக
ஞான நோக்கினா னோக்கியு நாடிய விளையோர்
மானி னேக்கிய ராகிலோ மெனவெழில் வாய்ந்தும்.

(இ-ள்.) அது வொழிந்த மரக்கூட்டங்களையும், பறவைகளையும், இரண்டு கொம்பினையுடைய யானைமுதலிய பல மிருகங்களையும், ஒன்றைப் பிறிதொன்றாக ஞானதிருட்டியால் நோக்கியருளியும், (எல்லோரும்) விரும்பத்தக்க, (அழகமைந்த)

காளையரும், மான்போலும் (மருண்ட) பார்வையுடைய மாதர்களானே மல்லேமென்று கருதப் பேரழகு வாய்ந்தருளியும். எ-று. (கக)

நாக நாடுபொன் னாட்டுள பொருளுமந் நகரு
ளாக வாக்கிபு மின்னணம் விச்சைக ளனந்த
மாக நாயகன் மலைமக ளுயகன் மதுரை
யேக நாயகன் றிருவிளை யாடல்செய் திருந்தான்.

(இ-ள்.) பாதலத்திலுள்ள பொருள்கள் வானுலகத்திலுள்ள பொருள்களாகவும், வானுலகத்திலுள்ள பொருள்கள் பாதத்திலுள்ள பொருள்களாகவுஞ் செய்தருளியும், இவ்விதமாக எண்ணிறந்த (ஆகருஷண முதலிய) வித்தைகளை, சிவலோகத்திற்கு இறைவரும் மலையரசபுத்திரியாருக்கிறைவருமாகியசித்தமூர்த்திகள் (வடிவம்வாய்ந்த சோமசுந்தரக்கடவுள்) திருவிளையாடல்களாகச் செய்திருந்தருளினர். எ-று.

ஏகம்-ஒப்பின்மை இது சிந்தாமணியில் நச்சினார்க்கினியருரையிற் கண்டது.

சித்த யோகிகள் செய்கின்ற வாடன்மேற் செலுத்தி
வைத்த கண்களுஞ் சிந்தையும் வாங்கலர் திகைத்துத்
தத்த மாள்வினைத் தொழின்மறந் திருந்தனர் தகைசான்
முத்த வேதிய ராதிய முதுநகர் மாக்கள்.

(இ-ள்.) பெருந்தன்மையும் முத்தத்தன்மையும் வாய்ந்த பிராமணர் முதலிய தொன்றுதொட்டுள்ள மதுராபுரியிலுள்ள நால்வருணத்தவர்களும், சித்தயோகிகள் செய்தருளுந் திருவிளையாடல்களிற் செலுத்திவைத்த கண்களையும் மனத்தையும் (தம் வசமாக) மீட்க வலியில்லாதவர்களாய் மயங்கித் தத்தமது வருணாச்சிரமங்கட்குரிய நித்தியகரும முதலியவற்றையு மறந்து தம்பித்து இருந்தனர். எ-று.

முத்தத் தன்மையாவது ஆன்மாவின் தோற்றமற்றுச் சிவத்தோற்றமாம் நிலையில் நிற்றல். (உக)

இனைய செய்தியை யுழைய்ரா லிறைமக னறிந்தா
னனைய சித்தரை யிங்ஙனந் தருகென வடுத்தார்
தனைய கற்றினன் சித்தரைச் சார்ந்தவர் தாமும்
வினையை வென்றவ ராடலை வியந்துகண் டிருந்தார்.

(இ-ள்.) இவ்வகைய அற்புதங்களை வேவுகாரரால் அபிஷேகபாண்டியன் உணர்ந்து, அப்படிப்பட்ட (அற்புதங்களைச் செய்யவல்ல) சித்தமூர்த்திகளை இவ்விடத்திற்கு அழைத்துவரக்கடவீர் என்று கூறித் தம்பால் நின்றவர்களை அனுப்பினன். அவர்களும் (கட்டளைபெற்று) சித்தமூர்த்திகளையடைந்து (இயற்கையாகவே) வினைச் சம்பந்தத்தினின்று நீங்கிய அந்தச் சித்தமூர்த்திகள் திருவிளையாடலைக் களித்துப் பார்த்து (அவர் வசத்தராய்) இருந்தார்கள். எ-று.

அறிந்தான் என்பது முற்றெச்சம். (உஉ)

அமைச்சர் தங்களை விடுத்தன னமைச்சருஞ் சித்தர்
தமைச்ச ரண்பணிந் தரசன்முன் வருகெனத் தவத்தோ
ரமக்கு மன்னனு லென்பய னெனமறுத் திடமண்
சுமக்கு மன்னவன் றம்மவர் தொழுதனர் போனார்.

(இ-ள்.) (அழைத்துவரும்படி சென்ற வேவுகாரர்கள் வராமையால்) மந்திரிகளையனுப்பினன். (அவ்வாறு சென்ற) மந்திரிகளுஞ் சித்தமூர்த்திகளைப் பணிந்து, (சுவாமிகளே! எங்கள்) அரசசமுகத்திற்கு வரக்கடவீரென்று கூற, அச்சித்தமூர்த்தி

கள் எமக்கு அவ்வரசனால் யாதுபலன் (வேண்டுவது)? என்றுதடுக்க, உலகபாரத்தைத் தாங்கும் பாண்டியன் தமர்களாகிய மந்திரிகள் பணிந்து சென்றார்கள். எ-று.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மன்னன்மு னமைச்சர் சித்தர் மறுத்துரை மாற்றங் கூற
முன்னவ னருள்பெற் றிம்மை மறுமையு முனிந்த யோக
ரிந்நில வேந்தர் மட்டோ விந்திர னயன்மா லிரனோர்
தன்னையு மதிப்ப ரோவென் றிருந்தனன் றரும வேந்தன்.

(இ-ள்.) மந்திரிமார்கள் அபிஷேகபாண்டியன்சமுகத்தில் (சென்று) சித்தமூர்த்திகள் (தம்முடன் வரத்) தடுத்துக்கூறிய சொல்லை உரைக்க, தருமசொரூபமாகிய அபிஷேகபாண்டியன், சிவானுக்கிரகம் பெற்று இம்மை மறுமைப் பயன்களையும் வெறுத்த யோகவான்கள் இப்பூலோக மன்னர்களைமாத்திரமோ இந்திரன் பிரமன் திருமால் (முதலிய) பிற தேவர்களையும் மதிப்பார்களோ? (மதியார்கள்!) என்று இருந்தான். எ-று.

முனிதல்-வெறுத்தல். அது அருளுஞ்சினமுமின்றி இடைநிகர்த்தல். (உச)

எல்லாம் வல்லசித்தர் திருவிளையாடற்படலம் முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஉகஎ.

---

# இருபத்தொன்றாவது:

# கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்.

---

கலிநிலைத்துறை.

செல்லார் பொழில்சூழ் மதுராபுரிச் சித்த ரெல்லாம்
வல்லா ரவராடலை யாருரை செய்ய வல்லா
ரொல்லாரும் வியப்புற வித்தனிச் சித்த சாமி
கல்லானை தின்னக் கரும்பீந்த கதையுஞ் சொல்வாம்.

(இ-ள்.) மேகங்கள் பொருந்திய சோலைசூழ்ந்த மதுரைப்பதியில் எழுந்தருளிய எல்லாம் வல்லராகிய சித்தமூர்த்திகள் (செய்தருளிய) திருவிளையாடலை யாவர் எடுத்துச்சொல்ல வல்லவர்? பார்த்தோர் யாவரும் ஆச்சரியப்பட ஒப்பில்லாத இந்தச் சித்தமூர்த்திகள் கல்லானை தின்னும்படி கரும்பைக்கொடுத்தருளிய திருவிளையாடலையும் (யாம் இனிச்) சொல்லுவாம். எ-று. (க)

பின்னே யமச்சம் பெருகப்பெரி யோரை யெண்ணு
தென்னே யெளியா ரெனயானிகழ்ந் திங்ங னீண்டச்
சொன்னே னவர்க்கென் குறையென்னிற் றுருவி னானே
தன்னே ரிலாதார் தமைக்காணத் தகுவ தென்னு.

(இ-ள்.) பிறகு (சித்தமூர்த்திகளிடத்தில்) அன்பும் அச்சமும் மிகும்படி இஃதென்ன? பெரியோரை மதியாமற் சாமானியரைப் போல அவமதித்து நான் இவ்

வீட்த்து வரும்படி (மந்திரிகள்மூலமாக) சொல்லி(யனுப்பி)னேன். அச்சித்தமூர்த்திகளுக்கு என்னிடத்திற் பெறுங்குறைபாடு யாது? நானே (அவரைத்) தேடி, தமக்கு ஒப்பில்லாதவராகிய அச்சித்தமூர்த்திகளைக் காணக்கடவனென்று நினைத்து. எ-று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். (உ)

ஆனந்த சித்தர் தமைக்காண்பலென் றன்பு கூர்ந்த
மீனந் தரித்தகொடிவேந்தன் குறிப்பு நோக்கி
மோனந் தரித்த சிவயோகரு முந்தித் தம்பொன்
மானந் தனக்கு வடமேற்றிசை வந்திருந்தார்.

(இ-ள்.) பேரின்ப மயமாகிய சித்தமூர்த்திகளைத் தரிசிப்பேனென்று அன்பு மிகுந்த மீனக்கொடி தாங்கிய அபிஷேக பாண்டியனுடைய உள்ளக்குறிப்பை யறிந்து, மௌனநிலையை மேற்கொண்ட சித்தமூர்த்திகளும் (அப்பாண்டியனுக்கு) முற்பட்டு, தமது இந்திரவிமானத்துக்கு வடமேற்றிசையில் வந்திருந்தருளினர்.—எ-று.

குறிப்புநோக்கி யென்றது எல்லாம் வல்ல சித்தராதலின். (ங)

அருகாத செல்வத் தவனன்றுறைத் திங்க டோற்றம்
வருகால மாக மதுரேசனை வந்து வந்தித்
துருகாத ரத்தாற் கழிந்துள்வல மாக மீள
வருவா னவன்முன் வருகாஞ்சுகி வன்கண் மாக்கள்.

(இ-ள்.) அந்நாள் மகரமாதப் பிரவேசம் வருங்காலமாக, நிறைந்த செல்வத்தையுடைய அபிஷேக பாண்டியன்வந்து சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து (மனம்) உருகுதற் கேதுவாகிய அன்பினால் மிகுந்து உள்ளே பிரதக்ஷிணமாகத் திரும்பி வரும் அப்பாண்டியன் முன்னர் கஞ்சுகிகளாகிய அஞ்சாமையையுடைய மெய்க்காப்பாளர்.

கஞ்சுகிகள்-அரசனைச் சூழ்ந்து செல்லும் மெய்க்காப்பாளர்; ஈண்டு இவர்கள் அரசன்முன் கைக்கோலால் வழிவிலக்கிச் செல்லாநின்றனர் என்க. (ச)

சீறிட்ட வேங்கை யதட்சேக்கையர் சீறி யைந்தும்
பாறிட்ட வேடர் யோகபட் டத்தர்கட் டங்கத்தி
லேறிட்ட கைய ரிறுமாந்திருப் பாரை நோக்கி
மாறிட்டு நீக்கி யெழப்போசென வந்துசொன்னார்.

(இ-ள்.) கோபித்த புலித்தோலை ஆசனமாகவுடையவராகி, கோபித்து ஐம்புலன்களையுஞ் சயங்கொண்ட தவவேட முடையவராகி, யோகபட்டிகையைத் தரித்தவராகி, மழுவாயுதத்தின் மேல்வைத்த கையை யுடையவராகி இறுமாப்புற்றிருக்குஞ் சித்தமூர்த்திகளைப்பார்த்து, பிரம்பை நீட்டி (அங்கிருந்து) நீங்கி எழுந்து போகக்கடவீர் என்று சொன்னார்கள். எ-று.

கட்டங்கம்-கட்கமென்னும் வடசொற்றிரிபு. இதனை, கட்டுவாங்க மென்பதன் திரிபு எனவுங் கூறுவர். அவ்வாறு கொள்ளின் கட்டிற்கால் வடிவுபோன்ற ஒருவகை ஆயுதமென்க. (ரு)

பின்னா வருமன்னர் பிரான்பெரி யோரை நோக்கி
யெந்நாடு நும்மூ ருமக்கென்வரும் யாது வேண்டு
நுந்நாம மேது நுவன்மின்னென வைய ரெந்த
நன்னாடு மெந்த நகருள்ளுந் திரிவ மப்பா.

(இ-ள்.) (அம்மெய்க்காப்பாளருக்கு) பின்னாகவரும் அபிஷேகபாண்டியனும் அச்சித்தமூர்த்திகளைப்பார்த்து, உமது நாடு எந்த நாடு? உமக்கு யாதுங்கைவரும்? (என்

னால்) உம்க்கு என்னவேண்டும் ? உமது பெயர் யாது ? சொல்லும் என்று வினவ, அச்சித்த மூர்த்திகள் (அபிஷேக பாண்டியனைப்பார்த்து) அப்பா ! எந்த நல்ல நாட்டிலும் எந்த நகரத்திலுஞ் சஞ்சரிப்போம். எ-று.

இதுமுதல் ஐந்துபாடல்கள் ஒரு தொடர். (சு)

ஆனாலு மிப்போ தணிகான்மிர நாட்டிற் காசி
தானா மிருக்குந் தலமாகு நாத னாகி
யானாத பிச்சைப் பெருவாழ் வுடையார் நமரா
நானாளும் விஞ்சை நடாஅய்த்திரி சித்த ரேம்யாம்.

(இ-ள்.) ஆனாலும் இப்பொழுது அழகிய காஸ்மீர நாட்டிலுள்ள காசி நகரந்தான் நாம் வசிக்கும் இடமாகும்; பசுபதியாகி நீங்காத பிச்சையாகிய பெரிய வாழ்வினையுடைய சிவனடியார்களே நமது உறவினராம்; நாம் எக்காலமும் (ஆகருஷண முதலிய) வித்தைகளை நடத்தித் திரிகின்ற சித்தராவோம். எ-று.

இச்செய்யுளால் பாண்டியன் வினாக்களில் எந்நாடு நுமக்கென்வரும் என்பனவற்றிற்கு விடைவிடுத்தாயிற்று. (எ)

ஆனந்த கானந் தொடுத்திங்குள வான சைவத்
தானம் பலவுந் தொழுதற்பர மாகி வந்தே
ஞானந் தருமிந் நகரிம்மையிற் சீவன் முத்தி
மானந்த மான பரமுத்தி மறுமை நல்கும்.

(இ-ள்.) காசிநகரந் தொடங்கித் தென்றிசையிலுள்ள சைவதலங்கள் பலவற்றையும் பணியும் அதுவே பிரயோசனமாய் வந்திருக்கின்றோம். சிவஞானத்தைப் பாலிக்கும் இம்மதுராபுரியானது இப்பிறப்பில் ஜீவன்முத்தியையும் மறுபிறப்பில் பாசமாகிய மயக்கங்கெட்ட பரமுத்தியையுந் தந்தருளாநிற்கும். எ-று.

மானந்தமான என்பதற்கு, மான் அந்தமான எனப்பிரித்து, பிரகிருதிமாயைக்கு அப்பாற்பட்ட எனக்கூறினும் பொருந்தும். இவ்வாறாயின் உபலக்கணத்தால் இதற்குக் காரணமாகிய விந்து மோகினியைக் கொள்க. (அ)

ஈண்டுள் ளவர்க்கெம் விளையாடலைக் காட்டி யிச்சை
வேண்டும் பலசித்தியு நல்குவம் வேத மாதி
மாண்டங்கு மெண்ணெண் கலைஞானமும் வல்ல மல்லாற்
சேண்டங்கு மெல்லாப் பொருளும்வல சித்த ரேம்யாம்.

(இ-ள்.) இவ்விடத்தில் இருப்பவர்களுக்கு எமது திருவிளையாடல்களைக் காண்பித்து, அவரவர் விரும்பியபடியே வேண்டிய பல சித்திகளையுங் கொடுத்தருளுவோம். வேதமுதலிய மாட்சிமைதங்கிய அறுபத்துநான்கு கலைஞானங்களின் தேர்ச்சியுமுடையேம். இவையுமல்லாமல் தூரத்திலுள்ள எல்லாப்பொருள்களையும் (அழைத்தலில்) வல்ல (ஆக்கினை) சித்தரெனப் பெயருமுடையேம். எ-று. (கு)

உன்னா னமக்குப் பெறல்வேண்டுவ தொன்று மில்லை
தென்னா வெனவுண் ணகைசெய்தனர் சித்த யோகர்
மன்னா மிவர்தம் மிறுமாப்புஞ் செருக்கும் வீறு
மென்னா லளவிட் டறிவேனென வெண்ணித் தேர்வான்.

(இ-ள்.) அந்தச்சித்தமூர்த்திகள் பாண்டியனே ! உன்னால் நமக்குப் பெறும் பொருள் ஒன்றுமில்லையென்று புன்னகை செய்தருளினர். நிலைபெற்ற இவருடைய

இறுமாப்பையும் அகங்காரத்தையும் பெருமிதத்தையும்என்னளவையால் அளந்தறிவே னென்று ஆராய்வானாயினன். எ-று.

இச்செய்யுளால் யாது வேண்டுமென்னும் வினாவுக்கு விடைகூறப்பட்டது.

தேரும் பொழுதோ ருழவன்னொரு செல்வக் கன்ன
லோருங் கமுகென்ன வயிர்ப்புறக் கொண்டு தாழப்
பாருந் திசையும் புகழ்பங்கயச் செங்கை தாங்கி
நீரும் பிறையுங் கரந்தார்தமை நேர்ந்து சொல்வான்.

(இ-ள்.) அப்படி ஆராய்கையில் ஒருழவன் செழித்தோங்கிய ஒருகருப்பங் கழியைக் கண்டோ ரெல்லாமிது கமுகமரமோ என்று ஐயங்கொள்ளக் (கையுறையாகக்) கொண்டு பணிய, பூலோகமும் அஷ்டதிசைகளும் புகழுந் தாமரைமலர்போன்ற தனது சிவந்த கையில் எடுத்து, கங்கையையுஞ் சந்திரனையும் மறைத்துவந்தருளிய சித்தமூர்த்திகளை யெதிர்ந்து சொல்லுகின்றான். எ-று. (கக)

வல்லாரில் வல்லே மெனவும்மை மதித்த நீரிக்
கல்லானைக் கிந்தக் கரும்பை யருத்தி னெல்லாம்
வல்லாரு நீரே மதுரைப்பெரு மானு நீரே
யல்லா லெவர்நும் மனம்வேட்ட தளிப்ப னென்றான்.

(இ-ள்.) வல்லவர்களில் நாம் வல்லேமென்று தம்மைத் தாமே மதித்த நீர் இங்கிருக்குங் கல்லானைக்கு இந்தக் கரும்பை யுண்பித்தால் எல்லாம் வல்லவரும் நீரே மதுராபுரியில் வீற்றிருக்குஞ் சோமசுந்தரப்பெருமானு நீரே யல்லாமல் யாருள்ளார்? உமது மனதிற் கருதியது எதுவோ அதனைக் கொடுப்பேனென்று அபிஷேகபாண்டியன் கூறினன். எ-று.

வல்லாரில் வல்லேம் என்பதில் எழனுருபு கூட்டிப் பிரித்தற்கண் வந்தது.

என்ன முகிலைத் தளையிட்டவன் கூறக் கேட்டுத்
தென்ன வருதி யெனப்புன்னகை செய்து சித்தர்
நின்னால் வருவ தெமக்கேது நினக்கு நாமே
யுன்னாசை தீரத் தருகின்ற தலாம லுண்டோ.

(இ-ள்.) என்று அபிஷேகபாண்டியன் சொல்லக்கேட்டு, பாண்டியனே இங்குவருக என்று புன்னகை செய்தருளி, அச்சித்தமூர்த்திகள் உன்னால் வரும்பயன் எமக்கு எது உளது? உனக்கு நாமே உன்னாசை தீரும்படி தருவதல்லாமல் (யான் அடைவது) ஒன்றுண்டோ? (இல்லை யென்றபடி). எ-று.

முகிலைத் தளையிட்டவன்-மேகங்களைச் சிறைப்படுத்தினவன்; இது உக்கிர பாண்டியர் செயலாயிருக்க அபிஷேகபாண்டியனை அவ்வாறு விளித்தது ஒற்றுமை நயம்பற்றி யென்க. (கரு)

செல்லா வுலகத்திலுஞ் சென்றொரு விஞ்சை கற்றோர்
பல்லாரு நன்கு மதிக்கப்பய னெய்து வார்க
ளெல்லா மறிந்த வெமக்கொன்றினு மாசை யில்லை
கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி யென்றார்.

(இ-ள்.) (ஆகருஷண முதலிய அறுவகை வித்தைகளில்) ஒரு வித்தையைக் கற்றவர்கள் செல்லுதற்கரிய வுலகத்திலுஞ்சென்று பலரும் நன்கு மதிக்க (அதனை) க்காட்டிப் பயனை யடைவார்கள். (அப்படியிருக்க) எல்லா வித்தைகளையும் அறிந்த எமக்கு

ஒரு பொருளிலும் ஆசையில்லை. (நீசொல்லியபடி) கல்லானையானது கரும்பைக்கறிக்கின்றதைக் காண்பாய் என்றார். எ-று.

எல்லாம் அறிந்த என்றதனால், ஆகருஷண முதலிய அறுவகைத் தொழில்களேயன்றி, தமது எண்குணங்களுள் முற்று முணர்தலையும் உணர்த்தினாராயிற்று. "விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்,பிறழவும்பெறூஉ முக்காலமுமேற்புழி" என்றதனனே தெளிவுபற்றி எதிர்காலத்தை இறந்தகாலமாகக் காண்டி என்று காலவழுவமைதி யாக்கினர். (கச)

கடைக்கண் சிறிதே குறித்தார்முன் கடாக்கல் யானை
மடைக்கண் டிறந்து மதமூன்றும் வுழிய விண்வா
யடைக்கும் படிவாய் திறந்தார்த்துப் புழைக்கை நீட்டித்
தொடைச்குன் றனன்கைச் சுவைத்தண்டைப் பறித்த தன்றே.

(இ-ள்.) சிறிது கடைக்கண் செய்தருளிய சித்த மூர்த்திகளின் முன்னர், மதஞ்சிந்துங் கல்லானையானது மடைக்கண்போலக் கண்திறந்து மதங்கள் மூன்றுஞ் சிந்த மேகத்தின் வாயடையும்படி தனது வாயைத்திறந்து ஒலித்து, துதிக்கையை நீட்டி மாலையையணிந்த மலைபோன்ற (திண்மைவாய்ந்த) அபிஷேகபாண்டியன் கையிலுள்ள கரும்பைப் பறித்தது. எ-று.

கடாக்கல் யானை யென்றது யானையென்பதைப்பற்றிச் சாதியடை தந்து கூறியதென்க, விண்-இடவாகு பெயராய் மேகத்தை யுணர்த்தியது. தொடைக்குன்று இல்பொருளுவமம். கடைக்கண் - இலக்கணப்போலி. (கரு)

பறித்துக் கடைவாய் வழிசாறளி பாய்ந்து நக்கக்
கறித்துக் குதட்டிப் பருகிக்கர மூச லாட
செறித்துத் தருக்கி நிழல்சீறி நிமிர்ந்து நிற்ப
மறித்துக் கடைக்கண் குறித்தார்பினு மாயம் வல்லார்.

(இ-ள்.) (அவ்வாறு) பறித்துக் கடைவாயினின்று ஒழுகுஞ்சாற்றினை வண்டுகள் பாய்ந்து சுவைக்கக்கறித்து, அதுக்கி உண்டு (தனது) துதிக்கை யூசலாடப் பொடித்து இறுமாந்து நிழலைக் கோபித்து நிமிர்ந்து நிற்க, மாயைவித்தையில் வல்ல சித்தமூர்த்திகள் மீண்டுங் கடைக்கணித் தருளினர். எ-று. (கசு)

மட்டுற்ற தாரான் கழுத்திற்கண்ட மாலை தன்னை
யெட்டிப் பறித்த திகல்காஞ்சுகி மாக்கள் சீறிக்
கிட்டிக் களிற்றைப் புடைப்பான்கிளர் கோல்கொண் டோச்சச்
சிட்டத் தவர்கண் செவந்தானையைச் சீறி நோக்க.

(இ-ள்.) மணம்பொருந்திய மாலையணிந்த அபிஷேகபாண்டியனது கண்டசரத்தை எட்டிப் பறித்தது; போர்செய்யும் மெய்காப்பாளர் கோபித்து நெருங்கி யானையை யடிக்கும்படி (தமது கையில்) விளங்குங் கோலை மேலெடுக்க (யாவருக்கும்) மேலாகிய சித்தமூர்த்திகள் கண் செவந்து யானையைக் கோபித்துப்பார்த்தருள.

இதுமுதல் இரண்டுசெய்யுள்கள் குளகம். (கஎ)

கண்டா வளியைக் களிறுண்டது கண்கள் சேப்புக்
கொண்டா னரசன் சிவயோகரிற் கோப மூளத்
தண்டா வரசன் றமருட்டறு கண்ணர் சீறி
வண்டா ரிதழி மறைத்தாரை யடிக்க வந்தார்.

(இ-ள்.) கண்டசரத்தைப் (பறித்த) யானையானது உண்டது. அரசன் கண்கள் செவப்புற்றுச் சிவயோகிகளாகிய சித்தமூர்த்திகளிடத்துக் கோபம்திகரிக்க, (எப்பொழுதும்) பிரியாத பாண்டியனுடைய பரிசனத்தில் அஞ்சாமையையுடைய வீரர்கள் கோபித்து, வண்டுகள் பொருந்திய கொன்றைமாலையை மறைத்து வந்தருளிய சித்தமூர்த்திகளை யடிக்க வந்தார்கள். எ-று.

கண்டு + ஆவளி = கண்டாவளி; கண்டத்திலணிந்த சரம். இது வடநூன் முடிபு. சேப்புக்கொண்டான் - ஒரு சொல். (கஅ)

அப்போ திளமூர லரும்பிய சித்த சாமி
கைப்போ தமைத்துக் கடிந்தோர்தமை நின்மி னென்ன
மைப்போ த்கமன்னவர் வைத்தடி பேர்க்க லாற்று
தொப்போ தரிய நிலையோவியம் போல நின்றார்.

(இ-ள்.) அப்பொழுது புன்முறுவல் செய்தருளிய சித்தமூர்த்திகள் தமது கைத்தாமரையால் அமர்த்தி, கோபித்து (தம்மை யடிக்க) வந்தவர்களை நில்லுங்கள் என்று கூறியருள, கரியயானைபோன்ற (வலிய) வீரர்கள் (முன்) வைத்த காலைப் பெயர்த்துவைக்க முடியாமல் உவமை கூறுதற்கரிய நிலையியற் பொருளாகிய சித்திரம் போல நின்றார்கள். எ-று.

வைத்த என்னும் பெயரெச்சத்தில் அகர விகுதி தொக்கது. (கக)

மத்தக் களிற்றான் வெருளித்தழன் மாறியன்பு
பொத்தப் புதைந்த மனத்தற்புதம் பொங்கிச் சோரச்
சித்தப் பெருமா னடிமாமுடி தீண்டப் பாசம்
பெத்தத் தமியேன் பிழையைப்பொறு மென்று வீழ்ந்தான்.

(இ-ள்.) மதமயக்கத்தையுடைய யானைச்சேனைவாய்ந்த பாண்டியன் கோபாக்கினி தணிந்து அன்பரினது போர்க்க, (அதனால்) மூடப்பட்ட மனதினிடத்து அதிசயமிகுந்து வழிதலால், சித்தமூர்த்திகளினுடைய திருவடிகளைத் தனது மகுடந் தீண்டும்படி, பாசபந்தத்திற்கட்டுண்ட தமியேன் குற்றத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று பணிந்தான். எ-று.

பாசம் ஆணவமுதலிய மும்மலங்களையுமுணர்த்தலால் சாதியொருமை. (உ0)

அன்புக் கிரங்குங் கருணைக்கட லான வைய
ரின்புற்று வேண்டும் வரங்கேளெனத் தாழ்ந்து வேந்த
னன்புத் திரப்பே றருள்வாயென நல்கிச் செங்கை
வன்புற்ற வேழ மிசைவைத்தரு ளாட்டம் வைத்தார்.

(இ-ள்.) (அடியவர்களது) அன்புக்குக் கனிந்தருளும் கிருபா சமுத்திரமாகிய சித்தமூர்த்திகள் மகிழ்வெய்தி, வேண்டிய வரத்தைக்கேள் என்றருளிச்செய்ய, அபிடேகபாண்டியன் பணிந்து நல்லபுத்திரப்பேற்றை அருள்செய்வீர் என்றுவேண்ட (அவ்வாறே) கொடுத்தருளி, சிவந்த கரத்தை வலிமைமிக்க யானையின்மேல் வைத்துக் கிருபாநோக்கஞ் செய்தருளினார். எ-று.

வன்புற்றவேழம் என்றது கல்யானையை யுணர்த்திற்று. (உக)

### கலிவிருத்தம்.

தழைக்கு நீள்கதிர்த் தண்முத்த மாலையைப்
புழைக்கை நீட்டிக் கொடுத்தது போதக

மழைக்கை நீட்டினன் வாங்கின னீதியிற்
பிழைக்க லாத பெருந்தகை வேந்தனே.

(இ-ள்.) பரந்த கிரணமிக்க தண்ணிய முத்துமாலையாகிய கண்டாவளியை (விழுங்கிய) கல்லானையானது (மீட்டும் வெளிப்படுத்தித் தனது) துதிக்கையால் நீட்டிக்கொடுத்தது; மநுநீதியினின்றும் தவறாத பெருந்தகைமை வாய்ந்த அபிஷேக பாண்டியன் மேகம்போலக் (கைம்மாறுகருதாது) கொடுக்குங் கையைநீட்டி வாங்கினன். எ-று. (உஉ)

முத்த மாலிகை வாங்குமுன் முன்னின்ற
சித்த சாமி திருவுருக் கண்டிலன்
மத்த யானை வடிவமு மேனைய
வொத்த தாக வுரவோன் வெருவினன்

(இ-ள்.) (பாண்டியன்) முத்துமாலையை வாங்கி நீட்டதற்குமுன், தன்முன் நின்றருளிய சித்தமூர்த்திகளின் திருவுருவத்தைக் காணுதவனாகி, மதமயக்கத்தை யுடைய யானையின் வடிவமும் (அங்கிருந்த) மற்றைய கல்லானைகளை யொத்திருக்க, (அன்பிற்) பெரியோனாகிய அபிடேக பாண்டியன் அச்சமுற்றனன். எ-று. (உங)

இந்த வாட லெமக்குயி ராயவிவ்
வந்த மில்லி யருள்விளை யாட்டெனு
முந்தை வேத முதல்வனை மீளவும்
வந்து வந்தனை செய்தனன் மன்னனே.

(இ-ள்.) இந்தத் திருவிளையாடல் எமக்கு உயிராய்விளங்கிய இறுதியில்லாத இந்தச் சோமசுந்தரமூர்த்தியின் அருள்விளையாடல் என்று கருதி, (யாவருக்கும்) முற்பட்டவனும், வேதங்களைத் திருவாய்மலர்ந்தருளிய முதல்வனுமாகிய சோமசுந்தரப் பெருமானை அரசன் மீளவும் வந்து பணிந்தான். எ-று.

அபிஷேகபாண்டியன் சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து திருக்கோயிலை வலம்வருகையில் சித்தமூர்த்திகளைத்தரிசித்து அற்புதமும்அச்சமுமெய்திப் பிரதக்கண முடித்துச் சன்னிதானமடைந்து பணிந்தனனாதலின் "மீளவும்வந்து வந்தனைசெய்தனன்" என்றார். (உச)

முழுது ணர்ந்த முதல்வநின் றாடலை
யிழுதை யேனறி யாதளந் தேனெனு
வழுதி றைஞ்சிய பராத மீந்துகை
தொழுது நின்று துதிக்கத் தொடங்கினன்.

(இ-ள்.) எல்லாவற்றையுமுணர்ந்தருளிய முதற்கடவுளே! தேவரீரது திருவிளையாடலை அறிவிலேனாகியயான்அறியாமையால்அளவிடத்தொடங்கினேனென்று, அழுது வணங்கி அபராதமீந்து கைகுவித்து நின்று தோத்திரஞ் செய்யத்தொடங்கினன். (பாண்டியன்) எ-று.

முழுது என்பதனிறுதியில் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. (உரு)

**கோச்சகக்கலிப்பா.**

வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தி
னீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியா
யாதியா யீறாய் நடுவா யவைகழிந்த
சோதியாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே.

(இ-ள்.) வேதத்தையுடையவனுகியும், வேதத்தில் விளையும் பொருளாகியும், அவ்வேதத்தில் அடங்கிய நீதிவடிவாகியும், அந்த நீதிநெறியைக் கடந்து நின்ற மிக்க ஒளியாகியும், முதலாகியும், இறுதியாகியும், நடுவாகியும், அவற்றைக்கடந்த சோதியாகியும் நின்றவனே! உனது தன்மை எனது சோதனையில் (எவ்வாற்ருனும்) அகப்படத்தக்கதோ. எ-று. (உசு)

நின்னுன் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னு ளருச்சித்தும் பாதந் தலைசுமந்து
முன்னுமம் வாசித்து முன்னையறி யேனென்று
சொன்னு லடியேனென் சோதனைத்தோ நின்னியல்பே.

(இ-ள்.) தேவரீரால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட வேதங்கள் தேவரீரது திருவடிகளை வந்தனைசெய்தும், பலகாலமருச்சனைசெய்தும், தேவரீரது திருவடிகளைத் தலைமேற்சுமந்தும், தேவரீரது திருநாமங்களைக் கூறியும், தேவரீரை யறியேனென்று முறையிட்டால், தேவரீருடைய தன்மை அடியேனுடைய சோதனையுள் அகப்படத்தக்கதோ. எ-று. (உஎ)

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினுஞ் சிறியதுமா
யரியதினு மரியதுமா யெளியதினு மெளியதுமாய்க்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமா யவைகடந்த
துரியமுமாய் நின்ருயென் சோதனைத்தோ நின்னியல்பே.

(இ-ள்.) மகத்திலும் மகத்துமாய், அணுவிலும் அணுவுமாய், அரியபொருளிலும் அரியபொருளுமாய்,எளியபொருளிலும் எளியபொருளுமாய், ஆன்மாவும் உணர்வும் விஷயப்பொருளுமாய், அவற்றைக்கடந்த துரியமுமாய் நின்றவனே! தேவரீரது தன்மை என்சோதனையில் அகப்படத்தக்கதோ. எ-று. (உஅ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றுபல முறைபழிச்சி மனையெய்தி விக்ரமனை யீன்று பன்னுட்
டொன்றுமுறை கோலோச்சி விக்கிரமன் சுவன்மிசைப்பார் சுமத்திப் பாசம்
வென்றுகளைந் தருட்சித்த சாமிதிரு வருணேக்கால் விளைபே ரின்ப
மன்றமது வீழ்வண்டிற் கலந்திருந்தா னபிடேக மாறன் மன்னே.

(இ-ள்.) என்றுபலதரம் தோத்திரஞ்செய்து தனது கோயிலையடைந்து விக்கிரமபாண்டியனைப் பெற்று பலகாலமும் பண்டுபோல மனுமுறைப்படி செங்கோல் செலுத்தி, அவ்விக்கிரம பாண்டியனுடைய பிடரின்மேற் பூபாரத்தைச்சுமத்தி, பாசத்தொடக்கை வென்று நீக்கி அருள் வடிவாகிய சித்தமூர்த்தியின் திருவருள் நோக்கத்தால் விளையும் பேரின்பத்தில் நிலைபெற, மதுவில் வீழ்ந்தவண்டுபோல அபிஷேக பாண்டியன் (இரண்டறக்) கலந்திருந்தான். எ-று. (உகூ)

கல்லானைக்குக்கரும்பருத்தியபடலம்முற்றிற்று.

———

ஆ-திருவிருத்தம் - கூஅகூ.

உ

சிவமயம்.

# இருபத்திரண்டாவது,

# யானையெய்தபடலம்.

கலிவிருத்தம்.

கட்டவிழ்க டுக்கையர்க லானைகழை தின்ன
விட்டருளு பஞ்சவ னிடத்தமண ரேவி
விட்டமத யானைவிழ மேவலர் புரத்தைச்
சுட்டகணை விட்டுயிர்தொ லைத்தமுறை சொல்வாம்.

(இ-ள்.) முறுக்குகளவிழ்ந்த கொன்றைமாலையையணிந்த சித்தமூர்த்திகள் கல்லானை கரும்பைத்தின்னக் கொடுத்தருளியது இத்திருவிளையாடல். (இனி) பாண்டியனிடத்தில் சமணர்களேவிய மதப்பெருக்குடைய யானையானது மடிய, பகைவர்களது திரிபுரங்களைத் தகித்த பாணத்தினை விடுத்து அதனுயிரை மாய்த்தருளிய திருவிளையாடலைக் கூறுவாம். எ-று.

திரிபுரசங்கார காலத்தில் திருமாலே அம்பாக்கப்பட்டனர். ஈண்டு இந்த யானையைச் சங்கரிக்க நரசிங்கக்கணை செலுத்தப்பட்டதாகலின், நாரணனுக்கும் நரசிங்கத்துக்கும் உரிய ஒற்றுமை கருதி "மேவலர்புரத்தைச்சுட்டகணை" எனக் கூறினர்.

விக்கிரம பாண்டியன்வெ லற்கரிய செங்கோ
றிக்குநில னுந்திறைகொள் செல்வநிறை வெய்த
வக்கிரம வெங்கலிய ரும்பகையொ துங்கச்
சக்கரமு ருட்டியிடர் சாய்த்துமுறை செய்வான்.

(இ-ள்.) விக்கிரமபாண்டியனுடைய தடுத்தற்கரிய செங்கோலானது எட்டுத்திக்கிலும் நிலவுலகிலும் இறுக்கும் திறையாலாகிய செல்வத்தினிறைவை யுடைய, மிகக்கொடிய கலியாகிய அரியபகைவிலக, தனது ஆக்கினைசக்கரத்தைச் செலுத்தித் துன்பத்தையடையாது விலக்கி அரசுசெய்து வருவானாயினன். எ-று.

திக்கு, நிலன்—இடவாகுபெயர்கள். (உ)

புத்தரம ணாதிய புறக்களை யகழ்ந்து
நித்தமறை யாகம நெறிப்பயிர் வளர்த்து
மெய்த்தவிதி பத்தியின் விளைத்தபயன் யாருந்
துய்த்திட மனுத்தொழி னடத்திவரு தூயோன்.

(இ-ள்.) புத்தரும் சமணரும் முதலாகிய புறமதக்களைகளைக் களைந்தும், அழியாமையையுடைய வேதநெறியும் ஆகமநெறியுமாகிய பயிர்களை விளைத்தும், (அவ்வைதிக சைவமார்க்கத்தில்) மெய்ம்மையையுடைய விதியும் பத்தியுமாக விளைந்த பயன்களை யாவரும் உண்டு களிக்க, மநுமுறைப்படி அரசு செலுத்தி வருகின்றவனாகிய விக்கிரமபாண்டியன். எ-று.

விதி - திருவருளைக் கருதாமல் அறத்தாறு ஒழுகல். பத்தி - அவ்வழி ஒழுக்கத்தால் அருள்வழிப்படல். பத்தியின் - என்பதில் இன் தவிர்வழிவந்த சாரியை. (ங)

மருவிதழி யானுறையும் வானிழிவி மானத்
தருகுவட பக்கமுற வாலயமெ ழுப்பி
யுருவருவி ரண்டினையு மொருவிவரு சித்தர்
திருவுருவு கண்டுபணி செய்தொழுகு நாளில்.

(இ-ள்.) வாசம் பொருந்திய கொன்றைமாலை தரித்த சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளிய விண்ணிழிவிமானத்தின் பக்கலில் வடதிசையில் (சிற்பநூன்முறைப்படி) ஓர் ஆலயஞ் செய்வித்து, உருவுமருவுமாகிய இரண்டினையும் நீக்கி (அருளுருவங் கொண்டு) வந்த சித்தமூர்த்திகளது திருவுருவை (தன்தந்தை விருப்பின்படி) பிரதிஷ்டைசெய்து, பூசித்துவருங்காலத்தில். எ-று.

விக்கிரமபாண்டியன் தன் பிதாவாகிய அபிடேகபாண்டியனுக்குச் சித்தமூர்த்திகள் கொடுத்த வரத்தாற் றோன்றினவனாகலின், சித்தர் திருவுருவு கண்டு என்பதற்குத் தனது தந்தை விருப்பின்படி என வருவித்தாம். (ச)

செய்யகதி ரோன்வழிய செம்பியனொ ருத்தன்
கையனவன் வென்றிபயில் காஞ்சிநக ருள்ளான்
பொய்யமணர் கட்டுறைபு றத்துறையி னின்றான்
ஐயமின்மதி மாறனொடு மாறுபட நின்றான்.

(இ-ள்.) செவ்விய கிரணங்களையுடைய சூரிய பரம்பரையிற் றோன்றிய சோழராஜன் ஒருவன் இருந்தான்; அவனோ வஞ்சகன்; வெற்றிபொருந்திய காஞ்சிநகரத்தில்வசிப்பவன்; பொய்மைபொருந்திய சமணமதமாகிய புறமார்க்கத்தில் நின்றவன்; குற்றமில்லாத சந்திரவமிசத்தில் தோன்றிய விக்கிரமபாண்டியனுடன் பகைமைகொண்டிருந்தான். எ-று.

இயற்கையாகவே சூரியமரபிற்கும் சந்திரமரபிற்குங் குலவிரோத முள்ளதுடன் சமணசமயத்திற்குஞ் சைவசமயத்திற்கும் மதவிரோதமும் உளதாதலின் "மாறுபடநின்றான்" என்றார். (ரு)

முடங்கன்மதி செஞ்சடைமு டித்துவிடை யேறும்
விடங்கரது சேவடிவி ழுங்கிய மனத்து
மடங்கனிகர் தென்னனெதிர் வந்துபொர லாற்றா
தடங்கலனோர் வஞ்சனையி னாலட்ட மதித்தான்.

(இ-ள்.) வளைந்த (பிறைச்) சந்திரனைச்செவ்விய சடையில் தரித்து, இடபத்தில் ஆரோகணிக்குஞ் சோமசுந்தரக்கடவுளினுடைய செவந்த திருவடிகளையடக்கிய மனத்தையுடைய சிங்கம்போன்ற விக்கிரமபாண்டியனுக்கெதிரே வந்து போர்புரிய முடியாமல், பகைவஞ்கிய அச்சோழன் ஒருதந்திரத்தாற் கொல்ல யோசித்தான். எ-று.

விடங்கர் - சுயம்புமூர்த்தி. டங்கம் - உளி. வி-எதிர்மறைப் பொருள் தரும் வடமொழியுபசர்க்கம். (கூ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அஞ்சனங் கவுஞ்சங் கோவர்த் தனந்திரி கூடங் காஞ்சி
குஞ்சர சைய மேம கூடமே விந்த மென்னு
மஞ்சிவர் வரைக ளெட்டும் வைகுறு மமணர் தம்மி
லெஞ்சலில் குரவர்க் கோலை வேறுவே றெழுதி விட்டான்.

(இ-ள்.) அஞ்சனம் - கிரவுஞ்சம் - கோவர்த்தனம் - திரிகூடம் - காஞ்சி - குஞ்சரசையம் - ஏமகூடம் - விந்தம் என்று சொல்லப்பட்ட மேகங்கள் தவழும்

(இந்த) எட்டு மலைகளிலுந் தங்கிய சமணர்களுள், குறைவில்லாத ஆசிரியத்தன்மை வாய்ந்தவர்களுக்குத் தனித்தனி யோலை யெழுதி விடுத்தான். எ-று.

வைகுறும் - ஒருசொல். குஞ்சரம் - யானை. (எ)

வடிவுபோ லுள்ள மெல்லா மிருள் புதைய நின்ற
வடிகண்மா ராவா ரெண்ணு யிரவரு மார்த்தார் வேய்ந்த
முடிகெழு வேந்தன் விட்ட முடங்கலை நிமிர்ந்து வாசித்
திடியெழு கார்போற் குன்றி னிழிந்துவே றிடத்திற் செல்வார்.

(இ-ள்.) தமதுருவம் கருநிறம் வாய்ந்திருத்தல் போலத் தமது உள்ள முழுதும் அஞ்ஞானமாகிய இருள் பொத்தநின்ற அடிகண்மாராவாராகிய எண்ணாயிரஞ் சமணர்களும், ஆத்திமாலையைச் சூடிய கிரீடந்தரித்த சோழனனுப்பிய ஓலையைப் பிரித்து வாசித்து, இடியோசைமிக்க மேகம்போல அம்மலைகளினின்றிறங்கிக் காஞ்சிநகரத்திற்குச் செல்வாராயினர். எ-று.

சமணாசிரியருக்கு அடிகள் என்பது சிறப்புப்பெயராதலின் மார் எனப் பன்மைவிகுதி தந்து அடிகண்மார் எனவும், அம்மலைகளைத் தம்முடைய இருப்பிடமாகக் கொண்டவராதலாற் காஞ்சிநகரத்தை வேறிடமெனவுங் கூறினர். (அ)

யாவரு மொருங்கு கூடி யிருள்வழி கொள்வ தேய்ப்பக்
காவல்வல் லரணஞ் சூழ்ந்த காஞ்சிமா நகரத் தெய்திப்
பூவலர் தாரான் கோயிற் புறங்கடைப் புகுந்து வேந்த
னேவலர் விடுப்ப வுள்போ யிறைமக னிருக்கை புக்கார்.

(இ-ள்.) (அடிகண்மார்கள்) எல்லோரும் ஒன்றுசேர்ந்து இருளானது வழி நடந்து செல்வதுபோல வலிய மதிற்காவல் சூழ்ந்த பெரிய காஞ்சிநகரத்தையடைந்து ஆத்திப்பூமலர்ந்த மாலையணிந்தசோழனதுகோயிலின் தலைவாயிலில் வந்து அச்சோழராசனதுவாயில்காப்போர் உள்ளேவிடுப்பப்போய் அரசிருக்கைமண்டபத்தை யடைந்தார்கள். எ-று. (கூ)

மன்னவன் முடிமேற் பீலி வைத்தன ராக்கங் கூற
வன்னவ னவரை நோக்கி வசியமுன் னாறும் வல்லீர்
தென்னனை யாபி சாரஞ் செய்துயிர் செகுத்தா லுங்கட்
கென்னது நாடு பாதி தருவல்போ யியற்று மென்றான்.

(இ-ள்.) சோழராசன் கிரீடத்தின்பேரில் (தங்கள் கையிற்பற்றிய) மயிற்றோகைகளைவைத்து ஆசீர்வதிக்க, அச்சோழன் அவர்களைப்பார்த்து வசியமுதலிய ஆறுதொழில்களிலும் வன்மையுடைய அடிகண்மாரோ! விக்கிரமபாண்டியனை ஆபிசாரயாகஞ்செய்து உயிர்கொன்றால் உங்களுக்கு எனது நாட்டிற்பாதி கொடுப்பேன்; போய் (அதனைச்) செய்யுங்களென்று விடுத்தான். எ-று.

சமணமத குருவர்கள் தமது கையில் மயிற்பீலி ஏந்துதலும், தம்மை வழிபடுவோரைக்காணில் அதை அவர் சிரமேல்வைத்து ஆசீர்வதித்தலும் மரபு.

வசியமுன் ஆறு என்றது, வசியம், வயஸ்தம்பம், வாதம், அதிரிசியம், அஞ்சனம், ஆகருஷணம். ஆபிசாரம்-சத்துருவைக் கொல்லுதற்பொருட்டுச் செய்யும் ஓர் கொடுந்தொழில். (க0)

தவம்புரிந் தவமே செய்வார் தாமதற் குடன்பட் டேகி
நிவந்ததெண் டிரைநீர்ப் பாலி நெடுங்கரைக் காதமென்றிற்

கவர்ந்தகன் சாலை கோலி யோசனை யகலங் கல்லி
யவம்படு வேள்விக் குண்டங் கோணமெட் டாகக் கண்டார்.

(இ-ள்.) (புறத்தில்) தவத்தைச் செய்து (அகத்தில்) பாவத்தைச் செய்யும் அடிகண்மார் அத்தீத்தொழிற்கு அங்கீகரித்துப்போய், பெருக்கெடுத்தோங்கியதெள்ளிய அலைகளையுடைய நீர்மயமான பாலாற்றின் நெடிய கரையில், முக்கார்தவழி பரந்த இடத்தையுடைய யாகசாலைநிருமித்து, ஒரு யோசனையகலந் தீமைபொருந்திய யாக குண்டந்தோண்டி, எண்கோணமாகச் செய்து. எ-று.

கவர்ந்த என்பதில் அகரவீறுதொகுத்தல். அகம் - அகன்; மொழி யிறுதிப் போலி. கண்டார் என்னும் வினைமுற்று வினையெச்சப் பொருளது. இது பின்வருஞ் செய்யுளில் செய்தார் என்னும் வினைமுற்றைக்கொண்டது. (கக)

விடம்பொதி காட்டம் பெய்து நிம்பநெய் விராய நஞ்சி
னுடம்புடை யுயிரின் கோழுன் கறிப்பொடி யூறு மெண்ணெ
யிடம்பட வாயங் காந்த வெரிக்குழி புதையப் பெய்து
கொடும்பழி வேள்வி செய்தார் கொல்லாத விரதம் பூண்டார்.

(இ-ள்.) விஷம்பொருந்திய (எட்டி முதலிய) சமித்தையிட்டு வேப்பெண்ணெயிற் கலந்த விஷம்பொருந்திய உடலையுடைய பாம்பின் கொழுவிய தசையும், மிளகின்பொடியூறும் எள்ளெண்ணெயும், விசாலமாக வாய்ந்த பரந்த எரியையுடைய யாகக்குழி புதைபடும்படி பெய்து, கொல்லாமையையே விரதமாக மேற்கொண்ட எண்ணாயிரவரும் கொடிய பழிவாய்ந்த அபிசாரயாகத்தைச் செய்தார்கள். எ-று.

வாய் அங்காந்த - வாய்திறந்தது போன்ற எனினும் பொருந்தும். (கஉ)

மாடுள பொதும்பர் நந்தா வனமுள சோலை யுள்ள
காடுள கருகிச் சாயக் கயலுள வோடை யுள்ள
கோடுள வாவி யுள்ள குளமுள வறப்பத் தாவிச்
சேடுள முகிலுந் தீயச் சிகையெழு குண்டத் தீவாய்.

(இ-ள்.) மரத்தொகுதியிடத் துள்ளனவும், நந்தவனங்களி லுள்ளனவும், சோலைகளி லுள்ளனவும், காடுகளி லுள்ளனவும் (ஆகிய உயிர்கள்) கருகி இறக்கவும், சேல்மீன்கள் உள்ள ஓடைகளி லுள்ளனவும் கரையுள்ள தடாகங்களி லுள்ளனவும் குளத்தி லுள்ளனவும் (ஆகிய உயிர்கள்) வற்றியழியவும், மேலெழுந்து கூட்டமாக வுள்ள மேகங்களும் தீய்ந்துசாயவும் கொழுந்துவிட்டெழுந்த யாககுண்டத்தீயினிடத்தில். எ-று. (கங)

கூற்றெழு தோற்றம் போல வஞ்சனக் குன்றம் போலக்
காற்றெழு செவியு நால்வாய் கௌவிய மருப்பு மாறு
ஆற்றெழு மதமு மூச லாடிய வொற்றைக் கையு
மேற்றெழு விடம்போற் சீறி யெழுந்ததோர் தறுகண் யானை.

(இ-ள்.) யமன் தோன்றி யெழுந்த காட்சிபோலவும், ஒரு அஞ்சனமலை (முளைத்தெழுந்த காட்சி) போலவும், காற்றைவீசாநின்ற காதுகளையும், தொங்கியசையும் வாயிற்பொருந்திய கொம்புகளையும், நீங்காது ஊற்றெடுத்து எழாநின்ற மதத்தையும்,ஊசல்போல் ஆடாநின்ற துதிக்கையையுந்தாங்கி, (கடலில்) எழுந்த ஆலாலவிடம் போல ஒரு அஞ்சாமையையுடைய யானையானது கோபித்தெழுந்தது. எ-று. (கச)

அந்தமா வேள்வித் தீயு மவியமும் மதமுஞ் சோர
வந்தமா களிற்றை நீபோய் வழுதியை மதுரை யோடுஞ்

சிந்தவே தொலைத்தி யென்னத் தென்றிசைச் செல்ல வேவி
முந்தவே விடுத்த மாசு மூழ்குட லமணப் பேய்கள்.

(இ-ள்.) அந்தப் பெரிய ஆபிசாரயாகாக்கினியும் அவியும்படி மும்மதங்களுஞ் சொரியத் தோன்றிய பெரிய யானையை (நோக்கி), நீ சென்று விக்கிரமபாண்டியனை மதுரைப்பதியிலுள்ளாரோடும் கெடும்படி அழிக்கக்கடவாய் என்று தென்றிசை நோக்கிச் செல்லக் கட்டளையிட்டு, குற்றத்தில் மூழ்கிய (எண்ணாயிரவர்களாகிய) சமணப்பேய்கள் (தமக்கு) முற்பட அனுப்பின. எ-று. (கடு)

கலிவிருத்தம்.

அருளற்றிரு ளுடலிற்புதை யமணக்கய வர்களுட்
டெருளற்றரு மறையிற்படர் செயலற்றிக பரமெய்ப்
பொருளற்றவ னணிகத்தொடு புறமொய்த்திட மதமா
வெருளற்றிடி குரலிற்படி வெடிபட்டிட வருமால்.

(இ-ள்.) கிருபையின்றி உடலில் கருநிறம்பொதிந்த சமணர்களாகிய கீழ்மக்களுள், அறிவின்றி அரியவேதநெறிச்செல்லும் செயலொழிந்து, இகபோகத்தையும் பரபோகத்தையும் உண்மைப்பொருளையும் ஒழிந்த சோழனுடைய சேனைகளோடு புறத்திற் சூழ்ந்துவர, மதப்பெருக்கையுடையயானையானது அச்சம் ஒழிந்து இடியின் (ஒலி) போன்ற (தனது) முழக்கத்தால் உலகம் வெடிபட வராநிற்கும். எ-று. (சசு)

அடியின்னள வகல்பாதல முடியின்னள வண்ட
மிடியின்னள வெழுகார்செவி யெறிகாலள வகில
மடியும்மள வுளர்கான்மத மழையின்னள வுலக
முடிவின்னெழு கடல்கண்ணழ லளவாமுது வடவை.

(இ-ள்.) அகன்ற பாதலத்தின் அளவு (அந்த யானைவைத்த) காற்சுவட்டின் அளவினதாம். வானுலகளவு (அதன்) தலையின் அளவினதாம். சத்தமேகங்களின் (ஒலி) அளவு (அதன்) முழக்கத்தின் அளவினதாம். உலகமுழுவதும் மடிய எறியும் (ஊழிக்) காற்றினது அளவு (அதன்) காது வீசுங் காற்றின் அளவினதாம். உலகமுடிவில் எழாநின்ற கடலின் அளவு (அதன்) மதப்பெருக்கின் அளவினதாம். பெரிய வடவாமுகாக்கினியளவு (அதன்) கண்களிற் சிந்துங்கோபாக்கினியின் அளவினதாம்.

மடியும்மளவு என்பதிலுள்ள அளவு என்னுஞ் சொல் முன்னும்பின்னும் சென்றமையின் இடைநிலைத்தீவகம். (கஎ)

கூற்றஞ்சிட வருமிக்கரி குலஞ்செவி முழைவா
யேற்றஞ்செய மடங்குஞ்செவி யெறிகால்வழி விழித்தீ
யூற்றஞ்செய மடைவாயுடைந் தொழுகுங்கட மதநீர்
நாற்றஞ்செயத் திசைவேழமு நடுக்கஞ்செய்து நலியும்.

(இ-ள்.) யமனும் அஞ்சும்படி வராநின்ற இந்த யானையின் முழக்கமானது, (தமது) அகஞ்செவியாகிய முழையில் தாக்குதலாலும், (அதன்) மடங்கிய காதுகள் எறியுங் காற்றின் வழி (தமது) கண்களிலுள்ள (கோபத்) தீ கெடுதிசெய்தலாலும், நீர் மடை வாய்உடைந்து ஒழுகும் (வெள்ளம்போல) மதப்பெருக்கானது நாற்றஞ்செய்தலாலும் திக்குகள்தோறும் உள்ள அட்டகஜங்களும் நடுநடுங்கி வருந்தாநிற்கும். எ-று.

திசைவேழமும் நடுக்கஞ்செய்து நலியும் என்றதனால் இந்த யானை திக்கஜங்களையும் வெல்லும் ஆற்றலுடையது என்று குறிப்பித்ததாயிற்று. (கஅ)

இடிக்கும்புயல் வயிற்றைக்கிழித் திடியேற்றினை யுதிர்க்கும்
வெடிக்கும்பிளி றொலியாற்றிசை விழுங்கிச்செவி டாக்குந்
துடிக்கும்புழைக் கையோச்சிவிண் டொடுகுன்றினைச் சுற்றிப்
பிடிக்குங்கடல் கலக்குந்தனிப் பெருமத்தெனத் திரிக்கும்.

(இ-ள்.) ஒலிக்கின்ற மேகத்தின் வயிற்றைப் பீறி இடியேற்றை உதிர்க்கா நிற்கும். முழங்குகின்ற பேரொலியால் திக்குகளைவிழுங்கிச் செவிடுபடுத்தும். (கோபத்தால்) துடிக்கின்ற துதிக்கையைவீசி ஆகாயமளாவிய மலைகளைச் சுற்றிப்பிடிக்கும். (அம்மலைகளைப்பறித்து) கடலைக்கலக்கும் ஒப்பில்லாத பெரிய (மந்தரகிரியாகிய) மத்து போலச் சுழற்றும். எ-று. (கக)

உருமுக்குர லொலியிற்றுள ரொலிவிட்டெரி செவியிற்
றிருமுட்பிறை யெயிறிற்றழ லெறிகட்டிரு ளுடலிற்
றருமுக்கட வுருவித்துர லடியிற்றென நிலமேல்
வருமுக்கிர வடவைக்கனல் வரிஞெப்பத மதமா.

(இ-ள்.) இடிபோன்ற முழக்கத்தையுடையது; சஞ்சரிக்குங் காற்றை வீசுஞ் செவியையுடையது; இரண்டுமுள்போலும் (முனைகூரிய) பிறை போன்ற தந்தங்களையுடையது; கோபாக்கினி சொரியுங் கண்களையுடையது; இருள்போன்ற (கரிய) உடலையுடையது; உரல்போலும் (வட்டவடிவாகிய) காலையுடையது என்று சொல்லும்படி நிலவுலகத்தின்மேல் கொடுமைபொருந்திய வடவாமுகாக்கினி வந்தால் (அதனை) அந்த மதத்தைச் சொரியும் யானை நிகர்க்கும். எ-று.

கட்டு - கண்ணையுடையது. சாரியை பெறாது வந்த அஃறிணை யொன்றன் படர்க்கைக்குறிப்பு வினைமுற்று. (உ0)

தெழிபட்டதிக் கயத்தின்செவி தீயப்பகை யோடும்
வழிபட்டொரு சடுங்கூற்றென வருகுஞ்சர வரவை
விழிபட்டவர் மொழியாலுணர் விரைபட்டலர் வேம்பன்
சுழிபட்டலை புனல்போன்மனஞ் சுழன்றுனினைந் தழன்றான்.

(இ-ள்.) (தனது) முழக்கந்தாக்கிய திக்குயானைகளின் காதுகள் கரிந்து தீய, பகைவராகிய சமணரோடும் ஒருவழிப்பட்டுக் கொடிய எமனைப்போல வரா நின்ற யானையின்வரவைப்பார்த்தவர்களுடைய சொற்களால் அறிந்த வாசமுற்றலர்ந்த வேப்பமாலை யணிந்த விக்கிரமபாண்டியன் சுழித்தல்கொண்டு அழிகின்ற நீரைப் போல (தனது) மனந்திரிந்து (அதின் வேகவரவை) நினைந்து வருந்தி. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம்.

நினைந்தான், அழன்றான் என்னும் முற்றெச்சங்கள் பின் செய்யுளில் இரந்தான் என்னும் முற்றுவினையைக் கொண்டன. (உக)

மைப்போதகம் பொறையாற்றிய மணிக்கோயின்முன் குறுகாக்
கைப்போதக முரித்தான்கழற் காற்போதக முறத்தாழ்ந்
திப்போதகந் தணியுந்தொலைத் தெனைக்காத்தியென் றிரந்தா
னப்போதகல் வானின்றெருந் திருவாக்கெழுந் தன்றே.

(இ-ள்.) கரிய (திக்கு) யானைகளால் சுமக்கப்பட்ட நவமணிகளிழைத்த இந்திரவிமானத்தின்முன் சென்று, துதிக்கையையுடைய (கயாசுரனாகிய) யானையை யுரித்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய வீரக்கழலை யணிந்த திருவடித்தாமரையை மனத்திற் பொருந்தப் புணிந்து, (அக் கயாசுரனைப்போல்) இந்த யானையையுங்

கொன்று (தேவர்களைப்போல) என்னை (நகரவாசிகளோடும்) காப்பாய் என்று குறை யிரந்தான். அப்பொழுது பரந்த ஆகாயத்திலிருந்து ஒரு அசரீரி உண்டாயிற்று. எ-று.

எழுந்தன்று - ஒருசொல். அன்று சாரியை பெற்றது. அசரீரி மேலைச்செய்யுளால் விளங்கும். (உஉ)

விட்டார்வலி கெடநாமொரு விற்சேவக னாகி
யொட்டார்விட வருவெங்கரி யுயிர்வௌவுது முதனின்
மட்டார்பொழிற் கடிமாநக ரயற்கீழ்த்திசை மருங்கோ
ரட்டாலைமண் டபஞ்செய்யென வதுகேட்டெழுந் தரசன்.

(இ-ள்.) விடுத்தவர்களுடைய மனவன்மை அழிய நாம் வில்தாங்கிய ஒரு சேவகனாகி, அப்பகைவர் ஏவ வராநின்ற கொடிய யானையின் பிராணனைக் கொள்ளை கொள்ளுவோம்; முதலில் உனது தேன்பொருந்திய சோலைசூழ்ந்த காவலையுடைய பெரிய மதுரைநகரின் அருகில் கீழ்த்திசையினிடத்து ஒருஅட்டாலை மண்டபத்தைச் செய்கவென்று திருவாக்கருள, அரசன் அதனைக் கேட்டெழுந்து. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம்.

அட்டாலைமண்டபம் - உன்னதமண்டபம். இதனை அட்டால மெனவும் கூறுவது வழக்கு. (உரு)

அகங்கவ்விய களிப்பெய்திவந் தட்டாலைமண் டபம்பொன்
னகங்கவ்விய தெனத்தூணொரு நானான்கினி லெடுத்தே
சகங்கவ்விய புகழான்செயத் தறுகட்கணை மதமா
முகங்கவ்விய விற்சேவகன் வருவானது மொழிவாம்.

(இ-ள்.) மனத்திற்பற்றியமகிழ்ச்சியடைந்து (திருச்சன்னிதானத்தினின்று) வந்து உலகிற் பரந்த கீர்த்தியையுடைய விக்கிரமபாண்டியன் அட்டாலை மண்டபம் ஒன்றை மகமேருவே (தூணாக வருமாறிச்) சுமந்ததென்று சொல்லும்படி பதினாறு தூண்களால் (சுமக்கும்படி) எடுத்துக் கட்டிமுடிக்க, அஞ்சாமையையுடைய அம்பானது யானையின் முகத்தில் தைத்துருவ, (சோமசுந்தரக் கடவுள்) வில்லை யேந்திய சேவகனாய் வருகின்றார். அதனைக்கூறுவாம். எ-று.

முகங்கவ்விய என்பதில் கவ்விய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (உச)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நீனிற நீத்த நீந்து நிழன்மதி யிரண்டுண் டென்ன
வானிற வலயச் சங்க வார்குழை நுழைவித் தம்பூம்
பானிற வெகினங் காணாப் படர்சடை மறைத்துத் தோற்றுங்
கானிறை குஞ்சிச் சூட்டிற் களிமயிற் கலாபஞ் சூடி.

(இ-ள்.) நீலநிறம்பொருந்திய சமுத்திரத்தை நீந்திச்செல்லும் ஒளிபொருந்திய சந்திரன் இரண்டுண்டாயின் அவற்றை யொப்ப, வெண்ணிறம் பொருந்திய வட்டவடிவாகிய சங்காற்செய்த நீண்ட குண்டலங்களை (திருச்செவியில்) அணிந்து, அழகிய தாமரைமலரில் வசிக்கும் வெள்ளிய நிறத்தையுடைய (பிரமனாகிய) அன்னத்தால் காணமுடியாத படர்ந்த சடைமுடியை மறைத்தருளி, காணப்படும் வாசநிறைந்த சிகையாகிய சுடிகையில் களிக்கும் மயிலினது இறகைச்சூடி. எ-று.

இதுமுதல் ஆறு செய்யுள்கள் குளகம்.

இது முதல் நான்கு செய்யுள்களால் சிவபெருமானது வருகை கூறப்பட்டது. நீலநிறம் என்றது நீனிறம் எனக் கடைக்குறையாயிற்று. (௨௫)

கருங்கடன் முளைத்த செக்கர் கதிரெனக் குருதிக் கச்சை
மருங்குற வீக்கிச் சோரி வாயுடை வாளுங் கட்டி
யிரங்குநான் மறைக ளேங்க விருநிலந் தீண்டு தாளிற்
பொருங்கழல் வளைத்து வாளிப் புட்டிலும் புறத்து வீக்கி.

(இ-ள்.) கரிய கடலில் உதித்த செஞ்சூரியனைப்போல உதிரநிறம் பொருந்திய கச்சையை அரையிற்பொருந்தக்கட்டி, உதிரஞ் சொரியும்வாயையுடைய உடைவாளையும் (அதன்புறத்துச்) சேர்த்து, (தேடமுடியாமல்) வருந்தும் நான்கு வேதங்களும் அலற, (தனது பெருந்தவத்தால்) பெரிய நிலவுலகுபரிசிக்குந் திருவடியில் போர் செய்கின்ற வீரக்கழலையணிந்து, அம்பறாத்தூணியையும் முதுகிற்கட்டி. எ-று.

உடையான்றொழிலை யுடைமைமேலேற்றிப் பொருகழலென்றார். (௨௬)

வீங்கிய தடந்தோ ளிட்ட வார்சிலை வில்லி னோடும்
பாங்குறை யிமயப் பாவை பாதியே யன்றி முற்றும்
வாங்கிய வண்ணம் போன்று மல்லது மாலு மோர்பா
லோங்கிய வண்ணம் போன்று மொளிநிறம் பசந்து தோன்றி.

(இ-ள்.) பூரித்த பெரிய தோளில் தொடுத்த நெடிய வில்லினோடும் இடப்பாதியில் வசிக்கும் உமாதேவியார் அப்பாதியே யல்லாமல் (திருமேனி) முழுமையும் பெற்றதுபோன்ற (பசிய) நிறத்தையொத்தும், அதுவன்றித் திருமாலும் ஒருவலப் பாதியில் வசித்தருளும் நிறத்தையொத்துங் கருநிறமுற்று. எ-று.

திருமாலும் சிவசத்திகளுள் ஒன்றுதல் பற்றி ஒருபாகம் பெற்றதுபோலும் என்றார். இதனை,

[illegible]
[illegible]
[illegible] ॥ எனவரும் ஆகம சுலோகத்தானறிக. (௨௭)

காமனுங் காமுற் றஞ்சுங் காளையாம் பருவந் தோன்றத்
தாமுல களந்த வென்றித் தனிவிற்சே வகனுய்த் தோன்றி
மாமறை மகுட மன்ன மண்டபத் தேறித் தென்னர்
கோமக னிடுக்கண் டீர்ப்பான் குஞ்சர வரவு நோக்கா.

(இ-ள்.) மன்மதனும் விரும்பி (இவ்வடிவம் நமக்கில்லையே யென்று பொறாமையால்) அஞ்சும் காளைப்பருவம் வாய்க்க, உலகத்தை அளவுபடுத்திய வெற்றி வாய்ந்த ஒப்பில்லாத வில்லைத்தாங்கிய வேடவீரனாய் எழுந்தருளி, மகத்தாகிய வேத புருஷனுடைய கிரீடம்போன்ற மண்டபத்திலேறி, பாண்டியன் மரபிற்றோன்றிய விக்கிரமபாண்டியனுடைய துன்பத்தைத் தவிர்த்தற் பொருட்டு (சோழனேவிய) யானையைப் பார்த்தருளி. எ-று.

காமனும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்பு. (௨௮)

அஞ்சுகூவிளிச்சேய்த் தென்ன வதுவர வறனி லாதான்
வெஞ்சி னக்கோலி னேன்றாண் மிதித்துமெய் குழைய வாங்கிச்

செஞ்சிலை நெடுநாண் பூட்டித் திருவிர றெறித்துத் தாக்கிக்
குஞ்சர மெட்டு மஞ்சக் கோளரி முழக்கங் காட்டி.

(இ-ள்.) ஐந்து கூப்பிடுதூரத்தில் அந்தயானையானது வர, தருமநெறியில்லாத அரசனது கோபத்தையுடைய கொடுங்கோல் போல, செவ்வேயுள்ள வில்லினை (தனது) வலிய திருத்தாளால் மிதித்து, திருமேனிவளைய வளைத்து, நெடிய நாணினை (வில்லிற்) பூட்டி, திருவிரல்களால் தாக்கிக் குணத்தொனிசெய்து, அட்டகஜங்களும் அஞ்சும்படி சிங்கம்போல வீரகோஷஞ்செய்து. எ-று.

அஞ்சுகூவிளிச் சேய்த்து என்பது ஒருகுரோசம். (௨௯)

இங்கித நெடுங்கோ தண்ட மிடங்கையி லெடுத்து நார
சிங்கவெங் கணைதொட் டாகந் திருகமுன் னிடத்தாள் செல்ல
வங்குலி யிரண்டா லையன் செவியுற வலித்து விட்டான்
மங்குலின் முழங்கு வேழ மத்தகங் கிழிந்த தன்றே.

(இ-ள்.) இம்மதுராபுரியிலுள்ளாருக்கு இதஞ்செய்தற்பொருட்டு வேட்டுருவேற்றுவந்த சோமசுந்தரக்கடவுள் நெடியவில்லினை இடக்கையிற் பிடித்து, கொடிய நரசிங்காஸ்திரத்தை (குதையில்) ஏறிட்டு, (தனது) திருமேனி திருகும்படி (வலக்கால் மண்டலித்து) முன்னே இடக்கால் செல்ல, இரண்டு திருவிரல்களால் தனது செவியளவு (விருத்தாகாரமாக) நாணைவளைத்துப் பிரயோகஞ் செய்தருள, மேகம்போல முழங்கி வந்த யானையானது மத்தகங் கிழிபட்டது. எ-று.

விட்டான் - முற்றெச்சம். வில்லில் அம்புதொடுத் தெய்வார்க்கு நிலைகள் நான்கு. அவை பசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீட மெனப்படும். ஈண்டு "முன் இடத்தாள் சொல்ல" என்றது வலக்கால் மண்டலித்தாலன்றி யியலாதாதலின் இதனை ஆலீடநிலை யென்பர். (௩௦)

கொண்டலி னலறிச் சீறி வீழ்ந்தது கொடிய வேழம்
பிண்டது பாருஞ் சேடன் சென்னியும் பிளந்த தண்டம்
விண்டது போலு மென்னத் துண்ணென வெருவிப் போன
பண்டைய தருக்கும் வீறும் படைத்தன திசைமால் யானை.

(இ-ள்.) கொடுஞ்செயலையுடைய யானையானது மேகம்போலக் கதறிச் சீறி (நிலமிசை) விழுந்தது. (அதன் உடற்சுமை யாற்றாது) பூமியும் பிளந்தது. அண்டம் பிளவுற்றதுபோலு மென்று விரைவாகப் பயந்து ஆதிசேடனுடைய ஆயிரஞ் சிரசுகளும் பிளவுற்றன. (புறமுதுகிட்டோடிப்) போன மதமயக்கத்தையுடைய திக்கஜங்கள் (புதிதாய் வந்த யானை யிறந்ததால்) முன்னுள்ள (தமது) இயற்கையாகிய செருக்கும் இறுமாப்பும் அடைந்தன. எ-று.

சென்னி - சாதியொருமை. இதற்கேற்பப் பிளந்தது என ஒருமை வினை கொடுத்தார்.

இச்செய்யுள் காரணகாரிய சம்பந்தங்காட்டி நிற்றலின் காரணமாலையணி.

புதைபடக் கரித்தோல் போர்த்த புண்ணிய மூர்த்தி தாளா
லுதைபடக் கிடந்த கூற்ற மொத்தது மத்த யானை
சுதைபடு மதிக்கோ வேந்தன் றொழுகுலச் சிறுவ னெத்தான்
பதைபடு மமணர் கால படரெனப் படரிற் பட்டார்.

(இ-ள்.) (தமது திருமேனி) புதைபடும்படி யானைத்தோலைப் போர்த்தருளிய புண்ணியமூர்த்தியாகிய சிவபெருமானது திருவடியால் உதைக்கச் சாய்ந்த இயமனையொத்து, மதமயக்கத்தையுடைய யானையானது சாய்ந்தது. அமுதம் பொருந்திய சந்திரமரபிற் றேன்றிய விக்கிரம பாண்டியன் வேதியர்குலத்திற் பிறந்த மார்க்கண்டேயனை யொத்திருந்தான். (யானை இறந்ததுகண்டு) பதைக்குஞ் சமணர்கள் (இயமன் வீழ்ந்ததுகண்ட) காலபடாளைப்போலத் துன்பத்திலழுந்தினர்கள். எ-று. (கூஉ)

இருள்கிடந் தனைய தானை யிட்டசிந் துரங்கார் மாலை
யிருண்முகத் தொதுங்கிச் செல்லு மிரவிசெங் கிரணம் போன்ற
திருண்முழு துண்ணக் காலை யெழுகதிர் வட்ட மன்ன
திருளினை மறைத்த கண்ட னெய்தவாய்ப் பெய்யுஞ் செந்நீர்.

(இ-ள்.) (இறந்துவிழுந்த) யானையானது இருட்படலம் (பூமியின்மேல்) விழுந்ததை யொத்தது. (அந்த யானையின் நெற்றியில்) இட்ட சிந்துரமானது கரிய மாலைக்காலத்திலுள்ள இருள்முகத்திலே ஒதுங்கிச்செல்கின்ற சூரியனது செவ்ந்த கிரணத்தையொத்தது. நீலகண்டராகிய சிவபெருமான் எய்தவாயினற்சொரியும் உதிர நீரானது இருள்முழுவதையும் (ஒருசேர) உண்ணக் காலைப்பொழுதில் உதயமாகுஞ் சூரியனை யொத்தது. எ-று.

முழுது என்பதனிறுதியில் முற்றும்மை தொக்கது. கிடந்தனையது என்பது தொகுக்கும்வழி தொகுத்தல். (கூ௩)

பொய்யறு மனத்தார் தேற்றும் புன்னெறி யொழுக்கம் பூண்ட
வெய்யகோன் கொடுங்கோ றன்னை வெண்மருப் பாகத் தாங்கி
மையல்மா வடிவங் கொண்டு வந்தவெங் கலியைத் தென்னன்
செய்யகோ லையன் சிங்க வாளியாய்ச் சிதைத்த தன்றே.

(இ-ள்.) பொய்யொழுக்கமகலாத மனத்தையுடையசமணர்கள் (மெய்போலத்) தேற்றிய பாவநெறியில் ஒழுகுதலை மேற்கொண்ட கொடிய சோழராசனுடைய கொடுங்கோலை வெண்மைதங்கிய கொம்பாக ஏந்தி, மதமயக்கம்பொருந்திய யானை ரூபங்கொண்டு வந்த கொடிய கலியை, விக்கிரமபாண்டியனுடைய செங்கோலானது சிவபெருமானுடைய நரசிங்காஸ்திரமாகச்சென் றொழித்தது. எ-று.

வேதாகமநெறி யொழுகாத சமணமார்க்கத்தில் நின்ற சோழனுடையகோல் கொடுங்கோல் என்றும், அதனல் அவன் நாட்டிலுள்ளது கலியென்றும், வேதாகம நெறி யொழுகும் பாண்டியனுடைய கோல் செங்கோல் என்றும், அதனல் அவனது நாட்டிலுள்ளது அறம் என்றுங் குறிப்பாற் போந்தது. (கூ௪)

உருமுவீழ்ப் புண்ட குன்றி னும்பன்மா வம்பு தொட்ட
பெருமுழை வாயும் வாயும் பெருகின வருவிச் சோரி
கருமுகின் மானச் சேனங் கழுதுகள் பூத மொய்த்த
திருமணித் தடந்தோள் வீங்கத் தென்னவ னுவகை பூத்தான்.

(இ-ள்.) இடிவீழ்ந்த மலைபோல யானையின்மேல் அம்புதைத்துப் பிளந்த பெரிய (மலைக்) குகைபோன்ற வாயிலிருந்தும், (அந்த யானையின்) வாயிலிருந்தும், அருவிபோல உதிரவெள்ளங்கள் பெருகின. காளமேகம்போலப் பருந்துகளும் பசாசுகளும் பூதங்களும் (தசையுண்ண) நெருங்கின. வீரலக்ஷ்மி வசிக்கும் விசாலமாகிய தோள்கள் பூரிக்கும்படி விக்கிரமபாண்டியன் மகிழ்கூர்ந்தான். எ-று.

வீழ்ப்புண்ட என்னும் பெயரெச்சத்தில் வீழ்ப்பு என்னுந் தொழிற்பெயர் உண் என்னும் வினைப்பகுதியோடு கூடி ஓர் பகுதியாக நின்றது. (கூ௫)

ஆனையின் புண்ணீ ருண்ண வடுத்தகா ருடற்பே யென்னச்
சேனைபின் செல்லப் போந்த திணியிரு ளமணர் தம்மை
மீனவன் கண்டு சீற வேந்தவன் குறிப்பி னிற்கு
மானவெஞ் சினவேன் மன்னர் வல்லைபோய் முடுக்க லுற்றார்.

(இ-ள்.) யானையினது உதிரத்தைப் பருகச் சமீபித்தடைந்த கரிய உடலையுடைய பேய்கள்போல, சேனைகள் பின்றொடர்ந்துவர, (யானையின் பின்றொடர்ந்து) வந்த வலிய கரிய சமணர்களை, விக்கிரமபாண்டியன் கண்டு சினங்கொள்ள, அப்பாண்டியனுடைய குறிப்பின்வழிநிற்கும் மானத்தையுங் கொடிய கோபத்தையுமுடைய வேற்படை தாங்கிய (பிற) அரசர்கள் விரைந்துசென்று துரத்தத் தொடங்கினார்கள்.

ஈண்டு மானம் என்றது தமது பேரரசனுக்கு வந்த தீங்கு தமதாகக் கருதிய வழிப் போந்ததாம். (௬௬)

எடுத்தனர் கையிற் றண்ட மெறிந்தனர் மறிந்து சூழ்போய்த்
தடுத்தனர் கரகந் தூளாத் தகர்த்தனர் பீலி யோடுந்
தொடுத்தன ருடுத்த பாயைத் துணிபடக் கிழித்துக் கால்வாய்
விடுத்தனர் மானம் போக்கி விட்டனர் சில்லோர் தம்மை.

(இ-ள்.) (தமது) கையில் தண்டாயுதத்தை யெடுத்து (சில சமணர்களை) அடித்தார்கள். குறுக்காகச் சூழ்ந்துபோய் (சிலரை)த் தடுத்தார்கள். (அவர்கள்தாங்கிய) கரகங்கள் தூளாக மயிற்றோகையோடும் பொடிபடுத்தினார்கள். (சிலரை) அவர்கள் தொடுத்துடுத்த பாயைத் துண்டுபடக் கிழித்துக் கால்வாயில் விடுத்தார்கள். சிலரை அவமானப்படுத்திவிட்டார்கள். எ-று.

எடுத்தனர் தொடுத்தனர் - முற்றெச்சங்கள். தடுத்தனர் என்பதனையும் முற்றெச்சமெனக் கொள்ளினு மிழுக்காது. (௬௭)

எறியுண்டு செய்த மாய மிழப்புண்டு சேனை யோடு
முறியுண்டு நடுக்கம் பாவ மூழ்குண்டு மாழ்கிச் சாம்பிப்
பறியுண்ட தலையர் யாரும் பழிப்புண்டு பாயுந் தாழு
முறியுண்ட கரகத் தோடு மொதுங்குண்டு பதுங்கிப் போனார்.

(இ-ள்.) (விக்கிரமபாண்டியன் வழிநின்ற மன்னர்களால்) அடிபட்டு, (மதுரையையழிக்கத்தாம்) செய்த வஞ்சனையாகிய யானையையிழந்து, (தமக்குத் துணையாக வந்த) சேனையோடு முறிபட்டு, நடுக்கத்திலும் பாவத்திலும் மூழ்கி மயங்கி, உரோமம் பறிக்கப்பட்ட தலையையுடைய சமணர்கள் எல்லோரும் வருந்திப் பழிப்படைந்து, பாயும் தாழும் உறியிற்பொருந்திய கமண்டலத்தோடும் ஒளித்துப் பதுங்கி ஓடினார்கள். எ-று.

யானை தாம்செய்த வஞ்சத்தால் வந்ததாதலின் மாயம் என்று காரணத்தைக் காரியமாக உபசரித்தார். "பறியுண்டதலையர்" என்றது, சுவேதசமாகிய உயிர்கள் கருவியால் உயிர் போகாதிருத்தற்பொருட்டு நகத்தாற் பறித்தல் சமணமதக் கொள்கையாதல்பற்றி யென்க.

எறி முறி மூழ்கு ஒதுங்கு என்னும் வினைப்பகுதிகளுடன் உண் என்னும் செயப்பாட்டுவினை விகுதிகள் வந்து புணர்ந்து வேறு பொருள் தந்துநின்றன. பறியுண்டு முதலியன செயப்பாட்டுவினையெச்சங்கள். (௬௮)

மாதங்கந் தடிந்தட் டாலை மண்டபத் திருந்த வீரன்
பாதங்கள் கையாற் பற்றிப் பாண்டிய னிரந்து வேண்டி

போதங்கள் கடந்தா யென்றும் பொலியவிங் கிருத்தி யென்னு
வேதங்கட் கருத்தஞ் சொன்ன வேதிய னதற்கு நேர்ந்தான்.

(இ-ள்.) (சமணர்கள் ஏவிய) யானையைச் சங்கரித்து அட்டாலை மண்டபத்திலிருந்தருளிய (வேட்டுவவுருக்கொண்டுவந்த) பெருமானுடைய திருவடிகளை, விக்கிரமபாண்டியன் (தனது) கைகளாற் பற்றிக் குறைகூறி யாசித்து, (பிரமாதியரது) சுட்டறிவிற்கு அதீதப்பட்டு நின்றாய்! எக்காலமும் இவ்விடத்தில் விளங்க வீற்றிருப்பாய் என்று வேண்ட, (முற்காலத்தில் கண்ணுவர் முதலிய முனிவர்கட்கு) வேதத்திற்குப் பொருளருளிச்செய்த (வேட்டுவவடிவாய் நின்ற) அந்தணர் அவ்வேண்டுகோளுக்கு இணங்கினார். எ-று. (௫௯)

பின்னுஞ்சில் வரங்க ணல்கப் பெற்றுநான் மாடக் கூடன்
மன்னுஞ்சின் மயனை வந்து வந்தித்து வருநாள் காம
னென்னுஞ்சின் மலர்ப்பூந் தண்டா ரிராசசே கரனைப் பெற்று
மின்னுஞ்சில் லியந்தேர் வேந்தன் மேதினி புரக்கு மன்னோ.

(இ-ள்.) பின்னுஞ் சிலவரங்கள் தந்தருளப் பெற்று, நான்மாடக்கூடலில் எழுந்தருளிய ஞானவடிவாகிய சோமசுந்தரக்கடவுளை (நாள்தோறும்) வந்து வந்தனை செய்து வருநாளில், (கண்டோர்) மன்மதனென்று சொல்லும் மெல்லிய மலராகிய பொலிவையுடைய தண்ணிய மாலையையணிந்த இராசசேகரனைப்பெற்று, விளங்காநின்ற வுருள்பூண்ட அழகிய தேரையுடைய விக்கிரமபாண்டியன் உலகத்தைப் பாதுகாத்து வராநின்றான். எ-று.

"வந்தித்து வருநாள் இராசசேகரனைப் பெற்று" என்றது, அபிடேகபாண்டியன் சித்தமூர்த்திகள் திருவருளால் விக்கிரமபாண்டியனைப் பெற்றதுபோல, விக்கிரமபாண்டியன் வேட்டுருவங்கொண்ட பெருமான் திருவருளால் இராசசேகரபாண்டியனைப் பெற்றானென்பது புலப்படக்கூறினார். (௬௦)

வம்புளாய் மலர்ந்த வாரான் வரவிடு மத்தக் குன்றிற்
சிம்புளாய் வடிவங் கொண்ட சேவக னேவல் செய்த
வம்புளாய்த் தூணம் விள்ள வன்றுவ தரித்த வாபோற்
செம்புளாய்க் கொடிய நார சிங்கமா யிருந்த தன்றே.

(இ-ள்.) வாசனை தனதகத்துக் கமழ விகசித்த ஆத்திமாலையணிந்த சோழராசன் ஏவிய மதமயக்கத்தையுடைய மலை (போன்ற யானையின் மத்தகத்தின்) மேல், (நாரசிங்கத்தின் இறுமாப்பொழிக்க) சரபப்புள்ளாய்த் திருவுருவங் கொண்டருளிய சிவபெருமானுடைய ஏவல்வழிநின்ற நரசிங்காஸ்திரமானது (தைத்து) அதனுள்ளாகி, (பிரகலாதன்பொருட்டுத் திருமால் இரணியாக்ஷன் கட்டிய) தூண் பிளவுபட அன்று நரசிங்கமூர்த்தியாய் அவதரித்தவகைபோல, கருடவடிவாய்க் கொடியையுடைய நரசிங்கமூர்த்தியாய் எழுந்தருளியிருந்தது. எ-று.

"சிம்புளாய் வடிவங்கொண்ட சேவகன்" என்றது, இரணியாக்ஷனைச் சங்கரித்ததனாலுண்டாகிய இறுமாப்பால் தன்னைமறந்து உலகையழிக்கக்கருதிய நரசிங்கத்தைச்சங்கரித்த சரபத்திருவுருவத்தை. அவ்வாறு சரபரூபங்கொண்டவர் வீரபத்திரக்கடவுளென்று உபதேசகாண்ட முதலிய நூல்கள் கூறியிருக்க, ஈண்டுச் சிவபெருமானாகக் கூறியது வீரபத்திரர்முதலிய மூர்த்தங்களும்சிவமூர்த்தங்கள் அறுபத்துநான்கனுள் அடங்குதல்பற்றி. அவையாவன:—

இலிங்கம்-இலிங்கோற்பவம்-முகலிங்கம்-சதாசிவம்- மஹாசதாசிவம்-உமாமஹேசம்-சுகாஸநம்-உமேசம்-சோமாஸ்கந்தம்-சந்திரசேகரம்-ரிஷபாரூடம்- ரிஷபாந்திகம்-புஜங்கலளிதம்-புஜங்கத்ராசம்- சந்தியாநிருத்தம்-சதாநிருத்தம்-சண்டதாண்டவம் - கங்காதரம் - கங்காவிசர்ஜநம் - திரிபுராந்தகம் - கலியாணசுந்தரம் - அர்த்தநாரீஸ்வரம் - கஜாரி - ஜ்வராபக்நம் - சார்த்தூலஹரி - பாசுபதம் - கங்காளம் - கேசவார்த்தம் - பிக்ஷாடநம் - நாரசிங்காரி - சண்டேசுவர பிரசாதம் - தக்ஷிணமூர்த்தம் - யோகதக்ஷிணமூர்த்தம் - வீணாதக்ஷிணமூர்த்தம் - காலாந்தகம் - காமாரி - இலகுளேசம் - பைரவம்-ஆபத்துத்தாரணம்-வடுகம் - க்ஷேத்திரபாலகம் - வீரபத்திரம் - அகோராஸ்திரம் தக்ஷயஜ்ஞஹதம் - கிராதம் - குருமூர்த்தம் - அசுவாரூடம் - கஜாந்திகம் - ஜலந்தராரி-ஏகபாததிரிமூர்த்தம் - திரிபாதத்திரிமூர்த்தம் - ஏகபாதமூர்த்தம் - கௌரீவரப்தம் - சக்ரதாநம் - கௌரீலீலாநாதம் - விஷாபஹரணம் - கருடாந்திகம் - பிரமசிரச்சேதம் - கூர்மாரி - மச்சாரி - வராஹாரி - பிரார்த்தநாமூர்த்தம்-இரத்தபிக்ஷாடநம் - சிஷ்யபாவம் எனப்படும். *இவற்றை,

சிவபராக்கிரமம்.

𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑍋𑌦𑍍𑌭𑌵𑌂 𑌚𑍈𑌵 𑌮𑍁𑌖𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌂 । 𑌮𑌹𑌾𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌂
𑌚𑍈𑌵𑍋𑌮𑌾𑌮𑌹𑍇𑌶𑌂 𑌸𑍁𑌖𑌾𑌸𑌨𑌂 । 𑌉𑌮𑍇𑌶𑌂 𑌤𑌥𑌾 𑌸𑍋𑌮𑌾𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌂
𑌤𑌥𑍈𑌵 𑌚 । 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌶𑍇𑌖𑌰𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌞𑍍𑌚 𑌵𑍃𑌷𑌾𑌰𑍂𑌢𑌂 𑌵𑍃𑌷𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 । 𑌭𑍁𑌜𑌙𑍍𑌗
𑌲𑌲𑌿𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌤𑍍𑌰𑌾𑌸𑌮𑍇𑌵 𑌚 । 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌨𑍃𑌤𑍍𑌤𑌂 𑌸𑌦𑌾𑌨𑍃𑌤𑍍𑌤𑌂 𑌤𑌾
𑌣𑍍𑌡𑌵𑌂 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀𑌧𑌰𑌂 । 𑌗𑌙𑍍𑌗𑌾𑌵𑌿𑌸𑌰𑍍𑌜𑌨𑌂 𑌚𑍈𑌵 𑌤𑍍𑌰𑌿𑌪𑍁𑌰𑌾𑌨𑍍𑌤𑌕𑌮𑍇𑌵 𑌚 । 𑌕𑌲𑍍𑌯𑌾
𑌣𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌂 𑌚𑍈𑌵 𑌹𑍍𑌯𑌰𑍍𑌧𑌨𑌾𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 𑌤𑌥𑌾 । 𑌗𑌜𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌜𑍍𑌵𑌰𑌾𑌪𑌘𑍍𑌨𑌂 𑌶𑌾𑌰𑍍𑌦𑍂
𑌲𑌹𑌰𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 । 𑌤𑌥𑌾 𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌂 𑌚𑍈𑌵 𑌕𑌙𑍍𑌕𑌾𑌲𑌂 𑌕𑍇𑌶𑌵𑌾𑌰𑍍𑌧𑌕𑌂 ।
𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌟𑌨𑌂 𑌤𑌥𑌾 𑌸𑌿𑌂𑌹𑌘𑍍𑌨𑌂 𑌚𑌣𑍍𑌡𑍇𑌶𑍍𑌵𑌰𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌕𑌂 । 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌕𑌂
𑌚 𑌯𑍋𑌗𑌵𑍀𑌣𑌾𑌧𑌰𑌂 𑌤𑌥𑌾 । 𑌕𑌾𑌲𑌾𑌨𑍍𑌤𑌕𑌂 𑌚 𑌕𑌾𑌮𑌾𑌰𑌿𑌂 𑌲𑌕𑍁𑌲𑍇𑌶𑍍𑌵𑌰𑌭𑍈𑌰𑌵𑌂 ।
𑌆𑌪𑌦𑍁𑌦𑍍𑌧𑌾𑌰𑌣𑌂 𑌚𑍈𑌵 𑌵𑌟𑍁𑌕𑌂 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌪𑌾𑌲𑌕𑌂 । 𑌵𑍀𑌰𑌭𑌦𑍍𑌰𑌂 𑌅𑌘𑍋𑌰𑌾𑌸𑍍
𑌤𑍍𑌰𑌂 𑌦𑌕𑍍𑌷𑌯𑌜𑍍𑌞𑌹𑌰𑌂 𑌤𑌥𑌾 । 𑌕𑌿𑌰𑌾𑌤𑌂 𑌗𑍁𑌰𑍁𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂 𑌚𑌾𑌶𑍍𑌵𑌾𑌰𑍂𑌢𑌂 𑌗𑌜𑌾
𑌨𑍍𑌤𑌿𑌕𑌂 । 𑌜𑌲𑌨𑍍𑌧𑌰𑌵𑌧𑌂 𑌚𑍈𑌵 𑌏𑌕𑌪𑌾𑌦𑌤𑍍𑌰𑌿𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌕𑌂 । 𑌤𑍍𑌰𑌿𑌮𑍂𑌰𑍍𑌤𑌿
𑌤𑍍𑌰𑌿𑌪𑌦𑌂 𑌚𑍈𑌵 𑌤𑌥𑌾 𑌗𑍌𑌰𑍀𑌵𑌰𑌪𑍍𑌰𑌦𑌂 । 𑌚𑌕𑍍𑌰𑌦𑌾𑌨𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌚 𑌗𑍌𑌰𑍀
𑌲𑍀𑌲𑌾𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌂 । 𑌵𑌿𑌷𑌾𑌪𑌹𑌰𑌣𑌂 𑌚𑍈𑌵 𑌗𑌰𑍁𑌡𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑌮𑍇𑌵 𑌚 । 𑌤𑌥𑌾 𑌬𑍍𑌰
𑌹𑍍𑌮𑌶𑌿𑌰𑌶𑍍𑌛𑍇𑌦𑌕𑌂 𑌕𑍂𑌰𑍍𑌮𑌹𑌾𑌰𑌮𑍇𑌵 𑌚 । 𑌮𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌰𑌿𑌂 𑌚 𑌵𑌰𑌾𑌹𑌾𑌰𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥
𑌨𑌾𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌮𑍇𑌵 𑌚 । 𑌰𑌕𑍍𑌤𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌂 𑌚 𑌶𑌿𑌷𑍍𑌯𑌭𑌾𑌵𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥ 𑌇𑌤𑌿
𑌚𑌤𑍁𑌷𑍍𑌷𑌷𑍍𑌟𑌿𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌨𑌾𑌮𑌾𑌵𑌳𑍀। என்பதனானறிக. (சக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகெலா மழித்து மீளவுண் டாக்கு முருத்திரன் வீரசத்தியினிற்
சிலதரித் திறவா வவுணன்மார் பிடந்த சிங்கநா யகனையங் கெய்தி
யலகின்மா தவஞ்செய் துரோமசன் றன்பே ரறியவோர் தீர்த்தமுண் டாக்கி
யிலகுபே றடைந்தான் பிரகலா தனுநோற் றீறிலாப் பெருவர மடைந்தான்.

---

* இவற்றின் விரிவெல்லாந் தமிழ் வசனநூலாகப் பிரமாணசஹிதம் அறுபத்துநான்கு திருவுருவப்படங்களுடன் வெளியிட்டிருக்கும் சிவபராக்கிரமத்தானறிக.

(இ-ள்.) சமஸ்தலோகங்களையுஞ் சங்கரித்து மீளவும் (தனது சத்தியாற்) படைத்தலும் உருத்திரமூர்த்தியின் வீரசத்திகளில்,சிலசத்திகளை (அவனருளால்) தரித்து, இறவாத (வரம்பெற்ற) இரணியாக்ஷனுடைய மார்பைப்பிளந்த நரசிங்கமூர்த்தியை, உரோமசமுனிவன் அத்தலத்தையடைந்து குற்றமில்லாத பெருந்தவஞ்செய்து தன்பெயர்விளங்க ஓர் தீர்த்தமுண்டாக்கி விளங்கும் பெரும்பேறடைந்தார். பிரகலாதனுந் தவஞ் செய்து அழிவில்லாத பெரியவரங்களை யடைந்தான். எ-று.

"உருத்திரன் வீரசத்தியினிற் சில தரித்து" என்றதால், இரணியாக்ஷனை நரசிங்கமூர்த்தி வென்றது உருத்திரானுக்கிரகப் பேற்றால் என விளங்கிக்கிடந்தது.

உரோமசரென்பவர் இந்நரசிங்கானுக்கிரகத்தால் மீண்டுஞ் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து இறவாவரம்பெற்றவர். இவருடலில் ஒருரோமம் உதிர்ந்தால் ஒருமால் இறப்பன். இவ்வாறு எண்ணில்லாத விண்டுமூர்த்திகள் இவர் காலவளவிற் கழிந்திருத்தலை ஒருகை யுரோமமற்றிருப்பது உணர்த்துமென்பர். இதனை, திருவோற்றியூர்ப்புராணத்தானறிக. (௪௨)

யானையெய்தபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪௪௨அ.

## இருபத்துமூன்றாவது,

## விருத்த குமார பாலரான படலம்.

கலிநிலைத்துறை.

தழையு லாங்கைய ரேவிய தந்திமேல் விடைமே
லழகர் சேவகஞ் செய்தவா றறைந்தன மவரே
கிழவ னாகிப்பின் காளையாய்க் கிஞ்சுகச் செவ்வாய்க்
குழவி யாய்விளை யாடிய கொள்கையைப் பகர்வாம்.

(இ-ள்.) மயிற்றோகையைத் தாங்கிய கையையுடைய சமணர்கள் செலுத்திய யானையின்மேல், இடபத்தின்மேல் ஆரோகணித்தருளும் அழகினையுடைய சோமசுந்தரக்கடவுள் சேவகஞ்செய்த திருவிளையாடலைக் கூறினோம். அச்சோமசுந்தரப் பெருமானே (முதலில்) கிழவராகியும், பிறகு காளைப் பருவமுடையவராகியும், (இறுதியில்) முண்முருக்கம் பூனவயொத்த செவ்விய வாயையுடைய குழந்தையாகியும் விளையாடி யருளிய திருவிளையாடலை (யாம் இனி) க்கூறுவாம்.எ-று.

சமணாசிரியர்கள் எக்காலத்துந் தமது கைகளில் மயிற்றோகையைப்பற்றி நிற்றலானும் அவர்கள் சோழராசன் விருப்பின்படி பாண்டியனைக்கொல்ல அபிசாரஞ் செய்து அதிற்றோன்றிய யானையை அப்பாண்டியன்மீது விடுத்ததானும் "தழையுலாங்கையரேவிய தந்தி" என்றும், சிவபெருமான் இடபாரூடரும் பேரழகரும் பாண்டியர்க் குற்ற இடுக்கண் களைவாருமாய் அதனை நரசிங்காஸ்திரம் விடுத்து மாய்த்தொழித்தமையின் "தந்திமேல் விடைமேலழகர் சேவகஞ் செய்தவாறு" என்றுங் கூறினர்.

தென்னன் விக்கிர மன்புயத் திருநிலச் செல்வி
மன்னி வாழுநாண் மதுரையின் மறையவ னொருவ



விருத்தகுமாரபாலரானபடலம்.

కు. జి. సుబ్రమణ్యంరాజు లేఖించి.

னன்ன வன்விரு பாக்கனு மவன்குடி வாழ்க்கை
மின்னனாள்வட மீனனாள் பெயர்சுப விரதை.

(இ-ள்.) விக்கிரமபாண்டியனுடைய தோளின்மீது பெரிய பூமிதேவி நிலை பெற்று வசிக்குங்காலத்தில், மதுராபுரியில் பார்ப்பனன் ஒருவன் இருந்தனன்; அவ் வேதியன் விருபாக்ஷனென்னும் பெயரை யுடையவனும்; அவனுடைய இல்வாழ்க் கைக்குரியவள் மின்னல்போலும் (ஒளி) பொருந்தியவள்; வடமீனாகிய அருந்ததியைப் போலுங் கற்புவாய்ந்தவள்; சுபவிரதையெனப் பெயர்பெற்றவள். எ-று.

விருபாக்கன் - மேல்நோக்கிய விழியை யுடையவன். (௨)

அனையர் தங்களுக் கரும்பெறன் மகவின்றி யனந்தம்
புனித நல்லறஞ் செய்தொழி லொழுக்கமும் பூண்டு
நனைய வார்குழ லன்னைய ரெழுவர்பா னண்ணி
யினிய மாதவஞ் செய்தொரு பெண்மக வீன்றார்.

(இ-ள்.) அப்படிப்பட்ட (விருபாக்ஷன் சுபவிரதை யென்னும்) இருவருக் கும் பெறுதற்கரிய புத்திரப்பேறில்லாது, பரிசுத்தமாகிய நல்ல எண்ணிறந்த தருமமே செய்துவருந் தொழிலையும் (சிவபெருமானையும் பிராட்டியாரையும் வழிபட்டு வரும்) நல்லொழுக்கத்தையு மேற்கொண்டு, குளிர்ச்சிபொருந்திய நெடிய அளகத்தையுடைய சத்தமாதர்கள் சந்நிதியை யடைந்து, இனிய பெருந் தவத்தைச் செய்து ஒரு பெண் குழந்தையைப் பெற்றார்கள். எ-று.

அன்னையர் எழுவர்—அபிராமி - மாயேசுவரி-கௌமாரி-நாராயணி-வராகி-இந்திராணி - காளி - எனப்படுவர். (௩)

பெருங் கௌரியென் றழைத்தனர் பிராயமோ ரைந்திற்
சாருங் கௌரியும் பிறவிநோய் தணிப்பதற் குறுதி
தேருஞ் சிந்தையா டந்தையை வணங்கியிச் செனன
மீருந் தெய்வத மந்திரம் யாதென வினவ.

(இ-ள்.) (சத்தமாதர்களது திருவருளாற் பிறந்த குழந்தையாதலின்) பெயர் கௌரி யென்றிட்டனர். ஐந்து வயதையடைந்த கௌரியும் பிறவியாகிய பிணியைத் தணிக்கும்படி உறுதிவழியை யாராய்ந்தறியும் மனத்தையுடையவளாகி, தனது பிதாவாகிய விருபாக்ஷி யையனைப் பணிந்து, இப்பிறவிப் பிணியை யொழிக்கத்தக்க தெய்வீகம்பொருந்திய மந்திரம் யாது? என்று கேட்க. எ-று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம்.

"தெய்வத மந்திரம்யாவெனு வினவ" எனப் பாடமாயின், தெய்வதம் - தெய்வமும், மந்திரம் - மந்திரமும், யா என வினவ - எவையென்று கேட்க என்று பொருள்கொள்க. தெய்வதம் என்றது பொருளால் உயர்திணையேனும் சொல்லால் அஃறிணையாதல்பற்றி மந்திரமென்பதைச் சேர்ந்து யா வென்னும் பலவறி சொல்லைப் பயனிலையாகக்கொண்டதென்க. (௪)

அந்த ணாளனு மதிசயித் தரும்பெறன் மகட்குச்
சிந்தை யார்வமோ டிறைவிதன் மனுவினைச் செப்பத்
தந்தை பாலது தெளிந்துநாத் தழும்புறப் பயின்றாண்
முந்தை நாளருந் தவக்குறை முடித்திட வந்தாள்

(இ-ள்.) வேதியனாகிய விருபாக்ஷனும் வியப்படைந்து பெறுதற்கரிய தனது புதல்விக்கு மனத்திற் பொருந்திய அன்புடன் பராசத்தியின் திருமந்திரத்தைப்

போதிக்க, சன்மாந்திரத்திற் செய்த அரிய தவத்தின் குறைபாட்டை (இந்தச்சன்மத்தில்) முடித்திடும்படி பிறந்த கௌரியானவள் தன் பிதாவினிடத்தில் அம்மந்திரத்தைக் (கேட்டுச் சிந்தித்துத்) தெளிந்து நாவானது தழும்பு பொருந்தப் பழகினள் [சபித்துவந்தாள் என்றபடி] எ-று. (ஞ)

தாதை தன்றவக் கொழுந்தினுக் கிசையமா சைவ
மாத வத்தனு யாதியாச் சிரமத்தில் வழங்கும்
வேத வித்துமாய் மரபினன் மேம்படு வானெனப்
போது போதுமென் னுளத்தோடு புகன்றுகொண் டிருந்தான்.

(இ-ள்.) விருபாக்ஷியையன் தன்றவக் கொழுந்து போன்ற புத்திரிக்குப் பொருந்த மகாசைவமார்க்கத்தில் நின்ற பெருந்தவ முடையனாய் (நால்வகையாச்சிரமங்களில்) முற்பட்ட பிரமசரிய ஆச்சிரமத்தி லொழுகும் வேதவித்துமாய், மரபினால் மேம்பட்டவனாய் உள்ளகணவன் எப்பொழுது வருவானென்று தன்மனதில் (இடையீடின்றி) நினைந்திருந்தான். எ-று.

மாசைவன் என்றது சிவதீக்கை பெற்ற வைதிகப்பிராமணனை. வேத அத்தியயனஞ் செய்தற்குரிய ஆச்சிரமம் பிரமசரிய மாதலின் "ஆதியாச்சிரமத்துள்" என்றும், அவ்வாறு வேதம் பழகினவருள்ளுஞ் சிறந்தவனாக இருத்தல் வேண்டுமென்பார் "வயங்கும் வேதவித்துமாய்" என்றுங்கூறினார். போதும்—செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று. மரபு என்றது கோத்திரம் சூத்திரம் முதலியவற்றை. (சு)

பருவ நாலிரண் டாகமேற் கடிமணப் பருவம்
வருவ தாகவங் கொருபகல் வைணவப் படிவப்
பிரம சாரியாய்க் கடைதொறும் பிச்சைபுக் குண்பா
னொருவன் வந்தனன் பலிக்கவ ணயற்புலத் துள்ளான்.

(இ-ள்.) எட்டுவயதாக, அப்பொழுது நிகழுந் திருமணஞ் செய்தற்குரிய பருவம் வர, அவ்விடத்தில் ஒருநாள் வைணவ வடிவமேற்ற பிரமசரிய ஆச்சிரமத்தை மேற்கொண்டவனாய் (வேதியர்) வீட்டுவாயில்களி லெல்லாம் (போய்ப்) பிச்சை வாங்கிப்புசிக்கும் அயலூரிலுள்ள ஒருவன் அக்காலத்தில் பலிக்குத் தன்வீட்டிற்கு வந்தான். எ-று.

கடைதொறும் பிச்சைப்புக்கு என்பதற்குக் கடைவீதியில் (அமுதுபடி) முதலியவற்றைப் பிச்சையெடுத்து எனப்பொருளுரைப்பினும் இழுக்காது. (எ)

பிச்சை வேண்டின னவற்குத்தன் பெண்ணினைக் கொடுப்பா
னிச்சை கூர்ந்தருந் தவத்தினால் வருந்தியீன் றெடுத்த
விச்சை வேதியன் மனையொடு சுற்றமும் வினவா
தச்ச மின்றிநீ ரொடுத்தவ னங்கையிற் பெய்தான்.

(இ-ள்.) பிச்சைவிரும்பிவந்த அவ்வைணவப் பிரமசரியனுக்குத் தன்புத்திரியைக் கொடுக்க விருப்பங்கொண்டு, அருந்தவச் செயலால் (உடல்) வருந்திப் பெற்றெடுத்த (வேதநூற்) கல்வியில் வல்ல விருபாக்கன், (சுபவிரதை யென்னும்) தன்னுடைய மனைவியுடன் சுற்றத்தாரையும் வினவி (அவர் கருத்தை) உணராமல், (சிறிதும்) அச்சமில்லாது கரகநீரொடுத்து அப்பிரம சரியனது அழகிய கையில் (என் கன்னிகையைக் கொடுத்தேனென்று) தாரைவார்த்தான். எ-று.

அச்சமின்றி என்றது தான்தந்தையாயிருப்பினும் அக்கன்னிகையின் தாய் கருத்தும் உறவினர் உட்கிடையும் உணரக்கருதாமலும் அதனால் வருங் கோபத்தைக் குறிக்காமலுஞ் செய்தானெனப் புலப்படக் கூறியதாம். (அ)

கலிக்கு நூபுரச் சீறடிக் கன்னிதன் விதியும்
பலிக்கு வந்தவ னல்வினைப் பகுதியுந் துரப்ப
வொலிக்கு மந்திரச் சிரகநீ ரொழுக்கினுன் முந்திச்
சலிக்கு மன்னையுந் தமர்களுந் கேட்டுளந் தளர்வார்.

(இ-ள்.) சத்திக்கின்ற சிலம்பை யணிந்த சிற்றடியையுடைய கன்னிப் பருவம் வாய்ந்த கௌரியின் விதிப்பயனும், பிச்சைக்கு வந்த வைணவப் பிரமசரியனுடைய நல்வினையின் பயனும் (தன்னைச்) செலுத்த, முற்பட்டு உச்சரிக்கும் மந்திரத்துடன் கரகத்தில் நிரப்பிய நீரைத் தாரைவார்த்தான் (என்று) மனம் வருந்துஞ் சுபவிரதையும் நெருங்கிய உறவினர்களும் கேள்விப்பட்டு மனத்தளர்ச்சி யடைவாராயினர். எ-று.

"கன்னி தன்விதி - பலிக்கு வந்தவன் நல்வினைப்பகுதி" என்றமை— கௌரியின் போகூழ்ப்பயனும் பிரமசரியனுடைய ஆகூழ்ப்பயனும் என்க. (௯)

குலனு மோர்கிலன் கோத்திர மோர்கிலன் குடிமை
நலனு மோர்கில னொழுக்கமுங் கல்வியு நண்ணுந்
தலனு மோர்கிலன் கன்னியைத் தத்தஞ்செய் தானெப்
புலனு மோர்ந்தவன் விதிவழி மதியெனப் புலந்தார்.

(இ-ள்.) (அவனது) குலத்தையும் விசாரித்தறியாமல், (குலமறிந்தபின் கோத்திரம் அறியவேண்டுமெனின்) கோத்திரத்தையும் விசாரித்தறியாமல்,குடிப்பிறப்பையும் சிறப்பையும் விசாரியாமல், சமயவொழுக்கத்தையுங் கல்வித்திறத்தையும் விசாரியாமல், அவன் வாசஞ்செய்யுந் தலத்தையுமறியாமல், (விரூபாக்கன்) தன் கன்னிகையை (முகமறியாத பிரமசாரிக்கு)த் தத்தஞ் செய்துவிட்டான். எல்லா நூல்களையுமறிந்தவன் "விதியின்வழி மதி" என்று (கூறும்பழமொழி இவன்பாற் புலப்பட்டதென்று) வருந்தினர்கள் (மனைவி முதலிய உறவினர்). எ-று. (௧௦)

மற்ற வன்குடி கோத்திரஞ் சூத்திர மற்று
முற்ற றிந்துநம் மரபினுக் கொக்குமான் மாயோன்
சொற்ற தந்திர வயிணவத் தொடக்குண்டு திரியுங்
குற்ற மொன்றினி மறுப்பதென் கொடுப்பதென் றிசைந்தார்.

(இ-ள்.) அப்பிரமசாரியின் குடியும் கோத்திரமும் சூத்திரமும் மற்றுள்ளனவும் (ஆகியவற்றை) முழுதும் (அவனால்) உணர்ந்து,நமது மரபிற்கு (ஒருவாறு) ஒத்திருக்கின்றது. (ஆனல்) திருமால் கூறிய பாஞ்சராத்திரத்தின்வழிப்பட்ட வைணவக் கட்டுண்டு திரியுங் குற்றமொன்றுதானுளது. (முன்னரோ தந்தை தத்தஞ் செய்துவிட்டமையின்) மறுக்கக்கடவது யாதுளது? கொடுக்கவேண்டுவதுதான் என்று (தாய் முதலியோர்) உடன்பட்டார்கள். எ-று.

மற்று என்னும் இடைச்சொற்க ளிரண்டனுள் முந்தியது அசைநிலையும், பிந்தியது பிறிது என்னும் பொருளதுமாம். முற்று என்பதனிறுதியில் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

சூத்திரமென்றது—போதாயநம் - ஆபஸ்தம்பம் - ஆஸ்வலாயநம் - திராகியாயநம் - கார்த்தியாயநம் - சத்யாஷாடம் எனப்படும். (௧௧)

தாயு மொக்கலு மொத்தபின் றந்தையும் வேதத்
தாயு மெண்மணத் தாதியா மறநிலை யாற்றாற்

றேயு நுண்ணிடைக் கன்னியைச் செம்பொனாற் புனைந்துக்
காயு மாரழன் முன்னரக் காளைக்குக் கொடுத்தான்.

(இ-ள்.) தாயாகிய சுபவிரதையும் உறவினரும் மனம் ஒத்தபின்னர், தந்தையாகிய விருபாக்ஷனும், வேதத்தில் ஆராயப்பட்ட எண்வகை மணங்களுள் (பிரம மணமென்னும்) முதலாவதாகிய அறநிலைவழியால், (தனத்தோற்றத்தால்) தேய்ந்து வரும் நுண்ணிய இடையையுடைய கன்னிகையாகிய கௌரியை, செம்பொன்னாபரணங்களால் உடல்தோன்றுதலங்கரித்து, வெப்பம்பொருந்திய ஓமாக்கினிக்குமுன், அப்பிரமசாரியனுக்கு மணமுடித்தான். எ-று.

மணம் எண்வகையாவன :—பிரமம்-பிரசாபத்தியம்-ஆரிடம்-தெய்வம்-காந்தர்வம்-அசுரம்-இராக்கதம்-பைசாசம். இவற்றுள் பிரமமணம் - பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது, பிரசாபத்தியமணம் - தலைமகனினத்தார் வேண்டத் தலைமகளினத்தார் உடன்பட்டு அவளைத் தீமுன்னர்க் கொடுப்பது, ஆரிடமணம் - ஒன்றுமிரண்டும் பசுவுமெருதும் வாங்கிக்கொண்டு கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது, தெய்வமணம் - வேள்வியால் வந்த கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது, காந்தர்வமணம் - கொடுப்பாருங் கேட்பாருமின்றி இருவருந் தனியிடத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடுவது, அசுரமணம் - பெண்ணுக்குப் பொன்பூட்டிச் சுற்றத்தாருக்குப் பொன் வேண்டுவன கொடுத்துக் கொள்வது, இராக்கதமணம் - பெண்ணும் பெண்ணினத்தாரு முடன்படாமல் வலிதிற் கொள்வது, பைசாசமணம் - துயின்றாளைச் சென்று கூடுவது என்பர். இவற்றை,

காசிகண்டம் - ஆசாரங்கூறிய அத்தியாயம்.

"பிரமநற் றெய்வ மாரிடம் பிரசா பத்திய மாசுரம் பெட்பின்
மீருவுகாந் தருவ மிராக்கதம் பசாச மெனமண மெட்டுள வவற்றுட்
கருதுமுற் பிரம மொருவனை யழைத்துக் கலனொடுங் கன்னியை யளித்த
லருளுமத் தெரிவை பயந்தசேய் மூவேழ் குலமுநற் கதியுற வளிக்கும்" என்பது
முதலிய செய்யுள்களா னறிக. (௧௨)

தெய்வ மங்கல வரிசைகள் செய்துதான் பயந்த
மௌவ லங்குழற் கன்னியை மணமக னோடுங்
கௌவை யம்புனல் வேலிசூழ் கடிநகர் விடுத்தான்
சைவ மங்கல வேதியத் தாபத னிப்பால்.

(இ-ள்.) பிராமண குலத்திற்குரிய மங்கலவரிசைகளை நடத்தி, தான்பெற்ற முல்லைமலர்மாலை சூடிய அழகிய கூந்தலையுடைய புதல்வியாகிய கௌரியம்மையை, சைவத்தின் சிறப்புப்பொருந்திய தவவேடமுடைய விருபாக்ஷன் (வைணவனாகிய) மணநாயகனோடும் ஒலியையுடைய அழகிய நீர் வளமிக்க வயல்சூழ்ந்த காவல்பூண்ட அவனது நகரத்திற்கு அனுப்பினான். இப்பால். எ-று.

தெய்வமங்கல வரிசையென்றது வேதியர் பூசுராதலி னென்க. புனல் வேலிசூழ் என்றமையால் வயல்சூழ்ந்த என்றும். அல்லது புனலை வேலியாகவுடைய அகழி சூழ்ந்த வெனப்பொருள் கூறினும் பிழையாது. (௧௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டா லெனப்பல்லா ரில்லந் தோறுஞ்
செல்லாநின் றிரந்துண்டு திரிந்தமகன் மணமகனுச் செல்வ நல்க

வல்லாளை மணந்துவரு வான்போற்றம் மனைபுகுத வன்கட் சீலப்
பொல்லாராய் வைணவத்துப் புக்கொழுகு தாய்தந்தை பொருர்க ளாகி.

(இ-ள்.) தரித்திரர்கட்குப் பொன் முடிப்பு கிடைத்தாற்போல, பலபிராம ணர்களுடைய வீடுகள்தோறும் போய் யாசித்துப் புசித்துத் திரிந்த வைணவப் பிராம ணன் மணமகனுய்ச்செல்வத்தைக்கொடுக்கவல்ல திருமகளை மணஞ்செய்து வருவான் போலக் கௌரியம்மையை மணஞ்செய்து தன்னுடைய வீட்டிற் சென்றுபுக, கொடு மையையே சீலமாகக்கொண்டு கொடியவராய் வைணவமதமேற்கொண்டு அதன் வழி ப்பட்டொழுகும் தாயும் தந்தையும் மனம் பொருதவர்களாகி. எ-று.

இதுமுதலிரண்டு செய்யுள்கள் குளகம்.

"வன்கட்சீலப் பொல்லாராய் வைணவத்துப் புக்கொழுகு" என்றது அவர்கள் வைணவர்களுள்ளும் மிகக்கொடியரென்பது தோன்றக் கூறியதாம். (சச)

வந்தமண வாட்டிசிவ சிந்தனையுஞ் சைவதவ வடிவு நோக்கி
வெந்தவுடல் போன்மனமும் வெந்தவளை வேறொதுக்கி வேண்டா ராகி
நிந்தனைசெய் தொழுகுவா ரவளையொரு நாணீத்து நீங்கி வேற்றார்த்
தந்தமர்மங் கலங்காண்பான் றனியேயவைத் தகம்பூட்டித் தாங்கள் போனர்.

(இ-ள்.) (தமது வீட்டுக்கு) வந்த மணக்கோலம் பொருந்திய மருகியின் சிவசிந்தனையையும் சைவதவவேடப்பொலிவையும் பார்த்து, (தமது மதக்கொள்கைப் படி) வெந்த தமது உடம்புபோல மனமும் வெந்து, அந்தக் கௌரியைப் பிரத்தியேக மாய் ஒதுக்கிக் குடிவைத்து, (சிறிதும்) வேண்டாதவர்களாய் நிந்தனை செய்தொழுகும் அவனது தாய்தந்தையர்கள், ஒருநாள் அக்கௌரியைவிட்டுநீங்கி, அயலூரிலே தமது சுற்றத்தார் மணவினையைக்காண, தனியே (ஓடத்தில்) வைத்து வீட்டைப் பூட்டிக் கொண்டு தாங்கள் சென்றூர்கள். எ-று.

வெந்தவுடல் என்றது வைணவருள் சங்க சக்ரக்குறிகளைக்காய்ச்சித் தோளிற் பொறிக்கும் இயற்கையுடையராதல்பற்றி. இது பிருகுமுனிவருடைய மனைவி கியாதி யென்பாள் சில அரக்கருக்கு அடைக்கலங்கொடுத்தபொழுது, அவர்களைத் துரத்திக் கொண்டுவந்த திருமால் அவள் சிரத்தை வெட்ட, அவள் கூகூவென் றிரைந்து வீழ்ந் திறக்க, யோகத்திலிருந்த பிருகுமுனிவர் யோக நீங்கித் திருமாலைச் சினந்து நோக்கி "நீ உன் மாமியென்று கருதாது அவளைச் சிரங் கொய்த பாவத்தால்,மீன்முதலிய பத் துப்பிறவிக ளடைக. உன் அடியார்கள் வேதவிருத்தமாகத் தீக்ஷை செய்துகொள்க" என்று சபித்து, சுக்கிரபகவானுல் உயிர்பெற்றெழுந்த மனைவியுடன் வாழ்ந்திருந்த னர். இதனுற் கிடைத்த சாபமென்பது புராணவரலாறு.—இதனை,

காஞ்சிப்புராணம் - அரிசாபபயந்தீர்த்தபடலம்.

"எடுத்தி யம்பிய சைவ மேயெவற் றுள்ளு முத்தம மென்னில் யாங்களுங்
கடுத்த தும்பிய கண்ட ஞரடிக் கமல மன்றிவே றறிகி லேயெனிற்
றொடுத்து ணாக்குமிச் சத்தி யத்தினற் றுயரு ழந்துநீ ரக வல்வினை
மடுத்த வெம்பிறப் பொருப தெய்துக வழுவு பாதகக் குழிசி யாயினுய்
எவ்வ மேமிகுந் தமோகு ணம்பயின் றிழிந்த யோனியின் மீனு மாதியாம்
வெவ்வி னைப்பவந் தோறு மின்னலே விரவு வாயென வெய்ய சாபமிட்
டவ்வி யத்தொகை யிரிய நூறுமப் பிருகு வெள்ளியா லாவி பெற்றெழு
நவ்வி வாள்விழி மனைவி தன்னெடு நாரி பாகனை வழுத்தி வைகிஞன்

நின்ற னக்கடித் தொண்டு பூண்டவர் நெறிய லாப்புறத் தாற்று நூல்வழி
துன்று தீக்கையுற் றென்று முப்புரஞ் சுட்ட வெம்பிரான் றிருவ டிப்பிழைத்
தொன்று மூன்றுதண் டேந்தி யீனரா யுலப்பி லாதவெந் நிரய மேவுக
மன்ற வங்கவர்க் கண்டு ளோர்களும் மறலி யூரினைக் குறுகி மாய்கவே" என வருவனவற்றா னறிக. (கரு)

உண்மாசு கழுவுவது நீறென்றே யுபநிடத முழைப்பக் கேட்டு
மண்மாசு படப்பூசும் வடிவுடையா ரகன்றதற்பின் மனையில் வைகும்
பெண்மாசு கழியவொரு சிவனடியார் தமைக்காணப் பெறும லின்றென்
கண்மாசு படுவதெனக் கனிந்தொழுகு தலையன்பாற் கவலை கூர்வாள்.

(இ-ள்.) (புறத்தழுக்கைப்போக்கிப் புனிதமாக்குகின்ற நீர்போல) அகத்தழுக்காகிய மலத்தைப் போக்கிச் சுத்தஞ்செய்வது திருவெண்ணீறே யென்று (பஸ்ம ஜாபால முதலிய) உபநிஷத்துகள் சொல்லக் கேட்டிருந்தும், (தமதுடம்பில்) அழுக்குப்பட மண்ணைப்பூசும் வடிவினையுடைய வைணவர்கள் நீங்கியபிறகு, (அவர்கள்) மனையில் வாழும் கௌரியம்மை தனது குற்றமொழிய ஒரு சிவனடியார் திருவேடத்தைக்காணப்பெறாமல் இப்பொழுது என் கண் மாசுபடுகின்றது எனப் பழுத்தொழுகுஞ் சிறந்த அன்பினால் மனம் வருந்தத்தொடங்கினாள். எ-று.

ஆன்மாக்களைப் பந்தித்துள்ள மும்மலங்களை "உண் மாசு" என்றும், புறமுகமாக நோக்குவோர்க்கு ஆகமவிதிப்படி நீற்றுவது என்னும் பொருள்படினும் அகமுகமாக நோக்குவோர்க்கு மலங்களை நீற்றுவதாதலின், தேற்றேகாரந்தந்து "உண் மாசு கழுவுவது நீறென்றே" என்றும், இவ்வகைத்தாகத் திருவெண்ணீற்றின் பிரபாவத்தைச் சாமான்னிய நூல்களேயன்றி பஸ்மஜாபால முதலிய உபநிஷதமாதிய பிரபல ஸ்ருதிகள் எடுத்தோதலாலும், வேதாகம வுபநிடதாதிகளைக் கேட்டற்குரிய அதிகாரிகளாதலாலும் "உபநிடதமுழைப்பக் கேட்டும்" என்றும், பிருகுவாதியர் சாபத்தால் வேதவிருத்தராகி யொழுகலின் "மண்மாசு படப்பூசும் வடிவுடையார்" என்றுங் கூறினர்.

"உண்மாசு கழுவுவது நீறு" என்றதனை, உபநிஷதங்களிலும், திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகத்திலும், புராணநூல்களிலும் பரக்கக் காண்க. (கசு)

சிவனடியார்க் கன்பிலாச் சிந்தையே யிரும்பேவல் செய்து நாளு
மவனடியார் திறத்தொழுகா வாக்கையே மரஞ்செவிகண் ணாதி யைந்தும்
பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே பாவைமறை பரவுஞ் சைவ
தவநெறியல் லாநெறியே பவநெறியென் றன்பினளாய்த் தளர்வாள் பின்னும்.

(இ-ள்.) சிவ்பெருமான் தொண்டர்களிடத்தில் அன்பில்லாத மனமே இரும்பாம். (அவர்கள் ஏவிய) ஏவலைச்செய்து எக்காலமும் அச்சிவனடியவர் திறத்திற் செல்லாத சரீரமே மரமாம். செவி - கண் முதலிய பஞ்சேந்திரியங்களும் அச்சிவனடியர்களிடத்துச் செலுத்தாத உருவமே பதுமையாம். வேதங்கள் துதிக்கும் சைவத்தின் தவமார்க்கமல்லாத ஏனைய மார்க்கங்களே (ஆன்மாக்கட்குப்) பாவத்தைத்தரும் மார்க்கங்களென்று அன்புடையவளாய்த் தளர்வாளாயினள். எ-று.

"தாபர சங்கமங்க ளென்றிரண் டுருவி னின்று - மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்" என்ற ஹேதுவால், சிவபெருமான் தமது தொண்டர் திருவேடத்தையே கொண்டுநின்று ஆன்மாக்களின் வழிபாட்டிற்கிரங்கி அருள் செய்தலின் "சிவனடியார்க்கன்பிலாச் சிந்தையே, அவனடியர் திறத்தொழுகா வாக்கை

யே, செவிகண் ணுதி யைந்தும் பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே,'' என்று கூறினர். (கஎ)

எனைத்துயிர்க்கு முறுதியிக பரமென்ப வவைகொடுப்பா னெல்லாந் தானு
யனைத்துயிர்க்கு முயிராகு மரனென்ப வவனறிவார்க் கங்கம் வாக்கு
மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப வப்பத்தி வழிநிற் பார்க்கு
வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப தவனடியார் வேட மன்றே.

(இ-ள்.) எல்லாவுயிர்கட்கும் பயனுயுள்ளன இம்மை மறுமைப் போகங்களென்று கூறுவர். (உயிர்கட்கு) அவற்றை அனுக்கிரகிப்பவன் எல்லாந்தானுகி எல்லாவுயிர்கட்கும் உயிராகிநின்றருளுஞ் சிவபெருமானென்று கூறுவர். அச்சிவபெருமானை (ஆகமமுறையால்) உணர்ந்தவர்கட்கு மனம் வாக்குக்காய மென்னும் இவற்றால் வழிபடும் உண்மையாகிய சிவபத்திநெறி முதிருமென்று கூறுவர். அப்பத்திவழியிலே நிற்பவருக்கு இருவினைகளால் வருந்துன்பங்களைத் தீர்க்க எடுத்த (திருவுருவென்பது) அச்சிவனடியவர் திருவேடமல்லவா? எ-று.

மலபந்தத்தையுடைய நரர்முதல் சுரர் ஈருகவுள்ளோர் யாவரும் பசுக்களேயாதலின் "எனைத்துயிர்க்கும்" என்றும், அப்பசுக்களின் மலபந்தமொழிதற்கு இம்மை மறுமைப் போகங்கள் பரமவுடதமாதலின் "உறுதியிகபரமென்ப" என்றும், அவ்வகைய அவுடதத்தையளிப்போன் அம்மலங்களினீங்கிய பதியாவானுகலின் "அவை கொடுப்பான் அரன்" என்றும், மாயையினின்று காரியப்படுத்தவேண்டியொவ்வொன்றிலுங் கலந்து நிற்றலின் "எல்லாந்தானுய்" என்றும், அவற்றைச் செலுத்துங்கால் உடனிற்றலின் "அனைத்துயிர்க்கு முயிராகும்" என்றும், ஞானநூல்களைக் கற்றுங் கேட்டுஞ் சிந்தித்தும் பசுவையும் பாசத்தையுஞ் சேர்த்துச் சேட்டிப்பவன் பரம்பரனென்பது தெளிர்ந்தவர்க்கே புலப்படலின் "அவனறிவார்க்கு" என்றும், அவ்வாறுணர்ந்தார்க்கு அவன் றிருவடியைக் கலத்தற்கு மனத்தாற் சிந்தித்தலும், வாக்காற்றுதித்தலும், காயத்தால் வழிபடலுமாகிய சார்புபற்றியமெய்ப்பத்தி சனிக்குமாதலின் "அங்கம் வாக்கு மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப" என்றும், நல்வினையானெய்துஞ் சொர்க்காதி போகங்களும் பொன்விலங்கு போலுமாதலின் அதனையும் உடனெண்ணிப் பொதுவாக "வினைத்துயர்" என்றும், அம்மெய்ப் பத்தியில் வழுவாது நிற்போருக்கு அப்பதியை யேற்று அதற்கெதிரீடாக முத்தியை யருளஉறைவிடமாகக்கொண் டெழுந்தருளி யிருக்குமிடம் அடியர் திருவேடமாதலின் "அப்பத்தி வழிநிற்பார்க்கு வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப தவனடியார் வேடமன்றே" என்றுங்கூறினர். (கஅ)

என்னவிருந் தலமருவா ளிருக்குமிடத் தவளுள்ளத் தெண்ணி யாங்கே
தென்னவனு யிருந்தரசு செய்தபிரா னவட்கருளுஞ் செவ்வி நோக்கிக்
கன்னமுரங் கரஞ்சிரந்தோள் கண்டமுங்கண் டிகைபூண்டு கையிற் றம்போற்
பன்னெடுநாட் பழகியதோர் தனிப்பெரிய புத்தகமும் பக்கஞ் சேர்த்தி.

(இ-ள்.) என்றிவ்வாறு கௌரி வருந்தி யிருக்குமிடத்தில், அக்கௌரிமனத்தில் நினைத்தபடியே, சுந்தரபாண்டியராயிருந்து அரசுசெலுத்திய சோமசுந்தரக்கடவுள், அக்கௌரிக்கு அனுக்கிரகஞ்செய்யுஞ் சமையங்கருதி, காதிலும், மார்பிலும், கையிலும், தலையிலும், தோளிலும், கழுத்திலும் உருத்திராக்க கண்டிகை யணிந்த தமது திருக்கரத்தில் தம்மைப்போலப் பலகாலமும் நீங்காதிருக்கும் ஒப்பற்ற (சிவஞானபோத) புத்தகத்தையும் அத்திருக்கரத்தின்கண் தரித்து. எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

"பன்னெடுநாட் பழகிய தோர்தனிப் பெரிய புத்தகம்" என்றது, சிவஞான போதம் சிவபெருமானைப் போல என்றும் உள்ளதாலும், "கன்னமுரங் கரஞ்சிரந் தோள்கண்டமுங் கண்டிகைபூண்டு" என்றது, சிவபெருமான் ஆசிரியத்திருக்கோலந் தாங்கி வந்தன ராதலாலுமென்க. (கக)

கரிந்தநீள் கயன்முள்ளி னரையுமுது திரைகவுளுங் கனைக்கு நெஞ்சுஞ்
சரிந்தகோ வணவுடையுந் தலைப்பனிப்பு முத்தரியந் தாங்கு தோளும்
புரிந்தநூல் கிடந்தலையும் புண்ணியநீ றணிமார்பும் பொலிய நீழல்
விரிந்ததோர் தனிக்குடையுந் தண்டூன்றிக் கவிழ்ந்தசையு மெய்யுந் தாங்கி.

(இ-ள்.) கருநிறம்பொருந்திய நெடிய சயற்கெண்டையின் முள்ளைப் போன்ற நரையும், மிகவும் திரைபொருந்திய கபோலமும், (அடிக்கடி) கனைக்கும் மார்பும், சரிந்த கோவணமாகக் கட்டிய ஆடையும், தலையாட்டமும், உத்தரீயமணிந்த திருத்தோளும், முப்புரியாக்கிய பூணநூல் கிடந்தசையும் புண்ணிய சொரூபமாகிய திருவெண்ணீற்றினை யணிந்த திருமார்பும், நீழல்விளங்க விரிந்த ஒப்பற்ற குடையும், தண்டினை யூன்றிக் கவிழ்ந்தசையும் (தள்ளாடிய) திருமேனியும் (ஆகிய இவற்றைக்) கொண்டருளி. எ-று.

நரை - மயிர்வெளுத்தல். திரை - உடலின் மீந்தோல் சுருங்குதல். கனைக்கு நெஞ்சு - ஈளையிருமல். (உ௦)

ஒருத்தரா யுண்டிபல பகல்கழிந்த பசியினர்போ லுயங்கி வாடி
விருத்தவே தியராய்வந் தகம்புகுதக் கண்டெழுந்து மீதூ ரன்பின்
கருத்தளாய்த் தவிசிருத்திக் கைதொழுது சிவனையிங்கு காண மென்ன
வருத்தமா தவமுடையே னெனமுனிவா பசித்துன்பால் வந்தே மென்றார்.

(இ-ள்.) (தமக்கோர் உறவினரில்லாத) ஒருவராய், பல தினங்கள் ஆகாரமில்லாத பசியையுடையார்போல மயங்கி வாட்டமடைந்து மிக்க மூப்படைந்து பிராமணத் திருவேட முடையவராய் வந்து தனது வீட்டிற்புகக் கண்டு விரைந்தெழுந்து மேலிட்டோங்கிய அன்பையுடைய மனத்தினளாய், ஆதனத்தில் எழுந்தருளச்செய்து கைகுவித்து, சிவபெருமானை ஈண்டுத் தரிசிக்க வருத்தமாகிய பெருந்தவம் யாதுசெய்துள்ளேன்? என்றுகூற, (வந்த) முனிவர், பசித்தலால் உன்னிடத்தில் வந்தேனென்று கூறியருளினர். எ-று.

பசித்து - வினையெச்சம். இதுகாரண காரியப்பொருளின் மேல்நின்றது. ஆதலின் பசித்தலால் எனப் பொருள் கொள்ளப்பட்டது. (உக)

இற்பூட்டிப் போயினா ரெமரங்க ளெனக்கௌரி யியம்ப மேரு
விற்பூட்டிப் புரம்பொடித்த வேதியர்நின் கைதொட்டு விடுமுன் யாத்த
கொற்பூட்டு விடுந்திறந்து கடிதடிசில் சமைத்தியெனக் குமரி தாளி
லற்பூட்டு மடவரலு மவ்வாறே யட்டில்புகுந் தடிசி லாக்கி.

(இ-ள்.) எம்முடைய மாமி முதலானவர்கள் வீட்டினைத் தாளிட்டு (வேற்றூர்க்கு)ச்சென்றார்கள் எனக் கௌரி சொல்ல, மேரு (மலையாகிய) வில்லில் (சேடனாகிய நாணினைப்) பூட்டித் திரிபுரத்தை நீறுபடுத்திய அந்தணர் (வடிவங் கொண்ட சோமசுந்தரக்கடவுள்) உனது கையால் தொடுவதற்கு முன்னரோ கொல்லனாற் செய்யப்பட்ட பந்தித்துள்ள பூட்டுத்திறக்கும். (கதவைத்) திறந்து விரைந்து திருவமுது சமைப்பா யென்றருள, உமாதேவியார் திருவடியில் அன்பு செலுத்தும் அக்கௌரியும்அவ்வண்ணமே (செய்து கதவைத்திறந்து) சமையல் வீட்டிற் புகுந்து திருவமுது சமைத்து. எ-று.

இதுமுதல் ஐந்துபாடல்கள் குளகம்.

அன்பு - அற்பு இது எதுகை நோக்கி வலித்தல் விகாரப்பட்டது. கொல் என்னுஞ் சாதிப்பண்பு அத்தொழிலையுடைய கொல்லன்மேல் நிற்றலால் பண்பாகு பெயர். அல்லது கொல்லன் என்றது தொக்கு நின்றதெனினும் பொருந்தும். (உஉ)

தையன்மார் தவக்கொழுந்து புறம்போந்து கரகநீர் தளிர்க்கை தாங்கி
யையனே யமுதுசெய வெழுந்தருளு மெனவெழுந்த வடிகள் பாதச்
செய்யதா மரைவிளக்கி யந்நீர்தன் சென்னியின்மேற் றெளித்துப் பாச
மையன்மா றிருள்கழுவி யகம்புகுவித் தாசனமேல் வைத்துப் பின்னர்.

(இ-ள்.) மாதருள், பெருந்தவக் கொழுந்துபோன்ற அக்கௌரி (சமையல் வீட்டிலிருந்து) வெளியேவந்து, கரக நீரைத் தனது தளிர்போன்ற கைகளிற்றாங்கி, ஐயனே! திருவமுது செய்தற் கெழுந்தருளுமென்று விண்ணப்பிக்க, எழுந்தருளி வந்த வேதியருடைய திருவடியாகிய செந்தாமரைகளை (அக்கரக நீரால்) அலம்பி, அந்த (பாததீர்த்தத்தை)த் தலைமேற்றெளித்துக்கொண்டு, பாசமாகிய மயக்கத்தை விளைக்கும் மல விருளைக் கழுவி ஓர் அறைக்குட் புகுவித்து, பீடத்தின்மேலில் வீற்றிருக்கச்செய்து அதன்பிறகு. எ-று.

பெரியோர் திருவடியை விளக்கிய நீரைச் சிரமேற் புரோக்ஷித்துக் கொள்வதால் பாவங்களெல்லாம் அகலுமெனச் சிவபுண்ணியத்தெளிவு கூறுமாகலின் "செய்ய தாமரை விளக்கியந்நீர் தன் சென்னியின் மேற்றெளித்து" என்றார். (உரு)

நகைமலரிட் டருசித்து நல்லபரி கலந்திருத்தி நறுவி முல்லை
முகையனைய பாலடிசில் வெள்ளிமலை யெனப்பருப்பு முதுகிற் செம்பொற்
சிகரமெனப் பல்வேறு கருணைபுறந் தழீஇக்கிடந்த சிறுகுன் றீட்ட
வகையெனநெய் யருவியெனப் படைத்தனைய சிற்றுண்டி வகையும் பெய்து.

(இ-ள்.) விளக்கம் பொருந்திய மலர்களாற் பூசித்து நல்ல உண்கலத்தைத் திருத்திவைத்து நன்மணங்கமழும் முல்லை யரும்பு நிகர்த்த பால்வார்த்துச் சமைத்த திருவமுது திருக்கைலை மலைபோலவும், (அதன்புறத்திட்ட) பருப்பு (அக்கைலையில் புறத்திலுள்ள) பொற்சிகரமாகிய மகமேருவைப்போலவும், (அதனைப்புறஞ்சூழப் படைத்த) பலவேறாகிய பொரிக்கறிகள் (அம்மகமேருவின்) புறத்தைத் தழுவிக்கிடந்த (நிஷதமுதலிய) சிறுமலைகளின் கூட்டத்தைப்போலவும், (திருவமுதின்மேல் சொரிந்த) நெய் (திருக்கைலையினின்றிழியும்) அருவியாற்றைப் போலவும் படைத்து, அதுபோலவே சிற்றுண்டி வகைகளையும் (சூழ) படைத்து. எ-று.

பரிகலந்திருத்தி என்றது டரிபாஷை. (உசு)

செய்யவா யிடையிடையே முகமனுரை யின்னமுது செவியி லூட்டத்
தையலாள் வளைக்கையறு சுவையமுது வாயூட்டத் தளர்ந்த யாக்கை
யையர்தாந் திருவமுது செய்தமுதுண் டவரொனமூப் பகன்று பூவிற்
கையதே மலர்வாளிக் காளைவடி வாயிருந்தார் கன்னி காண.

(இ-ள்.) (கௌரி) செவந்த தனது வாயின்ல் இடையிடையே உபசார வார்த்தையாகிய இனிய அமுதமைத்து (விருந்தினராகிய வேதியரது) திருச்செவியில் உண்பிக்கவும், கௌரியம்மை தனது வளையலணிந்தகைகளால் அறுசுவையோடுகூடிய திருவமுதை வாயிலூட்டவும், (மூப்பால்) தளர்ச்சியடைந்த திருமேனி வாய்ந்த அவ் வேதியர் திருவமுது செய்தருளி, தேவாமிர்தம் உண்டவனைப்போல (தமது) முது

மை யொழிந்து, மலர் வில்லை யேந்திய கையிலுள்ள தேன் சொரியும் புஷ்பபாணங்களையுடைய மன்மதாகாரமாகி அக்கௌரி காணும்படி இருந்தனர். எ-று. (உரு)

"பூசியவெண் ணீறுபோய்க்கலவையாய்க் கண்டிகைபோய்ப் பொன்செய் பூணுங், காசணிபொற் குண்டலமுங் கடகமாய் மூப்புப்போய்க் காளை யான, தேசுருவங் கண்டுநடு நடுங்கிவளைக் கரநெரித்துத் திகைத்து வேர்த்துக், கூசியொரு புறத்தொதுங்கி நின்றாளக் கற்புமலர்க் கொம்ப ரன்னாள்.

(இ-ள்.) திருமேனியி லணிந்த தாவள்யமாகிய திருநீறுமாறிக் கலவைச் சாந்தாகியும், உருத்திராக்க கண்டிகைமாறிப் பொன்னாற்செய்த ஆபரணங்களும் இரத்தினமிழைத்த பொற்குண்டலங்களும் கடகமுமாகியும், மூப்புப்பருவம் மாறிக் காளைப்பருவமுமான விளக்கம்பொருந்திய அந்தணரது திருவுருவத்தை, கற்பாகிய மலர்களையுடைய பூங்கொம்புபோன்ற அந்தக் கௌரியம்மை கண்டு நடு நடுங்கி, வளையலணிந்த தனது கைகளை நெரித்து மயங்கி வேர்வரும்பிக்கூசி அஞ்சி ஒருபுறம் ஒதுங்கி நின்றனள். எ-று.

"வெண்ணீறு" என விதந்து கூறியது எற்றுக்கெனின் திருநீற்றினுள் வெண்ணிறமுடைய திருநீறே அளவில்லாத புண்ணியத்தை விளக்குமாதலின் என்க. ஏனைய நிறங்களில், கருநிறமுடையது நோயையுண்டாக்குமென்றும், செந்நிறமுடையது கீர்த்தியைப் போக்குமென்றும், புகைநிறமுடையது ஆயுவைக் குறைக்குமென்றும், பொன்னிறமுடையது சம்பத்தைக் கெடுக்குமென்றும், சிவாகமங் கூறும்.

இதுபற்றியே "கறுப்புச் செவப்புக் கடியதொரு தூமம் - வெறுப்புடனே பீதம் விடு" எனச் சைவசமயநெறியிற் கூறப்பட்டிருப்பதுங் காண்க. (உசு)

ஆனபொழு தருங்கடிநன் மணங்குறித்து மனையிற்றீர்ந் தயலூர்புக்க
தேனொழுகு துழாயலங்கற் றீர்த்தனுக்கன் புடையார்போற் றிரியும் வஞ்ச
மானமுடை யார்மீண்டு மனைபுகலும் பதினாறு வயதின் மேய [ன்.
பானன்மணி கண்டனுதற் காப்பணிந்தோர் பசுங்குழவிப் படிவங் கொண்டா

(இ-ள்.) (வேதியவடிவாக வந்த சோமசுந்தரக்கடவுள்) இவ்வகைய திருவுருவாகிய காலத்தில், மிக்க விளக்கமமைந்த நல்ல விவாகத்தைக்குறித்து (தமது) வீட்டினின்றும் நீங்கி, அயலூருக்குச் சென்ற தேன்சொரியுந் துளவமாலையணிந்த திருமாலுக்கு அன்புடையவர்போல (நடித்து)த்திரியும் வஞ்சனையும் சமயாபிமானமுமுடைய மாமிமுதலானோர் திரும்பித் தமது வீட்டிற்குவர, பதினாறு வயதினையுடைய நீலோற்பலம் போன்ற கரிய கண்டத்தையுடைய வேதியராகவுள்ள சோமசுந்தரக்கடவுள் நெற்றியில் (நிலப்) பொட்டணிந்த ஒப்பில்லாத பச்சைக்குழந்தையின் திருவுருவத்தைக் கொண்டருளினர். எ-று.

"அன்புடையார்போல் திரியும் வஞ்சமானமுடையோர்" என்றதனால், அவர்கள் உள்ளபடியே திருமாலுக்கு மெய்யன்புடையரல்லரென்றது புலப்படுகின்றது. பசுங்குழவி என்றதில் பசுமைஇளமை குறித்தது. (உஎ)

எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத் தலம்பவன்ப ரிதய மென்னுஞ்
செழுமலரோ டையின்மலர்ந்து சிவானந்தத் தேன்றதும்பு தெய்வக் கஞ்சத்
தொழுதகுசிற் றடிப்பெரிய விரல்சுவைத்து மைக்கணீர் துளும்ப வாய்விட்
டழுதணையா டையிற்கிடந்தா னனைத்துயிரு மீன்றுகாத் தாளு மப்பன்.

(இ-ள்.) எல்லாவுயிர்களையும் படைத்தும் காத்தும் (சங்கரித்தும்) அருள்புரியும் அப்பனாகிய சோமசுந்தரக்கடவுள் எழுதற்கரிய வேதமாகிய சிலம்புகள் சூழ்ந்து

கிடந்து புறத்தே சத்திக்க, அடியவர்களது இதயமாகிய செழிய தாமரைமலர்களை யுடைய ஓடையில் மலர்ந்து, சிவானந்தமாகிய தேன் ததும்பும் தெய்வீகம் பொருந்திய தாமரைபோன்ற துதிக்கத்தக்க சிற்றடியிலுள்ள பெருவிரலைச்சுவைத்து, மையெழுதிய கண்களில் நீர் ததும்ப வாய்திறந்தழுது அணைபோலப் பரப்பிய ஆடையின் பேரிற் கிடந்தருளினர். எ-று.

சிற்றடியைக் கஞ்சமென்றதற்கேற்ப "அன்பர் இதயமென்னுஞ் செழுமலரோடையின் மலர்ந்து சிவானந்தத் தேன்றதும்பு" என அடைதந்தனர். (உஅ)

தாய்விட்டுப் போனதொரு தனிக்குழவி யெனக்கலங்கித் தாங்கித்தேடி,யாய்விட்டுப் பிரமனழ மறைகளழ வன்புடையா ளன்பிற் பட்டு, வாய்விட்டுக் கிடந்தழுத மகவினைக்கண் டணங்கனையாண் மாமி யென்னுங், காய்விட்டு மதக்கொடியா ளிம்மகவே தெனக்கேட்டாள் கௌரி தன்னை.

(இ-ள்.) (சிரத்தில்) தாங்கித்தேடி ஆராய்ந்து திருமால் அழவும், பிரமதேவர் அழவும், வேதங்கள் அழவும், அன்புமிகுந்த கௌரியினுடைய அன்பினி லகப்பட்டு வாய்திறந்து (அணையாடையிற்) கிடந்து, தாயானவள் விட்டுப் பிரிந்துபோன ஒப்பில்லாத ஒரு குழந்தையைப்போல (மனங்) கலங்கி, அழுங்குழந்தையைக் கண்டு, இலக்குமி போன்ற அக்கௌரியினது மாமியாகிய கோபமிகுந்த வைணவமதக் கொடியவள் கௌரியைநோக்கி இக்குழந்தை ஏது? என்று (கோபித்துக்) கேட்டனள். எ-று.

ஆய்விட்டு என்பதை ஒரு சொல்லாகக்கொண்டு ஆராய்ந்து எனக்கூறினும், பொருந்தும். அப்பொழுது ஆய்விடு பகுதி. விட்டு என்பது விஷ்ணு என்னும் ஆரிய மொழித் திரிபு. (உகூ)

நத்தனயன் றனக்கரிய நாயகனுக் கன்புடையா ணவில்வா டேவ
தத்தனயுந் தருமனைவி யொடுபோந்து சிறுபோது தைய லாயீண்
டித்தனயன் றனைப்பார்த்துக் கோடியென வைத்தகன்று ளென்று முன்னஞ்
சித்தநய னங்கலங்கச் சீறிமண வாட்டிதன்மேற் செற்றங் கொண்டாள்.

(இ-ள்.) (பாஞ்சசன்னியம் என்னும்) சங்கினைத் தாங்கிய விஷ்ணுமூர்த்திக்கும் பிரம தேவருக்கும் தேடியடைதற்கரிய சிவபெருமானுக்கு அன்பினையுடைய கௌரியம்மை கூறுகின்றாள். தேவதத்தனென்னும் வேதியன் இன்பந்தரும் (தனது) மனையாட்டியுடன் (இங்கு) வந்து, பெண்ணே! இப்பொழுது சிறிதுநேரம் இக்குழந்தையைப் பார்த்துக்கொள்க வென்று வைத்து நீங்கினன் என்று கூறுமுன்னமே (தனது) மனமுங் கண்களுங் கோபித்து, தன் மணவாட்டியாகிய மருகியின்பேரிற் கோபங்கொண்டனள். எ-று.

திருமால் பாஞ்சசன்னியம்பெற்ற வரலாறு:—

அவந்திதேசத்திலுள்ள சாந்தீவினி என்பவரைக் கிருஷ்ணனும் பலராமனும் வித்யாகுருவாகக்கொண்டு வேதாகமங்களைக் கற்றுணர்ந்தனர். பிறகு கண்ணன் ஆசிரியரை வணங்கி "உமக்கு வேண்டிய குருகாணிக்கை யாது?" என, அவர் தமது பத்தினியைக்கேட்க,அவர்மனைவி "சிறிது காலத்திற்குமுன் நீர்விளையாட்டில் இறந்த நமதுபுத்திரனைக்கொடுக்கும்படிகேட்க"என,அவர்அவ்வாறேகண்ணனைக்கேட்டனர். உடனே கண்ணன் தன் அண்ணனுடன் தேரேறி வருணலோக மடைய, அதுகண்ட வருணன் கண்ணனை வணங்கி "வந்த காரணம் யாது?" என, கண்ணன் "கடலாடுகையிலிறந்த எமதாசிரியர் புதல்வனைத் தருக" என, வருணன் "அவனைக் கடலில் வசிக்கும் **பஞ்சசனன்** என்னும் அவுணன் விழுங்கிவிட்டான்" எனக் கேட்ட கண்

ணன் கடலிற்பாய்ந்து அங்கு துயிலும் அசுரனது நெஞ்சைப் பிளந்து அதனுள்ளிருந்த சங்கைக் கைக்கொண்டு தேரேறி யமனுலகடைந்து சங்கைப் பூரிக்க, இயமன் அவ்வோசையால் விரைந்தோடி வந்து வணங்கி வந்த காரணமுணர்ந்து புதல்வனைத் தர, கண்ணன் ஆசிரியர்முன் கொணர்ந்து விடுத்தன னென்பது. இவ்வாறு கொண்ட பஞ்சனனுடலிலிருந்த சங்கமே பாஞ்சசன்னியம். இதனை,

பெரியாழ்வார் திருமொழி.

"மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா வுருவுருவே கொடுத்தானூர்
தோதவத்தித் தூமறையோர் துறைபடியத் துளும்பி யெங்கும்
போதில்வைத்த தேன்சொரியும் புனலரங்க மென்பதுவே" எனவும்,

பாகவதம் - குரவன்மைந்தற் கொணர்ந்த அத்தியாயம்.

"வஞ்சம் படைத்து மறிவெண்டிரை வேலை யூடு
துஞ்சுந் திறல்வா ளவுணன்றனைச் சூழ்ந்து பற்றி
நெஞ்சம் பிளந்து நிலவுக்கதிர்ச் சங்கு கொண்டான்
கஞ்சங் கடுக்குங் கருணைத்தடங் கண்ணன் மாதோ.

மின்னும் பிறைவா ளெயிற்றந்தகன் வீற்றி ருக்குந்
தென்னம் புலத்திற் கதிர்மாமணித் தேர்க டாவிப்
பின்னந் திரையிற் கவர்சங்கு பிறங்க யாவு
முன்னம் படைத்த முகினின்று முழக்கஞ் செய்வான்.

வெருவுற்ற கூற்றம் விரைவோடெதிர் வந்தி றைஞ்சி
வரவுற்ற தென்கொ லென வேந்தலும் வந்த வண்ணந்
தெரிவுற்ற தாக்கிச் சிறுவற்றர வொல்லை மீளாக்
குரவற்பணிந்து குமரன்றனைக் கொள்க வென்றான்"—எனவும் வருவன வற்றானறிக.

என்புபூண் டிடுகாட்டிற் பொடியாடு முருத்திரனுக் கிடைய றாத
வன்புபூண் டான்மகவுக் கன்புடையாய் நீயுமெமக் காகா யென்று
துன்புபூண் டயர்வாளை மகவையுங்கொண் டகத்தைவிடத் துரத்தி னார்கள்
வன்புபூண் டொழுகுவை ணவம்பூண்டு பொறையிரக்க மான நீத்தார்.

(இ-ள்.) எலும்பினை (ஆபரணமாக)ப்பூண்டு, சுடுகாட்டில் சாம்பலைப் பூசியாடிய வுருத்திரனுக்கு நீங்காத அன்புகொண்ட அத்தேவதத்தன் குழந்தையினிடத்தில் அன்பினையுடையாளே! (அவன் எமக்கு ஆகாததுபோல) நீயும் எங்களுக்கு ஆகாய் என்றுசொல்லி, (இடையறாது) நிகழும் கொடுஞ்சீலத்தை மேற்கொண்டு, வைணவமதமேற்கொண்டு பொறுமை இரக்கம் மானம் (ஆகிய) இவற்றைக் கைவிட்ட மாமிமுதலியோர், துன்பமுற்று வருந்துங்கௌரியை, அப்பிள்ளையையு மேந்திக்கொண்டு தமது வீட்டினின்றும் புறம்போக ஓட்டினார்கள். எ-று.

"வேதன் மான்முத லோரை நம்பன் விதித்த ழித்திடு பொழுதெலாந்
தீதி லங்கவ ரென்ப ணிந்து சிரங்கள் கேச மணிந்து நீள்
கோதி லாதொளிர் சூல மீதுடல் கொண்டு நீறதுு கண்டபின்
மீது பூசுமி யாவ ருந்தனை மேவி யுய்ந்திட வேண்டியே" என்றபடி இறைவர் லோககாரணமாகத் திருமால் பிரமன் முதலியோரைச் சிருஷ்டித்து அவர்களால் முத்தொழில் நடத்தி இறுதியில் சங்கரிக்கப்பட்ட அவர்கள் என்பையும் சிரத்தையும்

தமது திருமேனியிலணிந்து அப்பெருந்தேவர் மரித்தமயானத்தில் நடித்து அவர்களு டலைத் தமது திருநெற்றி விழியாற் பொடிபடுத்தி அந்நீற்றினை யணிதலின் "என்பு பூண்டிகொட்டிற் பொடியாடுமுருத்திரன்" என்றார். (௬௧)

தாயிலாப் பிள்ளைமுகந் தனைநோக்கித் தெருவினிடைத் தளர்வா ளுள்ளங்
கோயிலாக் கொண்டுறையுங் கூடலு யகனைமனக் குறிப்பிற் கொண்டு
வேயிலாக் கியதடந்தோட் கௌரிதிரு மந்திரத்தை விளம்ப லோடுஞ்
சேயிலாய்க் கிடந்தழுத குழவிவிசும் பிடைவிடைமேற் றெரியக் கண்டாள்.

(இ-ள்.) மாதாவில்லாத மகவின் முகத்தைப்பார்த்து வீதியிலிருந்து மனம் வருந்துங் கௌரியம்மை தனது உள்ளத்தைத் திருக்கோயிலாகக்கொண்டு எழுந்தரு ளியிருக்கும் மதுராபுரீசனாகிய சோமசுந்தரப்பெருமானை மனத்திற்றியானித்து, மூங் கில் போன்ற பூரித்த திருத்தோள்களையுடைய உமாதேவியாரது திருமந்திரத்தைச் செபிக்கவும், தன் சமீபத்திலிருந்து அழுத இளம்பிள்ளை ஆகாயத்தில் இடபவாகனத் தின்மேல் தோன்றியருளத் தரிசித்தனள். எ-று. (௬௨)

மழவுருநீத் தழலேற்றின் வருவார்தம் மிடத்தணங்கின் மனுவை யோதிப்
பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின் வடிவாக்கிப் பலருங் கண்டு
தொழவிடைமே லேற்றிவிசும் பாறுக் மலர்மாரி சுரர்க ளூற்ற
வழகொழுந் தருளினர் களிதூங்கி யதிசயித்தா ரவனி மாக்கள்.

(இ-ள்.) குழந்தைத் திருவுருவத்தை நீக்கியருளி, வெற்றி பொருந்திய இடபவாகனத்தில் வருகின்ற சிவபெருமானுடைய வாமபாகத்திலுள்ள உமாதேவியா ரது திருமந்திரத்தைச் சபித்துப்பழகிய பார்ப்பனப் பெண்ணாகிய கௌரியம்மையை உமாதேவியாரது சாரூபந்தருளிப் பலருங்கண்டு தொழ, தமது இடபவாகனத்தி லிருக்கச்செய்து, ஆகாயமார்க்கமாகத் தேவர்கள் புட்பமாரி சொரிய, சிவபெருமான் எழுந்தருளினர். (அதுகண்ட) பூலோக மாந்தர்கள் பெருமகிழ்ச்சியிலழுந்தி அதிசயப் பட்டார்கள். எ-று.

கௌரி திருமந்திரத்தை ஒருலக்ஷஞ் செபித்தால் சாலோகபதமும், இரண்டு லக்ஷஞ் செபித்தால் சாமீபபதமும், மூன்றிலக்ஷஞ் செபித்தால் சாரூபபதமும், நான் கிலக்ஷஞ் செபித்தால் சாயுச்சியபதமுங் கிடைக்குமாதலாலும், கௌரியம்மை தன் தந்தைபாலுணர்ந்த கௌரிமந்திரத்தை மூன்றிலக்ஷஞ் செபித்தவளாதலாலும் "தம்மி டத்தணங்கின்மனுவை யோதிப்பழகியபார்ப்பனமகளைப்பார்ப்பதியின் வடிவாக்கி" என்றார். (௬௩)

விருத்தகுமாரபாலரானபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கசசுக.

உ

சிவமயம்.

# இருபத்துநான்காவது.

# மாறியாடின படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

*திருத்த ராய்மது ராபுரி மேவிய சித்தரா கியசெல்வர்*
*விருத்த ராயிளை யவருமாய் மழவுமாய் வேடங்கொண் டடலேற்றி*
*னொருத்த ராய்விளை யாடிய வாடலை யுரைத்தன மினிமன்று*
*ணிருத்த ராயவர் மாறிநின் றாடிய நிலைசிறி துரைசெய்வாம்.*

(இ-ள்.) நிஷ்களங்கராய் மதுராபுரியில் எழுந்தருளிய சித்தமூர்த்திகளாகிய திருவருட் செல்வத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், விருத்தருமாகிக் காளையுமாகிப் பாலருமாகித் திருவேடங்கொண்டு, வெற்றிபொருந்திய இடபவாகனத்தின் மேல் ஒருவராய் விளையாடியருளிய திருவிளையாடலைச் சொன்னோம். வெள்ளியம்பலத்தில் நடனமூர்த்தியாய் நின்ற அப்பெருமானார் கான்மாறிநின்று நிருத்தஞ்செய்த திருவிளையாடலை இனிச்சிறிதெடுத்துச் சொல்லுவோம். எ-று.

"விருத்தராயிளையவருமாய் மழவுமாய்" என்றது பொருண்முரணணி. (க)

*வேந்தன் மீனவன் கொடியவ னாகிய விக்கிர மன்றன்றோ*
*ளேந்து மண்பொறை யிராசசே கரன்புயத் திறக்கியைந் தருநாடன்*
*பூந்தண் மாமலர் வேதியன் மாதவன் புரத்தின்மேற் பொலிந்தோங்குஞ்*
*சாந்த நீறெனச் சண்ணித்த புண்ணியத் தனிமுத னகர்சார்ந்தான்.*

(இ-ள்.) அரசனும் வலிய கயற்கொடியை யுடையவனுமாகிய விக்கிரமபாண்டியன் தனது தோளிலாற்றிய பூமிபாரத்தை இராஜசேகரனுடைய தோளிலேயிறக்கி, பஞ்சதருக்கள் பொருந்திய வானநாட்டையுடைய இந்திரனும், அழகையுடைய தண்ணிய பெருமைபொருந்திய தாமரைமலரில் வாழும் பிரமதேவரும், இலக்குமி நாயகராகிய திருமாலும் (ஆகிய இவர்களது) நகரங்களின் மேல் (கிரீடம்போலப்) பொலிவுற்றுவிளங்கும், திருவெண்ணீற்றைச் சந்தனம்போலப்பூசியருளிய புண்ணியவடிவாயுள்ள ஒப்பில்லாத சிவபெருமானுடைய சிவநகரமடைந்தனன். எ-று.

புவலோகமுதல் திருமாலுலகமிறுதியாகிய எல்லாவுலகங்களுக்கும் மேலிருத்தலால், சிவலோகத்தைப் "புரத்தின்மேற்பொலிந்தோங்குந்தனிமுதனகர்" எனக் கூறினர். (உ)

*கண்ண கன்புவி யிராசசே கரன்பொதுக் கடிந்துசெங் கோலோச்சி*
*வண்ண வெண்குடை நிழற்றுவா னனந்த வடிவமாய்த் தனிமன்று*
*ளண்ண லாடிய திருநடத் தன்பினா லாடனூ லொழித்தேனை*
*யெண்ணு மூவிரு பத்துமுக் கலையுங்கற் றிறைமுறை செயுநாளில்*

(இ-ள்.) இடம்பரந்த நிலவுலகத்தை இராசசேகரபாண்டியன் பொதுத் தன்மையைநீக்கி (தனக்கேயுரியதாக்கி) செங்கோல்செலுத்தி, வெண்ணிறம் வாய்ந்த குடையால் (ஆன்மாக்கட்கு) நிழலைச்செய்பவன், இன்பமயமாய்ச் சமானமில்லாத

வெள்ளியம்பலத்தில் சோமசுந்தரக்கடவுள் நடித்தருளிய திருநடனத்தில் (தான்கொண்ட) அன்பினால், பரதநூல் (ஒன்றுமட்டுமே) ஒழித்து (அஃதொழிந்த) அறுபத்து மூன்று கலைகளையுங்கற்று அரசியலை மனுமுறையே செய்துவருநாளில். எ-று.

கலைஞானம் அறுபத்துநான்காதலின் "ஆடனூலொழித்தேனையெண்ணு மூவிருபத்து முக்கலையும்" என்றார். (௫)

சிலம்பி வாயினூ லிழைத்திடு பந்தரிற் செங்கண்மா றொழவ்வகு
மலம்பு தெண்டிரைப் பொன்னியந் தண்டுறை யானைக்கா விறைக்கன்பு
கலந்த சிந்தையான் மூவிரு பத்துநாற் கலைகளும்பயின் றுள்ள
மலர்ந்த வன்கரி கற்பெரு வளத்தவன் வையகம் புரக்கின்றான்

(இ-ள்.) சிலம்பிப்பூச்சியானது தனது வாயால் நூலினாற் செய்த பந்தலின் கீழ், செவ்விய (தாமரைமலர்போலுங்) கண்களையுடைய திருமால் பணியும்படி எழுந்தருளிய, சத்திக்குந் தெள்ளிய அலைகள் பொருந்திய காவிரிநதியின் அழகிய தட்பமாகிய துறையையுடைய திருவானைக்காவி லெழுந்தருளிய சம்புலிங்கேசுவரருக்கு அன்புகொண்ட மனமுடையவனும், அறுபத்துநான்கு கலைகளையுங்கற்று (அவற்றுள் ஐயந்திரிபு அறியாமையகல) மனந்தெளிந்தவனுமாகிய கரிகாற்பெருவளவன் (என்னும் பெயர்வாய்ந்த சோழன்) பூமியை (அதாவது சோழமண்டலத்தை அக்காலத்தில்) அரசுசெய்து வருவானாயினான். எ-று.

வையகம் என்றது ஈண்டுச்சோழநாட்டை யுணர்த்திற்று. அதன் எல்லையை,

"கடல்கிழக்குத் தெற்குக் கரைபொருவெள் ளாறு
குடதிசையிற் கோட்டைக் கரையாம் - வடதிசையில்
ஏணாட்டுப் பெண்ணை யிருபத்து நாற்காதஞ்
சோணாட்டுக் கெல்லையெனச் சொல்" என்பதனானறிக.

சிவபெருமான் சிலம்பிப்பூச்சி செய்த பந்தரில் வசித்தது என்றது.

திருவானைக்காவின் வாயுதிசையிலுள்ள சுவேதமலை [வெண்மலை] யினின்று ஒரு வெள்ளையானை யதேச்சையாய் அந்த ஞானபூமியில் வந்துசேர, உண்மையறிவு உண்டாகி ஆங்கு வெண்ணாவலின் கீழ் எழுந்தருளிய ஐம்புலிங்கமூர்த்தியைத் தரிசித்துப் பணிந்து புண்ணிய வசத்தால் "இப்பெருமானை இனிப்பூசித்து முத்தியடையவேண்டும்" என்று நினைத்து, காலந்தவறாமல் அங்கிருக்குந் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பத்திரபுட்பங்கொய்து தனக்குக்கிடைத்த காய்கனிகளைக்கொண்டு வந்து பெருமான் சந்நிதியைச் சுத்திசெய்து பூசித்துவந்தது. அப்படி யிருக்கையில் ஒருநாள் அருகிலிருந்த மரத்தில் வாழும் ஒரு சிலம்பிப் பூச்சிக்கு நல்வினைச்சம்பந்தம் வர, அம்மரத்தை விட்டு வெண்ணாவலில் வந்து தனக்கொரு வீடிழைத்து மேலுங் கீழும் இறங்கித்திரிந்து வாழ்கையில், அவ்விலிங்கமூர்த்தியைக் கண்டு உண்மையறிவு மூள "எம்பெருமானைப் பிரியேன்" என்று திருக்கோபுரம் திருமண்டபம் முதலியவற்றை, நூலாலிழைத்தது. என்பது இதனை, திருவானைக்காப்புராணம் கோசாரணியப்படலத்திற்காண்க.

கரிகாற்பெருவளத்தவன் என்றது.

இவன் இளமையில் ஒருமுனிவராற்காக்கப்பட்டவன். அப்பொழுது உறையூர் மண்மாரியாலழிந்தமையின் மந்திரி முதலானோர் அதனை மீண்டும் திருத்தி அரசனில்லாமையால் ஆலோசித்து ஒருயானையை அனுப்ப, அது அம்முனிவரிருக்கையை யடைந்து அச்சிறுவனை யெடுக்க வலியின்றித் திகைத்து நின்றது. அது கண்ட அச்

சிறுவனோடு விளையாடிய முனிசிறுர் சென்று, சோழன் பெருமாட்டியிடம் அதனைக் கூற, அவள் மனங்கலங்கி முனிவர்பாற்சென்று "யான் காவிரியா லொதுக்கப்பட்டதுமுதல் இதுவரையில் இடையூறின்றி யிருந்தேன். உம்மாற் பாதுகாத்துவரப்பட்ட எனது சிறுவன் பெருந்துன்பமுற்றனன்" என நிகழுஞ்செய்தி கூறவும், அம்முனிவர் கேட்டு "உன்புதல்வனுக்குப் பெருவாழ்வு வரும். பயப்படாதே. அவன் காலிற் கரிக் கோடிடு" என்று கூறிவிடுப்ப, அவ்வாறே செய்ய, அவன் வலிகுறைந்தமையால் அந்த யானை அவனை யெடுத்துக்கொண்டுபோய்ச் சிங்காதனத்தில் வைத்தது. இந்தக் காரணத்தால் இவன் கரிகால்வளவன் எனப் பெயரெய்தினன் (வளவன்=சோழன்) இவ்விருத்தாந்தத்தை, சேவ்வந்திப்புராணத்திற்காண்க. (௪)

பொன்னி நாடவன் வாயிலுள் ளாரொரு புலவன்வந் தலர் வேம்பின்
கன்னி நாடனைக் கண்டுமுன் பரவுவான் கனைகழற் கரிகாலெம்
மன்ன வற்கறு பத்துநாற் கலைகளும் வரும்வரா துனக்கொன்று
தென்ன ரேறனை யாயது பரதநூ றெரிந்திலை யெனச்சொன்னான்.

(இ-ள்.) காவிரிநதியைத் தனது நாட்டிலுடைய கரிகாற்பெருவளவனது வாயிலிலுள்ள ஒரு புலவன் (பாண்டிநாட்டில்) வந்து, மலர்ந்த வேப்பமாலை யணிந்த பாண்டிநாட்டையுடைய இராஜசேகரபாண்டியனைக் கண்டு முன்னேநின்று புகழ்கின்றவன், சத்திக்கின்ற வீரக்கழலணிந்த எமது கரிகாற்பெருவளவனுக்கு அறுபத்து நான்கு கலைகளுங் கைவரும். பாண்டியருள் ஆண்சிங்கத்தைப்போன்ற இராஜசேகர பாண்டியனே! உனக்கு (அக்கலைகளுள்) ஒன்று கைவராது. அது (எக்கலை யென்னில்) பரதநூல் (அதனைக்) கற்றறிந்திலை யென்று சொன்னான். எ-று.

பொன்னி - பொன்னையுடையது. (௫)

கேட்ட மீனவன் மறுபுல விஞ்சையன் கிளத்துசொல் லிகன்மான
மூட்ட வாகுல மூழ்கிய மனத்தனுப் முதுமறைச் சிரமன்று
ணூட்ட மூன்றுடை நாயக னாடலை நானுமா டுதற்குள்ளம்
வேட்ட தேகொலா மிதுவுமெம் பிரானருள் விதியென வதுகற்பான்.

(இ-ள்.) (அவ்வாறு சொல்ல) கேட்ட இராசசேகரபாண்டியன், மறுநாட்டில் வசிக்குங் கவிஞன் கூறியவார்த்தையானது பகைமையையும் மானத்தையும் மூள்விக்க, துன்பத்தில் முழுகிய சித்தத்தையுடையவனாகி, பழமையாகிய வேதத்தின் உச்சியாகவிளங்கும் வெள்ளியம்பலத்தில் திரிநேத்திரங்களையுடைய சோமசுந்தரப்பெருமான் திருநடனத்தை நானும் நடித்துக் கற்றற்கு மனம்விரும்பியதேயாம். இவ்வெண்ணமும் எமதுபெருமானுடைய திருவருளின் கட்டளை யென்று, அப்பரதநூலைக் கற்கும் பாண்டியன் எ-று.

இயற்கையாகவே பாண்டியருக்குஞ் சோழருக்கும் பகைமை யுள்ளமையின் அச்சோழனுடைய வாயில் வித்துவான் அவனைத் தன்முன்னே புகழ்ந்துரைத்த வார்த்தை தனக்குத்துன்பம் விளைத்ததென்பது தோன்ற "மறுபுல விஞ்சையன் கிளத்து சொல் லிகன்மான மூட்ட வாகுல மூழ்கிய மனத்தனுப்" என்றார். (௬)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆடனூல் வரம்பு கண்டவ ராகி யவ்வழி யாடலும் பயின்ற
நாடக நடைதேர் புலவரைத் துருவி நண்ணிய வவர்க்கெலா மகிழ்ச்சி[ துப்
வீடறுஞ் சிறப்பா லறுவையும் பூணும் வெறுக்கையும் வெறுத்திடக் கொடுத்
பாடல்வண் டரற்றுந் தாரினன் பரதப் பனுவலுங் கசடறப் பயில்வான்.

(இ-ள்.) பண்பாடுதலையுடைய வண்டுகள் ஒலிக்கும் (வேப்பமலர்) மாலையணிந்த இராசசேகரபாண்டியன், பரதநூலை அளவுகண்டவர்களாகி அவ்வகையே நடித்தலையுங்கற்றுணர்ந்தநாடகநடையின் தேர்ச்சியையுடைய கவிஞரைத்தேடி, வந்த அவர்களுக்கெல்லாம் மகிழ்ச்சி யொழியாத அருஞ்சிறப்புடன் ஆடையும் ஆபரணமும் பொன்னும் அவாவடங்கக் கொடுத்து, பரதநூலையுங் குற்றமறக்கற்பானாயினன்.

விஷயஞானமின்றி வாசாஞானம் பயன்தருதலில்லையாதலின், ஆடல் நூலைக் கற்றல் மாத்திரமே யமையாதென்பார் "ஆடல்நூல் வரம்பு கண்டவராகி யவ்வழியாடலும் பயின்ற" என்றும், "தன்மக னாசான் மகனே மன்மகன் - பொருணனி கொடுப்போன் வழிபடுவோனே-உரைகோ ளாளற் குரைப்பது நூலே" என்றபடி அவர்கள் தனக்குக் கரவாது கற்பிக்கவேண்டுவது கருதி "மகிழ்ச்சி வீடருஞ் சிறப்பால் அறுவையும் பூணும் வெறுக்கையும் வெறுத்திடக் கொடுத்து" என்றுங்கூறினர்.

பாவமோ டராகந் தாளமிம் மூன்றும் பயின்றிடு முறையினாற் பரத
மாவயி னங்க முபாங்கமே பிரத்தி யாங்கமே யலர்முக ராக
மோவறு சீர்சால் கரப்பிர சார முவமையில் சிரக்கர கருமந்
தாவறு கரகேத் திரங்கர கரணந் தானக மேசுத்த சாரி.

(இ-ள்.) பாவகத்துடனே இராகமுந் தாளமுமாகிய இந்த மூன்றனையும் முறைப்படி யுரைப்பது பரதநூல். அந்நூலினிடத்து அங்கமும், உபாங்கமும், பிரத்தியாங்கமும், தன்மைமிக்க முகராகமும், கெடுதலற்ற சிறப்புமிக்க கரப்பிரசாரமும், ஒப்பில்லாத சிரக்கரகருமமும், ஒழிதலில்லாத கரகேத்திரமும், கரகரணமும், தானகமும், சுந்தசாரியும். எ-று.

இதுமுதல் எழுபாடல்கள் ஒருதொடர்.

"பாவமோடராகந்தாளமிம்மூன்றும் பயின்றிடுமுறையினாற்பரதம்"—இது பாவராக தாளங்களை யுணர்த்தலின் அவற்றின் முதலெழுத்துக்களின் இலச்சினையாற் போந்த காரணப்பெயராம். அவற்றுள் பாவம் - உள்ளக் கருத்தைப் பிறருக்குணர்த்தல். இராகம் - ஓசையின் வேறுபாடு. தாளம் - மேற்கூறிய பாவராகங்கட்கு ஒத்திருக்கும்படி யிசைக்குமோசை.

பரதமென்னும் நூற்பெயரின் உட்கிடையை

"பகரமே பிரமன் மாயன் பண்பென்பர் ரகரந் தன்னைத்
தகரமே யீசன் மவ்வே சத்தியின் கூற தாகும்
அகரமே பிரமஞ் செய்த லளித்தல்பின் னழித்த லென்றே
சிகரமார் மலய வெற்பின் செந்தமிழ் முனிவன் சொன்னான்" என

வரும் பரதநூற் செய்யுளா னுணர்க.

## பாவம்.

பதாகைக்கை-திரிபதாகைக்கை-பிறைக்கை-சர்ப்பசிரக்கை-சாலையக்கை-மான்றலைக்கை-பத்மகோசக்கை-சிலீமுகக்கை - தேசிமுட்டிக்கை - சிகரக்கை - சூசிகக்கை-கபித்தக்கை-கடகக்கை - சந்தாங்கிசக்கை - அன்னவாய்க்கை - முகிழ்க்கை-திரிலிங்கக்கை - மிருகசிரக்கை - சிங்கநகக்கை - கூர்மக்கை - பூரணக்கை - மென்னிலைக்கை-முன்னதக்கை - அஞ்சலிக்கை-புஷ்பாஞ்சலிக்கை-தாடனக்கை-பதாகைக்கை-சங்கற்பக்கை-டோளக்கை-உற்சங்கக்கை - உபசாரக்கை - அபயவரதக்கை-மகரக்கை - கருடக்கை - பாரதிக்கை-கலகக்கை - சுபசோபனக்கை - பற்மமுகிழ்க்கை-

மல்லயுத்தக்கை-பதாகைசோத்திகக்கை-கத்திரிசோத்திகக்கை என *நாற்பத்தோரு வகைக் கரலக்ஷணமும், சமசிரம்-கம்பிதசிரம்-ஆகம்பிதசிரம்-துதசிரம்-விதுதசிரம்-உக்கிதசிரம்-நிகுஞ்சிதசிரம்-அதோமுகசிரம் - கந்தானனசிரம் - அனுக்குசிரம் எனப் பத்துவகைச் சிரலக்ஷணமும், சமபதம்-மண்டிலபதம்-குஞ்சிதபதம்-அஞ்சிதபதம்-வடிப்புப்பதம்-தாடிதபதம் - நாகபந்தபதம் - சாடகதிப்பதம் - நிருத்தமூர்த்தபதம் - கருடநிலைப்பதமெனப் பத்துவகைப் பதலக்ஷணமும், காந்தைக்கண் - பயாநகக் கண்-கருணைக்கண் - மூடாம்பரக்கண் - அற்புதக்கண் - வீரக்கண் - நகைக்கண் என எழுவகை நேத்திரலக்ஷணமும், பெருநகைரசம்-சோகரசம்-கருணைரசம் - வீரரசம்-அச்சரசம்-சாந்திரசம்-அற்புதரசம் - ரௌத்திரரசம் - சிங்காரரசம் என நவவகை ரசலக்ஷணமும், பற்மகோசக்கையாலாகிய இனிப்பும், பிறைக்கையாலாகிய துவர்ப்பும், சாளையக்கையாலாகிய காரமும், முஷ்டிக்கையாலாகிய கைப்பும், பதாகைக் கையாலாகிய புளிப்பும், அன்னவாய்க்கையாலாகிய உவர்ப்பும் என அறுவகைச் சுவைலக்ஷணமும் உணர்த்துவதாம். இதனை,

பரதம் (சூ) "பாவ வியலிற் பகர்வித முறைக்கின்
ஓவறு கரவகை யொன்றுமுன் றற்பான்
மூர்த்தினி பதமீ ரைந்தென மொழிப
நேத்திர மெழுவகை யாமென நிகழ்த்துவர்
நவரச பேத நாட்டமொன் பானே
சுவைவகை யாறெனச் சொற்றனர்புலவர்" என்பதனாலறிக.

இனி மேற்கூறியவற்றுள் சிரவகை:—சமம் - உத்வாஹிதம் - அதோமுகம்-ஆலோளிதம்-துதம்-கம்பிதம்-பராவ்ருத்தம் - உத்க்ஷிப்தம்-பரிவாஹிதம் என ஒன்பது வகையென்றும், நேத்திரவகை—சமம்-ஆலோகிதம் - ஸாசீ-ப்ரலோகிதம்-நிமீலிதம்-உல்லோகிதம்-அநுவ்ருத்தம் - அவலோகிதம் என எண்வகையெனவும்கூறுதல் மரபு. இதனை நந்திகேசுவரப்ரோக்தம்.

ஶ்லோ॥ ஸமமுத்வாஹிதமதோமுகமாலோலிதம் துதம்
கம்பிதஞ்ச பராவ்ருத்தமுத்க்ஷிப்தம் பரிவாஹிதம்
நவதா கதிதம் ஶீர்ஷம் நாட்யஶாஸ்த்ரவிசக்ஷணை:॥ எனவும்,

ஶ்லோ॥ ஸமமாலோகிதம் ஸாசீ ப்ரலோகித நிமீலிதே
உல்லோகிதாநுவ்ருத்தே ச ததா சைவாவலோகிதம்
இத்யஷ்டௌ த்ருஷ்டிபேதா: ஸ்யு: கீர்த்திதா பரதாதிபி: ॥ எனவும் வருவனவற்றானறிக.

## இராகம்.

பைரவி-தேவகிரியை-மேகவிரஞ்சி-குறிஞ்சி-பூபாளம்-வேளாவளி-மலகரி-கௌளி-சீராகம்-இந்தோளம்-பல்லதி-சாவேரி-படமஞ்சரி-தேசி-இலலிதை-தோடி-வசந்தம்-இராமக்கிரியை-வராளி-கைசிகம்-மாளவி-நாராயணி-குண்டக்கிரியை-கூர்ச்சரி-பங்காளம்-தன்னியாசி-காம்போதி-கௌளி - நாட்டை-தேசாட்சரி - காந்தாரி-சாரங்கம் என முப்பத்திரண்டு. இவற்றில் பைரவி-புருடராகம் பிராமணஜாதி. இதின்

* கரவகை நாற்பத்தொன்றில் பதாகைமுதல் முன்னதம் இறுதியாகிய இருபத்துமூன்றும் ஒற்றைக்கையெனவும், அஞ்சலிமுதல் கத்திரிசோத்திகம் இறுதியாகிய பதினெட்டும் இரட்டைக்கை எனவுமுணர்க.

மனைவிகள் தேவகிரியை-மேகவிரஞ்சி-குறிஞ்சி; இதின் அதிதேவதை ஈசன். பூபாளம்-புருடராகம் பிராமணஜாதி; இதின் மனைவிகள் வேளாவளி-மலகரி-பௌளி; இதின் அதிதேவதை திருமால். சீராகம்-புருடராகம் க்ஷத்திரியஜாதி; இதின் மனைவிகள் இந்தோளம்-பல்லதி-சாவேரி; இதின் அதிதேவதை சரசுவதி. படமஞ்சரி-புருடராகம் க்ஷத்திரியஜாதி; இதின் மனைவிகள் தேசி-இலலிதை-தோடி; இதின் அதிதேவதை இலக்குமி. வசந்தம்-புருடராகம் வைசியஜாதி; இதின் மனைவிகள் இராமக்கிரியை-வராளி-கைசிகம்; இதின் அதிதேவதை சூரியன். மாளவி - புருடராகம் வைசியஜாதி; இதின் மனைவிகள் நாராயணி-குண்டக்கிரியை-கூர்ச்சரி; இதின் அதிதேவதை நாரதர். பங்காளம் - புருடராகம் சூத்திரஜாதி; இதின் மனைவிகள் தன்னியாசி-காம்போதி-கௌளி; இதின் அதிதேவதை விநாயகர். நாட்டை-புருடராகம் சூத்திரஜாதி; இதின் மனைவிகள் தேசாட்சரி - காந்தாரி-சாரங்கம்; இதின் அதிதேவதை தும்புரு. இவையேயன்றிப் பலவகைப்பட வழங்குவனவுமுண்டு.

இனி இவ்விராகம் இடம் செய்யுள் குணம் காலம் என்னுந் தகுதிபற்றி நான்குவகைப்படும். இவற்றுள் இடம்பற்றிய ராகம் ஐந்திணை இராகம்.

செய்யுள் பற்றியராகத்துள் வெண்பா சங்கராபரணம், அகவல் தோடி, கலி பந்துவராளி, கலித்துறை பைரவி, தாழிசை தோடி, விருத்தம் கல்லியாணி காம்போதி மத்தியமாவதி முதலியன. உலா சௌராட்டிரம், தோடையும் சௌராட்டிரம் நாட்டை, மங்களம் மங்களகௌசிகம், தேவாரம் பூபாளம், பிள்ளைக்கவி கேதாரகௌளம், பரணி கண்டாரவம்.

குணம்பற்றிய ராகத்துள் இரக்கம்-ஆகரி, கண்டாரம், நீலாம்புரி, பியாசடை, புன்னாகவராளி. துக்கம்-இரக்கத்திற்குரியனவன்றி வராளி முதலியன. மகிழ்ச்சி-காம்போதி, சாவேரி, தன்னியாசி. யுத்தம்-நாட்டை.

காலம்பற்றிய ராகத்துள் வசந்தம் - காம்போதி, அசாவேரி, தன்னியாசி. மாலைக்காலம்-கலியாணி, காபி, கன்னடம், காம்போதி. யாமம்-ஆகரி. விடியல்-இந்தோளம், இராமகலி, தேசாட்சரி, நாட்டை, பூபாளம். உச்சி-சாரங்கம், தேசாட்சரி (அன்றியும்) ஆகரி, இந்தோளம், இராமகலி, சாரங்கம் பூபாளம் நீக்கி நின்ற மற்றவை எக்காலத்தும் பொதுமைய.

## தாளம்.

சச்சற்புடம்-சாசபுடம்-சட்பிதாபுத்திரிகம்-சம்பத்துவேட்டம் - உற்கடிதம் என ஐவகைப்படும். இவற்றுள் சச்சற்புடமாவது குரு - உ, இலகு-க, புதலும் க 8 8 । 8 ஆ மாத்திரை-அ. இஃதீசனுடைய சத்தியோசாதமுகத்திற் பிறந்தது; பிரமசாதி. சாசற்புடமாவது குரு-க, இலகு - உ, குரு-க. 8 । । 8 ஆ மாத்திரை - சு. இஃதீசனுடைய வாமமுகத்திற்பிறந்தது; க்ஷத்திரியசாதி. சட்பிதா புத்திரிக மாவது புலுதம்-க,இலகு-க, குரு - உ, இலகு - க, புலுதம் - க. 8 । 8 8 । 8 ஆ மாத்திரை கஉ. இஃதீசனகோரமுகத்திற் பிறந்தது; வைசியசாதி. சம்பத்துவேட்ட மாவது புலுதம்-க, குரு-ங, புலுதம்-க. 8, 8 8 8, 8 ஆ மாத்திரை- கஉ. இஃதீசனுடைய தற்புருடமுகத்திற்பிறந்தது; சூத்திரஜாதி. உற்கடிதமாவது குரு - ங. 8 8 8 ஆ மாத்திரை - சு. இஃதீசனது ஈசானமுகத்திற் பிறந்தது. சங்கரஜாதி.

இத்தாளங்களின் பிறப்பிடங்களை

" தத்தத்தீந் தொந்தமெனத் தாண்டவஞ்செய் கின்றசபை
அத்தர்முக மைந்தனிட மாமுறையே - உற்கடிதம்

சம்பத்து வேட்டமுடன் சட்பிதா புத்திரிகம்
சச்சபுடஞ் சாசபுட மாம்" என மாற்றிக் கூறுவதுங் கொள்க. இப் பஞ்சதாளங்களேயன்றி, துருவம்-மட்டியம்-உருபகம்-சம்பை-திரிபுடை-அடதாளம்-ஏகதாளம் என ஏழுவகையாகவும், அரிதாளம்-அருமதாளம்-சமதாளம்-சயதாளம்-சித்திரதாளம்-துருவதாளம் - நிவிர்த்ததாளம் - படிமதாளம் - விடதாளம் என நவசந்தி தாளம் ஒன்பதுவகையாகவும், இன்னும் பல பேதப்படவும் வழங்கும். இனி, **தாளப் பிரமாணம்** காலம்-மார்க்கம்-கிரியை-அங்கம்-கிரகம்-சாதி-களை - இலயை-யதி-பிரத்தாரம் எனப்பத்துவகை. **காலப்பிரமாணம்** :—தாமரைமலரிதழ்நூறடுக்கி அதிலோரிதழில் ஊசி செலுத்துங்காலம் கணம். கணம் எட்டுக்கொண்டது இலவம்-இலவம் எட்டுக்கொண்டது காட்டை. காட்டை எட்டுக்கொண்டது நிமிஷம். நிமிஷ மெட்டுக்கொண்டது துடி. துடி இரண்டுகொண்டது துரிதம். துரிதம் இரண்டுகொண்டது இலகு. இலகு இரண்டுகொண்டது குரு. இலகு மூன்றுகொண்டது புலுதம். குரு இரண்டுகொண்டது காகபதம். **மார்க்கம்** :—தக்கணம் எட்டு மாத்திரை ஓர் களையாகக்கொண்டது. வார்த்திகம் நான்குமாத்திரை. சித்திரம் இரண்டுமாத்திரை. சித்திரதரம் ஒருமாத்திரை. அர்த்தசித்திரம் அரைமாத்திரை. அதிசித்திரம் கான்மாத்திரை என ஆறுவகைப்படும். **கிரியை** :—மார்க்கம், தேசிகம் என இருவகைப்படும். **அங்கம்** : ◡,০ | ३ ऽ + இவை முறையே பிறை - மதி-கணை-வில்-பாம்பு-புள்ளடி இவற்றின் பெயர் அநுதுரிதம்-துரிதம்-இலகு-குரு-புலுதம்-காகபதம் என அங்கம் அறுவகைப்படும். இதனை

"பிறைமதிகோல் விற்பாம்பு பேசுபுட்கா லங்கம்
அறையு மநுதுரிதந் துரிதம் - முறையிலகு
வாகுங் குருபலுத மாங்கரண்டக் காலென்பர்
பாகுமொழி யாயிவற்றின் பண்பு" என்பதனுனறிக. **கிரகம்** :—குரல் முன்னுந் தாளம் பின்னும் வருவது அதீதம். தாளமுன்னுங் குரல் பின்னும் வருவது அநாகதம். குரலுந் தாளமும் ஒத்து வருவது சமம். குரலுந் தாளமு முன்னும் பின்னுங் கலந்து வருவது விடமம் என நான்குவகைப்படும். **சாதி** :—சதுரசிரம் - திரிசிரம்-மிசிரம்-கண்டம்-சங்கீரணம் என்னப்படும் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர சங்கரஜாதிகளாக முற்கூறிய இலகு அக்கரங்களால் அறியத்தக்கது. இது ஐந்துவகைப்படும்.

சூ—"சதுரசிர திரிசிர மிசிரங் கண்டம்
சங்கீ ரணமிவை சாற்றிடு மைந்தும்
மறையோர் மன்னவர் வைசியர் சூத்திரர்
அறையுறு சங்கிரம சாதி யாகும்" என்பதனுனறிக.

**களை** :—அக்கரகாலமாயும் கிரியையோடும் வருவது ஏககளை. இதனை இரட்டித்துக் கிரியையோடுவருவது துவிகளை. இதனை இரட்டித்துக் கிரியையோடு வருவது சதுர்க்களை என்பர் இது மூன்றுவகைப்படும். **இலயை** :—அக்கர காலமாய்க் கிரியையோடு வருவது விளம்பம். இதை இரட்டித்துக் கிரியையோடு வருவது மத்திமம். இதை இரட்டித்துக்கிரியையோடு வருவது துரிதம். என மூன்றுவகைப்படும். **யதி** :—நெட்டங்கமாயினுங் குற்றங்கமாயினும் ஒரேவகையாய் வருவது சமயதி. ◡◡, ||, எல்லா அங்கமுங் கிரமமின்றிக் கலந்துவருவது விடமயதி. ३◡০. முதலிலுங் கடையிலும் குற்றங்கமும் இடையில் நெட்டங்கமும் வருவது மிருதங்கயதி. ◡০३০◡. முதலிலுங் கடையிலும் நெட்டங்கமும் இடையிற் குற்றங்கமும் வரு

வது வேதமத்திய யதி. | ◡ |. முதலில் நெட்டங்கமும் இறுதியில் குற்றங்கமுமாய் நேர்ந்துவருவது கோபுச்சயதி. ஓ | o◡. முதலிலே குற்றங்கமும் இறுதியில் நெட்டங்கமுமாய் வருவது சுரோதோவகயதி ◡ o | ஓ ஓ. என ஆறுவகைப்படும். மற்றையவற்றை விரிநூல்களிற் காண்க.

அங்கம் உபாங்கம் பிரத்தியாங்கம் என்பனவற்றை,

ஶ்லோ॥ ஶிரோ ஹஸ்தௌ கக்ஷௌ பார்ஶ்வௌ கடிதடௌ ததா
பாதாவிதி ஷடங்காநி க்ரீவாமப்யபரே ஜகு:॥

என்றது அங்கநாட்டியத்திலே சிரம் கரங்கள்-பக்ஷம் - புக்கம் - கடிதடம்-பாதம் இவ்வாறும் அங்கமெனப்படும். [கண்டத்தையும் உடன்கொள்வதுமுண்டு]

ஶ்லோ॥ ஸ்கந்தௌ பாஹூ ததா ப்ருஷ்டம் ததோதரம்।
ஊரு ஜங்கே ஷடித்யேதே ப்ரத்யங்காநி மணிபந்தகௌ।
ஜாநுநீ கூர்பராவிதி த்ரயமப்யதிகம் ஜகு:।

என்றது பிரத்தியங்க நாட்டியத்திலே தோள்கள் புஜங்கள் புஷ்டம் வயிறு தொடை கணைக்கால்முதலிய இவ்வாறும் பிரத்தியங்கங்கள். [சிலர் மணிக்கட்டுகள் முழங்கால்கள் முழங்கைகள் சஹிதமாக பிரத்தியங்கமென்பர்.]

ஶ்லோ॥ த்ருஷ்டி ப்ரூபுட தாராஶ்ச கபோலௌ நாஸிகா ஹநூ:।
அதரோ தஶநா ஜிஹ்வா சுபுகம் வதநம் ததா॥
உபாங்காநி த்வாதஶைதே ஶிரஸ்யங்காந்தரே ததா।
பார்ஷ்ணிகுல்பௌ ததாங்குல்ய: கரயோ: பதயோஸ்தலே।
ஏதாநி பூர்வஶாஸ்த்ராநுஸாரேணோக்தாநி வை மயா॥
ஸ்கந்தாநாஞ்சலநாதேவ ப்ரத்யங்கோபாங்கயோரபி। என்றது,

உபாங்கநாட்டியத்திலே பார்வை - கண்ணிமை - கருவிழி - கவுள் - நாசி கன்னம் - உதடு - பல் - நா - மோவாய் - முகம் - சிரசு - இப்பன்னிரண்டும் உபாங்கங்கள். [சிலர் பக்கம் - பரடு - கைவிரல் - கால்விரல் - கைத்தலம் - காற்றலங்களும் உபாங்கமென முற்காலத்தவர் கூறுவார்.] அங்கங்கள் சலித்தலினாலேயே பிரத்தியங்க உபாங்கங்களுஞ் சலிக்கும்.

எனவரும் நந்திகேஸ்வரப்ரோக்த பரதசாஸ்திரங்களானறிக. (அ)

விண்டிடாத் தேசி சாரியே நியாயம் விருத்தியே பிரவிசா ரம்பூ
மண்டல முடனு காசமண் டலமே மாசில்சுத் தக்கர ணஞ்சீர்

☞ இதுமுதல் எழுசெய்யுள்களால் நடனலக்ஷணங் கூறுகின்றார். இவற்றை நன்குவிளக்கத்தக்க கருவிநூல் செந்தமிழ்நடையில் ஒன்றுங்கிடைத்திலது. நந்திகேஸ்வர பரதம் - நந்திகேஸ்வர அபிநயம் - சொக்கர் பரதமுதலிய சிறந்த நூல்களை வெருவாய் முயன்றதில் நந்திகேஸ்வர அபிநயத்திற் சிறிதுபாகமும் சொக்கர் பரதத்தின் ஒருபகுதியும் விரைவில் அனுப்புவதாக எமது நண்பர் ஒருவர் உறுதிமொழி அளித்திருக்கின்றனர். அவை இந்நூல் முடிவுபெறுமுன்னர் கிடைப்பின் கூடியவரையில் இவ்விடத்திற்கு வேண்டியவற்றைத் தனியே வெளியிட்டு, அந்நூல்களையும், பிரத்தியேகமாக வெளியிடுவோம்.

கண்டவுற் புலித கரணமே யங்க காரமே யிரேசித மென்னக்
கொண்டநா லைந்து பேதமுங் கற்றுக் கோதறப் பயின்றபி னவற்றுள்.

(இ-ள்.) நீங்காததேசிசாரியும் நியாமும் விருத்தியும் பிரவிசாரமும் பூமண்டலத்துடன் ஆகாசமண்டலமும் குற்றமில்லாத சுத்தக்கரணமும் சிறப்பமைந்த உற்புலித கரணமும் அங்ககாரமும் இரேசிதமுமென்று சொல்லப்படும் இருபது பேதங்களாகிய (பொது) இலக்கணங்களையுங் கற்று, குற்றமறப் பழகியபின்னர், அவற்றுள்.

வருத்தமின் மனோபா வாதியா மெட்டு வகைநிருத் தங்களிற் சாரி
நிருத்தமா கியதாண் டவமக மார்க்க நிகழ்த்திடு தேசியே வடுகே
யருத்தமா கியசிங் களமென மூன்று மதுநிலை யாறுமூ விரண்டுந்
திருத்தமாம் பதமுந் திகழிரே காதி செப்பிய வங்கமீ ரெட்டும்.

(இ-ள்.) வருத்தமில்லாத மனோபாவம் முதலாகிய எண்வகை நடனங்களில், சாரி நடனமாகிய தாண்டவம் அகமார்க்கமாம். சொல்கின்ற தேசிகக்கூத்தென்றும் வடுகுக்கூத்தென்றும் பொருளமைந்ததாகிய சிங்களக்கூத்தென்றும் மூவகையாம். அதன்பேதங்கள் பன்னிரண்டு வகையாம் திருத்தமாகியபதங்களும் விளங்குகின்ற இரேகைமுதலாகச் சொல்லப்பட்ட பதினாறு அங்கங்களும். எ-று.

ஆறுமூவிரண்டும் என்றதை ஆறும் மூவிரண்டும் எனச் சொல்வகைசெய்க.

தாண்டவம் நிருத்தம் என்னுமிரண்டும் அகக்கூத்து. இந்த அகக்கூத்து அல்லியம், கடையம், பேடு, மரக்கால், குடை, குடம், துடி, மல்லாடல், பாவை, பாண்டரங்கம், கொடுகொட்டி என்ப் பதினொருவகைப்படுமென்பர். அவற்றுள் அல்லியம் - கிருஷ்ணமூர்த்தி தன்மேற் கஞ்சனனுப்பிய யானையின் கொம்பை முறித்தபோது ஆடிய ஆட்டம். கடையம் - இந்திராணி வாணாசுரனது வடக்குவாயிலில் ஆடியது. பேடு - காமன் தன்மகனை வாணன் சிறையிட்டபொழுது அவனை மீட்கப் பெண்கோலங்கொண் டாடியது. மரக்கால் - அசுரர்கள் போர்செய்யமுடியாமல் பாம்பு தேள் முதலிய வஞ்சவடிவேற்று வருகையில், துர்க்கையுணர்ந்து மரக்கால் கொண்டாடியது. குடை - முருகக்கடவுள் தன்னுடன் போர்செய்ய ஆற்றாத அசுரர் புறங்காட்டியோடக் குடையைச் சாய்த்து ஆடியது. குடம் - வாணன் அநிருத்தனைச் சிறையிட்டபொழுது திருமால் குடத்தின்மேல்நின் றாடியது. துடி - சூரன் வேற்றுருவாகிச் சமுத்திரத்து நின்றபொழுது அதனைக் கடத்தற்குத் துடிகொட்டியாடியது. மல்லாடல் - திருமால் வாணாசுரனை வெல்ல மல்லனாய்ச் சென்று ஆடியது. பாவை - இலக்குமி அசுரர் போரொழிந்து மோகிக்க மோகினிவடிவாயாடியது. பாண்டரங்கம்-திரிபுரதகனத்தில் இரதசாரதியாயிருந்த பிரமன் கலைமகளது பிரிவாற்றாது வருந்தக்கண்ட இறைவன் அதனைநீக்க ஆடியது. கொடுகொட்டி - திரிபுரதகனஞ்செய்த மயானத்தில் உமையவள் தாளம்பணிக்க இறைவன் கைகொட்டி யாடியது என்பர்.

அல்லியம்ஆறங்கமும், கடையம்ஆறங்கமும், பேடு நான்கங்கமும், மரக்கால் நான்கங்கமும், குடை நான்கங்கமும், குடம் ஐந்தங்கமும், துடி ஐந்தங்கமும், மல்லாடல் ஐந்தங்கமும், பாவை இரண்டங்கமும், பாண்டரங்கம் ஆறங்கமும், கொடுகொட்டி நான்கங்கமுமுடையன என்பர்.

புறக்கூத்து புறமார்க்கமெனப்படும். அது பெருநடை பிரமரிமுதலாகப் பலதிறத்தன. சாந்திக்கூத்து விநோதக்கூத்து என்னும் இருவகைக் கூத்தில் சாந்திக் கூத்தில் தேசி, வடுகு, சிங்களமென்னும் மூன்று கூத்துகளும் அடங்கும். சாந்திக் கூத்து சொக்கம், மெய், அபிநயம், நாடகம்என நான்குவகைப்படும். அவற்றுள் சொ

க்கம் என்பது சுத்தநிருத்தம் அது நூற்றெட்டுக் கரணமுடையது. தேசி, வடுகு, சிங்களம் இம்மூன்றும் மெய்த்தொழிற் கூத்துகள். கரசிரமுதலியன அங்கங்களாதலின் மெய்த்தொழிற்கூத்து. இவற்றின் இலக்கணங்கள் முன்கூறினும். (௧௦)

நால்வகைத் தாகுங் கரணமு மேலோர் நாட்டிய விருவகைக் கரமுங்
கால்வகை புரிகை முதற்பதி னாறுங் கவான்மனை யாதியா மிரண்டு
பாலது மடிப்பு வகையெழு நான்கும் பழிப்பறு சுத்தசா ரியெனு
மேனாறு பூசா ரிகள்பதி னாறு மிதனுணைக் ககனசா ரிகளும்.

(இ-ள்.) நான்குவகைப்பட்ட கரணமும், மேலோர் நிலைநிறுத்திய இருவகைப்பட்டகரங்களும் தால்வகையும் செய்யப்பட்ட கைமுதலிய பதினறுவகைகளும், கவான் மனைமுதலாகிய இரண்டும், பகுப்பினையுடைய இருபத்தெட்டு மடிப்புவகைகளும் பழிப்பற்ற சுத்தசாரியென்னும் மேன்மைமிக்க பூசாரிகள் பதினறுவகைகளும், இவ்வளவினவாகிய ககனசாரிகளும். எ-று.

இரண்டுகரம் - எழிற்கை தொழிற்கையென்பன. (௧௧)

ஏற்றதிக் கிராந்த மாதியா முப்பத் திருவகைத் தேசிசா ரிகளுங்
காற்றினுங் கடுந்தேர்ச் சக்கர முதலாங் ககனசா ரிகைகளே யைந்துஞ்
சாற்றுவித் துவற்பி ராந்தமா தியவாஞ் சாரிபத் தொன்பது மாகப்
போற்றிவை யனைத்து முட்படப் புட்ப புடத்திலக் கணமுதற் பொருள்கள்.

(இ-ள்.) பொருந்திய திக்கிராந்தமுதலிய முப்பத்திரண்டு வகைப்பட்ட தேசிசாரிகளும், காற்றைக்காட்டிலும் மிகுதியாகிய வேகத்தையுடையதேர்ச்சக்கரம் முதலிய ககனசாரிகள் முப்பத்தைந்தும், சொல்லாநின்றவித்துவற்பிராந்த முதலாகிய சாரிபத்தொன்பதுமாக முற்கூறிய இப்பன்னிரண்டும் உட்படப் புட்பபுடத்தினிலக்கணங்களாகிய முதன்மையாயுள்ள பொருள்களாம். எ-று. (௧௨)

ஆசவாத் தியமுன் பொருண்முதற் களாச மாதியாம் பாடபே தங்கள்
பேசிய பதினை றெண்பதும் படக பேதமொன் றொழிந்தநா லைந்து
மாசறு மளக மாதியாம் பாட வகைகளு மேலெழுமற் றவற்றிற்
பூசல்வார்த் திகந்தொட் டைவகைச் சச்ச புடாதியாந் தாளமாத் திரையும்.

(இ-ள்.) ஆசவாத்தியமும் முன்பொருளும் முதலிய களாசம் முதலாகிய பாடபேதங்களென (ப்பரதநூலிற்) சொல்லப்பட்ட இருபத்தைந்தும், படகபேதங்கள் பத்தொன்பதும், குற்றமற்ற அளகம்முதலாகிய பாடவகைகள் இருபத்தெட்டும், அவற்றுள் பூசல் வார்த்திகந்தொட்டுச் சச்சபுடம் முதலாகிய தாளமாத்திரைகளும். ()

கிளந்தமாத் திரையின் கதிகளுஞ் சொல்லுங் கீதமும் பாடமு மெழுத்தும்
வளந்தரு மணிபந் தாதிகீ தத்தின் வகுத்தகட் டளையெழு நான்கு
மளந்திடு சரளை யாதிகட் டளையே யைந்துநன் கமைந்தபா வாதி
விளம்பிய மூன்று கலப்புமீ ளுக விளைத்திடுங் கூத்தக மார்க்கம்.

(இ-ள்.) சொல்லப்பட்ட மாத்திரையின் கதிகளும், சொற்களும், கீதங்களும், பாடங்களும், எழுத்துகளும், வளப்பமிக்க மணிபந்தம் முதலாகிய கீதத்தின் பாற் பிரித்த கட்டளைகள் இருபத்தெட்டும், அறுதிசெய்யப்பட்ட சரளைகள் முதலிய கட்டளைகள் முப்பத்தைந்தும், நன்ருகஅமைவுபெற்றபாவம்முதலாகக்கூறியமூன்று வகைச்சம்பந்தமு மீளுகச்செய்யுங் கூத்து அகமார்க்கமெனப்படும். எ-று.

மாத்திரைமுதலியவும் கட்டளைகளும் இன்னுஞ் சிலவும் முதலிற்சந்தித்த (அ-வது இலக்கச்) செய்யுளிற்கூறியவற்றையே கருவியாகக்கொண்டு பிறவற்றையும் வருமிடத்துணர்க. எ-று. (௧௪)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

உரைத்தவிக் கூத்துக் கற்கும் போதுதன் னுடம்பிற் சால
வருத்தநோ யெய்தி யிந்த வருத்தநான் மறையுந் தேறு
வருத்தமா யறிவாய் வெள்ளி யம்பலத் தாடி நின்ற
நிருத்தனுர் தமக்கு முண்டே யென்பது நினைவிற் கொண்டான்.

(இ-ள்.) (இவ்விடத்திற்) சொல்லிய இந்நடனத்தை அப்பியசிக்குங் காலையில், தன்னுடையதேகத்தில் மிகுதியும் வருத்தங்கூர்ந்து, இந்நடனவருத்தம் நான்கு வேதங்களுந் தெளிதற்கரிய பொருளாகி ஞானமயமாகி வெள்ளியம்பலத்தில் நிருத்தஞ்செய்துநின்றருளிய திருக்கூத்தையுடைய சோமசுந்தரப்பெருமானுக்கும் உளதே யென்பதை மனதிற் கொண்டவனுயினன் (பாண்டியன்). எ-று.

இறைவன் விந்துசத்தியின் காரியமாகிய சொற்பிரபஞ்சத்தா லளத்தற் கரியவனுயினும் "அவனருளாலே யவன்றாள்வணங்கி" என்ற மணிவாசகர் திருவாக்கின்படி, தன்னைத் தன்னருளா லுணர்ந்தோர் உணர்வாய்நிற்றலின் "நான் மலறயுந் தேறு அருத்தமாய் அறிவாய்" என்றார். (கரு)

கரியதா மரைக்கண் ணானுங் கமலநான் முகனுங் காண்டற்
கரியதா ளொன்றே நோவ வாற்றநா ணிற்ப தந்தோ
வுரியதா மிதனைக் கற்று வருத்தமுற் றோர்ந்து மீது
தெரியநா னிருப்ப தேயோ வறனெனச் சிந்தை நோவான்.

(இ-ள்.) கருநிறம்பொருந்திய தாமரைமலர்போலும் திருவிழிகளையுடைய விஷ்ணுமூர்த்தியும் தாமரைப்பூவில் வசிக்கும் பிரமதேவரும் காண்பதற்கரிய திருவடியொன்றே வருந்தும்படி அநேககாலமாக ஆடிநிற்கின்றது. ஐயோ! (அதனையுணர்வதற்கு) உரிய இப்பரதநூலை வருத்தமுற்று ஆராய்ந்துணர்ந்தும், இது தெரிந்து நான் வாளாவிருப்பது தருமமோவென்று மனம் வருந்தத்தொடங்கினன். எ-று.

தெரிய என்றது தெரிந்து என்னும் வினையெச்சத்திரிபு. (கசு)

வடுப்படு பிறவிப் பௌவ வரம்புகாண் கின்றி நாள்வந்
தடுப்பவர் யாவ ரேனு மவர்க்கெலாம் போகம் வீடு
கொடுப்பவர் செய்யு மிந்தக் கூத்தையெப் படிநாஞ் சென்று
தடுப்பது தகாதன் றேனும் வருந்துமே சரண மென்னு.

(இ-ள்.) குற்றமிக்க பிறவிச்சமுத்திரத்தின் எல்லையைக் காணுங்காலம் வரப்பெற்றவர் எவராயினும் அவர்கள் யாவர்க்கும் இன்பத்தையும் மோக்ஷத்தையும் அனுக்கிரகிக்கும் சிவபெருமான் செய்தருளும் இந்தத் திருக்கூத்தை எவ்வாறு நாம் தடைசெய்வது (கூடும்)? (தடுக்கத்) தகாது. அல்லவென்றாலும் (எம்பெருமானது) திருவடிவருந்துமே யென்று நினைத்து. எ-று.

இதுமுதல் மூன்று பாடல்கள் குளகம். (கஎ)

இதற்கிது துணிவென் றுன்னி யெழுந்துபோய்ச் சிவனி ராவிற்
கதக்களிற் றெருத்த லேந்துங் கதிர்மணிக் குடிமிக் கோயின்
மதக்கரி யுரியி னற்கு வரம்பறச் சிறந்த பூசை
விதப்பட யாம நான்கும் விதிவழி யியற்றல் செய்யா.

(இ-ள்.) இதற்கிதுதான் துணிபென்று கருதி எழுந்துபோய், சிவராத்திரியிலே கோபத்தையுடைய அஷ்டகஜங்கள் தாங்கும் ஒளிபொருந்திய இரத்தினமிழைத்த சிகரத்தையுடைய திருக்கோயிலில் எழுந்தருளிய, மதஞ்சொரியும் யானைத்தோ

லைப் பேரார்வையாகக்கொண்ட சோமசுந்தரப்பெருமானுக்கு அளவற்ற சிறந்தபூசையை முறைப்படி நான்குசாமங்களிலும் (ஆகம) விதிப்படிசெய்து. எ-று. (சஅ)

விண்டக மலர்த்தா ளேத்தி வெள்ளியம் பலத்து ளன்பர்
தொண்டக மலர நின்ற சோதிமெய்ஞ் ஞானக் கூத்தைக்
கண்டக மகிழ்ந்து தாழ்ந்து கட்புனல் சோரச் செங்கை
முண்டக முடிமே லேற்றி முகிழ்த்துநின் றிதனை வேண்டும்.

(இ-ள்.) தனது இதயத்தில் விகசித்ததாமரைமலரையொத்த திருவடியைப் பணிந்து வெள்ளியம்பலத்திலே அடியார்களுடைய தொண்டுபூண்ட இதயத்தின்கண் விளங்க எழுந்தருளிநின்ற பேரொளியாகிய சோமசுந்தரப்பெருமானுடைய உண்மை ஞானமாகிய திருக்கூத்தினைத் தரிசித்து, மனங்களித்துப் பணிந்து கண்களிலிருந்து ஆனந்தபாட்பஞ்சிந்த, செவந்த கைத்தாமரைகளைத் தனது தலையின்மேலேற்றிக் கூப்பி (த்திருமுன்) நின்று இதனை வேண்டுகின்றான் (இராசசேகரபாண்டியன்) எ-று.

நின்றதா ளெடுத்து வீசி யெடுத்ததா ணிலமீ தூன்றி
யின்றுநாங் காண மாறி யாடியென் வருத்த மெல்லாம்
பொன்றுமா செய்தி யன்றேற் பொன்றுவ லென்னு வன்பின்
குன்றனான் சுரிகை வாண்மேற் குப்புற வீழ்வே னென்னு.

(இ-ள்.) (தேவரீர்) ஊன்றிய திருவடியையெடுத்துவீசியருளி, தூக்கியருளிய திருவடியைத் தரைமீதூன்றியருளி, இன்று அடியேன்தரிசிக்கும்படி, கான்மாறி நடித்தருளி அடியேனுடையவருத்தமுழுவதும் நீங்கும்வண்ணஞ்செய்தருள்வீர் (அவ்வாறு) செய்தருளாவிடின் மடிவேனென்று அன்பின்மலைபோன்ற இராசசேகரபாண்டியன் உடைவாண்மேற் குப்புறவீழ்ந்து இறப்பேனென்று கூறி. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (உ௦)

நாட்டினான் குறித்துப் பாய நண்ணுமுன் னிடத்தா ளூன்றி
நீட்டினான் வலத்தாள் வீசி நிருமலன் மாறி யாடிக்
காட்டினான் கன்னி நாடன் கவலையும் பாச மூன்றும்
வீட்டினான் பரமா னந்த வேலையுள் வீட்டி னானே.

(இ-ள்.) (இவ்வாறுகூறி) உடைவாளை நாட்டி (அதன்மேல்) பாயச்செல்லு முன்னர், மலரகிதராகிய சிவபெருமான் எடுத்தருளிய இடதுகாலை யூன்றியருளி, (ஊன்றியருளிய) வலதுகாலை எடுத்துவீசியருளி, (இவ்வண்ணமாக) கான்மாறியாடிக் காட்டியருளினர். கன்னிநாட்டையுடைய இராசசேகரபாண்டியன் (எம்பெருமானது திருவடி நோமே யென்று கொண்ட) வருத்தத்தையும் (ஆணவம் காமியம் மாயை யென்னும்) மும்மலங்களையும் ஒழித்து, பேரின்பக்கடலில் (தன்னை) முழுகச்செய்தான். எ-று. (உக)

விளைகள்வாய் வீழ்ந்த வண்டின் மெய்யறி வின்ப மென்னு
மளவிலா முந்நீர் வெள்ளத் தாழ்ந்தவ னெழுந்து பின்னு
முளமும்வா சகமு மெய்பு முடையவ னூதுமீவ யாகப்
பளகிலா வன்பு தானே படிவமாய்ப் பழிச்ச லுற்றான்.

(இ-ள்.) இன்பம் விளையும் மதுவில் வீழ்ந்த வண்டுபோல, சச்சிதானந்த மென்னுந் தனக்கோர் எல்லையில்லாத(ஆனந்த)சமுத்திரவெள்ளத்தி லழுந்திய இராசசேகரபாண்டியன் மீண்டும் எழுந்து, மனமும் வாக்கும் காயமும் (தன்னை ஆளாக) உடையவன் உடைமைப்பொருள்களாகவும் குற்றமில்லாத அன்பே தனக்கோருருவாகவும் தோத்திரஞ்செய்யத்தொடங்கினான். எ-று. (உஉ)

### கலிவிருத்தம்.

பெரியாய் சரணஞ் சிறியாய் சரணங்
கரியா கியவங் கணனே சரண
மரியா யெளியா யடிமா றிநடம்
புரிவாய் சரணம் புனிதா சரணம்.

(இ-ள்.) (மகத்துக்கும்) மகத்தாகவுள்ளாய்! (அடியேன் உனக்குச்) சரணம். (அணுவுக்கும்) அணுவாகவுள்ளாய்! சரணம். (எல்லாவற்றிலும் எக்காலத்திலும் எவ்விடத்திலும்) சாட்சியாக விளங்கிய அழகிய திருக்கண்களையுடையவனே! சரணம். (பிரமன்முதலியதேவர்கட்குங்காண்டற்கு) அரியவனே! (அன்பர்களுக்கு) எளியவனே! கான்மாறித் திருநடனஞ் செய்தருளியவனே! சரணம். பரிசுத்தமானவனே! சரணம்.

"அண்டங்களெல்லா மணுவாக வணுக்களெல்லா மண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினுனு மண்டங்களுள்ளும்புறம்புங்கரியாயினனும்" என முன்கூறியது போல "பெரியாய் சிறியாய் கரியாகிய" என்றும், ஏனைய தேவர்போலன்றிச் சூரிய சோமாக்கினிகளாகிய முச்சுடர்களைக் கண்களாக வுடைமையின் "அங்கணனே" என்றும், மமதையுற்றவர்க்கு அரியவனும் அன்பர்கட் கெளியவனுமாகலின் "அரியாய் எளியாய்" என்றும், அடியேன் மனஞ்சகியாமை கண்டு எனது வேண்டுகோளுக்கிரங்கிக் கால்மாறி நடித்தருளினை யென்பார் "அடிமாறி நடம்புரிவாய்" என்றும், ஆணவாதி மல சம்பந்திகளாகிய சில தேவர் போலாது நிமலன் அமலன் நிர்குணன் என்றற்கிலக்கியமாக விளங்குவோனாதலின் "புனிதா" என்றும், இடையிடையே அடியேன் சரணம் என்றும் கூறினர். (உரு)

நதியா டியசெஞ் சடையாய் நகைவெண்
மதியாய் மதியா தவர்தம் மதியிற்
பதியாய் பதினெண் கணமும் பரவும்
துதியாய் சரணஞ் சுடரே சரணம்.

(இ-ள்.) கங்காநதி விளையாடாநின்ற செவ்விய சடையை யுடையவனே! பிரகாசிக்கின்ற வெள்ளிய பிறையை யணிந்தவனே! (தன்னைத்) தியானியாதவர்களது இதயத்தில் தங்காதவனே! பதினெண்கணத்தவர்களும் துதிசெய்யுந் துதியையுடையவனே! சரணம். முச்சுடர் வடிவாயுள்ளவனே! சரணம். எ-று.

சுடரோ என்பதற்கு ஒளிப்பிழம்பே என்றாவது ஜோதிலிங்கரூபியே என்றாவது பொருள்கொள்ளவும் பொருந்தும். (உச)

பழையாய் புதியாய் சரணம் பணிலக்
குழையாய் சரணங் கொடுவெண் மழுவா
ளுடையாய் சரணம் முருகா தவர்பால்
விழையாய் சரணம் விகிர்தா சரணம்.

(இ-ள்.) (எல்லாவற்றிற்கும்) பழைமையா யுள்ளவனே! நூதனமாயுள்ளவனே! சரணம். சங்கக்குண்டலமணிந்த (காதுகளையுடைய)வனே! சரணம். கொடிய வெள்ளிய (கிணங்தோய்ந்த) மழுப்படையையும் வாளையும் ஏந்தியவனே! சரணம். (நின்னிடத்து மனம்) உருகாதவரிடத்தில் இரங்காதவனே! சரணம். விகிர்தனே! சரணம். எ-று.

தன் சந்நிதிமுன்னரே யாவுந் தோன்றுதலின், "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளே" என்றார்போல "பழையாய்" என்றும், தன் சத்தியால்

உதித்த விண்டுமுதலியதேவர்யாரும் விருத்ததசையெய்தவும் தான் அவ்வாறின்றி என்று மொருதன்மையுளாய் நிற்றலின் "பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" என்றார்போல "புதியாய்" என்றும், இறைவர் உலகமாதாவாகிய பிராட்டி சகிதமாக விளங்கினும் பெருந்துறவியாகச் சங்ககுண்டல மணிந்திருத்தலின் "பணிலக்குழை யாய்" என்றும், தாருவனமுனிவர் தம்மைக் கொல்லக்கருதி ஏவிய யாகாக்கினிமான் முதலியவற்றைத் தமது திருக்கரத் தேற்றமையின் "மழுவாளுடையாய்" என்றும், பலவகை ஏதுக்களானும் தான் பரம்பொருளென் றுணர்ந்தும் தம்மை வழிபடாத "கல்லினும் வல்லென்னு" மனமுடையாரிடத்து இரங்காதவனென்பார் "உருகா தவர் பால்விழையாய்" என்றும், தன்னைப் பணிவோரிடத்துவிருப்பும் தன்னைப் பணி யாரிடத்து வெறுப்புமுடையாராகலின் "விகிர்தா" என்றுங்கூறினர். (௨௫)

இருளாய் வெளியாய் சரணம் மெனையும்
பொருளா கநினைந் துபுரந் தரன்மா
றெருளா தநடந் தெரிவித் தெனையா
ளருளாய் சரணம் மழகா சரணம்

(இ-ள்.) இருளாயுள்ளவனே! வெளியாயுள்ளவனே! சரணம். அடியேனை யும் ஒரு பொருளாகத் திருவுள்ளங் கொண்டு இந்திரனும் விண்டுவும் காண்டற்கரிய திருநடனத்தைத் தரிசிப்பித்து என்னை அடிமைகொண்டருளும் அருள்வள்ளலே! சர ணம். பேரழகனே! சரணம். எ-று. (௨௬)

அயனத் தனெனப் படுமா டரவச்
சயனத் தவனைத் தருதத் துவநால்
வயனத் தவவா னவர்வா னவசே
னயனத் தவளு யகனே சரணம்.

(இ-ள்.) பிரமதேவனையும் (பாஞ்சசன்னிய மென்னுஞ்) சங்கத்தையேந்திய வரென்று சொல்லப்படும் ஆடாநின்ற சேஷசயனத்தையுடைய விஷ்ணுவையும் தந் தருளும் தத்துவசொரூபியே! நான்கு வேதங்களாகிய திருவாக்கை யுடையவனே! தேவதேவனே! சேற்கெண்டைபோலுங் கண்களையுடைய (மீனாட்சி) அம்மையாரு க்குத் தலைவனே! சரணம், எ-று.

"அயனத்த னெனப்படுமாடரவச் சயனத்தவனைத் தருதத்துவ" என்றதை,
"மைந்த நின்னையென் வலப்புறத் தளித்தன னறிய
பைந்து ழாய்மது வண்ணனை யெனதிடப் பாலில்
தந்த ளித்தன னீவிர்வெங் கரிமுகன் றழல்வேற்
கந்த னேனெனக் கருணையி னுச்சிமோந் துரைத்தான்"—என்பதனானறிக.

கதவெங் கரியின் னுரியாய் சரணம்
முதல்ந் தமிலா முதலே சரணென்
றதிர்பைங் கழனூ புரவண் டலறும்
பதபங் கயமுன் புபணிந் தரசன்.

(இ-ள்.) கோபம் பொருந்திய கொடிய யானைத்தோலைப் போர்வையாக வுடையவனே! சரணம். முதலும் இறுதியுமில்லாத முழுமுதற் கடவுளே! சரணமெ ன்று, சத்திக்காநின்ற பசிய வீரக்கழலும் சிலம்புமாகிய வண்டுகள் ஒலிக்கும் திரு வடித் தாமரையின் முன்னே நின்று இராசசேகரபாண்டியன் பணிந்து. எ-று. (௨அ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றுமிப் படியே யிந்தத் திருநடம் யாருங் காண
நின்றருள் செய்ய வேண்டு நிருமல மான வெள்ளி
மன்றவ வடியேன் வேண்டும் வரமிது வென்று தாழ்ந்தா
னன்றுதொட் டின்று மெங்கோ னந்நட நிலையாய் நின்றான்.

(இ-ள்.) வெள்ளியம்பலத்தையுடைய எம்பெருமானே ! எக்காலத்தும் இவ்வண்ணமே இந்தத் திருநடனத்தை எல்லோருங்கண்டு தரிசிக்க நின்று அருள்செய்ய வேண்டும். அடியேன் (தேவரீரை) வேண்டிய வரம் "இதுதானென்று நமஸ்கரித்தான். அந்தத் தினமுதல் இதுவரையில் எமது பெருமான் (அவன் வேண்டுகோளுக்கிரங்கி) அத்திருநடன நிலையனாகி நின்றருளினான். எ-று. (உகூ)

மாறியாடின படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-கஎகூ௦.

---

உ

சிவமயம்.

# இருபத்தைந்தாவது,

# பழியஞ்சினபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஈறிலான் செழிய னன்புக் கெளியவ னாகி மன்றுண்
மாறியா டியகூத் தென்சொல் வரம்பின தம்ம கங்கை
யாறுசேர் சடையான் றானே ரரும்பழி யஞ்சித் தென்னன்
றேறலா மனத்தைத் தேற்றுந் திருவிளை யாடல் சொல்வாம்

(இ-ள்.) (எக்காலத்திலுந் தனக்கு) அழிவில்லாத சுந்தரேசப்பெருமான் இராசசேகர பாண்டியனுடைய அன்பினுக்கு எளியவராகி வெள்ளியம்பலத்தில் கான்மாறியாடியருளிய திருக்கூத்து என் சொல்லினளவையி லடங்கியதோ ? (அடங்கியதன்று) கங்காநதியையணிந்த சடையையுடைய அவ்விறைவன் ஒருகொடும்பழியை யஞ்சிக் குலோத்துங்க பாண்டியனுடைய தெளியாத மனத்தைத் தெளிவித்த திருவிளையாடலை (யாம் இனிக்) கூறுவாம்.—எ-று.

"பழியஞ்சித் தென்னன்றேறலா மனத்தைத் தேற்றும்" என்றது பாண்டியன் ஆன்மாக்களிடத்து என்றும் இரக்கமுடையவனென்பது தோன்றக் கூறியதாம்.

இனையநாட் சிறிது செல்ல விராசசே கரன்றன் காதற்
றனையனாங் குலோத்துங் கற்குத் தன்னர சிருக்கை நல்கி
வினையெலாம் வென்று ஞான வெள்ளியம் பலத்து ளாடுங்
கனைகழ னிழலிற் பின்னிக் கலந்துபே ரின்ப முற்றான்.

(இ-ள்.) இவ்வாறு சிறிதுகாலங் கழிய, இராசசேகர பாண்டியன் தனது ஆசைக்குமாரனாகிய குலோத்துங்க பாண்டியனுக்குத் தனது அரசுரிமையைக் கொடு

த்து, வினைச்சம்பந்தங்களை யொழித்து, ஞானவடிவாயுள்ள வெள்ளியம்பலத்தில் நடித்தருளும் சத்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிநீழலில் இரண்டறக்கலந்து பேரின்பத்தி லழுந்தினன். எ-று.

"வினையெலாம் வென்று" என்பதற்கு வினைகன்மத்து ளடங்குதலின் இருவினையொப்பும் மலபரிபாகமும் வாய்ந்து எனப் பொருள்கூறினுமமையும். "பின்னிக் கலந்து" என்றது உடலுமுயிருந் தம்முளொன்று பட்டறியும் அறிவும், கண்ணொளியுஞ் சூரியவொளியும், ஒன்றுபடப்பிரிக்க வொண்ணாமையும்போலக் கலந்தான் என்பதாம். (௨)

குரவன்செங் கோல்கைக் கொண்ட குலோத்துங்க வழுதி செங்க
ணரவங்கம் பூண்ட கூட லாதிநா யகனை நித்தம்
பரவன்பின் வழிபா டானுப் பத்திமை நியமம் பூண்டா
னிரவஞ்சுங் கதுப்பி னல்லா ரீரையா யிரவ ருள்ளான்.

(இ-ள்.) தந்தையாகிய இராசசேகர பாண்டியனுடைய செங்கோலைக் கையிற்கொண்ட குலோத்துங்க பாண்டியன் செவந்த கண்களையுடைய சர்ப்பத்தைத் தனது திருமேனியிலணிந்த மதுராபுரியி லெழுந்தருளிய சோமசுந்தரப்பெருமானை நித்தமும் அன்புடன் துதிசெய்யும் வழிபாட்டையும் நீங்காத பத்திமைத்திறத்தையுங் கடனாகப் பூண்டுள்ளவன். இருளஞ்சுங் கூந்தலையுடைய பதினாயிரமாதர்களை மனைக்கிழத்தியராக வுடையவன். எ-று. (௩)

## கோச்சகக்கலிப்பா.

அப்பதினா யிரவர்க்கு மொவ்வொருத்திக் கவ்வாறு
யொப்பரிய வறுபதினா யிரங்குமா ருளரவருட்
செப்பரிய வல்லாண்மைச் சிங்கவிள வேறனையான்
வைப்பனையான் முதற்பிறந்த மைந்தன்பே ரனந்தகுணன்.

(இ-ள்.) அந்தப் பதினாயிரம் மாதர்களுள்ளும் ஒவ்வொருத்திக்கும் அவ்வாறு (புதல்வர்) ஆக அறுபதினாயிரம் புதல்வருளர். சொல்லுதற்கரிய வலிமையையும் ஆண்டன்மையையுமுடைய இளஞ்சிங்கவேறுபோன்றவன்; வைப்புநிதியைச் சமானமானவன்; முதற்பிறந்த புதல்வன்; அவன் பேர் அனந்தகுணனென்போன். எ-று.

அவ்வாறு = ஆறு + ஆறு. "ஒன்பதொழித்தவெண் ணொன்பதுமிரட்டின் - முன்னதின்முன்னல வோடவுயிர்வரின் - வவ்வுமெய்வரின் வந்ததுமிகனெறி" என்பது சூத்திரம்.

பதினாயிரவர்க்கும் என்பதிலுள்ள குவ்வுருபு உருபு மயக்கம். (௪)

கலைபயின்று பரிநெடுந்தேர் கரிபயின்று பலகைவாள்
சிலைபயின்று வருகுமரர் திறநோக்கி மகிழ்வேந்த
னலைபயின்ற கடலாடை நிலமகளை யடலணிதோண்
மலைபயின்று குளிர்தூங்க மகிழ்வித்து வாழுநாள்.

(இ-ள்.) நூலாராய்ச்சிசெய்து குதிரை நெடிய இரதம் யானை (இவற்றைச் செலுத்துந்)திறமுங் கற்று, கேடகம் வாள் வில் இவற்றின் வரிசையையுங் காற்றுவாநின்ற புதல்வர் திறங்களைக்கண்டு மகிழ்ச்சியடையுங் குலோத்துங்கபாண்டியன், அலைகள் பொருந்திய கடலை ஆடையாகவுடைத்த பூமிதேவியை, வீரத்தையே ஆபரணமாக வணிந்த தனதுதோளாகிய மலையிற் சஞ்சரித்து வெம்மைநீங்க மகிழச்செய்து வாழுங் காலத்தில். எ-று. (௫)

செய்யேந்து திருப்புத்தூர் நின்றுமொரு செழுமறையோன்
பையேந்து மரவல்குன் மனைவியொடும் பானல்வாய்க்
கையேந்து குழவியொடுங் கடம்புகுந்து மாதுலன்பான்
மையேந்து பொழின்மதுரை நகர்நோக்கி வருகின்றான்.

(இ-ள்.) வயல்சூழ்ந்த திருப்புத்தூரிலிருந்து ஒருவேதியன் பாம்புவிரிக்கும் படத்தையொத்தநிதம்பத்தையுடைய தனதுமனைவியோடும் பால் மணங்கமழும் நல்ல வாயையுடைய கையினாலேந்துங் குழந்தையோடும் காட்டுவழியே சென்று தமது மாமன்வீட்டிற்கு, மேகந்தவழுஞ் சோலைசூழ்ந்த மதுராபுரியை நோக்கி வருகின்றான்.

வருவானுண் ணீர்வேட்டு வருவாளை வழிநிற்கும்
பெருவானந் தடவுமொரு பேராலி னீழலின்கி
ழொருவாத பசுங்குழவி யுடனிருத்தி நீர்தேடித்
தருவான்போய் மீண்டுமனை யிருக்குமிடந் தலைப்படுமுன்.

(இ-ள்.) (காட்டுவழியே நடந்து) வரும் வேதியன், உண்ணும் நீரைவிரும்பி வருகின்ற மனைவியை அவ்வழியில் நிற்கும் பெரிய விண்ணுலகத்தை யளாவிய ஒரு பெரிய ஆலமரத்தின்கீழே, தன்கையினின்றும் நீங்காதகுழந்தையோடிருக்கச்செய்து, நீரைத் தேடிக்கொண்டுவரும்படி போய் (நீர்கொண்டு) திரும்பித் தன்மனைவியிருக்கு மிடத்தைச் சேருதற்குமுன்னே. எ-று. (எ)

இலைத்தலைய பழுமரத்தின் மிசைமுன்னா ளெய்ததொரு
கொலைத்தலைய கூர்வாளி கோப்புண்டு கிடந்ததுகா
லலைத்தலைய வீழ்ந்தும்மை வினையுலப்ப வாங்கிருந்த
வலைத்தலைய மானோக்கி வயிறுருவத் தைத்தன்றால்.

(இ-ள்.) இலைகள்பொருந்திய தலையையுடைய ஆலமரத்தின்மேலே (ஒருவன்) முன்னாளிலெய்த கொலைத்தலையினையுடைய ஒருகூரிய அம்பு சிக்கிக்கிடந்தது. காற்று அசைத்து அலைக்க அந்த அம்புகீழேவிழுந்தது. முற்பிறப்பிற்றேடியவினை முடிய, வலையிலகப்பட்ட மான்போன்ற (மருண்ட) பார்வையையுடைய அவ்விடத் திருந்த அப்பார்ப்பனத்தியுடைய வயிறுருவும்படி தைத்தது. எ-று. (அ)

அவ்வாறவ் வணங்கனையா ளுயிரிழந்தா ளவ்வேலைச்
செவ்வாளி யேறிட்ட சிலையுடையா னொருவேடன்
வெவ்வாளி யேறனையான் வெயிற்கொதுங்கு நிழறேடி
யவ்வால நிழலெய்தி யயனின்றா னிளைப்பாற.

(இ-ள்.) அவ்வண்ணமாக அந்தத் தெய்வப்பெண்ணையொத்த பார்ப்பனி தன் உயிர் நீங்கினாள். அப்பொழுது கொடிய ஆண்யாளிபோன்றவனாகிய ஒருவேடன் (உதிரந்தோய்ந்த) செந்நிறந்தங்கிய அம்பினைப்பூட்டிய வில்லையேந்தியவனாகி, இளைப் பாறும்படி வெயிலிற்கொதுங்கும் நிழல்தேடி அந்த ஆலமரநீழலைச் சேர்ந்து அம் மரத்தின் பக்கலில் நின்றனன். எ-று. (கூ)

தண்ணீர்க்குப் போயானி தலைப்பட்ட மறையவனு
முண்ணீர்கைக் கொண்டுமீண் டொருங்கிருந்த குழவியொடும்
புண்ணீர்வெள் ளத்துக்கா ரூழ்ந்துயிராட் புறங்கொடுத்த
பண்ணீர மழலைமொழிப் பார்ப்பனியைக் கண்ணுற்றான்.

(இ-ள்) தண்ணீர்கொண்டு வருவதற்குச் சென்று நீரோடையையடைந்த வேதியனும் உண்ணும் நீரைக் கையிலெடுத்துத் திரும்பி, ஒருசேரத் தன்னுடனிருந்து

பிள்ளையுடன் உதிரவெள்ளக்காலிலழுந்தி உயிரிழந்த பண்ணோசைபோலும் இனிமை பொருந்திய மழலைச்சொல்லையுடைய தனது மனைவியைப் பார்த்தான். எ-று.

ஆவி - குளம். (க0)

அயில்போலுங் கணையேறுண் டவ்வழிபுண் ணீர்சோர
மயில்போல வுயிர்போகிக் கிடக்கின்றாண் மருங்கணைந்தென்
னுயிர்போல்வா யுனக்கிதுவென் னுற்றதென மத்தெறிதண்
டயிர்போலக் கலங்கியறி வழிந்துமனஞ் சாம்பினன்.

(இ-ள்.) வேல்போலுங் கூர்மைவாய்ந்த அம்புதைத்து அவ்விடத்தில் உதிரநீர் சோர மயிலைப்போல உயிர்போய்க்கிடக்கின்ற தன் மனைவியருகே சென்று, என் உயிர்போன்றவளே! உனக்கு இவ்வாறுவந்தடைந்தது என்னகாரணம்? என்று, மத்தாலுடைந்த தண்ணியதயிர்போல (மனமுடைந்து) கலங்கி, அறிவுநீங்கி மனமடிந்தான். எ-று.

அழிவதற்கு மனங்கலங்கலும், மனமடிதற்கு அறிவழிதலுங் காரணமாம்.

இச்செய்யுள் காரணமாலையணி. (கக)

இனையதோர் பெண்பழியை யாரேற்றா ரெனத்தேர்வா
னனையதோர் பழுமரத்தின் புறத்தொருசா ரழல்கானு
முனையதோர் கணையோடு முடக்கியகைச் சிலையேந்தி
வினையதோர்ந் தெதிர்நின்ற விறல்வேடன் றனைக்கண்டான்.

(இ-ள்.) இவ்வகைய ஒப்பற்ற பெண்கொலையை யேற்றார்யாவர்? என்று ஆராய்வானாகி, அந்த ஆலமரத்தின் அருகே ஒருபக்கலில், தீயைச்சொரியும் முனையையுடைய ஒரு பாணத்துடன் கையிலே வளைந்த வில்லைத்தாங்கி, (மிருகங்களைக்) கொல்லுதலை யாராய்ந்து, தனக்கு நேரில்நின்ற வெற்றியையுடைய வேடனைப்பார்த்தான்.

வினையது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (கஉ)

கலிநிலைத்துறை.

காப்பணி தாளன் வாளொடு வீக்கிய கச்சாளன்
கூர்ப்பக ழிக்கோ லேறிடு வில்லன் கொலைசெய்வா
னேற்பன கைக்கொண் டிவ்விடை நின்றா னிவனேயென்
பார்ப்பனி யைக்கொன் றின்னுயி ருண்டு பழிபூண்டான்.

(இ-று.) செருப்பணிந்த காலையுடையவனும் வாளுடன்கட்டிய கச்சினையுடையவனும் கூர்மையுடைய அம்பையேறிட்ட வில்லைத்தாங்கியவனுமாகி, கொலை செய்தற்கேற்ற ஆயுதங்களைக் கையிற்பற்றி இவ்விடத்தில் நிற்கின்றான். இவனேவே என்மனைவியைக் கொன்று (அவளுடைய) இனிய வுயிரைக்குடித்துப் பழியைப் பூண்டான். எ-று.

"இவனே யென் பார்ப்பனியைக்கொன்றான்" என்பதில் ஏகாரந் தேற்றப் பொருளது. (கங)

என்னம தித்தே யெடா வேடா வென்னேழை
தன்னைவ தைத்தாய் நீயே யென்னாத் தழல்கால்கண்
மின்னலெ யிற்றுக் கூற்றென வல்வாய் விட்டார்த்து
மன்னவ னூணைப் பாச மெறிந்து வலித்தேகும்.

(இ-ள்.) என்று நினைத்து, எண்டா வேடா! என் மனைவியைக் கொன்றாய் (அவளைக்) கொன்றவன் நீயே என்று, தீப்பொறிசிந்துங் கண்களையும் மின்னல்போ

லும் பற்களையுமுடைய இயமன்போன்று வலியவாய்பிளந்து கோஷித்து, அரசனது ஆக்கினையாகிய கயிற்றைவீசி இழுத்துச் செல்லுவான். எ-று. (கச)

மாண்டவ ளைத்தன் வெந்நிடை யிட்டான் மகவொக்கற்
றூண்டவ ணைத்தான் றாய்முலை வேட்டழு தன்சேயைக்
காண்டொறும் விம்மாக் கண்புனல் சோரக் கடிதேகா
வாண்டகை மாறன் கூட லணைந்தா னளியன்றான்.

(இ-ள்.) இறந்த (தன்) மனையாட்டியைத் தனது முதுகின்பேரில் வைத்துக்கொண்டு, தனது குழந்தையைப் பக்கத்திற்பொருந்த அணைத்து, அன்னையின் முலைப்பாலையவாவி அழுகின்ற குழந்தையைப் பார்க்குந்தோறுங் கண்களினின்றுநீர் சொரிய அழுது விரைந்துநடந்து, அந்தவேதியன் ஆண்தன்மையையுடைய குலசேகர பாண்டியனுடைய மதுரைப்பதியையடைந்தான். எ-று.

இட்டான் அணைந்தான் என்பன முற்றெச்சங்கள். (கரு)

மட்டவிழ் தாரான் வாயின் மருங்கே வந்தெய்தா
வுட்டுக ளில்லா வேடனை முன்விட் டுயிரன்னாள்
சட்டக நேரோ விட்டெதிர் மாறன் றமர்கேட்பக்
கட்டழல் சிந்தா முறையிடு கின்றான் கையோச்சா.

(இ-ள.) வாசம்பரந்த மலர்மாலையணிந்த குலசேகரபாண்டியனது அரண்மனைவாயிலின் பக்கத்து வந்துசேர்ந்து,மனத்திற் களங்கமில்லாதவேடனை முன்னே விட்டு, தன் உயிர்போன்ற மனையாட்டியின் சரீரத்தை நேரோகிடத்தி, எதிரே பாண்டியன் உறவினராகிய மந்திரிமுதலியோர் கேட்கும்படி கையையோச்சிக் கண்களினின்றும் நீர் சிந்தி முறையிடுகின்றான். எ-று. (கசு)

கோமுறை கோடாக் கொற்றவ ரேறே முறையேயோ
தாமரை யாள்வாழ் தண்கடி மார்பா முறையேயோ
மாமதி வானோன் வழிவரு மைந்தா முறையேயோ
தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ.

(இ-ள்.) மனுநீதிதவறாத பாண்டியருள் ஆண்சிங்கம் போல்வாய்! (உன் அரசுரிமையில் இஃது நிகழ்ந்தது) முறைதானோ? தாமரைமலரின் வாழ்க்கையுடைய திருமகள் வசிக்குந் தண்ணிய விளக்கமமைந்த மார்பையுடையாய்! (இஃது) முறைதானோ? பெருமைபொருந்திய சந்திரவமிசத்திற்றோன்றிய மைந்தா! (இஃது) முறைதானோ? தீமைசெய்தவனைப்போலச் செவந்தகையைக் குறைத்தாய்! (இஃது) முறைதானோ? எ-று.

தீமை செய்தாய்போற் செங்கை குறைத்தா யென்றது.

ஒரு பாண்டியன் தன் நகரத்தைக் காவலாளர் சோராது காக்கின்றனரோ வென்பதை யறிதற்பொருட்டு அவரறியாமல் உருமாறி நகர்சோதித்துச் சென்று வருகையில் ஒருநாள் பிராமண வீதியில் வரும்போது, ஒரு பிராமணன் தன் மனைவியைப் பார்த்து "பெண்ணே நான் காசிக்குப்போய் வருமளவும் உன்னைப் பாதுகாத்துக் கொள்" என, அவன் மனைவி "நான் எப்படி காக்கக்கூடும்" என, அவன் "பாண்டியன் செங்கோல் உன்கற்பைக் காக்கும்"என்றுகூறி, மறுநாள் காசிக்குச்சென்றனன். அதனைக் கேட்டிருந்த பாண்டியன் அன்றுமுதல் நகரிசோதனைவந்து இரவு முழுதும் அவ்வீட்டைக்காத்துப் பொழுதுபுலர அரசிருக்கைக்குத் திரும்புவதாயிருந்தான். ஒருநாள் காசிக்குச் சென்ற வேதியன் மீண்டு மனையை யடைந்து அங்கு நடந்த செய்திகளை மனைவியோடு சொல்லிக்கொண்டிருக்க, அப்பொழுது அவ்வழிவந்த அரசன்

இவ்வீட்டிற் பேச்சுக்குரல் புதிதாயிருக்கின்றதே என்ன விபரீதமோ? என்று கவலை கொண்டு உண்மை யறிய அவ்வீட்டுக்கதவைத் தட்டினன். அவ்வேதியன் வீட்டுக்குரியவனுகையால் "யார் அவன்" என்று வினவினன். அதனால் அரசன் இவன் வீட்டிற் குரியவன்; சோரபுருடனன்று எனத் தெளிந்து, அப்பிராமணன் சந்தேகியாத வகை அவ்வீதியிலுள்ள வீட்டின் கதவுகளையெல்லாந் தட்டிக்கொண்டு போய்விட்டான். அன்று பொழுதுவிடிந்தபின் பிராமணர் யாவரும் ஒருங்கு கூடிப் பாண்டியனிடஞ் சென்று "எங்கள் வீட்டுக் கதவைத் தட்டினோன் கையைக் குறைக்கவேண்டும்" என முறையிட, அரசன் "அக்கை யிதுதான்" என்று உடைவாளாற் றன்கையைக் குறைத்தன னென்பது கர்ணபரம்பரையில் வழங்கிவந்த சரிதம். குலசேகரபாண்டியனும் அவன் வழிவந்தவனாகலின் அவ்வாறு கூறப்பட்டனன். (கஎ)

பிறங்குங் கோலான் மாறடு கொற்றம் பெறுவேந்த
னுறங்கும் போதுந் தன்னரு ளாணை யுலகெங்கு
மறங்குன் றுவாக் காப்பதை யென்ப வஃதியாதிம்
மறங்குன் றுதான் செய்கொலை காவா வழியென்றான்

(இ-ள்.) பிரகாசிக்கின்ற செங்கோலினை யுடையவனாகிச் சத்துருக்களைக் கொல்லும் வெற்றிபொருந்திய பாண்டியன் தூங்கும்போதும் அவனது அருளாணையானது உலகமுழுவதுந் தருமநெறிகுறையாமற் காப்பதென்று (அறிவுடையோர்) சொல்லுவர். அவ்வருளாணை மறத்தொழில் குன்றாத வேடன் செய்த கொலைத்தொழிலைக் காவாதவகை யாதுகாரணமோ? என்று முறையிட்டான். எ-று. (கஅ)

வாயிலு ளார்த மன்னவன் முன்போய் மன்னநங்
கோயிலின் மாடோர் வேதியன் மாதைக் கொலைசெய்தா
னுயின னென்றோர் வேடனை முன்விட் டவிந்தாளைத்
தாயினன் வந்திங் கிட்டயர் கின்றான் றமியென்றார்.

(இ-ள்.) வாயில் காப்பாளர் தமது அரசனுக்கு முன்னே சென்று, இறைவனே! நமது கோயிலினருகில் ஒரு பிராமணன், தன் மனையாட்டியைக் கொலைசெய்தானென்று ஒரு வேடனை முன்னே விட்டு, இறந்த தன் மனைவியை எடுத்துவந்து இங்கேபோட்டு, ஒன்றியாய் வருந்துகின்றானென்று சொன்னார்கள். எ-று. (சக)

இறைமக னஞ்சா வென்குடை நன்றா லென்காவ
லறமலி செங்கோ லஞ்சுப யந்தீர்த் தரசாளு
முறைமையு நன்றான் மண்கலி மூழ்கா முயன்றேந்தும்
பொறைமையு நன்றா லென்று புலந்து புறம்போந்தான்.

(இ-ள்.) குலசேகரபாண்டியன் (அதுகேட்டுப்) பயந்து எனது வெண்கொற்றக்குடை நன்றாயிருந்தது. எனது காவலாகிய தருமமிக்க செங்கோல் (குடிகளுக்கு வரும்) ஐந்து பயங்களையுமொழித்து இராசரிகஞ் செய்யும் முறைமையும் நன்றாயிருந்தது. நிலவுலகம் கலியில் மூழ்காமல் முயற்சியோடு தாங்கும் பொறுமையும் நன்றாயிருந்ததென்று, மனம் புலர்ந்து (அரசிருக்கையினின்றும்) வெளியே வந்தான். எ-று.

திருத்தொண்டர் புராணம்.

"மாநிலங்கா வலனவான் மன்னுயிர் புரக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தரசாள்வா னல்லனோ" என்றபடி, குடிகளுக்குத்

தன்னாலும், தன் பரிசனத்தாலும், பகைவராலும், கள்வராலும், விலங்கு முதலிய வுயிர்களாலும் வருங்கெடுதிகள் ஐந்தினையுந் தீர்க்கவேண்டுவது மன்னா கடமையாதலின் "அஞ்சுபயந்தீர்த் தரசாளுமுறைமை" என்றார். அல்லது அஞ்சத்தக்க பயங்களைத்தீர்த்து எனப் பொருள்கூறினும் பொருந்தும். (௨௦)

வேதிய னிற்குந் தன்மை தெரிந்தான் மெலிவுற்றான்
சாதியின் மிக்காய் வந்த துனக்கென் றளர்கின்றா
யோதுதி யென்னக் காவல னைப்பார்த் துரைசான்ற
நீதியு ளாய்கே ளென்றுரை செய்வா னிகழ்செய்தி.

(இ-ள்.) (மனைவியையிழந்த) பிராமணன் (வருந்தி) நிற்கின்ற தன்மை தெரிந்து மனமெலிந்து, நான்கு வருணங்களிலு மேம்பட்டவனே! உனக்கு வந்தது யாது? (நீ என்) வருந்துகின்றாய். அதனைக் கூறாய் என்று வினவ, (வேதியன்) மன்னனைப் பார்த்து, புகழ் மிகுந்த நீதியுடையவனே! கேட்பாயென்று நடந்த செய்தியைச் சொல்லத்தொடங்கினான். எ-று.

தெரிந்தான், மெலிவுற்றான் என்னும் வினைமுற்றுகள் வினையெச்சப்பொருளன. (௨௧)

இன்றிவ ளைக்கொண் டோர்வட நீழ லிடையிட்டுச்
சென்றுத ணீர்கொண் டியான்வரு முன்னிச் சிலைவேடன்
கொன்றய னின்றா னென்றுலை யூட்டுங் கொலைவேல்போல்
வன்றிறன் மாறன் செவிநுழை வித்தான் மறையோனல்.

(இ-ள்.) இன்று இறந்த இவளை உடன்கொண்டு ஒரு ஆலமரத்தின் நீழலிலிருக்கச்செய்து (இவளது தாகவேட்கையைத் தீர்க்கச்) சென்று, யான் தண்ணீர் (முகந்து) கொண்டு வருவதன் முன்னர், வில்லைத் தாங்கிய இந்த வேடன் (அவளைக்) கொன்று (அம்மரத்தின்) பக்கத்திலே நின்றானென்று, உலைக்களத்திற் காய்ச்சிய கொலைத்தொழிலையுடைய வேலை (செவியில் நுழைத்தால்) போல வேதியன் வன்மையுடைய பாண்டியனுடைய காதிற் செலுத்தினான். எ-று.

நுழைவித்தானென்றது கொடுமையையுணர்த்திற்று. (௨௨)

அந்தணன் மாற்றந் தன்னையு முட்கொண் டறநோக்குஞ்
சந்தன வெற்பன் மறவனை நோக்கத் தாழ்ந்தன்னா
னெந்தை பிரானே நாயடி யேனின் றெய்ப்பாற
வந்து புகுந்தே னந்தம ரத்தின் மீருங்கோர்சார்.

(இ-ள்.) பிராமணன் சொல்லிய சொல்லையுஞ் செவியிற்கொண்டு, தரும வழியைக்காணும் பொதியமலையையுடைய குலோத்துங்கபாண்டியன் வேடுவனைப் பார்க்க, அவ்வேடுவன் பணிந்து, எனது தந்தையாகிய பெருமானே! நாயினுங் கடைப்பட்ட அடியேன் இப்பொழுது இளைப்பாறும்படி அந்த ஆலமரத்தின் ஒரு பக்கத்தில் வந்து நின்றேன். எ-று. (௨௩)

ஐயே நானுங் கொன்றவ னல்லேன் கொன்றாரைக்
கையேன் வேறுங் கண்டில னென்றா னிவளாகத்
தெய்யே றுண்ட வாறெவ னென்றா ரெதிர்நின்றார்
மெய்யே னையா யானறி யேனிவ் வினையென்றான்.

(இ-ள்.) ஐயனே! அடியேனுங் கொலைசெய்தவ னல்லேன். கொலை செய்தாரையுங் கீழ்மகனாகிய யான் வேறுங் காணேனென்று சொன்னான். (அப்பொழுது)

எதிரே நின்றவர்கள் (ஆயின்) இவளது தேகத்திலே அம்பு தைத்தூருவிய காரணமென்ன? என்று கேட்டார்கள். ஐயா! நிசமாகவே இச்செய்தியை யானறியேனென்று சொன்னான். எ-று.

எய் - முதனிலைத்தொழிற்பெயர். ஈண்டு தொழிலாகுபெயராய் அம்பினை யுணர்த்தியது. (உச)

இக்கொலை செய்தான் யானல னென்னு துளனென்னத்
தக்கவ னேயோ தறுகண் மறவ னுரைமெய்யோ
சிக்கவொ றுத்தா லல்லுதை யுண்மை செப்பானென்
றொக்க வுரைத்தார் மந்திர ருள்ளார் பிறரெல்லாம்.

(இ-ள்.) ஆண்டுள்ள மந்திரிகளும் மற்றெல்லோரும் (அரசனை நோக்கி) இந்தக் கொலைத்தொழிலைச் செய்தவன் நான் அல்லேனென்று பொய் சொல்லாமல் மெய் சொல்லத்தக்க குலத்திற் பிறந்தவனோ? கொலைத்தொழிலை (இயற்கையாக) உடைய வேடன் சொல்லும் வார்த்தை மெய்ம்மையோ? கடினமாகத் தண்டித்தாலல்லது நிசத்தைச் சொல்லானென்று ஒரேவகையாகச் சொன்னார்கள். எ-று. (உரு)

மன்னன் றானு மற்றது செய்மின் னெனமள்ளர்
பின்னந் தண்டஞ் செய்தனர் கேட்கப் பிழையில்லான்
முன்னஞ் சொன்ன சொற்பெய ரானாய் மொழியாகின்
றின்னந் தீரத் தேருமி னென்றா னென்செய்வான்

(இ-ள்.) (மந்திரி முதலானோர் அவ்வாறு சொல்லக் கேட்ட) பாண்டியனும் (ஆயின்) அப்படிச் செய்யுங்கள் என்று,கட்டளையிட, தண்டலாளரும் பின்பு தண்டித்துக் கேட்க, பிழைபாடில்லாத அவ்வேடுவன் முன் சொல்லிய சொல்லினின்றும் பிறழாதவனாய் நான் கொன்றேனல்லேனென்று சொன்னான். (பாண்டியன்) இன்னமும் முற்றும் பார்த்தறியுங்கள் என்று சொன்னான். (வேறு யாது செய்வான்?) எ-று.

ஆற்றவொ றுக்குந் தண்டமு மஞ்சா னறைகின்ற
கூற்றமு மொன்றே கொன்ற குறிப்பு முகந்தோற்றான்
மாற்றவ ரோயோ மாவோ புள்ளோ வழிவந்த
கோற்றொடி யைக்கொன் றென்பெற வல்லான் கொலைசெய்வான்.

(இ-ள்.) மிகவுந் தண்டிக்குந் தண்டனையையுஞ் சிறிதுமஞ்சான். இவன் சொல்கின்ற வார்த்தையும் ஒன்றே. கொலைசெய்த குறிப்பும் முகத்திற் காட்டான். (ஆதலால் அவளைக் கொன்றோர் அவ்வேடுவனுடைய) பகைவரோ? (அல்லது) மிருகமோ? பறவையோ? கொலைசெய்யும் வேடன் வழியேவந்த இப் (பிராமணப்) பெண்ணைக் கொன்று என்ன பலனை யடைய வல்லவன்? எ-று.

கோற்றொடி - அன்மொழித்தொகை. கோல்போலத் திரண்ட வளையலணிந்த கையையுடையாள் என்பது பொருள். (உஎ)

கைதவ னுமிக் கானவ னேயோ பிறரோயோ
செய்தவர் யாரோ யிக்கொலை வேட்டஞ் செய்தோர்மா
வெய்த விலக்கிற் றப்பிய கோறா னேறுண்டிம்
மைதவழ் கண்ணாண் மாய்ந்தன ளேயோ வறியேனால்.

(இ-ள்.) இந்தப் பெண்கொலை செய்தோர் வஞ்சகனாகிய இவ்வேடுவனோ? பிறரோ? எவரோ? வேட்டையாடினோர் மிருகத்தைக் குறிவைத்தெய்த இலக்கில் தப்பிய அம்பு தைத்தருவுதலால் இந்த மைதீட்டிய கண்களையுடைய பார்ப்பனி மாய்ந்தாளோ? (யான்) ஒன்றுமறியேன். எ-று. (உஅ)

என்று முன்னித் தென்னவ னின்ன மிதுமுன்னூ
றன்று லாயத் தக்கதை யென்றான் றகவிற்றன்
னன்று ரந்நூ லாய்ந்திது நூலா லமையாதான்
மன்று தெய்வத் தாலே தேறும் வழியென்றார்.

(இ-ள்.) என்று நினைத்துக் குலோத்துங்கபாண்டியன் இன்னும் இதனை முதனூலால் ஆராய்ந்துணரத்தக்கதென்று சொன்னான். தன்னைப்போன்ற தகுதியை யுடையோர், அந்த முதனூலை யாராய்ந்து இது முதனூலால் ஆராய்ந்தறிதல் முடியாது. அரசனே! கடவுளாலேயே ஆராய்ந்தறியும்வழி இதுவெனச் சொன்னார்கள்.

தக்கதை என்பதில் ஐகாரம் சாரியை.

சோதிடநூலை முன்னூலென்றார். (உகூ)

வேந்தர்கள் சிங்கம் வேதிய னைப்பார்த் திதுதீர
வாய்ந்தன துள்ளக் கவலையொ ழிப்பே னஞ்சேனின்
னேந்திழை யீமக் கடனிறு விப்போ தென்றேவித்
தேந்துணர் வேங்கைத் தார்மற வோனைச் சிறைசெய்தான்.

(இ-ள்.) மன்னவருள் ஆண்சிங்கம்போன்ற குலோத்துங்க பாண்டியன் வேதியனைப்பார்த்து இந்தச்செய்தியைத் தீரயோசித்துஉனது மனக்கவலையைமாய்ப் பேன் பயப்படாதே. இப்பொழுது உன் மனையாட்டிக்குச் செய்யவேண்டிய ஈமக் கடன்களை நடத்தி (ஈண்டு) வருக என்று ஏவி, வேங்கைமரத்தின் தேன் சொரியும் பூங்கொத்தாலாகிய மாலையணிந்த வேடுவனைச் சிறையிலடைப்பித்தான். எ-று. (௩0)

மின்னனை யாடன் செய்கடன் முற்றா மீண்டோனைத்
தன்னமர் கோயிற் கடைவயின் வைத்துத் தானேகிக்
கொன்னவில் வேலான் றங்கள் குடிக்கோர் குலதெய்வ
மென்ன விருந்தா ரடிகள் பணிந்தா னிதுகூறும்.

(இ-ள்.) மின்னல் போலும் விளக்கமுடைய தனது மனைவிக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன்களைச் செய்து முடித்துத் திரும்பிய பிராமணனை, தன் விருப்ப முடைய மாளிகையின் கடைவாயிலில் வைத்து, கொலைத்தொழில் செய்யும் வேலைத் தாங்கிய குலோத்துங்கபாண்டியன், தான் (தனித்துச்)சென்று, தங்கள் குடிக்கு ஒரு குல தெய்வமாகவிருந்த சுந்தரேசப்பெருமானுடைய திருவடிகளை நமஸ்கரித்து இது சொல்லுகின்றான். எ-று.

தங்கள் குடிக்கோர் குலதெய்வமென்ன விருந்தாரென்றதை முன்னும் பின்னும் பலவிடங்களிலும் விளங்குந் திருவிளையாடல்களிற் காண்க. (௩க)

## ச கோச்சகக்கலிப்பா.

மன்றாடு மணியேயிம் மறவன்றான் பார்ப்பனியைக்
கொன்றானோ பிறர்பிறிதாற் கொன்றதோ விதுவறநூ
லொன்றாலு மளப்பரிதாக் கிடந்ததா லுன்னருளா
லென்றாழ்வு கெடத்தேற்றா யென்றிரந்தா னவ்வேலை.

(இ-ள்.) வெள்ளியம்பலத்தில் நிருத்தம் புரியும் மாணிக்கமே! இந்த வேடுவனே அப்பிராமண ஸ்திரீயைக் கொலைசெய்தானோ? (இவனன்றி) பிறர் பிறகார ணத்தாற் கொலைசெய்ததோ? இந்தச் செய்தி மிகவும் சோதிடநூலுள் ஒன்றாலாகி லும் அளந்தறிதற்கரியதாக விருந்தது. உனது திருவருளாலே எனது குறைவுதீரத் தெளிவிப்பாயென்று குறையிரந்தான்; அக்காலையில். எ-று. (௩

திருநகரின் புறம்பொருசார் குலவணிகத் தெருவின்க
ணொருமனையின் மணமுளதங் கந்தணனோ டொருங்குநீ
வருதியுன துள்ளந்தேறு மாற்றமெலாந் தேற்றுதுமென்
றிருவிசும்பி னகடுகிழித் தெழுந்ததா லொருவாக்கு.

(இ-ள்.) மதுரைத் திருநகரத்தின் புறத்திலே ஒருபக்கத்தில் வணிகர்குலத் தெருவில் ஒரு வீட்டில் மணவினை நிகழ்கின்றது. அவ்விடத்திற்கு (அந்தப்) பிராமணனுடன் நீ ஒருசேரவருவாய். உன்மனந் தெளியாத செய்தியை யெல்லாந் தெளிவிப்போமென்று பெரிய ஆகாயத்தின் வயிற்றைக்கிழித்து ஒரு (அசரீரித்)திருவாக்கு உண்டாயது. எ-று. (௬௬)

திருவாக்குச் செவிமடுத்துச் செழியன்றன் புறங்கடையிற்
பெருவாக்கு மறையவனோ டொருங்கெய்திப் பெரும்பகல்போய்க்
கருவாக்கு மருண்மாலைக் கங்குல்வாய்த் தன்னையும்வேற்
றுருவாக்கிக் கடிமனைபோ யொருசிறைபுக் கினிதிருந்தான்.

(இ-ள்.) அந்த அசரீரித் திருவாக்கைப் பாண்டியன் தன் செவிநிரம்பக் கேட்டு, தனது கடைவாயிலிலிருக்கும், பெருமைமிக்கவாக்காகிய வேதத்தை யுணர்ந்த பிராமணனுடன் ஒருசேரவிருந்து பெரிய பகற்பொழுது கழிந்து, கருமையைப் பெருக்கும் மயக்கமுடைய மாலைக்காலத்துடன்வந்த இராப்பொழுதில்,தன்னை (பிறர் அறியாவண்ணம்) வேற்றுவடிவஞ்செய்து (வணிகர்வீதியிலுள்ள) கலியாணவீட்டிற் சென்று ஒருபக்கத்திற் புகுந்து (மறைந்து) இடையூறின்றி யிருந்தான். எ-று. (௬௭)

அன்றிறைவ னருளாலங் கவர்கேட்க வம்மனையின்
மன்றன்மகன் றனக்களந்த நாளுலப்ப மறலியிருட்
குன்றமிரண் டெனவிடுத்த கொடும்பாசக் கையினர்வாய்
மென்றுவருஞ் சினத்தவரி லொருவனிது வினவுமால்.

(இ-ள்.) அப்பொழுது சோமசுந்தரப்பெருமானுடைய திருவருளால் அவ்விடத்திற் பாண்டியனும் வேதியனுங்கேட்க அந்தக்கலியாணவீட்டில் மணமகனுக்கு அளவுபடுத்திய வாழ்நாள் முடிய, இயமன் கரிய இரண்டு மலைகளை (ஏவியது) போல ஏவிய கொடிய பாசத்தையேந்திய கையையுடையவரும் வாயை மென்று வருங்கோபத்தை யுடையவருமாகிய காலபடர்களுள் ஒருவன் இது வினவுகின்றான். எ-று.

அளந்த நாளுலப்ப என்றது வினைப்பயன் தொலைந்தவழி யென்றும், வாய் மென்றுவருஞ் சினத்தவர் என்றது மிக்க கோபமுடையாரென்றுங் கொள்க. (௬௮)

இன்றேயிங் கிவனுயிரைத் தருதிரென விரும்பகட்டுக்
குன்றேறுங் கோனுரையாற் கொள்வதெவன் பிணியுடம்பி
னென்றேனு மிலனொருகா ரணமின்றி யுயிர்கொள்வ
தன்றேயென் செய்துமென மற்றவனீ தறைகிற்பான்.

(இ-ள்.) இப்பொழுதே இவ்விடத்தில் இம்மணநாயகனுடைய உயிரைக் கொண்டுவருவீர் என்றேவிய பெரிய எருமைக்கடாவாகிய மலையின்மீதிவர்ந்துவரும் இயமன் கட்டளையால் கொள்வது எவ்விதம்? (இவனோ) தேகத்தில் சிறிதும் நோயில்லான். ஒரு நிமித்தமுமில்லாமல் உயிரைக்கவர்வதல்லவே? (இதற்கு) என்னசெய்வோமென்று கூற, மற்றொருதூதன் இதனைக்கூறுகின்றான். எ-று.

இங்கு மதுரைக்கு ஒருகுரோசத்திற்கப்பால் என்றும் பொருள். (௬௯)

ஆற்றலை றுண்டக்கண யருகொதுங்கும் பார்ப்பனியைக்
காற்றால்வீழ்த் தெவ்வாறு கவர்ந்தோமப் படியிந்தச்
சாற்றார வாரத்திற் றாம்பறுத்துப் புறநின்ற
வீற்றாவை வெருளவிடுத் திவனுயிர் கவர்கென்றான்.

(இ-ள்.) வழியிலிருந்த ஆலமரத்தின் இலையிற் சிக்குண்டிருந்த அம்பை, அம்மரத்தருகே நிழலுக்கொதுங்கிய பார்ப்பனியை (நாம்கொண்ட) காற்றுவடிவால் (அலைத்து) விழச்செய்து எவ்வண்ணம் உயிர்கவர்ந்தோம். அதுபோலவே புறத்திற் (கட்டுண்டு) நின்ற ஈற்றுப்பசுவை இந்தக்கலியாண ஆரவாரத்தினாலே (கட்டியிருக்கும்) தாம்பையறுத்து வெருண்டோடத் துரத்தி, இவனுடைய உயிரைக் கொள்வோமென்று கூறினன். எ-று.

காற்றால் வீழ்த்து என்பதற்குக் காற்றினால் தள்ளியெனப் பொருள் கூறுவாருமுளர். ஆனால் காற்று காலபடர் கட்டளைப்படி நடத்தலின்மையின் அஃது பொருந்தாதென்க.	(கஎ)

அந்தமொழி கேட்டரச னருமறையோய் கேட்டனையோ
விந்தமொழி யெனப்பனவ னிவனிவ்வா றிறந்தாலென்
பைந்தொடியா ளிறந்ததுமப் படியேயென் மனக்கவலை
சிந்தவிது காண்பேனென் றொருங்கிருந்தான் றென்னனொடும்.

(இ-ள்.) (இயமதூதர்கள் தம்முட்பேசிய) அந்தவார்த்தையைப் பாண்டியன் கேட்டு, அரியவேதங்களை யுணர்ந்த அந்தணனே! இந்த வார்த்தைகளைக் கேட்டாயோ? என்று வினவ, அந்தணன் இந்த மணநாயகன் இவ்வண்ணம் மடிந்தால் என்மனைவி மடிந்ததுவும் அவ்வகையே. என் மனதுக்கமழிய இதனையுங் காண்பேனென்று கூறி (அவ்விடத்தில்) பாண்டியனோடும் ஒருசேரவிருந்தான். எ-று. (கஅ)

ஒட்டியபல் கிளைதுவன்றி யொல்லொலிமங் கலந்தொடங்கக்
கொட்டியபல் லியமுழங்கக் குழுமியவோ தையின்வெருண்டு
கட்டியதாம் பிறப்புனிற்றுக் கற்றாவொன் றெதிர்ந்தோடி
முட்டியதான் மணமகனை முடிந்ததா லவனாவி.

(இ-ள்.) விடாது வந்த பலசுற்றத்தாரும் நெருங்கி, ஒல்லென்னு மொலியுடன் மங்கலச்செயல்களை (ஒருபால்) தொடர்கவும், கொட்டிய பலவாச்சியங்கள் (ஒருபால் முழங்கவும், (இவ்வாறு) ஒருசேரத் திரண்ட ஓசையால் பயந்து, (தன்னைப்) பிணித்த கயிறு அற, இளமையையுடைய கன்றையுடைய பசுவொன்று எதிர்ந்து ஓடி மணநாயகனை முட்டியது. (அதனால்) அவன் உயிர் ஒழிந்தது. எ-று. (கக)

மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையா
யணியிழையார் வாழ்த்தொலிபோ யழுகையொலி யாய்க்கழியக்
கணமதனிற் பிறந்திறுமிக் காயத்தின் வரும்பயனை
யுணர்வுடையா ரெய்துவரா ருணர்வொன்று மிலார்க் கொன்றுமில்லை.

(இ-ள்.) கலியாணப்பிள்ளையே பிணமாய், கலியாண வாத்தியங்களே சாக்காட்டுப் பறையாய், ஆபரணங்களை யணிந்த சுமங்கலிகள் மங்கலப்பாட்டொழிந்து அழுகையோசையாய்முடிய, ஒரு க்ஷணப்பொழுதில் தோன்றியழியும் இந்தச் சரீரத்தால் வரும் பிரயோசனத்தை அறிவுடையார் அறிவார்கள். அறிவு சிறிதும் இல்லாதவர்க்குச் சிறிதும் (பிரயோசனமுண்டாவது) இல்லை. எ-று.

நாலடியார்.

"மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப் - பின்றை
ஒலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமா மாண்டார் மனம்" என்னும் செய்யுளினும் இக்குறிப் புணர்த்துவது காண்க. (௬0)

கண்டானந் தணனென்னை காரியஞ்செய் தேனெனத்தன்
வண்டார்பூங் குழன்மனைவி மாட்சியினுங் கழிதுன்பங்
கொண்டான்மற் றவனெடுந்தன் கோயில்புகுந் தலர்வேப்பந்
தண்டாரா னமைச்சர்க்கும் பிறர்க்குமிது சாற்றினன்.

(இ-ள்.) பிராமணன் பார்த்தான். நான் யாதுகாரியஞ் செய்தேனென்று வண்டுகள் பொருந்திய மலர்மாலையணிந்த கூந்தலையுடைய தனது மனையாட்டி இறந்ததிலும் மிக்க துன்பத்தை யடைந்தான். வேப்பமலராலாகிய தட்பம் பொருந்திய மாலையையணிந்த பாண்டியன், அத்துன்பங்கொண்ட பிராமணனுடன் தனதுகோயிலுட் சென்று மந்திரிகளுக்கும் மற்றவர்களுக்கும் இவ்வாச்சரியத்தை யெடுத்துச் சொன்னன். எ-று.

ஒன்றுமறியாத வேடனைத்தண்டித்துத் துன்புறுத்தியது பேரபராதமான காரியமாகலின் "மனைவி மாட்சியினுங்கழிதுன்பங்கொண்டான்" என்றார். (௬௧)

மறையவனை யின்னுமொரு மணமுடித்துக் கோடியென
நிறையவரும் பொருளீந்து நீபோதி யெனவிடுத்துச்
சிறையழுவத் திடைக்கிடந்த செடித்தலைய விடிக்குரல
கறையுடல்வே டனைத்தொடுத்த கால்யாப்புக் கழல்வித்து.

(இ-ள்.) அந்தப்பிராமணனை யின்னுமொரு விவாகத்தை முடித்துக்கொள்வாயென்று அரியபொருளை மிகுதியாகக்கொடுத்து, நீ போவாய் என்று விடையளித்து, சிறைக்கூடமாகிய கொடிய இடத்தில் அழுந்திக்கிடந்த முடைநாற்றம் வீசுந் தலையையுடைய, இடிபோன்ற குரலையுடைய கரிய தேகத்தையுடைய வேடனைப் பூட்டிய கால்விலங்கைத்தறித்து. எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள் குளகம்.

தலைய குரல சினையடியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சவினைகள். இவை வேறு பலவடுக்கி வேடனென்னும் பெயரைத் தனித்தனி கொண்டன. (௬௨)

தெளியாதே யாமிழைத்த தீத்தண்டம் பொறுத்தியென
விளியாவின் னருள்சுரந்து வேண்டுவன நனிநல்கி
யளியானு மனத்தரச னவனையவ னிடைச்செலுத்திக்
களியானை விழவெய்த கௌரியனைப் போய்ப்பணிவான்.

(இ-ள்.) நாங்கள் (உண்மை) அறியாமற்செய்த தீய தண்டனைகளை (மனம்) பொறுப்பாயென்று அருகழைத்து இன்னருள் மிகுந்து அவன் விரும்பியவற்றை மிகக்கொடுத்து, கிருபை நீங்காத மனத்தையுடைய பாண்டியன் அவ்வேடனை அவனிருப்பிடத்திற்கனுப்பி, (முன் சமணரேவிய)மத மயக்கத்தையுடைய யானை யிறக்க அம்புதொட்ட சுந்தரபாண்டியராகிய சோமசுந்தரப்பெருமானை (திருச்சந்நிதானத்திற்)சென்று வணங்குவான். எ-று. (௬௩)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஆதரம் பெருகப் பாவியேன் பொருட்டெம் மடிகணீ ரரும்பழி யஞ்சு
நாதராயிருந்தீ ரெந்தையார்க் குண்டோ நான்செயத் தக்கதொன் றென்னுக்
காதலிற் புகழ்ந்து பன்முறை பழிச்சிக் கரையின்மா பூசனை சிறப்பித்
தேதம தகற்றி யுலகினுக் குயிரா யிருந்தன னிறைகுலோத் துங்கன்.

(இ-ள்.) அன்பு மீக்கூரப்பாவியேனுகிய என் நிமித்தமாக, எமது அடிகளாகிய நீவிர் அரிய பழியஞ்சியநாதராக விருந்தீர். என் தந்தையாகிய தேவரீருக்கு என்னுற் செய்யத்தக்கது ஒரு பிரதியுதவியுளதோ? (இல்லை) என்று, அன்புடன் புகழ்ந்து, பலமுறை தோத்திரஞ்செய்து எல்லையில்லாத மகா பூசையை (ஆதிசைவவேதியர்களால்) சிறக்கச்செய்து, குடிகளுக்கு(வரும் ஐந்து)குற்றங்களையொழித்துக் குடிகளுக்குத் தானொரு உயிராய் அரசனுகிய குலோத்துங்கபாண்டியன் மகிழ்ச்சிமீக்கூர விருந்தான். எ-று.

யாதொரு குற்றமுமில்லாத வேடனைத் தேருதபாண்டியன் அவனைத் தண்டஞ்செய்தமையால் அப்பாண்டியனுக்கு அறியாமையால் வரும்பழியையஞ்சிக்காத்த காரணத்தால் அரும்பழியஞ்சுநாதர் என ஓர் திருப்பெயர் போந்தமையின் "அரும்பழியஞ்சு நாதராயிருந்தீர் என்றார். (சச)

பழியஞ்சின படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கடுஙச.

உ

சிவமயம்.

# இருபத்தாறுவது

# மாபாதகந்தீர்த்தபடலம்.

கலிவிருத்தம்.

வேத நாயகன் வெம்பழி யஞ்சிய
நாத னான நலனிது நல்கிய
தாதை யைக்கொலை செய்த தனயன்மா
பாத கந்தனைத் தீர்த்தமை பாடுவாம்.

(இ-ள்.) (நான்கு)வேதங்கட்கும் நாயகனுகிய சோமசுந்தரக்கடவுள் அரும்பழிக்கஞ்சிய நாதனுகிய திருவிளையாடல் இது. தன்னைப்பெற்ற தந்தையைக் கொலைசெய்த வேதியனுடைய மகாபாதகத்தைத் தீர்த்தருளிய திருவிளையாடலை(யாம்இனி)க் கூறுவாம். எ-று. (க)

விரைசெய் மாலைக்கு லோத்துங்க மீனவன்
றிரைசெய் நீர்நிலஞ் செங்கோல் செலத்தனி
யரசு செய்யுமந் நாளி லவந்தியென்
றுரைசெய் மாநக ரானொரு பூசுரன்.

(இ-ள்.) மணங்கமழும் மலர்மாலையணிந்த குலோத்துங்கபாண்டியன் அலைகளையுடைய கடல்சூழ்ந்த நிலவுலகத்திலே தனது செங்கோல் செல்ல, சமானமில்



மாபாதகந்தீர்த்தபடலம்.

லாத இராசரிகத்தை நடத்தும் அக்காலத்தில், அவந்தியென்று சொல்லப்படும் பெரிய நகரத்திலுள்ளான் ஒருவேதியன். எ-று. (உ)

வெருவுங் காய்சின மாறிய வேதியன்
மருவுங் காதன் மனையெனும் பேரினு
டிருவுங் காமனுந் தேவியு மண்புனை
யுருவுங் காமுறு மொப்பில் வனப்பினுள்.

(இ-ள்.) (கண்டோர்) அஞ்சத்தக்க கொடிய கோபம் நீங்கிய அந்த வேதியனால் விரும்பப்பட்ட மனைவியென்பவள் இலக்குமியும் மன்மதன் மனைவியாகிய இரதியும் சுதையாற்செய்த (சித்திரப்) பதுமையும் தனக்கு ஒப்பில்லாத (யாவரும்)விரும்பத்தக்க அழகினையுடையவள். எ-று. (௩)

படியி லோவியப் பாவையொப் பாகிய
வடிவி னுளவள் பான்மக னென்றொரு
கொடிய பாவி பிறந்து கொலைமுதற்
கடிய பாவக் கலன்போல் வளருநாள்.

(இ-ள்.) நிலவுலகத்தில் சித்திரித்த பதுமைபோன்ற உருவத்தை யுடையவள். அவ்வுருவமுடைய பார்ப்பனியிடத்து மகனென்று ஒரு கொடும்பாவி பிறந்து, கொலைமுதலிய கொடும்பாவங்களைக் கொள்கலனாக அவன் வளர்ந்துவருநாளில்.எ-று.

கொலைமுதல் கடியபாவமென்றது - கொலை களவு கட்குடி கர்மம் குருத்துரோகமாகிய ஐந்து. இவை பஞ்சமகாபாதங்களெனப்படும். (௪)

கோடி கோடி யடுஞ்சிலை கோட்டியே
கோடி கோடி கொடுங்கணை பூட்டியே
கோடி கோடி விகாரமுங் கூட்டியே
கோடி கோடி யனங்கரெய் தார்கொலோ.

(இ-ள்.) கொல்லும்வில்லைக் கோடாகோடிவளைத்து, கொடியகோடாகோடி பாணங்களை அவற்றிலேறிட்டு, கொடிய கோடாகோடி விகாரங்களையும் அப்பாணங்களோடுகூட்டி, கோடாகோடி மன்மதர்கள (அப்பாதகன்மேற்) பிரயோகித்தார்களோ ? (யாதோ ? யாம் அறியோம்). எ-று.

மன்மதபாணங்கள் ஐந்து : அவை தாமரை - மா - அசோகு - முல்லை-நீலமாகிய கணைகள். அவைசெய்யும் விகாரங்கள் : சுப்பிரயோகம் - விப்பிரயோகம்-சோகம் - மோகம் - மரணம் எனப்படும். அவையாவன: சுப்பிரயோகம் - சொல்லுநினைவு மாறுபடுதல், விப்பிரயோகம் - பெருமூச்செறிந்துவருந்தல், சோகம் - வெதும்பல் உணவு தெவிட்டல், மோகம். அழுதல்,மொழிபலபேசுதல். மரணம்-அயர்த்தல் மயங்கல் எனப்படும். இவற்றை,

"வனசஞ் சூத மசோகு முல்லை
நீல மெனமதன் பெய்கணை யைந்தே.
சுப்பிர யோகம் விப்பிர யோகம்
சோகம் மோகம் மரணமுந் தோற்றும்.

அவைதாம்

சுப்பிர யோகஞ் சொல்லு நினைவும்
விப்பிர யோகம் வெய்துயிர்த் திரங்கல்
சோகம் வெதுப்புந் துய்ப்பன தெவிட்டலும்

மோக மழுங்கலு மொழிபல பிதற்றலும்
மரண மயர்ப்பும் மபக்கமுஞ் செய்யும்" —என்பதனுனறிக. (௫)

இளமைச் செவ்விய யாக்கையன் மையல்கூர்
வளமைக் காமமும் வல்வினை யுந்நிறைத்
தளையிட் டீர்த்தலிற் றன்னை வயிற்றிடை
விளைவித் தீன்றவ டன்னை விரும்பினன்.

(இ-ள்.) இளம்பருவமுடைய சரீரமமைந்த அப்பாதகன் மயக்கமிக்க குறைவில்லாத காமமும் பாவமும் நிறைவாகிய பாசத்தையிட்டு இழுத்தலால், தன்னைத் தன்வயிற்றில் தோன்றச்செய்து பெற்றதாயை விரும்பினன். எ-று.

நிறைத்தளைவிட்டு எனவும் பாடம். மனக்கவலையாகிய தளையை விடுவித்து என்று பொருள் கொள்க. (௬)

அன்னை யென்னு மழிதகை யாளகத்
தின்னு யிர்த்துணை யும்மனக் காவலாய்
மன்னு நாண மடமுத னல்வருந்
தன்னை நீங்கலிற் றானுமொத் தாளரோ.

(இ-ள்.) தாயென்று சொல்லப்படும் அழிகற்புடையவள் தன்மனத்திலே தனது இனிய உயிருக்கோர்துணையாயும் தனதுமனத்துக்கோர்காவலாயும் நிலைபெற்ற நாணம் மடமுதலிய நான்கு காவற்காரரும் தன்னைவிட்டு நீங்குதலால் தானுமதற்கு உடன்பட்டாள். எ-று.

நாண மடமுதல் நால்வர் என்றது நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு, அவற்றுள், நாணம் - தன்கணவனையன்றி மற்றோரைக் காணவுங் கூசுதல். மடம்-தன்கணவன் குணமன்றிப் பிறர்குணத்தை யறியாமை. அச்சம் - தன்கணவன் முன்னன்றிப் பிறர்சாயைதோன்றினும் கரசரணாதிகளை ஆமைபோலொடுக்கிப் பதுங்கல். பயிர்ப்பு - தன்கணவன் உடைமுதலியற்றை யன்றிப் பிறருடையதைத்தொட அருவருத்தல். என்பர். (எ)

இன்ப மோசிறி தாகு மிதில்வருந்
துன்ப மோகரை யில்லாத் தொடுகட
லென்ப தாரு மிவனு லறியவிவ்
வன்ப தான வினையால் வருந்துவான்.

(இ-ள்.) (காமத்தால் விளையும்) சுகமோ அற்பமாகும். (ஆனல்) இதனல் வருந் துன்பமோ எல்லையில்லாத சமுத்திரமாமென்னும் பழமொழியை எல்லோரும் இவனாலறிய இந்தக் கொடியதீவினையால் வருந்தத்தொடங்கினன். எ-று.

தொடுகடல் - வினைத்தொகை. சகரரால் தோண்டப்பட்ட கடல் என்பது பொருள். வன்பது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (அ)

மைய ருக மதியை விழுங்கவக்
கைய னயைக் கலந்தொழு குஞ்செய
லையன் றன்குறிப் பாற்கண் டயற்செவிக்
குய்ய லாவண்ண முள்ளத் தடக்கினன்.

(இ-ள்.) (காம) மயக்கமாகிய (இராகுவென்னும்) பாம்பானது அறிவுஆகிய சந்திரனைவிழுங்க, அவ்வஞ்சகன் தன்தாயைப்புணர்ந்து நடக்குஞ் செய்கையை அவனது தந்தை குறிப்பாலறிந்து (அஃது) பிறர்செவியி லேறாதவண்ணம் தனதுமனத்தி லடக்கி யொழுகினன். எ-று.

ஒருவர்க்கு முறைக்கலாற்றாத மானக்கேடாதலின் அடக்கினனென்பார் "அயற்செவிக் குய்யலா வண்ணமுள்ளத்தடக்கினான்" என்றார். (கூ)

வேற்றோர் வைகல் வெளிப்படக் கண்டறந்
சாற்று நாவினன் வேறொன் றுஞ் சாற்றிலன்
சீற்ற மேல்கொடு செல்வன்கொல் வேனென
வேற்றெ ழுந்தன னீன்றாள் விலக்குவாள்.

(இ-ள்.) (குறிப்பாக வுணர்ந்ததேயன்றி) தருமவொழுக்கத்தை யுரைக்கும் அவ்வேதியன் வேறொருநாள் வெளியாகக்கண்டு வேறொன்று முரைக்காது இருந்தனன். (அதைக்கண்ட கொடும்பாவியாகிய) புத்திரன் கோபத்தைமேற்கொண்டு (தந்தையைக்)கொல்வேனென்றுமேற்கொண்டெழுந்தனன். பெற்றவள்விலக்குகின்றாள்.

செல்வன் என்றது பெரும்பாவியென்னும் இழிபுதோன்றக் கூறியதாம். ()

தாயி லின்ப நுகர்ந்தனை தந்தையைக்
காயி லென்பெறு வாயெனக் காமுகர்க்
காயி லன்னை யி லப்பனி லென்பய
னேயி லின்னரு ளென்னற மென்னென்றான்.

(இ-ள்.) தாயினிடத்து இன்பமனுபவித்தாய். தந்தையைக்கொன்றாலென்னபல னடைவாயென்று சொல்ல, காமிகளுக்கு ஆராய்ந்து பார்த்தால் தாயாலும் தந்தையாலும் (அடையத்தக்க) பயனென்ன? அன்பாலும் இனிய சிவகருணையாலும் பயனென்ன? தருமத்தால் பயன் என்ன? என்றான். எ-று.

நே=அன்பு. என்-வினாவினைக்குறிப்பு முற்று. இதனை அருள் அறமென்பவற்றிலுங் கூட்டினுமமையும். (சக)

மண்டொ டுங்கரு விப்படை வன்கையிற்
கொண்டு தாதை குரவனென் றோர்கிலான்
றுண்ட மாகத் துணித்தானாய் வாய்முகந்
துண்ட காம றேவா னுணர்விலான்.

(இ-ள்.) மண்வெட்டுங் கருவியைத் தனது வலியகரத்திற்கொண்டு தன் தந்தையை (ஐங்குரவருள் ஒரு) குரவனென்றறியாது, தாயின் வாயிலிருந்து முகந்துண்ட காமமாகிய மதுவினால் உணர்வில்லாத பாவி துண்டுபடவெட்டினான். எ-று.

ஐங்குரவர் — அரசன் - உபாத்தியான் - பிதா - தமையன் - ஆசாரியன் எனப்படுவோர். (சஉ)

மைக்க ருங்கங்குல் வாய்க்கொன்ற தாதைக்குத்
தக்க தீத்தவி சிட்டன்னை தன்னொடு
கைக்க டங்கு பொருளொடுங் கன்னெறி
புக்க னன்புடை சூழ்ந்தார் புளினரே.

(இ-ள்.) இருண்மயமான இராப்பொழுது தன்னாற் கொலைசெய்யப்பட்ட பிதாவுக்கு (அப்பொழுதே) பொருந்திய தீக்கடன் செய்துமுடித்து, தனது தாயோடும் தான் எடுத்தற்கமைந்த செல்வத்தோடும் பாலைநிலவழியாகச்சென்றனன் (வழிபறிக்கும்) வேடர் அவன்புறத்தில்வந்து சூழ்ந்தார்கள். எ-று.

கல்நெறி என்பதைப் பருக்கைக்கல்நெருங்கிய இடமெனக்கொண்டு பாலை என்றுபொருள்கூறினும். (சஙு)

எய்யுங் கோஸெறாடு வில்லரி டிக்குநேர்
செய்யுஞ் சொல்லினர் செல்லலை நில்லெனக்
கையி லுள்ளவுங் கைக்கொண்டு காரிகைத்
தைய றன்னையுந் தாங்கொடு போயினர்.

(இ-ள்.) பிரயோகிக்கும் அம்பையேறிட்ட வில்லினையும் இடிக்குச்சமான மான சொல்லினையும் உடையவராகி, போகாதே நில் என்றதட்டி (அப்பாவியின்) கையிலிருந்த பொருள் முழுவதையுஞ் சூறையாடி, (அவன்தாயாகிய) பார்ப்பனியை யும் (தாம்) கொண்டு சென்றார்கள். எ-று.

செல்லலை - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. (கச)

சென்று சேணிடைச் சிக்கற வாழலா
மென்ற வெண்ணமொன் றெய்திய வண்ணமொன்
றென்று நாமெண்ணத் தெய்வமொன் றெண்ணிய
தென்ற வார்த்தை யிவனிடைப் பட்டதால்.

(இ-ள்.) தூரதேசத்திற்குப்போய்ச் சிக்கில்லாமல் வசிக்கலாமென்று (மகா பாதகன்) எண்ணிய எண்ணமொன்று (அவனுக்குவழியிடையே)வந்தவகையொன்று (ஆதலால்) 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது' என்ற பழமொழி இந்த மகாபாதகனிடத்திற் புலப்பட்டது. எ-று. (கரு)

தாதை தன்றன யற்கினி யார்துணை
மாதர் யாயை மறவர்கைக் கொள்ளவிப்
போது தான்துணை யென்பவன் போன்றுமா
பாத கத்துரு வாய்வந்து பற்றினன்.

(இ-ள்.) (மாபாவியாகிய மகனால் வெட்டுப்பட்ட) வேதியன் தனது புத்திர னுக்குத் துணையினி யாவர்? (அவன் வழித்துணையாகக்கொண்ட) அழகிய (அவனது) தாயை வேடர்கைக்கொள்ளுதலால்(துணையிழந்த)இப்பொழுது தானேதுணையென்று தொடர்ந்தவன் போன்று (அவன் செய்த பிரமபாவத்தால்) பிரமகத்திசாயையாய் வந்து (அவனைப்) பிடித்தான். எ-று.

தாதை (அவனைப்) பற்றினன் என முடித்துக்கொள்க. யாய்-தாய். (கசு)

ஆவ வென்னு மழுஞ்சிவ தாவெ'னும்
பாவம் பாவம் பழியிது வோவைய
கோவெ னுங்கை குலைத்தெறி யுந்நிழற்
பாவை போல விடாதுபின் பற்றுமால்.

(இ-ள்.) ஆ ஆ வென்றலறும்; அழும்; சிவதாவென்றுசொல்லும்; பிரமகத்தி யாகிய இதுவோ பாவம் பாவம் ஐயையோவென்று முறையிடும்; கையை (ஒன்றோ டொன்று சேர்த்து) மோதும்;(அவனது) தேகச்சாயல்போல அவனைப் பிரியாது பின் பற்றிச் செல்லும். எ-று.

சிவதன் - மங்கலத்தைக்கொடுப்பவன். இது வரதன் என்பது வரதாவென் றானாற்போல முறைப்பாடிற் சிவதாவென வந்தது. இதனைத் திருத்தொண்டர்புரா ணம் எறிபத்தநாயனார் சரிதத்துங்காண்க. (கள)

மேற்படி - வேறு.

நல்லதீர்த் தஞ்சிவ தலநலோர் பக்கமுஞ்
செல்லவொட் டாதரன் சீர்த்திநா மஞ்செவிப்

புல்லவொட் டாதுளம் புகுதவொட் டாதுநாச்
சொல்லவொட் டாதுகண் துயிலவொட் டாதரோ.

(இ-ள்.) (இப்பிரமஹத்தி யொழிய) நல்லதீர்த்தமாடவும் (நல்ல) சிவதலஞ் சேவிக்கவும் நல்லோர்பக்கஞ்சென்று சேவிக்கவும் (அவன் செல்லநினைத்தால்) செல்வொட்டாது தடுக்கும். சிவசரிதமும் சிவநாமமும் (கேட்கப்புகுந்தால் கேளாமல்) தடுக்கும். (ஒருவகையாகக் கேட்பினும்) அவன் மனத்திற் புகவொட்டாது தடுக்கும். (ஒருவாறுகேட்டு நாவால் சொல்லத் தொடங்கினும்) நாவைச் சொல்லவொட்டாது தடுக்கும். (இவற்றிற்குப் பயந்து நித்திரை செய்யப்புகினும்) நித்திரை செய்யவொட்டாது தடுக்கும். எ-று.

இதுமுதல் இரண்டு செய்யுள்களால் பிரமஹத்தியால் நிகழ்ந்த துன்பங்களை விளக்குகின்றார். (கஅ)

சுற்றுமுன் பின்புறச் சூழ்ந்துதன் கொடுக்கிறப்
பற்றநின் றீர்க்குமா பாதகத் தாலலைந்
தெற்றினிச் செய்வதென் றுற்றலா திடருழந்
துற்றுவே றுலகெலா மச்சமுற் றுழலுமால்.

(இ-ள்.) முன்னும் பின்னும் எப்பக்கமும் விடாது சூழ்ந்து தனது கொய்சகமானது அவிழ்ந்து அலையப்பற்றிநின்று இழுக்காநின்ற மகாபாதகத்தா லலைந்து திரிந்து இனியாது செய்வதென்று சகியாது துன்பத்தில் வருந்தித் தன்னைப்பற்றிய பிரமஹத்திக்கஞ்சிச் சுழலாநிற்பான். எ-று. (கக)

உறுகணு யாற்றநா ளுற்றுழன் றுலகெலா
மறுகவே திரியுமா பாதகன் வலியெலாஞ்
சிறுகுவான் சிவனருட் செயலினிப் பாதகங்
குறுகுநாள் குறுகுநாள் கூடலைக் குறுகினன்.

(இ-ள்.) (இவ்வண்ணம்) அநேகநாள் துன்பநோயடைந்து சுழன்று கண்டோரெல்லாம் வருந்தத் திரிந்தலையாநின்ற மகாபாதகன் வலிமை முழுவதும் சிறுகுதலால், சிவபெருமானது திருவருட் செயலால் இனிப் பாதகங்குறுகி யொழியுநாள் வருங்காலையில் மதுரைப்பதியை யடைந்தான். எ-று.

குறுகல் இரண்டில் முந்தியது குறைதல் என்றும் பிந்தியது சேர்தல் என்றும் பொருள்படும். (உ0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அழிதகன் குறுகு வான்முன் னங்கயற் கண்ணி தந்தக்
குழையிரு காதுங் கோத்துக் கொலையெழு புலிப்பற் றாலி
நுழைமயிர் நெடுநாண் பின்ன னேன்பிட ரலைப்பப் பூண்டோர்
பழிதகை யாத வேடப் பாவையாய்ப் படிவங் கொள்ள.

(இ-ள்.) அழிதகைமையுடையவன் வருதற்கு முன்னமே மீனாக்ஷியம்மையார் தந்தத்தாற்செய்த குண்டலங்களை இருசெவிகளிலும் நுழைவித்து,கொலைத்தொழிலில் மேம்பட்ட புலியின் பல்லாகிய தாலிகோத்த மயிராற்பின்னிய நெடிய மங்கலசூத்திரம் வலியபிடரில் அசைந்தலையத்தரித்து,குலத்திற்குரிய பழித்தொழில் சிறிதுந் தடுத்தலில்லாத ஒரு வேட்டுவப் பெண்ணுய்த் திருவுருவங்கொள்ள. எ-று. (உக)

கொலையிரும் பழிக்கன் றஞ்சுங் கூடலெம் பெருமான் கொன்றை
மிலையிருங் குஞ்சி வேங்கை மெல்லிணர்க் கண்ணி வேய்ந்து

கலையிரு மருப்பிற் கோடிக் காதள வோடுங் தாடிச்
சிலையிருந் தடக்கை வேடத் திருவுருக் கொண்டு தோன்றி.

(இ-ள்.) (தைவிகமாய் நேரிட்ட) கொலைத்தொழிலால்வந்த பெரும்பழிக்கு அக்காலத்திலஞ்சிய எமது சோமசுந்தரப்பெருமான் கொன்றைமாலையணிந்த பெரிய சிகையில் வேங்கையின் மெல்லிய பூங்கொத்தாலாகிய மாலையையணிந்து, கலைமானின் முறுக்கினையுடைய இரண்டு கொம்பின் வளைவுபோல முறுக்குள்ளதாய் வளைந்து காதுமட்டுஞ் சென்றமீசையும், வில்லைத்தாங்கிய பெரிய கையுமுடைய வேட்டுவத் திருவுருவந் தான்கொண்டருளி. எ-று. (உஉ)

கொண்டல்கண் படுக்கு மாடக் கோபுர மருங்கிற் போந்தின்
கண்டகக் கருக்கு வாய குரைக்குநாய் கதுவிக் காப்பப்
புண்டலை வாளி வில்லோர் புறங்கிடந் திமைப்பத் திங்கட்
டுண்டவா ணுதலா ளோடுஞ் சூதுபோ ராடல் செய்வான்.

(இ-ள்.) மேகங்கள் துயிலும் மாடங்கள் பொருந்திய கோபுரவாயிலினருகே, பனையின் முள்வாய்ந்த கருக்குபோன்ற வாயையுடைய குரைக்காநின்ற நாயானது கதுவிக்காத்துநிற்கவும், மாமிசத்தை நுனியிலுடைய அம்பும் வில்லும் ஓர் புறத்திருந்து விளங்கவும், (தம்மைப்போல வேட்டுவவடிவுகொண்ட) அர்த்த சந்திரன் போன்ற நெற்றியையுடைய பிராட்டியாரோடும் சூதாடலாகிய போர்த்தொழில் செய்வாராயினர். எ-று. (உங)

வெருவரு வேழ முண்ட வெள்ளில்போல் வறிய னாகிப்
பருவர லுடனங் கெய்தும் பாதகன் வரவு நோக்கி
யொருவரு முள்ளத் தானு முன்னருங் கொடிய பாவி
வருவது காண்டி யென்னு மாதரை நோக்கிக் கூறும்.

(இ-ள்.) பயமில்லாத யானையுண்ட விளாங்கனிபோலச் சிறிதும் உள்ளீடு இல்லாதவனாகித் துன்பத்துடன் அவ்விடத்து வரும் மகாபாதகனது வருகையைக் கண்டு, யாவரும் தமது மனத்தாலும் நினைத்தற்கரிய கொடிய மகாபாவி வருவதைப் பார்ப்பாய் என்று தேவியாரைப்பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ-று.

வேழம் - ஓர் நோய். அது இளநீர்க்குத் தேரையென்னும் நோய்போல விளாங்கனியை உள்ளீடில்லாததாகச்செய்வது. இதுவேழமென்னும் பெயரொற்றுமையால் யானையுண்ட விளாங்கனி யெனவும் வழங்கும். (உச)

அணங்குநோ யெவர்க்குஞ் செய்யு மனங்கனா லலைப்புண் டாவி
யுணங்கின ருள்ளஞ் செல்லு மிடனறிந் தோடிச் செல்லா
குணங்குல னொழுக்கங் குன்றல் கொலைபழி பாவம் வாரா
விணங்குமின் னுயிர்க்கு மாங்கே யிறுதிவந் துறுவ தெண்ணா.

(இ-ள்.) எல்லோருக்குங் காமநோயைச் செய்யும் மன்மதனால் அலைக்கப்பட்டு உயிர் சோர்ந்தவர்களது மனமானவை தாம் செல்லுமிடமறிந்து சென்று சேரா; குணத்தின் குறைபாட்டையும் கொலைத் தொழிலையும் (அதனால் வரும்) பழியையும் பாவத்தையும் பாரா; பொருந்திய தமது இனிய உயிர்க்கும் அவ்விடத்து அழிவுவருவதைச் சிறிதுங்கருதா. எ-று.

செல்லா - பாரா - எண்ணா என்பன உள்ளம் என்பதன் பயனிலைகள். ()
கள்ளுண்டல் காம மென்ப கருத்தறை போக்குச் செய்வ
தெள்ளுண்ட காமம் போல வெண்ணினிற் காணிற் கேட்கிற்

றள்ளுண்ட விடத்தி னஞ்சந் தலைக்கொண்டா லென்ன வாங்கே
யுள்ளுண்ட வுணர்வு போக்கா துண்டபோ தழிக்குங் கள்ளுண்.

(இ-ள்.) கள்ளுண்ணுதலும் காமங்கொள்ளுதலும் என்று சொல்லப்படும் இரண்டும், (உண்டோர் காமமுற்றோர்) கருத்துகளை ஓட்டைசெய்த லுடைமையால் (ஒத்திருப்பினும்) விலக்கப்பட்ட காமத்தைப்போலக் கள்ளானது தன்னையொருவன் கருதினும் காணினும் தனது தன்மையைக் கேட்பினும் தாமிருக்குமிடஞ் செல்வினும், நஞ்சு தலைக்கேறியதுபோல அப்பொழுதே (காமம்போல) உள்ளத்தின் அறிவைக் கெடுக்காது. அக்கள்ளானது அதனை உண்டபோதுமட்டும் அறிவைச் சிதைக்கும். எ-று.

கள்ளையுங் காமத்தையும் ஒரு பொருளாகவைத்துப் பின் கள்ளைவிலக்கிக் காமத்தை மேம்படக் கூறினர். இச்செய்யுளின் கருத்தை, திருக்குறள் "உள்ளக்கிளர்ச்சியுங் காணமகிழ்தலுங் கள்ளுக்கில் காமத்துக் குண்டு" என்பதனுனறிக. (உசு)

காமமே கொலைகட் கெங்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

(இ-ள்.) காமமே கொலைகளுக்கெல்லாங் காரணம். தாட்சண்ய மில்லாத காமமே திருட்டுக்கெல்லாங் காரணம். இயமனும் அச்சப்படும் காமமே கள்ளுண்டற்குங் காரணம் ஆனபடியால் காமமே நரகபூமியை உரிமையாகக் கொடுப்பது என்று கூறினர். எ-று.

காமமே என்பவற்றில் ஏகாரங்கள் பிரிநிலைப்பொருளன. இஃது பெரும்பாதகமாதலின். (உஎ)

கொலைப்பழி கோட்பட் டாங்கே குறுகியான் முகங்கண் டேட
வலைப்பட ருழந்து சாம்பி யழிவதென் பார்ப்பா னென்னக்
கலைப்படு திங்கள் வேணிக் கானவ னருட்க ணோக்கந்
தலைப்படச் சிறிது பாவந் தணிந்துதன் னறிவு தோன்ற.

(இ-ள்.) பிதாவைக்கொன்ற பிரமகத்தியால் விழுங்கப்பட்டுத் தமது சந்நிதியிலெதிர்ந்த மகாபாதகனுடைய முகத்தைப்பார்த்து, அடா! பார்ப்பானே! அலைத்தலையுடையபெருந்துன்பத்தால் வருந்திச் சோர்ந்து அழிவது யாது? என்று வினவியருள, சந்திரகலைபொருந்திய சடாமுடியையுடைய வேட்டுருவாய்வந்த சோமசுந்தரக்கடவுளது திருவருணோக்கம் சிறிது படுதலால் மகாபாதகங் குறைந்து தன் இயற்கை யுணர்வுதோன்ற. எ-று.

இதுமுத லிரண்டு பாடல்கள், குளகம். (உஅ)

முற்பக லிழைத்த பாவ முதிர்ச்சியாற் பிறந்து தந்தை
தற்பகை யான வாறுந் தாதையை வதைத்த வாறும்
பிற்பக லந்தப் பாவம் பிடித்தலைத் தெங்குந் தீரா
திப்பதி புகுந்த வாறு மெடுத்துரைத் திரங்கி நின்றான்.

(இ-ள்.) முன்னுளிற் செய்த பாவமுதிர்ச்சியால் (மகனாகப்) பிறந்து தந்தைக்குத்தான் விரோதியான வகையையும், (அதனால்) தந்தையைக் கொலைசெய்த வகையையும், பின்னுளில் அந்தப் பாவமானது (பிரமஹத்தியாய்ப்) பிடித்து வருத்த எங்குந்திரிந்து தீராமல் இந்தத் தலத்தையடைந்த வகையையும் எடுத்துச்சொல்லி, (மிகவும் வருந்தி) நின்றான் எ-று.

தற்பகன் எனப் பாடங்கொள்வது முண்டு. அவ்வாறாயின் தல்பகன் என்னும் வடசொற்றிரிபு எனக்கொண்டு தந்தை சயனத்திற் குரியவன் எனப் பொருள் கொள்க. (உகூ)

மறப்பெரும் படிவங் கொண்டு மனத்தருள் சுரந்து நின்ற
வறப்பெருங் கருணை மூர்த்தி யழிதகை யவனைப் பார்த்தித்
திறப்பழி யாங்குச் சென்று மீங்கன்றித் தீரா தென்றக்
கறைப்பழி தீரும் வண்ணங் கருதியோ ருறுதி கூறும்.

(இ-ள்.) பெரும் பாவஞ்செய்யும் வேட்டுவவடிவங்கொண்டு, உள்ளே அருள் சுரந்து நின்ற தருமவடிவாயுள்ள பெரியதயாமூர்த்தி, அழிதகைமை பொருந்திய மகா பாதகனை நோக்கி, இப் பெரும்பாதகம் எவ்விடஞ் சேர்ந்தாலும் இத்தலத்தன்றித் தீராதென்று கூறி, அந்தக் கரிய பெரும்பழி தீரும்படி திருவுளங்கொண்டு ஒருறுதி மொழியைக்கூறுகின்றார். எ-று. (௬0)

வருதிநின் னுமஞ் சொன்னோர் வருக்கமு நரகில் வீழக்
கருதிநீ செய்த பாவங் கழிப்பவ ரெவர்யா நோக்கந்
தருதலா லெளிதிற் றீரச் சாற்றுது மையங் கையேற்
றொருபோழு துண்டி யீச னுறுதவ ரேவல் செய்தி.

(இ-ள்.) இங்குவருவாய்; உன்பெயரை யுரைத்தோர் (மாத்திரமேயல்லது அவரது) மரபினரும், நரகத்திலே விழும்படி நீ யெண்ணிச் செய்த மகாபாதகத்தை யொழிப்பவர் யாவர்? நாம் கிருபா நோக்கஞ் செய்தமையால் (அப்பாதகம்) இலேசாக ஒழியக் கூறுகின்றோம். பிச்சையைக் கையாலேற்று ஒருபொழுது புசிப்பாய். சிவபெருமான் விரும்பும் தவவேடத்தை யுடைய அடியவர் பணிவிடை செய்வாய்.

இதுமுதல் மூன்று செய்யுள்களால் மகாபாதகனுக்கு அனுக்கிரகித்தமுறையையுரைக்கின்றார். (௬க)

செங்கதிர்க் கடவுள் வானந் தீண்டுமுன் னெழுந்து தீந்தண்
பைங்கதி ரறுகு கொய்து பசுக்களை யருத்தி யார்வம்
பொங்கமுப் பேதுங் கோயிற் புறத்தொட்டித் தீர்த்த மாடிச்
சங்கரன் றனைநூற் றெட்டு மெய்வலஞ் சாரச் செய்தி.

(இ-ள்.) செவந்த கிரணங்களையுடைய சூரியன் உதயஞ்செய்வதன் முன்னே யெழுந்து, இனிய தட்பமாகிய பசிய கிரணத்தையுடைய அறுகினையறுத்துப்பசுக்களை (பணிந்து) உண்பிப்பாய். அன்பு அதிகரிக்க (காலை உச்சி மாலையாகிய) முப்போதிலும் திருக்கோயிலின் புறத்தேயுள்ள தொட்டி தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து சிவபெருமானை நூற்றெட்டுத்தரம் அங்கப்பிரதக்கணம் பொருந்தச்செய்வாய். எ-று.

இத்தவ நெறியி னின்றா லிப்பழி கழியு மென்னச்
சித்தவன் புடைய வேடத் திருவுருக் கொண்ட கொன்றைக்
கொத்தவ னுரைத்தான் கேட்டுக் கொடிச்சியா யிருந்த வம்மை
மத்தவன் கரித்தோல் போர்த்த மறவனை வினவு கின்றாள்.

(இ-ள்.) நீ இந்தத் தவமார்க்கத்திலிருந்தால் இந்த மகாபாதக மொழியுமென்று திருவுளத்தில் அன்புடைய வேடத்திருவுருவங்கொண்ட கொன்றையின் பூங்கொத்தினை யணிந்த சோமசுந்தரக்கடவுள் கூறியருளினார். அதனைக் கேட்டருளி வேடுவச்சித்திருவுருவங்கொண்ட பிராட்டியார், மதமயக்கத்தையுடைய வலியயானைத்

தோலைப் போர்த்தருளிய வேட்டுவத் திருவுருவங்கொண்ட பெருமானை வினவு கின்றார். எ-று. (ருரு)

ஐயவிக் கொடியோன் செய்த பாவத்துக் களவில் காலம்
வெய்யநா மேலழு கோடி நரகிடை வீழ்ந்தா னேனு
முய்வகை யிலாத பாவி யிவனுக்கென் னுய்யுந் தேற்றஞ்
செய்வகை யென்று கேட்பச் செங்கண்மால் விடையோன் செப்பும்.

(இ-ள்.) ஐயனே! இம்மகாபாதகன் செய்த பெரும்பாதகத்திற்குக் கணக் கில்லாத காலமட்டும் கொடிய இருபத்தெட்டுக்கோடி நரகத்திலே வீழ்ந்து கிடந்தா னாலும் பிழைக்கும் வகையில்லாத மகாபாவி. இவனுக்குக் கடைத்தேறுந் தேர்ச்சி செய்யும் வகையேது? என்று வினவ, செவந்த (தாமரைபோலும்) கண்களையுடைய திருமாலாகிய இடபத்தை (வாகனமாக) உடைய சோமசுந்தரக் கடவுள் திருவாய் மலர்ந்தருளுகின்றார், எ-று. (ருசு)

அடுபழி யஞ்சா நீச ராயினு நினைக்கி னச்சம்
படுபழி யஞ்சான் செய்த பாதகத் தொடக்குண் டெங்கும்
விடுவதை யின்றிவே றுகளைகணு மின்றி வீயக்
கடவனைக் காப்ப தன்றோ காப்பென்றான் கருணை மூர்த்தி.

(இ-ள்.) கொல்லும் பழிக்குப்பயப்படாத நீசர்களானாலும், நினைக்கினும் அவர்களுக்கு அச்சமுருத்தும் பழிக்கஞ்சானாகிச் செய்த மகாபாதகத்திற் கட்டுண்டு எந்த ஸ்தலத்திற்குப் போனாலும் அப்பாதகம் தன்னைவிடுதலில்லாமலும் வேறுபற்றுக் கோடு இல்லாமலும் அழியக்கடவோனைப் பாதுகாப்பதல்லவா பாதுகாப்பு என்று கிருபாமூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுள் கூறியருளினர். எ-று.

களைகண் என்பதனிறுதியிலுள்ள உம்மையைப் பிரித்து இன்றி என்பத னோடு கூட்டுக. (ருஎ)

செய்தற்போ தனைய வுண்க ணேரிழை நீயா தொன்று
செய்தற்குஞ் செய்யா மைக்கும் வேறொன்று செயற்கு மாற்றன்
மெய்தக்க கருணை வள்ளல் வேண்டினெவ் வினைஞ ரேனு
முய்தக்கோ ராதல் செய்கை யுன்னருள் விளையாட் டன்றோ.

(இ-ள்.) குவளைமலர்போன்ற மைதீட்டிய கண்களையுடைய மீனாக்ஷிதேவி யார் நீ யாதொரு காரியத்தைச்செய்தற்கும் அதனைச் செய்யாமைக்கும் பிறிதொன்று செய்தற்கும் வன்மையின் உண்மைமிக்க கிருபாமூர்த்தி. விரும்பினால் எவ்வகைத்தீத் தொழிலினராானாலும், பிழைக்கும் வகையினராகச் செய்வது உனது திருவருளின் விளையாட்டல்லவா? எ-று. (ருஅ)

என்றக மகிழ்ச்சி பொங்க வியம்பின ளியம்ப லோடுங்
குன்றக நாட்ட வேடக் குழகனு மறைந்து வெள்ளி
மன்றக நிறைந்தான் மேக மறைந்திட மறைந்து செல்லு
மின்றக விடாது பின்போய் விளங்கிழை மடந்தை யோடும்.

(இ-ள்.) என்று மனக்களிப்பு மீக்கூரக்கூறி யருளினர். அவ்வாறு கூறவும், மலைநாட்டிலுள்ள வேட்டுவத்திருவுருவங்கொண்ட சோமசுந்தரப்பெருமானுந் திரு வுருவங்கரந்து, மேகம் மறைகையில் மறைந்து (உடன்) செல்லும் மின்னல்போல விடாது பின்வரும் வேட்டுவத் திருவுருவங்கொண்ட மீனாக்ஷிதேவியாரோடும் வெள்ளி யம்பலத்தில், நிறைந்தருளினர். எ-று.

விளங்கிழை மடந்தை - விளங்கும் ஆபரணத்தையணிந்த தேவி. (ருஎ)

ஆததா யியுங்கண் டானு வற்புத மடைந்து கூட
லுதனுர் நவின்ற வாற்று னன்னெறி விரதச் செய்கை
மாதவ வொழுக்கந் தாங்கி வருமுறை மதிய மூன்றிற்
பாதகங் கழிந்து தெய்வப் பார்ப்பன வடிவ மானன்.

(இ-ள்.) வேதியன் அவ்விடத்தில் (தனக்குப் புலப்பட்டு மறைந்த) அதை க்கண்டு மாபாவியாகிய நீங்காத ஆச்சரியமடைந்து, மதுராபுரீசராகிய சோமசுந்தரக் கடவுள் கூறியருளிய முறைப்படி, நன்னெறிக் கேதுவாகிய நோன்பையும் பெரிய தவவொழுக்கையும் மேற்கொண்டு வரன்முறையே மூன்றுமாதத்தில் மகாபாதகத்தி னின்று நீங்கித் தெய்வத்தன்மையுடைய முன்னுள்ள பிராமண வடிவானுன். எ-று.

சொற்பதங் கடந்த வெந்தைச் சுந்தர நாதன் றுளிற்
பற்பல வடசொன் மாலை பத்தியிற் றொடுத்துச் சாத்தித்
தற்பர வறிவா னந்தத் தனியுரு வுடைய சோதி
பொற்பத மருங்கிற் புக்கான் புண்ணிய மறையோ னம்ம.

(இ-ள்.) சொல்லளவைக்கடந்த எந்தையாகிய சோமசுந்தரக்கடவுளது திரு வடியில் பற்பல வடசொற்களாலாகிய மாலையைப் பத்தியோடு தொடுத்துச்சாத்தி உண்மையறிவானந்தமென்னு மொப்பில்லாத திருவுருவத்தையுடைய சோமசுந்தரக் கடவுளுடைய பொன்போன்ற திருவடி நீழலில், சிவபுண்ணியவடிவான அந்தணன் அடைந்தான். எ-று. (கூக)

அன்னையைப் புணர்ந்து தாதை தூரவனு மந்த ஞளன்
றன்னையுங் கொன்ற பாவந் தணித்துவீ டளித்த தென்றாற்
பின்னைநீ ரிழிநோய் குட்டம் பெருவயி றீளை வெப்பென்
றின்னநோய் தீர்க்குந் தீர்த்த மென்பதோ விதற்கு மேன்மை.

(இ-ள்.) தாயைப்புணர்ந்து தனக்குத் தந்தையுங் குருவுமாகிய வேதியனைக் கொலைசெய்த மகாபாதகத்தை யகற்றி (அத்திருத்தொட்டித் தீர்த்தம்) மோக்ஷத் தையுந் தந்தது என்றுசொன்னல், பின்பு நீரிழி நோய் - குஷ்டநோய் - பெருவயிற்று நோய் - இருமல் - சுரமென்று கூறப்பட்ட இவைபோன்ற நோய்களைத் தீர்க்குந் தீர்த்தமென்று கூறுவதோ இந்தத் தீர்த்தத்திற்கு மேன்மைப்பாடு? எ-று. (சo)

ஏழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அழிந்தவே தியன்மா பாதகந் தீர்த்த தறிந்துவேந் தமைச்சரு ருள்ளா
ரொழிந்தபா ருள்ளார் வானுளார் வியப்ப முற்றுநல் லுரையுணர் வெல்லாங்
கழிந்தபே ரருளிக் கயவன்மேல் வைத்த காரணம் யாதெனக் கண்ணீர்
வழிந்துநான் மாடக் கூடலு யகனை வழுத்தினர் மகிழ்ச்சியுட் டிளைத்தார்.

(இ-ள்.) பிரமணீகமொழிந்தவனுடைய மகாபாதகத்தைத் தீர்த்தருளிய தையுணர்ந்து மன்னனும் மந்திரிகளும் மதுராபுரியிலுள்ளவர்களும் (பிற) நாட்டிலுள் ளவர்களும் ஆகாயவாசிகளும் ஒருசேர அதிசயிப்ப, நல்ல சொல்லளவைக்கும் உண ரும் உணர்ச்சிக ளெல்லாவற்றிற்கும் அதீதப்பட்ட பெரிய திருவருளை இப்பாதகன் பேரில் வைத்தருளியகாரணம் என்ன? என்று, ஆனந்தக்கண்ணீர் சொரிய நான் மாடக்கூடலாகிய மதுராமாநகரத்தில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக்கடவுளைத் துதித்து இன்பக்கடலிலழுந்தினர்கள். எ-று.

வழிந்து - செயவெனெச்சத்திரிபு. (சக)

மாபாதகந்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கறுஎ.

சிவமயம்.

# இருபத்தேழாவது

# அங்கம்வெட்டினபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேதகந் தரித்த முக்கண் வேதியன் மறையோன் செய்த
பாதகந் தவிர்த்த வாறு பகர்ந்தனம் விஞ்சை யீந்த
போதகன் மனைக்குத் தீங்கு புந்திமுன் னாகச் செய்த
சாதகன் றனைப்போ ராற்றித் தண்டித்த தண்டஞ் சொல்வாம்.

(இ-ள்.) வேதித்தலைக்கைக்கொண்டருளிய திரிநேத்திரங்களையுடைய பிராமணராகிய சோமசுந்தரக்கடவுள், வேதியன்செய்த மகாபாதகத்தைத் தீர்த்தருளிய திருவிளையாடலைக்கூறினேம். (வாட்போர் செய்யும்) வித்தைகற்பித்த ஆசிரியன்மனைவிக்குத் தீமையைப் புத்திபூர்வமாகச் செய்த மாணாக்கனைப் போர்செய்து தண்டித்த தண்டமாகிய (அங்கம் வெட்டின) திருவிளையாடலை (யாம் இனிக்) கூறுவாம். எ-று.

வேதகம் - இரசகுளிகை. செம்பையுருக்கித் தன்னொடு கூட்டி வேதித்துப் பொன்னாக்கியும் பொன்னியல்பைக்காட்டாது தன்னுள்ளடக்கிநிற்கும் வகைபோலப் பசுக்களை அவ்வாறுசெய்தும் அவற்றினியல்பு தோன்றாது அறிவுதந்து நிற்கும் வண்ணம் தன்வியாபகத்தி லடக்கிநிற்பது.

'வேதகந்தரத்து எனவும் பாடம். அவ்வாறாயின், வேதமோதிய கந்தரத்தை யுடைய எனப்பொருள் கொள்க. (க)

கூர்த்தவெண் கோட்டி யானைக் குலோத்துங்க வழுதி ஞாலங்
காத்தர சளிக்கு நாளிற் கடிமதி லுடுத்த கூடன்
மாத்தனி நகருள் வந்து மறுபுலத் தவனு யாக்கை
மூத்தவ னொருவன் வைகி முனையவாள் பயிற்றி வாழ்வான்.

(இ-ள்.) கூர்மைவாய்ந்த வெள்ளிய கொம்பினையுடைய யானைச்சேனையை யுடைய குலோத்துங்க பாண்டியன் உலகத்தைக் காத்து அரசுரிமை செலுத்துங்காலத்தில், காவலமைந்த மதில்சூழ்ந்த மதுரையாகிய ஒப்பில்லாத பெரிய நகரத்தில் அயல் நாட்டிலுள்ளவனுகி மூதிர்ந்ததேகத்தையுடைய ஒரு விஞ்சையன்வந்து குடியேறி, கூர்மைவாய்ந்த வாட்போர் கற்பித்து வாழ்வானாயினான். எ-று. (உ)

வாள்வினைக் குரவ னன்னான் வல்லமண் விடுத்த வேழந்
தோள்வினை வலியா லட்ட சுந்தர விடங்கன் றன்னை
யாள்வினை யன்புந் தானும் வைகலு மடைந்து தாழ்ந்து
மூள்வினை வலியை வெல்லு மூதறி வுடைய னம்ம.

(இ-ள்.) வாட்போர் போதிக்கும் ஆசிரியனாகிய அவ்வயோதகன் வலிய சமணர்விடுத்த யானையைத் தமது திருத்தோளின் போர்த்தொழிலின் வன்மையால் வென்றருளிய சோமசுந்தரக்கடவுளை, சிவபணிவிடையும் சிவநேயமும் தானுமாகத்

தினந்தோறுஞ்சென்று பணிந்து,சம்பவிக்கும் வினையின்றன்மையை வெல்லும் பேரறிவுடையவன். எ-று.

தன்றொழில் போர்த்தொழிலாதலின் யானையை யெய்த மூர்த்தத்தைத் தினமும் பணிந்துவருவானாயினன் எனக் குறித்தனர் என்க. (ங)

கைவினை மறவாள் விஞ்சைக் காவல னவனைத் தாழ்ந்து
தெவ்வினை வெல்வான் கற்குஞ் சிங்கவே றனையார் தம்மு
ளுய்வினை யுணராப் பாவி சித்தனென் றொருவ னுள்ளா
னவ்வினை நிரம்பக் கற்று னாகலூழ் வலியா லன்னான்.

(இ-ள்.) கொலைத்தொழிலையுடைய வாளையேந்தி வீசும் கைத்தொழில் வித்தையில் வல்லவனாகிய முதியோனைப்பணிந்து, பகைவரது போர்த்தொழிலை வெல்ல வாள்வித்தை கற்கும் ஆண்சிங்கம்போன்ற மாணாக்கருள்(பாவச்செயலிலிருந்து) தப்புதலையுணராத பாவியாகிய சித்தனென்று ஒருவனுளன். அச்சித்தன் ஆகூழ்வலியினால் அந்த வித்தைகளைக் குறைவின்றிக் கற்றான். எ-று.

ஆகூழ் - நல்வினை. (ச)

மானவாள் விஞ்சை யாலே தனைநன்கு மதிக்கத் தக்க
தானதோர் செருக்கி னாற்றன் னாசிரி யர்க்கு மாறாய்த்
தானுமோர் விஞ்சைக் கூடஞ் சமைத்துவாள் பலருங் கற்க
வூனுலாம் படைவல் லானி னூதிப மிதப்பக் கொள்வான்.

(இ-ள்.) மானம்பொருந்திய வாள்வித்தையினாலேயேதன்னை (ப்பிறர்) மதிக்கத்தக்கதான ஒருவகை இறுமாப்பினால், தானும் தன் ஆசிரியனுக்கு விரோதமாய் ஒரு வித்தை கற்பிக்குஞ் சிலம்பக்கூடத்தை ஏற்படுத்தி, வாள் வித்தையைப் பலருங் கற்கும்படி நிணம்பொருந்திய ஆயுதவரிசையில் வல்ல தன் ஆசிரியனைக் காட்டிலும் வருவாய் அதிகமாகப் பெறுவானாயினன். எ-று.

விஞ்சைக் கூடமென்று கூறுவது முன்பே. இதனைச் சிலம்பம்என்பதே சிறப்புடைத்து. (ரு)

ஒருத்தனே யிருவர் வாளின் விருத்தியு மொருங்குகொள்ளுங்
கருத்தனாய் விருத்த னூரிற் கழிவது கருதி யனனுன்
வருத்துவா ளிளையர் தன்பால் வரமனந் திரித்து நாளும்
விருத்தமே செய்வான் றாயை விரும்பினோற் கிளையோ னன்னான்

(இ-ள்.) சித்தனொருவனே (தானும்தன்னாசிரியனுமாகிய) இருவர் (அடையும்) வாட்பயிற்சியின் ஊதியத்தையும் ஒருசேர அடையும் மனமுடையவனாகி தன்னாசிரியன் மதுராப்பதியி லிருந்து (தன் ஊர்க்குச்) செல்வது நினைத்து, அவன் கற்பிக்கும் வாட்போர் பயிலும் இளைஞர்கள் தன்னிடத்திற்கற்கும்படிவர, மனதைத் திருப்பி (எப்பொழுதும்) விரோதமே செய்துவருஞ் சித்தன் தாயைப் புணர்ந்த (செய்தியறிந்த தந்தையைக்கொலைசெய்த)வனுக்குச் சகோதரனையொத்தவனாயினன்.

தொடத்தொடப் பொறுக்குந் திண்மைத் தொன்னில மனையா னில்லா
விடத்தவன் றேவி பாற்போ யிடனுண்டே யிடனுண் டேயென்
றடுத்தடுத் தஞ்சா தென்றுங் கேட்டுக்கேட் டகல்வா னாக
நடைத்தொழிற் பாவை யன்ன நங்கைவா ளாவி ருந்தாள்.

(இ-ள்.) தோண்டத் தோண்டப் பொறுக்குந் திண்ணிய பழைமையாகிய பூமிதேவிபோன்ற(பொறுமையுடைய) முதியோன் இல்லாதபொழுது அவன் மனைவி

மாணிக்கமாலையிடஞ்சென்று சமயமுளதோ? சமயமுளதோ? என்று தினந்தோறும் அடுத்தடுத்துக் கேட்டுப்போக, நடத்தற்றொழிலையுடைய பதுமைபோன்ற அந்தப் பெண்மணி (ஒன்றுங்கூறாது) மவுனமாயிருந்தாள். எ-று.

நடைத்தொழிற் பாவை - இல்பொருளுவமையணி. (எ)

பின்னொரு பகல்போய்ச் செங்கை பிடித்தனன் வலிப்பத் தள்ளி
வன்னிலைக் கதவ நூக்கித் தாழக்கோல் வலித்து மாண்ட
தன்னிலைக் காப்புச் செய்தா ளனிமனக் காவல் பூண்டா
ளந்நிலை பிழைத்த தீயோ னனங்கத்தீ வெதுப்பப் போனான்.

(இ-ள்.) பின்பு ஒருநாள்சென்று (குருபத்தினியாகிய மாணிக்கமாலையின்) செவந்தகையைப் பிடித்திழுக்க, ஒப்பில்லாத மனத்தைக் கற்பின்காவலாகக்கொண்ட அவள் (அவனைப்புறந்) தள்ளி,வலிய நிலையையுடைய கதவைச்சாத்தித் தாழ்போட்டு மாட்சிமைப்பட்ட தனது கற்பு நிலையைக் காத்துக்கொண்டாள். (அதனால்) அப்பொழுது (தன் எண்ணந்) தவறிப்போன கொடிய சித்தன் காமாக்கினிசுட வருந்திச் சென்றான். எ-று.

பிழைத்த என்பதற்குத் தவறுசெய்த என்றும் பொருள்படும். (அ)

அறங்கடை நின்றா ருள்ளு மாற்றவுங் கடைய னாகிப்
புறங்கடை நின்றான் செய்த புலமைதன் பதிக்குந் தேற்றாண்
மறந்தவிர் கற்பி னாட்டன் மனம்பொதிந் துயிர்க டோறு
நிறைந்தநான் மாடக் கூட லிமலனை நினைந்து நொந்தாள்.

(இ-ள்.) மகாபாதகருள்ளும் மிகவுங்கடைப்பட்டவனாகிப் புறம்பாய்நின்ற சித்தன் செய்த நீசத்தன்மையை அறக்கற்பினையுடைய மாணிக்கமாலை தன் நாயகனுக்குந்தெரிவியாது தன் மனத்தில் வைத்து உயிர்கள்தோறும் வியாபித்த மதுராபுரியில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளைச் சிந்தித்து வருந்தினாள். எ-று.

கற்பு அறக்கற்பு மறக்கற்பு என இருவகை. தன்னைவழிபடுவோனைப் பரிக்கிரகிக்குங்கற்பு அறக்கற்பென்றும், தனக்குத் தீங்குசெய்வோனை நிக்கிரகிக்குங்கற்பு மறக்கற்பென்றுங் கூறுவர். (கூ)

தாதக நிறைந்த கொன்றைச் சடையவன் புறம்பு செய்த
பாதக மறுக்குங் கூடற் பகவனெவ் வுயிர்க்குந் தானே
போதக னாகித் தேற்றும் புண்ணியன் புலைஞன் செய்த
தீதக முணர்ந்து தண்டஞ் செய்வதற் குள்ளங் கொண்டான்.

(இ-ள்.) உள்ளே மகரந்தம் நிறைந்த கொன்றைமாலை யணிந்த சடையையுடையவனும், புறநாட்டிற்செய்த மாபாதகத்தையுந் தொலைத்தருளிய மதுராபுரீசனும், எவ்வுயிர்க்குந்தானே யுணர்த்துவோனாகி யுணர்த்தும் புண்ணியசொரூபியுமாகிய சோமசுந்தரக்கடவுள், நீசனாகிய சித்தன்செய்த கொடுமையைத் தமது திருவுள்ளத்திலறிந்து அவனை (அதற்காகத்) தண்டஞ்செய்தற்குத் திருவுள்ளஞ் செய்தருளினார்.

பகவன்—ஐசுவரியம் வீரியம் புகழ் திரு ஞானம் வைராக்கியம் என்னும் ஆறுகுணங்களை உடையவனென்பது பொருள். (க௦)

கோளுடைக் குரவ னேபோற் சித்தனைக் குறுகிச் சித்தா
காளையா நீயுஞ் சாலக் கழியமூப் படைந்த யாமும்
வாளம ராடி நந்தம் வலிகளு மளந்து காண்டு
நாளைவா வருது நாமு நகர்ப்புறத் தொருசா ரென்றான்.

(இ-ள்.) வல்லமையுடைய ஆசிரியனைப்போலவே (திருவுருவங்கொண்டு) சித்தனையடைந்து, சித்தா! வாலிப வயதுடைய நீயும் மிக்க விருத்தவயதுடைய நானும் வாட்போர் புரிந்து நம்மிருவருக்குள்ள வலிமைகளையும் அளவுசெய்தறிவோம். நகரத்தின் புறத்திலே ஒருபக்கத்தில் நாளையதினம் (போர்புரிதற்கு) வா. நாமும் வருவோம் என்று கூறியருளினர். எ-று. (கக)

நாதனுங் குரவன் கூற நன்றென வுவந்து நாலாம்
பாதக னதற்கு நேர்ந்தான் படைக்கலக் குரவன் மீண்டு
போதரு மளவில் வையம் புதையிருள் வெள்ளத் தாழ
வாதவன் வைய முந்நீர் வெள்ளத்து ளாழ்ந்த தம்ம.

(இ-ள்.) இறைவனாகிய ஆசிரியன் (இவ்வாறு) கூறியருள, நான்காம் பாதகம் (ஆகிய காமத்தை ஆசிரியன் மனைவிபாற்) செய்தவனாகிய சித்தன் விரும்பி நல்லது என்று அவ்வார்த்தைக் கிணங்கினவனாகி, ஆயுதங்களையேந்திய ஆசிரியன் திரும்பி வருமளவில், நிலவுலகமானது நிறைந்த இருள்வெள்ளத்திலாழும்படி, சூரியனுடைய தேரானது கடலாகிய வெள்ளத்திலழுந்தியது. எ-று.

கொலை களவு கள் காமம் என வழங்குதலே முறையாதலின் நான்காம்பாதகன் எனக் கூறினர். (கஉ.)

ஆசினன் குரவற் கின்னா வாற்றியோன் பாவம் போல
மாசிரு டணிந்த கங்குல் வலிகெட வடிவாள் விஞ்சைத்
தேசிக னொருவ னன்னோன் றிணியுடல் சிதைப்பத் தீட்டுங்
காய்சின வாள்போற் கீழைக் கல்லிடை முளைத்தான் வெய்யோன்.

(இ-ள்.) குற்றமில்லாத தனதுநல்ல ஆசிரியனுக்குத் துன்பஞ்செய்த சித்தனுடைய பாவத்தின் வலிமை போலக், கரிய இருள்தழைந்த இரவின் வலிமை கெட, வடித்த வாட்போர் ஆசிரியன் அச்சித்தனுடைய வலிய சரீரத்தை யழிக்கத்தீட்டிய கொல்லுங் கோபத்தையுடைய வாள்போல, சூரியன் கீழ்த்திசையிலுள்ள உதயகிரியில் உதித்தான். எ-று. (கங)

நன்றியைக் கொன்று தின்றோ னாயக னாணைக் கஞ்சும்
வன்றிற லரிமா னூர்தித் தெய்தவம் வழிபட் டேத்தி
வென்றிவாள் பரிசுக் கச்சு வீக்கிவாள் பலகை யேந்திச்
சென்றுவா ளுழவன் சொன்ன செருக்களங் குறுகி னானே.

(இ-ள்.) (ஆசிரியன் செய்த) நன்றியைச் சிதைத்த சித்தன், சோமசுந்தரக் கடவுளுடைய ஆக்கினைக்கு அஞ்சும் வலிமையுடைய சிங்கவாகனத்தையுடைய துர்க்கையை வழிபட்டுப்பணிந்து, கச்சினைக்கட்டி, வாளையுங் கேடகத்தையுந் தாங்கிச் சென்று, வாளையேந்திய தனது ஆசிரியன் (வடிவங்கொண்டுவந்த சோமசுந்தரக்கடவுள்) கூறியருளிய போர்க்களத்தைச் சேர்ந்தான். எ-று.

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற தெய்வப் புலவர் சொற்படி செய்ந்நன்றி சிதைத்தவன் பெருஞ்சாதனங்களுடையானாயினும் அவை பயன்படா னென்பதுதோன்ற "நாயக னாணைக் கஞ்சும் வன்றிற லரிமா னூர்தித் தெய்வதம்" என்றார்.

மதுரைவா ளமர்க்கு நென்னல் வந்தறை கூவிப் போன
முதுகடும் புலியே றன்ன முடங்குடற் குரவன் றானு

மதிர்கழல் விக்கிச் சச்சு மசைத்துவெண் ணீறுஞ் சாத்திக்
கதிர்கொள்வாள் பலகை தாங்கிக் கயவனுக் கெதிரே வந்தான்.

(இ-ள்.) வலிய வாட்படைதாங்கிச் செய்யும் போருக்கு நேற்றைப்பொழு தில்வந்து அறைகூவிச்சென்ற முதிய கடிய புலியேறுபோன்றகூனிய உடலையுடைய ஆசிரியன் (வடிவமாகச் சோமசுந்தரக்கடவுள்) ஒலிக்கும் வீரகண்டாமணி கட்டி, (அரையிற்) கச்சினையுங்கட்டி, திருவெண்ணீற்றினையும் (திருநெற்றியில்) அணிந்து, ஒளிவீசும் வாளையுங் கேடகத்தையும் (திருக்கரங்களில்) ஏந்தி, சித்தனுக்கு எதிரில் (போர்புரிய) வந்தனன். எ-று.

அறைகூவல் - போர்க்குவா வென்று வலிய அழைத்தல்.

கயவன் - கீழ்மகன். (௪௫)

மடங்கலே றொன்றும் பைங்க ணரியொன்று மலைந்தா லென்ன
முடங்கல்வான் றிங்க ளொன்று முக்கணு நான்கு தோளும்
விடங்கலுழ் மிடறுந் தோற்றா வென்றிவாள் விஞ்சை வேந்து
மடங்கலன் றானு நேரிட் டாடம ராடல் செய்வார்.

(இ-ள்.) ஆண்சிங்கமொன்றும், பசிய கண்களையுடைய நரியொன்றும் தம் முட் போர்செய்தாற்போல, ஆகாயத்தில் உலவும் இளம்பிறையொன்றும், திரிநேத் திரங்களும், நான்கு திருத்தோள்களும், விடம்பொருந்திய திருமிடறும் புலப்படாது, (போருக்குவந்தருளிய) வெற்றிவாய்ந்த வாள்வித்தையில் வல்ல அரசராகிய சோம சுந்தரக்கடவுளும் பகைவனாகிய சித்தனும் தம்முள் எதிர்ந்து வெற்றியோடு போர் செய்யத் தொடங்கினார்கள். எ-று. (௪௬)

எதிர்ப்பர்பின் பறிவர் நேர்போ யெழுந்துவா னேறு போல
வதிர்ப்பர்கே டகத்துட் டாழ்வுற் றடங்குவர் முளைப்பர் வாளை
விதிர்ப்பர்சா ரிகைபோய் வீசி வெட்டுவர் விலக்கி மீள்வர்
கொதிப்பர்போய் நகைப்பா ராண்மை கூறுவர் மாறி நேர்வர்.

(இ-ள்.) (ஒருவரையொருவர்) எதிர்ந்து பின்போவார்கள்; நேரேசென்று எழுந்து துள்ளி இடியேறுபோலக் கோஷிப்பார்கள்; கேடகத்துள் மறைந்து அடங் குவார்கள்; (பின்பு) வெளிப்படுவார்கள்; வாளையசைப்பார்கள்; இடசாரி வலசாரியா கச்சென்று (வாளை) வீசி (ஒருவரையொருவர்) வெட்டுவார்கள்; (அவ்வாறு வெட்டு வதை) விலக்கித் திரும்புவார்கள்; கோபிப்பார்கள்; சென்று சிரிப்பார்கள்; வீரத் தன்மைபேசுவார்கள்; (சாரிகை) மாறி எதிர்ப்பார்கள். எ-று.

இதுமுதலிரண்டு பாடல்களால் வாட்போரின் திறம் விளக்கப்பட்டது. ()

வெந்நிடு வார்போற் போவர் வட்டித்து விளித்து மீள்வர்
கொன்னிடு வாண்மார் மேற்பர் குறிவழி பிழைத்து நிற்ப
ரிந்நிலை நாலைங் கன்ன லெல்லைநின் றாடல் செய்தா
ரந்நிலை யடுபோர் காண்பா ரணைவருங் கேட்கக் கையன்.

(இ-ள்.) புறங்காட்டிப்போவார்போலப்போவார்கள்; சுழன்றுவந்து (போ ருக்கு) அழைத்துத் திரும்புவார்கள்; கூர்மைபொருந்திய வாள்வெட்டை (தமது) மார்பில் ஏற்பார்கள்; (தாம்கொண்ட) இலக்கின் நெறியைத்தப்பி நிற்பார்கள்; இவ் வாறு இருபது நாழிகைவரையிலும் நின்று போர்செய்தார்கள். அப்பொழுது போர்த் தொழிலைக்காண வந்தவர் யாவருங் கேட்கும்படி, சோமசுந்தரக்கடவுளும். எ-று.

ஐயன் என்னும் எழுவாய் வருஞ் செய்யுளில் தண்டஞ்செய்து மறைந்து நின்றான் என்னும் பயனிலையைக்கொண்டு முடிந்தது. (கஅ)

குரத்தியை நினைத்த நெஞ்சைக் குறித்துரை நாவைத் தொட்ட
கரத்தினைப் பார்த்த கண்ணைக் காத்தனை கோடி யென்றென்
றுரைத்துரைத் தவற்றுக் கெல்லா முறுமுறை தண்டஞ் செய்து
சிரத்தினைத் தடிந்து வீட்டித் திருவுரு மறைந்து நின்றான்.

(இ-ள்.) குருபத்தினியை விரும்பிய மனத்தையும், குறித்து (சாமமிக்கு)ப் பேசிய நாவையும், பிடித்தகையையும், உற்றுப்பார்த்த கண்ணையும் (தீத்தொழிலுக் குடன்பட்டவையின்) காத்துக்கொள் என்று அடுத்தடுத்துக்கூறி, அவ்வவயவங்களுக் கெல்லாம் (நீதிநூலிற்சொல்லிய) முறைப்படி தண்டஞ்செய்து, (அவனது) தலையைத் துண்டித்துத்தள்ளித் திருவுருமறைந்தருளினர். எ-று.

"உரைத்துரைத்து" என்றது முற்றுணர்வுடைய னாதலின், யாவுமுணர்ந் தானென்பது புலப்படக்கூறியது. (சக)

போர்கெழு களங்கண் டாருட் பெருபடைக் கேள்விச் செல்வர்
வார்கெழு கழற்கா லானைக் கண்டிலர் மனையிற் றேடி
யேர்கெழு கற்பி னாளை யெங்குற்றான் குரவ னென்னக்
கூர்கெழு வடிவேற் கண்ணாள் போயினர் கோயிற் கென்றாள்.

(இ-ள்.) போர்த்தொழில் நடக்குங் களத்திற் கண்டவர்களில், போர்புரியும் ஆயுதப்பயிற்சியுடைய மாணாக்கர்கள் வாரிற்கோத்த வீரக்கழலணிந்த காலையுடைய தமது ஆசிரியனைக்காணாதவராகி, (அவரது) வீட்டிற்குத் தேடிச்சென்று, அழகுமிக்க கற்பினையுடைய மாணிக்கமாலையைப் பார்த்து, ஆசிரியர் எங்கே போனா ரென்று வினவ, கூர்மைமிக்க வடித்த வேற்படைபோலுங் கண்களையுடைய அம்மாணிக்கமாலை (அவர்) கோயிலுக்குச் சென்றாரென்று சொல்லினள். எ-று.

ஈண்டு வார்கெழுகழற்காலானைக் கண்டிலர் என்றது முதியோன்பால் வாட் போர்கற்றவரை. (உ0)

என்றவப் போதே கோயிற் கேகினான் மீண்டான் றேடிச்
சென்றவர் சித்தன் றன்னைச் செருக்களத் தடுபோர் செய்து
வென்றனை யேபின் னந்த வெங்களத் தெங்குந் தேடி
நின்றனைக் காணா திங்கு நேர்ந்தனம் யாங்க ளென்றார்.

(இ-ள்.) என்று சொல்லிய அப்பொழுதே, கோயிலுக்குப்போன முதியோன் (தன்வீட்டிற்குத்) திரும்பினான். தேடிச்சென்ற மாணாக்கர்கள் சித்தனைப் போர்க்களத்தில் கொலைதீத்தொழிலுக்குரியபோர்புரிந்து வென்றனையே, பின்பு அந்தப் போர்க்களத்தில் (எவ்விடத்துங்) காணாமல், இவ்விடத்தில் நாங்கள் தேடிவந்தோம் என்று சொன்னார்கள். எ-று. (உக)

வினைசெய்தா ரவன்யா னங்ஙனம் வெட்டினே னல்லே னீங்க
ளுனைசெய்வ தெவன்பீ ரென்போற் சித்தனை யுடன்று மாய்த்து
வரைசெய்தோள் விந்தைக் கீந்தார் மற்றிது சுற்றும் வைகைத்
திரைசெய்நீர்க் கூட லெந்தை திருவுளச் செயல்கொ லென்றான்.

(இ-ள்.) வாசம் வீசும் மாலையையணிந்த சித்தனுடைய அங்கத்தை யான் வெட்டினே னல்லேன். நீங்கள் (இப்படி) சொல்வது என்ன? என்னைப்போல யாவர் வந்து சித்தனைக்கோபித்துக்கொன்று மலைபோன்ற அவனது தோளைத் தறித்துத் துர்

க்கைக்குக் கொடுத்... ? இது சூழ்ந்த அலை வீசும் நீர்மயமாகிய வைகை நதியையு டைய மதுராபுரி... லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளுடைய திருவுளச்செயலோ என்று சொ... ர். எ-று. (௨௨)

ம... த கலைவக் கொங்கை மனைவியுஞ் சித்தன் றன்னைக்
... பல் காலும் வந்து கேட்டது நெருநல் வாய்வந்
... ட்டித்தன் கையைப் பற்றி யீர்த்தது முள்ளம் வெருந்து
... டிப் போய்க் கதவந் தாழிட் டிருந்ததுஞ் சாற்றி னாள்.

(இ-ள்.) பூசிய கலவையையுடைய தனங்கள் பொருந்திய மாணிக்கமாலை சித்தன் தன்னைநெருங்கிப் பலதரமும்வந்து (இடமுண்டாவென்று) கேட்டுச்செ ...தும், நேற்றைப்பொழுதுவந்து நெருங்கித்தன்கையைப்பிடித்திழுத்ததும், (அதற் ...ள்) மனம்வெதும்பி (அவனினின்று) நீங்கிக் கதவினைத் தாள்போட்டிருந்ததுஞ் ...ான்னாள். எ-று. (௨௩)

அம்மனை யருளிச் சொன்ன படியெலா மருளிச் செய்து
தெம்முனை யுடைவாள் வீரர் சித்தனை மாய்த்தா ரீது
மெய்ம்மையா மென்று கண்ட மைந்தரும் விளம்பக் கேட்டா
னெம்மையா ளுடைய கூட லிறைவிளை யாட்டே யென்றான்.

(இ-ள்.) தமது தாயாகிய மாணிக்கமாலை வாய்மலர்ந்து கூறிய அவையெல் லாம் திருவாய்மலர்ந்தருளி, பகைவர் முனையை மாய்க்கும் வாளேந்திவர்தவீரர் சித்த னைக் கொலைசெய்தார். இஃது உண்மையாமென்று பார்த்த தன் மாணாக்கருஞ் சொல் லக்கேட்ட முதியோன், எம்மை யாளாகவுடைய மதுராபுரியி லெழுந்தருளிய சோம சுந்தரக்கடவுளின் திருவிளையாடலே என்று கூறினன். எ-று.

அம்மனை யென்றது ஆசிரியன் மனைவி தாயாகலின்.

தெவ் + முனை = தெம்முனை. "தெவ்வென்மொழியே தொழிற்பெயரற்றே - மவ்வரின்வஃகான் மவ்வுமாகும்" என்பது சூத்திரம். (௨௪)

கொடியைநே ரிடையா ளோடுங் கொற்றவா ளிளைய ரோடுங்
கடியநான் மாடக் கூடற் கண்ணுத லடிக்கீழ்த் தாழ்ந்து
நெடியநான் முகனுந் தேறா நெறியது சிறிய வேழை
யடியனே னளவிற் றோநின் னருள்விளை யாட லென்றான்.

(இ-ள்.) பூங்கொடிபோலும் இடையையுடைய மாணிக்கமாலையென்னும் மனைவியோடும், வெற்றியையுடைய வாள்பயிலும் (தன்னுடைய) மாணாக்கரோடும், கா வல்புரியும் மதுராபுரியி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிக் கீழ்ப் பணிந்து, திருமாலும் பிரமதேவரும் தெளிந்துணராத நெறியதாகிய உனது அருள் விளையாட்டு சிறிய ஏழையடியேனது அளவினதோ? என்று கூறினான். எ-று. (௨௫)

தண்மதி வழிவந் தோனு நகருளார் தாமும் பாதி
விண்மதி மிலைந்த வேணி விடையவ னாடல் நோக்கிக்
கண்மலர் வெள்ளத் தாழ்ந்து கனைகட லடியிற் சூழ்ந்து
பண்மலர் கீதம் பாடி யாடினார் பழிச்சி நின்றார்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய சந்திர மரபிற்றோன்றிய குலோத்துங்க பா ண்டியனும் மதுரைப்பதியி லுள்ளவர்களும் அர்த்த சந்திரனைத் தரித்த சடாமுடியை யுடைய இடபாரூடராகிய சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடலைத் தரிசித்து,

தமது கண்கள் சொரியும் ஆனந்தக்கண்ணீர் வெள்ளத்தி லழுந்தி ஒலிக்கும் வீரச் சழலணிந்த திருவடியிற்பணிந்து இசைநிறைந்த கீதங்கள்பாடியாடிப் பணிந்தார்கள்.

**மேற்படி வேறு.**

அடியவருக் கெளியரிவர் பரதேசி காவலனொன் றடிவீழ்ந்[illegible]த்தி, வடியயில்வேற் குலோத்துங்கன் மாணிக்க மாலையெனு மனையா ளோ[illegible]டுந், தொடியணிதோள் புதுமகனைக் களிறேற்றி நகரவலஞ் சூழ்வித்திப்பா[illegible]ன், முடியணிவித் தனந்தகுண பாண்டியற்குத் தன்னிறைமை முழுது மீந்தான்.

(இ-ள்.) வடித்த கூர்மைதங்கிய வேற்படையேந்திய குலோத்துங்கபாண்டியன் அடியார்க் கெளியராகிய இச்சோமசுந்தரக்கடவுள் தமக்கோர் களைகணிலாதவரைக் காத்தலில் வல்லவரென்று திருவடியிற் பணிந்து நமஸ்கரித்து, வாகுவலய மணிந்த தோளையுடைய (வாட்போர்பயிற்றும்) முதுமகனை மாணிக்கமாலை யென்னும் அவன் மனையாட்டியோடும் யானையின்மே லேற்றி மதுராபுரியைப் பிரதக்ஷிணஞ் செய்வித்து, இப்பால் அநந்தகுணபாண்டியனுக்குமகுடஞ்சூட்டித் தனது அரசுரிமை முழுவதுங் கொடுத்தனன். எ-று.

பரதேசி - ஓர் இடத்திலும் பற்றின்றிச் சஞ்சரிப்போன். (உஎ)

நிலைநிலையாப் பொருளுணர்ந்து பற்றிகந்து கரணமொரு நெறியே செல்லப், புலனெறிநீத் தருள்வழிபோய்ப் போதமாந் தன்வலியைப் பொத்திநின்ற, மலவலிவிட் டகலவரா வுமிழ்ந்தமதி போல்விளங்கி மாறி யாடுந், தலைவனடி நிழல்பிரியாப் பேரின்பக் கதியடைந்தான் றமிழர் கோமான்.

(இ-ள்.) நிலைப்பொருளையும் நிலையில்லாப்பொருளையும் உணர்ந்து, பற்றுகளொழிந்து, அந்தக்கரணங்களொருவழிப்பட்டே செல்ல, ஐம்புலன்களின் நெறியினின்று நீங்கித் திருவருள்வழியே சென்று, போதமாகிய தனது வலியை மறைத்து நின்ற ஆணவமலவலி கழன்றொழிய, (விழுங்கிய) இராகு வென்னும் பாம்புமிழ்ந்த சந்திரனைப்போல விளங்கி, கான்மாறியாடிய சோமசுந்தரக்கடவுளுடைய திருவடி நீழலாகிய பிரியாத பேரின்பந்தருஞ் சிவகதியைக் குலோத்துங்கபாண்டியன் அடைந்தனன். எ-று. (உஅ)

எ அங்கம்வெட்டின படலம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கசுoரு.

---

## இருபத்தெட்டாவது,

## நாகமெய்த படலம்.

**எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

செங்கண் மால்விடை மேல்வி டங்கர்செ ருக்க ளத்திடை வாளெடுத்
தங்கம் வெட்டிய சேவ கத்தைய றைந்த னந்தமிழ் மாரன்மேற்
சங்கை யிட்டம ணீசர் ராற்றிய தறுகண் வேள்விமு ளைத்ததோர்
வெங்கண் வாரண வைத்து ணித்துவி ளித்த வாறுவி ளம்புவாம்.



நாகமெய்தபடலம்.

(இ-ள்.) (தாமரைமலர்போலுஞ்) செவந்த விழிகளையுடைய திருமாலாகிய இடபவாகனத்தின்பேரில் எழுந்தருளும் அழகராகிய சோமசுந்தரக்கடவுள் போர்க்களத்தில் வாட்படை தாங்கி (துன்மார்க்கனுகிய சித்தனுடைய) அங்கம் வெட்டிய திருவிளையாடலைக் கூறினேம். பாண்டியன்பேரில் விரோதமுற்றுக் கொடியோராகிய சமணர் செய்த தீயயாகத்திலிருந்து தோன்றிய, கொடிய கண்களையுடைய ஒரு ஒளி பொருந்திய சர்ப்பத்தைத் துண்டித்துக் கொன்றருளிய திருவிளையாடலையும் (யாம் இனி) கூறுவாம். எ-று.

தமிழ் மாறன் - "மருவு முத்தமிழை முன்னாள் வளர்த்த பாண்டியனே போல" எனக்கூறியதற்கேற்ப, தமிழ்வளர்த்த பாண்டியனெனப் பொருள் கொள்க. முளைத்தது - முற்றெச்சம். (க)

கோதி லாதகு ணத்த னந்தகு ணப்பெ ருந்தகை மீனவ
னாதி நாயக னுருவ மாகிய வைந்தெ ழுத்தொடு கண்டிகைவெண்
பூதி சாதன மாவ தேபொரு ளென்று பத்திமை பூண்டுதன்
றாதை யேமுத லாய மன்னவர் தம்பி னுந்தலை யாயினான்.

(இ-ள்.) குற்றமில்லாத குணத்தையுடைய அனந்தகுணனென்னும் பெருந்தகைமையுடைய பாண்டியன் சோமசுந்தரக்கடவுளுடைய திருவுருவமாகிய திருவைந்தெழுத்துடன் உருத்திராக்க கண்டிகையும் தாவள்யமான விபூதியும் ஆகிய சிவசாதனமே உண்மைப் பொருளென்று சிவநேயம் பூண்டு தன் தந்தையே முதலாகிய பாண்டியர்களிலும் அச்சிவபத்தியிற் சிறந்தவனாயினன். எ-று.

"கோதிலாத குணத்து" என்னும் அடை அனந்தகுணனென்னும் பெயர்க் காரணத்தாற் குற்றமின்மை விளங்கப் போந்தது. பத்திமையெனக் குணியைக் குணமாகக் கூறியது மரபு வழுவமைதி. (உ)

அத்த கைச்சிவ சாத னந்தனி லன்பு மிக்கவ னொழுகலா
லத்தன் மெய்த்திரு வைந்தெ ழுத்தொலி யானு நீற்றொளி யானுமுட்
டைத்த வல்லிரு ளும்பு றத்திரு ளுஞ்சி தைந்துப ராபரன்
வித்த கத்திரு வேட மானது மீன வன்றிரு நாடெலாம்.

(இ-ள்.) இத்தன்மையான சிவசாதனத்தில் அன்பு மிகுந்து அனந்தகுண பாண்டியன் ஒழுகுதலால், சிவபெருமானுடைய உண்மையாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் ஓசையாலும், திருநீற்றின் பிரகாசத்தாலும், (உயிர்களின்) அகத்திற்பரந்த வலிய (அஞ்ஞான) இருளும், புறத்திலுள்ள (பூத) இருளுங் கெட்டு, அப்பாண்டியனுடைய அழகிய நாடு முழுவதும் சிவஞானம் பொருந்திய திருவேடமாகப் பொலிந்தன.

ஐந்தெழுத் தொலியால் அகவிருளும், நீற்றொளியால் புறவிருளும் சிதைந்து என முடித்துக்கொள்க. இது முறை நிரனிறை. (௩)

நாயி னுங்கடை யான மாசுட னள்ளி ருட்புரை நெஞ்சரெண்
ணாயி ரஞ்சமண் வேட ரன்னத றிந்து கொண்டுவெ குண்டழற்
றோயி ரும்பென மான வெங்கனல் சுட்டி டத்தரி யார்களாய்
மாயி ருந்தமிழ் மாற னைத்தெற வஞ்ச வேள்வியி யற்றுவார்.

(இ-ள்.) நாயைக் காட்டிலுங் கீழ்ப்பட்ட அழுக்குப்படிந்த சரீரத்தையுடைய பேரிருள்போன்ற மனத்தையுடைய எண்ணாயிரஞ் சமணகுரவர்களும் அதனையுணர்ந்து சினங்கொண்டு, நெருப்பிற்காய்ச்சிய இரும்புபோல மானமற்கிய கொடிய

நெருப்பானது சுட்டுவருத்த (மனம்) பொறாதவர்களாய், பெருமைபொருந்திய தமிழ் வளர்க்கும் பாண்டியனைக் கொல்ல ஆபிசாரயாகஞ்செய்யத் தொடங்கினார்கள். எ-று.

அறிந்துகொண்டு-தற்பொருட்டுப் பொருளில்வந்த வினையெச்சம். (ச)

எல்லை காதம ளந்து சாலையெ டுத்த ழற்படு குண்டமும்
கல்லி யாரழ லிட்டெ ழும்புகை கௌவி யெண்டிசை களுமுறச்
செல்ல வானவு டுக்க ளும்பொரி யிற்பொ ரிந்தன சிதறநீண்
டொல்லை தாவிவி சும்பு தைவர வோட்டி வெங்கனன் மூட்டினார்.

(இ-ள்.) ஒரு காததூரம் அளந்து சாலைகோலி, தீவளர்க்கும் யாக குண்டமுந் தோண்டி நிறைந்த தீயை அக்குண்டத்திலிட்டு, (அக்குண்டத்தினின்றும்) எழும் புகையானது பரந்து அட்டதிசைகளிலும் பொருந்தச் செல்லவும், ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களும் பொரிபோலப்பொரிந்து சிதறவும், ஓங்கி விரைந்து தாண்டி ஆகாயமளாவவும் இடைவிடாது கொடிய யாகாக்கினியை மூட்டினார்கள். எ-று. (ரு)

அத்த ழன்மெறி குண்ட நின்றும கன்பி லத்தெழு வானெனப்
பைத்த துஞ்சிருள் வாயும் வாயிரு பாலும் வாலிய பகிர்மதிக்
கொத்து நஞ்சின மொழுகு பற்களு மூழி யாரழல் விழிகளும்
வைத்த சைந்தொரு வெற்பு வந்தென வந்து ளானொரு தானவன்.

(இ-ள்.) அந்தக் கொதித்தெரியும் யாககுண்டத்தி னின்று, பரந்த பாதலத்தினின்று எழுந்திருப்பவனைப் போலவும், பரந்த நிலைபெற்ற இருள்போன்ற வாயையும், வாயின் இருபக்கலிலும் வெள்ளிய அர்த்தசந்திரர்போன்ற விஷம் பொருந்திய (வக்கிர) தந்தங்களையும், நிறைந்த ஊழித் தீயைச்சொரியும் விழிகளையுங் கொண்டு அசைந்து ஒரு மலை வந்தாற்போலவும் ஒரு அசுரன் வந்து தோன்றினான். எ-று.

குண்டம் நின்றும் ஒரு தானவன் வந்துளானென முடித்துக்கொள்க. (சா)

உதித்த செங்கண ரக்க வஞ்சனு ருத்தெ ழுந்தெரி வடவையிற்
கொதித்த டும்பசி தாக முங்கொடி தாலெ னக்கொடி யோரைநீர்
விதித்தி டும்பணி யாதெ னக்கென மீன வன்றனை மதுரையோ
டெதிர்த்தெ டுத்துவி ழுங்கி வாவென வேவி னாருட னேகினான்.

(இ-ள்.) (அவ்வாறு) தோன்றிய செவந்த கண்களையுடைய வஞ்சகனாகிய இராட்சதன் கோபித்தெழுந்து எரிகின்ற வடவாமுகாக்கினிபோலப் பொங்கி, கொல்லத்தக்க பசியுடனே தாகமுங் கொடிதாயுள்ளதென்று கொடிய சமணர்களை, நீங்கள் எனக்கு விதிக்குங் கட்டளையாதென்று வினவ, மீனக்கொடி தாங்கிய பாண்டியனை மதுரையோடு எதிர்த்து எடுத்து விழுங்கிவா என ஏவினார்கள் (அசுரன் அக்கட்டளை யேற்று) உடனே சென்றான். எ-று. (எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாயுடை யவர்வி ட்ட விடநாகப் படிவுகொ ணிசிசர னிலனண்டந்
தோயுட லினனுடல் விடமூறிச் சொரிதொளை யெயிறினன் வடவைச்செந்
தீயுடை யனலென வெறிகண்ணன் றிணியிருள் வரைமுழை யெனவிண்ட
வாயுடை யவனெடு நெறிமுன்னி மழைநுழை வரையென வருகின்றான்.

(இ-ள்.) பாயை ஆடையாகவுடுத்த சமணர்கள் ஏவ, விஷம்பொருந்திய பாம்பு வடிவங்கொண்ட இராக்ஷதன் நிலவுலகினின்றும் விண்ணுலகளாவுஞ் சரீரமுடையவனாகி, வருத்துகின்ற விஷமானது ஊற்றெடுத்துச் சிந்தும் தொளைபொருந்திய வக்கிரதந்தங்களை யுடையவனாகி, செவந்த வடவாமுகாக்கினியை யுடையனவென்று

சொல்லும்படி தீச்சொரியுங் கண்களையுடையவனாகி, திணிந்த இருண்மயமான மலைக் குகைபோல் பிளந்த வாயையுடையவனாகி, நெடிய வழியில் முற்பட்டு மேகங்கள் சஞ்சரிக்கும் மலைபோல வருகின்றவனாயினான். எ-று.

எயிறினன் - கண்ணன் - உடையவன் என்னுங் குறிப்பு வினைமுற்றுகள் வேறு பல வடுக்கி வினையெச்சங்களாய்த் தனித்தனி வருகின்றான் என்னும் வினை முற்றைக் கொண்டு முடிந்தன. (அ)

அரவிறை புறைபிலம் வெளிகாண வரையுடல் புதைபட நிலம்விள்ள
வருவிழி யழலெழ வுயிர்கான்முன் வளியுளர் கிளர்வலி விளிவெய்தப்
பொருசின விழியெதிர் படுபைங்கூழ் புகையெழ வனமரை பொரிபொங்கர்
கருகிட முதுசினை யிறைகொள்ளுங் ககநிரை சிறைசுருள் படவீழ.

(இ-ள்.) சர்ப்பராசனாகிய ஆதிசேடன் வாழும் பாதலம் பிளவுறும்படி மலை போன்ற தனது சரீரம் புதைதலால் பூலோகம் பிளவுறவும், கண்களினின்று கோபாக்கினி யெழவும், விடுகின்ற மூச்சின் முன்னே சஞ்சரிக்குங் காற்றினது வன்மை கெடவும், போர்புரிதற்குரிய கோபம் பொருந்திய கண்களுக் கெதிர்ப்பட்ட பசிய பயிர்கள் புகைந்து வாடவும், காடுகளும் பொருக்குகள் பொருந்திய தூறையுடைய சோலைகளுங் கருகவும், பெரிய மரக்கிளைகளில் வசிக்கும் பறவைக் கூட்டங்கள் சிறகுகள் கருகிச் சுருண்டு (நிலமிசை) விழவும். எ-று.

இச்செய்யுளும் வருஞ் செய்யுளும் ஒரு தொடர். (கூ)

அகனிலம் வெருவுற நிலனேந்து மரவிறை வெருவுற வெயில்காலும்
பகன்மதி வெருவுற விவைகௌவும் பணிகளும் வெருவுற வகநிக்கின்
புகர்மலை வெருவுற வடுதண்டப் புரவலன் வெருவுற வருசெங்கண்
ணகைமதி புரையெயி றவன்மாட நகரெதிர் குடவயின் வருமெல்லை.

(இ-ள்.) பரந்த நிலவுலகம் அஞ்சவும், அந்த நிலவுலகத்தைத் தாங்கும் சர்ப்பராஜனாகிய ஆதிசேடன் அஞ்சவும், ஒளிவீசுஞ் சூரிய சந்திரர் அஞ்சவும், சூரிய சந்திரர்களைப் பற்றும் இராகுகேதுக்கள் அஞ்சவும், அகன்ற திக்குகளிலுள்ள புள்ளிதங்கிய அஷ்டகுல பர்வதங்கள் அஞ்சவும், கொலைசெய்யுந் தண்டாயுதமேந்திய இயமன் அஞ்சவும் வராநின்ற செவந்த கண்களையும் பிரகாசிக்கின்ற அர்த்த சந்திரன்போன்ற பற்களையுமுடைய இராட்சதன், மாடங்கள் பொருந்திய மதுராபுரிக்கெதிரே மேலைத் திசை(நோக்கி) வருங்காலையில். எ-று. (கo)

கண்டவர் கடிநகர் கடிதோடிக் கெளரிய னடிதொழு தடிகேணங்
கொண்டல்கண் வளர்மதில் வளைகூடற் குடவயி னொருபெரு விடநாக
மண்டமு மகிலமு மொருவாயிட் டயிறர வருவதை யெனநீள்வாய்
விண்டுகொண் டணைவதை யெனவோடும் வெருவலன் மதிகுல மறவீரன்.

(இ-ள்.) பார்த்தவர்கள் காவல்பொருந்திய மதுராபுரிக்கு விரைந்துபோய், பாண்டியனுடைய பாதங்களைப்பணிந்து, அடிகளே! நமது மேகங்கள்துயிலும் மதில் சூழ்ந்த மதுரையின் மேலைத்திசை (நோக்கி) பெரிய விஷத்தையுடைய ஒரு சர்ப்பமானது அண்டங்களையும் நிலவுலகத்தையும் ஒருவாயிற் போட்டுண்ண வருவதுபோல நீண்ட வாயைத் திறந்து வருகின்றதென்று சொல்லவும், சந்திர வமிசத்திற்றோன்றிய பாண்டியன் (அவ்வார்த்தைக்குச் சற்றும்) அஞ்சானாயினன். எ-று. (கக)

மற்றிது முனமத கரிவிட்டோர் வரவிட வருவதை யெனவெண்ண
முற்றிது தனையும் விளித்தற்கெம் முடையவர் விடையவர் விடநாகன்

சுற்றிய சடையின ருளரென்னச் சுரருல கிழிசுட ரெனநிற்குங்
கற்றவி யிடையுறை யிறைமுன்போய்க் கனைகழ லடிதொழு தவழுகிற்பான்.

(இ-ள்.) இந்தச் சர்ப்பமானது மதமயக்கத்தையுடைய யானையை முன்னே ஏவிய சமணர்கள் செலுத்த வருவது என்று எண்ணங்கொண்டு, இதனையுங் கொல்லுவதற்கு, எம்மை யாளாகவுடையவரும் இடபவாகனரூடரும் விடம்பொருந்திய சர்ப்பத்தைச்சூழ்ந்த சடையையுடையவருமாகிய சோமசுந்தரக்கடவுள் துணையுள்ளாரென்று, தேவலோகத்தி னின்று மிறங்கிய சூரியனைப்போல விளங்கும் மாணிக்கத்தாலமைந்த விமானத்தில் எழுந்தருளிய பெருமானது சந்நிதியிற் சென்று, சத்திக்கும் வீரக்கழலணிந்த திருவடியைப் பணிந்து சொல்லுகின்றான். எ-று. (கஉ)

வழிவழி யடிமைசெய் தொருபோது மறவலன் வழிபடு மடியேனின்
மொழிவழி முறைசெய்து வருவேனிம் முதுநக ரடையவு மமணீச
ரழிவது கருதினர் விடுநாக மடைவது னருள்வழி யதனுவி
கழிவது கருதிய வடியேனைக் கருணைசெய் தருளிது கடனென்றான்.

(இ-ள்.) என் மரபுவழியே அடிமை செய்து ஒரு காலத்தும் மறவாது வழிபாடு செய்யும் அடியேன், தேவரீரது திருவார்த்தைகளாகிய வேதாகமங்களின் வழியே அரசியல் செய்துவராநின்றேன். சமணர்களாகிய நீசர்கள் இந்தப் பழைய மதுராபுரிமுழுவதும் அழிவதைக்கருதி ஏவியசர்ப்பம் வராநின்றது. தேவரீரது திருவருளின் வழியே அந்தச் சர்ப்பத்தின் உயிர் நீங்குதலைக் கருதிய அடியேனுக்குத் திருவருள் செய்தருளுவீர். இது தேவரீரது கடனென்று குறையிரந்தான். எ-று. (கங)

அனுமதி கொடுதொழு திறைபாத மகமதிற் கொடுபுற னடைகின்ற
பனிமதி வழிவரு தமிழ்மாறன் பகழியொ டுசிலை யினனேகிக்
குனிமதி தவழ்தரு மதினீடுங் கொடியணி குடகடை குறுகாமுன்
றனிவரை யெனநிகர் தருகோபத் தழல்விழி யரவினை யெதிர்கண்டான்.

(இ-ள்.) விடைபெற்று மீண்டும் வணங்கி, சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிகளைத் தனது மனத்திற்கொண்டு செல்கின்ற குளிர்ந்த சந்திரமரபிற் றோன்றிய அனந்தகுண பாண்டியன் பாணத்தோடு கொலைத்தொழிற் குரிய வில்லையேந்தியவனாய்ச் சென்று வளைந்த சந்திரன் தவழாநின்ற மதிலில் ஓங்கிய துவசங்கட்டிய மேற்றிசை வாயிலை யடைவதற்கு முன், ஒப்பற்ற மலையென்று சொல்லத்தக்க (கோபத்) தீச்சொரியுங் கண்களையுடைய சர்ப்பத்தை எதிரே கண்டான். எ-று. (கச)

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பல்பொறிப் பகுவாய்ப் படம்புடை பரப்பிப் பக்கமெண் டிசையொடு விசும்பிற், செல்கதிர் புதைத்துத் திணியிருள் பரப்பித் திங்களின் பகிர்புரை நஞ்சம், பில்கெயி றதுக்கிப் பெரிதுயிர்த் தகல்வாய் பிளந்துமா நகரொலா மொருங்கே, யொல்லெனக் கௌவி விழுங்குவான் சீறி யுருத்தன னுரகவா ளவுணன்.

(இ-ள்.) பல புள்ளிகளையும் பிளந்த வாயையுமுடைய படங்களைப் பரப்பி, பக்கங்களிலுள்ள அஷ்டதிக்குகளையும் ஆகாயத்திற் செல்லுஞ் சூரியனையும் மறைத்து, நெருங்கிய இருளைப் பரப்பி, அர்த்தசந்திரன்போன்ற விஷஞ்சொரியும் வக்கிர தந்தங்களை அதுக்கிப் பெருமூச்சுவிட்டு, அகன்ற வாயைப்பிளந்து பெரிய நகரையெல்லாம் ஒருசேரக் கௌவி விழுங்க, ஒள்ளிய சர்ப்பவடிவாய் வந்த இராக்ஷதன் சீறிக் கோபித்தான். எ-று. (கரு)

அடுத்தன னரச சிங்கமே விடியே றஞ்சவார்த் தங்கையிற் சாப
மெடுத்தன னொடுநா ணிருதலை வணக்கி யெரிமுகக் கூர்ங்கணை தொடுத்து
விடுத்தனன் விடுத்த சரமெலா முரகன் வெறுந்துகள் படக்கறித் துமிழ்ந்து,
படுத்தனன் பொறாது பஞ்சவன் புராரி பங்கயச் சேவடி நினையா.

(இ-ள்.) அரசருள் ஆண்சிங்கம்போன்ற அநந்தகுண பாண்டியன் சமீபித்து, இடியேறு அஞ்சும்படி கோஷித்து, அழகிய தனது கையில் வில்லைத்தாங்கி நெடிய நாணைச் செவ்வே வளைத்து, தீமுகத்தையுடைய கூரிய அம்பைத் தொடுத்து விடுத்தான். விடுத்த அம்புகளையெல்லாம் பாம்பின்வடிவாகவந்த அந்த ராக்ஷதன் வெறுந்தூளாகக் கடித்து உமிழ்ந்து சிதைத்தான். பாண்டியன் மனம்பொறாமல் சோமசுந்தரக்கடவுளினுடைய தாமரை மலர்போன்ற செவந்த திருவடியைத் தியானித்து.

புராரி-திரிபுரங்களைச் சிரித்தெரித்தவன்; சிவபெருமான். (௧௬)

கொடியதோர் பிறைவா யம்பினை விடுத்துக் கோளரா வளையுட றுணித்தா
னிடியதோ வெனவார்த் தெரிநிறக் குருதி யிறங்கிவீ ழருவியிற் கவிழ
நெடியதோ ருடலம் புரள்படக் கூர்வா னெளிதர விளிபவன் மேலைக்
கடியதோ ரால காலவெள் ளம்போற் கக்கினான் கறையிரு ணஞ்சம்.

(இ-ள்.) கொடிய ஒரு அர்த்த சந்திராஸ்திரத்தைச் செலுத்தி வலிய பாம்பின் வளைந்த உடலைத்துண்டித்தான். இடியோவென்னும்படி கோஷித்து, செந்நிறம் பொருந்திய இரத்தமானது ஒலித்து வீழும் அருவியைப்போலக் கவிழவும், நெடிய ஒப்பில்லாத சரீரம் புரளவும், கூரிய வால் நெளியவும் இறக்கும் இராக்ஷதன் முன் தோன்றிய கடிய ஒப்பில்லாத ஆலாகலவெள்ளம்போலக் கரிய இருள்போன்ற விஷத்தைக் கக்கினான். எ-று.

கடியதோர் ஆலகாலவெள்ளம்போல என்றது பாற்கடலிற்றோன்றிய விஷம்போல என்பதாம். (௧௭)

தீவிட முருத்துத் திணியிருள் கடுப்பத் திருநக ரெங்கணுஞ் செறிந்த
காவிடங் கூவல் கயந்தலை சதுக்கங் கழகமா வணமக ழிஞ்சி
கோவிட மாட முபரிகை மேடை கோபுர மரங்கெலாம் பரந்து
தாவிட மயங்கி யுறங்கினார் போலச் சாம்பினார் தனிநகர் மாக்கள்.

(இ-ள்.) தீப்போன்ற விஷம் கோபித்துத் திணிந்த இருள்போல மதுரை நகரமுழுவதும், நெருங்கிய சோலையும், கிணறும், குளமும், நாற்றெருக் கூடுமிடமும், கல்விச்சாலையும், கடைவீதியும், அகழியும், மதிலும், இராசக்கிருகமும், மாடமும், உபரிகையும், மேடையும், கோபுரமும், நாட்டியசாலையுமாகிய எல்லாவற்றிலும் பரந்து தாவ, ஒப்பில்லாத நகரத்திலுள்ள மாந்தர்கள் (விடத்தால்) மயங்கி உறங்கினவர்கள் போல வாடினார்கள். எ-று. (௧௮)

நிலைதளர்ந் துடலந் திமிர்ந்துவேர் வரும்பி நிறைபுலன் பொறிகர ணங்க
டலைதடு மாறி யுரைமொழி குழறித் தழுதழுப் படைந்துநா வணங்கி
மலைதரு கபமே னிமிர்ந்துணர் வழிந்து மயங்கிமூச் சொடுங்கியுள் ளாவி
யலைதர ஊச லாடினார் கிடந்தா ரன்னதொன் னகருளா ரெல்லாம்.

(இ-ள்.) நிலைகெட்டு உடல் கம்பித்து வேர்வை யரும்பி, நிறைந்த புலன்களும் இந்திரியங்களும் அந்தக் கரணங்களும் (தத்தமக்குரிய) இடந் தடுமாறுதலால், சொற்கள் குழறித் தழுதழுப்பேறி நாவுலர்ந்து, கபம் மேலெழுந்து; அறிவழிந்து மயங்கிப் பெருமூச்சுவிட்டு அந்தத் தொன்றுதொட்டுள்ள மதுரையிலுள்ளாரெல்லாரும் உள்ளேயுள்ள பிராணன் ஊசல்போலலையத் தள்ளாடிக் கிடந்தார்கள். எ-று. (௧௯)

தென்னவன் விடங்கண் டஞ்சுமால் போலச் சினகர மடைந்துதாழ்ந்
தெந்தாய், முன்னவ வாதி முதல்வவித் தின்றி முளைத்தவ முடிவிலா முனிவ,
வென்னவ வன்பர்க்கெளியவ யார்க்கு மிறையவ விந்நகர்க் கென்று, மன்ன
வ் வனாதி மறையவ முக்கண் வானவ நினைச்சர ணடைந்தேன்.

(இ-ள்.) அனந்தகுண பாண்டியன், விஷத்தைக்கண்டு அச்சமுற்று (கைலை யிற் சென்று சரணடைந்து) நின்ற திருமால்போல, திருக்கோயிலை யடைந்து பணிந்து, எந்தையே! முதற்கடவுளே! ஆதியாகிய முதல்வனே! மூலமில்லாமல் தோன்றியனே! அழிவில்லாத முனிவனே! எனக்குப் புதுமையை விளைவிப்பவனே! அடியார்க் கெளியவனே! (தேவர் முதலிய) எல்லோருக்குந் தலைவனே! இம்மதுராபுரிக்கு எப் பொழுதும் அரசாயுள்ளவனே! அநாதியாயுள்ள வேதியனே! திரிநேத்திரங்களையு டைய கடவுளே! உன்னைச்சரணடைந்தேன். எ-று. (உ0)

அடுத்துவந் தலைக்கு மாழியைத் துரந்து மாழியுண் டேழுமொன் றாக
த், தொடுத்துவந் தலைக்கும் பெருமழை தடுத்துந் துளைக்கைவிண் டுழாவ
வெண் பிறைக்கோ, டெடுத்துவந் தலைக்குங் களிற்றினை விளித்து மிந்நகர்
புரந்தனை யின்று, மடுத்துவந் தலைக்கும் விடத்தினன் மயங்கும் வருத்தமுங்
களைதியென் றிரந்தான்.

(இ-ள்.) அடுத்துவந்து வருத்துங் கடலைச் சுவறச்செய்தும், கடல்பருகிச் சத்தமேகங்களும் ஒன்றாகத் திரண்டுவந்து பெய்து துன்புறுத்தும் பெருமழையைத் தடுத்தும், வெள்ளிய அர்த்த சந்திரன் போன்ற கொம்பினிடையே துதிக்கையை விண்ணுலகத்துழாவ மேலெடுத்து வருத்தும் யானையைக் கொன்றும், இந்த மதுரைப் பதியைப் பாதுகாத்தாய்;(அவைபோல) இப்பொழுதும் அடுத்துவந்து வருத்தும் விஷத்தினால் மயங்கும் வருத்தத்தையுங் களைவாயென்று யாசித்தான். எ-று.

இச்செய்யுள் பழமையைப் பாராட்டிப் பிரார்த்தித்ததாம்.

கடல்சுவற வேல்விட்டதும், நான்மாடக் கூடலானதும், யானையெய்ததும் தன் முதாதைகள் பொருட்டும் மதுரை வாசிகள் பொருட்டு மாதலின் இப்பொழுதும் இவ்விடவேகத்தைத் தன் பொருட்டும் அந்நகரத்தார் பொருட்டும் தவிர்க்க வேண்டுமென்று பாண்டியன் யாசித்தான். (உக)

அருட்கட லனைய வாதிநா யகன்ற னவிர்சடை யணிமதிக் கொழுந்தின்
பெருக்கடை யமுதத் தண்டுளி சிறிது பிலிற்றினன் பிலிற்றிட லோடும்
பொருக்கெனெ வெங்கும் பாலினிற் பிரைபோற் புரையறக் கலந்துபண் டுள்ள
திருக்கிளர் மதுரா நகரமாப் புனிதஞ் செய்த்தச் சிறுதுளி யம்ம.

(இ-ள்.) கிருபா சமுத்திரம்போன்ற சோமசுந்தரக்கடவுள் தனது பிரகாசிக்கின்ற சடையிலணிந்த, சந்திரனது பெருக்கமைந்த அமுதத்தின் தட்பமாகிய துளியைச் சிறிது சிந்தினர். (அவ்வாறு) சிந்தவும், பாலிற்பிரைபோல விரைந்து எவ்விடத்திலும் குற்றமறக் கலந்து, முன்னமைந்த செல்வமிக்க மதுராநகரமாக அந்தச்சிறிய அமுதத்திவலை புனிதஞ்செய்தது. எ-று.

அருட்கடலென்பதற்குச் சித்தமூர்த்தியாய் வந்தருளிய கருணைக்கடலெனவும் பொருள்கூறுவர். (உஉ)

இரவிமுன் னிருள தெனவிறை யருண்முன் னிருண்மல வலியென வெங்கும்
பாவிய வமுதால் விடமகன் றவசப் படிவொழிந் தியாவரு மின்பம்
விரவிய களிப்பின் மேவின ரிருந்தார் மீனவர் பெருந்தகை வேந்த
னரவணி சடையார்க் கன்புருத் தானே யாகிமண் காவல்செய் திருந்தான்.

(இ-ள்.) சூரியன் சந்நிதிக்குமுன்னே இருள் (ஓடுதல்) போலவும், சிவபெருமானது திருவருளின்முன்னே ஆணவமலத்தின் வலிமை (சிதைதல்)போலவும், எவ்விடத்திலும் பரவிய அமுதத்தினால் விஷத்துன்பத்தையகன்று எல்லோரும் துக்கசொரூபம் நீங்கி இன்பங்கலந்த சந்தோஷத்திற் பொருந்தியிருந்தார்கள். பாண்டியருள்பெருந்தகைமை யமைந்த அனந்தகுணபாண்டியன் சர்ப்பத்தை யணிந்த சடையையுடைய சோமசுந்தரக்கடவுளுக்கு அன்பே ஒருவடிவமாகி நிலவுலகத்தைப் பாதுகாத்திருந்தான். எ-று.

சூரியன்முன் இருள் கெடுதலும், சிவசந்நிதியில் ஆணவவலி கெடுதலும் போல, அமுதத்தின்முன் விடவலி நீங்கியது என்பது கருத்து. (௨௫)

நாகமெய்தபடலம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் ௧௬௨௫:

---

# இருபத்தொன்பதாவது,

# மாயப்பசுவை வதைத்தபடலம்.

கலிநிலைத்துறை.

சுருதி யின்புறத் தவர்விடு மராவினைச் சுருதி
கருத ரும்பர னருளுடைக் கௌரியன் றுணித்த
பரிசி தங்கது பொருதமண் படிறர்பின் விடுப்ப
வருபெ ரும்பசு விடையினுன் மாய்த்ததும் பகர்வாம்.

(இ-ள்.) வேதபாஹ்யர்களாகிய சமணர்களேவிய சர்ப்பத்தை, அவ்வேதமானது சிந்தித்தற்கரிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளுடைய அனந்தகுணபாண்டியன் துண்டித்த தன்மை இத்திருவிளையாடல். அச்செயல்கண்டு மனஞ்சகியாத சமணர்களாகிய வஞ்சகர் பின்னே செலுத்தவந்த பெரிய பசுவை, அதிகாரநந்திதேவரால் (சோமசுந்தரக்கடவுள்) வதைத்தருளிய திருவிளையாடலை (இனி யாம் எடுத்துக்) கூறுவாம். எ-று. (௧)

பணப்பெ ரும்பகு வாயுடைப் பாந்தளை யனந்த
குணப்பெ ருந்தகை துணித்தபின் பின்வரு குண்டர்
தணப்ப ருங்குழாங் காலினுற் றள்ளுண்டு செல்லுங்
கணப்பெ ரும்புயல் போலுடைந் தோடினா கலங்கி.

(இ-ள்.) படமமைந்த பெரிய பிளவுபட்ட வாயையுடைய சர்ப்பத்தை அனந்தகுணபாண்டியன் துண்டித்துச் சிதைத்தபிறகு, அச்சர்ப்பத்தின் பின்னே வந்த நீங்குதலில்லாத சமணக்கூட்டத்தவர், காற்றினால் கலக்குண்டு சிதைந்தோடும் பெரிய மேகசாலம்போலப் புறமுதுகிட்டு நிலைகலங்கி யோடினார்கள். எ-று. (௨)

உடைந்து போனவ ரனைவரு மோரிடத் திருள்போ
லடைந்து நாமுன்பு விடுத்தமால் யானைபோ லின்று

தொடர்ந்த பாம்பையுந் தொலைத்தனர் மேலினிச் சூழ்ச்சி
மிடைந்து செய்வதை யாதென வினயமொன் றோர்வார்.

(இ-ள்.) புறமுதுகிட்டோடிய யாவரும் இருள்போல ஓரிடத்திற்சேர்ந்து, நாம் முன்புவிடுத்த மதமயக்கத்தையுடைய யானையைச் சிதைத்ததுபோலவே இப்பொழுது விடுத்த நாகத்தையும் நாசஞ்செய்தனர். இனிமேல் நாம் ஒருசேர நெருங்கி ஆலோசிப்பது யாதுளது? என்று, ஒருவினயத்தை எண்ணத்தொடங்கினார்கள். எ-று.

ஆவை யூறுசெய் யார்பழி யஞ்சுவா ரதனை
யேவு வாமிது வேபுணர்ப் பென்றுசூழ்ந் திசைந்து
பாவ காரிகள் பண்டுபோற் பழித்தழல் வளர்த்தார்
தாவி லாவுரு வாகியோர் தானவன் முளைத்தான்.

(இ-ள்.) பசுவைக் கொலைசெய்யார்கள் ; பழிக்கஞ்சுவார்கள்; அதனை விடுப்போம்; இதுவே யாலோசனை யென்று சூழ்ச்சிசெய்து எல்லோருமொத்து,பாவகாரிகளாகிய சமணர்கள் முன்போல ஆபிசாரயாகஞ் செய்தார்கள் ; கெடுதலில்லாத பசுவின்வடிவாகி (அவ் யாகாக்கினியில்) ஒரு அசுரன் தோன்றினன். எ-று.

ஆவையூறு செய்யார் என்றது பசுவின் வடிவத்தில் தேவர்யாவரும் மிடைந்திருந்தலி னென்க. இதனை, திருத்தொண்டர்புராணம் சண்டேசுர நாயனார் சரிதத்தும், சிவதருமோத்தரம் கோபுரவியலிலும் கண்டுகொள்க. (ச)

குண்ட முற்கணின் றெழுந்தவக் கொடியவெம் பசுவைப்
பண்டு போலவர் விடுத்தனர் கூடலம் பதிமே
லுண்டு மில்லையு மெனத்தடு மாற்றநூ லுரைத்த
பிண்டி யானுரை கொண்டுழல் பேயமண் குண்டர்.

(இ-ள்.) உண்டென்றும் இல்லையென்றுங் கூறுந் தடுமாற்றத்தையுடைய நூலைக்கூறிய அசோகநிழலில் வசிக்கும் அருகனுடைய பொய்யுரையை(மெய்யெனக்) கொண்டு திரியும் பேய்க்குணம்வாய்ந்த சமணராகிய கீழ்மக்கள், யாகத்தீயினின்று மெழுந்த அக்கொடிய பசுவை, மதுரைப்பதியின்பேரில் முன்போல ஏவினார்கள்.

உண்டுமில்லையுமென என்றது "அஸ்தி நாஸ்தி" எனக்கூறுவது. இது அவர் தத்துவார்த்தமொழி. [அஸ்தி - தாம் கூறியது உள்ளதெனவும், நாஸ்தி சுவர்க்கம் நரகம் கடவுள் இல்லையெனவுங் கூறல்] பிண்டியான் உரை என்பது பூர்வாகமமுதலிய நூல்கள். அவை—பூர்வாகமம்-அங்காகமம் - வெகுசுருதி முதலியன. (ரு)

கலிவிருத்தம்.

மாடமலி மாளிகையி லாடுகொடி மானக்
கோடுகளி னேடுமுகில் குத்திமிசை கோத்துச்
சேடன்முடி யுங்கதிர்கொள் சென்னிவரை யுந்தூ
ளாடவடி யிட்டுலவை யஞ்சிட வுயிர்த்தே.

(இ-ள்.) மேல்மாடங்கள்மிக்க மாளிகையில் ஆடாநின்ற கொடிகளைப்போல, தனதுகொம்புகளினால் ஆகாயத்திலோடும் மேகங்களைக்குத்தி அவற்றின்மேற் கோத்து,ஆதிசேடன் முடியும் விளக்கமமைந்த சிகரத்தையுடையமகமேருவும் பொடிபடக் கால் (பெயர்த்து)வைத்து, காற்றஞ்சும் பெருமூச்சுவிட்டு. எ-று.

இதுமுதல் நான்கு பாடல்கள் குளகம். (சு)

விடுத்திடுமு யிர்ப்பினெதிர் பூளைநுரை வீபோ
லடுத்திடுச ராசர மனைத்துமிரி வெய்தக்

கடுத்திடுசி னக்கனலி னுக்குலக மெல்லா
மடுத்திடுதெ ழற்கடவுள் வார்புனலை மான.

(இ-ள்.) பெருமூச்சிற்கு எதிர்ப்பட்ட நிலையியற்பொருளும் இயங்கியற்பொருளுமாகிய யாவும், தேன் சொரியும் பூளைப்பூப்போலப் பறக்கவும், மிகுந்த கோபாக்கினிக்கு உலகமுழுவதையும் அழிக்கப்பரந்த தீக்கடவுள் வெப்பங்குறைந்து பெருகிய நீர்வெள்ளத்தை யொப்பத் தண்ணியதாகவும். எ-று.

இதன் கோபாக்கினிக்கு வடவாமுகாக்கினியும் குளிர்ந்துள்ளதன்மையோடிருக்குமென்பார். "உலகமெல்லாமடுத்திடுதெழற்கடவுள்வார்புனலைமான" என்றார்.

உடன்றிறைகொள் புள்ளொடு விலங்கலறி யோட
மிடைந்தபழு வத்தொடு விலங்கலைம ருப்பா
லிடந்தெறிம ருத்தென வெறிந்தளவி லோரைத்
தொடர்ந்துடல்சி தைந்துயிர் தொலைத்திடியி னார்த்தே.

(இ-ள்.) தம்முட் போர்செய்து வாழும் பறவைகளுடன் மிருகங்களுங் கதறியோட, நெருங்கிய சோலையோடு மலைகளையுங் கொம்பினால் வேரோடு பறித்து வீசுஞ் சண்டமாருதத்தைப்போல எங்குஞ்சிதறவீசி, கணக்கிறந்தவர்களை யெதிர்ந்து சரீரத்தையழித்து உயிர்போக்கி, இடிபோலக் கோஷித்து. எ-று. (அ)

மறலிவரு மாறென மறப்பசுவ ழிக்கொண்
டறலிவர்த டம்பொருநை யாறுடைய மாறன்
றிறலிமலர் மங்கையுறை தென்மதுரை முன்னு
விறலிவரு கின்றதது மீனவ னறிந்தான்.

(இ-ள்.) இயமனதுவருகைபோலக் கொலைத்தொழிலையுடைய பசுவானது வழிக்கொண்டு, கருமணல் பரந்த விசாலித்த தாமிரபர்ணியையுடைய அனந்தகுண பாண்டியனுடைய, வறுமையோடுபகைத்துவென்று, இலக்குமி வசிக்குந்தென்றிசையிலுள்ள மதுரையை முற்பட்டு (எதிர்ப்பட்டவர்களை) வெற்றிகொண்டு வராநின்றது. அதனைப் பாண்டியன் தெரிந்துகொண்டான். எ-று.

திறலி-விறலி என்பன — பெயர்ச்சொல்லடியாகப் பிறந்த இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சங்கள். (கூ)

மீனவனு மாநகருண் மிக்கவரு முக்கண்
வானவனை மாமதுரை மன்னவனை முன்னோர்
தானவனை யாழிகொடு சாய்த்தவனை யேத்தா
வானதுரை செய்துமென வாலய மடைந்தார்.

(இ-ள்.) மீனக்கொடிதரித்த அநந்தகுண பாண்டியனும் பெரிய மதுராபுரியிலுள்ள மேலோரும், திரிநேத்திரங்களையுடைய கடவுளை, பெரிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரபாண்டியனை, முற்காலத்தில் ஓர் அசுரனைச் சக்ராயுதங் கொண்டு கொன்றவனைத்தோத்திரஞ்செய்து, நிகழ்ந்தசெய்தியைக்கூறுவோமென்று திருக்கோயிலையடைந்தார்கள். எ-று.

ஓர்தானவனை ஆழிகொடு சாய்த்ததாவது.

ஒருகாலத்தில் தேவேந்திரன் திருக்கைலாய கிரியையடைய, சிவபெருமான் வடிவுமாறி வழியில் நிற்கக்கண்டு "நீ யாவன்? யாது தொழில் செய்வோன்?" என, ஒன்றுங் கூறாதிருப்பக் கோபித்துத் தன்கைவச்சிரத்தைத் தோளிற்றாக்க, அது பொடியாகவுதிர்ந்தது. உடனே பெருமானுக்குக் கோபமுதித்து ஒரு உருத்திரவடி

வேற்க, இந்திரன் பயந்து பலவகையாகத்துதிபுரிய, இறைவர் மனம்பொழுத்துத்தன் கோபத்தாலுண்டான வியர்வையை வழித்தெறிய, அஃது மேற்றிசைக் கடலில் வீழ்ந்து புத்திரவடிவாயிற்று. அதனைச் சமுத்திரராசன் மகன்மைகொண்டு வளர்த்தான். அச்சிறுவன் பிரமனால் சலந்தரனென்று நாமமெய்தி, காளைப்பருவமடைந்து அவுணருடன்சேர்ந்து ஆற்றல் மிகுந்து மயனென்பவனால் ஓர் நகரஞ்செய்வித்து, காலநேமியின்புதல்வி பிருந்தையைமணஞ்செய்து சிறிதுகாலம் அரசிருந்து, மேருமலையிலிருந்த தேவர்களை யெதிர்க்க, அவர்கள் வேண்டுகோளின்மேல் விண்டுகருடாரூடரா யெதிர்வர, இருபதினாயிரம் வருடங்கடும்போர் புரிந்தனன். விண்டு அவனை வெல்லும் வல்லமையின்றிப் புகழ்ந்து சென்றனர். இந்திரன் தனக்கென்ன விபரீதம் விளையுமோவென்று திருக்கயிலையை யடைந்தனன். இந்திரன் செய்கையை யறிந்த சலந்தரன் அவனை அங்கேபோ யெதிர்க்கப் புறப்படுகையில், அவன் மனைவி தடுப்பவுங்கேளாது சேனையோடு கைலாயகிரியையடைய, இந்திரன் கண்டு இறைவர்முன் சாற்ற, பெருமான் வருந்தாதேயென்று தேற்றி, வடிவமாறிப் பின்வரப்பணித்து நரைத்தவுருவும் ஊன்றிய தடியும் தளர்ந்த நடையும் உடைய விருத்தவடிவேற்றுச் சென்று சலந்தரனைக்கண்டு "நீ யார்? எங்கேசெல்கின்றாய்?" என, "யான் சமுத்திரராசன் மகன்; என்பெயர் சலந்தரன்; சிவனுடன் போர்செய்யப் போகின்றேன்" என, இறைவர் "நன்றாயிருந்தது. உயிர்ப்பிச்சை வேண்டுமானால் ஓடிப்போ; சிவனை யெதித்தாற் செத்தாய்" என்று கூறிக்காலால் ஓர் வலயங்கீறி "இச்சக்கரத்தைச் சிரமேல் தாங்க வல்லையா?" என, சலந்தரன் இறுமாப்புடன் "இது பெரிதா" என்று இருகையாலுமெடுத்து, மார்பிலும் புயத்திலுந் தாங்கிச் சிரசின்மீது வைத்துக்கொள்ள, அச்சக்கரம் அப்பொழுதே அவனை இருபிளவாகப் பிளந்து சிவபெருமான் திருக்கரத்தை யடைந்தது. அவனுடன் வந்த அசுரர்கூட்டம் பெருமானது திருவிழித்தீயாலழிந்தது என்பதாம். (௧0)

நாதமுறை யோபொதுவின் மாறிநட மாடும்
பாதமுறை யோபலவு யிர்க்குமறி விக்கும்
போதமுறை யோபுனித பூரண புராண
வேதமுறை யோவெனவி ளித்துமுறை யிட்டார்.

(இ-ள்.) நாதனே! முறையோ. வெள்ளியம்பலத்திற் கான்மாறி நடித்தருளிய திருவடியையுடையாய்! முறையோ. பல ஆன்மாக்கட்கும் உணர்த்தும் போதனே! முறையோ. பரிசுத்தமானவனே! எங்கும் வியாபித்தவனே! பழம்பொருளாயுள்ளவனே! வேதசொரூபியே! முறையோ என்று விளித்து முறையிட்டார்கள்.

நின்றுமுறை யிட்டவரை நித்தனரு ளோக்கா
னன்றருள்சு ரந்திடப நந்தியைவி ளித்துச்
சென்றமண ரேவவரு தீப்பசுவை நீபோய்
வென்றுவரு வாயெனவி ளம்பினன்வி டுத்தான்.

(இ-ள்.) (இவ்வாறு திருமுன்) நின்று முறையிட்டவர்களுக்குச் சோமசுந்தரக்கடவுள் திருவருணோக்கத்தால் மிகவுங் கருணைசெய்து (அருகிலுள்ள) அதிகாரநந்திதேவரை விளித்து, சமணர்கள் ஏவவருகின்ற கொடியபசுவை நீ போய் வென்று வருவாயென்று கூறி ஏவியருளினர். எ-று. (௧௨)

**கலிநிலைத்துறை.**

தண்டங் கெழுகூற் றமுமஞ்சத் தறுகட் செங்கட்
குண்டந் தழன்று கொதிப்பக் கொடுநாக் கெறிந்து

துண்டந் துழாவக் கடைவாய்நுரை சோர்ந்து சென்னி
யண்டந் துழாவ வெழுந்தன்றட லேறு மாதோ.

(இ-ள்.) தண்டாயுதத்தை யேந்திய இயமனும் அஞ்சும்படி கொடுமையை யுடைய சிவந்த கண்களாகிய குழிகள் சுவாலித்துக்கொதிக்கவும், வளைந்த நாவினை யெறிந்து மூக்கினைத் துழாவவும்,வாய்க்கடையில் நுரை சோரவும், சிரசானது வானுலகத்தைத் தடவவும், வெற்றியையுடைய அதிகாரநந்திதேவர் எழுந்தருளினர். எ-று.

இதுமுதல் ஐந்து செய்யுள்களால் அதிகார நந்திதேவர் மாயப்பசுவை நோக்கி யெதிர்த்து வருகை கூறப்பட்டது. (கரு)

நெற்றித் தனியோடை நிமிர்ந்து மறிந்த கோட்டிற்
பற்றிச் சுடர்செம் மணிப்பூண்பிறை பைய நாகஞ்
சுற்றிக் கிடந்தா லெனத்தோன்றவெள் ளாழி யீன்ற
கற்றைக் கதிர்போற் பருமம்புறங் கெளவி மின்ன.

(இ-ள்.) நெற்றியிற்கட்டிய ஒப்பற்ற பட்டமானது மேற்பட்டு விளங்கவும், வளைந்த கொம்பினைப் பொருந்தி விளங்காநின்ற மாணிக்கத்தா லாகிய பூணானது, படத்தையுடைய கேதுவென்னும் பாம்பானது மூன்றாம்பிறையைச் சுற்றிக்கிடந்தாற்போலத் தோன்றவும், வெள்ளிய பாற்கடல் பெற்ற நெருங்கிய கிரணத்தையுடைய சூரியனைப்போலப் பொன்னாற் செய்த கவசமானது உடம்பின்புறத்துப் பொருந்தி விளங்கவும். எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (கசு)

கோட்டுப் பிறைகால் குளிர்வெண்கதிர்க் கற்றை போலச்
சூட்டுக் கவரித் தொடைத்தொங்கலு நெற்றி முன்னப்
பூட்டுத் தரள முகவட்டும் பொலியப் பின்னன்
மாட்டுச் சதங்கைத் தொடைகல்லென் வாய்விட் டார்ப்ப.

(இ-ள்.) கொம்பராகிய மூன்றாம்பிறையானது கக்குகின்ற குளிர்ந்த வெள்ளிய கிரணத்திரட்சிபோல, உச்சியிற் சூட்டிய கவரிமயிராற் றொடுக்கப்பட்ட தொங்கலும், நெற்றிக்கு முற்படப் பூட்டுதலையுடைய முத்தாலாகிய முகவட்டமும் பொலிந்து விளங்கவும், (வெள்ளிய) பின்னலிற் கோத்த மாட்டுச்சதங்கைமாலை கல்லென்று வாய்விட்டுக் கோஷிக்கவும். எ-று.

பூட்டுத்தரளம் என்றது பெருமுத்து முந்துறப் புனைதல். (சரு)

பணிநா வசைக்கும் படியென்னக் கழுத்தில் வீர
மணிநா வசைப்ப நகைமுத்தின் வகுத்த தண்டைப்
பிணிநாண் சிறுகிண்கிணிப் பிப்பில மாலைத் தொங்க
லணிநா ணலம்பச் சிலம்பார்ப்ப வடிக ளூன்றும்.

(இ-ள்.) பாம்பு நாவசைக்கும் விதம்போலக் கழுத்தில் வீரகண்டை நாவசைத்தொலிக்கவும், பிரகாசிக்கின்ற முத்தைப் பருக்கையாகவுடைய தண்டையும்,கயிற்றிற் கோத்த சிறு சதங்கைகளும், அரசிலைவடிவாகச் செய்த மாலையாகிய ஆபரணமும், ஓர் அணியாகக்கயிறும் ஒலிக்கவும், நான்கு கால்களிலும் சிலம்புகள் முழங்கவும். எ-று. (சகு)

அடியிட்டு நிலங்கிளைத் தண்டமெண் டிக்கும் போர்ப்பப்
பொடியிட் டுயிர்த்துப் பொருகோட்டினிற் குத்திக் கீறித்

டிடியிட் டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கிச்
செடியிட் டிருகண் ணழல்சிந்த நடந்த தன்றே.

(இ-ள்.) காலிட்டுப் பூமியைக் கிளைத்து, அண்டமும் அட்டதிக்கும் புதை படத்தூள்செய்து, பெருமூச்செறிந்து, போர்செய்யுங் கொம்புகளால் குத்திக்கோத்து முழங்கிக் கோஷிக்கும் மேகத்தோ டெதிர்த் தெழுந்தாற்போலப் பார்த்து, ஒளிமிக்க இரண்டு கண்களுங் கோபாக்கினி சொரிய நடந்தது. எ-று.

செடியிட்ட - பெயரெச்சம் இதில் அகரவீறு தொக்கது. (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பால்கொண்ட நிழல்வெண் டிங்கட் பகிர்கொண்ட மருப்பிற் கொண்மூச்
சூல்கொண்ட வயிற்றைக் கீண்டு துள்ளியோர் வெள்ளிக் குன்றங்
கால்கொண்டு நடந்தா லென்னக் கடிந்துடன் றாவைச் சீற்ற
மேல்கொண்டு நாற்றம் பற்றி வீங்குயிர்ப் பெறிந்து கிட்டா.

(இ-ள்.) வெண்ணிறம்பொருந்திய அர்த்த சந்திரன்போன்ற கொம்பினால், சூல்கொண்ட மேகத்தினது வயிற்றைக்கிழித்துத் துள்ளி ஒரு வெள்ளியமலை கால் கொண்டு நடந்தாற்போல விரைந்துசென்று பகைத்து, பசுவைக் கோபித்து நாற்றம் பற்றி மேல்கொண்டு நெட்டுயிர்ப் பெறிந்து சமீபித்து. எ-று. (கஅ)

குடக்கது குணக்க தென்னக் குணக்கது குடக்க தென்ன
வடக்கது தெற்க தென்னத் தெற்கது வடக்க தென்ன
முடுக்குறு மருப்பிற் கோத்து முதுகுகீ ழாகத் தள்ளு
மெடுக்குறு மலையைக் கால்பேர்த் தெனத்திசைப் புறத்து வீசும்.

(இ-ள்.) மேலைத்திசையிலுள்ள பசு அன்றே கீழைத்திசையிலுள்ளதென்று சொல்லவும், கீழைத்திசையிலுள்ளதன்றே மேலைத்திசையிலுள்ளதென்றுசொல்லவும், வடதிசையிலுள்ளதன்றே தென்றிசையி லுள்ளதென்றுசொல்லவும், தென்றிசையி லுள்ளதன்றே வடதிசையி லுள்ளதென்று சொல்லவும் கொம்பினாற் கோத்து முதுகு கீழாகத்தள்ளும்; எடுக்கும்; மலையைக் காற்றானது பேர்த்து வீசினாற்போலத் திசைகளின் புறத்தே தள்ளும். எ-று.

குடக்கது முதலிய நான்கும் குறிப்பு வினைமுற்றுப் பெயர்கள். (கக)

கொழுமணிச் சிகர கோடி சிதைபடக் குவட்டில் வீசும்
பழுமரச் செறிவில் வான்றோய் பணையிற வெறியும் வானின்
விழுமறப் பசுபோல் வீழ வேலைவாய் வீசு மிங்கன்
செழுமதிக் கோட்டு நந்தித் தேவிளை யாடல் செய்து.

(இ-ள்.) உருவமுதிர்ந்த இரத்தினங்கள் நிறைந்த சிகரபந்திகள்பொடிபட எடுத்து மலைகளில் வீசும்; ஆலமரங்களின் செறிவிலுள்ள ஆகாயமளாவிய கொம்புகள் முறியவீசும்; விண்ணுலகினின்று கடலில் வீழ்ந்து மறைந்த காமதேனுவைப் போலக் கடலில்வீழ எடுத்துவீசும்; இவ்வண்ணம் அர்த்தசந்திரன்போன்ற கொம்பினையுடைய அதிகாரநந்திதேவர் போர்விளையாட்டுச்செய்து. எ-று.

துருவாசமுனிவர் கோபத்தால், இந்திரன் செல்வங்கள் முற்றுங் காணப் படாது கடலிற் புக்கமையால், அவற்றோடுநின்ற காமதேனுவும் கடலிற் புகுந்தது பற்றி "வானின் விழும் அறப்பசு" என உவமித்தார். (௨௦)

பூரிய ரெண்ணி யாங்கே பொருதயி ரூற்றஞ் செய்பா
தாரிய விடைதன் மாண்ட வழகினைக் காட்டக் காமுற்

றீரிய நறும்பூ வாளி யேறுபட் டாவி யோடும்
வீரியம் விடுத்து வீழ்ந்து வெற்புரு வாயிற் றன்றே.

(இ-ள்.) சமணர்களாகிய கீழ்மக்கள் நினைத்தபடியே, போர்புரிந்து உயிர்த் துன்பஞ்செய்யாமல், அழகிய இடபமானது தனது மாட்சிமைப்பட்ட அழகினைக் காட்ட அப்பசுவானது விரும்பி, குளிர்ந்த நல்ல புஷ்பபாணம் பாய்தலால் [காமங் கொள்ளுதலால்], பிராணனோடும் வீரியம் விட்டுத் தரைமிசைவிழுந்து (வடதிசை யில்) ஒருமலையின்வடிவாய் விளங்கியது. எ-று.

பூரியர் - சாமானியர்; வஞ்சனையால் வெல்லக் கருதினவராகலின். (உக)

வாங்கின புரிசை மாட மாநக ரானு மின்பந்
தூங்கின வரவாய் வேம்பின் றொடைவிழ் தாரான் றிண்டோள்
வீங்கின விரவி தோன்ற வீங்கிரு ளுடைந்த தென்ன
நீங்கின நாண மோடு நிறையமண் குழாங்க ளெல்லாம்.

(இ-ள்.) வளைந்த மதில்சூழ்ந்த மாடம்பொருந்திய பெரிய மதுராபுரியிலு ள்ளோர் நீங்காத இன்பத்தில் அழுந்தினார்கள்; அரம்போல் (இருபக்கங்களிலும்) வா யுள்ள வேப்பிலை நெருங்கிய வேப்பமாலையணிந்த அனந்தகுண பாண்டியனுடைய திண்ணிய தோள்கள் பருத்தன. சூரியன் உதிக்கப் பேரிருள் புறங்கொடுத்ததுபோல வரிசை வரிசையாயுள்ள சமணக்கூட்டங்கள் நாணத்துடன் புறங்கொடுத்தோடின.

உலகறி கரியாத் தன்பே ருருவினை யிடபக் குன்றாக்
குலவுறநிறுவிச் சூக்க வடிவினாற் குறுகிக் கூடற்
றலைவனை வணங்க வீசன் றண்ணருள் சுரந்து பண்டை
யிலகுரு வாகி யிந்த வினிருக்கென விருத்தி னானே.

(இ-ள்.) உலகத்தார் அறிதற்குச் சாட்சியாகத்தனது பெரிய ஸ்தூலவடிவ த்தை அவ்வடதிசையில் இடபமலையாக விளங்க நிறுத்தி, சூக்கும வடிவத்துடன் சென்று மதுரையில் எழுந்தருளிய இறைவனைப்பணிய, அப்பெருமான் தண்ணிய திருவருள் சுரந்து, முன்னுள்ள விளங்கும் உருவத்தையடைந்து இவ்விடத்திலிருக்க என இருக்கச் செய்தருளினார். எ-று.

சூக்குமம் - சூக்கமென்னும் பிராகிருதச் சிதைவு. (உரு)

அந்நிலை நகரு ளாரு மரசனு மகிழ்ச்சி தூங்கிச்
சந்நிதி யிருந்த நந்தி தாளடைந் திறைஞ்சிப் போக
மின்னவிர் சடையா னந்தி வென்றிசால் வீறு நோக்கி
யின்னமு தனையா ளோடுங் களிசிறந் திருக்கு நாளில்.

(இ-ள்.) அப்பொழுது நகரத்திலுள்ளவர்களும் அநந்தகுணபாண்டியனும் மகிழ்ச்சியிலமிழ்ந்து, திருச்சந்நிதியிலிருந்த அதிகார நந்திதேவருடைய திருவடியை யடைந்து பணிந்துசெல்ல, மின்னல்போலும் பிரகாசிக்குஞ் சடையையுடைய சோம சுந்தரக்கடவுள் அந்த நந்திதேவருடையவெற்றிமிகுந்த இறுமாப்பைநோக்கி, இனிய அமுதுபோன்ற அங்கயற்கண்ணம்மையாரோடு களிகூர்ந்திருக்குங்காலத்தில். எ-று.

அவ்விடை வரைமேன் முந்நீ ரார்கலி யிலங்கைக் கேகுந்
தெவ்வடு சிலையி ராமன் வானர சேனை சூழ
மைவ்வரை யனைய தம்பி மாருதி சுக்கி ரீவ
னிவ்வடல் வீர ரோடு மெய்தியங் கிறுத்தான் மன்னோ.

(இ-ள்.) அந்த இடபமலையின்பேரில், கடல் சூழ்ந்த இலங்கைக்குச் செல்லும் பகைவரைச் செயித்த இராமமூர்த்தி வானரசேனை புடைசூழ நீலமலைபோன்ற இலட்சுமணரும் அனுமானும் சுக்கிரீவனுமாகிய இந்த வெற்றிபொருந்திய வீரர்களுடன் சேர்ந்து வசித்தார். எ-று.

வானரசேனை - வடசொற்புணர்ச்சி. (உரு)

அன்னது தெரிந்து விந்த மடக்கிய முனியங் கெய்தி
மன்னவற் காக்கங் கூறி மழவிடைக் கொடியோன் கூடற்
பன்னரும் புகழ்மை கூறும் பனுவலை யருளிச் செய்ய
முன்னவன் பெருமை கேட்டு முகிழ்த்தகை முடியோ னாகி.

(இ-ள்.) விந்தமலையை வீறுகுறைத்த அகத்திய முனிவர் அதனையுணர்ந்து அவ்விடபமலையை யடைந்து, இராமமூர்த்திக்கு ஆசீர்வாதங்கூறி, இளமைபொருந்திய இடபக்கொடியையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய திருவாலவாயின் சொல்லுதற்கரிய மான்மியத்தைக் கூறும் நூலினைத் திருவாய்மலர்ந்தருள, அவ்விறைவனது பெருமையைக் கேட்டுக் குவித்த கைகளேறிய முடியையுடையவாராகி. எ-று.

இதுமுல் நான்குபாடல்கள் ஒருதொடர். (உசு)

முனியொடு குறுகிச் செம்பொன் முளரியுண் மூழ்கி யாதித்
தனிமுத லடியை வேணி முடியுறத் தாழ்ந்து வேத
மனுமுறை சிவாக மத்தின் வழிவழா தருச்சித் தேத்திக்
கனிவுறு மன்பி லாழ்ந்து முடிமிசைக் கரங்கள் கூப்பி.

(இ-ள்.) அகத்தியமுனிவருடன் சென்று பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, ஒப்பற்ற முழுமுதற்கடவுளது திருவடியைத் தனது சடாமுடி பொருந்தவணங்கி, வேதமந்திர முறையும் சிவாகமமுறையும் வழுவாமல் அருச்சனைசெய்து பணிந்து, கனிந்த பேரன்பிலழுந்தி, சிரசின்பேரிற் கைகளைக்குவித்து. எ-று. (உஎ)

புங்கவ சீவன் முத்தி புராதிப புனித போக
மங்கல மெவற் றினுக்குங் காரண வடிவ மான
சங்கர நினது தெய்வத் தானங்க ளனந்த மிந்த
வங்கண்மா ஞால வட்டத் துள்ளன வவைக டம்மில்.

(இ-ள்.) (எல்லாத் தேவர்கட்கும்) மேம்பட்டவனே! சீவன் முத்திபுரத்திற்குத் தலைவனே! பரிசுத்தமானவனே! எல்லாப் போகங்கட்கும் மங்கலங்கட்குங் காரணவடிவாயுள்ள சங்கரனே! தேவரீரது தெய்வத்தன்மை பொருந்திய தலங்கள் அளவுபடாமல் இந்த அழகிய இடம்பரந்த பெரிய நிலவுலகினிலுள்ளன. அத்தலங்களில், எ-று. (உஅ)

**கலிநிலைத்துறை.**

அற்பு தப்பெரும் பதியிந்த மதுரையீ தாற்றப்
பொற்பு டைத்தென்ப தெவன்பல புவனமு நின்பாற்
கற்பு வைத்துய நீசெய்த கருமத்தின் விருத்தம்
வெற்பு ருக்களாய்ப் புடைநின்று விளங்கலான் மன்னோ.

(இ-ள்.) அற்புதம் பொருந்திய பெரிய தலமாயுள்ள இம்மதுரையாகிய இது, மிகவும் சிறந்ததென்று கூறுவது என்னகாரணம் (என்றால்) பல உலகங்களும் தேவரீரிடத்தில் அன்புவைத்துப் பிழைக்கத் தேவரீர் செய்த திருவிளையாடலின் சரித்திரம் மலைகளின் உருவங்களாய்ப் பக்கங்களிலிருந்து விளங்குதலால் (அல்லவோ).

உம்முடைய திருவிளையாடல்கள் இத்தலத்திலே காட்சிப் பிரமாணமாக விளங்கின என்பதாம். (உக)

கண்ட வெல்லையிற் றுன்பங்கள் களைதற்கு மளவைக்
கண்ட ரும்பெருஞ் செல்வங்க ளளித்தற்குங் கருணை
கொண்டு நீயுறை சிறப்பினுற் குளிர்மதிக் கண்ணி
யண்ட வாணவிவ் விலிங்கத்துக் கொப்பவே றுமோ?

(இ-ள்.) தெரிசித்த அப்பொழுதே துன்பங்களை நீக்குதற்கும், அளவிடற்கரிய (இந்திரபோக முதலிய) பெருஞ் செல்வங்களைத் தந்தருளுதற்கும் திருவருள் கொண்டு தேவரீர் இடைவிடாது வசித்தருளுஞ் சிறப்பினுல், குளிர்ந்த பிறைச் சந்திரனை மாலையாகவணிந்த தேவதேவனே! இந்த இலிங்க மூர்த்தத்திற்குச் சமானமாக வேறொன்று உளதோ? (இல்லை.) எ-று. (௩௦)

தோய்ந்தி டும்பொழு தீட்டிய தொல்வினைப் படல
மாய்ந்தி டும்படி மாய்த்துநின் மங்கல போக
மீந்தி டும்படிக் கிருந்தமா தீர்த்தத்தி னியல்பை
யாய்ந்தி டும்பொழு ததற்கொரு தீர்த்தமொப் பாமோ.

(இ-ள்.) நீராடுங்காலையில் (பிறவிகள் தோறும்) தேடிய தொன்றுதொட்டுள்ள சஞ்சிதவினையின் திரட்சி கெடும்படி சிதைத்து, தேவரீரது மங்கலகரமாகிய சிவபோகத்தைக் கொடுக்கும்படிக்கு அமைந்த பொற்றாமரைத் தீர்த்தத்தின் இயற்கையை யாராயுமிடத்தில், அதற்கு ஒப்பாக ஒரு தீர்த்தமும் உள்ளதோ? (இல்லை.)

எத்த லத்தினு மொவ்வொன்று விழுமிதா மிந்த
மெய்த்த லத்திலிம் மூவகை விழுப்பமும் விளங்கு
மத்த வாதலா லித்தல மடைந்தவ ரொவர்க்குஞ்
சித்த சுத்தியும் பல்வகைச் சித்தியும் பயக்கும்.

(இ-ள்.) பரிசுத்தனே! எந்தச் சிவதலத்திலும் (மூர்த்தி, தலம், தீர்த்த மென்னும் மூன்றினுள்) ஒவ்வொன்று மேலாய் விளங்கும். இந்த வுண்மையாகிய தலத்தில் இம்மூவகைச்சிறப்பும் விளங்கும்; ஆதலால், இந்தத்தலமானது தன்னை யடைந்தோரெல்லாருக்கும் சித்தசுத்தியையும் (அணிமா முதலிய) பலவகைச் சித்திகளையுங் கொடுக்கும். எ-று.

சித்தசுத்தி - நித்தநைமித்திய கருமங்களைச் சிவார்ப்பணமாகச்செய்தலால் வரும் பேறு. பலவகைச்சித்தி - அணிமா - மகிமா - கரிமா - லகிமா - பிராப்தி - பிராகாமியம்-ஈசத்துவம்- வசித்துவம் எனப்படும். இவற்றின் சிறப்பிலக்கணங்களை அஷ்டமாசித்தி யுபதேசித்தபடலத்திற் கண்டுகொள்க. (௩உ)

அடியனே னெண்ணுங் கருமமுஞ் சரதமே யாக
முடியு மாவரி தச்செயன் முடியுமெய் படியப்
படியு ரிந்தருள் கடிதெனப் பணிந்தனன் வானு
நெடிய வான்படு மமுதென வெதிர்மொழி நிகழ்த்தும்.

(இ-ள்.) அடியேன் எண்ணிய காரியமும் உண்மையாக முடியும் வண்ணமரியதோ? அந்தக்கருமம் இலேசாகமுடியும். (திருவருள்) எவ்வாறோ அவ்வாறு செய்தருளாய் என்று, பணிந்தார். சோமசுந்தரப் பெருமானும் நெடிய ஆகாயத்திற்றோன்றும் அமிர்தம்போல (ஓர் அசரீரிப்) பிரதிவார்த்தை கூறியருளுகின்றார். எ-று. (௩௩)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

இரவிதன் மரபின் வந்த விராமகே ளெமக்குத் தென்கீழ்
விரவிய திசையிற் போகி விரிகடற் சேதுக் கட்டிக்
கரவிய வுள்ளக் கள்வன் கதிர்முடிப் பத்துஞ் சிந்தி
யரவமே கலையி னாளை யருஞ்சிறை யழுவ நீக்கி.

(இ-ள்.) சூரிய பரம்பரையிற் றோன்றிய இராமனே! கேளாய். எமக்குத் தெற்குங் கிழக்குமாய்க் கலந்த (தென்கீழ்த்) திசையிற்சென்று, பரந்த கடலிற் சேது பந்தனஞ் செய்து, வஞ்சகமமைந்த மனத்தையுடைய இராவணனது (வீரக்கம் பொருந்திய பத்துத்தலைகளையுந் துண்டித்து, ஒலிக்கும் மேகலையை யுடைய ஜாநகியை அடைதற்கரிய சிறைக்கூடமாகிய நடுங்குமிடத்தி லிருந்து விலக்கி. எ-று. (ருச)

மீண்டுநின் னயோத்தி யெய்தி விரிகட லுலகம் பன்னா
ளாண்டினி திருந்து மேனாள் வைகுண்ட மடைவா யாக
வீண்டுநீ கவலை கொள்ளே லெனவச ரீரி கேட்டு
நீண்டவன் மகிழ்ந்து தாழ்ந்து நிருத்தனை விடைகொண் டேகி.

(இ-ள்.) மீளவும் உனது அயோத்யா புரியைச்சேர்ந்து,பரந்தகடல் சூழ்ந்த உலகத்தைப் பலகாலமும் அரசியல்புரிந்து இனிது வாழ்ந்து, அதன்மேல் நீ வைகுண்டமடைவாயாக. இப்பொழுது நீகவலைகொள்ளாதே யென்று கூறிய அசரீரியைக்கேட்டு, இராமமூர்த்தி களித்துச் சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து விடைபெற்றுச் சென்று. எ-று. (ருரு)

மறைப்பொரு ளுரைத்தோன் சொன்ன வண்ணமே யிலங்கை யெய்தி
யறத்தினைத் தின்ற பாவி யாவிதின் றனையான் செல்வத்
திறத்தினை யிளவற் கீந்து திருவிரா மீசங் கண்டு
கறைப்படு மிடற்றி னானை யருச்சித்துக் கருணை வாங்கி.

(இ-ள்.) வேதப்பொருளைக் கூறிய சோமசுந்தரக்கடவுள் (அசரீரியாய்ச்) சொன்னபடியே இலங்கையையடைந்து, தருமத்தைக்கடந்த பாவியாகிய இராவணனுடைய உயிரைக்குடித்து, அவனுடைய செல்வப்பகுதியை அவன் தம்பியாகிய விபீஷணனுக்குத்தந்து, இராமேச்வர மென்னுந்தலத்தைப்பிரதிஷ்டை செய்து விஷம் பொருந்திய ஸ்ரீ கண்டத்தையுடைய சிவபெருமானை அருச்சித்து அவர் திருவருளைப் பெற்று. எ-று.

இராவணன் இலிங்கபூசை செய்வதிற் சிறந்தவனாகலின் அவனைக் கொன்றதனால் வந்த பிரமஹத்தியைப் போக்கச் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து தன் பெயரால் இராமேச்வரமென்னப் பெயர் தந்தனரென்பது புராணவரலாறு. (ருசு)

பற்றிய பழியி னீந்தி யிந்திரன் பழியைத் தீர்த்து
வெற்றிகொள் விடையி னானை மீளவும் வந்து போற்றி
யற்றிர ளனைய கோதைக் கற்பினுக் கரசி யோடுஞ்
சுற்றிய சடையி ராமன் றொன்னக ரடைந்தா னிப்பால்.

(இ-ள்.) தன்னைப்பிடித்த பிரமஹத்தியிலிருந்து நீங்கி,தேவேந்திரனுடைய பிரமஹத்தியை யொழித்த வெற்றிபொருந்திய இடபவாகனத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை மீளவும் வந்து பணிந்து,இருளின் திரட்சியைப்போன்ற கூந்தலையுடைய கற்பினுக்கரசியாகிய ஜாநகி தேவியோடும் (வட்டமாகச்) சுற்றிய சடையையுடைய இராமமூர்த்தி தொன்றுதொட்டுள்ள அயோத்திநகரத்தை யடைந்தார். இப்பால்.எ-று.

கலிநிலைத்துறை.

செங்கோ லனந்த குணமீனவன் றேயங் காப்பக்
கொங்கோ டவிழ்தார்க் குலபூடணன் றன்னை யின்று
பொங்கோதை ஞாலப் பொறைமற்றவன் பாலி றக்கி
யெங்கோ னருளாற் சிவமாநக ரேறி னானே.

(இ-ள்.) செங்கோலை யேந்திய மீனக்கொடி தரித்த அனந்தகுண பாண்டியன், நிலவுலகங் காக்க, மகரந்தத்தோடலர்ந்த மாலையணிந்த குலபூஷணனைப்பெற்று, (தான் சுமந்த) பேரொலியுடைய கடல்சூழ்ந்த பூமிபாரத்தை அக் குலபூஷணனிடத் திறக்கி, எமதிறைவராகிய சோமசுந்தரக் கடவுளினுடைய திருவருளால் சிவபுரத்திற் குடியேறினான். எ-று. (உஅ)

மாயப் பசுவைவதைத்த படலம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககசுச.

---

உ

சிவமயம்.

முப்பதாவது,

# மெய்க்காட்டிட்ட படலம்.

கொச்சகக்கலிப்பா.

பாவமென வடிவெடுத்த படிற்றமணர் ப்ழித்தழல்செய்
தேவவரு மறப்பசுவை யேறுயர்த்தோன் விடைநந்திக்
காவலனை விடுத்தழித்த கதையுரைத்து மட்டாலைச்
சேவகன்மெய்க் காட்டிட்டு விளையாடுந் திறமுறைப்பாம்.

(இ-ள்.) பாவமே உருவேற்றாற்போன்ற வஞ்சனையையுடைய சமணர்கள், ஆபிசார யாகஞ்செய்து ஏவ வந்த கொலைத்தொழிலையுடைய பசுவை, இடபக் கொடியை யுயர்த்திய சோமசுந்தரக்கடவுள் அதிகார நந்திதேவரை யேவி அழித்த திருவிளையாடலைக் கூறினோம். அட்டாலைச் சேவகனாய் வந்த சோமசுந்தரக்கடவுள் திருமேனி காட்டி யருளிய திருவிளையாடலை (இனி யாம்) கூறுவோம். எ-று.

அட்டாலைச் சேவகன் என்றது குதிரைவீரனை. (க)

வெவ்வியமும் மதயானை விறற்குலபூ டணனன்சுமவு
ரவ்வியவஞ் சனைகடந்த வனந்தகுணச் செழியன்பாற்
செவ்வியசெங் கோல்வாங்கித் திகிரிதிசை செலவுருட்டி
வவ்வியவெங் கலிதுரந்து மண்காத்து வருகின்றான்.

(இ-ள்.) கொடிய மும்மதங்களையுடைய யானைச் சேனையின் வெற்றிபொருந்திய குலபூடண பாண்டியன் சமணர்களது பொறாமையால் விளைந்தவஞ்சத்தைக் கடந்த அனந்தகுண பாண்டியனிடத்து, செவ்விய செங்கோலைத் தனது கையால் வா

ங்கி, (ஆக்கினை) சக்கரத்தைத் திசைகளிற் செல்லச்செலுத்தி, தன் வசப்படுத்திய உலகத்தைக் கொடிய கலியினை யோட்டிக் காத்துவருகின்றவனாயினன். எ-று. (௨)

சவுந்தரசா மந்தனெனத் தானைகா வலனொருவன்
செவந்தசடை முடியண்ண லடியவரே சிவமாகக்
கவர்ந்தொழுகி யருச்சிக்குங் கடப்பாட்டி னெறிநின்றே
னுவந்தரசற் கிருமைக்குந் துணையாகி யொழுகுநாள்.

(இ-ள்.) சுந்தரசாமந்தர் என்று சேனபதி யொருவர். செவந்த சடாமுடியை யுடைய சிவபெருமானது அடியவரையே அச்சிவபெருமானாகக்கொண்டு பத்திமை பூண்டு பூசிக்கும் உறுதியின் வழியில்நின்றவராய் விரும்பிக் குலபூடண பாண்டியனுக்கு இம்மைப் பலனுக்கும் மறுமைப்பலனுக்குந் துணைவராய் நடக்குங்காலையில். எ-று.

வல்வேடர்க் கதிபதியாய் வருசேதி ராயனெனும்
வில்வேட னொருவனவன் விறல்வலியான் மேலிட்டுப்
பல்வேறு பரிமான்றேர்ப் பஞ்சவன்மேற் படையெடுத்துச்
செல்வேனென் றறவலித்தான் றென்னர்பிரா னஃதறிந்தான்.

(இ-ள்.) வலிய வேடராசனாகிய சேதிராய னென்னும் பெயரையுடைய வில்லையேந்திய வேடனொருவன் உள்ளான். அவன்வெற்றியின்வலிமையால் இறுமாப் படைந்து பலவேறு வகைப்பட்ட குதிரைகள் பூண்ட தேரையுடைய குலபூடண பாண்டியன்பேரில் தண்டெடுத்துச் செல்வேனென்று மனவூக்கங் கொண்டான். பாண்டியன் அதனை யுணர்ந்து. எ-று. (௪)

தன்னதுதா ணிழனின்ற சாமந்தன் றனைப்பார்த்தெம்
பொன்னறைதாழ் திறந்துநிதி முகந்தளித்துப் புதிதாக
வின்னமுநீ சிலசேனை யெடுத்தெழுதிக் கொள்கென்று
னன்னதுகேட் டீசனடிக் கன்புளா னென்செய்வான்.

(இ-ள்.) தனது கால்நிழலின் கீழ்நின்ற சுந்தர சாமந்தரைப்பார்த்து எமது பொக்கிஷத்தின் தாழைத் திறந்து (வேண்டிய அளவு) பொருள் எடுத்துச் செலவு செய்து, இன்னமும் புதிதாகச் சில சேனைகளை நீ நமக்குரிமையாய் எடுத்துக்கொள்ளக்கடவாய் என்றான். சிவபெருமானது திருவடிக்கு அன்பு பூண்ட சுந்தர சாமந்தர் அதைக்கேட்டு என்ன செய்வாரென்றால். எ-று.

தாணிழற் கீழ்நின்ற என்றது அருகு நிற்றலின். (ரு)

தென்னவர்கோன் பணித்தபணி பின்றள்ளச் சிந்தையிலன்
பின்னவர னருள்வந்து முன்னீர்ப்ப வொல்லைபோய்ப்
பொன்னறைதாழ் திறந்தறத்தா றீட்டியிடும் பொற்குவையுட்
டன்னதுளத் தவாவனைய தக்கநிதி கைக்கவரா.

(இ-ள்.) குலபூடண பாண்டியன் ஏவிய ஏவல் பின்னே நின்று தள்ளுதலால், தமது மனத்திலுள்ள சிவபத்தியும் சிவபெருமானது திருவருளும் (யாவரும்) நினைக்கும்படி முன்னின்று இழுக்க, விரைந்து போய்ப் பொக்கிஷத்தின் தாழைத் திறந்து தருமமார்க்கத்திற்றேடிய பொருட்குவியலில், தனது மனத்திலெழுந்த ஆசைக்குப் பொருந்தியிக்க பொருளைக் கைக்கொண்டு. எ-று. (சு)

எண்ணிறந்த களிப்பினெடுந் திருக்கோயி லிடத்தணைந்து
கண்ணிறைந்த பொன்முளரிக் கயந்தலைநீர் படிந்துதன
துண்ணிறைந்த மெய்யன்பி னொளியுருவாய் முளைத்தெழுந்த
பண்ணிறைந்த மறைப்பொருளைப் பணிந்திறைஞ்சி யிதுவேண்டும்.

(இ-ள்.) அளவில்லாத சந்தோஷத்தோடும் திருக்கோயிலையடைந்து, தேன் நிறைந்த பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, தனது மனதில் நிறைந்த மெய்யன்பின் ஒளிவடிவமாய் முளைத்துத் தோன்றிய இசைநிறைந்த வேதத்தின் பொருளாயுள்ள சோமசுந்த்ரக்கடவுளைப் பணிந்து, இதனை வேண்டாநின்றார். எ-று. (௭)

பண்ணியநான் மறைவிரித்த பரமேட்டி யெங்கோமா
னெண்ணியகா ரியமுடிப்பா யிவையுனக்கு முன்னடிக்கீ
ழண்ணியமெய் யடியவர்க்கு மாதக்க வெனவிரந்தப்
புண்ணியமா நிதிமுழுது மவ்வழியே புலப்படுப்பான்.

(இ-ள்.) இசைமயமான நான்கு வேதங்களின் பொருள்களையும், (முனிவர்களுக்கு) விரித்தருளிச் செய்த பரமேஷ்டியே! எமது அரசனாகிய குலபூடண பாண்டியன் எண்ணிய காரியங்களை (முட்டின்றி) முடிப்பாய். இப்பொருள்கள் தேவரீருக்கும், தேவரீரது திருவடிக்கீழ்க்கலந்த உண்மை யடியவர்க்கும் ஆவக்கடவன என்று குறையிரந்து, புண்ணிய வழியிற்றேடிய அப்பெரும்பொருள்முழுவதும், தான் குறையிரந்த வகையே செலுத்துவானாயினர். எ-று.

பரமேஷ்டி என்றது உயர்ந்த பதவியிலுள்ளானெனப் பொருள்படும். (௮)

அண்டமுக டுரிஞ்சிநிமிர் கோபுரமு மாயிரக்கான்
மண்டபமுங் கண்டிகையும் வயிரமணிக் கோளகையுங்
குண்டலமுந் தண்டரளக் குடைநிரையுங் கொடிநிரையுங்
கண்டனன்முன் னவனருளாற் பிறப்பேழுங் கரைகண்டோன்.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுளினுடைய திருவருளால் (ஏழு) பிறவியாகிய ஏழு கடல்களையுங் கரைகண்ட சுந்தர சாமந்தர் ஆகாயமுகட்டை யளாவி யுயர்ந்த கோபுரத்தையும், ஆயிரக்கால் மண்டபத்தையும், கண்டிகையையும், வைரத்தாற் செய்த வாகுவலயத்தையும், குண்டலத்தையும், தண்ணிய முத்தாலாகிய குடைவரிசையையும், கொடிவரிசையையும் செய்தமைத்தார். எ-று. (௯)

வானாடர்க் கவியுணவின் வகைமுந்நூன் மன்றன்முத
லானவாஞ் சிறுவேள்வி நான்மறையோர்க் கறுசுவையி
னாத பேருண்டி துறவடைந்தோர்க் கருத்துபலி
தானாதி பலவேறு தருமநனி தழைவித்தான்.

(இ-ள்.) தேவர்களுக்கு அவியூட்டும் பெரிய யாகங்களும், பூணூல்கலியாண முதலிய பல திறப்பட்ட சிறு வேள்விகளும், வேதியருக்கு அறுசுவை பொருந்திய இனிய பேருணவுகளும், துறவிகளுக்கு உண்பிக்கும் பிச்சையும், பூதான முதலிய வேறு தருமங்களும் (ஆகிய இவையெல்லாம்) மிகவும் பெருகச் செய்துவந்தார். எ-று.

உபவீதம் பூணுதலே வேள்விக்கு அருகராக்குதலின், அதனையும் வேள்வியோடு உடனெண்ணிச் "சிறுவேள்வி" என்றார். (௰)

எவரேனு முருத்திரசா தனங்கண்டா லெதிர்வணங்கி
யவரேநம் பிறப்பறுக்க வடிவெடுத்த வரனென்று

கவராத வன்புள்ளங் கசிந்தொழுக வருச்சித்துச்
சுவையாறி னமுதருத்தி யெஞ்சியவின் சுவைதெரிவான்." "

(இ-ள்.) எவராலுஞ் சிவசாதனந் தாங்குவாராயின், அவரை யெதிரே பணிந்து, அவரே நம்முடைய பிறவியையறுக்கத் திருவுருவமெடுத்த சிவபெருமானென்று, நீங்காத அன்புடன் வழிபட்டு அருச்சித்து, அறுசுவை யமைந்த திருவமுதை உண்பித்து, (பரிகலத்தில்) மிகுந்த (சேடத்தை) இனிய சுவைபார்த்து உண்பாராயினர். எ-று.

இச்செய்யுளில் எவரேனு முருத்திர சாதனங் கண்டால் என்பதை,

### திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்.

" சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
மாதேவர்க் கேகாந்த ரல்ல ராயின்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யாரா
யாவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகி
லவர்கண்டீர் யாம்வணங்குங் கடவு ளாரே"—என்பதனானும், உருத்திர சாதனங் கண்டோரை அர்ச்சித்தலும் ஊட்டுதலும் சிவபெருமானுக்குச் செய்ததை நிகர்க்கும் என்பதை,

### சிவதருமோத்தரம்.

" அருத்துக வமலன் றன்னை யகத்துணர்ந் தவரை யன்னங்
கருத்திருந் தவர்க்குச் செய்த பூசனை கடவுள் கொள்வன்
ஒருத்தனுக் குபசா ரங்களுடலிடை யுலகர் செய்வர்
பிரித்துட லுயிரைப் பேணும் பெற்றியை யாரே பெற்றார்."—என வருந் திருவிருத்தத்தானு முணர்க. (கக)

இன்றைக்கா யிரநாளைக் கிருமடங்கு வருநாட்கு
மன்றைக்கன் றிருமடங்கா வரசனது பொருளெல்லாங்
கொன்றைச்செஞ் சடையார்க்கு மடியார்க்குங் கொடுப்பதனைத்
தென்றற்கோன் செவியடுத்தான் சேனைக்கோ னிதுசெய்வான்.

(இ-ள்.) இன்றைக்கு ஆயிரம்பொன்-நாளைக்கு இரட்டிப்பு-இனிவரும் நாட்களுக்கும் அன்றைக்கன்று இரட்டிப்பு ஆகப் பாண்டியனது பொருளையெல்லாம் கொன்றைமாலை யணிந்த செவந்த சடையையுடைய சிவபெருமானுக்கும் அவர் அடியார்கட்குங் கொடுத்து வருதலை, பொதியமலைக்கதிபனாகிய பாண்டியன் கேள்விப்பட்டான். சேனாதிபதியாகிய சுந்தர சாமந்தர் (பின்வரும்) இக்காரியங்களைச் செய்யத் தொடங்கினார். எ-று.

தென்றல் - தென்றற்காற்று. இது தோன்றுதற்குரிய இடமாகிய பொதியமலையை யுணர்த்தினமையின், இடவாகுபெயர். (கஉ)

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

காவல னவையத் தெய்திக் காரியஞ் செய்வா ரோடு
மேவினன் பிறநாட் டுள்ள வீரர்க்கு வெறுக்கை போக்கிச்

சேவகம் பதிய வோலை செலவிடுத் தழைப்பான் போலப்
பாவனைஞ் செய்து தீட்டிப் பட்டிமை யோலை யுய்ப்பான்.

(இ-ள்.) (சுந்தரசாமந்தர்) பாண்டியன் சபையையடைந்து, இராசகாரியஞ் செய்பவருடன் கலந்து, பிறதேசத்திலுள்ள சேனைவீரருக்குப் பொருளனுப்பிச் சேவகத்திற் பதிவுசெய்ய ஓலைசெலுத்தி அழைப்பார்போலப் பாவனைகாட்டி, வஞ்சனையாகத் திருமுக மெழுதியனுப்புவாராயினர். எ-று. (கரு)

எழுதுக தெலுங்கர்க் கோலை யெழுதுக கலிங்கர்க் கோலை
யெழுதுக விராடர்க் கோலை யெழுதுக மராடர்க் கோலை
யெழுதுக கொங்கர்க் கோலை யெழுதுக வங்கர்க் கோலை
யெழுதுக துருக்கர்க் கோலை யென்றுபொய் யோலை விட்டான்.

(இ-ள்.) தெலுங்க நாட்டிலுள்ளாருக்கு ஓலையெழுதக்கடவீர்; கலிங்கநாட்டிலுள்ளாருக்கு ஓலை யெழுதக்கடவீர்; விராடநாட்டிலுள்ளாருக்கு ஓலை யெழுதக்கடவீர்; மராடநாட்டிலுள்ளாருக்கு ஓலையெழுதக்கடவீர்; கொங்கநாட்டிலுள்ளாருக்கு ஓலையெழுதக்கடவீர்; அங்கநாட்டிலுள்ளாருக்கு ஓலையெழுதக்கடவீர்; துருக்கநாட்டிலுள்ளாருக்கு ஓலையெழுதக்கடவீர் என்று பொய்த்திருமுகம் அனுப்பினர். எ-று.()

எங்குமிப் படியே யோலை செலவிடுத் திருப்ப வாறு
திங்களி னளவு மந்தச் சேவகர் வரவு காணு
தங்கதிர் வேலான் சேனைக் கரசனை யழைத்து நாளை
வெங்கதிர் படுமுன் சேனை யாவையும் விளித்தி யென்றான்.

(இ-ள்.) இப்படியே எவ்விடத்துந் திருமுகமனுப்பி (வாளா) இருக்க, ஆறு மாதவரையிலும் அச்சேனைவீரர் (ஒருவரும்) வருகையைப் பாராத, அழகிய ஒளிபொருந்திய வேற்படைதாங்கிய பாண்டியன் (தனது) சேனாதிபதியாகிய சுந்தரசாமந்தனை யழைத்து நாளையதினம் சூரியாஸ்தமனத்திற்கு முன்னே, சேனைவீரர்களை யெல்லாம் அழைப்பாயென்று கட்டளையிட்டான். எ-று. (சசு)

என்றமன் னவனுக் கேற்கச் சாமந்த னிசைந்து வெள்ளி
மன்றவ னடிக்கீழ் வீழ்ந்து வள்ளலே யரச னீந்த
குன்றுறழ் நிதிய மெல்லாங் கொண்டெனைப் பணிகொண் டாயே
வென்றிறற் சேனை யீட்டும் வண்ணம்யா தென்ன நின்றான்.

(இ-ள்.) என்று கூறிய குலபூஷணபாண்டியனுக்குப் பொருந்த, சுந்தரசாமந்தர் உடன்பட்டு, வெள்ளியம்பலத்தில் நடித்தருளும் பெருமானது திருவடிக்கீழ்ப்பணிந்து, எனது வள்ளலே! (சேனைவீரனைச்சேர்க்க) அரசன்கொடுத்த மலைபோன்ற பொருளையெல்லாம் கொண்டு என்னைக்குற்றேவலனுகக்கொண்டனையே, வலியசேனையைச் சேகரிக்கும் வகை யாது? என்று இரந்து நின்றார். எ-று.

"சேனையீட்டும் வண்ணம் யாது" என்றது, தனது உடல்-பொருள்-ஆவி மூன்றும் இறைவனுக்கு ஒப்பித்துவிட்டவராதலின், சேனையீட்டி அரசனுக்கு ஒப்பிடாவிடின் அவ்விடையூறு எனதன்று நினதே என்னும் ஒற்றுமை யுரிமைகள் தோன்றக் கூறியதாம். (கசு)

அடியவர் குறைவு தீர்த்தாண் டருள்வதே விரதம் பூண்ட
கொடியணி மாடக் கூடற் கோமகன் காமற் காய்ந்த
பொடியணி புராணப் புத்தேட் புண்ணிய னருளி னாலே
யிடியதிர் விசும்பு கீறி யெழுந்ததோர் தெய்வ வாக்கு.

(இ-ள்.) தொண்டர்களது இடுக்கண்களைக் களைந்து அடிமைகொண்டருள் வதையே விரதமாகக்கொண்டருளிய, கொடிகள் கட்டிய மாடங்கள் பொருந்திய மதுராபுரியில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளும், மன்மதனைப் பொடிபடுத்திய திருநீறுதரித்த பழம்பொருளும் தெய்வத்தன்மைபொருந்திய தருமசொரூபியுமாகிய பெருமானது திருவருளினால், இடிமுழங்கும் ஆகாயத்தின் வயிற்றினைக் கிழித்து ஓர் அசரீரித்திருவாக்கு எழுந்தது. எ-று. (சஎ)

சூழ்ந்தெழு சேனை யோடுந் தோற்றுது நாளை நீயும்
வீழ்ந்தர சவையத் தெய்தி மேவுதி யென்ன விண்ணம்
போந்தெழு மாற்றங் கேட்டுப் பொருநரே றுவகை வெள்ளத்
தாழ்ந்தனன் முந்நீர் வெள்ளத் தலர்கதி ரவனு மாழ்ந்தான்.

(இ-ள்.) (நம்மைச்) சூழ்ந்தெழுந்த சேனாவீரர்களோடும் நாளைக்குவருகின்றோம். நீயும் பாண்டியன்சபையை யடைய வருவாயென்று, ஆகாயத்தின் வயிற்றைக் கிழித்தெழுந்த அசரீரியைக்கேட்டு, போர்வீரர்கட்கு ஆண்சிங்கம் போன்ற சுந்தர சாமந்தர் சந்தோஷக்கடலில் மூழ்கினர். பரந்த கிரணத்தையுடைய சூரியனும் கடற் பெருக்கில் மூழ்கினான். எ-று. (சஅ)

மீனவன் காண மேரு வில்லிதன் றமரை வன்கண்
மானவேன் மறவ ராக்கி வாம்பரி வீர னாகத்
தானுமோர் கூத்துக் கோலஞ் சமைந்துவந் தாட விட்ட
நீனிற வெழிலி போலக் காரிரு ளிவர்ந்த தெங்கும்.

(இ-ள்.) குலபூஷணபாண்டியன்காணும்படி, மேருமலையை வில்லாகவுடைய சோமசுந்தரக்கடவுள் தனது பிரமதகணங்களை மானமிக்க வேற்படை தாங்கிய போர் வீரர்களாக்கி, தானும் தாவிச்செல்லும் ஓர் குதிரைவீரனாக, திருவிளையாடல் செய்யுந் திருக்கோலம் பூண்டுவந்து விளையாடப்போட்ட, நீலநிறம் பொருந்திய திரைச்சீலை போல, எவ்விடத்துங் கரிய இருள் நிரம்பியது. எ-று. (சக)

புண்ணிய மனையிற் போகிப் புலர்வதெப் போழ்தென் றெண்ணி
யண்ணல்சா மந்தன் றுஞ்சா னடிக்கடி யெழுந்து வானத்
தெண்ணிறை மீனை நோக்கி நாழிகை யெண்ணி யெண்ணிக்
கண்ணுத லெழுச்சி காண்பா னளந்தனன் கங்கு லெல்லாம்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்த சுந்தரசாமந்தர் சிவபுண்ணியங்கள் குடிகொண்டுள்ள தனது வீட்டிற் சென்று எப்பொழுது விடியுமென்று கருதி, நித்திரை செய்யாமல்அடிக்கடி (படுக்கையினின்றும்)எழுந்து, ஆகாயத்தில் விளங்கும் கணக்கில்லாத நக்ஷத்திரங்களைப்பார்த்து, நாழிகை வரையறுத்து, சிவபெருமான் எழுந்தருளுந் திருக்கோலத்தைக் காண விரும்பி, இராப்பொழுது முற்றும் அளவுசெய்தார். எ-று.

அளந்தனனென்றது-தான் இறைவர் வருங் கோலத்தைக் காணப் பெருமகிழ்ச்சியுற்றிருத்தலின் நித்திரைபெறாது விழித்திருந்தனனென்பதாம். (உ0)

தெருட்டரு மறைக டேறாச் சிவபரஞ் சுடரோ னன்பன்
பொருட்டொரு வடிவங் கொண்டு புரவிமேற் கொண்டு போது
மருட்படை யெழுச்சி காண்பான் போலவார் கலியின் மூழ்கி
யிருட்டுகள் கழுவித் தூய விரவிவந் துதயஞ் செய்தான்.

(இ-ள்) தெளிவுமிக்க வேதங்கள் தெளிந்துணராத பரஞ்சுடராகிய சோமசுந்தரக்கடவுள், தனது அன்பராகிய சுந்தர சாமந்தர் பொருட்டு ஒரு திருவுருவேற்று,

குதிரையின்மேல் ஆரோகணித்து வரும் திருப்படை யெழுச்சியைக் காண்பவன் போலக் கடலில் மூழ்கி, இருளாகிய அழுக்கினைப்போக்கிப் புனிதமாகிய சூரியன் (கீழ்க்கடலில்) வந்து உதித்தான். எ-று.

சிவபெருமானது திருப்படையெழுச்சியைக் காணவேண்டிய சூரியன் தேகசுத்தி காரணமாக நீராடிவந்தானென்றார். சூரியாஸ்தமனமும், சூரியோதயமும் வர்ணித்துக் கூறுவது பெருங்காப்பிய வுறுப்புகளிலொன்று. (உக)

பொருந்மே றனையா னேர்ந்து போந்துநான் மாடக் கூடற்
கருணைநா யகனைத் தாழ்ந்து கைதொழு திரந்து வேண்டிப்
பரவிமீன் டொளிவெண் டிங்கட் பன்மணிக் குடைக்கீ ழேகிக்
குருமதி மருமான் கோயில் குறுகுவான் குறுகு மெல்லை.

(இ-ள்.) வீரர்களில் ஆண்சிங்கம்போன்ற சுந்தரசாமந்தர் மனமிசைந்து சென்று, நான்மாடக்கூடலாகிய மதுராபுரியில் எழுந்தருளிய கிருபாமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளை நமஸ்கரித்துக் கைகுவித்து யாசித்துத் துதித்துத்திரும்பி, ஒளி பொருந்திய வெள்ளிய சந்திரன்போன்ற முத்துக்குடையின் கீழ்ச்சென்று, நிறந்தங்கிய சந்திரன் மரபிற்றோன்றிய பாண்டியன் மாளிகைக்குச் செல்வாராயினார். அவர் அவ்வாறு செல்லுகையில். எ-று. (உஉ)

கலைமதி யெயிற்றுச் சங்கு கன்னன்முன் னான வென்றிப்
பிரமத கணமுங் குண்டப் பெருவயிற் றொருவ னாதி
வரைபுரை குறுத்தாட் பூத மறவருங் குழுமி விக்கு
குலைகழல் வலிய நோன்றாட் கோளுடை வயவ ராகி.

(இ-ள்.) அர்த்தசந்திரன்போன்ற (வக்கிர) தந்தங்களையுடைய சங்குகன்னன் முதலான வெற்றி பொருந்திய பரிசனமாயுள்ள சிவகணங்களும், ஆழ்ந்த பெருவயிற்றையுடைய குண்டோதரன்முதலான மலைபோன்ற குறியகால்களையுடைய பூத வீரர்களும் நெருங்கி, கட்டிய சத்திக்கின்ற வீரகலன்டையையுடைய வலிய காலையும் வன்மையையுமுடைய வீரர்களாகி, எ-று.

குறுத்தாள்-வலித்தல்.

இதுமுதல் நான்குசெய்யுள்களால் சிவபெருமான் மெய்க்காட்டுக்கொடுக்க எழுந்தருளிய திருக்கோலம் வர்ணிக்கப்பட்டது. (உங)

நெட்டிலை வடிவாள் குந்தந் தோமர நேமி நெய்த்தோ
ரொட்டிய கணிச்சி சாப முடம்பிடி முதலா வெண்ணப்
பட்டவெம் படைமு வாறும் பரித்தசெங் கையர் காலிற்
கட்டிய கழலர் காலிற் கடியராய்ப் புறம்பு காப்ப.

(இ-ள்.) நீண்ட அச்சவடிவாகிய வடித்தவாளும், குந்தமும், எறியாயுதமும், சக்கரமும், உதிரம்பொருந்திய மழுவும், வில்லும், வேலுமுதலாக எண்ணப்பட்ட கொடிய பதினெட்டுவித ஆயுதங்களையுந் தாங்கிய செவந்த கையையுடையவரும், காலிற் கட்டிய வீரக்கழலணிந்தவர்களும், காற்றினுங் கடிய நடையை யுடையவர்களுமாய்ப் புறத்திற் சூழ்ந்துவரவும். எ-று. (உச)

வார்கெழு கழற்கா னந்தி மாகாளன் பிருங்கி வென்றித்
தார்கெழு நிகும்பன் கும்போ தரன்முதற் றலைவர் யாரும்
போர்கெழு கவசந் தொட்டுப் புண்டர நுதலிற் றீட்டிக்
கூர்கெழு வடிவா ளேந்திக் குதிரைச்சே வகராய்ச் சூழ.

(இ-ள்.) வாரிற்கட்டிய வீரக்கழலணிந்த காலையுடைய நந்தி மாகாளரும், பிருங்கியும், வெற்றிமாலைதரித்த நிகும்பனும், கும்போதரனு முதலிய சிவகணத்தலைவர் யாவரும் போர்த்தொழிற்குரிய கவசம்பூண்டு, திரிபுண்டரத்தை நெற்றியிலணிந்து கூர்மைமிக்க வடித்த வாட்படைதாங்கி, குதிரைச்சேவகராய்ச் சூழ்ந்துவரவும். எ-று.

சுற்றைச்சா மரைகள் பிச்சங் கவிகைபூங் கொடிக்கா டெங்கு
முற்றக்கா ரொலியு நாணத் தூரிய முழுது மேங்கக்
கொற்றப்போர் விடையைத் தானே குரங்குளைப் பரிமா மேற்கொண்
டொற்றைச்சே வகராய் மாறி யாடிய வொருவர் வந்தார்.

(இ-ள்.) நெருங்கியசாமரைகளும், மயிற்பீலிகளும், குடைகளும், பொலிவை யுடைய துவசக்காடுகளும், எங்குஞ்சூழ்ந்துவரவும், மேகவொலியும்நாண வாத்தியங்களெல்லாம் ஒலிக்கவும், வெற்றிபொருந்திய போருக்குரிய இடபவாகனத்தையே குதிரையாக ஆரோகணித்தருளி, ஒப்பில்லாத வீரராய்க் கான்மாறி யாடியருளிய சோமசுந்தரப்பெருமான் வந்தருளினன். எ-று.

குரங்கு உளை பரி - வளைந்த புறமயிரை யுடைய குதிரை (உசு)

பல்லிய மொலிக்கு மார்ப்பும் பாய்பரி கலிக்கு மார்ப்புஞ்
செல்லொலி மழுங்க மள்ளர் தெழித்திடு மார்ப்பு மொன்றிக்
கல்லெனுஞ் சும்மைத் தாகிக் கலந்தெழு சேனை மேனாண்
மல்லன்மா நகர்மேற் சீறி வருகடல் போன்ற தன்றே.

(இ-ள்.) பலவாத்தியங்கள் ஒலிக்குங் கோஷமும், பாய்ந்து செல்லுங் குதிரைகள் கனைக்குங் கோஷமும், மேககோஷமானது மழுங்கும்படி வீரர்கள் பேரொலி செய்யுங் கோஷமுந் தம்முட்கலந்து, கல்லென்னும் ஆரவாரத்தை யுடையதாகிக் கலந்தெழுந்த சேனையின் வருகையானது, முற்காலத்தில் வளப்பம் பொருந்திய மதுராபுரியின்பேரில் (வருணன் ஏவக்) கோபித்து வராநின்ற கடலை யொத்திருந்தது. எ-று.

சேனையின் வரவு நோக்கித் திருமகன் றிருமுன் னேகித்
தானையர் தலைவன் றென்னன் றாணிழல் குறுகிக் கூற
மீனவ னுவகை பூத்து வெயின்மணிக் கடையிற் போந்தங்
கானமண் டபத்திற் செம்பொ னரியணை மீது வைகி.

(இ-ள்.) சேனையின் வருகையைப் பார்த்து, பாண்டியனுக்கு முன் சென்ற சேனைத்தலைவராகிய சுந்தர சாமந்தர், அப்பாண்டியனது பாதநிழலையடைந்து (சேனையின்வருகையை)கூற, குலபூஷணபாண்டியன் களிகூர்ந்து விளக்கமமைந்த இரத்தின மழுத்திய கடைவாயிலில் வந்து, அவ்விடத்தமைந்த மண்டபத்திலே, செம்பொன்னாலாகிய சிங்காசனத்தில் இருந்து. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (உஅ)

தெவ்வடு மகிழ்ச்சி பொங்கச் சேனையின் செல்வ நோக்கி
யெவ்வெத்தே யத்தி னுள்ளா ரிவரென வெதிரே நின்று
கௌவையின் மனச்சா மந்தன் கையிற்பொற் பிரம்பு நீட்டி
யவ்வவர் தொகுதி யெல்லா மணியணி நிறுவிக் கூறும்.

(இ-ள்.) (சேதிராயனென்னும் வேடுவப்) பகைவனைக் கொல்லும் மகிழ்ச்சி பொங்கச் சேனைப் பெருக்கத்தைக் கண்டு, இவர்கள் எந்தெந்தத் தேசத்திலிருந்து வந்த சேனாவீரர்கள்? என்று வினவ, வருத்தமில்லாத மனதையுடைய சுந்தரசாமந்தர் பாண்டியன் முன் நின்று, கையிற்றாங்கிய பொற்பிரம்பினை நீட்டி, அச்சேனாவீரர் கூட்டங்களையெல்லாம் வரிசை வரிசையாக நிறுத்திச் சொல்லுகின்றார். எ-று. ()

**கலிவிருத்தம்.**

கொங்கரிவ ரையகுரு நாடரிவ ரைய
கங்கரிவ ரையகரு நாடரிவ ரைய
வங்கரிவ ரையவிவ ராரியர்க ளைய
வங்கரிவ ரையவிவர் மாளவர்க ளைய.

(இ-ள்.) ஐயனே! இவர்கள் கொங்குநாட்டவர்கள்; ஐயனே! இவர்கள் குருநாட்டவர்கள்; ஐயனே! இவர்கள் கங்கநாட்டவர்கள்; ஐயனே! இவர்கள் கருநட நாட்டவர்கள்; ஐயனே! இவர்கள் அங்கநாட்டவர்கள்; ஐயனே! இவர்கள் ஆரிய நாட்டவர்கள்; ஐயனே! இவர்கள் வங்கநாட்டவர்கள்; ஐயனே! இவர்கள் மாளவ நாட்டவர்கள். எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் ஒருதொடர். (௬0)

குலிங்கரிவ ரையவிவர் கொங்கணர்க ளைய
தெலுங்கரிவ ரையவிவர் சிங்களர்க ளைய
கலிங்கரிவ ரையகௌ டத்தரிவ ரைய
வலங்கெழுபு யத்திவர்க ளொட்டியர்க ளைய.

(இ-ள்.) ஐயனே! இவர்கள் குலிங்கநாட்டார்கள்; ஐயனே! இவர்கள் கொங்கநாட்டார்கள்; ஐயனே! இவர்கள் தெலுங்குநாட்டார்கள்; ஐயனே! இவர்கள் சிங்களநாட்டார்கள்; ஐயனே! இவர்கள் கலிங்கநாட்டார்கள்; ஐயனே! இவர்கள் கௌடநாட்டார்கள்; ஐயனே! திரண்ட கல்போன்ற தோளையுடைய இவர்கள் ஒட்டியநாட்டார்கள். எ-று. (௬க)

கொல்லரிவ ரையவிவர் கூர்ச்சரர்க ளைய
பல்லரிவ ரையவிவர் பப்பரர்க ளைய
வில்லரிவ ரையநல்வி தேகரிவ ரைய
கல்லொலி கழற்புனை கடாரரிவ ரைய.

(இ-ள்.) ஐயனே! இவர்கள் கொல்லர்கள்; ஐயனே! இவர்கள் கூர்ச்சர்கள்; ஐயனே! இவர்கள் பல்லவர்கள்; ஐயனே! இவர்கள் பப்பரர்கள்; ஐயனே! இவர்கள் வில்லர்கள்; ஐயனே! இவர்கள் பரவிய விதேகநாட்டினர்கள்; ஐயனே! இவர்கள் கல்லென்னு மொலியையுடைய வீரக்கழலணிந்த கடாரர்கள். எ-று. (௬உ)

கேகையர்க ளாலிவர்கள் கேழ்கிளர் மணிப்பூண்
மாகதர்க ளாலிவர் மராடரிவர் காஞ்சி
நாகரிக ராலிவர்க ணம்முடைய நாட்டோ
ராகுமிவர் தாமெனமெய்க் காட்டியறி வித்தான்.

(இ-ள்.) (ஐயனே!) இவர்கள் கேகய நாட்டிலிருந்து வந்தவர்கள்; இவர்கள் நிறங்கொண்டு விளங்கும் இரத்தினமிழைத்த ஆபரணமணிந்த மகதநாட்டிலிருந்து வந்தவர்கள்; இவர்கள் காஞ்சிநாட்டிலிருந்து வந்த நாகரிகத்தை யுடையவர்கள்; இவர்கள்தாம் நம்முடைய நாட்டினராவார்களென்று அவரவருடைய உருவத்தைக் காட்டி யறிவித்தார். எ-று. (௬௬)

இத்தகைய சேட்புலனு ளாரையிவ ணுய்த்த
வித்தகைமை யென்னெனவி னவியருள் செய்யே
லத்தநின ரும்பொருள ளைத்தும்வரை யாதே
யுய்த்தலின டைக்தனர்க ளாமெனவு ரைத்தான்.

(இ-ள்.) இத்தன்மையாகிய தீரர்கட்டவர்களை இவ்விடம் வருவித்த சதுரப் பாட்டை என்னவென்று வினவியருளவேண்டாம். பெருமானே! உலகு பெறுதற் கரிய பொருளையெல்லாம் கணக்கின்றிச் செலவுசெய்தமையால் (இவர்கள் யாவரும்) வந்தார்கள் என்று கூறினர். எ-று. (கூச)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அந்நெடுஞ் சேனை தன்னுட் சேணிடை யடன்மா வூர்ந்து
பின்னுற நிற்கு மொற்றைச் சேவகப் பிரானை நோக்கி
மன்னவ னிவர்யா ரென்னச் சாமந்தன் வணங்கி யைய
வின்னவர் சேனை வெள்ளத் தியாரையென் றறிவ தென்றான்.

(இ-ள்.) அந்தப் பெரிய சேனையுள் தூரத்தில் வெற்றிபொருந்திய குதிரையைச் செலுத்திப்பின்னே பொருந்தநிற்கும் ஒப்பில்லாத வீரத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைப் பாண்டியன் பார்த்து, இவர் யாவர்? என்றுவினவ, சுந்தரசாமந்தர் பணிந்து, ஐயனே! இவர் இந்தச் சேனைப்பெருக்கில் யாரென்று யான் உணர்ந்து சொல்லுவது? எனச்சொன்னார். எ-று. (கூரு)

அவனையிங் கழைத்தி யென்றா னரசன்றன் வழிச்செல் வார்போற்
கவயமிட் டவரும் போந்தார் காவலன் களிகூர்ந் தம்பொ
னவமணிக் கலன்பொன் னாடை நல்கினா னுள்ளத் தன்பு
தவறிலான் பொருட்டு வாங்கித் தரித்துத்தன் றமர்க்கு மீந்தார்.

(இ-ள்.) அவனையிவ்விடத்தில் அழைப்பாயென்று, பாண்டியன் கூறினான். அப்பாண்டியனுடைய வழிபட்டுச் செல்வார்போல, போர்க்கவசஞ்சாத்திவந்த சோமசுந்தரப்பெருமானுஞ் சென்றார். பாண்டியன் மகிழ்ச்சிமிகுந்து அழகிய பொன்னாலாகிய நவமணிகளழுத்திய ஆபரணங்களையும் பீதாம்பரத்தையுங் கொடுத்தான். தன்மனதில் அன்பானது சிறிதுந் தவறுதலில்லாத சுந்தரசாமந்தர் பொருட்டு, (அவற்றை) ஏற்றுத்தரித்து, தனது பரிசனங்கட்குங் கொடுத்தருளினார். எ-று. (கூகூ)

ஆய்ந்தவெம் பரிமாத் தூண்டி யைங்கதி நடத்திக் காட்டி
யேய்ந்ததஞ் சேனை வெள்ளத் தெய்தினா ரெய்து மெல்லை
வேய்ந்ததார்ச் சேதி ராயன் வேட்டைபோய்ப் புலிகோட் பட்டு
மாய்ந்தன னென்றே ரொற்றன் வேந்தன்முன் வந்து சொன்னான்.

(இ-ள்.) ஆராய்ந்தெடுத்த உத்தம அசுவத்தை நடத்தி ஐங்கதிகளிலுஞ் செலுத்திக் காண்பித்து, பொருந்திய தமது சேனைவெள்ளத்திற் சென்றருளினார். (அப்படி) செல்லுங்காலத்தில், வெற்றிபொருந்திய (பகைவனாகிய) சேதிராயன் வேட்டைமேற்சென்று புலியினாற்கொல்லப்பட்டு மடிந்தானென்று, ஒரு தூதுவன் பாண்டியன்முன் வந்து கூறினன். எ-று. (கூஎ)

முரசதி ரனிக நோக்கி முகமலர்ந் துவகை பூத்த
வரசனு மனிக வேந்தற் களவில்சீர்த் தலைமை யோடும்
வரிசைகண் மிதப்ப நல்கி வந்துமெய்க் காட்டுத் தந்து
பரசிய பதாதி தத்தம் பதிபுகச் செலுத்து கென்றான்.

(இ-ள்.) முரசொலிக்குஞ் சேனையைப்பார்த்து முகமலர்ச்சியுற்று, மகிழ்வுற்றபாண்டியனும், சேனைத்தலைவராகிய சுந்தரசாமந்தர்க்குப் பெருஞ் சிறப்பமைந்த சேனைத்தலைமையோடு வேறு அதிகாரமும், மனம் வெறுக்கத்தக்க பரிசுகளுங் கொடுத்து, வந்து மெய்க்காட்டுக்கொடுத்து யாவருந் துதிக்கநின்ற சேனைகள் தத்தம் ஊர்க்குச் செல்ல விடைகொடுக்கவென்று பாண்டியன் கூறினன். எ-று. (கூஅ)

அறைந்தவார் கழற்காற் சேனை காவல னனிகந் தத்தந்
சிறந்தசே ணாட்டிற் செல்லச் செலுத்துவான் போன்று நிற்ப
நிறைந்தநான் மாடக் கூட லிருத்தனந் நிலைநின் றாங்கே
மறைந்தனன் மனித வேடங் காட்டிய மறவ ரோடும்.

(இ-ள்.) சத்திக்கின்ற நெடிய வீரக்கழலணிந்த காலையுடைய சுந்தரசாமந்தர், சேனைகள் தங்கடங்களது சிறந்த தூரதேசங்கட்குச் செல்லவிடைகொடுப்பார் போல நிற்க, (வளப்பம்) நிறைந்த நான்மாடக்கூடலாகிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் மானுடவடிவங் கொண்டுவந்த சிவகணங்களோடும் அவ்விடத்தில் நின்றருளினாற்போலவே அப்பொழுதே அந்தர்த்தானமாயினர். எ-று.

நின்றாங்கு = நின்ற + ஆங்கு. இதில் அகரம் தொகுத்தல். (கக)

கண்டனன் பொருநை நாடன் வியந்தனன் கருத்தா சங்கை
கொண்டனன் குறித்து நோக்கி யீதுநங் கூடன் மேய
வண்டர்தம் பெருமான் செய்த வாடலென் றெண்ணிக் கண்ணீர்
விண்டனன் புளகம் போர்ப்ப மெய்யன்பு வடிவ மானான்.

(இ-ள்.) தாமிரபர்ணி சூழ்ந்த நாட்டையுடைய குலபூடண பாண்டியன் கண்டு அதிசயித்து மனதில்ஐயங்கொண்டு ஆராய்ந்துபார்த்து, இஃது நமது மதுரைப்பதியிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள்செய்தருளிய திருவிளையாடலென்று கருதி ஆனந்தபாஷ்பஞ்சொரிந்து உடல்முழுதும் மயிர்க்கூச்செறிய மெய்யன்பேவடிவமாகி நின்றான். எ-று.

அண்டர்தம் பெருமான் - தேவர்தலைவன். (உ0)

தனக்குயிர்த் துணையாய் நின்ற சாமந்தன் றன்னை நோக்கி
யுனக்கெளி வந்தார் கூட லுடையநா யகரே யென்று
லெனக்கவ ராவார் நீயே யென்றவற் கியாவு நல்கி
மனக்கவல் பின்றி வாழ்ந்தான் மதிவழி வந்த மைந்தன்.

(இ-ள்.) தனக்கு உயிர்த்துணைவரா யிருந்த சுந்தரசாமந்தரைப் பார்த்து, மதுரைப்பதியையுடைய சோமசுந்தரக்கடவுளே உமக்கு எளிதில் வந்தருளினொன்றால், நீரே எனக்கு அச்சோமசுந்தரக்கடவுளென்று, சந்திரமரபில் வந்த குலபூடண பாண்டியன் அவருக்கு வேண்டுவனவெல்லாந் தந்து மனக்கவலையில்லாமல் அரசியல் நடத்திவந்தான். எ-று.

"எனக்கவ ராவார் நீயே" என்றது.—"தாவர சங்கமங்க ளென்றிரண்டுருவி னின்று - மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பான்" என்றபடி சிவபெருமான் அடியவரிடத்து வசித்தலால், அவ்வடியரையுபசரித்தலே அவரை யுபசரித்தலாமாதலினென்க. (உக)

மெய்க்காட்டிட்டபடலம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஎ0கு.

உ

சிவமயம்.

# முப்பத்தொன்றாவது,

# உலவாக்கிழியருளியபடலம்.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அடியார் பொருட்டுப் பரிவயவ ராகிச் செழியன் காணவிடைக்
கொடியார் வந்து மெய்க்காட்டுக் கொடுத்த வண்ண மெடுத்துரைத்துங்
கடியார் கொன்றை முடியாரக் கன்னி நாடன் றனக்கிசைந்த
படியா ருலவாக் கிழிகொடுத்த படியை யறிந்த படிபகர்வாம்.

(இ-ள்.) அடியாராகிய சுந்தரசாமந்தர்பொருட்டுக் குதிரைச் சேவகராகிக் குலபூஷணபாண்டியன் தரிசிக்க இடபக்கொடியையுடைய சோமசுந்தரக்கடவுள் மெய்க்காட்டுக்கொடுத்தருளிய திருவிளையாடலை எடுத்துக்கூறினேம். வாசநிறைந்த கொன்றைமாலையணிந்த சடாமுடியையுடைய அப்பெருமான், அப்பாண்டியன் தனக்கொத்த அன்பனானபடியால் உலவாக்கிழியருளிய திருவிளையாடலை (யாம் இனி) தெரிந்தவண்ணங் கூறுவாம். எ-று. (க)

வள்ளல் குலபூ டணன்றிங்கள் வாரந் தொடுத்துச் சிவதரும
முள்ள வெல்லாம் வழாதுநோற் றொழுகும் வலியாற் றன்னாட்டி
லெள்ள லில்லா வேதியரை யிகழ்ந்தா னதனான் மழைமறுத்து
வெள்ள மருக வளங்குன்றி விளைவஃ கியது நாடெல்லாம்.

(இ-ள்.) வரையாது கொடுக்குந் தொழிலையுடைய குலபூஷணபாண்டியன் *சோமவாரவிரதமுதல் சிவதருமமாகவுள்ள விரதங்களையெல்லாம் தவறாது நோற்று நடக்கும் வன்மையால், தன்னுடைய நாட்டிலுள்ள நிந்தையில்லாத அந்தணர்களை இகழ்ந்து நடந்தான். அவ்வேதிய இகழ்ச்சியால் மழைவளங் குன்றி நீர்ப்பெருக்குக் குறைய, பாண்டியநாடுமுற்றும் வளங்குறைந்து விளைவு சுருங்கிற்று. எ-று.

*சோமவார முதலான விரதங்கள்-அட்டமி, சதுர்த்தசி, பூரணை முதலியன.

அறவோ ரெல்லா நிரப்பெய்தி யாகங் கிடந்த நூலன்றி
மறைநூ லிழந்து முனிவேள்வி வானோர் வேள்வி தென்புலத்தி
னுறைவோர் வேள்வி யிழந்தி ழிந்த தொழில்செய் தாரு துயிர்வளர்ப்பான்
புறநா டணைந்தார் பசியாலே புழுங்கி யொழிந்த குடியெல்லாம்.

(இ-ள்.) வேதியர் யாவரும் வறுமையுற்று, மார்பில் விளங்கும் பூணநூலை யன்றி, வேதமாகிய பெருநூலையும் இழந்து, முனிவர் யாகம் - தேவர் யாகம் - பிதிர் யாகம் (இவற்றை) இழந்து, இழிந்த தொழில்களைச்செய்து உய்தியறியாது, தம்முயிரைக்காக்கப் புறநாட்டிற் சென்றார்கள். (அவ்வந்தணர்) ஒழிந்த குடிகளெல்லாம் பசியினால் மனம்புழுங்கி. எ-று. (௨)

எங்கா டணைவோ மெனவிரங்க விரங்கி மதிக்கோன் மதிநாளிற்
பொன்னாண் முளரித் தடங்குடைந்து சித்திக் களிற்றைப் பூசித்துத்
தன்னா தரவாம் கயற்கண்ணி தலைவன் றன்னை யருச்சித்து
முன்னா விழ்ந்து காமுகிழ்த்துப் பழிச்சி மகிழ்ந்து மொழிகின்றான்.

(இ-ள்.) எந்த நாட்டிற்குப் போவோமென்று வருந்த, (அதுகண்ட) குல பூஷணபாண்டியன் மனம் வருந்தி, சோமவாரத்தில் அன்றலர்ந்த மலர்களையுடைய பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சித்திவிநாயகமூர்த்தியைப் பூஜைசெய்து, தன்னுடைய அன்புடன் அங்கயற்கண்ணியார்தலைவராகிய சோமசுந்தரக்கடவுளை (ஆகமமுறையே) அருச்சித்து, சந்நிதிமுன் விழுந்து கைகுவித்துத் துதித்து மகிழ்ந்து சொல்கின்றான். எ-று. (ரு)

அத்த வுலகி லுயிர்க்குயிர்நீ யல்லை யோவவ் வுயிர்ப்பசியா
லெய்த்த வருத்த மடியேனை வருத்து மாறென் யானீட்டி
வைத்த பொருளுந் தருமத்தின் வழியே செல்ற தினியடிகள்
சித்த மலர்ந்தென் விடும்பைவினை தீர வருட்கண் செய்கவென.

(இ-ள்.) தலைவனே! உலகிலுள்ள உயிர்களுக்கு உயிர் நீயல்லவோ? அந்த வுயிர்கள் பசியினால் இளைத்தவருத்தம் (தேவரீரைச் சாராது) அடியேனை வருத்துங் காரணம் யாது? யான் சேகரித்துவைத்த பொருளும் சிவதருமவழியே செலவாயது. இனி தேவரீர் திருவுளமிரங்கி எனது துன்பநோய் தீரும்வண்ணம் திருவருணோக்கஞ் செய்தருளுகவென்று யாசிக்க. எ-று (௬)

கேளா டரவ மரைக்கசைத்த கூடற் பெருமான் குறையிரக்கு
மாளா வரசன் றவறுசிறி தகங்கொண் டதனைத் திருச்செவியிற்
கேளார் போல வாளாதே யிருப்ப மனையிற் கிடைத்தமலன்
றாளா தரவு பெறநினைந்து தரையிற் கிடந்து துயில்கின்றான்.

(இ-ள்.) வன்மையுடைய ஆடாநின்ற சர்ப்பத்தை இடையிற் (கச்சாகக்) கட்டியருளிய சோமசுந்தரக்கடவுள், தனது குறைகூறி யாசிக்குந் தொண்டனாகிய பாண்டியன் தவறுபாட்டைச்சிறிது திருவுளத்திற்கொண்டு, அதனைத் தமது திருச்செவியிற் கேளாதவர்போல வாளாவிருப்ப, (அரசன்) தனது கோயிலிற் சென்று நிர்மலராகிய பெருமானது திருவடியை அன்புமிகச் சிந்தித்து, தரைமிசைகிடந்து நித்திரை செய்கின்றவனாயினன். எ-று. (௭)

அங்கண் வெள்ளி யம்பலத்து ளாடு மடிக ளருங்கனவிற்
சங்கக் குழையும் வெண்ணீறுஞ் சரிகோ வணமுந் தயங்கவுரன்
சிங்க நாதங் கிடந்தசையச் சித்த வடிவா யெழுந்தருளி
வெங்கண் யானைத் தென்னவர்கோன் முன்னின் றிதனை விளம்புவார்.

(இ-ள்.) அப்பொழுது வெள்ளியம்பலத்தில் நடித்தருளும் சோமசுந்தரக்கடவுள் அக்குலபூஷணபாண்டியன் கனவில், சங்ககுண்டலமும் வெள்ளியதிருநீறும் சரிந்த கோவணமும் விளங்கவும், திருமார்பில் சிங்கநாதம் (ஒருபாற்)கிடந்து அசையவும், சித்தமூர்த்தியா யெழுந்தருளி, அஞ்சாமையைப் பொருந்திய யானைச்சேனையையுடைய அப்பாண்டியன் முன்னே நின்று இதனைக் கூறியருளுகின்றார். எ-று.

சிங்கநாதம் - ஒருவகை வாச்சியம்; கொம்பினாற் செய்யப்பட்டது. (௮)

ஏடா ரலங்கல் வரைமார்ப வெம்பா லென்று மன்புடைமை
வாடா விரத விழுச்செல்வ முடையாய் வைய மறங்கடிந்து
கோடா தளிக்குஞ் செங்கோன்மை யுடையா யுனக்கோர் குறையுளது
வீடா வளஞ்சேர் நாட்டிந்நாள் வேள்விச் செல்வ மருகியதால்.

(இ-ள்.) இதழ்கள் பொருந்திய மாலைசூடிய மலைபோன்ற மார்பையுடைய பாண்டியனே! எம்மிடத்தில் எப்பொழுதும் அன்புடைமையும் அழியாத சிவவிரத

முமாகிய பெருஞ்செல்வத்தையுடையாய்! பூமியைக் கலிதுரந்து கோணுதலின்றிக் காக்குஞ் செங்கோலினையுடையாய்! உன்னிடத்தில் ஓர் குறையுளது. (அதனால்) அழியாத உனது வளம்பொருந்திய நாட்டில் இப்பொழுது வேள்விச் செல்வங் குறைந்தது. எ-று. (அ)

மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையா
மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமா
மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகும்
மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும்.

(இ-ள்.) வேதமே நமது பீடமாம்; வேதமே நமது பாதுகையாம்; வேதமே நமது வாகனமாம்; வேதமே நமது சிலம்பாம்; வேதமே நமது கோவணமாம்; வேதமே நமது விழிகளாம்; வேதமே நமது மொழியாகும்; வேதமே நமது வடிவமாகும். எ-று.

பாதுகை - திருவடிநிலை. (கூ)

வேதந் தானே நமதாணைச் சத்தி வடிவாய் விதிவிலக்காய்ப்
போதங் கொளுத்தி நிலைநிறுத்திப் போகங் கொடுத்துப் பல்லுயிர்க்கும்
பேதஞ் செய்யும் பிணியவிழ்த்தெம் பிரியா வீடு தருவதுதே
னோதஞ் செய்யுந் தார்வேந்தே நமது செங்கோ லதுவாகும்.

(இ-ள்.) வண்டுகள்பாடும் மாலையணிந்த மன்னவனே! வேதமே நமது ஆக்கினையாகிய சத்திவடிவாகியும், விதிவிலக்குகளாயும், பலவுயிர்கட்கும் அறிவு கொளுத்தி நன்னிலையில் இருத்தி இஷ்டபோகங்கொடுத்து, எல்லாப் பிராணிகளிடத்தும், ஐயமாதிகளை விளக்கும் பந்தங்களைக் கெடுத்து, எம்மைப்பிரியாத மோக்ஷத்தைத்தருவதாயுமுள்ளது. (ஆதலின்) நமது செங்கோலும் அவ்வேதமேயாகும். எ-று. (கo)

அந்த மறைக டமக்குறுதி யாவா ரந்நூல் வழிகலிநோய்
சிந்த மகத்தீ வளர்த்தெம்பாற் சிந்தை செலுத்து மந்தணரா
மிந்த மறையோர் வேள்விமழைக் கேது வாகு மிவர்தம்மை
மைந்த விகழ்ந்து கைவிட்டா யதனான் மாரி மறுத்தன்றால்.

(இ-ள்.) அந்த வேதங்கட்கு உறுதியாயுள்ளவர்கள், அந்த வேதநூல் வழியே கலிநோய்கெட யாகாக்கினியோம்பி, எம்மிடத்தில் மனதைச் செலுத்தும் வேதியராவர். இவ்வாறுள்ள வேதியர்கள் செய்யும்யாகம் மழைக்குக்காரணமாம். நமது புதல்வனே! நீ இவர்களை அவமதித்துக் கைவிட்டாய்; அக்காரணத்தினால் மழைவளங் குறைந்தது. எ-று. (கக)

மும்மைப் புவனங் களுமுய்ய முத்தீ வேட்கு மிவர்தம்மை
நம்மைப் போலக் கண்டொழுகி நாளு நாளு மறம்பெருக்கிச்
செம்மைத் தருமக் கோலோச்சித் திகிரி யுருட்டி வாழ்தியென
வும்மைப் பயன்போ லெளிவந்தா ருலவாக் கிழியொன் றுதவுவார்.

(இ-ள்.) திரிலோகங்களும் உச்சிவிக்க (காருகபத்தியம் ஆகவநீயம் தக்ஷிணாக்கினியென்னும்) மூன்றக்கினியையும் வளர்க்கும் இந்தவேதியரை நம்மைப்போலச்சிந்தித்து நடந்து, எக்காலத்தும் பலதருமங்களையும்பெருகச்செய்து, தருமவடிவான செங்கோலைச் செலுத்தி ஆக்கினை சக்கரத்தைச்செலுத்தி வாழ்வாய் என்று, முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயன்போல எளிதில்வந்தருளிய சோமசுந்தரக்கடவுள் உலவாக்கிழி ஒன்று கொடுத்தருளினார். எ-று. (கஉ)

இந்தக் கிழியி லெத்துணைப்பொன் னெடுத்து மெழுங்குந் தொறுநாங்க
டந்த வளவிற் குறையாத தன்மைத் தாகு மிதுகொண்டு
வந்த விலம்பா டகற்றென்று கொடுத்து வேந்தன் மனக்கவலை
சிந்தத் திருநீ றதுசாத்தி மறைந்தா ரையர் திருவுருவம்.

(இ-ள்.) இந்த உலவாக்கிழியில் எவ்வளவு பொன்னைனாலும் எடுத்துக்கொடுக்குந்தோறும் நாம் கொடுத்த அளவினின்றுங் குறையாத தன்மையதாகும். அப்பொருளைக்கொண்டு நேரிட்ட துன்பத்தை யொழிப்பாயென்று கொடுத்து, பாண்டியனுடைய மனத்துன்பமகலத் திருநீறிட்டு, சோமசுந்தரக்கடவுள் (சித்தமூர்த்தமாக வந்த) தமது திருவுருவ மறைந்தருளினர். எ-று. (கரு)

கண்ட கனவு நனவாகத் தொழுதா னெழுந்து கௌரியர்கோ
னண்டர் பெருமான் றிருவடிபோ லம்பொற் கிழியை முடித்தலைமேற்
கொண்டு மகிழ்ச்சி தலைசிறப்ப நின்றோர் முகூர்த்தங் கூத்தாடித்
தண்டா வமைச்சர் படைத்தலைவர் தமக்குங் காட்டி யறிவித்தான்.

(இ-ள்.) பாண்டியன் தான்கண்ட கனவு நனவாகப் பயன்படத் துயிலெழுந்து பணிந்து சோமசுந்தரக்கடவுளுடைய திருவடியைப்போல அழகிய உலவாக்கிழியைத் தனது முடிமேற்சூடி, மகிழ்ச்சிமேலோங்க ஒரு முகூர்த்தம் ஆநந்தக்கூத்தாடி, நீங்காதமந்திரிகட்கும் சேனாதிபதிக்கும் காட்டி (நடந்த விர்த்தாந்தங்களைத்) தெரிவித்தான். எ-று.

தொழுதெழுந்து என்பதனை 'எழுந்து தொழுது' என மாற்றிப் பொருள் கொள்க. 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்-பெய்யெனப் பெய்யு மழை' என்னுந் திருக்குறளில் தொழுதெழுவாள் என்றது எழுந்து தொழுவாள் என்ப் பொருள்படுமென்பர் பிரயோகவிவேகநூலார். (கச)

செங்க ணரிமான் பிடர்சுமந்த தெய்வ மணிப்பூந் தவிசேற்றிச்
சங்க முழங்க மறைமுழங்கச் சாந்தந் திமிர்ந்து தாதொழுகத்
தொங்க லணிந்து தசாங்கவிரைத் தூப நறுநெய்ச் சுடர்வளைத்துக்
கங்கை மிலைந்த கடவுளெனக் கருதிப் பூசை வினைமுடித்தான்.

(இ-ள்.) செவ்விய கண்ணினையுடைய சிங்கத்தின் பிடர்சுமந்த தெய்வத்தன்மைபொருந்திய இரத்தினத்தின்பொலிவையுடைய ஆசனத்திலேற்றி, சங்கங்கள் (ஒருபுறம்) முழங்கவும், வேதங்கள் (ஒருபுறம்) கோஷிக்கவும், சந்தனக்குழம்பை அப்பி, மகரந்தம் சிந்த மலர்மாலையைச் சூட்டி, தசாங்கோபசாரத்தோடு வாசனைத்தூபத்தையும், மணங்கமழும் நெய்த்தீபத்தையும் வளைத்து, கங்காதரராகிய சிவபெருமானைப்போல (உலவாக்கிழியைச்) சிந்தித்துப் பூசைசெய்து முடித்தனர். எ-று.

தசாங்கோபசாரங்கள்.—ஆவாகனம் - தாபனம் - சந்நிதானம் - சந்நிரோதனம் - அவகுண்டனம் - தேனுமுத்திரை - பாத்தியம் - ஆசமனீயம் - அர்க்கியம் - புட்பதானம் எனப்படும். தூபம் ஐவகையென்பர்: அவை குந்துருக்கம் - பச்சைக்கற்பூரம் - காரகில் - வெண்சந்தனம் - கருஞ்சீதாரி எனப்படும். (கரு)

அடுத்து வணங்கி வலஞ்செய்திட் டம்பொற் கிழியைப் பொதிநீக்கி
யெடுத்து முத்தீ வினைஞர்க்கும் யாகங் களுக்கும் யாவர்க்கு
மடுத்து நாளும் வரையாது வழங்க வழங்க வடியார்க்குக்
கொடுக்கக் குறையா வீட்டின்ப மாயிற் றையர் கொடுத்தகிழி.

(இ-ள்.) அழகிய உலவாக்கிழியைச் சமீபித்துப் பணிந்து பிரதக்ஷிணஞ்செய்து முடியினின்று நீக்கிப் பொன்னையள்ளி, முத்தீயோம்பும் அந்தணர்கட்கும்

யாகங்கட்கும் மற்றவர்கட்கும் எந்நாளும் அளவின்றிக்கொடுக்கக் கொடுக்க, சோம சுந்தரக்கடவுள் கொடுத்தருளிய உலவாக்கிழியானது, தமதுஅடியார்கட்குக்கொடுக்க க்குறையாத மோட்ச இன்பத்தைப்போல (என்றுங் குறையாது) ஒரு படித்தா யிருந்தது. எ-று.

வழங்க வழங்கவென்ற அடுக்கு மிகுதிப்பொருளது. (கசு)

ஆய பொதியில் வளைபொன்னு லசும்பு செய்து விசும்பிழிந்த
கோயி லதனை யகம்புறமுங் குயின்று ஞானக் கொழுந்தனைபு
தாயி லறுகாற் பீடிகைவான் றடவு கொடியு நெடியபெரு
வாயில் பிறவு மழகெறிப்ப வேய்ந்தான் மறையின் வரம்பறிந்தான்.

(இ-ள்.) உலவாக்கிழியினின்றெடுத்த வளைந்த பொன்னால், ஒளிவீசி விண் ணுலகினின்றிழிந்த இந்திர விமானத்தை அகத்திலும் புறத்திலும் இழைத்து, ஞான க்கொழுந்துபோன்ற அங்கயற்கண்ணம்மையார் திருக்கோயிலும் அறுகாற் பீடமும் ஆகாயமளாவிய கொடியையுடைய நெடிய பெரியதிருக்கோபுரவாயிலும் மற்றுள்ளன வும் அழகுவீசப் பொற்றகடுவேய்ந்தான். வேதத்தின் எல்லையை யறிந்த குலபூஷண பாண்டியன். எ-று. (கஎ)

முந்திக் குறையா நிதிக்கடலை முகந்து முகந்து நாடோறுஞ்
சிந்திக் குல்பூ டணக்கொண்ட றெய்வ தருமப் பயிர்வளர்ப்பப்
பந்தித் திரைமுந் நீர்மேகம் பருகிச் சொரியப் பலவளனு
நந்திக் கன்னி நாடளகை நகர்போற் செல்வந் தழைத்தன்றே.

(இ-ள்.) குலபூஷணபாண்டியனாகிய மேகமானது குறையாத திரவியமென் னுங்கடலை முற்பட்டு மொண்டு மொண்டு தினந்தோறுஞ்சிந்தி, தெய்வத்தன்மையை யுடைய தருமமாகிய பயிரை வளர்த்துவர, வரிசையாகவரும் அலைகளையுடைய கடல் நீரை மேகமானது பருகிச்சொரியப்பல்வளங்களுமிகுந்து, பாண்டிநாடானது அளகா புரிபோலச் செல்வத்திற்றழைத்தது. எ-று. (கஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வையா கரணர்க ணையா யிகர்மறை வல்லோர் மறைமுடி சொல்லாய்வோர்
மெய்யா மிருதிகள் பொய்யா விரதிகள் வேள்வித் தழல்களை வாழ்விப்போர்
பையா டரவணி யையா னனனுரை பகர்வோ ருலகிய லகல்வோர்க
ளெய்யா துறைதலி னையா தளகைய தென்னப் பொலிவது தென்னாடு.

(இ-ள்.) வியாகரண பண்டிதர்களும், நியாய நூற்புலவர்களும், வேதமுண ர்ந்தவர்களும், உபநிஷதப்பொருளை யாராய்ந்தவர்களும், உண்மையாகிய ஸ்மிருதி நூல்களை வாசித்தவர்களும், பொய்யாத விரதமுடையவர்களும், யாகாக்கினியைப் பாதுகாப்பவர்களும், படம்விரித்தாடாநின்ற சர்ப்பத்தையணிந்த ஐந்துதிருமுகங்களை யுடைய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய ஆகமநூலை அப்பியசித்தவர்களும், பாசபந்த மொழிந்தவர்களும், (வறுமையால்) வருந்தாது வாழ்தலால், பாண்டிநாடா னது வருந்தாத அளகாபுரிபோல விளங்காநின்றது. எ-று.

வையாகரணம் - இலக்கணம். நையாயிகம் - நியாயநூல். (கக)

உலவாக்கிழியருளியபடலம்
முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம்-கஉஉச.

சிவமயம்.

முப்பத்திரண்டாவது,

# வளையல்விற்றபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வேதந் தனது வடிவென்று விண்ணின் றிழிந்த விமானமன்றக்
கீதன் செழியன் றனக்குலவாக் கிழிதந் தளித்த வழியிதுவப்
போதங் கடந்த பொருள்வணிகப் புத்தேண் மாட மணிமறுகு
பாதந் தடவ நடந்துவளை பகர்ந்த பரிசு பகர்கிற்பாம்.

(இ-ள்.) தனது திருவுருவம் வேதமேயென்று கூறி, விண்ணுலகினின் றிழிந்த இந்திரவிமானத்திலெழுந்தருளிய சாமகீதராகிய சோமசுந்தரக்கடவுள் குலபூஷணபாண்டியனுக்கு உலவாக்கிழிகொடுத்தருளிய திருவிளையாடல் இது: சுட்டறிவிற்கெட்டாத அக்கடவுள் வணிகராய், மாடங்கள் நெருங்கிய அழகிய வீதியில் தமது திருவடி தோய நடந்து, வளையல் விற்ற திருவிளையாடலை (இனிக்) கூறுவாம். எ-று.

வேதந் தனது வடிவென்று என்பதனை விமானத்திற்கே அடையாக்கிக் கூறினும் அமையும். (க)

இறைவன் குலபூ டணன்றிகிரி யிவ்வா றுருட்டு நான்முன்னாட்
சிறைவண் டறையுந் தாருவன தெய்வ முனிவர் பன்னியர்தந்
திறைவன் றளந்து காட்டுகென நெடியோன் மகனைப் பொடியாக்கு
மறவன் றானோர் காபாலி யாகிப் பலிக்கு வருகின்றான்.

(இ-ள்.) குலபூஷணபாண்டியன் தனது ஆக்கினைச்சக்கரத்தை யிவ்வாறு செலுத்துங்காலத்தில், முன்னாளில் சிறைகளையுடைய வண்டுகளொலிக்கும் தாருவனத்திலுள்ள தெய்வீகம் பொருந்திய முனிபத்தினிகளுடைய கற்புநிலையை அப்பொழுது அளவிட்டுக் காட்டும்படி, மன்மதனைப் பொடிபடுத்திய வீரனாகிய சிவபெருமான் ஒரு கபாலத்தையுடையவனாகிப் பலிக்குவருகின்றவனாயினன். எ-று.

நெடியோன்மகன் திரிவிக்கிரமாவதாரங் கொண்ட திருமாலின் புதல்வன். சிவபெருமான் மனைவியோடு கூடியிருப்பினும் சடைமுடி கல்லாடை முதலியன தாங்கிக் காமனைச் சாம்பராக்கினமையின் "நெடியோன் மகனைப் பொடியாக்கும் மறவன்" என்றார். (உ)

வேத மரைக்குங் கோவணமு மெய்யி னீறு முள்ளாளக்
கீத மிசைக்குங் கனிவாயு முள்ளே நகையுங் கிண்கிணிசூழ்
பாத மலரும் பாதுகையும் பலிகொள் கலனுங் கொண்டிரதி
மாதர் கணவன் றவவேட மெடுத்தா லொத்து வருமெல்லை.

(இ-ள்.) வேதமாகிய கட்டுங்கோவணமும், திருமேனியில் விபூதியும், உள்ளாளக்கீதத்தைப் பாடாநின்ற கொவ்வைக்கனி போன்ற திருவாயும், உள்ளே அரும்பிய புன்னகையும், சதங்கை யணிந்த பாததாமரையும், பாதுகையும், பிட்சாபாத்திர

மூங்கொண்டு இரதிதேவியின் அழகியநாயகனாகிய மன்மதன் தவவேட மெடுத்தாற்போல வந்தருளுங் காலத்தில். எ-று.

உள்ளாளக்கீதம் - வழக்கிற்கனம். அதாவது ஒற்றறுத்துப்பாடுதலென்பர்.

விள்ளுநங் கமலச் சேவடிசூழ் சிலம்பி னொலியு மிடற்றிரத்
துள்ளுறுங் கீத வொலியுங்கைத் துடியி னொலியுந் தொளைச்செவியி
னுள்ளம் பிளந்து நிறைகளைந்தீர்த் தொல்லை வருமுன் வல்லியர்கள்
பள்ளங் கண்டு வருபுனல்போற் பலிகொண் டில்லின் புறம்போந்தார்.

(இ-ள்.) மலர்ந்த தாமரை போன்ற செவ்விய திருவடியைச் சூழ்ந்த சிலம்பினொலியும், கண்டத்தில் அதிரத்துள்ளாநின்ற கீதவொலியும், திருக்கரத்தேந்திய தமருகவொலியும், செவித்தொளையைக் கிழித்து மனதை வெளிசெய்து கற்பைக் கொள்கொண்டு இழுத்து விரைந்து வருமுன், தாருவன முனிபன்னியர் பள்ளத்தைக்கண்டு வருகின்ற நீரைப்போலப் பலிதாங்கி வீட்டினின்று புறம்போந்தார்கள். எ-று. (ச)

மேற்படி-வேறு.

ஐயங்கொண் டணைவா ரையர் பரிகலத் தைய மின்றிக்
கையம்பொன் வளையும் பெய்வார் கருத்துநா ணன்றிக் காசு
செய்யும்பொன் மருங்கு னாணு மிழப்பர்வேள் சிலையம் பன்றிக்
கொய்யுந்தண் மலர்க்க ணம்புங் கொங்கையிற் சொரியச் சோர்வார்.

(இ-ள்.) பலிதாங்கிவருகின்ற முனிபன்னியர் ஐயரது பிக்ஷாபாத்திரத்தில் ஐயமல்லாமலும் தமது கையிலணிந்த அழகிய பொன்னாலாகிய வளையலையுமிடுவார்கள். மனதிலுள்ள நாணையன்றி இரத்தினமிழைத்த பொன்னாலாகிய இடையிலணிந்த நாணையுமிழப்பார்கள்; மன்மதன் தனதுவில்லில் எறிட்ட மலரம்பல்லாமல் கொய்யாநின்ற தண்ணிய தாமரைபோன்ற தமது கண்களாகிய அம்பினையும் தமது தனத்தின்மேற் சிந்த நிலைதளர்வார்கள். எ-று.

மருங்குல் நாண்-மேகலாபரணம். சிலையம்பு - மன்மதனது கருப்பு வில்லிலேறிட்ட மலர்ப்பாணம். கண்ணம்பு - கண்ணீர். (ரு)

மடமயி லனையா ரெங்கள் வளையினைத் தருதி ரென்றார்
கடல்விட மயின்றா னுங்கள் கந்தரத் துள்ள தென்றான்
றடமதிக் கொம்ப னாரெங் கலையினைத் தருதி ரென்றார்
முடமதி மிலைந்தா னுங்கண் முகமதி யிடத்த தென்றான்.

(இ-ள்.) இளமைதங்கிய மயில்போன்ற சாயலையுடைய மாதர்கள் எங்கள் வளையை [வளையலை]த்தாரும் என்றார்கள். கடலிற்றோன்றிய ஆலாலவிஷத்தைப் பானஞ்செய்தருளிய சிவபெருமான் வளை[சங்கம்] உங்கள் கண்டத்திலுள்ளதென்று விடைகொடுத்தார். பூரணசந்திரனுதித்த மலர்க்கொம்புபோன்ற மங்கையர் எமது கலை [வஸ்திரத்தைக்]கொடும் என்று கேட்டார்கள். வளைந்த இளஞ்சந்திரனை யணிந்த சிவபெருமான் (கலைகள்) உங்கள் முகமாகிய சந்திரனிடத்துள்ளனவென்று கூறினார். எ-று.

வளை கலை என்னு மிரண்டும் முறையே வளையல் சங்கு எனவும், வஸ்திரம் சந்திரகலை எனவும் சிலேடைப்பொருள்தரும். இவ்வாறு விடையளித்தது அவர் கருத்துணர்ந்த சிவபெருமான் அதனை யுணரார்போன்று நும்பாற்காமவேட்கையுடையேமல்லமெனப் பொருடோன்றக் கூறினரென்க. (சு)

இடையறிந் தெம்மைச் சேர்மி னென்றன ரிளைய ரெங்கோன்
கடலமு தனையீர் நுங்கட் கிடையினிக் காணா தென்றான்
மடநலா ரனைத்தற் பண்டை வண்ணமீந் தில்லிற் செல்ல
விடையளித் தருண்மி னென்றார் வேலைபுக் குறங்கு மென்றான்.

(இ-ள்.) மங்கையர் இடை [சமயம்] அறிந்து எம்மைச்சேரும் என்றார்கள். எமது பெருமான் (பாற்)கடலிலுதித்த அமிர்தம்போலு மரிவைசாள்! உங்கட்கு இடை [இடுப்பு] இப்பொழுது புலப்படாதென்று கூறினர். மடமைக்குணமுடைய அம்மாதர்கள் அவ்வாறாயின், முன்னுள்ள நிறத்தைக்கொடுத்து எமது வீட்டிற்குச் செல்ல விடை [உத்தரவு] கொடுத்தருளவேண்டுமென்றார்கள். (விடை [நமது இடபம்]) கடலிற்புகுந்து அறிதுயில்கொள்ளுமென்று கூறினர். எ-று.

இடை விடை என்பன சிலேடைப்பொருளன.

பண்டை வண்ணமீந்து என்றது தமது இயற்கை வடிவொழிந்து பசலைநிற முற்றிருத்தலின் அவ்வாறு வீட்டிற்சென்றால் விபரீதம் விளையுமாதலின் அஃது நீங்க வேண்டிப் பிரார்த்தித்ததாம்.

சிவபெருமான் ஊர்ந்துவரும் இடபவாகனம் திருமாலாதலின் "விடைவேலைபுக்குறங்கும்" என்றானென்க. (எ)

நங்கையர் கபாலிக் கென்று நடுவிலை போலு மென்றா
ரங்கண னடுவி லாமை நும்மனோர்க் கடுத்த தென்றான்
மங்கைய ரடிக ணெஞ்சம் வலியகற் போலு மென்றார்
கொங்கலர் கொன்றை யானுங் கொங்கையே வன்க லென்றான்.

(இ-ள்.) முனிநங்கையர் கபாலிஆகிய உமக்கு ஒருபோதும் நடு [நடுவு நிலை] இல்லைபோலுமென்றார்கள். அழகியகண்ணையுடைய சிவபெருமான் நடு [இடை] இலாமை உம்மைப்போல்வார்க்கே அடுத்தது என்று கூறினர். மாதர்கள் அடிகளுடைய நெஞ்சம் வலிய கல்போலு மென்றார்கள். மகரந்தத்தோடலர்ந்த கொன்றை மாலை யணிந்த சிவபெருமான் உமதுகுசங்களே வலியசற்கள் என்று கூறினர். எ-று.

நடு சிலேடைப் பொருளது. (அ)

காதுவே லன்ன கண்ணார் கங்கைநீர் சுமந்த தேதுக்
கோதுமி னென்றார் நம்பா லுண்பலி யேற்க வென்றா
னேதுபோ லிருந்த தைய னிசைத்தசெப் பென்றா ரீசன்
கோதுறா வமுதன் னீர்நுங் கொங்கைபோ லிருந்த தென்றான்.

(இ-ள்.) கொல்லுகின்ற வேற்படைபோன்ற கண்ணையுடைய பெண்கள் கங்கை [கங்காநதி]யைத் தேவரீர் சுமந்திருப்பது யாதுநிமித்தம்? சொல்லும் என்று வினவினார்கள். (கங் கை [பிரமகபாலத்தைக்கையில், தாங்கி நிற்றல்]) உம்மிடத்தில் உண்ணும் பலியேற்பதற்காகவென்று கூறினர். ஐயன்கூறிய செப்பு [சொல்] யாது போன்றிருந்ததென்று கூறினர். பெருமான் குற்றமில்லாத அமுதம்போன்ற பெண்களே! (செப்பு [கலயம்]) உமது தனத்தைப்போன்றிருந்தது என்று கூறினர். எ-று.

கங்கை, செப்பு-சிலேடைப் பொருளன.

கம்-பிரமகபாலம்; கை-கரம். (கூ)

கறுத்ததை யவன்கொ லைய கந்தர மென்றார் வேளை
வெறுத்தவன் மாரி பெய்தற் கென்றனன் விழியால் வேலை

யொறுத்தவர் யாவ தென்றீ ருத்தர மென்றார் கூற்றைச்
செறுத்தவன் றென்பா னின்று நோக்கினுற் றெரிவ தென்றான்.

(இ-ள்.) (முனிபன்னியர்) ஐயரே! (உமது) கந்தரம் [கழுத்து] கறுத்தது யாதுகாரணம் எனவினவினர். மன்மதனைவெறுத்தெரித்த சிவபெருமான் (கந்தரங்கறுத்தது [மேகங்கறுப்புற்றது]), மழைபெய்தற்கென்றுவிடைகொடுத்தார். தமதுகண்களால் வேலாயுதத்தை வென்ற மங்கையர் எங்கள் வினாவிற்கு உத்தரம் [விடை] யாதென்று கூறினீர்? எனக்கேட்டார்கள். இயமனை யுதைத்தருளிய சிவபெருமான் தென்றிசைக்கணின்று பார்த்தால் (நீங்கள் கூறிய உத்தரம் [வடக்கு]) தெரியத்தக்கது என்று கூறினர். எ-று.

கந்தரம் உத்தரம் என்பன-சிலேடைப் பொருளன. (கo)

செக்கரஞ் சடையான் கண்ணிற் றம்முருத் தெரிய நோக்கி
யிக்கொடி யார்போற் கண்ணு ளெம்மையு மிருத்தி ரென்றார்
நக்கனுந் தனையன் னார்கண் ணிடைக்கண்டு நகைத்து நம்மின்
மிக்கவர் நுங்க ணுள்ளார் விழித்தவர்க் காண்மி னென்றான்.

(இ-ள்.) செவந்த அழகியசடாமுடியையுடைய சிவபெருமான் திருவிழியில் தமதுருவம் புலப்படப்பார்த்து, இக்கொடிபோன்ற இடையையுடைய பெண்களைப் போல உமது விழியில் எம்மையும் இருக்கச் செய்யுமென்றார்கள். சிவபெருமானும் தன்னை அப்பெண்கள் கண்ணிற்கண்டு நகைத்து நம்மைக் காட்டிலும் பேரழகர் உமது கண்களிலிருக்கின்றார். சரிவர விழித்து அவரைப்பாருங்களென்றார். எ-று.

சிவபெருமான் விழியிற்றோன்றிய தமது பிரதிபிம்பத்தைக் காமவெறியாலுணராது மங்கையரைக் கண்ணிலமைத்தாரென்றார். எ-று. (கக)

அஞ்சலிப் போது பெய்வார் சரணமென் றடியில் வீழ்வார்
தஞ்செனத் தளிர்க்கை நீட்டித் தழுவிய கிடைக்குந் தோறு
மெஞ்சுவா னெஞ்சா தேத்தி யெதிர்மறை யெட்டுந் தோறும்
வஞ்சனு யகல்வான் மையல் வஞ்சியர்க் கணிய னாமோ.

(இ-ள்.) (மங்கையர்) அஞ்சலித்து மலர் சூட்டுவார்கள்; சரணம் என்று திருவடியிற் பணிவார்கள்; (நீரோ) பற்றுக்கோடென்று மாந்தளிர்போன்ற கைகளை நீட்டித் தழுவ, அவர்கட்குக் கிட்டுந்தோறும் (கிட்டாது) அப்பாற்படுவோன். வேதங்கள் குறைபடாது வணங்கி எதிர்நின்று தொடுந்தோறும் அடைதற்கரியனாய் நிற்கும் பெருமான், மயக்கவலையிற்பட்ட பெண்களுக்குச் சமீபித்தவனாவானோ? எ-று. (கஉ)

அடுத்தெமைத் தழாதீ ரேனீ ரவிழ்ந்தபூங் கலையை மீள
வுடுத்துமி னும்பால் யாங்கண் மையனோ யுழப்ப நோக்கிக்
கடுத்தெமர் முனியா முன்னங் கழற்றிய வளையுங் கையி
லெடுத்திடு மென்றார் நாளை யிடுதுமென் றேகி னானே.

(இ-ள்.) (ஐயரே! நீர்) எம்மை யடுத்துத் தழுவாதிருப்பீராகில், சரிந்த அழகிய உடையை மீண்டு எடுத்து உடுத்தும். உம்மிடத்தில் நாங்கள் மயக்க நோயில் வருந்தக்கண்டு எம்மவர்கள் கோபித்து வெறுக்காததற்கு முன்னே கழற்றிய வளையலையாயினும் எமது கையில் எடுத்து இடும் என்றார்கள். (சிவபெருமான்) நாளைக்கு இடுவோமென்று சென்றருளினர். எ-று.

கழற்றிய வளை என்றது சிவபெருமானைக் கருதிய வழி நிகழ்ந்த செயலாதலின், சிவபெருமான் மேலேற்றிக்கூறப்பட்டது. உடுத்துமின் என்றது பரிசித்தலாற் காமமயக்கஞ் சிறிதொழியு மென்னுங் கருத்துடன் கூறியது. (௩௫)

பிள்ளைவெண் டிங்கள் வேய்ந்த பிரான்கொண்டு போன நாணு
முள்ளமு மீட்க லாற்று துயங்கினர் கலையுஞ் சங்குந்
துள்ளுவைங் கணையுமான் வாளி துளைப்பவெம் பசலை யாகங்
கொள்ளைகொண் டுண்ண நின்று ரந்நிலை கொழுநர் கண்டார்.

(இ-ள்.) வெள்ளிய இளஞ்சந்திரனையணிந்த சிவபெருமான் கைக்கொண்டு சென்ற தமது நாணத்தையும் மனத்தையும் மீட்க முடியாது,மயங்கிய முனிபன்னியர் ஆடையும் வளையுஞ் சோரவும், பஞ்சபாணனாகிய மன்மதனது கணைகள் துளைக்கவும், (காமவிருப்பாலாகிய) கொடிய பசலை நிறம் தமது மார்பைக்கவர்ந்து படரவும் நின்றார்கள். அவர்களது நிலையை அவர் கணவராகிய தாருவன முனிவர் கண்டார்கள். எ-று.

பொய்தவ வடிவாய் வந்து நம்மனைப் பொன்னி னன்னார்
மெய்தழை கற்பை நாணை வேரொடுங் களைந்து போன
கைதவன் மாடக் கூடற் கடவுளென் றெண்ணித் தேர்ந்தார்
செய்தவ வலியாற் கால மூன்றையுந் தெரிய வல்லார்.

(இ-ள்.) பொய்த்த தவவடி வேற்றுவந்து, நமது இல்வாழ்க்கைக்குரிய மனைவியரது உடலுடன் வளர்ந்த கற்பையும் நாணையும் வேரொடு களைந்து சென்ற வஞ்சகன், மாடங்கள் நெருங்கிய மதுராபுரியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே என்று சிந்தித்துணர்ந்தார்கள். செய்யுந் தவவலியால் திரிகால வர்த்தமானங்களையும் அறியவல்ல முனிவர்கள். எ-று.

பொன்னின் அன்னார் - திருமகள்போலும் வடிவுடைய மாதர்கள்.

முனிமாதரது கற்பை அறத் தவிர்த்தற்கே தவவடி வேற்றுவந் தமையின் "பொய்தவவடிவாய்" என்றார். (௩௬)

மேற்படி வேறு.

கற்புத் திரிந்தார் தமைநோக்கிக் கருத்துத் திரிந்தீர் நீளாழி
வெற்புத் திரிந்த மதிற்கூடன் மேய வணிகர் கன்னியராய்ப்
பொற்புத் திரியா தவதரிப்பீர் போமென் றிட்ட சாபங்கேட்
டற்புத் திரிந்தா ரெங்களுக்கி தகல்வ தெப்போ தெனமுனிவர்.

(இ-ள்.) கற்புநிலை தவறிய தமது மனைவியரைப் பார்த்து, மனம் வேறுபட்டவர்களே! நெடிய சக்கரவாளகிரி தனதுருவந் திரிந்துவந்த மதில்சூழ்ந்த மதுராபுரியில் வாழும் வணிகமாதர்களாய்ச் சிறிதும் அழகு குறைபடாது பிறக்கக்கடவீர்கள். (இங்கிருந்து) போங்கள் என்று இட்ட சாபத்தைக் கேட்டு அஞ்சி, (இல்வாழ்க்கைக்குரிய) அன்புமாறிய அப்பெண்கள் இச்சாபம் எங்களுக்கு எப்பொழுது அகல்வது? என வினவ, தாருவன முனிவர்கள். எ-று. (௩௭)

அந்த மாட மதுரைநகர்க் கரசா கியசுந் தரக்கடவுள்
வந்து நும்மைக் கைதீண்டும் வழியிற் சாபங் கழியுமெனச்
சிந்தை தளர்ந்த பன்னியருந் தென்னர் மதுரைத் தொன்னகரிற்
கந்த முல்லைத் தார்வணிகர் காதன் மகளி ராய்ப்பிறந்தார்.

(இ-ள்.) மாடங்க ணெருங்கிய அந்த மதுராபுரிக்கு இறைவராகிய சோமசுந்தரக்கடவுள் (மானுட வடிவேற்று) வந்து உங்களைக் கைதீண்டும்பொழுது இச்

சாபம் நீங்குமென்று அனுக்கிரகிக்க, (அச்சாபத்தால்) மனந்தளர்ந்த முனிபத்தினிமாரும், சோமசுந்தரக்கடவுளுடைய தொன்று தொட்டுள்ள மதுராபுரியில், வாசனை நிறைந்த முல்லைமாலை யணிந்த வணிகர் குலத்தில் விருப்பமிக்க பெண்களாகப் பிறந்தார்கள். எ-று. (கஎ)

வளர்ந்து பேதை யிளம்பருவ மாறி யல்குற் புடையகன்று
தளர்ந்து காஞ்சி மருங்கொசியத் ததும்பி யண்ணாந் தரும்பு முலை
கிளர்ந்து செல்லும் பருவத்திற் கிடைத்தா ராக விப்பான்மண்
ணளந்த விடையான் வந்துவளை பகரும் வண்ண மறைகிற்பாம்.

(இ-ள்.) (அம்மாதர்கள்) வளர்ந்து பேதைப் பருவமாறி அல்குல் புடைபரவ, காஞ்சியென்னும் ஆபரணமணிந்த இடையானது தளர்ந்தொசிய, முகங்கொண்டு மேலெழுந் தண்ணாந்து தோன்றிய முலைகள் பருத்தோங்கும் மங்கைப்பருவத்திலே வர, இப்பால் பூலோகத்தை யளந்த இடபவூர்தியையுடைய சோமசுந்தரக்கடவுள் (மானுடத் திருவுருவங்கொண்டு) வந்து வளையல் விற்ற வகையைச் சொல்லுவோம். எ-று.

“ அல்குற் புடையகன்று * * * * முலை கிளர்ந்து செல்லும் பருவம்” என்றகுறிகள் மங்கைப் பருவத்திற்குரியன. (கஅ)

கங்கை கரந்து மணிகண்டங் கரந்து நுதற்கண் கரந்தொருபான்
மங்கை வடிவுங் கரந்துழைபு மழுவுங் கரந்து மழவிடையூ
ரங்க ணழகர் வளைவணிக ராகி யேன மளந்தறியாச்
செங்க மூலச்சே வடியிரண்டுந் திரைநீர் ஞால மகள்சூட.

(இ-ள்.) கங்கையையும், நீலகண்டத்தையும், நெற்றிக்கண்ணையும், வாமபாகத்திலுள்ள உமாதேவி திருவுருவையும், மானையும், மழுப்படையையும் மறைத்து, இளமை தங்கிய இடபத்தை வாகனத்தை ஏறி நடத்தும் சோமசுந்தரக்கடவுள் வளையல் விற்கும் வணிகராகி, (திருமாலாகிய) வராகம் (நிலவுலகங் கீண்டு சென்று) அளந்தறியாத செந்தாமரை மலர்போன்ற செவந்த திருவடிகளிரண்டையும், கடலை யாடையாக வணிந்த பூமிதேவி சூடும்பொருட்டு. எ-று. (கக)

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

பண்டு முனிவர் பன்னியர்பாற் கவர்ந்த வளையே பட்டுவடங், கொண்டு தொடுத்துமீண்டவர்க்கே யிடுவே மெனுமுட் கோளினர்போற், றெண்டர் தொடுத்த வைவண்ணத் தொடைத்தார் போலத் தோள்சுமந்து,மண்டு வளையை விலைபகர்ந்து வணிக மறுகில் வருகின்றார்.

(இ-ள்.) முன்பு முனிபன்னியரிடத்திற் கொள்ளைகொண்ட வளையலையே பட்டுவடத்திற் கோத்து, மீளவும் அவர்க்கே இடுவோமென்னும் உட்கருத்தினர்போல, அவரது அடியவர் சாத்திய பஞ்சவர்ணங்களையுடைய பூங்கொத்தாலமைந்த மாலைபோலத் திருத்தோளிற் சுமந்து, அடுக்காக நெருங்கிய வளையலை விலை கூறி வணிகர் வீதியில் வருவாராயினர். எ-று. (உ0)

மன்னு மறையின் பொருளுரைத்த மணிவாய் திறந்து வளைகொண்மி
னென்னு மளவிற் பருவமுகி லிமிழின் னிசைகேட் டெழுமயில்போற்
றுன்னு மணிமே கலையிழுக்கத் தூய வணிகர் குலமகளிர்
மின்னு மணிமாளிகைநின்றும் வீதி வாயிற் புறப்பட்டார்.

(இ-ள்.) நிலைபெற்ற வேதப்பொருளை (கண்ணுவர் முதலிய முனிவர்கட்கு) உபதேசித்தருளிய அழகிய திருவாயைத்திறந்து, வளையல் வாங்குங்கள் என்று விற்கையில், (கார்ப்) பருவத்திலே சூல்கொண்ட மேகத்தின் ஒலிக்கும் இனிய இசையைக்கேட்டு (ஆடச்சிறைவிரித்து) எழுகின்ற மயில்போல, நெருங்கிய இரத்தின மிழைத்தமேகலாபரணமொலிக்கக் களங்கமில்லாத வணிகர்குலப்பெண்கள் பிரகாசிக்கின்ற இரத்தினமழுத்திய மாளிகையினின்றும் வீதியிற் புறப்பட்டார்கள். எ-று. ()

வளைக ளிடுவா ரெனத்தங்கண் மனமெல் லாந்தம் புடையொதுங்கத்
தளைக ளிடுவார் வருகின்றார் தம்மைக் கொம்மை வெம்முலையார்
துளைக ளிடுதீங் குழலிசைபோற் சுரும்பு பாடக் கருங்குழன்மேல்
விளைக ளொழுக நுடங்கிவரு மின்போ லணைந்து கண்டார்கள்.

(இ-ள்.) வளையல்கள் தொடுப்பவர்போலத் தமது மனத்தையெல்லாம் தம்பாலொதுங்க விலங்கிடுவா ராகிவருஞ் சோமசுந்தரக்கடவுளை, குவிந்த கொடுமை தங்கிய முலைகளையுடைய வணிகமாதர்கள், துளைகள்பொருந்திய இனியவேய்ங்குழலினிசையைப்போல வண்டுகள் பாடவும், கரிய கூந்தலினின்று சுரக்கும் அமுது சிந்தவும், (நிலவுலகின்மேல்) துவண்டுவரும் மின்னலைப்போலச் சென்று தரிசித்தார்கள்.

கண்ட வடிவாற் றிளைப்பதற்குக் கழிபே ரன்பு காதல்வழிக்
கொண்டு செல்ல வொருசார்தங் குணமா நாண முதனான்கு
மண்டி யொருசார் மறுதலைப்ப மனமுஞ் சுழன்று தடுமாற
வண்டர் பெருமான் விளையாடற் கமையச் சூழ்ந்தா ரமுதனையார்

(இ-ள்.) அவரைத் தரிசித்த திருவுருவத்தோடு கூடிக் கலப்பதற்கு எழுந்த பெரிய அன்பு (தமது மனதை) காமவழியிற்கொண்டு ஒருபுறஞ்செலுத்தவும், தமது குணமாகிய நாண முதலிய நான்கும் நிலைகலங்கி ஒருபுறம் முரணவும், மனமும் நிலைதிரிந்து தடுமாறவும், சோமசுந்தரக்கடவுள் திருவிளையாடல் செய்தற்கு, அமுதம் போன்ற வணிககுலப் பெண்கள் பொருந்த மொய்த்தார்கள். எ-று. (உகூ)

### கலிவிருத்தம்.

இரங்குமே கலைசிலம் பன்றி யேனைய
விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை
மருங்கிறச் சுமப்பினும் வளைகைக் கில்லெனி
னரும்பிய முலையினார்க் கழகுண் டாகுமோ.

(இ-ள்.) சத்திக்கும் மேகலாபரணமுஞ் சிலம்புமல்லாது, விரும்பப்பட்ட மற்றைய குண்டலமும் சூடகமும் பிரகாசிக்குங் கண்டிகையுமாகியவற்றை இடைமுறியச் சுமந்தாலும், கோங்கரும்புபோன்ற குசங்களையுடைய பெண்களுக்கு வளையல் கைகளுக்கு இல்லையாயின், அழகுண்டாகுமோ? (உண்டாகாது.) எ-று.

இச்செய்யுளால் வளையே மாதர்கட்கு மங்கலஞ் செய்வதென்றாராயிற்று.

செல்வநல் வணிகரோஞ் செங்கைக் கேற்பன
நல்வளை தெரிந்திடு மென்று நாய்கர்முன்,
வல்வள ரிளமுலை மகளிர் மின்னுமிழ்
கல்வளர் கடகமென் காந்த ணீட்டினார்.

(இ-ள்.) செல்வத்தையுடைய நல்ல வணிகரே! எமது கைகட்குத் தகுந்தனவாகிய வளையல்களுள் நல்ல வளையல்களைத் தெரிந்து (எடுத்துத்) தொடுமென்று,

வணிகவேடங்கொண்ட சோமசுந்தரக்கடவுள்முன், சூதாகெருவிபோல வளர்ந்த முற்றாத தனங்களையுடைய பெண்கள் ஒளிவீசும் நவமணிகளிழைத்த கடகம் பூண்ட தமது மெல்லிய காந்தண்(மலர்போன்ற கைகளை) நீட்டினார்கள். எ-று. (உரு)

பண்டரு கிளவியங் கயற்கட் பாவைகைத்
தண்டளிர் பற்றிய தடக்கை மாதர்கைம்
முண்டகம் பற்றியே முகிழ்த்துப் பல்வரி
வண்டுகை ளேற்றுவார் மைய லேற்றுவார்.

(இ-ள்.) இசைபோலும் மொழியையுடைய அங்கயற்கண்ணம்மையார் திருக்கரமாகிய தட்பமமைந்த தளிரைத் தொட்ட நெடிய திருக்கரத்தால், வணிக மாதர்கள் கைத்தாமரைமலரைப்பிடித்து (முன்னர்) நெரித்து, பல வரிகளையுடைய வளையல்களைச் செறிப்பவர்போலக் காமமயக்க மிகச் செய்வாராயினர். எ-று. (உசு)

புங்கவ னிடுவளை புடைத்து மீளவந்
தெங்களுக் கிடவிலை யிடுதி ராலெனக்
கொங்கவிழ் பைங்குழ லெருத்தங் கோட்டிநின்
றங்கர நீட்டுவா ராசை நீட்டுவார்.

(இ-ள்.) வணிகேசர் தொடுத்த வளையல்களை நொறுக்கித் திரும்பவந்து, எங்களுக்குத் தொடுக்கவில்லை தொடுமென்று, மகரந்தம் பரந்த பசிய கூந்தல் சரிந்த பிடரை வளைத்து நின்று, தமது அழகிய கரங்களை நீட்டுவோர்போலத் தமது ஆசையை நீட்டுவாராயினர். எ-று.

அம்மாதர்கள் பரிசவின்பங்கருதி முன் தொடுத்ததை உடைத்து மீண்டும் வந்தார்கள் என்க. (உஎ)

எமக்கிடு மெமக்கிடு மெனப்பின் பற்றியே
யமைத்தடந் தோளினா ரனங்கன் பூங்கணை
தமைத்துளை படுத்தலீவார் சார்பி லாமையாற்
கமைப்புறு நாண்முதற் காப்பு நீங்கினார்.

(இ-ள்.) மூங்கில் போன்ற பருத்த தோளையுடைய வணிககுலப்பெண்கள் எமக்குத் தொடும் எமக்குத் தொடுமென்று பின்தொடர்ந்து, மன்மதனது மலர்ப்பாணந் தம்மைத் துளைக்க (அதனை நீக்க) ஓர் பற்றுக்கோடில்லாமல், தமக்குச் சார்பாயுள்ள நாணமுதலிய காவலினின்றும் நீங்கினார்கள். எ-று. (உஅ)

முன்னிடு வளையெலாங் கழல முன்புசூழ்ந்
தின்னவை பெரியவே றிடுமென் றிட்டபி
னன்னவு மனையவே யாக மீளவந்
தின்னமுஞ் சிறியவா விடுமென் றேந்துவார்.

(இ-ள்.) (அம்மாதர்கள்) தமக்கு முன்னே தொடுத்த வளைகளெல்லாஞ் சோர, முன்பு சென்று சூழ்ந்து, இவை பெரியன (ஆதலின் கழன்றன) வேறு வளையல் (கைக்கேற்பத்) தொடும் என்று, தொடுத்தபின்பு அவையும் அவ்வாறேயாக, மீளவும் வந்து இவற்றினுஞ் சிறியனவாகத் தொடுமென்று (கையை) ஏந்துவார்கள். எ-று.

பின்னிடு வளைகளுஞ் சரியப் பேதுறா
முன்னெதிர் குறுகிநீர் செறித்த மொய்வளை
தன்னொடு கலைகளுஞ் சரிவ தேயென
மின்னென நுடங்கினார் வேனெ டுங்கணார்.

(இ-ள்.) பிறகு இட்ட வளைகளுஞ் சரிய மயங்கி, தம்முன்னே வந்து, நீர் தொடுத்த நெருங்கிய வளையலொடு மேகலைகளுஞ் சரிவதேயென்று, வேற்படை போலும்நெடிய கண்களையுடைய வணிககுலப் பெண்கள் மின்னல்போலத் (தம் துடல்) துவண்டார்தள். எ-று. (கூ0)

இவ்வளை போல்வன யாமுன் கண்டிலே
மெய்வளை வணிகிரிவ் வரிய வெள்வளை
யெவ்வயி னுள்ளவின் றினிய வாகியெம்
மெய்வளர் பொடிப்பெழ வீக்கஞ் செய்தவே.

(இ-ள்.) உடல், கூனிய வணிகரோ! இவ்வருமையாகிய வெள்ளிய வளையல்கள் எவ்விடத்துள்ளன? இன்று (எமது) மனத்திற்கினியனவாய் எம்முடம்பில் மயிர்க்குச்செறியக் காமப்பெருக்குச் செய்தன. (ஆதலின்) இவ்வளைபோன்ற வளையலை யாம் முன் (ஒருபோதும்) பார்த்திலோம். எ-று. (கூக)

நாளையும் வளையிட நண்ணு மிங்கென்பார்
கோள்வளை விலையிது கொண்டு போமென்பார்
வாள்விழி யீர்பினுள் வாங்கிக் கோடுமென்
றாளரி யேறனு ராடிப் போயினர்.

(இ-ள்.) நாளைக்கும் வளையலிட இங்கே வாருமென்பார்கள். நாங்கள் கொண்ட வளையலுக்கு விலை இது; கொண்டுபோமென்பார்கள். ஆண்தன்மையையுடைய சிங்கவேறு போன்ற வணிகேசர் வாள்போலும் விழியை யுடையீர்! நாளை வாங்கிக் கொள்ளுதுமென்று திருவிளையாடல் செய்து சென்றருளினர். எ-று. (கூஉ)

போயின வணிகர்தம் புடையின் மின்னெனப்
பாயின மகளிரும் பலருங் காணமுன்
மேயின விண்ணிழி விமானத் துள்ளொளி
யாயின திருவுரு வாகித் தோன்றினர்.

(இ-ள்.) (அவ்வாறு) சென்ற வணிகவேடப்பெருமானும், தம் பக்கலில் மின்னல்போலப் பரவிய பெண்களும் பிறரும் பார்த்து அதிசயிக்க, தாம் முன்பு எழுந்தருளிய விண்ணிழி விமானத்தில் ஒளிமயமாகிய திருவுருவமாகித் தோன்றியருளினர். எ-று. (கூகூ)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மட்ட லம்பு கோதை யார்முன் வளைப கர்ந்த வணிகர்தாம்
பட்டி சைந்த வல்கு னங்கை பாக ராகு மெனவியந்
துட்ட தும்பு முவகை வெள்ள முற்றெ ழுந்த குமிழிபோற்
கட்ட தும்பு புனலி லாழ்ந்து களிய டைந்த நகரெலாம்.

(இ-ள்) தேன்சொரியும் மாலைசூடிய மாதர்கள்முன் வளையல் விற்ற வணிகேசர் செம்பட்டினையணிந்த உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சோமசுந்தரக் கடவுளாமென்று அதிசயித்து, மனதிற்றதும்பிய ஆனந்தவெள்ளத்தில் பொருந்தியெழுந்த குமிழியைப் போல, மதுராபுரியி லுள்ளோர் யாவரும் கண்களிற் றதும்பிய ஆனந்தநீர்ப்பெருக்கிலமிழ்ந்து களிப்படைந்தார்கள். எ-று.

அல்குல் - பெண்குறி. நகர் என்றதற்கேற்பக் களியடைந்த என்றார். நகர் - இடவாகுபெயர். (கூச)

உருவி லாவி யுடல்பொ டித்த வொருவர் கூட லிருவரான்
மருவி லார்தி ருக்கை தொட்டு வளைசெ றித்த நீர்மையாற்
கருவின் மாத ராகி நாய்கர் கன்னி மார்கண் மின்னுவேற்
பொருவில் காளை யெனவ ரம்பில் புதல்வ ரைப்ப யந்தனர்.

(இ-ள்.) மதனனதுதேகத்தைப் பொடிபடுத்திய ஒப்பற்றவரும் (பிரமவிஷ்ணுக்களாகிய) இருவரால் தேடி யறிதற்கரிய மதுரைப்பதியி லுள்ளருமாகிய சோமசுந்தரக்கடவுள் தமது திருக்கரத்தாற் பரிசித்து வளையலிட்ட தன்மையால், வணிகக் கன்னியர்கள் கருப்பம் வாய்ந்த மாதர்களாய்,பிரகாசிக்கின்ற வேற்படை தாங்கிய முருகவேள்போல அளவில்லாத அழகுபொருந்திய புதல்வர்களைப்பெற்றார்கள். எ-று.

பிறந்த மைந்த ரளவி றந்த பெருமை கொண்ட பெருமிதஞ்
சிறந்த வீர மாற்ற லேற்ற திறல்பு னைந்து வைகினார்
மறந்த தும்பு வேலொ டுங்கண் வணிக மாதர் சிறிதுநா
ளிறந் தரன்ற னருள டைந்து துணைய டிக்கண் வைகினார்.

(இ-ள்.) (அவ்வாறு) பிறந்த புத்திரர்கள் எல்லையில்லாத பெருமை மிக்க பெருமிதத்தையும், சிறந்த ஆண்மையையும், வன்மையையும், தக்க வெற்றியையும் வாய்ந்து வாழ்ந்தார்கள். கொலைத்தொழில் பொருந்திய வேல்போன்ற நெடிய கண்களையுடைய வணிகமங்கையர் சிறிதுநாள் கழித்து, சிவபெருமானது திருவருளைப் பெற்று அவரது உபயபாதங்களின் நீழலிற் கலந்து வாழ்ந்தார்கள். எ-று. (௬௬)

வளையல் விற்ற படலம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௭௬௦.

---

முப்பத்து மூன்றாவது,

# அஷ்டமாசித்தி யுபதேசித்த படலம்.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

கொத்தி லங்கு கொன்றை வேய்ந்த கூட லாதி மாடநீள்
பத்தி யம்பொன் மறுக ணைந்து வளைப கர்ந்த பரிசுமுன்
வைத்தி யம்பி னாமி யக்க மாதர் வேண்ட வட்டமா
சித்தி தந்த திறமி னித்தெ ரிந்த வாறு செப்புவாம்.

(இ-ள்.) கொத்தாகவிளங்குங் கொன்றைமலரை யணிந்த மதுரைப்பதியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் ஓங்கிய மாடபந்திகளையுடைய அவ்வழகிய (மதுரை) வீதியிற் சென்று வளையல்விற்ற திருவிளையாடலை முன்னெடுத்துக் கூறினோம். யக்ஷஸ்திரீகள் குறையிரக்க அஷ்டமாசித்தியருளிய திருவிளையாடலை இனி (யாம்) தெரிந்தவளவிற் கூறுவாம். எ-று.

அம்பொன்மறுகு - செல்வமலிந்த திருவீதி. (௧)

மின்ன லங்கல் வாகை வேல்வி ழுப்பெ ருங்கு லத்தினிற்
றென்ன வன்ற னாணை நேமி திசையெ லாமு ருட்டுநாண்
முன்னை வைக லூழி தோறு மோங்கு மொய்வ ரைக்கணே
மன்னு தன்ப ராரை யால நிழன்ம ருங்கு மறைமுதல்.

(இ-ள்.) வெற்றிமாலை சூடிய மின்னல்போன்ற வேலைத்தாங்கிய மேன்மை மிக்க பாண்டியர்குலத்துதித்த குலபூஷணபாண்டியன் தன் ஆக்கினை சக்கரத்தைத் திசைகளிலெல்லாஞ் செலுத்துங்காலத்தில் கழிந்தபொழுதாகிய ஊழிக்காலந்தோறும் (சிறிது) உயர்கின்ற கைலாயகிரியில் நிலைபெற்ற பருத்த தூரையுடைய தனது கல்லாலமர நீழலிலே வேதமுதல்வராகிய சிவபெருமான். எ-று.

"ஊழிதோறுமோங்குமொய்வரை" என்றதனை, "ஊழிதோறூழிமுற்று முயர்பொன்னெடித்தான்மலை" என நம்பியாரூரரும், "ஊழிதோறோங்கு மவ்வோங்கல்" என இந்நூலாரும் கூறியவாற்றானுணர்க. (உ)

அடுப்ப மாசில் வெள்ளி வெற்ப ருகி ருக்கு மரகதங்
கடுப்ப வாம மிசையி ருந்து கனக வெற்பன் மகளெனும்
வடுப்ப டாத கற்பி னுண்ம டித்து வெள்ளி லைச்சுருள்
கொடுப்ப நேச மூறு போக குரவ னாகி வைகினன்.

(இ-ள்.) களங்கமில்லாத வெள்ளிமலையினருகே பொருந்தவிருக்கும் மரகதத்திரட்சிபோல, இடப்பாகத்திலிருந்து மலையரசன் புத்திரியாகிய மறுவில்லாத கற்பினையுடைய உமாதேவியார் வெற்றிலைச்சுருள்மடித்துக்கொடுக்க, அன்புமிக்க போக குருமூர்த்தியாகி எழுந்தருளியிருந்தனர். எ-று. (ங)

பிருங்கி நந்தி யேமு தற்பெ ருந்த கைக்க ணத்தரு
மருங்கி ருந்த சனக னாதி மாத வத்தர் நால்வரு
மொருங்கி றைஞ்சி யுண்ண வுண்ண வமுத மூறு சிவகதைக்
கரும்ப ருந்த வாய்ம லர்ந்து கருணை செய்யு மெல்லைவாய்.

(இ-ள்.) பிருங்கிமுனிவர் நந்திநாயனார் முதலிய பெருந்தகைமையுடைய சிவகணத்தலைவரும், அருகிலிருந்த சனகர் முதலிய பெரியதபோதனர்கள் நால்வரும் ஒருசேரப்பணிந்து, (செவிவாயால்) உண்ணுந்தோறும் அமுத மூற்றெடுக்குஞ் சிவ கதையாகிய கரும்பினையருந்த, தமது திருவாய்மலர்ந்து திருவருள்புரியுஞ்சமயத்தில்.

பௌவ மூழ்கு சூர்த டிந்த பால னுக்கு முலைகொடுத்
தெவ்வ மாய வினைக டரி யக்க மாத ரறுவரும்
தெய்வ நீறு முழுத ணிந்து செய்ய வேணி கண்டிகைச்
சைவ வேட மாத வந்த ரித்து வந்து தோன்றினர்

(இ-ள்.) சமுத்திரத்தில் (மாமரவடிவாகி) மறைந்த சூரபன்மனுடைய உயிரை வாங்கிய குமாரக்கடவுளுக்கு முலை யூட்டித் துன்பமாகிய வினைச்சம்பந்தங்கள் நீங்கிய யக்ஷஸ்திரீகள் ஆறுபேரும், தெய்வீகமமைந்த திருநீற்றைத் தேகமுழுவதும் பூசி, செவந்த சடையும் உருத்திராக்க கண்டிகையுமாகிய சைவ வேடத்தையுடைய பெருந்தவமேற்கொண்டு தோன்றினர்கள். எ-று. (ச)

மந்தி ரச்சி லம்ப லம்பு மலர டிக்கண் வந்திசெய்
தெந்தை யட்ட சித்தி வேண்டு மெங்க ளுக்கெ னத்தொழா
வந்த ளிர்க்கை யவரி ரப்ப வண்ண றன்ம டித்தலந்
தந்தி ருக்கு மாதை யங்கை சுட்டியீது சாற்றுமால்.

(இ-ள்.) வேதமாகிய சிலம்பொலிக்கும் மலர்போன்ற திருவடியைப் பணிந்து, எமது தந்தையே! எங்கட்கு அஷ்டமாசித்தி வேண்டுமென்று பணிந்து, அழகிய தளிர்போன்ற கையையுடைய அம்மாதர்கள் யாசிக்க, சிவபெருமானார் தமது மடித்தலத்தி லெழுந்தருளிய உமாதேவியாரை அழகிய திருக்கரத்தாற் சுட்டி, (அம்மாதர்களைநோக்கி) இவ்வாறு கூறுகின்றார். எ-று. (௬)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

அலர்பசும் பொலங்கொம் பன்ன வணங்கிவ ணிறைவா லெங்கு
மலர்பரா சத்தி யாகி மகேசையா யணிமா வாதிப்
பலர்புகழ் சித்தி யெட்டும் பணிந்துகுற் றேவல் செய்யுஞ்
சிலதிய ராகிச் சூழ்ந்து சேவகஞ் செய்ய வைகும்

(இ-ள்.) மலர்ந்த பசிய பொற்கொம்புபோன்ற இவ்வுமாதேவி எமது நிறைவால் எங்கும் வியாபித்த பராசத்தியாகியும், மகேசையாகியும், பலரும் புகழும் அணிமாமுதலிய அஷ்டமாசித்திகளுந் தன்னைப் (பணிந்து) குற்றேவல் புரியுந் தாதியராகிச் சூழ்ந்து பணிகளைச் செய்யாநிற்க இருக்கின்றனள். எ-று. (௭)

இவ்வுமைநீர் சிந்தித் தான்முன் னீட்டிய வினையை நீக்கித்
தவலருஞ் சித்தி யெட்டுந் தருமெனக் கருணை பூத்துச்
சிவபரஞ் சோதி யெட்டுச் சித்தியுந் தெளிதல் செய்தா
னவரது மறந்தா ரும்மை யாள்வினை வயத்தான் மன்னோ.

(இ-ள்.) (ஆதலில்) நீர் இவ்வுமாதேவியைச் சிந்தித்தால், முன் நீங்கள் சம்பாதித்த வினைச்சம்பந்த மொழித்து, அழிவில்லாத அஷ்டமாசித்திகளையுந் தருவாளென்று திருவருள்புரிந்து, சிவபெருமானார் அஷ்டமாசித்திகளையும் உபதேசித்தருளினர். அப்பெண்கள் முற்பிறப்பிற்செய்த போகூழ்வலியால், அச்சித்திகளை மறந்தார்கள்.

செழுமதிப் பிளவு வேய்ந்த தேவுமக் குற்ற நோக்கி
முழுமதி முகத்தி னாரை முனிந்துநீர் பட்ட மங்கைப்
பழுமர முதலஞ் ஞானப் பாறையாய்க் கிடமி னென்னக்
கழுமலுற் றவர்தாழ்ந் தென்று கழிவதிச் சாப மென்றார்.

(இ-ள்.) ஒளிவீசும் பிறைச்சந்திரனை யணிந்த சிவபெருமானும் அக்குற்றத்தைப்பார்த்து, பூரணசந்திரன்போன்ற முகத்தையுடைய மாதர்களைச் சினந்து நீங்கள் பட்டமங்கையென்னுந் தலத்திலுள்ள ஆலமரத்தடியில் கருங்கற்பாறையாய்க் கிடங்கள் என்று சபிக்க, துன்பமுற்ற அப்பெண்கள் வணங்கி, இச்சாபம் எப்பொழுது கழிவது என்று வினவினார்கள். எ-று. (௯)

இப்படிக் கருங்க லாகிக் கிடத்திரா யிரம்பாண் டெல்லைக்
கப்புற மதுரை நின்று மடுத்துமைத் தொடுத்த சாபத்
துப்பற நோக்கி நுங்க டொல்லுரு நல்கிச் சித்தி
கைப்படு கனிபோற் காணக் கிட்டுதும் போதி ரென்றான்.

(இ-ள்.) இவ்விதமாகக் கருங்கற்பாறையாகக் கிடமின்கள். ஆயிரந் தேவ வருஷத்திற்குப்பின் (நாம்) மதுரையிலிருந்துவந்து, உம்மையடுத்த சாபத்தின்வன்மைகெடக் கடைக்கணித்து உங்கள் பழையவடிவைத்தந்து, அஷ்டமாசித்திகளை அங்கையிற்றோன்றிய (நெல்லிக்) கனிபோலக் காட்டுவோம். போங்கள் என்று அருளிச்செய்தனர். எ-று. (௧௦)

வஞ்சிவிருத்தம்.

கொடிய னோர்க ளறுவரு, நெடிய வானி மிர்ந்துளார்,
படியும் பட்ட மங்கையா, லடியிற் பாறை யாயினார்.

(இ-ள்.) பூங்கொடிபோன்ற அந்த ஆறுமாதர்களும், விண்ணுலகவரையில் உயர்ந்தோங்கி (இருத்தலால்) மேகந்தவழும் பட்டமங்கையிலுள்ள ஆலமரத்தடியில், கருங்கற்பாறையா யிருந்தார்கள். எ-று. (௩௧)

கதிர்க லம்பெய் காட்சிபோ, லுதிர்ப ழத்தி னுடலெலாம்,
புதைபடக் கிடந்தனர், மதர ரித்த டங்கணார்.

(இ-ள்.) மதர்த்த செவ்வரிபரந்த விசாலமான விழிகளையுடைய அம்மாதர்க ளறுவரும், பிரகாசிக்கின்ற ஆபரணத்தையணிந்த காட்சிபோல் (ஆலமரத்திலிருந்து) உதிர்ந்தபழங்களால் தேகமுழுவதும் புதைபடக் (கருங்கற் பாறையாய்க்) கிடந்தார்கள். எ-று. (௩௨)

பருவ மாயி ரங்கழிந், தொருவ மாட மதுரையெங்,
குரவ னெண்கு ணத்தினான், திருவு ளந்தி ரும்பினான்.

(இ-ள்.) ஆயிரம்வருடங்கள்சென்றொழிய, மாடங்கள்நெருங்கிய மதுரையி லெழுந்தருளிய எமது ஆசிரியரும், எண்குணங்களையுடையவருமாகிய சோமசுந்தரக் கடவுள் தமது திருவுளந் திரும்பியருளினார். எ-று. (௩௩)

எண்குணங்கள் — தன்வயம்-தூயவுடம்பு-இயற்கையுணர்வு - முற்றுணர்வு- இயல்பாகவேபாசங்களினீங்குதல்-பேரருளுடைமை-முடிவிலாற்றலுடைமை-வரம்பி லின்பமுடைமை எனப்படும். (௩௩)

தன்னி திச்சை கொண்டதோ, ரின்ன ருட்கு ரவனா,
யந்நெ டுங்க லாயினார், முன்னவர் வந்து தோன்றினான்.

(இ-ள்.) தமதிச்சையாற்கொண்டருளிய ஒப்பில்லாத இனிய ஞானாசிரிய னாகி, அந்த நெடியகருங்கற்பாறையாயுள்ள பெண்கள்முன் வந்து திருவுருக்கொண்டு தோன்றியருளினார். எ-று. (௩௪)

இருட்ட தும்பு கோதையார், மருட்ட தும்பு வினைகெட,
வருட்ட தும்பு கண்ணினாற், றெருட்ட லுய்ப்ப நோக்கினான்.

(இ-ள்.) இருண்மையம்போன்ற அளகபாரத்தையுடைய மாதர்களது அவிச்சைநிறைந்த (கன்ம)மலங்கெட, திருவருணிறைந்த திருவிழியால், அருண்ஞான மிக்கூரப் பார்த்தருளினர். எ-று. (௩௫)

அடிக ணோக்க வம்புயங், கடிகொ ணெய்தல் காந்தள்பைங்,
கொடிகொண் முல்லை குமுதமேற், படியப் பூத்த பாறையே.

(இ-ள்.) சிவபெருமான் பார்த்தருள, தாமரைப்பூவும் வாசமிக்க குவளைப் பூவும், காந்தட்பூவும், பசிய கொடியாகப்படர்ந்த முல்லையரும்பும், ஆம்பற்பூவும் தம் மேற் பொருந்த, அக்கருங்கற்பாறைகள் பூத்தன. எ-று.

அம்புயம் - முகம், நெய்தல் - கண், காந்தள் - கை, முல்லை - பல், குமுதம் - வாய். ஈண்டு உவமானச் சொற்கள் தம் உவமேயங்களைக் குறித்தன.

இச்செய்யுள் உருவகவுயர்வு நவிற்சியணி. (௩௬)

தாக்க வேத கத்திரும், பாக்க முற்ற பொன்னென,
நீக்க மற்ற விருண்மல, வீக்க மற்று விட்டதே.

(இ-ள்.) இரும்பானது, தாக்கிய அவ்வேதகத்தினால் ஆகிய பொன்னைப் போல, (நெல்லின் உமிபோல) நீங்குதலில்லாத ஆணவமலவீக்கம் கழன்றது. எ-று.

முன் செய்யுளிலுள்ள 'அடிகணோக்க' என்பதனை ஈண்டுகூட்டி, அருணோக்கம் வேதகமாகவும், இரும்பு மாசுநீங்கிப் பொன்னாதல்போல ஆணவமாசு கழிந்து (ஆன்மா) திருவருள்வசமாயிற்று எனவுங்கொள்க. (கஎ)

நிறையு மன்பெ னுந்நதி, பொறையெ னுங்க ரைகடந்,
திறைவ னின்ன ருட்கடற், றுறையின் வாய்ம டுப்பவே.

(இ-ள்.) நிறைந்த அன்பென்னும் நதி (பெருகி) பொறுமை யென்னுங் கரையைக்கடந்து சிவபெருமானுடைய இனிய திருவருளென்னுங் கடலிற் கலந்தன. எ-று. (கஅ)

எழுந்தி றைய டிக்கணே, யழுந்து நேச மொடுதவக்,
கொழுந்த னார்க ளறுவரும்,விழுந்தி றைஞ்சி னாரரோ.

(இ-ள்.) தவக்கொழுந்துபோன்ற மாதர்கள் அறுவரும் எழுந்து சிவபெருமானுடைய திருவடியிலேயே அழுந்திய அன்புடன் (சாஷ்டாங்கமாக) விழுந்து நமஸ்கரித்தார்கள். எ-று. (கக)

குமரற் கூட்டு மிளமுலை, யுமைபொற் பார்கள் சென்னிமே,
லமலச் சோதி யங்கையாங், கமலப் போது சூட்டினன்.

(இ-ள்.) முருகக்கடவுளுக்கருத்திய இளமைதங்கிய தனத்தையுடைய உமாதேவியார்போன்ற பெண்களுடைய சிரசின்பேரில், சிவபெருமானார் தமது திருக்கரமாகிய தாமரைமலரைச் சூட்டியருளினார். எ-று.

அமலச்சோதி - நின்மல தேஜோவடிவர்.

சட்சுதீக்கையால் கன்மமலத்தினின்று நீக்கிப் பிராரத்துவவூதனையொழித்தற்பொருட்டுப் பரிசதீக்கை செய்தருளினர் என்க. (உo)

சித்தி யெட்டு மங்கலார், புத்தி யிற்கொ ளுத்தவே,
கைத்த லத்தில் வைத்ததோர், முத்தெ னத்தெ ருட்டுவான்.

(இ-ள்.) அஷ்டமாசித்திகளையும், அப்பெண்களது அறிவிற்பொருந்த உள்ளங்கையிலேந்திய ஓர் முத்துபோலத் தெரிவித்தருள்வார். எ-று.

சித்தியெட்டு - முன்பின்னாக நிலைமாறித்தொக்க பண்புத்தொகை. (உக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அணிமா மகிமா லகிமா வரிய கரிமா பிராத்திமலப்
பிணிமா சுடையோர்க் கடைவரிய பிராகா மியமீ சத்துவமெய்
துணிமா யோகர்க் கெளியவசித் துவமென் றெட்டா மிவையுளக்கண்
மணிமா சறுதோன் விளையாட்டின் வகையா மவற்றின் மரபுரைப்பாம்.

(இ-ள்.) (சித்திகள்) அணிமா-மகிமா-இலகிமா-பெறுதற்கரியகரிமா - பிராத்தி-மலபந்தமாகிய களங்கத்தையுடையவர்க்கு அடைதற்கரிய பிராகாமியம் - ஈசத்துவம்-உண்மையைத்துணிந்த பெரிய யோகிகளுக்கு எளியவசித்துவம் என எண்வகையாம். இவ்வெட்டும் மனத்தில் கரிய களங்கத்தையறுத்த பெரியோர் திருவிளையாடலின் வகையாம். அவற்றின் முறைகளைக்கூறுவாம். எ-று. (உஉ)

அறவுஞ் சிறிய வுயிர்தொறுந்தான் பரம காட்டை யணுவாய்ச்சென்
றுறையுஞ் சிறுமை யணிமாவா முவரி ஞால முதன்மேலென்

றறையுஞ் சிவாந்த மாறாறு முள்ளும் புறனு மகலாதே
நிறையும் பெருமை யதனையன்றோ மகிமா வென்னு நிரம்பியநூல்.

(இ-ள்.) மிகவுஞ் சிறியபிராணிகள்தோறும், தான் மிகவும் நுண்ணிய அணு வளவாய்ச்சென்று இருக்கும் அதிநுண்மை அணிமா என்பதாம். (பொருள்) நிரம்பிய நூல்கள் கட்டல்சூழ்ந்த பிருதிவிதத்துவமுதல் அதன்மேலுள்ள தத்துவமென்றுகூறும் சிவதத்துவமீறாகிய முப்பத்தாறுதத்துவங்களினும் அகத்தும்புறத்தும் நீங்காது வியாபித்திருக்கும் பெருமையை யல்லவோ மகிமாவென்று கூறும். எ-று.

பரமகாட்டை - மிகச்சிறிது. (உரு)

இலகு மேரு பாரம்போ லிருக்கும் யோகி தனையெடுத்தா
லிலகு வான பரவணுப்போ லிருப்ப திலகி மாவாகு
மிலகு வான பரவணுப்போ லிருக்கும் யோகி தனையெடுத்தா
லிலகு மேரு பாரமென விருப்ப தன்றோ கரிமாவாம்.

(இ-ள்.) விளங்காநின்ற மகமேருவின் பாரம்போல விருக்குஞ் சிவயோகியை யெடுத்தால் இலகுவான பரமாணுவைப்போல (இலேசாக) விருப்பது இலகிமா வென்பதாம். இலகுவாயுள்ள பரமாணுவைப்போல இருக்குஞ் சிவயோகியை யெடுத்தால் விளங்காநின்ற மகமேருவின்பாரம்போலக் கனமாயிருத்தலல்லவா கரிமாவென்பதாம். எ-று. (உசு)

பிலத்தி லிருந்தோ னயனுலகிற் புகுதன் மீண்டும் பிலமடைதல்
பலத்தின் மிகுந்த பிராத்தியதாம் பரகாயத்தி னண்ணுதல்வான்
புலத்தி னியங்க லிச்சித்த போக மனைத்துந் தானிருக்குந்
தலத்தி னினைந்த படிவருதல் பிராகா மியமாந் தவக்கொடியீர்.

(இ-ள்.) தவக்கொடிபோலும் பெண்களே! பாதலத்திலிருந்தவன் பிரமலோகத்திற்குச் செல்லுதலும் பயன் மிகுந்த பிராப்தியாம். பரகாயத்திற் பிரவேசித்தலும், ஆகாயத்திற் சஞ்சரித்தலும், விரும்பியபோகமுற்றும் தான் இருக்குமிடத்தில் வருவதும் பிராகாமியமென்பதாம். எ-று. (உரு)

விண்ணி லிரவி தன்னுடம்பின் வெயிலா லனைத்தும் விளக்குதல்போன்
மண்ணி னுளவாம் பொருள்பலவுங் கால மூன்றும் விண்ணத்தின்
கண்ணி னுளவாம் பொருளுந்தன் காயத் தொளியா லிருந்தறித
லெண்ணி லிதுவு மறையொருசார் பிராகா மியமென் றியம்புமால்.

(இ-ள்.) ஆகாயத்திலுள்ள சூரியன் தன் தேகத்திலுள்ள விளக்கத்தால் எல்லாவற்றையும் (தெரிவித்தலே யன்றித் தன்னையும்) விளக்குதல்போல, நிலவுலகிலுள்ள பொருள்முழுவதும், திரிகாலங்களும், விண்ணுலகிற்பொருந்தியபொருளுமாகிய இவற்றைத்தனது தேகத்தின் ஒளியால் (விளக்குதலின்றித் தானும் இருந்த விடத்தினின்று) அறிதலும், ஆலோசிக்குமிடத்தில் இத்தொழிலையும் வேதங்கள் ஒருபட்சம் பிராகாமியமென்று கூறும். எ-று. (உசு)

ஈச னெனமுத் தொழிலுந்தன் னிச்சை வழிசெய் தெழுபுரவித்
தேசன் முதற்கோள் பணிகேட்பத் திகழ்வ தீசத் துவமாகும்
பூச லவுணர் புள்விலங்கு பூத மனிதர் முதலுலகும்
வாச வாதி யெண்மருந்தன் வசமாக் கொள்கை வசித்துவமாம்.

(இ-ள்.) உருத்திரமூர்த்திபோல (சிருட்டியாதி) முத்தொழில்களையும் தன் விருப்பின்படியே நடத்தி, எழுபுரவிபூட்டிய சூரியன்முதலிய (நவக்) கிரகங்கள்

தான் எவும் பணிகேட்கவிளங்குதல் ஈசத்துவமென்பதாம். போர்புரியும் அசுரரையும் பறவைகளையும், விலங்குகளையும், பூதங்களையும், மனிதர்முதலிய உலகிலுள்ளாரையும், இந்திரன்முதலிய அஷ்டதிக்குப்பாலகரையும் தன்வசமாகக்கொள்வது வசித்துவமாகும்.

எம்மையுணர்ந்த யோகியர்க ளிவற்றை விரும்பா ரெனினுமவர்
தம்மை நிழல்போ லடைந்துலகர்க் கவர்தம் பெருமை தனையுணர்த்துஞ்
செம்மையுடைய விவையென்னச் சித்தி யெட்டுந் தெளிவித்தக்
கொம்மை முலையா ரறுவருக்குங் கொளுத்தி னெண்குணச்செல்வன்.

(இ-ள்.) எம்மையறிந்தசிவயோகர்கள், இச்சித்திகளை விரும்பார் என்றாலும், அவரைத்தேகச்சாயல்போல் தொடர்ந்து உலகிலுள்ளவர்கட்கு அவர்கள்பெருமையை அறிவிக்கும் நியதியையுடையன இவைகளென்று, அஷ்டசித்திகளையும் தெளிந்துணரும்படி எண்குணங்களையுடைய செல்வராகிய சிவபெருமான் குவிவாகியமுலைகளையுடைய பெண்கள் அறுவர்க்கும் உபதேசித்தருளினர். எ-று. (உஅ)

மேற்படி வேறு.

தேவதே வுபதேச சித்த சித்தியைச் சிலம்பன் செல்வி
பாவனை வலத்தா னன்கு பயின்றுவான் வழிக்கொண் டேகிப்
பூவலர் குதுப்பி னல்லா ரறுவரும் புரமூன் றட்ட
காவல னிரம்பி வைகுங் கைலைமால் வரையிற் புக்கார்.

(இ-ள்.) மலர்கள் விகசித்த கூந்தலையுடைய மங்கையரறுவரும், மகாதேவன் உபதேசித்தருளிய அஷ்டமாசித்திகளை, உமாதேவியாரது தியானபலத்தால் மிகவும் பழகி, விண்ணின் வழிக்கொண்டுசென்று, திரிபுரங்களை நகைத்தெரித்தருளிய சிவபெருமான் பரிபூரணமாக எழுந்தருளியிருக்கும் பெரியகைலாயகிரியிற் சேர்ந்தார்கள். எ-று. (உகூ)

அஷ்டமாசித்தியுபதேசித்தபடலம்.

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஎஅக.

---

முப்பத்து நான்காவது,

# விடையிலச்சினையிட்டபடலம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சந்து சூழ்மல யச்சி லம்பர்த வம்பு ரிந்தவி யக்கிமார்க்
கந்த நாலிரு சித்தி தந்தத றைந்த னந்தன தடிதொழா
வந்து மீள்வள வன்பொ ருட்டுவ டாது வாயிறி றந்தழைத்
திந்து சேகரன் விடையி லச்சினை யிட்ட வாறுவி ளம்புவாம்.

(இ-ள்.) சந்தனமரஞ்சூழ்ந்த பொதியமலையையுடைய சோமசுந்தரபாண்டியர், தவஞ்செய்த யக்ஷஸ்திரீகளாகிய அறுவர்க்கு அந்த அஷ்டமாசித்திகளையு மருளிய திருவிளையாடலைக் கூறினோம். தமது திருவடியைப்பணிந்து தன் நாட்டிற்குச் செல்லுஞ் சோழன்பொருட்டு வடக்குவாசலைத் திறந்தழைத்துச் சந்திரசேகராகிய



விடையிலச்சினையிட்டபடலம்.

அப்பெருமான் விடையிலச்சினையிட்டருளிய திருவிளையாடலை (யாம் இனி) க்கூறுவாம். எ-று.

வடாது - வடக்குள்ளது. (௧)

தோடு வெட்டிமலைத்து வாள்விதிர் துணைவிழிக் குயிலிளமுலைக்
கோடு வெட்டிய குறிகொள் மேனியர் குடிகொள் மாநகர் கமழ்கொள்பைங்
காடு வெட்டிய காரணக்குறி காடு வெட்டிய சோழனென்
றேடு வெட்டிய மண்டு சூழ்பொழி லெயில்கொள் கச்சியு ளானவன்.

(இ-ள்.) (காதிலணிந்த) தோட்டினை வெட்டிப் போர்புரிந்து வாள் அசைத்தாற் போன்ற கண்களையுடைய குயிலிசை போன்ற சொல்லையுடைய உமாபிராட்டியாரது இளமை தங்கிய தனங்களாகிய கொம்பு உழுதகுறி பூண்டருளிய திருமேனியையுடைய பெருமானார் எழுந்தருளிய பெரிய காஞ்சியில், (காண்டற்கு) அச்சஞ் செய்யும் பசிய காடு வெட்டித் திருத்திய காரணத்தினால் காடுவெட்டிய சோழனென்று, மலரிதழ் பொருந்திய நெருங்கிச் சூழ்ந்த சோலையையுடைய மதில்சூழ்ந்த கச்சிநகரினுள்ளவன் அவன். எ-று.

சிவபெருமானது திருவிழிகளை உமாதேவியார் திருக்கைலாயகிரியில் ஓர் விளையாடலாற் புதைத்தருள, திரிலோகங்களும் இருண்மயமாகி எவ்வுயிருந் துன்பத்திலழுந்தின. இப்பாவந்தீரக் காஞ்சிநகரமடைந்து விதிப்படி சிவார்ச்சனை செய்கையில், சிவாக்கினையால் சர்வ தீர்த்தங்களும் ஒன்று சேர்ந்து கம்பையாற்றோடு கலந்து பெருக்கெடுத்துவர, அவ்வுமாதேவியார் எமது கணவர்மேலும் செல்லுமேயென்றஞ்சி வலக்காலூன்றித் தழுவிக்கொள்ள, அப்பெருமானார் முலைச்சுவட்டினையும் வளைக்குறியையும் பூண்டருளினர் என்பது காஞ்சிப்புராண வரலாறு. (௨)

உத்த மச்சிவ பத்த ரிற்பெரி துத்த மன்புது விரைகலன்
மித்தை யென்றுவெ ணீறு கண்டிகை யார மென்றணி மெய்யின
னித்த வேதபு ராண மாதிநி கழ்த்திடும்பொருள் கண்ணுத
லத்த னேபர தத்து வப்பொரு ளென்ற ளந்தறி கேள்வியான்.

(இ-ள்.) உத்தமராகிய சிவபக்தரில் மிகவும் உத்தமமானவன். வாசமிக்க சந்தனக்குழம்பும் ஆபரணமும் அநித்தியப் பொருளென்று கருதி, திருவெண்ணீற்றையுங் கண்டிகையையும், நித்தியமாகிய சந்தனக் குழம்பென்றும் முத்தாரமென்றும் பூண்ட மேனியை யுடையவன். அழியாத வேதபுராணாதி நூல்கள் கூறும் பொருள் சிவபெருமானே (ஆதலின் அவ்விறைவனே) பரதத்துவப்பொருள்என்று அளந்தறிந்த நூற்கேள்வியை யுடையவன். எ-று. (௩)

அங்க மாறொடு வேத நான்கும றிந்து மெய்ப்பொரு ளாய்ந்துளஞ்
சங்கை கொண்டனு தினம ரன்புகழ் சாற்று சைவபு ராணநூல்
பொங்கு மின்சுவை யமுது தன்செவி வாய்தி றந்துபு கட்டியுண்
டெங்க ணாயக னடியி ணைக்கணி ருத்து மன்புக ருத்துளான்.

(இ-ள்.) அங்கங்கள் ஆறும் வேதங்கள் நான்குங் கற்று, உண்மைப்பொருளை யாராய்ந்து தனது மனஞ்செல்லுதலால், எந்நாளும் சிவபெருமானது கீர்த்தியைக்கூறும் சிவபுராண நூல்களின் விளங்கும் இன்சுவைபொருந்திய அமுதை (பெரியோர்) ஊட்ட, தனது செவியாகிய வாய்திறந்துண்டு, எமது நாயகனாகிய அப்பெருமானது இருபாதங்களினிடத்தும் இருக்கச்செய்யும் அன்பு பொருந்திய மனதை யுடையவன். எ-று. (௪)

முக்க ணாயகன் முப்பு ரத்தைமு னிந்த நாயகன் மங்கையோர்
பக்க ணாயகன் மிக்க வானவர் பரவு நாயக னரவணி
சொக்க ணாயக னாட லாஞ்செவி யான்மு கந்துசு வைதருந்
தக்க பாலொடு தேன்க லந்துத ருக்கி யுண்டவ னாயினான்.

(இ-ள்.) மூன்று விழிகளையுடைய இறைவனும், திரிபுரங்களைக் கோபித் தெரித்த இறைவனும், உமாபிராட்டியாரை வாமபாகத்திலுடைய இறைவனும், மேம் பட்ட பிரமன் (முதலிய) தேவர்கள் துதிசெய்யு மிறைவனுமாகிய, சர்ப்பாபரணந் தரித்த சொக்கநாயகருடைய திருவிளையாடல் ஆகிய அமுதையும், தனது செவியால் முகந்து, சுவைதருந் தகுதியாகிய தேன்பாலோடு கலந்து உண்டுகளிப்பானாயினான்.

அங்க யற்கண்ம டந்தை பாகன டித்த லந்தொழு மாசைமேற்
பொங்கி மிக்கெழு மன்ப னாய்மது ரேசன் மின்னுபொ லங்கழற்
பங்க யப்பத மென்று நான்பணி வேனெ னப்பரி வெய்திமே
கங்கு லிற்றுயில் வான்க யற்புரை கண்ணி பங்கனை யுன்னியே.

(இ-ள்.) அங்கயற்கண்ணம்மையாரை வாமபாகத்திலுடைய சோமசுந்தரப் பெருமானது திருவடியைப் பணியும் ஆசைமேலெழுந்து அதிகரித்தெழும் அன்பனாகி, அம்மதுராபுரீசனுடைய பிரகாசிக்கின்ற அழகிய வீரக்கழலணிந்த தாமரை மலர்போன்ற திருவடியை எப்பொழுது நான் வணங்குவேன் என்னும் வருத்தமடைந்து அங் கயற்கண்ணியாரை இடப்பாகத்திலுடைய அக்கடவுளைக்கருதி, இரவில் துயில்புரிவா னாயினன். எ-று. (சு)

அன்று செம்பியர் கோம கன்கன வின்க ணையருள் வெள்ளிமா
மன்று ணின்றவர் சித்த ராயெதிர் வந்து மன்னவ நின்னுளத்
தொன்று மஞ்சலொ ருத்த னாகியு ருத்தி ரிந்துத னித்துவந்
தின்று வந்தனை செய்து போதியெ னப்பு கன்றன ரேகினர்.

(இ-ள்.) அப்பொழுது, சோழர்களுட்சிறந்த காடுவெட்டிய சோழனுடைய சொப்பனத்திலே அருள்மூர்த்தமாய் பெரிய வெள்ளியம்பலத்திலே நின்றருளிய பெருமான் சித்தமூர்த்தியா யெதிர்வந்தருளி, அரசனே! உன் மனதிற் சிறிதும் அஞ்சாதே; நீ ஒருவனாய் மாறுவேடங்கொண்டு ஒன்றியாக வந்து இப்பொழுது வணங்கிப் போவாயென்று கூறிச் சென்றருளினர். எ-று.

நானே உனக்குத் துணையாதலின் "ஒன்று மஞ்சல்" என்றும், பாண்டியன் காணின் விபரீதம் விளையுமாதலின் "ஒருத்தனாகி யுருத்திரிந்து தனித்து" என்றுங் கூறினர். (எ)

கேட்டு வேந்தன்வி ழித்து ணர்ந்துகி ளர்ந்த வற்புத னாகியே
யீட்டு சேனைய மைச்சு ளார்பிறர் யாரு மின்றிவ ழிக்கொளீஇ
நாட்ட மூன்றவ னாம வாள்கொடு நல்ல ருட்டுணை யாய்வழி
காட்ட வன்பெனு மிவுளி மேல்கொடு கங்குல் வாய்வரு வானரோ.

(இ-ள்.) சோழன் கேட்டு விழித்தறிந்து மிக்க ஆச்சரியமுடையவனாகி, நெருங்கிய சேனைகளும் மந்திரிகளும் பிறரும் ஆகிய ஒருவருந் துணையின்றி வழிச்சென்று, திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானது திருநாமத்தையே வாளாகக்கொண்டு அவனது நல்ல திருவருளே துணையாகி, முன்னின்று வழியுணர்த்த அன்பென்னுங் குதிரைமேலேறி, இராப்பொழுதில் வருவானாயினன். எ-று. (அ)

கல்லு மாரழ லத்த மும்பல கனுழி யுங்குண கனைகடற்
செல்லு மாநதி பலவும் வானிமிர் கன்ன லுஞ்செறி செந்நெலும்

புல்லு மாநில னுங்க ழிந்துபு றங்கி டக்கந டந்துபோய்
வல்லு மாமுலை யார்க ணம்பயில் வைகை யந்துறை யெய்தினன்.

(இ-ள்.) மலைகளும், நெருப்புப்பொருந்திய பாலைநிலமும், பலகாட்டாறும், ஒலிக்குங் கீழ்ச்சமுத்திரத்திற் சங்கமமாகும் பல பெரிய நதிகளும், ஆகாய மளாவிய கரும்பும் நெருங்கிய செந்நெற்பயிரும் பொருந்திய வளமிக்க (மருத) நிலமும், பிற் பட்டுப்புறத் திற்கழிய நடந்துபோய், சூதாடு கருவிபோன்ற பெரிய முலையையுடைய பெண்கள் கூட்டம் நீராடிச் சஞ்சரிக்கும் வைகைத்துறையை யடைந்தான். எ-று. ()

குறுகு முன்னர்தி ரிந்து வைகைகொ தித்த கன்கரை குத்திவேர்
பறிய வன்சினை முறிய விண்டொடு பைந்த ருக்களை யுந்தியே
மறுகி வெள்ளமெ டுத்த லைத்தர மன்ன வன்கரை தன்னினின்
றிறுதி யில்லவ னைத்தொ ழற்கிடை யூறி தென்றளு ரொய்துவான்.

(இ-ள்.) அடைதற்கு முன்னமே வைகைநதி பெருக்கெடுத்துக் கோஷித்து, பரந்த கரைகளை யகழ்ந்து, வேர் அறவும் வலிய கொம்புகள் முறியவும் ஆகாயமளாவிய பசிய மரங்களைச்சாய்த்து, வெள்ளமெடுத்துச் சுழன்றலைக்க, சோழன் இறுதியில்லாத சோமசுந்தரக்கடவுளைப்பணிய இஃதோர் பெருந்தடையென்று, கரையினின்று துன்ப மடைவானாயினன். எ-று. (கல)

இழுதொ டுஞ்சுவை யமுது பொற்கல னிட்டு ணுதிரு கண்கணீர்
வழிய வந்துவி லக்கு வாரின்வ ளைந்த தாறுப கற்செயும்
பொழுதெ ழும்பொழு தேர்ம றுக்கம்வி ளைக்கு மேயிகல் பூழியன்
வழுதி யன்றியும் வைகை யும்பகை யர்ன தென்றுவ ருந்தினன்.

(இ-ள்.) நெய்யோடு கூடிய சுவைபொருந்திய அமுதைப் பொற்கலத்தி லிட்டு (பசிவந்தபொழுது) உண்ணமல், இருகண்களினின்றும் நீர்சொரிய, இடை யேவந்து விலக்குங் கொடியனைப்போல, வைகைநதி வளைந்து தடைபடுத்தியது. பகற் பொழுதைச் செய்யுஞ் சூரியன் உதிக்குங் காலத்திலோ போர்புரியும் பாண்டியன் பெருந்துன்பஞ் செய்வான். பாண்டியனுமன்றி வைகைநதியும் நமக்குப் பகையாயிற் றே யென்று வருத்தமுற்றான். எ-று. (கக)

வெள்ள நோக்கிய ழுங்கு செம்பியன் மெலிவு நோக்கிவி ரைந்தெழீஇக்
கள்ள நோக்கில கப்ப டாதவர் கனவு போலவ னனவில்வந்
துள்ள நோக்குடை யன்ப ருக்கரு ளுருவ மாகிய சித்தர்தாம்
பள்ள நோக்கிவ ரும்பெ ரும்புனல் வற்ற நோக்கினர் பார்த்தரோ.

(இ-ள்.) வெள்ளத்தைக்கண்டு வருந்துஞ் சோழனது மெலிவைப்பார்த்து, பொய்வேட முடையவர்பால் அகப்படாத சோமசுந்தரப்பெருமான் விரைந்து எழு ந்து, கனவுபோல அச்சோழன் நனவில் வந்தருளி, அகப்பார்வையாற்றறிசிக்கும் அன் பருக்குத் திருவருள் வடிவாய் வந்தருளுஞ் சித்தமூர்த்தி, கடலைநோக்கிப் பெருக்கு எடுத்துவரும் வைகை நதியானதுவற்றப் பார்த்தருளினர். எ-று. (கஉ)

வறந்த வாறுக டந்து வந்துவ டக்கு வாயிறி றந்துபோய்
நிறைந்த காவல்க டந்து வீதிக ணீந்தி நேரியர் வேந்தனைச்
சிறந்த வாடக புனித பங்கய திப்பி யப்புன லாடுவித்
தறந்த வாதறை சாம கண்டர்த மால யம்புகு வித்தரோ.

(இ-ள்.) வற்றிய வைகையை (சோழராஜனுடன்) தாண்டிவந்து, (மதிலின்) வடக்குவாயிற் கதவைத்திறந்து சென்று, நிறைந்துள்ள காவல்களைக் கடந்து, (அந்த

ணர் முதலியோர் வசிக்கும்) வீதிகளைக் கடந்து, சோழராசனை மேம்பட்ட பரிசுத்த மாகிய பொற்றுமரைத் தீர்த்தத்தில் நீராடச்செய்து, சிவதருமங் கெடாது கூறிய சாம கீத கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் தமது ஆலயத்திற் செல்லச்செய்து.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம்.

திப்பியம் - திவ்ய என்னும் ஆரியச்சிதைவு. (கரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெம்மைசெய் கதிர்கால் செம்பொன் விமானசே கரத்தின் மேய
தம்மையும் பணிவித் தெண்ணில் சராசர மனைத்து மீன்ற
வம்மையங் கயற்க ணாளை மணங்கையும் பணிவித் துள்ளஞ்
செம்மைசெய் தின்ப வெள்ளத் தழுத்தினுர் சித்த சாமி.

(இ-ள்.) வந்தருளிய சித்தமூர்த்தி, வெப்பஞ்செய்யுங் கிரணத்தை வீசும் செம்பொன்னுலாகிய இந்திரவிமானத்தி லெழுந்தருளிய தன்னையும் பணியச்செய்து, எல்லையில்லாத சராசரங்களெல்லாவற்றையும் பெற்றருளிய தாயாகிய அங்கயற் கண்ணம்மையாரையும் பணியச்செய்து உள்ளத்தைப் பரிசுத்தப்படுத்திப் பேரின்பப் பெருக்கில் ஆழச்செய்தருளினர். எ-று.

விமான சேகரம் - விமானங்கட்குக் கிரீடம்போன்றது. (கசு)

எண்ணிய வெண்ணி யாங்கே யான்பெற முடித்தாய் போற்றி
பண்ணியன் மறைக டேருப் பான்மொழி மணுள போற்றி
புண்ணியர் தமக்கு வேதப் பொருளுரை பொருளே போற்றி
விண்ணிழி விமான மேய சுந்தர விடங்க போற்றி.

(இ-ள்.) எண்ணினவற்றை யெண்ணியபடியே யான் பெறும்படி முடித்த வனே! உன்னை வந்திக்கக்கடவேன். பண்ணமைந்த வேதங்கள் தேருத பால்போ லும் (சுவையையுடைய) மொழியையுடைய உமாதேவி தலைவனே! உன்னை வந் திக்கக்கடவேன் (கண்ணுவராதி) முனிவர்கட்கு வேதப்பொருளை உரைத்தருளிய மெய்ப்பொருளே! உன்னை வந்திக்கக்கடவேன். எ-று. (கஎ)

எவ்வுட லெடுத்தேன் மேனு ளெண்ணிலாப் பிறவி தோறு
மவ்வுட லெல்லாம் பாவ மறப்பொருட் டாக வன்றே
தெவ்வுடல் பொடித்தா யுன்றன் சேவடிக் கடிமை பூண்ட
விவ்வுட லொன்றே யன்றே வெனக்குட லான தையா.

(இ-ள்.) ஐயனே! முற்காலத்தில், கணக்கில்லாத பிறவிகடோறும் எவ் வெச்சரீரங்களை யெடுத்தேனே அவ்வச்சரீரங்க ளெல்லாம் பாவ புண்ணியங்களின் பொருட்டாகவல்லவா? மன்மதனது உடலைப் பொடிபடுத்திய பெருமானே! உனது திருவடிகட்கு ஆட்பட்ட இந்தச் சரீரமொன்றல்லவா எனக்குரிய சரீரமாயிருந்தது.

இன்னன பலவு மேத்தி யிறைஞ்சிப்பல் வரமும் வேண்டு
மின்னகு வேலி னுனை வேந்தநீ போந்த வண்ணந்
தென்னவ னறிந்தா லேதஞ் செய்யுமென் றூர்த்தார்க் கண்ணி
மன்னனைச் சித்த சாமி யுத்தர வழிக்கொண் டேகா.

(இ-ள்.) இவைபோல்வனவாகப் பல துதிகளையுஞ்செய்து பணிந்து, பல வரங்களையும் யாசிக்கும் மின்னல்போலப் பிரகாசிக்கும் வேற்படைதாங்கியசோழனை நோக்கி, அரசனே! நீ வந்த வகையைப் பாண்டியன் அறிந்தால் துன்பஞ் செய்வான் என்று, ஆத்திமாலைசூடிய சோழனை அந்த வடக்கு வழிக்கொண்டு சென்று. எ-று. (கஎ)

மண்ணின் வளர்க்கும் வைகை வடகரை யளவு நண்ணிப்
புண்ணிய நீற்றுக் காப்புப் புண்டர நுதலிற் சாத்தி
யுண்ணிறை கருத்துக் கேற்ப வுறுதுணை யுனக்குண் டாகி
நண்ணுக வென்று பொன்னி நாடனை விடுத்து மீண்டு.

(இ-ள்.) உலகத்திலுள்ள பிராணிகளை (ஊட்டி) வளர்க்கும் வைகையினது வடகரை யெல்லையும், அவனோடு சென்று, அவனுக்குக் காவலாகப் புண்ணியவடிவாகிய திருநீற்றுப் புண்டரத்தை அவன் நெற்றியிலிட்டு, உன் மனதில் நிறைந்த சிவநேயத்திற்குப்பொருந்த (இத்திருநீறே) உனக்கு மேம்பட்டதுணையாகிக் கூடச்செல்க வென்று, சோழனை யனுப்பி மீண்டு. எ-று. (கஅ)

கலிவிருத்தம்.

காப்புச் செய்து கதவில் விடைக்குறி
யாப்புச் செய்தமைத் தீர்ஞ்சடைச் சித்தர்போய்த்
தூப்புக் கைவரை சூழ்வட மேருவிற்
கோப்புச் செய்தபொற் கோயிலின் மேவினார்.

(இ-ள்.) (முன் திறந்த) கதவைச்சாத்தி, அக்கதவிற்கு (தமது) இடபமுத்திரையைப் பொருத்தி, குளிர்ந்தசடையையுடைய சித்தமூர்த்திசென்று, துவாரம்பொருந்திய துதிக்கையையுடைய அஷ்டகஜங்கள் சூழ்ந்து சுமக்கும் வடபாலுள்ள மேருவைப்போலக் கோவை செய்தமைத்த பொற் றகடுவேய்ந்த திருக்கோயிலை யடைந்தருளினர். எ-று. (கக)

கங்கு லின்கருங் கைகுறைப் பானெனச்
செங்கை நீட்டித் தினகரன் றோன்றலு
மெங்க ணாயக னிட்ட குறியறிந்
தங்கண் வாயி றிறப்பவ ராயுளா.

(இ-ள்.) இராத்திரியின் கருமைபொருந்திய கையினைப் பறிப்பவன்போல, செவந்த தனது கைகளை நீட்டிச் சூரியன் உதயமாக, எங்கள் பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள் பொறித்தருளிய இடப முத்திரையைத் தெரிந்து அந்த வாசற் கதவினைத் திறப்பவர்கள் சந்தேகித்து. எ-று.

கருங்கை என்றதற்கேற்பச் செங்கை யென்றது சொல் முரண்அணி. (உ0)

மற்றை வாயில்கண் மூன்றினும் வல்லைபோ
யுற்று நோக்கினர் தாநென்ன லொற்றிய
கொற்ற மீனக் குறிபிழை யாமைகண்
டெற்றி தாங்கொலென் றேந்தன்மு னெய்தினார்.

(இ-ள்.) மற்ற மூன்று திசைகளிலுமுள்ள வாசல்களிலும் விரைந்து சென்று தாம் உற்றுப்பார்த்து, நேற்றிட்ட வெற்றியையுடைய மீன முத்திரை பிறழாமலிருப்பதைப்பார்த்து, இம்முத்திரை யாதாய் முடியுமோ? என்று, பாண்டியன் முன் வாயிற் காவலாளர் சென்றார்கள். எ-று. (உக)

போற்றி மன்னநம் பொன்னங் கயற்குறி
மாற்றி யுத்தர வாயிற் கதவதி
லேற்றி லச்சினை யிட்டனர் யாரையென்
றாற்றல் வேந்த வறிகிலம் யாமென்றார்.

(இ-ள்.) மன்னவனே! போற்றி. வடதிசைவாயிற் கதவில் நமது அழகிய மீனமுத்திரையை மாற்றி, இடபமுத்திரை யிட்டவர் யாவரென்று யாமறியோம். வெற்றியையுடைய பாண்டியனே! என்றார்கள். எ-று.

யாரை என்றதில் ஐ தவிர் வழிச்சாரியை.

கதவது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (உஉ)

வையை நாடனும் வந்தது நோக்குறீஇ
யைய் வின்னதோ ரற்புத மாயையைச்
செய்ய வல்லவர் யாரெனத் தேர்கிலா
னைய மெய்தி யகன்மனை நண்ணினான்.

(இ-ள்.) வைகைநதி வளஞ்செய்யும் நாட்டையுடைய பாண்டியனும் அக்குறியைப் பார்த்து, இப்படிப்பட்ட ஓர் அதிசயம் விளைக்கும் மாயைத் திறத்தைச் செய்யவல்லவர் யாரோ? என்று தெளியாது சந்தேகமடைந்து தன் துகோயிலை யடைந்தான், எ-று.

தேர்கிலான் என்னும் வினைமுற்று வினையெச்சப் பொருளது.

ஐய் என்பது அதிசயப்பொருள் குறிக்கும் ஓரிடைச்சொல். (உ௩)

மறுத்த வுண்டியன் மாமலர்ப் பாயலை
வெறுத்த கன்றரை மேற்பள்ளி கொள்ளவும்
பொறுத்த னன்றுயின் றானிருட் போழ்தினிற்
கறுத்த கண்டர் கனவினிற் கூறுவார்.

(இ-ள்.) உணவு மறுத்து, மணம்பொருந்திய புஷ்பசயனத்தை வெறுத்து, இடம்பரந்ததரையின்மேற்பள்ளிகொள்ள, பரிசவின்பங்கருதாது நித்திரைசெய்தான். இருட்டுக்காலம்போலக் கறுத்த ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் கனவில் வந்து கூறி யருளுகின்றார். எ-று. (உ௪)

மட்ட லம்பிய தாதகி மாலையா
னுட்ட தும்பியெொ ழுகிய வன்பினாற்
கட்டி லங்கெயிற் கச்சியிற் காடெலாம்
வெட்டி நம்புடை வித்திய பத்தியான்.

(இ-ள்.) தேன் சிந்தும் ஆத்திமாலையணிந்த சோழன் அகத்திற்றதும்பி வழிந்த சிவநேயத்தால், காவலாக விளங்கும் மதில்சூழ்ந்த காஞ்சியிலுள்ள காடுகளையெல்லாம் வெட்டி நம்மிடத்துச் செலுத்தும்பத்தி (ஆகிய விதை)யை விதைத்தவன்.

வித்தியபத்தியான் என்றது சிவபக்தி பெருகச் செய்தவனெனப் பொருள்.

வந்து நம்மை வழிபட வேண்டினா
னிந்த வூரயி றிறந்தழைத் தின்னரு
டந்து மீள விடுத்துப்பின் றாட்கொளீஇ
நந்த மால்விடை நாம்பொறித் தோமெனா.

(இ-ள்.) இங்கு வந்து நம்மைத் துதிக்க விரும்பினான். (அவனை) இந்த வடவாயிலைத் திறந்தழைத்து (அவனுக்கு) இனிய அருள்செய்து திரும்பவும் (தன் நாட்டிற்குச்) செல்ல விடுத்து, பின்பு தாழிறுக்கி நமது பெரிய இடபமுத்திரையை நாம் இட்டோமென்று. எ-று.

"இந்த வாயில் திறந்தழைத்தின்ன ருடந்து" என்றதனை "அடைந்தவர்க் கருளு மப்பா போற்றி" என்னும் திருவாக்கானுணர்க.

(உசு)

அருளி னனையந் தேற்றி யகன்றபின்
மருளி னீங்கி மலர்க்கண் விழித்தெழீஇ
வெருளி னன்வெயர்த் தான்விம்மி னன்பல
பொருளி னுற்றுதித் தான்குல பூடணன்.

(இ-ள்.) சந்தேகத்தைத் துடைத்தருளி நீங்கியபின், குலபூஷணபாண்டியன் அம்மயக்கத்தினின்று தெளிந்து, தாமரை மலர்போலுங் கண்துயி லுணர்ந்து, அஞ்சி வெயர்த்து உடல் பூரித்து, பல நுண்பொருளமைந்த பாடல்களால் (சோமசுந்தரப்பெருமானைத்) துதித்தான். எ-று.

(உஎ)

வள்ள லன்புக் கெளிவந்த மாண்புகண்
டுள்ள வுள்ளநின் றூற்றெழு மற்புத
வெள்ள மும்பர மானந்த வெள்ளமுங்
கொள்ளை கொண்டுதன் கோமனை நீங்கினன்.

(இ-ள்.) சிவபெருமான் தனது அன்புக்கு எளியனாகி வந்த மாட்சிமையை நோக்கி நினைக்குந்தோறும் இடைவிடாது சுரந்தெழாநின்ற சிவஞானப் பெருக்கையும் சிவபோகப் பெருக்கையுங் கொள்ளைகொண்டு தன் அரண்மனையினின்று நீங்கினன். எ-று.

(உஅ)

அளிய ரூமனத் தன்புடை யுன்பருக்
கெளிய ராடலை யார்க்கும் வெளிப்படத்
தெளியு மாறு தெளிவித்துத் தன்னைப்போல்
விளிவி லாவின்ப வெள்ளத் தழுத்தினன்.

(இ-ள்.) சாந்தத்தினின்று நீங்காத மனதில் சிவநேயத்தையுடைய அடியவர்கட்கு எளியவராகிய சோமசுந்தரப்பெருமானது திருவிளையாடலை எல்லோர்க்கும் புலப்படத் தெரியும் வண்ணம் தெளிவித்து, (இன்பத்திலழுந்திய) தன்னைப்போல அழிதலில்லாத பேரின்ப வெள்ளத்தில் (பிறனையும்) ஆழச்செய்தான். எ-று.

அளியரு மனம் - ஒடுங்கிய மனம்.

(உகூ)

கோச்சகக்கலிப்பா.

கோடாத செங்கோலும் வெண்குடையுங் கோமுடியு
மேடா ரலங்க லிராசேந் திரற்களித்துத்
தோடா ரிதழியான் றாட்கமலஞ் சூடிவா
னாடா ளரசுரிமை பெற்றா னரபதியே.

(இ-ள்.) குலபூஷணபாண்டியன் கோணுதலில்லாத தனது செங்கோலையும் சந்திரவட்டக் குடையையும் அரசுக்குரிய கிரீடத்தையும் இதழ்நிறைந்த வெற்றிமாலையணிந்த இராஜேந்திர பாண்டியனுக்குக் கொடுத்து, இதழ்நிறைந்த கொன்றைமலர் மாலையணிந்த சோமசுந்தரக்கடவுளுடைய திருவடித் தாமரையைச் சூடி, விண்ணுலகத்தை யாளும் இந்திரபட்டம் பெற்றான். எ-று.

(கூ0)

விடையிலச்சினையிட்ட படலம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஅகக.

---

உ

சிவமயம்.

முப்பத்தைந்தாவது,

# தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சம்பு மதுரைப் பரனிரவு தனியே வந்து தனைப்பணிந்த
வெம்பு கதிரோன் மருமானை விடுத்து மீண்டு தாழிறுக்கி
யம்பொற் கதவின் விடைபொறித்த தறைந்துந் தென்ன னடுபடைக்கு
வம்பு மலர்தோய் புனற்பந்த ரமைத்துக் காத்த வகைசொல்வாம்.

(இ-ள்.) சம்புவாகிய மதுராபுரீசர், இரவில் துணையின்றி வந்து தம்மைப் பணிந்த சூரியமரபிற்றோன்றிய காடுவெட்டியசோழனை அவன் நாட்டிற்கு அனுப்பி, மீளவுந்தாழ்போட்டு அழகிய பொற்றகடு வேய்ந்த கதவில் இடபமுத்திரையிட்ட திருவிளையாடலைக் கூறினோம். இராஜேந்திர பாண்டியனுடைய கொலைத்தொழிற்குரிய சேனைக்கு வாசம்பொருந்திய மலரளாவிய தண்ணீர்ப்பந்தல் வைத்துக் காத்தருளிய திருவிளையாடலை (யாம் இனி) க் கூறுவாம். எ-று. (க)

தென்ன னரச புரந்தரன்கோல் செலுத்து நாளிற் காடெறிந்த
மன்னன் பின்னர் வெளிப்படையாய்ப் போந்து போந்து மதுரேசன்
பொன்னங் கமலத்தாள்வணங்கிப் போவான் முன்னிப் பொருபொருநைக்
கன்னி நாடன் கேண்மைபெற விடுத்தான் வரிசை கையுறயே.

(இ-ள்.) பாண்டியனாகிய இராஜேந்திரன் செங்கோல் செலுத்திவருங்காலத்தில், காடுவெட்டிய சோழன், (பின்பு எல்லோருங்காண) பகிரங்கமாய் வந்து வந்து சோமசுந்தரக்கடவுளினுடைய பொன்போலும் அழகிய திருவடியைப்பணிந்து செல்லக்கருதி, கரையோடு மோதுந் தாமிரபர்ணி நதிசூழ்ந்த பாண்டியநாட்டையுடைய இராஜேந்திரனது நட்பையடைய வரிசையாகக் கையுறை யனுப்பினான். எ-று. (உ)

பொன்னி நாடன் வரவிடுத்த பொலம்பூ ணுடை முதற்பிறவுங்
கன்னி நாடன் கைகவர்ந்து தானுங் கலக்குந் தொடர்பினு
லுன்னி வேறு கையுறையுய்த் துறவு செய்ய வுவப்பெய்திச்
சென்னி காதல் மகட்கொடுப்பா னிசைந்தா னந்தச் செழியற்கு.

(இ-ள்.) காவிரியைத் தன் நாட்டகத்துடைய சோழன் விடுத்த பொன்னாபரணம் ஆடைமுதலிய பொருள்களை இராஜேந்திரபாண்டியன் கைக்கொண்டு தானும் (அவனோடு) அளவளாவுந் தொடர்ச்சியால் நட்பைக்கருதி, வேறு கையுறை விடுத்து உறவுகொள்ள, காடுவெட்டிய சோழன் களிப்படைந்து விருப்பம் பொருந்திய தன்மகளை அந்த இராஜேந்திரபாண்டியனுக்குக்கொடுக்கச் சம்மதித்தான். எ-று.

செழியன் றனக்கு வரையறுத்த செய்தி கேட்டுச் செம்பியர்கோன்
கழியன் புடைய குலமகளைத் தான்போய்க் கொள்வான் கருதிமதி



தண்ணீர்ப்பத்தல்வைத்தபடலம்.

வழிவந் தவற்குத் தம்பியென வந்த வரச சிங்கமெனும்
பழியஞ் சாதான் வஞ்சித்துப் பழனக் காஞ்சிப் பதிபுகுவான்.

(இ-ள்.) சந்திரமரபில் வந்த இராஜேந்திரபாண்டியனுக்குத் தம்பியாகப் பிறந்த அரசசிங்கபாண்டிய னென்னும் பெயரையுடைய பழிக்கஞ்சாதவன் (தன் மூத்தோனாகிய) இராஜேந்திர பாண்டியனுக்கு (மகட்கொடை) வரையறை செய்த செய்தியைக் கேள்விப்பட்டு, காடுவெட்டிய சோழனது மிக்க அன்புடைய குல் கன்னிகையைத் தான் சென்று மணமுடிக்கக்கருதி, (தன் தமயனை) வஞ்சனைசெய்து வயல்சூழ்ந்த காஞ்சிநகரிற்குச் செல்வானாயினன். எ-று. (ச)

காஞ்சிப் பதிமுன் குறுகுமிளங் காவ லோனைக் கடற்சேனை
தாஞ்சுற் றியவந் தெதிர்கொடுபோய்த் தம்முன் றனக்கென் றிருந்தமக
ளாஞ்சிற் றிடையை மணம்புணர்த்தி யந்த மருகற் கரசுநிலை
வாஞ்சித் தரச புரந்தரனைப் பிடிக்க மதித்தான் வனமெறிந்தான்.

(இ-ள்.) காஞ்சிநாட்டிற்கு முற்பட்டுச் செல்லும் இளவரசாகிய அரசசிங்க பாண்டியனை, கடல்போன்றசேனைதன்னைச்சூழ்ந்துவர எதிர்கொண்டு சென்று அவன் தமயனுக்கு வரையறுத்திருந்த தனது புத்திரியைக் கலியாணஞ் செய்வித்து, அந்த மருகனுக்கு (தமயனுடைய) அரசியலைக் கவர்ந்தளிக்க விரும்பி, இராஜேந்திரபாண்டியனைப்பிடிக்க, காடுவெட்டிய சோழன் கருதினன். எ-று.

வந்து என்பது வர வென்னும் செயவெனெச்சத்திரிபு. (ரு)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மருமகன்ற னுடனெ ழுந்து மாம னான வள்வர்கோன்
பொருமகன்ற சேனை யானை புடைநெ ருங்க மதிவழித்
திருமகன்றன் மேலமர்த்தி றங்கு றித்து முரசறைந்
துருமகன்ற பல்லியம்மொ லிப்ப வந்து ளானரோ.

(இ-ள்.) மருகனாகிய இராஜேந்திரனுடன் போர்க்கெழுந்து மாமனாகிய காடுவெட்டிய சோழன் போர்புரியும் பரந்த சேனையும் யானையுந் தனது பக்கலில் நெருங்கிவர சந்திரமரபிற் றோன்றிய இராஜசேகரபாண்டியன்பேரில் போர்த் திறங்குறித்து, முரசுகொட்டி இடிபோலப் பலவாத்தியங்கள் ஒலிக்கும்படி வந்தான்.

திரண்ட திர்ந்தெ ழுந்து வந்த சென்னி சேனை தன்னகர்க்
கிரண்டு யோச னைப்பு றத்தி ருக்கு முன்ன ரொற்றராற்
றெருண்டு தென்னன் மாட நீடு கூடன் மேய சிவனதாள்
சரண்பு குந்து வேண்டு கென்று சார்ந்து தாழ்ந்து கூறுவான்.

(இ-ள்.) நெருங்கிக் கோஷித்துப் (போர்க்கு) எழுந்துவந்த சோழனுடைய சேனை தன்னகரத்திற்கு இரண்டுயோசனைத் தூரத்திற்கப்பால் (பாடிவீடுகொண்டு) வசிப்பதற்குமுன், பாண்டியன் வேவுகாரராலுணர்ந்து, மாடங்கள் நெருங்கிய மதுராபுரியிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவடியில் அடைக்கலம் புக்குக் குறையிரக்கக்கடவேன் என்று வந்துபணிந்து சொல்வானாயினன். எ-று. (எ)

அன்று பாதி யிரவில் வந்து னடிப ணிந்து தமியனைச்
சென்ற சென்னி யென்னு நின்ன திருவ டிக்க ணன்பினு
னின்று மந்நி லைய னுயெ னக்கு வேண்டு வனவிடுத்
தொன்று கேண்மை புரிகு வானு ளத்தி லொன்றை யுன்னினன்.

(இ-ள்.) அக்காலையில், பாதியிரவில் வந்து உனது திருவடியைப் பணிந்து தனியனாய்ப் போன காடுவெட்டிய சோழனென்னும் உனது திருவடியிலன்புடைய வன் இப்பொழுதும் அந்நிலையையுடையவனாக எனக்கு வேண்டும் வரிசைகளை யனுப் பிப்பொருந்திய நட்பைவிரும்பினவன் (இப்பொழுது) மனதில் வேறொன்றைக் கருதினான். எ-று. (அ)

அறத்தி னுக்கு ளாகி யன்று நின்ற நீய வன்செயு
மறத்தி னுக்கு ளாகி யின்று வன்மை செய்வ தேயறப்
புறத்தி னார்பு ரம்பொ டித்த புண்ணி யாவெ னக்கைாந்
துரைத்து வேண்டி னான வேலை யும்பர் நாத னருளினால்.

(இ-ள்.) தருமத்திற்குட்பட்டு அப்பொழுது அவனுக்குத் துணையாய் நின்ற நீ அவன் செய்யுங் கொடுந்தொழிலுக் கிணங்கி இப்பொழுது அவனுக்குத் துணைசெய் வதோ? பாவத்தின்வழி நின்றவர்களது முப்புரங்களை யெரித்தருளிய புண்ணியனல்ல வோ? என்று கூறி வலிந்து குறையிரந்தான். அக்காலையில் சோமசுந்தரக்கடவுளின் திருவருளால். எ-று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். (கூ)

மெய்து ரந்த வாய்மை யொன்று விண்ணி னின்று மண்ணலை
யைது நுங்கள் சேனை யோடு மாக வந்து நாளைநீ
யெய்தி வந்த தெவ்வ ரோடெ திர்ந்து ருத்து நின்றுபோர்
செய்தி வென்றி நின்ன தாதல் செய்து மென்றெ ழுந்ததால்.

(இ-ள்.) பாண்டியனே! அழகிதாக உங்கள் சைநியங்களோடும் போர்க் களத்தில் அடைந்துவந்தபகைவரோடு நீ எதிர்ந்து கோபித்துநின்று போர்த்தொழில் புரிவாய். வெற்றி உன்னுடையதாகச்செய்வோம் என்று, ஆகாயத்தினின்றும் அசரீரி யொன்று எழுந்தது. எ-று. (கo)

காய வாணி செவிநு ழைந்த காலை வேந்த ரிந்திர
ஞய ஞர டிக்க ணேந யந்த வன்பு முவகையு
மாய வேலை வீழ்ந்து தாழ்ந்த கன்று தன்னி ருக்கைபோய்
மேய்யி ஞனி மிர்ந்து கங்குல் விடியு மெல்லை நோக்குவான்.

(இ-ள்.) ஆகாயவாணி இராஜேந்திரப்பாண்டியன் செவியில் நுழைந்தகாலத் தில், சோமசுந்தரக்கடவுளது திருவடியில் எழுந்த நேயமும் களிப்பும் பொருந்திய கடலில் விழுந்து மூழ்கி, அதனினின்று நீங்கி, தன் கோயிலிற்சென்று சேர்ந்து எழுந் தோங்கிய இராப்பொழுது விடியுமளவைப் பார்ப்பவனாயினன். எ-று. (கக)

கழித்த கங்கு லிறவி சும்பு கண்வி ழிக்கு முன்னரோ
விழித்தெ ழுந்து சந்தி யாதி வினைமு டித்து வானநீர்
சுழித்த லம்பு வேணி யண்ண றாய பூசை செய்தெழீஇத்
தெழித்தெ ழுந்த சேனை யோடு செருநி லத்தை நண்ணினன்.

(இ-ள்.) மிக்க இராப்பொழுதுநீங்க, ஆகாயங் கண்திறக்குமுன்னர் தான் துயிலுணர்ந்து, நித்யகருமமுதலிய கடனைச் செய்து, கங்காநதி சுழித்தொலிக்குஞ் சடாமுடியையுடைய சிவபெருமானது புனிதமாகிய பூஜையைச் செய்தெழுந்து, அத ட்டிப் போர்க்கெழுந்த சேனையுடன் யுத்தபூமியை யடைந்தான். எ-று. (கஉ)

அலைசி றந்த சலதி மீதொ ராறு செல்லு மாறுபோன்
மலைசி றந்த நேரி வெற்பன் மள்ளர் சேனை வெள்ளமேற்
கலைசி றந்த மதிநி றைந்த கன்னி நாடு காவலான்
சிலைசி றந்த சிறிய சேனை சென்று லைத்து நின்றதே.

(இ-ள்.) அலைமிக்ககடலின்பேரில் ஓர் நதிசெல்லும்வகைபோல, மலைகளிற் சிறந்த நேரிமலையையுடைய சோழராஜனுடைய வீரர்சேனாசமுத்திரத்தின்பேரில்(அறுபத்துநான்கு) கலைகளின் தேர்ச்சியில் மேம்பட்ட பாண்டிநாட்டு மன்னனாகிய இராஜேந்திரனுடைய வில்லிற்சிறந்த சிறியசேனையானது (போர்மேற்கொண்டு) சென்று வருத்திநின்றது. எ-று. (கங)

உருமு வன்ன குரலி னாருலவை யன்ன செலவினார்
வெருவு தீயின் வெகுளியார் வெடித்த வீர நகையினார்
செருவின் மான வணியினார் சினைஇம டித்த வாயினா
ரிருவர் சேனை மள்ளரும்மெ திர்ந்து கைக லந்தனர்.

(இ-ள்.) இடிபோன்ற குரலினையுடையாரும், காற்றுப்போன்ற நடையினையுடையாரும், அஞ்சத்தக்க நெருப்புப் போன்ற கோபத்தையுடையாரும், வெடிப்போடு புரிந்த வீரநகையையுடையாரும், போரில் (புறங்கொடாத) மானாபரணமுடையாரும், கோபித்த மடித்தவாயினை யுடையாருமாகி, இருதிறத்தவருடைய சேனாவீரரும் (தம்முள்) எதிர்ந்து கைகலந்தார்கள். எ-று. (கச)

மன்ற லந்தெரிய னேரி மலைய வன்ற மர்க்கெலாந்
தென்ற லம்பொ ருப்பி னான்றி ரண்ட நான்கு கருவியு
மின்ற யங்கு செய்ய வேணி விடைய வன்ற னருளினா
லொன்ற னந்த மாக வந்து ருத்தெ திர்ந்து தோன்றுமால்.

(இ-ள்.) வாசம்பொருந்திய அழகிய மாலையணிந்த நேரிமலையையுடைய காடுவெட்டிய சோழனது சேனாவீரர்கட்கெல்லாம், அழகிய பொதியமலையையுடைய இராஜேந்திரபாண்டியனது திரண்ட நால்வகைச் சேனையும், மின்னல் போன்று விளங்கும் செவ்விய சடையையுடைய சோமசுந்தரப்பெருமான் திருவருளால் ஓர் உரு அநந்த வுருவாகப் புலப்பட்டுவந்து தோன்றாநிற்கும். எ-று. (கரு)

தேரி னோதை கந்து கஞ்சி ரிக்கு மோதை சொரிமதக்
காரி னோதை பேரி யங்க றங்கு மோதை மறவர்தம்
போரி னோதை வீரர் தோள்பு டைக்கு மோதை யோடுமுந்
நீரி னோதை யொன்றெ னக்க லந்தொ டுங்க நின்றதே.

(இ-ள்.) தேரின் முழக்கமும், குதிரைகள் கனைக்குமோசையும், மதம் பொழியும் யானையின் கம்பலையும், பெரிய வாச்சியங்கள் ஒலிக்கும் அரவமும், சேனாவீரர்கள் தம்முட் போர்புரியுங் கோஷமும், அவ்வீரர்கள் தமது தோள்கொட்டி ஒலிக்கும் ஆரவாரத்துடன் கடலொலியுமொன்றென்று சொல்லத் தம்முட் கலந்து அடங்கி நின்றது. எ-று. (கசு)

சிலைப யின்ற வீர ரோடு சிலைப யின்ற வீரரே
கலைப யின்ற வாள ரோடு கலைப யின்ற வாளரே
கொலைப யின்ற வேல ரோடு கொலைப யின்ற வேலரே
மலைப யின்ற மல்ல ரோடு மலைப யின்ற மல்லரோ.

(இ-ள்.) வில்வித்தையிற் பழகிய வீரர்களோடு வில்வித்தையிற் பழகிய வீரர்களே! சஸ்திரநூலிற்பழகிய வாள்வீரர்களோடு சஸ்திரநூலிற் பழகிய வாள்வீரர்,

களே! கொலைத்தொழில் தேர்ந்த வேல்வீரர்களோடு கொலைத்தொழில்தேர்ந்த வேல் வீரர்களே! மற்போரிற்பழகிய மல்லர்களோடு மற்போரிற் பழகிய மல்லர்களே. எ-று.

இதுமுதலிரண்டுபாடல்கள் ஒருதொடர். மலை=மல்லை. ஐ-தொகுத்தல்.

கரியு கைத்த பாக ரோடு கரியு கைத்த பாகரே
பரியு கைத்த மறவ ரோடு பரியு கைத்த மறவரே
கிரியு கைத்த வலவ ரோடு கிரியு கைத்த வலவரே
யெரியு கைத்தெ திர்ந்த காலெ னக்க லந்து மலைவரால்.

(இ-ள்.) யானையைச்செலுத்தியபாகர்களோடு யானையைச்செலுத்திய பாகர்களே. குதிரையைச் செலுத்திய வீரர்களோடு குதிரையைச் செலுத்திய வீரர்களே. (தேராகிய) மலையைச் செலுத்திய பாகரோடு (தேராகிய) மலையைச் செலுத்திய பாகரே (ஆக இவ்வாறு) வடவாமுகாக்கினியை மூட்டி யெழுந்த பிரசண்ட மாருதம் போல (தம்முட்) கலந்து போர்புரிவார்கள். எ-று.

கிரி - உவமவாகுபெயர். (கஅ)

தொடுக்கும் வாளி யெதிர்பி ழைப்பர் வெய்ய வாளி யெய்துபின்
றொடுக்கும் வாளி வில்லொ டுந்து ணிப்பர் பின்ற ணிப்பற
தொடுக்கும் வாளி மார்பு தைப்ப வாங்கி மற்றை வாளிகொண்
டடுக்கு மேவ லாரை யெய்த டர்ப்பர் கிள்ளி மள்ளரே.

(இ-ள்.) சோழனுடையசேனாவீரர்கள் (பாண்டிய வீரர்கள்) தொடுக்கும் பாணங்களை எதிர்நின்று தப்பி, கொடிய அம்புகளைத் தொடுத்து, பின்பு அவர்கள் தொடுக்கும் அம்புகளை வில்லுடன் துண்டுசெய்வார்கள். அவர்கள் அளவில்லாமல் தொடுக்கும் பாணங்கள் தமது மார்பில் தைத்துருவ அவற்றை வாங்கி (மீண்டும்) அம்புகொண்டு போருக்குவரும் பகைவர்மேலேவிக் கொல்வார்கள். எ-று.

கிள்ளி - சோழன்.

வீரர் தமது மார்பிற் றைத்த அம்புகளைப் பிடுங்கி மீளவும் எய்தனர் என்பது "களங்கழுமிய படையிரிய - உளங்கழிந்த வேல்பறித்தோச் சின்று" என்றது போல், நூழிலாட்டுத்துறை. (கக)

சோனை மாரி யிற்ச ரஞ்சொ ரிந்து நின்று துன்னுவா
னான வாளி யெதிர்பி ழைத்தொ துங்கி நின்ற ழற்சரங்
கூனல் வாளி சிலையி றத்தொ டுத்தெ திர்ந்து கூவுவார்
மீன கேத னத்து வேந்தன் வீரர் சென்னி வீரர்மேல்.

(இ-ள்.) மீனக்கொடியை யுடைய பாண்டியன் சேனாவீரர், சோழன் சேனாவீரர்மேல் சோனைமாரிபோல அஸ்திரங்கட்கு எதிரே தப்பி யொதுங்கிநின்று, அக்கினிசொரியும் அஸ்திரங்களை வளைத்து விற்கள் துண்டுபடப் பிரயோகித்துத் துண்டித்து வீரகோஷஞ் செய்வார்கள். எ-று. (உ0)

தறிந்த தாட ரந்த சென்னி தரையு ருண்ட வரையெனச்
செறிந்த தோள்ச ரிந்த தேர்சி தைந்த பல்ப டைக்கல
முறிந்த யானை கையி றுமு ழுங்கி வீழ்ந்த செம்புனல்
பறிந்த பாறு பாரி டங்கள் பைத்த கூளி மொய்த்தவே.

(இ-ள்) முறிபட்ட கால்களும் அறுபட்ட தலைகளும் நிலமேல் உருண்டன. மலைபோல் நெருங்கித் திரண்ட தோள்கள் சரிந்தன. தேர்கள் அழிந்தன. பல ஆயுதங்களு முறிந்தன. யானைகள் துதிக்கை துண்டுபட்டு அலறி வீழ்ந்தன. உதிர

வெள்ளம்பறந்தன. கழுகுகளும் பூதங்களும் பரவிய பசாசுகளும் (போர்க்களமுழுதும்) நெருங்கின. எ-று. (உக)

மடலவி னீடு தார லங்கன் மன்னர் சேனை யின்னவா
றுடலி னீழ லடிய கத்தொ டுங்க வும்ப ருச்சியிற்
கடலி னீடு கதிர்ப ரப்பு கடவு ளெய்து மளவுமின்
றடலி னீடி யிடைவி டாம லமரு ழந்த தாலரோ.

(இ-ள்.) இதழ்கள் பொருந்திய (மண) மிக்க மாலையணிந்த சோழபாண்டியர் சேனைகள் இவ்விதமாகத் தேகத்தினிழல் காற்கீழொதுங்கிநிற்க, கடல்போல அளவின்றிப்பரந்த கிரணங்களைவீசுஞ் சூரியன் ஆகாயத்தின் மத்தியில், அடையும் ஈண்பகற்போதுகாறும் நின்று வலிமைகுன்றாது, இடைவிடாது போர்செய்தனர். எ-று.

உடலினீழ லடியகத் தொடுங்க என்றது, உச்சிப்பொழுதில் உடலின் நிழல் காற்கீழொதுங்குதல் மரபுபற்றியென்க. (உஉ)

அந்த நாள னைத்தை யும்ம ழிக்க நின்ற வரனுதற்
சிந்து தீயெ னக்க னன்று ருத்து நின்று தெறுதலா
லெந்த யாறு மறவ றப்ப விம்ப ரன்றி யும்பரும்
வெந்து வான யாறும் வற்ற வேனில் வந்தி றுத்ததால்.

(இ-ள்.) முடிவுகாலத்தில் எல்லாவற்றையும் அழிக்கும்படி நின்றருளிய உருத்திரமூர்த்தியின் நெற்றிக்கண் சிந்துந் தீயைப்போலக் கொதித்து உஷ்ணித்து நின்று (சூரிய கிரணங்கள்) வாட்டுதலால், எவ்வகைப்பட்ட நதிகளும் மிகவும் வற்றவும் இந் நிலவுலக மன்றி விண்ணுலகுங் கருகி ஆகாயகங்கையும் வறப்ப வேனிற்பொழுது வந்து நிலைபெற்றது. எ-று.

நுதல் - இடவாகுபெயராய்க் கண்ணை யுணர்த்தியது. (உங)

மண்பி ளந்து பிலநு ழைந்து வரைபி ளந்து நிரையவா
யெண்பி ளந்து நின்ற பொங்க ரிலையு கப்பி ளந்துமேல்
விண்பி ளந்து பரிதி நீடு வெங்க ரங்கள் யாவையுங்
கண்பி ளந்த ழன்று வீசு கான லெங்கு மானதே.

(இ-ள்.) சூரியனுடைய மிக்க கொடியகிரணங்கள், யாவரையுங் கண்கூசக் கொதித்து வீசுங் கனல் நிலவுலகைப் பிளந்து பாதலத்திற் சென்று மலைகளைப் பிளந்து ஒழுங்குபட்டனவாய், அளவுகடந்து நின்ற சோலையிலுள்ள இலைகள் சிந்த எரிந்து மீதுள்ள விண்ணுலகைப் பிளந்து எவ்விடத்தும் பரவியது. எ-று.

கண்பிளந்து - செயவெனெச்சத்திரிபு. (உச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆயிடை யலங்கத் தேரு மடைந்தவர் வெயர்வு மன்றித்
தூயநீர் வறந்த வந்தச் சுடுபுலந் தோய்ந்த பரனு
மீயுயர் மதிநி லாவும் வெய்யவாய்ச் சுடுநல் லோருந்
தீயவர் தம்மைச் சேர்ந்தாற் றீயவ ராவ ரன்றே.

(இ-ள்.) அவ்விடத்தில், கானற்சலமும் அடைந்தவர்கள் வெயர்வுநீரு மல்லாது புனிதமாகிய நீரும் வற்றின. அந்தச்சுட்டுவருத்தும் நிலத்தில் அளாவியகாற்றும் விண்ணுலகில் உயர்ந்து விளங்குஞ் சந்திரகிரணமுங் கொடியனவாகிச் சுடாநிற்கும். நல்லவருங் கெட்டவரைச் சேர்ந்தால், கெட்டவராவாரல்லவா. எ-று.

அஃ இடை = ஆயிடை. "சுட்டு நீளின் யகரமுந் தோன்றும்" என்பது சூத்திரம். (உ௫)

விளமத வூற்று மாறி வெகுளியுஞ் செருக்கு மாறித்
தொளையுடைக் கைம்மான் றாங்கு நடையவாய்ச் சாம்பிச் சோர்ந்த
வுளர்தரு மூழிக் காலி னோடுவாம் புரவி யெய்த்துத்
தளர்நடை யுடைய வாகித் தைவரு தென்றல் போன்ற.

(இ-ள்.) தொளை பொருந்திய துதிக்கையை யுடைய யானைகள் பெருக் கெடுக்கும் மதச்சுரப்பு மாறி, கோபமும் இறுமாப்பும்மாறி, மந்தநடையை யுடையன வாகி வாடிச் சோர்ந்தன. சஞ்சரிக்கும் ஊழிக்காற்றுபோல வோடித் தாவாநின்ற குதிரைகள் சோர்ந்து தளர்நடையுடையனவாகித் தவழ்ந்துசெல்லுந் தென்றலை யொத்தன. எ-று. (உ௬)

கானலந் தேர்மேற் சூன்றைக் காலெனும் பாகன் றூண்ட
வேனில்வேந் தேறிச் சீறி வெப்பமாம் படைகள் வீச
மாநிலங் காவல் பூண்ட மானவ ரிருவர் தங்க
டானையு முடைந்து தண்ணீர் நசைசுடச் சாம்பிற் றன்றே.

(இ-ள்.) அழகிய கானலாகிய தேரின்மேல் சூரனெனும் பாகன் (இரு ந்து) தூண்ட, வேனிற்காலமென்னும் மன்னவ னேறிக் கோபித்து, வெம்மையாகிய ஆயுதங்களை யெறிய, பெரிய வுலகத்தைக்காக்கும் சோழபாண்டியர்களாகிய இருமன் னர் சேனையும், (அவ் வெப்பத்திற்குத்) தோற்று நீர்வேட்கை வருத்தச் சோர்ந்தது.

கானல் தேராகவும், சூறைக்காற்று பாகனாகவும், வேனில் வேந்தாகவும், வெப்பம் படையாகவும் உவமிக்கப்பட்டன. (உ௭)

இரக்கமில் கொடிய செல்வர் மருங்குபோ யிரப்பார் போல
வுருப்பமொன் டிறைக்குங் கள்ளி நீழல்புக் கொதுங்கு வாருந்
தருக்கறு நிரப்பா லெய்த்தோர் தம்மினும் வறியார் பாற்சென்
றிரப்பர்போ லிலைதீர் துக்க மாநிழ லெய்து வாரும்.

(இ-ள்.) இரக்கமில்லாத கொடிய செல்வமுடையோரிடஞ் சென்று யாசி ப்போர் (தீய பலனடைதல்) போல, வெப்பத்தை முகந்து வீசுங் கள்ளிமரத்தின் நிழ லிற்போய் ஒதுங்குகின்றவர்களும், களிப்பில்லாமல் வறுமையி லிளைத்தவர்கள் தம் மைப்பார்க்கிலும் எளியாரிடஞ் சென்று யாசித்தோர் (பலன் பெறாதது) போல, இலை கருகியுதிர்ந்த மரநிழலடைவாரும். எ-று. (உ௮)

கொல்லியம் பரிமான் றேரின் குறுநிழ லொதுங்கு வாரு
மல்லிருள் வட்டத் தோல்வெண் கவிகையு ளடங்கு வாருஞ்
செல்லிடம் பிறிது காணார் வீரவான் சென்றோர் நின்ற
கல்லுட னிழல்சேர் வாரு மாயினர் களம ரெல்லாம்.

(இ-ள்.) கொல்லாநின்ற யானை குதிரைபூட்டிய தேர் இவற்றின் குறுநிழ லில் ஒதுங்குகின்றவர்களும், இருண்மிக்க கேடகத்துள்ளும் வெண்கொற்றக்குடை யுள்ளும் அடங்குகின்றவர்களும், நிழலுக் கொதுங்குமிடம் வேறுகாணாராகி வீரசுவர் க்கஞ் சென்றோரது பெயர் பொறித்து நட்ட கற்களின்கீழ் நிழலுக்குச் செல்வாரு மாக, இருசேனைவீரர்களுமாயினர். எ-று.

வீரவான் சென்றோர் நின்றகல் - போர்க்களத்திற் புறங்கொடாது உயிர் விட்ட வீரரது போர்வன்மையைக் கல்லிலெழுதி அப் போர்க்களத்தில் நடுதல் வழ க்கு ஆதலின் அந்தக்கல் எனக் கொள்க. (உ௯)

ஆயதோ ரமையந் தன்னி லெண்ணிலா வுயிர்க்கு மீன்ற
தாயனார் துலைபோல் யார்க்குஞ் சமநிலை யாய கூட
னாயனார் செழியன் றானை நனந்தலை வேத நாற்காற்
பாயதோர் தண்ணீர்ப் பந்தர் பரப்பியப் பந்தர் நாப்பண்.

(இ-ள்.) இவ்வாறான சமையத்தில் எண்ணிறந்த வுயிர்கட்கெல்லாம் பெற்ற தாயைப்போலக் கருணையுடையவரும் எல்லோர்க்கும் நடுநிலையா யுள்ளவருமாகிய மதுராபுரியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் இராஜேந்திர பாண்டியனுடைய சேனையின் நடுவில், வேதங்களை நான்கு கால்களாக நிலைபெற்ற தண்ணீர்ப்பந்தல் வைத்து அப்பந்தர் நடுவில். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௫0)

புண்டர நுதலுங் காதின் புறத்தணி மலரும் பாத
முண்டக மலர்மே லொற்றைக் கிங்கிணி முழக்குங் கச்சியாப்
புண்டதோ லுடையுங் கண்டோ ருள்ளமுங் கண்ணுங் கொள்ளை
கொண்டபுன் னகையு முள்ளக் கருணையின் குறிப்புந் தோன்ற.

(இ-ள்.) திரிபுண்டர மணிந்த நெற்றியும், காதின் தொளைப்புறத் தணிந்த மலரும், பாததாமரைமே லணிந்த ஒற்றைச் சதங்கையின் கோஷமும், கச்சைகட்டிய புலித்தோலாடையும், பார்த்தோர் மனதையுங் கண்களையுங் கொள்ளைகொள்ளும் புன் சிரிப்பும், திருவுள்ளத்தி லெழுந்த அருளின் குறிப்பும் புலப்பட. எ-று. (௫௧)

அருமறை யகத்து னின்றுங் கருந்தவ ராகி வேணிப்
பொருபுனல் பூரித் தாங்கோர் புண்ணியச் சிரகந் தாங்கி
யொருவருக் கொன்றே யாகி யிலக்கருக் கிலக்க மாகித
தருகுறும் புழையால் வாக்கித் தணித்தனர் தண்ணீர்த் தாகம்.

(இ-ள்.) அரிய வேதத்தினுள் நின்றருளு நிலையைப்போல, அரிய தவவேடமுடையவராகி, தமது சடையிலணிந்த கரையோடு மோதுங் கங்காநீரைநிரப்பியது போல, ஒப்பில்லாத புண்ணியவடிவாகிய நீர்க்கரகத்தை யேந்தி, ஒருவர்க்கு ஒன்றாய், லக்ஷம்பேர்க்கு லக்ஷமாய், சிறிய துவாரங்களால் தண்ணீர்வார்த்து (பாண்டியன் சேனைக்கு)த் தண்ணீர்வேட்கை யொழித்தருளினர். எ-று. (௫௨)

சுந்தரப் புத்தேள் வைத்த துறுமலர் வாசத் தெண்ணீர்ப்
பந்தர்புக் கடைந்து நன்னீர் பருகியெய்ப் பகல வாற்றல்
வந்தபின் செழியன் றன்னோர் வளவன்மே லேறிச் சீறி
யந்தமி லனிகஞ் சிந்தித் தும்பைவேய்ந் தடுபோர் செய்தார்.

(இ-ள்.) சோமசுந்தரப்பெருமான் வைத்தருளிய மணமமைந்த மலரால் வாசமூட்டிய தண்ணீர்ப்பந்தலைச் சென்றடைந்து நல்ல நீரைப் பானஞ்செய்து இளைப்பு நீங்க (முன் இளைப்பாலிழந்த) வலிமைவந்தபின்பு, பாண்டியன் சேனவீரர்கள் காடுவெட்டியசோழன்மேற் போர்க்கெழுந்து கோபித்துக் கணக்கில்லாதசேனையைப் புறங்காணத் தும்பைமாலைசூடி, கொல்லும் போர்த்தொழில்செய்தார்கள். எ-று.

கடலுடைந் தென்னப் பொன்னிக் காவலன் றானை சாய
மடலுடை வாகை வேய்ந்து வளவனை மருக னோடு
மிடலுடைத் தறுகட் சேனை வீரர்வெங் கையாற் பற்றி
யடலுடைக் கன்னி நாடர்க் கரசன்முன் கொண்டு போந்தார்.

(இ-ள்.) கடற்பெருக்குக்குலைந்து சென்றாற்போல, காவிரிநாட்டையுடைய சோழன் சேனைபுறங்கொடுக்க, இதழ்கள் நெருங்கிய வாகைமாலைசூடி, அச்சோழனை

அவன் மருகனாகிய இராஜசிங்கபாண்டியனோடு, வன்மையையுடைய அஞ்சாமையைக் கொண்ட பாண்டியன் சேனாவீரர் தமது வலிய கைகளாற் பிடித்து 'வெற்றியுடைய பாண்டிநாட்டார்க்கு அரசனாகிய இராஜேந்திர பாண்டியன் முன் கொண்டுபோனார்கள். எ-று.

"போர்க்களத்துமிக்கோர் செருவென்றது வாகையாம்" என்றபடி வாகைமாலை வெற்றிகுறித்தது. (கூச)

கொடுவந்த வளவன் றன்னைக் கோப்பெருஞ் செழியர் கோமான்
வடுவந்த தம்பி யோடு மாடநீள் கூடன் மேய
கடுவந்த மிடற்றான் முன்போய் விடுத்தெந்தை கருத்தே தென்ன
நடுவந்த நிலையான் கேட்ப நாயக னிகழ்த்து மன்னோ.

(இ-ள்.) (சேனாவீரர்பற்றிக்) கொண்டுவந்த காடுவெட்டிய சோழனை அரசியலையுடைய பெரியபாண்டியருட்சிறந்த இராஜேந்திர பாண்டியன் (தன்குலத்திற்கு) குற்றம் வருவித்த தம்பியோடு, மாடங்களுயர்ந்த மதுராபுரியிலெழுந்தருளிய சுந்தரேசப்பெருமான் சந்நிதியிற்போய்விடுத்து, எந்தையே! நின்திருவுளம் யாது? எனவினவி, நடுநிலையையுடைய அப்பாண்டியன்குறையிரக்க, சோமசுந்தரக்கடவுள் கூறுகின்றார்.

வடுவந்த தம்பியென்றது தன் மூத்தோனுக்கு என நியமித்த பெண் தனை தன்னையெனக் கருதாது தான் மணந்ததும், தமயன் அரசியலைக் கைக்கொள்ளக் கருதிப் போர்க்கெழுந்து வந்ததும்பற்றி யென்க. (கூரு)

அறவனீ யல்லை யோவுன் னகத்தினுக் கிசைந்த செய்கென்
றிறைவன தருளால் வானின் றெழுமொழி கேட்டு வைகைத்
துறைவனு மறத்தி னாற்றற் சோழனைச் சிலமால் யானை
மறவயப் பரிபூண் மற்றும் வழங்கினன் விடுத்தான் பின்னர்

(இ-ள்.) நீ மனுமுறை தவறாதவனன்றோ? உன் மனதிற் கிசைந்த காரியஞ் செய்கவென்று பெருமான் திருவருளால் ஆகாயத்தினின்றெழும் அசரீரியைக் கேட்டு, வைகைத்துறையை யுடைய பாண்டியனும் மனுமுறையால், காடுவெட்டிய சோழனுக்கு, மதமயக்கத்தையுடைய சில யானைகளையும், வெற்றியையும் வன்மையையுமுடைய சில குதிரைகளையும் ஆபரணங்களையும் பிறவற்றையுங் கொடுத்தனுப்பினான்; பின்பு. எ-று. (கூகா)

வள்ளற்றன் றம்பி யென்னு மன்னவர் சிங்கந் தன்னைத்
தள்ளருந் தறுக ணாண்மைத் தருக்கறத் தானுள் செல்வ
முள்ளன சிறிது மாற்றி யொதுக்கியெவ் வுயிர்க்குந் தாயாய்ப்
பள்ளநீ ருலகங் காத்துப் பல்வளம் பழுக்க வாழ்ந்தான்

(இ-ள்.) இராஜேந்திர பாண்டியன் தனது தம்பியாகிய அரசசிங்கத்தை, நீங்குதலில்லாத அஞ்சாமையும் ஆண்மைச்செருக்கும் (அவனுக்கு) நீங்க, தானுளுஞ் செல்வத்திற் சிறிது கொடுத்து விலக்கி, எல்லா வுயிர்கட்குந் தான் தாயாகி, கடல் சூழ்ந்த நிலவுலகத்தைக் காத்து, பல வளங்களும் (தனது குடிகட்கு) கைகூடி வாழத் தானும் வாழ்ந்திருந்தான். எ-று. (கூஎ)

தண்ணீர்ப்பந்தல் வைத்த படலம்,

முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - கஅருசு.

சிவமயம்.

முப்பத்தாறுவது,

# இரசவாதஞ்செய்த படலம்.

கலிநிலைத்துறை.

வரதன், மீனவன் படையிடை வந்துநீர்ப் பந்தர்
விரத ளுகிநீ ரருத்திய வினையுரை செய்தும்
பரத நூலிய னுடகப் பாவையா ளொருத்திக்
கிரத வாதஞ்செய் தருளிய வாடலை யிசைப்பாம்.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுள் வலிய மீனக்கொடி தாங்கிய பாண்டியன் சேனையிடையே வந்து தண்ணீர்ப்பந்தல் வைத்தவராகி, (யுத்தத்தில் சோர்வடைந்த பாண்டியன் சேனைக்கு) தண்ணீர் உதவிய திருவிளையாடலைச் சொன்னோம். பரத நூலிற்கூறிய முறைப்படி நடனத்தொழில்புரியும் பதுமைபோன்ற ஒப்பற்ற பொன்னனையாளுக்கு இரசவாதஞ்செய்தருளிய திருவிளையாடலை (யான் இனி) கூறுவாம்.

நடனம் பரதநூற்பிரிவுகளி லொன்றாதலின் "பரதநூலியனுடகம்" எனக் கூறப்பட்டது. (க)

பருங்கை மால்வரைப் பூழியன் பைந்தமிழ் நாட்டி
னிரங்கு தெண்டிரைக் கரங்களா லீர்ம்புனல் வைகை
மருங்கி னந்தன மலர்ந்தபன் மலர்கடூஉய்ப் பணியப்
புரங்க டந்தவ னிருப்பது பூவண நகரம்.

(இ-ள்.) பருத்த கையையும் மதமயக்கத்தையுமுடைய யானைச்சேனையை யுடைய பாண்டியனது பசியதமிழ்நாட்டில், குளிர்ந்தநீரையுடைய வைகைநதியானது ஒலிக்கின்ற தெள்ளிய அலைகளாகிய கரங்களால் அருகிலுள்ள நந்தவனங்கள் புட்பித்த பல மலர்களா லருச்சித்துப் பணியும்படி, திரபுரங்களை யெரித்தருளிய சிவபெருமான் வீற்றிருப்பது திருப்பூவணமென்னும் நகரம். எ-று. (உ)

எண்ணி லங்குறை சராசர மிலிங்கமென் றெண்ண
விண்ணி னுள்களுங் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னுன்கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில்.

(இ-ள்.) அங்கு வசிக்குங் கணக்கில்லாத சராசரங்கள் யாவும் சிவலிங்கக் குறிகளென் றெண்ணி, ஆகாயத்திற் சஞ்சரிக்கும் நக்ஷத்திரங்களும் கிரகங்களும் பிரதக்ஷிணஞ்செய்யும்படியுள்ளது. இந்திரன் சூரியன் முதலிய பலதேவர்கள் சிவபூசை செய்து (தமக்கு) வேண்டிய நல்லவரங்களை (முற்காலத்தில்) அப்பதியிலடைந்தனர். எ-று.

யாக்கை கண்ணினுன்-உடல்முழுவதுங் கண்களையுடையவன். முன்னொரு காலத்தில் இந்திரன் கௌதமமுனிவர் பன்னியைக் களவிற்புணர்ந்தபொழுது, அஃதுணர்ந்த முனிவர் வெகுண்டு, யோனியை விரும்பிய நீ உடல்முழுதும் அதனை

யடைகவெனச் சபிக்க, அவ்வாறே பெண்குறி தேகமுழுவதும் [illegible] முற்று அமராபதியை யடைந்து மறைந்து வாழ்ந்திருக்கையில், [illegible]ாக்கள் தங்கட்கரசனைக் காணமுடியாது விஷயத்தையுணர்ந்து இந்திரனுடன் முனிவர்பாலடைந்து அஃதொழியும்வண்ணமாக அருள்செய்கவென விண்ணப்பித்து முறையிட, கௌதமர், இந்திரா! அவை உனக்கு யோனிகளாகவும் மற்றையோர்க்குக்கண்களாகவும் புலப்படுக எனச் சாபாநுக்கிரகஞ் செய்தனரென்பது புராணவரலாறு. (ரு)

கிளியு ளார்பொழிற் பூவணக் கிழவர்தங் கோயிற்
றளியு ளார்தவப் பேறனை யாதுகு பூந்தா
ரளியு ளார்குழ லணங்கனை ளந்தரத் தவர்க்குங்
களியு ளார்தர மயக்குறூஉங் கடலமு தனையாள்.

(இ-ள்.) கிளிகள் தன்னுள்ளே நிறைந்து வாழுஞ் சோலை சூழ்ந்த திருப்பூவணத்தி லெழுந்தருளிய சிவபெருமானார் திருக்கோயிற் பரத்தையர்கள் (செய்த) தவப்பலன்போன்றவளும், மகரந்தஞ் சிந்தும் மலர்மாலையில் வண்டுகளுள்ளே பொருந்தி யிசைபாடும் அணங்குபோன்றவளும், தேவர்களுக்கும் மனக்களிப்புமிக மயக்குங்கடலிற்றோன்றிய அமுதத்தை யொத்தவளும். எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம்.

அணங்கு-கொல்லியம்பாவை. (சு)

நரம்பி னேழிசை யாழிசைப் பாடலு நடநூ
னிரம்பு மாடலும் பெண்ணல நீர்மையும் பிறவு
மரம்பை மாதரை யொத்தன ளறனெறி யொழுகும்
வரம்பி னுலவர் தமக்குமே லாயினள் மன்னோ.

(இ-ள்.) தந்திகளா லுண்டாகிய சத்த சுரங்களை யுடைய வீணைகானமும், இசைப்பாடலும், (பரதசாஸ்திர) நடனநூலிற் கூறிய முறையை நிரம்பிய நடனமும், பெண்இலக்கணத்தன்மையும், பிறவும், தேவஸ்திரீகளை யொப்பப் பெற்றுள்ளவளும், தருமமார்க்கத்தில் நடக்கும்நடத்தையினால் அவ்வரம்பாஸதிரீகளுக்குமேலானவளும்.

ஆய மாதர்பேர் பொன்னனை யாளென்ப வவ
ளேய வாயமோ டிரவிரு ணீங்குமு னெழுந்து
தூய நீர்குடைந் துயிர்புரை சுடர்மதிக் கண்ணி
நாய னூரடி யருச்சனை நியமமுங் நடத்தி.

(இ-ள்.) ஆகிய இவள் பெயர் பொன்னனையாளென்று சொல்லுவர். அவள் தன்னுடைய அன்புபொருந்திய மங்கையர்கூட்டத்துடன் இரவின் இருள் புலருமுன்னர் நித்திரையினின்றெழுந்து, புனிதமாகிய(பொற்றாமரை தீர்த்தத்தில்) நீராடி, உயிர்போன்ற பிரகாசிக்கின்ற சந்திரனைச் சிரோமாலையாகவணிந்த சோமசுந்தரக்கடவுளுடைய பூசனைக் கடனை முடித்து. எ-று. (க)

திருத்தர் பூவண வாணரைச் சேவித்துச் சுத்த
நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்
கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவின் சுவையூ
ணருத்தி யெஞ்சிய தருந்துவா ளஃதவ ணியமம்.

(இ-ள்.) புனிதராகிய திருப்பூவணநாதனைத் தரிசித்துக் குற்றமில்லாத (இலக்கண மமைந்த) நடனஞ்செய்துவந்து, சிவனடியவர்களையே உண்மைப்பொருளென்று கருதும் மனமுடையவளாய் (அவர்களைப்) பூசித்து அவ் வடியவர் களிப்பெய்தும்படி இனிய சுவையுடன் கூடிய அமுதத்தை யுண்பித்து, மிகுந்தவற்றைப் புசிப்பாள். அது அவளது நியமம். எ-று. (எ)

மாத ரிந்நெறி வழங்குநாண் மற்றவ ளன்பைப்
பூம ிடைத் தெருட்டுவான் பொன்மலை வல்லி
காத லுயகன் றிருவுருக் காணிய வுள்ளத்
தாத ரங்கொடுத் தருளினுர் பூவணத் தையர்.

(இ-ள்.) அழகிய இவ்வண்ணமே நடந்துவருங்காலத்தில், அப்பொன்னனை யாளது பக்தியை உலகத்தி லுள்ளவர்கட் குணர்த்தும்படி, அழகிய மலைவல்லியாகிய பார்ப்பதிக்கு நாயகராகிய திருப்புஷ்பவனநாதருடைய திருவுருவஞ் சமைக்கும்படி, புஷ்பவனநாதர் அவள் மனதில் ஆசைகொடுத்தருளினர். எ-று.

காணிய வென்பது செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இதற்குக் காணவென்பதுபொருள். (அ)

ஐயர் தந்தபே ரன்புரு வாயினுண் மழுமான்
கையர் தந்திரு வுருவினைக் கருவினுற் கண்டு
மைய கண்ணினுள் வைகலும் வருபொரு ளெல்லாம்
பொய்யி லன்புகொண் டன்பர்பாற் பூசையி னேர்வாள்.

(இ-ள்.) மையிட்டிய கண்களையுடைய பொன்னனையாள் சிவபெருமான் கொடுத்தருளிய சிறந்த அன்புருவமாய்,மழுப்படையையும் மானையுந் திருக்கரத்தேந்திய சிவபெருமானதுதிருவுருவத்தைக் கருக்கட்டி, நாள்தோறும் தனக்குவரும் பொருள்முழுவதையும் உண்மையாகிய அன்புடன் அடியவர் பூசையிற் செலவுசெய்து வருவாளாயினள். எ-று.

கருவினுற்கண்டு என்றது திருவுருவவிக்கிரகஞ்செய்யவேண்டுவோர் முன்னர் மெழுக்கினுற் செய்து அதுபோலவே வார்ப்பிக்கவேண்டுதலின், ஈண்டு மெழுக்குருவத்தை யுணர்த்தியது ; இதனைக் கருக்கட்டி யென்றும். (க)

அடியர் பூசனைக் கன்றியெஞ் சாமையா லடிகள்
வடிவு காண்பதெப் படியென்று மடியிலச் செழியற்
கொடிவில் பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னிப்
பிடிய னுளிருந் தாளஃ தறிந்தனன் பெருமான்.

(இ-ள்.) பிடியானைபோலும் நடையினையுடைய பொன்னனையாள் சிவனடியர் பூசைக்கல்லாமல் (பொருள்) மிகுதிப்படாமையால், சிவபெருமான் திருவுருவைச் சமைப்பதெவ்வாறென்று, (சிவநேயத்திற்)குறைவில்லாத அக்குலபூஷணபாண்டியனுக்கு எடுக்கக் குறையாத பொற்கிழி யருளிய சோமசுந்தரப்பெருமானைத் தியானித்து இருந்தனள். அப்பெருமான் அவளது கருத்தை யுணர்ந்தனர். எ-று. (க0)

தூய்ய நீறணி மெய்யினர் கட்டங்கந் தொட்ட
கையர் யோகபட் டத்திடைக் கட்டினர் பூதிப்
பையர் கோவண மிசையசை யுடையினர் பவளச்
செய்ய வேணிய ரங்கொரு சித்தராய் வருவார்.

(இ-ள்) புனிதமாகிய திருவெண்ணீற்றினையணிந்த திருமேனியை யுடையவரும், மழுப் படைதாங்கிய கையையுடையவரும், யோகப்பட்ட மணிந்த இடையையுடையவரும், திருநீற்றுப்பையை யுடையவரும், கோவணமீதுடுத்த ஆடையை யுடையவரும், பவளம்போலச் செவந்த சடையை யுடையவருமாய், அவ்விடத்தில் ஒரு சித்தமூர்த்தியாய் எழுந்தருளுவார். எ-று. (கக)

வந்து பொன்னனை யாண்மணி மாளிகை குறுகி
யந்த மின்றிவந் தமுதுசெய் வாரொடு மணுகிச்
சிந்தை வேறுகொண் டடைந்தவர் திருவமு தருந்தா
தந்து மாளிகைப் புறங்கடை யொருசிறை யிருந்தார்.

(இ-ள்.) (அவ்வகை வடிவேற்று) வந்து பொன்னனையாளுடைய அழகிய வீட்டினைச் சமீபித்து, கணக்கில்லாதுவந்து திருவமுதுகொள்ளும் அடியாரோடும் வந்து, திருவுள்ளத்தில் மற்றொன்று கருதிப்போந்த சித்தமூர்த்திகள் திருவமுதருந்தாது, ஒளிவீசும் மாளிகையின் கடைவாயிலில் ஒருபுறத்திலிருந்தனர். எ-று.

சிந்தைவேறுகொண் டடைந்தவர் என்பது பொன்னனையாள் வீட்டிலுள்ள உலோகங்களைப் பொன்னாக்கித் 'தமது திருவுருவஞ் சமைத்தற்குக் கொடுத்தருள வந்தமையின் என்க. (கஉ)

அமுது செய்தருந் தவரொலா மகலவே றிருந்த
வமுத வாரியை யடிபணிந் தடிச்சிய ரைய
வமுது செய்வதற் குள்ளெழுந் தருள்கென வுங்க
ளமுத னுளையிங் கழைமினென் றருளலு மனையார்.

(இ-ள்.) அருந்தவமுடைய அடியவர் யாவருந் திருவமுதுசெய்து செல்ல, வேற்றிடத்திலிருந்த அமுதக்கடலாகிய சித்தமூர்த்தியைக் குற்றேவல்செய்யுந் தாதியர் திருவடிபணிந்து, ஐயனே! திருவமுது செய்தற்கு உள்ளெழுந்தருளவேண்டும்; என வேண்ட, உங்கள் அமுதம்போன்ற பொன்னனையாளை இங்கழையுங்கள் எனக் கூறியருள, அப்பணிப்பெண்கள். எ-று. (கங)

முத்த ராமுகிழ் வாணகை யல்குலாய் முக்க
ணத்த ரானவர் தமரொலா மமுதுசெய் தகன்றார்
சித்த ராயொரு தம்பிரான் சிறுநகை யினரா
யித்த ராதலத் தரியரா யிருக்கின்றா ரொன்றார்.

(இ-ள்.) முத்துப்போன்ற ஒள்ளிய புன்னகையையும் பாம்பின் படம்போன்ற அல்குலையு முடைய தலைவியே! திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானது அடியவர் யாவரும் திருவமுதுசெய்து சென்றருளினார்கள். (அதில்) சித்தமூர்த்திகளாய்வந்த ஒருதம்பிரானார் புன்னகையுடையராய் இந்நிலவுலகிற் கிடைத்தற்கரியராய் இருக்கின்றனரென்று கூறினர். எ-று. (கச)

நவம ணிக்கலன் பூத்தபூங் கொம்பரி னடந்து
துவரி தழ்க்கனி வாயினாள் சுவாகதங் கிலவென்
றுவமை யற்றவர்க் கருக்கிய மாசன முதவிப்
பவம கற்றிய வடிமலர் முடியுறப் பணிந்தாள்.

(இ-ள்.) நவரத்தினங்களிழைத்த ஆபரணங்கள்விகசித்த பூங்கொம்புபோல நடந்து பவளம்போன்ற இதழையுடைய கோவைக்கனிபோன்ற தனது வாயால் (உமது வரவு) நல்வரவாமென்று, ஒப்பில்லாத சித்தமூர்த்திகளுக்கு அருக்கியமும் ஆசனமுங் கொடுத்து (அடியவர்) பிறப்பை யகற்றுந் திருவடித்தாமரையைத் தனது தலையானது சூடும்படி பணிந்தனள். எ-று.

'ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்றதனால், அருக்கியம் என்பதற் கேற்ப, பாத்தியம் ஆசமனியமுங் கொள்க. (கரு)

---

சு + ஆகதம் + கில - நல்ல வரவு அல்லவா.

எத்த வஞ்செய்தே னிங்கெழுந் தருளுதற் கென்னுச்
சித்தர் மேனியும் படிவெழிற் செல்வமு நோக்கி
முத்த வாணகை யரும்பநின் றஞ்சலி முகிழ்ப்ப
வத்தர் நோக்கினு ரருட்கணு லருள்வலைப் பட்டாள்.

(இ-ள்.) சித்தமூர்த்திகளது திருவருட் பார்வையால் அவர் அருள்வலையி லகப்பட்ட பொன்னனையாள், தேவரீர் அடியேன் சிறுகுடிலுக் கெழுந்தருள யாதுதவ ஞ்செய்தேனென்று, சித்தமூர்த்திகள் திருமேனியையும் திருவுருவத்தின் அழகின் பெருக்கையும் பார்த்து, முத்துப்போன்ற ஒள்ளிய புன்னகை தோன்ற நின்று தனது கரங்குவிக்க, சித்தமூர்த்திகள் பார்த்தருளினர். எ-று. (கசு)

ஐய ருள்ளெழுந் தருளுக வடிகணீ ரடியே
னுய்ய வேண்டிய பணிதிரு வுளத்தினுக் கிசையச்
செய்ய வல்லனென் றஞ்சலி செய்யவுண் ணகையா
மைய னோக்கியை நோக்கிமீ னோக்கிதன் மணாளன்.

(இ-ள்.) அடிகளே! தேவரீர் உள்ளெழுந்தருளக்கடவீர்; அடியேன் உச்சிவிக்கவேண்டிய பணிவிடையைத் தேவரீர் திருவுள்ளத்திற்குப் பொருந்தச் செய்யக் கடவேன் எனக் கைகூப்ப, வாயுள்ளே புன்னகை யரும்பி அங்கயற்கண்ணியார் தலைவராகிய சோமசுந்தரக்கடவுள் பிறர்க்கு மையல்பூட்டும் பார்வையுடைய பொன்னனையாளைப் பார்த்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

ஐய்-அசைநிலை. (கஎ)

வடியை நேர்விழி யாய்பெரு வனப்பினை சிறிதுன்
கொடியை நேரிடை யெனவிளைத் தனையெனக் கொன்றை
முடியி னடி யாரமென் முகிழ்முலைக் கொடிதாழ்ந்
தடிய னேற்குவே றுயொரு மெலிவிலை யையா.

(இ-ள்.) மாவடுவின் பிளவுபோன்ற கண்களை யுடையாய்! பேரழகினை யுடையாய்! உன் கொடிபோன்ற இடையைப்போலச் சிறிது இளைத்திருக்கின்றனை (யாதுகாரணம்?) என, மெல்லிய அரும்பாகிய தனமுகிழ்த்த பூங்கொடி போன்ற அப் பொன்னனையாள் கொன்றைமலரணிந்த சடைமுடியை யுடைய சித்தமூர்த்திகளின் திருவடியைப் பொருந்த வணங்கி, ஐயனே! அடியேனுக்கு வேறாக ஒருகுறையில்லை. எ-று. (கஅ)

எங்க ளையகர் திருவுருக் காண்பதற் கிதயந்
தங்கு மாசையாற் கருவுருச் சமைத்தனன் முடிப்பேற்
கிங்கு நாடொறு மென்கையில் வரும்பொரு ளெல்லா
முங்கள் பூசைக்கே யல்லதை யொழிந்தில வென்றாள்.

(இ-ள்.) எங்க ளிறைவராகிய சிவபெருமானார் திருவுருவுஞ் சமைக்க என் மனதிற்பொருந்திய விருப்பத்தாற் கருக்கட்டி, முடிக்கக்கருதிய வெனக்கு இவ்விடத்து நாடோறும் என் கைம்முயற்சியால் வரும் பொருள்களியாவும் உங்கள் பூசைக்கே யன்றி, சேடமானவை யில்லையென்று கூறினள். எ-று. (கக)

அருந்து நல்லமு தனையவ ளன்புதித் திக்க
திருந்து தேனென விரங்குசொற் செவிமடுத் தையர்
முருந்து மூரலாய் செல்வமெய் யிளமைநீர் மொக்கு
ளிருந்த வெல்லையு நிலையில வென்பது துணிந்தாய்.

(இ-ள்.) உண்ணும் இனிய அமுதம்போன்ற உருவத்தையுடையவள் தனது அன்பு கைகூட, வடித்த தேன் சுவைபோல இசைக்குஞ் சொல்லைக் கேட்டு, சித்த மூர்த்திகள், முருந்து போன்ற பற்களையுடையவளே! செல்வமும் சரீரமும் இளமையும் நீரிற்றோன்றிய குமிழிநின்ற அளவும் நிற்கும் அளவினவல்ல என்பதை நீ உணர்ந்திருக்கிறாய். எ-று.

முருந்து - மயிலிறகின் அடி.

அடியவர் பூசைப்பேறே நிலையுடையதெனக் கருதியவளாதலின் "செல்வ மெய்யிளமை நீர்மொக்கு-ளிருந்த வெல்லையு நிலையிலவென்பது துணிந்தாய்" என்றார்.

அதிகநல்லற நிற்பதென் றறிந்தனை யறத்து
ளதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்று
ளதிகமாஞ்சிவ பூசையு ளடியவர் பூசை
யதிகமென்றறிந் தன்பரை யருச்சனை செய்வாய்.

(இ-ள்.) சிறந்த நல்ல தருமமே நிலையுள்ள தென்றறிந்தாய்: அப்புண்ணியத்துட் சிவபுண்ணியங்கள் மேம்பட்டனவாம். அச்சிவபுண்ணியங்களுள் சிவார்ச்சனை மேம்பட்டதாம். அச்சிவபூசையுள் அடியவர் பூசை மேம்பட்டதென்று அறிந்து, சிவனடியவரை (நாடோறும்) அருச்சனை செய்துவருகின்றாய். எ-று.

சிவபுண்ணியம்பத்து இதனை,

"அயிங்கிதை பொறையே மெய்மை யறைதலே யரிய நாணே
உயர்ந்தவா தரவே யுள்ள மொடுக்கலே கொடுக்கை தானே
வியந்தவர்ச் சனையே மெய்யூன் வெறுத்துறு தவமே மேனி
நயந்தபா வனையே யென்னத் தசமிவை நன்றெந் நாளும்"—என்பதனாலும்,

அடியவர் பூசை யதிகம் என்பதை,

"படியி னூலின் படியிப் படியிடை
முடிவி லன்பு முதிருபு ளுற்றும்வெண்
பொடிகொண் மேனியன் பூசையி னும்மவ
னடியர் பூசை யதிக மதிகமே."—என்பதனானு மறிக. (உக)

உறுதி யெய்தினை யிருமையு முன்செயற் கேற்ப
விறுதி யில்லவன் றிருவுரு வீகையாற் காணப்
பெறுதி யாகநின் மனைக்கிடைப் பித்தளை யீய
மறுதி யானபல் கலன்களுங் கொணர்தியென் றறைந்தார்.

(இ-ள்.) இம்மைக்கும் மறுமைக்கும் உரிய பயனை யடைந்தாய். உனது பெயருக்கேற்ப, தமக்கோரிறுதியில்லாத பெருமானார் திருவுருவத்தைப் பொன்னாற் செய்யப் பெறும்படி உன் மனையிற் கிடக்கும் பித்தளை ஈயம் முதலான உலோகங்களாற் செய்த பல பாத்திரங்களையுங் கொண்டு வருவாயென்று கூறியருளினர். எ-று.

ஈயஞ் செம்பிரும் பிரசித மென்பவும் புணர்ப்பாற்
றோயும் பித்தளை வெண்கலந் தராமுதற் றொடக்கத்
தாயும் பல்வகை யுலோகமுங் கல்லெனு வலம்பத்
தேயுஞ் சிற்றிடை கொண்டுபோய்ச் சித்தர்முன் வைத்தாள்.

(இ-ள்.) ஈயமுஞ் செம்பும் இரும்பும் வெள்ளியும் என்று சொல்லப்படுவனவும் (ஒன்றோடொன்றின்) சம்பந்தத்தாலாகிய பித்தளையும் வெண்கலமுந் தராவுமாகிய தொடக்கத்தையுடைய ஆராயும் பலவகைப்பட்ட உலோகங்களும் கல்லென்றொலி

க்க, மெலிந்த சிறிய இடையையுடைய பொன்னனையாள் கொண்டு சென்று சித்த மூர்த்திகள் திருமுன் வைத்தனள். எ-று.

கல்லென வலம்பத்தேயுஞ் சிற்றிடை யென்றதால் தான் கொண்ட கருத்து முற்றியதென்னுங் குறிப்புத் தோன்றியது. (உரு)

வைத்த் வேறுவே றுலோகமு மழுவுமை கரந்த
சித்த சாமிக ணீற்றினைச் சிதறினர் பாவித்
தித்தை நீயிரா வெரியிலிட் டெடுக்கினன் பொன்னு
மத்தை நாயகன் றிருவுருக் கொள்கென வறைந்தார்.

(இ-ள்.) மழுவையு மானையு மொளித்துவந்தருளிய சித்த மூர்த்திகள் (பொன்னனையாள்) வைத்த பல வேறு வகைப்பட்ட உலோகங்களின் மீதும் (பொன்னாகக்கடவது என்று) திருவுளஞ் செய்து திருநீற்றைத் தெளித்து, இவ்வுலோகத்தை நீ இரவிற் புடம்போட்டெடுத்தால் மாற்றுயர்ந்த பொன்னாகும்; அதனால் சிவபெருமான் திருவுருவத்தைச் செய்யக்கடவாயென்று கூறி யருளினர். எ-று.

சிதறினரொன்னும் வினைமுற்று வினையெச்சப் பொருளது. (உசு)

மங்கை பாகரை,மடந்தையு மிங்குநீர் வதிந்து
கங்குல் வாயமு தருந்தியிக் காரிய முடித்துப்
பொங்கு காரிருள் புலருமுன் போமெனப் புகன்றா
ளங்க யற்கணு டனைப்பிரி யாரதற் கிசையார்.

(இ-ள்.) உமாதேவியாரை வாமபாகத்திலுடைய பெருமானாரைப் பொன்னனையாளும், இவ்விடத்தில் நீர் தங்கியருளி இராப்போது திருவமுதுசெய்து இந்தக் காரியத்தை முடித்து, மிக்க கரிய இருட்போது புலர்வதற்கு முன் எழுந்தருளும் என்று வணங்கிக் கூறினள். அங்கயற்கண்ணம்மையாரைப் பிரியாத அப்பெருமானார் அவ்வார்த்தைக் குடன்படாது. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (உஎ)

சிறந்த மாடநீண் மதுரையிற் சித்தர்யா மென்று
மறைந்து போயினர் மறைந்தபின் சித்தராய் வந்தா
ரறைந்த வார்கழ லலம்பிட வெள்ளிமன் றுடி
நிறைந்த பேரொளி யாயுறை நிருத்தரென் றறிந்தாள்.

(இ-ள்.) சிறப்புற்ற மாடங்கள் பொருந்திய மதுரைத் திருநகரிலுள்ள சித்தமூர்த்திகள் யாமென்று திருவுருவ மறைந்தருளினர். மறைந்தருளியபின் சித்த மூர்த்திகளாய் வந்த பெருமானார் சத்திக்கின்ற நெடிய வீரக்கழலொலிக்க வெள்ளியம்பலத்தில் திருநடனஞ் செய்து நிறைந்த பெருஞ்சோதியா யெழுந்தருளிய திருத்தாண்டவ மூர்த்திகள் என்று (பொன்னனையாள்) அறிந்தனள். எ-று. (உஅ)

மறைந்து போயினா ரெனச்சிறி தயர்ச்சியு மனத்தி
னிறைந்த தோர்பெருங் கவற்சியை நீக்கினா ளென்னுச்
சிறந்த தோர்பெரு மகிழ்ச்சியு முடையளாய்ச் சித்த
ரறைந்த வாறுதீப் பெய்தன ளுலோகங்க ளனைத்தும்.

(இ-ள்.) மறைந்து சென்றருளினரெனச் சிறிது துன்பத்தையும் (திருவுருவ முடியாமையால் என்றும்) தன் மனதில் நிறைந்துள்ள துன்பத்தை நீக்கியருளினாரென்று மேலெழுந்தோங்கிய ஒப்பில்லாத பெருமகிழ்ச்சியையு முடையளாகி, சித்தமூர்த்திகள் கூறியருளிய வண்ணம் உலோகங்களை யெல்லாந் தீயிற் புடம் போட்டனள்.

அழல டைந்தபி னிருண்மல வலிதிரிந் தரன்ற
ணிழல டைந்தவர் காட்சிபோ னீப்பருங் களங்கங்
கழல வாடக மானதா லதுகொண்டு கனிந்த
மழலை யீர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம்.

(இ-ள்.) சிவபெருமானது திருவடிநீழலை யடைந்த மெய்யன்பர் ஆணவமலத்தின் வலிமை கெட்ட தோற்றம்போல (உலோகம்) நெருப்பினைச் சேர்ந்தபிறகு நீங்காத மாசுகழியப் பொன்னாகியது. சுவைபழுத்த நுண்ணிய மழலைச் சொல்லையுடைய பொன்னனையாள் அப்பொன்னினைக் கொண்டு உருவமில்லாத சிவ்பெருமானுக்கோர் திருவுருவத்தை வார்த்தனள். எ-று. (உஅ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கி யச்சோ
வழகிய பிரானோ வென்று வள்ளிமுத் தங்கொண் டன்பிற்
பழகிய பரனை யானுப் பரிவினாற் பதிட்டை செய்து
விழவுதேர் நடத்திச் சின்னாள் கழிந்தபின் வீடு பெற்றாள்.

(இ-ள்.) இளமை வாய்ந்த இடபவாகனத்தையுடைய பெருமானார் திருவுருவத்தின் பொலிவைப்பார்த்து, (தனது கைகளால் திருக்கன்னத்தை) அள்ளி முத்தமிட்டுத் தனது மெய்யன்பில் இடைவிடாதிருந்த சிவபெருமானை நீங்காத பேரன்பினால் பிரதிட்டை செய்து நித்த நைமித்திய மகோற்சவாதிகள் நடத்தி இவ்வாறு சில நாள் கழிந்தபின்பு சிவகதி யடைந்தனள். எ-று.

அச்சோ என்றது வியப்பிடைச்சொல். (உகூ)

நையுநுண் ணிடையி னாளங் நாயகன் கபோலத் திட்ட
கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு
வெய்யவெங் கதிர்கால் செம்பொன் மேனிவே றாகி நாலாம்
பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகிமன்னும்.

(இ-ள்.) இளைத்த நுண்ணிய இடையையுடைய அப்பொன்னனையாள் அப்பெருமானுடைய கன்னத்திலள்ளிய நகக்குறியையும் அழகிய பிரானோவென்று சொல்லிய காரணக்குறியையுங் கொண்டு, விரும்பத்தக்க சூரியன்போலக் கிரணத்தை வீசுஞ் செம்பொன்னாலாகிய திருமேனி வேறுபட்டுக் கலியுகத்தவற்குத் தக்க பொருந்திய திருவுருவமாகி எழுந்தருளி யிருக்கின்றனர். எ-று.

அப்பெருமானுக்கு இப்பொழுதும் நகக்குறி மன்னும் எனவும், திருநாமம் பொன்னனையாள் கூறியபடியே அழகிய பிரானெனவே மன்னும் எனவுங் கொள்க.

இரசவாதஞ் செய்தபடலம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅஅசு.

---



சோழனை மடுவில்வீட்டிய படலம்.

சிவமயம்.

முப்பத்தேழாவது,

# சோழனை மடுவில் வீட்டிய படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மின்னனை யார்பூங் கொன்றை வேணிய ரிரத வாதம்
பொன்னனை யாண்முன் செய்து போந்தது புகன்றே மார்த்தார்
மன்னனை மடுவில் வீட்டி மலரடிக் கன்பனை
தென்னனை யமரிற் காத்த திருவிளை யாடல் சொல்வாம்.

(இ-ள்.) மின்னல் போன்ற ஆத்திமாலையும் அழகிய கொன்றைமாலையும் அணிந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள் பொன்னனையாள்முன் இரசவாதஞ்செய்து சென்றருளிய திருவிளையாடலைக்கூறினோம். ஆத்திமாலையணிந்த சோழனை மடுவில் தள்ளி, தாமரைமலர்போன்ற தமது திருவடிக்கு அன்பனாகிய சுந்தரேசபாதசேகரபாண்டியனைப் போரிற் காத்தருளிய திருவிளையாடலை (யாம் இனி) கூறுவாம். எ-று.

மின்னனையார் என்றதற்கு ஈண்டு மின்னல்போலத் தோன்றி மறைந்தருளினமை நோக்கிக் கூறினதாகப் பொருள் உரைப்பினும் பொருந்தும்.

அனைய என்னும் குறிப்புவினைப்பெயரெச்சத்தின் அகரவீறு தொக்கது.

பொன்னெடுந் தேரி ராச புரந்தரன் புரந்த ரரதி
பன்னெடுந் தேவ ரேத்தப் பரனுல கடைந்தா னிப்பா
லந்நெடுந் தகையோன் மைந்த னடலிரா சேச னென்போ
னிந்நெடுந் தகையோன் மைந்த னிராசகம் பீர னென்போன்.

(இ-ள்.) பொன்னாலாகிய பெரிய தேரையுடைய இராசேந்திரபாண்டியன் இந்திரன் முதலிய பல தேவர்களுந் துதிக்கச் சிவலோகத்தை யடைந்தனன். இப்புறம் அப்பெருந்தகைமையுடைய இராசேந்திரபாண்டியன் புத்திரன் வெற்றியையுடைய இராசேசபாண்டியனென்று சொல்லப்படுவோன். இந்த இராசேசபாண்டியனுடைய புத்திரன் இராசகம்பீரபாண்டியனென்று சொல்லப்படுவோன். எ-று. (உ)

மற்றிவன் குமரன் பாண்டி வங்கிய தீப னன்னோன்
பொற்றிணி தடந்தோண் மைந்தன் புரந்தர சித்தா மன்னோன்
வெற்றிகொள் குமரன் பாண்டி வங்கிய பதாகன் வீரம்
பற்றிய சுந்த ரேச பாதசே கரன வன்சேய்.

(இ-ள்.) இந்த இராசகம்பீர பாண்டியனுடைய புத்திரன் பாண்டியவங்கிய தீபபாண்டியனென்று சொல்லப்படுவோன். அவனுடைய பொன்னிறம்வாய்ந்த திண்ணிய தோளையுடைய புத்திரன் புரந்தரசித்துப்பாண்டியனும். அந்த புரந்தரசித்துப் பாண்டியனுடைய வெற்றிகொண்ட புத்திரன் பாண்டிவங்கியபதாகபாண்டியனென்று சொல்லப்படுவோன். அவனுடைய புத்திரன் வீரமிக்க சுந்தரேசபாதசேகர பாண்டியனென்று சொல்லப்படுவோன். எ-று.

புருந்தரசித்தபாண்டியன் உக்கிரகுமாரபாண்டியனைப்போலவே இந்திரனை யெதிர்த்துச் சயங்கொண்டதாகவுஞ் சரிதமுளது. (ஈ)

பலர்புகழ் சுந்த ரேச பாதசே கரனுந் தென்ன
னலைபுன லுடுத்த கூட லடிகளுக் கன்ப னாகிக்
கொலைபுணர் வேலால் வெங்கோற் குறும்பெனுங் களைக டீர்த்து
மலைர்தலை யுலக மென்னும் வான்பயிர் வளர்க்கு நாளில்.

(இ-ள்.) பலரும் புகழும் அந்தச் சுந்தரேசபாதசேகரபாண்டியன், அலை வீசும் நீர் சூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுக்கு மெய்யன்பு பூண்டவனாகி, கொலைத்தொழில்மிக்க வேலினால் கொடுங்கோலையுடைய குறுநில மன்னரென்னுங் களைகளைக் களைந்து, பரந்த இடத்தையுடைய உலகில் வசிக்கும் உயிர்களாகிய பெரிய பயிரை வளர்த்துவருங்காலையில். எ-று.

சுந்தரேசபாதசேகரனென்னுந் தன் பெயர்க்குப் பொருந்த நின்றானாதலின் "சுந்தரேசபாதசேகரனுந் தென்னன்கூடலடிகளுக்கன்பனாகி" என்றார். (ச)

பூத்தும்மான் றடந்தேர் நூறு பணைக்கைமா நூற்றுப் பத்துத்
தத்துமா னயுத மள்ளர் தானையிவ் வளவே யீட்டி
யித்துணைக் கேற்ப நல்கி யெஞ்சிய பொருள்க ளெல்லாஞ்
சித்துரு வான கூடற் சிவனுக்கே செலுத்த லானான்.

(இ-ள்.) குதிரை பூட்டிய தேர் பத்து; பனைபோன்ற துதிக்கையையுடைய யானை நூறு; தாண்டிச்செல்லுங் குதிரைகள் ஆயிரம்; பாலாட்கள் பதினாயிரம்; இவ் வளவாகவே சேனைகளைச் சேகரித்து இவ்வளவிற்குப் பொருந்தப் பொருளுதவி, சேடமான எல்லாப்பொருளையும் அறிவே திருவுருவமான மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் திருப்பணிக்கே செலவிட்டு வருவானாயினான். எ-று.

சதுரங்கசேனைகள் அரசனைக் காத்துநிற்கவும், அரசன் வருவதை யுணர்த்த அறிகுறிக்குமேயன்றி, வெற்றிகொடுக்க அல்ல ஆதலின், இவ்வாறுசெய்தனனென்க.

கண்டிகை மகுட மாதிக் கலனிரை குயின்றுந் திங்கண்
மண்டல மிடறுஞ் சென்னிக் கோபுர மாட மாதி
யெண்டிசை யிருள்கால் சீப்ப வெரிமணி யிழைத்து வேய்ந்துந்
திண்டிற லுடையா னின்ன திருப்பணி பிறவுஞ் செய்தான்.

(இ-ள்.) கண்டிகை கிரீட முதலிய ஆபரணபந்திகளைச்செய்தும், சந்திர மண்டலத்தை யிடறியோங்கிய சிகரத்தையுடைய கோபுரமும் திருமாளிகையு முதலி யனவற்றை எண்டிசையிலுமுள்ள இருளை (ஒளியாகிய) காலாற் சீத்துக் கெடுக்க, நெருப்புப்போல ஒளிவீசும் மாணிக்கமிழைத்து அலங்கரித்தும், வன்மையுடைய சுந் தரேசபாதசேகரபாண்டியன் இவைபோன்ற திருப்பணிகளையும், பிறவற்றையுஞ் செய்துவந்தனன். எ-று.

பிற என்றது நித்தநைமித்திக முதலியவற்றையென்க. (சு)

கல்லுமா றகன்ற மார்பன் கருவியின் சிறுமை நோக்கி
மல்லுமா றுததிண்டோள் வளவர்கோ னொருவன் காலிற்
செல்லுமா யிரம்ப ரிக்கோர் சேவக னென்போன் றனே
வெல்லுமா றெண்ணி வஞ்சி வேய்ந்துகொண் டெழுந்து போந்தான்.

(இ-ள்.) மலைகளும் பகைமை நீங்கிய மார்பையுடைய சுந்தரேசபாதசேகர பாண்டியனுடைய சேனையின் சிறுமையை நோக்கி, மற்றொழிலினீங்காத திண்ணிய

தோளையுடைய சோழனொருவன் காற்றுப்போலச் செல்லும் ஆயிரங் குதிரைவீரர்களுக்கு ஓர் குதிரைவீரனென்று சொல்லப்படுவான். அவனே யப்பாண்டியனை வெல்லும் வகை கருதி வஞ்சிமாலையைச்சூடிப் போர்மேற்கொண்டெழுந்து சென்றனன்.

வஞ்சிமாலை பகைவர்மேற் செல்வதற்கோர் அறிகுறி. இதனை, "வட்கார் மேற் செல்லுதல் வஞ்சியாம்" என்பதனானறிக. (எ)

பல்வகைக் கருவி யீட்டப் படையொடும் பரவை சீறிச்
செல்வது போலக் கன்னிந் தீம்புன னாடு நோக்கி
மல்வரை யாத தோளான் வரவறிந் தெழுந்து மேருக்
கல்வரி சிலையான் முன்போய்க் கைதவன் றாழ்ந்து கூறும்.

(இ-ள்.) பலவிதப்பட்ட ஆயுதங்களைத் தாங்கிய சேனைத்தொகுதியோடு, சமுத்திரமானது கொதித்துவருவதுபோல, இனிய நீர்சூழ்ந்த பாண்டிநாட்டை எதிர்நோக்கி, அளவிடப்படாத மற்போர் பொருந்திய தோளையுடைய சோழனது வருகையையறிந்து, பாண்டியன் (துண்ணென் றுசிங்காதனத்தைவிட்டு) எழுந்து, மேருமலையாகிய கட்டமைந்த வில்லைத் தாங்கிய சோமசுந்தரக்கடவுள்முன் சென்று பணிந்து (பின்வருமாறு) கூறுகின்றான். எ-று.

கருவிப்படை என்பதனை இருபெயரொட்டுப் பண்புத்தொகை யெனக்கொண்டு, கருவியாகிய படை யெனப் பொருளுரைப்பினும் பொருந்தும். (அ)

பொன்னது வனைய வேணிப் புனிதவிப் பூமி நேமி
யுன்னது வலத்தி னாலே யுருட்டுமென் வலத்தை நோக்கான்
றன்னது வலத்தி னாலென் றானையின் சிறுமை நோக்கி
யென்னது தேயங் கொள்வா னெண்ணினன் போலு மன்னோ.

(இ-ள்.) பொன்போலுஞ் சடாமுடியையுடைய சுந்தரேசப்பெருமானே! இப்பூமியில் உமது திருவருள்வலத்தினால் ஆக்கினாசக்கரத்தைச் செலுத்தும் எனது வன்மையைச் சிறிதும் நோக்காமல், தன் பெருஞ்சேனையின் வன்மையால் என் சேனையின் சிறுமையைப் பார்த்து, (சோழன்) எனது நாட்டைக் கைக்கொள்ளக் கருதினவன்போலும். எ-று.

பொன்னது என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. (க)

காவிரி நாடன் சேனைக் கடலிடை யெரிபோன் மூண்டு
மேவின னென்று கூறி மீனவன் வேண்ட வானிற்
பூவிரி வாகை நீயே புனையநாம் பொருது மென்னா
நாவிரி யாத மாற்ற நாயகன் கூறக் கேட்டான்.

(இ-ள்.) (இவ்வாறு கருதிய) சோழன் தனது சேனையாகிய கடலிடத்தெழுந்த வடவாமுகாக்கினிபோலக் கோபமூண்டு வந்தானென்று சொல்லிப் பாண்டியன் குறையிரக்க, மலர்கள்விகசித்த வெற்றிமாலையை நீயே சூட, நாம் துணையாக வந்து போர்புரிவோமென்று, சோமசுந்தரக்கடவுள் ஆகாயத்தில் அசரீரியாய்க் கூறியருள, (சுந்தரேசபாதசேகரபாண்டியன்) கேட்டனன். எ-று.

இவன் போர்வந்த விடத்துச் சிவகடாக்ஷத்தாலேயே ஜயிக்கவேண்டுமென்றிச் சேனையால் ஒன்றுமில்லை யென வுறுதியாகக் கொண்டவனாதலின், பெருமான் அவ்வாறே துணைநிற்போமென அசரீரியாகக் கூறினரெனக் கொள்க. (கo)

எல்லியங் கமலச் செவ்வி யெனமுக மலர்ந்து நாத
னல்லியங் கமலச் செந்தா ளகழ்ந்தழீஇப் புறம்பு போந்து

பல்லியங் துவைப்பத் தானைப் பரவையுட் பரிமா வூர்ந்து
கொல்லியம் பொருப்பன் சேனைக் கடலெதிர் குறுகி னானே.

(இ-ள்.) விடியற்காலத்தில் (விகசித்த) தாமரையின் அழகுபோல முகமலர்ச்சி யுற்றுச் சோமசுந்தரக்கடவுளுடைய அழகிய தாமரைமலர்போன்ற செவந்த திருவடிகளைத் தன் மனதிற்கொண்டு வெளியேவந்து பல வாத்தியங்களுமொலிக்க,தனது சேனைப்பரப்பின் நடுவிற் குதிரையை நடத்தி, கொல்லிமலையை யுடைய சோழனது சேனாசமுத்திரத்தி னெதிரே (போருக்கு) வந்தனன். எ-று.

அம் இரண்டுஞ் சாரியைகள். (கக)

பண்ணுத லிசைவண் டார்க்கும் பசுந்தொடைச் செழியன் றானை
யெண்ணுத லிலவாஞ் சென்னி யிரும்படைக் கடனே ராறாய்
நண்ணுத லெனப்போய்ப் பொன்னி நாடவன் றமர்கட் கெல்லாங்
கண்ணுத லருளா லங்கோர் கடலெனத் தோன்றிற் றம்ம.

(இ-ள்.) பண்ணோடமைந்த இசையை வண்டுகள் பாடும் பசிய வேப்பமலர் மாலையணிந்த பாண்டியனுடைய சேனையானது கணக்கில்லாததாகிய சோழனுடைய பெரிய சேனையாகிய கடலுக்கு நேரே ஆறு ஒன்று செல்லுதல்போலச்சென்று சோமசுந்தரக்கடவுளின் திருவருளால் சோழனுடைய சேனைகளுக்கெல்லாம் அவ்விடத்தில் ஓர் பெருங்கடல் வந்ததுபோலப் புலப்பட்டது. எ-று. (கஉ)

கடலென வருமா வூர்ந்து கைதவன் சேனை முன்போ
யடலணி மேருக் கோட்டி யாலவாய் நெடுநாண் பூட்டி
மடலவிழ் துழாய்க்கோ ணுட்டி வாயெரி புரத்தி லூட்டி
யடலணி கூடற் கோமான் வேடுரு வாகி நின்றான்.

(இ-ள்.) வலிமை மிக்க மகமேருவை(வில்லாக)வளைத்து விஷம்பொருந்திய வாயையுடைய (வாசுகியாகிய) நெடிய நாணினை யேறிட்டு இதழ்விரிந்த துளவமாலை யணிந்த (திருமாலாகிய) அம்பினை யேறிட்டு, (அந்த அம்பின்) வாயிலுள்ள அக்கினியைத் திரிபுரத்திற் கொளுவி வெற்றிபூண்ட மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுள், வேடுவத் திருவுருவங்கொண்டு கடல்போல (விரைந்து)வருங் குதிரையைச் செலுத்தி, பாண்டியன் சேனையின் முன்னணியிற் சென்று நின்றருளி. எ-று.

இதுமுதல் நான்குபாடல்கள் குளகம். (கங)

கங்குல்வாய்த் திங்கள் போலக் காதணி தந்தத் தோடுங்
கங்குல்வாய் முளைத்த மீன்போற் கதிர்முத்த வடமுங் குஞ்சிக்
கங்குல்வாய்ச் சிலைபோல் வெட்சிக் கண்ணிசூழ் கலபச் சூட்டுங்
கங்குல்வாய் கிழிக்குந் தந்தக் கடகமு மின்னுக் கால.

(இ-ள்.) இரவில் நிலவிய சந்திரன்போல விளங்குங் காதிலணிந்த தந்தத்தாலாகியதோடும், இராப்போதில் முளைத்த நட்சத்திரத்தைப்போல விளங்கும் முத்துமாலையும், சிகையாகிய இரவில் (எழுந்த) இந்திரதனுசுபோல வெட்சிமாலை சூழ்ந்த மயிலிறகணிந்த உச்சிக்கொண்டையும், இருட்போதைக் கிழித்து விளங்கும் மின்னல்போலத் தந்தத்தாலாகிய கடகமும் ஒளிவீச. எ-று. (கச)

அண்டத்தா ரமரர் நாம மன்றுதொட் டடையத் தோற்று
கண்டத்தா ரிருளே யெங்குங் கலந்தெனக் கறுத்த மேனி
கொண்டத்தா ராரி னுற்கோர் கூற்றெனக் கொல்வே லேந்திச்
சண்டத்தீ யென்ன நின்றான் காவிரித் தலைவன் காண.

(இ-ள்.) ஆகாயத்தில் வசிக்குந் தேவர்கள் அச்சத்தை (விடமுண்டருளிய) அக்காலமுதலடைய்த் தோற்றியருளிய ஸ்ரீ கண்டத்தில் நிறைந்த விடவிருளே எவ்விடத்துங்கலந்தாற்போலக் கறுத்த திருமேனியைக்கொண்டு, அந்த ஆத்திமாலையணிந்த சோழனுக்கு ஒரு யமனைப்போலக் கொல்லும் வேற்படைதாங்கி வடவைத்தீப் போல நின்றருளினர். (அதனை) சோழன் கண்டு. எ-று. (கரு)

சிறியா யிரம்ப ரிக்கோர் சேவகன் வந்தே னென்னக்
கூறினு னெதிர்த்தான் வெள்ளிக் குன்றவன் பத்து நூறு
மாறிலாப் பரிக்கு மட்டோர் வயவனீ யன்றோ வெண்ணி
லீறிலாப் பரிக்கு மொற்றைச் சேவகன் யானே யென்றான்.

(இ-ள்.) கோபித்து ஆயிரங் குதிரைகட்கு ஒரு சேவகன் வந்தேனென்று சொல்லிச் சோழனெதிர்ந்தான். வெள்ளிமலையையுடைய சிவபெருமானுர், நீ பகைமையில்லாத ஆயிரங் குதிரைகளுக்கு மட்டும் ஒரு வீரனல்லவா, கணக்கில்லாத (வன்மைகளுக்கு) முடிவில்லாத குதிரைகளுக்கும் நானே ஒரு சேவகனென்று கூறினுர்.

இது நெடுமொழி வஞ்சித்துறை என்பர்.

நீயோ ஆயிரங் குதிரைகட்கு வீரனென்று மகிழ்ந்தாய், நான் எண்ணில்லாப் புரவிகட்கு வீரனென்று சிவபெருமான் கூறினர் என்பது. (கசு)

என்றசொல் லிடியே றென்ன விருசெவி தொளைப்பக் கேட்டு
நின்றவ னெதிரே மின்னு நீட்டிச்செல் மேகம் போலச்
சென்றுவேல் வலந்தி ரித்துச் செயிர்த்தன னதிர்த்துச் சீற
வன்றிற லூற்றுப் பத்து வயப்பரிக் கொருவ னஞ்சா.

(இ-ள்.) என்று வேடுவொருவாய்வந்த சிவபெருமான் கூறியசொல் இடியேற்றினொலியைப்போல, தன் இருசெவிகளுந் தொளைபடக்கேட்டு நின்ற சோழனெதிரே மின்னலைவீசிச்செல்லும் மேகம்போலச்சென்று, வேலைவலப்பாற்றிரித்துக் கோபித்து மாறுபட்டுச்சீற, வன்மையையும் வெற்றியையுமுடைய ஆயிரங் குதிரைகளுக்கொருவனுகிய சோழன் அஞ்சி. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (கஎ)

யாமினி யிந்த வேலா லிறப்பதற் கைய மில்லை
யாமென வகன்றான் மாவோ ராயிரம் பரிக்கோர் மள்ளன்
காமனை வெகுண்ட வேடன் மறைந்தனன் கங்குற் சோதி
மாமக னதுகண் டோடும் வளவனைத் துரந்து சென்றான்.

(இ-ள்.) ஆயிரங் குதிரைகளுக் கொருவீரனுகிய சோழன் இனி யாம் இந்த வேற்படையால் மரிப்பதற்குச் சந்தேகமில்லை யாமென்று புறங்கொடுத்தோடினுன். மன்மதனை யெரித்த வேடுவவுருக்கொண்டருளிய சிவபெருமான் மறைந்தருளினர். சந்திரமரபிற்றோன்றிய சுந்தரேசபாதசேகர பாண்டியன் பார்த்துப் புறங்காட்டியோடும் அச்சோழனைத் துரத்திப்போயினன். எ-று.

கங்குற் சோதி - இரவில் ஒளிகொடுக்குஞ் சந்திரன்.

பாண்டியன்பக்ஷம் வெற்றி யுண்டாயினமையின் சிவபெருமான் மறைந்தருளினர் எனக் கொள்க. (கஅ)

துரந்திடு மளவி லோடுஞ் சோழனுந் திரும்பி நோக்கிக்
கருந்தடங் கண்ணி பாகங் கரந்தவே டுவனைக் காணுன்

வருந்துய ரச்சந் தீர்ந்தான் மதுரையி னளவும் பற்றிப்
புரந்தரற் புறங்கண் டானைப் புறங்கண்டு முடுக்கிப் போனான்.

(இ-ள்.) பாண்டியன் துரத்துங்காலத்தில் (புறங்காட்டி) ஓடுகின்ற சோழனுந் திரும்பிப்பார்த்து, கரிய பரந்த கண்களையுடைய உமாதேவி பாகத்தை மறைத்து வந்தருளிய வேட்டுவமூர்த்தியைக் காணாமல் வந்த துன்பமும் பயமுநீங்கி மதுரையினெல்லை வரையிற்பற்றி, இந்திரனைப் புறங்கண்ட பாண்டியனை முதுகுகண்டு விரைந்து துரத்திப் போயினன். எ-று. (கக)

காலொன் று முடுக்கப் பட்ட கனலொன் று நடந்தா லொத்து
வேலொன்று தடக்கை நேரி வேந்தனுன் முடுக்குண் டோடுஞ்
சேலொன்று கொடிய னுன்றன் செழுநகர் விரைந்து செல்வான்
மாலொன்று களிற்றி னுங்கோர் மதுமலர்க் கிடங்கில் வீழ்ந்தான்.

(இ-ள்.) காற்றொன்றினால் விரைந்து மூட்டப்பட்ட நெருப்பொன்று விரைந்து நடந்தாலொத்து வேலையேந்திய நெடிய கையையுடைய சோழனால் துரத்தப்பட்டுப் புறங்காட்டியோடும் மீனக்கொடியையுடைய பாண்டியன் தனது வளமமைந்த மதுரையில் விரைந்து செல்கிறவன் மதமயக்கத்தையுடைய யானை வீழ்ந்ததுபோல மதுரைத் திருநகரிலுள்ள ஒப்பில்லாத தேன்சிந்துந் தாமரை மலரகழியில் வீழ்ந்தான்.

மீனவன் மதுரை மூதூர் மேற்றிசைக் கிடங்கில் வீழ
மானவெம் புரவி யோடும் வளவனும் வீழ்ந்தான் கூடற்
கோனவ னருளால் வானோர் குரைகடல் கடையத் தோன்று
மானையி னெழுந்தான் றென்னன் கோழிவேந் தாழ்ந்து போனான்.

(இ-ள்.) பாண்டியன் மதுரையென்னுந் தொன்றுதொட்டுள்ள திருநகரத்தின் மேற்றிசையிலுள்ள அகழியில்விழ, மானத்தையுடைய கொடிய குதிரையோடும் சோழனும் அந்த அகழியில் வீழ்ந்தான். அம்மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் தேவர்கள் ஒலிக்குங் கடலைக் கடையத் தோன்றிய வெள்ளை யானையைப்போலப் பாண்டிய னெழுந்தனன். உறையூர்க்கரசனாகிய சோழன் அந்த அகழியி லாழ்ந்திறந்தான். எ-று.

இச்செய்யுளில், வளவனும் வீழ்ந்தானென்றது வீராவேச முற்றபொழுது உயிர்க்கிறுதி நோக்காமையும், தென்னனெழுந்தான் கோழிவேந் தாழ்ந்தான் என்பன பாண்டியனுக்கு வெற்றி கைகூட்ட வேண்டியது பெருமான் கடமை யென்பதும் புலப்படுத்தின.

மானம் தன்னிலையிற் றாழாது நிற்றலும் தாழ்வு வந்தவிடத்து உயிர்விடுதலும் அறிஞர் கொள்கை. (உ௧)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பிலத்தள வாழ்ந்த கடிமலர்க் கிடங்கிற் பெருந்தகை யெழுந்தவன் றுகில்பூண், கலத்தரும் பேழை படைபரி யானைதேர் கரியெலாங் கவர்ந்துதன் பொருளைத், தலத்தவன் றங்க ளாயக ரணியத் தக்கதூ சணிகல னல்கி, நலத்தகை யவர்பே ரருட்கடற் கன்பு நதியெனப் பெருகிவீற் றிருந்தான்.

(இ-ள்.) பாதலத்தினளவு ஆழ்ந்துள்ள வாசமிக்க தாமரை யகழியில் வீழ்ந்தெழுந்த பாண்டியன், ஆழ்ந்திறந்த சோழனுடைய ஆடையும், பூணும், ஆபரணங்கள் வைத்த அருவிலைப்பெட்டியும், சேனையும், குதிரையும், தேரும், யானையுமாகிய இவற்



உலவாக்கோட்டையருளியபடலம்.

றையெல்லாம், தண்ணிய தாமிரபர்ணி நதிசூழ்ந்த நாட்டையுடைய சுந்தரேசபாதசேகர பாண்டியன் கைக்கொண்டு தங்களிறைவ ரணியத்தக்க ஆடையாபரணங்களைக் கொடுத்து அவ்விறைவரது பெரிய திருவருளென்னுங் கடலினுக்குத் தான் கொண்ட அன்புநதியைப்போல உவட்டெடுக்க நிகரின்றி யிருந்தான். எ-று.

பெருகி - செயவெனெச்சத் திரிபு. (௨௨)

சோழனை மடுவில் வீட்டிய படலம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௧௦அ.

---

முப்பத்தெட்டாவது,

## உலவாக்கோட்டை யருளிய படலம்.

---

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மின்பு ணிக்கதிர் வேணி வானவன் மீன வன்றனை மானவேன்
முன்ப ணிக்கவ லந்தி ரித்துழு டுக்கி நேரிய டுக்கலான்
பின்ப ணிக்கம லத்த டத்திற விட்ட வாறிது பெருமைசா
லன்ப னுக்குல வாத கோட்டைய ளித்த வாறுகி ளத்துவாம்.

(இ-ள்.) மின்னல்போல ஒளிவீசுஞ் சடாமுடியையுடைய சோமசுந்தரக் கடவுள் பாண்டியன் பொருட்டு மானமிக்க வேற்படையை, நடுக்கமுற எதிரே வலப்பால் திரித்துத் துரத்தி, நேரிமலையையுடைய சோழன் பின்பு குளிர்ந்த தாமரைநெருங்கிய அகழியில் வீழ்ந்திறக்கச் செய்தருளிய திருவிளையாடலிது (ஆகும்.) பெருமைமிக்க தமது அன்பராகிய அடியார்க்குநல்லார்க்கு உலவாக்கோட்டை யருளிய திருவிளையாடலை (யாம் இனி) ச் சொல்லுவோம். எ-று.

மீனவன்றனை இதில் ஐ-உருபுமயக்கம் ; மீனவன்றனக்குஎன்பதுபொருள்.

கலிநிலைத்துறை.

பொடியார்க்கு மேனிப் புனிதர்க்குப் புனித வேற்றுக்
கொடியார்க்கு வேதக் குடுமிக்கிணை யான கூடற்
படியார்க்குஞ் சீர்த்திப் பதியேருழ வோரு ணல்லா
ணடியார்க்கு னல்லா னறத்திற்கும் புகழ்க்கு நல்லான்.

(இ-ள்.) திருநீறு நிறைந்த திருமேனியையுடைய புனிதராகிய தருமவிடைக்கொடியையுடைய சோமசுந்தரக்கடவுளுக்கு (உறையுளாகிய) வேதசிரமான உபநிடதத்தை யொத்த மதுரையென்னும் நிலவுலகைத் தன்வசமாக்குங்கீர்த்திநிறைந்த அப்பதியில் வசிக்கும் வேளாளர்குலத்திற் றோன்றிய நல்லொழுக்க முடையவராய் அடியார்க்கு நல்லார் என்னும் (காரணப்)பெயர்பூண்டவர்: புண்ணியத்திற்கும் அதன் கீர்த்திக்கும் நல்லவராயுள்ளார். எ-று. (௨)

அணையா னறத்திற் கருள்போன்றவ ளான்றகற்பின்
மனையாள் மரபின் வழுவாத தருமசீலை

யெனையாரு நன்கு மதிக்க விருக்கு நீரா
டனையாள் பதிக்குத் தனிக்கதி சார்பு போல்வாள்.

(இ-ள்.) அவ்வடியார்க்கு நல்லாரதுபுண்ணியத்தைவளர்க்க ஓரருள்போன்ற சிறந்த கற்பினையுடைய மனைவி குலவொழுக்கந் தவறாத் தருமசீலை யென்பவள்: தங் குலத்தவர் யாவரும் நன்கு மதிக்க நடக்குந் தன்மையுடையவள்: தன்னைக் கொண்ட கணவனுக்கு (அடையவேண்டிய) மோக்ஷத்திற்கு ஒப்பில்லாத பற்றுக்கோடு போன்றவள். எ-று. (ரு)

பல்லே ருழவின் றொழில்பூண்டு பயன்கள் கொள்வான்
வில்லே ருழவர் கடன்கொண்டு மிகுந்த வெல்லா
மில்லே ருழத்தி மடைச்செல்வ மியற்றி யேந்த
வல்லே லறு கண்ட னடியாரை யருத்து நீரான்.

(இ-ள்.) பல ஏர்களா லுழுதொழில் பூண்டு பயன்களடையும் அடியார்க்கு நல்லார், வில்லாகியஏரினுற் பகைப்புலத்தையுழும் அரசன்கொள்ளும் வரியைக் கொடுத்து, மிகுந்த எல்லாப்பொருள்களையும் இல்லறமாகிய ஏரால் (விருந்தின் புலத்தைத்) திருத்துந் தருமசீலை அமுதாகிய செல்வத்தைப் பாகஞ் செய்தேந்த, ஸ்ரீகண்டத்தை யுடைய சிவனடியாரை யுண்பிக்குந் தன்மையுடையவர். எ-று. (சு)

தொகைமாண்ட தொண்டர் சுவையாறு தழீஇய நான்கு
வகைமாண்ட மாறு படுமுண்டி மறுத்த ருந்த
நகைமாண்ட வன்பின் றலையாயவ னல்க நல்கப்
பகைமாண்ட செல்வ மணற்கேணியிற் பல்கு நாளின்.

(இ-ள்.) எண்ணிறந்த அடியார்கள் அறுசுவை பொருந்திய நான்கு வகையாய் மாட்சிமைப்பட்ட (தம்முள்) மாறுதலையுடைய உணவுகளுள் (சூடில்லாததை) மறுத்து (சூடுள்ளதை) உண்ண மகிழ்ச்சிமாறாத அன்பிற் சிறந்த அடியார்க்கு நல்லவர் ஊட்டுந்தோறும், எவர்க்கும் மனமிசைந்த செல்வமானது மணற்கேணி நீர் (சுரத்தல்) போல ஓங்கிவளருங் காலத்தில். எ-று.

அறுசுவை—கார்ப்பு-துவர்ப்பு-இனிப்பு-உவர்ப்பு-புளிப்பு-கைப்புஎன்பன. நான்கு உண்டி—உண்ணல் தின்னல் நக்கல் பருகல் என்பன. (எ)

இந்நீர வாய வளங்குன்றினு மின்மை கூறாத்
தன்னீர்மை குன்றா னெனுந்தன்மை பிறர்க்குத் தேற்ற
நன்னீர் வயலின் விளைவஃகி நலிவு செய்ய
மின்னீர வேணி மதுரேசர் விலக்கி னரே.

(இ-ள்.) இத்தன்மையான பெருஞ்செல்வங் குறைந்து வறுமையடையினும் தனது பக்தித்திறஞ் சிறிதுங் குறையாதொன்னுந் தன்மை பிறர்க்கு விளக்க, மின்னல்போலுஞ் சடையையுடைய சோமசுந்தரக்கடவுள் தெள்ளிய நீர்நிறைந்த வயலின் விளைவு குறைந்து வருத்த, அவ்விளைவை விலக்கி யருளுவர். எ-று. (அ)

குன்றா விருத்திக் கடன்கொண்டுகொண் டன்பர் பூசை
நன்றா நடத்தத் தொடுத்தான் கடன்றா னுங்கிட்டா
தொன்றாலுங் கொண்ட விரதத்துக் குறுதி யின்றி
நின்றா னுடம்பை யொறுக்கின்ற நியமம் பூண்டான்.

(இ-ள்.) குறைவுபடாத வட்டிக்குக் கடன்வாங்கி வாங்கி, அடியவர் பூசையை நன்றாக நடத்தத் தொடங்கி, கடனுங் கிடையாமையால் தாம் கொண்ட விரதத்

திற்கு மற்றொன்றினாலும் பற்றுக்கோடில்லாமல் வாளாநின்றனர். (அடியருண்ட பிற கே உண்ணு நியமமுடையராதலின்) தமதுடம்பை வருத்துகின்ற நியமத்தைப் பூண் டனர். எ-று.

குன்றாத விருத்திக்கடன் என்றமையால் நாடோறும் அதிகப்படுவதாகிய வட்டிக்கு வாங்குங் கடன் எனக்கொள்க. (எ)

கொடுப்பா ரவரோ விளைவுங்கடன் கோளு மாற்றித்
தடுப்பா ரெனின்மற் றதையாவர் தடுக்க வல்லா
ரடுப்பார் விழுமங் களைவாரடி யார்க்கு நல்லூண்
மடுப்பா ணியமந் தடைபட்டு வருந்து கின்றான்.

(இ-ள்.) தம்மை யடைந்தவர் துன்பங்களை நீக்கும் பெருமானார் (அடியார் க்கு வேண்டியபடி) கொடுப்பவருமாவர். அவரோ விளைவையுங் கடன் கோடலையும் மாற்றித் தடுப்பாராயின், அதனைத் தடுக்கவல்லவர் யார்? (ஒருவருமிலர்.) அடியவர்க்கு நல்லுணவூட்டும் அடியார்க்கு நல்லார் (தமது) எற்பாடு தடைபட்டு வருந்துவாராயி னர். எ-று, (அ)

விண்ணாறு சூடும் விடையான்றமர்க் கூட்டி யன்றி
யுண்ணா தவன்றன் னுயிர்க்குத்துணை யாய கற்பிற்
பண்ணார் மொழிதன் னொடும்பட்டினி விட்டு நெஞ்சம்
புண்ணாக வாகம் பசித்தீயிற் புழுங்கப் பட்டான்.

(இ-ள்.) சிவபெருமானுடைய அடியவர்க்கு அமுது செய்வித்தல்லாமல் உண்ணாத அடியார்க்குநல்லார் தனது உயிர்த்துணையாகிய கற்பினையுடைய இசை போன்ற சொல்லமைந்த மனைவியோடும் பட்டினியிருந்து தனது மனம் புண்ணுயழு ங்க, சரீரம் பசியாகிய தீயாற் சுட்டுண்டு வருத்தப்பட்டனர். எ-று.

விண்ணாறு சூடும் விடையான் - ஆகாய கங்கையணிந்த (சடையையுடைய) வரும், இடபவாகன முடையவருமாகிய சிவபெருமான். (கூ)

இறக்கும் முடம்பாற் பெறும்பேறினி யாவ தென்னா
வறக்குன் றனையான் மனையோடு மடைந்திச் செய்தி
நிறக்கின்ற செம்பொற் சிலையார்க்கு நிகழ்த்தி யாவி
துறக்கின் றதுவே துணிவென்று துணிந்து போனான்.

(இ-ள்.) தருமமலைபோன்ற அடியார்க்குநல்லவர், இறக்கும் இவ்வுடலால் இனி நாமடையும் பயன் யாது? என்றுகருதித் தமது மனைவியோடுஞ்சென்று, விளங்கு கின்ற மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமானுக்கு இச்செய்தியைக்கூறி, உயி ரை விடுவதே தக்கதென்று மனந் துணிந்து சென்றார். எ-று. (கo)

ஐயன் றிருமுன்ன ரடைந்தடி தாழ்ந்து வானோ
ருய்யும் படிநஞ் சமுதுண்ட வொருவ வுன்றன்
மெய்யன்பர் பூசைக் கிடையூறு விளைய வென்றன்
செய்யும் பலமும் விளைவின்றிச் சிதைந்த வென்னா.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுள் திருச்சந்நிதியை யடைந்து திருவடியைப் பணிந்து, தேவர்களுய்ய விஷபானஞ் செய்தருளிய பெருமானே! உனது உண்மை யடியவர் பூசைக்குத் தடையுண்டாக எனது நன்செய்யும் புன்செய்யும் விளைவு சுரு ங்கிக் கெட்டன. எ-று. (கக)

விடனல்கு சூலப் படையாய்கடன் வேறு காணேன்
கடனல்க வல்லார் தமைக்காட்டுதி காட்டி லாயேன்

மிடனல்கு மிந்த வுடம்பின்சுமை மாற்று வேனென்
றுடனல்கு கற்புக் குரியாளொடும் வேண்டு மெல்லை.

(இ-ள்.) விஷஞ்சொரியுஞ் சூலாயுதமேந்திய பெருமானே! கடன் கொடுக்கத்தக்கவர் ஒருவரையுங் காணேன். (நீயாவும் வல்லவனுதலின்) கடன் கொடுக்கத்தக்கவரிவரெனக் காட்டுவாய்: (அவ்வாறு) காட்டாவிட்டால், அறியாமைமிக்க இந்த வுடற்பாரத்தை யொறுப்பேனென்று, தம்முடனின்ற கற்புடைய மனைவியாகிய தருமசீலையோடு வேண்டுங்காலத்தில். எ-று. (கஉ)

பஞ்சாதி வேதப் பொருள்சொன்ன பரமன் வாக்கொன்
றஞ்சாதி வேளாண் டலைவாவு னகத்தி லின்றோர்
செஞ்சாதி யாய செழுவாலரிக் கோட்டை யுய்த்தே
மெஞ்சா திருக்கு மெடுக்குந்தொறு மென்று மாதோ.

(இ-ள்.) பஞ்சாதியையுடைய வேதத்திற்குப் பொருள்கூறிய சோமசுந்தரக் கடவுளது அசரீரிவாக்கொன்று, வேளாளர் குலத்திற்றோன்றிய தலைவனே! உன் வீட்டில்இப்பொழுது ஒப்பில்லாத செந்நெல்லாலாகிய முனைமுரியாத களங்கமற்ற அரிசிக்கோட்டையொன்று செலுத்தினோம். (நீசிறிதும்)அஞ்சாதே. எடுக்குந்தோறும் அது எப்பொழுதுங் குறையாதிருக்கும். எ-று.

பஞ்சாதி - சந்தை கூட்டி வேதாத்தியயனஞ் செய்வோர் நிறுத்துதற் கிடமாக வைத்த ஐம்பது பதங்கொண்ட ஓர் முடிபு. பஞ்சாது என்பதன் மரூஉ. (கரு)

நீநாளும் பூசித் ததில்வேண்டிய கொண்டு நித்த
மானுத வன்பர்க் கமுதூட்டி யெவர்க்கு மன்ன
தானுதி நான தருமங்களுஞ் செய்தி வீடு
மேனு ளளிக்கின் றனமென்று விசும்பிற் கூற.

(இ-ள்.) நீ தினந்தோறும் அருச்சித்து அவ்வரிசிக் கோட்டையில் (தினமும்) வேண்டுமளவு அரிசிகொண்டு, தினமும் சிவநேசம் மிக்க அடியார்கட்கு அமுதருத்தி எல்லோருக்கும் அன்னதான முதலிய பல தருமங்களையுஞ் செய்வாய். இறுதியிற் சிவகதி தந்தருளுகின்றோம் என்று ஆகாயத்திற் கூறியருள. எ-று.

இதுமுத லிரண்டு செய்யுள்கள் குளகம். (கசு)

கேட்டின்ப மெய்திக் கிளர்விம்மித ராகி வேதப்
பாட்டின் பயனைப் பணிந்தில்ல மடைந்து பண்டை
யீட்டுந் தவப்பே றெனக்கண்டனன் றெண்டர்க் கெந்தை
கூட்டுங் கதிபோ லுலவாமற் கொடுத்த கோட்டை.

(இ-ள்.) (அவ்வசரீரியைக்) கேள்வியுற்று இன்பமடைந்து மேலெழும் வியப்புடையவராகி வேதவாக்கியப் பொருளாகிய சுந்தரேசப் பெருமானைப் பணிந்து (தமது)வீட்டையடைந்து முன்புதேடிய தவப்பயன்போல, அடியவர்க்கு எமது பெருமானுர் அடைவிக்கும் பேரின்பம் (குறையாது என்றும் ஒரு படித்தாயிருப்பது) போல, அழியாதிருக்கக் கொடுத்தருளிய அரிசிக்கோட்டையைப் பார்த்தருளினர்.

வேதப்பாட்டின் பயன் = சிவபெருமான். வேதம் பல கடவுளரையும் பதியெனப் பல காரணங்களாற் கூறினும் சிவபெருமானே பதியாவர். இது அரசன் தன் ஆக்கினையைப் பலர்மூலமாகவுஞ் செலுத்துவதுபோலவென் றறியத்தக்கது. (கஎ)

வானுறு சூடி தருகோட்டை வைக றோறும்
பூனறு சாந்தம் புகையொண்சுடர் கொண்டருச்சித்



மாமனுகைவந்துவழக்குரைத்தபடலம்.

தாளுத செவ்வி யடிசிற்கு மதற்கு வேண்டு
நானா கருவி விலைக்கும்மது நல்க வாங்கா.

(இ-ள்.) கங்காதரராகிய சோமசுந்தரக்கடவுள் தந்தருளிய உலவாக்கோட்டையைத் தினந்தோறும் புஷ்பம் பரிமளகந்தம் தூபம் ஒள்ளிய தீபம் இவற்றால் அருச்சித்து, பதம் நீங்காத அன்னத்திற்கும், அதற்கு வேண்டிய (கறிமுதலிய) பலவித உபகரணங்களைப் பெறும் விலைப்பொருட்கும், அக்கோட்டையானது கொடுக்கக் கைக்கொண்டு. எ-று. (கசு)

மின்னேர் சடையான் றமராய்ந்தவர் வேதச் செல்வர்
தென்னடர் தெய்வம் விருந்தொக்கல் செறிந்து நட்டோர்
முன்னா மெவர்க்கும் முகில்போல் வரையாம னல்கி
யென்நாளு நோயின் றளகாதிப னென்ன வாழ்ந்தான்.

(இ-ள்.) மின்னல்போன்ற சடையையுடைய சிவபெருமானது அடியவரும் (ஆகம) ஆராய்ச்சி யுடையவரும் வேதியரும் பிதிர்க்களும் தெய்வமும் விருந்ினரும் சுற்றத்தாரும் ஒன்றுபட்டுச் சிநேகித்தவரும் முதலிய எல்லோருக்கும், மேகம்போல (கைம்மாறு கருதாது) அளவின்றிக் கொடுத்து எப்பொழுதும் வறுமையின்றிக் குபேரனைப்போல வாழ்ந்திருந்தனர். எ-று. (கஎ)

மேற்படி வேறு.

அன்பன் னடியார்க் கினியா னனிநா ளளந்தல்கித்
தன்பன் னியொடு மயலார் சுற்றந் தமரோடும்
பின்பங் கிலையே யிமவான் மகளைப் பிரியாத
வின்பன் னுருவாய்ச் சிவமா நகர்சென் றிறைகொண்டான்.

(இ-ள்.) அன்புபொருந்திய அடியார்க்கு நல்லவர் அநேககாலமிருந்து ஆயுள் முடிந்து தமது மனைவியோடும், அயலாரும் சுற்றத்தாரும் கிளைஞருமாகிய இவர்களோடும், பின்பு இவ்வுலகி னின்றபடியே, பர்வதராஜ புத்திரியாகிய மகாதேவியைப் பிரிந்தறியாத சிவபெருமானது சாரூப்பியம் பெற்று சிவபுரத்திற் சென்று வாழ்ந்தனர்.

அயலார் என்பதற்கு ஏவல் செய்வோரெனச் சிலர் பொருள்படுமென்பர்.

உலவாக்கோட்டை யருளிய படலம்
முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-ககஉகூ.

---

முப்பத்தொன்பதாவது,

## மாமனாக வந்து வழக்குரைத்தபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தாமநா றிதழி யார்தந் தமர்க்கன்பன் வறுமைப் பட்டோ
னமநா ளுலவாக் கோட்டை யருளிய முறையீ தையன்
றேமனண் முல்லைத் தீந்தார்ச் சிறுதகை வணிகற் காக
மாமனும் படிவங் கொண்டு வழக்குரை வண்ணஞ் சொல்வாம்.

(இ-ள்.) மணங்கமழுங் கொன்றைமாலையணிந்த பெருமானார் தமது அடியார்க்கடியவர் வறுமைப்பட்ட அந்நாளில் உலவாக்கோட்டை யருளிய திருவிளையாடலிது. தேனானது நிலைபெற்ற அன்றலர்ந்த இனிய முல்லைமலர்மாலையணிந்த பிள்ளைப் பருவத்தையுடைய ஒரு வணிகனுக்காக அப்பெருமானார் அவன் மாமனாக வடிவங்கொண்டு வழக்குப்பேசி (அவன் தாயாதிகளை வென்றருளிய) திருவிளையாடலை (யாம் இனி) க் கூறுவாம். எ-று. (க)

கன்னிநான் மாடக் கூடற் கடிநகர் வணிக மாக்க
டன்னின்மா நிதிக்கோ னன்னான் றனபதி யென்னும் பேரான்
மன்னினு னனையான் கற்பின் மடவரல் சுசீலை யென்பாள்
பொன்னினன் முளரிச் சேக்கைப் புண்ணியத் திருவி னன்னாள்.

(இ-ள்.) எந்நாளு மழியாத நான்மாடக்கூட லாகிய மதுரை யென்னுங் காவல் பூண்ட திருநகரில் வசிக்கும் வணிகரில், குபேரன்போன்ற தனபதியென்னும் பெயரையுடைய ஒருவணிக னிருந்தனன். அவனது கற்பினையுடைய மனைவி சுசீலை யென்னும் பெயருடையவள். (அழகில்) அன்றலர்ந்த பொற்றாமரைத் தவிசில் வசிக்கும் புண்ணியவடிவாகிய திருமகள் போன்றவள். எ-று.

கன்னிநான்மாடக்கூடல் என்பதற்கு, கன்னியென்பது மதுரை நாட்டின் ஒரு பெயராதலின் கன்னிநாடாகிய நான்மாடக்கூடலென இருபெயரொட்டுப் பண்புத் தொகையாக வுரைப்பினும் பொருந்தும். தனபதி என்ற பெயராலும் பெருஞ் செல்வ முடைமையாலும் இவன் குபேரனே யென்னப்பட்டனன். (உ)

எனவிவர் தமக்கு மைந்தற் பேறின்றி யிரங்கு நாளிற்
றனபதி மருகன் றன்னைத் தகவுசான் மகவாக் கொண்டு
மனமகிழ் சிறப்பா னல்க மனைவியுந் தொழுது வாங்கிப்
புனைவன புனைந்து போற்றிப் பொலிவுற வளர்த்துக் கொண்டாள்.

(இ-ள்.) என்று சொல்லப்பட்ட இவர்களுக்குப் புத்திரப்பேறின்றி வருந்துங்காலத்தில், தனபதி யென்னும் வணிகன் தனது (தங்கையின் புத்திரனான) மருகனை நல்லொழுக்க மிக்க புத்திரனாகக்கொண்டு மனமகிழ்ந்து சிறப்போடு கொடுக்க, மனைவியுங் கைகூப்பி வாங்கி, (பிள்ளைப்பருவத்திற் கேற்ப) அணியும் ஆபரணங்களை யணிந்து பாதுகாத்து நாளுக்குநாள் ஓங்க வளர்த்துவந்தனள். எ-று.

மனமகிழ் சிறப்பால் என்பதற்கு ஸ்வீகாரஞ் செய்து எனப் பொருள்படும்.

தனபதி மகப்பே றற்றா னாயினுந் தணவாக் காதன்
மனைவிமேல் வைத்த வாசை மயக்கினால் வருந்தி யீன்ற
தனையனை மகவாத் தந்த தங்கைமேற் றீராப் பூசல்
வினைவிளைத் தொழுக வோர்நா ளிளையளும் வெகுண்டு சொல்வாள்.

(இ-ள்.) தனபதியென்னும் வணிகன் புத்திரப்பேறில்லாதவனாயினும், நீங்காத விருப்பமுடைய தனது மனைக்கிழத்தியின்மேல்வைத்த ஆசையினால், தான் வருந்திப்பெற்ற புத்திரனைத் தனக்குப் புத்திரனாகத்தந்த தங்கையின்மேல் நீங்காத போர் செய்துவர, ஒருநாள் அவன் தங்கையுங் கோபித்து (தன் தமயனை நோக்கிக்) கூறுகின்றாள். எ-று. (ச)

பெருமித முனக்கேன் பிள்ளைப் பேறற்ற பாவி நீயென்
னருமைமகன் மகனா லன்றோ விருமையு முடைவா யென்னப்

பெரிதுநா ணடைந்து மேலைக் காயினும் பிள்ளைப் பேறு
தருதவம் புரிவே னென்னாத் தனபதி தவமேற் செல்வான்.

(இ-ள்.) (அண்ணா!) உனக்கு வந்த இறுமாப்பென்ன? நீயோ புத்திரப்பே றில்லாத பாவி. என்னுடைய பெறுதற்கரிய நல்ல புத்திரனாலல்லவா இகபோகத்தையும் பரபோகத்தையும் அடையப்போகிறாய்? என்றுகூற, தனபதி மிகவும் நாணங்கூர்ந்து இனிவரும் பிறப்பிற்காயினும் புத்திரபாக்கியத்தைத் தருந் தவஞ்செய்வேனென்று தவவினைமேற்கொண்டு போயினன். எ-று. (௫)

தன்பெருஞ் செல்வ மெல்லா மருமகன் றனக்கே யாக்கி
யன்புகொண் மனைவி யோடு மருந்தவ நெறியிற் சென்றான்
பின்பவன் வரவு தாழ்ப்ப மருமகன் பெற்ற வெல்லாம்
வன்பினால் வழக்குப் பேசி வௌவினார் தாய மாக்கள்.

(இ-ள்.) தன்னுடைய பெரும்பாக்கிய முழுதும் தனது மருகனுக்கே யுரியதாக்கி, அன்புபொருந்திய மனைவி யோடும் அரியதவநெறிமேற்கொண்டு சென்றனன். பிறகு (தவமேற்கொண்டுசென்ற) அவனது வருகை நீட்டிக்க, மருகன் (தனபதியிடத்துப்) பெற்ற பெருஞ்செல்வமுழுவதும், (தனபதியின்)ஞாதிகள் நீதிகோடி வழக்குப்பேசிக் கவர்ந்துகொண்டார்கள்.எ-று. (௬)

விளைநில னடிமை பைம்பூண் வெறுக்கைநன் பசுக்க ளேனை
வளனுமாற் றவர்கைக் கொள்ள வன்சிறை யிழந்த புட்போற்
றளர்வுறு மகனுந் தாயுஞ் சார்பிலார் தம்ம னோர்க்கோர்
களைகணா யிருக்குங் கூடற் கடவுளே சரண மென்னா.

(இ-ள்.) விளைநிலங்களும், அடிமையாட்களும், பசிய ஆபரணங்களும், திரவியமும், நல்ல பசுக்களும், பிற பொருள்களுமாகிய இவற்றைப் பகைவர்கள் கவர, வலிய சிறகிழந்த பறவையைப்போல வருந்துந்தாயும் பிள்ளையும் ஒரு பற்றுக்கோடுமில்லாத தம்போலியர்க்கு ஒருபற்றுக்கோடாயுள்ள மதுராபுரியிலுள்ள சோமசுந்தரக்கடவுளே அடைக்கலமென்று கருதி. எ-று.

இதுமுதலிரண்டு பாடல்கள் குளகம். (௭)

வந்துவா னகடு போழ்ந்த மணிமுடி விமானக் கோயிற்
சுந்தர நாதன் பாதத் துணைதொழு திறைஞ்சி யார்க்குந்
தந்தையுந் தாயு மாகுந் தம்பிரா னீரோ வெங்கட்
கெந்தையும் யாயு மென்னா விரங்கிநின் றினைய சொல்வாள்.

(இ-ள்.) ஆகாயத்தின் வயிற்றைக்கிழித்துவந்த இரத்தினசிகரத்தையுடைய இந்திரவிமான மாகிய திருக்கோயிலிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய உபயபாதங்களையும்பணிந்து எவ்வுயிர்க்கும் அம்மையப்பராகியதலைவர் நீரோ. ஆதலால், (நீரே) அவ்வுயிர்களுளொன்றாகிய எங்களுக்குந் தந்தையுந்தாயுமென்று கூறிவருந்தி, இத்தன்மையான குறைகளைச் சொல்கின்றனர்.எ-று. (அ)

என்மகன் றன்னை மைந்த னின்மையா லெவருங் காணத்
தன்மக னாகக் கொண்டு தகுதியா லன்றே காணி
பொன்மனை பிறவு நல்கிப் போயினா னெம்மு னிப்பால்
வன்மையாற் றாயத் தார்க ளவையெலாம் வௌவிக் கொண்டார்.

(இ-ள்.) என்மூத்தோன் என் புத்திரனைத் தனக்குப் புத்திரனின்மையால் யாவருமறியத் தனக்குப் புத்திரனாகக்கொண்டு தகுதியுடன் அப்பொழுதே காணி

பொன் வீடு முதலிய பிறவுங்கொடுத்து (தவமேற்கொண்டு) சென்றனன். பிறகு (அவன்) ஞாதிகள் வலியவழக்குப்பேசி அப்பொருள்களையெல்லாங் கவர்ந்துகொண்டார்கள். ஒ-று. (கூ)

ஒருத்திநா னொருத்திக் கிந்த வொருமக னிவனுந் தேறுங்
கருத்திலாச் சிறியன் வேறு களைகணுங் காணே னைய
வருத்திசா லறவோர் தேறு மருட்பெருங் கடலே யெங்கு
மிருத்திநீ யறியாய் கொல்லோ வென்றுபார் படிய வீழ்ந்தாள்.

(இ-ள்.) ஐயனே! நானொரு ஒருத்தி! துணையில்லாத எனக்கு இப்பிள்ளையோ ஏகபுத்திரன்; இப்புத்திரனும் பகுத்தறியுங் கருத்தறியாதசிறுவன். (உன்னையன்றிவேறு) ஆதரவுமறியேன். அன்புமிக்க அடியவர் தெளிந்துணரும் பெரிய கிருபாசமுத்திரமே! எவ்விடத்திலும் நீ நிறைந்திருக்கிறாய்: (இவற்றை) நீ யறியமாட்டாயோ ? என்று நில மிசைப்படிய (சாஷ்டாங்கமாக) வீழ்ந்து பணிந்தாள். எ-று. (௧0)

மாறுகொள் வழக்குத் தீர்க்க வல்லவ ரருளி னாலே
சீறுகொள் வடிவேற் கண்ணாள் சிறுதுயி லடைந்தாண் மெய்யி
னூறுகொள் கரண மைந்து முற்றறி கனவிற் கங்கை
யாறுகொள் சடையார் வேதச் செல்வரா யடுத்துச் சொல்வார்.

(இ-ள்.) மாறுபட்ட கொடுவழக்கைத் தீர்க்கவல்ல சிவபெருமான் கிருபையால், கோபங்கொண்ட வடித்த வேல்போன்ற கண்களையுடையவள் சிறு துயில் செய்தனள். தேகத்தில் பரிசமுதலிய ஐம்புலன்களையும் (அறிவு வாயிலாக) மனஞ் சென்றறியும் சொப்பனத்தில், கங்காநதியை யணிந்த சடையையுடைய சோமசுந்தரக்கடவுள் அந்தணத் திருவுருவேற்றுச் சொல்கின்றனர். எ-று. (௧௧)

புலர்ந்தபின் றாயத் தோரைப் புரவல னவை யாற்றால்
வலந்தரு மன்றத் தேற்றி மறித்தனை யிருத்தி யாம்போந்
தலந்தரு மறிவான் மூத்தோ ரனைவரு மிசைய வந்தச்
சலந்தரு வழக்குத் தீர்த்துத் தருகுவம் போதி யென்றார்.

(இ-ள்.) விடிந்தபிறகு, தனபதி ஞாதிகளை அரசனுக்கினை வழியால் மறித்து, வெற்றிபொருந்திய சபையிலேற்றி யிருப்பாய் : அமைந்த அறிவில்முதிர்ந்த யாவருமிசையும்படி நாம் வந்து அந்தக்கொடுவழக்கினை யொழித்து (உன் பொருளை) வாங்கித் தருகின்றோம். போவாயென்று கூறியருளினார். ஏ-று.

சலந்தருவழக்கு என்றது தம்புதல்வருள் ஒருவனை ஸ்வீகாரங் கொள்ளாது தங்கைபுத்திரனைக் கொண்டனனென ஞாதிகட்கெழுந்த கோபத்தா லுண்டான வழக்கு. (௧௨)

வேரியங் குவளை யுண்கண் விழித்தனள் வியந்து கெட்டே
னாருமில் லார்க்குத் தெய்வந் துணையென்ப தறிந்தே னென்னக்
காரிருங் கயலுண் கண்ணாள் கணவனைத் தொழுது வாழ்த்திச்
சீரிளங் குமர னோடுந் தெரிவைதன் மனையிற் சென்றாள்.

(இ-ள்.) தனபதிதங்கை தேனொழுகும் அழகிய குவளையைவென்ற கண்கள் விழித்து அதிசயித்து நான் கெட்டேன்: யாருமில்லார்க்குத் தெய்வமே துணை யென்னும் உலகவழக்கை இன்று அறிந்தேனென்று, கரிய பெரிய கயற்கெண்டையை வென்ற கண்களையுடைய மீனாட்சிதேவி நாயகராகிய சோமசுந்தரக்கடவுளைத் தொழுது வணங்கி, அழகிய தனது புத்திரனோடுந் தன் வீட்டிற்குச் சென்றனள். எ-று.

கெட்டேன்-வியப்பிடைச்சொல். (௧௩)

சென்றவள் கங்கு லெல்லை தெரிந்தபி னெழுந்து வெள்ளி
மன்றவன் கோயில் வாயில் வந்துவந் தனைசெய் தம்பொற்
குன்றவ னுரைத்த வாற்றாற் கொடுமைசால் வழக்குப் பூட்டி
வென்றவ ரிருக்கை யெய்தி விளம்புவாள் பலருங் கேட்ப.

(இ-ள்.) சென்ற தனபதிதங்கை விடிந்தபின் னெழுந்து வெள்ளியம்பலத்தையுடைய பெருமானாரது திருக்கோயிலின் வாயிலையடைந்து பணிந்து, அழகிய மகமேருவை (வில்லாக) உடைய சிவபெருமான் கூறியருளியவகையால், கொடுமைமிக்க வழக்கினைப்பூட்டி வென்ற ஞாதிகளுடைய வீடுகளையடைந்து, பலருமறியக் கூறுகின்றாள். எ-று. (கச)

அட்டில்வாய் நெருப்பி டேலோ ரடியிடே லறத்தா றன்றிப்
பட்டிமை வழக்கால் வென்று போகொட்டேன் பலருங் கேட்க
விட்டன னரச னாணை யறத்தவி சேறி யான்றோ
ரொட்டிய படிகேட் டெங்க ளுரிப்பொரு டந்து போமின்.

(இ-ள்.) சமைக்குமிடத்தில் தீமூட்டுதலொழிக. (புறஞ்செல்ல) ஓரடியெடுத்து வைத்தலொழிக. (மநுமுறையாகிய) தருமவழியாலன்றிக் கொடுவழக்கா லெங்களை வென்று (நீங்கள்) போக உடன்படேன். பலருமறிய அரசன்மேல் ஆணையிட்டேன்: நியாயஸ்தானத்திற்கு வந்து நியாயாதிபதிகள் ஆராய்ந் துரைத்த முடிபைக் கேட்டு எங்களுக்குரிய பொருளைக்கொடுத்துச் செல்லுங்கள். எ-று. (கரு)

என்றனண் மறித்த லோடு மிழுக்குரை யாடி வைது
வன்றிறல் வலியார் தள்ளி யடித்தனர் மைந்த னோடுஞ்
சென்றனண் முறையோ வென்னாத் திருந்தறத் தவிசி னோர்மு
னின்றுரை யாடி னாள்கேட் டறிந்தனர் நீதி நூலோர்.

(இ-ள்.) என்று கூறி மறிக்க, வலிமைமிக்க ஞாதிகள் தவறுவார்த்தைகளுரைத்துத் திட்டி (பிடர்பிடித்து) த்தள்ளி, புத்திரனோடும் (அவளை) அடித்தார்கள். திருந்திய நியாயபீடத்திலுள்ளோர் பின்சென்று இதுமுறையோவென்று (கூவிக்)கூறினள். நீதிநூல்களை யுணர்ந்த நியாயாதிபதிகள் அதனைக்கேட்டறிந்தார்கள். எ-று. (கசு)

அறத்தவி சிருப்போ ரேவ லாடவ ரோடும் போந்து
மறித்தவைக் களத்திற் கூட்டி வந்தனள் வந்த வெல்லை
யறக்கொடி பாகர் வெள்ளி யம்பல வாணர் தாமத்
திறத்தன பதியே யென்னத் திருவுருக் கொண்டு செல்வார்.

(இ-ள்.) நியாயபீடத்தி லிருப்பவர் ஏவிய வேவுகாரரோடுஞ் சென்று, (ஞாதிகளை) மறித்து, நியாயஸ்தலத்திற்கு உடன்கொண்டு சென்று அடைந்த காலையில், உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுள் (தவமேற் கொண்டு சென்ற) அந்தத் தனபதியைப்போலவே திருவுருவங்கொண்டருளி வருவாராயினர்.

அறக்கொடி என்றது உமாதேவியார் முப்பத்திரண்டறங்களையுங் காஞ்சிப்பதியில் வளர்த்தவராதலின். (கஎ)

**கலிவிருத்தம்.**

பெருவிலைக் குண்டலம் பிடரிற் பத்திபாய்ந்
தெரிகதிர் கவிழ்ப்பவா ளெறிக்கு மங்கத
மருவரைத் தோள்கிடந் திமைப்ப வாகமேற்
குருமணிக் கண்டிகை குலாய்ப்பின் கோட்டவே.

(இ-ள்.) பெருவிலையுடைய குண்டலமானது பிடரில் வரிசைப்பட பரவி விளங்குங் கிரணத்தை (ஒருபாற்) பரப்பவும், கிரணத்தை வீசும் வாகுவலயம் பெரிய மலைபோன்ற தோளிற்கிடந்து (ஒருபால்) விளங்கவும், மார்பின்மேல் நிறந்தங்கிய முத்துக்கண்டிகை விளங்கிப் பின்புறத்து (ஒருபால்) விளங்கவும். எ-று.

இதுமுதல் மூன்று பாடல்கள் ஒருதொடர். (கஅ)

முரலளி புறவிதழ் மொய்ப்பச் செய்யதா
மரைசிறி தலர்ந்தென மணிசெய் மோதிரக்
கரதலம் வீசியோர் கடுங்க ணேறென்ப்
பெருமித நடைகொடு நடக்கும் பெற்றியார்.

(இ-ள்.) இசைபாடும் வண்டுகள் புறவிதழில் நெருங்கி மொய்க்க, செந்தாமரை சிறிதுமலர்ந்ததைப்போல இரத்தினங்களிழைத்த மோதிரத்தையணிந்த கைகளை வீசி, ஒப்பில்லாத கோபம் பரந்த கண்களையுடைய இடபம்போலப் பெருமித நடையோடு நடக்குந் தன்மையுடையவராகி. எ-று. (கக)

வாடிய முளரிபோன் மாறிட் டசரிடத்
தூடியு மலர்ந்தபோ தொப்ப மைந்தன்மே
னாடிய தண்ணளி நயந்து முட்கிடை
கூடிய முகத்தினர் குறுகு வாரவை.

(இ-ள்.) முகங் கூம்பிய தாமரை மலரைப்போலப் பகைகொண்ட ஞாதிகளிடத்துச் சிறுதுனிகொண் டெழுந்த வாட்டமும், (அன்று) அலர்ந்த தாமரைப் பூப்போல (தாம் சுவிகாரங்கொண்ட) புத்திரன்மே லெழுந்தடர்ந்த தண்ணிய கிருபாங்யப் பும் தம்மனதிற் கிடந்தபடி தோன்றிய திருமுகத்தையுடையவராய் நியாயசபைக்கு வரும் பெருமானுர். எ-று.

"அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்-கடுத்தது காட்டு முகம்" என்றாற்போல, "உட்கிடை கூடிய முகத்தினர்" என்றார். (உ0)

**அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.**

அரசனிங் கில்லை கொல்லோ வான்றவ ரில்லை கொல்லோ
குரைகழல் வேந்தன் செங்கோல் கொடியதோ கோதி னூல்க
ளுரைசெயுந் தெய்வந் தானு மில்லையோ வூறுதி யான
தருமமெங் கொளித்த தோகொ லென்றறத் தவிசிற் சார்வார்.

(இ-ள்.) இந்நாட்டிலே அரசனில்லையோ? அறிவான் மிக்க முதியோரில்லையோ ? ஒலிக்கும் வீரக்கழலணிந்த அரசன் செங்கோல் கொடுங்கோலாயிற்றோ ? குற்றமில்லாத (வேதாகமாதி) நூல்கள் கூறுந் தெய்வமும் இங்கில்லையோ ? (மக்களுயிர்க்குப்) பெரும்பயனுயுள்ள அறக்கடவுள் எவ்விடத்தொளித்ததோ? என்றுபுலம்பி நியாயபீடத்திற் கெதிரே வந்தருளுகின்றார். எ-று. (உக)

தனபதி வரவு நோக்கி வஞ்சனைத் தாயத் தார்க
ளினைவுறு மனத்த ராகி விம்மித மெய்தி வெல்லு
மனவலி யிழந்து பண்டு வழக்கலா வழக்கால் வென்ற
வினைநினைந் துள்ள மச்ச நாணினால் விழுங்கப் பட்டார்.

(இ-ள்.) தனபதிவணிகனது வருகையைக்கண்டு வஞ்சமுள்ள ஞாதிகள் வஞ்சனை பொருந்திய மனதையுடையவராய் அதிசயமுற்று (வழக்கினை) வெல்லக்கருதிய மனவன்மையிழந்து, முன்பு கொடுவழக்கால் (தனபதிதங்கையை) வென்ற கொ

டுந்தொழிலைக்கருதி, தமதுமனம் (அரசனறியின் என்னவிளையுமோ ? என்னும்) பயத்தாலும் நாணத்தினாலும் விழுங்கப்பட்டார்கள். எ-று. (உஉ)

மாதுல ராகி வந்தோர் மருகனைத் தம்பின் வந்த
தாதுல ரார்த கோதை தன்னொடுந் தழீஇத்தங் கண்ட
மீதுல ராத சாம வேதமார்ப் பவர்போல் வாய்விட்
டேர்துல ரானீ ர்ந்தோ வையவென் றழுது நைந்தார்.

(இ-ள்.) மாமனாகத் திருவுருவங்கொண்டுவந்த சோமசுந்தரக்கடவுள் தமது மருகனை, தமக்குப் பின்னே வந்த மகரந்தம் வாய்ந்த கூந்தலையுடைய தங்கையோடு தழுவி, தமது திருக்கண்டத்தால் அழியாத சாமகீதத்தைப்பாடுவோர்போல வாய்திறந்து (நீங்கள்) தரித்திரர்களானீர்கள். ஐயோவென்று புலம்பிவருந்தி அழுதனர். எ-று.

அந்தோ ஐய-இரக்கப்பொருடரும் இடைச்சொற்கள். (உஙு)

குடங்கையி னெடுங்க ணாளுங் குமரனும் வணிசர் தாளிற்
றடங்கணீ ராட்ட வீழ்ந்தார் தடக்கையா லெடுத்துப் புல்லி
மடங்கலே றனையார் தாமு மற்றவர் தமைத்தங் கண்ணீர்
நெடுங்கடல் வெள்ளத் தாழ்த்திக் குமரனை நோக்கி நைவார்.

(இ-ள்.) உள்ளங்கைபோன்ற நெடிய கண்களையுடைய தனபதிதங்கையும் சுவிகாரபுத்திரனும், (வந்தருளிய) வணிகமூர்த்தியின் திருவடியைத் தமது பரந்த கண்ணீரால் அபிஷேகஞ் செய்ய (அவர்திருவடியில்) வீழ்ந்தார்கள். (அவர்களைத் தமது) நெடிய திருக்கரங்களாலெடுத்துத்தழுவி, சிங்கவேறுபோன்ற வணிகமூர்த்தியும் அவர்களைத் தமது கண்ணீராகிய பெருங்கடற் பெருக்கிலழுத்தி, அச்சுவிகார புத்திரனைப் பார்த்து மனம் வருந்துவாராயினர். எ-று.

தாளில் - இரண்டனுருபிற்கு ஏழனுருபுவந்தது. தாளை என்று பொருள். தடங்கண் என்றவிடத்துச் சிறப்புவிதியால் இனவெழுத்தாயது என்றும், தடக்கை என்றவிடத்துப் பொதுவிதியால் வல்லெழுத்து மிக்கது என்றுங்கொள்க. (உச)

ஐம்படை மார்பிற் காணேன் சிறுசிலம் படியிற் காணேன்
மொய்ம்பிடை மதாணி காணேன் முகத்தசை சுட்டி காணேன்
மின்படு குழைகள் காணேன் வெற்றுடல் கண்டே னப்பா
வென்பெறு மென்று பிள்ளைப் பணிகளுங் கவர்ந்தா ரென்னு.

(இ-ள்.) பஞ்சாயுதப்பணியை மார்பிற்காணேன். சிறுசிலம்பினைக் காலிற் காணேன். தோளிற்பூண்ட வாகுவலயத்தைக்காணேன். முகத்திற்றொங்கிய சுட்டியைக்காணேன். விளக்கம் பொருந்திய குண்டலங்களைக் (காதிற்) காணேன். அப்பா ! (இவ்வாறு) உன்னுடைய வெற்றுடலைக்கண்டேன். என்னவிலை பெறுமென்று குழந்தைக்குப்பூட்டிய (சிறிய) ஆபரணங்களையுங் கொள்ளைகொண்டார்களென்று. எ-று.

இது முதல் நான்கு பாடல்கள் குளகம்.

ஐம்படை திருமாலின் பஞ்சாயுதங்களின் வடிவமாகச்செய்யும் ஒருவகையாபரணம். இது குழந்தைப்பருவத்தணியத்தக்கது. (உரு)

அனைவரு மிரங்க வாய்விட் டழுதவ ரிளையா டன்னைத்
தனையனைக் கண்ணீர் மாற்றித் தடக்கையான் முதுகு தைவந்
தினையன்மின் னென்முன் வேறொன் றெண்ணன்மி னென்னு வஞ்ச
வினைஞர்வல் வழக்குச் சோர்ந்து விடுவது காண்மி னென்னு.

(இ-ள்.) கண்டோர்யாவரு மனமிரங்க வாய்திறந்தழுத வணிகமூர்த்திகள் இளையவளையுஞ் சுவிகாரபுத்திரனையுங் கண்ணீர்துடைத்து தமது செய்ய திருக்கரத்தால் அவர்கள் முதுகைத்தடவி வருத்தப்படாதீர்கள்: என் முன்னே வேறொன்றும் நினையாதீர்கள் என்று வஞ்சிக்குங் கொடுந்தொழிலையுடைய எனது ஞாதிகள் கொடு வழக்குச் சோர்ந்துவிடுவதைப் பாருங்கள் என்றுகூறி. எ-று. (உசு)

நட்பிடை வஞ்சஞ் செய்து நம்பினோர்க் கூன்மா றூட்டத்
துட்படக் கவர்ந்து மேற்றோர்க் கிம்மியு முதவா ராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போ லீட்டப்
பட்டதோ வறத்தா றீட்டு நம்பொருள் படுமோ வென்னு.

(இ-ள்.) சிநேகித்தவரிடத்தில் வஞ்சனைசெய்தும், நம்பியடைந்தவர்கட்கு மயக்கங்கலந்த உணவூட்டித் தமது வசப்பட (அவர்கள்) பொருளைக்கவர்ந்தும், யாசித்தவர்கட்கு இம்மியுங்கொடாதவராகியும், வட்டியில் வரம்பில்லாது பேசிவாங்கியும், சிலர்போலத்தேடப்பட்ட பொருளோ? தருமவழியிற்றேடிய நமது பொருள் கெடுமோ? என்று கூறி. எ-று. (உஎ)

மங்கல மாட மோங்கு மதுரைநா யகனை நோக்கிச்
செங்கரஞ் சிரமேற் கூப்பி மாணிக்கந் தேற்றி விற்கு
மெங்குல வணிக ரேறே யெம்மனோர் வழக்கை யிந்தப்
புங்கவ ரிடனுத் தீர்த்துத் தருகெனப் புலம்பி யார்த்தார்.

(இ-ள்.) மங்கலகரமாகிய மாடங்கள் உயர்ந்த மதுரைப்பதியிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை நோக்கித் தமது செவந்த கரத்தைச் சிரமேற் குவித்து, மாணிக்கத்தி னிலக்கணத்தைத் தெளிவித்து விற்றருளிய எமது வணிகமரபிற்கு ஓர் ஆண்சிங்கமே! எம்போலிகள் வழக்கை (நியாயசபையிலுள்ள) இந்தப்பெரியோரிடத்துத் தீர்த்துத்தரக்கடவாயென்று புலம்பிக் கதறினூர். எ-று. (உஅ)

ஆவலித் தழுத கள்வர் வஞ்சனை வெகுண்டு நோக்கிக்
காவலன் செங்கோ னுண்ணூல் கட்டிய தருமத் தட்டி
னாவெனுந் துலைநா விட்டெம் வழக்கையு நமராய் வந்த
மேவலர் வழக்குந் தூக்கித் தெரிகென விதந்து சொன்னார்.

(இ-ள்.) வாய்திறந்தழுத மெய்வேடமுடைய பெருமானூர், தமது ஞாதிகளைக்கோபித்துப் பார்த்துப்பாண்டியனுடைய செங்கோலாகிய நுண்ணிய நூல்கொண்டு கட்டிய தருமமாகிய துலாக்கோலில் உங்கள் நாவைத் துலைநாவாகச் சேர்த்து எமது வழக்கென்னும் பொருளையும் எம்முடையவராய்வந்த பகைவர்கள் வழக்கென்னும் பொருளையுமிட்டுச் சீர்தூக்கி அளந்தறியக்கடவீரென்று எடுத்துக்கூறினர். எ-று.

நரைமுது புலியன் னான்சொற் கேட்டலு நடுங்கிச் சான்றோ
ரிருவர்சொல் வழக்கு மேற்கொண் டனுவதித் திரண்டு நோக்கித்
தெரிவழி யிழுக்கு ஞாதி வழக்கெனச் செப்பக் கேட்டு
வெருவினர் தாயத் தார்கள் வலியரின் வேறு சொல்வார்.

(இ-ள்.) நரைத்த கிழப்புலியைப் போன்ற தனபதி வணிகனதுசொல்லைப் பெரியோர் கேட்டலும் நடுங்கி இருவர் சொல்லும் வழக்கையுங் கேட்டுப் பின்பு அனுவதித்து, இரண்டிலும் (உள்ளகுணங்குற்றங்களை) பார்த்துச்சோதிக்கு மிடத்து, ஞாதிகள் வழக்கு இழுக்கெனக்கூறக்கேட்டு, அந்தஞாதிகள் பயந்து (புறத்தில்) அஞ்சாதவர்போல வேறுகூறுகின்றூர்கள். எ-று.

அநுவாதம்-முன்விளக்கப்பட்டுள்ளது. (௩0)

தவலருஞ் சிறப்பி னுன்ற தன்பதி வணிக ரல்ல
ரிவனென வவையங் கேட்ப விருகையும் புடைத்து நக்குக்
கவளமா னுரித்துப் போர்த்த கண்ணுதல் வணிகர் கோமா
னவரவர் குடிப்பேர் பட்டங் காணிமற் றனைத்துங் கூறும்.

(இ-ள்.) இங்கு நிற்பவர் கெடுதலில்லாத சிறப்பமைந்த தனபதி வணிக ரல்லரென்றுகூற, யானையின் றோலையுரித்துப் போர்த்த சோமசுந்தரக் கடவுளாகிய வணிகர்பெருமான் தமதிருகரங்களையுங் கொட்டிச் சிரித்து, நியாயசபையிலுள்ளோர் கேட்கும்படி, அவரவருடைய குடிப்பேரும், பட்டமும், காணியுமாகிய யாவையு முறையாகக் கூறியருளுகின்றார். எ-று.

தாம் தனபதி வணிகரல்லவென ஞாதிகள் கூறினமையின், சபையார் தமது சொல்லை நம்பும்படி அவரவர் குடிப்பேர்-பட்டம்-காணி முதலியவற்றைக் கூறினர் என்க. (௯க)

தந்தைதாய் மாமன் மாமி தாயத்தா ரிவரை யீன்றார்
மைந்தர்க ளுடன்பி றந்தார் மனைவியர் கிளைஞர் மற்று
மந்தமில் குணங்கள் செய்கை யாதிய வடையா ளங்கண்
முந்தையின் வழுவா வண்ண முறையினுன் மொழிந்தான் முன்னோன்.

(இ-ள்.) பிதாவும், மாதாவும், மாமனும், மாமியும், ஞாதிகளும், அவரைப் பெற்றாரும், புதல்வரும், சகோதரரும், மனைவியரும், சுற்றத்தாரும், அளவில்லாத குணங்களும், தொழில்களும் முதலிய அடையாளங்களை முன்னைய முறைப்படி சிறிதுந் தவறாமல் (வணிகராக வந்த) முதல்வர் முறையாகக் கூறியருளினர். எ-று.

அனையது கேட்ட வான்றோ ரனைவரு நோக்கி யந்தத்
தனபதி வணிகர் தாமே யிவரெனச் சாற்ற லோடு
மனவலித் தாயத் தார்தம் வழக்கிழுக் கடைந்த தீது
நனைவழி வேம்பன் றேரிற் றண்டிக்கு நம்மை யென்னு.

(இ-ள்.) அவ்வார்த்தையைக் கேட்ட பெரியோர் எல்லோரும் ஆராய்ந்து, இவர் அத்தனபதிவணிகரே யென்று கூற, மனவன்மையுடைய தனபதி ஞாதிகள் தமது வழக்குக் குற்றமடைந்தது. தேனொழுகும் வேப்பமலர்மாலை யணிந்த பாண்டியன் இதனை யறிந்தால் நம்மைத் தண்டிப்பானென்றஞ்சி. எ-று.

நியாயசபையோர் பெருமானது அடையாள வார்த்தைகளால், அவரே தனபதி வணிகரென ஒப்புக்கொண்டமையாலும், தாம் முன் இழிவழக்கால் வென்றவராதலாலும், அரசன் செங்கோலுக்குத் தீமை விளைத்தோமென்று பெருந்தண்டம் விதிப்பானென் றஞ்சினர் என்றார். (௯௨)

இல்லினுக் கேகி மீள்வன் யானென்றுங் குளத்திற் கேகி
யொல்லையில் வருவே னென்று மொவ்வொரு வார்த்தை யிட்டு
வல்லெழு வனைய தோளா ரனைவரும் வன்கா றள்ளச்
செல்லெழு முகில்போற் கூட்டஞ் சிதைந்தன ரொளித்துப் போனார்.

(இ-ள்.) யான் வீட்டிற்குப்போய் வருகிறேனென்றும், குளத்திற்குப்போய் விரைந்து வருவேனென்றும் (இவ்விதமாக) ஒவ்வொரு வார்த்தை யுரைத்து, வலிய தூண்போன்ற தோளையுடைய (ஞாதிகள்) யாவரும், பெருங்காற்றானது அடித்துத் தள்ளச் சிதறிச் செல்லும் மேகம்போலக் கூட்டத்துள் (ஒவ்வொருவராய்ச்) சிதைந்து ஒளித்துச் சென்றார்கள். எ-று. (௯௪)

அனையவர் போக நின்ற வறனவின் மன்றத் துள்ளோர்
தனபதி வணிகர் தந்த தனமெலாந் தத்த மைந்தற்
கெனமனை யெழுதி வாங்கி யீந்தன ரீந்த வெல்லை
மனமொழி கடந்த நாய்கர் மறைந்துதங் கோயில் புக்கார்.

(இ-ள்.) அந்த ஞாதிகள் (போக்குக் காட்டி) ஒழிந்துபோக, ஒழியாது நின்ற தருமத்தைக் கூறும் நியாயஸ்தலத்திலுள்ளவர்கள், தனபதிவணிகர் தாமுன்பு தந்த பொருள்கள் யாவும் தமது ஸ்வீகார புத்திரனுக்கே யுரியனவென்று (அவராற்) சாதன மெழுதி வாங்கிக் கொடுத்தார்கள். அப்படிக்கொடுத்த சமையத்தில் வணிகத் திருவுருவங் கொண்ட மனவாக்கிறந்த சோமசுந்தரக்கடவுள் உருவங் கரந்து தமது திருக்கோயிலு ளெழுந்தருளுவர். எ-று.

மனமொழி கடந்த நாய்கர் - பெருமான் காரண நிமித்தமாக வணிகவேடந் தரித்துவரினும் மனவாக்குகட்கு அதீதப்பட்டவ ரென்க. (௬௫)

இம்மெனப் பலருங் காண மறைந்தவ ரிருந்தண் கூடற்
செம்மலென் றறிந்து நாய்கச் சிறுவனுக் குவகை தூங்க
விம்மித மடைந்து வேந்தன் வரிசையுள் வெறுப்ப நல்கிக்
கைம்மறி வணிகர் கோயில் புதுக்கினன் கனகங் கொண்டு.

(இ-ள்.) இம்மென்னு மளவில் யாவருமறிய மறைந்தருளிய வணிகேசர் பெரிய தண்ணிய மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே யென்று (நியாய சபையோரால்) தெரிந்து, சுந்தரேசபாதசேகரபாண்டியன் வியப்புற்று, வணிகச் சிறுவனுக்குக் களிப்பு மிக வரிசைகள் மனம் வெறுப்பக் கொடுத்து, திருக்கரத்தில் மானேந்தியவரும் வணிகவடிவேற்றுவந்தவருமாகிய சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலைப் பொன்னாற் புதுக்கினன். எ-று.

உவகை தூங்க, உள்வெறுப்ப, என்பன மிகுதிப் பொருள்படக் கூறியவாம்.

கலிநிலைத்துறை.

பூத நாயகன் பூரண சுந்தரப் புத்தேள்
பாத சேகரன் வரகுண பாண்டியன் புயத்தி
லோத நீருல கின்பொறை சுமத்தவைத் தும்பர்
நாதர் சேவடித் தாமரை நகைநிழ லடைந்தான்.

(இ-ள்.) பஞ்சபூதங்கட் கிறைவராகி (அவற்றுள்ளும் புறம்பும்) நிறைந்த சுந்தரேசபாதசேகரபாண்டியன் கடல்சூழ்ந்த பூபாரத்தை வரகுணபாண்டியன் புயத்தில், எற்றி, தேவநாயகராகிய சிவபெருமானுடைய தாமரை மலர்போன்ற செவந்த திருவடியின் பிரகாசிக்கின்ற நிழலின்கீழ்க்கலந்தனன். எ-று.

பூதநாயகன் என்றதற்குப் பூதகணங்கட்கிறைவரெனினுமமையும். மக்களுயிர்க்குக் கோடைவெப்பாற்றும் மரநிழல்போலப் பிறவி வெப்பாற்றுந் திருவடி நீழல் இருண்மைய மற்றதன்றென்பார் "சேவடித்தாமரை நகை நிழல்" என்றார். (௬௭)

மாமனாகவந்து வழக்குரைத்த படலம்
முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௧௬௫.

---



வரகுணனுக்குச் சிவலோகங் காட்டியபடலம்.

உ

சிவமயம்.

# நாற்பதாவது,

## வரகுணனுக்குச்

# சிவலோகங் காட்டிய படலம்.

---

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பண்கொண்ட வேதமுத லிடையீறு நாடரிய பரமாம னாகியொரு வணிக, னெண்கொண்ட காணிபொருள் கவர்ஞாதி மாதுலரை யெதிரேறி வென்றபடி யிதுவாந், தண்கொண்ட நேமிவர குணதேவ னெய்துபழி தன்னைத் துடைத்தனைய மனவன், கண்கொண்டு காணவுயர் சிவலோக மதுரைதனில் வருவித்த காதையினி மொழிவாம்.

(இ-ள்.) பண்ணோசை பொருந்திய வேதங்களால் ஆதிமத்தியாந்தங் காணுதற்கரிய சோமசுந்தரக்கடவுள் ஒரு செட்டிச் சிறுவனது மாமனாகிய தனபதிவணிகர் வேடங்கொண்டு, (அவனது) அளவிடப்பட்ட நிலங்களையும் பொருளையும் அபகரித்த தனபதி ஞாதிகளாகிய மாமன்மார்களை யெதிர்த்து (நியாயஸ்தலம்) ஏறி வெற்றிகொண்ட திருவிளையாடல் இதுவாகும். தண்ணிய ஆக்கினைசக்கரத்தையுடைய வரகுண பாண்டியன் அடைந்த பிரமஹத்தியை யொழித்து அப்பாண்டியன் தனது கண்களாற் கண்டு தரிசிக்க (எல்லா வுலகங்களினும்) உயர்ந்த சிவலோகத்தை மதுரையில் வருவித்துக் காட்டியருளிய திருவிளையாடலை (யாம்) இனிக் கூறுவாம். எ-று. (க)

இயமான னிந்திரவி யெரிவானி லஞ்சலில மெறிகா லெனும்பகுதி யிருநான், மயமான சுந்தரனை மனவாய்மெய் யன்பினிறை வழிபா டடைந்தவர குணனுய்ச், சயவேளை வென்றவடி வினனீறில் வென்றிபெறு சதவேள்வி யிந்திரனை நிகர்வோ, னியன்மேனி கொண்டவொளி யினிலேழ்ப சும்புரவி யினன்றேசு வென்றவர குணனே.

(இ-ள்.) ஆன்மாவும், சந்திரனும், சூரியனும், அக்கினியும், ஆகாயமும், நிலமும், சலமும், எறிகின்ற காற்றுமென்னும் அஷ்டமூர்த்தமாகிய சோமசுந்தரக்கடவுளை, மன வாக்கு (காயங்)களோடு மெய்யன்பு நிறைந்த வழிபாடு பூண்ட காரணத்தினால் சிரேஷ்டமான குணத்தையுடையவனாகி, (சாமுத்திரிக), இலக்கணமமைந்த தனது மேனியின் ஒளியால், பசிய எழு குதிரைகள் பூட்டிய தேரையுடைய சூரியனது ஒளியை வென்ற வரகுணதேவபாண்டியன் தனது வடிவத்தால் வெற்றியமைந்த மன்மதனை வென்றவன்: முடிவில்லாத வெற்றிபெற்ற நூறு யாகத்தால் தேவேந்திரனைப் போன்றவன்.

"இயமான * * * இருநான் மயமான" என்றது சிவபெருமான் அஷ்டமூர்த்தமாக விளங்குதலின் இதனை,

திருவாசகம்.

"நிலநீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்
புலனாயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்துநின்றா
னுலகேழெனத்திசைபத்தெனத்தானொருவனுமே
யலவாகிநின்றவாதோணோக்கமாட்டாமோ"—என்பதனு னுணர்க. (உ)

மறையாதி கலைபலவு மகமாதி பலவினையும் வழுவாது நிறுவுதலின் மலர்மே, லிறையாகி மலர்வனிதை பிறிவான திருமகளி ரிகபோகம் விளையமுறை செயலாற், கறையாழி வளைகளணி கரனாகி யிகல்செய்போர் றி கரணாதி பகைகளையு நெறியா, லறைவாய்மை யுணாயின்முழு துணர்வாலெவ் வுயிருநிறை யரனாகி யுலகுமுறை செயுநாள்.

(இ-ள்.) வேதமுதலிய நூல்கள் பலவற்றையும், யாகமுதலிய பலகருமங்களையும், வழுவாது நிலைபெறச்செய்தலால்,தாமரைமலரில்வசிக்கும் பிரமதேவராகியும், தாமரையில் வாழுந்திருமகளின்கூறான (அன்னலக்ஷ்மிமுதலிய) திருமகளிரால், இகபோகம் (ஆகிய்பயிர்) விளைய அரசுசெலுத்துதலால் உதிரந்தோய்ந்த சக்கரத்தையுஞ் சங்கத்தையுமேந்தியதிருக்கரங்களையுடைய திருமாலாகியும், (தம்முட்) போர்புரியும் இந்திரியமும் அந்தக்கரணமுமாகிய பகைகளைக்களையும் நல்லொழுக்கத்தாலும்வேத நூற்பொருளாலடைந்த முற்றுணர்ச்சியாலும் எல்லாவுயிர்களிலும் நிறைந்த அபரசிவமாகியும், உலகத்தை (மனுமுறைப்படி) அரசுசெய்துவருங்காலத்தில். எ-று.

இச்செய்யுளும், இயமானனென்னுஞ் செயயுளும் எதுவுருவகவணி. (௩)

வேட்டஞ்செய் காதலொரு நாட்டங்க வேகிவன மேட்டெங்கு மாதடவி யெரியா, நாட்டஞ்செய் காயுழுவை நீட்டுங்கை யானைமுக நாட்டும்பலேனமிவை முதலா, வோட்டஞ்செய் தேரிரவி கோட்டின்க ணேறியிரு ளூட்டந்தி மாலைவரு மளவாக், கோட்டஞ்செய் வார்சிலையின் மாட்டம்பி னூறியுயிர் கூட்டுண்டு மாநகரில் வருவான்.

(இ-ள்.) ஒருநாள் வேட்டையாடும் விருப்பம் தனக்குண்டாக, காடாகிய மேட்டு நிலமுழுதுஞ்சென்று, மிருகங்களைத்தேடி, கோபாக்கினிபரக்குங்கண்களையுடைய கொலைத்தொழில் பொருந்தியபுலியும், நீட்டியதுதிக்கையையுடைய யானையும், முகத்தால் நிலத்தையுழும் ஆண்பன்றியுமாகிய இம்மிருகங்கள்முதலாக (மேற்றிசையாகச்) செல்லுந் தேரையுடைய சூரியன் அத்தமயகிரியிற் சென்று இருளைப்பரப்பும் அந்திமாலைவரும் அளவாக, வளைத்தவில்லிற்பூட்டியஅம்புகளினாற்கொன்று உயிர்களைக்கொள்ளைகொண்டு பெரிய மதுரை நகரத்தைநோக்கி வருவானாயினன். எ-று.

காலிற்க டும்புரவி மேலிற்க டிந்துவரு காலக்க டந்தனிலொர் மறையோன், மாலுற் றயர்ந்துமுகம் வேர்வைக் குறுந்திவலை வாரக் கிடந்துவிழி துயில்வோன், மேலக் கடும்புரவி கால்வைப்ப வந்தணனும் வீவுற்ற விந்தனன தறியான், கோலிற்செ லுப்பரியின் மீனத்த னுந்தனது கோயிற்பு குந்தனன வளவே.

(இ-ள்.) காற்றுப்போல வேகமாய்ச்செல்லுங் குதிரைமேல் விரைவாய்ச் செல்லும்பொழுது அக்காட்டில் ஒருவேதியன் நித்திரை மயக்கங்கொண்டுசோர்ந்து முகத்தில்வெயர்வாகிய சிறுதுளி சிந்தக்கிடந்து துயில்கின்றவன்மேல், அந்தவேகத்தையுடைய குதிரையானது தன்கால்வைத்துச்செல்ல, (அதனால்) அம்மறையவனும் அறிவழிந்திறந்தான். அதனையறியாதவனாகி அம்புபோல விரைந்து செல்லுங் குதிரையோடு வரகுணபாண்டியனுந் தனதுகோயிற்குச்சென்றனன். அச்சமயத்தில்.

அறியான் என்றது முற்றெச்சம். பயிலின் என்பதனிறுதியில் ஒடு உருபு தொக்குகின்றது. (ரு)

மேற்படி - வேறு.

கனவட்டத் தடியிடறப் பொறிவிட்டுப் புலனவியக் கரணத்துட் பொதியுயிர்விட் டவனாகந், தனையொக்கற் பனவரொடுத் தனர்கிட்டிக் குரிசில்கடைத் தலையிட்டத் திறமொழியத் தமிழ்மாற, னினைவுற்றுப் பனவர்கையிற் கனகக் குப் பைகணிறுவித் தெமதிக்குற் றவனையெடுத் தெரிமாலை, புனைவித்தக் கடன்முடிவித் தனன்மற்றப் பழிபடரிற் புதையப்பற் றியதிடைவிட் டகலாதே.

(இ-ள்.) குதிரையின் காலிடறுதலால் ஐம்புலன்களும் இந்திரியங்களிற் செல்லுதலொழிந்துகெட, (மனமுதலிய) அந்தக்கரணங்களிற் பொதிந்தவுயிரிழந்த வேதியனுடையதேகத்தை (அவனது) உறவினராகிய வேதியரொடுத்து, பாண்டியனுடைய கடைவாயிலையடைந்து (அப்பிரேதத்தை) இட்டு, அந்தச்செய்தியைக்கூற, தமிழ்வளர்க்கும் பாண்டியன் (அதனைக்கேட்டு) வருத்தமெய்தி, அவ்வேதியர்கையிற் பொற்குவை நிறைவாகத்தந்து, யமபுரியடைந்த வேதியனையெடுத்துத் தகனக்கிரியை முற்றுவித்தான். (வரகுணபாண்டியன்) துன்பத்திலழுந்தஅப்பிரமஹத்திஇடையறுது பற்றியது. எ-று.

கனவட்டம் என்றது பாண்டியன் பட்டத்துக்குதிரையின்பெயர். (சு)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பற்றிய பழிக்குத் தீர்வு பழமறைக் கிழவர் சொன்ன
பெற்றியி னைவே றுண்டி நதிக்கரை பெருநூற் கேள்வி
முற்றிய மறையோர்க் கீந்து மூவராந் தாரு வேந்தைச்
சுற்றியுந் தூர்வை கொய்து சுரபிகள் சுவைக்க வீந்தும்.

(இ-ள்.) (வரகுணபாண்டியன்தன்னைப்) பற்றியபிரமஹத்திக்குப் பிராயச்சித்தமாகத் தொன்றுதொட்டுள்ள வேதத்திற்குரிய அந்தணர்கூறிய தன்மையின்படி ஐவகைப்பட்டவுணவுகளைப் புண்ணியநதிதீரத்திலே, வேதநூற்கேள்வியிற்கைபோன வேதியருக்குக்கொடுத்தும், திரிமூர்த்திகளின் வடிவமாகிய அரசமரத்தைப் பிரதக்ஷிணஞ்செய்தும், அறுகம்புல்லை அறுத்துப் பசுக்கள் உண்ணக்கொடுத்தும் எ-று.

இதுமுத லிரண்டு பாட்ல்கள் குளகம்.

அரசமரத்தின் முதற்பாகம் பிரமமூர்த்தமும், இடைப்பாகம் விஷ்ணுமூர்த்தமும், இறுதிப்பாகம் உருத்திரமூர்த்தமும் என்பராதலின் "மூவராந்தாருவேந்து" என்றார். (எ)

அகமரு டணத்தா லோம மாற்றிபு மானைந் தாவி
னகைமணிக் கோடு தோய்ந்த நளிர்புனல் குடித்துந் தான
வகைபல கொடுத்து நீங்கா வலியதா யிழுது பெய்த
புகையழ லெனமே லிட்டுப் புலப்பட வளர்ந்த தன்றே.

(இ-ள்.) அகமருஷண மந்திரத்தினாலே ஹோமஞ்செய்தும், பஞ்சகவ்வியத்தையும் பசுவினது பிரகாசிக்கின்ற அழகியகொம்பு தோய்ந்த நீரையுங்குடித்தும், பலவகைப்பட்டதானங்களைக்கொடுத்தும், நீங்காதவன்மையுடையதாய், நெய்வார்த்துமூட்டியபுகையையுடைய நெருப்பானது மூண்டெழுதல்போல (கண்களுக்குப்புலப்பட்ட (பிரமஹத்தி) எழுந்தோங்கிவளர்ந்தது. எ-று.

அக்மருஷணம்—பாவத்தைப்போக்குவது. கட்கம் என்னு மோர்மிருகம் புண்ணியமிருகமாதலாலும், கோவென்னும் பரியாயநாமமுடையதாதலாலும் அதன் கொம்பால்முகந்த தீர்த்தமெனப் பொருள்கோடலுமமையும்.

பஞ்சகவ்வியங்களில், கோசலம் - செல்வமுண்டாக்கும். கோமயம் - நோயொழிக்கும். பால் - சத்துருநாசஞ்செய்யும். தயிர் - புத்திரருண்டாக்கும். நெய்-யாவராலும் பூசிக்கச்செய்யும் என்பது நூன்முறை. (அ)

கலிநிலைத்துறை.

ஏங்கும் பெருமூச் செறியுங்கை யெறியுங் குன்றி
னோங்குஞ் சிறுகு முடன்றூர்த்திடு முன்னும் பின்னும்
பாங்குந் தொடருஞ் சிரிக்கும்பகு வாயை மெல்லு
நீங்குங் குறுகும் பழிதாவென நேர்ந்து பற்றும்.

(இ-ள்.) ஏங்கும்; பெருமூச்சுவிடும்; கைகொட்டும்; மலைபோலெழுந்தோங்கும்; (அணுப்போலச்) சிறுகும்; கோபித்துஇறைச்சலிடும்; முன்புறமும் பின்புறமும் நடுவிலும் (மாறிமாறித்) தொடர்ந்து நிற்கும்; அட்டகாசஞ்செய்யும்; (பழிக்குப்பழி வாங்குவேனென்று) தனது பிளந்தவாயினைமெல்லும்; (சிறிது) நீங்கியிருக்கும்! (மீண்டும்) சமீபிக்கும்; (பழிக்குப்) பழிகொடுவென்று எதிர்த்து (வரகுணபாண்டியனைப்) பிடிக்கும். எ-று. (கூ)

மாசுண்ட தெய்வ மணிபோற்பணி வாயிற் பட்ட
தேசுண்ட தீந்தண் மதிபோலொளி தேம்பி வண்டு
மூசுண்ட தான முகமாவுண்ட வெள்ளில் போலக்
காசுண்ட பூணு னறைபோய கருத்த னானன்.

(இ-ள்.) சாணைபிடியாத தெய்வத்தன்மையுடைய மாணிக்கம்போலவும், இராகுவின் வாயிலகப்பட்ட ஒளியிழந்த இனிய தண்ணிய சந்திரன்போலவும், பொலிவிழந்து வண்டுமொய்த்த மதம்பொருந்திய முகத்தையுடைய யானையுண்டவிளங்கனிபோலவும் இரத்தினங்களிழைத்த ஆபரணம்பூண்ட வரகுணபாண்டியன் ஒட்டையான மனமுடையவனானான். எ-று.

யானைநோயைப் பெயர் ஒற்றுமைபற்றிக் களிறுண்ட விளங்கனி, யானையுண்டவிளங்கனியெனக் கூறுவது நூன்மரபாதலின் "வண்டுமூசுண்டதான முகமாவுண்டவெள்ளில்" என்றார்.

யானைநோயடைந்த விளங்கனி உள்ளீடிழத்தல்போலப் பாண்டியன் அறைபோய கருத்தனானானெனக்கொள்க. (கo)

மறையோர்கள் பின்னும் பழிமேலிடு வண்ண நோக்கி
யிறையோ யிதுநான் முகன்சென்னி யிறுத்த கூட
லறவோ தியனைத் தினமாயிரத் தெண்காற் சூழ
லுறவே யொழிக்கப் படுமின்ன முரைப்பக் கேட்டி.

(இ-ள்.) (பாண்டியன் செய்த புண்ணியங்களாலொழியாது) மீளவும் பிரமஹத்தி மேலோங்கிவரும் வகையை வேதியர்கள் பார்த்து, அரசனே! இப் பிரமஹத்தி பிரமன் சிரத்தைக் கொய்த மதுரையி லெழுந்தருளிய தருமமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளை நாடோறும் ஆயிரத்தெட்டுத்தரம்பிரதக்ஷிணஞ்செய்தா லொழிக்கப்படும். இன்னமுங் கூறக்கேட்பாய். எ-று. (கக)

ஆனு விரத நெறியாலிரண் டைந்து வைகல்
வானு டனையம் முறையால்வலஞ் செய்து வந்தா
யானு லதற்கு வழிகாட்டுமென் றையர் கூறப்
போனு னரசன் புனிதன்றிருக் கோயில் புக்கான்.

(இ-ள்.) நீங்காத விரதநெறியில் நின்று, சோமசுந்தரக்கடவுளை அம்முறையாகப் பத்துநாள் பிரதக்ஷிணஞ் செய்துவருவாயாகில், அப் பிரமஹத்திக்குத் தீர்வு காட்டியருளுவரொன்று அந்தணர்கள் சொல்ல, வரகுணபாண்டியன் சென்று அச் சோமசுந்தரக்கடவுளின் திருக்கோயிலை யடைந்தனன். எ-று.

ஆனுவிரதம் - அதிவிரதம் என்க. (கஉ)

விழியா யிரத்தோன் பழிதீர்த்தனை வேதி யன்றன்
கழியாத மாபா தகந்தீர்த்தனை கௌவைக் கங்கைச்
சுழியா றலைக்குஞ் சடையாயெனைத் தொட்ட லைக்கும்
பழியா னதுந்தீர்த் தருளென்று பணிந்து வீழ்ந்தான்.

(இ-ள்.) ஆயிரங் கண்களையுடைய இந்திரன் (தவஞ்செய்துகொண்டிருந்த விருத்திராசுரனைக் கொன்றதனால்) அடைந்த பிரமஹத்தியை யொழித்தருளினை. ஒருவராலும் நீக்குதற்கரிய (தாயைப்புணர்ந்து தந்தையைக்கொலைசெய்த வேதியனது) மகாபாதகத்தை யொழித்தருளினை. ஒலியையுடைய கங்கையென்னுஞ்சுழித்தல்பொருந்திய நதியானது அலைக்குஞ் சடையையுடைய பெருமானே! என்னைப்பற்றி வருத்தும் பழியையுந் தீர்த்தருளா யென்று வணங்கி நமஸ்கரித்தான். எ-று.

இந்திரனுக்குற்ற பிரமஹத்தியும், வேதியனுக்குற்ற மஹா பாதகமும் புத்திபூர்வமாகச் செய்யப்பட்டன. யானோ அபுத்தி பூர்வமாகச் செய்தேன். அவற்றை நீக்கியருளிய தேவரீர் என் துயரைத் தீர்த்தல் அரிதன்றே யென்பது புதைபொருளாகத் தோன்றும். (கஙு)

எண்ணும் படியும் முறையால்வலந் தேத்த வையன்
விண்ணின் றியம்பு மரசேபரி மேத வேள்வி
நண்ணும் பயனே ரடிவைப்பினி னண்ண வெம்மைப்
பண்ணும் வலத்தான் மகிழ்ந்தேம்பழி யஞ்சன் மன்னே.

(இ-ள்.) அம்முறைப்படி நின்றெண்ணப் பிரதக்ஷிணஞ் செய்து துதிக்க, சோமசுந்தரக்கடவுள் ஆகாயத்தினின்று (அசரீரியாகக்) கூறி யருளுவார். அரசனே! (பிரதக்ஷிணஞ் செய்வேமென்று) ஓரடி யெடுத்துவைக்கில், அசுவமேதயாகப் பயன் கிட்டும். எம்மைச் செய்யும் பிரதக்ஷிணத்தால் மகிழ்வுற்றேம். பழிக்கு அஞ்சுதலொழிவாய். எ-று.

இதுமுதல் மூன்று பாடல்கள் ஒருதொடர். (கச)

பொன்னேடுமுத்தங் கொழிக்குந்துறைப் பொன்னி நாட
னின்னோ டமராற்ற நினைந்தெழு நீயு நேர்வா
யன்னோ னுனக்குப் புறகிட்டகன் றோடு நீயும்
பின்னோடி யெட்டிப் பிடிப்பாரிற் றுரத்து மெல்லை.

(இ-ள்.) பொற்கட்டிகளோடு முத்துக்களை அலைக ளொதுக்குந் துறையையுடைய காவிரி நாட்டரசனாகிய சோழன் உன்னுடன் போர்செய்யக்கருதி வருவான். நீயும் அவனோடு எதிர்ப்பாய். அவன் உனக்குப் புறங்காட்டிப் போர்க்களத்தி னின்று நீங்கி யோடுவான். நீயும் அவன் பின் சென்று எட்டிப் பிடிப்பவர் போலத் துரத்துங் காலையில். எ-று. (கரு)

எண்மையா மருச்சித் திருக்குந்தலத் தெய்து வாயா
லமையா தவன்கட் பழியாற்றுது மென்னச் சேற்க
ணுமையாண் மணாள னருள்வாழ்த்தி யுரக னுச்சிச்
சுமையாறு தோளான் றெழுதான்ற னிருக்கை புக்கான்.

(இ-ள்.) எம்மை நாமே யருச்சனைசெய்து வழிபட்டிருக்குந் தலமாகிய திருவிடைமருதூரில் வருவாய். பொறுத்தற்கரிய கொடிய பழியை (அங்கே) ஒழிப்போம் என்றருள, மீனாட்சி தேவியார் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளைத் துதித்து, ஆதிசேடன் தனது உச்சிச்சுமை யாறுதற் கெல்லையாகிய தோளையுடைய வரகுணபாண்டியன் வணங்கித் தனது இருப்பிடத்தைச் சேர்ந்தனன். எ-று.

எமையாமருச்சித்திருக்குந்தலமென்றது.

**காசிபர்முதலியமுனிவர்கள் அகஸ்தியர் கட்டளைப்படிதவஞ்செய்து சரஸ்**வதியால் வேதாகமங்களினுண்மைப்பொருளுணர்ந்து, இலட்சுமியால் சிவபூஜாவுபகரணங்களைப்பெற்று, உமாதேவியாரருளைநாடி ஓர்நந்தவனமுண்டாக்கித்தவஞ்செய்து உமாதேவிதரிசனம்பெற்று, சிவதரிசனம் வேண்டுமென வரங்கேட்க, உமாதேவியார் தமதிதயகமலத்திற்பெருமானைநினைக்க, அவர் **சோதிமயமானலிங்கமூர்த்தியாய்** எழுந்தருளிக்காட்சிதந்து, உமையே! நாம் இப்போது எழுந்தருளிய சோதிலிங்கத்தோடு இத்தலத்தில் அநாதியாயுள்ள இலிங்கத்தைக்கூட்டி யாவரும்பூசித்துக்கடைத்தேறும்படி நாமே பூசித்தருளுகின்றோமெனக் கூறிக் கலப்பித்துப் பூசித்தருளினர் என்பது **திருவிடைமருதூர்ப்புராண** வரலாறு. (கசு)

ஆர்த்தார் முடியோன் சிலநாள்கழித் தாற்ற லேற்ற
போர்த்தாவு வேங்கைக் கொடித்தானை புடவி போர்ப்பப்
பேர்த்தார் கலிவந் தெனப்பெரிய மார்ப்பக் கன்னிப்
பார்த்தாம வேன்மீ னவனாட்டிற் படர்ந்த வெல்லை.

(இ-ள்.) சிலநாள் கழித்து, ஆத்திமாலை யணிந்த முடியையுடைய சோழனுடைய வன்மைபொருந்திய போர்மேற் செல்லும் புலிக்கொடியை யுயர்த்திய சேனையானது, உலகம் புதைபடக் கடலானது நிலைபெயர்ந்துவந்தாற்போல, பெரிய போர் முரசொலிக்க, கன்னிநாட்டை யாளும் வெற்றிமாலை புனைந்த வேலேந்திய பாண்டியனாட்டில் வந்த காலையில். எ-று. (கஎ)

மிடைந்தேறு நேரிப் பொருப்பன்பல்லட வேலை மேற்சென்
றடைந்தேறி மீனக் கொடியா னமராட வாழி
கடைந்தேறு வெற்பிற் கலங்கிற் றெனக்கிள்ளி சேனை
யுடைந்தேக வெந்நிட் டுடைந்தோடின னுள்ளம் வெள்கா.

(இ-ள்.) நெருங்கிப் போருக்குவந்த நேரிமலையையுடைய சோழனது சேனா சமுத்திரத்தின்மேல் மீனக்கொடியையுடைய பாண்டியன் சென்று போருக்கெழுந்து போர்புரிய, திருப்பாற் கடலானது கல்டயவெழுந்த மந்தரகிரியால் நிலை கலங்கியது போலச் சோழன் சேனையானது நிலைகலங்கி யோட, (சோழன்) மன நிலைகலங்கிப் புறமுதுகிட்டு ஓடினான். எ-று.

சோழன்சேனை கடலாகவும், பாண்டியன் மந்தரமாகவும், சோழன்சேனை ஓடியது மந்தரகிரியாற் கலங்கிய கடலாகவும் உவமித்தார். (கஅ)

சுறவக் கொடியண்ண லுரந்துபின் பற்றிச் செல்வோன்
புறவக் கடிமுல்லைபுந் தாமண்ப் போது மேந்தி

நறவக் கழிநெய்தலங் கானலின் ஞாங்கர் மொய்த்த
விறலைப் புலவு கழுவீர்ந்துறைப் பொன்னிசேர்ந்தான்.

(இ-ள்.) மீனக்கொடியையுடைய வரகுணபாண்டியனால் துரத்திப் பின்பற்றிச்செல்லப்பட்டசோழன், முல்லைநிலத்திலுள்ள வாசம்பொருந்தியமுல்லைமலரையுந் தாமரைமலரையுமேந்தித் தேன்சிந்துங் கழிசூழ்ந்தநெய்தனிலத்திலுள்ள சோலையின் பக்கத்தில் நெருங்கிய இருலின்புலால் நாற்றத்தைப்போக்கும் குளிர்ந்ததுறையையுடையகாவிரிநதியை யடைந்தனன். எ-று. (கக)

பூசத் துறையிற் புகுந்தாடியப் பொன்னித் தென்சார்
வாசத் திடைமா மருதைப்பணி தற்கு வைகைத்
தேசத் தவன்கீழ்த் திசைவாயில் கடந்து செல்லப்
பாசத் தளையும் பழியும்புற நின்ற வன்றே.

(இ-ள்.) வைகைநதிசூழ்ந்த பாண்டிநாட்டையுடைய வரகுணபாண்டியன் பூசத்துறையிற் சென்று நீராடி, அக் காவிரிநதியின் தக்ஷிணதீரமாகிய பெருமைபொருந்திய திருவிடைமருதூரி லெழுந்தருளிய சிவபெருமானை வணங்க, கீழ்த்திசை வாயிலைக் கடந்து உள்ளே செல்ல, பாசமாகிய பந்தமும் பிரமஹத்தியும் (அவனுடன் செல்லாது) புறத்தில் நின்றன. எ-று.

பூசத்துறை என்றது தைமாசபூர்ணிமை என்க.

திரு இடைமருது என்றதால், முதல் மருதும், கடைமருதும், வேறுண்டெனக்கொள்க. (உ௦)

சுருதிச் சுரும்பு புறஞ்சூழ்ந்து குழறத் தெய்வ
மருதிற் சிறந்த பெருந்தேனைக்கண் வாயங் காந்து
பருகிப் படிந்து தழல்வாய்வெண்ணெய்ப் பாவை யொப்ப
வுருகிச் செயலற் றுரையற்றுணர் வாகி நின்றான்.

(இ-ள்.) வேதங்களாகிய வண்டுகள் புறஞ்சூழ்ந்து பண்பாட, தெய்வத்தன்மையுடைய இடைமருதில் சிறந்துவிளங்கும் பெருந்தேனை, கண்ணாகிய வாயைத் திறந்து படியப்பருகி, நெருப்பிலிட்ட வெண்ணெயாற் செய்த பதுமைபோலுருகிச் செயலொழிந்து வசனித்தலொழிந்து அறிவின் வடிவாகிநின்றனன். எ-று.

திருக்கைலாயமே மருதமரமாகவந்திருத்தலின் தெய்வமருதுஎனப்பட்டது. அதாவது:—ஒருகாலத்தில் உமாதேவியார் சிவபெருமானைப் பணிந்து தேவரீர் பூமியில் எழுந்தருளியிருக்குந் தலங்களைக் காட்டியருளவேண்டும் எனக் கேட்க, சிவபெருமான் அவ்வாறே தாமெழுந்தருளியிருக்கும் எல்லாத் தலங்களையுந் தேவியாருக்குக் காட்டிக்கொண்டு காவிரித்தென்கரையி லுள்ள திருவிடைமருதூர்க்கு நேரே எழுந்தருளுகையில், திருக்கைலையானது எம்பெருமானையும் பிராட்டியாரையும் பிரிவாற்றாது மருதவிருக்ஷவடிவாக நிற்கக்கண்டு சிவபெருமான் உமாதேவியாரோடு அதன்நிழலில் எழுந்தருளிநின்றன ரென்பது திருவிடைமருதூர்ப் புராணவரலாறு.

"இடைமருதிற் சிறந்த பெருந்தேன்"—என்பதனை,

திருவாசகம்.

"அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ"—என்பதனா னுணர்க

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நிராமய பரமா னந்த நிருத்தநான் மாடக் கூடற்
பராபர விமையா முக்கட் பகவபார்ப் பதிம ணாள
புராதன வகில நாத புண்ணிய மருத வாண
வராவணி சடையா வென்றெண் ணளவிலாத் துதிகள் செய்தான்.

(இ-ள்.) நோயில்லாதவனே! (கண்டோர்க்குப்) பேரானந்தந்தருந் திருக்கூத்தையுடையவனே! நான்மாடக் கூடலாகிய மதுரையி லெழுந்தருளிய பராபரனே! இமையாத திரிநேத்திரங்களையுடைய பகவானே! உமாதேவியார் தலைவனே! (எல்லாத் தேவர்கட்கும்) மூத்தவனே! பாம்பை யணிந்த சடையை யுடையவனே! என்று, இடைமருது கணக்கில்லாத தோத்திரங்கள் செய்தனன். எ-று.

ஆமயம் - நோய். நிராமயம்-பிறப்பும் இறப்புமில்லான் என்பதும் ஒன்றும்.

சொற்பதங் கடந்த சோதி துதித்தடி பணிந்த வேந்தை
மற்பெருந் தோளாய் கீழை வாயிலிற் பிரம சாயை
நிற்பதந் நெறியாற் செல்லே லிழன்மதி யுரிஞ்சு மேலைப்
பொற்பெரு வாயி னீங்கிப் போதிநம் மதுரைக் கென்றான்.

(இ-ள்.) சொல்லளவையைக் கடந்து நின்ற ஒளிமயமாகிய பெருமானார் தம்மைத் துதித்து அடிபணிந்த வரகுணபாண்டியனை (பார்த்து) மற்போர் நிறைந்த பெரிய தோளையுடையாய்! (நீ வந்த) கீழைவாயிலிற் பிரமஹத்தி நிற்கின்றது; அவ்வழியாற் செல்லாதே. ஒளியமைந்த சந்திரமண்டலத்தையளாவும் மேற்றிசையிலுள்ள பொன்னாலாகிய பெரிய வாயிலினின்று நீங்கி, நமது மதுரைக்குச் செல்வாயென்று கூறியருளினர். எ-று. (உரு)

வரகுண னதுகேட் டையன் மருதினை வளைந்து நீங்கற்
கருமையால் வாயி றோறு மடிக்கடி வீழ்ந்து வீழ்ந்து
வரைதொளைத் தன்ன மேலை வாயிலாற் போகா னன்ன
திருமணிக் கோபு ரந்தன் பெயரினாற் செய்து சின்னாள்.

(இ-ள்.) வரகுணபாண்டியன் அத்திருவார்த்தையைக் கேட்டு, இறைவர் எழுந்தருளியிருக்கும் இடைமருதினைப் பிரதக்ஷிணஞ்செய்து பிரிதற்கருமையால் வாயில்தோறும் அடிக்கடி வீழ்ந்து பணிந்தெழுந்து, மலையைத்தொளைத்தாற்போன்ற மேலைவாயிலின் வழியாகச் செல்கின்றவன்: அந்த வாயிலிலுள்ள அழகிய இரத்தினமிழைத்த கோபுரமொன்றைத் தன் பெயராற் கட்டுவித்து, சிலநாள் (அங்கிருந்து.)

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (உச)

திருப்பணி பலவுஞ் செய்து தென்றிசை வழிக்கொண் டேகிச்
சுருப்பணி நெடுநாண் பூட்டுஞ் சுவைத்தண்டச் சிலையாற் காய்ந்த
மருப்பணி சடையான் கோயில் வழிதொறுந் தொழுது போற்றிப்
பொருப்பணி மாடக் கூடற் பொன்னக ரடைந்தான் மன்னே.

(இ-ள்.) பிற திருப்பணிகள் பலவற்றையுஞ் செய்துமுடித்து, தென்றிசையின் வழிக்கொண்டு சென்று, வண்டினிரையாகிய நெடிய நாண்பூட்டிய கருப்புவில்லைத் தாங்கிய மன்மதனை யெரித்தருளிய (வராகத்தின்) கொம்பினை யணிந்த சடாமுடியையுடைய மருதவாணர் திருக்கோயிலை, (தனது கண்கட்குப் புலப்படு மெல்லையும்) வழிதோறும் பணிந்து துதித்து, மலைபோலும் அழகிய மாடங்களையுடைய மதுரைத் திருநகரத்தை யடைந்தனன். எ-று.

வரகுணபாண்டியன் செய்த ஏனைத் திருப்பணி பல என்றதை,

பதினொராந் திருமுறை.

**திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.**

"* * வெள்ளைநீறு மெய்யிற்கண்டு - கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும்
ஓடும் பன்னரி யூளைகேட் டரனைப் - பாடின வென்று படாம்பல வளித்தும்
குவளைப் புனலிற் றவளை யரற்ற - ஈசன் றன்னை யேத்தின வென்று
காசும் பொன்னுங் கலந்து தூவியும் - வழிபடு மொருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிதை யெள்ளைத் தின்னக் கண்டு - பிடித்தலு மவனிப் பிறப்புக் கென்ன
இடித்துக் கொண்டவ னெச்சிலை நுகர்ந்தும் - மருத வட்டத் தொருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி - உம்மைப் போல வெம்மித் தலையும்
கிடத்தல் வேண்டுமென் றடுத்தடுத் திரந்தும் - கோயின் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்தன வென்று †நாய்க்கட்ட மெடுத்தும் - காம்புகுத் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புகட் கெல்லாம் விதான மமைத்தும்-விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த-பெரிய வன்பின் வரகுண தேவரும்* * *"
—என வரும் பட்டினத்துப்பிள்ளையார் திருவாக்கா னறிக. இச்சரிதங்கள் எழுத விரியுமாதலின் இம்மட்டு மெழுதினேம். (உரு)

தொடுபழி தொலைவித் தாண்ட சுந்தரத் தோன்றல் பாதக்
கடிமல ரடைந்து நாளுங் கைதொழு துலக மெல்லாம்
வடுவறு செங்கோ லோச்சும் வரகுண னறவோர் நாவா
லடுசுவை யமுத மன்ன வரன்புகழ் செவிம டுப்பான்.

(இ-ள்.) (விடாது) தொடர்ந்த பிரமசாயையை யொழித்து, அடிமைகொண்ட சோமசுந்தரக்கடவுளுடையவாசம்பொருந்திய திருவடித்தாமரையை யடைந்து, எப்பொழுதுங் கைகூப்பிப் பணிந்து உலக முற்றுங் குற்றமற்ற செங்கோல் நடாத்தும் வரகுணபாண்டியன், வேதியர்கள் தமது நாவால் அட்ட சுவைபொருந்திய அமிர்தத்தைச் செவி (ஆகிய நாவினால்) அருந்துவானாயினன். எ-று. (உசு)

வேதமா கமம்பு ராண மிருதிகண் முதலா நூலு
மோதுவ துலகின் மிக்க துருத்திர வுலக மென்னும்
போதம தகங்கொண் டந்தப் பொற்பதி காண வேண்டுங்
காதல்செல் வழியே யீசன் கங்குலிற் கோயி லெய்தா.

(இ-ள்.) வேதமும் ஆகமமும் புராணமும் ஸ்மிருதிகளு முதலிய நூல்கள் யாவுமெடுத்துக் கூறுவது (பிரமன் முதலியோர் வசிக்கும்) உலகங்களில் மேற்பட்டது உருத்திர வுலகமே யென்று வற்புறுத்தும். அப்போதத்தைத் தன்னுட் பதித்து அந்த அழகிய சிவபுரத்தைத் தரிசிக்கவேண்டியவிருப்பஞ் சென்ற வழியே, சிவராத்திரியிற் சோமசுந்தரக்கடவுள் திருக்கோயிலை யடைந்து. எ-று.

அது - பகுதிப்பொருள்விகுதி. (உஎ)

---

† திருக்கோயிலின் முன் நாய்மலங் கிடக்கக்கண்ட வரகுணபாண்டியர், இதனை யெடுப்போர் என் தேயத்திற் காற்கூறு பெறுவரென்று முதற் பிரதக்ஷிணஞ் செய்தும், அரைக்கூறு பெறுவர் என்று இரண்டாவது பிரதக்ஷிணஞ் செய்தும், முக்காற்கூறு பெறுவரென்று மூன்றாவது பிரதக்ஷிணஞ் செய்தும், முழுக்கூறு பெறுவரென்று நான்காவது பிரதக்ஷிணஞ் செய்தும், ஒருவராலும் எடுக்கப்படாமை கண்டு, என் தேயத்தை நானே யுடையனென்று தனது திருக்கரத்தெடுத்துப் புறம்பே யெறிந்தாரென்பதும் சரிதம்.

கலிநிலைத்துறை.

மாழை மான்மட நோக்கிதன் மணாளனை வணங்கிப்
பீழை யேழ்பவங் கடந்துநின் னடிநிழல் பெற்றோர்
சூழ நீசிவ புரத்தில்வீற் றிருப்பது தொழுதற்
கேழை யேற்கொரு கருத்துவந் தெய்திய தெந்தாய்.

(இ-ள்.) பொன்மயமான மான்போன்ற விழியையுடைய உமாதேவி நாயகனைப் பணிந்து, எந்தையே! துன்பத்தைத் தரும் எழ்பிறப்பென்னுங் கடலைக் கடந்து உனது திருவடி நீழலைப் பெற்றோர் புடைசூழ்த் தேவரீர் சிவலோகத்தில் எழுந்தருளி யிருத்தலைத் தரிசித்துப் பணிதற்கு ஏழையேனுக்கு ஒரு எண்ணம் வந்து முளைத்தது. எ-று. (உஅ)

என்ற காவல னன்பினுக் கெளியராய் வெள்ளி
மன்ற வாணரவ் வுலகையிவ் வுலகிடை வருவித்
தின்று காட்டுது மிவற்கெனத் திருவுளத் தெண்ண
மொன்றி னாரஃ துணர்ந்ததா லுருத்திர வுலகம்.

(இ-ள்.) என்று குறையிரந்த வரகுணபாண்டியன் அன்புக்கு உட்பட்டவராய் வெள்ளியம்பலத்தே திருக்கூத்தாடிய சோமசுந்தரக்கடவுள் இவனுக்கு அந்தச் சிவபுரத்தை இவ்வுலகத்திலேயே வருவித்து இப்பொழுது காட்டுவோமென்று, திருவுள்ளத்தில் எண்ணங் கொண்டருளினர். அச்சிவபுரம் அதனை யுணர்ந்து. எ-று.

இதுமுதல் நான்கு பாடல்கள் குளகம். (உக)

கோடி மாமதிக் கடவுளர் குழுஉச்சுடர் பரப்பி
நீடி யோரிடத் துதித்தென மின்மினி நிகர்த்து
வாடி வானிரு சுடரொளி மழுங்கவா னிழிந்து
தேடி னார்க்கரி யானுறை சிவபுரந் தோன்ற.

(இ-ள்.) அநேகங்கோடி சந்திரர்கள் நிறந்தங்கிய கிரணத்தைப் பரப்பி ஓரிடத்தில் நிறைந்து தோன்றினாற்போல, ஆகாயத்தி லுலவுஞ் சூரிய சந்திரர்களின்னொளி மின்மினியை யொத்துக் குன்றி மழுங்க, தேடிய பிரம விஷ்ணுக்களுக்கு அரிய சிவபெருமானெழுந்தருளிய சிவபுரமானது விண்ணினின்று மிழிந்து (திருக்கோயிலுள்) விளங்க. எ-று. (௩0)

ஆண்ட நாயக னந்தியை யழைத்தெமக் கன்பு
மாண்ட காதலான் வரகுண வழுதிநம் முலகங்
காண்டல் வேண்டினன் காட்டெனக் கருணையா லேவல்
பூண்ட வேத்திரப் படையினன் றொழுதனன் போந்தான்.

(இ-ள்.) (நம்மை) அடிமை கொண்ட சோமசுந்தரக்கடவுள் திருநந்தி தேவரை யழைத்து, எமக்கு அன்பு மிக்க விருப்பினையுடைய வரகுணபாண்டியன் நமது சிவலோகத்தைத் தரிசிக்க விரும்பினன்; (அதனை அவனுக்கு) காட்டா யென்றருள, (இறைவர்) கிருபையால் (தேவர்கள் நெருக்கை யொதுக்கும்) திருப்பணி மேற்கொண்ட வேத்திரப் படையையுடைய அந்நந்திநாயனார் வணங்கிப் புறம்போந்து. எ-று.

தொழுதனன் - போந்தான்—வினையெச்சப் பொருளன. (௩க)

வருதி யாலெனப் பணிந்தெழு வரகுணற் கொடுபோய்க்
கருதி யாயிரம் பெயருடைக் கடவுளன் முகத்தோன்

சுருதி யாதியி றளப்பருஞ் சுயம்பிர காசப்
பருதி யால்சிவ புரமிது பாரெனப் பணித்தான்.

(இ-ள்.) வருவா யென்றருள, வணங்கியெழுந்த வரகுணபாண்டியனைக் கொண்டுசென்று, ஆயிரம் பெயர்களையுடைய திருமாலும் பிரமனும் எண்ணீ வேத முதலியவற்றால் தனதுமுடிபையளத்தற்கரிய ஸ்வயம்பிரகாசத்தையுடைய ஞான சூரியராகிய சிவபெருமானார் ஆண்டருளும் சிவபுரம் இதுவாம். பாராயெனப் பணித்தருளினார். எ-று. (கூஉ)

கருப்பு ரங்கமழ்ந் துளர்பசுங் கால்களா லுதையுண்
டருப்பி னஞ்சினைந் தாயிரப் பத்தியோ சனைபோய்
மருக்க மழ்ந்துநா றாயிரம் வாலிதழ்க் கமல
மிருக்கு மோடைகள் புடைதொறுந் தழுவிய யாறும்.

(இ-ள்.) கருப்பூரவாசங் கமழ்ந்து சஞ்சரிக்குந் தென்றற் காற்றுகளால் மொத்துண்டு அரும்பின் கூட்டங்கள் முறுக்கவிழ்ந்து பதினாயிரயோசனை யெல்லை சென்று மணம்வீசி, வெள்ளிய லக்ஷம் இதழ்களையுடைய வெண்டாமரை மலர்களிருக்கும் ஓடைகள் பக்கங்கடோறுந் தழுவிய யாறுகளும். எ-று.

இதுமுதல் பதினேழுபாடல்கள் ஒருதொடர். (கூஙு)

வரம்பின் மாதரார் மதுரவாய் திறந்துதேன் வார்க்கு
நரம்பி னேழிசை யாழிசை நகைமலர்த் தருவின்
சுரும்பி னேரிசை நாரத தும்புரு விசைக்கு
மிரும்பு நீர்மெழு காக்கிய வின்னிசை யெங்கும்.

(இ-ள்.) எண்ணிறந்த தெய்வமாதர்கள் இனியவாயைத் திறந்து தேனைச் சொரியும் நரம்பின்கண்ணமைந்த ஏழிசைகளையுடைய வீணையோடுபாடும் இசையும், விகசித்துவிளங்கும் மலர்களையுடைய விருக்ஷங்களில் வண்டுகள்பாடுந் தம்முளொத்த இசையும், நாரதருந் தும்புருவும்பாடும் இரும்பின் தன்மையை மெழுகுபோற் செய்யும் இனிய இசையும் எவ்விடத்திலு முள்ளனவாம். எ-று. (கூச)

அமுத வாவியும் பொன்மல ரம்புயத் தடமுங்
குமுத வாயர மாதராங் குயிலினம் பயிலு
நிமிர வாள்விடு மரகத நெடியபைங் காவுந்
திமிர மாசறக் கழுவிய தேவர்வாழ் பதமும்.

(இ-ள்.) அமுதம்பொருந்திய நடைக்கிணறுகளும், பொற்றாமரைத்தடாகங்களும், ஆம்பல்போலும் வாயையுடைய தேவமாதர்களாகிய குயிற்கூட்டங்கள் சஞ்சரிக்கும் நிரம்ப ஒளிவீசும் மரகதமாகிய நெடியபசிய சோலையும், இருளாகிய களங்கமொழிய ஒளிவீசுந் தேவர்வாழ் பதமும். எ-று.

தேவர்வாழ் பதம் - சிவபுரத்தில் மேற்புறத்துள்ளதென்பர். (கூரு)

அலம்பு பாற்கடல் போற்புறத் தமுதநீ ரகழும்
பொலஞ்செய் ஞாயிறு சூழ்புரி சையும்பொன்கோ புரமு
நலங்கொள் பூவியல் வீதியு நவமணி குயின்ற
துலங்கு மாளிகைப் பத்தியுஞ் சூளிகை நிரையும்.

(இ-ள்.) சத்திக்கும் பாற்கடல்போலப் புறத்தே அமுதநீர் நிறைந்த அகழியும், பொன்னாற் செய்த வுறுப்புகளமைந்த மதிலும், பொன்னாற்செய்த கோபுரங்க

ளும், அழகுபொருந்திய பொலிவமைந்த வீதிகளும், நவரத்தினங்களிழைத்த விளங்காநின்ற உபரிகையின் வரிசைகளும், அவற்றின் இறப்பின்வரிசைகளும். எ-று.

ஐம்பு லங்களும் வைகலும் விருந்ததா வருந்த
வெம்பு நால்வகை யுண்டியும் வீணையுஞ் சாந்துஞ்
செம்பொ னாரமு மாடலின் செல்வமுந் தெய்வப்
பைம்பொன் மேகலை யோவியப் பாவையொப் பாரும்.

(இ-ள்.) ஐம்புலன்களும்நாடோறும் விருந்தாகவுண்ண நால்வகையுணவும், வீணாநாதமும், கலவைச்சந்தனமும், செம்பொன்னாரங்களும்,(பரத) நாட்டியச்செல்வமும், தெய்வத்தன்மையுடைய பசும்பொன்னாற்செய்த மேகலாபரணமணிந்த சித்திரப்பதுமைபோன்ற பெண்களும். எ-று.

ஐம்புலன்களும் விருந்ததாக வருந்த என்றது—மெய்யால் நுகரும்பொருள் ஓவியப்பாவை. வாயால் நுகரும்பொருள் நால்வகையுண்டி. கண்ணால் நுகரும் பொருள் செம்பொன்னாரம் ஆடலின் செல்வம். மூக்கால் நுகரும்பொருள் சாந்து. செவியால் நுகரும்பொருள் வீணை யெனக்கொள்ளக்கிடந்தன. (கூஎ)

படர்ந்த வார்சடை யுருத்திரர் பணைத்திறு மாந்த
வடங்கொள் பூண்முலை யுருத்திர மகளிரோ டமரு
மிடங்கொள் மாளிகைப் பந்தியு மிகல்விளை துன்பங்
கடந்த செல்வமுங் கவலையில் போகமுங் காட்டி.

(இ-ள்.) பரவிய நெடியசடையையுடைய உருத்திரர்கள் பூரித்திறுமாந்த முத்துவடமாகிய ஆபரணமணிந்த தனங்களையுடைய பெண்களோடு வசிக்கும் இடம்பரந்த உபரிகையின் வரிசையும், பகைமையுந் துன்பமுமொழிந்த செல்வமும், கவலையில்லாத போகங்களும் (ஆகிய இவற்றைத் தனித்தனியே) காண்பித்து. எ-று. (கூஅ)

முண்ட காசனன் பதமிது மூவுல களந்த
தண்டு ழாயவன் புரமிது தனிமுதல் வடிவங்
கொண்டு வீறுசா லுருத்திரர் கோப்பதி யின்ன
வெண்டி சாமுகங் காவல ருறைவிட மிவைகாண்.

(இ-ள்.) பிரமபதவியிது: திரிலோகங்களையுமளந்த தண்ணிய துளவமாலையணிந்த விஷ்ணுபதவியிது: ஒப்பற்ற சிவபெருமானரது திருவுருவங்கொண்டு பெருமைமிக்க சிறந்த உருத்திரபதவியிவை: எண்டிசைகளையுங் காக்கும் (இந்திரன் முதலிய) திக்குப்பாலகர்கள் வசிக்கும் பதவிகளிவை: பாராய். எ-று. (கூகூ)

புலரு முன்புன லாடிநீ றாடிநம் புனித
னிலகு மாலயம் விளக்கினர் தனப்பணி யியற்றி
மலர்கொய் தாய்ந்தனர் தொடுத்தரன் புகழ்செவி மடுத்திவ்
வுலக வாணராய்ப் போகமுற் றுறைகுந ரிவர்காண்.

(இ-ள்.) விடியுமுன் நீராடி (முறைப்படி) திருவெண்ணீறு தரித்து, நமது பெருமான் எழுந்தருளியிருக்குந் திருக்கோயிலைத் திருவலகிட்டு, திருநந்தவனத்திருப்பணிசெய்து, மலர்கொய்து ஆராய்ந்து தொடுத்து, சிவபெருமான் திருப்புகழைச் செவியாற்கேட்டு, இந்நிலவுலகவாசிகளாய் (இறுதியில்லாத) போகம் நுகர்ந்து வாழ்பவர்களிவர்கள்: பாராய். எ-று.

இச்செய்யுளில், தாதமார்க்கமாகிய சரியைசெய்தோரைக் கூறினர். இதனை,

"தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரர்தங் கோயிற்
றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்துபாடித்
தீதிறு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தேதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு
மியற்றுவிச் சரியைசெய்தோ ரீசனுல கிருப்பர்"—என்பதனுனறிக.

தூய ராகியைஞ் சுத்திசெய் தகம்புற மிரண்டி
னேய ராய்விதி நெறியினன் முகமனீ ரெட்டாற்
காயம் வாய்மன வொருமையா லர்ச்சித்துக் கடவு
ளுய னாரு குறைபத நண்ணின ரிவர்காண்.

(இ-ள்.) பரிசுத்தமுடையவராகிப் பஞ்சசுத்திசெய்து உள்ளும் புறம்புஞ் சிவநேயமுடையராய், ஆகமவிதிமுறையால் சோடசோபசாரத்தாலும், மனவாக்குக் காயங்களின் ஒருப்பாட்டாலும் அருச்சனைசெய்து கடவுளுயகராகிய சோமசுந்தரக் கடவுளின் பக்கலிலுள்ள பதவியை அடைந்தவர்கள் இவர்கள் காண்பாய். எ-று.

பஞ்சசுத்திகள்—பூதசுத்தி - ஆன்மசுத்தி - திரவிய சுத்தி - மந்திரசுத்தி லிங்கசுத்தியாம் ; இவற்றுள், தத்துவங்கள் சடமென்றுணர்தல் பூதசுத்தி யென்றும், அவ்வாறுணர்வது திருவருளாலே யன்றித் தன்னு லன்றென் றுணர்தல் ஆன்மசுத்தி யென்றும், ஆன்மாவுக் குணர்வில்லை யாதலின் அதுவுந் திருவருளேயென் றுணர்தல் திரவியசுத்தி யென்றும், ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை உச்சரித்து அதனுண்மையை யறிதலே மந்திரசுத்தி யென்றும், சிவமே ஸகல ஜகத்காரணபூதமென்றும் அச்சிவம் சிவலிங்க மூர்த்தத்தில் எழுந்தருளியிருக்குமென்றும் உணர்தல் லிங்கசுத்தியென்றுங் கூறுவர்.

இச்செய்யுளால் புத்திரமார்க்கமாகிய கிரியையைக் கூறினர். (சக)

கிளர்ந்த காலினு லங்கியை நிமிர்த்துமேற் கிடைத்து
வளர்ந்த பிங்கலை யிடைநடு வழியுகு மதியின்
விளைந்த வின்னமு துண்டுநம் விடையவன் வடிவங்
குளந்த னிற்குறித் தவனுருக் கொண்டவ ரிவர்காண்.

(இ-ள்.) மேலெழுந்த பிராணவாயுவால் (இதயத்திலுள்ள) அக்கினியை யெழுப்பி மேற்சென்று, குன்ருத இடைகலை பிங்கலைகட்கு நடுவிலுள்ள சுழிமுனை வழியாகச் சிந்துஞ் சந்திரமண்டலத்தில் விளைந்த இன்னமுதத்தை நுகர்ந்து, நமது சிவபெருமான் திருவுருவத்தை லலாட ஸ்தானத்திற் சிந்தித்து, அவனது சாரூப்பியத்தை யடைந்தவர்கள் இவர்கள்: பாராய். எ-று.

இச்செய்யுளாற் சகமார்க்கத்தி னிலையாகிய யோகிகளைக் கூறினர்.

குளந்தனிற் குறித்தவ னுருக்கொள்ள லென்பது, நெற்றியாகிய ஆக்கினு ஸ்நானத்தில் அந்தர்முகமாகத் தரிசித்தோர்க்குச் சிவபெருமானது ஜோதிரூப தரிசினங்கிடைக்குமாதலின், இதனை "நெற்றிக்கு நேரே நீண்டபுரு வத்திடையே-உற்றுப் பார்க்க வொளிதோன்றும்" என்பதனுலறிக. (சஉ)

முக்க ணுயகன் பொருட்டெண வேள்விகண் முடித்துத்
தொக்க வேதிய ரிவர்புனற் சாலையித் தொடக்கத்

தக்க பேறறம் புகழ்பயன் றமைநன்கு மதிக்கும்
பொக்க மாறிய நிராசையாற் புரிந்தவ ரிவர்காண்."

(இ-ள்.) திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானுக்குப் பிரீதியாக யாகங்களைச் செய்து சிவபதவி யடைந்த அந்தணர்க ளிவர்கள். தண்ணீர்ப்பந்தல் வைத்தல் முதலிய தகுந்த பெரும் புண்ணியங்களையும், புகழையும் பயனையும் நன்கு மதிக்குங் குற்றம் நீங்கிய நிராசையோடு செய்தவர்க ளிவர்கள் பாராய். எ-று.

நிராசையால் என்றதிலுள்ள மூன்றனுருபு உடனிகழ்ச்சிப்பொருளது. (சங)

மறையி னூற்றினுற் றந்திர மரபினுன் மெய்யி
னிறையு நீற்றினர் நிராமய னிருத்தனை ந்தெழுத்து
மறையு நாவினர் பத்தரா யரன்புகழ் கேட்கு
முறையி னுலிவர் வினைவலி முருக்கினுர் கண்டாய்.

(இ-ள்.) வேத நெறியாலாவது ஆகம நெறியாலாவது, தமதுடம்பி லணிந்த விபூதி யுடையவரும், நோயில்லாதவனும் நடனஞ் செய்வோனுமாகிய சிவபெருமானுடைய திருவைந்தெழுத்தையும் உச்சரிக்கும் நாவை யுடையவருமாய், சிவபெருமானுக்கு அடியராய், அச்சிவபெருமான் திருப்புகழைக்கேட்கும் முறைமையினுல் வினை வலிமையைக் கெடுத்தவர்க ளிவர்கள். பாராய். எ-று. (சச)

மறைக ளின்சத வுருத்திர மந்திர நவின்றோர்
நிறைகொள் கண்டிகை நீறணி நீரரா யோனுங்
குறிகு ணங்குலன் குறித்திடா தன்பரைச் சிவனென்
றறியு மன்பினுற் பிறவிவே ரறுத்தவ ரிவர்காண்.

(இ-ள்.) வேதங்களிலுள்ள சதவுருத்திர மந்திரத்தை யுச்சரித்து, (சிவபுண்ணியம்) நிறைந்த உருத்திராக்ஷ கண்டிகையையுந் திருநீற்றையும் அணிந்த தன்மையுடையோர் எவராயிருப்பினும், அவர் பெயரையுங் குணத்தையுஞ் சாதியையுங் குறியாது அடியவரைச் சிவனேயென் றுணரும் அன்பினுல் பிறவியின் வேரை யறுத்தவர்கள் இவர்கள். பாராய். எ-று.

சதவுருத்திரம் - வேதங்கள் பிரமன் முதல் சதாசிவ மீருக முறையே யேற்றங் கூறுவதால் அவற்றுள் நடுவாகவுள்ள சதவுருத்திர மந்திரங்களை யோகநாமத்தால் உருத்திரகணங்களைச் சங்காரக்கிரமத்தில் வைத்து அதீதசிவம் வரையில் வரைப் படுத்திக் கூறுவது ஆதலின், "மறைகளின் சதவுருத்திரம்" என்றார். (சரு)

ஆனஞ் சாடிய பரஞ்சுட ரிறைசிவ ஞான
தானஞ் செய்தவர் தருப்பணஞ் செய்தவர் சாம
கானஞ் செய்தவற் காலயங் கண்டுதா பித்தோ
ரூனஞ் சேர்பிறப் பறுத்துவா ழுத்தம ரிவர்காண்.

(இ-ள்.) பஞ்சகவ்விய மாடிய சிவபெருமானுடைய சிவஞானதானஞ் செய்தவரும், தருப்பணஞ் செய்தவரும், சாமகீதம் பாடுஞ் சிவபெருமானுக்கு ஆலயத்தை விதிப்படி தாபித்தவரும், குற்றமடைந்த பிறப்பினை யொழித்து வாழும் நல்லவர்கள் இவர்கள்: பாராய். எ-று.

பரஞானம் அபரஞான மெனச் சிவஞான மிருவகை. சிவனோ டிரண்டற்று அபேதமாயிருத்தல் பரஞானம். காமிகாதி சிவாகமங்கள்கூறுவது அபரஞானம். ஆகம வுண்மையைப் பக்குவர்க் குபதேசித்தலும் ஆகம மளித்தலும் அதனை யெழுதுவதற்கு ஏடுகொடுத்தலும் சிவஞானதானம் எனப்படும். தருப்பணமென்றது ஈண்டுச் சிவப் பிரீதியாகச் செய்வதை. (சசு)

சிவனை யர்ச்சனை செய்பவர்க் கிசைவன செய்தோ
ரவனெ னக்குறித் தடியரைப் பூசைசெய் தாறு
சுவைய வின்னமு தருத்தினோர் தொண்டர்தம் பணியே
தவமெ னப்புரிந் துயர்ச்சியைச் சார்ந்தவ ரிவர்காண்.

(இ-ள்.) சிவபெருமானை அருச்சிப்பவர்கட்கு இசையுங்காரியங்களைச் செய்து வந்தவரும், அடியவரைச் சிவபெருமானே யென்று கருதிப் பூசித்து அறுசுவை பொருந்திய இனிய உணவை உண்பித்தவருமாய், சிவனடியவர்க்குச் செய்யுங் குற்றேவலே பெருந்தவமாக விரும்பிச் செய்து உயர்பதவியடைந்தவர்கள் இவர்கள்: பாராய். எ-று. (சுஎ)

ஆதி சுந்தரக் கடவுளுக் காலயம் பிறவு
நீதி யாலருச் சனைபிற பணிகளு நிரப்பிப்
பூதி சாதன வழிநிலம் புரந்திவ ணடைந்த
கோதி லாதநின் குடிவழிக் கொற்றவ ரிவர்காண்.

(இ-ள்.) முதற்கடவுளாகிய சோமசுந்தரக்கடவுளுக்கு ஆலயமும், மற்றுள்ளனவும், முறைப்படி அருச்சனையும், பிறதிருப்பணிகளுமாகிய இவற்றை (செய்து) முடித்து, திருநீற்றையும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையுங் கொண்டு நிலவுலகைக் காத்து இச்சிவலோகமடைந்த குற்றமில்லாத உன்னுடைய குடியிற்றோன்றிய அரசர்கள் இவர்கள்: பாராய். எ-று. (சுஅ)

என்று வேத்திரங் கொடுகுறித் தெம்மிறை நந்தி
கொன்றை வேணிய னடியர்தங் குழாத்தினைத் தேற்றி
நின்று வீழ்ந்துவீழ்ந் தஞ்சலி முகிழ்த்திட நெறியே
சென்று வானவர் நாயகன் றிருமுன்பு விடுத்தான்.

(இ-ள்.) என்று கூறிப் பிரம்பாயுதத்தாற்சுட்டி, எமதிறைவராகிய திருநந்திதேவர், கொன்றைமாலைசூடிய சடைமுடியையுடைய சிவபெருமானது அடியார் கூட்டத்தியல்பை விளக்கி, முறைப்படியே வரகுணபாண்டியன் நின்று வீழ்ந்து வீழ்ந்து கைகுவிக்க (திருநந்திதேவர்) சென்று, தேவதேவனாகிய சிவபெருமான் சந்நிதியில் (அவ்வரகுணனைச்) செலுத்தினார். எ-று. (சுகூ)

மறைக ளாகமம் வடிவெடுத் திருபுடை வாழ்த்த
நறைகொள் யாழ்தழீஇத் தும்புரு நாரதர் பாட
வறைகொள் வண்டிமிர் கொம்பரி னரம்பைய ராடக்
குறைகொள் வானவர் பதங்கிடை யாதிறை கொள்ள.

(இ-ள்.) வேதங்களும் ஆகமங்களும் உருவங்கொண்டு இருபால் நின்று வாழ்த்தவும், இன்னிசை பொருந்திய வீணையைத் தழுவித் தும்புரு நாரதர்கள் (ஒருபால்) பாடவும், இசை பாடும் வண்டுகளொலிக்கும் பூங்கொம்புபோல் அரம்பாஸ்திரீகள் (ஒருபால்) நடிக்கவும், குறையிரக்குந் தேவர்கள் சமயம் பெறாது (ஒருபால்) தங்கவும். எ-று.

இதுமுதல் எழு பாடல்கள் ஒருதொடர். (எo)

மதங்க விழ்க்குமால் வரைமுக மைந்தனுஞ் சூரன்
கதங்க விழ்த்தவேற் கந்தனுங் கருதலன் வேள்வி
விதங்க விழ்த்தவாள் வீரனும் வெயின்முடிக் தார்தேன்
பதங்க விழ்ப்பவீழ்ந் தேயின பணிவழி நிற்ப.

(இ-ள்.) மதத்தைச்சிந்தும் யானைமுகக்கடவுளும், சூரபன்மனுடைய கோபத்தைக் கெடுத்த வேற்படை தாங்கிய முருகக்கடவுளும், தக்கனுடைய யாகவகையைச் சிதைத்த வாட்படை யேந்திய வீரபத்திரக்கடவுளும், விளங்குங் கிரீடத்திலணிந்த மாலையானது தேன் சொரியப் படிந்து பணிந்து (பெருமான்) ஏவிய திருப்பணியின் வழியில் (ஒருபால்) நிற்கவும். எ-று.

மதங்கிவிழ்க்குமால்வரை யென்றது விநாயகருக்கு யானைமுக முடைமையின் யானையென்னுஞ் சாதியொருமை நோக்கிக் கூறியது. விநாயகருக்குப் பரஞானமும் அபரஞானமு மிரண்டு மதங்களெனச் சாஸ்திரங்கூறும். யானைட்கு இரு கன்னத்தும் வலப்புறத்துமாக மூன்று மதங்கள் உள்ளன. (௬௧)

தூங்கு தானையை யொதுக்கிவாய் துணைக்கரம் பொத்தி
யோங்கு மாலயன் றங்குறை யொதுங்கிநின் றுரைப்ப
வாங்கு வான்சிலை யிந்திரன் முதற்றிசை வாணர்
தாங்க டாம்புரி காரியக் குறைநின்று சாற்ற.

(இ-ள்.) உயர்ந்த திருமாலும் பிரமனும், முன் அசையும் ஆடையை யொதுக்கித் தமது வாயை இருகரத்தாலு மமைத்து, தமது குறைபாடுகளை (ஒருபால்) ஒதுங்கிநின்று உணர்க்கவும், வளைந்த பெரிய வில்லைத் தாங்கிய இந்திராதி திக்குப்பாலகர்கள் தாங்கள் செய்யுங் காரியங்களிலுள்ள குறைபாடுகளை (ஒருபால்) நின்று சொல்லிக்கொள்ளவும். எ-று. (௬௨)

எழுவி னோடுதண் டேந்திவாய் மென்றெயி றதுக்கிக்
குழுமு பாரிடத் தலைவருங் கோடிகூற் றொதுங்கி
விழும மூழ்கிமெய் பனித்திட விதிர்க்குமுக் குடுமிக்
கழுமு ளேந்திய கணத்தவர் கடைதொறுங் காப்ப.

(இ-ள்.) வளைதடியோடு தண்டாயுதத்தைத்தாங்கி, வாயைமென்று, பற்களையதுக்கி நெருங்கிய பூதகணத்தலைவரும், எண்ணிறந்த கூற்றுவர்கள் (அஞ்சி) ஒதுங்கித் துன்பத்திலழுந்தி உடல் நடுங்க அசைக்கும் முத்தலைச்சூலத்தைத்தாங்கிய சிவகணங்களும் வாயில்கடோறுங் காத்து நிற்கவும். எ-று. (௬௩)

சித்தர் வானவர் தானவர் சாரணர் திணிதோள்
வைத்த யாழினர் கின்னரர் மாதவ ரியக்கர்
பைத்த பாரிடர் காருடர் பாதல வாணர்
சுத்த யோகியர் முதற்கணத் தொகையெலாம் பரவ.

(இ-ள்.) சித்தர்களும், தேவர்களும், அசுரர்களும், சாரணர்களும், வலிய தோளிற்சாத்திய வீணையையுடைய விஞ்சையர்களும், கின்னரர்களும், பெருந்தபோதனர்களும், யக்ஷர்களும், பரவிய பூதகணத்தலைவர்களும், கருடர்களும், நாகலோகத்தவர்களும், சுத்த (மனமுடைய) யோகவான்களும், முதலிய ஆகாயவாசிகள் யாவரும் (ஒருபால்) வணங்கவும். எ-று. (௬௪)

இனிவ ரும்பிறப் பறுத்தெமைக் காத்திபா லெனத்தங்
கனிவ ரும்பிய வன்பெழு கருணையா ரமுதைப்
பனிவ ருந்தடங் கண்களாற் பருகிமெய் பனிப்ப
முனிவர் சங்கர சிவசிவ வெனமுறை முழங்க.

(இ-ள்.) இனி வராநின்ற மறுமையை விலக்கி எம்மைக் காப்பாயென்று, தமது கனிந்த அன்பென்னும் வெள்ளத்திலெழுந்த அருணிறைந்த சிவமாகிய அமு

தினை, ஆனந்தபாஷ்பஞ்சிந்தும் பரந்த தமதுகண்களாற் பருகி, உடல்கம்பிக்க, முனிவர்கள் சங்கர ! சிவ ! சிவ ! என்று (ஒருபால்நின்று) வேதகோஷஞ்செய்யவும். எ-று.

வரந்த வாதன யாவர்க்கும் வரன்முறை வழங்கி
முருந்த வாநகை மலைக்கொடி முகிழ்நகை யரும்பத்
திருந்த வாயிரங் கதிர்விடு சிங்கமெல் லணைமே
லிருந்த நாயக னிருக்கைகண் டிறைஞ்சின னிறைவன்.

(இ-ள்.) (தாம் அருளும்) வரங்கள் பிறழாமல் எல்லோர்க்கும் முறைப்படி தந்தருளி, மயிலிறகினடியை நட்புக்கொண்ட தந்தபந்தியையுடைய உமாதேவியார் (வாமபாகத்திலிருந்து) புன்னகை செய்தருள, முறையாகக் கணக்கில்லாத கிரணங்களை வீசும் மெல்லிய சிங்காசனத்தின்மேல் எழுந்தருளியிருந்த சிவபெருமானது இருப்பினைத் தரிசித்துப் பணிந்தான் வரகுணபாண்டியன். எ-று.

தவாதன - முற்றெச்சம். (ருசு)

உரைக ளூந்தடு மாறமெய் யுரோமமுஞ் சிலிர்ப்பக்
கரையி றந்தவின் னருட்பெருங் கடலிலன் பென்னுந்
திரையி றந்தவா றீர்த்திட மிதந்துபோய்ச் செப்பின்
வரையி றந்தவா னந்தவா ரமுதைவாய் மடுத்தான்.

(இ-ள்.) பேசுஞ்சொற்கள் தடுமாறவும், உடலில் உரோமங்கள் புளகிக்கவும், எல்லையில்லாத இனிய அருளாகிய பெருங்கடலில், அன்பாகிய அலையொழிந்த நதியானது (தன்னை) இழுத்துச்செல்ல, (அந்நதியில்) மிதந்துசென்று, சொல்லெல்லையைக்கடந்த பேரின்பமாகிய அரிய அமுதத்தை (மனநிறைய)ப் பருகினான். எ-று.

தன்பு லன்களுங் கரணமுந் தன்னவே யாக்கி
யன்பு டம்புகொண் டவனெதி ரருட்சிவ லோகம்
பின்பு பண்டு போன் மதுரையாப் பிராட்டியுந் தானு
முன்பி ருந்தவா றிருந்தனன் சுந்தர மூர்த்தி.

(இ-ள்.) தனது இந்திரியங்களையும் அந்தக்கரணங்களையுந் தன்னுடையனவாகவே செய்து, அன்பே உடம்பாகக் கொண்ட வரகுணபாண்டியனுக்கெதிரே, அருள்வடிவாகிய சிவபுரமானது பின்னர் முன்புபோல மதுரையாக, சோமசுந்தரக் கடவுள் தானும் அங்கயற்கண்ணியாருமாக முன்னிருந்த வகையே இருந்தருளினர்.

வேந்தர் சேகரன் வரகுணன் விண்ணிழி கோயி
லேந்தல் சேவடி யிறைஞ்சிநின் றிறையருட் பெருமை
யாய்ந்த வாவுதன் னகம்புக வின்பமோ டன்பு
தோய்ந்து தாரைநீர் துளும்பநாக் குழறிடத் துதிப்பான்.

(இ-ள்.) வரகுணபாண்டியன், விண்ணிழிவிமானத்திலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய செவந்த திருவடிகளைப் பணிந்து நின்று, இவ்விறைவனுடைய திருவருட்பெருமையானது ஆராய்ந்து விரும்புந் தனது மனதிற் பிரவேசிக்க, பேரின்பத்திலுஞ்சிவநேயத்திலுமழுந்தி, கண்களில் ஆனந்தபாஷ்பந் ததும்பவும், நாக்குழறவும் பணிவானாயினன். எ-று.

வேந்தர் சேகரன் - அரசர்கட்கு முடிபோன்றவன். (ருகூ)

**கொச்சகக்கலிப்பா.**

நாயினே னென்னை நடுக்கும் பழியகற்றித்
தாயினே ராகித் தலையளித்தாய் தாள்சரணஞ்

சேயினேன் காணச் சிவலோகங் காட்டிப்பின்
கோயிலினேர் நின்றவருட் குன்றேநின் றாள்சரணம்.

(இ-ள்.) நாய்போன்ற என்னை வருத்தும் பிரமஹத்தியை நீக்கி, (கருணை செய்வதில்) தாய்போன்று தலையளிதந்தாண்டவனே! உன் திருவடிக்கு வந்தனம். உனக்குத் தூரமாயுள்ள யான் கண்டு தரிசிக்கச் சிவலோகத்தைக்காட்டிப் பின்னர், திருக்கோயிலில் என்னெதிர் நின்றருளிய கிருபாமலையே! உன் திருவடிக்கு வந்தனம். எ-று.

நான் தரிசித்தற் கருகனல்லனாயினுந் தேவரீர் செய்த அருள்பெரிது என்பதுதோன்ற "சேயினேன் காணச் சிவலோகங் காட்டி" என்றார். (சுO)

மாழாந்து செய்யும் வினைவழிபோய் மன்னரகிற்
றாழா தடியனேற் கன்புதந்தாய் தாள்சரண
மேழாகி நான்கு வகையா யெழுபிறப்பும்
பாழாக வென்னைப் பணிகொண்டாய் தாள்சரணம்.

(இ-ள்.) மயங்கிச்செய்யும் வினைவழிச்சென்று கொடிய நரகிலழுந்தாமல் அடியேனுக்கு அன்புதந்தாண்டவனே! உன்திருவடிக்கு வந்தனம். எழுவகை(தோற்றம்) ஆகி, நால்கு வகையுளடங்கிப் பரந்த பல பிறப்புகளும் என்னிடத்துப் பாழ்பட என்னைக் குற்றேவல்கொண்டவனே! உன்திருவடிக்கு வந்தனம். எ-று.

எழுபிறப்பு—மக்கள்-தேவர்-விலங்கு-புள்-ஊர்வன - நீர்வாழ்வன - தாவரம் எனப்படும். நான்குவகை—அண்டசம்-சுவேதசம் - உத்பீசம் - சராயுசம் எனப்படும். அவ்வெழுபிறப்பும் நான்குவகையுளடங்குவதால் "ஏழாகி நான்குவகையாயெழுபிறப்பும்" என்றார். (சுக)

வெங்கட் பழியின் வினையேனை வேறாக்கித்
திங்கட் குலக்களங்கந் தீர்த்தாய்நின் றாள்சரண
மங்கட் சிவபுரமுண் டன்புடையார்க் கென்பதையின்
றெங்கட்குக் காட்டி யிசைவித்தாய் தாள்சரணம்.

(இ-ள்.) வினைப்பற்றுடைய என்னைக் கொடிய பழியினின்று வேறுபடுத்தி எமது சந்திரகுலத்திற்கு நேர்ந்த குற்றத்தைத் தீர்த்தவனே! உன் திருவடிக்கு வந்தனம். சிவநேயமுடையார்க்கு அவ்விடத்துச் சிவபுரமுண்டென்று (சிவாகமாதிகள்) கூறுவதை இப்பொழுது எங்களுக்குக்காட்டித் தெளிவித்தவனே! உன் திருவடிக்கு வந்தனம். எ-று. (சுஉ)

கலிநிலைத்துறை.

என்ன வேத்தியின் னருண்முகந் தீறிலா வன்பாற்
பின்னர் வேறுபல் பூசையும் பிறக்குவித் திருந்தான்
மன்ன ரேறடை யார்க்கொரு மடங்கலே றடல்வேற்
றென்ன ரேறெனத் தோன்றிய வரகுண தேவன்.

(இ-ள்.) என்று துதிசெய்து, அரசர்களாகிய யானைகளுக்கு ஆண்சிங்கம் போல்பவனும், சத்துருக்கட்கு இடியேறுபோல்புவனும், வெற்றிபொருந்திய வேற்படைதாங்கிய பாண்டியருள் ஆண்சிங்கம்போல்வனுமெனச் சொல்லும்படி அவதரித்த வரகுணதேவனென்னும் பாண்டியன் இனிய திருவருளையடைந்து அளவிலடங்காத பேரன்பினால், பின்பு பலவகைப்பட்ட பூசைகளையும் விளங்கச் செய்வித்திருந்தனன். எ-று. (சுச)

என்ற தென்மலை முனிவனை யிருடிக ணோக்கி
யன்று வாசவன் பழிகரி சாபமந் தணனைக்
கொன்று தாயொடுங் கூடிய கொடுவினை முதலாத்
துன்று பாவமு மதுரையிற் றொலைத்தன னன்றே.

(இ-ள்.) என்றுகூறியருளிய பொதியாசலத்திலுள்ள அகஸ்தியமுனிவரைப் பார்த்து, அக்காலத்தில் [பூர்வத்தில்] இந்திரனுடைய பிரமஹத்தியையும், வெள்ளை யானையின்சாபத்தையும், தந்தையைக்கொன்று தாயைப்புணர்ந்த (பிராமணனுடைய) மஹாபாதகத்தையும் முதலாக நெருங்கிய பாவங்களையெல்லாம் (சோமசுந்தரக்கடவுள்) மதுரையிலேயே தொலைத்தருளினர். எ-று.

இச்செய்யுளாற் பிறவிடங்களிற்செய்த பாவங்களெல்லாவற்றையும் இத்தலமே தீர்க்கவல்லது எனக்கூறப்பட்டது. (சுச)

பரம னெண்குணன் பசுபதி வரகுணற் பற்றும்
பிரம வன்பழி யிடைமரு திடைவிட்டுப் பெயர
வரம ளித்தவா றென்னைகொல் வள்ளலே யிதனைத்
திரமு றப்புக லெமக்கென முனிவர்கோன் செப்பும்.

(இ-ள்.) பரமனும் எண்குணங்களையுடையவனும் பசுபதியுமாகிய சோம சுந்தரக்கடவுள் வரகுணபாண்டியனைப்பிடித்த வலிய பிரமஹத்தியை, திருவிடை மருதில்விட்டு நீங்க வரமருளியவகையாது? அருட்கொடையாளராகிய அகஸ்திய முனிவரோ! இதனை எங்களுக்குச் சந்தேகமகலக் கூறியருளவேண்டும் எனக்கேட்க, முனிவர் பெருமானாராகிய அகஸ்தியமுனிவர்கூறியருளுகின்றார். எ-று. (சரு)

பூத நாயகன் சுந்தரன் புண்ணிய மூர்த்தி
யாத லாலன்ன தலத்துறை யடியவ ரஞ்சிப்
பாத கஞ்செயா தொழுகுறாஉம் படிநினைந் தினைய
தீது றாஉம்பழி தனையிடை மருதினிற் றீர்த்தார்

(இ-ள்.) பஞ்சபூதங்கட்கிறைவராகிய சோமசுந்தரக்கடவுள் தருமசொரூபி யாதலின், அந்தத் திருவாலவாயில் வசிக்கும் அடியவர் அஞ்சிப் பாதகஞ்செய்யாமல் நல்லொழுக்கமுறத்திருவுளங்கொண்டு, இந்தக் கொடிய பாதகத்தைத் திருவிடைமரு தூரில் தீர்த்தருளினர். எ-று.

அன்ன இனைய-சுட்டுத்திரிபுகள்.

பூதநாயகன் என்றதற்குப் பூதகணங்கட் கிறைவனாகிய சிவபெருமான் எனப்பொருளுரைப்பதுமமையும்.

மதுரையிற் செய்த புண்ணியம் வளருதல்போலப் பாவமும் வளருமென் பது தோன்ற "அஞ்சிப்பாதகஞ் செயாதொழுகுறும்படி" என்றார். (சுசு)

என்ற கத்திய முனியிறை யிறைகொடுத் தியம்பு
நன்றெ னச்சிரம் பணித்துமெய்ஞ் ஞானவா னந்தந்
துன்றி நற்றவர் சுந்தரச் சோதிசே வடிக்கீ
ழொன்று மற்புத வானந்த வுததியுட் களித்தார்.

(இ-ள்.) என்று, முனிசிரேஷ்டராகிய அகஸ்தியமுனிவர் விடைகொடுத் தருள, (கேட்ட) நல்ல முனிவர்கள், தக்கதென்று சிரமசைத்து, உண்மையறி வானந்தத்திற் றோய்ந்து, சோமசுந்தரக்கடவுளுடைய செவந்த திருவடியின்கீழ்ப் பொருந்திய அற்புதம் விளக்கும் பேரின்பமாகிய கடலிலாழ்ந்து களிகூர்ந்தார்கள்.

கோச்சகக்கலிப்பா.

அன்னதனித் தொன்மதுரை யன்றுதொடுத் தின்றெல்லை
தன்னனைய தாயகில தலங்கள்சிகா மணியாகிப்
பொன்னகரின் வளஞ்சிறந்து பூவுலகிற் சிவலோக
மென்னவிசை படப்பொலிந்த தேழிரண்டு புவனத்தும்.

(இ-ள்.), அந்த வொப்பில்லாத தொன்றுதொட்டுள்ள மதுரைத்திருநகரமானது பதினன்குலகங்களிலும் அன்றுமுதல் இன்றுவரையில் தனக்குத்தானே சமானமானதாய் எல்லாச் சிவதலங்களுக்கும் ஓர் சிகாமணியாய், வளப்பத்தால் தேவருலகத்தினுமேம்பட்டுப் பூலோகசிவலோகமென்று புகழுண்டாக விளங்கியது. எ-று. ()

வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய படலம்
முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம்-உ0௬க.

---

நாற்பத்தொன்றாவது,

# விறகுவிற்ற படலம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நெடியவன் பிரமன் றேட நீண்டவன் றென்னற் கேழின்
முடியதாஞ் சிவலோ கத்தைக் காட்டிய முறையீ தையன்
படிமிசை நடந்து பாடிப் பாணன்றன் விறகா ளாகி
யடிமையென் றடிமை கொண்ட வருட்டிற மெடுத்துச் சொல்வாம்.

(இ-ள்.) திருமாலும் பிரமதேவரும் (முறையே திருவடியையுந் திருமுடியையுந்) தேடும்படி (அவர்கட்கெட்டாது ஒளிப்பிழம்பாக) நின்ற சோமசுந்தரக்கடவுள், ஏழுலகினுக்கும் ஓர் மகுடமாகிய சிவபுரத்தை வரகுணபாண்டியனுக்குக் காட்டியருளிய திருவிளையாடலிது. அச்சோமசுந்தரக்கடவுள் நிலவுலகின்மேல் விறகு விற்கும் ஆளாகத் திருவுருவங்கொண்டு நடந்து (இசை) பாடி, பாணபத்திரருடைய அடிமையென்று கூறி, அவரையடிமைகொண்டருளிய திருவிளையாடலின் திறத்தை (யாம் இனி) எடுத்துச் சொல்லுவாம். எ-று. (க)

மன்றலந் தெரியன் மார்பன் வரகுணன் செங்கோ லோச்சிப்
பொன்றலங் காவ லானிற் பொலியுநா ளேம நாத
னென்றொரு விறல்யாழ்ப் பாணன் வடபுலத் திருந்தும் போந்து
வென்றிகொள் விருதி னோடும் விஞ்சைசூழ் மதுரை சார்ந்தான்.

(இ-ள்.) வாசம் பொருந்திய அழகிய வேப்பமலர்மாலை யணிந்த வரகுண பாண்டியன் செங்கோல் செலுத்தி இந்திரனைப்போல விளங்குங்காலத்தில், ஏமநாதனென்று வெற்றிபொருந்திய ஒரு யாழ்ப்பாணன் வடதிசையினின்றும்வந்து வெற்றி கொண்ட விருதுகளோடும் கல்விமிக்க மதுரைப்பதியையடைந்தான். எ-று.

வென்றிகொள் விருது என்ற அடையானே, ஏமநாதனென்பான் பல அரசர் சபையிலுஞ் சென்று தன் இசைவன்மையைப் புலப்படுத்தி ஆங்குள்ள இசை

41



விறகுவிற்றபடலம்.

நூற்புலவரை வென்று, அவ்வரசர் கொடுத்த பல சின்னங்களைப் பெற்றவன் என்பது கொள்ளக்கிடந்தது. (உ)

பூழியர் பெருமான் கோயில் புகுந்துவேத் தவையத் தெய்திச்
சூழிமால் யானை யானைத் தொழுதுபல் புகழ்கொண் டாடி
யேழிசை மழலை வீணை யிடந்தழீஇச் சுருதி கூட்டி
வாழியின் னிசைத்தேன் மன்ன னஞ்செவி வழியப் பெய்தான்.

(இ-ள்.) பாண்டியர் பெருமானை வரகுணபாண்டியனது கோயிலிற் சென்று, அரசசபையையடைந்து முகபடாமணிந்த யானைச்சேனையையுடைய அப்பாண்டியனைப்பணிந்து, பலவிதமான புகழ்களைப் புகழ்ந்து பாடி, மழலைச்சொல்போலும் இனிமைவாய்ந்த எழிசையமைந்தவீணையையிடப்பால்தழுவி, சுருதிகூட்டி இனிய இசையாகியதேனை அவ்வரசன் செவியினுள் நிரம்பி வழியவாக்கினன். எ-று. (ங)

மூகையுடைந் தவிந்த மாலை முடித்தலை துளக்கித் தூசு
பகலவிர் மணிப்பூ ணல்கிப் பல்லுணக் கருவி நல்கி
யகன்மனை வேறு காட்டி யரசர்கோன் வரிசை செய்ய
விகலறு களிப்பி னோடு மிசைவல்லா னில்லிற் புக்கான்.

(இ-ள்.) அரும்பின் முறுக்குடைந்தவிழ்ந்த மாலைசூடிய கிரீடத்தைத்தரித்த தலையையசைத்து, ஆடையையும் விளங்கும் இரத்தினாபரணங்களையுந் தந்து, பலவகைச் சுவைபொருந்திய உணவை யளித்து இடம்பரந்த வீடொன்றைத் தனியே கொடுத்து, வரகுணபாண்டியன் வரிசைகள்செய்ய, பகையகன்ற இறுமாப்போடும் இசைநூலில் வல்ல ஏமநாதன் (தனக்குக்காட்டிய) வீட்டிற்சென்றனன். எ-று. (ச)

மீனவன் வரிசை பெற்ற செருக்கினும் விருதி னானு
மானமேல் கொண்டு தன்னோ டின்னிசை பாட வல்ல
தானயாழ்ப் புலவர் வேறிங் கில்லெனத் தருக்குஞ் செய்தி
கோனறிந் துழையர்க் கூவிப் பத்திரற் கொணர்தி ரென்றான்.

(இ-ள்.) பாண்டியன்செய்த வரிசையைப்பெற்ற செருக்கினாலும், (பல அரசரிடம்பெற்ற) விருதினாலும், மானம்மீக்கூர்ந்து தன்னோடு இசைபாடுதலில் வல்ல தானமமைந்த யாழ்வல்லவர்கள் இவ்விடத்தில் வேறொருவரிலரென்று இறுமாந்திருக்கும் வகையினை வரகுணபாண்டியன்தெரிந்து வேவுகாரரையழைத்துப் பாணபத்திரரைக் கொண்டுவாருங்களென்று கட்டளையிட்டான். எ-று.

தானம் - எழுசுரங்களுந் தங்குமிடங்கள். (ரு)

உழையரால் விடுக்கப் பட்ட பத்திர னுவரி வென்றோன்
கழல்பணிந் தருகு நிற்பக் கௌரிய னோக்கிப் பாணி
பழகிசை வல்லா னோடும் பாடுதி கொல்லோ வென்ன
மழலையா ழிடந்தோ ளிட்ட பாணர்கோன் வணங்கிச் சொல்வான்.

(இ-ள்.) வேவுகாரராற் செலுத்தப்பட்ட பாணபத்திரர், கடலை வென்ற வரகுணபாண்டியனுடைய பாதத்தைப்பணிந்து பக்கலில்நிற்க, அப்பாண்டியன்பார்த்து, தாளங்களில் வல்ல ஏமநாதனோடு பாடவல்லையோ? என வினவ, மழலைச்சொல் போல இனிமைவாய்ந்த வீணையை இடதுதோளிலிட்ட பாணர்கட்கிறைவராகிய பத்திரர் பணிந்து கூறுகின்றார். எ-று.

உக்கிரகுமார பாண்டியன் கடல்சுவற வேல்விட்டு வென்றதை அம்மரபினனாகிய இப்பாண்டியன்மீது உரிமைதோன்றக்குறித்து "உவரிவென்றோன்" என்றார்.

பாணி—தாளம். அது கொட்டு-அசை-தூக்கு-அளவு என நால்வகைப்படும். கொட்டாவது அமுக்குதல். அசையாவது தாக்கியெழுதல். தூக்காவது தாக்கித் தூக்குதல். அளவாவது தாக்கின ஓசை நேரே மூன்றுமாத்திரைபெறுமளவும் வருதல் என இசைநூலார் கூறுவர். (சு)

தென்னவர் பெருமை யானுன் றிருவுள வலனுங் கூடன்
முன்னவ னருளு மூட்டு முயற்சியான் முயன்று பாடி
யன்னவன் விருது வாங்கி யவனைவீ றழிப்ப னென்றான்
மன்னவ னாளைப் பாடு போகென வரைந்து சொன்னான்.

(இ-ள்.) பாண்டியருட் சிறந்த அரசனே! அடியேன் உனது திருவுளக் கருத்தின் வன்மையும், மதுராபுரியிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளுங் கூட்டிமுடிக்கும் நன்முயற்சியின் வழியேசென்று இசைபாடி, அவ் ஏமநாதனுடைய விருதினைவாங்கி,அவனைச்செருக்கழிப்பேனென்று கூறினர். வரகுணபாண்டியன் நாளைக்கு (வந்து) அவனோடு பாடுக. (இன்றைக்குப்) போகக்கடவாய் என்று காலவரையறுத்துச்சொல்லினன். எ-று. (எ)

இற்கண்ணே யிசைவல் லான்போ யிருந்துழி யனையான் பாங்கர்
கற்கும்பாண் மக்கண் மல்ல லாவணங் கவலை மன்றம்
பொற்குன்ற மனைய மாட மறுகெங்கும் போகிப் போகிச்
சொற்குன்றா வகையாற் பாடித் திரிந்தனர் வீறு தோன்ற.

(இ-ள்.) தமது வீட்டினிடத்திற் பாணபத்திரர் சென்றிருந்தகாலத்தில், அந்த ஏமநாதன் பக்கலில் இசைகற்கும் பாணர்கள் வளம்பொருந்திய கடைவீதியிலும், முச்தெருக்கூடுமிடத்திலும், அம்பலத்திலும், மேருமலைபோன்ற மாடங்களையுடைய வீதிகளில் எவ்விடத்திலுஞ் சென்று சென்று (இசைநூலிற்குரிய) சொற்கள் (தத்தமக்குரிய) மாத்திரைகளிற் குறைவுபடாதபடி, தமது இசைநூலின் வன்மை யாவர்க்கும் புலப்படப்பாடித்திரிந்தார்கள். எ-று. (அ)

இவ்விசை கேட்டு நன்றென் றதிசயித் திசைவல் லான்பால்
வவ்விசை மைந்தர் பாடும் வண்ணமீ தென்னை கெட்டே
னவ்விசை வல்லான் பாடு முறையெற்றோ வவனை நாளைச்
செவ்விசை பாடி வெல்வ தெவ்வெனத் திவவுக் கோலான்.

(இ-ள்.) வாரினாற் கட்டப்பட்ட வீணையில் வல்ல பாணபத்திரர், இந்த இசையைக்கேட்டு நன்றாயிருக்கிறதென்று அதிசயித்து, இசைநூலில் வல்ல ஏமநாதனிடத்துக்கற்கும் மாணாக்கர்கள்பாடும்வகை யிதுவாயின் ஆ கெட்டேன்! அந்த ஏமநாதன்பாடும்வகை எவ்வாறுள்ளதோ? அவனை நாளைக்குச்செவ்விய இசையைப்பாடி வெல்வதெங்ஙனம்? என்று. எ-று.

கெட்டேன் - வியப்பிடைச்சொல். (கூ)

மையணி மிடற்றி னானை மதுரைநா யகனை வந்தித்
தையனே யடியேற் கின்று னருட்டுணை செய்யல் வேண்டு
மெய்யனே யென்று போற்றி வேண்டுகொண் டன்பு தோய்ந்த
பொய்யறு மனத்தா னில்லம் புக்கினி திருந்தா னிப்பால்.

(இ-ள்.) விஷத்தையணிந்த ஸ்ரீகண்டத்தையுடைய பெருமானாகிய மதுராபுரியிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி, ஐயனே! உண்மைவடிவாயுள்ளவனே! அடியேனுக்கு இப்பொழுது உன் திருவருள் முன்னிற்கவேண்டும் என்று

துதித்துவேண்டி, சிவநேயங்கலந்த பொய்புகலாத மனத்தையுடைய பாணபத்திரர் தமதுவீட்டையடைந்து கவலையின்றி யிருந்தார். இப்புறம். எ-று. (க0)

கலிநிலைத்துறை.

வருத்த னாகிவந் திரந்தவ னிசைப்பகை மாற்ற
விருத்த னும்பிற காளென விண்ணிழி விமானத்
தொருத்த னாதி வாகிய வுண்மையா னந்தத்
திருத்த னர்தம திச்சையாற் றிருவுருக் கொள்வார்.

(இ-ள்.) வருத்தமுடையவராகி வந்து தமது குறைகூறியிரந்த பாணபத்திரருக்குப் பகைவனாகிய ஏமநாதனைக்குடியோட்ட, விண்ணிழி விமானத்திலெழுந்தருளிய ஒப்பில்லாதவரும், சச்சிதானந்த வடிவுடையவருமாகிய சோமசுந்தரக்கடவுள் விருத்தவடிவாகிய விறகுதலையன்போலத் தமது இச்சையால் திருவுருவங்கொள்வாராயினர். எ-று. (கக)

அழுக்கு மூழ்கிய சிதரசைத் தவிர்சடை யமுத
மொழுக்கு வெண்மதி வாங்கியே செருகிய தொப்ப
மழுக்கு கூனல்வெள் வாய்க்குயம் வலம்படச் செருகி
யிழுக்கு தேய்செருப் பருமறை கடந்ததா ளேற்றி.

(இ-ள்.) அழுக்குமயமாகிய கந்தையுடுத்தி, விளங்குஞ் சடையிலணிந்த அமுதஞ்சொரியும் வெள்ளிய பிறையை வாங்கி (பின்புறஞ்) செருகியதுபோல, மழுங்கிய வளைந்த வெள்ளிய வாயையுடைய கொடுவாளை வலப்பாற் செருகி, இழுத்துத் தேய்ந்த செருப்பினை அரிய வேதமுடிவைக்கடந்த திருவடியிற்றொடுத்து. எ-று. (கஉ)

பழையதோர் பொல்லம் பொத்திய பத்தர்யாழ்க் கோறோ
ளுழைய தாகவிட் டெருத்தலைத் தூசலா டியவொண்
குழைய காதினிற் களவிணர்க் குறியகாய் தூக்கித்
தழையும் வார்சிகை சரிந்திடச் சுமையடை தாங்கி.

(இ-ள்.) பழயதாகிய ஒப்பில்லாத பொல்லம்பொருந்திய பத்தரையுடைய வீணையானது தோளினிடத்ததாகத் தொங்கவிட்டு, பிடரையலைத்து ஊசல்போலசைந்தாடிய ஒள்ளிய குண்டலத்தையணிந்த காதினிற் களாவின் பூங்கொத்தோடு அதன் சிறிய காய்க்கொத்தையுந் தொங்கவிட்டு, தழைந்த நீண்ட சிகைசரிபச்சம் மாடு தாங்கி. எ-று.

இதுமுதல் ஐந்து பாடல்கள் குளகம்.

பத்தர் - வீணைதண்டத்தின் கோட்டின்புறத்துள்ள சுரைக்குடுக்கை. அஃது வீணையுறுப்புகளுள் ஒன்று. அஃது பழயதாதலின் "பொல்லம் பொத்திய" என்றார்.

வீணையுறுப்புகளை "கோடே பத்தர் ஆணி நரம்பே - மாடக மெனவரும் வகையின வாகும்" என்பதனுனறிக. (கரு)

தறிந்த விந்தனந் தினந்தொறுந் தாங்கிநீள் பங்கி
பறிந்து தேய்ந்தழுந் தியதலை யுடையராய்ப் பரிந்து
மறிந்த கங்கையும் பங்குறை மங்கையுங் காணு
தெறிந்த விந்தனச் சுமைதிரு முடியின்மே லேற்றி.

(இ-ள்.) முறிபட்டவிறகைத் தினந்தோறுஞ் சுமத்தலால், நீண்ட உரோமங்கழிந்து தேய்ந்து அழுந்திய தலையையுடையவராய், அன்புகொண்டு (அலைகளால்)

மடங்கிவருங் கங்காதேவியாரும் இடதுபாகத்தில் வசிக்கும் உமாதேவியாருங் காணு மல் வெட்டிய விறகு சுமையைத் தமது திருமுடியின்மேல் வைத்து. எ-று.

கங்காதேவியும் உமாதேவியுங்காணில் மனந்தாளாராதலின், "மறிந்தகங்கை யும் பங்குறை மங்கையுங் காணுது" என்றார். (கச)

என்பு தோன்றியூ னின்றியே யிளைத்தயாக் கையரா
யன்பு தோன்றியே கண்டவ ரகங்கனிந் திரங்க
வன்பு தோன்றிய மனமொழி கடந்ததாண் மலர்பார்
முன்பு தோன்றிய தவத்தினுன் முடிமிசைச் சூட.

(இ-ள்.) எலும்புகள்தெரிந்து தசையில்லாமல் இளைத்ததேகத்தையுடையவ ராய், பார்த்தவர்கள் அன்புகொண்டு மனநெக்கு விட்டிறங்க, தம்பாலுருகுதலில்லாத மனத்தையும் வாக்கையுங் கடந்துநின்ற பாததாமரைகளை, நிலமகள் முன்புசெய்ததவத் தால் தனது முடிமேற்சூடவும். எ-று. (கரு)

திருமு கத்துவேர் வரும்பவாய் குவித்தொலி செய்ய
வருவர் கற்சுமை தாங்கிமேற் சார்த்துவர் மடிநீர்
பருகு வாரொடுப் பார்தலை வெம்மைவேர் பறிய
விருகை யாலடிக் கடியெடுத் தேந்தியூர் புகுவார்.

(இ-ள்.) திருமுகத்தில் வேர்வைதோன்றத் திருவாய்குவிந் தொலிசெய்ய வாராநிற்பர். கல்லாலாகிய சுமைதாங்கிமேற் சார்த்தாநிற்பர். மடுவிலுள்ள நீரைப்பருகா நிற்பர். (விறகுசுமையை) எடுத்துத் தமது திருமுடிமேல்வைப்பர். தலையில் உஷ்ணத்தாலாகிய வேர்வைகழியத் தமது இருகரங்களாலும் அடிக்கடி (சுமையை) மேலே யெடுத்தேந்தி ஊரிற்செல்லா நிற்பர். எ-று.

இச்செய்யுளில் விறகாளின் தொழிற்றன்மை தோன்றக்கூறியதால் தொழிற்றன்மையணி. (கசு)

நடந்து கொள்ளுநர்க் கருவிலை பகர்ந்துநான் மாட
மிடைந்த வீதியுங் கவலையு முடுக்கரு மிடைந்து
தொடர்ந்த வேதமும் பிரமன்மால் சூழ்ச்சியும் பகலுங்
கடந்து போகியவ் விசைவலாள் கடைத்தலைச் செல்வார்.

(இ-ள்.) (இவ்வாறு) நடந்து வாங்குவோர்க்கு மேற்பட்ட விலைகூறியும், நான்மாடக்கூடலாகிய மதுரைப்பதியில் நெருங்கிய வீதிகளையும், முத்தெருக் கூடு மிடத்தையும், முடுக்குச்சந்திகளையும் நெருங்கிப் பின்பற்றிய வேதத்தையும் பிரம விஷ்ணுக்களுடைய ஆலோசனையையும் பகற்பொழுதையுங் கடந்துபோய், அந்த இசைநூலில்வல்ல ஏமநாதன் கடைவாயிலில் அடைவாராயினர். எ-று.

"அருவிலைபகர்ந்து" என்றதால், விறகுவிற்கவந்தவரல்லரென்பதும், "அவ் விசை வலான் கடைத்தலைச்செல்வார்" என்றதால், ஏமநாதன் தன்னை விறகுசுமை யோடு காணவேண்டுமென்று சென்றவரென்பதும் புலப்பட்டன. (கஎ)

வரவு நேர்ந்தழைப் பவரென வாம்புல்வாய் மலர
விரவு கான்றுவெண் மதிநகைத் தெழவுயிர்த் துணைவன்
பிரிவு நோக்கினு ரெனக்கணீர் பில்குதா மரையி
னிரைகள் கூம்பிடக் கதிரவன் குடகட லீந்த.

(இ-ள்.) (சந்திரனது) வருகையைநோக்கி அழைப்பவர்போல ஆம்பல்கள் வாய்மலர, வெள்ளிய சந்திரன் இரவை வெளிப்படுத்தி புன்னகையரும்பி உதையஞ் செய்யவும், தமது உயிர்போன்ற கணவருடைய பிரிவுநோக்கி வருந்திய பெண்கள் போல, கண்ணீரைச்சொரியுந் தாமரைகள் குவியவும், சூரியன் மேலைக்கடலில் நீந்திச் செல்லவும். எ-று.

இதுமுதல் ஐந்து செய்யுள்களால் மாலைக்காலம் வருணிக்கப்பட்டது. கண்ணீர் என்றதைக் கள் நீர் எனப் பிரித்துத் தேனுகிய நீரொன்க.

ஒருபால் இன்பமும் ஒருபால் துன்பமும் உண்டாதல் உலகியல்பு என்பார் "ஆம்பல்வாய்மலர நகைத்தெழ" என்றும், "தாமரையினிரைகள் கூம்பிட" என்றுங் கூறினர். (க௮)

பறவை வாயடைத் தருகணை பார்ப்பொடும் பெடையைச்
சிறக ராலணைத் திரும்பொழிற் குடம்பையுட் செறிய
நறவ வாய்ப்பெடை யுண்டதே னக்கிவண் டோடைப்
பொறைகொ டாமறைப் பள்ளியுட் புகுந்துகண் படுக்க.

(இ-ள்.) ஆண்பறவைகள் கூவாது, அருகேவந்த குஞ்சுகளோடும் பெண் பறவைகளைச் சிறகாலணைத்து, பெரிய சோலைகளிலுள்ள கூடுகளிலணையவும், பெண் வண்டுகள் வாயாலுண்ட தேனினை ஆண்வண்டுகள் நக்கி ஓடைகளிலுள்ள இதழ்ப் பாரத்தையுடைய தாமரைகளாகிய சயனத்திற்சென்று துயிலவும். எ-று. (க௯)

புல்லெ னீணிலைக் குரங்கினம் பொதும்பர்புக் குறங்க
முல்லை யாய்மகா ருய்த்தரக் கன்றுள்ளி முந்திக்
கொல்லை யானிரை மனைதொறுங் குறுகிடச் சிறுபுன்
கல்வி மாணவச் சிறார்பயில் கணக்கொலி யடங்க.

(இ-ள்.) குரங்கின் கூட்டங்கள் சோலையிலுள்ள உயர்ந்தமரங்களில் விரைந்து சென்று துயில்புரியவும், முல்லை நிலத்திலுள்ள ஆயர்குலச்சிறுவர்கள் செலுத்தத் தமது கன்றுகளைக்கருதி அம்முல்லை நிலத்திலுள்ள பசுக்கள் முற்பட்டுத் தமது வீடுகள்தோறுஞ் செல்லவும், இளங்கல்வி பயிலும் மாணுக்கச் சிறுவர்கள் கூறும் நெடுங் கணக்கொலியடங்கவும். எ-று.

நீணிலை-வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (உ0)

புனைந்த வாழ்கடற் கரும்படா முடம்பெலாம் போர்த்து
வனைந்த பூண்முலை நிலமக டுயில்வது மானக்
கனைந்த காரிருண் மெல்லெனக் கவிதரப் பிரிவா
லினைந்த காதலர் நெஞ்சில்வே ளெரிகணை நாட்ட.

(இ-ள்.) (தன்னைச்)சூழ்ந்த ஆழ்ந்த கடலாகிய கரியபோர்வையை உடல் முழுதும்போர்த்து, ஆபரணமணிந்த தனங்களையுடைய பூமிதேவி கண்டுயில் கூருதலை யொப்ப, மிக்ககரிய இருளானது மெல்லெனவந்து உலகினைப்போர்க்கவும், (கணவர்) பிரிவால்வருந்திய மகளிருடைய மனத்தில் விளங்கும் நெருப்புப்போன்ற அம்புகளை மன்மதன் நாட்டவும். எ-று.

அகத்திணையியல் "பரத்தையிற் பிரிதல் ஓதற்குப் படர்தல்
அருட்டகு காவலொடு தூதிற் ககறல்
உதவிக் கேகல் நிதியிற் கிகத்தலென்
றுறுபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே"—எனப் பிரிவு பல திறப்படுதலின் பிரிவால் எனப்பொதுப்படக் கூறினர். (உக)

திங்கள் வாணுதன் முயற்கறைத் திலகமுஞ் செவந்த
மங்கு லாடையு மயங்கிரு ளோதியும் வான்மீன்
பொங்கு மாரமும் பொலிந்துதன் கொண்கனைப் பொருப்பண்
மங்கை தேடிவந் தாலென வந்தது மாலை.

(இ-ள்.) சந்திரனாகிய நெற்றியில், முயற்களங்கமாகியதிலகமும், செவ்வானமாகிய வுடையும், கரிய அந்தகாரமாகிய கூந்தலும், நக்ஷத்திரங்களாகிய விளங்காநின்ற முத்துமாலையுமாகிய இவற்றால் விளங்கி, உமாதேவியார் தனது கணவனை தேடிவந்ததைப்போல மாலைக்காலம் வந்தது. எ-று.

முயற்கறை - இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். (உஉ)

எடுத்த விந்தன மொருபுறத் திறக்கியிட் டூன்றி
யடுத்த வன்புறந் திண்ணைமீ தமர்ந்திளைப் பாறித்
தொடுத்த வின்னிசை சிறிதெழீஇப் பாடினார் சுருதி
மடுத்தி யாரவன் பாடுவா னென்றிசை வல்லான்.

(இ-ள்.) எடுத்த விறகின்சுமையை ஒருபுறத்திலிறக்கி நிலத்திலூன்றி (மறுபுலத்திருந்து) வந்த ஏமநாதனுடைய வீட்டின் புறத்திலுள்ள திண்ணையின்மேலே சற்றிருந்து இளைப்பாறி, இடைவிடாது பாடும் இனிய இசையைச் சிறிதெழுப்பிப்பாடினார். அச்சுருதியைக்கேட்டு, பாடுகின்ற அவன் யார்? என்று இசைநூலில் வல்ல ஏமநாதன். எ-று. (உரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வண்டறை கொன்றை யான்முன் வந்துநீ யாரா யென்றான்
பண்டரு விபஞ்சி பாண பத்திர னடிமை யென்றான்
முண்டக மலரோன் மாயோன் புரந்தரன் முதன்மற் றேனை
யண்டருந் தன்குற் றேவ லடிமையாக் கொண்ட வம்மான்.

(இ-ள்) வண்டுகளொலிக்குங் கொன்றைமாலையணிந்த சிவபெருமான்முன்னேவந்து நீயார்? என்று வினவினன். தாமரைமலரைப் பீடமாகக்கொண்ட பிரமதேவரும் திருமாலும் இந்திரனுமுதலிய மற்றைத்தேவர்களையுந் தமது குற்றேவல்செய்யும் அடிமைகளாகக்கொண்ட (விறகாள்வடிவங்கொண்டுவந்த) சிவபெருமான், இசையமைந்த யாழில்வல்லவராகிய பாணபத்திரனடிமையென்று கூறினர். எ-று.

சிவபெருமான் தமது அடியார்க்கடியவரும், பாணபத்திரர் தம்மிடம் வேண்டுகொண்டது கருதி ஏமநாதனை மறுபுலத்துய்ப்ப வேண்டிவந்தவரும் ஆதலின், அப்பாணபத்திரரையுயர்த்திப் "பண்டரு விபஞ்சி பாணபத்திரனடிமை" என்றார். ()

கனியிசைக் கிழவன் றன்கீழ்க் கற்பவ ரனேகர் தம்மு
ணனியிசைக் கிழமை வேட்டு நானுமவ் வினைஞ் ஞனேன்
றனியிசைக் கிழவ னோக்கித் தசைபெலா மொடுங்க மூத்தா
யினியிசைக் கிழமைக் காகா யென்றெனைத் தள்ளி விட்டான்.

(இ-ள்.) சுவைகனிந்த இசையில்வல்ல பாணபத்திரர்கீழ் இசைகற்போர் அநேகருளர். அவருள் சிறந்த இசைநூல் கற்கும் உரிமையை நானும் விரும்பிக் கற்குந் தொழிலுடையனாயினேன். ஒப்பில்லாத இசைநூலில்வல்ல அந்தப்பாணபத்திரர் (என்னைப்) பார்த்து (உடம்பிற்) சிறிதுந் தசையில்லாதொழிய விருத்தனாயினை (ஆதலால்) இனி இசைநூல்கற்கும் உரிமைக்குதவாயென்று, என்னைக்கற்போரினின்றுந் தள்ளிவிட்டனர். எ-று.

தான் ஒருவரோ பாணபத்திரர்கீழ் இசைகற்றோனென்று கருதாது "கனியிசைக்கிழவன்றன்கீழ்க் கற்பவர் அநேகர்" என்றும், அவருள்யான் வயது முதிர்ந்து இசைநூற் பயிற்சிக்குத் தகுதியின்றித் தள்ளப்பட்டேன் என்பார் "தசையெலாமொடுங்கமூத்தா யினியிசைக்கிழமைக்காகா யென்றெனைத் தள்ளிவிட்டான்" என்றுங் கூறினர்.

இதனால் தள்ளுண்ட ஒருவன் இவ்வாறு பாடுவோனாயினான் அவராற் கொள்ளப்பட்ட மாணாக்கரும் அவ்வண்ணம் பாடப் பயிற்றிய பாணபத்திரரும் எவ்வாறு பாடார் என்பதும் கூறாதே கருத உளத்தாராயினர். (௨௫)

வெவ்விற கெறிந்து கட்டி விலைபகர்ந் தேனு மையா
விவ்வயி றோம்பு கேனென் றித்தொழில் பூண்டே னென்ன
நைவளந் தெரிந்த வேம நாதனும் விறகு மள்ளா
வவ்விசை யொருகா லின்னும் பாடென வையன் பாடும்.

(இ-ள்.) ஐயனே! உலர்ந்தவிறகினைவெட்டி விற்றாயினும் இந்தவயிற்றினையோம்பக்கடவேனென்று இவ்விறகுவிற்குந் தொழிலைப்பூண்டேனென்றுகூற, அந்த பண்ணில் வல்ல ஏமநாதனும், விறகுசுமக்குந் திண்ணியா! அந்தத் தேவகாந்தாரத்தை இன்னுமொருதரம் பாடாயென்று கூற, சிவபெருமானார் பாடுகின்றார். எ-று.

"வெவ்விறகெறிந்து கட்டி விலைபகர்ந்தேனு மையா விவ்வயி றோம்புகேனென்றித்தொழில் பூண்டேன்" என்றது ஆசிரியன் சொல்வழி மாணாக்க னொழுகுதல் கடனாதலின் அவ்விசைத் தொழிலாற் சீவியாது இவ்விறகு விற்றற் றொழிலாற் சீவிக்கின்றேனெனக் கூறியதாம். தாம் பாடிய தேவகாந்தாரம் முற்றும் பாடினரல்ல ராதலின் "ஐயன்பாடும்" என்றார். நைவளம்-ஒரு பண். (௨௬)

குண்டுநீர் வறந்திட் டன்ன நெடுங்கொடிக் குறுங்காய்ப் பத்தர்த்
தண்டுநீ ணிறத்த நல்யா ழிடந்தழீஇத் தெரித்துத் தாக்கிக்
கண்டுமா டகந்தி ரித்துக் கௌவிய திவவிற் பாவ
விண்டுதே னொழுகிற் றென்ன வீக்கிமென் சுருதி கூட்டி.

(இ-ள்.) மடுவிலுள்ள நீர் வறந்தாற்போல, நீண்ட கொடியிலுள்ள சிறிய காயாகிய குடுக்கையைப் பின்புறத்திலுள்ள தண்டையுடைய மிக்க நிறமமைந்த வீணையை இடப்பால் தழுவி, நரம்பினைத் தெறித்துத் தாக்கிப்பார்த்து, முறுக்காணியைத் திரித்து, அதில் விடாதுபற்றிய கட்டில் பரவ, தேனானது மலரினின்றும் ஒழுகியதுபோல நரம்பினை வீக்கி, மெலிவுபடச் சுருதியை யெழுப்பி. எ-று.

"நல் யாழ்" என்றதனால் குற்றந் தீர்ந்த தென்பதும், "நிறத்த யாழ்" என்றதனால், நிறம் ஐந்தும் அமைந்ததென்பதும், "விண்டுதே னொழுகிற்றென்ன வீக்கி" என்றதனால், நரம்பின் வீக்கு மலரினின்று ஒழுகுந் தேனொழுக்குப் போலுள்ளதென்பதும் பெறப்பட்டன.

இனி யிக்குற்றங்கள் யாழ்செய்யும் மரத்தால் நேர்ந்தவை யெனக்கொள்க. இதனை,

**சீவகசிந்தாமணி - காந்தர்வதத்தையாரிலம்பகம்.**

" நீரிலே நிற்ற லழுகுதல் வேத னிலமயங்கும்
பாரிலே நிற்ற லடிவீழ்த னேய்மரப் பாற்படல்கோ
ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வு நிற்றல்
சேரினேர் பண்க ணிமையக் கப்படுஞ் சிற்றிடையே"—எனக் காட்டிய நச்சினார்க்கினியார்மேற்கோளால் அறிக. இனி யிக்குற்றம் செம்பகை-ஆர்ப்பு-கூடம்-அதிர்வு என நான்குவகை யென்பர். அதனை,

**ஷை உதாரணச் செய்யுள்.**

"செம்பகை யார்ப்பு கூட மதிர்வு, அவற்றுள்,
செம்பகை யென்பது பண்ணோ டொரா
வின்பமி லோசை யென்மனார் புலவர்.
ஆர்ப்பெனப் படுவ தளவிறந் திசைத்தல்.
கூட மென்பது குறிவுற விளம்பின்
வாய்வதின் வாராது மயங்கியிசைப் பதுவே.
அதிர்வெனப் படுவ திழுமென லின்றிச்
சிதறி யுரைக்குந ருச்சரிப் பிசையே."—எனவும்,

**பஞ்சாரதீயம்.**

"இன்னிசை வழிய தன்றி யிசைத்தல்செம் பகைய தாகும்
சொன்னமாத் திரையி னேங்க விசைத்திடுஞ் சுருதி யார்ப்பே
மன்னிய விசைவ ராது மழுங்குதல் கூட மாகும்
நன்னுதால் சிதற வுந்த லதிர்வென நாட்டினாரோ"—எனவுங் காட்டியவற்று னுணர்க.

இனி இவ்வகைக் குற்றந்தரும் விலக்கு மரங்களை நீக்கி உத்தமமாகிய விதிக் கப்பட்ட மரங்களால் வீணைதண்டஞ் செய்ய வேண்டுமென்பதற்கு விதி.

"சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு
நல்ல குமிழுந் தணக்குடனே—மெல்லியலா
யுத்தம மான மரங்க ளிவையென்றார்
வித்தக யாழோர் விதி.

தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கு
முளதா யொருங்கூன மின்றி—யளவு
முதிரா திளகாது மூன்றுங்கூ டுரிய
வதுவாகில் வீணைதண் டாம்"—என்றபடியே நல்ல மரங்களைக்கொண்டு,

"பதுமங் கழல்குடந் தாடியொ டுள்ளிபண் பூண்டு நின்ற
விதியமர் தண்டு குடையே குடுமிமெய்க் கோட்டுறுபின்
மதியமர் போதிகை புட்டின் முகஞ்சுவர் மன்னெ ருத்தம்
விதியமர் பத்தர்க் குறுப்பென் றுரைத்தனர் மெல்லியலே"—என்றபடி தக்க சிற்பனூல் இலக்கண சம்பந்தமாகச் செய்யப்பட வேண்டுமென்க.

நிறம் ஐந்து என்றதனை,

"மாத்திரைக ளொன்பானுந் தாளங்க ளெட்டானும்
எத்துங் கிரியையென் றீரைந்தும்—கோத்துப்
பதின்மூன் றெழுத்தாற் றொழிலைந்தும் பண்ணின்
மதியோர்க ளைந்துநிற மாம்"—என்னுஞ் செய்யுளானும்,

விண்டுதே னொழுகிற்றென்ன வீக்கி யென்றதனை,

"பசும்பொன் யாழ்-நரம்புதே னூர்த்தென"—என வருவதனானு மறிக. (உஎ)

விசையொடு தானந் தோறும் விரனடந் தூச லாட
விசைமுத லேழிற் பல்வே றின்னிசை யெழுஞ்சா தாரி
யசையொடு வீதிப் போக்கு முடுகிய லராகம் யார்க்கு
நசைதரு நரம்பு கண்ட மொற்றுமை நயங்கொண் டார்ப்ப.

(இ-ள்.) (சுரங்களேழும்) தானங்கள் தோறும் விசையுடன் விரல் சென்று போக்குவரவு செய்ய, குரல்முதலிய ஏழிசைகட்கு முதலாயுள்ள சத்தசுரங்களில் பல வேறுவகைப்பட்ட இனிய இசைகளில் ஒன்றுமெழும் சாதாரிப் பண்ணும், அசையும், வீதிப்போக்கும், வண்ணமும், திறமுமாகிய இவைகளால் எல்லோர்க்கும் விருப்பந்தரும் நரம்பினோசையும் சாரீர வோசையும் ஒற்றுமைநயத்தோடொலிக்க. எ-று.

அசை = ஒருமாத்திரையளவுள்ள தாளம். அது "கொட்டு மசையுந் தூக்கு மளவும் - ஒட்டப் புணர்ப்பது பாணி யாகும்" என்றபடியே, கொட்டு-அசை-தூக்கு-அளவு என்னும் நான்கனு ளொன்றென்க.

வீதிப்போக்கு—நகர முதலிய நாலெழுத்துகள் நேராய்ச் செல்லுதல். முடியியல் என்றது வண்ணம். அது பெருவண்ணம் இடைவண்ணம் வனப்பு வண்ணம் என மூவகைத்து. அராகம் - யாழ்த்திறம்.

அசைவு என்னும் பாடத்தை அசை யெனக் கொள்வதுசிதம். (உஅ)

வயிறது குழிய வாங்க லழுமுகங் காட்டல் வாங்குஞ்
செயிரறு புருவ மேறல் சிரநடுக் குறல்கண் ணுடல்
பயிறரு மிடறு வீங்கல் பையென வாயங் காத்த
லெயிறது காட்ட லின்ன வுடற்றொழிற் குற்ற மென்ப.

(இ-ள்.) (பாடும்பொழுது) வயிறு குழிபட வாங்குதலும், அழுமுகங் காட்டுதலும், வளைந்த குற்றமில்லாத கண்டம் வீங்குதலும், பையைப்போல வாயைத் திறத்தலும், பற்களைக் காட்டுதலு முதலிய இவைபோல்வனவற்றை உடலின் தொழிலால் வருங் குற்றங்களென (இசைநூலார்) கூறுவர். எ-று.

சிவபெருமான் பாடியது தேவகாந்தாரமாதலின் அதற்கியைய இக்குற்றங்கள் ஒழியப் பாடவேண்டுமென்றார். இதனை,

" கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா—வெண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர்
உள்ளாளப் பாட லுணர்."

" உள்ளாளம் விந்துவுட னோத மொலியுருட்டுத்
தள்ளாத தூக்கெடுத்த றூன்படுத்தல்—மெள்ளக்
கருதி நலிதல்கம் பித்தல் குடிலம்
ஒருபதின்மே லொன்றென் றுரை"—என வருவதனானும்,

கல்லாடம்.

" விரனுன் கமைத்த வணிகுரல் வீங்காது
நான்மறை துள்ளும் வாய்பிள வாது
காட்டியுள் ளுணர்த்து நோக்கமா டாது
பிதிர்கணன் மணிசூழ் முடிநடுக் காது
வயிறுகுழி வாங்கி யழுமுகங் காட்டாது"—என வருவதனானு மறிக.

வெள்ளைகா குளிகி ழோசை வெடிகுர லுசி யின்ன
வெள்ளிய வெழாலின் குற்ற மெறிந்துநின் றிரட்ட லெல்லை
தள்ளிய கழிபோக் கோசை யிழைத்தனெட் டுயிர்ப்புத் தள்ளித்
துள்ளலென் றின்ன பாடற் றொழிற்குற்றம் பிறவுந் தீர்ந்தே.

(இ-ள்.) வெள்ளோசையும், காகுளிப்பாட்டும், கீழோசையும், வெடித்த குரலும், நாசிப்பாட்டு முதலிய இவைபோல்வன் (இசைநூலார்) விலக்கிய சாரீரவோசையின் குற்றமாம். எறிந்து நின்றிரட்டலும், அளவு கடந்த கழிபோக்கும், ஓசையிழைத்தலும், பெருமூச்செறிதலும், ஒருபுற மோட்டலு மென்று சொல்லப்பட்ட இவை போல்வனவாகிய பாடுந் தொழிற்குற்றத்தினும் பிறகுற்றத்தினுந் தீர்ந்து நீங்கி. எ-று.

நிறமென்றது மேற்காட்டி யிருத்தலின் வெள்ளை யென்பதற்கு நிறமில்லாத வெள்ளோசை யெனப் பொருள்கொள்க. காகுளி - பேய்க் கூச்சல்போற் பாடுவது. கீழோசை - நிறமுந் தானமுங் குறைபட்டது; இதனைக் கட்டையோசை யென்பர். நாசிப்பாட்டு - ஒரு தானத்தே பாடுகையில் ஒரு தானத்தில் நழுவுவது; இதனை மூக்சாற் பாடுதலெனவுங் கூறுவர். எறிந்துநின்றிரட்டல்-ஒரு பண்ணைப் பாடுகையில் பிறிதொருபண்ணிற் பிறழ்தல். கழிபோக்கு-ஒரோசையான தன்மை நீங்கிப் பலவோசையுங் கலத்தல். பிற என்றதால் அசைவு முதலியனவற்றையுங் கொள்க. அசைவு= சோம்பல்.

குற்றந் தெரிந்து என்ற பாடத்தைக் குற்றமெறிந்து என்றும், ஓசையிளைத்த நெட்டுயிர்ப்பு என்ற பாடத்தை ஓசை யிழைத்த னெட்டுயிர்ப்பு என்றுங் கொள்வது உசிதம்.

இச்செய்யுளின் கருத்தை, **கல்லாடம்.**

> " நாசி காகுளி வெடிகுரல் வெள்ளை
> பேசாக் கீழிசை யொருபுற மோட்டல்
> நெட்டுயிர்ப் பெறித லெறிந்துநின் றிரட்டல்
> ஓசை யிழத்தல் கழிபோக் கென்னப்
> பேசுறு குற்ற மசைவொடு மாற்றி"—என வருவதனானுணர்க. (ரு0)

> எழுதுசித் திரம்போன் மன்னி யிழுமெனு மருவி யோதை
> முழவொலி கஞ்ச நாதம் வலம்புரி முரலு மோசை
> கொழுதிசை வண்டின் முரி யெனவிசைக் குணனும் வேரல்
> விழுமிலை சிரன்மீன் மேல்வீழ் வீழ்ச்சுபோற் பாடற் பண்பும்.

(இ-ள்.) (சிற்ப நூலோர்) எழுதிய சித்திரப்பதுமைபோல, (பதுமாசனத்தில்) இருந்து இழுமென்றொலிக்கும் அருவியினோசையும், வலம்புரிச்சங்கு முழங்கும் முழக்கமும், (மலர்களை மூக்கால்) உழுதுபாடும் வண்டின் முழக்கமும்போல, இசைக்கும் இசையின் குணமும், மூங்கிலினின்று விழாநின்ற இலையினது வீழ்ச்சியும்மீனெறி பறவையானது மீன்மேல் விழும் வீழ்ச்சியும்போலப்பாடும் பாடலின் குணமும். எ-று.

**சிலப்பதிகாரம்.**

> " பதுமுக முற்கட் டிதமே யோப்படி
> இருக்கை சம்புட மயமுகம் சுவத்திகம்
> தனிப்புட மண்டில மேனை பாதம், உளப்பட வொன்பதும்,
> ஆகுந் திரிதர வில்லா திருக்கை"—எனக்காட்டிய மேற்கோளால் ஓவிய

நூலுட்கூறிய விருத்தி யொன்பதுட் சிறந்த பதுமாசனத்தைக் கூறினும்.

வலம்புரி நாதமும் வண்டி னோசையும் உத்தம மென்றதை,

> " தய்ய மொழி மென்குயிலுஞ் சோலைவரி வண்டினமும்
> வைய முழங்கும் வலம்புரியும்—கைவைத்துத்
> தும்புருவு நாரதரும் பாடிவமு வோசையென
> நம்புநீர் நால்வேதத் துள்.

சிச்சிலி பூனை குடமுழக்கஞ் செம்மைத்தாம்
உச்சிமலை நீர்விழுக்கா டொண்பருந்து—பச்சைநிற
வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கா னிழற்பறவை
ஏயுங்கா லோசை யியம்பு.''—என இசைநூன் மரபு வழக்கெடுத்து
உதகரித் துளவற்று னுணர்க. அன்றியும், பருந்தின் வீழ்ச்சி, பூனையின் புணர்ச்சி, வா னம்பாடி நிலை, குயிலோசை முதலியனவற்றைக் கூறுவதுமுண்டு, அதனை,
**கல்லாடம்.**—''வண்டின் ரீரியுங் கஞ்ச நாதமும்
சிரல்வா னிலையுங் கழையிலை வீழ்வதும்
அருவி யோசையு முழவின் முழக்கமும்
வலம்புரிச் சத்தமும் வெருகின் புணர்ச்சியும்
இன்னுமென் றிசைப்பப் பன்னிய விதியொடு''—என்பதனு னுணர்க.

பொருந்தமந் திரத்தி னோடு மத்திமந் தாரம் போக்கித்
திருந்திய துள்ள றாங்கன் மெலிவது சிறப்பச் செய்து
மருந்தன செய்யு ளோசை யிசையோசை வழாமல் யார்க்கும்
விருந்தெனச் செவியின் மாந்தப் பாடினார் வேத கீதர்.

(இ-ள்.) படுத்த லோசையோடு சமனோசையும் எடுத்தலோசையுமாகிய இவ ற்றில் இசைய அடக்கி, திருத்தமாகத் துள்ளப்படுதலும் தூங்கப்படுதலும் மெலிக்கப் படுதலுமாகிய இவை சிறந்து நிற்கச்செய்து, அமுதத்தையொத்த பாடலினோசையும் இசையினோசையுந் தம்முள் வழுவாமல், சாமவேத கீதராகிய பெருமானார் எல்லோர்க் கும் விருந்துபோலக் காதாற்பருகப் பாடியருளினார். எ-று.

மந்தரம் மத்திமம் தாரம் என்பன முறையே படுத்தல் நலிதல் எடுத்தல் என ப்படும். இவை இசை வேறுபாடுகள். ''நீடவுங் குறுகவு நிவப்புத் தூக்கிப்-பாடிய புல வர்'' என்றார் ஐயனாரிதனாரும்.

''பாவோ டணைந்த விசையென்றார் பண்ணென்றார்
மேவார் பெருந்தான மெட்டானும்—பாவாய்
எடுத்தன் முதலா விருநான்கும் பண்ணிப்
படுத்தமையாற் பண்ணென்று பார்''—என்பதனானறிக.

[மந்தர மத்திம தார மென்பவற்றை, திருத்தொண்டர் புராணத்தில், ''மந் தரத்தும் மத்திமத்துந் தாரத்தும் வரன்முறையாற் - றந்திரிக்கண் மெலிவித்துஞ் சம ங்கொண்டும் வலிவித்தும்'' என வரும் ஆனாயநாயனார்புராணச் செய்யுளானும்,

உகூ-வது செய்யுள்முத லிதுகாறுங் கூறியவற்றைக் கல்லாடம் ''நீர்நிலை'' என்னும் உஉ-வது அகவலுளையானுமுணர்க.]

நாற்சீரால் இடைமடக்காய் வந்த **கோச்சகக்கலிப்பா.** (கூஉ)

கந்தருவன்.

விரைசார் மலரோ னறியா விகிர்த
னரசாய் மதுரை யமர்ந்தா னென்னே
யரசாய் மதுரை யமர்ந்தா னவனென்
புரைசார் மனனும் புகுந்தா னென்னே.

(இ-ள்.) வாசம் பொருந்திய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவர் கண் டறியாத வேறுபாட்டினையுடைய சிவபெருமான் பாண்டியர் திருக்கோலங் கொண்டு மதுராபுரியில் வீற்றிருந்தனன். அஃதியாதுகாரணமோ ? அரசனாய் அம்மதுரைப்பதி

யில் வீற்றிருந்த அப்பெருமான் என்னுடைய களங்கமமைந்த மனத்திலுங் குடிபுகுந் தான். அஃதியாதுகாரணமோ? அறியேன். எ-று.

தம்மை மதியாது இருமாப்புற்றோ ரறிகற்கரிய னென்பார் "விரைசார் மல ரோ னறியா விகிர்தன்" என்றும், அத்தகையினர்க்கன்றி அன்பர்க்கெளிய னென்பார் "அரசரிய் மதுரை யமர்ந்தான்" என்றும், அவ்வாறிருத்தல் வியப்பு அதனினும் களங்க முடைய என் மனத்திற் குடிபுக்கது பெருவியப்பு என்பார் "புரைசார் மனனும் புகு ந்தா னென்னே" என்றுங் கூறினர். இதனை,

"மூவரானு மறியொ ணாமுத லாய வானந்த மூர்த்தியான்
யாவ ராயினு மன்ப ரன்றி யறியொ ணாமலர்ச் சோதியான்" என்பதனானறிக.

பாடன் மறையுந் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டா னென்னே
கூடல் போலக் கொடியே னகமு
மாட லரங்கா வமர்ந்தா னென்னே.

(இ-ள்.) பாடலமைந்த வேதங்களுந் தெளியாத பரமசிவன் மதுராபுரியில் திருக்கோயில்கொண்டெழுந்தருளினன். அஃதியாதுகாரணமோ? அம்மதுராபுரியைப் போல், கொடுந்தொழிலையுடைய என் மனத்தையும் ஆடற்றொழி லமைந்த நடனசா லையாகக் கொண்டு வீற்றிருந்தருளினன். அஃதியாதுகாரணமோ? அறியேன். எ-று.

"பாடன் மறையுந் தெளியாப் பரமன்" என்றது, சுட்டறிவிற்பட்ட பாச ஞானமாகிய சொற்பிரபஞ்சமாதல்பற்றியும், "கூடல்போலக் கொடியே னகமும் ஆட லரங்கா வமர்ந்தான்" என்றது, இறைவன் அடியவர் மனத்தில் இடையறாது வசிப்பவ னாதல்பற்றியு மென்க. இதனை, தேவாரம் "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே - புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்" என்றும், சிவஞானசித்தியார் "தாவர சங்கமங்க ளென்றிரண் டுருவி னின்று, மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்" என்றுங் கூறியவாற்றா னறிக. (௩௪)

நீல வண்ணன் றேறா நிமல
னால வாயி லமர்ந்தா னென்னே
யால வாயா னலரில் வாசம்
போலென் னுளமும் புகுந்தா னென்னே.

(இ-ள்.) நீலமேகவண்ணராகிய திருமால் தேடியுணராத சிவபெருமான் திரு வாலவாயி லெழுந்தருளி யிருந்தனன். அஃதியாது காரணமோ? அத்திருவாலவாயில் எழுந்தருளிய சிவபெருமான் மலரில் மணம்(அபேதமாயிருப்பது)போல, ஏழையேன் மனத்திலுங் குடிபுகுந்தனன். அஃதியாதுகாரணமோ? அறியேன். எ-று.

"அலரில் வாசம் போலென் னுளமும் புகுந்தான்" என்றது அன்புஞ் சிவ மும் அபேதமாயிருத்தல்பற்றி யென்க. இதனை-திருமந்திரம்.

"அன்பு சிவமிரண் டென்ப ரறிவிலார்
அன்பு சிவமாவ தாரு மறிகிலார்
அன்பு சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா வமர்ந்திருப் பானே."—என்பதனானும்,

திருவாசகம்.

"மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி யுள்ளவா காணவந் தருளாய்

தேறலின் றெளிவே சிவபெரு மானே திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த வின்பமே யென்னுடை யன்பே"—என்பு
தில் "அன்பே" என்னும் ஏதுவினனுங் கண்டுகொள்க. (ருரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பாணர்தம் பிரானைக் காப்பான் பருந்தொடு நிழல்போக் கென்ன
யாணரம் பிசையின் செல்ல விசைத்தவின் னிசைத்தே னண்ட
வாணர்தஞ் செவிக்கா லோடி மயிர்த்தொளை வழியத் தேக்கி
யாணரின் னமுத யாக்கை யிசைமய மாக்கிற் றன்றே.

(இ-ள்.) பாணபத்திரரைக் காக்கும்படி, பருந்தினோடு நிழல்செல்வது
போல, வீணைநரம்பிலெழுந்த இசையின் பின்செல்லப் பாடிய இனிய இசையாகிய
தேனானது,(விஞ்சையர்முதலிய) ஆகாயவாசிகளுடைய காதாகியகால்வழியேசென்று,
உரோமங்களின் தொளைவழியாய் நிரம்பிவடிய நிரப்பி, (உண்ணுந்தோறும்) புதுமை
விளைக்கும் இனிய அமுதத்தாற் பெருகிய அவர்கள் சரீரத்தை இசைமயமாக்கியது.

"பருந்தொடு நிழல்போக் கென்ன" என்றது, பருந்தினுடனே அதன் நிழ
லும் பின்பற்றிச்செல்வதுபோல, வீணையோசையோடு சாரீரவோசையும் பின்பற்றிச்
செல்லுதலின், இதனை, சீவகசிந்தாமணி காந்தருவத்தையாரிலம்பகத்தில் "பருந்து
மதனிழலும் பாட்டு மெழாலும்" என்றவிடத்தில் [பருந்து பறக்கின்றவிடத்து முறை
யே யுயர்ந்து தன்னிலத்தின்கட் டாழ்ந்து பின்னு மம்முறையே மேன்மேலுயர்கின்
றாற்போலப் பாடவேண்டுதலி னுவமையாயிற்று] என்றார் நச்சினார்க்கினியர்.
யாழ்+நரம்பு=யாணரம்பு. (ருசு)

தருக்களுஞ் சலியா முந்நீர்ச் சலதியுங் கலியா நீண்ட
பொருப்பிழி யருவி காலு நதிகளும் புரண்டு துள்ளா
வருட்கடல் விளைத்த கீத வின்னிசை யமுத மாந்தி
மருட்கெட வறிவன் றீட்டி வைத்தசித் திரமே யொத்த.

(இ-ள்.) (ஓரறிவுயிர்களாகிய) மரங்களுஞ் சலியாவாய், முத்தொழில் புரியும்
நீரையுடையகடலும் ஒலியாவாய், உயர்ந்த மலையினின்றிழியும் அருவியாகிய கால்
களும் நதிகளும் (அலைகளாற்) புரண்டுதுள்ளாவாய், கிருபாசமுத்திரமாகிய இறைவன்
பாடிய இனிய இசையாகிய அமுதத்தைப்பருகி மயக்கமகல, சிற்பநூற்றலைவனெழு
திய சித்திரங்களையேபோன்றிருந்தன. எ-று.

தருக்கள் முதலியன தமது சலித்த லொழிந்து சித்திரித்த தருக்கள் முத
லியன போன்றிருந்தனவென்பதாம். (ருஎ)

வீணைகை வழுக்கிச் சோர்வர் சிலர்சிலர் விரன டத்தும்
யாணரம் பெழாலுங் கண்டத் தெழாலும்வே றாக வேர்ப்பார்
நாணமோ டுவகை தள்ள நாத்தல நடுங்கித் தங்கண்
மாணிழை யவர்மேல் வீழ்வார் விஞ்சையர் மயங்கிச் சில்லோர்.

(இ-ள்.) (கின்னரருள் இறைவர் இசையைக்கேட்ட) சிலர் (தாம் ஏந்திய)
வீணையானது கையினின்றும் வழுவிவிழச் சோர்வடைவார்கள். (வேறு) சிலர் விரல்
கள் சென்றுலவும் வீணையின் நரம்பிலெழுந்த வோசையுங் கண்டத்தோசையும் வேறு
பட, வெயர் வரும்புவார்கள். விஞ்சையருட் சிலர் நாணமும் மகிழ்ச்சியும் (ஒவ்வொரு
பக்கம்) மேலோங்க நாக்குழறி மதிமயங்கி, தங்கடங்கள் மனைவிமார்மேற் சோர்ந்து
வீழ்வார்கள். எ-று.

கின்னரர் முதலியோர் தந் தொழிலிழந்து பரவசமாயினர் என்பதாம். (ருஅ)

போதுளார் பரமன் பாதப் போதுளா னுன் வேலை
மீதுளான் பரமா னந்த வேலைமீ துள்ளா னுன்
றீதுளான் கமலக் கண்போற் சதமக னுடல மெல்லாங்
காதுளா னல்லே னென்றுன் கண்ணுளான் கானங் கேட்டு.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் பாடி யருளிய தேவகானத்தைக்கேட்டு, தாமரை மலரின்மேல் வாழும் பிரமதேவன் அச்சிவபெருமான் திருவடித்தாமரையின்கீ ழுள்ளவனுனன். திருப்பாற்கடலில் (அறிதுயில்கொண்டு) விளங்குந் திருமால் பேரின்பக்கடலின்மே லுள்ளவனுனன். இந்திரன் (தனக்குள்ள) மகரந்தம் பொருந்திய தாமரைமலர்போன்ற கண்கள்போல, உடல் முழுதுஞ் செவிகளுடையவ னல்லனுயினேனென்று கவலையுற்றுன். எ-று. (௬௯)

சதமகன் = நூறு யாகங்களைச் செய்தவன்; இந்திரன்.

முனிவருந் தவத்த ராதி முத்தர்மா சித்த ரன்பின்
றுனிவரும் பழங்கண் டீர்ப்பான் சுந்தரத் தோன்றல் கீதங்
கனிவருங் கருணை யென்னுங் கடலிலன் பென்னு மாற்றிற்
பனிவருங் கண்ணீர் வெள்ளம் பாய்ந்திட வின்பத் தாழ்ந்தார்.

(இ-ள்.) வெறுப்பில்லாத தவத்தினர் முதலிய முத்தர்களும், மகா சித்தர்களும், அன்பினையுடைய பாணபத்திரர்கொண்ட துன்ப மிக்க நடுக்கத்தையொழித்தற்பொருட்டு, சுந்தரேசப்பெருமான் பாடியருளிய தேவகானமானது (பாணபத்திரரது) கனிந்த கிருபையென்னுங் கடலில் அன்பென்னும் நதியுடன் துளிக்கும் ஆனந்த பாஷ்பமுங் கலந்து பாய, இன்பக்கடலிலழுந்தினர். எ-று. (௭௦)

ஊடிவே றுதுங்கித் துன்ப வுவரியுட் குளித்தார் தம்மிற்
கூடிவே றற்ற வின்பக் குளிர்கடல் வெள்ளத் தாழ்ந்தார்
நாடிவே றிடைப்பி ரிந்தார் மேன்மன நடத்தி மேனி
வாடிவே ளலைப்பச் சோர்ந்து மம்மர்நோ யிழந்தார் மண்ணோர்

(இ-ள்.) நிலவுலகி லுள்ளவர்களில், பிணங்கி வேறிடத்தொதுங்கித் துன்பக்கடலில் மூழ்கிய பெண்கள் தமது கணவருடன் கலந்து ஒன்றுபட்ட இன்பமாகிய தண்ணிய கடல்வெள்ளத்தில் அழுந்தினுர்கள். (பொருள் முதலியவற்றை) நாடி மறுபுலத்துச்சென்ற கணவர்மேல் தம்து மனத்தைச்செலுத்தி உடல்மெலிந்து, மன்மதன்வருத்த வுணர்வழிந்து, காமநோயில் வருந்தினுர்கள். எ-று.

ஊடிய மாதர்கள் கூடினுர்களென்றதால் மெய்ப்பாடுமகிழ்ச்சியும், கணவரைப்பிரிந்த மகளிர் தங்கணவர்மேல் மனஞ்செலுத்தின ரென்றதால் மெய்ப்பாட்டவலமுமாகிய அகப்பொருட்டுறைகள் விளங்கின. (௭௧)

பைத்தலை விடவாய் நாகம் பல்பொறி மஞ்ஞை நால்வாய்
மத்தமா னரிமான் புல்வாய் வல்லிய மருட்கை யெய்தித்
தத்தமா றறியா வாகித் தலைத்தலை மயங்கிச் சோர
வித்தகை மாவும் புள்ளு மிசைவலைப் பட்ட வம்மா.

(இ-ள்.) படம்பொருந்திய தலையையும் விடம்பொருந்தியவாயையுமுடைய பாம்பும், பல பொறிகள்வாய்ந்த மயிலும், தொங்கியசையும் வாயையுடைய யானையும், சிங்கமும், மானும், புலியும் மயங்கித் தத்தம் செல்வழி தெரியாதனவாகி, இடங்கள்தோறுந் தலைத்மொறி மயங்கிச்சோரும்படி, இத்தன்மையாக மிருகங்களும் பறவைகளும் இசையாகிய வலையிலகப்பட்டன. எ-று.

"வானவர் மக்கள் நரகர் விலங்குபுள்ளாதி செவியறிவோ டையறி வுயிரோ" என்றபடி, ஐயறிவுடையனவாய் பகுப்புணர்ச்சியின்றி நின்றமிருகங்களும் தாம்செல்லும் வழியும் பகைமையுமின்றிச் சலியாதிருந்தனவென, இசையின் றெழிற் குணங்கூறுவோர், அவற்றின்மேலேற்றி வியப்பிடைச்சொல்வைத்து "இசைவலைப்பட்ட அம்மா" என்றார். (சஉ)

வன்றரை கிழிய வீழ்போய் வான்சினை கரிந்து நின்ற
வொன்றறி மரங்க ளெல்லாஞ் செவியறி வுடைய வாகி
மென்றளி ரீன்று போது விரிந்தகண் ணீருஞ் சோர
நன்றறி மாந்தர் போல நகைமுக மலர்ந்த மாதோ.

(இ-ள்.) வலிய நிலமானது கிழிபட விழுதுவீழ்த்திப் பெரியகிளைகள் கரிந்துபோக நின்ற (பரிசமென்னும்) ஓரறிவையுடைய மரங்கள்யாவும் (ஓசையுணரும்) செவியுணர்ச்சியையு முடையனவாகி, மெல்லிய தளிர் தளிர்த்து, அரும்பி, மலர்ந்து, கண்ணீருஞ்சிந்த, நன்று தீது பகுத்துணரும் மக்கள்போல, நகையுடன் முகமலர்ந்தன. எ-று.

"புன்மர முதலவற் றறியுமோ ரறிவுயிர்" என்றபடி—ஒன்றறிவுயிர் எனப்பட்டது. கரிந்தமரங்கள் தளிர்த்து அரும்பி மலர்ந்து கள்ளொழுக்கநிற்பச்செய்வது இசையின் குணமாதலின் அதனை அவற்றின்மேலேற்றி "செவியறிவுடையவாகி நன்றறிமாந்தர்போல நகைமுக மலர்ந்த வன்றே" என உபசரித்தார். (சங)

வாழிய வுலகின் வானோர் மனிதர்புள் விலங்கு மற்று
மாழிய கரண மெல்லா மசைவற வடங்க வையன்
னேழிசை மயமே யாகி யிருந்தன வுணர்ந்தோ ருள்ள
மூழியி லொருவன் றாள்புக் கொடுங்கிய தன்மை யொத்த.

(இ-ள்.) ஆகாயத்திலும் பூமியிலுமுள்ள தேவர்களும், மனிதர்களும், பறவைகளும், மிருகங்களும், பிறபொருள்களும், ஆழ்ந்த (மனமுதலிய) அந்தக்கரணங்களெல்லாம் அசைவற்று அடங்கி நிற்க, சுந்தரேசப்பெருமான் பாடியருளிய எழிசையின்மயமாய் முடிந்திருத்தலால், பரஞானமுடையோர் உள்ளம் ஊழிகாலத்திலும் அழியாதுள்ள சிவபெருமான்திருவடியிற் சென்றொடுங்கிய தன்மையை யொத்திருந்தன.

கண்ணிறை நுதலோன் சாம கண்டத்தி னெழுந்த முல்லைப்
பண்ணிறை தேவ கீதஞ் சராசர வுயிரும் பாரும்
விண்ணிறை திசைக ளெட்டும் விழுங்கித்தன் மயமே யாக்கி
யுண்ணிறை யுயிரு மெய்யு முருக்கிய திசைவல் லானை.

(இ-ள்.) தீக்கண் பொருந்திய நெற்றியையுடைய சோமசுந்தரக்கடவுளின் சாமகீதம்பாடுந் திருக்கண்டத்தினின்றெழுந்த சாதாரிப்பண்ணாகிய நிறைந்த தேவகானம் சராசரங்களையும், நிலவுலகத்தையும், விண்ணுலகத்தையும், நிறைந்த அட்டதிக்குகளையும் விழுங்கித் தன்மயமாகச் செய்து, இசைநூலில் வல்ல ஏமநாதனை உள்ளே நிறைந்த உயிரு முடலும் நெக்குவிட் டுருகச் செய்தது. எ-று. (சரு)

கலிநிலைத்துறை.

சிந்தை தோயுமைம் பொறிகளுஞ் செவிகளாப் புலன்க
ளோந்து மோசையா யிசைவலா னிருந்தன னுகப்
பந்த நான்மறை நாவினற் பத்திர னெனாய்
வந்து பாடினா ரிந்தனச் சுமையொடு மறைந்தார்.

(இ-ள்.) இசைநூலில் வல்ல ஏமநாதன் மனத்தின் வழியே யியங்கும் ஐம்பொறிகளுஞ் செவிகளாகவும் ஐம்புலன்களுஞ் சத்தவுணர்வாகவும் இருக்க, நான்கு வேதங்களையுந் தமது திருநாவாற் பாடி யருளிய சோமசுந்தரக்கடவுள் பாணபத்திரர் அடிமையாய் வந்து, கட்டமைந்த சாதாரிப்பண்பாடி, விறகின்சுமையுடன் மறைந்தருளினர். எ-று.

"பந்த நான்மறை" என்றது—பதம் நிரை பாழி சாகை பஞ்சாதி அநுவாக மென உறுப்புகளுடைமையாலும், "ஐம்பொறிகளுஞ் செவிகளாப் புலன்களைந்துமோசையா" என்றது, மனத்தின் வழியே செல்லும் ஐம்பொறிகளும் அதின்வழியே நின்றதாலும், ஒருணர்ச்சி அதிகரித் தெழுங்கால் ஏனை யுணர்ச்சிகள் சுருங்குவதாலு மெனக் கொள்ளக் கிடந்தது. (சுசு)

யான றிந்தசா தாரியன் றிம்பரு ளிதனை
நான றிந்ததென் றொருவரு நவின்றிலர் தேவ
கான மீதிவற் குணர்த்தினோன் கடவுளே யன்றி
யேனை மானுடர் வல்லரோ விதுவியப் பென்னா.

(இ-ள்.) இதுநான்கற்றசாதாரிப்பண்ணல்ல. இவ்வுலகத்தில்இப்பண்ணினை நான் கேட்டறிந்துளேனென்று ஒருவருங்கூறிற்றிலர். (இங்குவந்த விறகாள்பாடிய) இது தேவகானமாம். இவனுக்குக்கற்பித்தவன் கடவுளே யல்லாமல், மற்ற மாநுடர் கற்பிக்கவல்லரோ? இது அற்புதமானசெய்தியென்று. எ-று. (சுஎ)

இழுக்கி விட்டவிக் கிழமக னிசையிதே லிந்த
வழுக்கில் பத்திரன் பாடலெற் றோவென மதியா
வழுக்க முற்றெழுந் திசைவலா னடுத்ததன் பண்டர்
குழுக்க ளுங்குலை குலைந்திட விருள்வழிக் கொண்டான்.

(இ-ள்.) பாணபத்திரனால் தள்ளிவிடப்பட்ட இந்தக்கிழவனேபாடும் இசை இத்திறத்ததாகில், அந்தக்குற்றமில்லாத பாணபத்திரன் பாடும்பாடல் எத்திறத்ததோ? என்றுகருதி, இசைநூலில்வல்ல ஏமநாதன் கவலையுற்றெழுந்து, தன்கீழ்க்கற்றபாடல் மக்கள் கூட்டங்களும் தலைதடுமாறிச்செல்ல, பாதியிரவில் (பிறர்க்குத்தெரியாமல்) ஓடத்தலைப்பட்டனன். எ-று. (சுஅ)

மடக்கு பல்கலைப் பேழையு மணிக்கலம் பிறவு
மடக்கு பேழையுங் கருவியா ழ்கிேளாலுமாங் காங்கே
கிடக்க மானமு மச்சமுங் கிளர்ந்துமுன் னீர்த்து
நடக்க வுத்தர திசைக்கணே நாடினு னடந்தான்.

(இ-ள்.) பல வஸ்திரங்களைவைக்கும் மடக்குப்பெட்டியும், இரத்தினாபரணங்களும் மற்றுள்ளனவு மடக்கிய பெட்டிகளும், வீணையும், வைத்தவிடந்தோறும் அவ்வாறேயிருக்க, மானமும் பயமும் மேலெழுந்து முன்னிழுத்துச்செல்ல,வடதிசையின்கண்ணே நாடிச்சென்றனன். எ-று.

தான் பாணபத்திரரோடு பாடினால் தனக்கு மானக்கேடுவருமென அச்சமெய்தி, வைத்த யாவுமறந்து சென்றனனென்பார் "மானமும் அச்சமுங்கிளர்ந்து முன்னீர்த்து நடக்க மடக்கு * * * ஆங்காங்கேகிடக்க" என்றார் (சுக)

சிவிகை யோர்வழி விறலிய ரோர்வழி செல்லக்
கவிகை யோர்வழி கற்பவ ரோர்வழி கடுகக்
குவிகை யேவல ரொருவழி கூடநா ணுள்ளத்
தவிகை யோவரு மொருவழி யகன்றிட வகன்றான்.

(இ-ள்.) பல்லக்கு ஒருவழியிலும் பாடும்பெண்கள் ஒருவழியிலுஞ் செல்லவும், குடை ஒருவழியிலும் தன் கீழ்க்கற்பவர் ஒருவழியிலும் விரைந்து செல்லவும், கூப்பிய கையையுடைய ஏவலாளர் ஒருவழியிற் செல்லவும், மனத்தில் நாணொழிந்த பாடற்கீழ்மக்களும் ஒருவழியிற்செல்லவும், (ஏமநாதன் ஒருவழியிற்)சென்றான். எ-று.

அன்று பத்திரன் கனவில்வந் தாடலே றழக
ரின்று பத்திர விசைவலா னிடைவிற காளாய்ச்
சென்று பத்திர னடிமையா மென்றுபாண் செய்து
வென்று பத்திரஞ் செய்துநின் வேண்டுகோ ளென்றார்.

(இ-ள்.) வெற்றிவாய்ந்த இடப வாகனத்தை யுடைய சோமசுந்தரக்கடவுள் அப்பொழுது, பாணபத்திரருடைய சொப்பனத்திலேவந்து, பாணபத்திரனே! இப்பொழுது இசைவல்லானாகிய ஏமநாதனிடத்தில் நாம் விறகாளாகச் சென்று, பாணபத்திர னடிமையா மென்று இசைபாடி (அவனை) வென்று, உனது வேண்டுகோளால் உன்னைக் காவல்செய்தோமென்று கூறியருளினர். எ-று.

திருநாவுக்கரசுநாயனர்.

" சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கல்லால்
நலமில னொடொறு நல்குவா னவன்"—எனவும்,

மாணிக்கவாசகர்.

" அளவறுப்பதற்கரியவனிமையவர்க்கெளியானங்
களவறுத்துநின்றாண்டமைகருத்தினுட்கசிந்துணர்ந்திருந்தேயும்"—எனவும் கூறிய ஏதுக்களால், சிவபெருமான் அடியார்க்கெளியராதலின், "விறகாளாய்ச் சென்றுபத்திர னடிமையாமென்று நின் வேண்டுகோள் பத்திரஞ்செய்தோம்" என்றார்.

குஞ்சி நாண்மலர்க் கொன்றையா ரங்ஙனங் கூறு
நெஞ்சி னினைப் பரியசொற் கேட்டலு நெஞ்ச
மஞ்சி னனிது செய்யவோ வடியனேன் மறைகட்
கெஞ்சி னாயின் றிரந்தவா றென்றுகண் விழித்தான்.

(இ-ள்.) அன்றலர்ந்த கொன்றைமலர் மாலையைச் சிகையிலணிந்த சிவபெருமான் அப்படிக்கூறியருளும்மனத்தாலும் நினைத்தற்கரிய சொல்லைக் கேட்டபொழுதே, (பாணபத்திரர்) மனந் துணுக்குற்றார். வேதங்களுக்கும் எட்டாத பெரியவரை அடியேன் இந்த இழிதொழிலைச் செய்யவா இப்பொழுது குறைகூறியிரந்த வகை? என்று கண் விழித்தெழுந்தார். எ-று. (௫௨)

கண்ம லர்ந்தெழு பத்திரன் கரையிலா வுவகை
யுண்ம லர்ந்தெழு மன்புகொண் டூக்கவெங் கதிரோன்
விண்ம லர்ந்தெழு முன்புபோய் விசும்பிழி கோயிற்
பண்ம லர்ந்தநான் மறைப்பொரு ளடித்தலம் பணிந்தான்.

(இ-ள்.) துயிலுணர்ந்தெழுந்த பாணபத்திரர் எல்லையில்லாத மகிழ்ச்சியை உள்ளே பெருக்கி யெழுந்த அன்பானது செலுத்த, சூரியன் ஆகாயத்தி லுதயஞ்செய்து எழுதற்கு முன்னமே போய், விண்ணிழி விமானத்தி லெழுந்தருளிய இசையமைந்த நான்கு வேதங்களின் பொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுளின் திருவடியைப் பணிந்தார். எ-று.

அன்பால் மகிழ்ச்சி பெருகுதலாலும், அன்பாலேயே சிந்தித்தலுஞ் சேவித்தலும் உளவாகலாலும் " உவகையுண் மலர்ந்தெழு மன்பு கொண்டூக்க * * அடித்தலம் பணிந்தான்"—என்றார்.

இதனை, திருவாசகம்.

"அன்பினாலடியேனாவியோடியாக்கையானந்தமாய்க்கசிந்துருக" என்றும்,
"சிந்தனைநின்றனக்காக்கி நாயினேன்றன் கண்ணிணைநின் றிருப்பாதப்போதுக்காக்கி வந்தனையுமம்மலர்க்கேயாக்கி வாக்குன் மணிவார்த்தைக் காக்கியைம் புலன்களார வந்தனை"—என்றும் வருவனவற்று னுணர்க. (௫௩)

கடிய கானகம் புகுதவோ கட்டிய விறகை
முடியி லேற்றவோ மூண்டகத் தாள்கணோந் திடவந்
தடிய னேன்பொருட் டடாதசொற் பகரவோ வஞ்சக்
கொடிய னேன்குறை யிரந்தவா விளைந்ததே குற்றம்.

(இ-ள்.) வெப்பம்பொருந்திய காட்டிற்செல்லவோ? கட்டிய விறகைத் திருமுடியில் எற்றவோ? தாமரை மலர்போலுந் திருவடிகள்நோவ நடந்தருளி, சிற்றடியேன் காரணமாக (பாணபத்திர னடிமையென்னுந்) தகாத சொல்லைக்கூறவோ? வஞ்சக் கொடுந்தொழிலையுடையேன் குறைகூறி யிரந்தவகை (ஆ! ஆ!) குற்றம் விளைந்தது. எ-று. (௫௪)

நெடிய னேமுதல் வானவர் நெஞ்சமுஞ் சுருதி
முடிய னேகமுங் கடந்தநின் முண்டகப் பாதஞ்
செடிய னேன்பொருட் டாகவிச் சேணிலந் தோய்ந்த
வடிய னேற்கெளி தாயதோ வையநின் பெருமை.

(இ-ள்.) விஷ்ணுமூர்த்தி முதலிய தேவர்களிதயங்களையும் எண்ணிறந்த வேதங்களையும் கடந்துநின்ற உனது கமலபாதங்கள் இழிதொழிலுடையேன் காரணமாக இந்தப்பெரிய நிலவுலகத்திற்றோய்ந்தன. ஐயனே! அளத்தற்கரிய உனதுபெருமை அடியேனளவில் எளிதாகி நின்றதோ. எ-று. (௫௫)

நாத வந்தமுங் கடந்தமெய்ஞ் ஞானவா னந்த
போத மென்பரஃ தின்றொரு புடவிமா னுடமா
யாத பந்தெறத் தறிந்தவிந் தனஞ்சுமந் தடியேன்
பேதை யன்பள வாயதோ பெருமநின் னுருவம்.

(இ-ள்.) பெருமானே! தேவரீர் திருவுருவம் நாதாந்தத்தையுங் கடந்த சச்சிதானந்தமென்று கூறுவர். அத்தகைய திருவுருவம் இப்பொழுது (நிலவுலகில்) ஒருமானுடத் திருவுருவமாய் வெயில் சுட்வெருத்தலால் முறிபட்ட விறகினைச் சுமந்து பேதைமைத்தன்மையையுடைய அடியேனது அன்பென்னும் எல்லையின் எளிதாகி நின்றதோ. எ-று. (௫௬)

மறிந்த தெண்டிரை கிடந்தவ னுந்தியில் வந்தோ
னறிந்த தன்றரும் பொருள்வரம் பகன்றெழு விசும்புஞ்
செறிந்த வண்டமுங் கடந்தது சிறியனேன் பொருட்டாத்
தறிந்த விந்தனஞ் சுமந்ததோ தம்பிரான் முடியே.

(இ-ள்.) தேவரீர் திருமுடி மடங்கிவருந் தெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடலில் அறிதுயில்புரியும் திருமாலும், அவனுந்தியினின்று தோன்றிய பிரமதேவனும் உணர்ந்ததுமன்று. அணுவளவையுங்கடந்து, பரந்த விண்ணுலகத்தையும் ஏனைய அண்டங்களையுங் கடந்து நின்றது (அது கடைப்பட்ட) சிறியேன் காரணமாகமுறிப்பட்ட விறகுசுமையைச்சுமந்து திரிந்ததோ. எ-று. (௫௭)

என்ன வந்தனை செய்துநின் றேத்தியங் கயற்கண்
மின்ன மர்ந்தபங் கொருவனை வலங்கொடு மீண்டு
மன்னர் தம்பிரா னாகிய வரகுண தேவன்
றன்னை வந்தடி பணிந்தனன் றந்திரிக் கிழவோன்.

(இ-ள்.) என்று வணங்கி நின்று துதித்து, அங்கயற்கண்ணம்மையார் எழுந்தருளி யிருக்கும், (இடப்)பாகத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைப் பிரதக்ஷிணஞ் செய்து திரும்பி, அரசர்கட்கரசனாகிய வரகுணதேவ பாண்டியனை வீணையில் வல்ல பாணபத்திரர் வந்து பாதங்களைப் பணிந்து (ஒருபுடை) நின்றனர். எ-று.

தந்திரி = வீணையி னரம்பு. அஃதுவீணையை யுணர்த்தியது. (ருஅ)

வந்த வேழிசைத் தலைமகன் வரவறிந் தரச
னந்த வேழிசைக் கிழவனை யழையென வுழையோர்
பந்த யாழ்மக னிருக்கைபோய்ப் பார்த்தனர் காணார்
சிந்தை யாகுல மடைந்தவன் போனவா தெளியார்.

(இ-ள்.) வரகுணதேவபாண்டியன் தன்னிடம் வந்த ஏழிசையில் வல்ல பாணபத்திரரது வருகையை யுணர்ந்து (வடதிசையி லிருந்துவந்த) அந்த ஏழிசையில் வல்ல ஏமநாதனை யழைப்பீரெனப் பணிக்க, வேவுகாரர் நரம்பின்கட்டமைந்த வீணையில் வல்ல ஏமநாதனுடைய விடுதியிற் போய்ப் பார்த்து அவனைக் காணாது, மனத்தில் வருத்தமுற்றெழுந்த ஏமநாதன் போனவழி உணராதவர்களாய். எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

ஆறு என்னும் இடப்பெயர்ச்சொல் ஈறுதொக்கது. (ருக)

எங்கு ளானெனத் தேடுவா ரிவரொதி ரயல்வா
யங்கு ளார்சில ரறிந்தவா றறைகுவா ரவனேற்
றிங்கு ளான்விற கெடுத்தொரு முதுமக னிவன்பாற்
பொங்கு மேழிசைப் பத்திர னடிமையாய்ப் போந்தான்.

(இ-ள்.) (அந்த ஏமநாதன்) எங்கொளித்தானெனத் தேடித் திரியும் அந்த வேவுகாரருக் கெதிரே (அவ்விடுதியின்) பக்கலில் வசிப்பவர்களிற் சிலர் அங்கு தெரிந்த வகையை யொருவாறு கூறுவர். அவன் நேற்றைப் பொழுதிங்கிருந்தான். ஒரு விருத்தன் விறகு சுமை யெடுத்துக்கொண்டு இவ்வேமநாதனிடத்தில் விளங்கும் ஏழிசையில் வல்ல பாணபத்திர ரடிமையென்று வந்தான் எ-று. (சுO)

பாடி னான்பின்பு பட்டது தெரிகிலேம் பாண
னோடி னானெனக் கேட்டலு மொற்றர்போய்க் கொற்றஞ்
சூடி னானவை யடைந்தவர் சொல்லிய வாறே
யாடி னார்வியப் படைந்தனு மானமுற் றரசன்.

(இ-ள்.) (அம் முதுமகன்) பாடினன். பிறகு நடந்த செய்தியை யறியோம் பாதியிரவில் ஓடினானென்று கூறக்கேட்ட அப்பொழுதே வேவுகாரர்சென்று, வெற்றிமாலை யணிந்த பாண்டியன் சபையை யடைந்து, அங்குள்ளோர் கூறியபடியே கூறினார்கள். அவ்வரகுணதேவபாண்டியன் (அதனைக் கேட்டு) அதிசயங் கூர்ந்து சந்தேகமுற்று. எ-று.

ஏமநாதன் தன்னிடம் போந்த முதுமகனாகிய பாணபத்திர ரடிமையின் பாட்டால் ஓடினனென வியப்பும், பாணபத்திரர் தம்மிடம் பழகிய ஒரு முதுமகனால்

ஏமநாதனை வென்றனரோ வென அநுமானமுங் கொண்டனன் பாண்டியன் என்பார் "வியப்படைந் தனுமானமுற் றரசன்" என்றார். (சுக)

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம்.

தன்ன டைந்தவத் தந்திரித் தலைவனை நோக்கி
யென்ன வாறவன் போனவா றிங்கினும் போன
பின்னை யாதுநீ செய்தனை யெனவிசைப் பெருமான்
றென்னர் கோனடி தொழுதுதன் செய்தியை மொழிவான்.

(இ-ள்.) (வரகுணதேவபாண்டியன்) தன்னிடம் வந்த அந்த யாழில் வல்ல பாணபத்திரரைப் பார்த்து அவன் போனவகை யாதுவகை? நீ இங்கு நின்றும் போனபின்பு யாது செய்தனை? என வினவ, இசையில் வல்ல பாணபத்திரர் பாண்டியர் பெருமானது பாதங்களைப் பணிந்து, தம்மிடத்து நிகழ்ந்த செய்தியைச் சொல்லுவாராயினர். எ-று.

இங்கு+இன்+உம்=இங்கினும்-இங்கிருந்தும் என்பது பொருள். இன் உருபு ஐந்தாம்வேற்றுமை நீக்கப்பொருளில் வந்தது. (சுஉ)

நென்னல் வாயடி யேனின தாணிழ னீங்கிப்
பின்னில் வார்சடை மௌலியெம் பிரானடி பணிந்தே
னின்ன லார்குறை யிரந்துமீண் டிருக்கையுக் கிருந்தேன்
கன்ன லார்மொழி பங்கனென் கனவில்வந் தருளி.

(இ-ள்.) நேற்றைப்பொழுதில் அடியேன் உமது திருவடி நிழலினின்றும் நீங்கி, பின்னிய நெடிய சடாமகுடம்பொருந்திய எமது சோமசுந்தரப் பெருமானுருடைய திருவடியைப் பணிந்து, துன்பம்பொருந்திய எனது குறைபாடுகளை யிரந்து திரும்பி என் வீட்டிற் சென்றிருந்தேன். கரும்பின் சுவைபோன்ற சொற்களையுடைய மீனாட்சி தேவியை வாமபாகத்திலுடைய அச்சோமசுந்தரக்கடவுள் என் கனவில் வந்தருளி. எ-று.

"காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க"—என்னுந் திருவாசகத்தின் படியே, சோமசுந்தரக்கடவுளே அடியவர் குறையை முடிப்பவராதலின் அவர் திருவடியில் என் குறையை யொப்புவித்து என்னிருக்கையிலிருந்தே னென்றார். (சுங)

ஓடி யுன்பொருட் டாகநாம் விறகெடுத் துழன்று
வாடி நின்பகைப் புறங்கடை வந்துசா தாரி
பாடி வென்றுநின் பகைவனைத் துரந்தன மெனச்சொல்
லாடி னார்விழித் தேனிது நிகழ்ந்த தென் றறைந்தான்.

(இ-ள்.) (காட்டிற்குச்) சென்று உன் காரணமாக நாம் விறகுசுமை யெடுத்துழன்று வருந்தி நின்பகைவனுகிய ஏமநாதனுடைய தலைவாயிலில் வந்து, சாதாரிப் பண்பாடி வெற்றிகொண்டு உனது பகைவனை யோட்டினோம் என்றருளிச் செய்தனர். (அடியேன்) துயிலொழிந்தனன். இதுவே நடந்த செய்தியென்று (பாணபத்திரர்) கூறினர். எ-று.

தம்மைச் சரணடைந்தோரது துயரத்தை யொழித்தல் சிவபெருமானரது பரமாதலால் "ஓடியுன்பொருட்டாக *** பகைவனைத் துறந்தனம்" என்றார். இதனை, திருநாவுக்கரசுநாயனர் "தன்னை யடைந்தோர் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங் கடனாவதுதான்"—எனக் கூறியதனு னுணர்க. (சுச)

ஏவன் மைந்தர்போய் விளங்கிவந் திசைத்ததும் வீணைக்
காவ லன்கனா நிகழ்ச்சியு மொத்தலிற் கைக்கும்
பூவ லங்கலா னிஃதுநம் பொன்னகர்க் கூடற்
றேவர் தம்பிரான் றிருவிளை யாட்டெனத் தெளிந்தான்.

(இ-ள்.) வேவுகாரர்கள் சென்று தெரிந்துவந்து கூறிய செய்தியும், வீணையில் வல்ல பாணபத்திரர் கண்ட கனவி னிகழ்ச்சியுந் தம்முளொத்தலால், வேப்பமலர்மாலை யணிந்த பாண்டியன் இச்செயல் நமது அழகிய நகரமாகிய மதுரைப்பதியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாட்டலே யெனத் தெளிந்துணர்ந்தனன். எ-று.

கைக்கும்பூ=கசப்பாகிய மலர்; வேம்பு. (சுரு)

இகழ்ந்த கூற்றெறி சேவடிக் கிடையறா நேசந்
திகழ்ந்த பத்திர னன்பையுந் தேவரைக் காப்பா
னகழ்ந்த வாழிநஞ் சுண்டவ னருளையும் வியந்து
புகழ்ந்து போய்மது ராபுரிப் புனிதனைப் பணியா.

(இ-ள்.) அவமதித்த இயமனை யுதைத்தருளிய செவந்த திருவடிகளுக்கு, நீங்காத சிவநேயத்தால் விளங்கிய பாணபத்திரருடைய பத்திமையையும், (பிரமாதி) தேவர்களைக் காத்தற்பொருட்டு (சகரர்) தோண்டிய கடலிற்றோன்றிய நஞ்சினைத் திருவமுது செய்தருளிய பெருமானாரது திருவருளையும் மெச்சிப் புகழ்ந்து சென்று, மதுரையிலெழுந்தருளிய பரிசுத்தராகிய சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து. எ-று.

இதிற்போதிந்த சரிதங்கள் முன் விளக்கப்பட்டனவே யாதலின் ஆங்காங்குக் கண்டுகொள்க. (சுசு)

பத்தர் யாழிசைக் கிழவனைப் பனைக்கைமா னெருத்தில்
வைத்து மாடநீ ணகர்வலஞ் செய்வித்து மலர்ந்த
சித்த மாழ்ந்திட வரிசைகண் மிதப்புறச் செய்து
தத்து மான்றேரைத் தேரினான் றன்மனை புகுவான்.

(இ-ள்.) பத்தரமைந்த வீணையில் வல்ல பாணபத்திரனை, பனந்துண்டுபோன்ற துதிக்கையையுடைய யானையின் பிடரின்மேல் வைத்து, உபரிகைகள் நிறைந்த மதுராபுரியினைப் பிரதக்ஷிணஞ் செய்வித்து, (சிவநேயத்தில்) மலிந்த அவரது மனமுமயங்கப் பல வரிசைகளையும் அளவின்றி (அவாவடங்க)க்கொடுத்து, தாவிச் செல்லுங் குதிரையைப்பூட்டிய தேரையுடைய வரகுணதேவபாண்டியன் தனது கோயிலுக்குச் செல்லுவோன். எ-று. (சுஎ)

தேவ ருந்தவ முனிவருந் தேவரிற் சிறந்தோர்
யாவ ருந்தமக் காட்செய விருப்பவ ரிருதா
ளேவ வந்துமக் காட்செய்து நுங்குறை முடித்தா
ராவ ரேனுமக் கனைவரு மேவல ரன்றோ

(இ-ள்.) தேவர்களும், தவத்தையுடைய முனிவர்களும், தேவர்களுட் சிறந்த (பிரமன் முதலிய) யாவரும், தமது குற்றேவல் செய்யவிருக்குஞ் சிவபெருமானார், தமது உபயபாதங்களும் வருந்தவந்து உமக்கு அடிமைசெய்து, உமது குறைபாட்டினை யொழித்தருளினராகில், உமக்கு (அத்தேவர் முதலிய) யாவரும் (குற்றேவல் புரியும்) ஏவன் மக்களல்லரோ? (ஏவன்மக்களேயாவர்.) எ-று. (சுஅ)

ஆத லாலெனக் குடையர்நீ ருமக்குநா னடியே
னாத லாலெனக் கும்மொடு வழக்குவே றிலைநா

னேது லாவதோர் குறையுள தின்றுதொட் டெமக்கு
வேத நாதனைப் பாடலே கடனென விடுத்தான்.

(இ-ள்.) ஆகையினால், என்னை யாளாகவுடையவர் தேவரீரே! தேவரீருக்கு நான் அடிமை; இதுவன்றித் தேவரீரோடு எனக்கொரு தொடுவழக்கில்லை; அடியேன் தேவரீரிடத்திற்கூறும் ஒரு குறைபாடுள்ளது. (அதாவது) இன்றுமுதல் நான்கு வேதங் கட்குந் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளைப் பாடுவதே தேவரீர்க்குக் கடமையென்று (பாணபத்திரருக்கு விடைகொடுத்து) அனுப்பினன். எ-று. (௬௯)

அரச னல்கிய வெறுக்கைபூ ணுடைகள் பிறவும்
பரசு நாவலர் மாணவர் யாவர்க்கும் பகிர்ந்து
வரிசை யாலிசைக் கிளையொடு மனையில்வந் தெய்திக்
கரைசெ யாமகிழ் சிறந்திசைக் காவல னிருந்தான்.

(இ-ள்.) இசைநூலில் வல்ல பாணபத்திரர் வரகுணபாண்டியன் கொடுத்த திரவியமும் ஆபரணமும் ஆடைகளும் மற்றுள்ளனவுமாகிய எல்லாவற்றையும், தம்மை வணங்குங் கவிஞரும் இசைகற்கும் மாணக்கர்களுமாகிய யாவர்க்கும் பங்கிட்டுக்கொடுத்து, (பாண்டியன்) கொடுத்த வரிசையுடன் (தன்னைச்) சூழ்ந்த இசைநூல் வல்லாரோடு தமது வீட்டில் வந்தடைந்து, அளவில்லாத மகிழ்ச்சியுற்று இருந்தனர். எ-று.

"யாவர்க்கும் பகிர்ந்து" என்றதனால், பாணபத்திரர் உயிர்ச்சார்பும் பொருட்சார்புமாகிய பற்றொழிந்தவரொன்றும், "கரைசெயாமகிழ்சிறந்து" என்றதனால், சிவபெருமான் அடியவரிடத்திற் கொண்ட திருவருளைக் கருதுந்தோறும் ஆராமகிழ்ச்சி யடைந்தனரொன்றுங் கொள்க. (௭௦)

விறகுவிற்றபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௨௧௦௪.

---

நாற்பத்திரண்டாவது

# திருமுகங்கொடுத்த படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னவன் மதுரை மூதூர் முழுமுத லிசைவ லானை
யின்னிசை பாடி வென்ற தென்னுரை செய்கே னந்தத்
தென்னவன் சேரன் மாடே திருமுகங் கொடுத்துப் பாணர்
மன்னவன் தனக்குச் செம்பொன் வழங்கிய வழக்கஞ் சொல்வாம்.

(இ-ள்.) (பிரமாதிதேவர்கூட்டெல்லாம்) முற்பட்டவனும், தொன்றுதொட்டுள்ள மதுராபுரிக்கு முதல்வனுமாகிய சோமசுந்தரக்கடவுள் (வடபுலத்திருந்துவந்த) இசைநூலில்வல்ல ஏமநாதனை (தேவகாந்தருவரும்) பாடி வென்ற திருவிளையாடலை எவ்வாறு கூறி முடிப்பேன்: அந்தப் பாண்டியர்திருக்கோலங்கொண்ட சோமசுந்தரக் கடவுள் சேரமான்பெருமானருக்குத் திருமுகங் கொடுத்தருளிப் பாணர்பெருமானர்க்குச் செம்பொன் அருளிய திருவிளையாடலை(யாம் இனி)எடுத்துக்கூறுவாம். எ-று.

என்னுரை செய்கேனென்றது தனக்குச் சிறுமைகற்பித்து அஃதோர் அற்புதத்திருவிளையாடலெனத் தன்மை யொருமை வினைமுற்றாலும், வழக்கஞ்சொல்வாம்



திருமுகங்கொடுத்தபடலம்.

என்றது "அம்மா மென்பன முன்னிலை யாரையும், எம் எம் ஓ மினைப் படர்க்கை யாரையும், உம்மூர்க ட த ற வி ருபாலாரையுந், தன்னொடு படேக்குந் தன்மைப் பன்மை" என்ற சூத்திரப்படி, உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்றாலும் அமைந்தன.

இனிமதி யெமக்கி தென்று யாழ்வல்லோ னன்று தொட்டுப்
பனிமதி மருமான் கோயிற் பாணிசைக் கிழமை நீத்துக்
குனிமதி மிலைந்த நாதன் கோயின்முப் போது மெய்திக்
கனிமதி யன்பிற் பாடுங் கடப்படு நியமம் பூண்டான்.

(இ-ள்.) வீணையில்வல்ல பாணபத்திரர் இப்பணி யெமக்கு இனி நல்லறிவு கொளுத்துமென்று, அந்நாள்முதல் குளிர்ந்த சந்திரமரபில்வந்த பாண்டியனதுகோயிலில் இசைபாடும் உரிமையையொழித்து, வளைந்த பிறையையணிந்த சோமசுந்தரக் கடவுள் திருக்கோயிலை முப்பொழுதிலுஞ் சென்றடைந்து, தமது மனத்திற்கனிந்த அன்பின் முதிர்ச்சியாற்பாடுங் கடமையாகிய நியமத்தை மேற்கொண்டனர். எ-று.

இத்தொழி லன்றி வேறு தொழிலிவற் கின்மை யாலே
பத்திர னிலம்பா டெய்தப் பொறுப்பரோ பழனக் கூடற்
சித்தவெம் மடிகள் வேந்தன் பொன்னறைச் செல்வம் வௌவிப்
பத்தர்யா ழிடத்தோ ளேந்திப் பாடுவோன் காண வைப்பார்

(இ-ள்.) இப்பணியன்றி வேறுபணி இவருக்கில்லாமையின் பாணபத்திரர் (வருவாயில்லாது) வறுமையடைய, வயல்சூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சித்தமூர்த்திகளாகிய எமது பெருமான் மனந்தாளுவரோ? (தாளாதவராய்) அரசனுடைய பொக்கிஷத்திலுள்ள பொருள்களை (எவர்க்குந்தெரியாது) கவர்ந்து, பத்தர்பொருந்திய வீணையை இடத்தோளிலேந்திப்பாடும் பாணபத்திரர்காண நாடோறும் வைத்தருளுவர்.

பாணபத்திரருக்கு அன்றன்றுள்ள குறைக ளொழிய அவ்வவற்றிற்கேற்பக்கொடுத்து வந்தமையின் "பாடுவோன் காண வைப்பார்" என்றார். (௩)

சிலபொலங் காசு சின்னாள் மணிக்கலன் சின்னாள் செம்பொற்
கலைவகைச் சின்னா ளம்பொற் சாமரைக் காம்பு சின்னா
ளலர்கதி ரரிமான் சேக்கை யாடகத் தகடு சின்னாள்
குலமணி வருக்கஞ் சின்னாள் கொடுத்திடக் கொண்டு போவான்.

(இ-ள்.) சில பொற்காசுகளைச் சிலநாளும், சில இரத்தினாபரணங்களைச் சிலநாளும், பீதாம்பரங்களைச் சிலநாளும், அழகிய பொன்வேய்ந்த சாமரையின் காம்புகளைச் சிலநாளும்,பரந்த ஒளிவாய்ந்த சிம்மாசனத்தில் வேய்ந்த பொற்றகட்டைச் சிலநாளும், இரத்தினவகைகளைச் சிலநாளும் (சிவபெருமான்) கொடுத்தருள, (பாணபத்திரர்) கொண்டுபோவா ராயினர். எ-று.

பெருமான் பாணபத்திரருக்குக்கொடுத்த பொருள்கள்யாவும் பாண்டியன் கருவூலத்திருந்தே கொடுக்கப்படலின், ஒரே பொருளிலெடுத்தால் கரவு வெளிப்படுமென்று கருதிச் சிற்சில தினங்கள்வரையில் ஒவ்வொருபொருளைக் கொடுத்துவந்தனர் எனக்கொள்க. (௪)

கைவரும் பொருளைத் தந்த கள்வருந் தானு மன்றி
யெவ்வெவர் தமக்குந் தோற்றா தெரியிலிட் டழித்துஞ் சின்னஞ்
செய்வன செய்துந் தன்னைச் சேர்ந்தவ ரிரந்தோர் கைபார்த்
துய்பவர் பிறர்க்கு மாறா துதவியுட் கவலை தீர்ப்பான்.

(இ-ள்.) தமது கையிற் கிடைத்தபொருளைத் தந்தருளிய கள்வருந் தாமுமன்றி,யாவர்க்கும்புலப்படாமல் நெருப்பிலிட்டுருக்கியும்,உருவேறுபடுத்தும் பொருள்

களை உருவேறுபடுத்தியும், தம்மையடைந்தவரும் தம்பாலிரப்பவரும் தமது கைவர வைப்பார்த்துப் பிழைப்பவரும் பிறருமாகிய யாவருக்குங் குறையாதுங்கொடுத்து, மனக் கவலையையொழித்து வருவார் (பாணபத்திரர்) எ-று.

எரியிலிடல் முதலியன பாண்டியன் பொருள்களாதலின், அவன் அவற் றைக்கண்டு ஐயுறுவண்ணஞ்செய்த செயல்களென்க. (ரு)

வைகலுங் கொடுப்போர் பின்னாள் மறுத்தன ராகப் போய்ப்போய்க்
கைதொழு திறைஞ்சி வாளா வருமவன் கலியின் மூழ்கி
யுய்வகை வேறு காணு தொக்கலு மொக்க வாடிக்
கையற வடைய நோனு துறங்கினன் கனவி னெல்லே.

(இ-ள்.) தினந்தோறுங் கொடுத்துவருஞ் சோமசுந்தரக்கடவுள் பின்வரு நாளில் மறுக்க, (அதுமுதல்) சென்று சென்று கைகுவித்துப்பணிந்து (இசைபாடி) ஒன்றும் பெறுதுவரும் பாணபத்திரர் வறுமையிலழுந்திப் பிழைக்கும்வகை பிறிதொ ன்று உணராது, தமது சுற்றத்தோடு ஒருசேரவாடித் துன்பமிக,அதனையாற்றாது கண் டுயில் கூர்ந்தார். (அவர்) கனவில். எ-று.

உதவி செய்துவந்தபெருமான் மறுத்தமையின், "உய்வகை வேறுகாணது வாடி யுறங்கினன்" என்றார். (சு)

சித்தவெம் பெருமான் வந்து செப்புவா னப்பா நிம்பத்
தொத்தவன் கோசந் தன்னிற் றும்பியுண் கனியின் வெளவி
யித்தன மின்று காறு மீந்தன மெம்பா லன்பு
வைத்தவ னறிந்தாற் சங்கை மனத்தனய் விகற்பங் கொள்வான்.

(இ-ள்.) சித்தமூர்த்திகளாகிய எமது பெருமானார்வந்து சொல்சின்றார்: அப்பா! வேப்பமலர் மாலையணிந்த பாண்டியனுடைய பொக்கிஷத்தில் யானையுண்ட விளங்கனிபோல (அதிலுள்ளபொருளைக்) கவர்ந்து இப்பொருளை இத்தினம்வரையிற் கொடுத்துவந்தோம். எம்மிடத்து நின்போல் அன்புவைத்த வரகுணபாண்டிய னறிந் தால், ஆசங்கைகொண்ட மனமுடையவனாய் வேறுபாடு கொள்வான். எ-று. (எ)

மயலறக கற்புக் காக்கு மகளிர் போற் றுறவு காக்க
முயலும்யோ கரிலுட் காப்பு முரசெறி புறஞ்சூழ் காப்புங்
கயலிலச் சினையு நிற்கக் கவர்ந்ததற் புதமிக் கள்வ
னுயிர்தொறு மொளித்த கள்வ னொருவனே வறியே னென்பான்.

(இ-ள்.) மயக்கமறக் கற்பினைக்காக்குங் கற்புடை மகளிர்போலவும், துற வறத்தைக்காக்க முயலுஞ் சிவயோகிகளைப்போலவும் அகக்காவலும், முரசெறிந்து புறஞ்சூழ்ந்து வரும்புறக்காவலும், இட்ட மீனமுத்திரை இட்டபடியேயாயு மிருக்க, (கருவூலத்திருந்த பொருளை) வெளவியது பெருவியப்பு. (நினைத்துப்பார்க்கில்) இக் கள்வன் உயிர்கள்தோறு மொளித்துநின்ற கள்வனாகிய இறைவனே? அறியேனெ ன்றுகூறிச் சந்தேகிப்பான். எ-று. (அ)

கோமக னினைய செய்தி யறியுமேற் கோசங் காப்போர்க்
காமுறு தண்ட நின்போ லன்பகத் தெம்மை வைத்த
தேமரு போந்தின் கண்ணிச் சேரமான் றனக்குப் போது
நாமொரு முடங்க றீட்டி நல்குவம் போதி யென்ன.

(இ-ள்.) வரகுணபாண்டியன் இச்செய்தியையறிவானாயின், கருவூலங்காப்பவர்க்குத் தண்டனையுண்டாம். உன்னைப்போல அன்பால் தம்மனத்திலென்றும் எம்மை நீங்காதுவைத்த தேன்பொருந்திய பனைமாலையையணிந்த சேரமான்பெருமானாகிய கழறிற்றறிவார்நாயனாருக்கு இப்பொழுது நாமோர் திருமுகம்வரைந்து கொடுப்போம் போவாயென்று. எ-று.

சேரமான்பெருமாணாயனார் சேரர்குலத்திலவதரித்து இராஜபோகத்தை வெறுத்து, திருவஞ்சைக்களத்தையடைந்து சிவபெருமானாருடைய திருவடிக்கன்பு பூண்டொழுகியும், தமது தந்தை அரசினைவெறுத்துத் தவஞ்செய்ய வனத்திற்குச்சென்றபொழுது மந்திரிமுதலானோர்வந்துவேண்டச் சிவபெருமான் கட்டளைப்படி முடிசூடியும், சிவசந்நிதியிற்சென்று பணிந்து யானைமேல் திருவீதி உலாவருகையில்,தான் கொண்டுவரும் உவர்மண் மழையால்நனைந்து உடல்முழுது மொழுகியுலர்ந்து வெண்ணிறமுற்ற ஓர் * ஈர்ங்கொல்லி தம்மெதிர்வரக்கண்டு சிவனடியரென யானையினின்றிறங்கிப்பணிய, அவ்வீர்ங்கொல்லி மதிமயங்கி எதிர்பணிந்து அடியேன் "அடிவண்ணான்" எனக்கூற, நாயனார் "அடிச்சேரன். திருநீற்றுத் திருவேடத்தை நினைப்பித்தீர் வருந்தவேண்டாம்" எனமொழிந்தும், நடராஜப்பெருமான் திருவடிக்குப் பக்தியுடன் அர்ச்சித்துத் திருச்சிலம்பொலிகேட்டுக் களித்துவருநாளில், ஒருபொழுது அத்திருச்சிலம்பொலி கேளாமையால்"யாது தவறிழைத்தேனோ" என்று உடைவாளையுருவி மார்பில்நாட்டி உயிர்விட நின்றபொழுது எம்பெருமான் மகிழ்வுடன் திருச்சிலம்பொலி காட்டப்பெற்றும் விளங்குதலின் "நின்போலன்பகத் தெம்மைவைத்த-தேயருபோந்தின் கண்ணிச் சேரமான்" என்றார். இதனை, திருத்தொண்டர்புராணம் சேரமான்பெருமாணாயனார் புராணத்திற்கண்டுகொள்க. (க)

மறைக்குறை செய்த வாக்கான் மதிமலி புரிசை யென்னுஞ்
சிறப்பியற் சீர்சால் செய்யுட் பாசுரஞ் செப்பித் தீட்டிப்
பிறைச்சடைப் பெருமா னல்கி மறைந்தனன் பெரும்பாண் செல்வ
னுறக்கநீத் தாடிப் பாடி யுவகைமா கடலி லாழ்ந்தான்.

(இ-ள்.) (கண்ணுவர் முதலிய முனிவர்கட்காக வேதத்திற்குப்) பொருளருளிச்செய்த திருவாக்கினால் "மதிமலி புரிசை", என்னும் (முதலையுடைய) சிறப்புப் பொருந்திய சீரமைந்த செய்யுளாகிய திருமுகப்பாசுரமொன்று திருவாய்மலர்ந்து வரைந்தருளி, பிறைச்சந்திரனை யணிந்த சடையையுடைய சோமசுந்தரக்கடவுள் கொடுத்து அந்தர்த்தானமாயினர். பெரிய பண்பாடுதலில் வல்ல பாணபத்திரர் துயிலுணர்தெழுந்து (ஆநந்தப்பெருக்கால்) ஆடியும் பாடியும் மகிழ்ச்சி யென்னும் பெரிய கடலிலழுந்தினர். எ-று.

இச்செய்யுளிற் கூறிய விஷயத்தை

திருத்தொண்டர்புராணம்.

"அதிர்கழ லுதியர் வேந்தற் கருள்செய்த பெருமை யாலே
எதிரில்செல் வத்துக் கேற்ற விருநிதி கொடுக்க வென்று
மதிமலி புரிசை யென்னும் வாசகம் வரைந்த வாய்மை
கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகங் கொடுத்தார் காண"—என மாறுபடாது கூறுதல் காண்க. (௪0)

* ஈர்ங்கொல்லி-வண்ணான்.

### திருமுகப்பாசுரம்.

திருச்சிற்றம்பலம்.

" மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை
யன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யா மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்வல்ல பாண பத்திரன்
றன்போ லெம்பா லன்பன் றம்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"

திருச்சிற்றம்பலம்.

---

என்றது—(சிற்பநூல் வல்லோர்) நுண்ணுணர்வு மிகுந்த மதில்சூழ்ந்த நான் மாடக்கூடலென்னுந் திருநகரமாகிய மேலே பறந்துலவும் வெண்ணிறமும் வரிகளு மமைந்த சிறகையுடைய அன்னங்கள் சஞ்சரிக்குஞ் சோலைசூழ்ந்த திருவாலவாயில் நிலைபெற்றுள்ள சிவன் யாம்கூறியருளும் வார்த்தை: கார்காலமேகம்போல,கவிவல்லு நர்க்குத் தனதுரிமையினின்று அவர்களுக்குரிமைப்பட வுதவி,வெண்ணிறம்பொருந் திய பூரணசந்திரன்போல விளங்கும் வெண்கொற்றக்குடை நிழல்செய்ய (தேவமணி முதலிய இலக்கணங்களால்) ஒளிவாய்ந்து பகைவர் முனையில் அஞ்சாது செல்லுங் குதிரையைச் செலுத்தும் சேரமான் காண்க—(இசைத்தொழிற்) பண்பால் யாழ் வாசித்தலில் வல்ல பாணபத்திரன் தன்னைப்போல எம்மிடத்தில் அன்பு மிக்கோன். தன்னைக் காணக்கருதி வந்தனன். (அறத்தாறீட்டிய) மாட்சியையுடைய பொருளைக் கொடுத்து என்னிடத்து வர விடுக்க—எனப் பொருள்படும்.

### கலிவிருத்தம்.

வாங்கிய திருமுக மணிப்பட் டாடையிட்
டாங்கிறை யடிபணிந் தகன்று பத்திர
னோங்கிய கோயிலை வலங்கொண் டொல்லென
நீங்கிமேல் வரைப்புல நெறிக்கொ டேகுவான்.

(இ-ள்.) பாணபத்திரர் தாம் வாங்கிக்கொண்ட திருமுகத்தினை அழகிய பட் டாடையில் வைத்து, சித்தமூர்த்திகளாய் வந்த சோமசுந்தரக்கடவுள் திருவடியைப் பணிந்து அங்கு நின்றும் நீங்கி,(விண்ணளவு) ஓங்கிய திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ் செய்து விரைந்து புறம்போந்து, மேற்றிசையிலுள்ள மலைநாட்டின் வழிக்கொண்டு செல்லத்தொடங்கினர். எ-று.

" வேண்டிற் றெல்லாங் குறைவின்றித் - தரநம்மோலை தருகின்றோந் தாழா தேகி வருகென்று"—என மாறுபடாது கூறுதலுங் காண்க. (கக)

கொல்லையுங் குறிஞ்சியுங் கொதிக்கும் வெம்பரற்
கல்லத ரத்தமுங் கடந்து முட்புறப்
பல்சுளைக் கனியடி யிடறப் பைப்பைய
நல்வளங் கெழுமலை நாடு நண்ணினான்.

(இ-ள்.) முல்லை நிலத்தையுங் குறிஞ்சி நிலத்தையும் வெம்மையாற் கொதிக்கும் பருக்கைக் கற்களை வழியிலுடைய பாலைநிலத்தையுங் கடந்து, முள்ளைப் புறத்திலுள்ள பல சுளைகளமைந்த பலாக்கனிகள் தமது காலிலிடற மெல்ல மெல்லச்சென்று, நல்ல வளமிக்க மலைநாட்டை யடைந்தனர் (பாணபத்திரர்.) எ-று.

அதர்=வழி. அத்தம்-பாலைநிலம். (கஉ)

அலைகட லெனெடுந் துகி லந்த நாடெனுந்
தலைமக டனக்குவா னறவு குன்றுபூண்
முலையென விளங்கின முகத்திற் றீட்டிய
திலகமே யானது திருவஞ் சைக்களம்.

(இ-ள்.) அலைக்குங் கடலாகிய நெடிய ஆடையை யுடுத்த அந்த மலைநாடென்னுந் தலைமகளுக்கு, வானமளாவிய மலைகளே ஆபரணமணிந்தமுலைகள்போல விளங்கின. திருவஞ்சைக்களமென்னுந் திருநகரம் (அத்தலைமகள்) முகத்திலிட்ட திலதமாக விளங்கியது. எ-று. (கரு)

அறமக ளாக்கமு மலரின் மேயசெந்
நிறமக ளாக்கமு நீதி சான்றபோர்
மறமக ளாக்கமும் வடசொற் றென்கலைத்
திறமக ளாக்கமுஞ் சிறந்த தந்நகர்.

(இ-ள்.) தரும மங்கையாலாகிய ஞானச் செல்வமும், தாமரை மலரில் வசிக்குஞ் செந்நிறம்பொருந்திய திருமகளாலாகிய பொருட்செல்வமும், நீதியின் வழியமைந்த போர்த்தொழிற்குரிய வீரலக்ஷ்மியினாலாகிய பிரதாபச் செல்வமும், ஆரியம் தமிழ் என்னும் பகுப்பமைந்த கலைமகளாலாகிய கல்விச் செல்வமும் அத்திருநகரிற் பொலிந்து சிறந்தன. எ-று.

வடசொல் - ஆரியம். தென்கலை-தமிழ். (கச)

மண்புக ழுந்நகர் மறுகின் மாடொரு
தண்புனற் சாலையிற் சார்ந்து ளானிப்பால்
விண்புகழ் நீதியவ் வேந்தற் கன்றிராக்
கண்புனை நுதலினர் கனவிற் றோன்றினர்.

(இ-ள்.) பாணபத்திரர் நிலவுலகு புகழும் அந்நகரத்தின் வீதியிலுள்ள ஒரு தண்ணிய நீர்ப்பந்தலிற்சேர்ந்திருந்தனர். இப்புறம், தேவர்களும் புகழத்தக்க நீதியையுடைய அச்சேரமான்பெருமானுயனூர்க்கு அன்றிரவில் நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானூர் சொப்பனத்தி லெழுந்தருளினர். எ-று. (கரு)

தென்னவன் மதுரையி லிருக்குஞ் சித்தர்யா
நின்னிடை வந்துளே நின்னைக் கண்டுதா
னன்னிதி வேண்டநம் மோலை கொண்டுநம்
மின்னிசைப் பாணபத் திரனிங் கெய்தினன்.

(இ-ள்.) நாம் பாண்டியன் அரசு செலுத்தும் மதுரையிலிருக்குஞ் சித்தர். நின்னிடத்தில் வந்தோம். நின்னைக்கண்டு, தான் மிக்க பொருளைப் பெற நமது திருமுகங்கொண்டு நம்மிடத்தன்புள்ள இனிய இசையில் வல்ல பாணபத்திரன் இங்கு வந்திருக்கின்றனன். எ-று. (கசு)

மற்றவற் கருநிதி கொடுத்து மன்னநீ
தெற்றென வரவிடு கென்று சித்தர்தாஞ்

சொற்றனர் போயினர் சுரக்குந் தண்ணளி
பொற்றைவெண் குடையினு னுறக்க நீங்கினன்.

(இ-ள்.) அரசனே! அப்பாணபத்திரனுக்குப் பெறுதற்கரிய பொருள்கொடுத்து விரைந்து அவனை எம்பால்வர நீ அனுப்புகவென்று சித்தமூர்த்திகள் சொல்லிச் சென்றருளினர். தண்ணிய கருணை சுரக்கும் ஒப்பில்லாத வெண்கொற்றக் குடையையுடைய சேரமான்பெருமானார் துயிலுணர்ந்தனர். எ-று. (கஎ)

கங்குல்வாய்க் கண்டவக் கனவைப் பெண்ணையந்
தொங்கலான் றமரொடு சொல்லிச் சேற்கணாள்
பங்கினன் றிருமுகங் கொணர்ந்த பத்திர
னெங்குளான் கொல்லெனத் தேட வெண்ணுவான்.

(இ-ள்.) இரவிற்கண்ட அந்தச் சொப்பனத்தை அழகிய பனைமாலை யணிந்த சேரமான் பெருமானார் தமது உறவினராகிய மந்திரிகளோடு கூறி, அங்கயற்கண்ணியாரை வாமபாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுள் அருளிய திருமுகத்தைக் கொண்டுவந்த பாணபத்திரர் எங்கிருக்கின்றனரோ வெனத் தேடக்கருதுவார். எ-று.

சிவபெருமான் திருவருட்பெருமை தம்மு ளடங்காது மேலிடுதலின் "தமரொடு கூறினர்" என்றார். (கஅ)

மற்றவர் தமைத்துரீஇ வருக தில்லெனக்
கொற்றவ னேவலோர் குறுகி மாடமுந்
தெற்றியு நியமமு மன்றுஞ் சென்றுசென்
றெற்றிகழ் மணிநக ரெங்குந் தேடுவார்.

(இ-ள்.) அப்பாணபத்திரரை விரைந்துதேடி வருகவென்றேவ, சேரமான் பெருமானாருடைய வேவுகாரர் பலவிடங்களிலுஞ் சென்று, மாடங்களிலும் திண்ணைகளிலும் கடைவீதிகளிலும் அம்பலங்களிலும் போய்ப்போய், சூரியன்போலப் பிரகாசிக்கும் அழகிய நகரமெங்குந் தேடுவாராயினர்கள். எ-று.

தில், என்னுமிடைச்சொல் "விழைவே கால மொழியிசைக் கிளவியென்றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே" என்பது சூத்திரமாகலின், காலத்தின்மேல் நிற்றலால் விரைந்து எனப் பொருள்கொண்டாம். (கக)

தருமநீர்ப் பந்தரி லிருக்குந் தந்திரி
வருமிசைக் கிழவனைக் கண்டு வல்லைபோய்த்
திருமகற் குணர்த்தினர் சேனை யோடெழீஇப்
பெருமகன் பாணர்தம் பிரானை நண்ணினன்.

(இ-ள்.) தருமத்தின் பொருட்டுவைத்த தண்ணீர்ப்பந்தலில் (இளைப்பாறி) வசிக்கும் வீணையில் வல்ல பாணபத்திரரைக்கண்டு, விரைந்துசென்று சேரமான் பெருமானார்க்குக் கூறினர்கள். அன்பினிற் பெரிய அச்சேரமான்பெருமானார் தமது சேனையோ டெழுந்து பாணர்பெருமானாராகிய பாணபத்திரரையடைந்தனர். எ-று.

திருமகன் பெருமகன் என்பன—சேரமான்பெருமானார் முறையே அருட்செல்வம்போல அரசியலுக் குறுப்பாகிய பொருட் செல்வத்தினும் பெரியரெனக் குறித்தன. (உ0)

கண்டனன் முகிழ்த்தகைக் கமலஞ் சென்னிமேற்
கொண்டனன் பாடினன் கூத்து மாடினன்

றண்டென வீழ்ந்தன னன்பிற் றண்ணறு
வண்டென மகிழ்ந்தனன் மன்னர் மன்னனே.

(இ-ள்.) அரசர்கட் கரசராகிய சேரமான் பெருமானார்கண்டு, அன்போடு கூப்பிய கைத்தாமரைகளைத் தமதுசிரத்தின்மேற்குவித்துப்பாடி, ஆனந்தக் கூத்தாடி, தண்டம்போல நிலமிசைவீழ்ந்தி, தண்ணியதேனைக்கண்ட வண்டுபோலப் பாணபத்திரரைக்கண்டு மகிழ்கூர்ந்தனர். எ-று.

சேரமான் பெருமானார் பாணபத்திரரைத் தூரத்திற் கண்டபொழுதே திரியாங்கம் [சிரமேல் இருகரங் கூப்புதல்] செய்து பணிந்தனரென்பார் "முகிழ்த்த கைக் கமலஞ் சென்னிமேற் கொண்டனன்" என்றும், தேனைக்கண்ட வண்டு மகிழ்வுற்றாற்போலப் பாணபத்திரரைக்காண எக்குற்றிருந்த சேரமான்பெருமானார் கண்ட பொழுதே அன்பு சிறந்து தன்வயநீங்கிப் பாடியாடி அஷ்டாங்கமாகத் திருவடியில் வீழ்ந்து பணிந்து ஆராவின்ப முற்றனரென்பார் "தண்ணறு வண்டென மகிழ்ந்தனன் மன்னர்மன்னனே" என்றுங் கூறினர்.

திருத்தொண்டர் புராணம்.

"கேட்ட பொழுதே கைதலைமேற் கொண்டு கிளர்ந்த பேரன்பால்
நாட்டம் பொழிநீர் வழிந்திழிய வெழுந்த நடுக்க மிகவெய்தி
ஓட்டத் தம்பொன் மாளிகையின் புறத்தி லுருகுஞ் சிந்தையுடன்
பாட்டின் றலைமைப்பாணனார்பாதம்பலகாற்பணிகின்றார்" என வருதலுங் காண்க.

திரியாங்கம் என்றதை,, சிவபுண்ணியத்தெளிவு.

"சிரமே காங்கம், வலக்கரத்தைச் சிரத்திற் குவித்தல் துவிதாங்கம்,
சிரமேல் வாம கரத்தினையுஞ் சேர்த்த திரிவி தாங்கமதாம்,
சிரநீள் கரஞ்சா நுக்கணிலந் தீண்டிற் பஞ்சாங் கமதாகும்,
சிரமோ வாய்கா துகைசானு செகத்திற் படித லட்டாங்கம்"என்பதனாலறிக. (உக)

வாங்கினன் றிருமுக மலர்க்க ணொற்றினன்
றாங்கினன் முடிமிசைத் தாமம் போன்மகிழ்
தூங்கினன் றடங்கணீர் துளிப்ப மெய்யெலாம்
வீங்கினன் பொடிப்பெழ வேந்தர் வேந்தனே.

(இ-ள்.) அரசர்க் கரசாகிய சேரமான்பெருமானார் சிவபெருமானார் கொடுத்தனுப்பிய திருமுகத்தை வாங்கித் தமது தாமரைமலர்போன்ற கண்களிலொற்றி, சிரசின்மேல் மலர்மாலைபோலச்சூடி மகிழ்ச்சிமிகுந்து, பரந்தகண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ் சிந்தவும் மயிர்க்கூச்செறியவும் தேகமுழுதும் விம்மித மடைந்தனர். எ-று.

திருத்தொண்டர் புராணம்.

"அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த தென்ன வவர்தாமுங்
கொடிசேர் விடையார் திருமுகங்கை கொடுத்து வணங்கக் கொற்றவனார்.
முடிமேற் கொண்டு கூத்தாடி மொழியுங் குழறிப் பொழிகண்ணீர்
பொடியார் மார்பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால் வீழ்ந்தெழுவார்"—எனக் கூறுவதுங் காண்க. (உஉ)

எண்சீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

மின்னவிருஞ் செம்பொன்மணி மாடக் கூடன் மேயசிவன் யாமெழுதி விடுக்கு மாற்ற, நன்னர்முகி லெனப்புலவர்க் குதவுஞ் சேர நரபாலன் காண்

கதன்போ னும்பா லன்ப, வின்னிசையாழ்ப் பத்திரன்றன் மாடே போந்தா
னிருநிதியங் கொடுத்துவா விடுப்ப தென்னத், தென்னர்பிரான் றிருமுகத்தி
ன் செய்தி நோக்கிச் சேரர்பிரான் களிப்பெல்லை தெரியா னாகி.

(இ-ள்.) ஒளி விளங்குஞ் செம்பொன்னாலாகிய மாடங்களையுடைய நான்மா
டக்கூடலாகிய மதுரையிலெழுந்தருளிய சிவபெருமான் யாம் (திருக்கையால்) வரைந்
தனுப்புந் திருமுகம் : (உலகிற்கு) நன்மை பயக்கும் மேகம்போலப் புலவர்க்கு நன்
மை பயக்குஞ் சேரமானாகிய நரபதிகாண்க: தன்னைப்போல நம்மிடத்து அன்பனாகிய
இனிய இசையமைந்த யாழ்வசித்தலில் வல்ல பாணபத்திரன் தன்னிடத்து வந்தனன்.
அவனுக்குப் பெருநிதி கொடுத்துவரவிடுப்பது-என்று, பாண்டியர் பெருமானாராகிய
சோமசுந்தரக்கடவுள் வரைந்தருளிய திருமுகத்தின் செய்தியை (வாசித்து)ப்பார்த்து,
சேரர்பெருமானார் எழுந்த மகிழ்ச்சியில் அளவு தெரியாதவராகி. எ-று.

இதுமுதல் ஏழு செய்யுள்கள் குளகம்.

இச்செய்யுளும் "மதிமலி புரிசை" என்னுந் திருமுகப்பாசுரமும் கருத்துப்
பேதமின்றி இருப்பது கண்டுகொள்க. (உரு)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னின் றவிசை மிசைவைத்துப் புழைக்கை மதமான் றலையேற்றி
மன்னுங் கொளையாழ்ப் புலவனைமுன் வைத்துப் பின்னே தானிருந்து
மின்னுங் கதிர்கா லிணைக்கவரி வீசிப் பலவே றியுங்கலிப்பத்
தென்னென் றளியா ரிசைத்தாரான் றிருமா நகரை வலஞ்செய்யா.

(இ-ள்.) பொன்னாற் செய்த பீடத்தின்மேலிருத்தி, துவாரம் பொருந்திய
துதிக்கையையும் மதமயக்கத்தையுமுடைய யானையின் மத்தகத்தின்மேலேற்றி, நிலை
பெற்ற இசையமைந்த யாழில்வல்ல பாணபத்திரனை முன்னர் வைத்து, தான் பின்ன
ரிருந்து, விளங்காநின்ற ஒளிவீசும் இணைக்கவரிகளை வீசி, பல வேறுவகைப்பட்ட
வாத்தியங்க ளொலிப்ப, தென்னென்றிசைபாடி வண்டுகள் பொருந்திய மாலையை
யணிந்த சேரர்பெருமானார் பெரிய அழகிய திருநகரினை வலஞ் செய்வித்து. எ-று.

சைவசமயநெறி.

"தேசிகர் தம்மைச் சிவநேசர் தம்மையும்
ஈசனென வேயுளத்து ளெண்"—என்றபடி,சிவனடியவரைச் சிவமே
யென வுணர்ந்த ஆரா அன்பினர் என்பார் " முன் வைத்துப் பின்னே தானிருந்து -
மின்னுங் கதிர்கா லிணைக்கவரி வீசி"—என்றார். (உசு)

பஞ்சு தடவுஞ் சீறடியார் பலமங் கலங்கொண் டெதிர்போத
மஞ்சு தடவு நீள்குடுமி மாட மனையிற் கொடுபோகி
நஞ்சு தடவு மணிகண்ட னன்பன் றனைநன் னீராட்டி
யஞ்சு தடவி யோவியஞ்செய் தமைத்த மணிமன் டபத்தேற்றி.

(இ-ள்.) செம்பஞ்சுக் குழம்பூட்டிய சிற்றடியையுடைய மாங்கல்ய மாதர்கள்
அஷ்டமங்கல மேந்தி எதிரே வர, மேக மளாவிய நீண்ட சிகரத்தையுடைய தமது
கோயிலுக்குக்கொண்டு சென்று, ஆலாகலவிடம் பொருந்திய ஸ்ரீ கண்டத்தையுடைய
சோமசுந்தரக்கடவுள் அன்பராகிய பாணபத்திரனை (வாசமிக்க) நல்லநீரால் ஸ்நானஞ்
செய்வித்து,பஞ்சவர்ணங்களாற் சித்திரஞ் செய்தமைத்த இரத்தின மிழைத்த மண்ட
பத்தி லிருந்தருளச்செய்து. எ-று.

அஷ்ட மங்கலங்கள் கண்ணடி - இடபம் - விளக்கு - சீவற்சம்-கவரி-சங்கு-சுவத்திகம் - நிறைகுடம் - வாசநீர். இவை திருமணப்படலத்தில் முன்னே விளக்கப் பட்டுள்ளன. (உ௫)

அம்பொற் றவிசிட் டருச்சனைசெய் தாறு சுவையின் னமுதருத்திச்
செம்பொற் கலவை நறுஞ்சாந்தந் தீம்பூ வாதி முகவாசம்
பைம்பொற் கலத்து வெள்ளிலைதீம் பழுக்காய் பிறவு முறைநல்கி
யும்பர்க் கிறைவன் றிருமுகத்தி னுய்ப்ப தெனலா னுய்த்துமென.

(இ-ள்.) அழகியபொற்பீடமளித்து, அருச்சித்து, அறுசுவை பொருந்திய இனிய அமுதமுண்பித்து, செம்பொன்நிறம்வாய்ந்த கூட்டுவர்க்கமாகிய நறுமணங் கமழுஞ்சந்தனமும், இனியமலர்முதலிய முகவாசமும், பசியபொற்றட்டில் வெற்றிலையுஞ் சுவையமைந்த பாக்கும், பிறவும் முறைப்படிகொடுத்து, தேவதேவராகிய சோம சுந்தரக்கடவுள் வரைந்தருளிய திருமுகத்தில், அனுப்புவது என்றிருத்தலால், (அவ்வாறே) அனுப்புவோமென்று, எ-று.

சிவனடியாரைச் சிவனைப்போலவேகருதி அருச்சனைசெய்தல் முறையாதலின், சேரமான்பெருமாளுர் பாணபத்திரரைப்பூசித்தனரென்க. (உ௬)

செம்பொ னறையைத் திறந்தழைத்துக் காட்டி யினைய திருவெல்லா
மும்பர் பெருமா னடியீர்நீ ருடையீர் கவர்ந்து கொண்மினென
விம்பர் நிழற்றும் வெண்குடையா னிசைப்ப வெதிர்தாழ்ந் திசைக்கிழவ
னம்ப னருளுக் குரியீர்நீ ரல்கிற் றமையு மெனக்கென்ன.

(இ-ள்.) பொக்கிஷத்தைத்திறந்து அழைத்துக்காண்பித்து, மகாதேவனுக் கடியவரே! இச்செல்வமுழுவதையும் நீரேயுடையீர் ; கைக்கொள்ளுமென்று, இவ்வுலகிற்கு நிழல்செய்யும் வெண்குடையையுடைய சேரமான்பெருமாளுர் கூற, பாணபத்திரர் எதிர்பணிந்து, நீர் சிவபெருமான் திருவருளுக்குரியீர்: நீர்கொடுப்பது எனக்குப் போதுமென்றுகூற. எ-று. (உ௭)

மன்னன் றானெண் ணியவாற்றான் வழங்க வழங்க மறுத்துவறுத்
தின்ன றீரு மிசைக்கிழவ னிலங்கும் பொலம்பூ ணிருநிதியம்
பொன்னஞ் சிவிகை கரிபரிமான் பொற்பட் டாடை பலபிறவுந்
தன்ன தென்னு மளவாற்றாற் றானே கொள்ளத் தார்வேந்தன்.

(இ-ள்.) சேரமான்பெருமாளுர் நினைத்தபடியே கொடுக்குந்தோறும் போதும் போதுமென்று மறுத்து, வறுமைநீங்கியபாணபத்திரர் விளங்கும் பொன்னாலாகிய ஆபரணமும் பெருஞ்செல்வமும் பொன்னாலாகிய அழகியபல்லக்கும் யானையும் குதிரையும் பீதாம்பரமும் பிறபலவகைப்பொருள்களும் [சிறியனவென்னும்] அளவின் வகையால் பாணபத்திரரே கைக்கொள்ள, பனைமாலையணிந்த சேரமான் பெருமாளுர். எ-று.

திருத்தொண்டர்புராணம்.

" பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்பத் திரனார்க்கு
நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி மற்றிவையும்
உரந்தங் கியவெங் கரிபரிகண் முதலா வுயிருள் ளனதனமும்
புரந்த வரசுங் கொள்ளுமென மொழிந்தார் பொறையர் புரவலனார்,

பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார்
காணக் கொடுத்த விவையெல்லாங் கண்மெகிழ்வுற் றதிசயித்துப்

பேண வெனக்கு வேண்டுவன வடியேன் கொள்ளப் பிஞ்ஞகனார்
ஆணை யரசு மரசுறுப்புங் கைக்கொண் டருளு மெனவிறைஞ்சி
இறைவ ராணை மறுப்பதனுக் கஞ்சி யிருந்தார்"—என வருதல்காண்க.

சேரர் பெருமான் தமது சேனைமுதலியவற்றுடன் அரசியலையுந் தந்தனரென்பார் "மன்னன் றனெண் ணியவாற்றால் வழங்க வீழங்க" என்றும் பாணபத்திரர் அரசியலையும் அரசுறுப்பையும் ஒறுத்தனரென்பார் "மறுத்து மறுத்து" என்றும், அவ்வாறு பாணபத்திரர் பெற்றது அளவிலவாயினும் சேரமான்பெருமானார் கருத்திற்குச் சிறிதென்பார் "தன்ன வென்னு மளவாற்றாற் றனே கொள்ள" என்றுங்கூறினர்.

பின்னே முடியோ சேட்சென்று பெருமை சான்ற வரிசையினாற்
றன்னே ரிசையான் றனைவிடுத்து மீண்டா னாகத் தமிழ்மதுரை
மின்னேர் சடையா ரிசைத்தொண்டன் றானு மீண்டு வெயில்விரிக்கும்
பொன்னேர் மௌலி நிதிக்கிழவன் போல மதுரை நகர்புக்கான்.

(இ-ள்.) பிறகு எழடி தூரமோ (சென்றனர்) நகர்கடந்து நெடுந்தூரம் பின் சென்று, பெருமை மிக்க வரிசையோடு இசையில் வல்ல தம்மையொத்த (சிவபக்தியுடைய) பாணபத்திரனை யனுப்பி(அவர்உத்திரவுபெற்று) சேரமான்பெருமானார்மீள, தமிழ்பயிலு மதுரைநகரிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுக்கு இசைத்தொண்டு பூண்ட பாணபத்திரரும் திரும்பி, சூரியனைப்போலப் பிரகாசிக்கும் பொலிவமைந்த முடியையுடைய குபேரனைப்போல மதுரைத் திருநகரிற் சேர்ந்தார். எ-று.

"பின்னே முடியோ சேட்சென்று" என்றதால், தமது வீட்டிற்கு வந்து போகும் பெரியோர்பின் எழடித்தூரஞ்சென்று வழிவிடுதல் முறையாயிருக்க, இவர் அன்பின் மிகுதியால் நகர்நீங்கு மெல்லையும் பின் சென்றனரென்றும், "மீண்டானாக" என்றதால், அவர் உத்திரவுபெற்றுத் திரும்பினரென்றும், "நிதிக்கிழவன்போல" என்றதால், அவர் யானைமேற்கொண்டு சென்றனரென்றுங் குறித்தன.

திருத்தொண்டர் புராணம்.

"பண்பு பெருகும் பெருமானும் பாணபத்திரனார்பின்
கண்கள் பொழிந்த காதனீர் வழியக் கையாற் றொழுதணைய
நண்பு சிறக்க வவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு"—என்றும்,
"நிறைமும் மதத்துக் களிறுபரி யுள்ளிட் டனவேண் டுவகொண்டோர்
பிறைவெண் கோட்டுக் களிற்றின்மேற் கொண்டு போந்தார் பெரும்பாணர்"—என்றும் வருதல் காண்க.

சைவசமயநெறி.

"போம்பொழுது பின்னே பதினன் கடிபோக
நாம்பெற்றோ மென்றெண்ணி நன்று"—என்றபடி, பதினன்கடி தூரம் பின் சென்று வழிவிட வேண்டுமென்பதும் ஒருவகை. (உக)

வந்து மதுரைப் பெருமானை வணங்கிக் கொணர்ந்த நிதியெல்லா
மிந்து மருமா னகருள்ளார் யாரு மறிய யாவர்க்கு
முந்தை வேத முதல்வர்க்கும் புலவோர் தமக்கு முறைநல்கிச்
சந்த யாழி னிசைப்பாணர் தரும மனையான் வைகினான்.

(இ-ள்.) சந்தமமைந்த வீணையிசையில் வல்ல பாணர்கள்செய்த புண்ணியம் போன்ற பாணபத்திரர் வந்து, மதுராபுரீசனாகிய சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து கொண்டுவந்த பொருள்கள் எல்லாவற்றையும், சந்திரமரபில் வந்த வரகுணதேவபா,

ண்டியனது மதுரைப்பதியிலுள்ளவர் யாவருமறியு யாவருக்கும், முற்பட்ட வேதநூலு ணர்ந்தமுத்தற்குலத்தினராகிய வேதியருக்கும்,புலவர்களுக்கும், முறையே கொடுத்து மகிழ்வோடிருந்தனர். எ-று.

"யாருமறிய முறை நல்கி" என்றதால், உலகினர் தாம்பெற்ற பொருளைப் பிறர்க்கு உதவி உய்யும்படித் தமமே கொடுத்துக் காட்டினர் என்பது பெறப்பட்டது.

திருமுகங்கொடுத்தபடலம்
முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௲௧.

நாற்பத்துமூன்றாவது,

# பலகையிட்டபடலம்.

கோச்சகக்கலிப்பா.

கருந்துழாய் முகிலொருபாற் கலந்தவர்பத் திரற்குநிதி
திருந்துதா ருதியனிடைத் திருமுகந்தந் தளித்ததிது
வருந்தியா ழுவனிசைப்ப மழைதூங்கு நள்ளிரவி
லிருந்துபா டெனப்பலகை யிட்டதூஉ மினிப்பகர்வாம்.

(இ-ள்.) கரிய துளவமாலை யணிந்த மேகவண்ணராகிய திருமாலை ஒரு பாகத்திற்கொண்ட பெருமானார்,பாணபத்திரருக்குத் திருந்திய பனைமாலையணிந்த சேரமான் பெருமானாரிடத்திற் திருமுகங் கொடுத்தனுப்பித் திரவியங் கொடுத்தருளிய திருவிளையாடலிது. வீணையில் வல்ல பாணபத்திரர் மழை பொழியும் நடுராத்திரியில் வருத்தமுற்று இசைபாட, அச் சோமசுந்தரக்கடவுள் இருந்துபாடாயென்று பலகை தந்தருளிய திருவிளையாடலையும் இனி (யாம்) கூறுவாம். எ-று.

"கருந்துழாய் முகிலொருபாற் கலந்தவர்" என்றதில், ஒருபால் என்றதற்கு வலப்பாகமெனப் பொருள்கொண்டு விஷ்ணுசத்தியை வலப்பாகத் துடையர்எனப் பொருள் கொள்வதுமொன்று. இதனை,

கூர்மபுராணம்.

"வலப்புற மதனின் மேய வண்டுசேண் படுக்குங் கூந்தல்
உலப்பருங் காலா தீத வுருவமா யொளியா யொன்றாய்க்
கலப்பிலவ் வியத்தந் தோன்றுங் காரண மாகி யானு
நலத்தகு குணக்குன் றாகு நாரண னாகு மன்றே."—என்பதனானுணர்க.

அன்றியும், சிவபெருமான் சிருட்டியில் இச்சைகூர்ந்து அக்காலத்தில் பிரமனைத் தனது வலப்பக்கத்திலும் விண்டுவைத் தன திடப்பாகத்திலு மிருந்து பிறக்கச்செய்து, அவர்களால் சிருஷ்டியாதிகாரியங்களை யியற்றுவித்து, சர்வசங்காரகாலத்தில் அண்டாண்ட பிரமாண்டங்களையும் அழித்து, எஞ்சிநின்ற பெருந்தேவர்களாகிய இவ் விருவரையும் அவர் தோன்றியபடியே தமதிருபுறத்திலும் ஒடுக்கிக்கொள்வாராதலின் "ஒருபால்" என்றதற்கு வாமபாக மென்றும் பொருள்கூறக்கிடந்தது. இதனை,

"மைந்த நின்னையென் வலப்புறத் தளித்தன னறிய
பைந்து ழாய்மது வண்ணனை யெனதிடப் பாலில்
தந்த ளித்தன னீவிர்வெங் கரிமுகன் றழல்வேற்
கந்த னேனெனக் கருணையி னுச்சிமோந் துரைத்தான்"—எனவும்,

தக்ஷிணாங்கஸ்ய மே ப்ரஹ்மா ஹரிர் வாமாங்கஸம்பவ: ।
ஹ்ருதயாந்நீலகண்டஸ்து சிவஸ்ய சிவஸஞ்ஜ்ஞக: ।—எனவும் வருவனவ
ற்று னுணர்க. (க)

முன்புடைய நாயகனை முப்போதும் புகுந்திறைஞ்சி
யின்புறுமே ழிசைக்கிழவ னிருநிதிய மருளியபி
னன்புசிறந் தரையிரவு மடைந்துபணிந் தடல்விடையின்
பின்புறநின் றேழிசையும் பாடிவரும் பேறடைவான்.

(இ-ள்.) முன்பே தம்மை யாளாகவுடைய சோமசுந்தரக்கடவுளை (காலை உச்சி மாலையென்னும்) முக்காலங்களிலுஞ்சென்று பணிந்து மகிழ்ச்சிபொருந்தும் பாணபத்திரர் (சேரமான் பெருமானார்) கணக்கில்லாத பொருளைத் தந்தருளியபின் தலையன்பிற்பட்டு அர்த்த யாமத்திலுஞ் சென்று பணிந்து, வெற்றியையுடைய திருநந்தி நாயனார் பின்னே நின்று, (குரல் முதலிய) எழிசைகளையுந் தினந்தோறும் பாடிவரும் பயனை யடைவாராயினர். எ-று. (உ)

தொழுந்தகையன் பருந்தேவர் தொகுதிகளுந் தொழத்திங்கட்
கொழுந்தலைய நதியலையக் குனிக்கின்ற தனிக்கடவுள்
செழுந்தரளச் சிவிகையின்மேற் றேவிதிருப் பள்ளியறைக்
கெழுந்தருளும் போதுபணிந் தேத்துவா னோரிரவில்.

(இ-ள்.) யாவரும் பணியும் பெருந்தகைமையுடைய அடியார்களும், தேவர் கூட்டங்களும் வணங்கவும், இளஞ்சந்திரன் (ஒருபால்) அசையவும், கங்கை (ஒருபால்) அசையவும், வெள்ளியம்பலத்திலே திருநடனஞ் செய்தருளும் ஒப்பில்லாத பெருமானார் பருத்த முத்துக்களாலமைந்த சிவிகையின்பேரில் உமாதேவியார் திருப்பள்ளியறைக்கு எழுந்தருளுங் காலையில், ஓரிரவில் வணங்கித் துதிக்க. எ-று. (ங)

இன்னிசையாழ்ப் பெரும்பாண னெவ்விடையூ [illegible]
தன்னியம நெறியொழுக்கந் தவானென்ப துலகறிய
பொன்னியலுஞ் சடைமௌலிப் புராணர்திரு விளையாட்டா
லந்நிலையிற் கருங்கொண்மூ வார்த்தெழுந்த திசையெல்லாம்.

(இ-ள்.) இனிய இசையமைந்த யாழில் வல்ல பாணபத்திரர் எவ்வகைப் பட்ட இடையூறுவந்தாலும், தமது கடப்பாடாகிய ஒழுக்க நெறியினின்றுஞ் சிறிதுந் தவறு னென்பதை உலகினரறிய, பொன்போன்ற செவந்த சடாமகுடத்தை யுடைய சோமசுந்தரக்கடவுள் திருவிளையாடலினால் அந்தஇராப்போதில் திசையெல்லாம், சூற் கொண்ட மேகங்கள் இடித்தெழுந்தன. எ-று. (ச)

தடித்துநிரை புடைபரப்பித் தடமோதித் திசைமயங்கத்
துடித்தவிட வாயரவஞ் சோர்ந்துசுருண் டலையொதுங்க
விடித்துடுவின் கணம்புதைப்ப விருள்கான்று சலபதிமுன்
முடித்திடுவான் வரவழைத்த முகிலேழும் வளைந்ததென,

(இ-ள்.) மின்னல் வரிசைகளை யயலிற் பரப்பி எண்டிசையி லுள்ளோருந் தமொழி மயங்கவும், விட மமைந்த வாயையுடைய பாம்புகள் (உடல்) துடித்துச் சோர்ந்து பிலங்களிற் புகவும் இடியிடித்து, நட்சத்திரத் தொகுதிகள் புதைபட இருளைவீசி, வருணன் முன்பு மதுரையையழிக்க அனுப்பிய சத்த மேகங்களும் அம் மதுரையை வளைந்ததுபோலும் வளைந்தது. எ-று. (ரு)

கருங்கடலை விசும்பெடுத்துக் கவிழ்ப்பதென வெண்டாரை
நெருங்கிருளி னிருப்புக்கோ னிரைத்ததென நிறங்கருக
வொருங்குசோரிந் துள்ளுணரா ருள்ளம்போ லுட்புறம்பு
மருங்கொடுகீழ் மேலென்று தெரியாத மயங்கிருள்வாய்.

(இ-ள்.) ஆகாயமானது கரிய கடலை (தலைகீழாக) எடுத்துக் கவிழ்ப்பது போலவும், மிக்க இருளில் நாராசங்களை வரிசையாக வைத்ததுபோலவும், வெள்ளிய மழைத்தாரைகள் நிறந்திரிந்து தோன்றவும் ஒருசேர வருஷித்து, தம்மை யறியாதவர் மனம் இருண்டிருத்தல்போல உள்ளென்றும் புறமென்றும் அயலென்றும் கீழென்றும் மேலென்றும் பகுத்தற்கரிய இருண்ட இருட்பொழுதில். எ-று.

"உள்ளுணரா ருள்ளம்போல்" என்றது, இருளொடுகூடிய கண் இருண்மயமாய் நிற்றல்போல, பாசத்தோடுகூடிய ஆன்மா அப் பாசமயமாய் நிற்றலினெனக் கொள்க. (சு)

மாமாரி யிடைநனைந்து வருவானம் மாரிதனைப்
பூமாரி யெனநினைந்து திருக்கோயில் புகுந்தெய்திக்
காமாரி தனைப்பணிந்து கருணைமா ரியினனைந்து
தேமாரி பொழிவதெனத் தெள்விளியாழ் வாசிப்பான்.

(இ-ள்.) பெருந்தாரைகளால் விழும் மழையில் நனைந்துவரும் பாணபத்திரர் அந்த மழையை மலர்மழைபோலக் கருதி, திருக்கோயிலைச் சென்று சேர்ந்து, சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து, அவர் திருவருண்மழையால் நனைந்து, தேன்மழையைப் பொழிந்ததுபோலத் தெள்ளிய இசையமைந்த வீணைவாசிக்கத்தொடங்கினர்.

காமாரி - காமனைச் சங்கரித்த சிவபெருமான். (எ)

விடைக்கடவுள் பின்னின்று வீணையிடத் தோள்கிடத்திப்
புடைத்துநரம் பெறிந்துதடற் றொலிபோக்கிப் பொலங்கொன்றைச்
சடைக்கடவுள் செவிவழிபோ யருட்பைங்கூழ்த் தலையெடுப்பத்
தொடைத்தமிழி னிசைப்பாணிச் சுவையமுத மடைதிறந்து.

(இ-ள்.) திருநந்திநாயனுருக்குப் பின்னே நின்று, வீணையை யிடத்தோளிற் சேர்த்து, வீணையின் நரம்பைத் தாக்கித் தடவி, சரீரத்தொனி யெழுப்பி, பொன்னிறம் வாய்ந்த கொன்றைமாலையையணிந்த திருச்சடையையுடைய சோமசுந்தரக்கடவுளின் திருச்செவியாகிய கால்வழியேசென்று, திருவருளாகிய பயிரானது தலையெடுத்தோங்க, தமிழாற் றொடுத்த இசைப்பாடலாகிய சுவை கனிந்த அமுதமானது மடையெடுத்து. எ-று.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (அ)

நரம்புநனைந் திசைமழுங்க நனைந்துடலம் பனிப்பவிசை
வரம்பொழுகு விரன்மிறைத்து வலிவாங்க மயிர்சிலிர்ப்ப
நிரம்பியசே றடிபுதைப்ப நின்றுநிறை யன்பிசையா
யரும்புதல்போ லென்புருக்கு மமுதவிசை பாடுமால்.

(இ-ள்.) வீணைநரம்புகள் (மழையால்) நனைந்து இசைகுன்றவும், தமது சரீரம் (மழையால்) நனைந்து நடுங்கவும், இசையினெல்லை கடவாது செல்லும் விரல்கள் விறைத்து வலிவாங்கவும், மயிர் சிலிர்க்கவும், நிரம்பிய சேறு தமது காலைப் புதைக்கவும், (உடல்) கம்பியாதுநின்று, நிறைந்த அன்பே இசைவடிவாய்ப்பொங்கி மேலெழுதல்போல, எலும்பினையு முருக்கும் அமுதம்போலச் சுவைகனிந்த இசை பாடுவாராயினர். எ-று. (௯)

இடைமடக்காய் அறுசீரான் வந்த

ஒருபோதுகோச்சகம்.

மாதர் நகையாய் மதுரேச ரூண்பலிக்கெம் மனைவாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டி யென்சிந்தை கவர்ந்தார் போலுங்
காதன் முகத்தரும்பக் கையறவு தீரக் கலப்பேன் பாதி
பேதை யுருவா யிருந்தார் நாணி விழித்தாவி பிழைத்தேன் போலும்.

(இ-ள்.) அழகிய தந்தபந்திகளையுடைய தோழியே! மதுரைப்பதியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் உண்ணும் ஐயத்தின்பொருட்டு எமது இல்லில்வந்து புணர்ச்சிக்குறிப்பைத் தமது திருமுகத்திலே தோன்றுவித்து எனது மனத்தைக் கைக்கொண்டார்போலும். அக் காதற் குறிப்பு என் முகத்திலுந் தோன்றக் காமவாதை தீரக் கலக்கத்தொடங்கினேன். (தமது திருமேனியிற்) பாதி பெண்வடிவாயிருந்தனர். (அதுகண்டு) வெட்கமுற்று விழித்து உயிர் பிழைத்தேன். எ-று.

இச்செய்யுளைக் கனவுநிலை யென்னுந் துறைப்பொருண்மேல் வைத்துத் தலைவி கூற்றாகக் கூறினர். (௧௦)

ஒண்ணுதலாய் வெண்டலைகொண் டுண்பலிக்கு நம்மனையி னூடே கூடற்
கண்ணுதலா ருள்ளாளக் கானமிசைத் தென்னுள்ளங் கவர்ந்தார் போலுங்
கண்ணுதலார் பாடு மவிநயங்கண் டாகங் கலப்பேன் பாதி
பெண்ணுருவ மாயிருந்தார் வெள்கி விழித்தாவி பெற்றேன் போலும்.

(இ-ள்.) ஒள்ளிய நெற்றியையுடைய தோழியே! நான்மாடக்கூடலாகிய மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் தசையொழிந்த கபாலத்தையேந்தி உண்ணும் பலியின்பொருட்டு நமது இல்லின்கண்ணே உள்ளாளக்கீதம்பாடி என்மனத்தைக் கொள்ளைகொண்டார்போலும். நெற்றிக்கண்ணையுடைய அச் சோமசுந்தரக்கடவுள் பாடிய அவிநயத்தைக் கண்டு அவரது திருமார்பிற் கலக்கத்தொடங்கினேன். (தமது திருமேனியிற்) பாதி பெண்வடிவமாயிருந்தனர். (அதுகண்டு) வெட்கி விழித்து உயிர் பிழைத்தேன். எ-று. (௧௧)

ஐயரியுண் கண்ணாய் திருவால வாயுடையா னையங் கொள்வான்
மையனகை செய்தென் வனமுலையின் மேற்செங்கை வைத்தார் போலு
மையனகை செய்தென் வனமுலைமேற் கைவைப்ப மாழ்கிச் சோர்வேன்
றையலிடங் கண்டு நடுநடுங்கி விழித்தாவி தரித்தேன் போலும்.

(இ-ள்.) அழகிய அரிபரந்த கண்களையுடையபெண்ணே! திருவாலவாயென்னும் மதுராபுரியை யுடைய சோமசுந்தரக்கடவுள் பலி யேற்கும்பொருட்டு, காமக்குறிப் புணர்த்தும் புன்னகை செய்து எனது சந்தனக்கோலத்தை யுடைய தனத்தின்மேல் கை வைக்க, மயங்கிச் சோரும் யான் உமாதேவியார் இடப்பாகத்திலிருக்கக் கண்டு நடுக்குற்று விழித்து உயிர் பிழைத்தேன். எ-று. (௧௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பாடுவா ரிருவர்க் கன்று பரிசிலாக் கொடுத்த சங்கத்
தோடுவார் செவியி லூட்டுந் தொண்டுகண் டிதன்மே னின்று
பாடுவா யுனக்கே யிந்தப் பலகையென் றுழ்ந்த வன்பி
னாடுவார் விசும்பிற் கூறி நகைமணிப் பலகை யிட்டார்.

(இ-ள்.) பாடுந் தும்புருநாரதரிருவருக்கும் அக்காலத்தில் பரிசாகக் கொடுத்தருளிய சங்கத்தோட்டணித்த நீண்ட திருச்செவியிலூட்டும் இசைத்தொண்டை யுணர்ந்து, இந்தப் பலகையின்மேலேநின்று பாடுவாய். உனக்கே இந்தப்பலகை யுரியதென்று, மெய்யன்பினை நாடியருளும் சோமசுந்தரக்கடவுள் ஆகாயவாணியாற் கூறி, விளங்கும் இரத்தினமழுத்திய பலகையொன்றினைக் கொடுத்தருளினர். எ-று.

"பாடுவா ரிருவர்க் கன்று பரிசிலாக் கொடுத்த சங்கத் தோடு" என்றதை திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் "தோடுடையசெவியன்" என முதற்கண் விதந்ததானும், நக்கீரதேவர் திருவெழுகூற்றிருக்கையில் "இரண்டுநின்குழையேயொன்று நின் னேறே" எனக் கூறியதனானு முணர்க. (௩௩)

இறையரு ளாணை யஞ்சி யிட்டபொற் பலகை யேறி
நறைகெழு மதுர கீதம் பாடிநான் மறைகள் சூடு
மறைகழ லகத்துட் கொண்டு பலகையு மங்கை கொண்டு
மறைவழி யாழ்வல் லோன்றன் மனைவயிற் செல்லு மெல்லை.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுள் அருளிய கட்டளையை யஞ்சி (அவர்) கொடுத்தருளிய பொற்பலகையின்மீதேறி, தேனினினிமைபோன்ற இனிய கீதத்தைப் பாடி, நான்கு வேதங்களுஞ் சூடிய ஒலிக்கும் வீரக்கழலணிந்த திருவடியைத் தமது மனத்திற்கொண்டு, (இறைவர்கொடுத்தருளிய) அப்பலகையையுந் தமது கையிலேந்தி, இசைநூல்வழி யாழ் வாசித்தலில் வல்ல பாணபத்திரர் தமது வீட்டிற்குச் செல்லுங் காலையில். எ-று. (௩௪)

மின்னுமா மேக நீங்கி விசும்புவாய் விளங்கித் தென்றறன்
மன்னுமா மலையின் மேய மாதவன் குடித்த வைகற்
பொன்னுமா மணியு முத்தும் புலப்படக் கிடந்த வேலை
யென்னமீன் விளங்கித் தோன்ற வேகியில் புகுந்தா னிப்பால்.

(இ-ள்.) தென்றற்காற்று நிலைபெற்ற பெரிய பொதியாசலத்திற் பொருந்திய பெருந்தவத்தையுடைய அகத்தியமுனிவர் ஆசமனீயஞ்செய்தகாலத்தில், பொன்னும் சிறந்த இரத்தினங்களும் முத்தங்களும் கண்ணுக்குப் புலப்பட இருந்த கடல்போல, மின்னல் வீசும் பெரிய மேகங்கள் நீங்குதலால் ஆகாயத்தின்வாய் விளங்க நட்சத்திரங்கள் விளங்கித்தோன்ற, (பாணபத்திரர் வழிதெரிந்து) சென்று தமதுவீட்டிற் சேர்ந்தார். இப்புறம். எ-று.

விசும்புவாய் விளங்கி யென்றதில் விளங்கி செயவெனெச்சத்திரிபு. விசும்பு கடலாகவும், நக்ஷத்திரங்கள் பொன்னும் இரத்தினங்களும் முத்தங்களுமாகவும் உவமிக்கப்பட்டன. இஃது பண்புவமையணி. (௩௫)

பாயிருட் படலங் கீண்டு பரிதிகண் விழித்துச் செங்கை
யாயிரம் பரப்பி முந்நீ ர்லைகட னீந்து மெல்லை
மாயிரு ஞாலங் காக்கும் வரகுண னிரவு தங்க
ணாயகன் பாடற் கீந்த நல்லருட் பரிசில் கேட்டான்.

(இ-ள்.) சூரியன் கண்விழித்து, பரவிய இருட்டொகுதியைக்கிழித்து, செவந்த ஆயிரங்கரங்களைப் பரப்பி, முத்தொழிற்குணங்களையுடைய அலைக்குங் கடலை நீந்திச் செல்லுகையில், பெரிய நிலவுலகைக் காக்கும் வரகுணதேவபாண்டியன் (அன்று) இரவில், தங்கள் தெய்வமாகிய சோமசுந்தரக்கடவுள் பாணபத்திரர் பாடலுக்குக் கொடுத்தருளிய அருட்கொடையைக் கேள்வியுற்றனன். எ-று. (க௬)

இன்னிசைக் கரசை யிட்ட பலகைமீ திருத்தி மன்னர்
மன்னவ னிவனே யெங்கண் மதுரைநா யகனென் றுன்னி
மின்னிவர் மணிப்பூ ணல்கி விளைநில மிகவு நல்கி
நன்னிதி வெறுப்ப நல்கி வரிசையா நடத்திவந்தான்.

(இ-ள்.) இனிய இசையில்வல்ல பாணபத்திரரை, (பெருமான்) கொடுத்தருளிய (அந்தப் பொற்) பலகையின்மே லிருக்கச்செய்து, மன்னர்மன்னனாகிய வரகுணதேவபாண்டியன் இவரே எங்கள்(குலதெய்வமாகிய) சோமசுந்தரக்கடவுளென்று கருதி, ஒளிபரந்த இரத்தினாபரணங்களைக் கொடுத்து, விளைவையுடைய கழனிகளையு மிகவுங் கொடுத்து, நல்ல செல்வத்தையும் அவாவடங்கக் கொடுத்து (அதுமுதல் இவ்வாறே) வரிசையாகக் கொடுத்து நடத்திவந்தனன். எ-று. (கஎ)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

இறைவிருள் வரிசை பெற்றபத் திரனு மேறுயர்த் தவனைநாற் போது, முறையினால் வழிபட் டொழுகுவா னாக முடிகெழு வரகுண வேந்து, மறைமுத லடிகள் வந்துவந் தனையால் வழுத்துவான் சில்பகல் கழிய, நிறைபெருஞ் சுடரோன் திருவுரு வடைந்து நெறியினாற் சிவபுர மடைந்தான்.

(இ-ள்.) வரகுணதேவபாண்டியன் கொடுத்த வரிசைகளைப் பெற்ற பாணபத்திரரும், இடபத்தைக் கொடியாகவுயர்த்திய சோமசுந்தரக்கடவுளை நான்குகாலங்களிலும் முறைப்படி வழிபாடுசெய்து நடந்துவர, கிரீடஞ் சூடிய வரகுணபாண்டியனும் வேதமுதல்வராகிய சோமசுந்தரக்கடவுளை வலஞ்செய்து வந்தனையோடு துதிப்பவன், சிலநாள் கழிய, எங்கும் நிறைந்த பெருஞ்சுடர் வடிவாயுள்ள சிவபெருமானுருவுடைய சாரூபம்பெற்று, திருவருள்வழித்தாகச் சிவபுரத்தையடைந்தனன். எ-று.

நாற்போது—காலை - நண்பகல் - மாலை - அர்த்தயாமம் எனப்படும். (கஅ)

பலகையிட்டபடலம்
முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் உகசக.

---

நாற்பத்துநான்காவது,

## இசைவாதுவென்ற படலம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கூடலம் பதியி லாடக மேருக் கொடிய விற்குரிசி லடியவ னுக்குப், பாட லின்பரிசி லாகிய செம்பொற் பலகை யிட்டபடி பாடின மன்னன், வீடரும்பொருவில் கற்புடை யாளோர் விறலி யைப்பரம னிறையருள் பற்றி, மாட கஞ்செறியும் யாழ்வழி பாடி வாது வென்றவ ளாறு மிசைப்பாம்.

(இ-ள்.) மதுரைத் திருநகரத்தில், பொன்மேருவாகிய (வெற்றிக்) கொடி கட்டிய வில்லையேந்திய சோமசுந்தரக்கடவுள் பாணபத்திரருக்கு (அவர் பாடிய) பாடலுக்குப் பரிசாகச்செம்பொன்னாற்செய்த பலகையைத்தந்தருளிய திருவிளையாடலைக் கூறினோம்; அப்பாணபத்திரருடைய அழியாத கற்பினையுடைய மனைவியார் சிவபெருமானார் திருவருளைப்பற்றி, முறுக்காணிகள் பொருந்திய வீணையின் வழியே பாடி, ஒருபாடினியை வாதில்வென்ற திருவிளையாடலையும் (இனிக்) கூறுவாம். எ-று. (க)

வரகு ணன்கதி யடைந்தபி னம்பொன் மௌலி சூடிய விராச விராசப், புரவ லன்புவி மடந்தையை வேட்டுப் புயந்த ழீஇக்கொடு நயந்தரு நாளிற், பரவு மன்பனைத் புரந்தொழு கந்தப் பஞ்ச வற்குரிய ரஞ்சன வுண்கண், மரபின் வந்தமட வார்பல ரேனை மையல் செய்யுமட வார்பலர் மாதோ.

(இ-ள்.) வரகுணதேவபாண்டியன் சிவகதியடைந்தபின்னர்,அழகிய பொற்கிரீடமணிந்த இராசராசபாண்டியன் பூதேவியை மணந்து புயத்தில் தழுவி (குடிகளுக்கு) இன்பந்தந்து வருங்காலயில், பரவிய குடிகளைப் பாதுகாத்து நடந்தொழுகும் அப்பாண்டியனுக்கு உரிய மாதர்கள் தனது மரபின்வந்த மை தீட்டிய கண்களையுடைய பெண்கள் பலர். அவரல்லாத மயக்கஞ் செய்யுங் காமக்கிழத்தியர்பலர். எ-று.

அன்ன போகமட வாரு ளொருத்தி யரச னுக்கமுது மாவியு மாகு, மின்ன னுண்மதுர கீத மிசைக்கும் விஞ்சை யின்றுறைவ லாளவ ளுக்கும், பன்ன காபரண னின்னிசை பாடும் பத்தி ரன்பொருவில் கற்புடை யாட்கு, மன்னு கீதவினை யாலிகன் மூள வழுதி காதன்மட மாது பொருளாய்.

(இ-ள்.) அந்தக் காமக்கிழத்தியருளொருத்தி இராசராசபாண்டியனுக்கு உணவுமுயிருமாகிய மின்னல் போன்றவள். இனிய இசைபாடுங் கல்வியின் துறையில் வல்லவள். அக்காமக்கிழத்திக்கும் சர்ப்பாபரணமணிந்த சிவபெருமானார் திருச்சந்நிதியில் இன்னிசைபாடும் பாணபத்திரருடைய ஒப்பில்லாத கற்புவாய்ந்த மனைக்கிழத்திக்கும், நிலைபெற்ற கீதத்தொழிலால் (ஒருவரோடொருவர்) பகையுண்டாக, அப்பாண்டியன் காமக்கிழத்தி கோபங்கொண்டு. எ-று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். (உ)

பாடி னிக்கெதிரோர் பாடினி தன்னைப் பாட விட்டிவள் படைத்த செருக்கை, யீட ழிப்பலென வெண்ணியெழீஇத்தன் னிறைமகற்கஃ திசைத்துநு மந்தத், தோடி றப்பொரு கயற்கணினாடான் சொன்ன வாறொழுகு மன்னவர் மன்ன, னாடி யத்தகைய விறலியை யீழ நாட்டி னும்வரவ ழைத்து விடுத்தான்.

(இ-ள்.) பாணபத்திரன் மனைவிக்கெதிரோ ஒரு பாடினியைப்பாடவிடுத்து, இப்பாணபத்திரன் மனைவி படைத்த கர்வத்தை அடியோடழிப்பேனென்று கருதியெழுந்து, தன் தலைவனாகிய பாண்டியனுக்கு அதனைக் கூற, தோடுபுறங் காட்டப் போர்செய்யுஞ் சேற்கெண்டைபோலுங் கண்களையுடைய அந்தக் காமக்கிழத்தி சொன்னவகையே (அவள்மீதுள்ள அன்பினால்) நடக்கும் இராசராசபாண்டியன் யோசித்துவெல்லும் அத்தகைமையுடையபாடினியை ஈழநாட்டினின்றும்வரவழைத்தனன்.

பந்த யாழ்முதுகு தைவர விட்டுப் பாட லாயமிரு பக்கமு மொய்ப்ப, வந்த பாடினி மடந்தையு மன்னர் மன்ன னைத்தொழுதொர் கின்னர மாதிற், சந்த வேழிசை மிழற்றின ணின்று டன்னை நோக்கியொரு மின்னிடை யாண்மேற், சிந்தை போக்கிவரு தீப்பழி நோக்காத், தென்ன ருக்கரச னின்னது செப்பும்.

(இ-ள்.) பாடும் தோழிக ளிருபக்கலிலுஞ் சூழ்ந்துவர, கட்டமைந்த வீணையானது முதுகைத் தடவும்படி தொங்கவிட்டு, (மரக்கலத்தினின்றிறங்கி) வந்த பாடினியும் இராசராசபாண்டியனைப் பணிந்து, ஒரு கின்னரப் பெண் போலப் பண்ணால் அமைந்த ஏழிசைகளையும் பாடிநின்ற ஈழநாட்டுப் பாடினியை நோக்கி, ஒரு காமக்கிழத்திமேல் தன் மனத்தைச்செலுத்தி அதனால் வருங் கொடும்பழியை நோக்காத பாண்டியர்க்குள் வீரம் வாய்ந்த இராசராசபாண்டியன் இவ்வாறு கூறுகின்றான். எ-று. (ரு)

பத்தி ரன்மனைவி தன்னையெ முன்னர்ப் பாடு தற்கழைய தற்கவ ளாற்று, துத்த ரஞ்சொலினும் யாமவள் சார்பா யுனைவி லக்கினும்வி டாதுதொடர்ந்தே, சித்த நாணமுற வஞ்சின மிட்டுச் செல்ல னில்லெனவ ளைந்துகொளென்னு, வெய்த்த நுண்ணிடையி னாளை யிருக்கைக் கேகி நாளைவரு கென்று விடுத்தான்.

(இ-ள்.) பாணபத்திரருடைய மனைவியை எமது சமுகத்தில் (இசை) பாடுதற்கு அழைப்பாய்: அவள் (உன்னுடன் பாட முடியாமல்) போக்குச்சொன்னபோதிலும், யாம் அவள்பக்ஷமாக நின்று உன்னைத்தடுத்தாலும் நீவிடாமற் பின்றொடர்ந்து, அவள் மனத்தில் நாணமீதூரச் சபதங்கூறி, போகாதே; நில் எனத்தடுப்பாய் என்று, இளைத்த நுண்ணிய இடையை யுடைய ஈழநாட்டுப்பாடினியை (இன்றுனக்குவிடுத்த) விடுதிக்குச் செல்க ; நாளைவருகவென விடைகொடுத்தனுப்பினன். எ-று. (சு)

கலிநிலைத்துறை.

பின்ன ரின்னிசைப் பத்திரன் பெருந்தகை விறலி
தன்னை யங்கழைத் துளத்தொன் றுபுறத்தொன்று சாற்று
மென்னொ டின்னிசை பாடுவா ருளர்கொலோ விங்கென்
றுன்னி வந்திருக் கின்றன ளிசைவலா ளொருத்தி.

(இ-ள்.) இனிய இசைபாடுதலில் வல்ல பாணபத்திரரது கற்பு பொருந்திய மனைவியைப் பின்னர் (தனியே) வரவழைத்து,உள்ளத்திலொன்றும் புறத்திலொன்றுமாகக் கூறுகின்றான்—இச்சபையில் என்னுடன் இசைபாடுதலில் வல்லவர் (ஒருவரேனும்) உளரோவென்று, இசைநூலில் வல்லபெண்ணொருத்தி நினைத்து (மமதையுடன்) வந்திருக்கின்றனள். எ-று. (எ)

ஆட மைத்தடந் தோளினா யவளொடுங் கூடப்
பாட வல்லையோ பகரெனப் பாடினி பகர்வாள்
கோட ருந்தகைக் கற்புமிக் கூடலெம் பெருமான்
வீட ருங்கரு ணையுமெனக் கிருக்கையால் வேந்தே.

(இ-ள்.) அசைகின்ற மூங்கில் போன்ற பெரிய தோளினையுடையாய்! அப்பாடினியுடன் கூடநின்று நீ பாடவல்லையோ? சொல்கவென வினவ, பாணபத்திரர் மனைவியார் கூறுகின்றனர் ; அரசனே! கோணுதலில்லாத அருந்தகைமையுடைய கற்பும் இம்மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் அழிவில்லாத கிருபையும் எனக்குக் கூடியிருத்தலால். எ-று. (அ)

பாடி வெல்வமே யன்றிநான் பரிபவ முழந்து
வாடு வேனலே னென்றுனா வழங்கலு மதுக்கா
லேடு வார்குழ லவளையு மிருக்கையுய்த் திருந்தா
னீடு வார்திரைப் பொருநையந் தண்டுறை நிருபன்.

(இ-ள்.) நான் பாடி வெற்றிகொள்வதேயன்றித் (தோல்வியால்) துன்புற்று வாட்டமுறேன் எனக் கூற, தேன் சிந்தும் மலரிதழ்கள் பொருந்திய கூந்தலையுடைய பாணபத்திரர் மனைவியாரையும் அவர் வீட்டிற்குச்செலுத்தி, நீடிய பெரிய அலைகளையுடைய தாமிரபர்ணியின் அழகிய தண்ணிய துறையையுடைய பாண்டியனிருந்தனன். எ-று. (க)

மற்றை வைக்லவ் விருவரைப் பஞ்சவன் மதுரைக்
கொற்ற வன்றன தவையிடை யழைத்துநேர் கூட்டிக்
கற்ற வேழிசை கேட்குமுன் கலத்தினும் போந்த
வெற்றி வேன்மதர் நெடுங்கணாள் விறலியை வைதாள்.

(இ-ள்.) மறுநாள், அவ்விரண்டு பாடினிகளையும் மதுரைக்கரசனாகிய பாண்டியன் தனது சபையில் வருவித்து, நேரிற் சந்திப்பித்து அவர்கள் கற்ற (குரல் முதலிய) ஏழிசைகளையுங் கேட்பதற்குமுன், மரக்கலத்தினின்றும் வந்த வெற்றிபொருந்திய வேல் போன்ற மதர்த்த நெடிய கண்களையுடைய யாழ்ப்பாணப் பாடினி பாணபத்திரர் மனைவியாரை வைதனள். எ-று.

எழிசையாவன : குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி-தாரம். இவற்றுள் மிடற்றாற் குரல், நாவினாற்றுத்தம், அண்ணத்தாற் கைக்கிளை, சிரத்தாலுழை, நெற்றியாலிளி, நெஞ்சால் விளரி, மூக்காற்றாரமாகத் தனித்தனி பிறக்கும். இவையே எழ்சுரமென்றும் வீணையி லேழ்நரம்பென்றும் கூறப்படும். இவற்றிற் கோசையுவமை மயில் இடபம் ஆடு கொக்கு குயில் குதிரை யானை. சுவையுவமை பால் தேன் கிழான் நெய் எலம் வாழை மாதுளங் கனி. வாசனையுவமை மௌவல் முல்லை கடம்பு வஞ்சி நெய்தல் பொன்னாவிரை புன்னை. அக்கரம் ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஐஇ ஓஒ ஔஉ. மாத்திரை நான்குகுரல், நான்குதுத்தம், இரண்டுகைக்கிளை, மூன்றுஉழை, நான்கு இளி, மூன்றுவிளரி, இரண்டு தாரம். இவற்றாலெழுபாலை பிறக்கும் அவையாவன். குரலே குரலாயிற் செம்பாலை. துத்தமே குரலாயிற் படுமலைப்பாலை. கைக்கிளையே குரலாயிற் செல்வழிப்பாலை. உழையே குரலாயின் அரும்பாலை இளியே குரலாயிற் கொடிப்பாலை. விளரியே குரலாயின் விளரிப்பாலை. தாரமே குரலாயின் மேற்செம்பாலை. இவற்றுட் செம்பாலைக்குக் கொடிப்பாலை வலிது, கொடிப்பாலைக்கு விளரிப்பாலையும் மேற்செம்பாலையும் வலிது. அன்றியுந் தாரத்துள் உழையும், உழையுட் குரலும், குரலுள் இளியும், இளியுள் துத்தமும், துத்தத்துள் விளரியும், விளரியுள் கைக்கிளையும் பிறப்பதுதகுதி. இவற்றிற்கிறைவர் விச்சுவாமித்திரன்-ஜமதக்கினி-சந்திரன்-சூரியன் - கௌதமன் - காசிபன் - ஈசன். இவற்றிற்குயிர் ஈசன் எனப்படும். (க0)

குற்ற மெத்தனை யெத்தனை குணங்கள்யாழ்க் கோலுக்
குற்ற தெய்வமே திசைப்பதெவ் வுயிருடம் புயிர்மெய்
பெற்ற வோசையெவ் வளவவைக் குத்தரம் பேசி
மற்றெ னோடுபா டில்லையேல் வசையுனக் கென்றாள்.

(இ-ள்.) வீணாதண்டத்திற்குக் குற்றங்கள் எத்தனை? குணங்கள் எத்தனை? பொருந்தியதெய்வங்கள் யாவை? எந்த வுயிரொழுத்து எந்த மெய்யெழுத்து எந்த உயிர்மெய்யெழுத்து இசைப்பது? (அவைகட்கு) பொருந்திய ஒலி யெவ்வளவின? அவற்றிற்கு விடை (முதலிற்) கூறி, பிறகு என்னுடன் பாடுக. இல்லையாயின், உனக்குக் குற்றம் விளையு மென்றனள். எ-று.

குற்றங்கள் செம்பகை ஆர்ப்பு கூடம் அதிர்வு. இவை பிறத்தற்குரிய நீரில் நின்றழுகுதலும், மெல்குதலும், வேதலும், தக்க விடத்திற் பிறவார்தலும், இடிவீழ்தலும் நோயுறலுமான மரங்கள் - இதனை,

"நீரிலே நிற்ற லழுகுதல் வேத னிலமயக்கும்
பாரிலே நிற்ற லிடிவீழ்தல் நோய்மரப் பாற்படல்கோ
ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வு நிற்றல்
சேரினேர் பண்க ணிறைமயக் கப்படுஞ் சிற்றிடையே"—என்பதனானறிக. மேற்கூறிய செம்பகைபாதி குற்றங்களை,

**பஞ்சபாரதீயம்.**

"இன்னிசை வழிய தன்றி யிசைத்தல்செம் பகைய தாகும்
சொன்னமாத் திரையி னேங்க விசைத்திடுஞ் சுருதி யார்ப்பே
மன்னிய விசைவ ராது மழுங்குதல் கூட மாகும்
நன்னுதால் சிதற வுந்த லதிர்வென நாட்டி னோரே."—என்றும்,

**சீவகசிந்தாமணி உதாரணச் சூத்திரம்.**

செம்பகை யென்பது பண்ணோ டுளரா
வின்பமி லோசை யென்மனார் புலவர்.
ஆர்ப்பெனப் படுவ தளவிறந் திசைக்கும்.
கூட மென்பது குறிவுற விளம்பின்
வாய்வதின் வாராது மழுங்கியிசைப் பதுவே.
அதிர்வெனப் படுவ திழுமென லின்றிச்
சிதறி யுரைக்குந ருச்சரிப் பிசையே."— என்றும், கூறியுள்ளனவற்றானுணர்க.

இனி குணங்கள் என்றது செம்பகையாதி குற்றங்களின்மையாகிய குணங்கள். அவை, கொன்றை கருங்காலி முருக்கு குமிழ் தணக்கென்னும் மரங்களுள்ளே நால்வகைக் காற்றும் மயங்கா நிலத்தில் வளர்ந்து இளமையும் நெடும்பிராயமுமின்றி நடுத்தரமாகிய மரத்தினை யரிந்தெடுத்து விதிப்படி செய்த வீணை தண்டத்தால் உண்டாகும். இதனை,

"சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு
நல்ல குமிழுந் தணக்குடனே - மெல்லியலா
யுத்தம மான மரங்க ளிவையென்றார்
வித்தக யாழோர் விதி.

தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கு
முளதா யொருங்கூன மின்றி - யளவு
முதிரா திளகாது மூன்றாங்கூ றாய
வதுவாகில் வீணைதண் டாம்."—என்பதனானறிக.

தெய்வம் மேற்செய்யுளிற் காட்டப்பட்டன. உயிரும் உயிர்மெய்யும் பன்னிரு மாத்திரையீறாகவும் மெய் பதினொருமாத்திரையீறாகவும் இசைக்கும். இவற்றை யெல்லாம் இசைநூலுட் பரக்கக்காண்க. ஈண்டு விரிவு கருதி விடுத்தாம்.

தெய்வம் பொருளா லுயர்திணையேனும் சொல்லாலஃறிணை யாதல் பற்றி யாவென அஃறிணைப் பயனிலையான்முடித்தார். (கக)

இருமை யும்பெறு கற்பினு ளியம்புவாள் கலத்தின்
வருமை ரும்பெறற் கல்வியும் வாதின்மே லூக்கப்
பெருமை யும்பலர் விரும்புறு பெண்மையின் செருக்குந்
திருமை கன்சவை யறியவாய் திறக்கவேண் டாவோ.

(இ-ள். இகத்தையும் பரத்தையும் பெறுதற்குரிய கற்பினையுடைய பாண பத்திரர் மனைவியார்கூறுகின்றனர்—மரக்கலத்தினின்றுவந்த பெறுதற்கரிய கல்வியையும், வாதின்மேற்சென்ற ஊக்கப்பெருமையையும், பலரும் அவாவும் உனது பெண்ணலத்தின் சிறப்பையும் இப்பாண்டியன் சபையிலுள்ளோர் அறியும்படி வாய்திறக்கவேண்டாமோ?' எ-று. (கஉ)

நெய்யுண் பூங்குழன் மடவரா ளின்னொடும் வாது
செய்யும் பூசலுக் கெதிரலாற் றீயவாய் திறந்து
வையும் பூசலுக் கெதிரலேன் மானம்விற் றுன்போ
லுய்யும் பாவைய ரேயதற் கெதிரென வுரைத்தாள்.

(இ-ள்.) நெய்பூசிய மலரையணிந்த அளகபாரத்தையுடைய ஈழநாட்டுப் பாடினியே! உன்னோடும் இசைவாது செய்யும் போருக்கு நான் எதிரேயல்லாமல், கொடிய வாயைத்திறந்து கொடுஞ்சொற்களைப் பேசும்போருக்கு நான்எதிரலேன்: உன்னைப்போல மானத்தைவிற்று உயிர்பிழைக்கும் விலைமாதர்களே அக்கொடுஞ்சொற்களுக் கெதிராவார்கள் என்று கூறினர். எ-று. (கந)

வென்றி மீனவன் விலக்குவான் போலெதிர் விலக்கித்
துன்று தார்குழன் மடந்தைமீர் பாடுமின் றோற்றோர்
வென்ற மாதரார்க் கடிமையாய் விடுவதே சபத
மென்று மானமுண் டாக்கலு மீழநாட் டரிவை.

(இ-ள்.) வெற்றியையுடைய பாண்டியன் (இருவரையும்) விலக்குவானைப் போல எதிர்நின்று விலக்கி, நெருங்கிய மாலையை யணிந்த கூந்தலையுடைய மங்கையரே! பாடுங்கள். தோல்வியுற்றவர் வென்றவருக்கு அடிமையாய் விடுதலே யுங்கட்குள் சபதமென இருவருக்கும் மானமுண்டாக்கலும், ஈழநாட்டினின்றும் போந்தபாடினி.

முந்தி யாழிடந் தழீஇக்குரல் வழிமுகிழ் விரல்போ
யுந்த வேபெரு மிதநகை யுட்கிடந் தரும்பச்
சந்த வேழிசை யிறைமகன் றாழ்செவிக் கன்பு
வந்த காதலாண் மழலையி னமுதென வார்த்தாள்.

(இ-ள்.) தான் முற்பட்டு வீணையை யிடத்தோளிற்றழுவி, குரல் என்னும் நரம்பின் வழியே முகிழ்த்த விரல்சென்று தாக்கவும்,பெருமிதப்புன்னகையானது உள்ளிருந்து முகிழ்ப்பவும், பண்ணுகவமைந்த ஏழிசைகளும் இராசராசபாண்டியனுடைய தாழ் செவியில் அவனன்புகைவந்த காமக்கிழத்தியின் மழலைச் சொல்லாகிய இனிய அமுதம்போல வார்த்தனள். எ-று. (கசு)

வீணை வாங்கினண் மாடக முறுக்கினள் விசித்து
வாண ரம்பெறிந் திருசெவி மடுத்தன ரியக்கர்
நாண மெல்விர னடைவழி நாவினை யமுதம்
பாணர் கோமகன் விறலியும் பலர்செவி நிறைத்தாள்.

(இ-ள்.) வீணையை எடுத்து மாடகத்தை முறுக்கிக் கட்டமைத்து, ஒள்ளிய நரம்புகளைத் தடவி, தமது இருசெவியாலுமடுத்து யக்ஷர்களும் நாண மீதூர, மெல்லிய

விரல்கள் அந்நரம்புகளில் நடத்தலின்வழியே தமது நாவால் விளக்கும் இசையமுதத்தை, பாணபத்திரர் மனைவியாரும் பலர் செவிக்கும் ஊட்டினர். எ-று. (கசு)

அரச னுட்கிடை யறிந்தில ரவைக்களத் துள்ளார்
விரைசெய் வார்குழற் பாடினி பாடலை வியந்தார்
புரசை மானிரைப் பூழிய னிலங்கையிற் போந்த
வரைசெய் குங்குமக் கொங்கையாள் பாடலை மகிழ்ந்தான்.

(இ-ள்.) சபையிலுள்ளோர் அரசனுடைய உட்கருத்தை யுணராதவர்களாய் வாசங்கமழுங் கூந்தலையுடைய பாணபத்திரர் மனைவியின்பாடலை மெச்சினர்கள். கழுத்திற் கயிறு பூண்ட யானைக்கூட்டங்களையுடைய பாண்டியன் இலங்கையினின்றும் வந்த குங்குமக்குழம்பு பூசிய குன்றுபோன்ற குசங்களையுடைய ஈழப்பாடினியின் பாடலை மெச்சினன். எ-று.

புரசை - புரைசை; "அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்" என்றபடி மொழியிடைப்போலி. (சஎ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தென்னவ னுட்கோ ளெல்லை தெரிந்தன ரவையத் துள்ளா
ரன்னவன் புகழ்ந்த வாறே புகழ்ந்தன ரவளைத் தானே
முன்னவ னருளைப் பெற்று மும்மையுந் துறந்தோ ரேனு
மன்னவன் சொன்ன வாறே சொல்வது வழக்கா றன்றோ.

(இ-ள்.) சபைக்களத்திலுள்ளவர்கள் பாண்டியனது உள்ளக்கருத்தையுணர்ந்து அந்த ஈழப்பாடினியையே பாண்டியன் புகழ்ந்தவண்ணமே புகழ்ந்தார்கள். சிவபெருமான்றிருவருளைப்பெற்று (மண் பெண் பொன் என்னும் ஈஷணத்திரவியங்கள்) மூன்றனையுந்துறந்தவராயினும், அரசன் சொல்லியவழியே சொல்லுதல் வழக்கல்லவா?

பொன்றளி ரனையாண் மையற் புதுமது நுகர்ந்து தீது
நன்றறி யாத கன்னி நாடவ னவையை நோக்கி
யின்றொரு நாளிற் றேரத் தக்கதோ விதுவென் றந்த
வென்றடு வேற்க ணாரைப் போமென விடுத்தான் மன்னோ.

(இ-ள்.) பொன் தளிர்த்தாலொத்த மேனியையுடைய காமக்கிழத்தி தருங் காமமாகிய் புதிய தேனைப் பருகி, நன்மை தீமைகளைப் பகுத்தறியாத பாண்டியன், சபையிலுள்ளோரைப்பார்த்து, இவ்விசைத்திறத்தை யிப்பொழுதே ஒரு நாளி லளந்தறியக்கூடுமோ? என்று கூறி, அந்த இரு பாடினிகளையும் போகக்கடவீரென விடைகொடுத்தனன். எ-று.

வென்றடுவேற்கணார் - பகைவரை வெற்றிகொள்ளும் வேற்படைபோன்ற கண்களையுடையவர்கள். (சஅ)

மருவிய வாய மேத்த விருந்திறண் மனைவந் தெய்திப்
புரவலன் றனது பாட்டைப் புகழ்ந்ததே புகழ்ந்த தாகப்
பெருமிதந் தலைக்கொண் டானாப் பெருங்களிப் படைந்து மஞ்சத்
திருமல ரணைமே லார்வந் திளைத்தினி திருந்தா ளிப்பால்.

(இ-ள்.) தன்னைச் சூழ்ந்த பெண்கள் கூட்டம் வாழ்த்த ஈழநாட்டிலிருந்து வந்த பாடினி தன் விடுதியில் வந்தடைந்து, பாண்டியன் தனது பாட்டைப் புகழ்ந்ததே புகழ்ச்சியாகக்கொண்டு இறுமாப்பு மேற்கொண்டு நீங்காத பெருஞ்செருக்கடை

ந்து மஞ்சத்திற்பரப்பிய புஷ்பசயனத்தின்மேல் மகிழ்ச்சியுடன் இனிதாகவிருந்தனன் இப்பால். எ-று.

புரவலன் றனதுபாட்டைப் புகழ்ந்ததே புகழ்ந்ததாக வென்றது, பின் வருவது தெரியாமையின், இகழ்ச்சி புலப்படுத்தக் கூறினர். (உ0)

வணங்குறு மருங்கிற் கற்பின் மடவரன் மதங்கி தானு
மணங்கிறை கொண்ட நெஞ்ச ளங்கயற் கண்ணி பாகக்
குணங்குறி கடந்த சோதி குரைகழ லடிக்கீ ழெய்தி
யுணங்கினள் கலுழ்கண் ணீர ளொதுங்கிநின் றிதனைச் சொன்னாள்.

(இ-ள்.) வளையுமிடையையும் கற்பினையுமுடைய பாணபத்திரர் மனைவியாரும், துன்பங் குடிகொண்ட மனமுடையவளாய், அங்கயற்கண்ணியாரைவாமபாகத்திலுடையவராய்க் குணங்குறிகளைக்கடந்த பேரொளியாகியசோமசுந்தரக்கடவுளுடைய சத்திக்கின்ற வீரக்கழலணிந்த திருவடியையடைந்து, புலர்ந்து சிந்துங்கண்ணீருடையராய், ஒருபாலொதுங்கிநின்று இதனைக் கூறுகின்றார். எ-று. (உக)

தென்னவ னாகி வையஞ் செய்யகோல் செலுத்திக் காத்த
மன்னவ வழுதி வார வழிவழக் குரைப்ப தானு
னன்னவன் கருத்துக் கேற்ப வவையரு மனைய ரானார்
பின்னடு நிலைமை தூக்கிப் பேசுவார் யாவ ரையா.

(இ-ள்.) ஐயனே! பாண்டியர்மரபிற்றோன்றி உலகினைச் செங்கோல்செலுத்திக் காக்கும் அரசனாகிய இராசராசபாண்டியன் நடுநிலைமையைக் கைவிட்டு அழிவழக்குப்பேசுவதானான். அப்பாண்டியனுடையகருத்துக்குப்பொருந்த அவன்சபையிலுள்ள பெரியோரும் அத்தன்மையரோயாயினர். பின்பு நடுநிலைமையினின்று சீர்தூக்கிப் பேசத்தக்கவர் யாவரிருக்கின்றனர்? (நீரேயன்றி ஒருவருமிலர்). எ-று. (உஉ)

உன்னருட் டுணைசெய் தென்பா லுறுகணோய் துடைப்ப தென்ன
மின்னனாய் நீயே நாளை வெல்லுமா செய்து மஞ்சே
லென்னவா காய வாணி யிறைவலா னருளாற் கேட்டு
மன்னருங் கற்பி னுடன் மனைபுகுந் திருந்தாண் பின்னே.

(இ-ள்.) உனது திருவருட்டுணைசெய்து என்னிடத்திலுள்ள துன்பநோயையொழிக்கக்கடவாயென்றிரக்க, மின்னல்போல்றவளே! நீயே நாளையதினத்தில் வெல்லும்படி செய்வோம். அஞ்சற்கவென்று கூறிய அசரீரியைச் சோமசுந்தரக்கடவுளின் திருவருளாற் கேட்டு, நிலைபெற்ற அரியகற்பினையுடைய பாணபத்திரர் மனைவியார் தமதில்லிற் சென்றிருந்தனர். எ-று. (உரு)

அன்றுபோன் மற்றை ஞான்று மழைத்தனன் பாடல் கேட்டுக்
குன்றுபோற் புயத்தா னென்னற் கூவிய வாறே கூற
மன்றுளார் பலரு மன்ன வண்ணமே சொன்னார் கேட்டு
நின்றபாண் மடந்தை பாண்டி நிருபனை நோக்கிச் சொல்வாள்.

(இ-ள்.) மலைபோலுயர்ந்த புயத்தையுடைய பாண்டியன் அன்றுபோல மறுநாளிலும் (அவ்விருவரையும்) அழைப்பித்து, அவர்கள் பாடல்களைக் கேட்டு, நேற்றுக் கூறியதுபோலவே (இன்றும்) கூறச் சபையிலுள்ள பெரியோர் பலரும் அவ்வாறேசொல்லினர். அதனைக்கேட்டு, அங்கு நின்று பாணபத்திரர் மனைவியார் பாண்டியராசனைப் பார்த்துக் கூறுகின்றனர். எ-று.

சொல்வாள் - நிகழ்காலப் பொருளில் வந்த வினையெச்சம். (உச)

தென்னரே றனையாய் ஞால மனுவழி செங்கோ லோச்சு
மன்னரே றனையாய் வார வழக்கினை யாத லானீ
சொன்னவா றவையுஞ் சொல்லத் துணிந்தது துலைநா வன்ன
பன்னகா பரணர் முன்போய்ப் பாடுகேம் பாடு மெல்லை.

(இ-ள்.) பாண்டியருள் ஆண்சிங்கம்போன்றவனே! உலகத்தில் மனுமுறையே செங்கோல் செலுத்தும் மன்னவருள் ஆண் சிங்கம் போன்றவனே! நடுநிலைமையிகந்த வழக்கினையுடையாயாதலால், நீ கூறியபடியே சபையுஞ்சொல்லத்துணிந்தது. துலையின் முள்ளைப்போன்ற, சர்ப்பாபரணத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் சந்நிதியிற் சென்று நாங்களிருவரும் பாடுகின்றோம். பாடுங்காலத்தில். எ-று. (உரு)

இருவரோம் பாட்டுங் கேட்டுத் துணிந்திவள் வென்றா ளென்று
வொருவர்சந் நிதியிற் சொன்னாற் போதுமென் றுரைத்தாள் பாண்டித்
திருமக னனைய வாறே செய்மினீர் செய்மி னென்ன
மருவளர் குழலி னார்தம் மனைபுகுந் திருந்தார் பின்னாள்.

(இ-ள்.) எங்க ளிருவருடைய பாடலையுங் கேட்டு ஒருவர் மனந் துணிந்து (இவருள்) இவள்தான் வென்றாளென்று அச் சந்நிதியிற் சொன்னால் அமையுமென்று கூறினர். பாண்டிநாட்டரசனாகிய இராசராசபாண்டியன் அப்படியே நீங்கள் செய்யுங்களென்று கூற, வாசம்பொருந்திய கூந்தலையுடைய பாடினிக ளிருவரும் தமதில்லிற்சென் றிருந்தார்கள். எ-று. (உசு)

### கலிவிருத்தம்.

தென்ற னுடனு மந்திரச் செல்வரு
நன்று தீதுணர் நால்வகைக் கேள்வியோ
ரொன்ற வேகி யொளிவிடு வெள்ளிமா
மன்ற வாணர்மா மண்டபத தெய்தினர்.

(இ-ள்.) பாண்டியனும் மந்திரிகளும் (இசையிலுள்ள) குணங் குற்றங்களைப் பகுத்தறியும் நான்கு வகைப்பட்ட கேள்வி நிறைந்த இசைநூற் புலவர்கள் தம்மைச் சூழ்ந்துவரச்சென்று, ஒளிவீசும் வெள்ளியம்பலவாணர் மகா மண்டபத்தி லடைந்தார்கள். எ-று.

கீத ஞானம் - லய ஞானம் - சுருதி ஞானம் - தான ஞானம் என்பன நால்வகை ஞானங்களென்பர். (உஎ)

எய்தி யம்மட மாதரை யிங்குறச்
செய்தி ரென்னத் திருமக னேவலோர்
நொய்தி னோடி நொடித்தழைத் தாரொடு
மைதி கழ்ந்த விழியார் வருவரால்.

(இ-ள்.) அடைந்து, அப்பாடினிகளை யிங்கு வரச்செய்யுங்களென்று பணிக்க, பாண்டியனது ஏவல்வழி நிற்கும் வேவுகாரர் விரைந்தோடி அரசன்கட்டளையைக் கூறி அழைத்த அவ்வேவுகாரரோடு, மைவிளங்கிய கண்களையுடைய பாடினிகள் வரா நிற்பர். எ-று. (உஅ)

படிமை யார்தவப் பாடினி வந்தெனக்
கடிமை யாவளின் றையமின் றுமெனக்
கொடுமை யார்மனக் கோட்டச் செருக்கொடுங்
கடுமை யாகவந் தாள்கலத் தின்வந்தாள்.

(இ-ள்.) தவவேடமுடைய பாடினிவந்து எனக்கு இப்பொழுது அடிமை யாவாள். சந்தேகமில்லையென்று, கொடுமை மிக்க மனக்கோணலால் வந்த செருக்கோ டும் மரக்கலத்தில் வந்த பாடினி விரைந்து வந்தனள். எ-று. (உ௯)

கற்பு மிக்கெழு கற்புங் கருத்தினிற்
சிற்ப ரஞ்சுடர் சேவடி மேல்வைத்த
வற்பு மிக்கெழ மெல்லவந் தாளரோ
பொற்பு மிக்குள பத்திரன் பொன்னனாள்.

(இ-ள்.) கல்வி யறிவால் மேம்பட்டு விளங்குங் கற்பும், தமது மனத்திற், சோமசுந்தரக்கடவுளுடைய செவந்த திருவடிமேல் வைத்த பத்திமையும் பொலிந்து தோன்ற, அழகு மிக்க பாணபத்திரருடைய மனைவியார் மெல்லென வந்தனர். எ-று.

அலங்கு மாரமொ டங்கத மாதிபல்
கலன்க டாங்கிக் கலைஞர்கு ழாத்திடை
யிலங்கு மாட மதுரைக் கிறைவரும்
புலங்கொ ணுவலர் போல்வந்து வைகினர்.

(இ-ள்.) விளங்குகின்ற மாடங்கள் நெருங்கிய மதுரைப்பதியி லெழுந்தரு ளிய சோமசுந்தரக்கடவுளும், அசைகின்ற முத்தாரத்தோடு வாகுவலய முதலிய ஆபர ணங்க ளணிந்து, இசைப்புலவர் கூட்டத்துள் இசைநூலில்வல்ல புலவர்போல (வடி வேற்று) வந்து தங்கியருளினர். எ-று. (௩௧)

அந்த வேத்தவை தன்னி லருங்கலம்
வந்த வேய்த்தடந் தோளிசை மாதராண்
முந்த வேத்திசை பாடினண் முந்தையோர்
சிந்தை வேட்டொன்றுஞ் செப்பின ரில்லையால்.

(இ-ள்.) அந்த அரசசபையில், அரிய மரக்கலத்தில் வந்த மூங்கில்போலும் பருத்த தோளையுடைய (ஈழநாட்டுப்) பாடினி முற்பட நால்வகை வருணவாழ்த்தும் பாடினள். (அச்சபையிலிருந்து அதைக் கேட்ட) முதியோர் மனம் விரும்பி ஒன்றுங் கூறிற்றிலர். எ-று.

அவள் இசை அச்சபையோரை மகிழ்வுறச் செய்யாமையின் அவர்கள் ஒன் றுஞ் செப்பினரிலர் என்றார். நால்வகை வருணவாழ்த்தாவது - நால்வகை வருணப் பூதரைச் சிறுதேவபாணியாற் றுதித்து மூவடி முக்கால் வெண்பாவால் அவர் அணி மாலை ஆடை நிறம் கொடிமுதலியவற்றைத் துதித்து அவர்களா லொன்று பெறுதல். இதனை,

சீவகசிந்தாமணி உதாரணச்செய்யுள்.

மதிவாணனர் இசைநூல்.

**சூத்திரம்** :— " அந்தணர் வேள்வியோ டருமறை முற்றுக
வேந்தன் வேள்வியோ டியாண்டுபல் வாழ்க
வணிக ரிருநெறி நீணிழி தழைக்க
பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக
அரங்கியற் கூத்து நிரம்பிவினை முடிக
வாழ்க நெடுமுடி கூர்கவென் வாய்ச்சொலென்
றிப்படி பலிகொடுத் திறைவனிற் றெருக்குச்
சேட்பட வமைத்துச் செழும்புகை காட்டிச்
சேவடி தேவரை யேத்திப் பூதரை

மூவடி முக்கால் வெண்பா மொழிந்து
செவியழுக் குறுமை வேந்தனை யேத்திக்
கவியொழுக் கத்து நின்றுழி வேந்தன்
கொடுப்பன கொடுக்க வமையு மென்ப.”—எனக் கூறுதலானுணர்க.

வீணை தோளிட னேந்திய வெண்மலர்
வாணி பாட விருக்கையின் வைகியே
யாண ரம்பெறிந் தின்னிசை யோர்ந்தெழீஇப்
பாணர் கோமகன் பன்னியும் பாடுமால்.

(இ-ள்.) வீணையை யிடத்தோளிலேந்திய கலைமகள் பாடும் அவ்வாசனத்திலே தாமுமிருந்து, வீணையி னரம்பினைத் தடவி, இன்னிசையை யாய்ந்தெழுப்பி, பாணர்கட்கிறைவராகிய பத்திரரது மனைவியாரும் பாடலுற்றனர். எ-று.

வாணியிருக்கை யென்றது பதுமாசனம். அது கால்டிகளை மாற்றிக் குதிமேலாக விருத்தல். அஃதொன்பது விருத்தியு ளொன்று. இதனை,

சூந்திரம்:—“ பதுமுக முற்கட் டிதமே யொப்படி
இருக்கை சம்புட மயமுகஞ் சுவத்திகம்
தனிப்புட மண்டில மேக பாதம்
உளப்பட வொன்பதும்
ஆருந் திரிதர வில்லா திருக்கை.”—என்பதனானறிக. (கூகூ)

இடைமடக்காய் அறுசீரான் வந்த

ஒருபோது கோச்சகம்.

குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் கையிற் படுதலைகொண்
டிடங்க டோறு மிரப்பாயென் றேசு வார்க்கென் பேசுவனே.

(இ-ள்.) மதுரையிலெழுந்தருளிய பெருமானே! அகங்கை யளவு நீரையும் பச்சிலையையுமிட்டு வழிபடும் அடியார்க்கு ஐராவதத்தையும் சேஷசயனத்தையும் தாமரைத் தவிசையுந் தந்தருளுவாய். (வழிபடும் அடியார்க்கு) சேஷசயனத்தையுந் தாமரைத் தவிசையுந் தந்தருளு நீயே திருக்கரத்திற் கபாலத்தைத் தாங்கி (தாருவன முனிவர்) வீடுகடோறும் இரக்கின்றாயென்று இகழும் புறச்சமயிகட்கு (யான்) யாதினை (விடையாகக்) கூறுவேன்? எ-று.

இமையாக்குஞ்சரம் - கண்ணிமையாத யானை. இந்திரனும் பிரமனும் திருமாலும் சிவபிரானை வழிபாடு செய்தே தமது பதவியை யடைந்தனரென்பது தோன்ற நிற்றலின் குறிப்பெச்சம். பரம+இஷ்டி=பரமேஷ்டி. தாருவன முனிவர் கௌதம முனிவரை வீணே பதிதராகத் தமதுமாயையாற் கற்பித்து அதனாற் பாபமேற்றுத் துன்புற்றிருந்தனராதலின் அதனை விலக்கற்பொருட்டுச் சிவபெருமான் அவர்பால் பலியேற்றனர் * இவ்விஷயம் அகச்சமயிக ளறிந்து அருண்மைபாராட்டி மகிழ்வர். புறச்சமயிகள் அதனை யுணராது அவமதிப்பராதலின் “ஏசுவார்க் கென்பேசுவனே” என்றார்.

* தமிழ் வசன நடையில் வெளியிட்டிருக்கும் சிவமகாபுராணம் - ஞான சங்கிதையிற்-கௌதமேசுவரலிங்க மகிமையுரைத்த அத்தியாயத்திற் காண்க.

தேனார் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடென்று
நானா வேதப் பொருளுரைத்தாய் நீயே மதுரை நம்பரனே
நானா வேதப் பொருளுரைத்தாய் நீயே பாதி நாரியுரு
வானா யென்று பிறர்பழித்தா லடியேன் விடையே தறைவேனே.

(இ-ள்.) மதுரையி லெழுந்தருளிய நமது பரமனே! தேன்போலுஞ் சுவை பொருந்திய மொழியையுடைய மாதர்களது கட்பார்வையின் வழியே செல்லாத சிவயோகிகட்கே மோக்ஷமென்று, பலவகைப்பட்ட வேதப்பொருளை நீயே விரித்துக் கூறினை: பலவகைப்பட்ட வேதப்பொருளை விரித்துக் கூறிய நீயே இடப்பாதி பெண்ணுருவாயினை யெனப் (புறச்சமயிகள்) இகழில் அடியேன் யாது (விடையாகக்) கூறுவேன். எ-று.

வேதம் விச்சுவரூபியெனக் கூறுதற் கியைய ஆன்மாக்களுக்கு வீடருளுதற் பொருட்டுப் பந்தமருளப் பாதிநாரி யுருவானாயென்று அகச்சமயிகள் மகிழ்வர். புறச்சமயிகள் அதனை யுணராது அவமதிப்பராதலின் "பழித்தால் அடியேன் விடையே தறைவேனே" என்றார்.

பாதி நாரி யுருவானாய் என்பதனை,

திருவாசகம்.

"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ"—என்றும்,

சித்தாந்த நூலார்.

"ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
போகங்க ளெங்கே புணர்ப்பெங்கே—பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு"—என்றும் வருவனவற்றா னறிக. (௩௫)

வரத னாகி யெவ்வுயிர்க்கு மாயா விருத்தி வலியடக்கிச்
சரத மான வீட்டின்பந் தருவாய் மதுரைத் தனிமுதலே
சரத மான வீட்டின்பந் தருவாய் வீடு பெறுவார்போல்
விரத யோக நிலையடைந்தா யென்பார்க் கென்னான் விளம்புவனே.

(இ-ள்.) மதுரையி லெழுந்தருளிய ஒப்பில்லாத முதற்கடவுளே! அருட்கொடையை யுடையவனாகி எல்லா வுயிர்கட்கும் மாயாமலத்தின் விருத்தி வன்மையை யடக்கி, நித்தியமான மோக்ஷ இன்பத்தைத் தந்தருளுகின்றனை: நித்தியமான மோக்ஷ இன்பத்தைத் தந்தருளுகின்ற நீயே மோக்ஷ இன்பத்தையடைய முயல்வார் போல நோன்பாகிய யோக நிலையினைக் கைக்கொண்டருளினை என்னும் புறச்சமயிகளுக்கு நான் யாது (விடையாகக்) கூறுவேன்? எ-று.

தனு கரண புவன போகங்களாய்க் கன்மத்துக்கேற்ற சரீரங்களைக் கொடுத்தல் மாயாமலத்தின்றொழில். அழுக்கைக்கொண்டே யழுக்கை யொழித்தல்போல, மாயையைக்கொண்டே அந்தமாயையையொழித்தல் வலியடக்கலாம். முக்திநிலைவாக் கிறந்ததாதலின் சனகர் முதலிய மகருஷிகள் நால்வர்க்குணர்த்திய சிவயோகநிலையை அகச்சமயிக ளுணர்வர். புறச்சமயிகள் அதனை யுணராது அவமதிப்பாராதலின் "விரதயோகநிலை யடைந்தா யென்பார்க் கென்னான் விளம்புவனே." என்றார்.

திருவாசகம்.

"நன்றாக நால்வருக்கு நான்மறையி னுட்பொருளை
யன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடி
யன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தா னாயிடினும்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ" என்பதனானறிக.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கண்ணுதன் மதுரைப் பிரானையிவ் வாறு கருதிய பாணியாற் கனிந்து
பண்ணுதல் பரிவட் டணைமுத லிசைநூல் பகர்முதற் றொழிலிரு நான்கு
மெண்ணுறு வார்தல் வடித்திடன் முதலா மெட்டிசைக் கரணமும் பயப்ப
மன்னவர் செவிக்கோ வானவர் செவிக்கும் வாக்கினா லுவிளை யமுதம்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய மதுராபுரீசனை இவ்வண்ணமாகப் பொருளமைந்த பண்ணினால் மனங்கனிந்து, பண்ணுதல் பரிவட்டணை முதலாக இசைநூல் கூறும் முதற்றொழில்களாகிய எட்டும், எண்ணிநிற்கும் வார்தல் வடித்தல் முதலிய எண்வகைப்பட்ட இசைக்கரணங்களும் பயன்பட, மண்ணுலகவாசிகள் செவிக்குமட்டுமோ தேவர்களது செவிக்கும் தமது நாவால் விளைந்த இசையமுதத்தை வார்த்தனர் (பாண்பத்திரர் மனைவியார்). எ-று.

பண்ணுதல் பரிவட்டணை முதல் முதற்றொழி லிருநான்கு—பண்ணல்-பரிவட்டணை-ஆராய்தல் - தைவரல்-செலவு - கையூழ்-விளையாட்டு-குறும்போக்கு எனப்படும். அவற்றுள், பண்ணல் - பாடநினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரை யறிந்து வீக்குதல். பரிவட்டணை - அவ்வீக்கின நரம்பை அகமும் புறமும் விரல்களாற் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல். ஆராய்தல்-ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிதல். தைவரல்-அநுசுருதி யேற்றுதல். செலவு-ஆளத்தியே நிரம்பப் பாடுதல். விளையாட்டு-பாடநினைத்தவண்ணத்திற் சந்தத்தை விடுத்தல். கையூழ் - பாட நினைத்த வண்ணத்திற் செய்த பாடலெல்லாம் இன்பமாகப் பாடுதல். குறும்போக்கு - குடக்கச்செலவுந் துள்ளற்செலவும் பாடுதல் என்பர்.

வார்தல் வடித்திடன் முதலா மெட்டிசைக்கரணம்—வார்தல்-வடித்தல்-உந்தல்-உறழ்தல்-உருட்டல்-தெருட்டல் - எள்ளல்-பட்டடை யெனப்படும். அவற்றுள், வார்தல்-எடுத்தல், வடித்தல்-படித்தல், உந்தல்-நலிதல், உறழ்தல்-கும்பித்தல், உருட்டல்-உருட்டு, தெருட்டல்-ஒலி, எள்ளல்-குடிலம், பட்டடை-தூக்கு என்பர். (கஎ)

இடையினோ டேனைப் பிங்கலை யியக்க மிகந்துமூ லந்தொடுத் தியங்கி,
நடுவுறு தொழிலாற் பிரமரந் திராந்த நடைபெற விசைக்குமுள் ளாள, மிடற்றுவீங் காள்கண் ணிமைத்திடா ளெயிறு வெளிப்படாள் புருவமே னிமிராள்,
கொடிறது துடியாள் பாடலு மதுகேட் டனைவருங் குதுகல மடைந்தார்.

(இ-ள்.) இடைகலையுடன் மற்றப் பிங்கலையிலு மியங்குஞ் சஞ்சரிப்பொழிந்து மூலாதாரத்தினின்றும் வாயுவை யெழுப்பிச் சுழுமுனையின் றொழிலால் பிரமரந்திர முடிவுகாறுஞ் செல்லப்படுந் தேவகாந்தருவத்தை, கண்டம் வீங்காமலும், கண்ணிமை கொட்டாமலும், பற்கள் தோன்றாமலும், புருவ மேறாமலும், கபோலந் துடியாமலும் (பாணபத்திரர் மனைவியார்) பாட, அத்தேவகாந்தருவத்தை எல்லோருங் கேட்டுக் களிப்படைந்தார்கள். எ-று.

உள்ளாளுக் கீதம் பதினொருவகையாற் பாடப்படு மென்பார். இதனை,

"உள்ளாளம் விந்துவுட னாத மொலியுருட்டுத்
தள்ளாத தூக்கெடுத்த றன்படுத்தல்—மெள்ளக்
கருதி நலிதல் கம்பித்தல் குடிலம்
ஒருபதின்மே லொன்றென் றுரை."

"கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா பற்றெறியா—வெண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே காந்தருவர்
உள்ளாளப் பாட் லுணர்."—என்பதனு னறிக.

இவ்விஷயம் சீவகசிந்தாமணி காந்தருவதத்தையாரிலம்பகத்தில் நச்சினார்க்கினியர் எழுதிய உரையிலும், இசைநூல்களிலுங் கண்டுகொள்க. (கூஅ)

கன்னிநா டுடையான் கைதவ னெனும்பேர்க் காரணந் தேற்றுவா னென
னத்தா; னின்னிசை யறிஞ னாகியு முன்போ லியம்புவா னொருப்படு கின்றான்,
முன்னவ னருளாற் றன்மனக் கோட்ட முரண்கெடப் பொதுமையா னோக்
கி, யின்னவ டானே வென்றன ளென்றா னிணையவா றனைவரு மொழிந்தார்.

(இ-ள்.) பாண்டிநாட்டையுடைய இராசராசபாண்டியன் (தனக்குரிய) கைதவன் என்னும் பெயருக்குக் காரணத்தைத் தெளிவிப்பவன்போல, தான் இனிய இசைநூலில் வல்ல புலவனாகியும், முன்புபோலக் கூற உடன்படுகின்றவன் சோமசுந்தரக்கடவுளின் அருளால் தனது மனக்கோணலின் மாறுபாடுகெட, நடுநிலைமையினின்று சீர்தூக்கி, இந்தப் பாணபத்திரன் மனைவியே வென்றாளென்று கூறினன். இப்படியே யங்கிருந்தார் யாவருங் கூறினர். எ-று.

கை தவன்—தவம் கைகூடியவன். இஃதிவன்பால் ஒரு சொல்லின் தன்மைத்தாய வஞ்சகமுடையான் எனக் காரணக்குறியாக மாறுகின்றானதலின் "கைதவ னெனும்பெயர்க் காரணந் தேற்றுவான் போல" என்றார். கைதவம்—வஞ்சனை. (கூக)

கரியுரை மொழிந்த கைதவ னிலங்கைக் கைதவப் பாடினி கழுத்திற்,
புரிகுழன் மாதை யிருத்தென விருத்தும் போதுமை யிடங்கரந் திருந்த,
வரியநா வலரீ தற்புத மீதற் புதமென வரைந்தவை காண, விரிகதிர் மின்
போன் மறைந்தனர் யாரும் வியந்தனர் பயந்தனன் வேந்தன்.

(இ-ள்.) சாக்ஷிமொழி கூறிய பாண்டியன் இலங்கையி னின்றுவந்த வஞ்சகப்பாடினியின் கழுத்தில், கட்டமைந்த கூந்தலையுடைய பாணபத்திரர் மனைவியை யிருத்தா யென்றேவ, ஏவற்பெண்க ளிருத்துங்காலையில், உமாதேவியாரை வாமபாகத்திற்கரந்து (மானுடத்) திருவுருவங் கொண்டிருந்த அரிய (இசைநூலில் வல்ல) நாவலர் பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள் இச்செயல் அற்புதமென்று கூறிச் சபையிலுள்ளோ ருணர விரிந்த கிரணத்தையுடைய மின்னல்போல மறைந்தருளினார். (அதனைக் கண்டு) யாவரும் அதிசயித்தார்கள். இராசராசபாண்டியன் பயந்தனன். எ-று.

செங்கணே றழக ராடலீ தென்றே யாவருந் தெளிந்தன ரேத்தி
யங்கணு யகர்தங் கருணையின் றிறனு மடியவ ரன்பையுந் தூக்கித்
தங்கணு ரருவி பெருகவா னந்தத் தனிப்பெருஞ் சலதியி லாழ்ந்தார்
வங்கமேல் வந்தாள் பிடர்மிசை யிருந்த மாணிழை விறலியை மன்னன்.

(இ-ள்.) செவந்த கண்களையுடைய விடைமேலழகர் திருவிளையாடலிது என்று யாவருந் தெளிந்து துதித்து, அவ்விடத்துச் சோமசுந்தரக்கடவுளின் திருவரு

ளின் திறத்தையும் அடியவர்களின் அன்பின் திறத்தையுஞ் சீர்தூக்கி, தமது கண்களில் ஆனந்தவெள்ளம் உவட்டெடுத்தூற்ற வொப்பில்லாத பேரின்ப சாகரத்தி லழுந்தினர்கள். மரக்கலத்தின்மேல் வந்த பாடினியின் பிடர்மேலிருந்த பாணபத்திரர் மனைவியை, இராசராசபாண்டியன். எ-று. (சுக)

இறக்குவித் தவட்கு முந்தமுத் தார மெரிமணிக் கலன் றுகில் வரிசை,
பெறக்கொடுத் தேனை யவட்குமுன் மகிழ்ச்சி பெறச்சில வரிசைதந் தவை
யிற், சிறக்கவந் தொருங்கு வைகிவா னிழிந்த தெய்வதக் கோயில்புக் கிருந்
த, வறக்கொடி யிடஞ்சேர் பெரும்புல வோர்க்கு மருங்கல னுதிக ணல்கா.

(இ-ள்.) இறக்குவித்து, அப்பாணர் மனைவியாருக்கு முற்பட முத்துமாலிகையையும் தீப்போலச் செந்நிறம் வாய்ந்த இரத்தினாபரணங்களையும் பீதாம்பரங்களையும் வரிசையாகப் பெறத் தந்து, ஈழப்பாடினிக்கும் மனத்தில் மகிழ்ச்சியரும்பச் சில வரிசைகள் கொடுத்து, சபையில் மேம்பட ஒரு சேரவிருந்து, விண்ணினின்றும் இழிந்த தெய்வத்தன்மையுடைய திருக்கோயிலிற் சென்று, ஆங்குஎழுந்தருளிய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய பெரிய புலவர் சிகாமணிக்கும் அரிய ஆபரணாதிகளைக்கொடுத்து. எ-று. (சஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மன்னவர் வலிக ளெல்லாந் தெய்வத்தின் வலிமுன் னில்லா
வன்னமா தெய்வஞ் செய்யும் வலியெலா மரண்முன் றட்ட
முன்னவன் வலிமுன் னில்லா வெனப்பலர் மொழிவ தெல்லா
மின்னபாண் மகளிற் காணப் பட்டதென் றிறும்பூ தெய்தா.

(இ-ள்.) அரசருடைய வலிமைகளெல்லாம் தெய்வத்தின் வலிமைக்கு முன் நில்லாவாம். அந்தப் பெரிய தெய்வங்கள் செய்யும் வலிமைகளெல்லாம் திரிபுரங்களை நகைத்தெரித்தருளிய சிவபெருமான் வலிமைக்கு முன் நில்லாவாமென்று, பலருங் கூறுவதெல்லாம் இந்தப் பாடினியாரிடத்து (ஐயமறக்) காணப்பட்டதென்று வியப்படைந்து. எ-று. (சரு)

மின்னியல் சடையி னானை விடைகொடு வலஞ்செய் தேகி
யின்னிய மியக்கஞ் செய்ய வெழில்கொடன் கோயி லெய்தித்
தொன்னிதி பெற்றான் போலச் சுகுணபாண் டியனைப் பெற்று
மன்னிய மகிழ்ச்சி வீங்க வைகின னிராச ராசன்.

(இ-ள்.) மின்னலையொத்த சடையையுடைய சோமசுந்தரப்பெருமானரிடத்து விடைபெற்றுச்சென்று இனிய வாச்சியங்களொலிக்க, அழகுபொருந்திய தனது கோயிலையடைந்து, தொன்றுதொட்டுள்ள சங்கநிதி பதுமநிதிகளைப் பெற்றவன் போல, சுகுணபாண்டியனைப் பெற்று, நிலைபெற்ற மகிழ்ச்சி மிக இராசராசபாண்டியனிருந்தனன். எ-று. (சச)

இசைவாதுவென்றபடலம்

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - உககரு.

---



பன்றிக்குட்டிகளுக்குமுலைகொடுத்தபலம்.

சிவமயம்.

## நாற்பத்தைந்தாவது

# பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்த படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இருளைக்கந் தரத்தில் வைத்தோன் றன்னிடத் தென்று மற்பின்
றெருளைத்தந் தவட்கு மாருத் தெரிவையை வசையால் வெல்ல
வருளைத்தந் தளித்த வண்ண மறைந்தனந் தாயாய்ப் பன்றிக்
குருளைக்கு முலைதந் தாவி கொடுத்தவா றெடுத்துச் சொல்வாம்.

(இ-ள்.) ஸ்ரீகண்டத்தில் விஷத்தைப்பொருத்திய சிவபெருமானார் தம்மிடத்தில் எப்பொழுதும் மெய்யன்பினைவைத்த பாணபத்திரர் மனைவியாருக்குப் பகையாயுள்ள ஈழநாட்டுப் பாடினியை இசைப்பாட்டினால் வெல்லத் திருவருள்வைத்துப் பாலித்த திருவிளையாடலைக் கூறினோம்: பன்றிக்குட்டிகளுக்குத் தாயாகிவந்து முலை கொடுத்துப் பாலித்த திருவிளையாடலை யினியெடுத்துக்கூறுவாம். எ-று. (க)

முறையென விமையோர் வேண்ட முளைத்தநஞ் சயின்று சான்ரு
யுறையென மிடற்றில் வைத்த வும்பரான் மதுரைக் காரந்
திறையென வெறிநீர் வைகைத் தெற்கது குருவி ருந்த
துறையென வுளதோர் செல்வத் தொன்மணி மாட மூதூர்.

(இ-ள்.) தேவர்கள் முறையோவென்று யாசிக்க, (கடலில்) தோன்றிய ஆலாலவிஷத்தையுண்டு (அதனை) சாக்ஷியாயிருவென மிடற்றில் வைத்தருளிய சிவபுரத்தையுடைய பெருமானார் (எழுந்தருளிய) திருவாலவாய்க்குத் திறையாக முத்தங்களை வீசும் வைகைநதியின் தென்பாலுள்ளது குருவிருந்ததுறையெனவுள்ளது; ஒப்பில்லாத செல்வமிக்க தொன்றுதொட்டுள்ள இரத்தினங்களழுத்திய மாடங்களையுடைய பெரிய நகரம். எ-று. (உ)

தருநாத னாதி வானோர் தங்குரு விருந்து நோற்பக்
குருநாத னெனப்பேர் பெற்றுக் கோதிலா வரந்தந் தேற்றில்
வருநாதன் சித்தி ரத்தேர் வலவனோ ருடனே கஞ்சத்
திருநாதன் பரவ வைகி யிருக்குமச் சிறந்த வூரில்.

(இ-ள்.) பஞ்சதருக்களுக்குத் தலைவனாகிய இந்திரன் முதலிய தேவர்களுடைய குருவாகிய பிரகஸ்பதிமுனிவர் இருந்து நோற்றலால், குருநாதனெனக் காரணப்பெயர் கொண்டருளி, குற்றமில்லாத வரங்களை அவருக்குக் கொடுத்து, இடபவாகனத்தில் வருஞ் சிவபெருமான் சித்திரரதனென்னுங் கந்தருவனுடனே, தாமரைமலரில் வாழுந் திருமகள்கொழுநனாகிய திருமால் பணிசெய்யவெழுந்தருளியிருக்கும் அந்தச் சிறந்த (குருவிருந்த துறையென்னுந்) திருப்பதியில். எ-று. (ங)

சுகலனென் றொருவே ளாள னவன்மனை சுகலை யென்பா
ளிகலருங் கற்பி னுள்பன் னிருமகப் பெற்றாள் செல்வப்
புகலருஞ் செருக்கா லன்ன புதல்வரைக் கடிய ராகி
யுகலருங் களிப்பு மீதூ ரன்பினால் வளர்க்கு நாளில்.

(இ-ள்.) சுகலனென்றொரு வேளாளனுள்ளான். அவன் இல்லாள் சுகலை யென்னும் பெயருடையாள். மிகுந்த கற்பினையுடைய அந்தச் சுகலை பன்னிரு புதல்வரைப் பயந்தனள். பெருஞ்செல்வத்தாலாகிய சொல்லுதற்கரிய இறுமாப்பால் அம்மக்களை (குற்றங்கண்டவிடத்து)த்தண்டிக்காதவர்களாகி, நீங்காத களிப்புமிக்க அன்புடன் வளர்க்குங்காலத்தில். எ-று. (ச)

தந்தையுந் தாயு மாயத் தறுகண்மிக் குடையா ராகி
மைந்தரும் வேட ரோடு கூடிவெங் கானில் வந்து
வெந்தொழில் வேட்டஞ் செய்வார் வெயில்புகாப் புதற்கீ ழெய்தி
யைந்தவித் திருந்து நோற்குங் குரவனை யங்குக் கண்டார்.

(இ-ள்.) தமது பிதாவும் மாதாவு மிறக்கக் கொடுந்தொழிலை மிகவுமுடையராகி, அப்பன்னிரண்டு புத்திரர்களும் வேடருடன் கலந்து வெப்பம் பொருந்திய காட்டில் வந்து கொடுந்தொழிலாகிய வேட்டையாடுகின்றவர்கள், சூரியகிரணஞ்செல்லாத அடர்ந்த ஒரு புதலின்கீழ்ச்சென்று ஐம்புலன்களையும் வென்றிருந்து தவஞ்செய்யும் பிரகஸ்பதிமுனிவரை அவ்விடத்திற் பார்த்தார்கள். எ-று.

ஐந்து-புலன்கண்மேனிற்றலின், பண்பாகுபெயர். (ரு)

கைத்தலம் புடைத்து நக்குக் கல்லும்வெம் பரலும் வாரி
மெய்த்தவன் மெய்யிற் றாக்க வீசினார் வினையை வெல்லு
முத்தமன் வீக்கஞ் செய்தார் தவத்தினுக் கெனவொன் றுன்னிச்
சித்தநொந் தினைய வஞ்சத் தீயரைச் செயிர்த்து நோக்கா.

(இ-ள்.) கைகொட்டிச் சிரித்து, கல்லையுங் கொடிய பருக்கைகளையும் பொறுக்கி உண்மைத்தவத்தையுடைய பிரகஸ்பதிமுனிவர் தேகத்திற் படும்படி யெறிந்தார்கள். வினையையொழிக்கும் உத்தமராகிய அப்பிரகஸ்பதிமுனிவர் இவர்கள் நமது தவத்திற்குஅழிவுசெய்தனரென்று கருதி மனநொந்து, இந்த வஞ்சம் பூண்ட கொடியரைக் கோபித்துப்பார்த்து. எ-று.

இதுமுதல் இரண்டு பாடல்கள் குளகம். (சு)

தேர்முந்தொழின் மறந்து வேடத் தொழிலுழந் துழல்வீர் நீர்மண்
ணுழுந்தொழி லுடைய சீராற் பன்றியி னுதரத் தெய்திக்
கொழுந்தழ லனைய வேனக் குருளையாய்த் தந்தை தாயை
யிழந்தல முறுமி னென்னு விட்டனன் கடிய சாபம்.

(இ-ள்.) (பெரியோரைக் கண்டவிடத்து) பணியுந்தொழிலைக் கைவிட்டு வேட்டுவத்தொழிலை மேற்கொண்டுழல்கின்ற செய்கையையுடையீர்! நீங்கள் நிலத்தையுழுந்தொழிலையுடைய குலத்திற் பிறந்த தன்மையால், பன்றியின் கர்ப்பத்தை யடைந்து, முதிர்ந்த நெருப்பையொத்த வெய்ய கோபத்தையுடைய பன்றிக்குட்டிகளாய் (பிறந்தபோதே) தந்தைதாயையிழந்து வருந்துங்களென்று கடுஞ்சாபங்கொடுத்தனர்.

பாவத்தை யனைய மைந்தர் பன்னிரு பேரு மஞ்சிச்
சாவத்தை யேற்றேற்ப் போது தணிவதிச் சாப மென்ன
வாவத்தை யகற்று மீச னருட்கழ னினைந்து வந்த
கோவத்தை முனிவு செய்தக் கடவுளர் குரவன் கூறும்.

(இ-ள்.) பாவம் உருவெடுத்தாற்போன்ற பன்னிருபுதல்வரும் அச்சங்கொண்டு (முனிவர்) சாபத்தை மேற்கொண்டு, இந்தச்சாபம் எங்களுக்கெப்பொழுது நீங்குவதென, (ஆன்மாக்களின்) இடையூற்றினை யொழிக்குஞ் சிவபெருமானது கருணை

வடிவாகிய திருவடியை நினைத்துத் தமக்குவந்த கோபத்தை வெறுத்து, தேவகுருவாகிய பிரகஸ்பதிமுனிவர் கூறுகின்றனர். எ-று. (அ)

என்னையா ளுடைய கூட லேகநா யகனே யுங்கட்
கன்னையாய் முலைதந் தாவி யளித்துமே லமைச்ச ராக்கிப்
பின்னையா னந்த வீடு தருமென்னப் பெண்ணோர் பாகன்
றன்னையா தரித்தோன் சொன்னான் பன்னிரு தனையர் தாமும்.

(இ-ள்.) என்னையாளாகவுடைய நான்மாடக்கூடலி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே உங்களுக்குத் தாயாகவந்து முலைகொடுத்துக்காத்து சிலநாட்களின் பின்னர் (உங்களைப்) பாண்டியனுக்கு மந்திரிகளாக்கிப் பின்பு சிவகதி தந்தருளுவரென்று, உமாபிராட்டியாரை ஒருபாகமாகவுடைய அக்கடவுளே முதல்வனென்று பற்றிய பிரகஸ்பதிமுனிவர் கூறினர். பன்னிருபுதல்வரும். எ-று. (௯)

தொன்மைசால் குருவி ருந்த துறையதன் புறத்த வான
பன்மைசால் கான வாழ்க்கைப் பன்றிகட் கரசாய் வைகுந்
தன்மைசா றனியே னத்தின் றன்பெடை வயிற்றிற் சென்று
வன்மைசால் குருளை யாகிப் பிறந்தனர் வழக்கான் மன்னோ.

(இ-ள்.) தொன்றுதொட்டுள்ள குருவிருந்த துறையின் புறத்திலுள்ள பலவகைப்பட்ட காட்டில் வாழும் பன்றிகளுக்கு வேந்தாய் நிலைபெற்ற தன்மைமிக்க வொப்பில்லாத ஆண்பன்றியின் உயிர்த்துணையாகிய பெண்பன்றியின் கருப்பத்திலடைந்து, வன்மைமிக்க குட்டிகளாகி (சாபம் இடையீடுபடாத) வழக்கினால் அன்றே பிறந்தார்கள். எ-று. (௧0)

ஆனநா ளொருநா ளெல்லை யரசருக் கரச னான
மீனவன் மதுரை நீங்கி மேற்றிசைக் கான நோக்கி
மானமா வேட்டஞ் செய்வான் மத்தமா வுகைத்துத் தண்டாச்
சேனைதன் புறம்பே மொய்ப்பச் செல்கின்றான் செல்லு மெல்லை.

(இ-ள்.) இவ்வாறானகாலையில் ஒருநாளளவில் அரசர்க்கரசனான இராசராச பாண்டியன் மதுரையினின்றும் நீங்கி, மேற்றிசையிலுள்ள அவ்வனத்தை நோக்கிப் பெரிய மிருகவேட்டையாடுதற்பொருட்டு மதமயக்கத்தையுடைய யானையைச் செலுத்தி, நீங்காத சேனைகள் தன்புறத்தே சூழ்ந்துவரச் செல்லுவானாயினான். அவ்வாறு செல்லுகையில். எ-று. (௧௧)

மாவழங் கிடங்க டேர வல்லதோல் வன்கா லொற்றர்
பாவடிச் சுவடு பற்றிப் படர்ந்துநா றழல்பு லால்வாய்த்
தீவிழி யுழுவை யேனந் திரிமருப் பிரலை புல்வாய்
மேவிட னறிந்து வல்லே விரைந்துவந் தெதிரே சொன்னார்.

(இ-ள்.) மிருகங்கள் சஞ்சரிக்கும் இடங்களையறியத்தக்க தொடுதோல் வீக்கிய முருட்டுக்கால்களையுடைய தூதுவர்கள், பரந்த காலடிச்சுவட்டைப் பற்றிப் பின்சென்று, தோன்றுங் கோபாக்கினியையும் புலால் நாறும் வாயையும் தீக்கொப்புளிக்குங் கண்களையுமுடைய புலிகளும், பன்றிகளும், திருகிய கொம்புகளையுடைய கலைமானும், மானும் இருக்குமிடங்களையுணர்ந்து, கடுகவிரைந்துவந்து பாண்டியன்முன் கூறினார்கள். (௧௨)

மறத்துறை வேட்ட மாக்கள் வல்லைபோ யொடியெ றிந்து
புறத்துவார் வலைகள் போக்கி நாயதன் புறம்பு போர்ப்ப

நிறைத்துமா வொதுக்கி நீட்டும் படைஞராய் நிரைசூழ் நிற்ப
வறத்துறை மாறாக் கோலா னானைமேல் கொண்டு நிற்ப.

(இ-ள்.) கொலைத்தொழிலின் வழியே சென்ற வேட்டைத்தொழிலோர் விரைந்துசென்று ஓடி வீசிப் புறம்பேவாராலாகிய வலைகளைக்கட்டி, நாய்கள் வலையின் புறம்பே மறைத்துக் கூடி மிருகங்களை வில்க்கி யோட்டுகின்ற ஆயுதங்களை யுடையர் போலச் சூழ்ந்து நிற்கவும், மநுநூல்வழியினின்று மாறுபடாத செங்கோலை யுடைய இராசராசபாண்டியன் யானைமேலேறி ஒருபால் நிற்கவும். எ-று.

ஓடியெறிதல் - மூலைபோக்குதல். (கரு)

சில்லரித் துடிகோ டெங்குஞ் செவிடுறச் சிலையா நிற்பப்
பல்வகைப் பார்வை காட்டிப் பயில்விளி யிசையா நிற்பர்
வல்லிய மிரலை மையன் மானினம் வெருளா நிற்ப
வில்லிற வலித்து வாங்கி மீளிவெங் கணைக டூர்த்தார்.

(இ-ள்.) சில்லரிவாச்சியமும், உடுக்கையும், கொம்பும் எவ்விடத்துஞ்செவிடுபடவொலிக்காநிற்கவும் பலவகைப்பட்ட பார்வைகளையுங் காட்டி, சைகையோசை ஒருபாலிசைக்காநிற்கவும், புலியுங் கலைமானும் மயக்கம் பொருந்திய மான்கூட்டமுமஞ்ச, வில்முறியும்வண்ணம் மண்டலாகாரமாக வளைத்து, வெற்றிமிக்க கொடிய பாணங்களைத் தூர்த்தனர். எ-று. (கசு)

பார்வை காட்டல் என்றது புலிபோலப்புலியும், மான்போல மானுங்காட்டி வரவழைத்தல். பயில்விளியென்றது ஓசையுவமையால் அவ்வம்மிருகங்களைவிளித்தல்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

செறிந்த மான்மு றிந்த தாள்சி தைந்த சென்னி செம்புனற்
பறிந்த வாறு வெண்ணி ணம்ப ரிந்து வீசு கையிரு
மறிந்த வேழு யர்ந்த வேழ மாண்ட வெண்கு வல்லியம்
பிறிந்த வாவி யோடும் வாய்பி ளந்த வாய்வி ழுந்தவே.

(இ-ள்.) நெருங்கிய மான்கள் கால்முறிந்து தலையறுபட்டு உதிரவெள்ளம் பெருக்கின. எழுமுழமுயர்ந்த யானைகள் வெள்ளிய நிணங்களைச் சிந்தி வீசுந் துதிக்கையற்று மயங்கி வீழ்ந்திறந்தன. கரடிகளும் புலிகளும் நீங்கிய பிராணனோடும் வாய்பிளந்து விழுந்தன. எ-று.

முறிந்த சிதைந்த மறிந்த - முற்றெச்சங்கள். எழு முழ முயர்தல் என்றது முன் காட்டப்பட்டது. (கரு)

தொட்ட புற்கி ழங்கு வாடை தொடைவி ரைந்து கண்ணியுட்
பட்ட வும்பொ றித்து வைத்த பார்வை வீழ்ந்த டுத்தவுங்
கட்டி யிட்ட வலையி ழைத்து ஞமலி கௌவ நின்றவு
மட்டி லாத வொட்டி நின்று மள்ளர் வேலின் மாய்ந்தவே.

(இ-ள்.) கல்லியெடுத்துவைத்த புல்லின் கிழங்கின் வாடைவீச விரைந்தோடிக் கௌவி வலையிற்பட்டனவும், எழுதி நாட்டிய பார்வையை நோக்கி விரும்பி வந்தடுத்தனவும், கட்டிய வலையினின்று தப்பி நாய்கள் கௌவ நின்றனவுமாகிய அளவில்லாதனவாகிய மிருகங்கள் பதுங்கிநின்ற வேட்டமாக்கள் வேலினாலிறந்தன. எ-று.

பட்ட மாவொ ழிந்து நின்ற மறவி லங்கு பல்சில
வட்ட மாவ ளைந்து டுத்த வலையி னுந்தி யப்புறத்
தெட்டி நின்ற கொலைஞர் மேலெதிர்ந்து மீள வெய்யில்வளைந்
தொட்டி னை மலை மாப்பொ றிக்க ணங்க ளொத்தவே.

(இ-ள்.) இறந்த மிருகங்களொழியப் பிழைத்துநின்ற மிருகங்களுள் பலவுஞ் சிலவும் மண்டலமாக வளைந்து சூழ்ந்த வலையினின்றுந் தாவி அப்புறத்தில் அடுத்துநின்ற வேட்டுவமாக்கண்மேற் பாய்ந்து மீளுதல், மதிலை முற்றுகைசெய்து போர் செய்யநின்ற வீரர்களோடு போர் செய்யவமைத்த யந்திரங்களாகிய மிருகங்களை யொத்திருந்தன. எ-று. (கஎ)

வல்லி யந்தொ ளைத்த கன்று மான்று ளைத்த கன்றுவெங்
கல்லி யங்கு மெண் கிணைத்து ளைத்த கன்று கயவுவாய்
வெல்லி பந்தொ ளைத்து மள்ளர் விட்ட வூளி யிங்ஙனஞ்
சொல்லி னுங்க டிந்து போய்த்து ணித்த மாவ ளப்பில.

(இ-ள்.) சேனைவீரர்களெய்த அம்புகள் (முனிவர்) சாபத்தினும் விரைந்து சென்று புலிகளைத் தொளைத்துருவி, மான்களைத் தொளைத்துருவி, வெவ்விய மலைகளில் வாழும் கரடிகளைத் தொளைத்துருவி, பெரிய வாயையுடைய வெற்றிபொருந்திய யானைமேற்றைத்து, இவ்வாறு துண்டுபடுத்திய மிருகங்கள் எண்ணிறந்தன. எ-று.

முனிவர் சாபம் சபிக்கப்பட்டவர்பேரில் அப்பொழுதே செல்லுதலின் சொல்லினுங் கடிந்துபோய் என்றார். (கஅ)

மடுத்த வாளி யிற்பி ழைத்து வலையை முட்டி யப்புறத்
தடுத்த மானை வெளவி நாய லைத்து நின்ற வாதிநா
ளடுத்த பாச வலையி னின்று மூய்கு வாரை யொய்யெனத்
தடுத்த வாவி ளைத்து நின்ற தைய லாரை யொத்தவே.

(இ-ள்.) பாய்ந்த அம்பினின்றுந் தப்பிக் கட்டிய வலையினின்றுந் தாண்டி, அப்புறஞ்சென்ற மானினை நாய்கள் சென்று புறஞ்செல்லவொட்டாமல் வருத்தி நின்றன; இதுமுன்னுளிலே விடாது தொடர்ந்த ஆணவமலமாகியவலையினின்றுந் தப்பிப் பிழைக்க முயலும் பெரியோர்களை, விரைந்து செல்லவொட்டாமற்றடுத்து முன்னின்று (ஆடையணிமுதலியவற்றால்) ஆசையை விளைவிக்கும் பெண்கள் செயலை யொத்திருந்தன. எ-று. (கக)

மதியை நேர்வ கிர்ந்து கௌவி யனைய வான்ம ருப்புவெங்
கதிய வேழ மீது தாது காலு நீல முகையினி
னுதிய வேனு ழைந்த செம்பு னூழில் வீழு முதிரநீர்
முதிய கான வரையின் மீது மொய்த்த தீயை யொத்தவே.

(இ-ள்.) சந்திரனைச் சரிபாதியாகப்பிளந்து கௌவியதுபோன்ற வெள்ளிய கொம்புகளையுடைய வெய்ய நடையையுடைய யானையின்மேல், மகரந்தத்தைச் சிந்தும் நீலோற்பலத்தின் அரும்புபோல விடம் பூசிய முனையையுடைய வேற்படை தைத்தலால், அந்த யானையின் செவந்த தசைகளினின்றும் விழுகின்ற உதிரவெள்ளமானது, பெரிய காடடர்ந்த மலையின்மேல் நெருங்கிய தீத்திரளை யொத்திருந்தன.

நுழைந்த - காரணப்பொருளில் வந்த பெயரெச்சம். தைத்தலால் என்றும். நீலமுகையில் நுதியவென்றது பண்புபற்றிய வுவமையாதலின் விடம் பூசிய வெனப் பொருளின் குணத்தை விரித்தாம். (உ0)

மள்ள ரோசை துடியி னோசை வயிரி னோசை வாளிபோய்த்
தள்ள வீழ்வி லங்கி னோசை தப்பி யோடு மானின்மேற்
றுள்ளு நாய்கு ரைக்கு மோசை கரன மூடு தொக்குவா
னுள்ளு லாயு டன்றெ லிக்கு முருமி னோசை புரையுமால்.

(இ-ள்.) வீரர்கோஷமும், உடுக்கையொலியும், ஊதுகொம்பின் முழக்கும், அம்புகள் சென்று தாக்க விழும் மிருகங்களின் ஆர்ப்பரிப்பும், தப்பியோடிய மான்களின்மேலே தாவிச்செல்லும் நாய்கள் குரைக்கின்ற குரைப்பும், காட்டில் ஒருசேரத் திரண்டு, மேகத்திற்றோன்றி மிக்கொலிக்கும் இடியினோசையை யொத்திருக்கும்.

இன்ன வேறு பல்வி லங்கெ லாமு லைத்தி லங்குவேன்
மன்ன னேறு தென்னர் கோம கன்கு டக்கி னேகுவா
னன்ன போதொ ரேன மேன வீரசி ருக்கு மடவியாப்
முன்ன ரோடி வந்து நின்று வந்த செய்தி மொழியுமால்.

(இ-ள்.) இப்படிப் பல வேறுவகைப்பட்ட மிருகங்களையெல்லாம் வருத்தி விளங்கும் வேற்படை தாங்கிய அரசர்களுள் ஆண்சிங்கத்தையனைய இராசராசபாண்டியன் (அங்கிருந்து) மேற்றிசைநோக்கிச் செல்கின்றவனாயினன். அப்பொழுது ஒரு பன்றியானது பன்றிவேந்திருக்குங் காட்டில் முற்பட வோடிவந்து (ஒதுங்கி) நின்று, தான் வந்த செய்தியைக் கூறாநிற்கும். எ-று. (உஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எங்களுக் கரசே கேட்டி யிங்குள மிருக மெல்லாந்
திங்களிக் கரசன் கொன்று வருகின்றா னென்று செப்ப
வெங்களிப் படைந்து பன்றி வேந்தனு மடுபோ ராற்றச்
சங்கையுற் றெழுந்து போவான் றன்னுயிர்ப் பெடையை நோக்கா.

(இ-ள்.) எங்களுக்கரசனே! கேட்பாய். இக்காட்டிலுள்ள மிருகங்களையெல்லாம் இராசராசபாண்டியன் கொலைசெய்துவருகின்றானென்றுகூற, பன்றியரசனும் வீரச்செருக்கடைந்து கொல்லும் போர்த்தொழில்புரிய மேற்கொண்டெழுந்து போகின்றவன் தனது உயிர்போன்ற பெண்பன்றியைப் பார்த்து. எ-று. (உரு)

இன்றுபாண் டியனை நேரிட் டிருஞ்சம ராடி வென்று
வன்றிறல் வாகை யோடு வருகுவ னேயோ வன்றிப்
பொன்றுவ னேயோ நீயுன் புதல்வரைப் பாது காத்து
நன்றிவ ணிருத்தி யென்ன நங்கைப்பே டின்ன கூறும்.

(இ-ள்.) இப்பொழுது பாண்டியனை யெதிர்த்துப் பெரிய போர் புரிந்து வலிய வீரத்தால் அவனை வென்று வெற்றிமாலை புனைந்துவருவேனோ? அன்றி அவனால் இறப்பேனோ? நீ உன் மக்களைப் பாதுகாத்துச் சுகமாயிருப்பாயென்று கூற, சிறந்த பெண்பன்றி யிதனைக் கூறாநிற்கும். எ-று. (உச)

ஆவியங் கேக விந்த வாகமிங் கிருப்ப தேயிப்
பாவியோ மேனை யிந்தப் பறழினை வகுத்த தெய்வ
மாவம ராடி வென்று வருதியேல் வருவே னன்றி
நீவிளிந் திடத்து மாய்வே னிழலுக்குஞ் செயல்வே றுண்டோ.

(இ-ள்.) எனது பிராணன் அங்குப் போர்க்குச்செல்ல, இந்தத்தேகம் இவ்விடத்திற் சுகமாயிருப்பதும் வழக்கோ? முற்பிறப்பில் இந்தப் பாவமிகுதியையுடைய எனக்கோ இக் குட்டிகளைத் தெய்வம் தந்தது. (பாண்டியனோடு) பெரிய போர்செய்து வருவாயானால்வருவேன். அதுவன்றி நீ (இறந்தால்) நீறந்தவிடத்திலிறப்பேன். உனது தேகநிழல்போலப் பின்செல்லும் எனக்கும் வேறுசெயலுளதோ? (எனக்கூற). எ-று.

போதுக மெழுக வென்னப் பொருக்கென வெழுந்து நீலத்
தாதுற மேழனப் பாட்டி தன்புடை தழுவிச் செல்லும்

பேதுறு பறழை நூக்கிப் பின்றொடர்ந் தணைந்து செல்லக்
காதெயிற் றெறுழி வேந்தன் காலென நடந்தா னன்றே.

(இ-ள்.) போவோம் எழக்கடவாயென்று பன்றியரசன் கூற, நீலோற்பலத்தின் மகரந்தத்தைப் போன்ற கருமைநிறம் பொருந்திய பெண்பன்றி (கணவனுக்கு முன்) விரைந்தெழுந்து, தனது பக்கலில் தழுவிச் செல்லும் மயக்கமிக்க குட்டிகளைத் தள்ளி, பின்றொடர்ந்து விடாது செல்ல, கொல்லும் வக்கிரதந்தங்களையுடைய அப்பன்றியரசன் காற்றைப்போலப் போருக்கு விரைந்து சென்றனன். எ-று. (௨௬)

பல்வகைச் சாதி யுள்ள பன்றியின் கணங்க ளெல்லாம்
வெல்படைத் தறுகட் சேனை வீரராய் முன்பு செல்லச்
செல்லெனத் தெழித்துச் செங்கட் டீயுக மான மென்னு
மல்லல்வாம் புரவி மேல்கொண் டெழுந்தனன் வராக வீரன்.

(இ-ள்.) பலவகைப்பட்ட சாதியாயுள்ள பன்றியின் தொகுதிகள் யாவும், வெல்லும் ஆயுதங்களையேந்திய அஞ்சாமையையுடைய சேனைவீரராய் முன்னேசெல்ல மேகம்போலக் கோஷித்து, செவந்த கண்களினின்றுங் கோபாக்கினி சிந்த, பன்றிகளுள் மிக்க வீரம் வாய்ந்த அரசன், மானமாகிய மிகவுந் தாவுங் குதிரையின்மேற் கொண்டெழுந்தனன். எ-று.

மானம்-போர்புரிகையில் அபஜயம் நேரிடின் பின்வாங்கி உயிர் வாழாமை எனப்படும். (௨௭)

முற்படு தூசியாக நடக்கின்ற முரட்காற் பன்றி
மற்படு சேனை நேரே வருகின்ற மன்னர் மன்னன்
வெற்படு தடந்தோள் வன்றாள் வீரர்மேற் சீறிச் செல்லப்
பிற்பட வொதுங்கி வீரர் பெய்தன ரப்பு மாரி.

(இ-ள்.) முன்னணியாகச்செல்கின்ற முருட்டுக்கால்களையுடைய பன்றிகள், மற்போரில் மிக்க தமது சேனைக்கு நேரே இராஜராஜ பாண்டியனுடைய மலையைச் செயித்த பெரிய தோளையும் முருட்டுக்கால்களையுமுடைய சேனைவீரர்கள்மேல் சீறிப் பாய, அவ்வீரர்கள் சிறிது பின்னே யொதுங்கிநின்று அஸ்திர மழையைச்சொரிந்தார்கள். எ-று. (௨௮)

சொரிந்தன சோரி வெள்ளஞ் சொரிந்தன வீழ்ந்த யாக்கை
சரிந்தன குடர்க ளென்பு தகர்ந்தன வழும்பு மூளை
பரிந்தன சேனங் காகம் படர்ந்தன வுயிரு மெய்யும்
பிரிந்தன வேன நின்ற பிறைமருப் பேனவீரர்.

(இ-ள்.) (பாய்ந்த) பன்றிகளிற் சிற்சில (மேகங்கள்போல) உதிரவெள்ளத்தைச் சிந்தின; உடலறுபட்டு விழுந்தன; குடல்சரிந்தன; எலும்புகள் நறுங்கின; வழும்பும் மூளைகளுங் கசிந்தன; பருந்துகளுங் காகங்களும் பரவின. (சில) உயிரும் மெய்யுந் தம்மினின்று நீங்கின. (உயிர்பிழைத்து)நின்ற பிறைச்சந்திரன்போன்ற வக்கிர தந்தங்களையுடைய ஏனப்பன்றி வீரர்கள். எ-று.

சொரிந்தனவென்னும் வினைமுற்று பெயராய் வினைமுதற் பொருண்மேல் நின்றது. (௨௯)

பதைத்தன ரெரியிற் சீறிப் பஞ்சவன் படைமேற் பாய்ந்து
சிதைத்தனர் சிலரைத் தள்ளிச் செம்புனல் வாயிற் சோர

வுதைத்தனர் சிலரை வீட்டி யுரம்புதை படக்கோ டூன்றி
வதைத்தனர் சிலரை நேரே வகிர்ந்தனர் சிலரை மாதோ.

(இ-ள்.) பதைத்துத் தீப்போலக்கோபித்துப் பாண்டியனுடைய சேனைவீரர் மேற் பாய்ந்து சில வீரர்களை யழித்தார்கள்; உதிரவெள்ளம் வாயினின்றுஞ்சோரச் சில வீரர்களைக் கீழேதள்ளி யுதைத்தார்கள்; சிலவீரர்களை மார்புகளிற் புதையத் தமது வக்கிர தந்தங்களை யழுத்தி வதைத்தார்கள்; சில வீரர்களை நேரே பிளந்தார்கள். எ-று.

தாள்சிதைந் தாருஞ் சில்லோர் தலைசிதைந் தாருஞ் சில்லோர்
தோள்சிதைந் தாருஞ் சில்லோர் துடைசிதைந் தாருஞ் சில்லோர்
வாள்சிதைந் தாருஞ் சில்லோர் வரையறுத் தலரோன் நீட்டு
நாள்சிதைந் தாருஞ் சில்லோர் நராதிபன் சேனை வீரர்.

(இ-ள்.) இராஜராஜ பாண்டியனுடைய சேனை வீரர்களில், சிலர் கால்முரிந் தவரும், சிலர் தலையறுபட்டு வீழ்ந்தவரும், சிலர் தோளறுபட்டு வீழ்ந்தவரும், சிலர் வாளையேந்திய கையறுபட்டு வீழ்ந்தவரும், சிலர் வரையறைசெய்து பிரமதேவனெழு திய ஆயுள்காலங் கழிந்தவரு மாயினார்கள். எ-று.

வாள்-கைமேல் நின்றது. இது விடாதவாகுபெயர். (௬௧)

கண்டனர் கன்னி நாடு காவல னமைச்சர் சீற்றங்
கொண்டனர் முசல நேமி கூற்றென வீசி யார்த்தார்
விண்டனர் மாண்டார் சேனை வீரரு மனைய வெல்லைப்
புண்டவ ழெயிற்று வேந்தைப் புடைநின்ற பேடை நோக்கா.

(இ-ள்.) பாண்டிநாட்டிறைவனாகிய இராஜராஜ பாண்டியனுடைய மந்திரி கள்கண்டு சினங்கொண்டு இருப்புலக்கைகளையுஞ் சக்கரங்களையுமெறிந்து கோஷித் தார்கள். பன்றிச் சேனைவீரரு முயிர்விட்டிறந்தார்கள். அப்பொழுது தளசயுலவும் வக் கிர தந்தங்களையுடைய பன்றிராசனைப் பக்கலினின்ற பெண்பன்றி பார்த்து. எ-று.

இதுமுத லிரண்டு செய்யுள்கள் குளகம்.

கண்டனர் கொண்டனர் விண்டனர் என்னும் வினைமுற்றுகள் வினையெச் சப் பொருளன. (௬௨)

ஏவிய சேனை யெல்லா மிறந்தன வினிநாஞ் செய்ய
லிவ்வதென் வாளா நாமு மழிவதிங் கென்னை தப்பிப்
போவதே கரும மென்று புகன்றதத் துணையை நோக்கிச்
சாவதை யஞ்சா வேனத் தனியர சொன்று சாற்றும்.

(இ-ள்.) (நாம் போருக்கு) ஏவியசேனை யாவும் மடிந்தன. இனி நாம்செய் யக்கடவதென்ன? இவ்விடத்திற் பயனின்றி நாமும் உயிர்விடுதலிற் பயனென்னை? உயிர்தப்பிப் பிழைத்துப்போவதே காரியம் என்று கூறியது. உயிர் விடுகைக்கு அஞ் சாத அப்பன்றியானது அப் பெண்பன்றியைப்பார்த்து ஒருசெய்திகூறுநிற்கும். எ-று.

நுண்ணறி வுடைய ராகி நூலொடு பழகினாலும்
பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத் தாத லாலுன்
கண்ணறி வுடைமைக் கேற்ற காரிய முணர்த்தாய் மான
மெண்ணறி வுடையோர்க் கெல்லா மிழுக்குடைத் தன்றோ வீதால்.

(இ-ள்.) நுட்ப புத்தியையுடையவராகி நூலாராய்ச்சியிற் பழகினாலும், பெண்புத்தியென்று கூறுவதெல்லாம் பேதைமையையுடையது ஆகையால், உன்னிடத்

துள்ள உணர்ச்சியுடைமைக்குப் பொருந்திய செய்கையளவுகூறினுய். மானத்தைக் கருதும் உணர்வுடையவர்க்கெல்லாம் இச்செயல் குற்றமுடையதல்லவா? எ-று.

"நுண்ணறி வுடையராய் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே" என்றது ஆசிரியவசனம் என்னை,

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கு—முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்" என்றது முறையாதலின். (கூச)

தூங்கிருள் வறுவாய்ச் சிங்க மிரண்டுறை துறையின் மாடோர்
வாங்கிரு மருப்புக் கேழல் வந்துநீர் பருகி மீளும்
வீங்கிரு ளுடற்கா ரேன மொன்றுறை துறையில் வீரந்
தாங்கிரு மடங்க னீர்க்குத் தலைப்பட வஞ்சு மன்றே

(இ-ள்.) நிலைபெற்ற இரவில் உலர்ந்தவாயையுடைய இரண்டு சிங்கங்கள் பருகவசிக்கும் நீர்த்துறையினிடத்தில், வளைந்த வக்கிர தந்தங்களையுடைய ஒருபன்றி வந்து நீர்பருகித் திரும்பும். மிக்க கருநிறம்வாய்ந்த சரீரத்தையுடைய பெரியபன்றி யொன்று பருகவசிக்கும் நீர்த்துறையில் வீரமிக்க இரண்டு சிங்கங்கள் தண்ணீர்பருகுதற்கு வர அஞ்சாநிற்கும். எ-று. (கூரு)

அத்திடமரபின் வந்து பிறந்துமே ளாதலாலே
கைத்திடு தாரான் வீரங் கவர்ந்திசை திசையும் வானும்
வைத்திட வல்லே னன்றி மடிந்திட வல்லே னாகிற்
பொய்த்திடு முடம்பே யன்றிப் புகழுடம் பழிவ துண்டோ.

(இ-ள்.) (யான்) அவ்வகைய திறம்வாய்ந்த குடிப்பிறப்பிற் பிறந்தவனாதலின், வேப்ப மாலையணிந்த பாண்டியனுடைய வீரத்தைக் கொள்ளைகொண்டு என் பிரதாபத்தைத் திக்குகளிலும் ஆகாயத்திலும் நிறுத்த வல்லேன். அல்லது இறக்க வல்லேனாகில், நிலைபெறாத பூதவுடம்பு அழிவதல்லாமல், புகழுடம்பு அழிதலுளதா? (இல்லை.) எ-று.

கைத்தல்-கசத்தல். குணகுணிகட் கொற்றுமை யுண்மையின், குணத்தைக் குணிமேலேற்றி "கைத்திடுதாரான்" என்றார். (கூசு)

கலிநிலைத்துறை.

நீநில் லெனத்தன் பெடைதன்னை நிறுத்தி நீத்தென்
கானில் லெனவாழ் கருமாவின் கணங்க ளெல்லா
மூனில் லுயிருண் டனமென்றினி யோடல் கூடற்
கோனில் லெனவார்ப் பவன்போலக் கொதித்து நேர்ந்தான்.

(இ-ள்.) (அஞ்சுகின்ற) நீ நிற்கவென்று தன் பெண்பன்றியை நிறுத்திப் பிரிந்து, என் காட்டை வீடாகக்கொண்டுவாழும் பன்றியின் கூட்டங்களையெல்லாம் உடம்பிலுள்ள வுயிரைக்கவர்ந்தோமென்று இனிச் செல்லற்க. பாண்டியனே! நிற்க வென வீரகோஷஞ் செய்பவனைப்போலப் பொங்கிப் போர்செய எழுந்தான். எ-று.

இச்செய்யுள் நெடுமொழி வஞ்சித்துறை. (கூஎ)

நிலத்தைக் கிளைத்துப் பிலங்காட்டி நிமிர்ந்த தூள்வான்
றலத்தைப் புதைப்பத் தனியேன வரவு நோக்கி

வலத்தைப் புகழ்ந்தான் வியந்தான்சிலை வாங்கி வாளிக்
குலத்தைச் சொரிந்தான் பொருநைத்துறைக் கொற்கை வேந்தன்.

(இ-ள்.) பூமியைப்பறித்துப் பாதலத்தைக்காட்டி மேலெழுந்த தூட்படலம் விண்ணகத்தைப்பொதிய, ஒப்பில்லாத பன்றியின் வருகையைப்பார்த்து, தாமிரபர்ணித்துறைக்கும் வைகைத்துறைக்கும் அரசனாகிய பாண்டியன், அதன் வீரத்தைப் புகழ்ந்து மெச்சி, வில்லைவளைத்துப் பாணக்கூட்டத்தை (மழையாக)ப் பொழிந்தான்.

கொற்கை-வைகையின் துறையெனச் சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் எழுதிய உரையிற் கண்டது. (௩௮)

குறித்துச் செழியன் விடுவாளியைக் கோல வேந்தன்
பறித்துச் சிலவா ளியைவாய்கொடு பைம்பு லென்னக்
கறித்துச் சிலவா ளியைக்காலகொடு தேய்த்துத் தேய்த்து
முறித்துச் சிலவா ளியைவாலின் முறித்து நின்றான்.

(இ-ள்.) தன்னைக் குறியாகக்கொண்டு பாண்டியனெய்யும் பாணங்களைப் பன்றியரசன் உடலினின்றும் பறித்தும், சிலபாணங்களைப் பசியபுல்லைப்போலக் கறித்தும், சில பாணங்களைக் காலால் நிலத்திற் றேய்த்துத் தேய்த்து முறித்தும், சில பாணங்களை வாலினால் முறித்தும் நின்றனன். எ-று. (௩௯)

மானம் பொருது மதியின்வழி வந்த வேந்தன்
றானம் பொருது கவிழ்க்கும்புகர்த் தந்தி கையி
லூனம் பொருத முசலங்கொடுத் தேறி யுய்த்தா
னேனம் பொருதார்த் திடியேற்றி னெழுந்த தன்றே.

(இ-ள்.) சந்திரமரபிற் றோன்றிய இராஜராஜபாண்டியன் மானமீக்கூர்ந்து, மதப்பெருக்கினை யாற்றுதொழுக்கும் புள்ளி தங்கிய (முகத்தையுடைய) யானையின் துதிக்கையில், குற்றமற வகுத்த இருப்புலக்கையைக்கொடுத்து அந்த யானைமேலேறிச் செலுத்தினான். பன்றியானது கோபமாற்றாது கோஷித்து இடியேறு போலப் போருக்கெழுந்தது. எ-று. (௪௦)

தந்திப் பொருப்பைத் துணிக்கென்று தழன்று சீற்ற
முந்திக் கதலிக் கொழுந்தண்டென வூசற் கையைச்
சிந்திப் பிறைவா ளெயிற்றோச்சிச் சிதைத்து விட்ட
முந்திக் கடுந்தேர் மிசைப்பாய்ந்தனன் மூரித் தாரான்.

(இ-ள்.) யானையாகிய மலையைத் துண்டுபடுத்தக்கடவேனென்று கருதிக் கொதித்துக் கோபங்கொண்டு, கொழுவிய வாழைத்தண்டுபோல ஊசலாடுங் கையைத் துணித்து, பிறைபோன்ற ஒள்ளிய வக்கிர தந்தத்தால் அழித்துக்குத்தி யழுத்திக் கொல்ல, பழைமையாகிய (வேப்பமலர்) மாலையணிந்த இராஜராஜபாண்டியன் விரைந்துசெல்லுந் தேரின்மேல் முற்பட்டுப் பாய்ந்தனன். எ-று. (௪௧)

திண்டேர் மிசைநின் றடனேமி திரித்து விட்டான்
கண்டேன வேந்தன் விலக்கிக்கடுங் காலிற் பாய்ந்து
தண்டே ருடையத் தகர்த்தான்பரி தன்னிற் பாய்ந்து
வண்டேறு தாரான் விடவேலை வலந்திரித்தான்.

(இ-ள்.) வலிய தேரின்மேலேறிக்கொல்லுஞ் சக்கரத்தைச் சுழற்றியெறிந்தனன். பன்றியரசன் கண்டு அதனைவிலக்கி, கடிய காற்றைப்போல விரைந்து பாய்ந்து தண்ணிய நிழல்வாய்ந்த தேர் சிதையும்படி யுடைத்தான். வண்டுகள் குடிகொ

ண்ட மாலையணிந்த பாண்டியன் குதிரைமேற் பாய்ந்து விஷம்பூசிய வேலினை வலம் படத்திரித்தனன். எ-று. (சஉ)

சத்திப் படைமேல் விடுமுன்னர்த் தறுகண் வீரன்
பத்திச் சுடர்மா மணித்தார்ப்பரி மாவின் பின்போய்
மொத்திக் குடர்செம் புனல்சோர முடுகிக் கோட்டாற்
குத்திச் செகுத்தான் பொறுத்தானலன் கூடல் வேந்தன்.

(இ-ள்.) வேற்படையை விடுவதற்கு முன்னரே அஞ்சாமையையுடைய பன்றி வேந்தன் கிரண வரிசையையுடைய சிறந்த இரத்தினங்களழுத்திய கிண்கிணி மாலை பூண்ட அக்குதிரையின் பின் சென்று தாக்கி, குடலும் உதிரமுஞ் சோரவிரைந்து தனது வக்கிரதந்தத்தாற் குத்திக் கொன்றனன். பாண்டியன் மானமீக் கூர்ந்து.

மண்ணிற் குதித்து வலிகண்டு வராக வேந்தை
யெண்ணித் தலையிற் புடைத்தான்கை யிருப்புத் தண்டாற்
புண்ணிற் படுசெம் புனலாறு புடவி போர்ப்ப
விண்ணிற் புகுந்தான் சுடர்கிறி விமான மேலால்.

(இ-ள்.) (குதிரையினின்றும்) பூமிமேற் குதித்து அதன்வன்மையைக் கண்டாராய்ந்து கையிலேந்திய இருப்புத் தண்டத்தாற் பன்றி வேந்தனைத் தலையி லடித்தனன்; அடிபட்ட புண்ணினின்றொழுகும் உதிரவெள்ளம் நிலவுலகைப் போர்க்க, சூரியமண்டலத்தைக் கிழித்துச் சென்று விமானமேல் வீரசுவர்க்கஞ் சென்றனன்.

வேனிற் கிழவோனில் விளங்கி வியந்து வானோர்
தேனிற் பொழிபூ மழைபெய்ய நனைந்து தெய்வக்
கானத் தமுதுண் டிருகாது களித்து வீர
வானத் தமுதுண் டரமங்கையர் கொங்கை சேர்ந்தான்.

(இ-ள்.) மன்மதனைப்போல விளங்கித் தேவர்கள் அதிசயித்துப் பொழியும் புஷ்பவருஷம் தேனைப் பெய்ய நனைந்து, தேவகானமாகிய அமுதை இரண்டு காதாலும் பருகிக் களிப்படைந்து, வீரசுவர்க்கத்திலுள்ள தேவாமிர்தத்தை வாயாற் பருகி, அரமகளிர் குஜத்தை யணைந்தனன். எ-று.

உம்மை - இனைத்தென வறிபொருளில்வந்த முற்றுப்பொருட்டு. என்னை, "இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள் - வினைப்படுத் துறைப்பி னும்மை வேண்டும்" என்றது சூத்திரம். (சடு)

கலிவிருத்தம்.

பினறுணை யாய பெடைத்தனி யேன
மென்றுணை மாய விருப்பது கற்போ
வென்றில னேனும் விசும்படை வேனு
லென்றிகல் வேந்தை யெதிர்த்தது குருத்தே.

(இ-ள்.) அதன்பின், துணையாக நின்ற ஒப்பில்லாத பெண் பன்றியானது எனது உயிர்க்கேள்வ னிறக்க நானிருந்துயிர் வாழ்வது கற்பியலோ? வெற்றி பெறுக லேனுயினும், வீரசுவர்க்கத்தை யடைவேனென்று, பகைகொண்ட இராசராசபாண்டியனைக் கோபித்துப் போர்செய்ய எதிர்த்தது. எ-று. (சகூ)

விறனவில் பேட்டை விளிப்பது வேந்தர்க்
கறனல வென்றவ னுள்வினை மள்ளர்க்

கிறைமக ஞன சருச்சர னென்றோர்
மறமக னேர்ந்தம ராட வளைந்தான்.

(இ-ள்.) வீரங்கூறிப் போர்க்கெதிர்ந்த பெண்பன்றியைக் கொல்வது இராசராசபாண்டியனுக்குப் போர்த்தரும மல்லவென்று, அப்பாண்டியனேவிய வினைமுயலும் மறிவீரர்களுக்குப் பதியாகிய சருச்சரனென்று சொல்லப்பட்ட ஒரு வீரன் எதிர்த்து (அப்பன்றியோடு) போர்புரியச் சூழ்ந்தான். எ-று. (சுஎ)

நனிபொழு தாடம ராடின னஞ்சிற்
கனிசின வன்பெடை காய்சின வேடத்
தனிமக னைத்தரை வீட்டின தாற்ற
லினியிலை யென்ன விளைத்துயிர் சோர்வான்.

(இ-ள்.) நெடுநேரம் வெற்றிதரும் போர்செய்தனன்; விஷம்போலக் கொடுமை பழுத்த கோபத்தையுடைய வலிய பெண் பன்றி, கொதித்தெழுங் கோபத்தில் ஒப்பற்ற வேட்டுவ வீரனை நிலத்திற் றள்ளியது. போராற்றும் வன்மை இனிச் சிறிதுமில்லையென்றுகூற இளைத்து உயிர்சோரும் அவ்வீரன். எ-று. (சுஅ)

இரும்புசெய் தண்டினை யிம்மென வோச்சிப்
பொரும்பெடை சென்னி புடைத்து விளிந்தான்
விருந்தின ராயிரு வோரும் விமானத்
தருந்திறல் வான மடைந்தன ரன்றே.

(இ-ள்.) இரும்பினாற் செய்த தண்டாயுதத்தை விரைந்து ஓச்சி, போர்செய்யும் அப்பெண் பன்றியின் தலைமேலடித்துத் தானும் இறந்தான். (மடிந்த) இருவரும் (தேவர்கட்கு) விருந்தினராய் விமானத்திலேறி, அரிய வீரசுவர்க்கத்தில் அடைந்தார்கள். எ-று. (சுகூ)

வன்றிறன் மன்னவர் மன்னவ னுந்தன்
பொன்றிகழ் மாநகர் புக்கன னிப்பாற்
பன்றி விழுந்து பருப்பத மாகா
நின்றது பன்றி நெடுங்கிரி யென்ன.

(இ-ள்) மிக்க வெற்றிவாய்ந்த இராசராசபாண்டியனும் தன்னுடைய இலக்குமி விளங்குந் திருநகரமடைந்தனன்; இப்புறம் நெடிய வராககிரி யென்று (கண்டோர்) சொல்லப் பன்றியானது வீழ்ந்து பருப்பதமாகிப் பொலிந்தது. எ-று. (எ0)

அன்று தொடுத்தத னுக்கது பேரா
யின்றும் வழங்குவ திம்பரி லந்தக்
குன்றி லருந்தவர் விஞ்சையர் கோபம்
வென்றவ றெண்ணிலர் வீடுற நோற்பார்.

(இ-ள்.) இவ்வுலகத்தில், அக்காலந்தொட்டு இதுகாறும் அம்மலைக்குப் பன்றிமலையென்று அப்பெயரோயாய் வழங்காநின்றது. அந்த மலையில் அரிய தபோதனர்களும் வித்தியாதரர்களுங் கோபத்தை யொழித்த யோகிகளுமாகிய அளவிறந்தோர் வசித்து, சிவகதியடையத் தவஞ்செய்கின்றார்கள். எ-று.

கோபம் வென்றவர் என்றது கோபம் தவத்திற் கிடையூறாதலின் அதனைச் செயித்தவரென்றது பொருள். (எக)

கலிநிலைத்துறை.

என்று கூறிய வருந்தமிழ்க் கிறைவனை நோக்கித்
துன்று மாதவ ரறிவிலாச் சூகர வுருவக்
குன்றின் மீதருந் தவமெலாங் கோதற நோற்று
நின்ற காரணம் யாதெனக் குறுமுனி நிகழ்த்தும்.

(இ-ள்.) என்று சொல்லிய அகத்தியமுனிவரைப் பணிந்து, நெருங்கிய பெருந்தபோதனர்களும், அறிவில்லாத பன்றி வடிவமைந்த மலையின்மேலிருந்து அவ்விஞ்சையர் முதலிய யாவரும் குற்றமறத் தவஞ்செய்துநின்ற காரணம் யாது? எனவினவ, அந்த அகத்தியமுனிவர் கூறி யருளுகின்றார். எ-று.

தமிழ்க்கிறைவர் என்றது அகத்தியருக்கு காரண ஆக்கப்பெயர். இது வடமொழிக்குப் பாணினியார் இறைவராதல்போலத் தென்மொழிக்கு அகத்தியர் இறைவராதலி னென்க. (௩௨)

வேனில் வேளென விளங்குவிச் சாதர னென்னுந்
தான யாழ்மகன் புலத்தியன் றவத்தினுக் கிடையூ
றான பாண்செயப் பன்றியாச் சபித்தன னறவோ
னென்ன மாகுவே னுய்வதென் றெனக்கென முனிவன்.

(இ-ள்.) வேனிற்காலத்திற்குரிய மன்மதனைப்போல விளங்கும் வித்தியாதரனாகிய தானங்களமைந்த வீணையில் வல்ல *ஓர்யக்ஷன், புலத்தியமுனிவர் தவத்திற்கிடையூறுள்ள இசைப்பாடல் பாட, அம்முனிவன் (வித்தியாதரனை) பன்றியாகச் சாபந்தந்தனன். பன்றி வடிவாகும் அந்தயக்ஷன் (பன்றி வடிவினின்று) எப்பொழுது எனக்குத் தீர்வு உறுவதென்று வினவ, அப்புலத்தியமுனிவன். எ-று.

*இவன் பெயர் ரிங்கி யென வடநூலார் கூறினர். (௩௩)

மன்னர் மன்னனுந் தென்னவன் வந்துநின் வனத்திற்
றுன்னு பல்வகை விலங்கெலாந் தொலைத்துனை மாய்க்கும்
பின்ன ரிவ்வுருப் பெறுகெனப் பணித்தன னியக்க
னன்ன வாறுவந் திறந்துபின் பழவுரு வடைந்தான்.

(இ-ள். )இராசராசனாகிய பாண்டியன் வேட்டமேல் வந்து உனது காட்டில் நெருங்கிய பலவகை மிருகங்களை யெல்லாங் கொன்று, உன்னையுங் கொல்லுவான். பின்பு இந்த யக்ஷவடிவத்தைப் பெறக்கடவாயென்று பணித்தருளினர். அவ்வித்தியாதரன் அப்படியே வந்து (பிறந்து) இறந்து பின்னர் பண்டுள்ள உருவத்தை யடைந்தனன். எ-று.

பணித்தல் - அருளிச்செய்தல். (௩௪)

ஆய புண்ணிய விஞ்சைய னாகமாய்க் கிடந்த
தூய நீரதா லவ்வரை மீமிசைத் துறந்த
பாய கேள்விய ரிறைகொளப் பட்டதெவ் வுயிர்க்கு
நாய னார்மது ரேசரு நயந்தவ ணுறைவார்.

(இ-ள்.) அந்த மலை இவ்வாறாகிய புண்ணிய சொரூபமுடைய யக்ஷன் சரீரமாயிருந்த பரிசுத்தத்தன்மையையுடையது. (அதனால்) தன் மேல், பரந்த நூற்கேள்வியையுடைய முனிவர்களால் வசிக்கப்பட்டது. (அயன் முதலிய) எல்லா உயிர்கட்குந் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளும் அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கின்றனர். எ-று.

என்ற கத்தியன் விடைகொடுத் தியம்பின னிப்பாற்
பன்றி யேற்றையும் பாட்டியும் பைம்புனத் திட்டுச்
சென்ற விந்தபின் பன்னிரு குருளையுந் திகைப்புற்
றன்ற லக்கணே யுழந்தமை யாரளந் துரைப்பார்.

(இ-ள்.) என்று அகத்தியமுனிவர் விடை தந்தருளினர்; இப்புறம் ஆண் பன்றியும் பெண் பன்றியும் பசிய வனத்தில் தங்குட்டிகளை யிட்டுப் போர்க்குச் சென்று இறந்தபின், அப்பன்னிரண்டு குட்டிகளும் (தாய் தந்தையரை இழத்தலால்) மயங்கி, அக்காலையில் துன்பநோயடைந்ததை வரையறுத்துக் கூறுவோரெவர்? (ஒருவருமிலர்) எ-று. (௩௯)

ஓடு கின்றன தெருமர லுழலுவன நிழலைத்
தேடு கின்றன தாய்முலைத் தீயபால் வேட்டு
வாடு கின்றன தாகவெம் பசிநனி வருத்த
வீடு கின்றன வெயில்சுட வெதும்புகின் றனவால்.

(இ-ள்.) (தாய்தந்தையர்களைப் பெருமல்) ஓடியும், சுழன்றும், நிழலைத் தேடிச் சென்றும், தாய்முலையின் இனிய பாலை விரும்பி வாடியும், தாகமுங் கொடிய பசியும் மிகவும் வருத்த உயிர் சோர்ந்தும், சூரியகிரணஞ் சுட்டுவருத்த வெம்பி வருந்தாநின்றன. எ-று.

ஓடுகின்றன - உறுவன - தேடுகின்றன - வாடுகின்றன - வீடுகின்றன என்பன வினையெச்சப் பொருளில்வந்த வினைமுற்றுகள். (௪௦)

இன்ன வாறிவை யணங்குறு மெல்லைவேல் வல்ல
தென்ன ராகிய தேவர்க டேவரங் கயற்கண்
மின்ன ளொடு மின்னவிர் விமானமீ தேறி
யன்ன கானகத் திச்சையா லாடல்செய் திருந்தார்.

(இ-ள்.) இவ்வகையாகப் பன்றிகள் வருந்துங்காலையில், வேற்படையில் வல்ல சவுந்தரபாண்டியராய்த் திருக்கோலங்கொண்டருளிய தேவர்கட்குத் தேவராகிய சோமசுந்தரக்கடவுள் அங்கயற்கண்ணியாராகிய மின்னலையொத்த உமாதேவியாரோடும், ஒளி வீசி விளங்கும் விமானத்தின்மேலெழுந்தருளி, அக்காட்டில்தமதிச்சையால் திருவிளையாடல் செய்தருளியிருந்தனர். எ-று.

ஈண்டு இச்சை யென்றது இச்சாசத்தியை. இதனை,

"ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன் ருகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க்கரு ணேச மாகும்
நன்றெலா ஞான சத்தி யானயந் தறிவ னுதன்
அன்றருட் கிரியை தன்னு லாக்குவ னகில மெல்லாம்.''—என்பதனுனறிக.

என மென்பற ழுறுகணேய்க் கிரங்கினு ரிச்சை
யான வன்புதந் தத்துய ரகற்றுவா னீன்ற
மான வன்புடைப் பேடையின் வடிவெடுத் தயருங்
கான வன்பறழ் கலங்கஞர் கலங்கநேர் வந்தார்.

(இ-ள்.) பன்றியின் மெல்லிய குட்டிகளுற்ற துன்பமிக்க பசிநோய்க்கிரங்கி, தமதிச்சையாலாகிய அன்பு கூர்ந்து அத்துன்பத்தை யொழித்தருள, நிலைபெற்ற மிக்க வலிமையையுடைய பெண்வராகத்தின் கோலங்கொண்டு, காட்டிற்சோரும் வலிய அந்தக்குட்டிகளின் வருத்தும் பசித்துன்பங்கெட எதிரே வந்தருளினர். எ-று.

கிட்டு கின்றதந் தாயெதிர் கிட்டியுங் கிட்டி
முட்டு கின்றன மொய்ப்பன முதுகுறத் தாவி
யெட்டு கின்றன கால்விசைத் தெறிவன நிலத்தை
வெட்டு கின்றன குதிப்பன வோடுவ மீள்வ.

(இ-ள்.) நெருங்கிய தமது தாய்க்கெதிரே பன்றிக்குட்டிகளும் நெருங்கி முட்டியும் மொய்த்தும் முதுகிற் பொருந்தத் தாவி யெட்டியும் காலால் விசைத்தெறிந்து நிலத்தை வெட்டியும் குதித்தும் ஓடியும் திரும்பாநின்றன. எ-று.

தாயிழந்து துன்புறும் பன்றிக்குட்டிகள் தமது தாயைக்காணப்பெற்றதால் அவை செய்யும் ஆர்ப்பரிப்பை இச்செய்யுளாற் கூறினர். (சு0)

ஏன மின்னமுங் காண்பரி தாகிய வேன
மான மெய்ம்மயிர் முகிழ்த்திடத் தழுவிமோந் தருளின்
மான மென்முலை யருத்திமா வலனும்வன் றிறனு
ஞான மும்பெருந் தகையுநற் குணங்களு நல்கா

(இ-ள்.) (திருமாலாகிய) வராகம் இன்னுங் காண்டற்கரிய வராகமானது தனது சரீரத்திலுள்ள மயிர்கள் சிலிர்க்கத் தழுவி மோந்து, தனது பேரன்பாற் சுரந்த பெரிய முலைப்பாலூட்டி, பெரிய வலிமையும் மிக்க சதுரப்பாடும் ஞானமும் பெருந் தகைமையும் (இவையேயன்றிப் பிற) நற்குணங்களுமாகிய இவைகளை (அத் திரு முலைப்பாலுடன்) கொடுத்தருளி. எ-று. (சுக)

துங்க மாமுக மொன்றுமே சூகர முகமா
வங்கம் யாவையு மானுட யாக்கைய வாக்கிக்
கங்கை நாயகன் கடவுளர் நாயகன் கயற்கண்
மங்கை நாயகன் கருணையாந் திருவுரு மறைந்தான்.

(இ-ள்.) உயர்ந்த பெரிய முகமொன்றே (முன்புள்ள) பன்றிமுகமாகவமைத்து, (மற்ற) உறுப்புகள் எல்லாவற்றையும் மாநுடசரீரவுறுப்புகளாகச் சமைத்து, கங்கையின் தலைவரும் தேவர்களின் இறைவரும் அங்கயற்கண்ணியார் கணவருமாகிய சோமசுந்தரக்கடவுள் அருளுருவாகிய திருவுருவைக் கரந்தருளினர். எ-று. (சுஉ)

இம்மை யிப்பவத் தன்னையா யினிவரு பவமுஞ்
செம்மை செய்தசே தனத்தையுஞ் சேதனஞ் செய்தா
ரெம்மை யெப்பவத் தாயினு மெனைப்பல வுயிர்க்கு
மம்மை யப்பராய்க் காப்பவ ரவரலா லெவரோ.

(இ-ள்.) இவ்வுலகத்தில் இப்பிறவியில் (பன்றிக்குட்டிகளுக்குத்) தாயாய் இனி (அவைகட்கு) வரும்பிறவிகளையும் புனிதமாக்கி அறிவில்லாத அவ்வுயிர்களையும் அறிவுடைய உயிர்களாகச் செய்தருளினர். எப்பிறப்பிலாயினும் எமக்கும் மற்றைப் பல உயிர்களுக்குந் தாய்தந்தையராகிக் காப்பவர் அவரன்றி யாருளர். (ஒருவருமிலர்.)

எம்மை-நான்கனுருபு நிற்குமிடத்து இரண்டனுருபு நிற்றலின் உருபுமயக்கம் - ஈண்டு உம்மை தொக்கிநின்றது - எமக்கும் எனக்கொள்க. (சுரு)

பன்றிக்குட்டிகளுக்கு முலை கொடுத்த படலம்

முற்றிற்று.

ஆ-திருவிருத்தம் - உஉருசு.

---

உ

சிவமயம்.

## நாற்பத்தாறுவது,

# பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியபடலம்.

**கலிநிலைத்துறை.**

தந்தை தாயிழந் தலமருங் குருளையைத் தாயாய்
வந்து நாயகன் முலைகொடுத் தருளிய வகையீ
தந்த வாறிரு மைந்தரு மந்திர ராகி
யெந்தை யார்சிவ புரம்புகுந் திருந்தவா றிசைப்பாம்.

(இ-ள்.) மாதா பிதாக்களை யிழந்து வருந்தும் பன்றிக்குட்டிகளுக்குச் சோமசுந்தரக்கடவுள் தாயாய்த் திருவுருவங்கொண்டு வந்து முலை கொடுத்தருளிய திருவிளையாடலிது. அந்தப்பன்னிருபுதல்வரும் (இராசராசபாண்டியனுக்கு) மந்திரிகளாகி, பின்னர் எமது பெருமானுரது சிவபுரத்தை யடைந்த திருவிளையாடலை (இனி)க் கூறுவாம். எ-று. (க)

ஆதி நாயகன் றிருவுரு மறைந்தபின் னிழைய
கோதி லாறிரண் டேனமாக் குமரருங் காலைச்
சோதி யாறிரண் டருக்கர்போற் றோன்றிய பொருப்பி
லோதி யாய்ந்தபல் கலைஞரா யொருங்குவீற் றிருந்தார்.

(இ-ள்.) (தேவர்கள் யாவரிலும்) முதற்கடவுளாகிய சோமசுந்தரக்கடவுள் திருவுருவங் கரந்தருளிய பின்னர், அந்தக் குற்றமில்லாத வராகமுகத்தினையுடைய பன்னிரண்டு குமரர்களும் காலையிலுதித்த கிரணத்தையுடைய பன்னிரண்டு சூரியர்களைப்போல வொளிவாய்ந்து, கற்றுராய்ந்த பல கலைகளிலும் வல்லுநராய் அவ்வராக மலையில் ஒருசேர வீற்றிருந்தார்கள். எ-று.

**திருவாசகம்.**

"மன்ன வெம்பிரான் வருக வென்னெனை மாலு நான்முகத் தொருவன் யாரினு
முன்ன வெம்பிரான் வருக வென்னெனை முழுதும் யாவையு மிறுதி யுற்றநாட்
பின்ன வெம்பிரான் வருக" எனக்கூறிய பெரியோர் வாக்கின்படி, ஆதிநாயகன் என்றார். (உ)

அனைய ராயவர் வைகுநா ளறைபுனற் கூடற்
புனித நாயக னருட்டிற முயிர்க்கெலாம் பொதுவா
யினிய வாவன வென்பதை யாவருந் தேற
வனிதை பான்மொழி மங்கைதன் மணாளனை வினவும்.

(இ-ள்.) அவர்கள் அத்தன்மையராய் வாழுங்காலத்தில், ஒலிக்கும் நீர் சூழ்ந்த மதுராபுரியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளின் றிறங்கள் எல்லாவுயிர்கட்கும் பொதுமையாய் நின்று இன்பந்தருவனவென்று உண்மைநூல்கள் கூறுதலை யாவருந்தெளிய, பால்போன்ற (இனிய) சொற்களையுடைய அங்கயற்கண்ணம்மையார் தமது கணவனை வினவுகின்றார். எ-று.

அருட்டிறம்-அவரவர்திறத்திற்கேற்பத்திருவருட்டிறமும் பலவாறுகநிற்றல்.





பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியபடலம்.

வெவ்வி லங்கினும் வெய்யவா யசேதன விலங்கா
மிவ்வி லங்கெயிற் றேனமென் குருளைகட் கிரங்கிக்
கைவ்வி லங்கினை யெய்தநீ கருணையாய் முலைதந்
திவ்வி லங்கறி வகற்றிய தியாதென விறைவன்.

(இ-ள்.) கொடிய மிருகங்களிலுங் கொடியதாய், இழிந்த மிருகமாகிய விளங்குகின்ற வக்கிரதந்தங்களையுடைய இந்தப் பன்றியினது மெல்லிய குட்டிகளுக்குங் கருணைகூர்ந்து (சமணர்களேவிய) யானையை யெய்து சங்கரித்த தேவரீர் திருவருளால் தாயாக வந்து முலைகொடுத்தருளி, அந்த மிருகத்தின் அறிவொழித்தருளியது யாது? என்று வினவ, சோமசுந்தரக்கடவுள். எ-று.

பூர்வம் சமணர்க ளேவிய யானையை விக்கிரமபாண்டியனுக் கிரங்கி அவனைக்காத்தற்பொருட்டுக் கொன்றதேவரீர், மிருகபாதையை யகற்றும்படி குட்டிகளைக் காக்கக்கருதி வேட்டையாடி இராசராசபாண்டியனாற் கொல்லப்பட்ட பன்றியின் குட்டிகட்கு மனமிரங்கிய காரணம் யாது என வினவியதாம். (௪)

அகில வேதமு மாகம பேதமு நம்மைச்
சகல சீவத யாபர னென்றுரை சால்பா
லிகலில் சேதன மசேதன மாகிய விரண்டும்
புகலில் வேறல வெமக்கவை பொதுமைய வதனால்.

(இ-ள்.) எல்லா வேதங்களும் பலதிறப்பட்ட ஆகமங்களும் எல்லா ஆன்மாக்களிடத்தும் ஒருதன்மைத்தான தயாமூர்த்தியெனக்கூறும் பெருந்தகைமையால், மாறுபடுதலில்லாத வுணர்வுடைய வுயிர்களும் உணர்வில்லாத உயிர்களுமாகிய இரண்டு பொருள்களும், சொல்லுமிடத்து எமக்கு அவைகள் வேறல்ல. ஒருதன்மையன. அக்காரணத்தால். எ-று.

ஆகமங்கள் இருபத்தெட்டு வகையினவாதலின் "ஆகமபேதம்" என்றார். ()

தாயி ழந்துவெம் பசித்தழ லகஞ்சுடத் தழன்று
காயு மாதபம் புறஞ்சுடக் கானிடைக் கிடந்து
தீயு மேனமென் குருளைக டெருமரு விரங்கி
யாயு மாய்முலை யளித்துயி ரளித்தன மதனால்.

(இ-ள்.) தாயை யிழத்தலாலும், கொடிய பசியாகிய தழல் உள்ளே சுட்டுவருத்துதலாலும், கொதித்து வருத்துஞ் சுடுவெயிலானது புறத்திற் சுட்டுவருத்துதலாலும், காட்டிற் கிடந்து தீயாநின்ற பன்றியின் மெல்லிய குட்டிகள் சுழன்று வருந்த அவற்றிற்கிரங்கி, தாயுமாகி முலைகொடுத்து அவ்வுயிர்களை ஓம்பினோம்; அக்காரணத்தினால். எ-று.

திருமந்திரம்.

"வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாத னருளவை நாடிலிரண் டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"---என்றபடி.

சிவபெருமான் தம்மாற்கூறிய வேத சிவாகமங்கள் பொதுமைய வென்பதை யாவருங் கடைப்பிடித்துய்ய அசேதன யாக்கையைக் கொண்டருளினராதலின் ஆயுமாய் என்றதில் உம்மை இழிவு சிறப்பு. (௫)

அளவி லாற்றலுந் திறனுநல் லரும்பெறற் கல்வி
விளைவு ஞானமுங் கிடைத்தனர் மீனவற் கினிமேல்
வளைவி லாதகோ லமைச்சரால் வளம்பல பெருக்கிக்
களைவில் பாசநீத் தெம்பெருங் கணத்தவ ராவார்.

(இ-ள்.) எல்லையில்லாத வல்லமையும், திறமும், பெறுதற்கரிய நல்ல கல்வித்தேர்ச்சியும், ஞானமும் (எமது முலைப்பாலுண்ட சம்பந்தத்தால்) அடைந்தார்கள். இனிமேல் பாண்டியனுக்குக் கோடாத செங்கோலையுடைய மந்திரிகளாய் (அவனுக்குப் (பல செல்வ வளங்களையும் (மென்மேலும்) பெருகச் செய்து, நீய்குதலில்லாத பாசங்களினின்று நீங்கி, எமது பெரிய சிவகணத்தலைவர்களாவார்கள். எ-று.

இச்செய்யுள் காரணகாரிய மாலையணி. எடுத்த காரியத்தை முற்றுவிக்க வல்லமை வேண்டுதலின் அறிவிலாற்றலும், குணங்குற்றங்களை யாய்ந்து காரியங்களில் முயலச் சதுரப்பாடு வேண்டுதலின் திறனும், கல்வியறிவா லிடையூறின்றி அத்திறன் முற்றுப்பெறுதாதலின் அதன்பின் அரும்பெறற் கல்வி விளைவும், ஞானமின்றி அக்கல்வி யறிவு பயன்பெறுதாதலின் அதன்பின் ஞானமும், என முறைப்பட வைத்துக் கூறினர்.

வெட்டுவாய்தோறும், செம்பிற் கலந்துநிற்குங் களிம்புபோலப் பாசம் ஆன்மபோதத்தோடுங் கலந்து நிற்றலின் "களைவில் பாசம்" எனப்பட்டது. (எ)

என்று நாயக னுயகிக் கிறைகொடுத் தியம்பி
யன்று மீனவன் கனவில்வந் தரசகேள் பன்றிக்
குன்றி லேனமா முகத்தராய்ப் பன்னிரு குமரர்
வென்றி வீரராய் வைகுநர் மிக்கறி வுடையார்.

(இ-ள்.) என்று சோமசுந்தரக்கடவுள் அங்கயற்கண்ணம்மையாருக்கு விடைகொடுத்தருளி, அப்பொழுதே இராசராசபாண்டியனுடைய சொப்பனத்தில் வந்தருளி, அரசனே! கேள்: வீராகமலையிற் பன்றிமுகத்தையுடையவராய்ப் பன்னிரண்டு குமாரர்கள் வெற்றிபொருந்திய வீரர்களாய் வசிக்கின்றார்கள். அவர்கள் அறிவின் மிகுதியுடையவர்கள். எ-று.

இச் செய்யுளில் "வென்றிவீரராய் மிக்கறிவுடையோர்" எனக் கூறினமையின் உதாரவணி. (அ)

அவரை நின்கடைக் கமைச்சராக் கோடியென் றளவில்
சிவப ரஞ்சுட ரருள்செயச் செழியர்கோ வேந்தன்
கவல ருங்களிப் புடையனுய்க் கண்மலர்ந் தெழுமான்
றவழ்நெ டுந்திரைக் கருங்கட றத்திநீந் தெல்லை.

(இ-ள்.) அக் குமரர்களை உனது திருவாயிலின் மந்திரிகளாகக் கொள்வாய் என்று, எல்லையில்லாத சிவபரஞ்சோதியாகிய சோமசுந்தரக்கடவுள் திருவருள் செய்ய, இராசராசபாண்டியன் கவர்ச்சியில்லாத களிப்புடையவனாகித் துயிலுணர்ந்து சூரியன் தேரிற்பூட்டிய ஏழுகுதிரை நெடிய அலைகள் தவழுங் கரிய கீழைக்கடலைத் தாவி நீந்தி யுதயமாம் வைகறைப்பொழுதில். எ-று.

களிப்புத் திளைக்குமிடத்து இடையிடையே கவலை வந்துறுமாதலின் அவ்வாறுற்றில னென்பார் "கவலருங் களிப்புடையனுய்" என்றார். (சு)

மாண்ட கேள்விசான் மந்திரர்க் குணர்த்தியம் மலைமேற்
றாண்ட கேனமா வீரரைக் கொணர்கெனக் கருணை

பூண்ட காவல னமைச்சரும் போயவர்க் கண்டு
வேண்ட வீரரு மீண்டினர் மீனவன் றிருமுன்.

(இ-ள்.) மாட்சிமைப்பட்ட நூற்கேள்வியில் மிக்க மந்திரிகட் குணர்த்தி, அவ்வராககிரியில் வாழும் பொலிவுமிக்க வராக வீரர்களைக் கொண்டுவரக்கடவீரொன்று கூற, கருணையில் மிக்க பாண்டியர் சொல்வழி மந்திரிகளுஞ் சென்று, அக்குமரர்களைக் கண்டு தமது அரசனனுஞையைக்கூற, அவ்வராக வீரர்களும், அப்பாண்டியன் சபையின் கண்ணே வந்தார்கள். எ-று. (௧௦)

வந்தி றைஞ்சிய வராகமா மைந்தரை நேர்கண்
டந்த மில்களிப் படைந்துவேந் தமைச்சியற் கிழமை
தந்து வேறுபல் வரிசையுந் தக்கவா நல்கிக்
கந்து சீறிய கடகரிக் கைதவன் பின்னர்.

(இ-ள்.) (தனது சபையின்கண்) வந்துபணிந்த வராகவீரர்களை, பாண்டியன் நேரே பார்த்து, எல்லையில்லாத மகிழ்வு கூர்ந்து, மந்திரக்கிழமையுங் கொடுத்து, பலவகைப்பட்ட வெவ்வேறு வரிசைகளையும் அவர்கள் தகுதிக்கேற்றபடி செய்து, கட்டுத்தறியை முறிக்கும் மதயானைச் சேனையையுடைய அப்பாண்டியன் பின்னர்.

பழய மந்திரக் கிழார்மடப் பாவைபோல் வாளை
விழவு சால்கடி மங்கலம் விதியினாற் புணர்த்தி
யழகி தாமென நடத்தின னனையரும் வீரக்
கழலி னற்கொரு கவயமுங் கண்ணுமாய் நடப்பார்.

(இ-ள்.) பண்டைய அமைச்சர்கள் பெற்ற இளமைவாய்ந்த பதுமைபோன்ற பெண்களைச் சிறப்பு மிக்க விவாகோற்சவத்தை வேதவிதிப்படி (பன்னிரு குமரர்க்கும்) கூட்டி, (பார்த்தோர்) இஃதழகினதெனச் சொல்ல முடித்தான். அக்குமாரர்களும் வீரக்கழலணிந்த பாண்டியனுக்குக் கவசமுங் கண்ணுமாகி நடந்தார்கள். எ-று.

கண்ணுங் கவசமும் என்றது, பாண்டியனைத் தீவழியினின்று. நல்வழியிற் செலுத்துதலாற் கண்ணையும், ஓரிடையூறு சம்பவிக்கையில் அதனை விலக்கிப் பாதுகாத்தலின் கவசத்தையும் போன்றன வென்க. (௧௨)

கலிநிலைத்துறை.

உடம்பா றிரண்டிற் குயிரொன்றென வொன்றி யையவாய்
விடம்பா யரவம் விழுங்கும்பிறை யொத்து நெஞ்சந்
திடம்பாடு கொள்ள வினைவாங்கிச் செழியன் கல்வி
யிடம்பாடு நல்கும் பயன்போன்மகிழ் வெய்த நின்றார்.

(இ-ள்.) பாண்டியன் அக்குமாரர்களது பன்னிரண்டு தேகத்திற்கும் உயிர் ஒன்றென்று சொல்லக் கலந்து; ஐந்து தலைகளையுடைய விடம்பரவிய சர்ப்பம் விழுங்கும் இறையை யொத்து, அவர்கள் மனம் சலனமின்றி நிற்கத் தனது கருமத்தை முடித்து, தான் கற்ற கல்வி மிகவும் பயக்கும் பயனைப்போல மகிழ்ச்சியடையத் தொழிற்றலை நின்றார்கள். எ-று. (௧௩)

நல்லாவின் பாலி னறுந்தேன்கலந் தென்னப் பன்னூன்
வல்லாரு மாகி மதிநுட்பரு மாகிச் சோர்வில்
சொல்லா லடையார் மனமுங்களி தூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொற் பயனுய்ந்து கவர வல்லார்.

(இ-ள்.) நல்ல பசுவின் பாலில் மறுமணங்கமழுந் தேனைக்கலந்தாற்போல, பல நூல்களில் வல்லவருமாய் நுண்ணறிவுடையவருமாய் (இடையில்) மறதியில்லாத சொற்களாற் பகைவர்மனங் களிப்படையப் பேசிப் பலரும் பிறருஞ் சொல்லும் சொற்களிலுள்ள பயனை யாராய்ந்து கைக்கொள்ளவல்லவராகி. எ-று. (க௪)

பழமையே மிறையூழ் கொளப்பட்டோமென் றெமாப் பெய்தா
ருழையேவல் செய்யுஞ் சிறார்போல வொதுங்கி வேந்தன்
விழைவே ததனை விடம்போல வெறுத்து வெஃகா
ரழல்போ லணுகா ரகலார்நிழ லன்ன நீரார்.

(இ-ள்.) பாண்டியன் தேகசாயைப் போல விடாதுநிற்குந்தன்மையையுடைய அப் பன்னிரண்டு குமரரும் நாம் பழையோம். அரசனால் முறையாக நன்கு மதிக்கப்பட்டோமென் றிறுமாப்படையாது பக்கலில் நின்று, ஏவிய ஏவல்செய்யுஞ் சிற்றாள்களைப்போல ஒதுங்கிநின்று, அரசன் விரும்பிய பொருள் யாதோ அதனை விஷம்போல வெறுத்து விரும்பாமல், அரசனைத் தீப்போலக் கருதி யவனை அணுகவுமாட்டார்; நீங்கவுமாட்டார். எ-று. (க௫)

மறுக்குஞ் செயனீத்து நடக்கையின் வையத் தோரை
யொறுக்கும் பொருளும் பணிகேட்கையி னென்ன லாரைச்
செறுக்கும் பொருளுங் கவரார்விளை செல்வ மாக்க
ளிறுக்கும் பொருளே யிறைவற்கிவ ரீட்டுஞ் செல்வம்.

(இ-ள்.) விலக்கத்தக்க தீத்தொழில்களை விலக்கி (விதிப்படி) நடக்கையில், (தவறியவழி) குடிகளைத் தண்டித்தலால் வரும் பொருளையும், தாம் பணித்தபணியைக் கேட்டொழுகுகையில் பகைவரைக் கோபித்தலால் வரும் பொருளையுங் கைக்கொள்ளாது, விளைவுமுதலியவற்றால் வருஞ் செல்வத்தையுடைய குடிகள் இறையிறுக்கும்பொருளே அரசனுக்கு இவர்கள் தேடும் பொருள்களாம். எ-று. (க௬)

மறத்தானை வேலான் மனக்கொள்கைநந் நெஞ்சுள் வான
நிறத்தூாடி நீழ லெனத்தோற்று நிறுத்து மற்ற
தறத்தா றெனிலாற் றுவரன்றெனி லாக்க மாவி
யிறத்தான் வரினு மனத்தானு மிழைக்க வெண்ணார்.

(இ-ள்.) கொலைத்தொழிற்பயின்ற வேற்படைதாங்கிய இராசராசபாண்டியனுடைய மனக்கொள்கைதமது மனத்தில் ஆகாயம்போல(ப் புகை) நிறம்வாய்ந்த கண்ணாடி நிழல்போலப் புலப்படுதலால் அதனைச் சீர்தூக்கி, அக்கொள்கை மனுநூல் வழிப்பட்டதானாற் செய்தலும், அல்லையாயின் தனது செல்வமும் உயிரும் அழிய (அரசர்க்குக் கோபம்) வரினும், தமது மனத்தாலாயினுஞ் (சிறிதுஞ்) செய்யக் கருதாது தவிர்தலும் உடையார். எ-று.

"தன்னெஞ்சுள்" எனப் பாடங்கூறுவதுமுண்டு. (க௭)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னவாறெழுகும் பன்னிரு வோரு மீகையுந் தருமமும் புகழுந், தென்னர்கோ மகற்கு வைகலும் பெருகத் திசையெலாம் விசயமுண் டாக்கிப், பன்னகா பரணன் சிவபுர மடைந்து பரன்கண நாதருட் கலந்து, மன்னிவீற் றிருந்தார் மன்னர்மன் னவனும் வான்பத மடைந்துவீற் றிருந்தான்,



கரிக்குருவிக்குபதேசஞ்செய்தபடலம்.

(இ-ள்.) (மன்னவனுக்குத் தக்கவை யியற்றி) இவ்வண்ணமாக நடக்கும் பன்னிரு குமரரும், பொருளும் அறமும் புகழ்ச்சியும் பாண்டியனுக்கு நாடோறும் வளர்ந்தோங்க, எண்டிசையிலுஞ் செயத்தை நிறுத்தி,சர்ப்பாபரணத்தை யணிந்த சிவ பெருமானாரது சிவபுரத்தை யடைந்து சிவகணநாதருள் கலந்து நிலைபெற்று வசித்திருந்தார்கள். இராசராசபாண்டியனும் இந்திரபதவியை யடைந்து வீற்றிருந்தனன்.

மன்னவர்க்குவகுத்த அங்கம் ஆறனுள், படை குடி அமைச்சு நட்பு அரணென்னும் ஐந்திற்கும், பொருளே முக்கிய கருவியாதலின் "ஈகை" யென்றும், அதனாலேயே தருமமும் புகழும் நாடோறும் பெருகலின் "தருமமும் புகழும் வைகலும் பெருக" என்றும், அதனாற் பகைவர் அவனடிக்கீழ்ப்படுதலின் "திசையெலாம் விசய முண்டாக்கி" என்றுங் கூறினர்.

இச்செய்யுள் காரணமாலையணி. (கஅ)

பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் உஉஎச.

---

உ

சிவமயம்.

நாற்பத்தேழாவது

# கரிக்குருவிக்குபதேசித்த படலம்.

---

கோச்சகக்கலிப்பா.

வரிக்குருகிப் பத்திரற்குப் பலகையிட்ட மணிகண்ட
னரிக்குருளை வடிவான வடல்வீரர்க் கரசன்பார்
பரிக்குமமைச் சியலளித்த பரிசுரைத்தாம் பசுபதியாற்
கரிக்குருவி குருமொழிகேட் டருளடைந்த கதைபகர்வாம்.

(இ-ள்.) இசைப்பாடலுக்குருகிப் பாணபத்திரருக்குப் பலகை தந்தருளிய நீலகண்டராகிய சோமசுந்தரக்கடவுள் பன்றிக்குட்டிகளின் வடிவாகிய வெற்றிபொருந்திய பன்னிருவீரர்களுக்கும் பாண்டியநாட்டினைத் தாங்கும் மந்திரக்கிழமை கொடுத்தருளிய திருவிளையாடலைக் கூறினோம். அச்சோமசுந்தரக்கடவுளால், கரிக்குருவியானது உபதேசமொழி கேள்வியுற்று அவரது திருவருளையடைந்த திருவிளையாடலை (யாம் இனி) க் கூறுவாம். எ-று.

பசுபதி என்றது எல்லா வுயிர்கட்கும் பொதுமையனென்பது தோன்றக் கூறப்பட்டது. (க)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மன்னவ னிராச ராசன் வானவர்க் கரச னான
பின்னவன் குமர னான பெருவலி மடங்க லன்னான்
றன்னல ரடுபோர் சாய்க்குஞ் சுகுணபாண் டியனீர் ஞால
மின்னதீர்த் தறக்கோ லோச்சி யீர்ங்குடை நிழற்று நாளில்.

(இ-ள்.) இராசராசபாண்டியன் தேவர்களுக்கரசனாய் இந்திரபதத்தையடைந்த பிறகு, அவன் புத்திரனாகிய பெரிய வண்மைவாய்ந்த ஆண்சிங்கத்தைப்போன்று, பகைவர் செய்யுங் கொலைத்தொழில் வாய்ந்த போர்முனையைச் சாய்க்கும் சுகுணபாண்டியன் கடல் சூழ்ந்த நிலவுலகிற்கு நலிவினை விலக்கிச் செங்கோலைச் செலுத்தித் தண்ணிய தவளவட்டக்குடையால் நிழல்செய்யுங் காலையில். எ-று.

இச்செய்யுளில், இன்னல் என்றது அரசனாலும், அவன் பரிசனத்தாலும், பகைவராலும், கள்வராலும், விலங்குகளாலுங் குடிகளுக்கு வரும் நலிவு என்க. (உ)

ஆற்றல்சா லொருவன் மேனா ளாற்றவு மறனே யாற்றி
மாற்றமில் சிறிது பாவஞ் செய்ததன் வலத்தால் வந்து
தேற்றமில் கயவா யாகிச் செனித்தலாற் காக மாதி
கூற்றென ஆற்றஞ் செய்யக் குருதிசோர் தலைய தாகி.

(இ-ள்.) வலிமைமிக்க ஒருவன் முற்பிறப்பிற் பெரும்பாலுந் தருமத்தையே செய்து, மாறுதலில்லாத பாவத்தைச் சிறுபான்மை செய்து, அப்பாவவன்மையால் அசேதனமாகிய கரிக்குருவியாய்ப் பிறத்தலால், காகமுதலிய பறவைகள் (அதனை) இயமனைப்போல விடையூறு செய்தலால், உதிரஞ் சொரியுந் தலையையுடையதாகி.

அரவஞ்சிறிதாயினும் விடம் உயிர்க்கிறுதிதந்தேயொழிதல்போலப் பாவஞ் சிறிதாயினும் இழிபிறப்பைத்தந்தே யொழியுமாதலின் "மாற்றமில் சிறிது பாவம்" என்றார். (௩)

புட்கெலா மெளிதா யூறு பாடஞ்சிப் புறத்துள் வைகி
யுட்கிகீள் வனத்துட் போகி வழிமருங் கொருசார் நிற்குங்
கட்கவிழ்ந் தொழுகப் பூத்த கவிழிணர் மரமேல் வைகி
வெட்கமீ தூரச் சாம்பி வெய்துயிர்த் திருக்கு மெல்லை.

(இ-ள்.) எல்லாப்பறவைகட்கும் வருத்துதற்கெளிய பறவையாய், (அவை செய்யும்) இடையூற்றினுக்குப் பயந்து, நகர்ப்புறத்திலிருந்தும், (அங்கும் பறவைகள் செய்யும் வருத்தத்திற்கு அஞ்சியாற்றாது) பெரிய காட்டிற்சென்று வழியில் ஒருபால் நிற்கும். தேனைச் சொரிந்து சிந்த மலர்ந்த கவிழ்ந்த பூங்கொத்துகளையுடைய மாமரத்தின்மேலிருந்து வெட்கமீதூரச்சோர்ந்து பெருமூச்செறிந்து வாழுமளவில். எ-று. (௪)

விடையவ னீறு பூசு மெய்யவன் பூண்ட கண்டித்
தொடையவன் புறம்பு முள்ளுந் தூயவன் குடையுங் கையி
னுடையவன் றரும தீர்த்த யாத்திரை யொழுக்கம் பூண்ட
நடையவ னொருவ னந்த நறுந்தரு நிழலிற் சார்ந்தான்.

(இ-ள்.) சிவபெருமான் திருநீறு பூசுந் திருமேனியையுடையவராய் (ஆபரணமாகப்)பூண்ட உருத்திராக்ககண்டிகையாகிய மாலையையுடையவராய், அகமும் புறமுந் தூய்மையையுடையவராய், கையிலேந்திய குடையையுமுடையவராய், புண்ணிய வடிவாகிய தீர்த்தயாத்திரை செல்லும் நியதியையே தமக்கோராபரணமாகப் பூண்ட கடைப்பிடியையுடைய வொருவனாகி, அந்த நறுமணமிக்க மாமரத்தினிழலை யடைந்தனன். எ-று.

"விடையவனீறு" என்றதை "திருவாலவாயான்றிருநீறே"எனத்திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் பாண்டியன் சுரமொழித்து அவனது கூனபாண்டியனென்னும் பெயரைப்போக்கி, நின்றசீர் நெடுமாறபாண்டியனெனப் பெயர் சூட்டத் திருவாய்மலர்ந்தருளிய திருநீற்றுப்பதிகத்தா னுணர்க. (௫)

இருந்தவன் சிலரை நோக்கி யியம்புவா னெவர்க்கும் பேறு
தருந்தலந் தீர்த்த மூர்த்தித் தன்மையிற் சிறந்த வன்பு
வருந்தமிழ் மதுரை பொற்ற மரைத்தடஞ் சுந்த ரேசப்
பெருந்தகை யென்று சான்றோர் பேசுவா ராத லாலே.

(இ-ள்.) (அந்த மாமரநிழலில்) இருந்த முனிவன் (அங்குள்ள) சிலரைப் பார்த்துக்கூறுகின்றான்—எல்லோருக்கும் முத்திப்பயனைக்கொடுக்குந் தலமும் தீர்த்தமும் மூர்த்தியுமாகிய தன்மைகளுட்சிறந்தன (கேட்போருக்கு) அன்புபயக்கும் தமிழ்வழங்கும் மதுரையும், பொற்றாமரைத்தீர்த்தமும், சோமசுந்தரமூர்த்தியுமே யென்று பெரியோர் கூறுவர் ஆதலின். எ-று. (௬)

ஓரிடத் தினைய மூன்று விழுப்பமு முள்ள தாகப்
பாரிடத் தில்லை யேனைப் பதியிடத் தொன்றே யென்றுஞ்
சீருடைத் தாகுங் கூடற் செழுநக ரிடத்தப் மூன்றும்
பேருடைத் தாகு மென்றாற் பிறிதொரு பதியா தென்றான்.

(இ-ள்.) ஒருதானத்தில் (தலமேன்மையுந் தீர்த்தமேன்மையும் மூர்த்திமேன்மையுமாகிய) இம் மூன்று மேன்மையும் உளதாக இங்கன்றி இந்நிலவுலகிலில்லை. மற்றைத்தலங்களில் ஒன்றேயுள்ளது. எப்பொழுதும் திருவிழாச் சிறப்புடையதாகிய மதுரையென்னும் வளமிக்க திருநகரில், அம்மூன்றுமேன்மையும் பேர்பெற்றதா யுளதாமென்னில், (இதுபோற் சிறந்த) வேறொரு தலம் யாதுள்ளது? என்றனன். எ-று.

இம்மது ரேசன் சேவித் தேத்துவோர்க் கெளிய னாகிக்
கைம்மலர் நெல்லி போலக் கருதிய வரங்க ளெல்லா
மிம்மையி னுடனே நல்கு மேனைய தலத்து வானோ
ரம்மையி னன்றி நல்கா ராதலா லதிக னென்றான்.

(இ-ள்.) இந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், தன்னை வணங்கும் அடியவர்க்கெளியவராகி, கையிலேந்திய நெல்லிக்கனியைப்போலக் கருதிய எல்லாவரங்களையும் இப்பிறப்பில் உடனே தந்தருளுவர்; மற்றைத் தலங்களிலுள்ள மூர்த்திகள் மறுமையினன்றிக்கொடார்கள்; ஆகையால், சோமசுந்தரக்கடவுளே மேம்பட்டவரென்று கூறினன். எ-று.

உள்ளங்கையிலேந்திய நெல்லிக்கனியானது தனது புறவடிவையேயன்றி, புலப்படாத அகவடிவையும் புலப்படுத்தல்போல, வேண்டியவரங்களை இப்பிறப்பிலேயே தந்தருளுவதால் "கைம்மலர் நெல்லி போலக் கருதிய வரங்க ளெல்லா - மிம்மையி னுடனே நல்கும்" என்றார். (௮)

மற்றது கேட்டுக் கொம்பர் வைகிய கயவாய் ஞானம்
பெற்றது பறவை யாகிப் பிறந்ததும் பிறவுந் தேற்ற
முற்றது நாமிச் சன்ம மொழிப்பதற் கறவோ னிங்ஙன்
சொற்றதே யுறுதி யென்று துணிவுகொண் டெழுந்த தன்றே.

(இ-ள்.) கொம்பிலிருந்த கரிக்குருவியானது அதனைக் கேள்வியுற்ற அப்பொழுதே ஞானமடைதலால், பறவையாய்த் தான்வந்து பிறந்ததையும், மற்றுள்ளனவற்றையுந் தெரிந்து, நாம் இந்தப்பிறப்பினை யொழித்தற்கு, இம்முனிவன் இங்குக் கூறியதே உறுதிபயப்பதென்று கருதித் துணிந்து, (மதுரைக்குச்செல) எழுந்து. எ-று.

இதுமுதல் பத்துப் பாடல்கள் குளகம். (௯)

ஆய்மலர்க் கான நீங்கி யாடக மாடக் கூடற்
போய்மலர்க் கனக கஞ்சப் புண்ணியப் புனறோய்ந் தாம்பல்
வாய்மலர்க் கயலுண் கண்ணாண் மணாளனை வலஞ்செய் தன்பிற்
றோய்மலர்க் கழலி னானை யகத்தினாற் றொழுதர்ச் சித்தே.

(இ-ள்.) (வண்டுகள்) ஆராயும் மலர்களையுடைய காட்டினின்றும் நீங்கி, பொற்றகடுவேய்ந்த மாடங்கள் நெருங்கிய மதுரையிற்சென்று, மலர்ந்த பொற்றாமரை மலர்களையுடைய புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, ஆம்பல் மலர்போன்ற திருவாயினையுடைய அங்கயற்கண்ணியார் கணவராகிய சோமசுந்தரக்கடவுளைப் பிரதக்ஷிணஞ்செய்து, (அடியவர்) அன்பிற்கலந்த (தாமரை) மலர்போன்ற திருவடியையுடைய அச்சோமசுந்தரக்கடவுளை மனத்தினா லருச்சனைசெய்து பணிந்து. எ-று.

அகத்தினாற் றொழுதர்ச்சித்து-மானத பூசைசெய்து. (௧௦)

இன்னண மூன்று வைகல் கழிந்தபி னெம்பி ராட்டி
தன்னமர் காத லானைத் தாழ்ந்தெதிர் நோக்கி ஐய
வென்னையிக் கயவாய் செய்யுஞ் செயலிதன் வரவியா தென்ன
முன்னவ னதன்றன் செய்தி வரவெலா முறையாற் கூறி.

(இ-ள்.) இவ்வாறு மூன்றுதினங்கள் கழிந்தபிறகு, எமது பிராட்டியாராகிய அங்கயற்கண்ணியார் தம்மால் விரும்பப்பட்ட கணவராகிய சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து எதிரே நின்று, ஐயனே! இந்தக் கரிக்குருவி செய்யுஞ் செய்கையாது? என வினவ, அச்சோமசுந்தரக்கடவுள் அதனது முன்னிகழ்ந்த செய்தியும்;இங்குவந்த செய்தியுமாகிய இவற்றையெல்லாம் முறைபடக்கூறி. எ-று. (௧௧)

பத்திமை நியமம் பூண்ட பறவைமேற் கருணை நாட்டம்
வைத்திமை யாத முக்கண் மறைமுத லொருசேய்க் கன்று
நித்திய நிலைமை நல்கி நேர்ந்தவெங் கூற்றைக் காய்ந்த
சத்திய ஞான மித்திஞ் சயத்தினை யுபதே சித்தான்.

(இ-ள்.) இமைத்தலில்லாத திரிநேத்திரங்களையுடைய சோமசுந்தரக்கடவுள், பத்திசெய்து வழிபடுதலையேகடப்பாடாகக்கொண்ட கரிக்குருவியின்மேல் கிருபாநோக்கம்வைத்து, மார்க்கண்டேயருக்கு அக்காலையில் நித்தியத்துவத்தைத் தந்தருளி, அவர்மேலெதிர்ந்த கொடிய இயமனை யுதைத்தருளிய உண்மை ஞானமாகிய மிருத்யுஞ்சய மந்திரத்தை (அதனுக்கு) உபதேசித்தருளினர். எ-று.

மிருத்யுஞ்சயம்-இயமனைச் சயிக்கத்தக்க மந்திரம். (௧௨)

கலிவிருத்தம்.

உவமை யற்றவ னுரைத்த மந்திரஞ்
செவிம டுத்தலுஞ் சிற்று ணர்ச்சிபோய்ப்
பவம கற்றிடப் படுக ரிக்குரீஇ
கவலை விட்டரன் கழல்வ ழுத்துமால்.

(இ-ள்.) சமானமற்றவராகிய சிவபெருமான் உபதேசித்தருளிய (மிருத்யுஞ்சய)மந்திரத்தைக் காதிற்கேட்டலுஞ் சிற்றறிவு நீங்கி,(அத்திருமந்திரத்தால்) இனிவரும் பிறவி நீக்கப்பட்ட கரிக்குருவியானது கவலையொழிந்து அப்பெருமான் திருவடியைத் துதிக்கும். எ-று. (௧௩)

எண்ணி லாவுயிர்க் கிறைவ போற்றிவான்
றிண்ணி லாமதிச் சடில போற்றியென்

புண்ணி யப்பயன் போற்றி யங்கயற்
கண்ணி நாதநின் கருணை போற்றியால்.

(இ-ள்.) எல்லையில்லாத ஆன்மகோடிகளுக்குத் தலைவனே! உன்னை வந்திக்கக்கடவேன்; ஆகாயத்திற்றவழுந் தண்ணிய கிரணம் வாய்ந்த சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடையவனே! உன்னை வந்திக்கக்கடவேன்; எனது சிவபுண்ணியத்தின் பேருயுள்ளவனே! உன்னை வந்திக்கக்கடவேன். அங்கயற்கண்ணம்மையார் தலைவனே! உனது திருவருளை வந்திக்கக்கடவேன். எ-று. (௧௪)

தெளித லின்றியே செய்த தீமையால்
விளியு மென்னையு மாளல் வேண்டுமோ
வெளிய ரெங்குளா ரென்று தேர்ந்துதேர்ந்
தளியை யர்வதுன் னருளின் வண்ணமே

(இ-ள்.) யான் (குணம் குற்றம்) தெரியாது செய்த தீவினையால், இழிபிறப்புற்று இறக்குமென்னையும் ஓர் பொருளாகக்கருதி யாளவேண்டுமோ? (அடியேன் போன்ற) எளியர் எங்கிருக்கின்றனரென்று நாடி (அவர்மேற்) கருணையுடையையாயிருத்தல் உன் திருவருளின்றிறம். எ-று. (௧௫)

உம்மை நல்லற முடைய நீர்மையா
லிம்மை யிம்மனு வியம்பி னுயிது
வம்மை நன்னெறிக் கேது வாதலான்
மும்மை யுந்நல முடைய மொய்ம்பினேன்.

(இ-ள்.) அடியேன் முற்பிறப்பிற் செய்த சிவபுண்ணியப்பேற்றினைப் பெரும்பாலும் உடையனுதற்றன்மையால், இப்பிறப்பில் இத்திருமந்திரத்தை யருளினை: இதுமறுமையிற் சிவகதியருளுதற்குக் காரணமாதலின், (உம்மை அம்மை இம்மை யென்னும்) முத்திறத்துப் பேறுமடைந்த வலியனுயினேன். எ-று. (௧௬)

ஆயி னும்மெனக் கைய வோர்குறை
தீய புள்ளெலா மூறு செய்தெனைக்
காயு மானமுங் கழியக் கண்டபே
ரேயெ னும்படிக் கெளிய னுயினேன்.

(இ-ள்.) ஆனபோதிலும், ஐயனே! எனக்கோர் குறையுளது. கொடிய பறவைகளெல்லாம் மானமும் என்னினின்று நீங்க இடையூறுசெய்து என்னை வருத்தும்படிக்கும், பார்த்தவர்கள் ஏயென்று இழித்தோட்டும்படிக்கும் எளியனுதலை யடைக்திருக்கின்றேன். எ-று.

ஏ - இழிபுகுறிக்கும் இடைச்சொல். (௧௭)

என்ன வக்குரீஇ யியம்ப வெம்பிரா
னன்ன புட்கெலாம் வலியை யாகெனப்
பின்னு மக்குரீஇ தாழ்ந்து பேதையேற்
கின்னு மோர்வரந் தருதி யென்றதால்.

(இ-ள்.) என்று அக்குருவி குறையிரக்க, எமது சோமசுந்தரப்பெருமான் நீ அவ்வகைய பறவைகளுக்கெல்லாம் வலியானுகக் கடவாயென்றருள, அந்தக் குருவி மீளவும் பணிந்து, (எம்பெருமானே!) அறிவில்லாத அடியேனுக்கு இன்னும் ஓர் வரந் தந்தருளா யென்றிரந்தது. எ-று. (௧௮)

வலியை யென்பதென் மரபி னுக்கெலாம்
பொலிய வேண்டுமெப் போது நீசொன

வொலிய மந்திர மோதி யோதிநாங்
கலியை வெல்லவுங் கருணை செய்கென.

(இ-ள்.) வலியையாகவென எனக்கருளியபேறு என் மரபிலுள்ள பறவைகட்கெல்லாம் எந்நாளுங் குறைவின்றி விளங்கவேண்டும். நீ யருளிய ஒலியையுடைய திருமந்திரத்தை யிடையீடின்றிப் பயின்று நாங்கள் துன்பத்தைப் புறங்காணவுங் கருணைசெய்தருளா யென்றிரக்க. எ-று. (கக)

ஆவ தாகவென் றமரர் நாயகன்
மூவெ ழுத்தினன் முடிந்த வம்மனு
தாவி றெய்வத மிருடி சந்தமோ
டோவி லோசைமூன் றுடனெ ருட்டினன்.

(இ-ள்.) குறையிரந்தது கைகூடக் கடவதென்று, தேவர்கள் பெருமானாராகிய சோமசுந்தரக்கடவுள் மூன்றெழுத்தினால் முடிந்த அம்மிருத்யுஞ்சயமந்திரத்தைக் கெடுதலில்லாத தெய்வம் ருஷி சந்தஸ் என்னும் இவற்றோடும் நீங்குதலில்லாத (உதாத்தம் அநுதாத்தம் சொரிதமாகிய மூவகை) ஒலியுடன்பெற அருளினர். எ-று.

—மூன்றெழுத்தினால் முடிந்த (மிருத்யுஞ்சய) மந்திரம் என்றது த்ரியம்பகம். [த்ரியம்பகம்] சந்தஸ் - காயத்திரி. (உo)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குருமொழி பயின்று முள்வாய்க் குருவிதன் குலனுந் தன்போ
லருமறை முதல்வ னீந்த வாற்றலாற் பறவைக் கெல்லாம்
பெருமைசால் வலியா னென்னும் பெயரவா யுலகின் மன்னக்
கருமணி கண்டன் செம்பொற் கணைகழ லடிசேர்ந் தன்றே.

(இ-ள்.) முட்போலக் கூரிய வாயையுடைய கரிக்குருவியானது குருவுபதேசத்தை யிடைவிடாது பழகி, தன் சாதிப்பறவைகளுந் தன்னைப்போலச் சோமசுந்தரக்கடவுளருளிய அரிய மந்திரவன்மையாற் பெருமைமிக்க வலியானென்னும் பெயரை யுடையனவாய் உலகில் நிலைபெற, கரிய நீலமணிபோன்ற கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய செம்பொன்னாலாகிய ஒலிக்கும் வீரக்கழலணிந்த திருவடியை யடைந்தது. எ-று.

அடைந்தது + அன்று = அடைந்தன்று. இதுதொகுத்தல். (உக)

இக்கரிக் குருவி தானோற் றெய்திய வரத்தைத் தன்போ
லொக்கலு மெளிதா வெய்தப் பெற்றதா லுலகின் மேன்மை
தக்கவ னொருவன் வாழத் தன்கிளை வாழ்வ தென்ன
மிக்கவ ரெடுத்துக் கூறும் பழமொழி விளங்கிற் றன்றே.

(இ-ள்.) இக்கரிக்குருவி தான்வருந்தி நோற்றடைந்த வரத்தைத் தன்னைப்போலத் தன் சாதிப்பறவைகளெல்லாம் வருந்தாமல் எளிதாக அடையப்பெற்றதனால், உலகின்கண் மேன்மையோடு நடுநிலைமையையுடைய வொருவன் வருந்தி முயன்று வாழ, அவன் கீழ் அவன் உறவினர் யாவரும் வாழ்வாரென்று ஆன்றோர் எடுத்துக் கூறும் பழமொழி விளங்கியது. எ-று.

இச்செய்யுளிற்கூறிய பழமொழியை, நாலடியார்

"அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா
நிழன்மரம் போலொப்பத் தாங்கிப்—பழுமரம்போற்

பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்''—என்பதனுனறிக. (உஉ)

மேற்படி வேறு.

ஈச னடிக்கன் பில்லார்போ லெளியா ரில்லை யாவர்க்கு
மீச னடிக்கன் புடையார்போல் வலியா ரில்லை யாவர்க்கு
மீச னடிக்கன் பின்மையினு லெளிதாய்த் திரிந்த விக்கயவா
யீச னடிக்கன் புடைமையினல் வலிதா யிற்றே யெவ்வுயிர்க்கும்

(இ-ள்.) சிவபெருமான் திருவடிக்கீ ழன்பில்லாதவர்போல யாவருள்ளும் எளியவரில்லை, சிவபெருமான் திருவடிக்கீ ழன்புடையவர்போல யாவருள்ளும் வலியவரில்லை. சிவபெருமான் திருவடிக்கீழ் அன்பில்லாமையினுல் எல்லாப்பறவைகளுள்ளும் எளிதாகத் திரிந்த இக்கரிக்குருவி, சிவபெருமான் திருவடிக்கீழ் அன்புடைமையினுல் எல்லாவுயிர்களுள்ளும் வலிதாயிருந்தது. எ-று. (உங)

கரிக்குருவிக்குபதேசித்த படலம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உஉருசு.

---

## நாற்பத்தெட்டாவது,

# நாரைக்கு முத்திகொடுத்த படலம்.

---

கலிவிருத்தம்.

அத்தி தந்த விமான மழகியார்
பத்தி தந்த பறவைக்கு மந்திர
சித்தி தந்த திறனிது நாரைக்கு
முத்தி தந்த கருணை மொழிகுவாம்.

(இ-ள்.) அஷ்டகஜங்களாற் சுமக்கப்பட்ட விமானத்திலெழுந்தருளிய சுந்தரேசப்பெருமானுர் அன்புசெய்து வழிபட்ட கரிக்குருவிக்கு மந்திரசித்தி தந்தருளிய திருவிளையாடலிது. நாரைக்குச் சிவகதி தந்தருளிய திருவிளையாடலை (யாம் இனி)க் கூறுவாம். எ-று. (க)

தேக்கு நீர்வையை நாட்டொரு தென்புலத்
தாக்கு மாடவைப் பொன்றுள தவ்வயின்
விக்கும் யாழ்செயும் வண்டுக்கு வீழ்நற
வாக்கு தாமரை வாவியொன் றுள்ளதால்.

(இ-ள்.) நிறைந்த நீர்மயமாகிய வையைநதி சூழ்ந்த பாண்டிநாட்டில் ஒருசார் தென்பாலில், சிற்பநூல்வழி சமைத்த மாடங்களையுடைய நகரம் ஒன்றுள்ளது. அவ்விடத்தில் நரம்பின் கட்டமைந்த வீணையி னிசைபோலப் பாடும் வண்டுகளுக்கு விரும்புக் தேனை வாக்காநின்ற தாமரைகளையுடைய தடாகம் ஒன்றிருக்கின்றது. (உ)

ஆழ மிக்க கயந்தலை யத்தலை
வாழு மீன மனைத்தையும் வாய்ப்பெய்து
சூழ நந்துமுத் தீனுந் துறைக்கணோ
தாழ்வ தோர்செய்ய தாண்மட நாரையே.

(இ-ள்.) (அது) அளத்தற்கரிய ஆழத்தையுடையதடாகமாம். அத்தடாகத்தில் வாழும் மீன்களையெல்லாங் கொள்ளைகொண்டு சுற்றிலுஞ் சங்குகள் முத்துக்களையீனுந்துறையிலே செவந்தகால்களையுடைய ஓர் இளநாரை வாசஞ்செய்யாநின்றது. எ-று.

சிறிய நாண்மழை யின்றியச் சேயிதழ்
வெறிய தாமரை யோடை வியன்கரை
யிறைகொ ளாரை யிருவினைப் பௌவமும்
வறிய தாகி வறப்ப வறந்ததால்.

(இ-ள்.) சிலநாள் மழையின்மையால், அந்தச் செவந்த இதழையுடைய வாசமிக்க தாமரைகள் நிறைந்த தடாகத்தின் விசாலித்த கரையிற்றங்கிய நாரையினது (நல்வினை தீவினையென்னும்) இருவினைக்கடலும், சிறிதுமில்லாது வறக்க, அத்தடாகமும் வற்றியது. எ-று. (௪)

நுரைசெ றித்தன நேர்ஞ்சிறை நாரையு
மிரைவி ரும்பியவ் வாவியி னீங்கொரீஇ
விரைய வந்தொரு கானிடை வீழ்ந்ததாற்
புரையி லோர்க்கிட னாகும்பொங்கர்வாய்.

(இ-ள்.) நுரைகளைச் செறித்தாற்போன்ற (வெள்ளிய) வலிய சிறகையுடைய நாரையும் இரையை விரும்பி அத்தடாகத்தினின்றும் நீங்கி, விரைந்து வந்து ஒரு காட்டிற் சோர்ந்து விழுந்தது. குற்றமில்லாத முனிவர்கட்கு உறையுளாகிய மரச்செறிவையுடைய அக்காட்டில். எ-று. (௫)

முத்த ரான முனிவர் குழாத்தொடுஞ்
சுத்த வானந்த வாரியுட் டோய்ந்துதன்
சித்த மாசு கழீஇச்சிவ மாகிய
சத்தி யத்தவ மாமுனி தங்குமால்.

(இ-ள்.) சீவன் முத்தராகிய முனிவர் கூட்டத்தோடும் களங்கமில்லாத பேரின்பப் பிரவாகத்துள் மூழ்கித் தனது மனத்தழுக்கைப் போக்கி, சிவசொரூபமாகிய சத்தியத்தவன் என்னும் பெயரினையுடைய பெரிய தபோதனனொருவன் (அங்கே) வசிக்கின்றனன். எ-று. (௬)

கூப்பி டெல்லை குணித்துச் சதுரமா
யாப்ப மைந்துசுற் றெங்கும்ப டித்துறைக்
கோப்ப மைந்து குளிர்சந்தி யாமடங்
காப்ப மைந்தோர் கயந்தலை யுள்ளதால்.

(இ-ள்.) ஒருகூப்பிடு தூரஞ் சதுரமாய் வரையறுத்துக் கட்டுதலமையப்பெற்று, சுற்றிலும் எங்கும் படித்துறைக்கோவை யமையப்பெற்று, தண்ணிய நிழல் செய்யுஞ் சந்தியாமடம் காவலோடமைந்த ஒரு தடாகமுள்ளது. எ-று. (௭)

விரைசெய் சண்பகம் பாதிரி வேங்கைதே
னிரைசெய் வஞ்சி யிலஞ்சி குராமரா

நிரைசெய் கிஞ்சுக நீண்மரு தாதியா
வுளாசெய் பன்மர மும்புறத் துள்ளவால்.

(இ-ள்.) வாசம் வீசுஞ் சண்பகமும், பாதிரியும், வேங்கையும், வண்டுகளொலிக்கும் வஞ்சியும், மகிழும், குர்ராவும், மராவும், வரிசையாயுள்ள முண்முருக்கும், நீண்ட மருதும், முதலாகக்கூறப்படும் பல மரங்களும் (அத்தடாகத்தின்) பக்கங்களிலுள்ளன. எ-று. (அ)

அந்த வாவியின் பேரதோ தீர்த்தமென்
றிந்த ஞால மியம்புவ தாலிரை
யுந்த வாவி கொடுக்க வெழுந்துமுன்
வந்த நாரை யதன்கரை வைகுமால்.

(இ-ள்.) அந்தத் தடாகத்தின் பெயர் அதோ தீர்த்தமென்று இவ்வுலகத்திலுள்ளவர் கூறுவர். இரையானது மிக்க விருப்பத்தினைக்கொடுக்க, மேலெழுந்து அத்தடாகத்தின் முன்வந்த நாரையானது அதன் கரையிலே தங்கா நிற்கும். எ-று. (௯)

ஆய்ந்த மாதவ ரப்புனி த்தத்தடந்
தோய்ந்து தோய்ந்தங் கெழுந்தொறுந் தோட்புறஞ்
சாய்ந்த வார்சடைக் கற்றையிற் றத்துமீன்
பாய்ந்து பாய்ந்து புரள்வன பார்த்தரோ.

(இ-ள்.) (வேதசிவாகமங்களை) ஆராய்ந்துணர்ந்த பெரிய தபோதனர்கள் அந்த வாவிதாகிய தடாகத்தில் நீராடி யெழுந்திருக்குந்தோறும், (அவர்கள்) பிடரிற் சாய்ந்துகிடக்கின்ற நீண்ட சடாடவியில், தாவாநின்றமீன்கள் தம்முட்பாய்ந்து புரளுதலைப் பார்த்து. எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (௧0)

ஈண்டை யித்தவத் தோர்திரு மேனியைத்
தீண்ட வெத்தவஞ் செய்தன வேகொலென்
றுண்டை மீனமக் காகாவெனவிரை
வேண்டு நாரை வெறுத்தங் கிருந்ததால்.

(இ-ள்.) இவ்விடத்தில் இந்தத் தபோதனர்களுடைய திருமேனியைப் பரிசிப்பதற்கு (இம்மீன்கள்) என்ன தவஞ்செய்தனவோ? என்று கருதி, அவ்விடத்திலுள்ள அம்மீன்கள் நமக்கு இரையாகாவென்று, இரைவேண்டிவந்த நாரை அதனை வெறுத்து அங்கு வசித்தது. எ-று.

ஈண்டை இதில் ஐகாரஞ் சாரியை யிடைச்சொல். (௧௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தன்னிகர் தவத்தோர் யாருந் தடம்படிந் தேறி நித்த
மன்னிய கரும முற்றிச் சந்தியா மடத்தில் வைகி
மின்னிய மகுடஞ் சூடி வேந்தனு யுலகங் காத்த
பொன்னியற் சடையான் கூடற் புராணனூ லோது கின்றார்.

(இ-ள்.) தம்மைப்போன்ற தவத்தினையுடைய யாவரும், அத்தடாகத்தில் நீராடிக்கரையேறி, (இடைவிடாது) என்றுமுள்ள நித்திய கருமத்தை முடித்து, சந்தியாமடத்திலிருந்து, விளங்காநின்ற கிரீடத்தைத் தரித்துச் சவுந்தரபாண்டியராகி யுலகினைக் காத்துவந்த பொன்போலச் செந்நிறம் வாய்ந்த சடாமகுடத்தையுடைய சோம

சுந்தரக்கடவுளுடைய திருவாலவாய் மான்மியநூலை யோதிவருகின்றவர்க ளாயினர்கள். எ-று. (கஉ)

அண்ணலெம் பெருமான் செய்த வருள்விளை யாட்டு மாதிப்
பண்ணவன் சிறப்புங் கூடற் பழம்பதிச் சிறப்புந் தீர்த்தத்
தெண்ணருஞ் சிறப்புஞ் சேர்ந்தோர்க் கெளிவரு மிறைவ னென்னும்
வண்ணமு மெடுத்துக் கூறக் கேட்டங்கு வதியு நாளை.

(இ-ள்.) இறைவனாகிய எமது சோமசுந்தரப்பெருமான்செய்தருளிய திருவிளையாடலையும், யாவர்க்கும் முழுமுதற்பொருளாகிய அப்பெருமானது சிறப்பையும், நான்மாடக்கூடலாகிய தொன்று தொட்டுள்ள மதுரைப்பதியின் தலச்சிறப்பையும், (பொற்றாமரைத்) தீர்த்தத்தின் அளவிடற்கரிய சிறப்பையும், அடைந்தவர்கட்கெளிய கருணைவள்ளலென்னுந் திறத்தையும், அம்முனிவர்க ளெடுத்துக்கூற, அவ்விடத்துத் தங்கும் நாரை கேட்டு. எ-று.

இதுமுதல் ஆறுபாடல்கள் குளகம். (கரு)

மீடம்படு மறிவு நீங்கி வல்வினைப் பாசம் வீசித்
திடம்படு மறிவு கூர்ந்து சிவபரஞ் சோதி பாதத்
திடம்படு மன்பு வாவென் றீர்த்தெழ வெழுந்து நாரை
தடம்படு மாடக் கூடற் றனிநக ரடைந்து மாதோ.

(இ-ள்.) அறியாமை நீங்கி (எழுந்த ஞானோதயத்தால்) வலிய ஆகாமியகன்ம பந்தத்தை யொழித்து, உயிர்க்குறுதிதரும் ஞானோதயம் பெற்று, சோமசுந்தரக்கடவுளின் திருவடியிற் பரந்த நேயமானது வாவென்றிழுக்க, நாரை அங்கு நின்று மேலெழுந்து விசாலித்த உபரிகைகள் நிறைந்த மதுரையாகிய ஒப்பில்லாத திருநகரை யடைந்தது. எ-று. (கசு)

வாங்கிய திரைசூழ் பொற்றா மரைபடிந் திமையா வேழந்
தாங்கிய விமான மேய தலைவனைத் தாழ்ந்து சூழ்ந்து
தேங்கிய வருட்க ணோக்கந் தெரிசித்துத் திருமுன் வைகி
யோங்கிய கருணை மேனி யுள்ளுறத் தியானஞ் செய்து.

(இ-ள்.) வளைந்த அலைகள் சூழ்ந்த பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி. இமைகொட்டாத அஷ்ட கஜங்கள் சுமந்த விமானத்தி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளைப் பணிந்து பிரதக்ஷிணஞ்செய்து, தன்மேல் தேக்கிய திருவருட்பார்வையைத் தரிசித்து, திருமுன்னரிருந்து, (ஆன்மாக்களிடத்து) வளர்ந்தோங்கிய திருவருளாகிய திருமேனி தனதுள்ளத்திற் பதியத் தியானித்து. எ-று.

"தேங்கிய வருட்கணோக்கந் தெரிசித்து" என்றது, சஞ்சிதகன்மம் ஒழிந்ததென்றும், "கருணைமேனி" என்றது, சிவபெருமான் திருமேனி கிருபாவடிவமே யென்றுங் குறிப்பிட்டதாம். (கஎ)

இந்நிலை நியம மூவைந் தெல்லைஞான் றியன்று பின்னா
ளந்நிலை யொழுகு நாரை யாடக கமலந் தோய்வான்
வன்னிலை மதில்சூழ் ஞாங்கர் வந்துழிப் பசியால் வெந்து
மின்னிலை வேல்போற் றுள்ளு மீன்கவர்ந் துண்கு மென்னா.

(இ-ள்.) இவ்வாறு செய்கடனைப் பதினைந்து தினஞ்செய்து, வழிநாளில் அந்நியமத்தை முடிக்கும் நாரையானது பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, வலிய நிலையையுடைய சுற்றுமதிலின் பக்கலில் வந்தவிடத்துப் பசித்தழலாற்றீந்து கருகி, விளங்குந் தகட்டுவடிவாகிய வேலைப்போலத் துள்ளாநின்ற மீனைக் கொள்ளைக்கொண்டு உண்பேர மென்றுகருதி. எ-று. (கசு)

சிறிதுளத் துள்ளி நாதன் றிருவருள் வலத்தாற் பின்ன
ரறிவுவந் தச்சோ விந்த வறப்பெருந் தீர்த்தத் துள்ளே
யெறியுமீ னருந்த வாசை யெழுந்ததே யெனக்கிப் போதிப்
பிறவியென் றொழிவ தென்னுப் பேரஞ ரடைந்து பின்னும்.

(இ-ள்.) சற்று மனதிற்கருதி, சோமசுந்தரக் கடவுளது திருவருளின் வன்மையால், பின்பு ஞானம் வந்து, ஐயோ! இந்தத் தரும சொரூபமாகிய பெரிய தீர்த்தத்தில் துள்ளுகின்ற மீனைத் தின்ன எனக்கிப்பொழுது விருப்ப மெழுந்தது. (இக் கொடுமையால்) இந்தப்பிறவி யெப்பொழு தொழிவது? என்று, பெருந்துன்பமடைந்து, மீண்டும். எ-று. (கஎ)

சுந்தரச் செம்மல் பாதத் துணைமல ரன்பிற் றோய்ந்து
சிந்தைவைத் திருக்கு மெல்லை தேவரு மறையுஞ் செய்யும்
வந்தனைக் கரியா னுரை மனநினை வடிவாய்த் தோன்றி
யெந்தமக் கினியாய் வேண்டும் வரமென்கொ லியம்பு கென்றார்.

(இ-ள்.) சோமசுந்தரக் கடவுளுடைய தாமரை மலர்போன்ற உபயபாதங்களில்வைத்த அன்பிற்படிந்து, தனது மனத்தை (அந் நிலையில்) வைத்திருக்குந் தருணத்தில், தேவர்களும் வேதங்களுஞ் செய்யும் வழிபாட்டிற்கு அறியாத அச்சோமசுந்தரக்கடவுள் நாரைமனத்திற் கருதிய திருவுருவோடு காட்சியளித்து, எமக்கு இனியவனே! நீ வேண்டிய வரம்யாது? என வினவினர். எ-று. (கஅ)

கலிவிருத்தம்.

செய்ய கான்மட நாரையுஞ் சென்றுதாழ்ந்
தைய னேயிப் பிறவிய றுத்துநின்
மெய்யர் வாழ்சிவ லோகத்தின் மேவிநா
னுய்ய வேண்டுமொன் றின்னமு முண்டரோ.

(இ-ள்.) செவந்த கால்களையுடைய இளமை தங்கிய நாரையும் புடைபெயர்ந்து பணிந்து, ஐயனே! இந்தப் பிறவியின் வேரையறுத்து உமது மெய்யன்பர் வாழுஞ் சிவலோகத்தினையடைந்து, அடியேன் பிழைக்கவேண்டும், இன்னமும் (வேண்டுவது) ஓர் வரமுள்ளது. எ-று. (கசு)

வள்ள லென்மர புள்ளவு மற்றைய
புள்ளு மிந்தப் புனித மலர்த்தடத்
துள்ளு மீனுயி ருண்ணினெக் காலமுந்
தள்ளொ ணாத பழிவந்து சாருமே.

(இ-ள்.) தயாவள்ளலே! என் மரபிலுள்ள பறவைச்சாதிகளும் ஏனைப்பறவைகளும் இந்தக் களங்கமில்லாத பொற்றாமரைத்தீர்த்தத்திலுள்ள மீன்களினுயிரைக் கொள்ளை கொண்டால், எந்தக்காலத்திலுந் தள்ளுதற் கரிதாகிய பாவம் வந்து சம்பவிக்கும். எ-று. (உ0)

என்று மித்தட மீனில வாகநீ
நன்று சால்வர நல்கென வெள்ளிமா
மன்று ளானும் வரந்தந்து போயினன்
சென்று நாரை சிவலோகஞ் சேர்ந்ததால்.

(இ-ள்.) எக்காலத்திலும் இந்த (ப்பொற்றாமரைத்) தீர்த்தத்தில் மீன்களில்லாதிருக்கும்படி நீ நன்மைமிக்க வரந் தந்தருளாயென்று குறையிரக்க, பெருமை பொருந்திய வெள்ளியம்பலத்தில் நடித்தருளிய சோமசுந்தரக் கடவுளும் (அவ்வாறே) வரமருளிச்செய்து சென்றனர். நாரை சிவலோகத்தைச்சென்றடைந்தது. எ-று.(உக)

இயங்க ளைந்து மியம்பவி மானமேற்
புயங்க ணான்குமுக் கண்களும் பொற்பவான்
வியங்கொள் பூமழை வெள்ளத்து ளாழ்ந்துபோய்
வயங்கொ ணந்திக ணத்துள் வதிந்ததே.

(இ-ள்.) (தேவ)வாச்சியங்கள் ஐந்துமொலிக்க,விமானத்தின்மேலில் (இவர்ந்து) நான்குபுயங்களும் மூன்றுகண்களும் அழகுசெய்ய (சாரூப்பியமடைந்து) ஆகாயவாசிகள் சிந்திய புஷ்பமாரியாலாகிய வெள்ளத்துள் மூழ்கிச் சிவலோகஞ் சென்று, வெற்றிமிக்க திருநந்திதேவர் சிவகணத்துள் (தானும் ஒன்றாகத்)தங்கியது. எ-று.(உஉ)

அன்று தொட்டின் றளவும்பொற் றாமரை
யென்று ரைக்கு மெழின்மல ரோடையிற்
சென்று கைத்துத் திரிகின்ற மீனலா
லொன்று மற்றன நீர்வா ழுயிர்களும்.

(இ-ள்.) (அவ்வண்ணமாக இறைவரிடத்தில் அந்நாரையானது வரம்பெற்ற) அக்காலமுதல் இக்காலவரையிலும், பொற்றாமரையென்று கூறும் பொலிவுமிக்க திருக்குளத்தில், உலாவித் தாவித்திரிகின்ற மீன்களேயன்றி, நீரில் வாழும் (தவளை முதலிய) உயிர்களுஞ் சிறிதுமின்றி யொழிந்தன. எ-று. (உரு)

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

தன்கிளை யன்றி வேற்றுப் பறவைக டாமுந் தன்போ
னன்கதி யடைய வேண்டிற் றேகொலிந் நாரை செய்த
வன்பினில் வியப்போ வீச னருளினில் வியப்போ வன்பர்க்
கின்புரு வான வீச னருளன்பர்க் கெளிதே யைய.

(இ-ள்.) தனது சாதிப்பறவைகள் மட்டுமேயல்லாமல் வேறு சாதிப்பறவைகளும், தன்னைப்போல் நல்ல சிவகதியை யடைய வரமும் வேண்டியது. இந்த நாரையானது வழிபட்ட பத்திமையில் வியப்புள்ளதோ? (அப்பத்திமைக்கு மகிழ்ந்து அருள்புரிந்த) சோமசுந்தரக் கடவுளின் திருவருளில் வியப்புள்ளதோ? அடியவர்க்கு (அடியவங்கடோறும்) இன்பவடிவாய் நின்ற அச்சோமசுந்தரக்கடவுளின் திருவருள் அடியார்க்கு எளிது. எ-று. ஐய - வியப்பிடைச்சொல். ஏகாரம் - தேற்றம். (உச)

**கலிவிருத்தம்.**

மறக்கு றும்புக் களைகட்டு மண்ணின்மே
லறப்பெ ரும்பயி ராக்கிய தன்பயன்
சிறக்க நல்கிட வுண்டு செருக்குவான்
றுறக்க மெய்தி யிருந்தான் சுகுணனும்.

(இ-ள்.) பாவமாகிய களையைக்களைந்து, நிலவுலகின்மேல் தருமமாகிய பெரிய பயிரையேற்றி, அந்த (த்தரும) ப்பயிராலாகிய பயன் மிகவுங் கைகூடக் கிளைஞருமன்றித்தானும் அதனை நுகர்ந்து, இறுமாக்குஞ் சுகுணபாண்டியனுந் தேவருலகத்தை யடைந்து (மகிழ்ச்சியோடு) இருந்தனன். எ-று. (உரு)

**நாரைக்கு முத்திகொடுத்தபடலம் முற்றிற்று.**

ஆக திருவிருத்தம். உருஉஉ.

கூடற்காண்டம்-முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீமீநாக்ஷிஸுந்தரேஶ்வராயநம:.

# திருவாலவாய்க்காண்டம்.

## நாற்பத்தொன்பதாவது

## திருவாலவாயான படலம்.

### பரசிவவணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாயுடையார் விடுத்தபழி யழல்வழுதி யுடல்குளிப்பப் பதிக மோதுஞ்
சேயுடையா ரணந்திளைக்குஞ் செவியுடையா ரளவிறந்த திசைக ளெட்டுந்
தோயுடையார் பொன்னிதழித் தொடையுடையார் விடவரவஞ் சுற்று மால
வாயுடையார் புகழ்பாடப் பெறுவேமேல் வேண்டுவதிம் மனித யாக்கை.

(இ-ள்.) பாயினையுடையாக வுடுத்த சமணமாக்கள் செலுத்திய ஆபிசாரயாகத்தின் ஜடத்தீயானது பாண்டியனுடலில் மூளத்திருப்பதிகமோதிய பிள்ளைமைப் பருவத்தையுடைய திருஞான சம்பந்தப்பிள்ளையாரது திருப்பதிகத்தை நுகருந்திருச் செவியையுடையவரும், எல்லையின்றிப் பரந்த எட்டுத் திசைகளுமே பொருந்திய ஆடையாகவுடையவரும், பொன்னிறமாகிய கொன்றைமலர் மாலையையுடையவரும், (தமது திருக்கரத்திற் கங்கணமாக வணிந்த) விஷம்பொருந்திய பாம்பினால் எல்லைவளையறுத்த திருவாலவாயை யுடையவருமாகிய சோமசுந்தரக்கடவுளின்கீர்த்தியைப் பாடப்பெறுவேமாகில் இந்த மானுடசரீரம் இன்றியமையாததாம். எ-று. (க)

### சிவசத்தி வணக்கம்.

வேதனெடு மாலாதி விண்ணுடர் மண்ணுடர் விரத யோகர்
மாதவர்யா வருங்காண மணிமுறுவல் சிறிதரும்பி மாடக் கூட
லுதனிரு திருக்கரந்தொட் டம்மியின்மேல் வைத்தகய ணுட்டச் செல்வி
பாதமல ரெழுபிறவிக் கடனீந்தும் புணையென்பர் பற்றி லாதோர்.

(இ-ள்.) பிரமன் நெடிய திருமால் முதலிய தேவர்களும், பூலோகத்தவர்களும், சிவயோகமே விரதநிலையாக வுடையவரும், பெரிய தபோதனர்களுமாகிய எல்லோருந் தரிசிக்க, அழகிய புன்னகை சிறிது முகிழ்த்தருளி, நான்மாடக்கூடலிலே எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் (திருமணஞ்செய்தபொழுது) தமது உபயதிருக்கரத்தால் தீண்டி அம்மியின்மேல் வைத்தருளப்பெற்ற அங்கயற்கண்ணம்மையாருடைய திருவடித்தாமரைகளை, பற்றற்ற முக்தர்கள் எழுபிறப்பாகிய கடலினைக்கடக்குந் தெப்பமெனக் கூறுநிற்பர், எ-று. (உ)

மேற்படி-வேறு.

ஓலவாய் மறைக டேரா வொருவன்ற னுலகந் தன்னைச்
சேலவா யுழலு நாரைக் கருளிய செயலீ தம்ம
நீலவாய் மணிநேர் கண்ட னெடியநான் மாடக் கூட
லாலவா யாகச் செய்த வருட்டிறற் மெடுத்துச் சொல்வாம்.

(இ-ள்.) (உதாத்தமுதலிய) ஒலிவாய்ந்த வேதங்களுணராத ஒப்பற்றசோம சுந்தரக்கடவுள் தனது சிவலோகத்தைச் சேற்செண்டையை விரும்பிச் சுழன்று திரியும் நாரைக்கு அருளிய திருவிளையாடலிது. கருநிறம்பொருந்திய நீலமணிபோன்ற ஸ்ரீகண்டத்தையுடைய அச்சோமசுந்தரக்கடவுள் பரந்த நான்மாடக்கூடலாகிய மதுரையைத் திருவாலவாயாகச் செய்தருளிய திருவிளையாடலை (இனி) யெடுத்துச்சொல்லுவோம். எ-று. (௩)

சித்திர மேரு வென்ற திரண்ட தோட் சுகுணன் பின்பு
சித்திர விரதன் சித்ர பூடணன் றிண்டேர் வல்ல
சித்திர துவசன் வென்றிச் சித்திர வருமன் வன்றோட்
சித்திர சேனன் சீர்சால் சித்ரவிக் கிரம னென்போன்,

(இ-ள்.) அழகிய மேருவைவென்ற திரண்ட தோளினையுடைய சுகுணபாண்டியனுக்குப் பின்னர், சித்திரவிரதபாண்டியனும் சித்திரபூடணபாண்டியனும் திண்ணியதேர்ப்போரில் வல்ல சித்திரத்துவஜபாண்டியனும் வெற்றியையுடைய சித்திரவருமபாண்டியனும் வலிய தோளையுடைய சித்திரசேனபாண்டியனும் சீர்த்திமிக்க சித்திர விக்கிரமபாண்டியன் என்பவனும். எ-று.

இதுமுதல் ஆறுபாடல்கள் ஒருதொடர். (௪)

மணிகெழு தேரி ராச மார்த்தாண்ட னிராச சூடா
மணியணி முடியி ராச சார்த்தூல வழுதி சிந்தா
மணிநிகர் துவிச ராச குலோத்தமன் மடங்கா வென்றி
மணிதிகழ் பொலம்பூ ணுயோ தனப்பிர வீணன் மன்னோ.

(இ-ள்.) இரத்தினம்பதித்த தேரையுடைய இராசமார்த்தாண்ட பாண்டியனும், இராசசூடாமணி பாண்டியனும், அழகிய கிரீடஞ்சூடிய இராசசார்த்தூல பாண்டியனும், சிந்தாமணிபோன்ற கொடையையுடைய துவிசராச குலோத்தமபாண்டியனும், நிலைதளராதவெற்றியையும் இரத்தினமயமாகிய பொன்னுலாகிய ஆபரணத்தையுமுடைய ஆயோதனப்பிரவீண பாண்டியனும். எ-று. (௫)

இயம்பருந் திறலி ராச குஞ்சரன் பரவி ராச
பயங்கரன் கைக்கும் பைந்தா ருக்கிர சேனன் பாரைச்
சயங்கெழு தோண்மே லேந்து சத்துருஞ் சயன்வீ மத்தேர்
வயங்கெழு மன்னன் வீம பராக்ரம வழுதி மாதோ.

(இ-ள்.) எடுத்துச் சொல்லுதற்கரிய வெற்றியையுடைய இராசகுஞ்சரபாண்டியனும், பரவிராசபயங்கர பாண்டியனும, பசிய வேப்பமாலையையணிந்த உக்கிர சேனபாண்டியனும், உலகினை வெற்றி மிக்க புயத்தின்மேலேந்திய சத்துருஞ்சய பாண்டியனும், வீமரதபாண்டியனாகிய வெற்றிமிக்க அரசனும் வீமபராக்கிரமபாண்டியனும். எ-று. (௬)

பெய்வளை விந்தை சேர்ந்த பிரதாப மார்த்தாண் டப்பேர்த்
தெவ்வடு சிலையான் றேர்விக் கிரமகஞ் சுகன்றே ரார்போர்

வெவ்விய சமர கோலா கலனெனும் வாகை வேலா
னவ்விய மொழித்த சிந்தை யதுலவிக் கிரம னென்போன்.

(இ-ள்.) அடுக்கிய வளையலையணிந்த விஜயலக்ஷுமியைப் புணர்ந்த பிரதாப மார்த்தாண்ட பாண்டியனென்னும் பெயரையுடைய பகைவரைவென்ற வில்லையுடையவனும், இரத்சேனையையுடைய விக்கிரமகஞ்சுக பாண்டியனும், பகைவரைப்போரில் வென்ற சமரகோலாகல பாண்டிய னென்னும் பெயர்தரித்த வாகைமாலையணிந்த வேற்படையையுடையவனும், பொறாமையை யொழித்த மனத்தையுடைய அதுல விக்கிரமபாண்டியனென்பவனும். எ-று. (எ)

எழில்புனை யதுல கீர்த்தி யெனவிரு பந்தி ரண்டு
வழிவழி மைந்த ராகி வையகங் காத்த வேந்தர்
பழிதவி ரதுல கீர்த்திப் பாண்டியன் றன்பா லின்பம்
பொழிதர வுதித்த கீர்த்திப் பூடணன் புரக்கு நாளில்.

(இ-ள்.) தோற்றமிக்க அதுலகீர்த்திபாண்டியனும் என்று சொல்லப்பட்ட இருபத்திரண்டு பரம்பரை வழியேவந்த சந்ததிகளாகி, உலகினை மனுநூல்வழி யோம்பியபாண்டியருள், குற்றத்தினின்று நீங்கிய அதுலகீர்த்திப் பாண்டியனிடத்து மகிழ்ச்சி சிறக்கத்தோன்றிய கீர்த்திபூடணபாண்டியன் அரசுசெலுத்துங்காலத்தில். எ-று.

மகாசேனபாண்டியனையுடன் கூட்டி இருபத்துமூன்று பரம்பரையென முதனூலார் கூறினர். (அ)

கருங்கட லேழுங் காவற் கரைகடந் தார்த்துப் பொங்கி
யொருங்கெழுந் துருத்துச் சீறி யும்பரோ டிம்ப ரெட்டுப்
பொருங்கட கரியு மெட்டுப் பொன்னெடுங் கிரியு நேமிப்
பெருங்கிடி வரையும் பேரப் பிரளயங் கோத்த தன்றே.

(இ-ள்.) பெரிய சத்த சமுத்திரங்களுங் காவலாகிய கரையைக் கடந்து கோஷித்துக்கொதித்து ஒருசேரவெழுந்து கோபித்து விண்ணுலகோடு மண்ணுலகும், போர்புரியும் மதத்தையுடைய அஷ்டகஜங்களும், நெடிய பொற்கட்டிவிலைபும் அஷ்டகுலபர்வதங்களும், மகாப்பிரளயமாக எங்குங் கோத்தன. எ-று. (கூ)

அப்பெருஞ் சலதி வெள்ளத் தழிந்தன வழிவி லாத
வெப்பெரும் பொழிலு மேழு தீபமு மிவற்றுட் டங்கி
நிற்பன செல்வ வான திணைகளு நீண்ட சென்னிப்
பர்ப்பத வகையு மீறு பட்டன வாக வங்கண்.

(இ-ள்.) அந்த மகாப்பிரளய வெள்ளத்திலமுந்தி, அழிவில்லாத பெரிய நவ கண்டங்கள் யாவும், சத்த தீவுகளும், இவற்றிலுள்ள நிலையியற்பொருளும் இயங்கியற் பொருளும், உயர்ந்த சிகரங்களையுடைய மலைகளும் அழிந்தன. அப்பொழுது. எ-று.

கீழ்விதேகம்-மேல்விதேகம்-வடவிதேகம் - தென்விதேகம் - வடவிரேபதம்-தென்னிரேபதம்-வடபரதம்-தென்பரதம்-மத்திமகண்டம் என்பன நவகண்டங்கள்.

நாவல்-இறலி-குசை - கிரவுஞ்சம்-புட்கரம் - தெங்கு-கமுகு என்பன சத்த தீவுகள். (க0)

தேனிழி குதலைத் தீஞ்சொற் சேனெடுங் கண்ணி கோயில
வானிழி விமானம் பொற்று மரைவிளை யாட்டின் வந்த
கானிழி யிடபக் குன்றங் கரிவரை நாகக் குன்ற
மானிழி வரைவ ராக வரைமுத லழிவி லாத.

(இ-ள்.) தேன் சொரியும் இனிய குதலைச் சொல்லையுடைய நெடிய அங்கயற் கண்ணம்மையார் திருக்கோயிலும், விண்ணினின்றுமிழிந்த விமானமும் பொற்றாமரைத் தீர்த்தமும் (எம்பெருமானது) திருவிளையாடலால் தோன்றிய (சோலைகள்) மணம்வீசும் இடபமலையும் யானைமலையும் சர்ப்பமலையும் பசுமலையும் பன்றிமலையு முதலிய தானங்கள் (அப்பிரளயத்தால்) அழியாது விளங்கின. எ-று.

ஆன் இழிவரை-பசு உருத்திரிந்த மலை. (கக)

வெள்ளநீர் வறப்ப வாதி வேதியன் ஞாட்பின் முன்போ
லுள்ளவா றுதிப்ப நல்கி யும்பரோ டிம்ப ரேனைப்
புள்ளொடு விலங்கு நல்கிக் கதிருடன் புத்தேண் மூவர்
தள்ளரு மரபின் முன்போற் றமிழ்வேந்தர் தமையுந் தந்தான்.

(இ-ள்.) பிரளய வெள்ளஞ் சுவற, சிவபெருமானுர் பிரமனைத் தந்து, உலகம் முன்போலத் தோன்றச் சிருஷ்டித்து, விண்ணுலகோடு மண்ணுலகையும் அவையொழிந்த பறவையோடு மிருகங்களையும் (அவனாற்) சிருட்டித்து, ஒளியுருவத்தையுடைய சோமசூரியாக்கினி யென்னும் முத்தேவர்களுடைய நீங்குதலில்லாத மரபில் முன்போல் சேர சோழ பாண்டியர் என்னும் அரசர் மூவரையுஞ் சிருஷ்டித்தனர்.

—சிவபெருமான் உலகங்களைப் பிரமனாற் படைத்தனரென்பதை.

கந்தபுராணம் ததீசியுத்தரப்படலம்.

"நிலவு கின்றதன் னருளுருக் கொண்டிடு நிலமன்
தலைமை பெற்றிடு புங்கவர் தம்மைமுன் றந்தே
உலகம் யாவையு மளித்தருள் செய்திட வுதவி
அலகி லாவுயிர் யாவையு மயன்கணின் றளிப்பான்" என்பதனுனுணர்க. ()

கலிவிருத்தம்.

அங்கியை மதிமர பென்னு மாழியுட்
டங்கிய கலையெணான் கிரட்டி தன்னொடும்
பொங்கிய நிலாமதி போலத் தோன்றினன்
வங்கிய சேகர வழுதி மன்னனே.

(இ-ள்.) அவ்வாறு தோன்றிய சந்திரன்மர பென்னும்பாற்கடலிலே, பொருந்திய அறுபத்துநான்கு கலைகளோடும் விளங்கித் தோன்றுங் கிரணத்தையுடைய சந்திரன்போல வங்கிய சேகரபாண்டியனென்னும் அரசன் வந்து தோன்றினன். எ-று.

அறுபத்துநான்குகலைக ளென்றது கலைஞானங்கள்.
வங்கியசேகரனை வமிசசேகரனெனவுங் கூறுப. (கரு)

தாளணி கழலினன் றங்க ணாயகன்
கோளணி புரிசைசூழ் கோயில் சூழவோர்
வாளணி கடிநகர் சிறிது வைகவைத்
தாளரி யேறென வவனி காக்குநாள்.

(இ-ள்.) காலிற்கட்டிய வீரக்கழலையுடைய வங்கிய சேகரபாண்டியன் தங்கள் குலதெய்வமாகிய சோமசுந்தரக்கடவுளுடைய, நவகோள்களுந் தவழு மதில் சூழ்ந்த திருக்கோயிலைச்சூழ, ஒளிபொருந்திய காவல்பூண்ட நகரமொன்று சிறிதாகக் கோலித்தாபித்து, சிங்க வேற்றினைப்போல (இறுமாப்புடன்) நிலவுலகைக்காத்துவருநாளில். எ-று. (கசு)

செய்யகோன் மனுவழி செலுத்து நீர்மையாற்
பொய்கெழு கலிப்பகை புறந்தந் தோடத்தன்

ஞவயகம் பல்வளஞ் சுரப்ப வைகலு
மெய்ஙெகுழ மன்பதை மிக்க வாலரோ.

(இ-ள்.) (வங்கிய சேகரபாண்டியன்) செங்கோலினை மனுநூல்வழி நடத்துந் தன்மையால், பொய்மிக்க கலியென்னும் பகைவன் புறங்காட்டியோட, தன் நாடு பல வளங்களையுஞ் சுரத்தலால், நாடோறுந் தோற்றமிக்க மக்கட்பரப்பு (அப்பாண்டிநாட்டில் விசேடித்து)ப் பல்கின. எ-று.

இச்செய்யுள் காரணமாலையணி; இதிற்கூறியவை ஒன்றற்கொன்று காரணமாய் நிற்றலின். (௪௫)

பல்குறு மானுடப் பரப்பெ லாமொருங்
கல்குற விடங்குறை வாக வாய்மதுப்
பில்குறு தாரினன் பிறைமு டித்தவன்
மல்குறு கோயிலின் மருங்க ணெய்தினன்.

(இ-ள்.) பல்கிய மக்கட் பரப்புகள் யாவும் ஒருசேரவசிக்க, இடங்குறைவுபட, குற்றமற்ற தேனைச்சிந்தும் மாலையுடைய வங்கிய சேகரபாண்டியன், சந்திரனைச் சடையிலணிந்த சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளிய திருக்கோயிலின் பாங்கரடைந்தனன். எ-று.

பல்குறுமுதலியன ஒரு சொன்னீர்மையன. (௪௬)

கறையணி கண்டனைத் தாழ்ந்து கைதொழு
திறையவ நின்னருள் வலியி னின்னிலப்
பொறையது வாற்றுவேற் கீண்டிப் போதொரு
குறையதுண் டாயின தென்று கூறுவான்.

(இ-ள்.) விடம்பொருந்திய ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து கைகூப்பி, தலைவனே! உனது திருவருள்வன்மையால், இப்பூமிபாரத்தைத்தாங்குமெனக்கு, இவ்விடத்தில் இப்பொழுது ஓர் குறையுளது என்று கூறத்தொடங்கினன். எ-று.

பொறையது-குறையது-இவற்றில் அது பகுதிப்பொருள் விகுதிகள். (௪௭)

இத்தனை மாக்களு மிருக்கத் தக்கதாப்
பத்தனங் காணவிப் பதிக்க ணாதியே
வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலே
னத்தமற் றதனையின் றறியக் காட்டென்றான்.

(இ-ள்.) இவ்வளவு மக்கட்பரப்பும் வசிக்கும்படி, தக்கதாக ஒருநகரங்காண இப்பதியில் ஆதியிலே வரையறைசெய்துவைத்த எல்லையை யறியேன். பரிசுத்தமானவனே! அதனையின்று அடியேனுணரக் காட்டாயென்று குறையிரந்தனன். எ-று.

நுண்ணிய பொருளினு நுண்ணி தாயவர்
விண்ணிழி விமானனின் றெழுந்து மீனவற்
கிண்ணிய வன்பினுக் கெளிய சித்தராய்ப்
புண்ணிய வருட்கட லாகிப் போதுவார்.

(இ-ள்.) நுட்பமாகிய பொருள்களிலும் நுட்பமாகியபொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுள் விண்ணினின்று மிழிந்த விமானத்தினின்று மெழுந்தருளி, வங்கிய சேகரபாண்டியனுடைய மிக்க அன்பிற் கெளிய சித்தமூர்த்திகளாய், சிவபுண்ணியத்தினல் வாய்க்குங் கிருபா சமுத்திரமாய் வருகின்றவராயினர். எ-று.

"தூலசித்" என்றது, வியஞ் சகமின்றி அறிவு நிகழ்ச்சியின்மையாலும், "நுண்ணிய பொருளினு நுண்ணியதாய்" என்றது, அணுக்களுக்கு பலமொழித்துண ர்த்தும் வியஞ்சகப் பொருளாய்த் தனக்கோர் வியஞ்சகம் வேண்டாது நிற்கும் சிவம் அதிசூக்கும மாதலாலுமென்க. இதனை,

"நூலுணர்வுணரா நுண்ணியோன் காண்க"—என்றும்,
"அறிவிக்கவறிதலானுமழிவின்றிநிற்றலானுங்
குறிபெற்றசித்துஞ்சத்துங்கூறுவதுயிருக்கீசன்
நெறிநித்தமுத்தசுத்தசித்தெனநிற்பனன்றே
பிறிவிப்பன்மலங்களெல்லாம்பின்னுயிர்க்கருளினாலே"—என்றும் வருவன வற்றாலுணர்க. (கக)

கலிநிலைத்துறை.

பாம்பி னாற்கடி சூத்திரங் கோவணம் பசுந்தாட்
பாம்பி னாற்புரி நூல்சன்ன வீரம்வெம் பகுவாய்ப்
பாம்பி னாற்குழை குண்டலம் பாதகிண் கிணிநாண்
பாம்பி னாற்கர கங்கணம் பரித்தனர் வந்தார்.

(இ-ள்.) பாம்பினால் அரைஞாணும், கோவணமும், காலில்லாத பாம்பினால் உபவீதமும், வீரசங்கிலியும், கொடிய பிளந்த வாயினையுடைய பாம்பினால் சங்ககுண் டலமும், காற்சதங்கையும், பாம்பினாற் கையிலணியும், கங்கணமுமாகத் தாங்கிவந் தருளினர். எ-று.

தாருவனமுனிவர் தாம் செய்த அபிசாரவேள்வியில் தோன்றிய சர்ப்பங்களைப் பிக்ஷாடனமூர்த்தமாகவந்த எம்பெருமான் மீது பிரயோகித்தபொழுது, இறைவர் அவ ற்றையெல்லாம் தமது தேகமுழுதும் அணிகளாக்கிக்கொண்டன ராதலின், ஈண்டு அவற்றையேகூறினதாம். பசுமை = இன்மை. (உ0)

வந்த யோகர்மா மண்டப மருங்குநின் றங்கைப்
பந்த வாலவா யரவினைப் பார்த்துநீ யிவனுக்
கிந்த மாநக ரெல்லையை யளந்துகாட் டென்றா
ரந்த வாளரா வடிபணிந் தடிகளை வேண்டும்.

(இ-ள்.) வந்தருளிய சித்தமூர்த்திகள் மகாமண்டபத்தினருகி நின்று, அழ கிய திருக்கரத்திற்கட்டிய விஷம்பொருந்திய வாயையுடைய சர்ப்பத்தைப்பார்த்து, நீயிங்கு நின்ற வங்கிய சேகரபாண்டியனுக்கு இந்தப்பெரிய நகரத்தின் எல்லையை வளையறுத்துக் காட்டாயென்றேவினார். அந்த ஒள்ளியஅரவமானதுசித்தமூர்த்திகளைத் திருவடிபணிந்து வேண்டாநிற்கும். எ-று. (உக)

பெரும விந்நக ரடியனேன் பெயரினால் விளங்கக்
கருணை செய்தியென் றிரந்திடக் கருணையங் கடலு
மருண யந்துசேர்ந் தனையதே யாகெனப் பணித்தா
னுருகெ ழுஞ்சிசல வுரகமு மொல்லெனச் செல்லா.

(இ-ள்.) பெருமானே! இந்நகரம் அடியேன்பெயரால் விளங்கத்திருவருள் செய்யாய் என்றிரக்க, அழகிய கிருபா சமுத்திரமாகிய சித்தமூர்த்திகளும் திருவருள் செய்திசைந்து அவ்வாறேயாகுக வெனப்பணிந்தனர். அச்சமிக்க போக்கினையுடைய பாம்பும் (கட்டளைப்படி) விரைந்து சென்று. எ-று.

உரம் = மார்பாற் செல்வது; பாம்பு. (உஉ)

கீட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந் துடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் கொற்றவர்க் கெல்லை
காட்டி மீண்டரன் கங்கண மானது கரத்தில்.

(இ-ள்.) கீழைத்திசையின்கட் சென்று, தனது ஒளிவிளங்கும் வாலினை நீட்டி, பெரிய நகர்க்குப் பிரதக்ஷிணமாகத் தேகத்தைவளைத்து, வாலினை வாயில்வைத்து, வேற்படை தாங்கிய வங்கியசேகரபாண்டியனுக்கு அந்நகரெல்லையைக்காட்டித் திரும்பி, சிவபெருமான் திருக்கரத்திற் பண்டுபோலக் கங்கணமாயிற்று., எ-று.

படிந்து செயவெனெச்சத்திரிபு. படியவென்று பொருள். (உரு)

சித்தர் தஞ்சின கரத்தெழுந் தருளினர் செழியன்
பைத்த வாலவாய் கோலிய படிசுவ ரெடுத்துச்
சுத்த நேமிமால் வரையினைத் தொட்டகழ்ந் தெடுத்து
வைத்த தாமென வகுத்தனன் மஞ்சுசூ ழிஞ்சி.

(இ-ள்.) சித்தமூர்த்திகளாய்வந்த சோமசுந்தரக்கடவுள் தம தாலயத்திற் கெழுந்தருளினர். வங்கிய சேகரபாண்டியன் படம்விரித்த பாம்புகோலியவண்ணமே சுவர் எழுப்பி, வாலிதாகிய பெரிய சக்கிரவாளகிரியைப் பறித்தெடுத்து வைத்தாற்போல, மேகஞ்சூழ்ந்த மதில்கட்டி முடித்தனன். எ-று. (உச)

தென்றி சைப்பரங் குன்றமும் வடதிசை யிடபக்
குன்ற முங்குடக் கேடக நகரமுங் குணபாற்
பொன்ற லங்கிழித் தெழுபொழிற் பூவண நகரு
மென்று நாற்பெரு வாயில்கட் கெல்லையா வகுத்தான்.

(இ-ள்.) (அந்த மதிலின்) நான்குவாயில்கட்கு, தென்றிசையில் திருப்பரங்குன்றமும், வடதிசையில் இடபமலையும், மேற்றிசையில் திருவேடகமும், கீழைத் திசையில் விண்ணுலகைக் கிழித்தோங்கிச் சோலைசூழ்ந்த திருப்பூவணமும், எப்பொழுதும் எல்லையாக (அமைய அவ்வாயிலை) அமைத்தனன். எ-று. (உ௫)

அனைய நீண்மதி லாலவாய் மதிலென வறைவர்
நனைய வார்பொழி னகரமு மாலவாய் நாமம்
புனைய லாயதெப் போதுமப் பொன்னகர் தன்னைக்
கனைய வார்கழற் காலினான் பண்டுபோற் கண்டான்.

(இ-ள்.) அந்த நெடிய மதிலை ஆலவாய் மதிலென்று (யாவர்க்கும்) கூறுவர் மதுவையுடைய நெடிய சோலைசூழ்ந்த அந்நகரமுந் திருவாலவாய் நகரம் என்னும் பெயரை யெப்பொழுதும் புனைந்தது. அந்த அழகிய திருவாலவாய் நகரத்தை ஒலித்தலையுடைய வாரிற் கோத்த வீரக்கழலணிந்த காலையுடைய வங்கிய சேகரபாண்டியன் முன்போல் விளங்கப்பார்த்தனன். எ-று.

பண்டுபோற் கண்டனனென்றதாற் சிருஷ்டிக்கு முன்னிருந்தபடி படைத்தனனெனக்கொள்க. (உசு)

கொடிக ணீண்மதின் மண்டபங் கோபுர வீதி
கடிகொள் பூம்பொழி லின்னவும் பதியுவர்க் கண்டு
நெடிய கோளகை கிரீடம்வா ணிழன்மணி யாற்செய்
தடிகள் சாத்திய கலன்களும் வேறுவே றமைத்தான்.

(இ-ள்.) துவசங்கட்டிய நெடிய திருக்கோயிலின் மதிலும், திருமண்டபமும், திருக்கோபுரமும், திருவீதியும், வாசமிக்க பூஞ்சோலையும், இவ்வபோன்ற பிறவும் புதியனவாகவகுத்து, சோமசுந்தரக்கடவுள் சாத்தியருளிய நெடிய வட்ட வடிவாகிய பாகையையுங் கிரீடத்தையும் விளங்கும் ஒளியையுடைய இரத்தினங்களாலிழைத்துச்செய்து, திருவாபரணங்களையும் வெவ்வேறாக அமைத்தனன். எ-று.

கோளகைவட்டம் - தலைப்பாகையென்றும். (உஎ)

பல்வகைப்பெருங் குடிகளின் பரப்பெலா நிரம்பச்
செல்வ வானவன் புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லன் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
றொல்லை நாட்குல சேகரன் போல்வரு தோன்றல்.

(இ-ள்.) பலவகைப்பட்ட குடிகளின் பரப்பையெல்லாங் குடியேற்றி, குபேரன் இந்திரனென்னும் இவர்களது (அளகாபுரி - அமராவதி) நகரங்களிலுஞ் சிறப்புற்றோங்க, வளமிக்க அத்திருவாலவாய் நகரில் (மலைவளமுதலிய) பெருவளங்கள் முட்டின்றி நிரம்ப, முன்னாளில் திருநகரங்கண்ட குலசேகரபாண்டியனைப்போல் அவன்வழிவந்த வங்கியசேகரபாண்டியன் வளர்த்துவந்தனன். எ-று.

பல்வகைப் பெருங்குடிகள் - அந்தணர் - அரசர் - வணிகர் - சூத்திரர்.

மலைவளமுதலிய வளங்கள்-மலைவளம், காட்டுவளம், நாட்டுவளம், கடல்வளம் எனப்படும்.

மலைவளங்கள் - மிளகு - கோட்டம் - அகில் - தக்கோலம் - குங்குமம்.
காட்டுவளங்கள் - தேனடை-தேன் - அரக்கு - மயிற்பீலி - நாவி.
நாட்டுவளங்கள் - செந்நெல் - சிறுபயறு - கரும்பு - வாழை - செவ்விளநீர்.
கடல்வளங்கள் - உப்பு-முத்து-பவளம் - சங்கு - ஒக்கோலை என்பனவாம்.

திருவாலவாயானபடலம்
முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - உகூ0.

---

ஐம்பதாவது,

## சுந்தரப்பேரம்பெய்த படலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கணா ரரகம ணிந்தருள் வடிவம டைந்தர சகமகிழக்
கங்கண விடவர வங்கொடு கடிநகர் கண்டருண் முறையிதுவாஞ்
சங்கணி குழையினர் பஞ்சவன் வழிபடு தம்பெய ரொழுதியகூர்
வெங்கணை கொடுவளை வன்படை முடுகிய வென்றியை யினிமொழிவாம்.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுள் நாகபூடணமணிந்தருளிய சித்தமூர்த்திகள் வடிவங்கொண்டருளி, வங்கியசேகர பாண்டியனுடைய மனமகிழக் கங்கணமாகிய விஷத்தையுடைய சர்ப்பத்தாற் காவல்பூண்ட திருநகரங்கண்டருளிய திருவிளையாடலிது. சங்கினாலாகிய அழகிய குண்டலத்தையுடைய அச்சோமசுந்தரக்கடவுள் அப்பாண்டியன் வழிபடற்குரிய தமது திருநாமந்தீட்டிய கூரிய கொடியஅம்பினால், விக்கி



சுந்தரப்பேரம்பெய்தபடலம். (௫.௨.௩௦)

ரமசோழனுடைய சேனையைப்புறங்கண்ட திருவிளையாடலை இனி (யாம் எடுத்துக்) கூறுவாம். எ-று.

வென்றி-திருவிளையாடல். இதுகாரியவாகுபெயராய் அதன் காரணத்தை யுணர்த்திநின்றது. (க)

வெங்கய னீள்கொடி வங்கிய சேகரன் வெண்குடை நீழலின்வாய்
வங்கமு லாவிய தெண்கடன் ஞாலம டந்தையு மாசறுசீர்ச்
செங்கம லாலய மங்கையும் வாலிய திண்பது மாலயமே
னங்கையு மோவற மங்கல மான நயம்பெறு வாழ்வுறுநாள்.

(இ-ள்.) பகைவர்க்கு வெம்மைதரும் நெடிய கயற்கொடியையுடைய வங்கியசேகர பாண்டியனுடைய வெண்கொற்றக் குடைநிழலின்கீழே, மரக்கலமுலாவுந் தெள்ளிய கடல்சூழ்ந்த பூமிதேவியும், குற்றமற்ற அழகுபொருந்திய செந்தாமரைக் கோயிலில்வாழுந்திருமகளும்,வெள்ளியவாசமிக்க வெண்டாமரைக்கோயிலில் வாழுஞ் சரசுவதியும் ஒழிவறச்சுபமான நன்மைமிக்கவாழ்வினைப்பொருந்துங்காலையில். எ-று.

பாண்டியன் மனுநூன்முறைப்படி செங்கோல் செலுத்தியதால் அவன் குடைக்கீழ் வாழ்வோர் நிலவளத்தாற்செல்வத்திலுங் கல்வியிலுங் குறைவின்றி வாழ்ந்தனர் என்பது கருத்து. (உ)

வேழம றப்படை சூழவெ திர்த்தவர் வீறுகெ டுத்தடியிற்
றாழவ டர்த்திகல் வாகைதொ டுத்தலர் தார்புனை விக்கிரமச்
சோழன் மதிக்குல நாயக னைப்பொரு சூள்கரு தித்தொலையா
வாழ்கட லுக்கிணை யாமனி கத்தொடு மாடம ருக்கெழுவான்.

(இ-ள்.) கொலைத்தொழிலையுடைய யானைச்சேனை சூழ, எதிர்த்த சத்துருக்களுடைய செருக்கையொழித்து, தனது காற்கீழொதுங்கிநிற்க வென்று வெற்றிக்குரிய வாகைமலராற்றொடுத்த மணமிக்க மாலையையணிந்த விக்கிரமசோழன், சந்திரமரபிற்றோன்றிய வங்கியசேகரபாண்டியனுடன் போர்த்தொழிலைக்குறிக்கும் வஞ்சினங்கருதி, (பகைவருடன் போர்புரிதற்கு) பின்னிடாத ஆழ்ந்த சமுத்திரத்திற்கிணையான சேனையோடும் வெற்றிமிக்க போர் புரிதற்கு யுத்தசன்னத்தனானான். எ-று.

சூள்-முதனிலைத்தொழிற்பெயர். (ங)

கயபதி காய்சின நரபதி பாய்துர கதபதி யேமுதலா
வயமிகு தோள்வட திசையின ராதிபர் வலிகெழு சேனையினோ
டியமிடி யேறிமி ழிசையென வாய்விட விரதம தேறி நடாஅய்ப்
பயன்மலி காவிரி நதியரு கேயுறை பதிகொடு மேயினனால்.

(இ-ள்.) கயபதியும், கொல்லுங் கோபமுடைய நரபதியும், பாய்ந்து செல்லுந் துரகபதியும் முதலாக வெற்றிமிகுந்த தோள்களையுடைய வடதிசையரசர்களின் வன்மைமிக்க சேனைகளோடு, வாத்தியங்கள் இடியேறொலிக்குங் கோஷம்போல வாய்விட்டொலிக்கத் தேரேறி நடத்தி (ஆன்மகோடிகளுக்குப்) பயன் தருவதில் மிக்க காவிரிநதியினயலே யிருக்கும் மருதநிலத்தூர்வழிக்கொண்டு போர்க்குச்சென்றனன். விக்கிரமசோழன் எ-று.

ஏகாரம் எண்ணுப்பொருளது. (ச)

சிலைத்தெழு செம்பியன் வெம்படை மள்ளர் செயிர்த்து மதிக்கடவுட்
குலத்தவ னாட்டி னிருந்தெழி லாநிரை கொண்டு குறும்புசெய்து

மலர்த்தட மேரியு டைத்துந கர்க்குவ ரும்பல பண்டமுமா
றலைத்து முடுக்கி நடுக்கம்வி ளைத்தும மர்க்கடி யிட்டனரால்.

(இ-ள்.) கோஷித்தெழுந்த விக்கிரமசோழனுடைய கொடிய சேனைவீரர்கள் கோபித்து, சந்திரமரபிற்றோன்றிய வங்கியசேகரபாண்டியனுடைய நாட்டிலுள்ள பசுக்களைக் கவர்ந்து கொடுந்தொழில் செய்தும், மலர் நிறைந்த தடாகங்களையும் ஏரிகளையும் உடைத்தும், நகர்க்குவரும் பலபண்டங்களையுங் கொள்ளைகொண்டு துரத்தி நடுக்கஞ்செய்தும், (இவ்விதங்களாகப்) போர்புரிதற்குத் தொடங்கினார்கள். எ-று.

கொண்டு என்பதனிறுதியில் எண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. (ரு)

மாறன் றிந்தினி யென்செய்து சேரியன் வன்படை யோவளவின்
றேறியெ திர்ந்தம ராடினெ னக்கரி திக்குறை யைப்பிறையோ
டாறணி பூரண சுந்தர னெந்தை யடித்தல முன்குறுகாக்
கூறி யிரந்து வரம்பெறு கென்றிறை கோயி லடைந்தனனால்.

(இ-ள்.) பாண்டியனுணர்ந்து இனி யாதுசெய்வோம்? சோழனுடைய வலிய சேனையோ அளவிறந்தன. மேற்சென்றெதிர்ந்து போர்செய்யின் எனக்கு வெல்லுதலரிது. இந்தக்குறைபாட்டினைச் சந்திரனோடு கங்கையையணிந்த சோமசுந்தரக்கடவுளாகிய எமது தந்தையின் திருவடித்தாமரையை யடைந்து குறைகூறியிரந்து வரம் பெறக்கடவேனென்று, அப்பெருமானார் திருக்கோயிலையடைந்தான். எ-று.

சிவபெருமான் தன்னையடைந்தோர் குறைப்பாட்டினை யொழிப்பது சாதாரணமாதலின், யானும் அவரைப்பணிந்து எனதுகுறையினை யொழிப்பேனென்பான் "அடித்தலமுன்குறுகாக்கூறி யிரந்துவரம்பெறுக" எனக்கூறினன்.

இச்செய்யுள் கருத்துடையடையணி. (சு)

அடைந்து பணிந்தரு ளுயக னேயடி யேனொடு விக்கிரமன்
றொடர்ந்தம ராட வயற்புல மன்னவர் தொகையொடு பாசறைவாய்ப்
படர்ந்திறை கொண்டன னேபொர வொத்த பதாதியெ னக்கிலையே
மிடைந்து வரும்படை மிக்க விடத்தரண் வேறுள தோவிறைவா.

(இ-ள்.) சந்நிதியையடைந்து, அருளுருவமாகிய பெருமானாரே! விக்கிரம சோழன் அடியேனுடன் எதிர்ந்து போர்புரிய மறுநிலத்தரசர் கூட்டத்துடன் படைவீட்டில்வந்திருந்தனன். போர்செய்தற்கொத்த சேனையோ எனக்கில்லை. இறைவரோ! நெருங்கிவருஞ்சேனை போரின்மேல் அதிகரித்தபொழுது, உம்மையன்றி அடைக்கலம்புகும் அரண்வேறுண்டோ? (இல்லையென்றபடி). எ-று. (எ)

என்னை யினிச்செயு மாறென மாற னிரந்து மொழிந்திடலு
முன்னவன் வானிடை நின்றச ரீரி மொழிந்தருள் வான்முதனீ
யன்னவ னோடம ராடுபி னாமு மடைந்துத வித்துணையாய்
நின்னது வாகை யெனப்பொரு கின்றன நீயினி யஞ்சலெனா.

(இ-ள்.) இனிச்செய்யும்வகை யாதென்று பாண்டியன் இரந்துகூற, சோமசுந்தரக்கடவுள் ஆகாயத்தில் நின்று அசரீரி கூறியருள்கின்றனர். முதலில் நீ அச்சோழனோடு போர்செய்க. பின்னர் நாமும் உனக்கு உதவியாகவந்து, வாகைமாலை உன்னதென்று (யாவருஞ்) சொல்லப் போர் செய்கின்றோம். நீ இனி அஞ்சுதலொழிக என்றருளிச்செய்ய. எ-று.

"நின்னது வாகை யென்ப்பொருகின்றனம்" என்பது, நீ வெற்றியுறச் செய்கின்றோம் என்னுங் கருத்தது. (அ)

சிந்தை களித்திரு கண்க டுளித்திரு செங்கை குவித்திறைவ
னந்தி மதிச்சடை யந்தண னைத்தொழு தன்று புறப்படமுன்
வந்தன னொற்றுவ னந்தி வரைக்கயல் வந்தது விக்கிரமன்
வெந்தறு கட்படை யென்றர சற்கு விளம்பின னப்பொழுதே.

(இ-ள்.) பாண்டியன் மனங்களித்து இருகண்களினின்றும் ஆநந்தபாஷ்பம் பெருகி, செவந்த இருகரங்களையுங் குவித்து, அந்திக்காலத்திற்றோன்றிய சந்திரனை யணிந்த சடாபாரத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைப்பணிந்து, அப்பொழுது (திருக்கோயிலினின்றும்) வெளிப்பட, தன்முன்னர்த் தூதுவன்வந்து, இடபமலைக்கயலில் விக்கிரம சோழனுடைய கொடிய சேனை வந்ததெனப் பாண்டியனுக்குக் கூறினன். அப்பொழுது. எ-று.

இறைவரருளிய அசரீரியால் வெற்றிபெற்றேமென அச்சமொழிந்தனனாதலின் "சிந்தைகளித்திருகண்கடுளித்து" என்றும், நின்னதுவாகையெனப் பொருகின்றனமென்றாராதலின் "அன்று" என்றுங்கூறினர். (௯)

அரச னியம்பல வதிர வலம்புரி யலற வலங்குளமா
னிரத மணைந்திட் விசைகொடு சிந்தைபி னிடவல வன்கடவப்
புரசை நெடுங்கரி திரையெறி யுங்கடல் பொருபரி விண்டொடுதேர்
விரைசெய் நறுந்தொடை விருதர் கணம்புடை விரவ நடந்தனனால்.

(இ-ள்.) பாண்டியன் பலவாச்சியங்களொலிக்கவும், வலம்புரிச்சங்கங்கோஷிக்கவும், விளங்கும் புறமயிரையுடைய குதிரைபூண்ட தேரில் ஆரோகணிக்க, தன்துமனமும் பின்னிடவிசைத்துத் தேர்ப்பாகன்செலுத்தவும், கழுத்துக்கயிற்றையுடைய பெரிய யானையும், அலைவீசுங்கடலையொத்த குதிரையும், ஆகாயத்தையளாவுந்தேரும், வாசம்வீசும் நல்ல மலர்மாலையையணிந்த சயவிருதேந்திய வீரர் கூட்டமுந் தன்னயலிற்கலந்துவரச் சென்றனன். எ-று. (௧௦)

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அளந்து சூழ்திரு வால வாய்மதி லின்பு றத்தக டிழுமிபோல்
வளைந்த சோழனெ டும்ப டைக்கெதிர் வஞ்சி வேய்ந்தெழு பஞ்சவன்
கிளந்த சேனைய திர்ந்து கிட்டின கிட்டி யவ்விரு படைஞருங்
களஞ்சி றந்திட வஞ்சி னங்கொடு கைவ் குத்தமர் செய்வரால்.

(இ-ள்.) வரையறுக்கப்பட்டுச் சூழ்ந்த திருவாலவாயின் மதிலின்புறத்தில் தோண்டிய கடல்போல முற்றுகைசெய்த வங்கியசோழனுடைய நெடிய சேனைக்கு எதிரே, வஞ்சிமாலையையணிந்த பாண்டியனுடையகோபமிக்கெழுந்த சேனைகள் கோஷித்து நெருங்கின. அவ்விருதிறச்சேனைகளும் நெருங்கிப் போர்க்களஞ்சிறக்க, சபதங்கூறி அணிவகுத்துப் போர்செய்வாராயினர். எ-று.

"வட்கார்மேற் செல்லுதல் வஞ்சியாம்" என்றதனால், போர்மேற் செல்லும் பாண்டியன் வஞ்சிமாலை யணிந்தனனென்க. (௧௧)

சைய மொத்தெழு தேரி னோரொடு சைய மொத்தெழு தேரரு
மையன் மைக்கரி வீர ரோடெதிர் மையன் மைக்கரி வீரருங்
கொய்யு ளைப்பரி வயவ ரோடிகல் கொய்யு ளைப்பரி வயவருங்
கைய ழற்படை வீசி மின்விடு சாரெ னப்பொரு வாரரோ

(இ-ள்.) மலைபோன்றெழுந்த தேர்வீரரோடு மலைபோன்றெழுந்த தேர்வீரரும், மதமயக்கத்தையுடைய கரிய யானைவீரரோடு பகைமைகொண்ட மதமயக்கத்

தையுடைய கரிய யானைவீரரும், கொய்த புறமயிரையுடைய குதிரைவீரரோடு பகைத்த கொய்த புறமயிரையுடைய குதிரைவீரரும், தமதுகைகளால் நெருப்பைச் சொரியும் ஆயுதங்களை வீசி, மின்னல் வீசும் மேகம்போல (தம்முட்) போர் செய்யத்தொடங்கினர். எ-று. (கஉ)

முடங்கு வெஞ்சிலை வில்ல ரோடு முடங்கு வெஞ்சிலை வில்லரும்
விடங்க ழிழ்ந்திடு வேல ரோடு விடங்க ழிழ்ந்திடு வேலரு
மிடங்கை தோல்வல வாள ரோடு மிடங்கை தோல்வல வாளரு
மடங்க லேறும டங்க லேறுமலைப்ப தென்ன மலைப்பரால்.

(இ-ள்.) வளைந்த கொடிய வில்வீரரோடு வளைந்த கொடிய வில்வீரரும், விஷத்தைச்சிந்தும் வேல்வீரரோடு விஷத்தைச்சிந்தும் வேல்வீரரும், இடக்கையிற் கேடகமும் வலக்கையில் வாளுமேந்திய வீரரோடும் இடக்கையிற் கேடகமும் வலக்கையில் வாளுமேந்திய வீரர்களும், ஓர் சிங்கவேற்றுடன் மற்றோர் சிங்கவேறு போர் செய்தாற்போல (தம்முட்) போர் செய்தார்கள். எ-று.

இப்போரில் ஒவ்வொரு வீரனுந் தனக்குச் சமானமானவனுடன் போர் புரிந்தனன் என்க. அறுவகைப்பட்ட வீரரும் போர் புரிந்தமையை இவ்வாறு இரண்டு செய்யுளாற் கூறினர். (கரு)

அரவி னன்னில மம்பு யம்பொறை யாற்று மீவன றற்றல்கூர்
புரவி யின்னிரை வைய மேல்கொடு போந்து நேரியர் வேந்தனேர்
விரவி மின்னிய முரசி யம்ப மிடைந்து வெஞ்சம ராடுமா
றிரவி தன்னொடு மதிய வன்பொர வேகி னனிக ராகுமால்.

(இ-ள்.) ஆதிசேடனாற் சுமக்கப்பட்ட நல்ல பூமிபாரத்தை அழகிய தோளில்வைத்தாற்றும் பாண்டியன், வன்மைமிக்க குதிரையின் பந்தி பூண்ட தேரின்மேலேறிப் போருக்கு வந்த சோழருட்சிறந்த வங்கிய சோழனுக்கு நேரே கலந்து விளங்கும் போர்முரசு கோஷிக்க நெருங்கிக் கொடியபோராடும்வகை, சூரியனோடு சந்திரன் போர்புரியச்சென்றதனை யொத்திருந்தது. எ-று. (கசு)

துள்ளு மாவொலி தான யாறுது ளும்பு மாவொலி தூண்டுதேர்
தள்ளு மாவொலி படையொ டும்படை தாக்கு மாவொலி பொருநரார்த்
தெள்ளு மாவொலி மள்ளர் பைங்கழ லிலங்கு மாவொலி வீங்கியந்
தெள்ளு மாவொலி வேறு பாடுதி ரிந்து கல்லென லாயதே.

(இ-ள்.) தாவிச் செல்லுங் குதிரையின் முழக்கமும், மதநதி பெருகும் யானையின் கலிப்பும், செலுத்துந் தேரை யிழுத்துச் செல்லுங் குதிரையின் கோஷமும், ஆயுதத்தோடும் ஆயுதங்கள் தாக்கும் பெரிய அரவமும், போர்வீரர்கள் (தம்முள்) ஆர்ப்பரித்து (ஒருவரையொருவர்) இகழ்ந்துபேசும் பெரிய அதிர்ப்பும், அரசர்கள் கட்டிய பசிய வீரகண்டை யொலிக்கும் பெரிய ஆரவாரமும், மிக்க வாச்சியங்களொலிக்கும் பெரிய ஒலியும், (தம்முள்) வேறுபாடின்றிக்கல்லென (ஒன்றாய்) முழங்கியது. எ-று.

துடித்த வாளர வென்ன வீசிய தூங்கு கையின வீங்குநீர்
குடித்த காரொடு கார்ம லைந்திடு கொள்கை போலவு டன்றுடன்
றிடித்த வாயின வசனி யேறி னிருப்பு லக்கையெ டுத்தெறிந்
தடித்த சோரிபொ டாவி சோர விழுந்த வெஞ்சின வானையே.

(இ-ள்.) துடிக்கும் ஒள்ளிய பாம்புபோல வீசித் தொங்குந் துதிக்கைகளையுடையனவாகி, மிக்க நீர்பருகிக் கறுத்த மேகத்தோடு மற்றொரு மேகம் போர்செய்

யுங் கொள்கைபோலக் கோபித்து, இடியேறுபோலக் கோஷிக்கும் வாயையுடையன வாகி, இருப்புலக்கையை யெடுத்து (ஒன்றன்மேலொன்று வீசி) அடித்தலாற்சோரும் உதிரத்தோடு உயிர்சோரக் கொடியகோபத்தையுடையயானைகள் (நிலமிசை) விழுந்து மரித்தன. எ-று. (கசு)

எய்த வாளிவி லக்கு வார்பிறி தெய்யும் வாளித மார்புதோள்
செய்த போதவ ராண்மை கண்டுசி ரித்து வென்றிவி யப்பரால்
வைத வாவடி வேலெ றிந்திட வருவ தைக்குறி வழியினுற்
கொய்த தார்மற வாளெ றிந்துரு றைத்து வேறுப டுத்துவார்.

(இ-ள்.) (பகைவர்) எய்யும் அம்பினை விலக்கி, பிறிதும் அவர்களெய்யும் பாணங்கள் தமது மார்பைப் பிளந்தபொழுது அவர்களாண்மையைநோக்கிச் சிரித்து வெற்றியை வியப்பார்கள். கூர்மையினின்று நீங்காத வடித்த வேலினைப் பகைவரெறியத் தம்மேல் வருதலை வருங்குறி தப்பாமல், கொய்த மலர்மாலையை யணிந்த வெற்றியையுடைய வாளை வீசித் துண்டுபடுத்தி அவ்வேலைச் சிதைப்பார்கள். எ-று.

"மார்பு போழ் செய்தபோ தவராண்மை கண்டு சிரித்து வென்றி வியப்பர்" என்றது-ஊறஞ்சாது ஆண்மையையுடைய வீரரெனக் குறிப்பிட்டதாம். (கள)

பின்னி டாதிரு படையு மொத்தம ராடு மெல்லைபெ ரும்படைச்
சென்னி தன்றுணை யான வுத்தர தேய மன்னவர் படையொடுந்
துன்னி ஞாலமு டிக்கு நாளெழு சூறை தள்ளவ கிர்ந்தெழும்
வன்னி யென்னவு டன்றெ திர்ந்தனர் வழுதி சேனையு டைந்ததே.

(இ-ள்.) புறங்காட்டாமல் இருவகைச் சேனைகளுஞ் சமானமாகப் போர் புரியுங்காலத்தில், பெரிய சேனையையுடைய சோழனுக்குத் துணையாய்வந்த வடதேசத்தரசர்கள் சேனையோடும் வந்து, உலகினை முடிக்குங் கடைநாளி லெழுந்த சண்டமாருதம் வீச ஓங்கியெழுந்த வடவாமுகாக்கினியைப்போலக் கோபித் தெதிர்ந்தார்கள். (அதனுற்) பாண்டியன் சேனை புறங்காட்டியோடியது. எ-று. (கஅ)

மின்னி லங்கிலை வாளொ டுஞ்சிலை வில்லி ழந்தனர் வீரரே
பன்ன லம்புனை தேரொ டுங்கரி பரியி ழந்தனர் பாகரே
தென்ன வன்பொரு வலியி ழந்தன னென்று செம்பியன் வாகையுந்
தன்ன தென்றுத ருக்கு மேல்கொடு சங்கெ டுத்துமு ழக்கினன்.

(இ-ள்.) (பாண்டியன்) சேனைவீரர்கள், மின்னல் போல விளங்குந் தகட்டு வடிவாகிய வாளினேடும் வில்லினை யிழந்தார்கள். பாகர்கள் பல நலம்பெற அலங்கரித்த தேர்களோடும் யானைகளையுங் குதிரைகளையு மிழந்தார்கள். பாண்டியன் போர் புரிதற்குரிய வீரத்தை யிழந்தனனென்று, சோழன் வெற்றியுந் தன்னுடையதென்று இறுமாந்து வெற்றிச்சங்க முழக்கினன். எ-று. (கக)

அந்த வேலையின் முன்ன ருந்தம தருளெ னக்குளிர் கடிபுனற்
பந்தர் நீழல ளித்து மோடைப டுத்தி யும்பகை சாய்வே
வந்த வேடர வண்ண மேயொரு மான வேடர சாய்வலஞ்
சிந்த வாகுல மூழ்கு மீனவர் சேனை காவல ராயினர்.

(இ-ள்.) அக்காலத்தில், முன்பு அரிய தமது திருக்கருணையைப் போலக் குளிர்ந்த வாசமூட்டிய தண்ணீர்ப்பந்தல் நிழல்பெறவைத்தும், அகழியில் வீழ்த்தியும் பாண்டியனுக்குப் பகையாயுள்ள சோழர்களழிய வந்த திருவேடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், அவ்வாறே ஒப்பில்லாத போரில் மானமிக்க வேட்டுவருக்கு அதிபதி

யாய் விக்கிரமசோழனுடைய இறுமாப்புக்கெடத் துன்பத்திலழுந்திய வங்கிய சேகர பாண்டியனுடைய சேனாதிபதியாக வந்தருளினர். எ-று. (உ0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குன்றவில் வேடன் சாபங் குனிவித்துச் சுந்த ரேச
னென்றதன் னாமந் தீட்டி யிட்டகூர்ங் கணைக டொட்டு
வென்றன மென்று வாகை மிலைந்துவெண் சங்க மார்த்து
நின்றவன் சேனை மீது நெறிபடச் செலுத்தா நின்றான்.

(இ-ள்.) மேருமலையை வில்லாகவுடைய வேட்டுவ வடிவு கொண்டு வந்தருளிய சோமசுந்தரக்கடவுள் வில்லை வளைத்து, சுந்தரேசனெனத் தனது திருநாமந் தீட்டிய கூரிய அம்புகளை யேவி, வென்றோமென்று வாகைமலர்மாலை சூடி வெள்ளிய வெற்றிச்சங்க முழக்கிநின்ற சோழன்மேல் வரிசைபட, அம்பினைச் செலுத்துகின்றவ ராயினர். எ-று. (உக)

அம்முனை வாளி யொவ்வொன் றடல்புனை நூறு நூறு
தெம்முனை வீரர் தம்மைச் செகுத்துயி ருண்ண நோக்கி
யிம்முனை வாளி யொன்றுக் கித்துணை வலியா தென்னா
வெம்முனை மறவேற் சென்னி வியந்தனு மான மெய்தா.

(இ-ள்.) அந்தக் கூரிய அம்பு ஒவ்வொன்றும் வெற்றிமாலை சூடிய பகைமுனையையுடைய பதினாயிரம் வீரர்களைக் கொள்ளைகொள்ளப்பார்த்து, இந்தக் கூரிய அம்பொன்றினுக்கு இவ்வளவு வலிமை யாதென்று, கொடிய கூரிய கொலைத்தொழிலையுடைய வேலையேந்திய சோழன் அதிசயித்து அனுமானங்கொண்டு. எ-று. (உஉ)

அன்னகூர் வாளி தன்னைக் கொணர்கென வதனை வாசித்
தின்னது சுந்த ரேச னெனவரைந் திருப்ப தீது
தென்னவற் கால வாயான் றுணைசெய்த செயலென் றஞ்சிப்
பொன்னிநா டுடையான் மீண்டு போகுவான் போகு வானை.

(இ-ள்.) அவ்வகைய கூரிய அம்பினைக் கொண்டுவரக்கடவீரென்று, வந்த அவ்வம்பினை வாங்கி வாசித்து, இவ்வம்பு "சுந்தரேசனுடையது" என்றெழுதியிருக்கின்றது. இச்செயல் பாண்டியனுக்குச் சோமசுந்தரக்கடவுள் துணையாய்நின்று செய்த செயலென்று அச்சங்கொண்டு, காவிரி சூழ்ந்த நாட்டையுடைய விக்கிரமசோழன் புறங்காட்டிச்சென்றனன். (அவ்வாறு) புறங்காட்டிச் செல்லுஞ் சோழராசனை. எ-று.

செருத்துணை யாகி வந்த வுத்தர தேயத் துள்ளார்
துருக்கரொட் டியர்வே றுள்ளார் யாவருஞ் சூழ்ந்து நில்லென்
றுருத்தனர் வைது நீபோர்க் குடைந்தனை போதி யீதுன்
கருத்தெனி னாண்மை யாவர் கண்ணதுன் மான மென்னும்.

(இ-ள்.) (அவனுடன்கூடிப்) போர்புரிதற்கு உதவியாய் வந்த வடதேயத்து மன்னர்களாகிய துருக்கரும் ஒட்டியரும் வேறுள்ளாருமாகிய யாவருஞ் சூழ்ந்து நில்லென்று கோபித்து வைது, நீ போரில் தோற்றுப் புறங்கொடுத்துப் போகின்றனை. இவ்வாறு போவது உன் கருத்தாயின் ஆண்தகைமை யாரிடத்தது? உன் மானம் யாது பயன்படும்? எ-று. (உச)

செல்லலை வருதி யென்னச் செயிர்த்தெழுந் திடியி னார்த்துக்
கல்லெழு வனைய திண்டோட் கௌரியன் படைமேற் சென்று

வில்லிற வலித்து வாங்கி வேறுவே ருகி நின்று
சொல்லினுங் கடிய வாளி தொடுத்தனர் விடுத்தார் தூர்த்தார்.

(இ-ள்.) (போருக்குடைந்து) போகாதே. வருவாயென்று கூறிக் கோபித்தெழுந்து இடியேற்றைப்போல வீரகோஷஞ்செய்து, சற்றூணையொத்த திரண்ட திண்ணிய தோளையுடைய பாண்டியன் சேனைமேற் சென்று, வில் முரிய இழுத்து வளைத்து, தனித்தனி ஒவ்வொரு புறமும் நின்று, (முனிவர்) சாபத்தினும் விரைந்து செல்லும் அஸ்திரங்களைத் தொடுத்து விடுத்து (எங்கும்) போர்த்தனர். எ-று. (உடு)

வடுத்தவா ழுரும்பச் செம்புண் மறமக ளுகி நின்ற
கடுத்தவா மிடற்று முக்கட் கண்ணுதற் சாமி தான்முன்
னெடுத்தவா டகவி லன்ன விருஞ்சிலை வாளி யொன்று
தொடுத்தவா டவர்தாம் விட்ட சுடுசரந் தொலைத்துப் பின்னும்.

(இ-ள்.) வடுக்களினின்று நீங்காத செவந்த புண்கள்வாய்ந்த மார்பினையுடைய வேட்டுவத் திருவுருவங்கொண்டு நின்ற விஷம் நீங்காதுறையும் ஸ்ரீகண்டத்தையும் திரிநேத்திரங்களையுமுடைய சோமசுந்தரக்கடவுள் (திரிபுரதகனஞ்செய்ய) முன்னர் ஏந்திய வில்லைப்போன்ற பெரிய வில்லினை வளைத்து, ஓர்பாணந் தொடுத்து, அவ்வீரர்க்ளேவிய காயாநின்ற அம்புகளை யறுத்து, மீண்டும். எ-று.

"இருஞ்சிலை வாளிதொடுத்து" என வாளாகூறலின் நான்குநிலையுங் கொள்க. நிலைகள் நான்காவன:—ஆலிடம் - பிரத்தியாலீடம் - மண்டிலம் - பைசாசம். அவற்றுள், வலக்கால்வளைத்து இடக்கால் முன்வைத்தலை ஆலிடமென்றும், வலக்கால்முன் வைத்து இடக்கால்வளைத்தலைப் பிரத்தியாலீடமென்றும், இருகாலும் வளைத்தலை மண்டிலமென்றும், ஒருகால் நின்று ஒருகாலில் வளைத்தலைப் பைசாசமென்றுஞ்சொல்லப்படும். இதனை,

சூத்திரம்.

" சிலையோர் நால்வகை நிலைபை சாசம்
ஆலிட மண்டிலம் பிரத்தியா லீடமாம்.—அவற்றுள்,
வலக்கான் மண்டலித் திடக்கான் முந்துறும்
அதற்பெய ராலிட நிலைய தாகும்.
வலக்கான் முந்துற் றிடக்கான் மண்டலிப்பிற்
பிரத்தியா லீட மெனப்பெய ராகும்.
இருகான் மண்டலித் திடுதன்மண் டிலநிலை.
ஒருகா னிலைநின் றொருகான் முடக்கும்
பரியாய மென்ப பைசாச நிலையே" என்பதனானறிக. (உகூ)

பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துமான் றேரைச் சாய்த்தான்
பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துவெங் களிற்றை மாய்த்தான்
பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துவாம் பரியைக் கொன்றான்
பத்தம்பு தொடுத்து நூற்றுப் பத்துமா னுடரை வென்றான்.

(இ-ள்.) பத்துப்பாணங்களைப் பிரயோகித்துக் குதிரைகட்டிய ஆயிரந்தேர்களை யழித்தனன். பத்துப்பாணங்களை யேவிக் கொடிய ஆயிரம் யானைகளைச் சிதைத்தனன். பத்துப்பாணங்களை விடுத்துத் தாவாநின்ற ஆயிரங்குதிரைகளைக் கொன்றனன். பத்துப்பாணங்களைச்செலுத்தி ஆயிரங் காலாட்களை வதைத்தனன். எ-று. (உஎ)

நூறம்பு தொடுத்து நூறு நூறுவெம் பரிமே லெய்தா
னூறம்பு தொடுத்து நூறு நூறுவெங் கரிமேற் பெய்தா
னூறம்பு தொடுத்து நூறு நூறுதேர் சிதைய விட்டா
னூறம்பு தொடுத்து நூறு நூறுசே வகரை யட்டான்.

(இ-ள்.) நூறுபாணங்களைச் சொரிந்து கடிய வேகத்தையுடைய பதினாயிரங்குதிரைகளைச் சிதைத்தான். நூறுபாணங்களைவிட்டுக் கொடிய பதினாயிரம் யானைமேற் பொழிந்தான். நூறுபாணங்களைப் பிரயோகித்துப் பதினாயிரந் தேரழிய எவினான். நூறுபாணங்களை யேவிப் பதினாயிரம் வீரர்களைக் கொன்றான். எ-று. (உஅ)

ஆயிரம் வாளி யானா ருயிரம் பரியைக் கொன்று
ணுயிரம் வாளி யானா ருயிரங் கரியை வென்று
ணுயிரம் வாளி யானா ருயிரந் தேரைச் சாய்த்தா
ணுயிரம் வாளி யானா ருயிரம் பேரைத் தேய்த்தான்.

(இ-ள்.) ஆயிரம்பாணங்களால் இலக்ஷங் குதிரைவீரர்களை வதைத்தான். ஆயிரம்பாணங்களால் இலக்ஷம் யானைவீரர்களை யழித்தான். ஆயிரம் பாணங்களால் இலக்ஷம் இரதவீரர்களை மடித்தான். ஆயிரம்பாணங்களால் இலக்ஷங் காலாட்களை யுருவழித்தான். எ-று. (உகூ)

தடிந்தன தோளுந் தாளுந் தகர்ந்தன சென்னி மண்ணிற்
படிந்தன மடிந்தோர் யாக்கை பரிந்தன தும்பைத் தாம
மடிந்தன மையல் யானை மாண்டன தாண்டும் பாய்மா
னொடிந்தன கொடிஞ்சி மான்றே ரொதுங்கின வொழிந்த சேனை.

(இ-ள்.) தோள்களுங் கால்களும் அறுபட்டன. தலைகளுடைப்பட்டன. உயிர் கழிந்தோர் சரீரம் உலகின்மேற் படிந்தன. தும்பைமலர்மாலை யழிந்தன. மதமயக்கத்தையுடைய யானைகளிறந்தன. தாண்டிப் பாய்ந்துசெல்லுங் குதிரைகள் மடிந்தன. மொட்டையுடைய குதிரைபூண்ட தேர்கள் நொறுங்கின. அவை நீங்கிய பிற சேனைகளுஞ் சிறிதுமின்றி யொழிந்தன. எ-று.

கொடிஞ்சி - மொட்டு. இது தேரினுறுப்புகளிலொன்று. (ரு0)

ஆவிமுன் னேகத் தாமு மருக்கமண் டலத்தா றேகத்
தாவுவ வென்ன வாடுந் தலைபல சிலைவாள் பட்டுக்
கூவிளி யெடுத்து வீழுங் குறைதலை யாடப் பாதிச்
சாவுட னின்று கைகள் கொட்டுவ தாள மென்ன.

(இ-ள்.) தமதுயிர் முன்னே செல்ல, தாமும் சூரியமண்டலத்தின் வழியாகச்செல்லத் தாவுதல்போலப் பலதலைகளாடும். வில்லிற்பூட்டிய பாணங்களும் வாள்களும் பட்டுக் கூவிவிழுங் கவந்தங்களாட, முற்றுஞ் சாகாத சரீரங்கள் நின்று தாளம் போடுதல்போல, கைகளைச் சேர்த்துக்கொட்டுவன. எ-று. (ருக)

தறைவிழத் தனது சென்னி வீட்டினர் தம்மை நின்ற
குறையுடற் கைவேல் குத்தி நூக்குவ குரவை பாடி
யெறிபடு தலைகள் வாய்மென் றெயிறது கறித்து வீழ்ந்து
கறுவின மார்பந் தட்டி நிற்பன கவந்த யாக்கை.

(இ-ள்.) தனது தலை நிலமிசை விழ அறுத்து வீழ்த்தினவர்களை, வீழாது நின்ற கவந்தமானது, கைபற்றிருங்கிய வேலாற்குத்திக் கீழே தள்ளுவன. அறுபட்ட

தலைகள் குரவைப்பாட்டு பாடிப் பற்களைக்கடித்து வீழ்ந்து, (ஒன்றோடொன்று) கோபித்து நின்றன. குறையுடல்கள் மார்பினைத்தட்டி (எதிர்ந்து) நிற்கின்றன. எ-று. (௬௨)

ஒருவழி பட்டு வீழு மிருதலை யொன்றற் கொன்று
மருவிய கேண்மைத் தாகி வாலெயி றிலங்க நக்குப்
பிரிவற வந்தாய் நீயு மென்றெதிர் பேசிப் பேசிப்
பரிவுற மொழிந்து மோந்து பாடிநின் றாடல் செய்த.

(இ-ள்.) ஓரிடத்தி லறுபட்டு வீழும் இரண்டு தலைகள் ஒன்றோடொன்று கலந்த நட்புடையனவாகி, வெள்ளிய பற்கள் விளங்கச் சிரித்து, நீயும் (உயிர்கழிந்த பின்னும்) பிரிவற என்னுடன் வந்தனையென்று (தம்முள்) எதிரேபேசி, அன்புபொருந்தப்பேசி, (ஒன்றற்கொன்று) மோந்து பாடிநின்று கூத்தாடுவன. எ-று.

கேண்மைத்தாகியென்னும் பாடத்தைக் கேண்மையாகி யெனக்கொண்டு கேண்மைய என்னும் பலவின்பால் அசரவீறு தொக்குநின்றதெனக்கொள்வது சிறப்புடைத்து. (௬௩)

மாகவா றியங்கு சேனம் வல்லிருட் குவையி னன்ன
காகம்வன் கழுகு வெம்போர்க் களனிடை யவிந்து வீழ்ந்தோ
ராகமேற் சிறக டிக்கொண் டசைவன கோடை நீக்கப்
பாகநின் றால வட்டம் பணிப்பன போன்ற வன்றே.

(இ-ள்.) ஆகாயவழியே சஞ்சரிக்கும் பருந்தும் நள்ளிருளின் திரட்சியைப் போன்ற காகமும், வலிய கழுகுகளும், கொடிய போர்க்களத்தில் மடிந்து வீழ்ந்தவர்களுடைய உடலின்பேரிற் சிறகடித்துக்கொண்டு அசைந்துலாவல், இறந்தோர் வெப்பத்தை யொழிக்க அவர் பக்கலில் நின்று விசிறியை வீசுதலொக்கும். எ-று. (௬௪)

வெள்ளமாச் சோரி யீர்ப்ப மிதக்கின்ற தேர்கள் வெம்பேய்ப்
பிள்ளைகண் மூழ்கிக் கீழ்போய் மறித்தெனப் பெயர்ந்து வீழ்வ
தெள்ளுநீர்க் கடலின் மீதூர் சிதைக்கல நிரையுந் தாக்கித்
துள்ளிமற் றவற்றைச் சாய்க்குஞ் சுறவமும் போன்ற வன்றே.

(இ-ள்.) பெரிய உதிரவெள்ளமிழுக்க மிதக்காநின்ற தேர்கள் கொடிய பேயின் பிள்ளைகள் (அவ்வெள்ளத்துள்) மூழ்கித்தேரின்கீழ்ச்சென்று மடக்க, (தலைகீழாகப்) பெயர்ந்துவிழுதல், தெளிந்த நீர்மயமான கடலின்மேற் செல்லும் பாய்மரத்தையுடைய மரக்கலவரிசையையும் துள்ளிமோதி அம்மரக்கலங்களைக் கீழேசாய்க்கும் மகரமீனையும் ஒத்திருந்தன. எ-று.

மறித்தென-செய்தெனவென்னும் வாய்ப்பாட்டு இறந்தகாலவினையெச்சம்.

தேரை மரக்கலமாகவும் பேய்ப்பிள்ளையை மகரமீனாகவும்உவமித்தார். (௬௫)

கத்திநின் றொருபா லீர்ப்பக் கருங்கொடி சேனந் துண்டங்
கொத்திநின் றொருபா லீர்ப்பக் குடவயிற் றழல்கட் பூதம்
பத்திநின் றொருபா லீர்ப்பப் பட்டவ ராகங் கூளி
பொத்திநின் றொருபா லீர்ப்ப வைம்பொறி போல மன்னோ.

(இ-ள்.) சித்தத்தைத் தம்வழியிலிழுக்கும் ஐம்புலன்கள்போல, கரிய காகங்கள் கூவிநின்று, மடிந்தவர்களுடைய சரீரங்களை ஒருபாலிழுக்கவும், பருந்துகள் அலகுகளாற் கொத்திநின்று ஒருபாலிழுக்கவும், குடம்போன்ற வயிற்றையும் கொதிக்குங் கண்களையுமுடைய பூதவரிசைகள் நின்று ஒருபால் இழுக்கவும், பசாசங்கள் மொய்த்துநின்று ஒருபாலிழுக்கவும். எ-று. (௬௬)

துடுவைவான் முறங்கா றள்ளுந் துணைச்செவி யரிசி கோட்டி
னுடுவைநேர் மணியின் குப்பை யுரலடி யுலக்கை திண்கோ
டடுகலங் கடந்தீச் சோரி மத்தக மடுப்பென் றியானைப்
படுகளம் விசயச் செல்வி யடுமடைப் பள்ளி மானும்.

(இ-ள்.) யானைமடிந்த போர்க்களமானது, (அதின்) வால் துடுப்பாகவும், காற்றை வீசும் இருசெவிகளும் முறங்களாகவும், கொம்பினிடத்துள்ள நக்ஷத்திரங்களைப்போன்ற முத்தின் கூட்டம் அரிசியாகவும், கால் உரலாகவும், வலிய தந்தங்கள் உலக்கைகளாகவும், சமைக்கும் பாத்திரம் கதுப்பாகவும், உதிரம் அக்கினியாகவும், மத்தகம் அடுப்பாகவும் (கொண்டு) விஜயலக்ஷுமி பாகஞ்செய்யும் மடைப்பள்ளியை யொத்திருக்கும். எ-று. (௬௭)

பிணத்தினைக் கோலிப் புண்ணீ ராற்றினைப் பெருக்கி யுண்பேய்க்
கணத்தினைப் புதைத்து நூக்கிக் கரையுடைத் தொருவன் பூத
நிணத்தொடும் வருமந் நீத்த நேர்பட விருந்து கையா
லணைத்துவாய் மடுக்கும் வையை யருந்திய பூத மென்ன.

(இ-ள்.) வையைநதியை (இருகரங்களாலுந்தடுத்து அதன் நீரை)ப் பருகிய குண்டோதரனைப்போல, பிணங்களையரித்து உதிரவெள்ளத்தைப்பெருக்கி, உண்ணவரும் பேய்க்கூட்டங்களைத் தள்ளிக் கரையினையுடைத்து நிணங்களோடு வாராநின்ற அவ்வுதிரவெள்ளத்தின் எதிரேநின்று, ஒரு வலிய பூதமானது தனது கைகளாற் றடுத்துப் பருகாநிற்கும். எ-று. (௬௮)

புரத்தினு ளுயர்ந்த கூடற் புண்ணிய னெழுதி யெய்த
சரத்தினி லவிந்தார் சென்னிக் குற்றுழிச் சார்வாய் வந்த
வரத்தினை யறுக்கும் வைவே லயற்புல வேந்தர் நச்சு
மரத்தினை யடுத்த சந்துங் கதழெரி மடுத்த தென்ன.

(இ-ள்.) (காசிமுதலிய சப்த) புரிகளி லுயர்ந்தோங்கிய மதுரையிலெழுந்தருளிய தருமசொரூபியாகிய சோமசுந்தரக்கடவுள் தம்பெயரெழுதிப் பிரயோகித்த பாணத்தால், விக்கிரமசோழனுக்கு இடையூறுவந்தவழி, துணையா யுதவவந்த அரத்தினாலராவுங்கூரிய வேலையுடைய அயல்நாட்டரசர்கள், நச்சுமரத்தை யடுத்த சந்தனமரமும் விரைந்துபற்றுந் தீப்பற்றியதுபோல அழிந்தார்கள். எ-று.

"காசி முதலிய சத்தபுரிகள்: காசி - மாயாபுரி - அவந்தி - காஞ்சி - அயோத்தி - துவாரகை - மதுரை எனப்படும். இதனை,

காசிகண்டம்.

"காசிமா யாபுரி யவந்தி காஞ்சிமற்
றோசைகொ ளயோத்திவண் டுவரை யொப்பறு
மேசிலா மதுரையென் றிசைக்கு மேழ்பதி
மாசறு முத்தியை வழங்கு மென்பவே"—என்பதனாலறிக. (௬௯)

மாசறு மாட்சி யான்றன் வாளியா லவிந்தோர் தம்மை
மூசுவண் டென்னச் சூழ்ந்து மொய்த்தன பைத்த கூளி
காய்சினச் சேனங் காகங் கழுகினம் பற்றி யீர்த்துப்
பூசலிட் டொன்றோ டொன்று போர்செய்வான் றொடங்கிற் றம்ம.

(இ-ள்.) குற்றமற்ற தோற்றம்வாய்ந்த சோமசுந்தரக்கடவுளுடைய அம்பால் உயிரிழந்த வீரர்களை, பரந்த பசாசுகள் மலரில் மொய்க்கும் வண்டைப்போலச் சூழ்

க்து மொய்த்தன. வருத்துங் கோபத்தையுடைய பருந்தும், காகமும், கழுகின்கூட்டமும் (தம்முட்) பிடித்திழுத்துப் பெருங்கூச்சலிட்டு ஒன்றுக்கொன்று போர் செய்யத் தொடங்கியது. எ-று. (௬௦)

வெஞ்சின மறக்கோ னம்பி விடுகணை வெள்ளத் தாழ்ந்து
வஞ்சின முறுதன் சேனை மடிந்தது கண்டு மாழாந்
தெஞ்சின படையுஞ் சூழ வேதிலார் நகையுஞ் சூழத்
துஞ்சின மறமுஞ் சூழச் சோழனு முடைந்து போனான்.

(இ-ள்.) விக்கிரம சோழனும் கொடிய கோபத்தையுங் கொலைத்தொழிலையுமுடைய அம்பினையேந்திய சோமசுந்தரக்கடவுள் பிரயோகித்த பாணவெள்ளத்திலழுந்தி, சபதங்கூறிப் போருக்குவந்த தனது சேனைமடிந்ததைக் கண்டு மயங்கி, மிகுந்துநின்ற சேனையும்ஒருபாற் சூழவும் அயலார் அவமதிப்பு நகையும் ஒருபாற் சூழவும், புறங்காட்டிச் சென்றனன். எ-று.

"துஞ்சின மறமும் சூழ" என்றது தோல்வியை யுணர்த்தியது. (௬௧)

வில்லொடு மேக மன்ன வெஞ்சிலை வேட வேந்தன்
மல்லொடு பயின்ற தென்னன் மலர்முகச் செவ்வி நோக்கி
யல்லொடு மதிவந் தென்ன வருணகை சிறிது பூத்துச்
செல்லொடு பகைபோற் கொண்ட திருவுரு மறைந்து போனான்.

(இ-ள்.) இந்திர தனுசோடு தோன்றிய மேகம்போல வெவ்விய வில்லைத் தாங்கிய வேட்டுவர் பதியாய் வந்த சோமசுந்தரக்கடவுள் மற்போரிற் பயின்ற பாண்டியனுடைய தாமரை மலர்போன்ற முகத்தின் பொலிவைப் பார்த்து, சந்திரன் இருளோடு வந்தாற்போல, கிருபையோடு புன்னகை சிறிதரும்பி, மேகத்தோடு பகைமைகொள்ளுதல்போலக் கொண்டருளிய திருவுருவ மறைந்தருளினர். எ-று. (௬௨)

பாடுவா யளிதே னூட்டும் பைந்தொடைச் செழியன் வென்றிக்
கோடுவாய் வைத்திட் டார்த்துக் குஞ்சர முகட்டி லேறித்
தோடுவாய் கிழிக்குங் கண்ணார் மங்கலந் துவன்றி யேந்த
நீடுவார் திரைநீர் வேலி நீண்மதி னகரிற் புக்கான்.

(இ-ள்.) பாடுகின்ற வண்டுகளுக்குத் தேனினை (ப்பரிசாக) ஊட்டும் பசிய வேப்பமலர்மாலை யணிந்த வங்கியசேகர பாண்டியன் சயசங்கத்தை வாய்வைத்தூதி, யானையின் மத்தகத்திலேறி, (காதிலணிந்த) தோட்டின் வாயைக் கிழிக்கும் கண்களையுடைய மாங்கல்ய மாதர்கள் நெருங்கி அஷ்டமங்கலங்களை யேந்திவர, நீண்ட அலைகள் வீசும் நீர்வளம் நிறைந்த மருதநிலத்தோடு நீண்ட மதில்சூழ்ந்த மதுரைப்பதியிற் புகுந்தனன். எ-று. (௬௩)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிலைவிற்சே வகஞ்செய்து வாகை வாங்கித் திருவளித்த சேவகற்குச் சிறந்த பூசை, நிலைவித்தாய் மணிப்பொலம்பூ ணிழைவித் தாத்தி நிழல்விரிக்கும் வெயின்மணியா னெடிய யேரு, மலைவிற்று னென்னவரிச் சிலையுநாமம் வரைந்தகடுங் கூர்ங்கணையும் வனைந்து சாத்தி, யுலைவித்தாழ் கடலுலகுக் ககலச் செங்கோ லறம்பெருக்கும் வங்கியசே கரனு மண்ணல்.

(இ-ள்.) விற்சேவகஞ் செய்து வெற்றிகொண்டு அரசச்செல்வந் தந்தருளிய சோமசுந்தரக்கடவுளுக்கு, மேம்பட்ட பூசனைகள் என்றும் நிலைபெறச் செய்து, குற்றமில்லாத நவமணிகளழுத்திய பொன்னாலாகிய ஆபரணங்களைச் செய்வித்துச் சாத்தி,

ஒளிபரப்புஞ் செவந்த இரத்தினங்களால் நீண்ட மகமேரு வென்று (கண்டோர்) சொல்ல, கட்டமைந்த வில்லையும் (சுந்தரேசன் என்னும்) திருப்பெயர் வரைந்த கூரிய அம்பையுஞ் செய்து சாத்தி, ஆழமாகிய கடல்சூழ்ந்த நிலவுலகுக்கு ஐம்பகையும் ஒழிய வங்கிய சேகரபாண்டியன் தனது செங்கோலால் புண்ணியந் தழைத்தோங்கச் செய்து வந்தனன். எ-று. (௪௪)

சுந்தரப் பேரம்பெய்த படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௬௬௪.

## ஐம்பத்தொன்றாவது, சங்கப்பலகைதந்த படலம்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

வேடுருவாகி மேரு வில்லிதன் னுமக் கோலெய்
தாடம ராடித் தென்ன னடுபகை துரந்த வண்ணம்
பாடினஞ் சங்கத் தார்க்குப் பலகைதந் தவரோ டொப்பக்
கூடிமுத் தமிழின் செல்வம் விளக்கிய கொள்கை சொல்வாம்.

(இ-ள்.) மேருமலையை வில்லாகவுடைய சோமசுந்தரக்கடவுள் வேட்டுவ ரூபமாகி, தமது திருப்பெயர் தீட்டிய அம்பினைப் பிரயோகித்து, வெற்றிதங்கிய போர் புரிந்து, வங்கிய சேகரபாண்டியனுடைய கொல்லும் பகைமை பூண்ட விக்கிரம சோழனை யோட்டிய திருவிளையாடலைக் கூறினோம். சங்கப்புலவர்களுக்குப் பலகை தந்தருளி அவர்களோடொரு சேர விருந்து (இயல் இசை நாடகமென்னும்) முத்தமிழாகிய செல்வத்தைப் பொலிவுறச் செய்த திருவிளையாடலை (இனி யாம்) கூறுவாம்.

"அவரோ டொப்பக் கூடி" என்றது வடமொழிபோலத் தென்மொழியுஞ் சிறந்ததென்றும், "முத்தமிழின்செல்வம்" என்றது, இலக்கண வரம்பில்லாத பிறபாஷைகள் போலாது வழுவற நிறுத்தினரென்றுங் கூறியதாம். தமிழின் இதில் இன் - தவிர்வழிச்சாரியை. (௧)

வங்கிய சேக ரன்கோல் வாழுநாண் மேலோர் வைகற்
கங்கையந் துறைசூழ் கன்னிக் கடிமதிற் காசி தன்னிற்
பங்கய முளரிப் புத்தேள் பத்துவாம் பரிமா வேள்விப்
புங்கவர் மகிழ்ச்சி தூங்க மறைவழி போற்றி செய்தான்.

(இ-ள்.) வங்கிய சேகரபாண்டியன் செங்கோல் நிறைவேறி வருங்காலத்தில், முன்னொரு தினம் அழகிய கங்கையின் துறைசூழ்ந்த அழியாத காவல் பூண்ட காசிநகரத்தில், தாமரையில் வசிக்கும் பிரமதேவன் பத்து என்னுங் கணிதியையுடைய தாவிச் செல்லுங் குதிரைகளாலாகிய அசுவமேதங்களைத் தேவர்கள் மகிழ் கூர, வேத நூல் வழியே யோம்பிச் செய்தனன். எ-று. (௨)

நிரப்பிய வழிநா ணன்னீ ராடுவா னீண்ட் வீணை
நரப்பிசை வாணி சாவித் திரியெனு நங்கை வேத
வரம்பின்ச மனுவாங் காயத் திரியெனு மடவா ரோடும்
பிரப்பிசைக் கங்கை நோக்கிப் படருவான் படரு மெல்லை.

(இ-ள்.) செய்து முடித்த பின்னளில் நல்ல (அவபிருத) ஸ்நானஞ் செய்தற் பொருட்டு (இஞ்சயிலக்கணப்படி) நீட்சியமைந்த வீணையிலிசைந்த நரம்புகட்குரிய சரஸ்வதியும், சாவித்திரியென்னு மாதும், வேதங்களுக்கோர் வரம்பாயிசைந்த ...திர மாகிய காயத்திரியும் என்னும் மனைவிமாருடன் ஒலி பரப்பும் அலைகளையுடைய கங்கையை நோக்கிச் செல்வானாயினன்: அவ்வாறு செல்லுகையில். எ-று.

வீணையென வாளாகூறினமையின் பேரியாழ் மகரயாழ் சகோடயாழ் செங் கோட்டியாழ் என்னும் நால்வகையினையுங் கொள்க. அவற்றுள் இருபத்தொரு நரம் புடையது பேரியாழென்றும், பதினேழு நரம்புடையது மகரயாழென்றும், பதினறு நரம்புடையது சகோடயாழென்றும், ஏழ் நரம்புடையது செங்கோட்டியாழென்றுங் கூறப்படும். இதனை,

"பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்
சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினர்—தார்பொலிந்து
மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே
பின்னு முளவே பிற"

"ஒன்று மிருபது மோரேழ்மேற் பத்துடனே
நின்றபதி னாறேழு நேடுங்கால்—குன்றாத
நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே
மேல்வகை நூலோர் விதி"—என வரும் சீவகசிந்தாமணி உதாரணச் செய்யுள்களா னுணர்க. (௩)

நானவார் குழலி னாரம் மூவரி னாவின் செல்வி
வானவா றியங்கும் விஞ்சை மாதரா ளொருத்தி பாடுங்
கானவா றுள்ளம் போக்கி நின்றனள் கமல யோனி
யானவா றறிவ னேகி யங்நதிக் கரையைச் சேர்ந்தான்.

(இ-ள்.) வாசம்பொருந்திய நெடிய கூந்தலையுடைய அந்த மாதர்கள் மூவரில், நாவின் கிழத்தியாகிய சரசுவதி ஆகாயவீதியிற் சஞ்சரிக்கும் வித்தியாதரமாது ஒருத்தி பாடாநின்ற இசையின் வழியே தனது மனத்தைச் செலுத்தி, (பிரமதேவனுடன்) செல்லுவதொழிந்து நின்றனள். கமலயோனியாகிய பேரறிஞன் அந்தக் கங்காதீரத்தை யடைந்தனன். எ-று. (௪)

நாமகள் வரவு தாழ்ப்ப நங்கைய ரிருவ ரோடுந்
தாமரைக் கிழவன் மூழ்கித் தடங்கரை யேறு மெல்லைப்
பாமகள் குறுகி யென்னை யன்றிநீ படிந்த வாறென்
னாமென வெகுண்டாள் கேட்ட வம்புயத் தண்ணல் சொல்வான்.

(இ-ள்.) சரசுவதியின் வருகை பொழுதுதாழ்ப்ப, சாவித்திரி காயத்திரி யென்னும் இரண்டு மனைவியரோடும், தாமரைமலரில் வாழும் பிரமதேவன் (கங்கா ஜலத்தில்) ஸ்நானஞ்செய்து, பெரிய கரையேறுங் காலையில், கலைமகள் வந்து (நின்னுயிர்போற் சிறந்த) என்னையன்றி நீ நீராடிய வகை யாது? என்று கோபித்தனள். அதனைக் கேட்ட பிரமதேவன் சொல்லுகின்றான். எ-று. (௫)

குற்றநின் மேல தாக நம்மைநீ கோபங் கொள்வ
தெற்றெனவினைய தீங்கை யெண்ணறு மாக்க டோற்ற
முற்றனை யொழித்தி யென்னு வுரைத்தனன் சாப மேற்கும்
பொற்றொடி மடந்தை யஞ்சிப் புலம்புகொண் டலலம் பூண்டாள்.

(இ-ள்.) குற்றம் உன்பேரிலிருப்பதாக நீ நம்மைக் கோபிப்பது என்னவென்று கூறி, இக்குற்றத்தை எண்ணிறந்த மானுடப் பிறப்படைந்து ஒழிப்பாயென்று சபித்தனன். சாபமேற்ற பொன்னாலாகிய வளையலையணிந்த கலைமகள் அச்சமுற்றுப் புலம்பித் துன்பங் கூர்ந்தனள். எ-று. (௬)

ஊனிட ரகன்றோ யுன்னா ருயிர்த்துணை யாவே னிந்த
மானுட யோனிப் பட்டு மயங்குவே னோவென்ன வண்டு
தேனிடை யழுந்தி வேதஞ் செப்பும்வெண் கமலச் செல்வி
தானிட ரகல நோக்கிச் சதுமுகத் தலைவன் சாற்றும்.

(இ-ள்.) உடம்பால் வருந் துன்பத்தினின்று நீங்கினோய்! உனது ஆருயிர்த் துணைவியாகிய யான் இம்மாநுடயோனியிற் பட்டு மயங்குவேனோ வென்ப் பிரார்த்திக்க, வண்டுகள் தேனிலழுந்தி வேதகீதம் பாடும் வெண்டாமரை மலரில் வசிக்கும் சரசுவதியானவள் சனனத்துன்ப மொழியப் பார்த்தருளி, நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் கூறுகின்றான். எ-று.

பிறப்பொழிந்தவ னாதலின் "பிரமனை ஊனிட ரகன்றோய்" என்றார். (௭)

முகிழ்தரு முலைநின் மெய்யா முதலெழுத் தைம்பத் தொன்றிற்
றிகழ்தரு மாகா ராதி ஹாகார மீறாச் செப்பிப்
புகழ்தரு நாற்பத் தெட்டு நாற்பத்தெண் புலவ ராகி
யகழ்தரு கடல்சூழ் ஞாலத் தவதரித் திடுவ தாக.

(இ-ள்.) தாமரை யரும்புபோன்ற தனத்தையுடைய உன் தேகமாகிய முதலெழுத்தாகிய ஐம்பத்தோரக்ஷரத்தில் விளங்குகின்ற ஆகாரமுதல் ஹாகார மிறுதியாகச் சொல்லப்பட்டுப் பலரும் புகழும் நாற்பத்தெட்டெழுத்தும், நாற்பத்தெட்டுப் புலவர்களாகி, கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் அவதரிக்கக்கடவன. எ-று.

அகழ்தரு கடல்-சகரரால் தோண்டப்பட்ட சமுத்திரம். (௮)

அத்தகு வருண மெல்லா மேறிநின் றவற்ற வற்றின்
மெய்த்தகு தன்மை மெய்தி வேறுவே றியக்கந் தோன்ற
வுய்த்திடு மகரத் திற்கு முதன்மையா யொழுகு நாதர்
முத்தமி ழால வாயெம் முதல்வரம் முறையான் மன்னோ.

(இ-ள்.) அந்தத் தக்க வெழுத்துகளெல்லாவற்றினும் ஊர்ந்து நின்று, அவ்வவ் வெழுத்துகளின் வடிவிற்கியைய முன்னிற்குந் தன்மையைப் பொருந்தி, வெவ்வேறொலி யியக்கந் தோன்றச் செலுத்தும் அகர வுயிர்க்குந் தலைமையாயியலு மிறைவர் (இயல் இசை நாடகமென்னும்) முத்தமிழும் நிலைபெறும் திருவாலவாயி லெழுந்தருளிய எமது சோமசுந்தரக்கடவுள் அவ்வழக்கினால். எ-று. (௯)

தாமொரு புலவ ராகித் திருவுருத் தரித்துச் சங்க
மாமணிப் பீடத் தேறி வைகிய நாற்பத் தொன்ப
தாமவ ராகி யுண்ணின் றவரவர்க் கறிவு தோற்றி
யேமுறப் புலமை காப்பா னென்றனன் கமலப் புத்தேள்.

(இ-ள்.) தாமொரு புலவராகித் திருவுருவங் கொண்டருளிப் பெரிய இரத்தினங்க ளழுத்திய சங்கப்பலகையிலேறி யிருந்து, நாற்பத்தொன்பதின்மராவாராகி (புறத்தினின் றருளியதுபோல) உள்ளும் நின்று அந்நாற்பத்தெண்மருக்கும் நுண்ணறிவினைப் புலப்படுத்தி அரணாக அவர்கள் புலமைத்திறத்தைக் காத்தருளுவர் என்று, தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவன் (கலைமகளுக்கு) அநுக்கிரகஞ் செய்தனன்.

நாமகள் அக்ஷரரூபியாதலின் அவள் வேண்டுகோளுக்கிரங்கி அவ்வக்ஷரங்கட்கு விதித்தமையின், நாமகள் முன்னிருந்தபடியே பிரமனிடத்திலேயே இருந்தனள் எனக்கொள்க. ௬௦

அக்கர நாற்பத் தெட்டு மவ்வழி வேறு வேறு
மக்களாய்ப் பிறந்து பன்மாண் கலைகளின் வகைமை தேர்ந்து
தொக்கவா ரியமு மேனைச் சொற்பதி னெட்டு மாய்ந்து
தக்கதென் கலைநுண் டேர்ச்சிப் புலமையிற் றலைமை சார்ந்தார்.

(இ-ள்.) நாற்பத்தெட்டக்ஷரங்களும் அப்பொழுதே வெவ்வேறு மாநுடர்களாகப் பிறந்து, பலவகைப்பட்ட மாக்ஷிமையுடைய நூல்களின் பொருள்களை ஐயமறத் தெரிந்து, வரம்பில்லாத வடநூற்கடலையும், அஃதொழிந்த பதினெண்பாஷைகளையும் ஆராய்ந்து, (அப்பாஷைகளுட்) சிறந்த தென்கலையின் நுண்ணிய பொருளாராய்ச்சிப்புலமையில் தலைமைபெற்று விளங்கினார்கள். எ-று.

வடமொழியுந் தென்மொழியுமே சிறந்தனவாதலின், தென்கலை யென்றது நோக்கி, பன்மாண்கலை யென்றதனை வடகலை யெனக் கொள்ளக்கிடந்தது.

பதினெண்பாஷைக ளிவையென்பதை,

கட்டளைக்கலித்துறை.

" சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகங்
கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம்வங்கங்
கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலந்
தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்புவி தாமிவையே"—என்பதனுனறிக. ()

கழுமணி வயிரம் வேய்ந்த கலன்பல வன்றிக் கண்டிக்
கொழுமணிக் கலனும் பூணுங் குளிர்நிலா நீற்று மெய்யர்
வழுவறத் தெரிந்த செஞ்சொன் மாலையா லன்றி யாய்ந்த
செழுமலர் மாலை யாலுஞ் சிவார்ச்சனை செய்யு நீரார்.

(இ-ள்.) சாணைபிடித்த மாணிக்கத்தாலும், வயிரத்தாலும் அலங்கரிக்கப்பெற்ற பல ஆபரணங்களையுமன்றி, நவமணிகளழுத்திய மகரகண்டிகையுமணிந்த தண்ணிய நிலவுபோன்ற திருவெண்ணீறு சண்ணித்த மேனியையுடையவராய், குற்றமற ஆராய்ந்த செஞ்சொலாற்றொடுத்த பாமாலையாலுமன்றி ஆராய்ந்த செழிய மலர்மாலையாலுஞ் சிவார்ச்சனை செய்யுந் தன்மையுடையவர்கள். எ-று.

மலர்மாலையால் ஆகமவிதியோடும், பாமாலையால் உழுவலன்போடுஞ் சிவார்ச்சனை செய்வோரென்க. (௩௨)

புலந்தொறும் போகிப் போகிப் புலமையால் வென்று வென்று
மலர்ந்ததண் பொருநை நீத்த வளங்கெழு நாட்டில் வந்து
நிலந்தரு திருவி னன்ற நிறைநிதிச் செழியன் செங்கோ
னலந்தரு மதுரை நோக்கி நண்ணுவார் நண்ணு மெல்லை.

(இ-ள்.) பல நாடுகள்தோறுஞ்சென்று, கல்வித்திறத்தால்(அங்குள்ள புலவர்களை) வென்று, பரந்த தண்ணிய தாமிரபர்ணியின் பிரவாகத்தால் வளப்பமிக்க பாண்டிநாட்டில் வந்து, நிலவளந்தருஞ் செல்வத்தால் நிறைந்த பாண்டியனுடைய (மநுமுறைப்படி நடத்தும்) செங்கோற் செல்வமிக்க மதுரையைநோக்கி வருவாராயினார்கள். (அவ்வாறு) வருங்காலையில். எ-று. (௩௩)

பற்பல கலைமாண் டேர்ச்சிப் பனுவலின் பயனாய் நின்ற
வற்புத மூர்த்தி யெந்தை யாலவா யடிக ளங்கோர்
கற்பமை கேள்வி சான்ற கல்வியின் செல்வ ராகிச்
சொற்பதங் கடந்த பாத மிருநிலந் தோய வந்தார்.

(இ-ள்.) பலவகைப்பட்ட நூல்களின் நுண்ணிய பொருளாராய்ச்சிக்கு (கருவியாகிய இலக்கணமுதலிய) நூலின் பொருளாய் நின்ற அற்புதமூர்த்தியும் எந்தையுமாகிய திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் அவ்விடத்தில் ஒப்பில்லாத பயிற்சியமைந்த நூற்கேள்வி நிறைந்த கல்விச்செல்வமுடையவராய், சொல்லளவினைக்கடந்த தமது திருவடியைப் பெரிய நிலமகள்சூட வந்தருளினார். எ-று.

சொற்பதங் கடந்தபாதம் - வேதாகமாதிகளால் அளவிடற்கெட்டாத திருவடி. அற்புதமூர்த்தி - ஞானமே திருமேனியாகவுடையவர். எந்தை - எமது பிதா. ()

அவ்விடை வருகின் றாரை நோக்கிநீ ராரை நீவி
ரெவ்விடை நின்றும் போது கின்றனி ரென்ன வன்னார்
வெவ்விடை யனையீர் யாங்கள் விஞ்சைய ரடைந்தோர் பாவம்
வௌவிடு பொருநை நாட்டின் வருகின்றே மென்ன லோடும்.

(இ-ள்.) அவ்விடத்துவரும் புலவர்களைநோக்கி, நீங்கள் யாவர்? நீங்கள் எவ்விடத்தினின்றும் வருகின்றீர்கள்? என்று வினவ, அப்புலவர்கள், வெய்ய காளையைப் போன்ற புலவீர்! நாங்கள் புலவர்கள். அடைந்தோரது பாபத்தைப்போக்குந் தாமிரபர்ணி நதிசூழ்ந்த பாண்டிநாட்டினைநோக்கி வருகின்றோம் என்று கூறவும். எ-று.

தனிவரு புலவர் நீவிர் தண்டமி ழால வாயெங்
கனிவரு கருணை மூர்த்தி கனைகழ லிறைஞ்சல் வேண்டு
மினிவரு கென்ன நீரோ யெங்களுக் களவில் கோடி
துனிவரு வினைக டீர்க்குஞ் சுந்தரக் கடவு ளென்றார்.

(இ-ள்.) தனியே வந்தருளிய புலவராகிய சோமசுந்தரக்கடவுள், நீங்கள் தண்ணிய தமிழ்வழங்குந் திருவாலவாயிலெழுந்தருளிய எம்பாற்கனிந்த கிருபாமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளின் ஒலிக்கும் வீரக்கழல் கட்டிய திருவடிகளைப் பணிதல்வேண்டும். இப்பொழுதே வருவீர் என்று திருவாய்மலர்ந்தருள, தேவரீரோ எங்களுக்கு அளவில்லாத பிறவிகடோறும் வந்த கணக்கில்லாத துன்பத்தைத்தரும் இருவினைப்பந்தங்களையு மொழிக்குஞ் சோமசுந்தரக்கடவுளென்று கூறினார்கள். எ-று.

மறையினை றெழுகும் பன்மாண் கலைகள்போன் மாண்ட கேள்வித்
துறையினை றொழுகுஞ் சான்றோர் சூழமீண் டேகிக் கூடற்
கூறையினர் கண்டத் தாரைப் பணிவித்துக் கரந்தா ரொற்றைப்
பிறையினர் மகுடந் தோற்று தறிஞராய் வந்த பெம்மான்.

(இ-ள்.) வேதத்தின் வழிப்பட்டொழுகும் பலவிதமான நுண்பொருளமைந்த நூல்கள்போல, மாட்சிமைபொருந்திய நூற்கேள்வித் துறையின்வழியே செல்லும் புலவர்கள் புடைசூழத் திரும்பிச்சென்று, நான்மாடக்கூடலி லெழுந்தருளிய ஸ்ரீகண்டத்தையுடைய தம்மைப் பணியச்செய்து, ஓரிளஞ்சந்திரனையணிந்த சடாமகுடத்தை மறைத்துப் புலவராய் வந்த சோமசுந்தரக்கடவுள் மறைந்தருளினர். எ-று.

பன்மாண் கலைகளென்றது வேதங்களின் சடங்கமாயுள்ள நூல்கள். அவை சிக்ஷை - வியாகரணம் - சந்தம் - நிருத்தம் - சோதிடம் - கற்பம் எனப்படும். (௧௭)

விம்மித மடைந்து சான்றோர் விண்ணிழி விமான மேய
செம்மலை வேறு வேறு செய்யுளாற் பரவி யேத்திக்
கைம்மலை யுரியி னூர்தங் காறொழு திறைஞ்சி மீண்டு
கொய்ம்மலர் வாகைச் செவ்வேற் செழியனைக் குறுகிக் கண்டார்.

(இ-ள்.) அறிவான்மிக்க நாற்பத்தெட்டுப் புலவரும் ஆச்சரியமுற்று, விண்ணுலகினின்று மிழிந்த விமானத்திற் பொருந்திய சோமசுந்தரக்கடவுளை வெவ்வேறு செய்யுளாற்றொடுத்த பாமாலை சாத்தித் துதித்து வணங்கி, யானைத்தோலைப் போர்த்தருளிய அப்பெருமானது திருவடிகளைப்பணிந்து திரும்பி, கொய்யும் வாகைமலர்மாலை சூடிய உதிரந்தோய்ந்த வேலைத்தாங்கிய வங்கியசேகரபாண்டியனை யடைந்து கண்டார்கள். எ-று.

கைம்மலை-கையையுடைய மலை; யானை. அதாவது ஈண்டுக் கயாசுரன். (௧௮)

மறமலி நேமிச் செங்கோன் மன்னவன் வந்த சான்றோ
ரறமலி கேள்வி நோக்கி யவைக்களக் கிழமை நோக்கித்
திறமலி யொழுக்க நோக்கிச் சீரியர் போலு மென்னு
நிறைமலி யுவகை பூத்த நெஞ்சின னிதனைச் செய்தான்.

(இ-ள்.) வெற்றிமிகுந்த ஆக்கினைசக்கரத்தையுஞ் செங்கோலையுமுடைய வங்கியசேகரபாண்டியன் தன்பால்வந்த நாற்பத்தெண்மருடைய தருமமிக்க நூற்கேள்வியையும்நோக்கி, கல்விச்சபைக்குரிய உரிமைத்திறத்தையும் பார்த்து, பாகுபாடமைந்த ஒழுக்கத்தையுமுணர்ந்து, இவர்கள் (எத்திறத்தினும்) மேம்பட்டவர்களென்று கருதி, நிறைந்து மலிந்த மகிழ்வுமிகுந்த மனமுடைய அப்பாண்டியன் இதனைக் கூறுவானாயினன். எ-று.

நூற்கேள்வி, கேட்போருக்கு மறுமைப்பயனாகிய புண்ணியத்தை யுறுத்துதலின் "அறமலிகேள்வி" என்றும், நல்லவை நிறையவை யென்பார் வாளா "அவைக்களம்" என்றும், அவ்வவைக்களன் அவர்களை யின்றியமையாமையின் "கிழமைநோக்கி" என்றும், அருள் - தெய்வவழிபாடு - மேம்பாடு - தேர்ச்சி - கட்டுரைவன்மை முதலியன முற்றவுடையாராகலின் "திறமலியொழுக்கம்" என்றுங் கூறினர்.

"புகழுந் தருமநெறி நின்றார்பொய் காமம்
இகழுஞ் சினஞ்செற்ற மில்லோர்—நிகழ்கலைகள்
எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றோ
நல்லா ரவைக்கு நலன்" என்பதனால் நல்லவையின்னதென்றும்,

"நலனடக்கஞ் செம்மை நடுவுநிலை நான்கும்
குலனென் றறிவுடையோர் கோதில் - புலனில்லோர்
சென்று மொழிந்தனவுங் கேட்டோர் செறிந்தவிடம்
அன்றோ நிறைந்த வவை" என்பதனால் நிறையவை யின்னதென்றுங் கண்டுகொள்க. (௧௯)

திங்களங் கண்ணி வேய்ந்த செக்கரஞ் சடில நாதன்
மங்கலம் பெருகு கோயில் வடகுட புலத்தின் மாடோர்
சங்கமண் டபமுண் டாக்கித் தகைமைசால் சிறப்பு நல்கி
யங்கமர்ந் திருத்தி றென்ன விருத்தின னறிஞர் தம்மை.

(இ-ள்.) சந்திரனை அழகிய சிரோமாலையாகவணிந்த செவந்த அழகிய சடாமுடியையுடைய சோமசுந்தரப்பெருமான் மங்கலமிக்க திருக்கோயிலின் வடமேற்

திசையின் பக்கலிற் சங்கமண்டபம் ஒன்று கட்டுவித்து, அவர்கள் தகுதிக்கேற்ற வரிசைகள் தந்து, அவ்விடத்தில் விரும்பி வசியுங்களென்று அந்நாற்பத்தெண்மரையும் இருக்கும்படி செய்தனன். எ-று. (உ௦)

வண்டமிழ் நாவி னோர்க்கு மன்னவன் வரிசை நல்கக்
கண்டுளம் புழுங்கி முன்னைப் புலவரக் கழகத் தோரை
மண்டினர் மூண்டு மூண்டு வாதுசெய் தாற்றன் முட்டிப்
பண்டைய புலனுந் தோற்றும் படருழந் தெய்த்துப் போனார்.

(இ-ள்.) வளம்பொருந்திய தமிழினைக்கொழிக்குஞ் செந்நாப்புலவர்களாகிய நாற்பத்தெண்மருக்கும் வங்கியசேகரபாண்டியன் வரிசைகொடுக்கக்கண்டு (அந்நாட்டிலிருந்த) பண்டையபுலவர்கள் மனங்கொதித்து, அக்கூட்டமாயுள்ள புலவர்களை ஒருசேரத்திரண்டுவந்து வாதஞ்செய்து தமது ஆற்றலிழந்து முன்னுள்ள தமது அறிவுமிழந்து, துன்பத்தால் வருந்தி யிளைத்துப் புறங்காட்டிப் போயினர். எ-று.

மூண்டுமூண்டு - இது மிகுதிப்பொருளில் வந்த அடுக்குத்தொடர். (உக)

இனையர்போல் வந்து வந்து மறுபுலத் திருக்குங் கேள்வி
பினைஞரு மதமேற் கொண்டு வினைவினைய் வாதஞ் செய்து
மனவலி யிளைப்ப வென்று வைகுவோ ரொன்றை வேண்டிப்
புணையிழை பாக நீங்காப் புலவர்மு னண்ணி னாரே.

(இ-ள்.) இப்பாண்டிநாட்டுப புலவர்கள்போல மறுநாட்டிலுள்ள நூற்கேள்வியில்வல்ல புலவர்களும் வந்து, தமது கொள்கையை மேற்கொண்டு வினவி வாதித்து மனவூக்கஞ்சோர, அவர்களையும் வென்று வைகுஞ் சங்கப்புலவர்கள் ஒருபொருளைக்கருதி, அங்கயற்கணம்மையாரை வாமபாகத்தினின்றும் நீங்காத சோமசுந்தரக்கடவுளுடைய திருச்சந்நிதானத்தின்முன் அடைந்தார்கள். எ-று. (உஉ)

முந்துநூன் மொழிந்தார் தம்மை முறைமையால் வணங்கி யெம்மை
வந்துவந் தெவரும் வாதஞ் செய்கின்றார் வரிசை யாக
வந்தமில் புலமை தூக்கி யளப்பதா யெம்ம னோர்க்குத்
தந்தருள் செய்தி சங்கப் பலகையொன் றென்று தாழ்ந்தார்.

(இ-ள்.) முதனூல் மொழிந்தருளிய சோமசுந்தரக்கடவுளை விதிப்படி பணிந்து, எந்நாட்டுப்புலவரும் வரிசைப்பட வந்துவந்து எம்முடன்வாதஞ்செய்கின்றனர். அவர்களது அளவில்லாத புலமைத்திறத்தைத் தூக்கியளக்குங் கருவியாக எம்போலியர்க்குச் சங்கப்பலகையொன்று தந்தருள வேண்டுமென்று (குறைகூறிப்) பணிந்தார்கள். எ-று. (உ௩)

பாடிய பாணற் கன்று வலியவே பலகை யிட்டார்
பாடிய புலவர் வேண்டிற் பலகைதந் தருளார் கொல்லோ
பாடிய புலவ ராகும் படியொரு படிவங் கொண்டு
பாடிய புலவர் காணத் தோன்றினர் பலகை யோடும்.

(இ-ள்.) பாடிய பாணபத்திரருக்கு அப்பொழுது (பரிவோடு) வலியப் பலகைதந்தருளிய சோமசுந்தரக்கடவுள், தம்மைப்பாடும் புலவர்கள் வேண்டுவாராயின் பலகை கொடுத்தருளமாட்டாரோ? (தடையின்றிக்கொடுத்தருளுவர்.)பாடும் புலவராம் வண்ணம் ஒருதிருவுருவங்கொண்டு தம்மைப்பாடும் புலவர்கள் தரிசிக்கப் பலகையோடுந் தோன்றியருளினர். எ-று. (உ௪)

சதுரமா யளவி ரண்டு சாணதிப் பலகை யம்ம
மதியினும் வாலி தாகு மந்திர வலிய தாகு
முதியநும் போல்வார்க் கெல்லா முழம்வளர்ந் திருக்கை நல்கு
மிதுநுமக் களவு கோலா யிருக்குமென் றியம்பி யீந்தார்.

(இ-ள்.) சதுரவடிவாய் நீட்டலளவு இரண்டுசாணுள்ளதாகிய இந்தப்பலகை உங்கள் நுண்ணறிவுபோலப் புனிதமுள்ளதாகும். மந்திரவலிமையுமுள்ளதாகும். அறிவின்மிக்க உங்களைப்போன்றவர்கட்கெல்லாம் முழநீளம் வளர்ந்து இருக்க இடந்தரும். இப்பலகை பிறர் கல்விப்பரப்பை யளத்தற்கு ஓரளவுகோலாக விருக்குமென்று கூறி (அதனை)த் தந்தருளினர். எ-று. (௨௫)

நாமக ளுருவாய் வந்த நாவலர் தமக்கு வெள்ளைத்
தாமரை யமளி தன்னைப் பலகையாய்த் தருவ தென்னக்
காமனை முனிந்தார் நல்கக் கைக்கொடு களிறு தாங்கு
மாமணிக் கோயி றன்னை வளைந்துதங் கழகம் புக்கார்.

(இ-ள்.) கலைமகள் வடிவமாய்வந்த சங்கப்புலவர்களுக்கு வெண்டாமரையாசனத்தை ஓர் பலகை வடிவமாக்கித் தருதல்போல, மன்மதனை முனிந்தெரித்த எம்பெருமானார் தந்தருள, (புலவர்கள்) தமதுகையாலேற்று, அஷ்டகஜங்களாற் சுமக்கப்பட்ட பருத்த இரத்தினங்களழுத்திய திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ் செய்து தமது சாலையிற் சென்றார்கள். எ-று. (௨௬)

நாறுபூந் தாம நாற்றி நறும்பனி தோய்ந்த சாந்தச்
சேறுவெண் மலர்வெண் டூசு செழும்புகை தீப மாதி
வேறுபல் வகையாற் பூசை வினைமுடித் திறைஞ்சிக் கீர
னேறினன் கபில னோடு பரணனு மேறி னானே.

(இ-ள்.) மணங்கமழு மலர்மாலைகளைத் தொங்கவிட்டு, நறுமணங்கமழும் பனிநீரிற்றோய்த்த வெண்சந்தனக்குழம்பும் வெள்ளிய மலரும் வெள்ளாடையும் தூபமும் தீபமுமுதலிய பலவேறுவகை உபசாரங்களால் பூசைத்தொழில் முடித்துப் பணிந்து, நக்கீரர் (முதலில்) ஏறினர். கபிலரோடு பரணரும் (பின்னர்) ஏறினர். எ-று.

இருங்கலை வல்லோ ரெல்லா மிம்முறை யேறி யேறி
யொருங்கினி திருந்தா ரியார்க்கு மொத்திடங் கொடுத்து நாதன்
றருஞ்சிறு பலகை யொன்றே தன்னுரை செய்வோர்க் கெல்லாஞ்
சுருங்கிநின் றகலங் காட்டித் தோன்றுநூல் போன்ற தன்றே.

(இ-ள்.) பெரிய நூல்களில்வல்ல ஏனைப்புலவர்கள் யாவரும் இம்முறையாக ஒருசேர ஏறியேறி, சோமசுந்தரக்கடவுள் தந்தருளிய சிறுபலகை யொன்றிலேயே தாம் மகிழ் கூர்ந்திருந்தார்கள். (இதனால் அப்பலகை) நாற்பத்தெண்மருக்கும் ஒக்க விடங்கொடுத்து, தன்னுளடங்கிய பொருளைவிரித்துரை கூறுவோர்க்கு (எழுத்துகள்) சுருங்கிநின்று (பொருள் விரிக்கும்பொழுது அவரவர் நுட்பபுத்திக்கேற்ப) பொருள் விரிந்து விளங்கும் (உத்தம) காவியத்தை யொத்திருந்தது. எ-று. (௨௮)

மேதகு சான்றோர் நூலின் வினைபொருள் விளங்கத் தம்மி
லேதுவு மெடுத்துக் காட்டி மெழுவகை மதமுங் கூறும்
போதவை தெளிந்த கிள்ளை பூவையே புறம்பு போந்து
வாதுசெய் வார்கள் வந்தான் மறுத்துநேர் நிறுத்து மன்னோ.

(இ-ள்.) மேம்பட்ட நாற்பத்தெண்மரும் (தாமியற்றிய) நூலுள் விளையும் (நுண்ணிய) பொருள்விளங்க, தம்முள் காரணமும் உதாரணமும் எழுவகைமதங்களும் (ஆகிய இவற்றைக்) கூறும்போது, அவற்றை ஐயமறப்பழகிய கிளிகளும் நாகணவாய்ப் பறவைகளுமே புறத்திற்சென்று, வாதிப்பவர் வரில் (அவர் மதத்தை) மறுத்து (தமது மதத்தையே) நிலைநாட்டும். எ-று.

அதிகாரம்-அவாய்நிலை முதலியன. ஏது-தான் சொல்லும் இலக்கணத்திற்கு இலக்கியம் காட்டுதல். எடுத்துக்காட்டு-உதாரணம்.

எழுவகை மதங்க ளாவன :—

"எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொடு படாஅன் றன்மதங் கொளலே"—எனப்படும். (௨௯)

கலிவிருத்தம்.

ஆய வாறெண் புலவரு மாய்ந்துணர்
பாய கேள்விப் பயன்பெற மாட்சியாற்
றூய பாட றொடங்கினர் செய்துகொண்
டேய வாறிருந் தாரந்த வெல்லைவாய்.

(இ-ள்) (கல்விகேள்விகளின் மிக்கவர்கள்) ஆகிய புலவர் நாற்பத்தெண்மரும், பலநூல்களையும் ஆராய்ந்துணர்ந்ததால், பரந்த நூற்கேள்வியின் பயனைப் பயில் வோரடையத் தமது நுண்ணறிவால், களங்கமில்லாத செய்யுள்களைத் தொடங்கிச் செய்து இச்சையின்படி யிருந்தனர்கள். அந்தச்சமயத்தில். எ-று. (௩௦)

பலருஞ் செய்த பனுவலு மாண்பொருண்
மலருஞ் செல்வமுஞ் சொல்லின் வளமையுங்
குலவுஞ் செய்யுட் குறிப்புமொத் தொன்றியே
தலைம யங்கிக் கிடந்தவத் தன்மையால்.

(இ-ள்.) அவர்கள் யாவருஞ் செய்த நூல்களெல்லாம் மாட்சிமைப்பட்ட பொருட்சுவையாலும், விளங்கும் அச்செய்யுள்களின் (போதருங்) குறிப்புகளாலும், தம்முள் ஒத்துப்பொருந்தியிருத்தலால், (பாகுபாடின்றித்) தலைமயங்கிக் கிடந்தன. அவ்வகையதன்மையினுல். எ-று. (௩௧)

வேறு பாடறி யாது வியந்துநீர்
கூறு பாட லிதுவென் றுங் கோதிலென்
றேறு பாட லிதுவென் றுஞ் செஞ்சவே
மாறு பாடுகொண் டார்சங்க வாணரே.

(இ-ள்.) வேறுபாடுணராமல் அதிசயங்கூர்ந்து, இச்செய்யுள் நீர் கூறிய செய்யுளென்றும், இச்செய்யுள் குற்றமில்லாத எனது தேர்ச்சியாற்செய்த பாடலென்றும், சங்கப்புலவர்கள் நேரே யொருவரோடொருவர் பகைமை கொண்டனர். எ-று.

மருளு மாறு மயக்கற வான்பொருட்
டெருளு மாறுஞ் செயவல்ல கள்வர்சொற்

பொருளு மாமது ரேசர் புலவர்மு
னருளு நாவல ராய்வந்து தோன்றினர்.

(இ-ள்.) (ஒன்றைப் பிறிதொன்றாக) மயங்கும் வகையும் மயக்கமில்லாமல் அச்சிறந்தபொருளைத் தெளியும்வகையுஞ் செய்யவல்லகள்வரும், சொல்லும்பொருளு மாகிய சோமசுந்தரப்பெருமான், அப்புலவர்கள் முன் அருள்செய்யும் (பெரும்புலமை யுடைய) நாவலர் திருவுருவாய் வந்து தோன்றியருளினர். எ-று. (௩௩)

வந்த நாவலர் வந்திக்கு நாவலர்
சிந்தை யாகுலஞ் செய்ய மயக்குறும்
பந்த யாப்பைக் கொணர்கெனப் பாவல
ரெந்தை யீங்கிவை யென்றுமுன் னிட்டனர்.

(இ-ள்.) வந்தருளிய சோமசுந்தரக்கடவுள் தம்மை வணங்கும் புலவர்களு டைய மனம் வருந்த, மயங்குதலையமைந்த செய்யுளைக் கொண்டுவரக் கடவீரென்று கட்டளையிட, அப்புலவர்கள் எமது தந்தையே! இவ்விடத்தில் இச்செய்யுள்கள்தா மென்று திருமுன்வைத்தார்கள். எ-று. (௩௪)

தூய சொல்லின் பொருளின் றொடர்ச்சியு
மாய நாவல ரவ்வவர் தம்முது
வாயு பாடல் வகைதெரிந் தவ்வவர்க்
கேய வேயெடுத் தீந்தன ரென்பவே.

(இ-ள்.) குற்றமற்ற சொற்றொடரையும் பொருட்டொடரையும் ஆய்தலால், அவ்வப்புலவர்களுடைய பொருண்முதிர்ச்சி யமைந்த பாடல்களின் வகைகளை யுண ர்ந்து, அவ்வப்புலவர்களுக்குப் பொருந்த (தமது திருக்கரத்தால்) எடுத்துக் கொடுத் தருளினர். எ-று. (௩௫)

வாங்கு சங்கப் புலவர் மனங்களித்
தீங்கு நீரெம ரோடு மொருத்தரா
யோங்கி வாழ்தியென் றொல்லெனத் தங்களைத்
தாங்கு செம்பொற் றவிசி லிருத்தினர்.

(இ-ள்.) (அவ்வாறு இறைவர் கொடுக்க) வாங்கிய சங்கப்புலவர்கள் மனமகி ழ்ந்து நீர் இவ்விடத்தில் எம்மவரோடும் ஒருவராய்ச்சிறந்து வாழ்வீரென்று சொல்லி, விரைந்து தங்களைத்தாங்கிய செவந்த பொன்னாலாகிய ஆசனத்தில் எழுந்தருளியிருக் கச் செய்தார்கள். எ-று. (௩௬)

பொன்னின் பீடிகை யென்னும்பொன் னாரமேற்
றுன்னு நாவலர் சூழ்மணி யாகவே
மன்னி னார்நடு நாயக மாமணி
யென்ன வீற்றிருந் தார்மது ரேசரே.

(இ-ள்.) பொற்பலகையென்று சொல்லும் பொன்னாரத்தின் மேலே தங்கிய நாற்பத்தெண்மரும் சுற்றிலும் பதித்த இரத்தினங்களாக இருந்தார்கள். மதுராபுரிக் கிறைவராகிய சோமசுந்தரக்கடவுள் பெரிய நடுநாயகமணியாக (சமானரகிதராய்) எழு ந்தருளியிருந்தனர். எ-று.

இச்செய்யுள் இயைவுருவகவணி. (௩௭)

நதிய ணிந்தவர் தம்மொடு நாற்பத்தொன்
பதின்ம ரென்னப் படும்புல வோரொலா
முதிய வான்றமிழ் பின்னு முறைமுறை
மதிவி ளங்கத் தொடுத்தவண் வாழுநாள்.

(இ-ள்.) கங்கையை யணிந்த (சடைமுடியையுடைய) சோமசுந்தரக்கடவுளுடன் நாற்பத்தொன்பதின்மரொன்று சொல்லப்படும் புலவர்கள் யாவரும், தொன்றுதொட்டுள்ள பெரிய முத்தமிழும் மீளவும் முறைமுறையாகக் கற்போர்க்கு நுண்ணறிவு விளங்க நூல்களியற்றி (சங்க மண்டபமாகிய) அவ்விடத்திலே வாழ்ந்திருக்குங் காலத்தில். எ-று. (௩அ)

கலிநிலைத்துறை.

வங்கிய சேகரன் வங்கிய சூடா மணிதன்னைப்
பொங்கிய தேசார் முடிபுனை வித்துப் புவிநல்கி
யிங்கியல் பாச வினைப்பகை சாய விருந்தாங்கே
சங்கியல் வார்குழை யானடி யொன்றிய சார்புற்றான்.

(இ-ள்.) வங்கியசேகரபாண்டியன் வங்கிய சூடாமணிபாண்டியனுக்கு விளங்கும் ஒளிமிக்க கிரீடந்தரித்து, பூமி (பாரத்தை அவன் தோளிலேறக்) கொடுத்து, இவ்வுலகத்திலமைந்த பந்தமாகிய இருவினையென்னும் பகைமையொழிய இருந்தபடியால், வெள்ளிய சங்ககுண்டலத்தை யணிந்த சிவபெருமானுடைய திருவடியில் இரண்டறக் கலக்கும் முத்திநிலையை யடைந்தனன். எ-று.

ஐ - உருபு மயக்கம். பாசவினைப்பகைசாய என்றது - மேலைக்கு வித்தாகிய இருவினையு மொழிதலாலேயே பிறப்பறுமாதலினென்க. (௩௯)

சங்கப்பலகைதந்தபடலம்
முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௪௩௩.

---

ஐம்பத்திரண்டாவது,

# தருமிக்குப்பொற்கிழியளித்த படலம்.

கலிநிலைத்துறை.

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுபீட
மற்குவை கண்டத் தண்ண லளித்த தறைந்தேமாற்
றற்குவை தந்தா லுய்குவ லென்னுந் தருமிக்குப்
பொற்குவை நல்கும் வண்ண மெடுத்துப் புகல்கிற்பாம்.

(இ-ள்.) சொல்லின் வகைகளை யாய்ந்துணர்ந்த சங்கப்புலவர்கள் (நாற்பத்தெண்மரும்) வசிக்க, இரத்தினந்தொக்க பீடத்தை, இருளானது வசித்தாற்போன்ற ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக் கடவுள் தந்தருளிய திருவிளையாடலைக் கூறினோம். தனக்கு அவற்றைத் தந்தாற் பிழைப்பேனென்று குறையிரந்த தருமியென்னும் அந்தணனுக்குப் பொற்குவையைத் தந்தருளிய திருவிளையாடலை (யாம்) இனியெடுத்துக் கூறுவாம். எ-று. (க)



தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம்.

மன்னவர் மன்னன் வங்கிய சூடா மணிமாறன்
றென்னவ ராகித் திகிரி யுருட்டுந் தென்கூடன்
முன்னவ ரன்னங் கண்டறி யாத முடிக்கேற்பப்
பின்மலர் நல்கு நந்தன‌ம் வைக்கும் பணிபூண்டான்.

(இ-ள்.) அரசர்க்கரசனாகிய வங்கியசூடாமணிபாண்டியன், சவுந்தரபாண்டியராகி யாக்கினைசக்கரஞ்செலுத்திய தென்றிசைக்கண்ணதாகிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய பிரமனாகிய அன்னம் தேர்ந்துணராத திருமுடிக்குப்பொருந்த, பலமலர்களையுந்தரும் நந்தவனத்தை வைத்துப்போற்றும் திருப்பணியை மேற்கொண்டனன். எ-று. (௨)

மாதவி பாதிரி தாதகி கூவிள மந்தாரந்
தாதவிழ் மல்லிகை முல்லையி லஞ்சி தடங்கோங்கம்
வீதவழ் கொன்றை கரந்தை செழுங்கர வீரந்தண்
போதவிழ் நந்தி செருந்தி குருந்தம் புன்னாகம்.

(இ-ள்.) குருக்கத்தியும் பாதிரியும் ஆத்தியும் வில்வமும் மந்தாரமும் மகரந்தத்தோடு மலரு மல்லிகையுமுல்லையும் மகிழும் பெரியகோங்கும் வண்டுகள் தவ்வும் கொன்றையும் கரந்தையும் வளவிய அலரியும் தண்ணிய போதவிழும் நந்தியாவர்த்தமும் செருந்தியும் குருந்தும் புன்னாகமும். எ-று.

இது முதல் இரண்டுபாடல்கள் குளகம். (௩)

முண்டக் மென்கடி நீல் முதற்பல முப்போது
மெண்டிசை யுங்கம ழும்படி நந்தன மெங்குந்தே
னுண்டிசை வண்டுப டிந்துமு ரன்றிட வுண்டாக்கி
வண்டிமிர் சண்பக நந்தன முந்தனி வைத்தானால்.

(இ-ள்.) தாமரையும் மெல்லிய வாசமுடைய நீலமுதலிய பல மலரும், காலைமாலை யுச்சியென்னும் முப்போதிலும் எட்டுத்திக்கிலும் நறுமணம் வீசும்படி நந்தவனம் எங்கும் இசைபாடும் வண்டுகள் மதுவுண்டு மகரந்தத்திற்படிந்து ரீங்காரஞ்செய்யவைத்து, வண்டுகளொலிக்கும் சண்பகநந்தவனத்தையும் தனியே வைத்தனன். எ-று. (௪)

பொய்த்திடு நுண்ணிடை மங்கல மங்கையர் பொன்பூண்டா
ரொத்தெழு சண்பக மொய்த்தவ ரும்பரு டைத்தெங்கும்
வைத்திடு நந்தன வாசம் விழுங்கி மணங்கான்று
பைத்து மலர்ந்தன கண்டு மகிழ்ந்து பரித்தேரான்.

(இ-ள்.) இளைத்த நுண்ணிய இடையையுடைய சுமங்கலப்பெண்கள் பொன்னணி பூண்டதையொத்து, எழுந்தோங்கிய சண்பகங்களில்மொய்த்த அரும்புகள் முறுக்குடைந்து, எங்கும்வைத்த நந்தவனங்களிலுள்ள வாசங்களைவிழுங்கி, மணத்தைவீசி, பசந்து மலர்ந்தன; குதிரை பூண்ட தேரையுடைய வங்கியசூடாமணிபாண்டியன் பார்த்து மகிழ்ந்து. எ-று. (௫)

செருக்கிய வண்டு விழாமலர் கொய்து தெரிந்தாய்ந்து
நெருக்கிய விண்டை நிரைத்தொடை தொங்க னெடுந்தாம
மருக்கிளர் கண்ணி தொடுத்தணி வித்து வணங்காரூர்
கருக்கிய கண்ணுத லார்திரு மேனி கவின்செய்தான்.

(இ-ள்.) கள்ளுண்டு களித்த வண்டுகள் மோவாத மலர்களைக்கொய்து காம்பு முதலியவற்றையாய்ந்து, மலர் நெருங்கத்தொடுத்த இண்டை மாலையையும், வரிசையுள்ள தொடைமாலையையும், நெடிய தொங்கல்மாலையையும், வாசம்வீசும் கண்ணிமாலை

யையுந்தொடுர்து, பகைவர் புரங்களை நகைத்தெரித்த சோமசுந்தரக்கடவுளுடைய திருமேனியை யழகு செய்தனன். எ-று. (௬)

துன்னவி யன்பொழின் மாமது ரேச ரடித்தாழ்வோன்
பொன்னவிர் சண்பக மாலை புனைந்த புதுக்கோலந்
தன்னை வியந்திவர் சண்பக சுந்தரர் தாமென்று
முன்ன ரிறைஞ்சின னிம்ப மணிந்த முடித்தென்னன்.

(இ-ள்.) அவ்வகைய பரந்த சோலைசூழ்ந்த பெரிய மதுராபுரியில்வாழுஞ் சோமசுந்தரக்கடவுளுடைய திருவடியைப்பணியும் பாண்டியன் பொன்போலப் பிரகாசிக்குஞ் சண்பகமாலையைச்சாத்திய புதிய திருக்கோலத்தை வியப்புற்று, இவர் சண்பகசுந்தரப் பெருமானென்று, வேப்பமலர்மாலைசூடிய கிரீடத்தையுடைய அப்பாண்டியன் அவ்விறைவர் திருமுன்னின்று பணிந்தனன். எ-று.

"சண்பகமாலை புனைந்த புதுக்கோலம் வியந்து சண்பகசுந்தரனென் றிறைஞ்சினன்" என்றதனால், தானே காரணக்குறியாகப் பெயரிட்டனனெனக்கொள்க. (எ)

அன்னதொர் நாமம் பெற்றன ரின்று மணிக்கூடன்
முன்னவ ரந்தத் தாம மவர்க்கு முடிக்கேற்று
பின்னதொர் நீராற் சண்பக மாற னென்றேபேர்
மன்னி விளங்கினன் வங்கிய சூடா மணிதானும்.

(இ-ள்.) அவ்வகைய ஒரு திருநாமத்தை அழகிய நான்மாடக்கூடலிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் இதுகாறும் பெற்றிருக்கின்றனர்: அந்தச்சண்பகமாலையை அவருக்குத் திருமுடியிற்சாத்திய இத்தன்மையினால், வங்கியசூடாமணிபாண்டியனும் சண்பகபாண்டியனென்னும் பெயர் நிலைபெற்றுநிற்க விளங்கினன். எ-று. (அ)

சண்பக மாறன் சண்பக சுந்தரர் தம்பாலே
நண்பக லாறு நன்பணி செய்யு நன்னாளிற்
பண்பகர் சொல்லார் தம்புடை மாரன் படைபோர்மூண்
டெண்பக வெய்வா னாகிய வந்தன் றிளவேனில்.

(இ-ள்.) சண்பகபாண்டியன் சண்பகசுந்தரக்கடவுளிடத்து மனத்தால் நண்ணுதல்மாறாத நல்ல திருப்பணிகள் செய்துவரும் நல்லநாளில், பண்போன்ற சொற்களையுடைய பெண்களிடத்து மன்மதன் போர்த்தொழில்தொடங்கி அளவின்றி மலர்க்கணைகளைப் பிரயோகிக்க இளவேனிற்காலம்வந்து சம்பவித்தது. எ-று. (௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மனிதர் வெங்கோடை தீர்க்கும் வசந்தமென் காலும் வேறு
துனிதவி ரிளங்கால் வேண்டுஞ் சோலையுஞ் சோலை வேண்டும்
புனிதநீர்த் தடமும் வேறு புதுமல ரோடை வேண்டும்
பனிதரு மதியும் வேறு பான்மதி வேண்டுங் காலம்.

(இ-ள்.) மாந்தர்களது கொடிய வெப்பத்தையகற்றும் மெல்லிய தென்றலும் தனது வெப்பத்தைத்தணிக்க வேறே தென்றற்காற்றை விரும்பாநிற்கும். (அடைந்தோர்க்குக் குளிர்ச்சிசெய்யும் இளஞ்) சோலையும் (தன்னைக் குளிர்ச்சி செய்தற்கு மற்றோர்) இளஞ்சோலையை வேண்டாநிற்கும். மாசில்லாத நீர் நிறைந்த மலர்த்தடமும் வேறோர் அலர்ந்த மலரோடையை விரும்பாநிற்கும். தண்மைதருஞ் சந்திரனும் (தன்னைத்தண்மைசெய்ய) வேறோர் வெள்ளிய சந்திரனை விரும்பாநிற்குங் காலமாயிருந்தது (அவ்விளவேனிற்காலம்). எ-று.

இது பெருங்காப்பியமாதலின் இச்செய்யுள் காப்பியவுறுப்புகளில் ஒன்றாகிய இருதுவர்ணனை. (௧௦)

அண்டவான் றருமேற் சீறிச் செவங்தெழுந் தாங்குத்தேமா
தண்டளி ரீன்று வானந் தைவர நிவந்த காசு
கொண்டிடை யழுந்திச் செய்த குழையணி மகளிர்போல
வண்டிறை கொள்ளப் பூத்து மலர்ந்தன செருந்தியெல்லாம்.

(இ-ள்.) தித்திப்பு மாமரமானது விண்ணுலகிலுள்ள பெரிய பஞ்சதருக்களின் பேரிற் கோபித்துச் சிவந்தெழுந்தாற்போலத் தண்ணிய தளிரைத்தந்து விண்ணுலகத்தையளாவவுயர்ந்தன. செருந்திமரங்களெல்லாம் நீலமணிகொண்டு இடையிடையே யழுத்திச்செய்த குண்டலமணிந்த மாதர்கள்போல வண்டுகள் இடையிடையே வசிக்க முறுக்கவிழ்ந்து மலர்ந்தன. எ-று. (௧௧)

செங்கதிர் மேனி யான்போ லவிழ்ந்தன செழும்ப லாச
முங்குனூர் செல்வன் போல மலர்ந்தன காஞ்சி திங்கட்
புங்கவன் போலப் பூத்த பூஞ்சினை மரவஞ்செங்கை
யங்கதி ராழி யான்போ லலர்ந்தன விரிந்த காயா.

(இ-ள்.) செழிய முண்முருக்குகள் செவ்விய கிரணங்களையுடைய சூரியனைப்போல (செந்நிறம்வாய்ந்து) மலர்ந்தன. காஞ்சிமரங்கள் மேகவாகனஞ்கிய இந்திரன் போல (கருநிறமுற்று) மலர்ந்தன. பூங்கொம்புகளையுடைய குங்குமமரங்கள் சந்திரன் போல (வெண்ணிறத்தோடு) மலர்ந்தன. காயாஞ்செடிகள் செவந்த திருக்கரத்தில் ஒளி வீசும் சக்ராயுதத்தைத்தாங்கிய திருமால்போல (நீலநிறம்வாய்ந்து) மலர்ந்தன. எ-று. (௧௨)

தரைகிழித் தெழுநீர் வையைத் தடங்கரை யெக்க ரல்கு
லரவமே கலைசூழ்ந் தென்ன வலர்ந்துதா துகுப்ப ஞாழன்
மரகதந் தழைத்து வெண்முத் தரும்பிப்பொன் மலர்ந்து வாங்குந்
திரைகடற் பவளக் காடு செய்வன கன்னிப் புன்னை.

(இ-ள்.) பூமியைக்கிழித்தெழாநின்ற நீர் மயமாகிய வையைநதிக்கரையாகிய வெண்டிடராகிய அல்குலில் ஒலியையுடைய மேகலாபரணத்தைச்சூழஅணிந்தாற்போல, குங்குமமரங்கள் மலர்ந்து மகரந்தத்தைச்சிந்துவன. முதிராத புன்னைமரங்கள் இலை தழைத்து வெள்ளிய அரும்புகள் முகிழ்த்து மலர்பூத்து வளைந்த அலைகளையுடைய கடலிற்றோன்றிய பவளக்காட்டைச்செய்வன. எ-று. (௧௩)

ஊடினார் போல வெம்பி யிலையுதிர்ந் துயிரன் னாரைக்
கூடினார் போல வெங்குங் குழைவரத் தழைத்து நீங்கி
வாடினார் போலக் கண்ணீர் வாரமெய் பசந்து மைய
னீடினா ரலர்போற் பூத்து நெருங்கின மரங்க ளெல்லாம்.

(இ-ள்.) பிணக்குற்ற பெண்கள் (அணிகளை நீக்குவது) போலப் பழுக்கு இலைகளைச்சிந்தி, உயிர்போன்ற கணவரைத்தழுவிய பெண்கள் (மணிபணியணிந்தது) போல எவ்விடத்துங் குழைகள் தோன்றத் தழைத்து, (தலைவனைப்) பிரிந்து வாடும் மங்கையர் போலக் கண்ணீர்சிந்த உடல்பசந்து (பிரிவினாற்)காமமயக்குமேலிடாத பெண்கள்போல மலர்கள் மலர்ந்து மரங்களெல்லாந் தம்முள் நெருங்கின. எ-று.

கண்ணீர் என்பதைக் கண்+நீர் என்றும், கள்+நீர் என்றுஞ்சொல்வகைசெய்து கொள்க.

இச்செய்யுள் ஒருதொடரிற் பலவுவமைகள் வந்தமையின் பலவயிற்போலியுவமையணி. (௧௪)

விழைதரு காத லார்தா மெலிவுற மெலிந்து நெஞ்சங்
குழைவுறக் குழைந்து நிற்குங் கோதிலார் கற்பி னார்போன்
மழையருங் கோடை தீப்ப மரந்தலை வாட வாடித்
தழைவுறத் தழைத்து நின்ற தழீஇயபைங் கொடிக ளெல்லாம்.

(இ-ள்.) விரும்பப்பட்ட கணவர்கள் மெலிய(த் தாமு) மெலிந்து (அவர்கள்) மனங்களிகூர (த்தாமுங்) களிகூர்ந்துநிற்குங் குற்றமில்லாத கற்புடைய மகளிர்போல மழைவராத கோடையானது தீத்தலால், மரங்கள் (தீந்து) தலைவாட், (அவற்றை)த்தழுவிய பசிய கொடிகளெல்லாம் (தாமும்) வாடி (அம்மரங்கள் தென்றலால்) தழைக்க (தாமும்) தழைத்து நின்றன. எ-று. (௧௫)

சேட்டிசைத் தென்கா றள்ளத் தெண்மதுச் சிதறத் தும்பி
நீட்டிசை முரலச் சாயா நின்றுபூங் கொம்ப ராட
னாட்டியப் புலவ னாட்ட நகைமுகம் வேர்வை சிந்தப்
பாட்டிசைத் தாடா நின்ற பாவைமார் போன்ற வன்றே.

(இ-ள்.) நெடிய தென்றிசையினின்றுவரும் மந்தமாருதம் வீசுதலால் தெளிய தேன்சிந்தவும், வண்டுகள் நெட்டிசைபாடவும், ஒசிந்து பூங்கொம்புகளாடுதல், கூத்துவல்லோன் ஆட்டுவிக்கப் புன்னகையையுடைய முகத்தினின்று வெயர்வுசிந்தப் பாடல் பாடியாடாநின்ற பதுமைபோன்றுருவமைந்த கூத்தியைப்போன்றிருந்தன. எ-று. (௧௬)

மலர்ந்தசெவ் வந்திப் போதும் வகுளமு முதிர்ந்து வாடி
யுலர்ந்துமொய்த் தளிதே னக்கக் கிடப்பன வுள்ள மிக்க
குலந்தரு நல்லோர் செல்வங் குன்றினுந் தம்பா லில்லென்
றலந்தவர்க் குயிரை மாறி யாயினுங் கொடுப்ப ரன்றோ.

(இ-ள்.) உள்ளமிகுதியையுடைய நல்ல குடிப்பிறந்தோர் தமது செல்வங்குன்றினுந் தம்மிடத்து இல்லையென்று வருந்தியிரந்தவர்க்கு உயிரைமாறியாயினுங் கொடுப்பாரல்லவா? (ஆம் அதுபோல) விகசித்த செவ்வந்திமலரும் மகிழமலரும் (மூக்கழுகி வீழ்ந்து வாடியுலர்ந்தும், வண்டுகள்மொய்த்துத் தேனுண்ணக்கிடப்பன. எ-று. (௧௭)

நாறிய தண்ணாந் தேமா நறுந்தளிர் கோதிக் கூவி
யூறிய காமப் பேட்டை யுருக்குவ குயின்மென் சேவல்
வீறிய செங்கோல் வேந்தன் வெளிப்படத் தேயங் காவான்
மாறிய வேந்தன் போல வொடுங்கிய மயில்க ளெல்லாம்.

(இ-ள்.) மெல்லிய ஆண்குயில்கள் தளிர்த்த தண்ணிய அழகிய நறுமணங்கமழுந் தளிர்களைக்கோதிக் காமமரும்பிய பெண்குயில்களைக்கூவி (அவற்றின் மனத்தை) இளகச்செய்வன. நிலமுழுதுஞ் செங்கோலையுடைய அரசன் போருக்குவர, நாடு காவற்றொழில்மாறிய குறுநிலமன்னன்போல, மயில்களெல்லாங் கூவாதொடுங்கின. எ-று. ()

பொங்கரி னுழைந்து வாவி புகுந்து பங்கயந் துழாவி
பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கட் டுண்டு குளிர்ந்துமெல் லென்று தென்ற
லங்கங்கே கலைக டேரு மறிவன்போ லியங்கு மன்றே.

(இ-ள்.) தென்றற்காற்றானது சோலைகளிற்றவழ்ந்து தடாகங்களிற்படிந்து தாமரைகளிலளாவிப் பசிய வாசமிக்க இருவாட்சிமலரிலும் மல்லிகைப்பந்தரிலும்படர்ந்து மகரந்தத்தையும் பரந்த மணத்தையுங் கொள்ளைகொண்டு, தண்ணிதாய் மெத்தென்ற தன்மைவாய்ந்து, ஆங்காங்குள்ள நூற்பொருளைத்தேரும் உணர்வுடையோனை யொத்திருந்தன. எ-று. (௧௯)

தாமரை களாஞ்சி தாங்கத் தண்குயின் முழவ மேங்க
மாமரு தழருங் கிள்ளை மங்கல மியம்பத் தும்பி
காமர மிசைப்ப முள்வாய்க் கைதைவா ளெடுப்ப வேனிற்
கோமகன் மகுடஞ் சூடி யிருப்பதக் குளிர்பூஞ் சோலை.

(இ-ள்.) தாமரையானது மலர்களாகிய களாஞ்சியையேந்தவும், தண்ணியகுயிலோசை முழவாக வொலிக்கவும், பெரியமருதமரத்தில் வசிக்குங் கிளிகள் மாங்கல்ய மாதர்களாக மங்கலப் பாட்டுப் பாடவும், வண்டுகள் (பாடகர்களாக) இசைப் பாட்டுப் பாடவும், முள்வாய்ந்த தாழைகள் மடலாகிய வாளையேந்தவும், வேனிற் காலமாகிய பேரரசன் கிரீடமணிந்து அரசுவீற்றிருப்பது அந்தக்குளிர்ந்த பூஞ்சோலை. எ-று. (உ௦)

கலையினு னிறைந்த விந்து காந்தமண் டபத்திற் செய்த
மலையினு மெழுத்து மாட மருங்கினு நெருங்கு சோலைத்
தலையினுங் கமல வாவித் தடத்தினுந் தண்முத் தார
முலையினு மன்றிக் கோடை முடிவிடங் காணார் மைந்தர்.

(இ-ள்.) ஆடவர்கள் கலைகளாற் (குறைவின்றி) நிறைந்த சந்திரகாந்தமண்டபத்திலும் செய்குன்றத்திலும் சித்திரமெழுதிய உபரிகைகளிலும் நெருங்கிய சோலைகளிலும், தாமரையோடைத்தடங்களிலும், தண்ணிய முத்தாரத்தையணிந்த மாதர்கள் குசங்களிலுமல்லாமல், கோடைவெப்பாற்றுமிடம் வேறுகாணார்கள். எ-று. (உக)

நிலந்தரு திருவி னுன்ற நிழன்மணி மாடக் கூடல்
வலந்தரு தடந்தோண் மைந்தர் வானமும் வீழும் போக
நலந்தரு மகளி ரோடு நாகநா டவர்தஞ் செல்வப்
பொலந்தரு வனைய காட்சிப் பூம்பொழி னுகர்வான் போவார்.

(இ-ள்.) (மரக்கலத்தாலுமன்றி) நிலவுலகந்தருஞ் செல்வத்தால் நிறைந்த ஒளியமைந்த இரத்தினங்கள்நிறைந்த மதுராபுரியில் வசிக்கும்வெற்றிமிக்க உயர்ந்த தோளையுடைய புருடர்கள் விண்ணவர்க்கும் விரும்பும் போக நலத்தைத் தராநின்ற பெண்களோடு அவ்விண்ணவர் செல்வமாகிய கற்பகத்தருவையொத்த தோற்றத்தையுடைய தருக்கள் நெருங்கிய மலர்களுடைய சோலையின்பத்தை நுகரச்சென்றார்கள். எ-று. ()

பூம்பொழினுகர்தல்-பெருங்காப்பியத்தினுறுப்புகளிலொன்று.

மேற்படி - வேறு.

மாத்தாண் மதமா னெருத்தின் மடங்க லெனச்செல் வாரும்
பூத்தா ரொலிவாம் பரிமேற் புகர்மா வெனப்போ வாரும்
பாத்தார் பரிதி யெனவாம் பரித்தே ருகைத்தூர் வாருந்
தேத்தா ருளர்வண் டலம்பச் சிலம்பி னடக்கின் றாரும்.

(இ-ள்.) (ஆடவர்கள்) பெரியகால்களையுடைய யானையின் பிடரில் சிங்கவேறுபோலச் செல்வாரும், பொலிவமைந்த கிண்கிணிமாலையினொலிமிக்க தாவிச்செல்லுங் குதிரைமேல் யானைபோலச்செல்வாரும், பகுதியமைந்த சூரியர்களைப்போலத்தாவுங் குதிரைபூண்ட தேர்மேற் செல்வாரும், தேன்றுளிக்கும் மாலையில் உழும்வண்டுகளொலிக்க மலைபோல் நடக்கின்றவரும். எ-று.

புகர்மா - புள்ளியுடைய யானை.
பகுதியமைந்த சூரியர் என்றது துவாதசாதித்தரை. (உரு)

நீலப் பிடிமேற் பிடிபோ னெறிக்கொள் வாருந் தளர
மாலைச் சிவிகை மிசைவெண் மலரா ளெனச்செல் வாரு

மாலைக் கரும்பன் றுணைபோ லளித்தார்ப் பரியூர் வாருங்
கோலத் தடக்கை பற்றிக் கொழுந ருடன்போ வாரும்.

(இ-ள்.) (மாதர்கள்) கரிய பிடி யானையின்மேல் பிடியானைபோலச் செல்வாரும்; முத்துவரிசை சூழ்ந்த பல்லக்கின்மேரில் வெண்டாமரையிற் செல்லுங் கலைமகள் போலச் செல்வாரும்; ஆலையிலமையுங் கருப்புவில்லேந்திய மன்மதனது மனைவியாகிய இரதியைப்போலக் கிண்கிணி மாலையணிந்த குதிரைமேலேறிச் செல்வாரும்; சந்தனக் கோலமமைந்த நீண்ட கைகளைப்பற்றித் தத்தமக்குரிய கணவருடன் செல்வாரும். எ-று.

சுருப்புக் கமழ்தேங் கண்ணித் தொடுபைங் கழலா டவருங்
மருப்புச் சிலைமன் னவனுற் கருவிப் படையன் னவரும்
விருப்புற் றெறிநீர் வைகை வெள்ளைத் தரளந் தெள்ளிப்
பொருப்பிற் குவிக்கும் புளினம் புறஞ்சூழ் சோலை புகுவார்.

(இ-ள்.) வண்டுகள் மொய்த்த மணங் கமழுந்தேன் சிந்துமாலை யணிந்த வீரக் கழல் கட்டிய புருடரும், கருப்புவில் லேந்திய மன்மதனது நான்குசேனைகளை யொத்த பெண்களும், விரும்பி மோதுகின்ற நீர்மயமாகிய வைகைநதி வெள்ளிய முத்துகளைக் கொழித்து மலைபோற் குவிக்கும் மணற்குன்றுகள் புறஞ்சூழ்ந்த இளஞ்சோலையிற் குடியேறுவாராயினர். எ-று. (உ௫)

கூந்தற் பிடியும் பரியு மூர்வார் கொழுநர் தடந்தோ
ளேந்தச் சயமா தென்னத் தழுவா விழிந்து பொழில்வாய்ப்
பூந்தொத் தலர்பொற் கொடிதா துகுமா றென்னப் புனைந்த
சாந்தக் கலவை யுகப்போய் வன்மங்கையர் போற் சார்ந்தார்.

(இ-ள்.) புறமயிரையுடைய பெண்யானையையும் குதிரையையும் ஏறிச்சென்று பெண்கள் தமதுகணவர்கள் பணைத்த தோள்தர விஜயலக்ஷுமிபோலத் தழுவியிறங்கிச் சோலையில் பூங்கொத்துக ளலர்ந்த பொன்மயமான பூங்கொடிகள் மகரந்தத்தைச் சொரியும் வகைபோலத் தாமணிந்த கலவைச் சந்தனம் (உலர்ந்து) சிந்தச்சென்று வனதேவதைகள் போலச்சேர்ந்தார்கள். எ-று.

பொழில்வாய்-பொழிலை. இது வேற்றுமயக்கம். (உ௬)

ஏமா சலமென் முலையார் நடையோ வியமே யென்னப்
பூமா தவிசேர் வாரும் புன்னை நிழல்சேர் வாருந்
தேமா நிழல்சேர் வாருஞ் செருந்தி நிழல்சேர் வாருங்
காமா யுதசா லைகள்போல் கைதை நிழல்சேர் வாரும்.

(இ-ள்.) மேருவென்று சொல்லத்தகுமுலையையுடைய பெண்களும், நடைகற்ற சித்திரப்பதுமைபோலப் பூக்களையுடைய குருக்கத்திமரநிழலிற் சேர்வாரும், புன்னைமர நிழலிற்சேர்வாரும், தித்திப்புமாமர நிழலிற்சேர்வாரும், செருந்திமர நிழலிற்சேர்வாரும், மன்மதன் ஆயுதங்களைப்பரப்பிய ஆயுதசாலைபோல மலர்ந்த தாழைமரநிழலிற்சேர்வாரும்.()

கோடும் பிறைவா ணுதலார் குழலைக் கருவிக் காரென்
றாடுந் தோகை யவர்கண் ணோக்கிக் கணையொன் றஞ்சி
யோடுங் கொடியி னன்னா ருருமாந் தளிரென் றயில்வா
னாடுங் குயிலன் னவர்பண் ணிசைகேட் டொதுங்கி நாணும்.

(இ-ள்.) வளைந்த பிறையையொத்த ஒள்ளிய நெற்றியையுடைய பெண்களது கூந்தலை, உலகிற்குத்துணைக்காரணமாகிய மேகமென்று கருதி நடிக்கும் மயில்கள் அவர்கள் கண்களைப்பார்த்து அம்பென்று பயந்து ஓடும். பூங்கொடிபோலும் அவர்கள் உரு

வத்தை மாந்தளிரொன்று உண்ணக் கருதிவந்த குயில்கள் அவர்களது பண்ணோசையைக் கேட்டுத் தளர்ந்தொதுங்கி நாணமுறும். எ-று. (உஅ)

நீடுந் தரங்க மிரங்கு நிறைநீர் நிலையே யன்றிப்
பாடுஞ் சுரும்புண் கழுநீர் பைந்தாட் குமுதம் பதுமங்
கோடும் பூத்த வென்னக் கொடியே ரிடையார் குழையுந்
தோடுங் கிடந்த வதனத் தோங்க யாற்பொ லிவசோலை.

(இ-ள்.) நீண்ட அலைகளொலிக்கும் நிறைந்த மலரோடைகளேயன்றி இசைபாடும் வண்டுகள் தேனுண்ணும் குவளைகளையும் பசியதண்டையுடைய ஆம்பல்களையும் தாமரைகளையும் பூங்கொம்புகளும் பூத்தனபோலப் பூங்கொடிபோன்ற அழகிய இடையையுடைய பெண்களது குண்டலத்தினையுந் தோட்டினையுமணிந்த முகசமூகங்களால் சோலைகள் விளங்காநின்றன. எ-று. (உகூ)

பிடிக ளென்ன நடந்தா ருடன்போய்க் கொழுநர் பெருந்தண்
கொடிகண் மிடைந்த வில்லி லியக்கர் போலக் குறுகிக்
கடிகொள் பனிநீர் தெளித்து வேடை தணித்துங் கன்றும்
மடிகள் பிடித்துஞ் சேடி யவர்கைக் குதவி யாவார்.

(இ-ள்.) கணவர்கள் பெண்யானைகளைப்போல நடந்த (தத்தம்) மனைவிமாருடன்சென்று, மிக்க தண்ணிய பூங்கொடிகள் நெருங்கிய வீடுகளில் யக்ஷர்கள்போலக் குடிபுகுந்து வாசமிக்க பனிநீர்வீசி வெப்பந்தணிந்தும் (நடத்தலால்) கன்றிய அவர்கள் சிற்றடியைத் தடவியும், தோழிகள் தமது கைகளாற்செய்யும் சிரமபரிகாரத்தைத் தாம் செய்து அவர் கைகட்கு உதவியாயிருப்பார்கள். எ-று. (ரு0)

மைவார் தடங்கண் மடவார் வளைப்பார் கொம்பின் மலரைக்
கொய்வார் குமிழ்மோந் துயிர்ப்பார் குழையுஞ் செவியுங் குழலும்
பெய்வார் மகிழ்ச்சி செய்வார் பேரா மையல் கூர
வெய்வார் கணைபோற் றைப்பக் கொழுநர் மார்பத் தெறிவார்.

(இ-ள்.) மைதீட்டிய நெடிய கண்களையுடைய பெண்கள் (பூங்கொம்புகளை) வளைப்பார்கள். அக்கொம்புகளிலுள்ள மலர்களைக்கொய்வார்கள். குமிழமலர்போலும் நாசியில்மோந்து முரலுவார்கள். குண்டலத்திலுங் காதுகளிலும் கூந்தல்களிலுஞ் சூடுவார்கள் (தத்தங்கணவர்கட்கு) மகிழ்ச்சி செய்வார்கள். நீங்காத காமமிக்கூர (மன்மதன்) எய்யும் நெடிய அம்புபோலப் பாய்ந்துருவத் தங்கணவர்மார்பிலெறிவார்கள். எ-று.

மலர்சூடலும் எறிதலுங் கலவிக்குறிப்பு. (ருக)

முத்தேர் நகையார் வளைப்ப முகைவிண் டலர்பூங் கொம்பர்ப்
புத்தேள் வண்டும் பெடையும் புலம்பிக் குழலிற் புகுந்து
தெத்தே யெனப்பாண் செய்து தீந்தே னருந்துந் துணையோ
டொத்தே ழிசைபா டிக்க ளுண்ணும் பாண ரொத்தே.

(இ-ள்.) முத்துப்போன்ற அழகிய பற்களையுடைய பெண்கள் வணக்க, அரும்புகள் முறுக்கவிழ்ந்து மலரும் பூங்கொம்புகளிலுள்ள புதுமை விளக்கும் ஆண்வண்டுகளும் பெண்வண்டுகளும் நிலைகுலைந்து அவர் அளகபாரத்திற்குடியேறி, தெத்தேயென்று பண்பாடி, தமது மனைவியரோடு ஒருசேர (குரல்முதலிய) ஏழிசைகளையும்பாடி (கள் விற்போர் பரிசிலாகத்தரும்) மதுவினையுண்ணும் பாணர்களையொத்து இனிய மதுவையுண்ணுநிற்கும். எ-று. (ருஉ)

மேற்படி - வேறு.

இம்பர் வீடளிக்குந் தெய்வ மகளிரோ வென்பார் கூற்றம்
வம்பல மெய்யே போலும் வளைக்கையார் வளைப்பத் தாழ்ந்து

கம்பமுற் றடிப்பூச் சிந்தி மலர்முகங் கண்ணீர் சோரக்
கொம்பரும் பணித்த தென்றா லுலகியல் கூறற் பாற்றே.

(இ-ள்.) (இப்பெண்கள்) இந்நிலவுலகில் மோக்கத்தைத்தரும் தெய்வப்பெண்களேயென்று சொல்வோர்மொழி பொய்யன்று மெய்ம்மையே: வளையலையணிந்த முன்கையையுடைய பெண்கள் வளைக்க வளைந்து (அவர்கள்) காலில் மலர்சிதறி மலராகிய முகமானது கண்ணீர் சிந்தப் பூங்கொம்புகளும் வணங்கினவாயின், உலகிலுள்ள மக்களியல்பைக் கூறவேண்டுமோ? (வேண்டுவதில்லை). எ-று. (௩௩)

மைக்கணா ளொருத்தி யெட்டா நிமிர்கொம்பை வளைக்குந் தோறுங்
கைக்குநேர் படாமை வாடுங் கடிமலர்க் கொடிபோ னிற்பத்
தைக்கும்பூங் கணைவே ளன்னா னொருமகன் றலைப்பட் டென்னை
யெய்க்கின்றாய் தோண்மே லேறிப் பறியென வேந்தி நின்றான்.

(இ-ள்.) மையெழுதிய கண்களையுடைய ஒருமாது எட்டாமல் நிமிர்ந்த பூங்கொம்பினை வளைக்குந்தோறும் (அப்பூங்கொம்பு) கைக்கு எட்டாமையால், வாட்டமுற்ற வாசமிக்க பூங்கொடிபோலச் சோர்ந்து நிற்க, தைக்கின்ற மலர் அம்பினையேந்திய மன்மதனையொத்த ஒருவிடன் எதிர்ப்பட்டு, என்ன நீ விளைத்திருக்கின்றாய்? என் தோள்மேலேறி, (மலர்) கொய்யென்று தோள்கொடுத்து நின்றான். எ-று. (௩௪)

தையலா ளொருத்தி யெட்டா மலர்க்கொம்பைத் தளிர்க்கை நீட்டி
யைய நுண் மருங்கு னோவ வருந்தலு மாற்றாக் கேள்வ
னெய்யென விதுவு மென்னை யூடிய மகளி ரேயோ
கொய்யென வளைத்து நின்றான் கண்முத்தங் கொழிப்ப நின்றாள்.

(இ-ள்.) ஒருபெண் (தன்கைக்கு) எட்டாத பூங்கொம்பினை மாந்தளிர்போல மேன்மைவாய்ந்த கைகளைநீட்டி, ஐயம் விளைக்கும் நுண்ணிய இடைவருந்தத் தான் வருந்தலும், (அதுகண்டு) சற்றும்பொறாத கணவன் விரைந்துசென்று, என்ன இப்பூங்கொம்பும் கணவனோடு பிணங்கிய பெண்ணோ? (மலர்)கொய்யாயென்று அக்கொம்பினை வளைத்தான்; கண்கள் முத்தம்போல நீருகும்படி (வாடி) நின்றாள். எ-று. (௩௫)

மைக்குழ லொருத்தி காதில் வட்டப்பொன் னோலை யூடே
திக்கய மனையான் கொய்த செருந்திப்பூச் செருகி நோக்கி
யிக்குழை யழகி தென்றா னிடுமங்கைக் கிடுதி யென்னா
வக்குழை யோடும் வீசி யன்பனுக் கலக்கண் செய்தாள்.

(இ-ள்.) மேகம்போலக்கரிய கூந்தலையுடைய ஒருபெண் காதிலணிந்த வட்டவடிவாகப் பொன்னாற்செய்த தோட்டில், திக்குயானையையொத்த ஒரு ஆடவன் தான் கொய்த செருந்திப்பூவினைச்செருகிப்பார்த்து, இந்தக்குழை சீரிதாயுள்ள தென்று கூறினன்; (இக்குண்டலத்தை) என் தங்கைக்கு இடுவாய் இடுவாயென்று அக்குண்டலத்தோடும் (செருந்திப்பூவினையும்) வீசி தனது கணவனுக்குத் துன்பஞ்செய்தனள். எ-று.

தலைவன் குண்டலத்தைக் குழையெனக் கூறத்தலைவி ஆகுபெயர் முகத்தான்பெண்ணெனக்கருதி வீசினளென்க. (௩௬)

மயிலிளம் பெடையன் னாளோர் மாதர்மாங் குடம்பை செல்லுங்
குயிலிளம் பெடைதன் னாவிச் சேவலைக் கூவ நோக்கி
யயிலிளங் களிறன் னானைக் கடைக்கணித் தளியுந் தேனும்
பயிலிளஞ் சோலை யாடோர் மாதவிப் பந்தர் சேர்ந்தாள்.

(இ-ள்.) இளமை தங்கிய பெண்மயிலையொத்த ஒருபெண் மாமரத்திற்கட்டிய கூண்டில் செல்லாநிற்கும் இளமை தங்கிய பெண்குயில், தனதுயிரையொத்த சேவற்குயிலினைக்கூவ, அதனைப்பார்த்து, வேலேந்தியமுதிராதஆண்யானையொத்த தனதுகணவனுக்குக் கடைக்கண்ணாற் சமிக்கை செய்து, ஆண்வண்டும் பெண்வண்டும் (தேனுண்களித்து) உலாவும் தளிர்ந்த சோலையின் பக்கத்துள்ள ஒரு குருக்கத்திப்பந்தலிற் சேர்ந்தனள். எ-று. (௩௭)

பாசிழை யொருத்தி யாற்றுப் புலவியாள் பைந்தா ரான்முன்
பூசகில் வாசங் காலிற் போக்கியும் புனைபூண் காஞ்சி
யோசையைச் செவியி லுய்த்துங் கலவியி னுருவந் நீட்டுந்
தூசினை யுடுத்தும் போர்த்துந் தூதுவிட் டவள்போ னின்றாள்.

(இ-ள்.) பசிய ஆபரணத்தையணிந்த ஒருபெண் (கணவனுற்றவும்) தான் தணியாத ஊடலையுடையவளாகிப் பசிய மாலையையணிந்த தனது கணவன்முன் தான்பூசிய அகிற்குழம்பின் வாசத்தைக்காற்றாற் செலுத்தியும், தானிடையிற்கட்டிய காஞ்சியென்னும் ஓராபரணத்தினொலியை யவன்செவியிற்செலுத்தியும், புணர்ச்சியினுருவமெழுதிய ஆடையையுடுத்தும், போர்த்தும் (நிற்றலால்), தூதனுப்பினவள்போல் நின்றாள்.எ-று.()

வாய்ந்தநாண் மலர்கொய் தீவான் மெய்யிலம் மலர்த்தேம் தாது
சாந்தமான் மதம்போற் சிந்திக் கிடப்பவோர் தையல் யாதைத்
தோய்ந்தசார் தென்றா னுள்ளத் துன்னையுஞ் சுமந்து கொய்த
வாய்ந்தசண் பகத்தா தென்றா னெய்சொரி யழலி னின்றாள்.

(இ-ள்.) (மணம்)வாய்ந்த அன்றலர்ந்த மலர்களைக்கொய்து (தனதுமனையாளுக்குக்) கொடுக்கும் ஓராடவன் உடம்பில், (கொய்யும்)அம்மலரின் மணமிக்க மகரந்தம், சந்தனத்திற்கலந்த மிருகமதம்போலச் சிந்திக்கிடக்க, ஒப்பில்லாத அம்மாது (அதனைக் கண்டு) எம்மாது கூட்டத்தில்வந்த கலவை? என்று வினவினள். என்மனத்தில் உன்னையுஞ் சுமந்து கொய்தலால், ஆராய்ந்த சண்பகத்தின் மகரந்தமென்றுகூறினன்; (அதனைக் கேட்டு) நெய்சொரிந்து மூட்டிய நெருப்புப்போல (ஊடல் முதிர்ந்து) நின்றாள்.எ-று.()

பிணியவிழ் கோதை யாளோர் பேதைதன் பதிதன் னூட
றணியவந் தடியில் வீழத் தன்னிழ லணியான் சென்னி
மணியிடைக் கண்டு கங்கை மங்கையை யொப்பீ ரெம்மைப்
பணிவதென் னென்று நக்குப் பரிவுமேற் பரிவு செய்தாள்.

(இ-ள்.) கட்டவிழ்ந்த மலர்மாலையணிந்த ஒருபெண் தனது புலவியையாற்றத் தனது கணவன்வந்து, தன்பாதத்தில்விழ, தனது தேகநிழல் அக்கணவன் தலையிலணிந்த சூடாமணியிற் பிரதிபிம்பித்தலைக்கண்டு, கங்கையைச் சடையிற்கரந்த இறைவனையொப்பீர்! எம்மைவந்து வணங்குவது யாதுகாரணம்? என்று அசதியாடி, கணவன் கொண்ட துன்பத்தின்மேல் மற்றோர் துன்பமும் விளைத்தாள். எ-று. (௪௦)

மதுகைவா ளொருவ னங்கோர் மங்கைதன் வடிவை நோக்கி
பதுமமே யடிகை காந்தள் பயோதரங் கோங்கு காவிப்
புதுமலர் விழிவா யாம்பற் போதுநும் மூர லெப்போ
ததனைவாய் திறந்து காட்டிப் போமினென் றடுத்து நின்றான்.

(இ-ள்.) வலிய வாளினையேந்திய ஓராடவன் அவ்விடத்து எதிர்ப்பட்ட ஒரு பரத்தையின் வடிவத்தைப்பார்த்து, உமது கால்தாமரை மலரே; கொங்கை கோங்கரும்பே; கண் நீலோற்பலமலரே; வாய் ஆம்பல் மலரே; தக்தபந்தி எந்தமலர்? அம்மூரலை வாயைத்திறந்து காட்டிப் போவீரென்று சமீபித்து எதிர்நின்றனன். எ-று (௪௧)

விடைத்தனி யேறன் னானோர் விடலையோர் வேற்க ணாண்முன்
கிடைத்தநும் மிடத்தென் னெஞ்சங் கெட்டுவந் தொளித்த தல்குற்
றிடத்திடை யொளித்த தேயோ தனத்திடை யொளித்த தோபூம்
படத்தினைத் திறந்து காட்டிப் போகெனப் பற்றிச் சென்றான்.

(இ-ள்.) ஒப்பில்லாத காளையையொத்த ஒரு விடன், ஒரு வேல்போன்ற கண்களையுடைய பரத்தையின்முன் எதிர்ப்பட்டு, உம்மிடத்தில் என்னுடைய மனம் என்னினின்று நீங்கிவந்து ஒளித்தது; (அஃது) உமது அல்குலாகிய உயர்ந்த இடத்திலொளித்ததோ? கொங்கையிலொளித்ததோ? (இவற்றை மறைத்த) பொலிவமைந்த ஆடையைத் திறந்துகாட்டிப் பின்னர் போகக்கடவீரென்று (அவளைப்) பின்பற்றிப் போயினன். எ-று.

மாந்தளி ரடியார் சாய்ப்ப வளைந்தபூஞ் சினைவண் டன்னார்
கூந்தலிற் கிடந்த செம்மற் கோதைமேல் வீழ்ந்த கற்பி
னேந்திழை யவரை நீத்துப் பலர்நுகர்ந் தெச்சி லாக்கும்
பூந்தொடி யவரைத் துய்க்கும் பேதையர் போன்ற தன்றே.

(இ-ள்.) மாந்தளிர்போன்ற மெத்தென்ற பாதங்களையுடைய பெண்கள் வளைக்க, வளைந்த மலர்க்கொம்பிலுள்ள வண்டுகள் அப்பெண்களுடைய அளகத்திலிருந்த பழம்பூமாலையின்மேல் வீழ்ந்தன; (அவ்வீழ்ச்சி) கற்பினையுடைய இல்லறக்கிழத்தியைக் கைவிட்டு, பலருந்திளைத்து எச்சிலாக்கிய பொலிவினையுடைய வளையலையணிந்த விலைமாதரின்பத்தை நுகரும் அறிவீனரையொத்திருந்தது. எ-று. (௪௩)

கலிவிருத்தம்.

புல்லி மைந்தர் பொருள்கவர்ந் தாரென
வல்லி யன்ன மடந்தையர் கொய்தலி
னல்லி நாண்மல ரற்றபின் கைப்பொரு
ளில்லி யென்ன விளைத்தன காவெலாம்.

(இ-ள்.) தழுவி ஆடவர்கையிலுள்ள பொருளைக்கவர்ந்த விலைமாதனைப்போல, பூங்கொடியையொத்த பெண்கள் கொய்தலால், அகவிதழையுடைய அன்றலர்ந்த மலர்களை யொழிந்தபின் கைப்பொருள் வறந்த வறியன்போல, சோலைகளெல்லாம் வறங்கூர்ந்தன. எ-று. (௪௪)

மையுண் கண்ணியர் மைந்தரொ டம்மலர்
கொய்யுஞ் செல்வ நுகர்ந்து கொழுங்கணு
மெய்யுந் தோயிற் கொழுநரின் வேற்றுமை
செய்யும் பொய்கை திளைப்பச்சென் றாரரோ.

(இ-ள்.) மையெழுதிய கண்களையுடைய பெண்கள் புருடரோடு அம்மலர்கொய்யுஞ் செல்வத்தைப்பெரிதுந்திளைத்து,(கலத்தலால்) மதர்த்த கண்களையும் உடம்பையும் கணவனைப்போல வேறுபாடுசெய்யும் பொய்கையில் நீராட்டயரச் சென்றார்கள். எ-று.()

அன்ன மன்னவ ராடுங் கயந்தலை
நன்னர் நீல நளினங் குமுதமென்
றின்ன வன்றி யெழின்முல்லை சண்பகம்
பொன்னங் கோங்கமும் பூத்தது போன்றதே.

(இ-ள்.) அன்னத்தையொத்த நடையினையுடைய பெண்கள், நீர்விளையாட்டயரும் பொய்கையானது கட்கினிய நீலோற்பலமும், தாமரைகளும் ஆம்பலுமென்று சொல்லப்பட்ட மலர்களுமல்லாமல், பொலிவுமிக்க முல்லையையும் சண்பகத்தையும் பொன்னிறம்வாய்ந்த அழகிய கோங்கினையும் பூத்திருத்தலை யொத்தது. எ-று. (௪௬)

கலிநிலைத்துறை.

குரவ வோதியர் கயந்தலை குறுகுமுன் கயனு
மரவும் யாமையு மலவனு மன்னமு மகன்ற
பருவ ரீல்களு மிருந்தன பகைஞர்மே லிட்டு
வருவ ரேலெதிர் நிற்பரோ வலியிழந் தவரே.

(இ-ள்.) குராமலரையணிந்த கூந்தலையுடைய பெண்கள் நீர்நிலைக்குவருதற்கு முன்னே, சேற்கெண்டையும் பாம்பும் யாமையும் நண்டும் அன்னமும் அஞ்சியொளித்தன; பருத்தவரால் மீன்களும் விலகியோடின; பகைஞர்கள் மேலெழுந்து போர்க்கு வருவார்களானால் வன்மையில்லாதவர்கள் போர்முனையினெதிரே நிற்பார்களோ? (நில்லார்கள்). எ-று. (௪௭)

பண்ணெ னுஞ்சொலார் குடைதொறும் பன்மலர் வீழ்ந்த
தண்ணெ னுந்திரை யலைதொறு நிரைநிரை தாக்கல்
கண்ணு நீலமு முகங்களுங் கமலமும் வாயும்
வண்ண வாம்பலுந் தத்தமின் மலைவன வனைய.

(இ-ள்.) இசையென்று சொல்லுஞ்சொற்களையுடைய பெண்கள் மூழ்குந்தோறும் நீலோற்பலமுதலிய மலர்கள் (மேலெழுந்து) வீழும் தண்ணிய அலைகள் அலைக்குந்தோறும் வரிசை வரிசையாக அவயவங்கள்தோறும் மோதுதல், கண்களும் நீலோற்பலமலர்களும் முகங்களுந் தாமரைகளும் வாய்களுஞ்செந்நிறம்வாய்ந்த ஆம்பல்களுந் தங்கங்களுக்குள்ளே போர்செய்தலையொத்திருந்தன. எ-று. (௪௮)

கூழை பாசியின் விரிந்திட மகிழ்ந்துநீர் குடையு
மாழை யுண்கணார் கொங்கையு முகங்களு மருங்கர்
சூழ ரும்பொடு மலர்ந்தசெந் தாமரைத் தொகுதி
யாழ்த ரங்கநீ ரிடைக்கிடந் தலைவன வனைய.

(இ-ள்.) கூந்தலானது பாசித்தொத்தைப்போலப் பரந்து தோன்ற, மனமகிழ்ந்து நீராடும் மாவடுவின் பிளவை வென்ற கண்களையுடைய பெண்களின் தனங்களும் முகங்களுமசைதல், அவர்கள் பக்கலிற் சூழ்ந்த மொட்டுகளொடு மலர்ந்த செந்தாமரைகளின் கூட்டம் ஆழ்ந்த அலைகளையுடைய நீரில்கிடந்து அசைதலையொத்திருந்தன. எ-று.

தூய நீர்குடைந் தேறுந்தன் றுணைவியைத் துணைவன்
வாயும் கண்களும் வேறுற்ற வண்ணங்கண் டென்க
ணேய வின்னுயி ரனையவ ளெங்குளா ளென்றான்
காயும் வேற்கணாள் முலைகுளிப் பாட்டினாள் கண்ணீர்.

(இ-ள்.) புனிதமாகிய நீரில்மூழ்கிக் கரையேறுந் தனது மனைவியை நாயகன் அவள் வாயுங்கண்களும் வேற்றுநிறமடைந்த வகையைக்கண்டு, என்னிடத்துப்பொருந்திய இனியவுயிர்போன்ற என்மனைவி எவ்விடத்துள்ளாளோ? என்று வினவினான் கொல்லும் வேல்போன்ற கண்களையுடைய அப்பெண் தனது கண்ணீரால் தனங்களைக் குளிப்பாட்டினாள். எ-று. (௫௦)

மங்கை நல்லவ ளொருத்திநீ ராடுவான் மகிழ்ந
னங்கை பற்றின ளேகுவா ளவன்குடைந் தேறும்
பங்க யக்கண ளொருத் தியைப் பார்த்தனன் சீசீ
யெங்கை யெச்சினீ ராடலே னெனக்கரை நின்றாள்.

(இ-ள்.) மங்கைப் பருவத்தையுடைய ஒருபெண் நீராடத் தன்கணவனுடைய அங்கையைப்பற்றிச் செல்லுகின்றவள், அந் நீர்நிலையில் மூழ்கிக்கரையேறுந் தாமரை

மலர்போலுங் கண்களையுடைய ஒருமாது தன் எதிர்ப்படாநிற்கப் பார்க்கவும், இந்நீர் என் தங்கை எச்சில்செய்தநீர் (இதில்) நீராடேனென்று கரையிலேயே (நீரிலிறங்காது) நின்றனள். எ-று. (ருக)

வினைந்த பைங்கழ லான்புன லாடலின் மார்பி
னனைந்த குங்குமத் தலையெறி நளினமொட் டழுந்தப்
புனைந்த கொங்கையால் வடுப்படப் பொறித்தவள் யாரென்
றினைந்த ழுங்கினு ணெய்சொரி யெரியென வொருத்தி.

(இ-ள்.) கட்டிய பசிய வீரகண்டையையுடைய தனது கணவன் நீராடுதலால் மார்பில் நனைந்த குங்குமச்சேற்றில் அலைகள்வீசுந் தாமரையினரும்புகளழுந்த, முத்தார மணிந்த தனது தனத்தால் காயம்படச் சுவடுசெய்த காமக்கிழத்தியெவள்? என்று ஒரு மாது நெய்சொரிந்த தீப்போல (கோபித்து) நொந்து வருந்தினாள். எ-று. (ருஉ)

வீழ்ந்த காதலன் செய்ததீங் காகிய வேலாற்
போழ்ந்த நெஞ்சினள் புலவிநோய் பொறுளவன் காண
வாழ்ந்த நீரிடை யழுந்துவாள் போன்றயர்ந் தயலே
தாழ்ந்த வன்னத்தை நோக்கிக்கை தாவென விரந்தாள்.

(இ-ள்.) தன்னால் விரும்பப்பட்ட தலைவன் தனக்குச்செய்த தவறாகிய வேலி னாற் பிளக்கப்பட்ட மனமுடையவள் ஊடல்நோய் சகியாதவளாகி, அத்தலைவன் காண ஆழ்ந்தநீரில் அழுந்துபவள்போலக் காட்டிச், சோர்ந்து அருகில் தாமரைமலரில் தங்கிய அன்னத்தைப்பார்த்து, கை தா என்று குறையிரந்தாள். எ-று. (ருந)

கரும்பு போன்மொழி யாளொரு காரிகை வதனஞ்
சுரும்பு சூழ்கம லங்களுட் கமலமாய்த் தோன்ற
விரும்பு காதல னையுற்று மெலிந்தனன் மெல்ல
வரும்பு முல்லைகண் டையத்தி னீங்கிச்சென் றணைந்தான்.

(இ-ள்.) கரும்பின் இரசம்போலச் சொற்களையுடைய ஒருமாதினுடையமுகம் வண்டுகள் சூழ்ந்த தாமரைக்கூட்டத்துள் தானும் ஒரு தாமரைமலராய்ப் புலப்பட, (அவளால்) விரும்பப்பட்ட கணவன் தனது மனைவியின் முகமோ தாமரைமலரோ என்று சந்தேகித்து வாடினன்; (அதுநோக்கி) அவள்மெல்லமுகிழ்ந்த புன்கையைநோக்கி, ஐயத் தினின்று நீங்கிப்போய்த் தனது மனைவியைக் கலந்தனன். எ-று. (ருச)

களித்த காதலன் மொக்குள்வாய்த் தன்னிழல் கண்டு
தெளித்து வாணகை செய்யமாற் றுளென்று சீறித்
தளிர்க்கை நீட்டினள் கண்டில டடவினள் சலத்து
ளொளித்தி யோவென வுதைத்தனள் பேதைமா தொருத்தி.

(இ-ள்.) தன்னால் விரும்பப்பட்ட தலைவன் நீர்க்குமிழியில் தனது நிழல் பிரதி பிம்பித்தலைப்பார்த்து, தனது மனைவியின் பிரதிபிம்பமெனத்தெளிந்து (அன்பு மிகையால்) ஒள்ளியபுன்னகையரும்ப (இங்குத்தோன்றுமிவள்) தன்னுடைய மாற்றாளென்று (அந்நிழலைக்)கோபித்து, தளிர்போன்ற மெத்தென்ற கைகள்நீட்டிக் காணாது தடவிப்பார்த்து நீருள் ஒளித்தாயோ? என்று ஒரு பேதைப்பெண் உதைத்தாள். எ-று. (ருரு)

நாறு சுண்ணமென் கலவையு நானமுந் தம்மின்
மாறி வீசிநின் றுடுவர் மாலைதா முகலத்
தூறு பாடற வந்தரத் தளிக்வர்ந் துன்ப
வாறு செல்பவர் பொருள்வெளவு மரட்டரே போல.

(இ-ள்.) நறுமணங்கமழுஞ் சுண்ணப்பொடியையும் மெல்லிய கூட்டுவர்க்கத்தையும் மிருகமதத்தையும் தம்முள் மாறிமாறி (ஒருவர்மேலொருவர்) வீசிவிளையாடும் ஆடவர்மகளிருடைய மலர்மாலைதாழ்ந்தசையுமார்பில் தமக்கோர் கவலையில்லாமல், (அவருக்கிடையே) மேலேநின்று வண்டுகள் கொள்ளைகொண்டுண்ணுதல் வழியிற்செல்வோர் பொருளைக் கொள்ளையாடுங் குறுநிலமன்னர் தொழிலையே ஒத்திருந்தன. எ-று. (௩௬)

கொய்யு நீலமுங் கமலமுங் கொண்டுகொண் டனங்க
னெய்யும் வாளியி னெறிவரா லெறிந்திடு மலரைக்
கையி னாற்புடைத் தெறிந்தவர் கதிர்முகம் படக்கண்
டைது வாணகைச் செய்தக மகிழ்ச்சியு ளாழ்வார்.

(இ-ள்.) தாங்கொய்த நீலோற்பலத்தையுந் தாமரையையுங் கைக்கொண்டு, மன்மதன் எய்யுமம்பைப்போல (ஆடவரும் மகளிரும்) எறியாநிற்பர்; தம்மேலெறியும் மலரிணைக்கைகளால் (தகைந்து) தாக்கித், தம்மேலெறிந்தோர் முகத்திற்படப்பார்த்து, அழகியதாகப் புன்னகையரும்பிமனத்திற் (பொங்கியெழுந்த) மகிழ்ச்சி(யாகிய ஜலநிதி)யில் அழுந்துவார்கள். எ-று. (௩௭)

வாச மென்பனி நீரொடு சுண்ணமும் வாரி
வீசு வாரிளம் பிடியொடு வேழமா நிரைபோற்
காசு லாந்தொடி வில்விடக் கைகளா லள்ளிப்
பூசு சாந்தவை யழிந்திடப் புனிதநீ ரிறைப்பார்.

(இ-ள்.) வாசமிக்கமெல்லிய பனிநீரோடு சுண்ணப்பொடிகளையும் இளமைதங்கிய பெண்யானையோடு ஆண்யானையின்கூட்டங்கள் (நீரள்ளிவீசிவிளையாடல்) போல, (அவற்றை) அள்ளிவாரி (ஆடவரும்மகளிரும்) ஒருவர்மேலொருவர் வீசுவார்கள்; பதுமராகமிழைத்த வளையல் ஒளிவீசத்தமது கைகளால் தூயநீரினையள்ளி ஆடவர்மார்பிற்பூசிய சந்தனக்குழம்பு அழிய வீசுவார்கள். எ-று. (௩௮)

அப்பெ ரும்புனற் றடங்குடைந் தாடுவா ராயத்
தொப்ப ருந்தனி யொருமக ளொருவன்றன் முகத்துத்
துப்பை வென்றசெந் துவரிதழ்ச் செய்யவாய்த் தூநீர்
கொப்ப ளித்தன ளாம்பலந் தேனெனக் குடித்தான்.

(இ-ள்.) அந்தப் பெரிய நீர்மயமாகிய பொய்கையில் மூழ்கிநீர்விளையாட்டயரும் பெண்கள் கூட்டத்தில், தன்னழகிற்கு இணையில்லாத ஒருமாது ஒருஆடவன் முகத்தில், பவளத்தை வென்ற செந்நிறம் வாய்ந்த இதழையுடைய செவந்த தனது வாயினால் புனிதமாகிய நீர்கொப்பளித்துமிழ்ந்தாள்; ஆம்பல் மலரிலுள்ள தேன் இது வென்று பருகினன். எ-று. (௩௯)

ஆழ மவ்விடைச் செல்லலை நில்லென வடுத்தோர்
வேழ மன்னவன் விலக்குவான் போலொரு வேற்க
ணேழை தன்னைக்கை யால்வளைத் தேந்திவண் டறைதார்
சூழு மார்பணைத் திரதிதோ டோய்ந்தவ னொத்தான்.

(இ-ள்.) (இறங்கும்) அந்நீர்நிலைஆழமுள்ளது: அங்குச்செலற்க: நில்லாயென்று யானையொத்த ஓர் ஆடவனடுத்து விலக்குவானைப்போல வேல்போன்ற வேலையுடைய ஒருபெண்ணைக்கையால்வளைத்தேந்தி, வண்டுகளொலிக்கும் மாலைசூழ்ந்த தனதுமார்பிலணைத்து, இரதியைக்கலந்த மன்மதனையொத்தனன். எ-று. (௫௦)

மாசி ளனமுஞ் சூடிய மாலையு மெய்யிற்
பூசு சாந்தமு மாரமும் பொய்கைக்குக் கொடுத்து
வாச மெய்யினி லம்புய வாசமு மயங்க
வாஞ்சை மைந்தரோ டிளையவ ரகன்கரை யடைவார்.

(இ-ள்.) குற்றமில்லாத மிருகமதத்தையும் சூடியமலர்மாலையையுந்தமது உடம்பிற்பூசிய சந்தனக்குழம்பையும் மார்பிலணிந்த தொய்யில் முதலியவற்றையும் நீர்நிலைக்குத்தந்து, வாசமிக்க தமது சரீரத்தில் ஆம்பல்முதலிய மலரின்வாசமுமன்றித் தாமரை மலரின் மணமும் விரவிமயங்க, காதலால் மிக்கதமது கணவர்களோடு இடமகன்ற அப்பொய்கையின் கரையை அடைந்தார்கள். எ-று. (௬௧)

தைய லார்சிலர் நனைந்தநுண் டானையுட் பொதிந்த
மெய்யெ லாம்வெளிப் படக்கரை யேறுவான் வெள்கி
யைய தாபொலந் துகிலென வன்பரைக் கூய்க்கண்
செய்ய மாயனைக் கேட்குமாச் சிறுமிய ரொத்தார்.

(இ-ள்.) பெண்களுட்சிலர் நனைந்தநுண்ணிய ஆடையால் மறைபட்ட தமது சரீரத்தின் உறுப்புகள் முற்றும் புலப்படுதலால் கரையேற நாணங்கூர்ந்து, ஐயனே! பீதாம்பரமொன்றுதரக்கடவாயென்று தத்தங்கணவரையழைத்து, (தமது துகிலை வாரியொளித்த)செவந்தகண்களையுடைய கண்ணமூர்த்தியை (நோக்கித்துகில்கொடுவென்று) குறையிரக்கும் ஆய்ச்சியரை ஒத்தார்கள். எ-று. (௬௨)

உலத்தை வென்றதோ ளாடவ ருச்சிமேற் பொறித்த
வலத்த கத்தொடு குங்கும மளைந்துசெம் புனலாய்
மலர்த்த டங்குடைந் தவர்க்குநீ ராசன வட்டக்
கலத்தை யொத்தன சுற்றநின் றுரொத்த கடிக்கா.

(இ-ள்.) திரண்டகல்லையொத்த தோளையுடைய புருடருச்சியின்மேல் (பாததாடனத்தால்) தீட்டிய செம்பஞ்சுக்குழம்போடு குங்குமச்சேற்றையும் மலர்ப்பொய்கைகள் கலந்து செவந்தநீராய், நீராடிக்கரையேறிய (ஆடவர்மகளிர்களுக்குக் கண்ணெச்சில் போக்க அமைத்த) நீராஞ்சனமாகிய வட்டவடிவாயுள்ள தட்டினையொத்திருந்தன; அப்பொய்கைகளைச் சூழ்ந்த வாசமிக்க சோலைகள் (நீராஞ்சன) மெடுக்கநின்ற மகளிர்களையொத்திருந்தன. எ-று. (௬௩)

பட்டும் பன்னிறக் கலிங்கமும் பன்மணிக் கலனுங்
கொட்டுஞ் சாந்தமு நானமுங் குங்குமச் சேறுங்
கட்டுந் தாமமுந் தமதுகட் டழகெலாங் கவர
மட்டுண் கோதைய ராடவர் மனமெலாங் கவர்ந்தார்.

(இ-ள்.) பட்டாடைகளும் பலநிறம்வாய்ந்த பருத்தியாடைகளும் பல இரத்தினமிழைத்த்திய ஆபரணங்களும் (பனிநீர்) கலந்த சந்தனக்குழம்பும் மிருகமதமும் குங்குமக்குழம்பும் மலராற்றொடுத்தமாலையுந் தமது பேரழகெல்லாங்கொள்ளைகொள்ள, வாசமிக்கமாலையணிந்த பெண்கள் தத்தங்கேள்வரது மனங்களையெல்லாம் கொள்ளைகொண்டார்கள். எ-று. (௬௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காவியுங் கமலப் போதுங் கள்ளொழு காம்பற் போது
மாவியுட் பூத்த போல வாடியுட் பூப்ப நோக்கி
யேவிரண் டன்ன கண்ணா லனங்கனை யேவல் கொள்ளும்
பூவிரி பொலங்கொம் பன்னார் புதுமது நுகரப் புக்கார்.

(இ-ள்.) நீலோற்பலமலரும் தாமரைமலரும் தேன்சிந்தும் ஆம்பல்மலரும்தடாகத்திற்பூத்தனபோலக் கண்ணாடியுள்மலரத் தமதுருவைப்பார்த்து, இரண்டு பாணங்களையொத்த கண்களால் மன்மதனை யேவல்கொள்ளும் மலர்விரிந்த கொம்புபோன்ற பெண்கள் புத்தம்புதிய கள்ளைப் பருகப்புகுந்தார்கள். எ-று. (௬௫)

பொன்னினும் வெள்ளி யாலும் பளிங்கினும் புலவன் செய்த,
நன்னிறக் கலத்திற் கூர்வா ணட்டென வாக்கிச் சேடி,
மின்னனா ளளித்த தேறற் சிறுதுளி விரலிற் றெள்ளித்
துன்னுறிவீழ் களிவண் டோச்சித் தொண்டையங் கனிவாய் வைப்பார்.

(இ-ள்.) பொன்னினாலும் வெள்ளியினாலும் பளிங்கினாலுஞ் சிற்பநூலில் வல்லோன் செய்த நல்லநிறம்வாய்ந்த கிண்ணத்தில் கூரியவாளை நட்டாற்போல வார்த்து தோழியராகிய மின்னல்போன்ற பெண்கள்கொடுத்த மதுவில் சிறுதுளியை விரலினால் தொட்டுத்தெறித்து நெருங்கிவீழு மதுமயக்கினையுடையவண்டுகளையோட்டி, கொவ்வைக்கனிபோன்ற வாயில் அக்கிண்ணத்தைவைப்பார்கள் (பருகுவார்என்றபடி).எ-று.(௬௬)

வள்ளத்து வாள்போல் வாக்கு மதுக்குடந் தன்பாற் பெய்த
கொள்ளைத்தெண் மதுவைக் கொள்ளை கொளவந்த வள்ள மீதென்
றுள்ளத்து வெகுண்டு வவா ளூன்றிமார் பிடப்ப தொத்த
கள்ளைச்சூழ் காளைவண்டு செருச்செயல் காண்ப வொத்த.

(இ-ள்.) கிண்ணத்தில் வாள்நட்டதுபோல் வாக்காநின்ற கட்குடமானது தன்னிடத்திற்கொண்ட மிக்கதெளிந்த கள்ளினைச்சூறையாடவந்த கிண்ணமிதுவென்று தனது மனதிற்கோபங்கூர்ந்து கூரியவாளையூன்றி வள்ளத்தின் மார்பினைப்பிளத்தல் ஒத்தன; கள்ளினைவிடாதுசூழ்ந்த இளமைப்பருவமுடைய வண்டுகள் போர்த்தொழிலைக் காண்போரை ஒத்திருந்தன. எ-று. (௬௭)

தணியவுண் டுள்ளஞ் சோரு மொருமக ளணிய லுண்பான்
பிணியவிழ் கோதை யாளோர் பெண்மகள் கலத்தில் வாக்குந்
துணிமதுத் தாரை தன்னை வாளெனத் துணிந்து பேதாய்
திணிகதிர் வாளால் வள்ளஞ் சிதைத்தியோ வென்று நக்காள்.

(இ-ள்.) கள்ளுண்டு மனஞ்சோரும் ஒருபெண் அம்மதுவையுண்ண, கட்டவிழ்ந்த மலர்மாலையணிந்த ஒருபெண் வள்ளத்தில்துண்டுபோல்வாக்கும் மதுதாரையை இது வாளென்று மயக்கால்துணிந்து, அறிவில்லாதவளே! திண்ணியகிரணமிக்க வாளினாலிக் கிண்ணத்தை அழிக்கின்றாயோ? என்று சிரித்தாள். எ-று. (௬௮)

மலர்தொறுஞ் சிறுதே னக்கித் திரிவண்டு மடவார் தங்கைத்
தலனெடுத் தோச்ச வோடா தழீஇத்தடஞ் சாடி மொய்ப்ப
விலமெனப் பல்லோர் மாட்டு மிரந்திரந் தின்மை நீங்கா
தலமரும் வறியோர் வைத்த நிதிகண்டா லகல்வ ரேயோ.

(இ-ள்.) மலர்கள்தோறுஞ் சிறியமதுத்துளியைநக்கி வயிறாராது சுழன்றலைகின்ற வண்டுகள், பெண்கள் (மதுவள்ளத்தில் மொய்த்தலால்) தமதுகையை மேலெடுத்து ஓட்ட ஓடாதனவாய்த் தழுவிப் பெரியமதுச்சாடிகளில் மொய்க்கின்றன; நாம்வறியோமென்று பலரிடத்துஞ் சென்றிரந்தும் வறுமைநீங்காது சுழன்றுதிரியும் வறியவர்கள் சேமஞ்செய்து வைத்தநிதி தமது எதிர்ப்புலப்பட்டால் அதனை நீங்குவரோ (நீங்கார்). எ-று.

உண்டவ ளொருத்தி கள்வா யுதிக்குந்தன் முகமுங் கண்ணுங்
கண்டுதா மரைகள் வேலை முளைத்தகக் கள்ளை யார

மொண்டிணைப் பேதைத் தும்பி யம்மது முளரி வார்தே
னுண்டுளி செறிவ தென்னா நொடித்துக்கை புடைத்து நக்காள்.

(இ-ள்.) மதுவைப்பருகிய ஒருபெண் மதுவிற்பிரதிபிம்பித்த தனது முகத்தையுங்கண்களையும்பார்த்து, தாமரையானது மதுக்கடலில் முளைத்தது; அக்கள்ளைவயிறாரமொண்டு உண்ணாதமடமையையுடையவண்டுகள் அம்மதுக்கடலிற்றோன்றிய தாமரையொழுக்குஞ் சிறியதேன் துளியில் மொய்க்கின்றதென்று கூறிக்கைகொட்டிச் சிரித்தனள். எ-று. (௭௰)

மங்கையா ளொருத்தி தானுண் டெஞ்சிய மதுவுட் டோன்றுந்
திங்களை நோக்கி யென்னைப் பிரிவின்கட் டீயாய்ச் சுட்டா
யிங்குவந் தகப்பட் டாயே யினிவிடேன் கிடத்தி யென்னா
வங்கொரு வள்ளங் கொண்டு சேமித்தா ளருந்தல் செய்யாள்.

(இ-ள்.) ஒருமங்கைப்பருவத்தையுடையபெண் தானுண்டு சேடமானமதுவில் பிரதிபிம்பித்த சந்திரனைப்பார்த்து, (தலைவனைப்)பிரிந்துநின்றகாலையில் என்னைத்தீவடிவமாய் நின்றுசுட்டனை: இந்தமதுக்கிண்ணத்தில்வந்து அகப்பட்டாய்; இனியுன்னை வெளியில்விடேன் (இங்கேசிறைபட்டுக்)கிடப்பாயென்று, அவ்விடத்தில் மற்றொருகிண்ணங்கொண்டுமூடி, அம்மதுவைப் பருகாள். எ-று. (௭௧)

வெவ்விய நறவ முண்ட விளங்கிழை யொருத்தி கையிற்
கௌவிய வாடி தன்னிற் கருங்கய னெடுங்கட் சேப்புங்
கொவ்வைவாய் விளர்ப்பு நோக்கி யென்னலங் கூட்டுண் டேகு
மௌவிய மனத்தான் யாரென் றயர்கின்றா ளயலா ரெள்ள.

(இ-ள்.) கொடிய மதுவுண்ட விளங்குமாபரணத்தையணிந்த ஒருபெண்தன் கையிலேந்திய கண்ணாடியில் கரியகயல்போன்ற நெடியகண்களிற்பரந்த செந்நிறத்தையும் கொவ்வைக்கனிபோன்ற வாயின் நிறந்திரிந்தவெண்ணிறத்தையும்பார்த்து; என்பாலின்பத்தைக்கொள்ளைகொண்டு போன வஞ்சமனத்தையுடைய ஆடவன் எவன்? என்று அருகிலுள்ள பெண்கள் இகழச்சோர்வாளாயினாள். எ-று. (௭௨)

ஒருத்திகள் ளுண்கின் றாடன் னுருவமந் நறவுட் டோன்ற
வொருத்தியென் னுடன்வந் துண்பாள் காணென வுண்ட தோழி
யொருத்திவந் தென்செய் வாடன் னுருவமு நோக்கிப் பேதா
யொருத்தியோ விருவ ரென்றா ளெச்சிலென் றுகுத்து நக்காள்.

(இ-ள்.) மதுவுண்ணுமொருபெண் தனதுவடிவம் அம்மதுவிற்பிரதிபலிக்க அதனைநோக்கி, ஒருபெண் என்னோடுவந்து அவளும் மதுவுண்கின்றாள்; பாராயென்று கூற, யாது செய்வாள்தனது உருவமும் அம்மதுவிற்பிரதிபலித்தலைப்பார்த்து, அறிவில்லாதவளே! (உன்னோடுண்பவள்) ஒருத்தியா? இரண்டுபேரென்று சொன்னாள்; இது எச்சிற்பட்டதென்று அக்கள்ளைக்கொட்டி வாளாநின்றனள். எ-று. (௭௩)

சாடியு ணறவ முண்டா டன்னுரு வேறு பாட்டை
யாடியு ணோக்கி நானோ வல்லனோ வெனைத்தான் கைக்கொண்
டோடினர் பிறரு முண்டோ வுயிரன்னான் வந்திங் கென்னைத்
தேடினென் செய்கே னென்னைத் தேடித்தா சேடி யென்றாள்.

(இ-ள்.) சாடியில் நிறைந்த கள்ளினையுண்பவள் தனதுவடிவம் (அம்மதுவால்) வேறுபட்டிருத்தலைக் கண்ணாடியிற்பார்த்து, நான்தானோ வேறுமாதோ? என்னைக்கைப்பற்றியோடியொளித்தவர்பிறருமுளரோ? உயிரையொத்தகேள்வன்வந்து,இவ்விடத்தில்

என்னைத்தேடில் நான் என்னசெய்வேன்தோழியே !என்னைத்தேடிக்கொடு என்றுகுறையிரந்தனள். எ-று. (எச)

களித்தவ ளொருத்தி நின்ற வாடியுட் கணவன் றன்பி
ளெளித்தவ னுருவுந் தானு நேர்பட வுருத்து நோக்கித்
துளித்தகண் ணீர ளாகி யேதிலா டோடோய்ந் தின்பங்
குளித்தனை யிருத்தி யோவென் றுதைத்தனள் கோப மூண்டாள்.

(இ-ள்.) கள்ளுண்டுகளித்த ஒருபெண் நிலைக்கண்ணாடியில் தன்பின்னொளித்து நின்ற கேள்வன்வடிவமுந் தனதுவடிவமும் அக்கண்ணாடியுட் பிரதிபலிக்கக்கோபித்துப் பார்த்து, சிந்திய கண்ணீருடையவளாகி, அயலாள்தோளைப் புணர்ந்து, இன்பத்தில் மூழ்கியிருக்கின்றாயோவென்று உதைத்துச் சினத்தில் முதிர்ந்தாள். எ-று. (எடு)

இளம்புளிந் தயிர்வி ராய வின்சுவை பொதிந்த சோறு
வளம்பட விருந்தி னோடு மருந்துவார் வசந்த வீணை
கிளம்படு மெழால் வி னோடு கைவிர னடத்திக் காம
னுளம்புகுந் தலைப்ப வெண்ணெய்ப் பாவைபோ லுருகிச் சோர்வார்.

(இ-ள்.) இளம் புளிச்சுவை வாய்ந்த தயிர்கலந்த இனிய சுவைபொதிந்தசோற்றினைக்குறைவின்றி வந்த விருந்தினோடும் உண்பார்கள்; வேனிற்காலத்திற்குரிய இசைவாய்ந்த வீணையில் கண்டத்தெழுந்த இசையோடு கையிலுள்ள விரல்களாற் நடவி இசையெழுப்பி, மன்மதன் மனத்திற் குடிகொண்டுவருத்த வெண்ணெயாற்செய்த பதுமைபோல மனமிளகிச் சோர்வார்கள். எ-று. (எசு)

இவ்விள வேனிற்காலத் தின்னுயிர்த் துணைவி யோடும்
செவ்விய செங்கோ னேமிச் செண்பக மாற னோர்நாள்
கௌவினை வல்லோன் செய்த கதிர்விடு காந்தக் குன்றி
வெவ்விய வேடை நீப்பா னிருந்தனன் வேறு வைகி.

(இ-ள்.) இந்த இளவேனிற் காலத்தில் தனது இனிய உயிர்போன்ற தேவியோடுங் கோடாத செங்கோலையு மாக்கினை சக்கரத்தையுமுடைய சண்பகபாண்டியன் கைத்தொழிலில்வல்லசிற்பநூற்புலவன் செய்த ஒளிவீசுஞ் சந்திரகாந்தக்கல்லாற்செய்த செய்குன்றத்தின்மேல் ஒருதினம், கொடியவேனில் வெப்பினையாற்ற அவ்விளஞ்சோலையில் வேறோரிடத்தில் தங்கியிருந்தனன். எ-று. (எஎ)

மாந்தளி ரீன்று கோங்கு வண்டள வரும்பித் தண்டேங்
காந்தள்செங் கமல மால்பல் சண்பகங் கழுநீர் பூத்துச்
சாய்ந்தமென் கொடியுந் தானுந் தனியிடத் திருப்பா னேரே
யாய்ந்ததோர் நாற்றந் தோன்ற வசைந்தது வசந்தத் தென்றல்.

(இ-ள்.) மாந்தளிர்தளிர்த்துக் கோங்கரும்பும் வளவிய முல்லையரும்பும் அரும்பி, தண்ணிய வாசமிக்க காந்தண்மலரும் செந்தாமரைமலரும் ஆம்பல்மலரும் சண்பகமலரும் நீலோற்பலமலரும்பூத்து, (பார்த்தால்) ஒசிந்த மெல்லியபூங்கொடியாகிய தனது மனைவியுந் தானுந்தனியிடத்திருக்குஞ் சண்பகபாண்டியனெதிரே நறுமணங்களுள்மேம்பட்ட ஒருநறுமணந்தோன்ற வசந்தகாலத்திற்குரியதென்றற்காற்று மெல்லெனவந்தது.

வெவ்விய வேலான் வீசும் வாசமோர் தீது வேறு
திவ்விய வாச மாக விருந்தது தென்றல் காவில்
வெளவிய வாச மன்று காலுக்கும் வாச மில்லை
யெவ்வியல் வாச மேயோ விதுவென வெண்ணங் கொள்வான்.

(இ-ள்.) கொடிய வேலேந்திய சண்பகபாண்டியன் அன்றுவீசிய நறுமணத்தை யாராய்ந்து இந்தநறுமணம் வேறேதெய்வத்தன்மையையுடையவாசமாக இருந்தது. தென்றற் காற்றுசோலையில் கவர்ந்துவந்தவாசமும் அன்று;இயல்பாகவே அக்காற்றுக்கு மணமுமில்லை; இந்தமணம் எதனியற்கை வாசமோவென்று ஆராய்வானாயினன். எ-று. ()

திரும்பித்தன் றேவி தன்னை நோக்கினான் றேவி யைம்பா
விரும்பித்தை வாச மாகி யிருந்தது கண்டிவ் வாசஞ்
சுரும்பிற்குந் தெரியா தென்னாச் சூழ்ந்திறும் பூது கொண்டீ
தரும்பித்தைக் கியல்போ செய்கை யோவென வையங் கொண்டான்.

(இ-ள்.) திரும்பித்தனது தேவியைப்பார்த்தனன்; அத்தேவியின் ஐந்துபகுப்பாயுள்ள பெரிய கூந்தலின்வாசமாயிருத்தலைக்கண்டு இந்தமணம் வண்டிறகுந்தெரியாதென்று ஆலோசித்து வியந்து இம்மணம் அரியகூந்தலுக்கு இயற்கையோ செயற்கையோ? என்று சந்தேகித்தனன். எ-று.

ஐம்பால்-ஐந்துவகையாக முடிக்குமியல்புடையது. அவை, மயிரை யுச்சியின் முடித்தலாகிய முடியும், பக்கலின் முடித்தலாகிய கொண்டையும், பின்னேசெருகலாகிய சுருளும், சுருட்டிமுடித்தலாகிய குழலும், பின்னிவிடுதலாகிய பனிச்சையுமாம். (அo)

ஐயுறு கருத்தை யாவ ராயினு மறிந்து பாடல்
செய்யுந ரவர்க்கே யின்ன வாயிரஞ் செம்பொ னென்றக்
கையுறை வேலா னீந்த பொற்கிழி கைக்கொண் டேகி
மெய்யுணர் புலவர் முன்னாத் தூக்கினார் வினைசெய் மாக்கள்.

(இ-ள்.) யான்ஐயங்கொண்ட இந்தக்கருத்தினை எவராயினும் உணர்ந்துபாடல் செய்வோர்களுக்கே இந்த ஆயிரஞ்செம்பொன்முடிப்பென்று, அந்தக்கையில் வேலையேந்திய சண்பகபாண்டியன் கொடுத்தபொற்கிழியை அரசன்வினைசெய்யும் மாக்கள்கொண்டுசென்று உண்மைப்பொருளை யுணர்ந்த சங்கப்புலவர்கள்முன் சங்கமண்டபத்திற் கட்டித் தூக்கினார்கள். எ-று. (அக)

வங்கத்தார் பொருள்போல் வேறு வகையமை கேள்வி நோக்கிச்
சங்கத்தா ரெல்லாந் தம்மிற் றனித்தனி தேர்ந்து தேர்ந்து
துங்கத்தார் வேம்ப னுள்ளஞ் சூழ்பொரு டுழாவி யுற்ற
பங்கத்தா ராகி யெய்த்துப் படருறு மனத்த ரானார்.

(இ-ள்.) மரக்கலத்தில் நிறையப்பெய்த பலவேறுவகைப் பொருள்கள்போல வெவ்வேறுவகைப்பட அமைந்த நூற்கேள்விகளாற் சோதனஞ்செய்து, சங்கப்புலவர்களெல்லாம் தம்முள் தனித்தனியாராய்ந்து உயர்ந்த வேப்பமலர்மாலையணிந்த சண்பகபாண்டியனது மனங்கருதிய மறைபொருளைத் தமதுஅறிவாற்கையாடி, உள்ளதைத்தெளிந்து கூறுதகுறையுடையவராயினைத்துத் துன்பமிக்க கருத்தினராயினார்கள். எ-று. ()

கலிவிருத்தம்.

அந்த வேலைபி லாதி சைவரில்
வந்த மாணவன் மணஞ்செய் வேட்கையான்
முந்தை யாச்சிம முயலும் பெற்றியான்
றந்தை தாயிலான் றருமி யென்றுளான்.

(இ-ள்.) அந்தக்காலத்தில், ஆதிசைவர்மரபில்வந்த ஒருபிரமசாரி கலியாணமுடிக்கும் விருப்புடையவனாகி, (நாற்குநிலையுள்) முற்பட்ட பிரமசரியநிலையுள் முயலுந்தன்மையுடையவன்; தந்தைதாயாரில்லாதவன்; தருமியென்றொருவனுள்ளான். எ-று. ()

ஒருவ னுன்முகத் தொருவன் மார்புறை
திருவ னுடருந் தேவ னுலுரு
வருவ நாலகன் றனைத் தன்கலி
வெருவ நாடிமுன் வீழ்ந்து வேண்டுவான்.

(இ-ள்.) ஏகனும், நான்குமுகங்களையுடைய பிரமனும் தனதுமார்பில் இலக்குமியையுடைய திருமாலும் அன்னமும் வராகமுமாய் அடிமுடிகண்டற்கரிய தேவனும், உருவநான்கினும் அருவநான்கினும் (அருவுருவொன்றினும்) நின்றுநீங்கிய சுத்தசிவமாகிய சோமசுந்தரக்கடவுளைத் தனதுவறுமையஞ்சியோட ஒரு பற்றுக்கோடாகக்கருதி நாடித்திருமுன் தண்டாகாரமாகவீழ்ந்து குறையிரப்பானாயினன். எ-று. (அ௪)

தந்தை தாயிலேன் றனிய னாகிய
மைந்த னேன்புது வதுவை வேட்கையேன்
சிந்தை நோய்செயுஞ் செல்ல றீர்ப்பதற்
கெந்தை யேயிது பதமென் றேத்தியே.

(இ-ள்.) என்றந்தையே! தந்தைதாய்களையிழந்து ஒருபற்றுக்கோடில்லாது நிற்கின்ற சிறியனாகிய யான் புதிய கலியாணமுடித்தலில் விருப்பமுடையவனாயிருக்கின்றேன்; (முடித்தற்குப்பொருளின்மையால்) மனத்தைவருத்தும் வறுமையையொழித்தற்கு இதுதான் சமையமென்றுவணங்கி. எ-று. (அ௫)

நெடிய வேதநூ னிறைய வாகம
முடிய வோதிய முறையி னிற்கெழும்
வடிவி லில்லற வாழ்க்கை யின்றிநின்
னடிய ருச்சனைக் கருக னாவனே.

(இ-ள்.) எல்லையில்லாத வேதாகமநூல்கள்நிரம்பக் கடைபோகக் கற்றுணர்ந்த முறையில் தேவரீருக்குரிய தென்னுந்திருவுருவில் கிரகாச்சிரமநிலையில்லாமல் உமது திருவடியருச்சனைக்கு அகம்படிமைத்தொண்டனாகேன். எ-று. (அ௬)

ஐய யாவையு மறிதி யேகொலோ
வையை நாடவன் மனக்க ருத்துணர்ந்
துய்ய வோர்கவி யுரைத்தெ னக்கருள்
செய்ய வேண்டுமென் றிரந்து செப்பினான்.

(இ-ள்.) ஐயனே! நீ முற்றும் ஒருங்குணர்ந்தவனல்லவா? வையைநாடுடைய சண்பகபாண்டியனுடைய மனக்கருத்தையாராய்ந்து, அடியேன் பிழைக்க ஒருபாடல் செய்தருளி எனக்குத்திருவருள் செய்யவேண்டுமென்று குறையிரந்தனன். எ-று.(அ௭)

தென்ன வன்குல தெய்வ மாகிய
மன்னர் கொங்குதேர் வாழ்க்கை யின்றமிழ்
சொன்ன லம்பெறச் சொல்லி நல்கினா
ரின்ன றீர்ந்தவ னிறைஞ்சி வாங்கினான்.

(இ-ள்.) சண்பகபாண்டியன் குலதெய்வமாயுள்ள சவுந்தரபாண்டியர் கொங்குதேர் வாழ்க்கையென்னும் இனிய திருப்பாசுரத்தைச் சொற்சுவை பொருட்சுவைபெறத் திருவாய்மலர்ந்தருளித்தந்தனர்; வறுமையினின்று நீங்கிய தருமியென்னும் அந்தணன் வணங்கிக்கரத்திலேற்றனன். எ-று.

**திருப்பாசுரம்** "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ்செப் பாது கண்டது மொழிமோ

பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ வறியும் பூவே"——(இ-ள்.) மணமாராய்ந்து திரிதலே வாழ்வாக்வுடைய உட்சிறகினையுடைய வண்டே! நீ யறியுமலர்களில், பழகிய மிக்க நட்பால், விருப்பத்தாற் பொய்யுரையாது, மயிலின்சாயலும் நெருங்கிய பற்களுமுடைய பாண்டியன் தேவியார் கூந்தல்போல நல்லமலர்களுமுளவோ? கண்டவுண்மையைக் கூறுக. எ-று. மோ - முன்னிலையசை.

இத்திருப்பாசுரத்தின் கருத்தை ஆலாசிய மஹாத்மியம்.
[Grantha text] எனவருவதாலுமுணர்க. (அஅ)

பொற்ற ளிர்ச்சடைப் புவன நாயகன்
சொற்ற பாடல்கைக் கொண்டு தொன்னிதி
பெற்றெ டுத்தவன் போன்று பீடுறக்
கற்ற நாவலர் கழக நண்ணினான்.

(இ-ள்.) பொன் தளிர் விட்டாலொத்த சடாமுடியையுடைய புவனம் யாவற்றிற்கும் இறைவனாகிய சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரத்தைக் கையிலேற்று வைப்புத்திரவியம் பெற்றடைந்தவனொத்து, பெருமை மிகக்கற்றுணர்ந்த புலவர்கள் வீற்றிருக்குந் தமிழ்ச்சங்கத்தையடைந்தனன். எ-று. (அகூ)

கல்வி யாளர்தங் கையி னீட்டினான்
வல்லை யாவரும் வாங்கி வாசியாச்
சொல்லின் செல்வமும் பொருளுந் தூக்கியே
நல்ல நல்லவென் றுவகை நண்ணினார்.

(இ-ள்.) சங்கப்புலவர்கள் கையில் அத்திருப்பாசுரத்தைத்தந்தனன்; விரைந்து வாங்கி அங்குள்ள புலவர்கள் யாவரும் வாசித்து, சொற்சுவையையும் பொருட்சுவையையுஞ் சீர்தூக்கி மிகவும் நல்லனவென்று களிகூர்ந்தார்கள். எ-று. (கூ0)

அளக்கில் கேள்வியா ரரசன் முன்புபோய்
விளக்கி யக்கவி விளம்பி னார்கடன்
னுளக்க ருத்துநே ரொத்த லாற்சிரந்
துளக்கி மீனவன் மகிழ்ச்சி தூங்கினான்.

(இ-ள்.) அளத்தற்கரிய நூற்கேள்வியையுடைய சங்கப்புலவர்கள் பாண்டியன் முன் சென்று, அத்திருப்பாசுரத்திலுள்ள பொருளை விளக்கிக் கூறினார்கள்; தன்னுள்ளக்கருத்துக்கு முற்றும் ஒத்திருத்தலால், சண்பகபாண்டியன் சிரக்கம்பனஞ்செய்து களிப்பில் மூழ்கினான். எ-று. (கூக)

உணர்ந்த கேள்வியா ரிவரொ டொல்லைபோய்ப்
புணர்ந்த வாயிரம் பொன்னு மின்றமிழ்
கொணர்ந்த வேதியன் கொள்க வின்றென
மணந்த தாரினான் மகிழ்ந்து நல்கினான்.

(இ-ள்.) முற்றுமுணர்ந்த நூற்கேள்வியில்வல்ல சங்கப்புலவர்களோடு விரைந்துசென்று, ஒருசேர முடிந்த ஆயிரம்பொன்னையும் இனிய தமிழ்ப்பாசுரத்தைக்கொண்டுவந்த அந்தணன் இன்றே கொள்ளக்கடவனென்று மணம் வீசும் மலர்மாலையணிந்த சண்பகபாண்டியன் மகிழ்கூர்ந்து கொடுத்தனன். எ-று. (கூஉ)

வேந்த னேவலால் விபுதர் தமமொடும்
போந்து மீண்டவைப் புறம்பு தூங்கிய
வாய்ந்த பொற்கிழி யறுக்கு நம்பியை
நேர்ந்து கீரனில் லெனவி லக்கினன்.

(இ-ள்.) சண்பகபாண்டியனேவலினால் சங்கப்புலவர்களோடுந்திரும்பிச்சென்று கல்விச்சங்கத்தின் புறத்துக் கட்டப்பட்டதையும் இவ்வளவினவென வரையறுக்கப்பட்ட பொன்முடிப்பை அறுக்குந்தருமியை நக்கீரனெதிர்ந்து நில்லாயென்று தடுத்தனன். ()

குற்ற மிக்கவிக் கென்று கூறலுங்
கற்றிலா னெடுங் காலம் வெம்பசி
யுற்ற வன்கலத் துண்ணு மெல்லைகைப்
பற்ற வாடினன் பண்பு பற்றினன்.

(இ-ள்.) (மறுத்த நக்கீரன்) இக்கவிக்கு இன்னது குற்றமென்றுகூற, பொருளிலக்கணங் கற்றுணராத தருமி, அநேக நாள் கொடும்பசி அடைந்துழன்ற வொருவன் (பெற்றவுணவை) கலத்திலுண்ணுமளவில், (உண்ணற்கவென அவன்) கையை மற்றொருவன்வந்துபற்ற இழந்துவாடிய தீப்பசியாளனைப்போன்ற பெருந்துன்பமடைந்தான். ()

உலர்ந்த நெஞ்சுகொண் டொதுங்கி நாயக
னலந்த ருங்கழ லண்ணி னானவன்
மலர்ந்த பாடல்கொண் டறிஞர் வைகிடத்
தலர்ந்த சிந்தைகொண் டடைந்த மைந்தனே.

(இ-ள்.) சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரத்தைக்கொண்டு தெய்வப்புலவர்கள் வசிக்குந் தமிழ்ச்சங்கத்தைக் களிகூர்ந்த மனத்தோடு அடைந்த தருமி (பொற்கிழி பெறுமையால்) வாடிய மனத்தோடு வொருபாலொதுங்கி அச்சோம சுந்தரக்கடவுளுடைய திருவடிகளை யடைந்தனன். எ-று. (௯௫)

செய்யுள் கொண்டுபோய்த் திருமுன் வைத்துளப்
பையுள் கொண்டவப் பனவ னென்னைநீ
மையுள் கண்டவிவ் வழுவு பாடலைக்
கையு ளல்கினாய் கதியி லேற்கெனா

(இ-ள்.) மனத்திற்கவலைகூர்ந்த அத்தருமி திருப்பாசுரத்தைக்கொண்டுசென்று திருமுன்னர்வைத்து, கரியநிறம்வாய்ந்த ஸ்ரீகண்டத்தையுடைய பெருமானே! நின்னையன்றி ஒரு பற்றுக்கோடில்லாத வெனக்கு நீ குற்றமுள்ள பாடலைப்பாடி அடியேன் கையிற்கொடுத்தனை! அஃதென்ன காரணமென்று. எ-று. (௯௬)

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

வறுமைநோய் பிணிப்பப் பன்னாள் வழிபடு மடியே னின்பாற்
பெறுபொரு ளிழந்தே னென்று பேசிலேன் யார்க்கு மேலாங்
கறைகெழு மிடற்றோய் நின்றன் கவிக்குற்றஞ் சில்வாழ் நாட்சிற்
றறிவுடைப் புலவர் சொன்னா லாருனை மதிக்க வல்லார்.

(இ-ள்.) பிரமன்முதலிய யாவர்க்கும் மேம்பட்ட விடம்பொருந்திய ஸ்ரீகண்டத்தையுடைய பெருமானே! வறுமை நோய் பற்ற (அதனையொழித்தற்பொருட்டு) ப்பலநாளுங் குறையிரந்துவழிபட்ட அடியேன் தேவரீரிடத்து (வறுமையை ஒழித்தற்கு) அடையும்பொருளை அடைகிலேனென்றுகுறைகூறிற்றிலேன்; தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய பாசுரத்திற்குக் குற்றத்தைச் சில வாழ்நாளுஞ் சிற்றறிவுமுடைய புலவர்கள் கூறினால் தேவரீரை நன்கு மதிக்கவல்லவர் எவர். எ-று. (௯௭)

எந்தையிவ் விகழ்ச்சி நின்ன தல்லதை யெனக்கியா தென்னாச்
சிந்தைநோ யுழந்து சைவச் சிறுவனின் றிரங்க யார்க்கும்
பந்தமும் வீடும் வேதப் பனுவலும் பயனு மான
சுந்தர விடங்க னங்கோர் புலவனாய்த் தோற்றஞ் செய்தான்.

(இ-ள்.) எனது தந்தையே! இந்த இகழ்ச்சி தேவரீருடையதன்றி யெனக்கியாதுளதென்று மனக்கவலையால் வருந்தி, ஆதிசைவனாகிய பிரமசாரி இவ்வாறுநின்று துன்பமுற, எவர்க்கும் பந்தமும் மோட்சமும் வேதநூலும் அதன்பயனுமாயுள்ள சோமசுந்தரக்கடவுள் அவ்விடத்தில் ஒரு பெரும்புலவராய்த் திருவுருவங்கொண்டருளினர். எ-று.

கண்டிகை மதாணி யாழி கதிர்முடி வயிரம் வேய்ந்த
குண்டலங் குடிகொண் டாகத் தழகெலாங் கொள்ளை கொள்ளத்
தண்டமிழ் மூன்றும் வல்லோன் றானெனக் குறியிட் டங்கே
புண்டர நுதலிற் பூத்துப் பொய்யிருள் கிழித்துத் தள்ள.

(இ-ள்.) மகரகண்டிகையும் பதக்கமும் மோதிரமும் விளக்கமமைந்த மகுடமும் வயிரமிழைத்தகுண்டலங்களுங் குடியேறி, திருமேனியிலுள்ள பொலிவையெல்லாங்கூட்டுண்ண, தண்ணிய இய லிசை நாடகமென்னு முத்தமிழிலும்வல்லவன்தானேயென்று ஒருகுறியிட்டிருந்தாற்போல, திரிபுண்டரம்நெற்றியில் மலர்ந்துஆன்மாக்களின்மலவிருளைக்கீண்டு புறம்பு ஓட்டவும். எ-று.

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம். (௯௯)

விரிகதிர்ப் படாத்துப் போர்த்த மெய்ப்பையு ளடங்கிப் பக்கத்
தெரிமணிக் கடகத் திண்டோ ளிளையவ ரடைப்பை யோடுங்
குருமணிக் களாஞ்சி யம்பொற் கோடிகந் தாங்க முத்தாற்
புரிமதிக் குடைக்கீழ்ப் பொற்காற் கவரிபால் புரண்டு துள்ள.

(இ-ள்.) பரந்தகிரணத்தையுடைய ஆடையால் போர்வைபோலச்செய்த கஞ்சுகத்தால் திருமேனி கரந்து இரண்டுபக்கங்களிலும் நெருப்புப்போலச் செந்நிறம்வீசுங் கடகத்தையணிந்த திண்ணியதோள்களையுடைய இளைஞர்கள் அடைப்பையினோடும் நிறந்தங்கிய இரத்தினமழுத்தியகாளாஞ்சியையும் அழகியபொன்னாற்செய்ததட்டினையும் ஒருபாலேந்திவரவும் முத்தங்களாற் கோவைசெய்தமைத்த சந்திரனையொத்த தவளவட்டக்குடைநிழலின்கீழ் பொன்னாற்செய்த காம்பினையுடைய சாமரை ஒருபால் புரண்டு துள்ளவும். எ-று. (௧00)

சொல்வரம் பிகந்த பாத மென்பது தோன்ற வேத
நல்லபா துகையாய்ச் சூட நவின்றன கற்றுப் பாட
வல்லவர் மறையி னாறு மனுமுதற் கலைபோற் பின்பு
செல்லநூ லாய்ந்தோர் வைகுந் திருந்தவைக் களத்தைச் சேர்ந்தான்.

(இ-ள்.) ஆகம அளவையைக்கடந்ததிருவடியென்பதுபுலப்பட வேதங்கள் நல்லபாதுகைகளாகச்சூடிநிற்கவும், தாம்திருவாய்மலர்ந்த பாசுரங்களைக்கற்றுப்பாடவல்லவர்கள் வேதத்தின் சடங்கங்களும் மநுமுதலிய நூல்களும்போலப் பின்றொடர்ந்துவரவும், நூல்களையாராய்ந்த புலவர்கள்வசிக்கும் திருத்தமடைந்தஅவைக்களத்தை யடைந்தனர்.

ஆரவை குறுகி நேர்நின் றங்கிருந் தவரை நோக்கி
யாரைநங் கவிக்குக் குற்ற மியம்பினா ரென்னா முன்னங்
கீரனஞ் சாது நானே கிளத்தினே னென்றா னின்ற
சீரணி புலவன் குற்ற மியாதெனத் தேராக் கீரன்.

(இ-ள்.) நிறைந்தஅவைக்களத்தையடைந்து எதிரே நின்று அச்சங்கமண்டபத்திருந்த புலவர்களைப்பார்த்து, நமதுபாசுரத்திற்குக் குற்றங்கூறியபுலவர் யார்? என வினவுதற்கு முன்னம் நக்கீரன் சிறிது மஞ்சாமல் யானே குற்றங்கூறினேனென்றுகூற், அங்கு நின்றருளிய சிறப்புவாய்ந்த புலவர் சூளாமணியாகிய சோமசுந்தரக்கடவுள் குற்றம் யாது? என்று வினவ, பொருளிலக்கணந் தெளிந்துணராத நக்கீரன். எ-று. (௧௦௨)

சொற்குற்ற மின்று வேறு பொருட்குற்ற மென்றான் றூய
பொற்குற்ற வேணி யண்ணல் பொருட்குற்ற மென்னை யென்றான்
றற்குற்றம் வருவ தோரான் புனைமலர்ச் சார்பா லன்றி
யற்குற்ற குழற்கு நாற்ற மில்லையே யென்றா னையன்.

(இ-ள்.) சொற்குற்றமில்லை வேறே பொருட்குற்றந்தானென்று கூறினான். மாற்றுயர்ந்த பொன்னை யுருகி உருத்திரிந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் பொருட்குற்றம் யாது? என்று வினவினார்; தனக்குப்பெருந்தவறு வருதலை முன்னுணராத நக்கீரன் அணிந்த மலரின் சேர்க்கையாலல்லாமல் இருளுக்கு நட்பாயுள்ள கூந்தலுக்கு இயற்கையிலே வாசமில்லையேயென்று கூறினான்; சோமசுந்தரக்கடவுள். ()

பங்கய முகமென் கொங்கைப் பதுமினி குழலோ வென்ன
வங்கது மனைத்தே யென்றா னலவா யுடையான் றெய்வ
மங்கையர் குழலோ வென்ன வன்னது மந்தா ரத்தின்
கொங்கல ரளைந்து நாறுங் கொள்கையாற் செய்கைத் தென்றான்.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற முகத்தையும் மெல்லிய தனத்தையுமுடைய பதுமினியின் கூந்தலோ வென்று வினவ அக்கூந்தலும் அத்தன்மைத்தேயென்று கூறினான்; சோமசுந்தரக்கடவுள் விண்ணுலகிலுள்ள தெய்வப்பெண்கள் கூந்தலோவென்று வினவ அக்கூந்தலும் பஞ்சதருக்களில் ஒன்றாகிய மந்தாரத்தினுடைய வாசமிக்க மலர் மாலைபொருந்தி நறுமணங்கமழுங் கொள்கையினால் செயற்கையதேயன்றி யியற்கைய தன்றென்று கூறினான். எ-று. (௧௦௪)

பரவிநீ வழிபட் டேத்தும் பரஞ்சுடர் திருக்கா ளத்தி
யரவுநீர்ச் சடையார் பாகத் தமர்ந்தஞா னப்பூங் கோதை
யிரவினீர்ங் குழலு மற்றோ வெனவஃ துமற்றே யென்னா
வெருவிலான் சலமே முற்றச் சாதித்தான் விளைவு நோக்கான்.

(இ-ள்.) நீ துதித்து வழிபட்டுவணங்கும் எல்லா வொளிகட்கு மேம்பட்ட வொளியாகிய திருக்காளத்தியி லெழுந்தருளிய சர்ப்பத்தையுங் கங்கையையுமணிந்த சடாமகுடத்தையுடைய இறைவரது இடப்பாகத்தி லமர்ந்த ஞானப் பூங்கோதையினுடைய கரிய தண்ணிய குழலும் அத்தன்மைத் தோ? என்றுவினவ, அதுவுமத்தன்மைத்தே யென்று சிறிதுமச்சமின்றிப் பின்வருங்கெடுதியைச் சிறிதுமுணராத நக்கீரன் (மற்கடம் போல) தான்கொண்ட கருத்தையே முடிவுகாறுஞ் சாதித்தனன். எ-று. (௧௦௫)

கற்றைவார் சடையா னெற்றிக் கண்ணினைச் சிறிதே காட்டப்
பற்றுவா னின்று மஞ்சா னும்பரார் பதிபோ லாக
முற்றுநீர் கண்ணா னாலு மொழிந்தநும் பாடல் குற்றங்
குற்றமே யென்றான் றன்பா லாகிய குற்றந் தேரான்.

(இ-ள்.) நெருங்கிட சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் நெற்றிக் கண்ணினைச் சிறிதுகாட்ட (அத்தீயால்) பற்றப்படுவோன் இன்னமுஞ் சிறிதுமஞ்சாதவனாய், இந்திரனைப்போல உடம்புமுழுதும் கண்களானாலும் நீர் கூறிய உமதுசெய்யுட் குற்றங் குற்றமேயென்று தன்னிடத்துள்ள குற்றத்தைச் சிறிதுமுணராத நக்கீரன் கூறினான். எ-று. (௧௦௬)

கலிநிலைத்துறை.

தேய்ந்த நாண்மதிக் கண்ணியா னுதல்விழிச் செந்தீப்
பாய்ந்த வெம்மையிற் பொருதுபொற் பங்கயத் தடத்து
ளாய்ந்த நாவலன் போய்விழுந் தாழ்ந்தன னவனைக்
காய்ந்த நாவல னிம்மெனத் திருவுருக் கரந்தான்.

(இ-ள்.) குறைந்த இளம்பிறையாகிய கண்ணிமாலையையணிந்த சோமசுந்தரக் கடவுளுடைய நெற்றிக்கண்ணாகிய செந்நெருப்பிற் பரந்த வெப்பஞ் சிறிது பற்றுதலாற் சற்றுமாற்றாது பொற்றாமரைத்தடத்தில் பலநூல்களையுமாராய்ந் துணர்ந்த நக்கீரன் சென்று விழுந்தழுந்தினான்; அந்நக்கீரனைச் சிறிது காய்ந்தருளிய புலவர் சூளாமணியாகிய சோமசுந்தரக்கடவுள் விரைந்து திருவுருமறைத்தருளினார்—எ-று. (௧௦௭)

தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம்
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் உ௫௬௦.

---

ஐம்பத்துமூன்றாவது

# கீரனைக்கரையேற்றியபடலம்.

கலிநிலைத்துறை.

மாரனைப்பொடி கண்டவ னந்தண மைந்தனுக்
கார நற்கன கக்கிழி யீந்த தறைந்தன
மேர னத்திரள் சூழ்மல ரோடையி டத்தினுங்
கீர னைக்கரை யேற்றிய வாறுகி ளத்துவாம்.

(இ-ள்.) மன்மதனை நீறுபடுத்திய சோமசுந்தரக்கடவுள் பார்ப்பனச் சிறுவனுக்கு மனங்களிக்க நல்ல பொன்முடிப்பைத் தந்தருளிய திருவிளையாடலைக் கூறினோம்; அழகிய அன்னக்கூட்டங்கள் சூழ்ந்த பொற்றாமரைத் தடத்தினின்றும் நக்கீரனைக் கரையேற்றிய திருவிளையாடலை இனியெடுத்துக் கூறுவாம். எ-று (௧)

தாழ்ந்த வேணிய னெற்றி முளைத்த தழற்கணாற்
போழ்ந்த நாவல னுடக பங்கயப் பொய்கைவாய்
வீழ்ந்த ரும்படர் வேலையில் வீழ்ந்தனன் விம்முறச்
சூழ்ந்த நாவலர் கண்டு பொருது துளங்குவார்.

(இ-ள்.) நீண்ட சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுளது நெற்றியிற்றோன்றிய அனற்கண்ணினால் பிளக்கப்பட்டநக்கீரன் பொற்றாமரைத் திருக்குளத்தில் வீழ்ந்து சொல்லுதற்கரிய துன்பக்கடலில் விழுந்து வருந்த, (அந்நக்கீரனை) சூழ்ந்துநின்றஏனைய சங்கப்புலவர்கள் நோக்கி மனம்பொருது வருந்துவாராயினார்கள். எ-று. (௨)

ஏன்ற வேந்தனி லாக்குடி யீட்டமு மின்கதிர்
கான்ற நாயக மாமணி போகிய கண்டியு
மான்ற ஞானமி லாதவர் கல்வியு மானதே
சான்ற கீரனி லாதவை கூடிய சங்கமே.

(இ-ள்.) தமக்கேற்ற அரசனையிழந்த குடிகளின்கூட்டத்தையும், விளங்குங்கிரணத்தை வீசிய நடுநாயகமணியை யிழந்த கண்டிகையையும் நிறைந்த, வுணர்வில்லார் கற்ற கல்வியையும், நூற்கேள்வியாலமைந்த நற்கீரனில்லாது சபைகூடியபுலவர்சங்கம் ஒத்திருந்தது.எ-று. (௩)



கீரணைக்கரையேற்றியபடலம்.

ஐயசொற்பொரு டன்வடி வானவ ராலவாய்
மைத ழைத்த மிடற்றினர் தம்மொடும் வாதுதான்
செய்த விப்பிழை யோபெரி தெப்படி தீருமோ
வுய்வ தற்புத மேயென யாவரு முன்னினார்.

(இ-ள்.) பதப்பொருளின் வடிவாயுள்ளவராகிய திருவாலவாயிலெழுந்தருளிய கருநிறமிக்க ஸ்ரீகண்டத்தையுடைய சோம்சுந்தரக் கடவுளோடும் வாதுசெய்த இந்தத் தவறோ எல்லையில்லாதது. இஃதெவ்வாறுதீரும்! அப்பிழையினின்றுந்தப்புவது அரிதென்று, சங்கப்புலவர்கள் எவருங்கருதி, வருந்தினார்கள். எ-று. (௪)

எய்தி வெள்ளி மலைபெயர்த் தானு மிறுத்ததன்
கையில் வீணைதொட் டின்னிசை பாடக் கனிந்தவன்
செய்த தீங்கு பொறுத்தது மன்றித்திண் டேரொடு
மொய்கொள் வாளுங் கொடுத்தனன் புண்ணிய மூர்த்தியே.

(இ-ள்.) கைலயங்கிரியை யடைந்து பெயர்த்த இராவணனும்(அக்கிரியைப்) பறித்ததனது கையிலுள்ள நரம்பாற் றொடுத்த வீணையைத்தடவி இனியசாமகீதம்பாட மனங்கனிந்து, அவ்விராவணன்செய்த அபராதத்தைப் பொறுத்ததுமல்லாமல் திண்ணிய தேரோடும் போர்த்தொழிற்குரிய சந்திரவாளையுந் தருமசொரூபியாகிய இறைவர் தந்தருளினார். எ-று.

எய்தி வெள்ளிமலை * * * கனிந்தவன் என்றது.

இராவணன் குபேரனைச்செயித்துச் சரவணப்பொய்கையையடைகையில், தன் விமானம் செல்லாதுநிற்க, அதனைத் திருநந்திதேவராலுணர்ந்து இக்கயிலையைப் பறிப்பேனென்றெடுக்க, சிவபெருமான் தமதுதிருவடியின் பெருவிரலாலூன்றினர். அதனால் அவன் ஆயிரவருடம் நசுக்குண்டழுந்திவருந்தினன். பிறகு அமைச்சராலுணர்ந்து தன் தலையிலொன்றையுங் கையிலொன்றையுஞ் சேதித்து அக்கை நரம்புகளால் வீணைகூட்டிச் சாமகீதம்பாடிச் சிவபெருமானைச் சந்தோஷிப்பித்து, அவ்விறைவனால் தேரும் வாளும் மூன்றரைக்கோடி ஆயுளும் அருளப்பெற்றனனென்பதாம். இதனைக்கூர்ம்புராணத்திலும், இராமாயணம் உத்தரகாண்டத்திலுங் கண்டுகொள்க. (௫)

யாவ ராலு மகற்றரி திப்பிழை யாவர்க்குந்
தேவ ராமவ ரேதிரு வுள்ளந் திரும்பினாற்
போவ தேயிது வேதுணி பென்று புகன்றுபோய்ப்
பாவ லோர்பரன் றாணிழ லிற்பணிந் தேத்துவார்.

(இ-ள்.) (சிவஅபராதமாகையால்) எவராலும் போக்குதலரிது; அயன்முதலிய எவர்க்குந் தேவராகிய அச்சோமசுந்தரக்கடவுளே திருவுள்ளந்திரும்பிற்போம்; இதுவே துணிபன்றி வேறில்லையெனத் துணிந்துசென்று கபிலர்முதலிய தெய்வப்புலவர்கள் அச்சோமசுந்தரக்கடவுளின் திருவடிநிழற்கீழடைந்து வணங்கித் துதிப்பார்கள். எ-று.()

திருத்த னேசர ணஞ்சர ணம்மறைச் சென்னிமே
னிருத்த னேசர ணஞ்சர ணந்நிறை வேதநூ
லருத்த னேசர ணஞ்சர ணந்திரு வாலவா
யொருத்த னேசர ணஞ்சர ணங்க ளுனக்குநாம்.

(இ-ள்.) புனிதமானவனே! நினக்கு அடைக்கலம்; வேதசிரசின்மேல் திருநடனஞ்செய்பவனே! நினக்கு அடைக்கலம்; நிறைந்த வேதநூற்பொருளா யுள்ளவனே! நினக்கு அடைக்கலம்; திருவாலவாயிலெழுந்தருளிய ஏகனே! நினக்கு நாங்கள் அடைக்கலம். எ-று. (௭)

பாயு மால்விடை மேல்வரு வோய்பல் லுயிர்க்கெலாந்
தாயுந் தந்தையு மாகுநின் றண்ணளி தாமரைக்
கேயு மாதவன் போனல்ல தீயவி யற்றினோர்க்
காயு மின்பமுந் துன்பமு மாக்குவ தாதலால்.

(இ-ள்.) பாய்ந்து விரைந்து செல்லுந்திருமாலாகிய விடையின்மேல் அடியவர்க்கு அருள்விரைந்துவருபவனே! அயன்முதலிய பலவுயிர்களுக்கெல்லாந் தாயுந்தந்தையுமாய்நின்ற நினது தண்ணியகருணையே, தாமரைக்கியைந்த சூரியன்போல நல்வினையையுந் தீவினையையுஞ் செய்தவர்களுக்கு ஆராயுமின்பத்தையுந் துன்பத்தையுஞ் செய்யாநின்றது, ஆகையால். எ-று. (அ)

அத்த கற்ற செருக்கி னறிவழி கீரனின்
வித்த கக்கவி யைப்பழு தென்றவி தண்டையான்
மத்த கக்கண் விழித்து வெதுப்பின் மலர்ந்தபொன்
முத்த கக்கம லத்திடை வீழமு டுக்கினாய்.

(இ-ள்.) இறைவனே! கற்றுணர்ந்த இறுமாப்பினால் உணர்வழிந்த நக்கீரன் உனது சதுரப்பாட்டையுடைய பாடலைத் தவறென்று கூறியவிதண்டாவாதத்தால், நெற்றியிலுள்ள அனற்கண்ணைச் சிறிது திறந்தருளி, அதன்வெதுப்பினால்மலர்ந்த பொன்னிறமாகிய முத்தங்களைத் தன்பாலுள்ள பொற்றாமரைத் தீர்த்தத்தில் விழச்செலுத்தி யருளினை. எ-று. (௯)

இருணி றைந்த மிடற்றடி கேளினி யிப்பிழை
கருணை செய்து பொறுத்தரு ளென்று கபிலனும்
பரண னும்முத லாகிய பாவலர் யாவருஞ்
சரண மென்று விழுந்திரந் தாரடி சாரவே.

(இ-ள்.) கருமைமிக்க ஸ்ரீகண்டத்தையுடைய அடிகளே! இனியேனும்அருள்செய்து இப்பிழையினைப் பொறுத்தருளாயென்று, கபிலனும் பரணனுமுதலாகியபுலவர்களெல்லோரும் அடைக்கலமென்று (சோமசுந்தரக்கடவுளின்) திருவடியைச் சாரவீழ்ந்து குறையிரந்தார்கள். எ-று. (௧௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அக்கிர வேலை யால மயின்றவெங் கருணை வள்ள
லிக்கிர மழலைத் தீஞ்சொ லிறைவியோ டெழுந்து போந்து
நக்கீரன் கிடந்த செம்பொ னளினப்பூந் தடத்து ஞாங்கர்ப்
புக்கிர மதுரத் தீஞ்சொற் புலவர்தங் குழாத்து ணின்றான்.

(இ-ள்.) அந்தப்பாற்கடலிற் றோன்றியவிடத்தை யுண்டருளிய எமதுகருணைமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுள் கரும்பினிரசத்தைவென்ற அழகியமழலையாகிய இனியசொற்களையுடைய உமாதேவியாரோடெழுந்து வந்து நக்கீரனழுந்தியபொற்றாமரைத் திருக்குளத்தி னயலிலடைந்து, குளிர்ந்த இனியசொல்லாராய்ச்சியை யுடைய புலவர்கூட்டத்துணின்றருளினார். எ-று. (௧௧)

அனற்கணா னோக்கி னான்பின் னருட்கணா னோக்க வாழ்ந்த
புனற்கணே கிடந்த கீரன் பொறிபுலன் கரண மெல்லாங்
கனற்கணார் தமதே யாகக் கருணைமா கடலி லாழ்ந்து
வினைக்கணே யெடுத்த யாக்கை வேறிலன் புருவ மானான்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணாற் சிறிதுநோக்கியருளிய சோமசுந்தரக்கடவுள் பின்னர் கிருபாநோக்கத்தாற் சிறிதுபார்த்தருள, ஆழ்ந்தபொற்றாமரைத் திருக்குளத்திலழுந்

திய நக்கீரன் இந்திரியங்களும் சத்தமுதலிய ஐம்புலன்களும் அந்தக்கரணங்களுமாகிய யாவும் நுதற்கண்ணுராகிய அப்பெருமானுருடைமையாகத்திருவருளாகிய பெரியகடலி லழுந்தி, இருவினையால்வந்தசரீரம் தம்மிலொன்றுபட்ட அன்பின்வடிவமாயிருந்தனன்.

போதையா ருலக மீன்ற புனிதையார் பரஞா னப்பூங்
கோதையார் குழற்குத் தீங்கு கூறிய கொடிய நாவின்
றீதையார் பொறுப்பா ரோயோ வவரன்றித் திருக்கா ளத்திக்
காதையீர் குழையி னுரைக் காளத்தி கைலை யென்ன.

(இ-ள்.) முற்றுமுணர்ந்தவரும் உலகமுற்றும் பெற்றருளிய பரிசுத்தமுடையவருமாகிய ஞானப்பூங்கோதையார் திருக்கூந்தலுக்குப் பழுதுகூறிய கொடியநாவின்பொறுத்தற்கரிய தீமையைத் திருக்காளத்தியிலெழுந்தருளிய ஞானப்பூங்கோதையாரன்றிப் பொறுப்பவரொவருளர்? (ஒருவருமிலர்) ஆதலால் திருக்காளத்தியிலெழுந்தருளிய திருக்காதிலார்ந்த குண்டலத்தையுடைய காளத்தீச்சுரரைக் கைலைகாளத்தியென்று. எ-று.

கயிலைபாதிகாளத்திபாதித்திருவந்தாதி.

நேரிசைவெண்பா.

"சொல்லும் பொருளுமே தூத்திரியு நெய்யுமா
நல்லிடிஞ்சி லென்னுடைய நாவாகச்—சொல்லரிய
வெண்பா விளக்கா வியன்கயிலை மேலிருந்த
பெண்பாகர்க் கேற்றினேன் பெற்று.

மற்றும் பலபிதற்ற வேண்டா மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி—நெற்றிக்கண்
ணூரா வமுதின் திருநாம மஞ்செழுத்துஞ்
சோராம லெப்பொழுதுஞ் சொல்" (௧)

எடுத்தசொன் மாறி மாறி யிசையநே ரிசைவெண் பாவாற்
றொடுத்தவந் தாதி சாத்தத் துணைச்செவி மடுத்து நேர்வந்
தடுத்தவன் கையைப் பற்றி யகன்கரை யேற்றி னுர்தாள்
கொடுத்தெழு பிறவி வேலைக் கொடுங்கரை யேற்ற வல்லார்.

(இ-ள்.) கைலையென்றும் காளத்தியென்று மெடுத்தசொல்லினைப்பொருந்தச் செய்யுள்தோறு மாறிமாறி நேரிசைவெண்பாவினுல் தொடுத்த திருவந்தாதியாகிய மாலையை (ப்பொற்றாமரைத் திருக்குளத்திலாழ்ந்திக்கிடந்தபடிதிருவடியில்) சாத்த, இரண்டு திருச்செவியிலும் நிரம்பத்தேக்கி நேரே காட்சிதந்து (தம்மைச்சரண்புகுந்தோர்க்கு) திருவடியாகிய புணைதந்து எழுபிறப்பாகிய கடலினின்றும் எடுத்துவளைத்த முத்தியாகிய கரையிலேற்றவல்ல சோமசுந்தரக்கடவுள் தம்மையடைந்த நக்கீரனுடையகையைப்பற்றி, இடம்பரந்த அத்திருக்குளத்தினின்றுங்கரையி லேற்றியருளினர். எ-று. (௩௪)

கைதந்து கரையே றிட்ட கருணையங் கடலைத் தாழ்ந்து
மைதந்த கயற்க ணளை வந்தித்துத் தீங்கு நன்கு
செய்தந்தோர்க் கினலு மன்புஞ் செய்தமை பொருளாச் செய்யுட்
பெய்தந்து பாடு கின்றான் பிரானரு ணுடு கின்றான்.

(இ-ள்.) திருக்கைகொடுத்துக் கரையேற்றியருளிய கிருபா சமுத்திரமாகிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி, மையெழுதிய அங்கயற்கண்ணியாரை வணங்கித் தீமையையு நன்மையையுஞ் செய்தருளிய உயிர்களுக்குக், கோபத்தையுங் கருணையையுஞ் செய்தருளினமையே பொருளாகத் தனதுபாசுரத்திலமைத்து(க்கரையேறி)ச்சோமசுந்தரக்கடவுளின்திருவருளை நாடும் நக்கீரன் பாடுவானுயினன். எ-று. (௩௫)

அறனிலா னிழைத்த வேள்வி யழித்தவோ ராண்மை போற்றி
மறனிலாச் சண்டிக் கீந்த மாண்பெருங் கருணை போற்றி
கறுவிவீழ் கூற்றைக் காய்ந்த கனைகழற் கமலம் போற்றி
சிறுவனுக் கழியா வாழ்நா ளளித்தருள் செய்தி போற்றி.

(இ-ள்.) தருமநெறிசற்று மில்லாத தக்கன்செய்தயாகத்தைச் சிதைத்த அளத் தற்கரிய ஆண்தன்மையை வந்திக்கக்கடவேன்; பாபஞ்சிறிது மில்லாதசண்டேசுரநாயனுருக்கு (தாமுண்டருளியபரிகலத்தையும் உடுப்பவைகளையுஞ் சூடும்பூமாலைகளையும்) தந்தருளியமாட்சிமைப்பட்டதிருவருளைவந்திக்கக்கடவேன்; கோபித்து மார்க்கண்டேயருயிரைக்கவரவந்த இயமனையுதைத்தருளிய ஒலிக்கும் வீரகண்டைகட்டிய திருவடித்தாமரையை வந்திக்கடவேன்; அம்மார்க்கண்டேயருக்கு என்றுமழியா திருத்தலைக்கொடுத்தருளிய செய்கையை வந்திக்கக்கடவேன். எ-று.

அறனிலானிழைத்த வேள்வியழித்ததென்றது.—தக்கன் சிவபெருமானை மதியாது ஓர்யாகஞ்செய்து அவிர்ப்பாகத்தைத் திருமாலுக்குக் கொடுக்கவேண்டுமென்றிருக்க, இறைவன் கோபமுற்றுத் தனது நெற்றிவெயர்வினின்று வீரபத்திரரையுண்டாக்கி அவரால் அந்தயாகத்தையும் அங்குவந்திருந்தவருடன் தக்கனையுஞ்சங்கரித்து, தேவர்கள் வேண்டியபடியே மீண்டுந் தேவர்களையும், ஆட்டுத்தலைதந்து தக்கனையும் உய்வித்தருளினர் என்பதாம். இதனைக் கந்தபுராணத்திலும் கூர்மபுராணத்திலும் காஞ்சிபுராணமுதலியவற்றிலுங் கண்டுகொள்க.

சண்டிக்கீந்த கருணையென்றது.—பசுவை ஆயன்கோலாற்புடைக்கக்கண்டு மனஞ்சகியாத விசாரசருமர் தாமே அப்பசுக்களைமேய்ப்பதாக மண்ணியாற்றங்கரையில் மேய்ந்து வருகையில், சிவார்ச்சனையில் அன்புடையராய் மணலாலிலிங்கங்கோலிப் பாலாலபிடேகித்து வந்தனர். அதனைக் கேள்வியுற்றவூரார் அவர் தந்தையாகிய எச்சதத்தனுக்கு அறிக்கையிட, அவன் ஒருநாள் மறைந்து விசாரசருமரைத்தொடர்ந்து அவர்புதுக்குடங்களில் பால்கொண்டுவந்து வைத்துவிட்டுச் சிவபூஜையிலிருக்கையில் எச்சதத்தன் பாற்குடங்களைக் காலாலிடற, விசாரசருமர் சிவார்ச்சனைக் கிடையூறுசெய்தவன், தந்தை குரு வேதியன் என்றுங் கருதாது, அருகிருந்த ஒருகோலினை மழுப்படையாகக் கொண்டு அவன்தாளைத் தடிந்தனர். சிவபெருமான் அவரது அன்பிற்கு அகமகிழ்ந்து சண்டேசுர பதவியளித்தனர் என்பதாம். இதனைத் திருத்தொண்டர் புராணத்திற் கண்டுகொள்க.

கூற்றைக்காய்ந்து சிறுவனுக்கழியாவாழ்நாளளித்ததென்றது.—மார்க்கண்டேய முனிவர் சிவபூசை செய்துகொண்டிருக்கையில் அவரது ஆயுள்முடிவெய்த இயமதூதர்கள் அவருயிரைப் பிடிக்கமுடியாது இயமனிடஞ்சொல்ல, இயமன் தனதுமகிஷவாகனத்திலேறி, கதை பாசம் முதலியன கையிற்கொண்டு அம்முனிவரிடம்வந்து அவரை நெருங்கமுடியாது பாசத்தையெறிய, சிவபெருமான் அவர்பூசித்துக்கொண்டிருந்த இலிங்கமூர்த்தத்தினின்றும் வெளியே தோன்றி இயமனையுதைத்து வீழ்த்தித் தேவர்வேண்டுகோளின்படி அவனை யுயிர்ப்பித்து, மார்க்கண்டேயமுனிவருக்கு நித்தியத்துவத்தைக் கொடுத்தருளின ரென்பதாம். இதனை இலிங்கபுராணம் கந்தபுராணங்களிற் கண்டுகொள்க. (கசு)

சலந்தர னுடலங் கீண்ட சக்கிரப் படையாய் போற்றி
வலந்தரு மதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய் போற்றி
யலர்ந்தசெங் கமலப் புத்தே ணடுச்சிர மறிந்தாய் போற்றி
சிலந்தியை மகுடஞ் சூட்டா வரசருள் செல்வம் போற்றி.

(இ-ள்.) சலந்தராசுரனுடைய சரீரத்தைப்பிளந்த சக்கிராயுதத்தை யுடையவனே! வந்திக்கக்கடவேன்; வெற்றியையுடைய மன்மதனைத் திருமால் வழிபட்டேத்தத் தந்தருளினவனே! வந்திக்கக்கடவேன்; மலர்ந்த தாமரைப்பீடத்தில் வசிக்கும் பிரமனுடைய நடுத்தலையைக் கொய்தவனே! வந்திக்கக் கடவேன்; சிலந்திக்குமகுடஞ்சூட்டி, அரசுரிமையளித்த பெருஞ்செல்வமே! உன்னைவந்திக்கக்கடவேன். எ-று.

வலந்தருமதனை என்றதற்கு வெற்றியைத்தரும் அந்தச்சுதரிசனமென்னுஞ் சக்கிராயுதத்தை எனப்பொருள் கூறுவதும் பொருந்தும்.

சலந்தரனுடலங்கீண்ட சக்கிரப்படையாய் என்றது.—சலந்தராசுரன்தேவர்களையெல்லாம் வென்று சிவபெருமானையும் வெல்லக்கருதிக் கைலையையடைய, சிவபெருமான் விருத்தவேதியவடிவாகி என்னைவென்றபின் சங்கரனையெதிர்க்கவென, சலந்தரன் என்வலிமையைக்காண்கவென, இறைவன்தன் திருவடியால் நிலத்தை வலயமாகக்கீறி நீ இதனை யெடுக்கவல்லையேல் சிவபெருமானை யெதிர்க்கலாமென்ன, சலந்தரன் இது வா பெரிதென்று தன்னிருகரத்தாலும் அவ்விருத்தத்தை யெடுத்துத் தலைமிசைவைக்க, அது சக்ராயுதமாகி அவன் உடலை யிருபிளவாக்கியதென்பதாம். இதனைக் கூர்மபுராணம் கந்தபுராணம் காஞ்சிபுராணங்களிற் கண்டுகொள்க.

வலந்தருமதனைமாயோன் வழிபடக்கொடுத்தாயென்றது.— அழகிற்சிறந்த ஓர் புதல்வன் தனக்குவேண்டுமென்று சிவபெருமானைநோக்கி விஷ்ணுமூர்த்தி தவஞ்செய்து அவரருளால்மன்மதனைப்புத்திரனாக அடைந்தனனென்பதாம். (௧௭)

திரிபுரம் பொரிய நக்க சேவகம் போற்றி மூவர்க்
கருளிய தலைமை போற்றி யனங்கனை யாகந் தீய
வெரியிடு நயனம் போற்றி யிரதிவந் திரப்ப மீளக்
கரியவன் மகனுக் காவி யுதவிய கருணை போற்றி.

(இ-ள்.) திரிபுரங்களும் நீறுபட்டழிய முறுவலித்தருளிய ஆண்மைத்திறத்தை வந்திக்கக்கடவேன்; திரிபுராதிபர்களாகிய வித்யுன்மாலி, தாரகாக்கன், கமலாக்கன் என்னும்மூவரும், தத்தம்நெறியினின்று வழுவாதமுறையால் அவர்கட்கருளியதலைமைப்பாட்டைவந்திக்கக்கடவேன்; மன்மதனைச்சரீரம் நீறாக எரித்தருளிய நுதற்கண்ணினைவந்திக்கக்கடவேன்; அவன்தேவியாகிய இரதிவந்து குறையிரப்பமீளவும் திருமால் மகனாகிய அம்மன்மதனுக்கு உயிர்கொடுத்தருளிய திருவருளைவந்திக்கக்கடவேன். எ-று.

இதிற்கூறப்பட்ட சரிதங்கள் முன்வந்துள்ளனவாதலின் ஆங்குக்கண்டுகொள்க.

நகைத்திட வந்த வந்த நகுசிரந் திருகி வாங்கிச்
சிகைத்திரு முடிமேல் வைத்த திண்டிறல் போற்றி கோயி
லகத்தவி சுடரைத் தூண்டு மெலிக் கரசளி மூன்று
சகத்தையு மளித்த தேவர் தம்பிரான் சரணம் போற்றி.

(இ-ள்.) நகைத்துவந்த அந்த நகுதலையை முறுக்கித் திருக்கரத்திற்கொண்டு அழகிய சடாமுடிமேல் வைத்தருளிய திண்ணியவீரத்தை வந்திக்கக்கடவேன்; திருக்கோயிலிடத்து அவிகின்ற திருவிளக்கைத் தூண்டிய எலியினுக்கு அரசியல்செலுத்த மூன்றுலகங்களையும் உரிமையாகத் தந்தருளிய தேவர்பெருமானே! நின்திருவடியை வந்திக்கக்கடவேன். எ-று.

நகுசிரம்முடிமேல்வைத்த என்றது. சிவபெருமான் தாருவனத்தையடைந்தபொழுது அவர்கள் மனைவியர் கற்பிழந்தமை கருதிச்செய்த அபிசாரவேள்வியினின்றுந் தோன்றிய நகுவெண்டலை சிவபெருமான்மீது சீறிவர இறைவர் அதனைவாங்கித்தமதுசடைமேலணிந்துகொண்டன ரென்பதாம். (௧௮)

பொருப் பகழ்ந் தெடுத்தோன் சென்னி புயமிற மிதித்தாய்போற்றி
யிருக்கிசைத் தவனை பாட விரங்கிவாள் கொடுத்தாய் போற்றி
தருக்கொடி மிருவர் தேடத் தழற்பிழம் பானாய் போற்றி
செருக்குவிட் டவரோ பூசை செய்யநேர் நின்றாய் போற்றி.

(இ-ள்.) திருக்கயிலையைப்பறித்தெடுத்த இராவணனுடைய பத்துச்சிரங்களும் இருபது புயங்களும் முறிய மிதித்தருளினவனே! வந்திக்கக்கடவேன்; இருக்குவேதத்தை (த்தன்கையிலுள்ள வீணையில்) இசைத்து அவ்விராவணனே பாடத்திருவுளமிரங்கி வாள்கொடுத்தருளினவனே! வந்திக்கக்கடவேன்; அவ்விறுமாப்பை யொழித்து அப்பிரமனுந் திருமாலுமே பூசனைசெய்து குறையிரக்கக் காட்சிதந்தருளினவனே! வந்திக்கக் கடவேன் எ-று. (௨0)

பருங்கைமால் யானை யேனம் பாய்புலி யரிமான் மீன
மிருங்குறள் யாமை கொண்ட விகல்வலி கடந்தாய் போற்றி
குரங்குபாம் பெறும்பு நாரை கோழியா ணலவன் றேரை
தருங்குரீஇ கழுகி னன்புக் கிரங்கிய கருணை போற்றி.

(இ-ள்.) பருத்த துதிக்கையையுடைய பெரியயானையும், வராகமும், பாய்ந்து செல்லும்புலியும், சிங்கமும், மீனமும், பெரியகுறளுருவமும், ஆமையுங்கொண்டமிக்க வன்மையைக்கடந்தவனே! வந்திக்கக்கடவேன்; குரங்கும்,பாம்பும், எறும்பும், நாரையும், கோழியும், ஆண்ஞண்டும், தவளையும், கரிக்குருவியும், கழுகுமாகிய இவைகளின் அன்புக்கு இரங்கியருளிய திருவருளை வந்திக்கக்கடவேன். எ-று.

யானையும் புலியும் வன்மையொழியச் சங்கரித்தமையும், கோழிகாசியில் முத்தியடைந்ததும் கரிக்குருவியும் நாரையும் முத்தியடைந்தமையும் முன் கூறப்பட்டுள்ளன. ஏனம் என்றது.—இரணியாக்கன் உலகினைப் பாயாகச்சுருட்டிக்கொண்டு பாதாளத்தையடைந்தபொழுது விஷ்ணு வராகவடிவொடுசென்று அவனைச்சங்கரித்துப் பூமியைமுன்போல நிறுத்தி அகந்தையால் உலகையழிக்க ஏத்தனிக்கையில் இறைவர் அதன் கொம்பினையொடித்தனரென்பதாம். அரிமான் என்றது-ஹிரணியகசிபனைச் சங்கரித்த நரசிங்கன்வன்மையைச்சரபவடிவேற்று அடர்த்ததாம்,மீனம் என்றது-சோமுகாசுரன் வேதங்களைத் திருடிக்கொண்டு கடலிலொளித்தபொழுது திருமால்மச்சவடிவுடன் அவனைக்கொன்று வேதங்களைக் கொண்டுவந்து மமதையுற்றபொழுது இறைவன் வேடவடிவுடன் சென்று அதன்வன்மை யடக்கியதாம். குறள் என்றது.—மாவலியையடர்த்த வாமனன் இறுமாந்தபொழுது அவனதுமுதுகென்பைப் பறித்தனரென்பதாம். யாமைஎன்றது.—க்ஷீராப்திமதிக்கையில் யாமைவடிவேற்ற திருமால்பின்னர் இறுமாப்புற்ற இறைவன் அதன் ஓட்டினைப்பறித்து மார்பிலணிந்தனரென்பதாம்.

குரங்கும் பாம்பும் திருஇராமேச்சுரம் திருக்காளத்தி மாயூரமுதலிய தலங்களினும், எறும்பு எறும்பீச்சுரத்தினும், நாரையும் கரிக்குருவியும் திருநாரையூர் இத்திருவாலவாய் முதலியவற்றினும், கோழி காசி குக்குடேச்சுரமுதலியவற்றினும், அலவன் கர்க்கடகேச்சுரத்தினும், தேரை ஆற்றூரினும், கழுகுதிருக்கழுகுன்றம் புள்ளிருக்கு வேளூர் முதலியவற்றினும் வழிபட்டிருத்தலின், இச்சரித்திரங்களை அவ்வத் தலபுராணங்களுள் கண்டுகொள்க. (௨௧)

சாலநா ளிழைத்த தீங்குக் கென்னையுந் தண்டஞ் செய்த
கோல்மே போற்றி யஞ்சிக் கொடியனேன் றொடுத்த புன்சொன்
மாலைகேட் டென்னை யாண்ட மலைமகண் மணாள போற்றி.
யாலவா யடிகள் போற்றி யம்மைநின் னடிகள் போற்றி.

(இ-ள்.) மிகவும்நான் செய்த தவறுதீர்த்தற்பொருட்டு என்னையும் ஒறுத்தருளிய புலவர்பெருமான் திருவடியே! வந்திக்கக்கடவேன்; கொடுமையையுடையேன் செய்த தவறுக்கஞ்சிப் பொருட்சுவை நிரம்பாத சொல்லாற்றொடுத்த மாலையாகிய அந்தாதியைத்திருச்செவிமடுத்தருளி யென்னையுங் கரையேற்றி யடிமைகொண்ட அங்கயற்கண்ணியார்மணாளனே! வந்திக்கக்கடவேன்; திருவாலவாயில் எழுந்தருளிய பெருமானே வந்திக்கக்கடவேன்; அங்கயற்கண்ணம்மையே! நினது திருவடிகளை வந்திக்கக்கடவேன் என்று (போற்றிக்கலிவெண்பாவால் துதித்து) எ-று.

## போற்றிக்கலிவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

திருத்தங்குமார்பிற்றிருமால்வராபோ - லெருத்தத்திலங்கியவெண்கோட்டுப் - பருத்த - குறுத்தாணெடுமூக்கிற்குன்றிக்கணில - நிறத்தாற்பொலிந்துநிலமே - முறத்தாழ்ந்து-பன்றித்திருவுருவாய்க்காணாதபாதங்க - ணின்றவாநின்றநிலைபோற்றி - யன்றியும் புண்டரிகத்துள்ளிருந்தபுத்தேள்கழுகுருவா - யண்டரண்டமூடுருவவாங்கோடிப் - பண்டொருநாட் - காணானிழியக்கனகமுடிகவித்துக் - கோணாதுநின்றகுறிபோற்றி - நாளுளும் - பேணிக்காலங்கள்பிரியாமைப்பூசித்த - மாணிக்காவன்றுமதிற்கடவூர் - மாணவர்த்திற்பெரியவலிதொலைத்தகால - னுரத்திலுதைத்தவுதைபோற்றி-கரத்தாமே -வெற்பன்மடப்பாவைகொங்கைமேற்குங்குமத்தின் - கற்பழியும்வண்ணங்கசிவிப்பான்-பொற்புடைய - வாமன்மகனாய்மலர்க்கணையொன்றோட்டியவக்-காமனழகழித்தகண்போற்றி-தூமப் - படமெடுத்தவாளரவம்பார்த்தடரப்பற்றி- விடமெடுத்தவேகத்தான்மிக்குச்-சடலமுடங்கவலிக்குமுயலகன்றன்மொய்ம்பை - யடங்கமிதித்தவடிபோற்றி - நடுங்கத்-திருமான்முதலாயதேவரசுரர் - கருமால்கடனாகம்பற்றிக் - குருமாற - நீலமுண்டநீண்முகில்போனெஞ்சழலவந்தெழுந்த - வாலமுண்டகண்டமதுபோற்றி - சாலமண்டிப் - போருகந்தவானவர்கள்புக்கொடுங்கமிக்கடர்க்குந் - தாருகன்றன்மார்பிற்றனிச்சூலம் - கொடுத்தெறியுமாகாளிகோபந்தவிர - வெடுத்தநடத்தியல்புபோற்றி - தடுத்து - வரையெடுத்த வாளரக்கன்வாயாறுதிர - நிரையெடுத்துநெக்குடலமிற்றுப் - புரையெடுத்த - பத்தனைய பொன்முடியுந்தோளிருபதும்நெரிய - மெத்தெனவேவைத்தவிரல்போற்றி-யத்தகைத்த-வானவர்கடாங்கூடிமந்திரித்தமந்திரத்தை - மேனவிலவோடிவிதுவிதிர்த்துத் - தானவருக் - கொட்டுக்குறளையுரைத்தவயன்சிரத்தை - வெட்டிச்சிரித்தவிறல்போற்றி - மட்டித்து - வாலுகத்தானல்லிலிங்கமாவகுத்துமற்றதன்மேற் - பாலுகுப்பக்கண்டுபதைத்தோடி - மேலுகைத்தங் - கோட்டியவன்றாதையிருதாளெறிந்துயிரா - வீட்டியதண்டிக்குவேறாக - நாட்டின்கட் - பொற்கோயிலுள்ளிருத்திப்பூமாலைபோனகமு - நற்கோலமீந்தநலம்போற்றி - வலந்தருமானான்முகனும்வானவருங்கூடி - யலந்தருமால்கொள்ளவடர்க்குஞ் - சலந்தரனைச் - சக்கரத்தாலீர்ந்தரிதன்றாமரைக்கண்சாத்துதலு - மிக்கவனே தன்றீந்தவிறல்போற்றி - புக்கணமே - நக்கிருந்தநாமகளைமூக்கரிந்துநால்வேதந் - தொக்கிருந்தவண்ணந்துதிசெய்ய - மிக்கிருந்த - வங்கைத்தலத்தேயணிமானையாங்கணிந்த - செங்கைத்திறத்ததிறல்போற்றி - திங்களைத் - தேய்த்ததுவேசெம்பொற்செழுஞ்சடைமேற்சேர்வித்து - வாய்த்திமையோர்தம்மையெலாம்வன்சிறையிற் - பாய்த்திப்-பிரமன் குறையிரப்பப்பின்னுமவற்கு - வரமன்றளித்தவரம்போற்றி - புரமெரித்த - வன்றுய்ந்த மூவர்க்கமர்ந்துவரமளித்து - நின்றுய்ந்தவண்ணநிகழ்வித்து - நன்று - நடைகாவன்மிக்கவருள்கொடுத்துகோயிற் - கடைகாவல்கொண்டவாபோற்றி - விடைகாவற் - றானவர்கட்காற்றாதுதன்னடைந்தநன்மைவிறல் - வானவர்கள்வேண்டாமயிலூருங் - கோனவனைச் - சேனாபதியாகச்செம்பொன்முடிகவித்து - வானாளவைத்தவரம்போற்றி - மேனா-

ளதிர்த்தெழுந்தவந்தகனையண்டரண்டமுய்யக் - கொதித்தெழுந்தசூலத்தாற்கோத்துத்-துதித்தங் - கவனிருக்கும்வண்ணமருள்கொடுத்தங்கேழேழ்- பவமறுத்தபாவனைகள்போற்றி - கவைமுகத்த - பொற்பாகரைப்பிளந்துகூறிரண்டாப்போகட்டு - மெற்பாசறைப்போகமேல்விலகி - நிற்பால - மும்மதத்துவெண்கோட்டுக்கார்நிறைத்தபைந்தறுகண் - வெம்மதத்துவேகத்தான்மிக்கோடி - விம்மி-யடுத்திரைத்துப்பாயுமடுகளிற்றைப்போக - வெடுத்துரித்துப்போர்த்தவிறைபோற்றி- தொடுத்தமைத்த - நாண்மாலைகொண்டணிந்த நால்வர்க்கன்றுனிழற்கீழ் -வாண்மாலையாகும்வகையருளித் - தேர்ண்மாலை-விட்டிலங்கத்தெக்கணமேநோக்கிவியந்தகுண-மெட்டிலங்கவைத்தவிறைபோற்றி-யொட்டி-விசையன்விசையளாப்பான்வேடுருவமாகி - யசையவுடறிரியாநின்று-வசையினுற் - பேசுபதப்பானபிழைபொறுத்துமற்றவற்குப்.பாசுபதமீந்தபதம்போற்றி-நேசத்தால்-வாயினீர்கொண்மெகுடத்துமிழ்ந்திறைச்சி யாயசீர்ப்போனகமாவங்கமைத்துத் - தூயசீர்க் கண்ணிடந்தகண்ணப்பர்தம்மைமிகக்காதலித்து-விண்ணுலமீந்தவிறல்போற்றி - மண்ணின்மேற் - காளத்திபோற்றிகயிலைமலைபோற்றியெனநீளத்தினுனினைந்துநிற்பார்கள் - தாளத்தோ-டெத்திசையும்பன்முரசமார்த்திமையோர்போற்றிசைப்ப-வந்தனடிசேர்வார்களாங்கு. ()

போற்றிக்கலிவெண்பாமுற்றிற்று. திருச்சிற்றம்பலம்.

ஆவலிந்தனனடியனேற்கருளருளென்னுக்
கோவமும்பிரசாதமுங்குறித்துரைபனுவற்
பாவலங்கலாற்பரனையும்பங்கிலங்கயற்கட்
பூவைதன்னையுமுறைமுறைபோற்றியென்றேத்தா.

(இ-ள்.) ஐயோ ! வருந்தினேன்; அடியேனுக்கு அருளாயருளாயென்றுகோவத்தையையும் பிரசாதத்தையும் குறித்துக்கூறும் நுலாகிய மொலிவமைந்த மாலையால் சோமசுந்தரக்கடவுளையும் இடப்பாலிலமர்ந்த அங்கயற் கண்ணியாரையும் முறைமுறையாகப் போற்றியென்றுதுதித்து. எ-று.

## கோபப்பிரசாதம்.

திருச்சிற்றம்பலம்.

தவறுபெரிதுடைத்தேதவறுபெரிதுடைத்தே -வெண்டிரைக்கருங்கடன்மேற்றுயில்கொள்ளு - மண்டவாணனுக்கர்ழியன்றருளியு - முலகமூன்றுமொருங்குடன்படைத்த -மலரோன்றன்னைவான்சிரமரிந்துங் - நான்வேடுவன்கண்பரிந்தப்ப - வானநாடுமெற்றவர்க்கருளியுங் - கடிபடுபூங்கணைக்காமனுருடல்ம் - பொடிபடவிழித்தும்பூதலத்திசைந்த - மானிடனாகியதண்டியை - வானவனாக்கியும் - மறிகடலுலகின்மன்னுயிர்கவருங் - கூற்றுவன்றனக்கோர்கூற்றுவனாகியுங் - கடல்படுநெஞ்சங்கண்டத்தடக்கியும் - பருவரைசிலையாப்பாந்தணைத் - திரிபுரமெரியவொருகணைதுரந்துங் - கற்கொண்டெறிந்தசாக்கியனன்பு - தற்கொண்டின்னருடான்மிகவளித்துங் - கூற்றெனத்தோன்றியுங்கோளரிபோன்றுங் - தோற்றியவாரணத்தீருரிபோர்த்தும் -நெற்றிக்கண்ணுநீள்புயநான்கு-நற்றுநந்தீச்சுவரற்கருளியு - மறிவினையோராவரக்கனுருடல் -நெறநெறவிறுதரவொருவிரலூன்றியுந்-திருவுருவத்தொடுசெங்கணேறு - மரியனதிண்டிறலசுரனுக்கருளியும் - பல்கதிருரவோன்பற்கெடப்பாய்ந்தும் - மல்குபிங்கிருடிக்குமாவரமீந்துந் - தக்கன்வேள்விதகைகெடச்சிதைத்து - மிக்கவரந்திமாகாளர்க்கருளியுஞ் - செந்தீக்கடவுடன்கரதலஞ்செத்தியும் - பைந்தார்நெடுமுடைபார்த்தற்கருளியுங் - கதிர்மதிதனையோர்காற்பயன்றுடைத்து - நிதிபயில்குபேரற்குநீணகரீந்துஞ் - சலந்தரனுடலந்தான்மிகத்தடிந்து-மறைபயின்மார்க்கண்டேயனுக்கருளியுந்- தாருகற்கொல்லமுன்காளியைப்படைத்துஞ்- சீர்மவிசில்ந்திக்கின்னரசளித்துங் - கார்மலியுருவக்கருடனைக்காய்ந்து - மாவின்கீழிருந்தற

நெறியருளியு - மின்னவைபிறவுமெங்களீசன்- கோபப்பிரசாதங்கூறுங்காலைக்-கடிமலரிருந்தோன்கார்க் கடற்கிடந்தோன் - புடமுறுசோலைப்பொன்னகர்காப்போன் - உரைப்போராகிலுமொண்கடன்மாநீ - ரங்கைகொண்டிறைக்குமாதர்போன்றள - ரொடுங்காப்பெருமையும்பர்சேனை - யிடங்காவைம்புலத்தறிவில்சிந்தைக் - கிருமிநாயாற்கிளத்தும்பரமேயஃதான்று - ஒருவகைத்தேவருமிருவகைத்திறமு - மூவகைக்குணமுநால்வகைவேதமு - மைவகைப்பூதமுமறுவகையிரதமு - மெழுவகையோசையுமெண்வகைஞானமு - மொன்பதின்வகையுமொண்மலர்சிறப்பும் - பத்தின்வகையுமாகியபரனை - யின்பனைநினைவோர்க்கென்னிடையமுதினைச் - செம்பொனைமணியினைத்தேனினைப்பாலினைத் - தஞ்சமென்றொழுகுந்தன்னடியார்தம் - நெஞ்சம்பிரியாநிமலனைநீடுயர்-செந்தழற்பவளச் சேணுறுவரையனை - முக்கட்செல்வனைமுதல்வனைமூர்த்தியைக் - கள்ளங்கைவிட்டுள்ளமதுருகிக் - கலந்துகசிந்துதன்கழலிணையவையே -நினைந்திடவாங்கேதோன்றுநிமலனைத்- தேவதேவனைத்திகழ்சிவலோகனைப்-பாவநாசனைப்படரொளியுருவனை-வேயார்தோளிமெல்லியல்கூறனைத் - தாயாய்மன்னுயிர்தாங்குந்தந்தையைச் - சொல்லும்பொருளுமாகியசோதியைக் - கல்லுங்கடலுமாகியகண்டனைத் - தோற்றநிலையீறாகியதொன்மையை- நீற்றிடைத்திகழுநித்தனைமுத்தனை - வாக்குமனமுமிறந்தமறையனைப்-பூக்கமழ்சடையனைப்புண்ணியநாதனை - யினையதன்மையனென்றறிவரியவன் - றனைமுன்விட்டுத்தாமற்றுநினைப்போர் - மாமுயல்விட்டுக்காக்கைபின்போங்- தல்வர்போலவும்-விளக்கங்கிருப்பமின்மினிகவரு - மளப்பருஞ்சிறப்பிலாதர்போலவுங் - கச்சங்கொண்டுகெடுந்தொழின்முடியாக் - கொச்சைத்தேவரைத்தேவரொன்றெண்ணிப் - பிச்சரைப்போலவோ - ராரியப்புத்தகப்பேய்கொண்டுபுலம்புற்று - வட்டணைபேசுவர்மானிடம்போன்று - பெட்டினையுரைப்போர்பேதையர்நிலத்துன்-றலைமீன்றலையென்பலமென்றுலதனை-யறுத்துநிறுப்போரொருத்தரின்மையில் - மத்திரமாகுவர்மாநெறிகிடப்பவோர் - சித்திரம்பேசுவர்தேவராகி - லின்னோர்க்காய்ந்தனரின்னோர்க்கருளின - ரொன்றறியவுலகின்முன்னேயுரைப்ப - தில்லையாகிலு - மாடுபோலக்கூடிநின்றழைத்து - மாக்கள்போலவேட்கையீண்டு - மிப்படிஞானமப்படியமைத்து - மின்னதன்மையரொன்றிருநிலத்து- முன்னேயறியாமூர்க்கமாக்களை - யின்னேகொண்டேகாக்கூற்றந்- தவறுபெரிதுடைத்தேதவறுபெரிதுடைத்தே. (உரு)

கோபப்பிரசாதமுற்றிற்று. திருச்சிற்றம்பலம்.

---

தேவ தேவனைப் பின்பெருந் தேவபாணியொடுந்
தாவி லேழிசை யேழுகூற் றிருக்கையுஞ் சாத்திப்
பூவர் சேவடி சென்னிமேற் பூப்பவீழ்ந் தெழுந்தான்
பாவ லோர்களுந் தனித்தனி துதித்தனர் பணிந்தார்.

(இ-ள்.) தேவர்கள் தேவனாகிய சோமசுந்தரக்கடவுளைப் பின்புபெருந்தேவபாணியோடும் கெடுதலில்லாதஏழிசையமைந்ததிருவெழுகூற்றிருக்கையையும்,அருச்சித்தமலர்கணிறைந்த செவந்திருவடிமேற்சாத்தித் தமது சிரத்திற்றோய அத்திருவடிமேல் பரவசப்பட்டுத் தண்டாகாரமாகப் பணிந்து விழுந்தெழுந்தனன்; நூலில்வல்ல கபிலர் முதலிய புலவர்களும் தனித்தனி துதித்து வணங்கினார்கள். எ-று.

## திருவெழுகூற்றிருக்கை.

திருச்சிற்றம்பலம்.

ஒருடம்பீருருவாயினையொன்றுபுரிந் - தொன்றநீரிதழ்க்கொன்றைசூடினை - மூவிலைச்சூலமேந்தினை - சுடருஞ்சென்னிமீமிசை - யிருகோட்டொருமதியெழில்பெற

மிலைச்சினை - ஒருகணையிருதோள்செவியுறவாங்கி- மூவெயிலொற்றிசைமுரணரண்செ
குத்தனை - யாற்றமுன்னெறிபயந்தனைசெறிய - விரண்டுநீக்கி - யொன்றுநினைவோர்க்
குறுதியாயினை - யந்நெறியொன்று - மனம்வைத்திரண்டுநினைவிலோர்க்கு - முன்னெறி
யுலகங்காட்டினையந்நெறி - நான்கெனவாழிதோற்றினைவற்றச் - சொல்லுமைந்தலையரவ
சைத்தசைந்தனை - நான்முகன்மேன்முகங்கபாலமேந்தினை-நான்முகமுப்புரிமார்பி-லிரு
வரங்கமொருங்குடனேந்திய - வொருவநின்னொதிகிளைதிருவர் - மூவுலகுழன்றநாற்றி
சையுழிதர - வைம்பெருங்குன்றத்தழலாய்த்தோன்றினை - யாறுநின்சடையதைந்துநின்
னிலையது - நான்குநின்வாய்மொழிமூன்றுநின்கண்ணே - யிரண்டுநின்குழையேயொன்
றுநின்னேறே - யொன்றியகாட்சியுமையவணங்க-விருங்களிற்றுரிவைபோர்த்தனைநெ
ருங்கி - முத்தீநான்மறையைம்புலனடக்கிய - வறுதொழிலாளர்க்குறுதிபயந்தனை - யே
ழிலின்னரம்பிசைத்தனை - யாறிலமுதம்பயந்தனையைந்தில் - விறலியர்கொட்டுமெழுத்த
வேந்தினை - யாலநீழலன்றிருந்தறநெறி - நால்வர்கேட்கநன்கினிதுரைத்தனை - நன்றியி
ல்லாமுந்நீர்ச்சூர்மாக் - கொன்றங்கிருவரையெறிந்தவொருவன் - றாதையொருமிடற்றி
ருவடிவாயினை - தருமமூவகையுலகமுணரக் - கூறுவைநால்வகை - யிலக்கணவிலக்கிய
நலத்தகமொழிந்தனை - யைங்கணையவனொடுகாலனையடர்த்தனை- யறுவகைச்சமையமும்
நெறிமையில்வகுத்தனை - யேழிசையிராவணன்பாடத் - தாழ்வாய்க்கேட்டவன்றலை
யளிபொருத்தினை - யாறியசிந்தையாகியங்கதிர்த் - தேரொடுதிசைசெலவிடுத்தோ-னூற்
றேணலனேநந்திபிங்கிருடியென் - றேற்றபூதமூன்றுடன்பாட - விருகண் மொந்தை
யொருகணங்கொட்ட - மட்டுவிரியலங்கன்மலைமகள்காண - நட்டமாடியநம்பவதனாற்-
சிறியேன்சொன்னவறிவில்வாசகம் - வறிதெனக்கொள்ளாயாகவேண்டும் - வெறிகமழ்
கொன்றையொடுவெண்ணிலவணிந்து - கீதம்பாடியவண்ணல் - பாதஞ்சென்னியுட்பர
வுவன்பணிந்தே.

வெண்பா.

பணிந்தேனின் பாதம் பரமேட்டி பானி
றணிந்தால வாயி லமர்ந்தாய்—தணிந்தென்மேன்
மெய்யெரிவு தீரப் பணித்தருளு வேதியனே
யையுறவொன் றின்றி யமர்ந்து.

திருவேழுகூற்றிருக்கைமுற்றிற்று. திருச்சிற்றம்பலம்.

---

## பெருந்தேவபாணி.

திருச்சிற்றம்பலம்.

சூலபாணியைசுடர்தருவடிவனை - நீலகண்டனைநெற்றியோர்கண்ணனை - பால
வெண்ணீற்றனைபரமயோகியை - காலனைக்காய்ந்தகறைமிடற்றண்ணலை - நூலணிமா
ர்பனைநுண்ணியகேள்வியை - கோலமேனியைகொக்கறைப்பாடலை - வேலுடைக்கை
யனைவிண்டோய்முடியனை - ஞாலத்தீயினைநாதனைகாய்ந்தனை - தேவதேவனைதிருமறு
மார்பனை - காலமாகியகடிமழ்தாரனை - வேதகீதனைவெண்டலையேந்தியை - பாவநாச
னைபரமேச்சுவரனை - கீதம்பாடியைகிளர்பொறியரவனை - போதணிகொன்றையெம்பு
ண்ணியவொருவனை - யாதிமூர்த்தியையமரர்கடலைவனை - சாதிவானவர்தம்பெருமான்
றனை - வேதவிச்சையைவிடையுடையண்ணலை - யோதவண்ணனையுலகத்தொருவனை-
நாதனாகியநன்னெறிப்பொருளினை - மாலைதானெரிமயானத்தாடியை - வேலைநஞ்சினை
மிசைவமுதாக்கியை - வேதவேள்வியைவிண்ணவர்தலைவனை - யாதிமூர்த்தியையருந்தவ
முதல்வனை - யாயிரநூறுக்கறிவரியானை - பேயுருவுதந்தபிறையணிசடையனை - மாசறு

சோதியைமலைமகள்கொழுநனை - கூரியமழுவனைகொலற்கருங்காலனை - சீரியவடியாற் செற்றநள்சிவனை - பூதிப்பையனைபுண்ணியமூர்த்தியை - பீடுடையாற்றைப்பிராணித லைவனை - நீடியநிமலனைநிறைமறைப்பொருளினை - யீசனையிறையனையீறில்பெருமை யை - நேசனைநினைப்பவர்நெஞ்சத்துள்ளனை - தாதணிமலரனைதருமனைபிரமனை - காத ணிகுழையனைகளிற்றினுரியனை - சூழ்சடைப்புனலனைசுந்தரவிடங்கனை - தார்மலர்க் கொன்றைதயங்குமார்பனை - வித்தகவிதியனை - தீதமர்செய்கைத்திரிபுரமெரித்தனை - பிரமன்பெருந்தலைபிரையதாகக் - கருமன்செந்நீர்கபாலநிறைத்தனை - நிறைத்தகபாலச் செந்நீர்நின்று - முனைத்தவுருவாளையனைத்தோற்றினை-தேவருமசுரருந்திரம்படக்கடை ந்த - வராவமுண்ஞ்சமமுதமாக்கினை - யீரமினெஞ்சத்திராவணன்றன்னை - வீரமழித்து விறல்வாள்கொடுத்தனை - திக்கமர்தேவருந்திருந்தாச்செய்கைத் - தக்கன்வேள்வியைத் தளரச்சாடினை - வேதமுநீயேவேள்வியுநீயே - நீதியுநீயேநிமலனீயே - புண்ணியனீயே புனிதனீயே - பண்ணியனீயேபழம்பொருணீயே - யூழியுநீயேயுலகமுநீயே - வாழியு நீயேவரதனுநீயே - தேவருநீயேதீர்த்தமுநீயே - மூவருநீயேமுன்னெறிநீயே - மால்வ ரைநீயேமறிகடனீயே-யின்பமுநீயேதுன்பமுநீயே-தாயுநீயேதந்தையுநீயே - விண்முதற் பூதமைந்தவைநீயே - பத்தியுநீயேமுத்தியுநீயே - சொலற்கருந்தன்மைத்தொல்லோய் நீயேயதனாற் - கூடலாலவாய்க்குழகனாவ - தறியாதருந்தமிழ்பழித்தனனடியே - னீண் டியசிறப்பினிணையடிக்கீழ்நின்று - வேண்டுமெதுவினிவேண்டுவன்விரைந்தே.

வெண்பா.

விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டா
திகழ்ந்தேன் பிழைத்தே னடியேன்—விரைந்தென்மேற்
சீற்றத்தைத் தீர்த்தருளுந் தேவாதி தேவனே
யாற்றவுநீ செய்யு மருள். (௨௪)

பெருந்தேவபாணிமுற்றிற்று. திருச்சிற்றம்பலம்.

---

துதித்த கீரனுக் கின்னருள் சுரந்துநீ முன்போன்
மதித்த நாவலர் குழாத்திடை வதியென மறைநூ
லுதித்த நாவினார் கருணைசெய் துருக்கரந் தயன்சேய்
விதித்த கோயில்புக் கமர்ந்தனர் விளங்கிழை யோடும்.

(இ-ள்.) (திருப்பாசுரங்களால்) தன்னைத்துதித்த நக்கீரருக்கு இனியகருணை நிரம்பச்செய்து நீ முன்புபோல நின்னை நன்குமதிக்கும் புலவர் அவைக்களத்தினடுவில் வசிப்பாயென்று வேதங்கூறியருளிய திருவாக்கையுடைய சோமசுந்தரக்கடவுள் திரு வருள்செய்து, புலவர் சூடாமணியாய்வந்த தமது திருவுருக்கரந்தருளி உமாதேவியா ரோடும் பிரமன்புத்திரனாகிய விச்சுவகன்மா அமைத்த திருக்கோயிலிற் சென்றெழுந் தருளியிருந்தனர். எ-று. (௨௫)

கற்ற கீரனுங் கலைஞருங் கழகமண் டபத்தி
லுற்ற வாடகக் கிழியறுத் தந்தணற் குதவிக்
கொற்ற வேந்தனும் வரிசைகள் சிலசெயக் கொடுப்பித்
தற்ற நீங்கிய கல்வியின் செல்வரா யமர்ந்தார்.

(இ-ள்.) நூல்களைக்கற்ற நக்கீரரும் கபிலர்முதலிய புலவர்களும், கல்விக்கழக மாகிய மண்டபத்தில் தொங்கவிட்ட பொற்கிழியையறுத்துத் தருமிக்குக்கொடுத்து, வெ ற்றியையுடையசண்பகபாண்டியனும் சிலவரிசைகள் தமக்குச்செய்ய, அவற்றையும் அத்

தருமிக்குக்கொடுப்பித்து, குற்றத்தினின்று நீங்கிய கல்விச்செல்வமுடையவராயந்த மண்டபத்தில் வசித்திருந்தனர். எ-று. (உசு)

சம்பக மாற னென்னுந் தமிழ்நர்தம் பெருமான் கூட
லம்பக நுதலி னானை யங்கயற் கண்ணி னானை
வும்பக நிறைந்த செந்தா மரையடி வந்து தாழ்ந்து
நம்பக நிறைந்த வன்பாற் பல்பணி நடத்தி வைகும்.

(இ-ள்.) சண்பகபாண்டியனென்னும் தமிழர்பெருமான், நான்மாடக்கூடலி லெழுந்தருளிய நுதற்கண்ணினையுடைய் சோமசுந்தரக்கடவுளையும் அங்கயற்கண்ணியாரையும் தன்னுள் மணநிறைந்த செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை வந்துவணங்கி, சிவமே பொருளெனத் தேர்ந்த தனது மனதில் நிறைந்த பத்திமையால் பல்வகைப்பணிகளைநடாத்தி மகிழ்கூர்ந்திருந்தான். எ-று. (உஎ)

கீரனைக்கரையேற்றியபடலம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம்-உ௲௬எ.

---

ஐம்பத்துநான்காவது

# கீரனுக்கு இலக்கணமுபதேசித்தபடலம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொன்றையந் தெரியல் வேய்ந்த கூடலெம் பெருமான் செம்பொன்
மன்றலங் கமலத் தாழ்ந்து வழிபடு நாவ லோனை
யன்றகன் கரையே றிட்ட வருளுனா செய்தே மப்பாற்
றென்றமிழ் முனியான் றேறத் தெருட்டிய திறனுஞ் சொல்வாம்.

(இ-ள்.) கொன்றைமலராலாகிய அழகிய மாலையையணிந்த நான்மாடக்கூடலில் எழுந்தருளிய எமது சொக்கலிங்கப்பெருமான்வாசம்நிறைந்தபொற்றாமரைத்திருக்குளத்தி லழுந்தித் தன்னைவழிபட்டு அந்தாதிரூபமாகத் துதித்த நக்கீரனை அக்காலையில் இடம்பரந்தகரையில் ஏற்றியருளிய திருவிளையாடலைக்கூறினும்; இப்புறம் இலக்கணத்தை அந்நக்கீரன் தெளிந்துய்ய அகத்தியமுனிவரால்தேற்றிய திருவிளையாடலையுமினிக் கூறுவாம். எ-று. (க)

முன்புநான் மாடக் கூடன் முழுமுத லாணை யாற்போ
யின்புற வறிஞ ரீட்டத் தெய்தியாங் குறையுங் கீரன்
வன்புறு கோட்டந் தீர்ந்து மதுரையெம் பெருமான் றுளி
லன்புறு மனத்த னாகி யாய்ந்துமற் றிதனைச் செய்வான்.

(இ-ள்.) முன்னர் நான்மாடக்கூடலி லெழுந்தருளிய முதல்வராக்கினையால் சென்று மிக்க புலவர்கூட்டத்தையடைந்து, அவர் நடுவெண்வசிக்கும் நக்கீரர் சேருபற்றிய மனக்கோட்டமொழிந்து, எம்மதுரையிலெழுந்தருளிய எமதுபெருமானர் திருவடியினன்புமிக்க மனத்தையுடையவராய் பின்வரும்வண்ணமாராய்ந்து இந்நியமத்தை மேற்கொள்வாராயினர். எ-று. (உ)

கட்டவிழ் கடுக்கை யண்ணல் கண்ணினு லவிந்த காளை
மட்டவிழ் மலரோ னுலு மாபவ னுலுங் காக்கப்
பட்டவ னல்ல னன்னு னுதல்விழிப் படுதீ நம்மைச்
சுட்டபோ தருப்பந் தீர்த்துக் காத்ததிச் சுவண கஞ்சம்.

(இ-ள்) கட்டவிழ்ந்த கொன்றைமலராலாகிய மாலையையணிந்த சிவபிரானது நுதற்கண்ணாற் சாம்பரான மன்மதன் (படைத்தற்றொழிற்குரிய) மகரந்தத்தோடலர்ந்த தாமரையில் வசிக்கும் பிரமனுலும் (காத்தற் றொழிற்குரிய) திருமாலினுலுங் காக்கப் பட்டவனல்லன்; அப்பெருமானது நெற்றிக்கண்ணிற் பொருந்திய தீ நம்மைச் சுட்டகாலையிலிப்பொற்றாமரைத்தீர்த்தம் அவ்வெம்மையை யொழித்தருளியது. எ-று. (௩)

இப்பெருந் தடமே யெம்மை யெம்மையுங் காப்ப தென்னுக்
கப்பிலா மனத்தான் மூன்று காலமு மூழ்கி மூழ்கி
யப்பனை யால வாயெம் மடிகளை யடியார் சேம
வைப்பினை யிறைஞ்சி நித்தம் வழிபடு நியமம் பூண்டான்.

(இ-ள்.) இந்தப் பெரியதீர்த்தமே எம்மை யெப்பிறப்பிலும் விடாது தொடர்ந்து காப்பதென்று ஒன்றுபட்ட மனத்தையுடைய நக்கீரர் திரிகாலங்களிலு நீராடி எவ்வுயிர்கட்கும்பிதாவும், திருவாலவாயில்எழுந்தருளிய எமது கடவுளும், அடியவர்க்குச்சேமத்திரவியமு மாகிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி நாள்தோறும் வழிபட்டொழுகுங் கடப்பாட்டில் நின்றனர். எ-று. (௪)

மையறு மனத்தான் வந்து வழிபடு நியம நோக்கிப்
பையர வாரம் பூண்ட பரஞ்சுடர் மாடக் கூட
லையனு மணிய னுகி யகமகிழ்ந் தவனுக் கொன்று
செய்யமன் கருணை பூத்துத் திருவுளத் திதனைத் தேர்வான்.

(இ-ள்) குற்ற மற்ற மனத்தையுடையநக்கீரர்வந்து வழிபட்டொழுகுங் கடப்பாட்டை நோக்கி, படத்தையுடைய சர்ப்பத்தை ஆரமாகப்பூண்ட பரஞ்சுடராகிய நான்மாடக்கூடலிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளும் அண்மையராகித் திருவுளங்களிகூர்ந்து அந்நக்கீரருக்குப் பெறும்பேறொன்று கடைக்கணிக்கத் திருவருள் கூர்ந்து திருவுள்ளத்திலிதனைத் தேறுவாராயினர். எ-று. (௫)

இலக்கண மிவனுக் கின்னுந் தெளிகில னிதனு லாய்ந்த
நலத்தசொல் வழூஉச்சொ லென்ப தறிகில னவைதீர் கேள்விப்
புலத்தவர் யாரைக் கொண்டு போதித்து மிவனுக் கென்னு
மலைத்தனு வளைத்த முக்கண் மன்னவ னுன்னு மெல்லை.

(இ-ள்.) இலக்கணம் இந்நக்கீரனுக்கு இன்னமும் ஐயமறப்புலப்படவில்லை; இத்தேர்ச்சியின்மையால், ஆராய்ந்துவிதந்தகுணமுள்ள சொற்குற்றமுள்ளசொல் இவை யென்பதைச் சிறிதுமுணர்ந்திலன்; குற்றத்தினின்று நீங்கிய நூற்கேள்வியின்புலமையில் வல்லோராவாரைக்கொண்டு போதிப்போமென்று மேருவை வில்லாக வளைத்தருளிய சோமசுந்தரக்கடவுள் திருவுள்ளத்திற்கருதியருளுங்காலையில். எ-று. (௬)

பங்கயச் செங்கை கூப்பிப் பாலினோர் பொழியாள் சொல்வா
ளங்கணு வங்கை நெல்லிக் கனியென வனைத்துங் கண்ட
புங்கவா நினது சங்கைக் குத்தரம் புகல வல்லா
ரெங்குளா ரேனு மென்னெஞ் சுதிப்பதொன் றிசைப்பே னையா.

(இ-ள்.) பாலையொத்தசொல்லையுடைய உமாதேவியார் தாமரைமலர்போன்ற செவந்த திருக்கரங்களைக்குவித்துக்கூறுவார்: அங்கணனே! அங்கையிலேந்திய நெல்லிக் கனியைப்போல யாவுமுணர்ந்த பெரியோய்! உனது திருவுள்ள நிகழ்ச்சிக்கு விடை கூற வல்லவர் எங்குளர்? ஆயினும், ஐயனே! என் மனதில் நிகழ்ந்ததொன்றைக் கூறு கின்றேன். எ-று. (எ)

பண்டொரு போது வெள்ளிப் பனிவரை யிடத்துன் பாங்கர்ப்
புண்டவழ் குலிசக் கோமான் பூமகன் மாயப் புத்தே
ளண்டருஞ் சனக னாதி யருர்தவர் பிறரு மீண்டிக்
கொண்டன ரிருந்தா ரிந்தக் குவலயம் பொறுத மாதோ.

(இ-ள்.) முன்னொருகாலையில் வெள்ளிய இமயபருவதத்தில் உமது பக்கலில் நிணந்தவழும் வச்சிரமேந்திய இந்திரனும் பிரமனுந் திருமாலுந் தேவர்களுஞ் சனகர் முதலிய அரியதவசிரேஷ்டரும் வித்தியாதரர் முதலியோரும் நெருங்கியிருந்தனர்; இவ் வுலகுபொறையாற்றாது. எ-று. (அ)

இதுமுதலிரண்டுபாடல்கள் குளகம்.

தாழ்ந்தது வடகீ ழெல்லை யுயர்ந்தது தென்மேற் கெல்லை
சூழ்ந்தது கண்டு வானோர் தொழுதுனைப் பரவி யைய
வாழ்ந்திடு மரவம் பூண்டோ யொருவனின் னொப்பா னங்கே
வாழ்ந்திட விடுத்தா லிந்த வையநேர் நிற்கு மென்றார்.

(இ-ள்.) வடகிழக்கெல்லை தாழ்ந்தது. (பொறையின்மையால்) தென்மேற்கெ ல்லையுயர்ந்தது. அதனைக்கண்டு ஆலோசித்துத் திருமால்முதலிய தேவர்கள் வணங்கி, ஐயனே! கருதியபாம்பினை யாபரணமாகப் பூண்டவனே! நின்னையொப்பா னொருவன் தென்மேற்கெல்லையில் வாழ ஏவினால் இந்த உலகம் சமமாய் நிற்குமென்று குறையிரந் தார்கள். எ-று. (௯)

பைத்தலை புரட்டு முந்நீர்ப் பௌவமுண் டவனே யெம்மை
யொத்தவ னனையான் வாழ்க்கைக் குரியளா கியவுலோபா
முத்திரை யிமவான் பெற்ற முகிழ்முலைக் கொடியொப் பாளென்
றத்திரு முனியை நோக்கி யாயிடை விடுத்தா யன்றே.

(இ-ள்.) பரந்து அலைபுரளச்செய்யுங்கடலையுண்ட அகத்தியமுனிவனே எம்மை ப்போன்றவன்; அம்முனிவரன் இல்வாழ்கைக்குரியவளாகிய உலோபாமுத்திரையென் பவள் இமவான்பயந்ததனமாகிய அரும்பு அரும்பிய பூங்கொடியாகிய உமையை ஒப்பவ ளென்று அந்த ஞானச்செல்வத்தையுடைய முனிவரனைப்பார்த்தருளி அத்தென்மேற் கெல்லைக்குச் செலுத்தினாய். எ-று. (௧௦)

விடைகொடு போவா னொன்றை வேண்டினா னேகுந் தேயந்
தொடைபெறு தமிழ்நா டென்று சொல்லுப வந்த நாட்டி
னிடைபயில் மனத்த ரெல்லா மின்றமி ழாய்ந்து கேள்வி
யுடையவ ரென்ப கேட்டார்க் குத்தர முரைத்தல் வேண்டும்.

(இ-ள்.) விடைபெற்றுச்செல்லுமம்முனிவரன் ஒன்றை வேண்டுவானாயினன்: அடியேன்செல்லுந்தேசம் தொடையமைந்த தமிழ்நாடென்றுகூறுவர். அந்தத்தமிழ்நாட் டினிடத்துச் சஞ்சரிக்குமனிதர்களெல்லாருமினிய தமிழ்நூலையாராய்ந்து அந்நூற்கே ள்வி நிரம்பஉடையவர்களென்று கூறுவார்கள்; (ஆதலின்) அத்தமிழ்நூலில் வினவினார் க்கு அமையவிடை கூறவேண்டும். எ-று. (௧௧)

சித்தமா சகல வந்தச் செந்தமி ழியனூ றன்னை
யத்தனே யருளிச் செய்தி யென்றன னனையான் றேற
வைத்தனை முதனூ றன்னை மற்றது தெளிந்த பின்னு
நித்தனே யடியே னென்று நின்னடி காண்பே னென்றான்.

(இ-ள்.) எமதுஇறைவனே! அறியாமையாகிய மனக்குற்றமொழிய அந்தச்செந்தமிழ்க்குரிய இலக்கணநூலினை அருளிச்செய்யாயென்று குறையிரந்தனன். அம்முனிவரன்தெளிய முதனூலருளினை; அம்முதனூலினைத் தேர்ந்துணர்ந்தபின்னும், தனக்கோரிறுதியில்லோய்! அடியேனாகியயான் எப்பொழுது நின்றிருவடியைத் தரிசிப்பேனென்று கூறினன். எ-று. (௧௨)

கடம்பமா வனத்தி லெம்மைக் கண்டனை யிறைஞ்சி யுள்ளத்
திடம்பெற யாது வேட்டா யவையெலா மெம்பாற் பெற்றுத்
திடம்பெற மலயத் தெய்தி யிருக்கென விடுத்தா யென்று
குடம்பெறு முனியு மங்கே யிருக்கின்றான் கொடியி னோடும்.

(இ-ள்.) பெரியகடம்பாரணியத்தில் எம்மைக்கண்டு வணங்கியுள்ளத்தில்வரையறையற எவற்றைவிரும்பினையோ அவற்றையெல்லாம் எம்மிடத்தில் இடையீடறப்பெற்றுப் பொதியமலையிலிருக்கக்கடவாயென்று ஏவினை; கலசயோனியாகிய அம்முனிவரனுமத்திசையிலேசென்று உலோபாமுத்திரையோடுமிருக்கின்றனன். எ-று. (௧௩)

இனையதுன் றிருவுள் ளத்துக் கிசைந்ததே லிவற்குக் கேள்வி
யனையமா தவனைக் கூவி யுணர்த்தென வணங்கு கூற
வினையநா ணிகழ்ச்சி யெல்லா மறந்திடா தின்று சொன்ன
வனையதே செய்து மென்னா வறிவனை நினைந்தா னையன்.

(இ-ள்.) தேவரீர் திருவுள்ளத்துக்கு யான்கூறியது இயைந்ததாகில் இந்நக்கீரனுக்குத் திருவுளத்திற்கருதிய நூற்கேள்வியை அந்தமுனிவரனைக்கூவி யுரைத்தருளாயென்று உமாதேவியார்கூற, அந்நாளில்நிகழ்ந்த செய்திகளையெல்லாம் மறவாதின்றுகூறினை; அதுவேசெய்வோமென்று சோமசுந்தரக்கடவுளகத்தியமுனிவரைத் தமது திருவுளத்திற்கருதினர். எ-று. (௧௪)

உடைய நாயகன் றிருவுள முணர்ந்தனன் முடிமே
லடைய வஞ்சலி முகிழ்த்தன னருந்தவ விமானத்
திடைபு குந்தனன் பன்னியோ டெழுந்தன னகல்வா
னடைய லாகிவந் தடைந்தன னற்றமிழ் முனிவன்.

(இ-ள்.) தம்மையாளாகவுடைய சோமசுந்தரக்கடவுளின் திருவுள்ளக் குறிப்பையுணர்ந்து நல்லதமிழாசிரியராகிய அகத்தியமுநிவர் தமதுதலைமேன்முகிழ்த்தகைகளை அஞ்சலிகூப்பிச் செய்தற்கரிய தவமாகிய விமானத்தில்தமதுமனைவியோடு எதியெழுந்து பரந்தககனநெறியில் உலாவுநடைத்தொழிலையுடையவராய் வந்துசேர்ந்து. எ-று. (௧௫)

இதுமுதல் மூன்றுபாடல்கள் குளகம்.

இயங்கு மாதவத் தேரினும் பன்னியோ டிழிந்து
புயங்க னாலயம் புகுந்துநாற் புயம்புடை கிளைத்துத்
தயங்கு செம்பவ ளாசலந் தன்னையு மதன்பால்
வயங்கு மிந்திர நீலமால் வரையையும் பணியா.

(இ-ள்.) சஞ்சரிக்கும்பெரியதவமாகிய தேரினின்றும் தமது மனைவியோடிறங்கி, சர்ப்பாபரணத்தையணிந்த சோமசுந்தரக்கடவுளுடையதிருக்கோயிலுட்புகுந்து, நா

ன்கு திருப்புயங்கள் பக்கலிலே கிளைத்து விளங்கும் செவந்தபவளமலையாகிய அக்கடவுளையும், அம்மலையின் வாமபாகத்தில் விளங்கும் பெரிய இந்திரநீலமலையாகிய அங்கயற்கண்ணியாரையும் வணங்கி. எ-று. (௧௬)

பெருகு மன்புளந் துளும்ப மெய் யானந்தம் பெருக
வருகி ருந்தன னுவயிற் கீரனு மம்பொன்
முருக விழ்ந்ததா மரைபடிந் திறைவனை முன்போ
லுருகு மன்பினு லிறைஞ்சுவா னெல்லைவந் தடைந்தான்.

(இ-ள்.) பெரிய அன்பு மனத்தினின்றும் ததும்பிவழியவும், அதனால் அழியாத இன்பந்தன்னை விழுங்கிநிற்கவும்; அவ்விடத்தில் நக்கீரரும் அருகிலிருந்தனர்; அழகியவாசனையோடு மலர்ந்தபொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடி, சோமசுந்தரக்கடவுளை முன்போல நெக்குவிட்டுருகுமன்பினால் வணங்கவிளைவுடன் வந்தடைந்தனர் (அகத்திய முநிவர்). எ-று. (௧௭)

இருந்த மாதவச் செல்வனை யெதிர்வர நோக்கி
யருந்த வாவிவற் கியற்றமி ழுமைந்தில வெம்பாற்
றெரிந்த நீயதை யரிறபத் தெருட்டெனப் பிணியு
மருந்து மாகிய பெருந்தகை செய்யவாய் மலர்ந்தான்.

(இ-ள்.) தமது திருமுன்னரிருந்த அகத்தியமுனிவரையண்மையில்வரத்திருக்கடைக்கண்சாத்தி அரியதவத்தையுடையோய்! இந்நக்கீரனுக்கு இயற்றமிழின் பாகுபாடுகள் நிரம்பில. எம்மிடத்துத்தேர்ந்த நீ யவற்றைக் குற்றமறத் தேற்றுவாயென்றருள் செய்ய, நோயும்மருந்துமாகிய சோமசுந்தரக்கடவுள் செவந்த திருவாய்மலர்ந்தருளினார்.

வெள்ளை மாமதிப் பிளவணி வேணியங் கருணை
வள்ள லார்பணி சிரத்தினு மனத்தினுந் தாங்கிப்
பள்ள மேழையும் பருகினோன் பணியுநக் கீர
னுள்ள மாசற வியாகர ணத்தினை யுணர்த்தும்.

(இ-ள்.) வெண்ணிறம்வாய்ந்த பெருமைதங்கிய பிறையையணிந்த சடாமகுடத்தையுடைய அழகிய கிருபாவள்ளலாகிய சோமசுந்தரக்கடவுளருளிய திருப்பணியைச் சிரத்தின்மேலும் மனத்தின்மேலுஞ்சூடி, எழுகடலையும்பருகிய அகத்தியமுனிவர் தம்மைப்பணியும் நக்கீரரது மனக்களங்கமொழிய வியாகரணத்தினையுணர்த்துவாராயினார்.

இருவ கைப்புற வுரைதழீஇ யெழுமத மொடுநாற்
பொருளொ டும்புணர்ந் தையிரு குற்றமும் போக்கி
யொருவி லையிரண் டழகொடு முத்தி யெண்ணான்கு
மருவு மாதிநூ லினைத்தொகை வகைவிரி முறையால்.

(இ-ள்.) இருவகைப்புறவுரைகளையு முன்னர்த்தழுவி எழுவகைமதங்களோடும் நான்கு பொருளோடுங்கூடி, பத்துவகைக்குற்றங்களையும் ஒழித்துநீங்குதலில்லாத பத்தழகுகளோடும் முப்பத்திரண்டழகோடும் பொருந்திய முதனூலைத்தொகைவகை விரியென்னுமுறைகளால். எ-று.

"முகவுரைபதிக மணிந்துரை நூன்முகம் புறவுரைதந்துரை புனைந்துரைபாயிரம்" என்றசூத்திரத்தால். புறவுரையென்பது பாயிரத்திற்கோர் பரியாயநாமமென்க. "பாயிரம் பொதுச்சிறப்பெனவிருபாற்றே" என்றாராகலின் "இருவகைப்புறவுரைதழீஇ" யென்னப்பட்டது. எழுமதமாவன—"எழுவகைமதமே யுடன்படன்மறுத்தல் - பிறர்தம்மதமேற் கொண்டுகளைவே-தாஅனுட்டித்தனதுநிறுப்பே-யிருவர்மாறுகொளொருதலைதுணிவே - பிறர்நூற்குற்றங்காட்டலேனைப்பிறிதொடுபடாஅன் றன்மதங்கொளலே" என்பதனானும்

நாற்பொருளென்பதனை "அறம்பொரு ளின்பம் வீடடைதனூற்பயனே" என்பதனானும், ஐயிருகுற்றமென்பதனை "குன்றக்கூறன் மிகைபடக்கூறல், கூறியது கூறன் மாறுகொளக்கூறல், வழூஉச்சொற்புணர்த்தன் மயங்கவைத்தல், வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்றுவிரித்தல், சென்றுதேய்ந்திறுத னின்றுபயனின்மை, யென்றிவையீரைங்குற்றநூற்கே." என்பதனானும், ஐயிரண்டழகுவென்பதனை "சுருங்கச்சொல்லல் விளங்கவைத்த, னவின்றோர்க்கினிமை நன்மொழிபுணர்த்த, லோசையுடைமை யாழமுடைத்தாதல், விழுமியதுபயத்தல்விளங்குதாரணத்த, தாகுதனூலிற் கழகெனும்பத்தே" என்பதனானும், உத்தியெண்ணான்கு என்பதனை "நுதலிப்புகுதலோத்துமுறைவைப்பே, தொகுத்துச்சுட்டல் வகுத்துக்காட்டன், முடித்துக்காட்டன் முடிவிடங்கூறல், தானெடுத்துமொழிதல் பிறன்கோட்கூறல், சொற்பொருள்விரித்த றொடர்ச்சொற்புணர்த்தல், இரட்டுறமொழித லேதுவின்முடித்தல், ஒப்பின்முடித்தன்மாட்டெறிந்தொழுகல், இறந்ததுவிலக்க லெதிரதுபோற்றல், முன்மொழிந்துகோடல் பின்னதுநிறுத்தல், விகற்பத்தின்முடித்தன்முடிந்ததுமுடித்தல், உரைத்துமென்றலுரைத்தாமென்றல், ஒருதலைதுணிதலெடுத்துக்காட்டல், எடுத்தமொழியினெய்தவைத்தல், இன்னதல்லதிதுவெனமொழிதல், எஞ்சியசொல்லி னெய்தக்கூறல், பிறநூன்முடிந்தது தானுடன்படுதல், தன்குறிவழக்கமிகவெடுத்துரைத்தல், சொல்லின்முடிவினப்பொருண்முடித்தல், ஒன்றினமுடித்த றன்னினமுடித்தல், உய்த்துணரவைப்பென வுத்தியெண்ணான்கே" என்பதனானும் பிறவேதுக்களானும் உணர்க. விரிவுகருதிப்பிறவற்றையும் விளக்காது விடுத்தாம். (௨0)

கருத்துக் கண்ணழி வாதிய காண்டிகை யானும்
விருத்தி யானுநூற் கிடைப்பொரு ளெக்கற விளக்கித்
தெரித்து ரைத்தன னுரைத்திடு திறங்கண்டு நூலி
னருத்த மேவடி வாகிய வாதியா சிரியன்.

(இ-ள்.) கருத்துரையும் பதப்பொருளுமுதலிய காண்டிகையுரையாலும், பாடமுதலிய விருத்தியுரையாலும், அம்முதனூலினுட் கிடைப்பொருளினையையமறத்தெருட்டி, உட்பொருளை விளக்கிக்கூறினர்; அந்நூலின் பொருளே திருவுருவாகிய சோமசுந்தரக்கடவுள் அவர் போதிக்கும் வகையைக்கண்டு. எ-று.

கருத்து என்பதை "கவிப்பொருள் சுருக்கிக் காட்டுறற்பரியம்" என்பதனானும், பதப்பொருள் என்பதை "தொகுத்தகவியைச் சொல்சொல்லாகப், பகுத்துப்பொருள் சொலப் பதவுரையாகும்" என்பதனாலும், காண்டிகை என்பதை "கருத்துப்பதப்பொருள் காட்டுமூன்றினும், அவற்றொடுவினாவிடை யாக்கலானுஞ், சூத்திரத்துட்பொருடோற்றுவகாண்டிகை" என்பதனானும், விருத்தி என்பதை "சூத்திரத்துட்பொருளன்றியுமாண்டைக், கின்றியமையாதியாவையும் விளங்கத், தன்னுடையானும் பிறநூலாயினும் ஐயமகலவைங்காண்டிகை யுறுப்பொடு, மெய்யினை யெஞ்சாதிசைப்பதுவிருத்தி" என்பதனானும் "பாடங்கருத்தே சொல்வகை சொற்பொருள் தொகுத்துரை யுதாரணம் வினாவிடை விசேடம் விரிவதிகாரந் துணிவுபயனோ டாசிரியவசனமென் றீரேழுரையே" என்பதனானும் உணர்க. (௨௧)

தருக்கு மின்பமுங் கருணையுந் தழையமா தவனைத்
திருக்க ரங்களான் மகிழ்ச்சியுட் டிளைத்திடத் தழுவிப்
பெருக்க வேண்டிய பேறெலாம் பீடுற நல்கி
யிருக்கை யிற்செல விடுத்தன னாலவா யிறைவன்.

(இ-ள்.) களிப்பும் இன்பமும் திருவருளும்பெருக, திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் அந்த அகத்தியமுனிவரைத் தமது திருக்கரங்களால் ஆராம

கிழ்ச்சியுளின்டவிடாதபூந்தத் தாம்புல்லி, அவர் ஈட்டவேண்டிய டயுங்களைபெல்லாம் ஒருசேரச் சிறக்கக்கொடுத்துப்பொதியமலையிற் செல்லவிடை கொடுத்தருளினர்.எ-று.

பொன்ன ளொடுங் குறுமுனி விடைகொடு போன
பின்னை யாருயிர்க் கிழத்திதன் பிரானைநேர் நோக்கி
யென்னை நீயிவற் குணர்த்திடா தித்தவப் பொதியின்
மன்ன னுணர்த் தியதென மதுரைநா யகனும்.

(இ-ள்.) பொன்னையொத்த உலோபாமுத்திரையோடும் அகத்தியமுனிவர் விடைபெற்றுச் சென்றபின் அரிய உயிர்போன்ற பிராட்டியார் தமது தலைவராகிய சோமசுந்தரக்கடவுளை யெதிரே பார்த்தருளி, தேவரீர் இந்தநக்கீரனுக்குப் போதியாது இந்தப் பொதியமலையில் வசிக்குந் தவசிரேட்டனாகிய அகத்தியமுனிவனைப் போதித்தது யாது காரணம்? என்று வினவ, மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளும்.எ-று. (௨௩)

தன்னை நித்தலும் வழிபடுந் தகுதியோர் சாலப்
பொன்ன ளிப்பவர் தொடுத்தமற் சரமிலாப் புனிதர்
சொன்ன சொற்கட வாதவர் துகடவிர் நெஞ்சத்
தின்ன வர்க்குநூல் கொளுத்துவ தறமென விசைப்ப.

(இ-ள்.) (போதகாசிரியர்கள்) தம்மை வழிபட்டொழுகுவோர், மிகவும்பொருள்கொடுப்போர், அழுக்காறடைதலில்லாத நல்லொழுக்கமுடையவர் சொன்ன சொல்லைக்கடவாதவருமாகிய குற்றத்தினின்று நீங்கிய மனத்தையுடைய இவர்போல்வார்க்குப் போதிப்பது தருமமென்று பெரியோர் கூறுவார்.எ-று. (௨௪)

இவனெ டுத்தமற் சரத்தினல் யாமுணர்த் தாதத்
தவனை விட்டுணர்த் தினமெனச் சாற்றினன் கேட்டுக்
கவலை விட்டக மகிழ்ச்சிகொண் டிருந்தனள் கதிர்கா
லவம ணிக்கலம் பூத்ததோர் கொடிபுரை நங்கை.

(இ-ள்.) இந்நக்கீரன்கொண்ட அழுக்காற்றால் யாம் உணர்த்தாது இந்த அகத்தியமுனிவனைவிட்டுப் போதித்தோமென்று கூறியருளினர்; ஒளிவீசும் நவரத்தினங்களழுத்திய ஆபரணங்களாகிய மலர்கள் பூத்தொசிந்த ஒப்பில்லாத பூங்கொடியையொத்த பிராட்டியார் அதனைக் கேள்வியுற்றுக்கவலையொழிந்து மனங்களிகூர்ந்திருந்தனர்.எ-று.

கற்ற கீரனும் பின்புதான் முன்செய்த கவிகண்
முற்று மாய்ந்துசொல் வழுக்களும் வழாநிலை முடிபு
முற்று நோக்கின னறிவின்றி முழுதொருங் குணர்ந்தோன்
சொற்ற பாடலிற் பொருள்வழுச் சொல்லினே னென்னு.

(இ-ள்.) அகத்தியர்பாற்கற்றுணர்ந்த நக்கீரனும் பின்னர்த் தான் முன்னர்ச்செய்த செய்யுள்கள் முற்றும் ஆராய்ந்து, தான்புணர்த்திய வழூஉச்சொல் முடிபையும் வழாநிலைமுடிபையும் சிந்தித்து ஆராய்ந்து சற்றும் உணர்ச்சியில்லாமல், முற்றும் ஒருசேர வுணர்ந்த பெருமானர் கூறியருளிய பாசுரத்தில் பொருள்வழுகூறினேனே அஃதென்ன மடமையென்று.எ-று (௨௬)

மறையி னந்தமுந் தொடாததா ணிலந்தொட வந்த
நிறைப ரஞ்சுடர் நிராமய நிருத்தற்குப் பிழைத்தேன்
சிறிய கேள்வியோர் கழியவுஞ் செருக்குடை யோரென்
றறிஞர் கூறிவ பழஞ்சொலென் னளவிற்றே யம்ம.



சங்கத்தார்கலகந்தீர்த்தபடலம்.

(இ-ள்.) பிரபல சுருதியாகிய உபநிடதமும் அறிதற்கரிய திருவடிகள் நிலத்தில் தீண்ட (தம்மையடைந்த ஓரந்தணன் பொருட்டுப் புலவருருக்கொடு) வந்தருளிய பரஞ்சுடராகிய ஞானநடனத்தையுடைய பெருமானார்க்குத் தவறுசெய்தேன்; முற்றுங் கல்லாதார் மிகவும் இறுமாப்புடையரென்று ஆன்றோர் கூறிய மூதுரை மடமையேன் அளவுள்ளது.எ-று. (உஎ)

அட்டமூர்த்திதன் றிருவடிக் கடியனேன் பிழைக்கப்
பட்ட தீங்கினா லெனையவ னுதல்விழிப் படுதீச்
சுட்ட தன்றியென் னெஞ்சமுஞ் சுடுவதே யென்றென்
றுட்ட தும்பிய விழும்நோ யுவரியு ளாழ்ந்தான்.

(இ-ள்.) அட்டமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவடிக்கு அடியேன் அபராதியாகிய தீமையால் பேதையேனை யப்பெருமானார் நுதற்கண்ணிலுள்ளதீ புறம் பேசுட்டது, அதுவுமன்றி எனதறியாமையெனது அகத்தையும் சுடுகின்றதே யாதுசெய்வேனென்று தன் மனத்திற்பொங்கியெழுந்த துன்பநோயாகிய கடலிலழுந்தினார்.எ-று.

மகவை யீன்றதாய் கைத்திடு மருந்துவாய் மடுத்துப்
பகைப டும்பிணி யகற்றிடும் பான்மைபோ லென்னை
யிகலி லைத்தறி வுறுத்தினாற் கேழையேன் செய்யத்
தகுவ தியாதென வரம்பிலா மகிழ்ச்சியுட் டாழ்ந்தான்.

(இ-ள்.) பிள்ளையைப்பெற்றதாய் (அப்பிள்ளைபடுநோய்க்காற்றாது) கசக்குமருந்தினை வலியவூட்டிமுரணிவருத்தும் நோயையொழிக்குந்தன்மைபோல என்மேற்சினங்கொண்டருளி யறிவுறுத்திய தேவரீர்க்கு அறிவில்லாத சிறியேன் கைம்மாறாகச் செய்யக்கிடந்தது யாதென்று எல்லையில்லாத ஆநந்தத்திலழுந்தினான்.எ-று. (உக)

மாதவன் றனக் காலவாய் மன்னவ னருளாற்
போதகஞ்செய்த நூலினைப் புலவரே னோர்க்கு
மாதரஞ்செய்க் கொளுத்தியிட் டிருந்தன னமலன்
பாத பங்கய மூழ்கிய பத்திமைக் கீரன்.

(இ-ள்.) அகத்தியமுனிவர் தனக்குத் திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளினால் போதித்த இலக்கணநூலினை, அப்பெருமானுடைய திருவடித்தாமரையிலழுந்திய பத்திமையையுடைய நக்கீரன் ஏனையசங்கப்புலவர்களுக்கும் விருப்பமிகப் புலப்படுத்தியிருந்தனன்.எ-று. (௩௦)

கீரனுக்கு இலக்கணமுபதேசித்தபடலம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-உ௬௯௭.

---

## ஐம்பத்தைந்தாவது

# சங்கத்தார்கலகந்தீர்த்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காமனைப் பொடியாக் கண்ட கண்ணுத றென்னூல் கீர
னாமநற் புலவற் கீந்த நலமிது பொலம்பூங் கொன்றைத்
தாமனச் சங்கத் துள்ளார் தலைதடு மாற்றந் தேற
வுமனைக் கொண்டு பாட லுணர்த்திய வொழுக்கஞ் சொல்வாம்.

(இ-ள்.) மன்மதனை நீறாக்கிய சோமசுந்தரக்கடவுள் முதலாவிளை நக்கீரரென்னும் பெயரினையுடைய வல்லபுலவர்க்கு அகத்தியமுனிவரால் தெரிவித்தருளிய திருவிளையாடலிது. பொன்னிறம்வாய்ந்த கொன்றைமலராலாகிய மாலையை யணிந்த அக்கடவுள் அந்தச் சங்கப்புலவர்கள் தத்தந்தலைதடுமாற்றத்தினின்று நீங்கவைசியர்குலத்திலுதித்தவூமைப்பிள்ளையாலைக்கொண்டு அப்புலவர்களியற்றிய செய்யுளின் தராதரத்தைத் தெரிவித்த திருவிளையாடலை யினிக்கூறுவோம்.எ-று. (க)

அந்தமில் கேள்வி யோரெண் ணறுவரும் வேறு வேறு
செந்தமிழ் செய்து தம்மிற் செருக்குறு பெருமை கூறித்
தந்தமின் மாறுய்த் தத்தந் தராதர மளக்க வல்ல
முந்தைநூன் மொழிந்த வாசான் முன்னர்வந் தெய்தி னூரே

(இ-ள்.) அளத்தற்கரிய நூற்கேள்வியில்வல்ல நாற்பத்தெண்மரும் தம்முள் தனித்தனிப் பிரபந்தங்களைச்செய்து, தம்முள் இறுமாத்தலால்யாம்பெரியம் யாம்பெரியம் எனக்கூறித் தம்முள் மாறுபட்டு, தத்தம் சிறுமை பெருமைகளை யளந்தறியவல்ல முதனூல் கூறியருளிய பேராசியராகிய சோமசுந்தரக்கடவுள் திருமுன்வந்தடைந்தனர். எ-று. (உ)

தொழுதன ரடிகள் யாங்க டொடுத்தவிப் பாட றம்முள்
விழுமிதுதுந் தீதுந் தூக்கி வேறுபா டளந்து காட்டிப்
பழுதறுத் தையந் தீரப் பணிக்கெனப் பணிந்தார் கேட்டு
முழுதொருங் குணர்ந்த வேத முதல்வனு முக்கண் மூர்த்தி

(இ-ள்.) வணங்கி அடிகளே! யாங்கள்பாடிய பிரபந்தத்துள் இஃதழகுடையதெனவும் இது குற்றமுள்ளதெனவும் முன்னர்ச் சீர்தூக்கி அவற்றின் பெருமைகளைத் தெரித்து எம்முன்எழுந்த இறுமாப்பினை யொழித்து, மயக்கினையொழிக்கப் பணித்தருளக்கடவாயென்று குறையிரந்தனர்; முற்றுமுணர்ந்த வேதமுதல்வராகிய சோமசுந்தரக் கடவுள் கேட்டருளினர்.எ-று. (ங)

இருவருந் துருவ நீண்ட வெரியழற் றாணிற் றோன்று
முருவென வறிவா னந்த வுண்மையா யுலகுக் கெல்லாங்
கருவென முளைத்த மூல விலிங்கத்து ணின்றுங் காண்டற்
கரியதோர் புலவ னாகித் தோன்றியொன் றருளிச் செய்வான்.

(இ-ள்.) பிரமனுந்திருமாலுந்தேட எல்லையறவோங்கிய அக்கினித்தம்பத்தினின்றுந்தோன்றிய திருவுருவைப்போலச் சச்சிதானந்தவடிவாய் உலகத்திலுள்ள சிவலிங்கங்களுக்கெல்லாம் பிறப்பிடமாக முன்னர்த்தோன்றிய இந்த மூலவிலிங்கத்தினின்றுங் காணுதற்கரிய ஒருபெரும்புலமைத் திருவுருக்கொண்டு தோன்றி யொன்றருளிச் செய்வாராயினர்.எ-று. (ச)

கலிவிருத்தம்.

இம்மாநக ருள்ளானொரு வணிகன்றன பதியென்
றம்மாநிதிக் கிழவோன்மனை குணசாலினி யனையார்
தம்மாதவப் பொருட்டால்வெளிற் றறிவாளரைத் தழுவும்
பொய்ம்மாசற வினன்போலவ தரித்தானொரு புத்தேள்

(இ-ள்.) இந்தப் பெரியமதுரைத்திருநகரில்வசிப்பவன் ஒருவைசியன்: அவன் தனபதியென்று காரணப்பெயர்பெற்று, அந்தப்பெரிய இருநிதிக்கு உரியவனாகிய குபேரனையொத்தவன்; அவன் மனைவி குணசாலி எனப்பெயருடையாள்; அவ்விருவரும் செய்த தவத்தினிமித்தமாக மந்த புத்தியுடை யவரைவிடாதுதொடர்ந்த அஞ்ஞானமாகிய இருளொழிய, சூரியனைப்போல ஒப்பில்லாத முருகக்கடவுளவதரித்தனர்.எ-று. (ரு)

ஓயாவிற்லன் மதனுக்கிணை யொப்பானவ னாமச்
சேயாமவ னிடைநீருரை செய்யுட்கவி யெல்லாம்
போயாடுமி னனையானது புந்திக்கிசைந் தானன்
றுயாவரு மதிக்குந்தமி ழதுவேயென வறைந்தான்.

(இ-ள்.) குறைபடாத வெற்றியையுடைய மன்மதனுக்கு அழகிலொப்பவர் அப்பிள்ளை யூமைப்பிள்ளையாம்; அவரிடத்து நீங்கள்கூறிய பிரபந்தத்திலுள்ள பாடல்களையெல்லாம் போய்ச்சொல்லுங்கள். அப்பிள்ளையினிதயத்துக்கு அந்நூல் பொருந்துமாகில் யாவரும் மிகவும் நன்குமதிக்கும் பிரபந்தமதுவேயென்று கூறியருளினர்.-எ-று.

வன்றுண்மழ விடையாயவன் மணிவாணி கனூம
னென்றுலவன் கேட்டெங்ஙன மிப்பாடலிற் கிடக்கு
நன்றானவுந் தீதானவு நயந்தாய்ந்ததன் றன்மை
குன்றுவகை யறைவானென மன்றுடிய கூத்தன்.

(இ-ள்.) விரைந்துசெல்லும் கால்களமைந்த இளமைபொருந்திய இடபவூர்தியையுடையாய்! அப்பிள்ளை இரத்தினங்களை யாராயும் வைசியர்குலத் துதித்தவனும் ஊமையும் ஆனாலும், அப்பிள்ளைகேட்டு இப்பிரபந்தங்களிலமைந்து கிடக்கும் குணங்களையும் குற்றங்களையும் விரும்பி யாராய்ந்து, அவற்றின் தன்மையைக் குறையாதவண்ணம் எவ்வாறறிவார்? என்று வினவ, வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடிய பெருமானார். எ-று. (எ)

மல்லார்தடம் புயவாணிக மைந்தன்றனக் கிசையச்
சொல்லாழமும் பொருளாழமுங் கண்டான்முடி துளக்காக்
கல்லார்புயம் புளகித்துளங் களிதூங்குவன் கலக
மெல்லாமகன் றிடுமுங்களுக் கென்றாலயஞ் சென்றான்.

(இ-ள்.) மற்போர்நிறைந்த பெருத்த புயத்தையுடைய வைசியகுல சூளாமணியாகிய பிள்ளையார் தமக்குப் பொருந்தச்சொல்லாழ்ச்சியையும் பொருளாழ்ச்சியையும் நோக்கில் சிரக்கம்பஞ்செய்து மலையையொத்த தோள் புளகங்கூர்ந்து மனங்களிகூர்வர்; உங்களிலுள்ள கலகங்களெல்லாமொழியுமென்று திருக்கோயிலுட்சென்றருளினர்.

பின்பாவல ரெல்லாம்பெரு வணிகக்குல மணியை
யன்பாலழைத் தேகித்தழ தவையத்திடை யிருத்தா
நன்பான்மலர் நறுஞ்சாந்துகொண் டருச்சித்தனர் நயந்தே
முன்பாவிருந் தருந்தீந்தமிழ் மொழிந்தாரவை கேளா.

(இ-ள்.) பின்பு புலவர்களெல்லாம் பெரிய வணிகர்குலசிகாமணியை அன்பினலழைத்துச்சென்று, தமது கழகத்திலிருத்தி, நல்ல பகுப்பினையுடைய மலரையும் நறுமணங்கமழுஞ் சந்தனத்தையுங்கொண்டு விரும்பி யருச்சனைசெய்து முன்னிரிருந்து அரிய இனிய தத்தஞ்செய்யுள்களைக்கூறினார்கள். அவற்றைக்கேட்டு. எ-று. (௬)

மகிழ்ந்தான்சிலர் சொல்லாழ்சசியை மகிழ்ந்தான்சிலர் பொருளை
யிகழ்ந்தான்சிலர் சொல்வைப்பினை யிகழ்ந்தான்சிலர் பொருளைப்
புகழ்ந்தான்சிலர் சொல்லின்பமும் பொருளின்பமு மொருங்கே
திகழ்ந்தான்சிலர் சொற்றிண்மையும் பொருட்டிண்மையுந் தேர்ந்தே.

(இ-ள்.) சிலர் கூறிய செய்யுள்களிலுள்ள சொல்லாழ்ச்சியை நோக்கி மகிழ்கூர்ந்தார்; சிலர் கூறியசெய்யுள்களிலுள்ள பொருளாழ்ச்சியை நோக்கி மகிழ் கூர்ந்தனர்; சிலர் தத்தஞ் செய்யுளிற் றொடுத்தசொற்களை நோக்கி யிகழ்ந்தார்; சிலர் தத்தஞ் செய்யு

ளிலமைந்த பொருளைநோக்கி யிகழ்ந்தனர்; சிலர்கூறிய செய்யுளிலுள்ள சொற்சுவையையும் பொருட்சுவையையும் நோக்கிப் புகழ்ந்தனர்; சிலர்கூறிய செய்யுளிலுள்ள சொல்லாற்றலையும் பொருளாற்றலையும் ஒருசேரத் தெளிந்து முகமலர்ந்தார்.எ-று. (கㅇ)

இத்தன்மைய னாகிக்கலை வல்லோர்தமி ழெல்லாஞ்
சித்தங்கொடு தெருட்டுஞ்சிறு வணிகன்றெருள் கீரன்
முத்தண்டமிழ் கபிலன்றமிழ் பரணன்றமிழ் மூன்று
மத்தன்மைய னறியுந்தொறு மறியுந்தொறு மெல்லாம்.

(இ-ள்.) இப்பெற்றியராகி நூலில்வல்ல புலவர்கள்கூறிய செய்யுள்களையெல்லாம் தமது இதயத்தால் குணங்குற்றங்களைப் புலப்படுத்திய வைசியப்பிள்ளையார் நூலாராச்சியிற் றேர்ந்த நக்கீரர் இயற்றிய இயலிசைநாடகம் வாய்ந்த செய்யுளும் கபிலர் செய்த செய்யுளும் பரணர் செய்த செய்யுளும் ஆகிய மூன்றையும் இதயத்தாற் புலப்படுத்தும் அப்பிள்ளையார் உணருந்தோறுமெல்லாம்.எ-று. (கக)

நுழைந்தான்பொரு டொறுஞ்சொற்றொறு நுண்டீஞ்சுவை யுண்டே
தழைந்தானுடல் புலனைந்திலுந் தனித்தான்சிரம் பணித்தான்
குழைந்தான்விழி வழிவேலையுட் குளித்தான்றனை யளித்தான்
விழைந்தான்புரி தவப்பேற்றினை விளைத்தான்களி திளைத்தான்.

(இ-ள்.) பொருட்சுவைதோறும் நுண்ணியசொற்கடோறும் அமைந்த இனிய சுவையையுண்டு உடல்பூரித்து ஐம்புலங்களிலும் செல்லாதுஒருபுலன்வழிப்பட்டுச் சிரக்கம்பஞ்செய்து மனங்குழைந்து தன்னைப்பெற்றவணிகன்விரும்பிச்செய்த தவப்பயனைப்புலர்க்கும் புலப்படுத்திய அப்பிள்ளையார் இன்பத்தினின்று கண்களின்வழியாய்ப்பொங்கி. எ-று. (கஉ)

பல்காசொடு கடலிற்படு பவளஞ்சுடர் தளர
மெல்லாநிறுத் தளப்பானென வியல்வாணிகக் குமரன்
சொல்லாழமும் பொருளாழமுந் துலைநாவெனத் தூக்க
நல்லாறறி புலவோர்களு நட்டாரிகல் விட்டார்.

(இ-ள்.) பலவகைப்பட்ட இரத்தினங்களோடு கடலிற்றோன்றிய பவளமும் விளங்குமுத்தங்களுமாகியவற்றையெல்லாம் துலாக்கோலால் நிறுத்துஅளவறுப்பவர்போல் புருட்விலக்கணங்களமைந்த வணிகப்பிள்ளையார் செய்யுள்களிலமைந்த சொல்லாழ்ச்சியையும் பொருளாழ்ச்சியையும் தமது நாவையே துலையாகக்கொண்டு அளவறுக்க நல்ல நூனெறிகளையுணர்ந்த புலவர்கள்யாவரும் தம்முள் நட்புக்கொண்டுபகையைவிட்டார்கள். எ-று. (கங)

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

உலகினுட் பெருகி யந்த வொண்டமிழ் மூன்றும் பாடற்
றிலகமாய்ச் சிறந்த வாய்ந்த தெய்வநா வலருந் தங்கள்
கலகமா னவையிற் றீர்ந்து காசறு பனுவ லாய்ந்து
புலமிகு கோட்டி செய்து பொலிந்தன ரிருந்தார் போலும்.

(இ-ள்.) நக்கீரர் கபிலர் பரணர் கூறியஅந்த முத்தமிழும் உலகத்தில்பரவி நூல்களுக்கிட்ட தனித்தனிதிலகங்களைப்போலச்சிறந்துவிளங்கின; ஆராய்ந்ததெய்வப்புலவர்கள் நாற்பத்தெண்மரும் தம்முட்கலகமாகிய குற்றத்தினின்றும்நீங்கி குற்றமற்றநூல்களை யாராய்ந்து அறிவான்மிக்க வாதஞ்செய்து விளங்கியிருந்தார்கள்.எ-று. (கச)

**சங்கத்தார்கலகந்தீர்த்தபடலம்முற்றிற்று.**

ஆக்த் திருவிருத்தம் - உகூகக.

---

## ஐம்பத்தாறுவது
# இடைக்காடன்பிணக்குத்தீர்த்தபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குடைக்காடன் பசிக்கன்னக் குழியுருத்திவேட்கையறக் கொடுத்த கங்கைச், சடைக்காடன் புலவரிக றணிவித்த முறையிதுமேற் றன்னைப் பாடுந், தொடைக்காடன் பகன்றிகழ்ந்த தென்னவனை முனிந்துதன்னைத் தொழுதுபோனவிடைக்காட னுடன்போய்ப்பின் னெழுந்தருளிப் பிணக்கறுத்த வியல்பு சொல்வாம்.

(இ-ள்.) குடையையேந்திய குண்டோதரனது பசியின்பொருட்டு அன்னக்குழியையுண்பித்து (அப்பசிதணிவித்து) நீர்வேட்கையையும் ஒழியச்செய்த கங்கையினைத்தரித்த சடையையுடைய சோமசுந்தரக்கடவுள் சங்கப்புலவர்களுடைய கலகத்தையொழித்த திருவிளையாடலிதுவாகும். அதன்மேற் றன்மேற்பாடியசெய்யுளை நன்குமதிக்கும் அன்பினையொழிந்து நிந்தித்த குலேசபாண்டியனைக் கோபித்துத் தன்னைவணங்கிச்சென்ற இடைக்காடனோடு போய்ப்பின்னர் பாண்டியன் வேண்டுகோளால் எழுந்தருளியபிணக்கினையொழித்தருளிய திருவிளையாடலை யினிக்கூறுவாம்.எ-று. (க)

இந்திரன்றன் பழிதுரத்தி யரசளித்துப் பின்புகதி யின்ப மீந்த [தி
சுந்தரன்பொன்னடிக்கன் புதொடுத்துநறுஞ்சண்பகத்தார் தொடுத்துச்சாத்
வந்தனைச்செய் திருத்தொண்டின் வழிக்கேற்பச் சண்பகப்பூ மாற வேந்த
னந்தரசூ டாமணியாஞ் சிவபுரத்து ணிறைசெல்வ மடைந்தா னிப்பால்.

(இ-ள்.) இந்திரனது பழியையோட்டி அவனது அரசைக்கொடுத்துப்பின்புமுத்தியின்பத்தையுங்கொடுத்தருளிய சோமசுந்தரேசரது பொன்போன்ற திருவடிக்கீழ் அன்புமிகுந்து நறுமணங்கமழுஞ்சண்பகமலரால் மாலை தொடுத்துச் சாத்திவந்தித்தொழுகுந் திருத்தொண்டின்வழிபாட்டிற்கு ஒப்ப, சண்பகபாண்டியன் என்னுமரசன் தேவர்களுக்குச் சிரோன்மணியாக விளங்குகின்ற சிவபுரத்தினுள் என்றுமழியாத பெருஞ்செல்வமாகிய சிவபத்தை அடைந்தனன். இப்புறம்.எ-று. (உ)

ஆற்றன்மிகு பிரதாப சூரியன்வங் கிசத்துவச னளவில் சீர்த்தி
சாற்றரிய விரிபுமருத் தனன்சோழ வங்கிசாந் தகன்றான் வென்றி
மாற்றரிய புகழ்ச்சேர வங்கிசாந் தகன்பாண்டி வங்கி கேசன்
றேற்றமுறு பரித்தேவர் வங்கிசசிரோ மணிபாண்டீச் சுரன்றான் மன்னே.

(இ-ள்.) வலிமை மிக்க பிரதாபசூரியனென்னும் பாண்டியனும் வங்கிசத்துவசபாண்டியனும் அளவற்ற கீர்த்திவாய்ந்த சொல்லுதற்கரிய இரிபுமருத்தனபாண்டியனும் சோழவங்கிசாந்தகபாண்டியனும் ஒழித்தற்கரியவெற்றியும் புகழும்பொருந்திய சேரவங்கிசாந்தகபாண்டியனும் பாண்டிவங்கிகேசபாண்டியனும் சாட்சிக்கினிய குதிரைபூண்ட இரதவங்கிச் சிரோமணிபாண்டியனும் பாண்டீச்சுர பாண்டியனும்.எ-று. (ங)

துணிவுடைய குலத்துவசன் வங்கிசபூ டணமாறன் சோம சூடா
மணிகுலசூ டாமணியே யிராசசூ டாமணியே மாற்றா போற்றிப்
பணியவரும் பூபசூ டாமணியே குலேசபாண் டியனே யென்னக்
கணிதமுறு பதினைவர் வழிவழிவந் துதித்துநிலங் காவல் பூண்டோர்.

இ-ள்.) மனவுறுதியினையுடைய குலத்துவசபாண்டியனும் வங்கிசபூடணபாண்டியனும் சோமசூடாமணிபாண்டியனும் குலசூடாமணிபாண்டியனும் இராசசூடா

மணிபாண்டியனும் பகைவர்கள்துதித்து வணங்கிநிற்கும் பூபசூடாமணிபாண்டியனும் குலேசபாண்டியனும் என்று எண்ணப்படும் பதினைந்து பாண்டியர்கள் அச்சண்பகபாண்டியன்வழியேவந்து தோன்றிநிலவுலகைக்காக்குந் தொழிலில்நின்றார்கள்.எ-று. (௪)

அத்தகைய பாண்டியருட் குலேசபாண் டியனென்னு மரசன் றோண்மேல்
வைத்தவனி தலம்புரப்போ னிலக்கணமு மிலக்கியமும் வரம்பு கண்டோ
னெத்தகைய பெருநூலு மெல்லைகண்டோ னாதலினா லிவனுக் கேற
முத்தமிழோர் பயில்சங்க மிடங்கொடுத்த தணியமணி முழவுத் தோளான்.

(இ-ள்.) அவ்வகைய பதினைந்துபாண்டியர்களுள், குலேசபாண்டியராசன் தனது தோளின்மேல் பூமிபாரத்தைவைத்துக்காப்பவனும் இலக்கணமும்இலக்கியமுமாகிய இவற்றின்கரையைக்கண்டவனும் எத்தகையபெருநூலையும் வரம்புகண்டவனுமாதலின், இப்பாண்டியனுக்கு (சங்கப்புலவர்களோடு ஒன்றாக ஏறியிருக்க முத்தமிழும்பயின்ற புலவர்கள்வசிக்குஞ் சங்கப்பலகை இடந்தந்தது. அந்த அழகிய மத்தளம்போலத்திரண்ட தோளையுடைய குலேசபாண்டியன்.எ-று.

முத்தமிழ்—இயல் - இசை - நாடகத்தமிழ்கள். எத்தகைய பெருநூலும் என்பதிலுள்ள முற்றும்மையால் கலைகள் அறுபத்துநான்கினையும் கொள்ளக்கிடந்தன. (௫)

கழிந்தபெருங் கேள்வியினா னெனக்கேட்டு முழுதுணர்ந்த கபிலன் றன்பாற், பொழிந்தபெருங் காதன்மிகு கேண்மையினா னிடைக்காட்டுப் புலவன் றென்சொன், மொழிந்தரசன் றனைக்காண்டு மெனத்தொடுத்த பனுவலொடு மூரித் தீந்தேன், வழிந்தொழுகு தாரானைக் கண்டுதொடுத் துரைப்பனுவல் வாசித் தானால்

(இ-ள்.) (அந்தக்குலேசபாண்டியன்)மிக்கபெருநூற்கேள்வியில் வல்லனென்று சொல்லக்கேட்டு நூல்முற்றுமுணர்ந்த கபிலரிடத்துப் பெருவிருப்புடைய நண்பராகிய இடைக்காட்டுப்புலவர் ஒருபிரபந்தஞ்செய்து அரசனைக்காண்போமென்று புனைந்தபாமாலையோடு, மிகவுமினிய தேன்வழிந்து சிந்தும் வேப்பமாலையணிந்த பாண்டியனைப்பார்த்து, தாம்தொடுத்த உரைப்பாமாலையைப் படித்துப்பிரசங்கித்தனர்.எ-று.

உரைப்பா - தனதுட்கிடை யுணர்த்தத்தொடுக்கும் ஓர்பா என்க (௬)

வழுக்காத சொற்சுவையும் பொருட்சுவையும் பகிர்ந்தருந்த வல்லோனுள்ளத்
தழுக்காற்றாற் சிரந்துளக்கா னகமகிழ்ச்சி சிறிதுமுகத் தலர்ந்து காட்டா
னெழுக்காயுந் திணிதோளா னென்றுமுறை யான்வாளா விருந்தா னாய்ந்த
குழுக்காத நண்புடையான் றனைமானம் புறந்தள்ளக் கோயில் புக்கான்.

(இ-ள்.) (இயற்கை) வழுவாத சொற்சுவையும் பொருட்சுவையும் பகுத்துண்ண வல்லவனாகிய குலேசபாண்டியன் தன்மனத்திற்றோன்றிய பொறாமையால் சிரக்கம்பனஞ்செய்யாதும்மனமகிழ்ச்சிசற்றும்முகத்திற்புலப்படுத்தாதும் (நன்றுதீதென்பது) ஒன்றும் கூறாது எழுக்கம்பம்போன்ற திண்ணிய தோளையுடைய அப்பாண்டியன்வாளாவிருந்தனன்; நூலாராய்ச்சியையுடைய புலவர் தொகுதியால் விரும்பப்பட்ட இடைக்காடர் தம்மை மானமானது பிடர்பிடித்துந்தத்திருக்கோயிலுட் சென்றனர்.எ-று. (௭)

சந்நிதியில் வீழ்ந்தெழுந்து தமிழறியும் பெருமானே தன்னைச் சேர்ந்தார்
நன்னிதியே திருவால வாயுடைய நாயகனே நகுதார் வேம்பன்
பொன்னிதிபோ லெனைவிறந்த கல்வியுமிக் குளனென்று புகலக் கேட்டுச்
சொன்னிறையுங் கவிதொடுத்தேனவமதித்தான்சிறிதுமுடிதுளக்கானாகி.

பரிவாயின் மொழிதொடுத்து வருணித்தோர்க் ககமகிழ்ந்தோர் பய
னுநல்கா, விரிவாய தடங்கடலே நெடுங்கழியே யடுங்கான விலங்கே புள்
ளே, பொரிவாய பராரைமர நிரையேவான் றொடுகுடுமிப் பொருப்பே வெ
ம்பு, மெரிவாய கொடுஞ்சுரமே யெனவிவற்றே ரஃறிணையொத் திருந்தா
னெந்தாய்.

(இ-ள்.) என்தந்தையே! அன்பாகி இன்சொல்லால் (பாமாலை) தொடுத்து (தம்
மை) வருணித்த புலவர்களுக்கு ஒருபயனுங் கொடாத பெருங்கடலும், நெடுங்கழிக்
கரையும், கொல்லும் காட்டு மிருகமும், பறவையும், பொருக்குப் பொருந்திய தூரையு
டைய மரத்தின் வரிசைகளும் ஆகாயமளாவிய சிகரத்தையுடைய மலையும், சுடுகின்ற
நெருப்புப் பொருந்திய கொடிய பாலையும், என்றுசொல்லப்பட்ட இவற்றுள் ஓர் அஃறி
ணைப் பொருளை யொத்திருந்தனன். எ-று. (௯)

என்னையிகழ்ந் தனனோசொல் வடிவாய்நின் னிடம்பிரியா விமையப்
பாவை, தன்னையுஞ்சொற் பொருளான வுன்னையுமே யிகழ்ந்தனனென் றன
க்கியா தென்னா, முன்னைமொழிந் திடைக்காடன் றணியாத முனிவீர்ப்ப
முந்திச் சென்றா, னன்னவுரை திருச்செவியி னூறுபா டெனவுறைப்ப வரு
ளின் மூர்த்தி.

(இ-ள்.) என்னையா இகழ்ந்தனன்? சத்தவடிவமாய் நின்இடப்பாகத்தினின்றும்
நீங்காத பார்வதியாரையும் அச்சத்தத்தின் பொருளாயுள்ள தேவரீரையுமே இகழ்ந்தான்.
எனக்கு அவமதிப்பு யாதுளது? என்று திருமுன்னின்றுகூறி இடைக்காட்டுப்புலவர்
பொறுத்தற்கரிய சினமுன்னின்றிழுக்க முந்திச்சென்றனர்; கருணாமூர்த்தியாகிய சோம
சுந்தரக்கடவுள் அவ்வாசகம்திருச்செவியில்நாராசம்போல வெதுப்ப. எ-று. (௧௦)

போனவிடைக் காடனுக்குங் கபிலனுக்கு மகத்துவகை பொலியு மாற்
றான், ஞானமய மாகியதன் னிலிங்கவுரு மறைத்துமையா நங்கை யோடும்,
வானவர்தம் பிரானெழுந்து புறம்போய்த்தன் கோயிலினேர் வடபால் வை
கை, யானநதித் தென்பாலோ ராலயங்கண் டங்கணினி தமர்ந்தான் மன்
னோ.

(இ-ள்.) தம்மை வணங்கிச்சென்ற இடைக்காட்டுப்புலவர்க்கும் கபிலர்க்கும்
மனத்தில் களிப்புமிக்கு விளங்கும்வகையால், ஞானமயமாயுள்ள தமதுஅருட்குறித்திரு
வுருவைமறைத்து, தேவர்பெருமானாராகிய சோமசுந்தரக்கடவுள் உமையாராகிய அங்
கயற்கண்ணியாரோடும் எழுந்தருளி, தமது திருக்கோயிலினின்றும் புறம்பேசென்று
அத்திருக்கோயிற்கு நேரே வடதிசையில் வைகையாகியநதியில்தென்சாராக ஓராலயந்
தமதிச்சையாற் சமைப்பித்து, அவ்விடத்து மகிழ்ச்சியோடு எழுந்தருளியிருந்தார். எ-று.

சங்கவான் றமிழ்த்தெய்வப் புலவோரு முடனெழுந்து சைல வேந்தன்
மங்கைநா யகன்போன வழிபோயங் கிருந்தாரவ் வழிநாள் வைகற்
கங்குல்வாய் புலரவரும் வைகறையிற் பள்ளியுணர் காலத் தெய்தி
யங்கணா யகனடியார் சேவிப்பா ரிலிங்கவுரு வங்குக் காணார்.

(இ-ள்.) பெரிய தமிழ்ச்சங்கத்திலுள்ள தெய்வப்புலவர்களும் விரைந்தெழு
ந்து மலையரையன்புத்திரியாராகிய உமாதேவியார்மணாளர் சென்றவழித்தாமுஞ் சென்று
அத்திருக்கோயிலிலிருந்தார்கள். அந்நாளின் வழிநாளில் இராப்போதுகழியவரும் விடி
யற்போதில் திருப்பள்ளியெழுச்சிக் காலத்திலடைந்து, அழகிய திரிநேத்திரங்களையு
டைய சோமசுந்தரக்கடவுளைச் சேவிக்கும் அடியவர்கள் அருட்குறியின் திருவுருவத்தை
யங்குக் காணாதவராய். எ-று. (௧௨)

என்னவதி சயமோவீ தென்றயிர்த்தா ரிரங்கிழு ரிதனை யோடி, மன்னவனுக் கறிவிப்பான் வேண்டுமெனப் புறப்பட்டு வருவா ராவி, யன்னவரைப் பிரிந்துறையு மணங்கனையா ரெனவுமல ரணங்கு நீத்த, பொன்னவிர்தா மரையெனவும் புலம்படைந்து பொலிவழிந்த புரமுங் கண்டார்.

(இ-ள்.) இஃதென்ன வாச்சரியம் என்று சந்தேகித்து வருந்திவாடிச் செய்தியை விரைந்துபோய்ப் பாண்டியனுக்குத் தெரிவிக்கவேண்டுமென்று புறப்பட்டுவரும் அடியவர்கள் எவரும் பிராணனையொத்த தமது தலைவரைப்பிரிந்து கவலைமீக்கூரவசிக்கும் பெண்களைப்போலவும், இலக்குமிதுறந்த பொன்போலவிளங்குந் தாமரையைப்போலவும் வறங்கூர்ந்து பொலிவினையிழந்த மதுரைத்திருநகரையுங் கண்டார்கள். எ-று. (௩௫)

அரசனிடைப் புகுந்துள்ள நடுநடுங்கி நாவுணங்கி யரசே யாமொன், றுரைசெயவஞ் சுதுமுங்க ளையகனைத் திருப்பள்ளி யுணர்ச்சி நோக்கி, மரைமலர்ச்சே வடிபணியப் புகுந்தனமின் றுங்கவன்றன் வடிவங் காணேம், புரமுமனி புலம்படைந்த தென்றழல்வே லெனச்செவியிற் புகுத்த லோடும்.

(இ-ள்.) பாண்டியனிடத்துச்சென்று மனநடுக்குற்று நாப்புலர்ந்து, எமதுபெருமானே! யாங்கள் ஒன்றுகூற அஞ்சுகின்றோம்; உங்கள்பெருமானைத் திருப்பள்ளியெழுச்சியினோக்கித் தாமரைமலர்போன்ற திருவடியைவணங்கச்சென்றோம்; இப்பொழுது அத்திருக்கோயிலி லப்பெருமானரது திருவருட்குறியையுந் தரிசித்திலோம்; அதனால் மதுரைத்திருநகரமும் மிகவும் வரங்கூர்ந்ததென்று நெருப்பிற்காச்சிய வேலைநுழைத்தற்போலப் பாண்டியன்காதிற்செலுத்த. எ-று. (௩௪)

வழுதியரி யணையிலிருந் தடியிறவீழ் பழுமரம்போன் மண்மேல் யாக்கை, பழுதுறவீழ்ந் துயிரொடுங்க வறிவொடுங்கி மட்பாவை படிந்தாங்கொல்லைப், பொழுதுகிடந் தறிவுசிறி தியங்கவெழுந் தஞ்சலிக்கைப் போது கூப்பி, யழுதிருகண் ணீர்வெள்ளத் தாழ்ந்தடியே னென்பிழைத்தே னண்ணலண்ணல்.

(இ-ள்.) அதனைக்கேட்ட குலேசபாண்டியன் சிங்காதனத்தினின்றும் வேரறவீழ்ந்த ஆலமரம்போல நிலவுலகின்மேல் தனது சரீரம் வடுப்படவீழ்ந்து பிராணனொடுங்க அறிவழிந்து நிலவுலகின்மேல் பாவையொன்று படிந்துகிடந்தாற்போலச் சிறிதுபொழுது இயக்கமின்றிக்கிடந்து, உணர்ச்சி சிறிது எழ எழுந்து, அஞ்சலியாகக் கைத்தாமரையைத் தலைமேற்குவித்தழுது இரண்டுகண்களும் பெருக்குங்கண்ணீர்ப் பெருக்கிலமிழ்ந்து, எனது பெருமானே! பெருமானே! அடியேன் (தேவரீர்) திருவடிக்கு யாது அபராதஞ்செய்தேன். எ-று. (௩௫)

கொலையினையோ ரவுணர்புர நொடிவரையிற் பொடியாகக் குனித்த மேருச், சிலையினையோ பழையசிவ புரத்தினையோ வருவிமணி தெறிக்கும் வெள்ளி, மலையினையோ தம்மைமறந் தினைநினைப்பார் மனத்தினையோ வாழ்த்தும் வேதத், தலையினையோ வெங்குற்று யெங்குற்று யென்றென்று தளரு மெல்லை.

(இ-ள்.) கொலைத்தொழிலிற்றேர்ந்த அசுரர்கள் திரிபுரம் நொடிப்பொழுதில் நீறுபடவளைத்த மேருமலையிடத்திருக்கின்றாயோ? எல்லாப்பதங்கட்கு மூத்த சிவபுரத்திருக்கின்றாயோ? அருவிகள் இரத்தினங்களை அலைகளால் எடுத்தெறியும் வெள்ளிமலையிலிருக்கின்றாயோ? தம்மைமறந்து உன்னைச்சிந்திக்கும் அடியவருள்ளக்கோயிலி லமர்ந்தனையோ? உன்னைத்துதிக்கும் வேதங்களின் சிரத்திலிருக்கின்றாயோ? இவ்விடங்களில் எவ்விடத்துள்ளாய் எவ்விடத்துள்ளாய் என்றுகூறி வருந்துங்காலையில். எ-று. (௩௬)

சிலர்வந்து மன்னுவோ ரதிசயங்கண் டனம்வைகைத் தென்சாராக
வலர்வந்தோன் படைத்தநாண் முதலொருகா லமுங்கண்ட தன்று கேள்வித்
தலைவந்த புலவரொடு மாலவா யுடையபிரான் றானே செம்பொன்
மலைவந்த வல்லியொடும் வந்திறைகொண் டுறைகின்றான் மாதோ வென்றார்.

(இ-ள்.) பார்த்தவர் சிலர்வந்து பாண்டியனே! ஒருபேரதிசயம் பார்த்தோம்; (அதுயாதெனின்) வைகைநதியின் தென்பாலாகத் தாமரைமலரில் வசிக்கும் பிரமன் உலகினைச்சிருட்டித்தகாலமுதற்கொண்டு ஒருகாலத்தும் (உள்ளதென்று கேட்டதுமில்லை) பார்த்ததுமில்லை. நூற்கேள்வியின் மிக்க சங்கப்புலவர்களோடும் திருவாலவாயையுடைய பெருமானுர் தாமே உமாதேவியாரோடும் வந்து நிலைபெற்றெழுந்தருளி யிருக்கின்றனர். யாதுகாரணத்தாலோ யாமறிகிலோமென்று கூறினார்கள். எ-று. (௧௭)

அவ்வுரைதன் செவிநுழைந்து புகுந்தீர்ப்ப வெழுந்தரச னச்சத் தாழ்ந்து, தெவ்வர்முடித் தொகையிடறுங் கழற்காலா னடந்தேகிச் செழுநீர் வைகை, கௌவைநெடுந் திரைக்கரத்தாற் கடிமலர்தூஉய்ப் பணியத்தென் கரைமேல் வந்து, மௌவலிள முகைமுரன் மாதினொடு மிருக்கின்ற மணியைக் கண்டான்.

(இ-ள்.) அந்த வார்த்தையானது தனது செவியினுழைந்து சென்று இழுக்கப் பாண்டியனெழுந்து பயத்திலழுந்தி (பணியும்) பகைவர்கள் கிரீடக்கூட்டங்களை யிடறுகின்ற வீரகண்டைகட்டிய காலினால் நடந்துசென்று தெள்ளியநீர்மயமாகிய வைகைநதியானது ஒலிக்கும் நெடிய அலைகளாகிய கைகளால் வாசமிக்கமலர்களைத் தூவிவணங்க, அவ்வையைநதியின் தென்கரையில்வந்து முல்லையினது மெல்லிய அரும்பையொத்த தந்தபந்திகளையுடைய உமாதேவியாரோடு மெழுந்தருளியிருக்கின்ற மாணிக்கம்போலும் அரியசோமசுந்தரக்கடவுளைத் தரிசித்தான். எ-று. (௧௮)

படர்ந்துபணிந் தன்புருக்குங் கண்ணீர்சோர்ந் தானந்தப் பௌவத் தாழ்ந்
கிடந்தெழுந்து நாக்குழறித் தடுமாறி நின்றிதனைக் கிளக்கும் வேதந் [து
தொடர்ந்தறியா வடிசேப்ப நகர்புலம்ப வுலகீன்ற தோகை யோடுங்
கடைந்தருளுங் காரணமென் னடியேனாற் பிழையுளதோ வையா வையா.

(இ-ள்.) சென்றுவணங்கியன்பாலுருகிய கண்ணீர்சிந்தி ஆநந்தக்கடலில் அழுந்தித்திளைத்து எழுந்து நாக்குழறுற்று நிலைதடுமாறி நின்றிதனைக்கூறுவான்; வேதங்கள் பின்தொடர்ந்து அறிதற்கரியதிருவடிகள் செவப்பேறவும் நகர்புலம்படையவும் எல்லாவுலகங்களையும் பெற்றருளிய உமாதேவியாரோடு இவ்விடத்து அடைந்தருளுதற்குக் காரணம்யாது? அடியேனாற் பாண்டிநாட்டிற்குத் தவறுநேரிட்டதோ? ஐயனே! ஐயனே (யானொன்றுமறியேன்) எ-று. (௧௯)

அல்லதையென் றமராலென் பகைஞரால் கள்வரா லரிய கானத்
தெல்லைவிலங் காதிகளா லிடையூறின் றமிழ்நாட்டி லெய்திற் றாலோ
தொல்லைமறை யவரொழுக்கங் குன்றினரோ தவந்தருமஞ் சுருங்கிற் றாலோ
வில்லறனுந் துறவறனும் பிழைத்தனவோ யானறியே னெந்தா யெந்தாய்.

(இ-ள்.) என்னாலன்றி, என்பரிசங்களாலாயினும் எனதுபகைவர்களாலாயினும் சோரர்களாலாயினும் சொல்லுதற்கரிய காட்டிற் சஞ்சரிக்கும் மிருகங்களாலாயினும் இனியதமிழ்நாடாகிய பாண்டிநாட்டிற்கு இடையூறுநேரிட்டதோ? தொன்றுதொட்டுள்ள வேதநூலுணர்ந்த அந்தணர் தத்தமக்குரிய ஒழுக்கநெறியினின்றுந் தவறினரோ? தவநிலைகுறைந்ததோ? தருமநிலைகுறைந்ததோ? இல்லறமுந் துறவறமும் நிலைதவறினவோ? எந்தாய்! எந்தாய்! யான் அறிகிலேன். எ-று. (௨௦)

கள்ளேறு கடுக்கைநறுஞ் சடையானே போற்றிபெருங் கருணை போற்றி
வெள்ளேறு கொடியுயர்த்த விடையானே போற்றியருள் விகிர்தா போற்றி
புள்ளேறு கொடியுயர்த்த புனிதனயன் றேறாத புனிதா போற்றி
வள்ளேறு சிறுகுழவி மதிநுதலங் கயற்கண்ணி மணாள போற்றி.

(இ-ள்.) தேன்பொருந்திய கொன்றைமாலையின் மணங்கமழும் சடையையுடையானே! போற்றி; உனது பெரியதிருவருள்போற்றி; வெண்ணிறம்பொருந்திய இடபக்கொடியையுயர்த்தியவனே! போற்றி; கருணைவிகிர்தனே! போற்றி; கருடக்கொடியையுயர்த்திய விண்டுவும் பிரமனுங் கண்டறியாத புனிதமானவனே! போற்றி; கூரிய நுனிவாய்ந்த இளம்பிறைபோன்ற நெற்றியையுடைய அங்கயற்கண்ணியார் தலைவனே! போற்றி. எ-று.

சிவபெருமான் தம்மைச்சரணடைந்தோரிடத்துக் கருணையும் அடையாரிடத்துச் சினமுமுடையராதலின் அருள்விகிர்தா என்றார். (உக)

பாதமல ரிணைபோற்றி பன்னிரண்டு கையானைப் பயந்தாய் போற்றி
வேதமுடி கடந்தபர ஞானத்தி லானந்த விளைவே போற்றி
போதவடி வாய்நால்வர்க் கசைவிறந்து நிறைந்தபரம் பொருளே போற்றி
மாதவள நீறணிந்த மன்னவங் கயற்கண்ணி மணாள போற்றி.

(இ-ள்.) உபயதிருவடிக்கமலங்களும் போற்றி; பன்னிரு திருக்கரங்களையுடைய முருகக்கடவுளை (தேவர்துயரொழிய)த்தந்தருளினவனே! போற்றி; வேதத்தின் முடிவைக்கடந்த பரஞானத்தில் பேரானந்தமாகிய பேறே! போற்றி; ஞானசாரியமூர்த்தமாய் (சநகராதி) நால்வர்க்கும் அசைவிறந்து நிறைந்து நின்ற மேலானவஸ்துவே! போற்றி; மிக்கவெள்ளிய விபூதியையணிந்த தலைவனே! அங்கயற்கண்ணியார் காதலனே! போற்றி. எ-று. (உஉ)

பொக்கமுடை யார்செய்யும் பூசைதவங் கண்டுநகும் புராண போற்றி
தக்கன்மகம் பொடியாகத் திருப்புருவ நெரித்தகொடுந் தழலே போற்றி
செக்கமலக் கண்ணிடந்த கண்ணனுக்குத் திகிரியருள் செல்வா போற்றி
மைக்குவளை யனையமணி கண்டாவங் கயற்கண்ணி மணாள போற்றி.

(இ-ள்.) பொய்ந்நெறியுடையோர் செய்யும் பூசையையுந் தவத்தையுங் கண்டு புன்னகைபுரியும் பழையோனே! போற்றி; தக்கனுடையயாகம் பொடிபடத்திருப்புருவத்தை நெரித்தருளிய கொடிய நெருப்பே! போற்றி; செந்தாமரைமலர்போன்ற தனது கண்ணினைப்பறித்தருச்சித்த திருமாலுக்குச் சக்கிரமருளிய வள்ளலே! போற்றி; கரிய குவளைமலர்போன்ற ஸ்ரீகண்டத்தையுடையவனே! அங்கயற்கண்ணியார்தலைவனே! போற்றி. எ-று. (உங)

மேற்படி - வேறு.

தென்னவ னின்ன வண்ண மேத்தினன் செம்பொற் கூடன்
மன்னவன் கேட்டா காய வாணியால் வைகை நாட
வுன்னது சோத்த நாங்கேட் டுவந்தன மினிய தாயிற்
றின்னமொன் றுளது கேட்டி யென்றன னருளிச் செய்வான்.

(இ-ள்.) குலேசபாண்டியன் இவ்வாறுதுதித்தனன்; செம்பொன்நிறைந்தநான்மாடக்கூடலில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் கேட்டு அசரீரியால் வைகைநாட்டையுடைய பாண்டியனே! உனதுவந்தனத்தை நாம்கேட்டுவந்தனம் இனிதாயிருந்தது; இன்னமொன்றுள்ளது கேளாய் என்று அருளிச்செய்வாராயினர். எ-று.

சோத்தம்- இழிந்தோர் செய்யும் அஞ்சலி. இது திருக்கோவையாருக்குப் பேராசிரியர் எழுதிய உரையிற்கண்டது. (உச)

இயம்பரும் பதிக டம்மு ளாலவா யேற்ற மீங்குச்
சயம்புவா யனந்த முள்ள தானவ ரியக்கர் சித்தர்
வயம்புரி யரக்கர் வானோர் முனிவரர் மனித ருள்ளார்
நயம்பெற விதியாற் கண்ட நங்குறி யனந்த முண்டால்.

(இ-ள்.) சொல்லற்கரிய, பெருமைவாய்ந்த க்ஷேத்திரங்களில் திருவாலவாய் சிறந்தது; இத்திருவாலவாயில் சுயம்புவாய் எண்ணிறந்த சிவலிங்கங்களுள்ளன; அவற்றுள் அசுரர்-யக்ஷர்-சித்தர்-வெற்றிவிரும்பிய அரக்கர்-தேவர்-முனிசிரேஷ்டர்-மனிதர் (முதலாயினோர்) பெறும்பேறடைய விதிப்படிதாபித்த சிவலிங்கக்குறிகள் எண்ணிறந்துள்ளன. எ-று. (௨௫)

அக்குறி களின்மேம் பட்ட குறியறு பத்து நான்கா
மிக்குறி களின்மேம் பட்ட குறிகளெட் டிணைய வெட்டுத்
திக்குறை வானோர் பூசை செய்தன விவற்றியாம் வந்து
புக்குறை குறிநந் தோழன் பூசித்த குறிய தாகும்.

(இ-ள்.) அந்தக்குறிகளில் மேம்பட்ட அருட்குறிகள் அறுபத்துநான்காகும்; இந்தக்குறிகளின் மேம்பட்ட அருட்குறிகள் எட்டாகும்; இக்குறிகள் எண்டிசையிலுமுள்ள இந்திராதிதேவர்களாற் பூசிக்கப்பட்டன. இக்குறிகளில் நாம்வந்துவசிக்கும் இவ்வருட்குறி நமது தோழனாகிய குபேரன் பூசித்த அருட்குறியாம். எ-று.

குறியது என்பதில். அது - பகுதிப்பொருள்விகுதி. (௨௬)

அறைந்தவித் தெய்வத் தான மனைத்துமோ ரூழிக் காலத்
திறந்தநந் தோழன் கண்ட விலிங்கமா மதனா லிங்கே
யுறைந்தன முறைத லாலே யுத்தர வால வாயாய்ச்
சிறந்திடத் தகுவ தின்று முதலிந்தத் தெய்வத் தானம்.

(இ-ள்.) (எடுத்துச்)சொல்லிய இத்தெய்வத்தானங்கள் யாவும் ஓர்ஊழிக்காலத்து அழிந்தன. நமது தோழனாகியகுபேரன் பிரதிட்டைசெய்த அருட்குறித்தானமிது. அதனால் இங்கே வசித்தனம்(அவ்வாறுநாம்)வசித்தலால், இத்தெய்வதலம் உத்தராலவாய் என்னுந் திருநாமமுடையதாய் இன்றுமுதல் சிறக்கக்கடவது.எ-று. (௨௭)

ஓங்குதண் பணைசூழ் நீப வனத்தைநீத் தொருபோ தேனு
நீங்குவ மல்லேந் கண்டா யாயினு நீயும் வேறு
தீங்குளை யல்லை காடன் செய்யுளை யிகழ்த லாலே
யாங்கவ னிடத்தியாம் வைத்த வருளினால் வந்தே மென்னா.

(இ-ள்.) (வளத்தாற்)சிறந்த தண்ணிய வயல்சூழ்ந்த கடம்பவனத்தைநீங்கி ஒருபொழுதாயினும் வேறிடத்தில் வசியோம். ஆனாலும் நீயும் எனக்கு வேறபாரதியல்லை. இடைக்காடன் செய்த உபாப்பாவை நீயவமதித்தமையால் அந்தஇடைக்காடனிடத்தில் யாம்வைத்த கருணையினால் இங்குவந்தோம் என்று. எ-று. (௨௮)

பெண்ணினைப் பாகங் கொண்ட பெருந்தகைப் பரம யோகி
விண்ணிடை மொழிந்த மாற்ற மீனவன் கேட்டு வானோர்
புண்ணியா சிறியோர் குற்றம் பொறுப்பது பெருமை யன்றோ
வெண்ணிய பெரியோர்க் கென்னா வேத்திறை னிறைஞ்சி னானே.

(இ-ள்.) பெண்ணை வாமபாகத்துக் கொண்டருளியும் பெருந்தகைமைவாய்ந்த பரமயோகியாகிய சோமசுந்தரக்கடவுள் ஆகாயத்தில் அசரீரியாகக்கூறியருளிய திருமொழியைப்பாண்டியன்கேட்டுத் தேவர்கள்செய்த புண்ணியப் பெரும்பேறே சிறியவர்

குற்றத்தைப்பொறுத்தல் நன்குமதிக்கப்படும் பெரியவர்க்குப் பெருமையல்லவாஎன்று துதித்துவணங்கினன். எ-று. (௨௯)

அழகணிந் தேத்தி னானை யருள்சுரந் தசைவு மின்னுக்
கொடியணை மனையிற் போக்கிக் கோமள வல்லி யோடு
முடனுறை புலவ ரோடு மொல்லைதன் கோயில் புக்கான்
வடதிரு வால வாயில் வந்துவீற் றிருந்த வள்ளல்.

(இ-ள்.) உத்தரதிருவாலவாயில் வந்து நிகரின்றியிருந்த சோமசுந்தரக்கடவுள் தமது திருவடியை வணங்கித்துதித்த குலேசபாண்டியனைக்கருணைகூர்ந்துதுவளாநின்ற மின்னலையொத்த துவசங்கட்டிய மாளிகையிற் போக்கி, பசுங்கொடியையொத்த உமாதேவியாரோடும் தம்மொடுவசிக்குஞ் சங்கப்புலவர்களோடும் விரைந்து தமது திருக்கோயிலுக்குச்சென்றருளினர். எ-று. (௩௦)

மின்மதிச் சடையி னான்பி னடந்துபோய் விடைகொண் டேகு
மன்னவன் றன்னைப் பாடி வந்தவன் றன்னை மாட்சித்
தன்மைசால் சங்க வாணர் தம்மொடுங் கொடுபோ யென்றும்
பொன்மகள் காணி கொண்ட புரிசைசூழ் கோயில் புக்கான்.

(இ-ள்.) மின்னலையொத்த இளஞ்சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுளின் பின்நடந்த திருக்கோயிலுக்குச்சென்று விடைபெற்றுத்திரும்பும்பாண்டியன் தன்மேற்பாடிவந்த இடைக்காடரை, கேள்விமாட்சிமையின்பெற்றிமிக்கசங்கப்புலவர்களோடுங்கொண்டு சென்று, எந்நாளுந்திருமகள்தனக்கு ஆட்சியாகக்கொண்டுவசிக்குமதில் சூழ்ந்த தமது கோயிலிற்புகுந்தனன். எ-று. (௩௧)

விதிமுறை கதலி பூகங் கவரிவால் விதானந் தீபம்
புதியதார் நிறைநீர்க் கும்பங் கதலிகை புனைந்த மன்றற்
கதிர்மணி மாடத் தம்பொற் சேக்கைமேற் கற்றோர் சூழ
மதிபுனை காடன் றன்னை மங்கல வணிசெய் தேற்றி.

(இ-ள்.) நூலிற்கூறிய முறையால் வாழையுங்கமுகுஞ் சாமரமும் மேற்கட்டியுந் தீபமும் அன்றலர்ந்த மலராற்றொடுத்த மாலையும் பூரணகலசமும் துவசமுமாகிய இவைகளால் அலங்கரித்த விழவமைந்த ஒளிமிக்க இரத்தினங்களழுத்திய உபரிகையில் அழகிய பொன்னாற்சமைந்த ஆதனத்தின்மேல் கற்றுணர்ந்த சங்கப்புலவர்கள்சூழ நுண்ணறிவையே ஆபரணமாகப்பூண்ட இடைக்காடப்புலவரைமங்கலஅணிபுனைந்திருத்தி.

சிங்கமான் சுமந்த பொன்னஞ் சேக்கைமே லிருந்து வெள்ளைக்
கொங்கவிழ் தாமந் தூசு குளிர்மணி யாரந் தாங்கி
மங்கல முழவ மார்ப்ப மறையவ ராக்கங் கூற
நங்கையார் பல்லாண் டேத்த நன்மொழிப் பனுவல் கேட்டு.

(இ-ள்.) சிங்கஞ்சுமந்த பொன்னாலாகிய அழகிய ஆசனத்தில் தானிருந்துமகரந்தத்தோடு மலர்ந்தவெள்ளிய மலராற்றொடுத்த மாலையையும் வெள்ளாடையையும் குளிர்ந்தமுத்தாரத்தையுந்தரித்து மங்கலவாச்சியங்களொருபாலொலிக்கவும் அந்தணராசிவசனத்தை யொருபாற்கூறவும் மங்கலப்பெண்கள் ஒருபால் பல்லாண்டுபாடவும் நல்ல உரைப்பாவினைக்கேட்டு. எ-று.

பாட்டுடைத்தலைவன் வெண்மலர் மாலையும்வெள்ளாடையும் வெள்ளணியுமணிதல் முறையாதலால் வெள்ளைக் கொங்கவிழ்த்தாமந்தூசு கொடுமணியாரந்தாங்கி என்றார். இதனைப்பின்வரு நியாயத்தாலுணர்க. (௩௩)

அறிவுடைக் காட னுக்கு மருமைமாண் புலமை யோர்க்கு
முறைமையா லாரந் தூசு முகிழ்முலைக் கொடியி னன்னார்
நிறைநிதி வேழம் பாய்மான் விளைநில நிரம்ப நல்கி
யறைகழற் காலிற் பின்னேழடி நடந் திதனை வேண்டும்.

(இ-ள்.) அறிவமைந்த இடைக்காடருக்கும் மாட்சிமைப்பட்ட புலமையில் சங்கப்புலவர்க்கும் வரிசைப்படி முத்தாரங்களையும் பீதாம்பரங்களையும் அரும்பையொத்த தனத்தையுடைய பூங்கொடிபோன்றபணிப்பெண்களையும் நிறைந்த பொருள்களையும் யானைகளையுங் குதிரைகளையும் விளை நிலங்களையும் அவரவர்க்கு வெறுக்கக்கொடுத்து ஒலிக்கும் வீரகண்டை கட்டிய காலால் அவர்கள் பின் ஏழடிசென்று இதைவேண்டுவான். எ-று. (௩௪)

புண்ணியப் புலவீர் யானிப் போழ்திடைக் காட னூர்க்குப்
பண்ணிய குற்ற மெல்லாம் பொறுக்கெனப் பரவித் தாழ்ந்தா
னுண்ணிய கேள்வி யோரு மன்னநீ நுவன்ற சொல்லாந்
தண்ணிய வமுதா லெங்கள் கோபத்தீத் தணிந்த தென்றார்.

(இ-ள்.) புண்ணியவடிவமாகிய புலவர்களே! அடியேனிப்பொழுது இடைக்காடனூர்க்குச்செய்த குற்றங்களையெல்லாம்பொறுக்கக்கடவீரென்று துதித்துவணங்கினான். நுண்ணிய நூற்கேள்வியில் வல்லபுலவரும், அரசனே! நீ கூறிய சொல்லாகிய குளிர்ந்த அமுதினால் எங்கள் கோபமாகிய நெருப்புத்தணிந்ததென்று. எ-று. (௩௫)

இன்னமு மால வாயெம் பிறையவன் கருணை நோக்காற்
பன்னரும் புகழ்மை குன்றாப் பாக்கிய முனக்குண் டாக
வென்னநல் லாக்கங் கூறி யேகினா ராக வந்தத்
தென்னவன் குலேசன் செய்த தவமுருத் திரிந்தா லென்ன.

(இ-ள்.) இன்னமுந் திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் கிருபாநோக்கத்தால் சொல்லுதற்கரிய கீர்த்திகுன்றாப் பெருஞ்செல்வம் உனக்குண்டாகக்கடவதென்று நல்ல ஆசிவசனங்கூறிச்செல்ல, அந்தக்குலேசபாண்டியன் செய்ததவமும் உருத்திரிந்து மகப்பேறாகவுதித்தாற்போல. எ-று. (௩௬)

எரிமருத் தவனி முன்னா மெண்வகை மூர்த்தி யன்பு
புரிமருத் துவனைச் சூழ்ந்த பொருபழி துடைத்தோன் சோதி
விரிமருத் துடல்வான் றிங்கண் மிலைந்தவ னருளா வந்தா
னரிமருத் தனனுந் தென்ன னடலரிக் குருளை யன்னான்.

(இ-ள்.) அக்கினி-காற்று-பிருதிவிமுதலாகிய அஷ்டமூர்த்தமும், (தம்மிடத்து) அடிமைசெய்யும் தேவேந்திரனுக்குச் சம்பவித்த நீங்காத பிரமஹத்தியை யொழித்தவரும், நிலவினைக்கக்கும் வெள்ளிய பிறைச்சந்திரனை (ச்சடைமுடியின்பேரில்) அணிந்தவருமாகிய சோமசுந்தரக்கடவுள் திருவருளால், வெற்றிபொருந்திய இளஞ்சிங்கவேறு போன்ற அரிமருத்தனபாண்டியன் வந்துபிறந்தனன். எ-று.

எரி-மருத்து அவனி முன்னாமெண்வகை மூர்த்தியென்றதை,

திருவாசகம்.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்"—என்பதனாலுணர்க. ()

கலிநிலைத்துறை.

பரிசிலைப் புலவருக் கருள்குலே சன்பல் பகல்கழித்
திரிமருப் பிரலைவெம் மழுவெடுத் தவன்மதிச் சென்னிமேல்

வரிசிலைப் படைபொறித் தவனெனப் பெறுவா மைந்தன்
மரிமருத் தனனிடத் தவனிவைத் தரனடி யெய்தினன்

(இ-ள்.) நிலமுதலியபெரும்பேறுகளைக் கற்றுணர்ந்தோர்க்கு ஈயுங் குலேசபாண்டியன் பலநாள்கழித்து, திரிந்தகொம்பினையுடைய மானையுங் கொடிய மழுவினையுமேந்திய சிவபெருமானுடைய சந்திரனையணிந்த சிரத்தின்மேல் கட்டமைந்த வில்லாகிய ஆயுதத்தாலடித்த அருச்சுனனைப்போல வரம்பெற்ற காளையாகிய அரிமருத்தனனிடத்தில் பூபாரம்வைத்து அப்பெருமானார் திருவடியை இரண்டறக்கலந்தனன்.எ-று.()

இடைக்காடன்பிணக்குத்தீர்த்தபடலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௨ஙகூ௨க.

---

ஐம்பத்தேழாவது

## வலைவீசின படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்றிரித் தன்ன வேணி வேதிய னிடைக்கா டன்பின்
சென்றுமீண் டனையான் கொண்ட பிணக்கினைத் தீர்த்த வண்ண
மின்றுரை செய்து முந்நீ ரெறிவலை வீசி ஞாழன்
மன்றலங் குழலி னாளை மணந்துமீள் வண்ணஞ் சொல்வாம்.

(இ-ள்.) மின்னலைத் திரித்தாலொத்த சடையையுடைய சோமசுந்தரக் கடவுள் இடைக்காடன் பின்சென்று திரும்பியருளி, அவ்விடைக்காடன்கொண்ட பிணக்கைத் தீர்த்த திருவிளையாடலை இப்பொழுது கூறினோம்; கடலில் எறியும் வலையினைவீசி, குங்குமமலரின் வாசமிக்க அழகிய கூந்தலையுடைய உமாதேவியாரைத் திருமணஞ்செய்து திரும்பியருளிய திருவிளையாட்டலை யினிக்கூறுவாம். எ-று. (க)

அந்தமி லழகன் கூட லாலவா யமர்ந்த நீல
கந்தர னுலக மீன்ற கன்னியங் கயற்க ணாளாங்
கொந்தவி ழலங்கற் கூந்தற் கொடிக்குவே றிடத்து வைகி
மந்தண மான வேத மறைப்பொரு ளுணர்த்து மாதோ.

(இ-ள்) எல்லையில்லாத அழகையுடையவராகிய நான்மாடக்கூடலென்னுந் திருவாலவாயிலெழுந்தருளிய நீலகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் உலகங்கள் யாவற்றையும் பெற்றருளிய கன்னிப்பருவத்தையுடைய அங்கயற்கண்ணியாராகிய மகரந்தமலர்ந்தமாலையையணிந்த கூந்தலையுடைய உமாதேவியார்க்கு ஏகாந்தத்தானத்திலிருந்தருளி, இரகசியமானவேதத்தின்கூட்டமானபொருளையுபதேசித்தருளுவார்.எ-று.

நாதனின் னருளாற் கூறு நான்மறைப் பொருளை யெல்லாம்
யாதுகா ரணத்தான் மன்னோ வறிகிலே மெம்பி ராட்டி
காதர மடைந்தாள் போலக் கவலையுஞ் சிறிது தோன்ற
வாதர மிலளாய்க் கேட்டா ளஃதறிந் தமலச் சோதி.

(இ-ள்.) சிவபெருமானாரினிய திருவருளாற்போதித்த நான்குவேதங்களின் கூடமாயுள்ள பொருள்களையெல்லாம் யாதுகாரணத்தினாலேயோயாமுணரோம்? என்று, எமதுபிராட்டியார் மறந்தவர்போலக் கவலையுஞ்சிறிது திருமுகத்திலரும்ப அன்பில்லாதவராய்க் கேட்டருளினார்; மலரகிதராகிய பேரொளிவடிவாயுள்ள அப்பெருமானார் அதனை உணர்ந்து.எ-று. (௨)

அராமுக மனைய வல்கு லணங்கினை நோக்கி யேனை
யிராமுக மனைய வுள்ளத் தேவைமார் போல வெம்பாற்
பராமுகை யாகி வேதப் பயனொருப் படாது கேட்டாய்
குராமுகை யவிழ்ந்த கோதா யுற்றவிக் குற்றந் தன்னால்.

(இ-ள்.) பாம்பின் படத்தையொத்த அல்குலையுடைய உமாதேவியாரைப் பார்த்தருளி, மற்ற இருள்போல இருண்டமனத்தையுடைய இந்தராணிமுதலிய தெய்வமாதர்போல் எம்மிடத்தில் பராமுகமுடையாயாகி, வேதத்தின் பொருள்தேர்ச்சிபெறாமல் கேட்டனை ; குராவரும்புமலர்ந்த அளகபாரத்தையுடையாய்! பொருந்திய இந்தப்பிழையினால். எ-று. (௪)

விரதமு மறனு மின்றி மீன்படுத் திழிஞ ரான
பரதவர் மகளா கென்று பணித்தனன் பணித்த லோடு
மரதன வாரந் தாழ்ந்த வாரமென் முலையா ளஞ்சி
வரதநிற் பிரிந்து வாழ வல்லனோ வென்று தாழ்ந்தாள்.

(இ-ள்.) நோன்பும் தருமமுஞ் சிறிதுமில்லாமல் மீன்பிடித்து இழிதொழிலுடையவரான நெய்தனிலத்தவர்புத்திரியாகக்கடவாயென்று பணித்தருளினார்; அவ்வாறு பணித்தருள இரத்தினமாலைதொங்கியசையும் சந்தனக்குழம்பையணிந்த மெல்லியதனத்தையுடைய உமாதேவியாரஞ்சி வரதரே! தேவரீரைப்பிரிந்துவாழ வன்மையையுடையனோ வென்று வணங்கினார். எ-று. (௫)

வீங்குநீர்ச் சடையா னீங்கு மெல்லியல் பரிவு நோக்கி
வாங்குநீர்க் கானல் வாழ்க்கை வலைஞர்கோன் மகளாய் வைகி
யாங்குநீ வளர்நாள் யாம்போந் தருங்கடி முடித்து மென்னாத்
தேங்குநீ ரமுதன் னாளைச் செலவிடுத் திருந்தா னிப்பால்.

(இ-ள்) பெருக்கெடுக்குங் கங்கையையணிந்த சடையையுடைய பெருமானார் தம்மினின்று நீங்கும் உமாதேவியாருடைய கவலையைநோக்கி, வளைந்த கடற்கரையிலுள்ள இளஞ்சோலையின் வாழ்க்கையையுடைய வலையால் முயன்றுண்ணும் பரதவர் தலைவன் புத்திரியாய்ப்பிறந்து, அவ்விடத்தில் நீ வளருங்காலையில் நாம் வந்து அரியதிருமணத்தை முடிப்பேமென்று நிறைந்த நீர்மயமாகிய கடலிற்றோன்றிய அமுதினையொத்த உமாதேவியாரைச்செல்ல ஏவி யிருந்தருளினார்; பின்னர். எ-று. (௬)

அன்னது தெரிந்து நால்வா யைங்கரக் கடவு டாதை
முன்னர்வந் திதனா லன்றோ மூண்டதிச் செய்தி யெல்லா
மென்னவீர்ங் கவளம் போலாங் கிருந்தபுத் தகங்க ளெல்லாந்
தன்னெடுங் கரத்தால் வாரி யெறிந்தனன் சலதி மீதால்.

(இ-ள்.) அதனையுணர்ந்து நான்றசையுந் திருவாயையும் ஐந்து திருக்கரங்களையுமுடைய மூத்தபிள்ளையார் தமது பிதாவின் முன்வந்து, இதனாலன்றோ இத்தீங்குகள் விளைந்தனவென்று அவ்விடத்திருந்த திருமுறைகளையெல்லாந் தண்ணிய கவளம்போலத் தமது நெடிய திருக்கரத்தினால் வாரிக் கடன்மீதெறிந்தனர். எ-று. (௭)

வரைபக வெறிந்த கூர்வேன் மைந்தனுந் தந்தைகையி
லுரைபெறு போத நூலை யொல்லெனப் பறித்து வல்லே
திரைபுக வெறிந்தா னாகச் செல்வநான் மாடக்கூட
னரைவிடை யுடைய நாத னந்தியை வெகுண்டு நோக்கா.

(இ-ள்.) கிரவுஞ்சகிரி பிளவுபட எறிந்த கூரிய வேலையேந்திய குமாரக் கடவுளும் தமது பிதாவின் திருக்கரத்திலுள்ள புகழ்பெற்ற சிவஞானபோதமென்னும் மெய்ந்நூலினை விரைந்து பறித்து, சீக்கிரம் கடலில் விழ எறிந்தருள, செல்வமிக்க நான்மாடக்கூடலி லெழுந்தருளிய வெள்ளிய இடபவூர்தியையுடைய சோமசுந்தரக் கடவுள் நந்தியெம்பெருமானைக் கோபித்துப் பார்த்தருளி. எ-று. (அ)

அடுத்துநா மிருக்குஞ் செவ்வி யறிந்திடா திவரை வாயில்
விடுத்துநீ யிருந்தாய் தீங்கு விளைந்ததுன் றனக்கு மிந்தத்
தொடுத்ததீங் கொழிய வின்றோர் சுறவுரு வாகி வைய
முடுத்தகா ரோத நீர்புக் குழல்கெனப் பணித்தான் மன்னோ.

(இ-ள்.) ஏகாந்தத்தானத்தை யடுத்து நாமிருக்குஞ் சமயத்தை யறியாமல், இவரை வாயிலினின்றும் விடுத்து நீ வாளா இருந்தனை. இதனால் உனக்கும் அபராதம் விளைந்தது விளைந்த இந்த அபராதம் ஒழிதற்பொருட்டு, இப்பொழுது ஒரு மகர மீன் வடிவாகி நிலவுலகைச் சூழ்ந்த கரிய கடலிற்சென்று சுழலக்கடவாயென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (க)

வெருவருஞ் செலவின் வேழ முகத்தனை விதித்த சாபப்
பெருவலி தன்னைச் சாரும் பெற்றியாற் சாபங் கூறா
னருவரை நெஞ்சு போழ்ந்த வள்ளிலை வடிவேற் செங்கை
முருகனை வணிகர் தம்மின் மூங்கையா கென்றா னிப்பால்.

(இ-ள்.) அஞ்சுதலில்லாத கதிநடையையுடைய யானைமுகக்கடவுளுக்கு இடுஞ்சாபமாகிய பெரியவன்மை தன்னை யடையுந்தன்மையா லவர்க்குச் சபமிடாது, வெல்லுதற்கரிய கிரவுஞ்சகிரியின் மார்பைப்பிளந்த கூறிய வெற்றிலைபோலத் தகட்டு வடிவமைந்த வேலையேந்திய செவந்த திருக்கரத்தையுடைய முருகக்கடவுளை வைசியர் குலத்துள் ஊமனாக அவதரிப்பாயென்று சபித்தருளினர். பின்னும். (௧௦)

நாயக னேவலாலே நாயகி வலைஞர் மாத
ராயதுங் நந்திப் புத்தே ளடுசுற வாகி முந்நீர்
மேயதுங் கருணை வள்ளன் மீன்படுத் தணங்கை வேட்டுப்
போயது மவட்குக் கேள்வி புகன்றது முறையிற் சொல்வாம்.

(இ-ள்.) சிவபெருமானு டேவலினாலே உமாதேவியார் பரதவர் மகளா யவதரித்ததையும், திருநந்திதேவர் கொல்லுதற் றொழிலையுடைய மகரமீன் வடிவமாகிக் கடலை யடைந்ததையும், கருணை சொரூபியாகிய அச்சோமசுந்தரக்கடவுள் அச்சுறவினைப் பிடித்து அம்மையாரைத் திருமணஞ்செய்து சென்றருளியதையும், அவ்வம்மையார்க்குத் திருவுத்தர கோசமங்கையில் உபதேசஞ் செய்தருளியதையும் முறையாக இனிக் கூறுவாம். எ-று. (௧௧)

கலிநிலைத்துறை.

சூழும் வார்திரை வையையந் துறைகெழு நாட்டுட்
கீழை யார்கலி முகத்தது நெய்தலங் கிழ்நீ
ராழ நீள்கருங் கழியகழ் வளைந்துகா னளைந்து
தாழை மூதெயி லுடுத்ததோர் தண்டுறைப் பாக்கம்.

(இ-ள்.) சூழ்ந்த நெடிய அலைகளையுடைய வையையின் அழகிய நீர்த்துறை மிக்க பாண்டிநாட்டின் கீழ்பாலுள்ள கடலின் முகத்திலுள்ளதாகிய ஒப்பில்லாத தண்ணிய நீர்த்துறைகள் வாய்ந்த நெய்தனிலத்தூரொன்று நெய்தனிலத்திலுள்ள கடல்க

ளமைந்த ஆழ்ந்த நீண்ட பெரிய கழியாகிய அகழியாற் சூழப்பட்டு மேகங்களளாவிய தாழையாகிய பெரிய மதிலாற் சூழப்பட்டுள்ளது. எ-று. (௧௨)

முடங்கு முள்ளிலை யாற்புதைந் தெதிரெதிர் மொய்த்து
நுடங்கு கைதைபோ தொடுவளி நூக்கநின் றசைவ
மடங்கு மெய்யராய்க் கையிருங் கேடக வட்டத்
தடங்கி வாள்பனித் தாடம ராற்றுவா ரனைய.

(இ-ள்.) மடங்கிய முள்வாய்ந்த இலைகளால் மூடப்பட்டுத் தம்முள் எதிரெதிரே நெருங்கித் துவளுந் தாழையானவை மலர்களோடு காற்றலைக்க நின்றசைதல், வளைந்த சரீரத்தையுடையவராகிக் கையிலேந்திய பெரிய கேடகத்துளடங்கி வாளை யசைத்து வெற்றியைத்தரும் போர்செய்வோரை யொத்திருந்தன. எ-று.

தாழையைப் போர்செய்வோராகவும், முள்ளிலைகளைக் கேடகமாகவும், மலரை வாளாகவும் உவமைக்கேற்கப் பொருள் விரித்துணர்க. (௧௩)

புலவு மீனுணக் கோசையும் புட்களோப் பிசையும்
விலைப கர்ந்திடு மமலையு மீன்கொள்கம் பலையும்
வலையெ றிந்திடு மரவமும் வாங்குமா ரவமு
மலையெ றிந்திடு பரவைவா யடைப்பன மாதோ.

(இ-ள்.) புலானாற்றம் வீசு மீன்களைப் புலர்த்தும் சத்தமும், கவரவரும் காக்கை முதலிய பறவைகளை யோட்டுஞ் சத்தமும், மீன் விற்கும் சத்தமும், மீன் வாங்குஞ் சத்தமும், வலை வீசுஞ் சத்தமும், அவ்வலையை யிழுக்குஞ் சத்தமும், அலைவீசுங் கடலின்வாயை யடைக்காநிற்கும். எ-று. (௧௪)

வாட்டு நுண்ணிடை நுளைச்சியர் வண்டலம் பாவைக்
கூட்டு கின்றசோ றருகிருந் துடைந்தபூங் கைதை
பூட்டு கின்றன நித்திலம் பொருகடற் றரங்கஞ்
சூட்டு கின்றன கடிமலர் சூழல்சூழ் ஞாழல்.

(இ-ள்.) அருகே யிருந்து முறுக்கவிழ்ந்த தாழைமலர் தனங்கள் வாட்டும் நுண்ணிய இடையையுடைய பரதவச் சிறுமியர் விளையாட்டிடத்துள்ள பதுமைக்குச் சோறூட்டாநின்றன. கரையோடு மோதுங் கடலலையானது முத்துமாலை பூட்டாநின்றன. சோலையிற் சூழ்ந்த குங்கும மரங்கள் மணமிக்க மலர்களைச் சூட்டாநின்றன.

சோறு என்றது மகரந்தத்தை என்க. (௧௫)

நிறைந்த தெண்கட லாடிநீ ணெறியிடைச் செல்வோர்க்
கறந்தெ ரிந்தபோற் பொதிந்தசோ றவிழ்ப்பன தாழை
சிறந்த முத்தொடு பசும்பொனும் பவளமுந் திரட்டிப்
புறந்தெ ரிந்திடக் கொடுப்பன மலர்ந்தபூம் புன்னை.

(இ-ள்.) நீர்நிறைந்த தெள்ளிய கடலில் நீராடி நெடுந்தூரஞ் செல்லும் தீர்த்தயாத்திரையோர்க்கு, அறநூலுணர்ந்தனபோல (ஊட்டுதற்கு) தாழைகள் கட்டமுதை யவிழ்த்தல்போல மடல்களை யவிழ்ப்பன. மலர்ந்த பொலிவினையுடைய புன்னை மரங்கள் சிறந்த முத்துக்களோடு பசிய பொன்னையும் பவளத்தையும் திரட்டிப் புறத்திலுள்ளோர்க்குத் தெரியக் கொடுத்தல்போலக் கொடாநின்றன. எ-று. (௧௬)

கொன்று மீன்பகர் பரதவர் குரம்பைக டோறுஞ்
சென்று தாவிமேற் படர்வன திரைபடு பவள

மன்னல் வார்குழ னுளைச்சியர் மனையின்மீ னுணக்கு
முன்றில் சிப்பன கடலிடு முழுமணிக் குப்பை.

(இ-ள்.) பிடித்த மீன்களை விற்கும் பரதவருடைய குடிசைகடோறும் கடலில் தோன்றிய பவளம்போய்த் தாவி மேலே படராநின்றன. அக்கடலி னலைகள் வீசும் பருத்த முத்தினிராசிகள் (சென்று) வாசமிக்க நீண்ட கூந்தலையுடைய பரதவப் பெண்கள் தத்தம் வீடுகளில் மீனினை யுலர்த்து முற்றத்தில் வீழ்ந்து அதனிரைகளைக் குலைப்பன. எ-று. (௧௭)

கூற்றம் போன்றகண் ணுளைச்சியர் குமுதவாய் திறந்து
மாற்றம் போக்கினர் பகர்தருங் கயற்குநேர் மாறாங்
தோற்றம் போக்குவ வவர்விழித் துணைகளக் கயன்மீ
னாற்றம் போக்குவ தவர்குழ னகைமலர்க் கைதை.

(இ-ள்.) இயமனை யொத்த கண்களையுடைய பரதவப்பெண்கள் ஆம்பல் போன்ற வாயைத் திறந்து விலைபகருங் கயல்மீனுக்கு அப்பெண்களி னிரண்டு கண்களும் தத்தமக்கு நேரோ பகையாயுள்ள காக்ஷியை யொழிப்பன. அப்பெண்களது கூந்தலிலணிந்து விளங்குந் தாழை மலர்கள் அக்கயல்மீனின்து புலானாற்றத்தை யொழிப்பன. எ-று. (௧௮)

அலர்ந்த வெண்டிரைக் கருங்கழிக் கிடங்கரி னரும்பர்
குலைந்த விழ்ந்துதேன் றுளும்பிய குமுதமே யல்ல
கலந்த ருங்கட லெறிகருங் காற்பனங் கள்வாய்
மலர்ந் தருந்திய குமுதமு மொய்ப்பன வண்டு.

(இ-ள்.) பரந்த வெள்ளிய அலைகளையுடைய பெரிய கழியாகிய கிடங்குகளில் அரும்பின் கட்டவிழ்ந்து கள்ததும்பிய ஆம்பல்மலரின் மட்டிலுமேயல்ல, மரக்கலந்தவழும் கடலலை மோதும் தூரையுடைய பனங்கள்ளை வாய்திறந்துண்ட பரதவப் பெண்களுடைய வாயாகிய ஆம்பலிலும் வண்டுகள் மொய்க்காநின்றன. எ-று. (௧௯)

ஆய பட்டினத் தொருவன்மே லாற்றிய தவத்தாற்
றாய வானவர் தம்மினுந் தூயனுய்ச் சிறிது
தீயதீ வினைச் செய்தியாற் றிண்டிமில் வாணர்
மேய சாதியிற் பிறந்துளான் மேம்படு மனையான்.

(இ-ள்.) இவ்வாறு வளம்நிறைந்த அந்தப்பாக்கத்தில் அந்நெய்தனிலத்தலைவனொருவன் முற்பிறப்பிற் செய்த பெருந்தவத்தினால் புனிதமுள்ள தேவர்களிலும் புனிதமுள்ளவனாய்க் கழிந்த பிறப்பிற் சிறிது செய்த கொடிய தீவினையின் பகுதியால் திண்ணிய தோணியில் மீன் பிடித்து வாழ்வோர் பிறந்த பரதவகுலத்திற் பிறந்தவன் (இழிகுலத்திற் பிறந்தவனாயினும்) அவர்களுள் மேம்பட்ட அத்தலைவன். எ-று. (௨௦)

செடிய காருடற் பரதவர் திண்டிமி னடத்தா
நெடிய வாழியிற் படுத்தமீன் றிறைகொடு நிறைக்குங்
கடிய வாயிலோ னவர்க்கெலாங் காவலோ னேற்றுக்
கொடிய வானவ னடிக்குமெய் யன்புசால் குணத்தோன்.

(இ-ள்.) முடைநாற்றநிறைந்தையுடைய கரிய தேகத்தையுடைய பரதவர்கள் திண்ணிய தோணியை நடத்தி நெடிய கடலிற் பிடித்த மீனைத் திறையாகக்கொண்டு நிறைக்குங் காவல் பூண்ட வாயிலையுடையவன் அவர்களுக்கெல்லாம் அரசனாயுள்ளோன் இடபக்கொடியையுடைய சிவபெருமானார் திருவடிக்கீழ் மெய்யன்பு நிறைந்த குணத்தை யுடையவன். எ-று. (௨௧)

மகவி லாமையா லாற்றநாண் மறுமையோ டிம்மைப்
புகலி லானென வருந்துவா னொருபகற் போது
தகவு சால்பெருந் கிளையொடுஞ் சலதிமீன் படுப்பா
னகல விர்கலிக் கேகுவா னதன்கரை யொருசார்.

(இ-ள்.) அநேகநாள், புத்திரப்பேறில்லாமையால் பரபோகத்தோடு இக போகத்தையும் பெறுதவனைப்போல வருந்துகின்ற அப்பரதவர் குலபதி ஒருதினம் தத்தஞ் சாதி தருமத்திற் பெருந்தன்மை வாய்ந்த பெரிய சுற்றத்தாரோடும் கடலிலுள்ள மீனைப் பிடிக்கப் பரந்த கடலிற்குச் செல்லுகின்றவன் அக்கடலின் கரையிலொருபக்கத்தில். எ-று. (௨௨)

தக்க மேருமா மலைமக ளுடையிற் றவத்தான்
மிக்க மீனவன் வேள்வியில் விரும்பிய மகவாய்ப்
புக்க நாயகி தன்பதி யாணையாற் புலவு
தொக்க மீன்விலை வலைஞன்மேற் றவப்பயன் றூர்ப்ப.

(இ-ள்.) (மலைமகளுள்) மேம்பட்ட இமபர்வதராஜனுடைய மலர்த்தடத்திலும், தவத்தால் மேம்பட்ட பாண்டியன் யாகத்திலும் விரும்பப்பட்ட புத்திரியாய் வந்தருளிய இறைவி தமது இறைவன் கட்டளையால், புலால்நாற்ற மிக்க மீன் விற்கும் வலைஞர் கோமான் முன்செய்த தவப்பேறு முதிர. எ-று. (௨௩)

இச்சை யாலவ னன்பினுக் கிரங்குவாள் போலச்
செச்சை வாய்திறந் தழுதொரு திருமக வாகி
நெய்ச்ச பாசிலைப் புன்னைநன் னீழலிற் கிடந்தாண்
மைச்ச காருடற் கொடுந்தொழில் வலைஞர்கோன் கண்டான்.

(இ-ள்.) தமதிச்சையால் அவ்வரசனன்பினுக்கு இரங்கியருள்வாள்போலச் செவந்த திருவாய் திறந்தழுது ஒரு திருமகவாய், நெய்ப்பற்றையுடைய பசிய இலைகள் நிறைந்த புன்னைமரத்தி னிழலிற் கிடந்தருளினள் கரிய பெரிய சரீரத்தையும் கொடிய தொழிலையுமுடைய பரதவர் கோமான் பார்த்தனன். எ-று.

நெய்த்த-நெய்ச்ச, மைத்த-மைச்ச போலி என்க. (௨௪)

வார்கொ ணீர்த்திரு மாதுகொல் கரந்துநீ ருறையும்
வார்கொள் பூண்முலை மடந்தைகொல் வனத்துறை வாழ்க்கைத்
தார்கொள் பூங்குழ லணங்குகொ றடங்கணு மிமைப்ப
வார்கொ லோமக வாகியீண் டிருந்தவ ளென்னா.

(இ-ள்.) கடலிற்றோன்றிய திருமாதோ! மறைந்து நீரில் வசிக்கும் கச்சிறுக்கிய ஆபரணந் தாங்கிய தனத்தையுடைய நீரரமகளோ? வனத்தில் வசிக்கும் வாழ்வினையுடைய மாலையையணிந்த பொலிவமைந்த கூந்தலையுடைய வனவரமகளோ! பரந்த கண்களுமிமை கொட்டா நின்றன; பிள்ளைத் திருவுருவாகி இவ்விடத்திலிருக்கும் பெண் யாரோ வென்றார். எ-று. (௨௫)

பிள்ளை யின்மையேற் கிரங்கியெம் பிரான்றமிழ்க் கூடல்
வள்ள லல்கிய மகவிது வேயென வலத்தோ
டுள்ள வன்புகூர்ந் தெடுத்திரு தோளுறப் புல்லித்
தள்ள ருந்தகைக் கற்பினு டனதுகைக் கொடுத்தான்.

(இ-ள்.) மகப்பேறில்லாத எனக்கு அருள்கூர்ந்து எமது பெருமானாகிய தமிழை யாராய்தற்கிடமாகிய நான்மாடக்கூடலி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவு

ளருளிய மகப்பேறிதுவேயென்று ஊக்கத்தோடு மனத்தில் அன்புமிக்கெடுத்து இரண்டு தோள்களிலும் பொருந்தத்தழுவி, நீங்குதலில்லாத பெருந்தன்மைவாய்ந்த கற்பையுடைய தனது மனைவியின் கையிற் கொடுத்தனன். எ-று. (௨௬)

பிறவி யந்தகன் றெரிந்துகண் பெற்றெனக் கழிந்த
வறிய னீணிதி பெற்றென வாங்கினாள் வலைஞ
ரெறியும் வேலையி னார்த்தனர் கையெறிந் திரட்டிக்
குறிய வாணகை வலைச்சியர் குழறினர் குரவை.

(இ-ள்.) பிறவிக்குருடன் (விஷயங்களை) உணரக்கண் பெற்றாற்போலவும், மிக்க வறுமையுடையோன் பெரிய வைப்புநிதியைப் பெற்றாற்போலவும், (தன் கணவன் கையினின்று) வாங்கினாள். நெய்த நிலமாக்கள் அலைவீசும் கடல்போலக் கோஷித்தார்கள். சிறிய வொள்ளிய நகையையுடைய அந்நெய்தனிலப் பெண்கள் கைவீசி குரவைப்பாடல் பாடினார்கள். எ-று. (௨௭)

பிழையில் கற்புடை மனைவியும் பெறாதுபெற் றெடுத்த
குழவி யைத்தடங் கொங்கையுங் கண்களுங் குளிரத்
தழுவி முத்தமிட் டுச்சிமோந் தன்புளந் ததும்ப
வழுவி றாகிய மணிவிளக் காமென வளர்ப்பாள்.

(இ-ள்.) தவறுதலில்லாத கற்பையுடைய நெய்தனிலத்தலைவன் மனையாளும் வருந்திப்பெறாது தவத்தின் முதிர்ச்சியாற்பெற்றெடுத்த மகவினை பருத்த தனங்களும் கண்களும் குளிர்ப்பேறப்புல்லி, முத்தமிட்டு உச்சி மோந்து அன்பு மனத்தினின்று மீதூரப் பொலிவமைந்த இரத்தின விளக்கைப்போல் வளர்ப்பாளாயினாள்.()

புலவு மீன்விலைப் பசும்பொனாற் செய்தபல் பூணு
மிலகு மாரமும் பாசியுங் காசிடை யிட்டுக்
குலவுங் கோவையுஞ் சங்கமுங் குலத்தினுக் கிசைய
வலகி லாதபே ரழகினுக் கழகுசெய் தணிந்தாள்

(இ-ள்.) புலால்நாற்றம்வீசுமீன்விற்று ஈட்டிய பசிய பொன்னாற்செய்த பல ஆபரணங்களையும், விளங்கு முத்தும் பாசியும் ஆகிய இவற்றினோடு அவற்றினிடையிடையே யிரத்தினங்களை கோவைசெய்து விளங்கும் கோவையையும், அக்கு மணிகளையும் தமது குடிப்பிறப்பினுக்குப் பொருந்த எல்லையில்லாத பேரழகுக்கோரழகு செய்தல்போல அணிந்தோம்பினள். எ-று. (௨௯)

தொண்டை வாய்வலைச் சிறுமியர் தொகையொடுந் துறைபோய்
வண்ட லாடியு நித்தில மாமணி கொழித்துங்
கண்டன் ஞாழல்சூழ் கானலங் கடிமலர் கொய்தும்
கொண்ட லோதிபின் றாழ்தரக் குணகடல் குளித்தும்.

(இ-ள்.) கோவைக்கனிபோலச் செவந்த வாயையுடைய பரதவச்சிறுமியர் கூட்டத்தோடும் கடற்றுறைக்குச் சென்று சிற்றில் கோலி விளையாடியும் (முச்சிலால்) முத்தங்களைக் கொழித்தும், தாழையும் குங்கும மரங்களுஞ் சூழ்ந்த இளஞ்சோலைகளிலுள்ள பொலிவுவாய்ந்த வாசமிக்க மலர்களைக் கொய்தும், மேகம்போலக் கருநிறம் வாய்ந்த பின்னர்ச் சரிய ஒலிக்குங் கடலில் நீராடியும். எ-று. (௩௦)

தளர்ந்த பைங்கொடி மருங்குலுந் தன்னுயிர்த் தலைவ
னளர்ந்த வைகலுங் குறைபட வவனிடத் தார்வங்
கிளர்ந்த வன்புமொண் கொங்கையுங் கிளரநாட் சிறிதில்
வளர்ந்து வைகினாள் வைகலு முயிரெலாம் வளர்ப்பாள்.

(இ-ள்.) ஒசிந்த பசிய கொடிபோன்ற இடையும் தமதுயிர்க்கிழவராகிய சிவபெருமான் துணையறுத்த நாளும் சிறுகி வரவும் அப்பெருமானிடத்தில் ஆசைமேலிட்டுவிளங்கும் அன்பும் ஒள்ளிய தனங்களும் வளர்ந்து தோன்றவும் நாடோறும் எல்லாவுயிர்களையும் ஓம்பி வளர்க்கும் பிராட்டியார் சிறிதுபொழுதில் வளர்ந்திருந்தனர்.

ஆலவாயுடை நாயக னேவிய வாறே
மாலை தாழிள மதிச்சடை மகுடமுங் கரங்க
ணாலு மோங்கிய வடிவுடை நந்தியுஞ் சுறவக்
கோல மாகிவெண் டிரைக்கடல் குளித்தினி திருந்தான்.

(இ-ள்.) திருவாலவாயுடைய சோமசுந்தரக்கடவுள் கட்டளையிட்ட விதமே மாலைபோலத் தாழ்ந்தசையும் பிறையையணிந்த சடாமகுடத்தையும் திருக்கரங்கள் நாலையும் வாய்ந்த திருவுருவத்தையுடைய திருநந்திதேவரும் மகரமீன் வடிவமைந்து வெள்ளிய அலைகளையுடைய கடலில் மூழ்கி மகிழ் கூர்ந்திருந்தனர். எ-று. (௩௨)

குன்றெ றிந்தவேற் குழகனுங் கரிமுகக் கோவு
மன்றெ றிந்ததந் திரமெலாஞ் சிரமிசை யடக்காக்
கன்றெ றிந்தவ னறிவருங் கழல்மனத் தடக்கா
நின்றெ றிந்தவன் மந்தென வுழக்கிடா நிற்கும்.

(இ-ள்.) கிரவுஞ்சகிரி பிளவுபட எறிந்த வேலையேந்திய முருகக்கடவுளும் யானைமுகக்கடவுளும் முற்காலத்தில் எடுத்தெறிந்த நூல்களையெல்லாம் தமது தலையின்மேலடக்கி, விளங்கனிவீழக் கன்றினை வீசிய திருமால் அறிதற்கரிய திருவடியை மனத்திலிருத்திப் பாற்கடலில் நிலைபெற்றுக் கலக்கிய மந்தரகிரியைப்போலக் கலக்குவாராயினர். எ-று. (௩௩)

கிட்டுந் தோணியைப் படகினைக் கிழபட விசைபோய்த்
தட்டுஞ் சோங்கினை மேலிடு சரக்கொடுங் கவிழ
முட்டுஞ் சீறிமேல் வரும்பல சுறவெலா முடுக்கி
வெட்டுங் கோடுகோத் தேனைய மீனெலாம் வீசும்.

(இ-ள்.) தோணியை நெருங்கி மோதும்; படவு பிளவுபட விசைத்துச் சென்று தாக்கும்; சோங்கு தன்னிடத்திற் செறித்த சரக்குகளோடுங் கவிழ்ந்து குப்புற அதன்மேற் பாயும்; கோபித்துத் தன்மேல் வருகின்ற பல சுறாமீன்களை யெல்லாந் துரத்தித் துண்டிக்கும்; தனது கொம்பிற் கோத்து மற்றுள்ள மீன்களை யெல்லாந் திசைதோறும் சிந்தும். எ-று. (௩௪)

தரங்க வாரிநீர் கலக்கலாற் றந்திரங் கொடுமே
லிரங்கு வான்புல வோர்க்கமு தீகையா லெண்ணார்
புரங்கண் மூன்றையும் பொடித்தவ னணையாற் புனலிற்
கரங்க ணான்கையுங் கரந்தமீன் மந்தரங் கடுக்கும்.

(இ-ள்.) பகைவரது திரிபுரங்களையும் (புன்னகையால்) சாம்பராகச்செய்த சிவபெருமானது கட்டளையால் தனது சதுர்ப்புயங்களோடு கூடிய திருவுருவத்தை மறைத்துநின்ற திருநந்திதேவராகிய சுறாமீன் அலைகளையுடைய கடல்நீரைக் கலக்குதலாலும் தந்திரத்தைக்கொண்டு ,பின்னர் உயர்ந்த அறிவினராகிய முனிவர்களுக்கு (ஞானோபதேசத்தால்) நித்தியத்துவத்தைக் கொடுத்தலாலும் மந்தரமலைக்குச் சமானமாக விளங்காநிற்கும். எ-று.

மந்தரமலைக்குத்தந்திரம் சாய்ந்துநிற்றல் முதலியன. நந்தியம்பெருமானுக்குத்தந்திரம் ஆகமாதிகள். அமுதம் - சாவின்மை

தள்ளு நீர்த்திரை போய்நுளைச் சேரிகள் சாய்ப்பத்
துள்ளு நீர்குடித் தெழுமழை சூலிறப் பாயு
முள்ளு நீண்மருப் புடையமீன் மொய்கல மந்தத்
தெள்ளு நீர்த்துறை நடையற வின்னணந் திரியும்.

(இ-ள்.) தாவும் நீரைக் குடித்தெழுந்த மேகங்களின் கருச்சிதைய எழுந்து பாயும் முள்வாய்ந்த நீண்ட கொம்பையுடைய மகரமீன் முத்துக்களைக் கொழிக்கும் நீர்மயமாகிய அலையின்வழியே சென்று, வலையர் சேரிகள் சாயவும், நெருங்கிய மரக்கலமானது அந்தத் தெள்ளிய நீர்த்துறைகளில் சஞ்சரித்தலொழியவும், இவ்வாறு திரியா நிற்கும். எ-று. (௬௬)

எற்றி தாலெனத் துறைமகன் யாமிது பிடிக்கும்
பெற்றி யாதெனக் கிளையொடும் பெருவலைப் பாசம்
பற்றி யாழியூர் படகுகைத் தெறிந்தனன் படகைச்
சுற்றி வாய்கிழித் தெயிற்றிறப் பாய்ந்தது சுறவம்.

(இ-ள்.) நெய்தனிலத்தலைவன் இது எப்படிப்பட்டதெனவும், இதனை நாம் பிடிக்குந்தன்மை எவ்வகைத்தெனவும், (நினைத்து) தனது உறவினரோடுஞ் சூழ்ந்து பெரிய வலைக்கயிற்றைப்பற்றிக் கடலில் செல்லும் படவினை நடத்தி வீசினன். அம்மகரமீனனது படவைச் சூழ்ந்து வாய்பிளந்து தனது வக்கிரதந்தத்தா லப்படவு சிதையப் பாய்ந்தது. எ-று. (௬எ)

படவு டைப்பவோர் தோணிமேற் பாய்ந்துமத் தோணி
விடவு றத்தெறித் தெறிந்திட விசைத்தொரு சோங்கி
னிடைபு குந்துநீள் வலையெறிந் திங்ஙனம் வெவ்வே
றுடல்பு குந்துழ லுயிரெனப் பரதனு முழல்வான்.

(இ-ள்.) படவை யுடைக்க, ஒரு தோணிமேற் பாய்ந்தேறி வலைவீசவும், அந்தத் தோணி பிளவுபடத் தெறித்துச் சிதைக்க, கால்விசைத்து ஒரு சோங்கிற் புகுந்து நெடிய வலையை வீசி இவ்வாறு (வினைவசத்தால்) வெவ்வேறு யாக்கைகளிற் சென்று உழலும் உயிரைப்போல அந்நெய்தனிலத் தலைவனு முழன்று திரிவானாயினன். எ-று. (௬அ)

முன்னர் வீசினுற் பின்னுற முளைத்தெழு ம்பன்று
பின்னர் வீசினன் முன்னுறப் பெயர்ந்தெழும் வலத்தி
லுன்னி வீசின லிடம்பட வுருத்தெழு மிடத்தின்
மன்னி வீசினல் வலத்தெழு மகரவே றதுதான்.

(இ-ள்.) மகரமீனனது முன்னே நின்று வலை வீசினல் பின்னே பொருந்த எழுந்து தோன்றும், முயன்று பின்னே நின்று வீசினல் முன்னே பொருந்தத் தலை நிமிர்ந்து எழாநிற்கும், வலப்பானின்று (பிடிக்குஞ் சூழ்ச்சி) கருதி வீசினல் இடப்பால் கோபித்தெழுந்துதோன்றும், இடப்பானின்று வீசினல் வலப்பாலெழாநிற்கும்.

எறிவ லைப்படு மகமலர்ந் தீர்ப்பவ னுள்ள
மறுத லைப்பட வலையினும் வழீஇப்பொரு ளாசை
நெறிம லர்க்குழ லன்னவர் நினைவென நினைவுற்
றறிப வர்க்கரி தாம்பரம் பொருளென வகலும்.

(இ-ள்.) வீசிய வலையில்கப்படும். அகப்பட்டதெனக் கருதி மனமகிழ்ந்து இழுப்பவனுடைய மனஞ்சுழல வலையினின்றும் வழுவி, பொருளாசையையுடைய மலரை யணிந்த நெறித்த கூந்தலையுடைய விலைமகளிர் நினைவைப்போலவும் தியானி

த்துணர்வோ மென்பார்க்கு உணர்தற்கரிய சிவபெருமானைப் போலவும் அகலாநிற்கும். எ-று. (௪௦)

ஏவ லாளரோ டின்னவா றின்னமீன் படுத்தற்
காவ தாங்தொழி லியற்றவு மகப்படா தாக
யாவ ரேயிது படுப்பவ ரென்றிருங் கானற்
காவ லாளனும் பரதருங் கலங்கரு ழுழந்தார்.

(இ-ள்.) ஏவன்மக்களோடு இவ்வகையாக இந்த மகரமீனைப் பிடித்தற் கேதுவாகிய தொழிலைச் செய்யவும் அகப்படாதொழிய, இதனைப் பிடிப்பவரெவரோ அவரை யுணரோமென்று பெரிய கழிக்கரையிலிருந்த காவல்செய்யு மந்நெய்தனிலத்தலைவனும் வலைஞரும் பெருந்துன்பத்தி லாழ்ந்தனர். எ-று. (௪௧)

சங்க லம்புதண் டுறைகெழு நாடணிச் சலதித்
துங்க மந்தர மெனக்கிடந் தலமருஞ் சுறவை
யிங்க ணேந்தெவன் பிடிப்பவ னவனியா னீன்ற
மங்கை மங்கலக் கிழானென மனவலித் திருந்தான்.

(இ-ள்.) சங்குகளொலிக்கும் தண்ணிய கடற்றுறை மிக்க நாட்டையுடைய பரதவகுலபதி இக்கடலில் பெரிய மந்தரகிரியைப்போலக் கிடந்து சுழலு மகரமீனினை வந்து பிடிப்பவன் யாவன் அவனே நானருந்தவத்தாற் பெற்ற மங்கையின் திருமணத்திற்குரியவனென்று உறுதி செய்திருந்தனன். எ-று. (௪௨)

நந்தி நாதனு மினையனு யங்கய னுட்டத்
திந்து வாணுத லாளுமங் கனையளா யிருப்பத்
தந்தி நாலிரண் டேந்திய தமனிய விமானத்
துந்து நீர்ச்சடை யார்மண முன்னினர் மன்னே.

(இ-ள்.) திருநந்திதேவரும் இத்தகையராயிருக்கவும், அங்கயற்கண்ணியாராகிய அர்த்தசந்திரன் போன்ற ஒள்ளிய நெற்றியையுடைய உமாபிராட்டியாரும் அப்புரதவர் சேரியில் அத்தன்மையராயிருக்க அஷ்டகஜங்களாற் றாங்கப்பெற்ற பொன் விமானத்தில் (எழுந்தருளிய) அலை வீசும் கங்கையையணிந்த சடைமுடியையுடைய சுந்தரேசப்பெருமானார் திருமணஞ்செய்தலைக் கருதியருளினர். எ-று. (௪௩)

உயர்ந்த சாதியுந் தம்மினு மிழிந்தவென் றுன்னிக்
கயந்த நெஞ்சுடை வலைச்குலக் கன்னியை வேட்பான்
வியந்து கேட்பதெவ் வாறவர் வெறுக்குமுன் னவருக்
கியைந்த மீன்வலை யுருவெடுத் தேகுது மென்னு.

(இ-ள்.) உயர்ந்த குலங்களும் தம்மைக்காட்டிலு மிழிந்தனவென்று கருதி வெறுத்த மனமுடைய வலைஞர் குலத்துதித்த கன்னிப்பருவமுடையாளை மணவினை முடிக்க மனம் விரும்பிக்கேட்டது எவ்வண்ணம்? அவர்கள் வெறுக்கு முன்னர் அவர்களுக்கேற்ற மீன் (பிடிக்கும்) வலைஞனுருவேற்றுச் செல்வோமென்று. எ-று.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கருகிருண் முகந்தா லன்ன கச்சினன் கச்சீசா டார்த்த
சுரிகையன் றோண்மே லிட்ட துகிலினன் குஞ்சி சூட்டு
முருகுகொப் பளிக்கு நெய்தற் கண்ணியன் மூத்த வானோ
ரிருவரு மறையுந் தேடி யிளைப்பவோர் வலைஞ னுனன்.

(இ-ள்.) கரிய இருளை முகந்தாற்போன்ற கச்சிறுக்கி அக்கச்சுடன் சுட்டியவுடைவாளுடையவனாகி, தோளில் வஸ்திரம் போர்த்து, சிகையில் தேன் சொரியும்

நெய்தல் மாலையணிந்து (தேவர்களுக்கெல்லாம்) மூத்த திருமாலும் பிரமனும் வேதங்களுந் தேடிக் (காணுமல்) இளைக்க ஒருவலைமகனுகிய திருவுருவடைந்தனர். எ-று.

முழுதுல கீன்ற சேற்கண் முதல்வியை யருளி லார்போ
லிழிதொழில் வலைமா தாகச் சபித்தவா றென்னே யென்றும்
மழிபடு சாப மேரூர் பரதராய் வரவும் வேண்டிற்
றழகிது நன்று நன்றே யாலவா யடிகள் செய்கை.

(இ-ள்.) உலகங்களெல்லாவற்றையு மீன்றருளிய முதல்வியாராகிய அங்கயற்கண்ணம்மையாரைக் கிருபையில்லாரைப்போல இழிதொழில்வாய்ந்த வலைஞர் குலக்கன்னியாகச் சபித்த காரணம் யாதோ? (அதனுல்) எந்நாளும் பழியமைந்த சாபக்கோட்படாத பெருமானுர் பரதவர் திருவுருக்கொண்டு (திருமணஞ் செய்தற்கு வருகையும் வேண்டிற்று. திருவாலவாயி லெழுந்தருளிய அப்பெருமானுர் செய்கை நன்று நன்று அழகாயிருந்தது. எ-று.

பழிபடு சாபமேரூர் என்றது, திருமால் முதலியோர் கண்ணுவர் முதலிய முனிவரானும் விருந்தை முதலிய மாதரானும் சபிக்கப்பட்டமையாலும் சிவபெருமான் பிக்ஷாடனத் திருவுருவேற்றபோது தாருகவநமுனிவர் சபிக்க அதன் கோட்படாமையாலும் என்க. (௬௪)

தன்பெருங் கணத்து ளானோர் தலைவனுஞ் சலதி வாண
னென்பது தோன்ற வேட மெடுத்தெறி வலைதோ ளிட்டு
வென்புற மலைப்பக் காவி மீனிடு குடம்பை தாங்கிப்
பின்புற நடந்து செல்லப் பெருந்துறைப் பாக்கம் புக்கான்.

(இ-ள்.) தமது பெரிய சிவகணத்தலைவர்கள் தமக்குத் தலைவராகிய சிவபெருமான் நெய்தனில வாழ்க்கையன் என்பது தோன்ற வேடங்கொண்டு வீசும் வலையினைத் தோளின்மேலிட்டு, முதுகின் புறத்தை யலைப்ப மீன்போடுங் கூட்டைச் சுமந்து தாங்கிப் பின்னே பொருந்த நடந்துவர பெரிய கடற்றுறையிலுள்ள அப்பாக்கத்தை யடைந்தருளினன். எ-று.

சலதிவாணன் - கங்கைவாழ்தலையுடையவன் எனக் கோடலும் ஒன்று.

கழித்தலைக் கண்டற் காடுங் கைதையங் கானு நெய்தற்
சுழித்தலைக் கிடங்கு நீத்துச் சுலீறெனுந் தோட்டுப் பெண்ணை
வழித்தலை சுமந்து வார்கள் வார்ப்பவா யங்காந் தாம்பல்
குழித்தலை மலர்பூங் கானற் கொடுவலைச் சேரி சேர்ந்தான்.

(இ-ள்.) கழியினிடத்திலுள்ள கண்டற்காட்டையும் தாழையையும் இளஞ்சோலையையும் நெய்தல் மலரைச்சுழித்து அலைக்குங் கிடங்குகளையுங்கடந்து,சுலீறென் றொலிக்கும் மடலையுடைய பனையானது வழியினின்று தலையிற் சுமந்து ஒழுகு மதுவினைவாக்க வாய்திறந்து ஆம்பல்கள் குழிகளில் மலரும் பொலிவுவாய்ந்த இளஞ்சோலை சூழ்ந்த அப்பாகத்திலுள்ள வளைந்த வலைஞர் சேரியை யணைந்தருளினுர்.

பெருந்தகை யமுதன் னுளைப் பெறுதுபெற் றெடுப்பா னேற்ற
வருந்தவ வலைஞர் வேந்த னதிசய மகத்துட் டோன்ற
வருந்தகை யுடைய காளை வலைமகன் வரவு நோக்கித்
திருந்தழ குடைய நம்பி யாரைநீ செப்பு கென்றான்.

(இ-ள்.) பெருந்தகைமையையுடைய அமுதை யொத்த உமாதேவியாரை கருப்பம்வாய்ந்து பெறாமல் பெற்றெடுக்கத் தவஞ்செய்த அரிய தவத்தையுடைய வலைஞர் குலபதி ஒரு பெருவியப்புத் தன் மனத்திற்றோன்ற வராநின்றதகைமைவாய்ந்த

காளைப்பருவத்தையுடைய வலைஞரது வருகையைப்பார்த்து திருந்திய அழகையுடைய நம்பியே! நீ யார் சொல்லக்கடவாயென்று வினவினன். எ-று. (௪௯)

சந்தநான் மறைகள் தேறாத் தனியொரு வடிவாய்த் தோன்றி
வந்தமீன் கொலைஞன் கூறு மதுரையில் வலைஞர்க் கெல்லாந்
தந்தைபோற் சிறந்து ளானோர் தனிவலை யுழவ னல்ல
மைந்தன்யான் படைத்துக் காத்துத் துடைக்கவும் வல்ல னாவேன்.

(இ-ள்.) சந்தமமைந்த நான்கு வேதங்களும் அளந்து தெளியாத ஒப்பில்லாத ஒரு திருவுருவங்கொண்டு தோன்றி வந்தருளிய பரதவர் குலபதி, கூறுகின்றார்; மதுரையிலுள்ள வலைஞர்களுக்கெல்லாம் பிதாவைப்போலக் காவல்பூண்டு சிறந்த ஒரு ஒப்பில்லாத வலைஞர் குலபதியின் மேம்பட்ட புத்திரன் யான் படைத்துங் காத்தும் அழிக்கவும் வல்லவனாவேன். எ-று. (௫0)

அல்லது வான்மீ னெல்லா மகப்பட வலைகொண் டேர்ச்ச
வல்லவ னாவே னென்ன மற்றிவன் வலைஞன் கோலம்
புல்லிய மகன்கொ லென் முன்னம் புகன்றசொல் லொன்றிப் போது
சொல்லிய தொன்றி ரண்டுஞ் சோதனை காண்டு மென்னா.

(இ-ள்.) இஃதன்றி, வான்மீனெல்லாம் சிக்க வலைகொண்டேறியும்படி வல்லவனுவனென்று கூறியருள, இவன் வலைஞர் கோலங்கொண்டுவந்த ஒருபுருடனே! முன்பு கூறிய வார்த்தையொன்று இப்பொழுது கூறியதொன்று இவ்விரண்டையும் சோதிப்போமென்று கருதி. எ-று. (௫௧)

தொண்டுறை மனத்துக் கானற் றுறைமக னஃதே லிந்தத்
தண்டுறை யிடத்தோர் வன்மீன் றழலெனக் கரந்து சீற்றங்
கொண்டுறை கின்ற தைய குறித்தது பிடித்தி யேலென்
வண்டுறை கோதை மாதை மணஞ்செயத் தருவே னென்றான்.

(இ-ள்.) (சிவபெருமான் திருவடிக்கு) தொண்டுபட்ட மனத்தையுடைய இளஞ்சோலை சூழ்ந்த கடற்றுறைத்தலைவன் அஃதாயில் ஐயனே! இந்தத் தண்ணிய துறையினிடத்து ஒரு வலிய மகரமீன் வடவாமுகாக்கினியைப்போல ஒளித்துக் கோபங்கொண்டு வசிக்கின்றது; கருதி யதனைப் பிடிப்பாயாகில் எனது பெறுதற்கரியவண்டுகள் மதுவுண்டு வசிக்கு மாலையையணிந்த புத்திரியைத் திருமணமுடிக்கக் கொடுப்பேனென்று கூறினன். எ-று. (௫௨)

சிங்கவே றனையான் காலிற் சென்னடைப் படகிற் பாய்ந்து
சங்கெறி தரங்கந் தட்பத் தடங்கடல் கிழித்துப் போகிக்
கிங்கர னான காளை வரையெனக் கிளைத்த தோண்மேற்
றொங்கலிற் கிடந்து ஞான்ற தொகுமணி வலையை வாங்கி.

(இ-ள்.) சிங்கவேற்றை யொத்த வலைஞ ருருக்கொடுவந்த சிவபெருமானார் காற்றைப்போல விரைந்து செல்லும் நடையையுடைய படவின்மேற் பாய்ந்து சங்கினை வீசும் அலைகள்மேலெழுந்து தடுக்கவும் பரந்த கடலைக் கிழித்துச் சென்று தமது ஏவலாளனான சிவகணத்தலைவனுடைய மலைபோலக் கிளைத்த தோளின்மேல் மாலைபோலக் கிடந்தசையும் (விளிம்பிற்கோத்த) மணிகள் நெருங்கிய வலையினை வாங்கி.

செவ்விதி னோக்கி யாசந் திருகநின் றெறிந்தான் பக்கங்
கௌவிய மணிவில் வீச விசையொலி கறங்கிப் பாயப்
பைவிரித் துயிர்த்து நாகம் விழுங்கவாய் பட்ட மீன்போல்
வெவ்வினைச் சுறவே றையன் விடுவலைப் பட்ட தன்றே.

(இ-ள்.) அப்பெருமானுர் குறித்துப் பார்த்துத் தமது திருமேனி திருக்நின்று வீச, விளிம்பிற் பொருந்திய மணிகள் ஒளிவீசவும் வீசிய விசையால் (மேகத்தின் ஒலிபோல) ஒலி கோஷித்துப் பரவவும் படத்தை விரித்துப் பெருமூச்செறிந்து சர்ப்பம் விழுங்க அதன் வாயிற்பட்ட மீனைப்போலக் கொடுந்தொழிலையுடைய மகரவேறு வீசிய அவ்வலையில் அகப்பட்டது. எ-று. (௫௪)

மாசறு கேளி ரன்பின் வலைப்படும் வலைஞர் கோன்றாய்
வீசிய வலையிற் பட்ட மீனினைச் சுருக்கி வாங்கிக்
காசெறி தரங்க முந்நீர்க் கரையிடை யிட்டான் கள்வாய்
மூசுதே னென்ன வார்த்து மொய்த்தன பரதச் சாதி.

(இ-ள்.) குற்றத்தினின்று நீங்கிய அடியவர் பத்திவலையிற்படும் வலைஞர் கோமானுர் தாவி வீசிய வலையிலகப்பட்டமீனை அவ்வலையைச் சுருக்கி யிழுத்து இரத்தினங்களை வீசும் அலைகளையுடைய கடலின் கரையிற்போட்டனர். உடனே மதுவில் மொய்த்த வண்டைப்போல ஆரவாரித்து வலைஞர் கூட்டம் நெருங்கின. எ-று. (௫௫)

கிளையுநங் கோனும் வீசு வலைஞராய்க் கிளர்தோ ளாற்றல்
விளைவொடு முயன்று பன்னாள் வினைசெயப் படாத மீனிவ்
விளையவ னொருவன் றானே யொருவிசை யெறிந்தா னீர்த்தா
னளியநங் குலத்தோர் தெய்வ மகனிவ னாகு மென்றார்.

(இ-ள்.) கிளைஞரும் நமது குலப்பதியும் வீசாநின்ற வலைத்தொழிலினராய் விளங்கும் புயவன்மையின் கிளர்ச்சியோடு பலநாளு முயன்று வீசியும் அகப்படாத மீன் இந்த இளைஞனொருவனே யொருதரம் வலைவீசி யிழுத்தனன்; இவன் நமது குலத்திற்குரிய கருணையையுடைய ஒப்பில்லாத தெய்வமாவானென்று கூறினார்கள். (௫௬)

கைதைசூழ் துறைவ னுகை கைமிகப் பம்பை யேங்க
நொய்தெனு நுசுப்பிற் கள்வாய் நுளைச்சியர் குரவை தூங்கப்
பைதழை பகுவாய்க் கச்சைப் பரதவற் கலங்கன் ஞாழல்
செய்தெழுங் கோதை மாதைத் திருமணம் புணர்த்தி னானே.

(இ-ள்.) தாழைசூழ்ந்த கடற்றுறையையுடைய வலைஞர் குலபதி மகிழ்ச்சியில் மிக்குப்பொலியவும், பம்பையென்னும் வாச்சியம் ஒருபாலொலிக்கவும், நொய்துபட்ட இடையையும் மதுமணக்கும் வாயையுமுடைய வலைமகளிர் ஒருபால் குரவைக்கூத்தாடவும், படம்விரித்த அரவத்தைக் கச்சையாகவுடைய பரதவர் குலபதியாகவந்த பெருமானுர்க்குக் குங்கும மலராற்றெடுத்த மாலையையணிந்த கூந்தலையுடைய தனது புத்திரியாராகிய உமாதேவியாரைத் திருமணம்சேர்த்தான். எ-று.

பகுவாய்-அன்மொழி. (௫௭)

அந்நிலை வதுவைக் கோல மாயின மருக னாரு
மின்னிலை வேற்க ணாளும் விண்ணிடை விடைமேற் கொண்டு
தந்நிலை வடிவாய்த் தோன்றித் தடங்கரை மீனந் தானு
நன்னிலை வடிவே போன்று நந்தியாய் முந்தித் தோன்ற.

(இ-ள்.) அப்பொழுது திருமணக்கோலங்கொண்டருளிய மருமகனாராகிய பெருமானாரும் ஒளிநிலைபெற்றோங்கும் வேல்போன்ற கண்களையுடைய உமாதேவியாரும் ஆகாயத்தில் இடபவூர்தியின்மே லெழுந்தருளித் தமக்குரிய அருளுருவாய்ச் சகளீகரித்துத்தோன்றியருளி பரந்த கடற்கரையிலுள்ள மகரமீனும் முன்னருள்ள திருவுருவத்தையே வாய்ந்து திருநந்திதேவராய் முற்பட்டுத்தோன்ற. எ-று. (௫அ)

கொற்றவெள் விடைமேற் காட்சி கொடுத்தவர் கருணை நாட்டம்
பெற்றலின் மேலைச் சார்பாற் பிணித்தவிப் பிறவி வாழ்க்கைச்
சிற்றறி வொழிந்து முந்நீர்ச் சேர்ப்பனல் லறிவு தோன்றப்
பொற்றனு மேரு வீரன் பூங்கழ லடிக்கீழ்த் தாழ்ந்தான்.

(இ-ள்.) வெற்றியையுடைய வெள்ளிய இடபவூர்தியின்மேல் காட்சிதந்தருளிய பெருமானுர் கிருபாநோக்கம் பெறுதலால் கடற்றுறையையுடைய வலைஞர் குலபதி முற்பிறப்பிலுள்ள கன்மச்சார்பினுற் கட்டுண்ட இந்தச்சனன உடல்வாழ்விற் கியைந்த சிற்றறிவினின்று நீங்கி நல்லுணர்வுதிக்கப் பொன்மேருவையே வில்லாக வுடைய வரம்பிலாற்றலையுடைய பெருமானுரது பொலிவமைந்த வீரக்கண்டையை யணிந்த திருவடிக்கீழ் வணங்கினுன். எ-று. (ருக)

இரக்கமி லிழிந்த யாக்கை யெடுத்துழ லேழை யேனைப்
புரக்கவின் றென்போல் வந்த புண்ணிய வடிவம் போற்றி
யரக்கெறி பவளச் செவ்வா யணங்கினை மணந்தென் பாசங்
கரக்கவெள் விடைமே னின்ற கருணையே போற்றி யென்றான்.

(இ-ள்.) கண்ணோட்டம் சிறிதுமில்லாத இழிந்த சரீரத்தையெடுத்துழலும் அறிவில்லாதவென்னை யிப்பொழுதுகாக்க என்னைப்போல என் குலவடிவங்கொண்டு வந்தருளிய தருமசொருபத்தை வந்திக்கக்கடவேன் செந்நிறத்தை வீசும் பவளம்போன்ற செவந்த திருவாயையுடைய எனது புத்திரியாரைத் திருமணம்புணர்ந்து எனது ஆணவமலச்சிமிழ்ப்பு நீங்க வெள்ளிய இடபவூர்திமேனின்று காட்சிதந்தருளிய திருவருளையே வந்திக்கக்கடவேன். எ-று. (சுo)

அகவிலான் பரவி நின்ற வன்பனை நோக்கிப் பன்னாண்
மகவிலா வருத்த நோக்கி யுமையைநா மகளாத் தந்து
தகவினுன் மணந்தே நீயித் தரணியிற் றனத னென்ன
நகவிலாப் போக மூழ்கி நம்முல கடைவா யென்ன.

(இ-ள்.) அடியாரிதயமே தமக்குத் திருக்கோயிலாகக்கொண்டருளிய பெருமானுர் தம்மைத்துதித்து நின்ற நெய்தற்றுறைவனைநோக்கி,பலநாளு மக்களில்லாமையால் நீ வருந்தும் வருத்தத்தைப்பார்த்து, நம்மினின்றும் பிரியாத உமாதேவியாரை நாம் உனக்குத் திருமகளாகத்தந்து (வேதாகமங்களிற்கூறிய) விதியால் திருமணமுடித்தோம்; நீ இந்நிலவுலகில் குபேரனைப்போல இகழ்ச்சியில்லாத பெரும்போகத்திலழுந்தி நமது சிவலோகத்தை யடைவாயென்று. எ-று. (சுக)

பெண்ணினை வதுவைக் கீந்த பெருந்துறைச் சேர்ப்பற் கன்று
தண்ணளி சுரந்து நல்கித் தருமமா விடைமேற் றேன்றி
விண்ணிடை நின்றான் சென்றான் வேத்திரப் படையா னோடு
முண்ணிறை யன்ப ரோடு முத்தர கோச மங்கை.

(இ-ள்.) தனது புத்திரியாரைத் திருமணமுடித்தற்குக்கொடுத்த பெரிய நெய்தற்றுறைத்தலைவனுக்கு அக்காலையில் தண்ணிய திருவருள் சுரந்தருளித்தருமமாகிய பெரிய இடபவூர்தியிலெழுந்தருளி விண்ணில் நின்ற சிவபெருமானுர் வேத்திரப்படையையேந்திய நந்தியம்பெருமானேடும் உள்ளத்தில் நிறைந்த மெய்யன்பரோடும் திருவுத்தரகோசமங்கைக்குச் சென்றருளினுர். எ-று. (சுஉ)

அங்கிருந் தநாதி மூர்த்தி யாதிநான் மறைக ளேத்துங்
கொங்கிருங் கமலச் செவ்விக் குரைகழல் வணங்கிக் கேட்பப்

பங்கிருந் தவட்கு வேதப் பயனெலாந் திரட்டி முந்நீர்ப்
பொங்கிருஞ் சுதைபோ லட்டிப் புகட்டினன் செவிக ளார.

(இ-ள்.) அநாதி முத்த நித்தராகிய பெருமானார் அத்தலத்திருந்தருளி பழமையாகவுள்ள நான்குவேதங்களும் வணங்கும் வாசமிக்க பெருமைபொருந்திய தாமரைமலர்போலும் செவ்விவாய்ந்த ஒலிக்கும் வீரகண்டையையணிந்த திருவடியை வணங்கி முன்னர்த்திருவாலவாயிற் கேட்டருளுதல்போலக் கேட்டருள, இடப்பாகத்திலிருந்த பெருமாட்டியார் வேதப்பயன்களையெல்லாம் ஒருசேரத் திரட்டிக் கடலிற்றோன்றிய பெருமைவாய்ந்த அமுதைப் புகட்டுதல்போலச் செறித்துப் புகட்டியருளினார். எ-று. (௬௩)

மேற்படி வேறு.

அவ்வேலை யன்புடையா ரறுபதினா யிரவர்க்கு மளித்துப் பாச
வெவ்வேலை கடப்பித்து வீடாத பரானந்த வீடு நல்கி
மைவ்வேலை யனையவிழி யங்கயற்க ணங்கையொடு மதுரை சார்ந்தா
னிவ்வேலை நிலம்புரக்க முடிகவித்துப் பாண்டியனென் றிருந்த மூர்த்தி.

(இ-ள்.) இந்தக்கடல்சூழ்ந்த நிலவுலகைக்காக்க மகுடஞ்சூடிச் சவுந்தரபாண்டியனெனத் திருநாமம்வாய்ந்து செங்கோல்செலுத்திய சோமசுந்தரமூர்த்தி (உமாதேவியார்க்குபதேசித்தருளிய) அக்காலையில் (தமது அனுஞையால் அங்கிருந்த) அன்பிற் சிறந்தவர்களாகிய அடியவர்கள் சிவயோகியர்களாகிய அறுபதினாயிரவர்களுக்கும் உபதேசித்தருளி ஆணவமலமாகிய வெய்யகடலினைக்கடக்கச்செய்து என்றும் ஒருபடித்தாய் நிலைபெற்ற ஞானானந்தத்தைவிளைக்கு முத்திநிலைதந்தருளி மையெழுதிய வேலையொத்த கண்களையுடைய அங்கயற்கண்ணியாரோடும் திருவாலவாயை யடைந்தருளினார். எ-று. (௬௪)

வலைவீசினபடல முற்றிற்று.

ஆகபாயிரம் உட்படத்திருவிருத்தம் ௨௭௧௧.

---

ஐம்பத்தெட்டாவது,

## வாதவூரடிகளுக்கு உபதேசித்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

கலைவீசு மதிச்சடையோன் கடற்றுறைவன் றலைச்சென்று
வலைவீசி யவன்பாச வலைவீசும் பரிசிதுமே
லலைவீசும் புனல்வாத வூராளவந் தவிச்சைவலி
நிலைவீசிப் பணிகொண்ட நெறியறிந்த படிமொழிவாம்.

(இ-ள்.) நிலாவொளி வீசுகின்ற பிறையையணிந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் கடற்றுறைவனாகிய நெய்தனிலைத்தலைவனிடத்துச்சென்று கடலில் வலைவீசி அவனது ஆணவமாகிய வலைக்கட்டினை யறுத்தருளிய திருவிளையாட்லிது. இனி அலைவீசாநின்ற நீர்நிலைசூழ்ந்த வாதவூரடிகளைத் தேசிகமூர்த்தமாய் வந்தருளி அஞ்ஞானமாகியகட்டைச்சேதித்துப் பணிகொண்டருளிய திருவிளையாடலைத் தெரிந்தவண்ணம் எடுத்துக்கூறுவாம். எ-று. (௧)

தொடுத்தவறு மையும்பயனுந் தூக்கிவழங் குநர்போல
வடுத்தவயல் குளநிரப்பி யறம்பெருக்கி யவனியெலா
முடுத்தகட லொருவர்க்கு முதவாத வுவரியென
மடுத்தறியாப் புனல்வைகைக் கரையுளது வாதவூர்.

(இ-ள்.) ஒருவனைச்சூழ்ந்த மிடியையும் அவன் பிறர்க்குப்பயன்படும் பிரயோசனத்தையும் ஆராய்ந்து கொடுப்பார்போல அடுத்த வயலையுங் குளத்தையும் வறுமைதீர நீர் நிரப்பி, அவற்றால் பல தருமங்களையும்வளர்த்து, உலகைமுற்றுஞ்சூழ்ந்த கடலானது ஒருவர்க்காயினுமுதவாத உவர்நீருடையதென்று அதிற் சற்றும் பாய்ந்துணராத நீர்மயமாகிய வைகைக்கரையின்கண் வாதவூரென்னுந் திருப்பதியுள்ளது.

விழவறா நகரெங்கும் விருந்தறா மனையெங்கு
மழவறா மகிழ்வெங்கு மறையறா கிடையெங்கு
முழவறா வரங்கெங்கு முகிலறா பொழிலெங்கு
முழவறா வயலெங்கு முடம்பறா வுயிரென்ன.

(இ-ள்.) தேகத்தினின்று நீங்காத உயிரைப்போல நகரமெங்கணும் உற்சவநீங்கா; வீடுகளெங்கணும் (இருவகை) விருந்தும் நீங்கா; மகிழ்ச்சிதோன்று மிடமெங்கணும் பிள்ளைகள் நீங்கா; வேதமோதும் பாடசாலைகளெங்கணும் வேதமோதுதல் நீங்கா; நாடகசாலையெங்கணும் மத்தளமுழக்கம் நீங்கா; சோலையெங்கணுமேகந் தவழுதல் நீங்கா; வயலெங்கணும் உழவுத்தொழில் நீங்கா. எ-று.

ஆயவளம் பதியதனி னமாத்தியரி லருமறையின்
றாயசிவா கமநெறியின் றுறைவிளங்க வஞ்சனையான்
மாயனிடும் புத்தவிரு ளுடைந்தோட வந்தொருவர்
சேயிளம் பரிதியெனச் சிவனருளா லவதரித்தார்.

(இ-ள்.) இவ்வாறு வளம்பொருந்திய வாதவூரில் அந்தணகுலத்திலே ஆமாத்தியர்மரபிலே, அரியவேதநெறியின் பாகுபாடுகளும், களங்கமில்லாத சிவாகமநெறியின் பாகுபாடுகளும் விளங்கவும், (திரிபுராதியரை) வஞ்சித்தற்பொருட்டு மாயையில் வல்ல திருமால்நிறுத்திய புத்தசமயமாகிய பேரந்தகாரஞ்சிதைந்தழியவும் ஒருவர்வந்து செவந்த இளஞ்சூரியனைப்போலச் சிவபெருமானருளாலவதரித்தனர்.

பேர்வாத வூரரெனப் பெற்றுத்தம் பிறங்குமறைச்
சார்வாய நூல்வழியாற் சடங்கெல்லா நிறைவெய்தி
நீர்வாய விளமதிபோ னிரம்புவார் வேதமுதற்
பார்வாயெண் ணெண்கலையும் பதினாறாண் டினிற்பயின்றார்.

(இ-ள்.) நாமகரணம் வாதவூரரெனப்பெற்றருளித் தமக்குரிய விளங்கும் வேதத்தின் சார்பாயுள்ள நூல்களின் வழியால்செய்யுஞ் சடங்குகளெல்லா நிரம்ப வாய்ந்து தண்ணிய தன்மைவாய்ந்த இளம்பிறைபோலவளரும் வாதவூரர் வேதமுதலாக வுலகிலார்ந்த அறுபத்துநான்கு கலைகளையும் பதினாறுவயதில் நிரம்பப்பழகினார்.

இத்தகையோர் நிகழ்செய்தி யறிந்தவர்சென் றியம்பவரி
மர்த்தனபாண் டியன்கேட்டு வரவழைத்து மற்றவரைச்
சித்தமகிழ் வரிசையினாற் சிறப்பளித்துத் தன்கோயில்
வித்தகநன் மதியமைச்சின் றொழில்பூட்டி மேம்படுத்தான்.

(இ-ள்.) இத்தன்மையையுடைய வாதவூரர் வேதமுதலிய நூல்களில் வல்லவராகி நிகழுஞ் செய்தியையறிந்தசிலர் சென்றுகூற அரிமர்த்தனபாண்டியன்

கேள்வியுற்று அவனை வருவித்து மனமகிழ்தற்கு ஏதுவாகிய வரிசைகளோடு அமைச்சியற்குரிய சிறப்புப் பெயரையுங்கொடுத்துத் தனது கோயிலில் சதுரப்பாடமைந்த நல்ல கூரிய மதிவாய்ந்த மந்திரித்தொழிலுரிமைவைத்து அவனை மேம்படுத்தினன்.

செற்றமிகுங் கருவிகளின் றிறநூலு மனுவேந்தன்
சொற்றபெருந் தொன்னூலுந் துளக்கமற விளக்கமுறக்
கற்றறிந்தோ ராதலினற் காவலற்குக் கண்போன்ற
முற்றுணர்ந்த வமைச்சரினு முதலமைச்ச ராய்த்திகழ்வார்.

(இ-ள்.) கோபமிக்க சேனைகளின் பகுதியையுணர்த்தும் நூலையும் மநுவென்னு மரசன்கூறிய பெருமைவாய்ந்த தொன்றுதொட்டுள்ள நூலையும் ஐயந்திரிபற விளங்கக்கற்றுணர்ந்தோராதலால், பாண்டியனுக்கு இரண்டுகண்களைப்போல வாய்ந்த முன்னுள்ள மந்திரிகளினுமுதலமைச்சராய் மேம்பட்டு விளங்குவாராயினர்.

கருவி=சேனை. (எ)

புல்லாதார் முரணடக்கிப் பொருள்கவர்வா ரென்பதெவன்
செல்லாத பல்வேறு தீபத்துச் செங்கோன்மை
வல்லாருந் தத்தமதேத் தரியபொருள் வரவிடுத்து
நல்லாரா யொப்புரவு நட்படைய நடக்கின்றார்.

(இ-ள்.) அடைதற்கரிய பலவாக வேறுபட்ட தீவுகளில் செங்கோல்செலுத்தவல்ல அரசர்களுந் தங்கள் தங்கள் நாடுகளில் இடைத்தற்கரிய பொருள்களை யனுப்பி, பகைமையில்லாதவர்களாய் மனமொத்த நட்புக்கொண்டொழுக நடக்கும் பெருந்தகைமைவாய்ந்த வாதவூரர் பகைவர் வலிமையையடக்கி அவர்கள்பொருளைக் கொள்ளைகொள்வாரென்று கூறல் அவரது வன்மைக்குச்சிறந்ததன்று. எ-று. (அ)

அண்ணலரி மருத்தனனுக் கடல்வாத வூரமைச்சர்
கண்ணுமிடு கவசமும்போற் காரியஞ்செய் தொழுகுவார்
தண்ணளிசெய் தவனியெலாந் தங்கிளைபோற் குளிர்தூங்க
வண்ணமதிக் குடைநிழற்றி முறைசெய்து வாழுநாள்.

(இ-ள்.) வெற்றிவாய்ந்த வாதவூரில் வந்தருளிய மந்திரியார் பெருந்தகைமைவாய்ந்த அரிமர்த்தனபாண்டியனுக்குக் கண்களையும் பூண்ட கவசத்தையும்போல வினைசெய்தொழுகித் தண்ணிய கருணைசெய்து நிலவுலகிலுள்ள மக்கள் யாவருந் தமது கிளைஞர்போல வெம்மைநீங்கி மகிழ்சிறக்க நிறம்வாய்ந்த சந்திரன்போன்ற தவளவட்டக்குடையால் நிழல்செய்து செங்கோல் நடாத்திவாழுங்காலையில். எ-று. (கூ)

கலிநிலைத்துறை.

மெய்ம்மை யாம்பொருள் விவேகமும் வேறுபா டாய
பொய்ம்மை யாம்பொருள் விவேகமும் புந்தியுட் டோன்ற
விம்மை யாசையு மறுமையி லாசையு மிகந்து
செம்மை யாகிய கருத்தராய்ப் பரகதி தேர்வார்.

(இ-ள்.) நித்தியமாகிய பொருளுணர்ச்சியும் திரிபுள்ள அநித்தியமாகிய பொருளுணர்ச்சியும் தமது மனத்திலுதிப்ப, இகபோகத்தில் விருப்பும் பரபோகத்தில் விருப்புமாகிய இவற்றினின்று நீங்கிச் சுத்தியையுடையவராய்ப் பரமுத்தியை ஆராய்வாராயினர். எ-று. (௧௦)

புத்த ராதியோர் புறவுரை நெறிகளும் பொய்யா
நித்த வேதநூ றழுவிய வகவுரை நெறியுஞ்

சித்த மாசறுத் தரனருட் டெளிவியா வதனுன்
மித்தை யாணவத் தொடக்கறு தில்லையாம் வீடும்.

(இ-ள்.) புத்தர் முதலியோரது புறநூல் கூறுமார்க்கமும் மெய்ம்மையையுடைய அழியாத வேதநூலைத்தழுவிய அகநூல் மார்க்கமும் மனக்குற்றத்தையொழித்துச் சிவபெருமான் திருவருளைத் தெளிவுறுத்தமாட்டா; தெளிவுறுத்தலின்மையால் சடமாகிய ஆணவக்கட்டொழியா; முத்தியும் இல்லையாம். எ-று. (கக)

பத்தி செய்தர னருட்பெறும் பத்தருக் கன்றி
முத்தி யெய்தரி தெனமறை மொழிவதஃ பொதுநூல்
சத்தி யப்பொருட் டெளிவெலாஞ் சத்திநி பாதர்க்
குய்த்து ணர்த்திய தாகம மென்பர்மெய் யுணர்ந்தோர்.

(இ-ள்.) அன்புசெய்து சிவபெருமான் திருவருள் பெறுநிற்கும் அடியவருக்கல்லாமல் சிவகதி யடைதலரிதென்று அப்பொது நூலாகிய வேதங்கள் கூறுநிற்கும்; உண்மையையுணர்ந்த பெரியோர் உண்மைவடிவாகியசிவத்தைத் தெளிதலெல்லாவற்றையும் திருவருட் பதிவுடையோர்க்குச் சிறப்பு நூலாகிய ஆகமம் விளக்கியுணர்த்தாநிற்குமென்று கூறுவர். எ-று. (கஉ)

வேத வாகமச் சென்னியில் விளைபொரு ளபேதம்
பேத மாகிய பிணக்கறுத் திருட்பிணி யவிழ்த்து
நாத னாகிய தன்னையு மென்னையு நல்கும்
போத னாகிய குருபரன் வருவதெப் பொழுதால்.

(இ-ள்.) வேதாகமங்களின் சிரசில் விளையும் பொருளால் அபேதம் பேதமென்னும் பிணக்கினை யொழித்து ஆணவமலமாகிய கட்டினின்றும் நீக்கி எப்பொருட்கும் இறைவனாகிய தன்னையும் என்னையும் அருளாநிற்கும் ஞானாசிரியராகிய குருமூர்த்தி வந்தருளுதல் எக்காலையென்று. எ-று. (கங)

கரவி லாதபே ரன்பினுக் கெளிவருங் கருணைக்
குரவ னாரரு ளன்றியிக் கொடியவெம் பாசம்
புரையில் கேள்வியாற் கடப்பது புணையினு லன்றி
யுரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ தொக்கும்.

(இ-ள்.) வஞ்சனையில்லாத பெரிய அன்பினுக்கு எளிவந்தருளும் கிருபாமூர்த்தியாகிய ஞானாசிரியருடைய திருவருட்புணையின்றி இந்தக் கொடிய வெய்ய பாசமாகிய கடலைக் குற்றமில்லாத நூற்கேள்வியாற் கடக்கத் தொடங்கல் மரக்கலத்தாலன்றிப் பெரிய நீர்மயமாகிய கடலினைக் கடத்தற்குக் கையினால் நீந்துதல் ஒக்குமென்று. எ-று. (கச)

என்றிவ் வாதவூர் மறையவ ரின்புவீ டெய்தத்
துன்று மாசையாற் றொடக்குண்டு சுருதியா கம்நூ
லொன்று கேள்வியோர் வருந்தொறு முணர்ந்தவ ரிடைத்தாஞ்
சென்று காண்டொறு மளவளாய்த் தேர்குவா ரானார்.

(இ-ள்.) இந்த வாதவூரி லவதரித்த அந்தணாளர் பேரின்பவடிவாகிய பரகதியை யடைய எல்லையின்றி யெழுந்த ஆசையினால் கட்டுண்டு வேதாகம நூல்களிற் பொருந்திய கேள்வியில் வல்லோர் வருந்தோறும் அவர்கள்பாற் பதி பசுபாச விலக்கணங்களை யுணர்ந்து அவர்களிடத்துச் சென்று பார்க்குந்தோறுங் கலந்து தெளிவாராயினார். எ-று. (கரு)

எண்ணி லாரிடத் தளந்தளந் தறிபொரு ளெல்லா
முண்ணு நீர்விடாய்க் குவரிநீ ருண்டவ ரொப்ப
வண்ண லாரகத் தமைவுறு தரசனுக் குயிருங்
கண்ணு மாயமைச் சுரிமையுங் கைவிடா தியல்வார்.

(இ-ள்.) பெருமைவாய்ந்த வாதவூரர், அளவில்லார் பலர்பாலும் வரையறுத் தாராய்ந்தறிந்த பொருள்களெல்லாம் பருகும் நீர்விடாய் தணித்தற்குக் கடல்நீரைப் பருகி நீர்விடாய் தணியாதார்போலத் தமது மனத்தில் நிரம்பாது அரிமர்த்தன பாண்டியனுக்கு இன்றியமையாத உயிரும் கண்ணுமாகி, அமைச்சியலுரிமையையும் கைவிடாமல் தாம்கொண்ட ஒழுக்கத்தில் வழுவா தொழுகுவாராயினர். எ-று. (கசு)

கள்ளக் காதல னிடத்தன்பு கலந்துவைத் தொழுகு
முள்ளக் காரிகை மடந்தைபோ லும்பரைக் காப்பான்
பள்ளக் காரியுண் டவனிடத் துள்ளன்பு பதிந்து
சொள்ளக் காவல னிடைப்புறத் தொழிலுமுட் கொண்டார்.

(இ-ள்.) சோரபுருடனிடத்துத் தலையன்பு தனது அகத்தே பதியவைத்து, (புறத்தே தனக்குரிய கணவன் புறத்தொழிலின்) சிறிதும் வழுவாதொழுகு மாதுபோலத் தேவர்களைக் காக்கக் கடலிற்றோன்றிய விஷத்தையுண்ட பெருமானிடத்தில் தலையன்பு உள்ளே பதிந்து கிடக்க, அரிமர்த்தன பாண்டியனிடத்தில் அமைச்சியலாகிய புறத்தொழிலையும் சிறிதும் வழுவாமல் உட்கொண்டொழுகினர். எ-று.

பள்ளம் - ஆகுபெயர். (கள)

இன்ன செய்கையி னொழுகுவா ரொருபொழு தேகித்
தென்னர் தம்பிரா னவையிடைச் சென்றெதிர் நின்று
ரன்ன போதடு பரிநிரை காப்பவ ரரசன்
முன்னர் வந்துதாழ்ந் தொருசிறை நின்றிது மொழிவார்.

(இ-ள்.) இச்செய்கையின் ஒழுகும் வாதவூரர் ஒருபோது அரசன் கோயிற்குச் சென்று பாண்டியர் பெருமானாகிய அரிமர்த்தன பாண்டியன் அவைக் களத்திற் போய் அவன் எதிர்நின்றனர். அக்காலையில் கொல்லும் குதிரைப்பந்தியைக் காக்குங் காவலாளர்கள் அப்பாண்டியன் முன்வந்து வணங்கி யொருபாலொதுங்கிநின் றிதனைக் கூறுவார்கள். எ-று. (கஅ)

மறந்த வாதவேல் வலவநம் வயப்பரி வெள்ளத்
திறந்த வாம்பரி போகநின் றெஞ்சிய வெல்லா
நிறைந்த நோயவு நெடிதுமூப் புடையவு மன்றிச்
சிறந்த வாம்பரி யொன்றிலை தேர்ந்திடி னென்றார்.

(இ-ள்.) கொலைத்தொழிலினின்று நீங்காதவேலெறிதலில் வல்ல அரசனே! நமது வெற்றியையுடைய குதிரைக்கூட்டத்துள் மரித்த குதிரைகள் போக இறவாது நின்று சேடமாயுள்ள குதிரைகளெல்லாம் மிக்க நோயையுடையனவும், கழிந்த மூப்புடையனவும் அல்லாமல், ஆராயின் சிறப்பினையுடைய குதிரைகள் ஒன்றுமில்லையென்று கூறினார்கள். எ-று. (கக)

மன்றல் வேம்பனும் வாதவூர் வள்ளலை நோக்கி
யின்று நீர்நம தறைதிறந் திருநிதி யெடுத்துச்
சென்று வேலையந் துறையில்வந் திறங்குவ தெரிந்து
வென்றி வாம்பரி கொடுவரப் போமென்று விடுத்தான்.

(இ-ள்.) வாசமிக்க வேப்பமலர் மாலையையணிந்த பாண்டியனும் வாதவூரி லவதரித்த அந்தணரைப்பார்த்து நீர் இப்பொழுது நமது பொக்கிஷத்தைத்திறந்து எல்லையில்லாத திரவியத்தையெடுத்துச்சென்று கடலின் அழகிய துறையில்வந்திறங் குங் குதிரைகளைத்தெரிந்து வெற்றியையுடைய தாவுங் குதிரைகளைக் கொண்டுவரச் சொல்லுமென்று அனுப்பினன். எ-று. (௨௦)

உள்ளம் வேறுபட் டமைச்சிய னெறியினின் றொழுகும்
வள்ள லார்நிதி யறைதிறந் தரும்பெறல் வயமான்
கொள்ள வேண்டிய பொருளெலாங் கொண்டுதா ழிறுக்கி
வெள்ளை மாமதி வேந்தனை விடைகொடு போவார்.

(இ-ள்.) மனம்வேறாய் அமைச்சியலின் வழியினின்று வழுவாதொழுகும் வாதவூரர் கருவூலத்தைத்திறந்து பெறுதற்கரிய வெற்றிவாய்ந்த குதிரைகளை விலைக்கு வாங்கும்பொருட்டு வேண்டுமான பொருளையெல்லாங் கைக்கொண்டுதாழ்செறித்து, வெண்ணிறம்வாய்ந்த கலைநிறைந்த சந்திரன்மரபிற்றோன்றிய அரிமர்த்தனபாண்டிய னிடத்து விடைபெற்றுச் செல்கின்றவர். எ-று.

வேந்தனை - வேற்றுமைமயக்கம். (௨௧)

எடுத்த பொற்சுமை யொட்டகத் திட்டுமுன் னேக
விடுத்து விண்டொடு திண்டிறல் விடையவன் கோயி
லடுத்த விழ்ந்தபொன் னம்புயத் தடம்படிந் தனைய
மடுத்த டங்கரைச் சித்தியைங் கரத்தனை வணங்கா.

(இ-ள்.) தான் எடுத்த பொருட்சுமையை ஒட்டகத்தின்மேலிட்டு முன்னே செல்லவேவி, திண்ணிய வன்மைவாய்ந்த இடபவூர்தியையுடைய சோமசுந்தரக்கட வுளின் வானளாவிய திருக்கோயிலையடைந்து, மலர்ந்த பொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடி அந்தப்பொற்றாமரைத் தீர்த்தத்தின் பரந்த கரையிலுள்ள சித்திவிநாயகக்கட வுளை முன்னர்ப்பணிந்து. எ-று. (௨௨)

கருணை நாயகி யங்கயற் கண்ணியெம் பிராட்டி
யருண நாண்மலர்ச் செய்யசீ றடித்தல மிறைஞ்சி
வருண னார்பெரு வயிற்றுநோய் வலிகெடுத் தாண்ட
தருண நாண்மதிச் சடையுடை யடிகண்முன் றொழா.

(இ-ள்.) பராசத்தியாகிய அங்கயற்கண்ணியார் என்னும் எமது பெருமாட் டியின் செவந்த அன்றலர்ந்த தாமரைமலர்போலச் செம்மைவாய்ந்த சிறிய திருவடி களைவணங்கி வருணனாருடைய பெரிய வயிற்றுநோயின்வன்மை கெடுத்தாட்கொண் ட இளமைதங்கிய புதிய இளம்பிறையைச் சடையிலணிந்த சோமசுந்தரக்கடவுளை முன்னேவணங்கி. எ-று. (௨௩)

ஒன்று வேண்டுமிப் பொருளெலா முனக்குமைம் பொறியும்
வென்று வேண்டுநின் னன்பர்க்கு மாக்குக வெள்ளி
மன்று வேண்டிநின் றாடிய வள்ளலென் குறையீ
தென்று வேண்டிநின் றேத்துவார்க் கிறைவனின் னருள்போல்.

(இ-ள்.) (அடியேனுக்கு) ஒருகுறையுளது அஃதேவேண்டும் (யாதெனில்) இந்தப்பொருள்முற்றும் தேவரீருக்கும், ஐம்பொறிகளையும் தம் வழிப்படுத்தித் திரு வருளடையவிரும்பும் உமதடியவர்க்கும் பயன்படுத்தக்கடவீர்; வெள்ளியம்பலத்தை விரும்பி(பதஞ்சலி வியாக்கிரபாதர்பொருட்டு) நின்று நிருத்தஞ்செய்தருளிய வள்ள லே! அடியேன் குறையிதுதான் என்று குறையிரந்து நின்று வணங்குவோர்க்கு அவ் வள்ளலாரின் இனியவருளினல். எ-று. (௨௪)

ஆதி சைவனு மருச்சக னொருவனே ரணைந்து
பூதி யீந்தன னமக்கிது போலிலை நிமித்த
மீது நன்னெறிக் கேதுவென் றிருகையேற் றணிந்து
வேத நாதனை யிறைஞ்சினர் விடைகொடு மீண்டார்.

(இ-ள்.) ஆதிசைவனாகிய அருச்சக னொருவன் நேரேவந்து விபூதி தந்தனன். நமது கருத்தை (முடித்தற்குரிய) நிமித்தம் வேறில்லை. நன்னெறியையடைதற்கு இதுவே சாதனமென்று இரண்டு கையையும் நீட்டி வாங்கியணிந்து சோமசுந்தரக்கடவுளை முறைப்படி வணங்கி விடைபெற்றுத் திரும்பினர். எ-று. (உ௫)

**கலிவிருத்தம்.**

இன்னிய மதிர்ந்தன வெழுந்தன பதாதி
துன்னிய விணைக்கவரி துள்ளின துகிர்க்காற்
பொன்னியன் மதிக்குடை நிழன்றன பொலங்கொண்
மின்னிய மணிச்சிவிகை மேற்கொடு நடந்தார்.

(இ-ள்.) இன்னிய வாச்சியங்க ளொலிக்கவும், காலாட்படை யெழுந்து முன்செல்லவும், நெருங்கிய இரண்டு சாமரைகளிருபாலுந் துள்ளவும், பவளத்தாற் காம்பமைந்து பொன்னால் அமைந்த சந்திரனையொத்த தவளவட்டக்குடை நிழல்செய்யவும், பொன்னால் விளக்கமமைந்த இரத்திநமழுத்திய பல்லக்கின்மே லெழுந்தருளிச் சென்றனர். எ-று. (உ௬)

மற்றிவர் வழிப்படுமுன் மாறிநட மாடும்
வெற்றிவிடை யாரிவர் வினைத்தொகையி னொப்பும்
பற்றிய விருட்டுமல பக்குவமு நோக்கா
வுற்றடிமை கொண்டுபணி கொண்டருள வுன்னு.

(இ-ள்.) இவ்வாதவூரர் அங்குநின்றும் கடற்றுறைக்கேகு மார்க்கத்திற் செல்லுமுன் கான்மாறித் திருநடனஞ்செய்தருளுகின்ற வெற்றிவாய்ந்த இடபவூர்தியையுடைய சோமசுந்தரக்கடவுள் இவ்வாதவூரரது இருவினையொப்பையும் விடாது தொடர்ந்த இருட்டையொத்த மலபரிபாகத்தையும் நோக்கியருளி ஆட்கொண்டு தமது திருப்பணியில் நிறுத்தியருளத் திருவுளத்தமைத்து. எ-று. (உ௭)

சந்தமறை தேண்டரிய தங்கருணை யாலோ
ரந்தணர் குலக்குரவ னாகியடி நீங்கா
மைந்தர்பலர் தம்மொடு பெருந்துறையில் வந்தோர்
கொந்தலர் நெருங்கிய குருந்தடி யிருந்தார்.

(இ-ள்.) சந்தமமைந்த வேதம் தேடுவதற்கு அரிய தமது திருவருளால் ஒப்பில்லாத மறையவர் குலத்திற்றோன்றிய குருமூர்த்தமாகித் தமது திருவடிஞானத்தினின்றும் நீங்காத பல மாணவர்களோடு திருப்பெருந்துறையில் வந்து பூங்கொத்துக்கள் நெருங்கிய ஒரு குருந்தமரத்தினடியில் எழுந்தருளியிருந்தனர். எ-று. (உ௮)

பொருங்கடலனீகமொடு போய்ப்புற வடுத்த
விருங்கட மளப்பில கடந்தெழு பிறப்பாங்
கருங்கடல் கடக்கவரு வார்கருணை வெள்ளப்
பெருங்கட னிறைந்துறை பெருந் துறை யடைந்தார்.

(இ-ள்.) (கரையொடு) மோதும் கடலையொத்த சேனையொடு சென்று முல்லைநிலமும் அடுத்த பெரிய பாலைநிலங்களுமாகிய அளவில்லாத நிலங்களைக்கடந்து எழுபிறப்பாகிய பெரிய கடலைக் கடக்கவரும் வாதவூரடிகள் கிருபைக்கடலான சிவபெருமா னெழுந்தருளியிருக்கும் திருப்பெருந்துறையை யடைந்தனர். எ-று.

அடுத்திட வடுத்திட வகத்துவகை வெள்ள
மடுத்திட முகிழ்த்தகைம் மலர்க்கமல மூச்சி
தொடுத்திட விழிப்புன றுளித்திட வினைக்கே
விடுத்திடு மனத்தருள் விளைந்திட நடந்தார்.

(இ-ள்.) திருவாதவூர் திருப்பெருந்துறையின் சமீபமாகப் போகப்போக தமது திருவுள்ளத்தில் சந்தோஷமென்னும் நீரானது நிரம்பவும் குவிக்கப்பட்ட தாமரைமலர்போன்ற திருக்கரங்கள் தலையிலேறவும் கண்களில் நீர்துளிக்கவும் வியாபாரத்தின்பொருட்டு செலுத்தப்பட்ட மனதில் திருவருட்சத்தி பக்குவப்பட்டு வரும்படி, சென்றனர். எ-று.

இவ ரமச்சராதலால் இவரது மனம் வியாபாரத்தையுடையதாதலால் வினையை - வியாபாரம் என்றும். வினை-நல்வினை எனினும் ஆம். (௯0)

பித்திது வெனப்பிறர் நகைக்கவரு நாலாஞ்
சத்திபதி யத்தமது சத்தறிவு தன்னைப்
பொத்திய மலத்தினும் வெரீஇச்சுமை பொறுத்தோ
ரொத்திழி பிணிப்புறு மொருத்தனையு மொத்தார்.

(இ-ள்.) இவரைக்கண்ட (அபக்குவிகளான) பிறர் இது பைத்தியகுணத்தாலுண்டாகிய செய்கையென்று (பரிகாசத்தாற்) சிரிக்கும்படி உண்டாகின்ற தீவிரதரமென்னும் நாலாவதான சத்தியானது பதிந்தவுடனே தம்முடைய சத்தாகவுள்ள ஆணவாதி மலபந்தத்தினின்றும் பயந்து (எடுக்கப்படாத) சுமையெடுத்து நிற்பவனையும் இழிவான வியாதியினாற் பீடிக்கப்பட்டவனையும் ஒத்தவராயினர். எ-று.

நாலாஞ்சத்தி பதிந்தார்க் குடல்சுமைபோலவும் அருவருப்பைத்தரு நோயைப்போலவுங் காணப்படும். (௯க)

நெருப்பிலிடு வெண்ணெயென நெஞ்சுருக வென்னை
யுருக்குமித் துலெனை மெயாளித்தமல வாற்றல்
கருக்குமவ னாகியெனை யாள்கருணை வெள்ள
மிருக்குமிட னேயிதென வெண்ணிநகர் புக்கார்.

(இ-ள்.) தீயிலிட்ட வெண்ணெயைப்போல மனமுருக என்றனை யுருக்குகின்ற இந்த முறைமையால் (இப்பொழுது) என்னை மறைத்துநின்ற ஆணவமலத்தினது சாமர்த்தியத்தை எரிக்குந் தன்மையுடையவனாகி அடியேனை அடிமையாக்கிக் கொள்ளுகிற கிருபாசமுத்திரமான ஞானாசாரியர் எழுந்தருளி இருக்கும் இடமே இவ்விடம் என்று நினைத்துக்கொண்டே அவ்வூருக்குட் புகுந்தனர். எ-று.

ஞானாசாரிய தரிசனத்துக்குரிய பக்குவிகளுக்கு இவ்வண்ணமெல்லாம் உண்டாகுமென்பது நான்முகத்தாலுணர்ந்தவராதலால் அவ்வாறெண்ணினர். (௯உ)

காயிலை யுடைந்தகமு முட்படை வலத்தார்
கோயிலை யடைந்துகுளிர் வான்புனல் குடைந்து
வாயிலை யடைந்துடல மண்ணுற விழுந்து
வேயிலை யடைந்தவரை மெய்ப்புகழ் வழுத்தா.

(இ-ள்.) காச்சப்பட்ட கமுகு முள்ளென்னும் ஆயுதத்தை வலதுதோளிலேந்தினவராகிய சிவபெருமானரது திருக்கோயிலுக்குட் சென்று சீதளமான உயர்ந்த நீரின் மூழ்கி சந்நிதானத்துச் சென்று திருமேனியில் மண்படும்படி சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து மூங்கிலை, இடமாகக்கொண்டெழுந்தருளியிருந்த (நெல்லைநாதராகிய,கடவுளினது) உண்மையான கீர்த்திகளைக் கூறித் துதித்து. எ-று.

ஆலய மருங்குவல மாகவரு வார்முன்
மூலமறை யோதிமுடி யாதபொரு டன்னைச்
சீலமுனி வோர்தெளிய மோனவழி தேற்றுங்
கோலமுறை கின்றதொர் குருந்தையெதிர் கண்டார்.

(இ-ள்.) அத்திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்யும் வாதவூரடிகளது எதிரில் முதலானதாகிய வேதங்களாலும் சொல்லிமுடியாத வஸ்துவை ஞானசாரத்தையடைய முனிவர்களுணரும் வண்ணம் மௌனநிலைமையை உபதேசிக்கின்ற ஞானசாரியத் திருக்கோலத்தையுடைய சிவபெருமானெழுந்தருளியிருக்கின்ற ஒரு குருந்த மரத்தை எதிரிலே கண்டனர். எ-று. (௯௪)

கலிநிலைத்துறை.

வேத நூலொரு மருங்கினு மெய்வழிச் சைவப்
போத நூலொரு மருங்கினும் புராணத்துட் கிடந்த
ஓதி நூலொரு மருங்கினுங் கிளைகெழு சமய
பேத நூலொரு மருங்கினும் வாய்விட்டுப் பிறங்க.

(இ-ள்.) அவ்விடத்தில் வேதசாத்திர மொருபுறத்திலும் உண்மை மார்க்கமான சைவஞானசாத்திரமொருபுறத்திலும் புராணங்களினுட்கிடையவாகிய கீதசாத்திரங்களொருபுறத்திலும் ஒன்றின்பின்னொன்றாக வேதாகமங்களினின்றுந் தோன்றியுள்ள ஒன்றுக்கொன்று பேதமான சமயசாத்திரங்களொருபுறத்திலும் (மாணுக்கர்களது) வாய்களினின்றும் வெளிப்பட்டு முழங்கவும். (௯௫)

சுருதி கூறிய வறமுத னன்குமத் தொன்னூற்
கரிய தாங்கதிக் கேதுவென் றுகமங் காட்டுஞ்
சரியை யாதிநாற் பாதமுந் தலைதெரிந் துணர்ந்த
பெரிய மாணவர் கழகமும் வினவிடை பேச.

(இ-ள்.) வேதங்கூறிய தருமமுதலிய நான்கும் அப்புராதனமாகிய சாத்திரங்களிற்கூறப்படுகிற மோக்ஷத்துக்கு ஏதுவாகவுள்ளதென்று ஆகமமெடுத்துக்கூறுகின்ற சரியை முதலிய நான்கு பாதங்களும் முதன்மையாகக் கற்றறிந்த (சாதகர் போதகராதிய) பெரிய மாணுக்கர்களது கூட்டங்களும் சங்கோத்தரங்களைக் கூறவும். (௯௬)

சரியை வல்லமெய்த் தொண்டருஞ் சம்புவுக் கினிய
கிரியை செய்யுநன் மைந்தருங் கிளர்சிவ யோகந்
தெரியுஞ் சாதகக் கேளிருந் தேசிகத் தன்மை
புரியும் போதகச் செல்வரு மளவிலர் பொலிய.

(இ-ள்.) தாதமார்க்கமான சரியையிலே வல்லவர்களான உண்மையான அடியவர்களும்,சிவபெருமானுக்குகந்த புத்திரமார்க்கமென்னும் கிரியையைச்செய்கின்ற நல்ல புத்திரரென்றுங்கூறுங் கிரியாகாண்டிகளும்,எல்லாவியல்களையுமறிகிற சகமார்க்கிகளென்னும் சாதகர்களான (யோகமார்க்கத்தினின்ற) நண்பர்களும்(சன்மார்க்கிகளாய்) தேசிகர்களாகவிருந்து பக்குவர்களுக்குபதேசிக்கிற போதகர்களாகிய சம்பன்னர்களும் அனேகர்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கவும். எ-று. (௯௭)

ஒழித்த நோன்பின ராடலர் பாடல ருலகம்
பழித்த செய்கைய ரழுகையர் நகையினர் பாசங்
கழித்த கண்களா லரனுருக் கண்டுகொண் டுலகில்
விழித்த கண்குரு டாத்திரி வீரரும் பலரால்.

(இ-ள்.) அவ்விடத்தில் விரதங்களையெல்லாம் விட்டவர்களும் ஆடுகின்றவர்களும் பாடுகின்றவர்களும் பிரபஞ்சத்தவர்களாற் பழிக்கப்படுகிற செய்கையினையுடையவர்களும் அழுகையினையுடையவர்களும் சிரிப்பினர்களும் பந்தநிவிர்த்திசெய்துகொண்ட, ஞானமாகிய நேத்திரத்தால் சிவபெருமான் (ஞானத்) திருவுருவத்தை தெரிசித்துக்கொண்டு இவ்வுலகத்தில் விழிக்கப்பட்ட கண்ணுக்கு விஷயங்கள் தோன்றாமையால் குருடாகிச்சஞ்சரிக்கின்ற வைராக்கியமுடையவர்களும் அனேகர்கள்.

கரவி லுள்ளமாம் விசும்பிடைக் காசற விளங்கும்
பரசி லாச்சுடர்க் குதயமீ றின்மையாற் பகலு
மிரவு நேர்படக் கண்டில ரியன்றுசெய் நித்த
விரத மாதிநேரன் பிழந்துறை விஞ்சையர் பலரால்.

(இ-ள்.) கபடமென்பதில்லாத இருதயமாகிய ஆகாயத்தில் களங்கமில்லாமல் விளங்குகிற பிறனைத் துதித்தலில்லாத ஞானசூரியனுக்கு உதயாத்தமனமின்மையால் பகலையும் இரவையும் எதிரிற் காணாதவர்களாய் முயற்சியொடு செய்யப்படுகிற நித்தியகருமமுதலிய விரதங்களையும் மறந்து இருக்கிற (ஞான) வித்துவான்களு மநேகர். எ-று. (௩௯)

உடையுங் கோவண முண்டியுங் கைப்பலி யுறவென்
றடையுங் கேளிரு மரனடி யார்கண்டி கலன்கண்
படையும் பாரிட மாயினும் பகலிரா முதலீ
றிடையின் றுமிடத் துறங்குவ திஃதவர் வாழ்க்கை.

(இ-ள்.) ஆடையுங் கௌபீனம்; உணவுங்கைப்பிச்சை; சிநேகமாகவந்து சேர்பவர்களும் சிவனடியார்கள்; ஆபரணமும் உருத்திராக்ஷம்; படுக்கையிடமும் பூமி; இப்படி இருந்தாலும் பகலும் இரவும் முதலும் முடிவும் நடுவும் இல்லாத இடத்திலேயே கண்ணுறங்குவது. இவ்வாறிருத்தலே அவரது வாழ்வு. எ-று. (௪0)

இத்த கைப்பல தொண்டர்தங் குழாத்திடை யால
மொத்த பைங்குருந் தடியினில் யோகவா சனத்திற்
புத்த கத்தெழு தியசிவ ஞானமெய்ப் போதங்
கைத்த லந்தரித் திருப்பதோர் கருணையைக் கண்கார்.

(இ-ள்.) இவ்வண்ணமான பலவித பக்குவங்களையுடைய அடியார்கூட்டத்தின் நடுவில் கல்லாலமரத்தையொத்த பசுமையான குருந்தமரத்தின் அடியில் யோகபீடத்தில் எட்டி லெழுதியுள்ள ஒரு சிவஞானபோதமென்னுந் திருமுறை திருக்கரத்திலிருப்ப (ஆசாரியத் திருக்கோலத்துடன்) எழுந்தருளி யிருக்கின்ற ஒப்பற்ற கிருபாமூர்த்தியைத் தரிசித்தனர். எ-று. (௪௧)

மன்று ளாடிய வானந்த வடிவுமும் வடவா
லொன்றி நால்வருக் கசைவற வுணர்த்திய வுருவு
மின்று நாயினேற் கெளிவந்த விவ்வுரு வென்று
வன்று நாயகன் குறிப்புளத் துணர்த்திட வறிந்தார்.

(இ-ள்.) அம்பலத்தில் திருநடனஞ்செய்தருளுகின்ற ஆனந்தத்திருவுருவும், கல்லானிழலையடைந்து சனகாதி நால்வர்களுக்கு நிச்சலமான மௌனநிலையை உபதேசித்த தக்ஷிணாமூர்த்தித் திருக்கோலமும் இன்று நாயனைய அடியேன்பொருட்டு வெளிப்பட்டு நிற்கிற இத்திருவுருவமே என்று அந்நாளில் கடவுளது திருவருட்குறிப்பானது உள்ளே உணர்த்த உணர்ந்தனர். எ-று. (௪௨)

முப்ப ணிந்தன ரணிந்தன ரஞ்சலி முடிமே
லென்பு நெக்கிட வுருகின ரினியரா யெளிவந்
தன்பெ னும்வலைப் பட்டவ ரருள்வலைப் பட்டார்
துன்ப வெம்பவ வலையறுத் திடவந்த தொண்டர்.

(இ-ள்.) சந்நிதானத்திலே வணங்கினர்; கைகளை அஞ்சலியாக்கித் தலையின்மீதுவைத்தனர்; எலும்புகளும் கட்டுவிடும்படி உருகினர்; இனியவராய் எளிதாக வெளிப்பட்டு பக்தியென்னும் வலையிலகப்பட்டவரது திருவருள்வலைக்குட்சிக்கினர்; அவர் யாரெனில், துக்கரூபமான வெவ்விய பிறவியாகிய பந்தத்தை அறுக்கும்பொருட்டு அவதரித்தருளிய திருவாதவூரர். எ-று. (௪௩)

கால முங்கனக் காட்சியு நிமித்தமுங் கடிந்தார்
சீல மாணவர் செவ்விதேர் தேசிக னென்ன
மூல வாகம மோதினன் முறுக்கவிழ் கழுநீர்
மாலை சாந்தணிந் தடியின்மேல் வன்கழல் வீக்கி.

(இ-ள்.) காலத்தையும், சொப்பனத்தையும், நிமித்தங்களையும் விட்டவர்களாகிய ஞானசாரத்தையுடைய சீடர்களது பக்குவங்களை (பரீக்ஷித்) தறிகிற ஆசாரியனென்று முதலாகிய ஆகமங்களைச் சொல்லியருளிய அவனே இதழ் விரிந்த செங்கழுநீர்மாலையும், செஞ்சந்தனமும் தரித்து, திருவடியில் வீரக்கழல் தரித்து. எ-று. (௪௪)

அண்ணல் வேதிய ரொழுக்கமு மன்புங்கண் டியாக்கை
யுண்ணி லாவுயிர் பொருள்புன லுடன்கவர்ந் துள்ளக்
கண்ணி னன்மலங் கழீஇப்பத கமலமுஞ் சூட்டி
வண்ண மாமலர்ச் செங்கரஞ் சென்னிமேல் வையா.

(இ-ள்.) தெய்வீகம்பொருந்திய அந்தணராசாரத்தையும் அன்பையும் பார்த்து உடலையும் உள்ளே விளங்குகின்ற உயிரையும் பொருளையும் நீருடன்தாரைவார்த்தளிக்க அவைகளை வாங்கிக்கொண்டு ஞானநேத்திரத்தால் மலத்தை யொழித்து தாமரைமலர்போன்ற பாதங்களைத் தலையில் வைத்தலாகிய திருவடிதீக்ஷையையுஞ்செய்து நிறம்வாய்ந்த பெரிய தாமரைமலர் போன்ற திருக்கரத்தைத் தலையின்மீது வைத்து.

சூக்க மாகுமைந் தெழுத்தினிற் சுற்றிய பாச
வீக்க நீக்கிமெய் யானந்தம் விளைநிலத் துய்த்துப்
போக்கு மீட்சியுட் புறம்பிலாப் பூரண வடிவ
மாக்கி னனொரு தீபகம் போல்வரு மண்ணல்.

(இ-ள்.) சூக்குமரூபமான ஸ்ரீபஞ்சாக்ஷரமந்திரத்தினல் ஆன்மாவைச் சூழ்ந்திருந்த ஆணவ பந்தமாகிய கட்டை ஒழித்து சிவானந்தம் விளைகிற ஞானபூமியிற் சேர்த்து செலவும் வரவும் இல்லாத பரிபூரணமான சிவமாகச்செய்தனர்; ஒப்பற்ற விளக்கைப்போல எழுந்தருளியகடவுள். எ-று.

விளக்குப்பதார்த்தங்களைப்போல தானும் தன்னை மாணவனுக்கு விளக்கிப் பாசாதிகளைக்காட்டி ஒழித்தமையால், 'ஒருதீபம்போல் வருமண்ணல்' என்றார். (௪௬)

பார்த்த பார்வையா லிரும்புண்ட நீரெனப் பருகுந்
தீர்த்தன் றன்னையுங் குருமொழி செய்ததுந் தம்மைப்
போர்த்த பாசமுந் தம்மையு மறந்துமெய்ப் போத
மூர்த்தி யாயொன்று மறிந்திலர் வாதவூர் முனிவர்.

(இ-ள்.) தம்மால் நோக்கப்பட்ட நோக்கத்தால் இரும்புண்ட நீரைப்போல தன்னையுட்கொள்ளும் ஞானாசாரியனையும், அவரால் உபதேசிக்கப்பட்டதையும், தம்மை மூடிக்கொண்டிருந்த பாசத்தையும், தம்மையும் மறந்து வாதவூர்முனிவர் உண்மையறிவுருவராய் வேறொன்று முணராதவராயினர். எ-று.

வாதவூரடிகளுக்கு உபதேசிப்பானெழுந்தருளிவந்த ஆசிரியத்திருக்கோலத்தினையுடைய ஆண்டவன் அந்தணவடிவினராதலால் அவரைத் தீர்த்தரெனவும், அவரது ஞானநோக்கம் "அகம்பிரமமென்கிற அமலனைத்தன்னுட்கண்செமலர்க்குப் பாசந்தடுத்து" என்னுந்திருக்குறட்படி, தன்னைப் பிரமமாகப்பாவித்து உபதேசகாலத்தில் ஆசிரியன் மாணாக்கனது மலத்தைப் பரிபாகஞ்செய்யவேண்டும் என்றும், அவ்வாறுசெய்தல் "மூவகையா ருயிர்வர்க்க மலத்தார் கன்ம மூலத்தார் மூன்று முடையா ரன்றே - தீவகமா மெனவுருவாய் வந்து நாதன் திருநோக்காற் பரிசத்தாற் றிகழும் வாக்காற் - பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால் பரவிவரு மவுத்திரியாற் பாச நாச-மேவவரு ளுதவுமவுத் திரியிரண்டு திறனும் வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே"—என்னுஞ் சிவப்பிரகாசத் திருவிருத்தப்படி எதிரில் உடல்பொருளாவி என்னும் மூன்றையுந் தத்தஞ்செய்து யாதொரு வஸ்துவு மில்லாது நிற்கு மாணாக்கனை, ஆசிரியன் பக்குவத்துக்கேற்றவாறு தீக்ஷைசெய்யுங்காலத்து, 'நெல்லிற்குமிபோலவும், செம்பிற்குக்களிம்புபோலவும்' அநாதியே பற்றிக்கிடக்கின்ற மலாதிகளை சோதனைக் கிரமத்தாலே தூய்மை யாக்கித் தன்னொடு கலக்கப்புரிந்து, தீயாற் காயப்பட்ட இரும்பு தன்னைச் சார்ந்த தீயின் குணத்தால் நீரைக் கக்கா திழுக்குமாறுபோல பாவனாவிசேஷத்தாற்கிடைத்த பரிசுத்தமான சிவத்துவமுடைய ஆசிரியர்கள் செய்யுந் தீக்ஷையைப்போலவே பெருந்துறைக்குரவரும்,

"நன்னெறிவிஞ்ஞானகலர்நாமெலமொன்றினையும்
அந்நிலையேவுண்ணின்றறுத்தருளிப்—பின்னன்பு
மேவாவிளங்கும்பிரளயாகலருக்குத்
தேவாய்மலகன்மந்தீர்த்தருளிப்—பூவலயம்
தன்னின்றுநீங்காச்சகலர்க்கவர்போல
முன்னின்றுமும்மலந்தீர்த்தாட்கொள்கை—அன்னவனுக்
காதிகுணமாதலினாலாருந்திருத்தொழிலுஞ்
சோதிமணிமிடற்றுச்சுந்தரமும்—பாதியாம்
பச்சையிடமும்பவளத்திருச்சடைமேல்
வைச்சநதியுமதிக்கொழுந்து—மச்சமுற
வாடுமரவுமழகார்திருநுதன்மே
னீடுருவவன்னிநெடுங்கண்ணும்—கேடிலயன்
கூட்டுந்தமருகமுங்கோலவெரியகலும்
பூட்டரவக்கச்சும்புலியதளும்—வீட்டின்ப
வெள்ளத்தழுத்திவிடுந்தாளினுமடியா
ருள்ளத்தினும்பிரியாவொண்சிலம்பும்—கள்ளவினை
வென்றிப்பிறப்பறுக்கச்சாத்தியவீரக்கழலும்
ஒன்றுமுருத்தோன்றாமலுள்ளடக்கி—என்று
மிறவாதவின்பத்தெனையிருத்தவேண்டிப்
பிறவாமுதல்வன்பிறந்து"—என்று போற்றிப் பஃறொடையிலும், 'முன்னே எனையாண்ட பார்ப்பானே' என்றும், 'அருபரத் தொருவ னவனியில் வந்து - குருபரனாகிய கொள்கையை யுணராதே' என்று திருவாசகத்திலும்,

"எவ்வுலகத்து மூர்த்தியேதுகொண்டிவணியங்கு
மவ்வுலகத்து மேனியதுகொண்டங்கமருமீசன்" என்று பூசாகரணத்திலுங் கூறியவாறு பார்ப்பனவுருவத்தையுடைய விவர்பொருட்டுப் பார்ப்பனவாசிரிய வுருவத்துடன்றேன்றி, மானேக்காட்டி மானேப்பிடிப்பதென்றும், கன்னேனே வேடுகெழித்தலென்றுங் கூறுமாறு, உருவுங் குணமும் பெயருங் குலமுங் கொண்டு குருவாக எழுந்தருளிச் செய்த இத்தீக்ஷை, கூட்டுறவு மருந்துகளால் சிலகாலம்பொன்னுக விருந்து மருந்தின் வீறுகெடப் பழைய தாம்பிரமாகி நிற்குமாறு புரியும் பொன்னுக்குலோரது செய்கை புரளுமாறுபோலப் புரளாது, பூரணத்தன்மையே பொருந்தி தன்னேப்போலவே சிவமாகச் செய்யும் பார்வையாதலால், 'இருட்புண்ட நீரொன்ன' என்றும், அவ்வாறு பார்த்த நயன தீக்ஷையொடு நிறுத்தாமல் வாசகமுதலியபரிசாதிகளாலும், பரிபக்குவராகிய இவரைத் தூய்மையுடையவராக்கி ஞானவிதிமுறைப்படி உபதேசித்தனரேயன்றி கிரியாவிதிமுறைப்படி குண்டமண்டலங்களிட்டு புண்ணியாவாகனம் முதல் அஸ்திராபிஷேகம் இறுதியாகவுள்ள நிருவாணதீக்ஷாவிதிப்படி செய்தாரில்லை என்றும், இவருக்கு தியான சமாதிகளுக்கு ஏற்றவண்ணமான ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையே "சூக்கமாகுமைந்தெழுத்தினில்" என்ற மேற்பாட்டின்படி, வேதாகமோக்த சித்தாந்த சைவோப தேசத்தையே செய்தனரென்றும், "தேறுவனே தேருனே" என்ற திருவாக்கின்படி ஆசிரியர்மனத்துக்கு ஐயமுண்டாகாவண்ணம் மாணவரும்,—

"ஊடுவதுணர்வதுற்றகலவிமங்கையரையுள்ளி
வாடுவதடியில்வீழ்ந்துவருந்துவதருந்தவம்பின்
கூடுவதுணர்வுகெட்டுக்குணமெலாம்வேட்கையாகி
நீடுவதின்பமுத்தியித்தினின்றூர்கண்முத்தர்."—என்னும் உலகாயதனும்,

"ஓங்கியவுருவமோடும்வேதனேக்குறிப்பினேடும்
தாங்குபாவனேவிஞ்ஞானந்தாமிவையைந்துங்கூடிப்
பாங்கினுர்சந்தானத்திற்கெடுவதுபந்தந்துக்க
மாங்கதுபொன்றக்கேடாயழிவதுமுத்தியின்பம்."—என்னும் சௌத்திராந்திகனும்,

"மூலம்புரியட்டகம்விகிருதியாகிமூன்றுய்ப்பிரகிருதி
தூலஞ்சூக்குமம்பரமாய்ச்சுத்தப்புருடன்சந்நிதியில்
பாலன்சேட்டைபுரிந்துலகமியோனிபலவாய்ப்பரந்தொடுங்குஞ்
சாலவென்றுநிரீச்சுவரசாங்கியன்றுன்சாற்றிடுமே."—என்றபடி நிற்கும் நிரீசுவர சாங்கியனும்,

"அருஞ்செயலின்பாவத்தேபூர்வமெனுமதுதோன்றி
தருஞ்செயலினின்றிழியிற்றுன்பலிப்பதாகுமது
வருஞ்செயலொன்றின்றியேமண்சிலேபோலாமுத்தி
தருஞ்செயலுமெனவுணர்ந்துதாரணிமேலவன்சாற்றும்"—என்னுங் கருமவாதியும்,

"ஈசனதருளாற்பாசத்தொகுதி
செறிவுறுசெம்பிற்களையுறுகளிம்புங்
குளிகைதாக்கவொளிபெற்றுங்கு
நித்தசுத்தமுத்தராக
வைத்தனருலகின்மறைவல்லோரோ."—என்னும் பேதவாதியும்,

"முன்னேன்றனதுமுதிரொளிஞான
மறியாப்பச்சைச்சிறுபுழுகவ்ர்ந்த
வண்டெனவுயிரைக்கொண்டிடுமுயிரது

தன்னைநோக்கித்தானதுவாகி
ஐவகைத்தொழிலுமெய்வகையுணர்வும்
பிரியாவாறுபெற்றுத்திரியாப்பெரியோர்
திரட்சிசேர்ந்திடுமே."—என்னும் சிவசமவாதியும்,

"இவ்வியற்பந்தப்பவ்வமதகல,
விண்முதறந்தகொண்மூப்படலத்
திருளறவுதித்தகாரகவிவேகந்
தன்னிற்றோன்றிச்சாதகமனைத்தையு
மன்னகப்பிரிப்புமடியிழைவாங்கலும்
பேரலஞாலம்பொய்யறக்கழீஇத்
தானேதானுய்த்தன்னிற்றன்னைத்
தானேகண்டுதன்னலமுற்று
வசையிறத்துவமசிபதத்தெளிவா
லகமேபிரமமாயினனெனவறிந்
தசலனாகிநற்சலசலமதியெனக்
கண்டுமுடலம்விண்டகல்கடத்த
மங்குலதுடைதரவெங்குமாந்தகைத்தே."—என்னும் மாயாவாதியும்,

"சித்தேவுலகாய்ப்பரிணமித்துச்சிவனாகித்திகழ்ந்தமையாற்
சத்தேயெல்லாமுத்திதனைச்சாரக்கண்டஞாலங்கள்
வைத்தேமொழியுமம்மறைகள்சொன்னமரபேவந்தக்கா
லொத்தேகெட்டுப்பிரமத்தோடொன்றாய்ப்போமென்றுரைத்தனனே."—
என்றப்படிநிற்கும் பாற்கரியனும்,

"பழமலநீங்கிநிகழுங்காலை
வேற்றோர்முகவெளித்தோற்றுங்கலனெனத்
தலைவனதருளுயிர்நிலவிடுநிலவ
காட்டத்தங்கிமாட்டத்தங்கிய
தன்மையுமளத்தபுல்வயினீப்பும்
போன்றதுவாகித்தோன்றிடுமதனாற்
பசுகரணங்கள்சிவகரணங்க
ளாகமாறியறிவுமேகமா முயிர்யாவெனுதின்றே."—என்னும் சங்கிராந்தனும்,

"கொத்தைமாந்தருய்த்திடுதுகில்போற்
காட்சியென்னக்காணுத்தூய
மாட்சியைமுத்தியெனவகுத்தனரே."—என்னும் பாஷாணவாதியும்,

"மாயையாயுயிராய்மாயாகாரியமாகிமன்னி
மாயையாற்பந்தஞ்செய்துவாங்கிடுமதனாலன்றி
மாயைபோகாதென்றெண்ணிமாயனைவணங்கிப்பின்னை
மாயைபோம்போனான்மாயன்வைகுண்டம்வைப்பன்றே."—என்னும்
பாஞ்சராத்திரியும்,

"சொல்வந்தெழலும்பொருடோன்றுதலாற்
சொல்லேபொருளென்றுதுணிந்திடுநீ
சொல்லும்பொருளுமுடனின்றதெனிற்
சொல்லும்பொருளின்றுசொனின்றதுவே."—என்னும்சத்தப்பிரமவாதியும்,

"ஞானமுமான்மாவுங்காரணனுமில்லை
சகலமுமாமநித்தஞ்சார்வார் – பிறவி
வகைவினையுண்டெதிபொன்றமாய்தல்
சுகதன்றன்முத்தித்துணிவு."—என்னும் புத்தனும்,

"அருவுருவுண்டில்லையொன்றுபலவாம்
பொருளியல்பதானளவேபோத – மருகர்க்
குருவினைவிட்டாலுலகும்பர்வீடு
குறியதன்றெட்டுக்குணம்."—என்னும் சமணனும்,

"அணங்குற்றவான்மாவநேகம்வியாபி
குணம்புந்தியாமுத்திகூறிற் – பிணம்போல்கை
மெய்யாமிறைவனையும்வீடுகெட்டுக்கேதுவா
நையாயிகநூனலம்."—என்னும் நையாயிகனும்,

"முத்தியினிர்க்குணனுய்முன்னங்குணங்குணியாய்ப்
பத்தியினன்முத்தியினும்பாவனையாற் – சுத்தச்
சுடர்ப்பலராயவத்தைசார்தலான்மாக்கள்
கடனென்றுன்வைசேடிகன்."—என்னும் வைசேடிகனும்,

"தண்ணியசுட்கச்சமயிகாளெவ்வுருவும்
பெண்ணுருவிற்காணும்பிறப்பதெலா – முண்ணறவே
புத்தியுமுத்திப்பொருளுந்தரும்பிணமே
சத்தியிலாதவெலாந்தான்."—என்னும் சாத்தேயனும்,

"இல்லத்தைப்பல்லோர்கூடியயற்றுதல்கண்டாமத்தாற்
செல்லொத்தகுழலாய்வையஞ்செய்தவர்பலரோயன்னுர்
தொல்லைக்குளாதனீங்கித்துயரறன்முத்தியென்பார்
அல்லுற்றமனத்தரானவநேகேசவாதரன்றே."—என்னும் அநேகேசுவரவாதிகளும், அடையும் ஆபாஸமுத்திகளைப் போலாது, வேதாகமோக்த சித்தாந்தசைவமார்க்கத்தாரடைகிற தாளுமெதிருங்கழன்று என்றபடி, உரைக்கடங்காததாயுள்ள அதீதானுபவத்தில் நின்றனவொன்றும், அதுவே அழியாத ஐக்கியமுத்தியென்றும் குறிப்பான், "மெய்ப்போதமூர்த்தியா யொன்று மறிந்திலர்" என்றுர். (௭௭)

தேனும் பாலுந்தீங் கன்னலு மமுதுமாய்த் தித்தித்
தூனு முள்ளமு முருக்கவுள் ளொளியுணர்ந் தின்ப
மான வாறுதேக் கிப்புறங் கசிவதொத் தழியா
ஞான வாணிவந் திறுத்தன ளன்பர்தம் நாவில்.

(இ-ள்.) உடனே அடியவரதுதிருநாவில், தேனும்பாலும் இனிப்பினையுமுடைய கரும்பும் அமிர்தமும்போன்று இனிமையானதாகி உடலையும் மனத்தையும் உருக்க, தன்னுள்ளேவிளங்கும் பரமேசுவரராகிய பேரொளியையுணர்ந்து, பேரின்பத்தைவேண்டியவாறு உள்ளே நிரம்பச்செய்துகொள்ளவது வெளியிலும் உருகியோடினாற்போல அழியாத ஞானசரசுவதி குடியேறினாள்.—எ-று. (௭௮)

தொழுத கையினர் துளங்கிய முடியினர் துளும்ப
வழுத கண்ணினர் பொடிப்புறு மியாக்கையர் நாக்குத்
தழுத முத்தவன் புரையினர் தன்மயிழந் தழல்வா
யிழுகெ யன்னமெய் யினர்பணிந் தேத்துவா ரானார்.

(இ-ள்.) குவித்தகையினையுடையவரும், அசைகின்றதலையினையுடையவரும், நீர் ததும்பும்படி அழுத நேத்திரத்தினை யுடையவரும், புளகப்போர்த்த திருமேனியினையுடையவரும், அன்புரைகளோடுகூடிய தழுதழுத்த நாவினையுடையவரும், தீயிலிட்ட மெழுகைப்போல வுருகித் தன்னைமறந்த சரீரத்தினை யுடையவருமாகி வணங்கித் துதிப்பாராயினர். எ-று. (௪௯)

பழுதி லாதசொன் மணியினைப் பத்திசெய் தன்பு
முழுதுஞ் மாகிய வடத்தினுன் முறைதொடுத் தலங்க
லழுது சாத்துமெய் யன்பருக் ககமகிழ்ந் தையர்
வழுவி லாதபேர் மாணிக்க வாசக னென்றார்.

(இ-ள்.) குற்றமற்றசொல்லாகியமணியினை வரிசைப்படுத்தி பூரணவன்பாகிய கயிற்றினால் முறையாகக் கட்டப்பட்டுள்ள பாமாலையை அழுகையுடன் சாத்தியருளிய உண்மையடியவருக்கு, பரமாசிரியர் மனங்களித்து குற்றமற்ற திருநாமத்தை மாணிக்க வாசகனென்றிட்டனர். எ-று. (௫௦)

பாட்டிற் கின்புறு குருபரன் பாதமேற் கண்ணீ
ராட்டிச் சொன்மல ரணிந்துதற் போதவின் னமுதை
யூட்டித் தற்பர ஞானமா மோமவெங் கனலை
மூட்டிச் சம்புவின் பூசைமேன் முயற்சிய ரானார்.

(இ-ள்.) அவர் பாட்டில் விருப்பமுடைய பரமாசிரியரது பாதங்களில் கண்ணீராலபிஷேகஞ்செய்து, சொற்களாகிய புஷ்பங்களைச்சாத்தி, தற்போதமென்னுமினிய வமுதத்தை நிவேதித்து, தற்பரஞானமாகிய வெவ்விய ஓமாக்கினியை யுண்டாக்கி, சிவபெருமானது அருச்சனையில் முயற்சியுடையவராயினர். எ-று. (௫௧)

ஆசை வெம்பவ வாசனை யற்றுமா ணிக்க
வாசகப்பிரான் றேசிகன் மாணவ ரோது
மோசை யாகம வுபநிடப் பொருளெலாங் கேட்டு
நேச மங்குவைத் திருந்தன ரதுகண்டு நிருத்தன்.

(இ-ள்.) ஆசையாலுண்டாகிற வெவ்விய பிறவிவாசனைநீங்கிய மாணிக்கவாசகப் பெருமான், தனதாசிரியரது மாணவர்கள் ஓதுகின்ற ஓசையினையுடைய ஆகமத்திலும் உபநிடதத்திலுமுள்ள பொருள்களையெல்லாம் கேட்டு விருப்பத்தை யவ்விடத்திலவைத்தவராயிருந்தனர். இவர் இவ்வாறிருத்தலைக்கண்ட சிவபெருமான். எ-று. (௫௨)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தித்திக்கு மணிவார்த்தை யின்னஞ் சின்னாட் டிருசெவியி லருந்த வுங்கைச் செம்பொ னெல்லாம், பத்திப்பே ரன்பளித்துக் கவர்ந்து வேண்டும் பணிகொடுபாண் டியனையிவர் பண்பு தேற்றி,முத்திக்கே விடுத்திடவும் புத்தை வாது முடித்திடவுந் திருவுள்ள முன்ன மெய்தி, யெத்திக்குந் தொண் டைக்கருமஞ் சிறிதுண் டிங்கே யிருத்தியென வுருக்கரந்தா னடிய ரோடும்.

(இ-ள்.) ஞானதேசிகரான சிவபெருமான், மதுரம்பொருந்திய மாணிக்கம்போன்ற வாசகங்களை யின்னஞ்சிலகாலம் காதாரக்கேட்டு மகிழவும், அவர்கொண்டுவந்த கையிலுள்ள செவ்விய திரவியமுழுமையும், பத்தியாகிய பெரியவன்பினை யவருக்குக்கொடுத்து அவற்றையபகரித்து, இஷ்டம்போல பணிவிடையை நிறைவேற்றி, இவரது தன்மையை அரிமர்த்தனபாண்டியன் உணரும்படிசெய்து அவனை முத்தியடையச்செய்யவும், பௌத்தசமயத்தை வாதம் செய்து வென்று சைவசமயத்தை நிலைநாட்டவும்

வேண்டுமென்று முன்னமே திருவுளத்திலெண்ணி, மணிவாசகப்பெருமானை யடைந்து அன்ப! உன்னு லாகவேண்டுங் காரியம் இங்கு சிறி திருத்தலால் நீ இவ்விடத்திலேயே இரு என்று திருவாய்மலர்ந்தருளி அடியவர் கூட்டத்துடன் அந்தர்த்தானமாயினர்.

கனவில்வருங் காட்சியெனக் கருணை மூர்த்தி காட்டிமறைத் தலுமன் பர் கலக்கத் தாழ்ந்து, நனவுகொல்லோ கனவுகொல்லோ வின்று நாதன் ஞமலிக்குத் தவிசிட்ட நலம்போ லென்னை, யினைவரிய திருமேனி காட்டி யாண்டு நீத்ததையென் றையுற்று நெஞ்சந் தேறி, யினவடியா ருடன்கூட் டா தேகினையோ வென்னையுமென் வினையையுமிங் கிருத்தி யெந்தாய்.

(இ-ள்.) சொப்பனத்திற்கண்ட காட்சியைப்போல் கருணைக்கடலாகிய சிவ பெருமான் தனது திருவுருவத்தைக்காட்டி மறைதலும், மாணிக்கவாசகப்பெருமான் துன்பத்துண்மூழ்கி இங்கு நான்கண்டது சாக்கிராவத்தையிலோ? அல்லது சொப்பனாவ த்தையிலோ? கடவுள் என்னை, நாய்க்குப் பீடமிட்டாற்போல கௌரவப்படுத்தி, எண் ணுதற்கரிய திருவுருவத்தைத் தரிசிப்பித்து ஆட்கொண்டுவிட்டகன்றது எனச் சந்தேகி த்து மனந்தெளிந்து, எம்பெருமானே! அடியேனை தேவரீரது திருக்கூட்டத்தினருடன் சேர்த்துக்கொள்ளாமல் என்னையும் எனது கன்மத்தையும் இவ்விடத்திலேயே வைத்து எழுந்தருளினீரோ? எ-று. (ருசு)

வஞ்சவினைக் கொள்கலனு முடலைத் தீவாய் மடுக்கிலேன் வரையுருண் டு மாய்ப்பே னல்லே, னஞ்சொழுகு வாளாலுங் குறைப்பே னல்லே னுத னே யதுவுநின துடைமை யென்றே, யஞ்சினேன் றனேயு மழியா தாவி யையனே நினைப்பிரிந்து மாற்ற கில்லே, னென்செய்கோ வெந்தாயோ வெ ந்தா யோவென் றிரங்கினர் புரண்டழுதா ரினைய சொல்வார்.

(இ-ள்.) கடவுளே! பாவவினைகளுக்கு இருப்பிடமாகிய சரீரத்தைத் தழலினிட த்திலிட்டேனில்லை. மலைமீதேறிக்கீழுருண்டு அழித்தேனில்லை. விடதயிலஞ்சொட்டுகி ன்ற வாட்படையினாலும் வெட்டுகின்றேனில்லை. எம்பெருமானே! இவ்வுடலும் தேவரீ ரது; (ஆதலால் அடியேற்கு இதில் யாதொரு சுதந்திரமும் தத்தஞ்செய்ததற்குப் பின்பு இல்லையே) யெனவஞ்சினேன். என்னுயிர் தானாகவும்போகின்றதில்லை. ஐயனே! தேவரீ ரைப்பிரிந்தும் இருக்க சகிக்கின்றேனில்லை. என்செய்வேன்: எந்தையே எந்தையே! யென்று கூறி அழுது இரங்கி விம்மினவராக இதனைக் கூறுகின்றனர். எ-று. (ருரு)

வறியனு மொருபிறவிக் குருடன் கையில் வந்தபெரு விலைமணிபோ ன் மழலை தேருச், சிறியனு மொருமதலை கையிற்கொண்ட செம்பொன்ம ணி வள்ளம்போற் றேவர் யார்க்கு, மறிவரியாய் சிறியேனை யெளிவந் தா ண்ட வருமையறி யேன்றுன்பத் தழுவத் தாழப், பிறிவறியா வன்பரொடு மகன்றாய் கல்லாப் பேதையேன் குறையலதெம் பிரானு லென்னே.

(இ-ள்.) எத்தேவர்களாலும் அறிதற்கரிய ஆண்டவனே! தரித்திரனாகியவொரு பிறவிக்குருடனது கரத்தில் வலியக்கிடைத்த அதிகவிலையினையுடைய மாணிக்கத்தைப் போலவும், நன்றாய்ப்பேசவுணராத மிகவும் சிறிய ஒருகுழந்தையின் கையிற்கிட்டிய மா ற்றுயர்ந்த பொன்னாற்செய்த கிண்ணத்தைப்போலவும், சிறியவனாகிய அடியேனெதிரில் தேவரீர் தோன்றி ஆட்கொண்ட அருமையை யுணரேன். அடியேன் துக்கமென்னும்பெ ருஞ்சேற்றில் மூழ்கும்படி என்றும் விட்டுப்பிரியாத அடியவர்கூட்டத்துடனே மறைந்த ருளினீர்; அவ்வாறு மறைந்தருளியது ஞானநூல்களைக்கற்காத அறிவிலியாகிய அடியே னது குறையேயன்றி, எம்பெருமானாலாகிய குறை யென்னை. எ-று. (ருசு)

### கோச்சகக்கலிப்பா.

மண்ணாகி யாறாறு மனந்துழாவித் தடுமாறிப்
புண்ணாகி யெனைக்காணா துழல்கின்றேனைப் போதவருட்
கண்ணா லவைமுழுதுங் கரையநோக்கி யான்யானென்
றெண்ணா வெனைத்தந்தா யெங்குற்றாயோ வெந்தாயே.

(இ-ள்.) பிருதுவிமுதலாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களையும் மனத்தாற் றேடி தடுமாற்றங்கொண்டு என்னைக்காணாமல் புண்பட்டுவருந்துகின்றவனை, கிருபை பொருந்திய ஞானநேத்திரத்தால் அத்தத்துவங்கண் முழுமையும் கரையும்படி பார்த்து, என்னால் யானென்று எண்ணப்படாதிருந்த வென்னை எனக்கு அளித்தருளினவரே! எங்கெழுந்தருளினீர் எம்பெருமானே! எ-று. (௫௭)

வானாதி யைந்துமுதல் வகுத்த வோசைமுதலைந்து
மானாதி யங்குமன மாதிநான்கும் வழியடைப்பத்
தேனாதி யறுசுவையுங் கழியவூறுந் தெள்ளமுதம்
யானார நல்கினையா லெங்குற்றாயோ வெந்தாயே.

(இ-ள்.) ஆகாயமுதலிய ஐம்பெரும்பூதங்களும், முதலிலுண்டான சத்தமுதலிய ஐம்புலன்களும், விடாமல் சலித்துக்கொண்டிருக்கின்ற மனமுதலிய நாற்கரணங்களும் தத்தம்தொழிலிற்செல்லாது தடைப்பட, தேன்முதலிய அறுவகைச்சுவைகளைவிட மிகுதியாக ஊறுகின்ற இனிமையினையுடைய தெள்ளிய ஞானமிர்தத்தை அடியேன் அருந்தும்படி அளித்தருளினீரே. அதன்பின்பு எம்பெருமானே எங்கெழுந்தருளினீர்.

மாசாய் மறைக்குமல வலியும்நானும் வேறின்றி
யாசாவி காரமல மாயினேனைப் பொருட்படுத்திப்
பேசாத வின்புருவி னின்னோடென்னைப் பின்வைத்த
வீசாவெ னையிங்கிட் டெங்குற்றாயோ வெந்தாயே.

(இ-ள்.) அந்தகாரரூபமாய் நின்று மறைக்கின்ற மும்மலங்களின் வல்லபங்களும் அவைகளோடு சம்பந்தப்பட்ட பசுவாகிய யானும் வேறுபடாமல் இச்சாரூபமான விகாரபந்தமே வடிவமாய்க்கிடந்த அடியேனை (தீக்ஷாக்கிரமத்தில் சோதனைமுறையால் மலத்தினின்று வேறுபடுத்தி) நித்தியவஸ்துவாகச்செய்து வாசாமகோசரமான இன்பவுருவமாக விளங்கும் தேவரீருடன் அடியேனைப்பின்னேவைத்தருளிய ஈசனே! என்னை இவ்விடத்தில் (தனியே) விட்டு எங்கெழுந்தருளினீர் எந்தைபெருமானே! எ-று.

பின்வைக்குமுறைமையை "உடையாளுந்தன்" என்னும் திருவாசகத்தின் பொருளை யுணர்ந்தவர்களிடத்தில் உபதேசமுறையாற் கேட்டுணர்க. (௫௯)

### கலிநிலைத்துறை.

என்று வாய்திறந் தரற்றினா ரிரங்கினார் புனிற்றுக்
கன்று நீங்கிய வானெனக் கரைந்தநெஞ் சினராய்ச்
சென்று கோபுர வாயிலின் புறம்புபோய்த் திரண்டு
நின்ற காவலன் றமர்களை நேர்ந்தனர் நோக்கா.

(இ-ள்.) என்றிவ்வாறு வாய்திறந்து இரைந்தழுது, இளங்கன்றை நீங்கிய தலையீற்றுப்பசுவைப்போலக் கசிந்தமனத்துடன் கோபுரவாயிலுக்கு வெளியிற்சென்று, அவ்விடத்திற் கூட்டமாய் நிற்கின்ற அரசபரிவாரங்களைச் சென்றுபார்த்து. எ-று. (௬௦)

துங்க வாரியிற் கடும்பரித் தொகையெலா மாடித்
திங்க ளின்றலை வருமென முன்புபோய்த் தென்னர்

புங்க வன்றனக் குணர்த்துமின் போமென விடுத்தா
ரங்க ணீயகன் பெருந்துறை நாயக னன்பர்.

(இ-ள்.) அழகிய நெற்றிக்கண்ணினையுடைய பெருந்துறைப் பெருமானுக்கு அன்பராகிய மாணிக்கவாசகசுவாமிகள், பெரியகடலின்கரைக்கு வேகமாகச்செல்லுங் குதிரைக்கூட்டங்களெல்லாம் ஆடிமாதமுதலில் வருமென்று நீங்கள் முன்னேசென்று பாண்டியர்தலைவனுகிய அரிமர்த்தனமன்னனுக்கு அறிவியுங்களென்று கூறியனுப்பினர்.

புரசை மாவயப் புரவிதேர்ப் பொருநர்போய்ப் பொறிவண்
டிரைசெய் தார்முடி வேந்தன்மு னிறைஞ்சினு ருள்ள
துரைசெய் தாரது கேட்டொன்று முரைத்தில னிருந்தா
னிரைசெய் தார்ப்பரி வரவினை நோக்கிய நிருபன்.

(இ-ள்.) கழுத்துக் கயிற்றினையுடைய யானைப்படைஞரும், வெற்றிபொருந்திய குதிரைப் படைஞரும், தேர்ப்படைஞரும், காலாட்படைஞரும் ஆகிய இவர்களனைவரும் திருப்பெருந் துறையினின்றும் திரும்பி மதுரைக்குச் சென்று, புள்ளிகளையுடைய வண்டுகள் ரீங்காரம் பாடுகின்ற மாலையணிந்த மகுடத்தினையுடைய மன்னவ னெதிரில் வணங்கி நடந்தனவற்றை யெல்லாம் கூறினர்கள். குதிரைகளின் வருகையையெதிர் பார்க்கும் அம்மன்னவன் அதற்கொன்றும் பதின்மொழி யுரையாதிருந்தனன். எ-று. ()

வள்ளல் வாதவூர் முனிகளு மன்னவன் பரிமாக்
கொள்ள நல்கிய பொருளெலாங் குருந்தில்வந் தாண்ட
பிள்ளை வாண்மதிச் சடைமுடிப் பெருந்துறை மறையோர்க்
குள்ள வாதரம் பெருகமுன் வேண்டியாங் குய்ப்பார்.

(இ-ள்.) வள்ளலாகிய மாணிக்க வாசகப் பெருமானும் தம்மிடத்துப் பாண்டியன் குதிரைவாங்கும்வண்ணம் கொடுத்துள்ள பொன்னையெல்லாம், குருந்தமரநிழலில் ஞானசிரியராயெழுந்தருளிவந்து தம்மையாட்கொண்ட ஒளிபொருந்திய இளஞ்சந்திரனையணிந்த சடைமுடியினையுடைய பெருந்துறை மறையோராகிய சிவபெருமானுக்கு மிகுதியாகத் திருவுளமுண்டாகும்படி முன் தான் கேட்டுக்கொண்டவண்ணமே அர்ப்பணஞ் செய்யத்தொடங்கினர். எ-று. (௬௩)

சிறந்த பூசைக்குந் திருவிழாச் சிறப்புக்குஞ் செல்வ
நிறைந்த வாலயத் திருப்பணித் திறத்துக்கு நிரப்பி
மறந்த வாதபே ரன்பர்க்குஞ் செலுத்தியத் தலத்தே
யுறைந்த வாவற வின்னண மொழுகுநாள் கழிப்பார்.

(இ-ள்.) தான் அத்தலத்தில் எழுந்தருளியிருந்துகொண்டு நிராசையுடையவராய்ச் சிறப்பினையுடையபூசைக்கும், உயர்ந்த திருவிழாக்களுக்கும், நிறைந்தசெல்வத்தினையுடைய ஆலயத்தின் சீரணோத்தாரணத்திற்கும் வேண்டியவாறு கொடுத்து, தருமவழியினின்றும் நீங்காத உயர்ந்த அடியவர்களுக்கும் இஷ்டம்போலக் கொடுத்துக்கொண்டு இப்படியே காலம்போக்கிவந்தனர். எ-று. (௬௪)

எல்லை கூறிய குளிர்மதி யடுக்கவந் தெய்த
மல்லல் யானையா னின்னமும் வயப்பரி வந்த
தில்லை யாலிது வென்னென வோலையு மெழுதிச்
செல்ல வுய்த்தனன் வாதவூ ரமைச்சர்தந் திருமுன்.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய யானைப்படைகளையுடைய பாண்டியன் மந்திரியார் தமக்குக் கூறியனுப்பியபடி ஆடிமாதம்பிறக்க நாள்சமீபித்தும்,வெற்றிக்குரிய குதி

ரைகள் வரக்காணோம். சொன்னவண்ணம் குதிரைகள் ஏன் வரவில்லையென ஓலையொன்றை யெழுதி வாதவூரடிகளாகிய மந்திரியாரினிடத்திற்குத் தூதன்வசம் அனுப்பினான்.

மன்ன வன்றிரு முகங்கண்டு முறைமையால் வாங்கி
யன்ன வாசகந் தெரிந்துகொண் டாதியீ றில்லா
முன்ன வன்றிரு வருட்கடன் மூழ்கிய முனிவ
ரென்னை வேறினிச் செய்யுமா றென்றுநின் றயர்வார்.

(இ-ள்.) ஆதிமத்தியாந்தரகிதரும் முதல்வருமாகிய சிவபெருமானது கிருபா வாரிதியில் மூழ்கினவராகிய மாணிக்கவாசகமுனிவர், பாண்டிமன்னவனது ஓலையைக் கண்டு வாங்கவேண்டியமுறைப்படிவாங்கி சுருள்விரித்து உள்வரைந்திருந்தவாசகத்தை யுணர்ந்து இனி வேறென்னசெய்வோமென்று உள்வருத்தங்கொண்ட அவர். எ-று.

ஓலையைத்திருமுகமென்றது – மங்கலமொழி. (௬அ)

சிந்தை யாகிய செறுவினுட் சிவமுத லோங்கப்
பந்த பாசம்வே றறக்களைந் தருட்புனல் பாய்ச்சி
யந்த மாதியின் றாகிய வானந்த போகந்
தந்த தேசிக வுழவன்றன் கோயிலைச் சார்ந்தார்.

(இ-ள்.) மனமெனுங் கழனியுள் சிவமெனும் பயிர்தழைக்க, பந்தபாசமென்னுங் களையை வேரறக்களைந்து, அருளென்னும் புனலைப்பாயச்செய்து, ஆதிமத்யாந்தரகிதமான சிவாநந்தவிளைவை யுண்டாக்கித் தந்த ஆசாரியனாகிய வேளாளனது ஆலயத்தை யடைந்தனர். எ-று. (௬எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்னு யகனே பொன்னுட ரேறே யேறு கொடியுயர்த்த
மன்னு தென்னு பெருந்துறையெம் மணியே வழுதி பொருளெல்லா
நின்னு லயத்து நின்னடியா ரிடத்துஞ் செலுத்து நெறியளித்தாய்
பின்னு னவனுக் கென்கொண்டு பரிமாச் செலுத்தப் பெறுமாறே.

(இ-ள்.) எனது கருத்தாவே! தேவர்களுக்குள் ஆண்சிங்கம்போல்பவரே! மேற்றூக்கிப்பிடிக்கப்பட்ட இடபக்கொடியினையுடைய தலைவரே! பாண்டிமன்னரே! திருப்பெருந்துறையிலெழுந்தருளியிருக்கும் மணிபோல்பவரே! பாண்டிமன்னனது பொன்னையெல்லாம் தேவரீரது திருக்கோயிலுக்கும் அடியவர்கூட்டத்திற்கும் விநியோகஞ் செய்யத்தக்க மார்க்கத்தை யுபதேசித்தருளினீர்; இனி அடியேன் எதைக்கொண்டு அம்முன்னவனுக்குக் குதிரைகளைக் கொண்டளிப்பது. எ-று. (௬அ)

என்னு விறைஞ்சி யெழுந்தேத்தி யிரந்தா ரெதிரோ பெருந்துறையின்
மின்னுர் சடைமேற் பிறைமுடித்தோன் விசும்பி னிறைந்த திருவாக்கான்
மன்னு னவற்குப் பரியெல்லாம் வருமென் றோலை விடுதியெனச்
சொன்னு னதுகேட் டகத்துவகை துளும்பி வரைந்து சுருள்விடுத்தார்.

(இ-ள்.) என்றுவணங்கி யெழுந்து துதித்து வேண்டிக்கொண்ட அம்மணிவாசகப்பெருமானெதிரில், திருப்பெருந்துறையிலெழுந்தருளியிருக்கின்ற ஒளிபொருந்திய சடையின்மீது சந்திரனை யணிந்துள்ள சிவபெருமானுர் ஆகாயவாணியால் (மாணிக்கவாசகனே!) பாண்டிமன்னனுக்குக் குதிரைகளெல்லாம் வருமென்று ஓலையெழுதியனுப்பிவையென்று திருவாய்மலர்ந்தருளினார். அம்மொழியைக்கேட்ட அவரும் நிறைந்த மகிழ்வுடையராய் அவ்வாறே யெழுதியனுப்பினர். எ-று. (௬௯)

அந்த வோலைப் பாசுரமு மறையக் கேட்டு நின்றுங்கோர்
சிந்தை யானு மகிழ்சிறப்ப விருந்தான் புரவித் தேரோடும்

வந்த வாதிச் செங்கதிரோன் மறைந்தா னவனால் வையமெலாம்
வெந்த வேட்டை தணிப்பான்போன் முளைத்தா னுதி வெண்கதிரோன்.

(இ-ள்.) பாண்டிமன்னன் (மந்திரியார் எழுதியனுப்பிய) ஓலையிலுள்ள வாக்கியங்களை அருகுநின்றவர்கள் படித்துணர்த்தக்கேட்டு மனத்தில் நீங்காதமகிழ்ச்சி அதிகரித்து (குதிரை வருமென்றெண்ணிக்கொண்டு) இருந்தனன். அன்று குதிரைகள் பூட்டியதேருடன் உதயமான சூரியன் அத்தமனமானன், அச்சூரியனாலுண்டாகிய வெப்பத்தைச் சாந்தஞ்செய்ய உத்தேசித்து வந்தாற்போல சந்திரன் உதயமானன். எ-று. (எ0)

அன்று துயிலும் வாதவூ ரடிகள் கனவிற் சுடர்வெள்ளி
மன்று கிழவர் குருந்தடியில் வடிவங் காட்டி யெழுந்தருளி
வென்றி வேந்தன் மனங்கவரும் விசயப் பரிகொண் டணைகின்றே
மின்று நீமுன் னேகுதியென் றருளிச் செய்ய வெழுந்திருந்தார்.

(இ-ள்.) அந்நாளிரவிற் கண்ணுறங்கிய வாதவூரடிகளது சொப்பனத்தில், ஒளிபொருந்திய வெள்ளியம்பலத்திலெழுந்தருளியிருக்கின்ற தலைவராகிய சிவபெருமானர், முன்னம் குருந்தநிழலில் எழுந்தருளியிருந்த குருமூர்த்தமாயுள்ள திருவுருவத்தைக்காட்டி, யாம் வெற்றிபொருந்திய அவ்வரிமர்த்தன பாண்டியனது மனத்தைக் கவரத்தக்க ஜயந்தருகின்ற குதிரைகளைக் கொண்டுவருகின்றோம். இப்பொழுதேயெழுந்து நீ முன்னேசெல் என்று கட்டளையிடவும், உடனே நித்திரை நீங்கி யெழுந்தனர். எ-று. (எக)

கனவி னிடத்துந் தேவர்க்குங் காண்டற் கரிய கருணையுரு
நனவி னிடத்துங் கனவிடத்து மெளிதே யன்றோ நமக்கென்ன
நினைவி னிடைக்கொண் டிருக்கின்றார் நிருத்தா னந்தச் சுடருள்ளத்
தினவி ருளைத்தின் றெழுவதென வெழுந்தா னிரவி யிரவொதுங்க.

(இ-ள்.) சொப்பனத்திலும் தேவர்களாலும் காணுதற்கரிய எம்பெருமானரது கருணைவடிவான திருவுருவம் நமக்கு சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் எளிதல்லவோ வென்று மனத்திலெண்ணிக் கொண்டிருக்கின்ற மணிவாசகப்பெருமானது உள்ளத்திலெழுந்தருளியிருக்கின்ற ஆநந்த நடனசூரியன், மனத்திலுள்ள மலக்கூட்டங்களான இருட்கூட்டங்களை நாசஞ்செய்துகொண்டு விளங்கினாற்போல, புறவிருளொதுங்கும்படி சூரியன் உதயமானன். எ-று. (எஉ)

எழுந்தா ருடைய பெருந்துறையா ரிருதாள் பணிந்தா ரினிப்பிறப்பி லெழுந்தார் வழிக்கொண் டாரடைந்தா ரகன்றார் நெறிக ளவிர்திங்கட்
கொழுந்தார் சடையார் விடையார்தென் கூட லணைந்தார் பாடளிவண்
டுழுந்தார் வேந்தன் பொற்கோயி லுற்றார் காணப் பெற்றாரால்.

(இ-ள்.) சூரியன் உதயமானவுடனே இனிப்பிறப்படையாதவராகிய மாணிக்கவாசகசுவாமிகள் நித்திரைவிட்டெழுந்து, திருப்பெருந்துறைவாணரது திருவடிகளைவணங்கி பிரயாணமாய் வழிகளையெல்லாங்கடந்து பிரகாசிக்கின்ற இளம்பிறையணிந்தசடையினையும் விடையினையுமுடைய சிவபெருமானரது சதுஷ்கூடபுரமாகிய மதுரைக்குச் சென்று இசைபாடுகின்றவண்டுகள் மூக்காலுழுகின்ற மலர்மாலையணிந்த அரசனது பிரகாசிக்கின்ற அரண்மனைக்குச்சென்று அரசனைக்கண்டனர். எ-று. (எ௩)

மன்னர் பெருமா னெதிர்வந்த மறையோர் பெருமான் வழிபாடு
முன்னர் முறையாற் செய்தொழுகி முன்னே நிற்க முகநோக்கித்
தென்னர் பெருமா னெவ்வளவு செம்பொன் கொடுபோ யெவ்வளவு
நன்ன ரிவுளி கொண்டதெனக் கேட்டான் கேட்ட நான்மறையோர்.

(இ-ள்.) அரசர்க்கரசனுகிய அரிமர்த்தனனது எதிரில்வந்த அந்தணர் சிகாமணியாகிய வாதவூரடிகள் வழக்கம்போலவே மன்னனைவணங்கி யெதிரில்நின்றனர். அவ்வரசன் உடனே அவரது முகத்தைநோக்கி நீர் எவ்வளவுபொன் கொண்டுசென்று எவ்வளவு குதிரைகளைவாங்கினீர் என்றுகேட்டான். அதற்குச்சதுர்வேதபண்டிதராகியமந்திரியார். எ-று. (எச)

பொன்னு மளவோ விலைகொண்ட புரவித் தொகையு மனைத்துவைதாம்
பின்னர் வரக்கண் டருளுதியெம் பெருமா னிதனுற் றுரங்கபதி
யென்னு நாமம் பெறுதிமதி யென்று ரென்ற மந்திரர்க்குத்
தென்னன் சிறந்த வரிசைவளஞ் செய்து விடுப்பச் செல்கின்றார்.

(இ-ள்.) யான்கொண்டுசென்ற பொன்னுக்குமளவில்லை;அதனுல்வாங்கிய குதிரைக்குமளவில்லை; அவைகள் பின்னுல்வந்தால்பார்ப்பீர்; எம்பெருமானே!இதனுலே நீருந்துரங்கபதியென்னும் பேறைப்பெறுவீர் என்றுகூறிய மந்திரியார்க்கு மன்னவன் உயர்ந்தவெகுமதிகளைக் கொடுத்தனுப்ப அவ்வெகுமதிகளுடன் தன்வீட்டை யுத்தேசித்து வருகின்ற அவர். எ-று. (எரு)

பொன்னங் கமலத் தடம்படிந்து புழைக்கை மதமா முகக்கடவு
ளன்னங் கமல சரணிறைஞ்சித் தனியே முளைத்த சிவக்கொழுந்தை
மின்னங் கயற்கண் கொடிமருங்கில் விளைந்த தேனை முகந்துண்டு
முன்னங் கருத்து மொழியுடம்பு மூன்று மன்பாய்த் தோன்றினர்.

(இ-ள்.) பொற்றாமரைத்தடாகத்தில் நீராடி, துவாரம்பொருந்திய துதிக்கையினையுடைய யானைமுகத்தோடு கூடிய சித்திவிநாயகரது அழகிய திருவடித்தாமரைகளை வணங்கி சுயம்புருபமான சோமசுந்தரப்பெருமானுகிய ஒளிபொருந்திய அங்கயற்கண்ணம்மையென்னும் கொடிபோல்பவளைப் பக்கத்திலுடைய தேனை (கண்ணென்னும்கையினுல்) அள்ளிக்குடித்து மனமொழிமெய்களாகிய மூன்றும் அன்புருவமாகவாயினர்.

மன்னே யென்னை யாட்கொண்ட மணியே வெள்ளி மன்றாடு
மன்னே யடியேன் வேண்டியவா றரசனீந்த நிதியெல்லா
முன்னே கொண்டென் பணிகொண்டாய் முனியா தரச னனிமகிழ
வென்னே புரவி வரும்வண்ண மென்று வேண்டி நின்றிடலும்.

(இ-ள்.) தலைவனே! அடியேனை யாளாகக்கொண்ட மாணிக்கமே! வெள்ளியம்பலத்தில் நடனஞ்செய்கின்ற தாயே! அடியேன்விரும்பியவண்ணமே பாண்டியராஜாவினுல் கொடுக்கப்பட்ட பொன்னையெல்லாம் முதலில் வாங்கிக்கொண்டு எனதுபணிவிடையும் ஏற்றுக்கொண்டருளினீர்; இனி அரசன் கோபித்துக்கொள்ளாமல் மிகவும் சந்தோஷிக்கும்படி எவ்வண்ணம் குதிரைகள்வந்துசேருவது என்று சந்நிதானத்தில் நின்று வேண்டிக்கொள்ளுதலும். எ-று. (எஎ)

மெய்யன் புடையா யஞ்சலைநீ வேட்ட வண்ணம் விண்ணிரவி
வையம் பரிக்கும் பரியனைய வயமாக் கொண்டு வருதுமென
வையன் றிருவாக் ககல்விசும்பா றெழுந்த தாக வதுகேட்டுப்
பொய்யன் பகன்றார் சிவன்கருணை போற்றி மனையிற் போயினர்.

(இ-ள்.) உண்மையன்புடையவனே! நீபயப்படவேண்டாம்; நீவிரும்பியவாறே ஆகாயத்திலுலாவுகின்ற சூரியனதுதேரை யிழுக்கின்ற குதிரைகளையொத்த வெற்றிக்குதிரைகளைக் கொண்டுவருகிறேமென்று கடவுளின் திருமொழியானது ஆகாயத்தின் வழியாயுண்டாகியது. அதைக்கேட்டு மாணிக்கவாசகப்பெருமான் சிவபெருமானதுகருணையைத்துதித்து ஆலயத்தினின்றும் தமது மாளிகைக்குச் சென்றனர். எ-று. (எஅ)

மேற்படி வேறு.

கடிமனை யடைந்த வெல்லை வாதவூர்க் காவ லோனை
மடிமையில் சுற்றத் தோருங் கேளிரு மாண்ட காத
லடிமையுள் ளாரு மேதி லாளரும் பிறரு மீண்டி
யிடிமழை வாய்விட் டென்னப் புந்திக ளினைய சொல்வார்.

(இ-ள்.) காவலினையுடைய மாளிகைக்குச் சென்றவுடனே திருவாதவூர்மந்திரியாரைச் சோம்பலற்ற சுற்றத்தினர்களும், சிநேகிதர்களும், மிகுந்த விருப்பத்துடனே நடக்கின்ற அடிமையாயுள்ளவர்களும், அயலார்களும் இன்னமுள்ளவர்களுமெல்லாம்வந்து இடியினையுடைய மேகம் குமிறினாற்போல இவ்வண்ணமான புத்திமதிகளைக் கூறத் தொடங்கினார்கள். எ-று. (௭௯)

மந்திரக் கிழமை பூண்டு மன்னவர் கருமஞ் செய்வ
தந்தணர்க் கறனே யல்ல வமைச்சிய லறத்து நின்றால்
வெந்திற லரசர்க் கேற்ற செய்வதே வேண்டு மென்னத்
தந்திர மநுநூல் வல்லோர் சாற்றுவா ரன்றோ வையா.

(இ-ள்.) எங்கள் ஐயாவே, மந்திரித்தொழிலைக் கைக்கொண்டு அரசகாரியங்களை நடத்துதல் மறையவர்களுக்கு முறைமையல்ல (அல்லவென்று) மந்திரித்தொழின்மையைப் பூண்டொழுகினால் மிக்கவீரத்தினையுடைய அரசர்களுக்கேற்றவாறே செய்ய வேண்டுமென்று ஆகமமாகிய மனுதருமநூல்களில் வல்லுநர் கூறுவார்கள். எ-று. (௮0)

அரைசிய லமைச்சு நீதி யாய்ந்தநுங் கட்கு நாங்க
ளுரைசெய்வ தெவனீர் செய்வ தொன்றுநன் றுவ தில்லை
விரைசெறி தாராற் கின்று வெம்பரி வருவ தாக
வரையறை செய்தீர் நாளை யென்சொல வல்லீ ரையா.

(இ-ள்.) ஐயாவே, இராஜாங்கமுறைமைக்குரிய மந்திரிக்கிழமைநூல்களனைத்தையும் படித்துள்ள உங்களுக்கு நாங்கள் சொல்லப்போகிறதென்ன, உம்மால் செய்யப்படுவதொன்றும் நன்றாயிருக்கவில்லை: மணம்பொருந்திய மலர்மாலையணிந்துள்ள பாண்டியர்க்கு வேகத்தினையுடைய குதிரைப்படைகள்வருவதாக தீர்மானங்கூறினீர். நாளைக்கு என்னசொல்லப்போகின்றீர். எ-று. (௮௧)

தழுவிய கிளைஞர் நட்டோர் சார்வுளோர் தக்க சான்றோர்
குழுவினைக் காக்க வேண்டுங் குறிப்பிலீர் போலு நீவி
ரொழுகுறு செயலி னாலே யுஞ்செய லுமக்கே சால
வழகிது போலு மென்னக் கழறினா ரதுகேட் டையன்.

(இ-ள்.) நீவிர் நடக்கும் நடையினால், பொருந்தியுள்ள சுற்றத்தினர்களையும் சிநேகிதர்களையும் ஞாதிகளையும் தக்கசிறந்தவர்களையும் இன்னமுள்ள கூட்டங்களையும் காக்கவேண்டுமென்னும் எண்ணமில்லாதவரா யிருக்கின்றீர்போலும். உமதுசெய்கை உமக்கே மிகவும் அழகாயிருக்கின்றது என்றுகூறினார்கள். அதனைக்கேட்டு அவர். எ-று.

சுற்றமுந் தொடர்பு நீத்தேந் துன்பமு மின்பு மற்றேம்
வெற்றுடன் மானந் தீர்ந்தேம் வெறுக்கைமேல் வெறுக்கை வைத்தே
செற்றமுஞ் செருக்குங் காய்ந்தேந் தீவினை யிரண்டுந் தீர்ந்தேஞ்
கற்றைவார் சடையான் கோலங் காட்டியாட் கொண்ட வன்றே.

(இ-ள்.) எம்மை, நீண்டசடையினையுடைய சிவபெருமான் குருமூர்த்தமாயெழுந்தருளிவந்து திருவடிக்கருகனாக ஆட்கொண்டவத்தினத்திலேயே யாம்சுற்றத்தையும் பந்தத்தையும் ஒழித்தேம்; துன்பத்தையும் இன்பத்தையும்விட்டேம்;இவ்வெறுவிய

உடன்மீதுள்ள அபிமானமும் அகன்றேம்; பொன்னின்மீது இச்சையற்றேம்; கோபத்தையும் செருக்கையும் தள்ளினேம்;நல்வினை தீவினைகளையும்மாற்றினேம். எ-று. (௮௩)

தந்தைதாய் குரவ னாசான் சங்கர னிராசை பெண்டிர்
மைந்தர்பல் லுயிருஞ் சுற்ற மாசிலா வீச னன்ப
ரந்தமில் பிறவி யேழு மடிபகை யென்ப தோர்ந்தே
மெந்தையார் கருணை காட்டி யெம்மையாட் கொண்ட வன்றே.

(இ-ள்.) எம்பெருமானுர் இரக்கங்காட்டி யெம்மை ஆட்கொண்ட அத்தினத்திலேயே தந்தையும் தாயும் குருவும் ஆசானும் சங்கரனேயென்றும், நிராசையேமனைவியென்றும், பலவகையுயிர்களே புத்திரர்களென்றும், குற்றமற்ற சிவபத்தர்களே சுற்றத்தினர்களென்றும்,முடிவில்லாத எழுவகைப்பிறவிகளுமே சத்துருக்களென்றும் அறிந்து கொண்டேன். எ-று. (௮௪)

ஊரெலாமட்ட சோறு நம்மதே யுவரி சூழ்ந்த
பாரெலாம் பாய லுன்னற் கோவணம் பரிக்கு மாடை
சீரெலாஞ் சிறந்த சாந்தந் தெய்வநீற ணிபூண் கண்டி
நீரெலாஞ் சுமந்த வேணி நிருத்தனுட் கொண்ட வன்றே.

(இ-ள்.) கங்கையைத்தாங்கிய சடையினையுடைய நடராஜப்பெருமான் நம்மையடிமையாகக்கொண்டவுடனே ஊர்கடோறும்சமைத்தசோறும் நம்மதே; கடலால் சூழப்பட்ட பூமிமுழுதும் நமதுபடுக்கை; கந்தற்றுணியாலாகிய கோவணமே நாம் தரிக்கும் வஸ்திரம்; எல்லாச்சிறப்புக்களாலும் சிறந்துள்ள சந்தனம் நமக்குத் திருநீறே; தரிக்குமாபரணம் ருத்திராக்ஷமேயென்று அறிந்திருக்கின்றேம். எ-று. (௮௫)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இறக்கினு மின்றே யிறக்குக வென்று மிருக்கினு மிருக்குக வேந்த
னொறுக்கினு மொறுக்க வுவகையு முடனே யூட்டினு மூட்டுகவானிற்
சிறக்கினுஞ் சிறக்க கொடியதீ நரகஞ் சேரினுஞ் சேருக சிவனை [தார்
மறக்கிலம் பண்டைப் பழவினைவிளைந்தான்மாற்றுவார்யாரெனமறுத்

(இ-ள்.) இறந்தாலும் இன்றேயிறக்கட்டும்; இறவாமலென்றுமிருந்தாலுமிருக்கட்டும்; அரசன்தண்டித்தாலும் தண்டிக்கட்டும்; உடனேசந்தோஷத்தையூட்டினாலும் ஊட்டட்டும்; சுவர்க்கத்திற்சென்று சிறப்புறவிருந்தாலுமிருக்கட்டும்; கொடியதீய நரகத்தையடைந்தாலுமடையட்டும்; யாம்(எம்மையாட்கொண்ட) சிவபெருமானைமறவேம்; பிராரத்துவாநுபவமுண்டானுல் யாரதைத்தடுக்கவல்லவர் என்று கூறித் தமக்கு புத்தி கூறினவர்களைத் தாம் கண்டித்தனர். எ-று. (௮௬)

வாதவூரடிகளுக்குபதேசித்தபடலம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம் – ௨௪௬௬.

---

ஐம்பத்தொன்றுவது.

# நரிபரியாக்கியபடலம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அரிகணை தொடுத்து வேழ மட்டவன் செழியன் வாயிற்
றெரிகலை யமைச்ச ரேற்றைத் தேசிக வடிவத் தீண்டி
வரிகழல் சூட்டி யாண்ட வண்ணமிவ் வண்ண மைய
னரிகளைப் பரிக ளாக்கி நடத்திய வாறுஞ் சொல்வாம்.

(இ-ள்.) நரசிங்காஸ்திரத்தைவிட்டு சினமுநிமதத்தினர்விட்ட யானையைக் கொன்றருளிய சோமசுந்தரப்பெருமான் பாண்டியனது சபாமண்டபத்துக்குரியகலைஞானங்களையுணர்ந்த முதன்மந்திரியாராகிய வாதவூரடிகளை ஆசிரியத்திருக்கோலத்துடனடைந்து கட்டப்பட்ட வீரக்கழலிணையுடைய திருவடியைச் சிரமேற்சூட்டி யாண்டதன்மை இத்தன்மையது. இனியச்சிவபெருமானார் வாதவூரடிகளின்பொருட்டு நரிகளைக் குதிரைகளாக்கி அவைகளைப் பாண்டிமன்னனெதிரே நடத்திக்காட்டிய தன்மையையும் சொல்லுகின்றோம். எ-று. (௧)

சுற்றமாம் பாச நீவித் துகளறுத் திருந்தார் தம்மை
மற்றைநா ளழைத்து வேந்தன் வந்தில போலு மின்னங்
கொற்றவாம் பரிக ளென்னக் குறுமதி முடித்தா னன்ப
ரிற்றைநாண் முதனாண் மூன்றி லீண்டுவ வின்றவ வென்னா.

(இ-ள்.) நெல்லிற்குமிபோலத் தம்மைவிடாது தொடர்ந்துவந்த பாசத்தையொழித்துக் குற்றங்களை நீக்கியெழுந்தருளியிருப்பவராகிய வாதவூரடிகளை அரிமர்த்தனமன்னன் மறுநாளழைத்து இன்னம் வெற்றியும்வேகமுமுடைய குதிரைகள் வந்திலபோலும் என்று கூறுதலும், இளம்பிறையணிந்தார்க்கன்பராகிய மணிவாசகப்பெருமானும் அரசனைப்பார்த்து மன்னவ! இத்தினமுதன் மூத்தினத்திற்குள் குதிரைகள்வருகின்றன என்று கூறி. எ-று. (௨)

சிந்துர நுதன்மால் யானைச் செல்வவப் பரிக்கு வேறு
மந்துரை யகன்ற வாக வகுக்கசூழ் தண்ணீ ரூட்ட
நந்துறை தடங்கள் வேறு தொடுகநீ ணகர மெங்கு
மிந்துறை மாட மெல்லா மழகுசெய் திடுக வென்றார்.

(இ-ள்.) சிந்துரமணிந்த பெரியநெற்றியினையுடைய யானைப்படைகளையுடைய பிரபுவே அவ்வரப்போகின்ற குதிரைகளின்பொருட்டு விசாலமான அசுவசாலைகளையேற்படுத்துக. சுற்றிலும் அவைகளுக்குத்தண்ணீர் ஊட்டும்பொருட்டு சங்குகள்பொருந்திய தடாகங்களை வேறேதோண்டுவிக்குக. இப்பெரிய நகரத்திலெங்குமுள்ள சந்திர மண்டலத்தையளாவிய உப்பரிகைகளையெல்லாம் அலங்கரிப்பிக்கச்சொல்லுக என்றுகூறினார். எ-று. (௩)

காவலன் கருமஞ் செய்வோர் கந்துகப் பந்தி யாற்றி
யோவற நகர மெங்கு மொளிபெற வழகு செய்யத்
தாவுதெண் கடலேழ் கண்ட சகரர்போல் வைகன் மூன்றில்
வாவியுங் குளனுந் தொட்டார் மண்டொடு கருவி மாக்கள்.

(இ-ள்.) உடனே (அரசனதுகட்டளையால்) இராஜகாரியங்களை நடத்துபவர்கள் அசுவசாலைகளை யேற்படுத்தி ஊர்முழுமையும் குற்றமற்ற வொளிபொருந்தும்படி அலங்கரிக்கவும் அகன்ற ஏழ்கடல்களைத்தோண்டிய சகரர்களைப்போல மூன்றுநாளில் மண்வெட்டி முதலிய ஆயுதங்களையுடையவர்கள் தடாகங்களையும் குளங்களையும் தோண்டினார்கள். எ-று. (௪)

வரையுறை செய்த மூன்று வைகலுங் கழிந்த பின்னாட்
கரையறு பரிமா வீண்டக் கண்டில மின்ன மென்னா
விரையுறை வண்டார் தண்டார் வேம்பனும் விளித்து வந்த
வுரையுறை நாவி னோரை யொறுப்பவ னெத்துச் சீறா.

(இ-ள்.) அளவு ஏற்படுத்திய மூன்றுநாட்களுமானபின் நாலாநாளில் இன்னம் அளவற்ற குதிரைப்படைகள் வரக்கண்டிலோமென்று மணம்வீசுகின்ற வண்டுகள்மொய்

த்ததண்ணியமலர்மாலையணிந்தபாண்டியனும் ஆள்விட்டழைத்தலால்வந்துள்ள வேதோச்சாரணத்தையுடைய நாவோடுகூடிய மணிவாசகப்பெருமானைத்தண்டிப்பவனைப்போல கோபித்து. எ-று. (௫)

என்னிவன் பரிமாக் கொண்ட தென்றவை வருவ தென்னுத்
தன்னெதிர் நின்ற வஞ்சத் தறுகணர் சிலரை நோக்கிக்
கொன்னுமிக் கள்வன் றன்னைக் கொண்டுபோய்த் தண்டஞ் செய்தெம்
பொன்னெலா மறவு கொண்டு வாங்குமின் போமி னென்றான்.

(இ-ள்.) இவன் குதிரைவாங்கினதெங்கே? எப்பொழுது அவைகள் வருவது? என்று தன்னெதிரில் நின்றவஞ்சகத்தினையுடைய அஞ்சாமையோடு கூடிய சில ஏவலாளர்களைப்பார்த்து வலிய இத்திருடனைக்கொண்டுபோய்த் தண்டித்து எமதுபொன்னையெல்லாம் மறுதலைசெய்து வாங்குங்கள் போங்கள் என்றுகூறினான். எ-று. (௬)

கற்றிணி தோளான் சீற்றங் கண்டெதிர் நில்லா தஞ்சிச்
சுற்றிய பாசம் போலத் தொடர்ந்துகொண் டேகி மள்ள
ரொற்றினி வகைதான் பொன்னுக் கியம்புமென் றெதிர்த்துச் சீறிச்
செற்றமில் சிந்தை யார்மேற் செறிந்தகல் லேற்றினாரே.

(இ-ள்.) வீரர்கள் கற்போலுமழுந்திய தோள்களையுடைய பாண்டியனதுபெருங்கோபத்தைப்பார்த்து அவனெதிரில் நிற்கப்பயந்து சுற்றப்பட்ட பாசத்தைப்போலச் சூழ்ந்துகொண்டு சென்று அந்தணரே அரசனுக்குக் கொடுக்கவேண்டிய பொன்னுக்கு வழியென்ன சொல்லுமென்று எதிர்த்துக் கோபித்துக் கோபமற்ற மனத்தினையுடைய மணிவாசகப்பெருமான்மீது அழுத்தமான கல்லையேற்றுவித்தார்கள். எ-று. இங்குமேலென்றது பிடரியை. (௭)

பொன்னெடுஞ் சயிலங் கோட்டிப் புரம்பொடி படுத்த வீரர்
சொன்னெடுந் தாளை யுள்கி நின்றனர் சுமந்த பார
மங்நெடுந் தகையார் தாங்கி யாற்றின ரடைந்த வன்பர்
தங்நெடும் பார மெல்லாந் தாங்குவா ரவரே யன்றே.

(இ-ள்.) பொன்னாகிய பெரியமலையைவில்லாகவளைத்து திரிபுரத்தைப்பொடியாகச்செய்த சிவபெருமானாரது புகழமைந்த (திருமால்பொருட்டு) நீண்டதிருவடிகளை நினைத்துக்கொண்டு மணிவாசகப்பெருமானார் நின்றனர். உடனே அவராற்சுமக்கப்பட்ட பாரத்தை அவரது தியானப்பொருளாகிய சிவபெருமானார் சுமந்துசகித்தனர். தம்மையடைந்த அன்பர்களது சமுசாரமாகிய சுமைகளனைத்தையும் சுமப்பவர் (பாசச்சேதகராகிய) அவரேயன்றே. எ-று. (அ)

சிலையது பொறைதோற் றது சிவனடி நிழலி னின்றார்
நிலையது நோக்கி மாய நெறியிது போலு மென்னுக்
கொலையது வஞ்சா வஞ்சர் கொடுஞ்சினந் திருகி வேதத்
தலையது தெரிந்தார் கையுந் தாள்களுங் கிட்டி யார்த்தார்.

(இ-ள்.) பிடரியில்வைத்த கல்லின் சுமைதோற்றது சிவபெருமானது திருவடிநிழலில் நின்றுள்ளவரது நிலைமையைப்பார்த்து இது ஒருவஞ்சனைவழிபோலுமென்று கொலைசெய்தற்கஞ்சாத வஞ்சகர்கள் மிக்ககோபங்கொண்டு வேதாந்தத்தையுணர்ந்தவரது கைகளிலும் கால்களிலும் கிட்டியிட்டுப் பிசைந்தனர்.—எ-று. (௯)

அக்கொடுந் தொழிலு மஞ்சா திருந்தன ரரனை யுள்கி
யிக்கொடுந் தொழிலி னூர்தா மினிநனி யொறுப்ப சொன்றீப்

புக்கது காண்டற் குள்ளம் பொருளென விரவிப் புத்தேண்
மிக்கதன் ஞெளிகண் மாழ்கி விரிகட லழுவத் தாழ்ந்தான்.

(இ-ள்.) அவர் அக்கொடியசெய்கைக்கும் பயப்படாமல் சிவத்தியானம் செய்துகொண்டிருந்தனர். இந்தக்கொடியதொழிலினையுடைய இவர்கள் இவரை மிகவும் தண்டிப்பார்களென்று சூரியபகவான் தானிருந்ததைக் காணுதற்கு மனந்தாளாதவனைப் போல விரிந்ததனது ஒளிகள்குறைய அகன்றகடலிடத்தின் மறைந்தனன் —எ-று.(கo)

சுந்தர விடங்க ரன்பர் சூழ்துய ரகற்ற நேரே
வந்தெழு காட்சி போல வந்தது செக்கர் வான
மிந்தவர் மார்பந் தூங்கு மேனவெண் கோடு போன்ற
தந்தர வுடுக்க ளெல்லா மயன்றலை மாலை யொத்த.

(இ-ள்.) சுயம்புரூபியான சோமசுந்தரப்பெருமான் தன்னடியவரைச்சூழ்ந்துள்ள துன்பத்தைநீக்குதற்கு நேரே பிரத்தியக்ஷமானாற்போலச் செக்கர்வானமுதித்தது. அச்செக்கரினடுவிலுதித்துள்ள இளம்பிறையானது அவரதுதிருமார்பில் தொங்குகின்ற பன்றியின் வெள்ளியகொம்புபோன்றது. வானத்திலுதயமான நக்ஷத்திரங்களெல்லாம் பிரமகபாலங்களாலாகிய மாலையை யொத்தன. எ-று.

விடங்கம் - உளிபடாதது; அது சுயம்புலிங்கம். (கக)

சுழிபடு பிறவித் துன்பத் தொடுகட லழுவத் தாழ்ந்து
கழிபடு தனையுங் காப்பான் கண்ணுதன் மூர்த்தி பாதம்
வழிபடு மவரைத் தேரான் வன்சிறைப் படுத்த தென்னன்
பழிபடு புகழ்போ லெங்கும் பரந்தது கங்கு லீட்டம்.

(இ-ள்.) ஒரு நிலையினிற்றற்கொட்டாத துன்பமென்னு மாழ்ந்தகடலில் விழுந்துகிடக்கின்ற தன்னையும் இரக்ஷிக்கும்பொருட்டு திரிலோசனராகிய சிவபெருமானது திருவடிகளைத் தியானம்செய்கின்ற அம்மணிவாசகப்பெருமானை இப்படிப்பட்டவரொன்றுணராமல் சிறையிலடைத்த பாண்டியனது அபகீர்த்தியைப்போல இருட்கூட்டமெங்கும்பரந்தது. எ-று. (கஉ)

கங்குல்வந் திறுத்த லோடுங் கருஞ்சிறை யறையிற் போக்கிச்
சங்கிலி நிகளம் பூட்டித் தவத்தினைச் சிறையிட் டென்னச்
செங்கனல் சிதற நோக்குஞ் சினங்கெழு காவ லாளர்
மங்குலி னிருண்ட கண்டர் தொண்டரை மறுக்கஞ் செய்தார்.

(இ-ள்.) இராத்திரி வந்தவுடனே கரியசிறையாகிய அறையிலிட்டுச் சங்கிலிவிலங்குமாட்டித் தவத்தினைச்சிறையிலிட்டாற்போலச் செந்தீப்பொறிகள் பறக்கப்பார்க்கின்ற கோபத்தோடுகூடிய காவலாளிகள் மேகத்தைவிட கருநிறம்வாய்ந்த நீலகண்டத்தினையுடைய சிவபெருமானரது அன்பராகிய மாணிக்கவாசகப்பெருமானை சிறையிலடைத்து வருத்தம்புரிந்தார்கள். எ-று. (கங)

மிடைந்தவர் தண்டஞ்செய்ய வெஞ்சிறை வெள்ளத் தாழ்ந்து
கிடந்தவர் கிடந்தோன் பூமே லிருந்தவன் றேடக் கீழ்மே
னடந்தவர் செம்பொற் பாத நகைமலர் புணையாப் பற்றிக்
கடந்தனர் துன்ப வேலை புலர்ந்தது கங்குல் வேலை.

(இ-ள்.) சுற்றிலும் நெருங்கியிருப்போர்கள் கிட்டியிடுதல் முதலிய தண்டனைகளைச்செய்ய வெவ்வியசிறைச்சாலையென்னும் வெள்ளத்தின் மூழ்கிக்கிடக்குமவர்கடலிற்கிடந்தமாலும் பூவிலிருந்தவயனும் தேடும்படி கீழுமேலும் நீண்டுநின்றவரது செவ்வி

யபொன்மயமான திருவடியாகிய விரிந்தமலரைத்தெப்பமாகக்கொண்டு துன்பசமுத்திர த்தைக் கடந்தனர்; இராப்பொழுதும் விடிந்தது. எ-று. (௧௪)

அந்தமி லழகன் றன்னை யங்கயற் கண்ணி யோடுஞ்
சுந்தர வமளிப் பள்ளி யுணர்த்துவான் றெண்டர் சூழ
வந்தனை செய்யு மார்ப்பு மங்கல சங்க வார்ப்பும்
பந்நான் மறையி னார்ப்பும் பருகினர் செவிக ளார.

(இ-ள்.) அழிவற்ற சுந்தரேசப்பெருமானை அங்கயற்கண்ணம்மையுடனே அழகிய பஞ்சணையிலிருக்குங்கால், பள்ளியுணர்த்தும்பொருட்டு அடியவர்கள் சுற்றிலும்சூழ்ந்துநின்றுகொண்டு துதிக்கின்ற சத்தமும், மங்கலகரமான சங்குகளினொலியும், ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கின்ற நான்குவேதங்களின் அத்தியயனமுழக்கமும் மாணிக்கவாசகப்பெருமான் திருச்செவியி லேற்றருளினர். எ-று. (௧௫)

போதவா னந்தச் சோதி புனிதமெய்த் தொண்டர்க் காக
நாதமா முரச மார்ப்ப நரிப்பரி வயவர் சூழ
வேதமாம் பரிமேற் கொண்டு வீதியில் வரவு காணுங்
காதலான் போலத் தேர்மேற் கதிரவ னுதயஞ் செய்தான்.

(இ-ள்.) ஞானாநந்தசோதியாகிய சுந்தரேசப்பெருமான், நிருமலராகிய மணிவாசகப்பெருமானென்னு மடியவர்பொருட்டு நாததத்துவமாகிய முரசுமுழங்க, நரிகளாகிய குதிரைகளின்மீது சிவகணங்கள் சூழ்ந்துவர, வேதமாகிய தாவுகின்ற குதிரையின்மீதேறிக்கொண்டு வீதியிலெழுந்தருளுதலைத் தரிசித்தற்கு விருப்பமுள்ளவனைப்போல (வழக்கம்போல்) தேரின்மீது சூரியன் உதயமானான். எ-று.

இறைவன், உண்மையையுணர்ந்த சிவஞானிகண்மாட்டு உண்மையாகிய ஞானமாகவும், ஞானத்தாலுண்டானஆனந்தமாகவும், ஞானத்தையும் ஆனந்தத்தையும் அளித்தற்குக்காரணமான ஸத்தாகிய இயற்கை ஒளியாகவும், முக்காலங்களிலும் விளங்குபவராதலால், அவரை 'போதவானந்தச்சோதி' என்றார். அன்றியும், சூரியன் அக்கினிமுதலானவர்களிடத்திற் காணப்படுகிற சோதிபோன்ற சோதியல்லவென்பார் 'போதவானந்தச்சோதி' என்றார்.

இறைவனுக்கென்றும் உள்ளது நாதப்பறையாதலால் அவர்பறையை, 'நாதப்பறை' யென்றார்.

இறைவன் எழுந்தருளிவருங்காலமெல்லாம் மால்விடை தருமவிடை என்னும் இவைகளிலொன்றிலேறிவருதலைப்போலவிராமல், வேதமாகிய குதிரையின்மீது எழுந்தருளிவருதல் அருமைத்தரிசனமென்பதை உணர்த்த, இயல்பாயுதிக்குங் கதிரவனதைக்காணவந்தாற்போல வந்தானென்றார். (௧௬)

கயனெடுங் கண்ணி யோடுங் கட்டவிழ் கடிப்பூஞ் சேக்கைத்
துயிலுணர்ந் திருந்த சோம சுந்தரக் கருணை வெள்ளம்
பயினெடுஞ் சிகர நோக்கிப் பங்கயச் செங்கை கூப்பி
நயனபங் கயநீர் சோர நாதனைப் பாட லுற்றார்.

(இ-ள்.) (மாணிக்கவாசகசுவாமிகள்) நீண்டசேல்மீன்களையொத்த கண்களையுடைய தடாதகைப்பிராட்டியாருடன் முறுக்கவிழ்ந்த வாசனையையுடைய புஷ்பசயனத்தின்மீது திருவனந்தல் ஒழிந்து எழுந்தருளியிருக்கின்ற கிருபாமூர்த்தியான சோமசுந்தரப்பெருமான் திருவுருக்கொண்டெழுந்தருளியிருக்கின்ற மூலத்தானத்தின் சிகரத்தைப்பார்த்து பங்கயமலர்போன்ற செவ்விய கைகளைக்குவித்து தாமரைமலரின் இதழ்களைப்போன்ற விழிகளில் நீரொழுகச் சிவபெருமானைப்பாடத்தொடங்கினர். எ-று.

பசுவிற்கு உடம்புமுழுமையும் பாலிருத்தலைப்போல, இறைவனும் ஸர்வவியாபியாகவே இருக்கின்றார். இருந்தாலும், பசுவிற்கு உடன்முழுமையும் பாலின்வியாபகம் இருக்கின்றதென்று கொம்பிற்கறந்தால்வரா. தனபாரத்தையன்றி ஏனையிடங்களின்வழி வெளிப்படுவதில்லை; பால்நிரம்பிநிற்பதுவுமில்லை. அதைப்போலவே இறைவரும் அண்டமாகியபசுவில் ஆலயமென்னுமடியில் சிகரமென்றுரைக்குங்காம்பில் இலிங்கமென்றுரைக்குந்துவாரத்தின்வழி பாலைப்போல வெளிப்படுபவராதலால் அவர் எந்நாளும் இலிங்கத்திலெழுந்தருளிப் பாலைப்போல இருந்து தருணநோக்கி வெளிப்படுவரென்பது தோன்ற, இவரும், இறைவனிருப்பைச் சுட்டிப் 'பயினெடுஞ்சிகரநோக்கி' என்றார். (கஎ)

கோச்சகக்கலிப்பா.

எந்தா யனைத்துலகு மீன்றுயெத் தேவர்க்குந்
தந்தாய் செழுங்குவளைத் தாராய் பெருந்துறையில்
வந்தாய் மதுரைத் திருவால வாயுறையுஞ்
சிந்தா மணியே சிறியேற் கிரங்காயோ.

(இ-ள்.) எந்தையே! சகலலோகங்களையும் படைத்தருளினவரோ! சகலதேவர்களுக்குந் தந்தையே! செழுமைவாய்ந்த நீலோற்பலமலர்மாலையையுடையவரோ! திருப்பெருந்துறையி லெழுந்தருளியிருந்தவரோ! மதுரையென்னும் திருவாலவாயில் எழுந்தருளியிருக்கின்ற சிந்தாமணியே! சிறியேனாகிய அடியேற்கு இரங்கியருளீரோ? எ-று.

காலாக்கினி உருத்திரன், திருமால், பிரமன்முதலிய வெல்லாரையும்படைத்த பரமனாதலால் 'எத்தேவர்க்குந்தந்தாய்' என்றார்.

பொன்மலரைப்போல கழுவிக்கழுவிச் சாத்த ஏற்றதாகலானும், உமாதேவியாரை அதிதெய்வமாகக்கொண்டு விளங்குதலானும், நீரின் உட்புறத்திலும் விரியும் தன்மையுடையதாதலானும், ஆசிரியத்திருக்கோலத்துடன்வந்த அஞ்ஞான்று அணிந்திருந்த மாலை அதுவாதலானும், கொன்றைமுதலியவைகளை யொழித்துச் "செழுங்குவளைத்தாராய்" என்றார். இறைவர் தம்பொருட்டுச் சகளீகரித்து நின்றவிடம் திருப்பெருந்துறையாதலால் 'பெருந்துறையில்வந்தாய்' என்றார்.

மேனாட்டிலுள்ள சிந்தாமணியை விலக்குவான், 'மதுரைத்திருவாலவாயுறையும் சிந்தாமணியே' என்றார்.—சிந்தாமணி=சிந்திதங்களை அளிக்குமணி. (கஅ)

மூவா முதலாய் முதுமறையா யம்மறையுந்
தாவாத சோதித் தனிஞான பூரணமாய்த்
தேவாதி தேவாய்த் திருவால வாயுறையு
மாவார் கொடியா யடியேற் கிரங்காயோ.

(இ-ள்.) முதிர்தலில்லாத முதற்பொருளாய், புராதனமானவேதமாய், அவ்வேதங்களாலும் எட்டுதற்குக்கூடாத ஜோதிரூபமான ஒப்பற்ற ஞானபூரணமாய், தேவாதிதேவரூபமாய்த் திருவாலவாயிலெழுந்தருளியிருக்கின்ற இடபமமைந்த கொடியினையுடையவரோ! அடியேன்பொருட்டு திருவுளமிரங்குவீராக. எ-று.

இக்காணப்படும் உலகத்தில் முன்னேதோன்றினவையும் பின்னேதோன்றினவையும் அழிவுபட்டபாவமாதலனுபவமாதலால், முதலில் தோன்றினும் அழிவுபட்டு அபாவமடைதற்கேற்ற கிழத்தன்மையடைதன் முதலியவை இல்லாதவரென்றுணர்வார் 'மூவாமுதலாய்' என்றார்.

இறைவனே விதியும் விலக்குமாக இருப்பவரென்றுணர்ந்தவராதலால், 'முதுமறையாய்' என்றார். முதுமறையென்றது இறைவன் திருமுகங்களிற்றோன்றிய வேதங்களை.

அறிவுநூல்களாலும் அறியப்படாத அருமையானவரென் றுணர்ந்தவராதலால், "அம்மறையுந்தாவுறாத சோதித்தனிஞானபூரணமாய்" என்றார்.

தனிஞானபூரணம் – காலதேசவர்த்தமானபரிச்சேதரஹிதஞானம். (௧௯)

முன்னு முதுபொருட்கு முன்னு முதுபொருளாய்ப்
பின்னும் புதுமைக்கும் பின்னும் பேரொளியாய்த்
தென்னு மதுரைத் திருவால வாயுறைய
மென்னு யகனே யெளியேற் கிரங்காயோ.

(இ-ள்.) முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம்பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பிற்பட்டதாகிய பெரியசோதிரூபமாய் அழகுபொருந்திய மதுரையாகிய திருவாலவாயிலெழுந்தருளியிருக்கின்ற எமது கர்த்தாவே! ஏழையாகிய அடியேன்பொருட்டு இரங்கியருள்வீராக. எ-று.

உலகமுதலியவனைத்தும் தோன்றுதற்கு முன்னே உள்ளவர் நித்தியரான சிவபெருமானே ஆதலால், 'முன்னுமுதுபொருட்கும் முன்னுமுதுபொருளாய்' என்றும், எல்லாமழிந்தபின்பும் அவரழியாதிருப்பவராதலால், 'பின்னும்புதுமைக்கும்பின்னும் பேரொளியாய்' என்றும் கூறினார்.

தென்னும் – தெற்குநாட்டிலுள்ளதாகிய எனினுமாம். (௨०)

மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி
விண்ணா யிருசுடரா யித்தனையும் வேறாகிப்
பண்ணா யிசையாய்ப் பனுவலா யெங்கண்ணுங்
கண்ணானா யென்னுறுகண் காணுவா றென்கொலோ.

(இ-ள்.) பிருதிவியாய், அப்புவாய், தேயுவாய், வாயுவாய், ஆகாயமாய், சூரிய சந்திரர்களாய், இவ்வேழுமல்லாததாய், பண்ணாய், இசையாய், வேதமாயிருந்தும், எவ்விடங்களிலும் கண்ணுள்ளவரே! தேவரீர் அடியேனது துன்பத்தைக்காணுதவிதமென்ன?

பண்ணுக்கும் இசைக்கும் வேறுபாடிருத்தலால் பிரித்துக்கூறினார்.

இறைவன் ஸர்வஸாக்ஷியாதலால் 'எங்கண்ணும் கண்ணாய்' என்றார். (௨௧)

பொங்குஞ் சினமடங்கல் போன்றுருத்து வெங்கூற்ற
மங்கும் புரியா வருந்துன்பத் தாழ்ந்துநான்
மங்கும் படியறிந்தும் வந்தஞ்ச லென்கிலையா
லெங்குஞ் செவியுடையாய் கேளாயோ வென்னுரையே.

(இ-ள்.) அதிகமாகின்ற கோபத்தினையுடைய சிங்கத்தைப்போல அதட்டி வெவ்விய யமனானவன் அந்தநகரத்திலும் செய்யாத துன்பத்திலடியேன் மூழ்கிக்குன்றுதலடைதலை யறிந்திருந்தும் என்னெதிரில் எழுந்தருளிவந்து பயப்படாதேயென்கின்றீரில்லை; எங்குங்காதுடையவரே! அடியேனது ஓலமிடுமொழிகள்தேவரீரது திருச்செவிகளிற் கேட்கவில்லையோ? எ-று.

இறைவன் ஸர்வவியாபியாதலால், எங்குங்காதுடையாரென்றார். (௨௨)

பூட்டி யருட்பாச மிருபாதம் பொறித்துடலிற்
கூட்டி யடியாரு ளகப்படுத்தாட் கொண்டருமை
காட்டியவோ வின்றென்னைக் கைவிட்டாய் வெய்யவரை
யாட்டி யொறுக்குமிடத் தாரோன்று கொள்வாரோ.

(இ-ள்.) திருவருட்சத்தியைப் பதிவித்து உபயபாதங்களையும் தலைமீதுவைத்தலாகிய திருவடிதீட்சையைச்செய்து ஞானதேகத்தொடு கலக்கச்செய்து அடியேனை

அடியவர்களோடு கலக்கச்செய்து அருமைபாராட்டிய எம்பெருமானே! இன்று அடியேனைக் கைவிட்டருளினீர். இக்கொடியவர்கள் என்னை யிழுத்துவருந்துங்கால் வேறே யார் ஆதரிப்பவர்கள். எ-று.

அஞ்ஞானத்தை ஒழித்து ஞானத்தை நிலைநிறுத்திப் பின்னர் திருவடிதீக்ஷைசெய்து தனக்குள்ளேகண்டு தரிசிக்கும்படிசெய்த அருமைக்குருவாதலால், 'அருமைகாட்டியவோ' என்றார். (உரு)

ஊரா ருனைச்சிரிப்ப தோரீரியென் றுன்னடிமைக்
காரா யடியே னயர்வே னதைதறிந்தும்
வாரா யரசன் றமரிழைக்கும் வன்கண்ணோய்
பாராயுன் றன்மை யிதுவோ பரமேட்டி.

(இ-ள்.) (எம்பெருமானே!) தேவரீரை ஊரிலுள்ளவர்களெல்லாம் (அன்பரை விரைந்துவந்தாளாதவரென்று) சிரிப்பதைத் திருவுளங்கொண்டிலீர் என்று உமது அடிமையாகிய யான் வருந்துகின்றேன். அதனையுணர்ந்தும் வந்தருளினீரில்லை. அரசனதேவலாளர்கள் செய்கின்ற மிகவும் கொடியதுன்பத்தைத் திருக்கண்சாத்தினீரில்லை. மிகவும் சிறந்தவரானகடவுளே! தேவரீரது தன்மையிதுவோ? எ-று.

அன்பர்க்கெளியனென்னும் அருட்டிருநாமத்திற்கு மாறுபட்டால், பாமரர்சிரிப்ப துண்மையாதலால் 'உனைச்சிரிப்பதோராது' என்றார்.

உன்னடிமைக்காராய் - உமது அடிமையாதற்பொருட்டு ஆராய்கின்றவெனினும் ஆம். அது சிறப்பன்றென அகற்றினும். (உச)

கலிநிலைத்துறை.

என்றி ரங்குவோ ரிரங்கொலி யிளஞ்சிறு ரழுகை
சென்று தாயர்தஞ் செவித்துளை நுழைந்தெனச் செல்லக்
குன்றி ருஞ்சிலை கோட்டிய கூடலு யகன்கேட்
டன்று வன்சிறை நீக்குவான் றிருவுளத் தமைத்தான்.

(இ-ள்.) என்றிவ்வண்ணம் புலம்புகின்ற வாதவூரடிகளது புலம்பலோசை, இளங்குழந்தைகளின் புலம்பலோசை பெற்ற மாதர்களின் கர்ணத்துவாரத்தில் நுழைந்தாற்போல, பெரியமலையை வில்லாகவளைத்த சதுஷ்கூடபுரநாயகன் தனது திருச்செவியில் கேட்டு அப்பொழுதே அவரது கொடியசிறையை நீக்கும்பொருட்டுத் திருவுளங்கொண்டனர். எ-று.

எவ்வளவு குற்றஞ்செய்த குழந்தையானாலும் அழுமானால் மாதாசகியாள்; அதுபோல இறைவனும் அன்பருக்கருள்புரியாதிராராதலால் மாதாவை உவமைகூறினார்.

நந்தி யாதியாம் பெருங்கண நாதரை விளித்தான்
வந்தி யாவரும் பணிந்தனர் மன்னவற் கின்று
முந்தி யாவணி மூலநாள் வந்தது முனிவு
சிந்தி யாமுனம் பரியெலாஞ் செலுத்துவான் வேண்டும்.

(இ-ள்.) திருநந்திதேவர்முதலிய சிவகணத்தலைவர்களைத் தம்மெதிரில்வரும்படித் திருவுளம்பற்றினர். உடனே அவர்களும் அவ்வெம்பெருமானது திருமுன்னர் வந்து வணங்கி நின்றனர். அவர்களை எம்பெருமான் நோக்கி நாம் பாண்டிமன்னனுக்கு இன்றுமுதலிலேயே ஆவணிமூலநக்ஷத்திரம் வந்துவிட்டமையால் அவன்கோபித்துக் கொள்ளுதற்குமுன்னே குதிரைகளனைத்தையும் செலுத்தவேண்டும். எ-று. (உசு)

யாவ ரும்புனத் தியங்குறு நரியெலா மீட்டித்
தாவ ரும்பரி யாக்கியத் தாம்பரி நடத்துஞ்

சேவ கஞ்செய்வோ ராகிமுன் செல்லுமின் யாமும்
பாவகம்பட வருதுமப் படியெனப் பணித்தான்.

(இ-ள்.) நீங்களெல்லாம் காட்டிலுலாவுகின்ற நரிகளனைத்தையும் ஒன்றுசேர்த்து குற்றமற்ற குதிரைகளாகச் செய்து அத்தாவுகின்ற குதிரைகளையோட்டுகின்ற குதிரைவீரர்களாகவுருமாறி முன்னேபோங்கள்; நாமும் அவ்வண்ணமே அதற்குத்தக்க வேஷத்துடன் கூடவேவருகின்றோம் என்று கட்டளையிட்டருளினர் சிவபெருமான். எ-று.

எவ்விதத்திலும் குதிரையாகவே இருக்கும்வண்ணஞ்செய்தென்பார். 'தாவரும் பரியாக' என்றார். 'பாவகம்படவருதல்' குதிரைவீரனே என்று எண்ணும்படி வருதல். ()

ஏக நாயக ஞணை பூண் டெழுகணத் தவரு
நாக நாடரும் வியப்புற நரியெலாந் திரட்டி
வேக வாம்பரி யாக்கியவ் வெம்பரி நடத்தும்
பாக ராயின ரவர்வரும் பரிசது பகர்வாம்.

(இ-ள்.) முதற்கடவுளாகிய சோமசுந்தரப்பெருமானது திருவருள்மொழியைத் தலைமேற்கொண்டவர்களாகியசிவகணங்களும்,(காட்டுக்குச்சென்று) பொன்னுலகத்துத் தேவர்களும் ஆச்சரியப்படும்படி நரிகளையெல்லாம் ஒன்றுசேர்த்து வேகமாக வோடுகின்ற பரிகளாக்கி அந்தவேகத்தினையுடைய குதிரைகளை நடத்துகின்ற வீரர்களாகி அவர்கள் அக்குதிரைகளுடன் வருந்தன்மையைச் சொல்லுகின்றோம். எ-று.

ஏகநாயகன் என்பது-இறைவனுக்குச் சிறப்புத்திருநாமம். பொன்னுட்டவர்கள் மாயாசாலங்களில் வல்லவராதலால், 'நாகநாடரும்வியப்புற' என்றார். (உஅ)

தூக்கி யார்த்தசெம் பட்டினர் சுரிகையர் தொடுதோல்
வீக்கு காலின ரிருப்புடற் காப்பினர் வெருளி
நோக்கு பார்வையர் புண்டர நுதலின ரிடியிற்
றாக்கி யார்ப்பெழு நகையினர் தழன்றெழு சினத்தோர்.

(இ-ள்.) தூக்கிக்கட்டப்பட்ட செந்நிறப்பட்டுடையினர்; உடைவாளினர்; செருப்பணிந்த கால்களையுடையர்; இரும்பாலாகிய கவசங்களையுடையர்; வெருட்சியாகப் பார்க்கும் பார்வையினையுடையர்; விபூதியணிந்த நெற்றியினையுடையர்; இடியிடித்தாற்போல முழங்குகின்ற நகைப்பினை யுடையர்; சொலிக்கின்ற தீபோன்ற கோபத்தினை யுடையர். எ-று.

இருப்புக்கவசம் இடுதல் முன்னுள்ள அரசர்காலத்துவழக்கம். வருகின்ற குதிரைவீரர்களெல்லாம் சைவர்களென்று குறிப்பிக்க, 'புண்டரநுதலினர்' என்றார். (உகூ)

வட்டத் தோல்வரி புறங்கிடந் தசையவை வடிவா
டொட்ட கையினர் சிலர்நெடுந் தோமரஞ் சுழல
விட்ட கையினர் சிலர்வெரி நிடைநெடு விசிகப்
புட்டில் வீக்கிவிற் றூக்கிய புயத்தினர் சிலரால்.

(இ-ள்.) அவர்களுட்சிலர், வட்டமானதோலாலமைக்கப்பெற்ற கேடகத்தைப் புறங்கையில் கிடந்தசையும்படிக்கட்டி வடிக்கப்பட்ட வாட்படையைக்கையிலெடுத்துக் கொண்டிருக்கின்றார்கள். வேறுசிலர் நீண்டதோமராயுதங்களைச் சுழலும்படி கைகளிற் றாங்கியிருக்கின்றார்கள். வேறுசிலர் முதுகில்நீண்ட அம்புகளையுடைய தூணியைமாட்டி, தோளில் வில்லையேந்தினவர்களாயிருக்கின்றார்கள். எ-று. (௩௦)

செம்ப டாஞ்செய்த போர்வையர் சிலர்பசும் படத்தான்
மொய்ம்பு வீக்கிய கவயத்தர் சிலர்கரு முகில்போ

லம்பு யம்புதை காப்பினர் சிலர்சில ரவிருங்
பைம்பொன் வாணிறப் படாஞ்செய்குப் பாயத்தர் சிலரால்.

(இ-ள்.) சிலர் செந்நிறவாடையாற் செய்யப்பட்ட குப்பாயமணிந்தவர்கள்; வேறுசிலர் பச்சைநிறமான வாடையாற்செய்யப்பட்ட கவசத்தைத் தோளிலணிந்தவர்கள்; சிலர் கரியமேகத்தைப்போல நிறம்வாய்ந்த ஆடையாற் செய்யப்பட்ட கஞ்சுகத்தாற் புயங்களை மறைத்தவர்கள்; சிலர் விளங்குகின்ற பொன்மயமான ஒளிபொருந்திய வாடையாற்செய்யப்பட்ட குப்பாயத்தையுடையவர்கள். எ-று. (சுக)

பிச்ச வொண்குடை யார்பலர் கவரிவால் பிறங்கத்
தைச்ச தண்குடை யார்பலர் சல்லிசூழ் நாற்றி
வைச்ச வண்குடை யார்பலர் வாணிலா முத்த
மொய்ச்ச வெண்குடை யார்பலர் மொய்ம்பின ரிவருள்.

(இ-ள்.) இவ்வீரர்களுட் பலர் ஒள்ளிய பீலிக்குடையினையுடையவர்கள்; பலர் வெண்சாமரங்களைச்சுற்றிலும் விளங்கும்படித் தைக்கப்பட்டுள்ள குளிர்ச்சியைத்தருகின்ற குடைகளையுடையவர்கள்; வேறுபலர் சல்லி (ஜாலர்) களைச்சுற்றிலும் தொங்கவிட்டுவைத்துள்ள வளப்பமானகுடைகளையுடையவர்கள்; வேறுபலர் நிலவொளிவீசுகின்ற முத்துக்களாலே நெருக்கமாக அமைக்கப்பட்டுள்ள குடைகளையுடையவர்கள். எ-று.

தரும மாதிநாற் பொருளெனுந் தாளது ஞான
கரும காண்டமாஞ் செவியது காட்சியைக் கடந்த
வொருமை யாம்பர மபரமா முணர்வெனுங் கண்ண
தருமை யாம்விதி முகத்தது நிடேதவா லதுவால்.

(இ-ள்.) (இவைகளுட் சோமசுந்தரப்பெருமான் குதிரைவீரராகத் திருவுருவங்கொண்டு எழுந்தருளிவரும் குதிரைஎப்படிப்பட்டதென்றால்), அறமுதலிய நான்குவிதமான புருடார்த்தங்களையே கால்களாகவுடையது; ஞானகாண்டமுங் கருமகாண்டமுமாகியகாதுகளையுடையது; பிரத்தியக்ஷப்பிரமாணத்திற்கு அப்பாற்பட்டு விளங்குகின்ற ஏகமாகிய பரஞானம் அபரஞானமென்னும் இரண்டுகண்களையுடையது; அருமையாகிய விதியென்னும் முகத்தையுடையது; விலக்கென்னும் வாலினையுடையது. எ-று. (சுரு)

தந்தி ரங்களாற் புறவணி தரித்தது விரித்த
மந்தி ரங்களாற் சதங்கைதார் மணிச்சிலம் பணிந்த
தந்த ரஞ்சுழல் சோமனு மருக்கனு மிதிக்குஞ்
சுந்த ரப்பதம் பொறைகொளத் தூங்கிரு புடைத்தால்.

(இ-ள்.) ஆகமங்களாலாக்கப்பட்ட புறவணிகளையுடையது; விசாலமான மந்திரங்களாற்செய்யப்பட்ட சதங்கைகளையும் கிங்கிணிமாலைகளையும் மணிச்சிலம்புகளையும் அணிந்துள்ளது; ஆகாயத்திலுலாவுகின்ற சந்திரனும் சூரியனுமாகிய மிதிக்கப்படுகிற அழகிய திருவடிச் சுமையைத்தாங்குதற்கு அமைக்கப்பட்டுள்ள அங்குபடிகளை இருபுறத்திலுமுடையது. எ-று.

விதி முன்னிற்பதும், நிடேதம் பின்னிற்பதுமாதலால், முறையே முகமென்றும் வாலென்றுங்கூறினர்.

தந்திரமென்பதை புராணேதிகாசாதி என்பாரும் உளர். (சுசு)

மாண்ட தாரகப் பிரமமாங் கலினம்வாய் கிழியப்
பூண்ட தாற்புறச் சமயமாம் பொருபடை முரிய
மூண்டு போரெதிர் விளைத்திகன் முடிப்பது முளரி
யாண்ட கோமுக மந்துரை யாகமே வியதால்.

(இ-ள்.) மாக்ஷிமைதங்கிய தாரசுப்பிரமமாகிய கடிவாளத்தை வாய்பிளக்கும் வண்ணம் தரித்துள்ளது; புறச்சமயமாகிய போர்செய்கின்ற சேனைகள்விலகியோடும்படி முயற்சியுடன் எதிர்த்துநின்று போர்புரிந்து பகையையழிப்பது; தாமரைமலரை வீடாகக்கொண்டிருக்கின்ற பிரமதேவனது முகங்களை இருப்பிடம் (லாயம்) ஆகக்கொண்டுள்ளது. எ-று. (ருரு)

அண்ட கோடிக ளனைத்துமோர் பிண்டமா வடுக்கி
யுண்ட நீரதா முதுகின்மே லுபநிடக் கலனை
கொண்ட வாலிய வைதிகப் புரவிமேற் கொண்டான்
றொண்டர் பாசவன் றொடரவிழ்த் திடவருஞ் சோதி.

(இ-ள்.) அநேகமான எல்லாவண்டங்களையும் ஒன்றாகச் சேர்த்தடுக்கப்பட்டுள்ளதாகிய தன்மையினை யுடையதாகக் காணப்படுகிற முதுகின்மேல் உபநிடதமாகிய கலனையை (ஜீனியை)க்கொண்டுள்ளது; அப்படிப்பட்ட மேற்கூறிய பொருள்களோடுவிளங்குகின்ற வேதமாகிய குதிரையின்மீது அன்பர்களது பாசமாகிய வலியபந்தத்தை யவிழ்க்கும்பொருட்டு (குருமூர்த்தமாக) எழுந்தருளிவருகிற சிவபெருமான் ஏறியருளினர்.

ஆன மந்திரக் கிழார்பொருட் டன்றியும் வென்றி
மீன வன்பிறப் பறுக்கவும் வார்கழல் வீக்கி
வான நாயக னேந்திய மறையுறை கழித்த
ஞான வாள்புற விருளையு நக்கிவா ளெறிப்ப.

(இ-ள்.) தன்னடிமையாகவுள்ள வாதவூரரென்னும் மந்திரியார்பொருட்டன்றியும், வெற்றிபொருந்திய பாண்டிமன்னனாகிய அரிமர்த்தனனது பிறப்பினையொழிக்கவும், வாரொடுபொருந்திய வீரகண்டையை வலதுகாலிலணிந்துதேவதேவன் தமதுகையிற்பிடித்துள்ள வேதமென்னும் உறையினின்று முருவியெடுக்கப்பட்ட ஞானவாளானது புறவிருளையொழித்து ஒளிவீசாநிற்பவும். எ-று. (ருஎ)

சாய்ந்த கொண்டையுந் திருமுடிச் சாத்தும்வாள் வைரம்
வேய்ந்த கண்டியுந் தொடிகளுங் குழைகளும் வினையைக்
காய்ந்த புண்டர நுதலும்வெண் கலிங்கமுங் காப்பு
மாய்ந்த தொண்டர்த மகம்பிரி யர்தழ கெறிப்ப.

(இ-ள்.) சாய்ந்த கொண்டையும், தலையின்மீது கட்டப்பட்ட ஆடையும், ஒளிபொருந்திய வைரக்கல்லிட்டிழைத்துள்ள மகரகண்டிகையும், தோள்வளைகளும், குண்டலங்களும், தீவினையை அழித்த திரிபுண்டரமணிந்துள்ள நெற்றியும், வெள்ளுடையும், திருவடி நிலையும், நினைக்கின்ற அடியவர்கள் உள்ளத்தை விட்டுவிலகாமல் அழகைச்செய்யவும். எ-று. (ருஅ)

பிறக்கு மாசையோர் மறந்துமிங் கணுகன்மின் பிறப்பை
மறக்கு மாசையோ ரிம்மென வம்மினன் பரைவேந்
தொறுக்கு நோய்களை வானென வொருவனும் பிறவி
யறுக்க வந்தன னென்பபோற் பரிச்சிலம் பலம்ப.

(இ-ள்.) இன்னம் பிறக்கவேண்டும் என்னும் இச்சையுள்ளவர்கள் மறந்தும் இங்கே வராதேயுங்கள்! இனிப்பிறத்தலை மறக்கும் இட்டத்தினையுடையவர்கள் விரைவாகவாருங்கள்! தன்னடியவனை அரசன் தண்டிக்கின்ற துன்பத்தை ஒழித்தற்குவருபவனாக சாக்கிட்டுக்கொண்டு உங்கள் பிறவியை அறுக்கவந்திருக்கின்றானென்று கூறினாற்போல குதிரையின்காலிலுள்ள சிலம்புகள் முழங்கவும். எ-று. (ருகூ)

கங்கை யைச்சடை முடியின்மேற் கரந்தனை யவள்போ
லெங்க டம்மையுங் காத்திடென் றிரந்துகா வேரி
துங்க பத்திரை யாதியா நதிகளுஞ் சூழப்
பொங்கி வீழ்வபோ லொலியலுங் கவரியும் புரள.

(இ-ள்.) சுவாமீ ! தாங்கள் கங்காதேவியைத் திருச்சடையின்மீது மறைத்து வைத்திருக்கின்றீர்; அதனைப்போல எங்களையும்வைத்துக்கொள்ளவேண்டும் எனத்தாழ்மையுடன் கேட்டுக்கொண்டு, காவேரி துங்கபத்திராமுதலிய ஆறுகளும் எம்பெருமானை சுற்றிலும் சூழ்ந்து பொங்கிவிழுந்தாற்போல வஸ்திரங்களும் சாமரங்களும் அசையவும்.

வாவி நாறிய வாலிதழ்த் தாமரை மலரோ
னாவி னுளுமை நாயக னுன்மறை பரியா
மேவி னுனெனத் தானொரு வெண்குடை யாகிப்
பாவி னுலென முடியின்மேற் பானிலாக் கால.

(இ-ள்.) தடாகத்தில் காணப்படுகிற நிர்மலமான இதழ்களையுடைய தாமரையை ஆசனமாகக்கொண்டுள்ள பிரமதேவனது நாவை இடமாகக்கொண்டு வாழுகின்ற கலைவாணியானவள், உமாதேவியின் நாயகராகிய சிவபெருமான் வேதமாகிய குதிரையின்மீதேறினுனென்று தானொரு வெள்ளைக்குடையாக உருவமாறிப் பரந்துநின்றாற்போல முடியின்மீது (பிடிக்கப்பட்ட) குடை பால்போன்ற நிலாவொளியை வீசவும். எ-று.

முறையி னோதிய புராணமூ வாறுநா மொழியு
மிறைவ னுமிவன் படைத்தளித் தழிப்பவ னிவனே
மறையெ லாமுறை யிடும்பரம் பொருளென வாய்விட்
டறையு மாறுபோ லியங்களீ ரொன்பது மார்ப்ப.

(இ-ள்.) முறையாகச் சொல்லப்பட்ட பதினெண்புராணங்களும், நம்மாற் சொல்லப்படுகிற இறைவனே இக்குதிரைவீரன்; இவனே படைத்துக்காத்தழிக்கின்றபரமேசுவரன்; இவனே வேதங்களெல்லாம் நித்தியமானவனென்று முறையிடுகின்ற பரவஸ்து என்று வாயைத்திறந்திரைந்து கூறினுற்போல பதினெண்வகை வாத்தியங்களு முழங்கவும். எ-று. (சஉ)

மிடைந்த மாயவாம் பரித்திரண் மேற்றிசை நோக்கி
நடந்த நாயக னுன்மறைப் புரவியு நாப்ப
ணடைந்த தாலெழுந் தூளிக ளண்டமுந் திசையும்
படர்ந்த போம்வழி யாதென மயங்கினுன் பரிதி.

(இ-ள்.) நெருங்கப்பட்ட தாவுகின்ற மாயக்குதிரைகளெல்லாம் மேற்குத்திக்கினைநோக்கி நடந்தன; கர்த்தாவான சோமசுந்தரப்பெருமானது நாலுவேதங்களாகியகுதிரையும் நடுவேசென்றது; அச்செல்லுகையாலுண்டான தூளிகள் அண்டத்திலும் திக்குகளிலும் படர்ந்தன; அதனுல் நாமெந்த வழியேபோவது என்று சூரியன் மயக்கமடைந்தனன். எ-று. (சரு)

பள்ள மாக்குவ திடரினைப் பள்ளத்தை மேடு
கொள்ள வாக்குவ பாரெலாம் விலாழிகொப் பளித்து
வெள்ள மாக்குவ தூளியால் வெள்ளத்தை வெறிதா
யுள்ள தாக்குவ புள்ளுவ வுருக்கொண்ட பரிமா.

(இ-ள்.) நரிகளாற் கொண்ட மாயரூபக்குதிரைகள் மேடுகளைபள்ளங்களாக்குகின்றன; பள்ளங்களைமேடுகளாகும்வண்ணம் செய்கின்றன; பூமிமுழுமையிலும் நுரை

நீராக் கக்கி வெள்ளமாகச்செய்கின்றன; புழுதியால் முன்கணத்திலுண்டான நுரைவெ ள்ளத்தை இல்லாது செய்கின்றன. எ-று. (சுச)

கொய்யு ளைப்பரி யெழுந்ததூள் கோப்பவான் கங்கை
வையை யொத்ததேழ் பசும்பரி செம்பரி மாவாச்
செய்த தொத்தது சிந்துரந் திசைக்கய முகத்துப்
பெய்த தொத்ததா லொத்தது பெரும்பகன் மாலை.

(இ-ள்.) கத்தரித்துவிடப்பட்ட புறமயிரினையுடைய குதிரைகளின் காற்குளம் பாற் கிளப்பிவிடப்பட்ட புழுதியினால், ஆகாயகங்கை வையையாற்றோ டொப்பாகியது. சூரியனது எழுகுதிரைகளும்செந்நிறத்தாற்செய்ததுபோலாயது. அப்பெரும்பொழுதா னது மாலைக்காலத்தை ஒத்து திக்குயானைகளுக்கு முகத்திற் சிந்துரவன்னம் எழுதியது போலாகியது. எ-று. (சுரு)

விளம்பு கின்றவச் சம்புவெம் பரித்திரண் மிதிக்குங்
குளம்பு கிண்டிய வெழுந்ததூள் குன்றிற கரிந்தோன்
வளம்பு குந்தடை வார்குர வழிபுரி வேள்விக்
களம்பு கைந்தெழு தோற்றமே யல்லது கடாதால்.

(இ-ள்.) சொல்லப்பட்ட அந்நரிகளாகிய வேகத்தோடுகூடிய குதிரைகளின், காற் குளம்புகளால் மிதிக்குந்தோறும் கிண்டிவிட்ட புழுதிகள் மேலேகிளம்பிச் செல் லுதல், மலைகளின் இறகுகளை அரிந்த இந்திரனது செல்வத்தை அடைந்து அநுபவிக்க வேண்டியவர்கள் பசுக்களைக்கொண்டு செய்கின்ற யாகசாலையிலுண்டாகின்ற புகைப் படலத்தைஅன்றி வேறே ஒன்றையும் ஒவ்வாது. எ-று. (சுசு)

மட்பு லந்திசை வான்புதை பூழியுண் மறைந்து
கொட்பு றும்பரி சதங்கைதா ரொலியினுங் குளிர்வான்
ஒட்பு றுங்குர லொலியினுஞ் செவியினிற் பிறிது
கட்பு லங்களாற் கண்டிலர் வழிவரக் கண்டோர்.

(இ-ள்.) மண்ணினிடத்தையும், திக்குக்களையும், ஆகாயத்தையும் மூடிக்கொள் ளுகின்ற புழுதியுள்மறைந்து கண்தெரியாமல் சுழலுகின்ற குதிரைகளை, சதங்கை ஓசை களாலேயும், கிங்கிணி ஓசையினாலேயும், குளிர்ச்சியையுடைய மேகமுந் தன்னினமெ ன்று விரும்பத்தக்க குரலொலியாலும் காதால் இவை குதிரைகள் வருதலாலுண்டா கிய ஓசை என்றுணர்ந்தார்களே யன்றிக் கண்ணாற்கண்டார்களில்லை. எ-று. (சுஎ)

கலிவிருத்தம்.

தரங்கமெறி முத்திவை விலாழியல தார்மா
விரங்குமொலி யல்லதிரை யேங்குமொலி யின்ன
துரங்கமல மற்றிவை சுரர்க்கரச னின்றும்
புரங்கொல விடுத்திட வரும்புணரி யென்பார்.

(இ-ள்.) கண்டவர்கள், இவைகள் அலைகள் சிதறுகின்ற முத்துக்களே; நுரைய ன்று. சிறுசதங்கையணிந்துள்ள குதிரைகளின் கனைப்பல்ல; அலைகள் ஒன்றோடொன்று மோதுகின்ற முழக்கம். இவைகள் குதிரைகளல்ல; தேவராஜன் இந்நாளிலும் இவ்வூரை அழிக்கும்படிவிட அதனால்வருகின்ற கடலே என்பார்கள். எ-று. (சுஅ)

இம்பருல குள்ளவல பண்டினைய பாய்மா
வும்பருல காளிபரி யேகொலது வொன்றே
வெம்பரிதி வெம்பரிகொ லேழுவைக ளேழும்
பைம்பரிகள் யாவினைய பாய்பரிக ளென்பார்.

(இ-ள்.) இக்குதிரைகள் முன்னே இவ்வுலகத்திலுள்ளனவல்ல. தேவலோகாதிபனாகிய இந்திரனதாகவிருக்குமோ? அவனுக்கிருப்பதெல்லா மொருகுதிரைதானே. உஷ்ணகிரணங்களையுடைய சூரியனதுவேகமான குதிரைகளோ? அவைகளுமேழுதானே; அவ்வேழும் பச்சைநிறந்தானே; வேறே எதிந்தக்குதிரைகள் என்றுகூறுவார்கள். எ-று.

வெம்பணிக ளைப்பொர வெகுண்டெழுவ தேயோ
வைம்புன லுடுத்தமுது பார்முதுகு கீறு
மும்பருல கைப்பொர வுருத்தெழுவ தேயோ
வம்பர முகட்டள வடிக்குர மழுத்தும்.

(இ-ள்.) இக்குதிரைகள், பசிய நீராற் சூழப்பட்ட பழைய இப்பூமியின் முதுகைக்கீறுவது கீழுலகிலுள்ள கொடிய நாகங்களோடு போர்புரிதற்குக் கோபித்தெழுவதோ? மேலேவானத்தின் உச்சிவரைக்கும் காலைத்தூக்கிக் குளம்பைவைத் தழுத்துவது தேவருலகத்தவரோடு போர்புரிதற்குத்தானோ? (ரு௦)

உத்தர திசைப்புரவி தெற்கடையு மாறு
மூத்தகைய தெற்குள வடக்கடையு மாறு
மித்தகை குடக்கொடு குணக்கடையு மாறுஞ்
சித்தர்விளை யாடலின் வெளிப்படுதல் செய்யா.

(இ-ள்.) வடக்குத்திக்கிலுள்ள குதிரை நேரேதெற்குத்திக்குக்குச் செல்வதும், தெற்குத்திக்கிலுள்ள குதிரை வடக்குத்திக்குக்குச்செல்வதும், இவ்வண்ணமே மேற்கொடு கிழக்கே செல்லுவதும், சித்தரது விளையாட்டைப்போலவே கண்களுக்குப் புலப்படவில்லை. எ-று. (ருக)

மறைமரபு சாலவரும் வன்னியிவை பொன்னித்
துறைவனுள முஞ்சுடு மிரும்பனை தொடுக்கு
மறவனுள முஞ்சுடு மமைச்சரை யொறுக்கு
மிறைவழுதி யுள்ளமு மினிச்சுடுவ தென்பார்.

(இ-ள்.) வேதத்திற் கூறப்பட்டுள்ள அசுவலக்ஷணத்திற்குச் சரியாகவுள்ள குதிரைகள் இவை ஆதலால், இவைகள் காவிரித்துறையினையுடைய சோழனது மனத்தையும்சுடும். பெரிய கட்டப்பட்ட பனைமாலையணிந்துள்ள சேரனது மனத்தையும் சுடும். முதன்மந்திரியாரைக் குதிரைகளின்பொருட்டு வருத்தப்படுத்துகிற அரசனாகிய பாண்டியனது மனத்தையும் இனிச் சுடும் என்று கூறுவார்கள். எ-று. (ருஉ)

முந்தையொரு மந்திரி பொருட்டரசன் முன்னா
ளந்தமி லனீகமொ டரும்பரியில் வந்தாங்
கிந்தமறை மந்திரி யிடும்பைதணி விப்பான்
வந்தனர்கொ லிப்பரி வரும்பொருந ரென்பார்.

(இ-ள்.) முன்னாளில், சாமந்தனென்னுஞ் சேனாபதியின்பொருட்டு பாண்டிய மன்னவனெதிரில் அளவற்ற சேனைகளுடனருமையான குதிரையின்மீதேறி மெய்க்காட்டிடும் வண்ணம் எழுந்தருளினாற்போல, இக்குதிரைகளின்மீது வருகின்றவீரர்கள் அந்தணராகிய இந்தமந்திரியின் துன்பத்தை யகற்றும்வண்ணம் வந்தார்களோ? என்று கூறுவார்கள். எ-று. (ருங)

காமனிவ னேகொலறு காலுழு கடப்பந்
தாமனிவ னேகொல்பொரு தாரகனை வென்றோன்
மாமனிவ னேகொன்மலை வன்சிற கரிந்த
நாமனிவ னேகொலென நாரியு ரயிர்த்தார்.

(இ-ள்.) அவ்வீரர்களைக்கண்டபெண்களிற்பலர், இவன்மன்மதன்றானோ? வண்டு கிண்டுகின்ற கடம்பமலர்மாலையணிந்த குமரக்கடவுளோ? போர்செய்த தாரகனைவென்ற சண்முகப்பெருமானது மாமனாகிய திருமாலோ? மலைகளின் பெரியஇறகுகளை அறுத்த இந்திரனோவென்று சந்தேகங்கொண்டார்கள். எ-று. (ருச)

அடுத்திடுவர் கண்ணிறைய வண்ணனழ கெல்லா
மடுத்திடுவர் கைவளையை மாலைவிலை யென்னக்
கொடுத்திடுவர் மாலைகள் கொடுத்திடுதி யன்றே
லெடுத்திடுதி யெங்கள்வளை யெங்கள்கையி லென்பார்.

(இ-ள்.) சிலபெண்கள் அருகிற்செல்லுவார்கள்; இறைவனது திருவழகுமுழுமையுங் கண்ணாற்பருகுவார்கள்; தமது கைவளையல்களை அவர்தோண்மாலைக்கு விலையாக அளிப்பார்கள்; நீ எங்கட்கு மாலைகளைத்தா; இன்றேல், எங்கள் வளையல்களை எங்கள் கையிலெடுத்திடுதி என்பார்கள். எ-று. (ருரு)

ஏந்தன்முடி மாலைமலர் சிந்தின வெடுத்துக்
கூந்தலின் மிலைந்துமதன் வாகைமலர் கொள்வார்
சாந்தணைய சிந்தின தனந்தடவி யண்ணற்
றோய்ந்தளவி லாமகிழ் துளும்பினவ ராவார்.

(இ-ள்.) சிலபெண்கள் அத்தலைவரது திருமுடியிலுள்ளமலர்மாலைகளினின்றும் சிந்தப்பட்ட புஷ்பங்களை எடுத்து தங்கள்கூந்தலி லணிந்து, மன்மதனைவென்று சூடிய வெற்றிமாலையாக் கருதுவார்கள். வேறுசிலர் அத்தலைவரதுதிருமேனியினின்றும் உதிர்ந்த சந்தனத்தை எடுத்துத்தனபாரத்திற்பூசி இறைவனை அணைந்து அளவற்ற சந்தோஷத்தை அடைந்தவர்களைப்போல ஆவார்கள். எ-று. (ருசு)

பொட்டழகன் மார்பிலிடு போர்வைகவ சப்பே
ரிட்டதுமெய் நம்முயிர் தடுத்தமையி னென்பார்
கட்டழகன் மாலையது கண்ணியென வோதப்
பட்டதுமெய் நம்முயிர் படுத்தமையி னென்பார்.

(இ-ள்.) சிலபெண்கள் நமதுயிரை உள்ளேபோகவொட்டாமல் தடுத்தமையால் அழகிய பொட்டினையுடைய இவர் மார்பிலணிந்துள்ள குப்பாயத்துக்குக் கவசம் என்றுபேரிட்டிருத்தல் உண்மையோ? என்பார்கள். அன்றியும், வேறுசிலர் நமதுயிரை அகப்படுத்திக்கொண்டமையால் இவரது மலர்மாலையைக் கண்ணியென்று கூறுதலுண்மையேயாகும் என்பார்கள். எ-று. (ருஎ)

கலிநிலைத்துறை.

இச்சை யால்வடி வெடுப்பவ னிந்திர சால
விச்சை காட்டுவா னெனப்பரி வீரனி வுலகைப்
பிச்ச தேற்றிட மயக்கியுங் காமனிற் பெரிது
நச்சு மாதரை மயக்கியு மிங்ஙன நடந்தான்.

(இ-ள்.) இச்சையால் திருமேனிகொள்ளும் இறைவர் இந்திரசாலமென்னும் வித்தையைக் காட்டுபவனைப்போல, குதிரைவீரனாகி இவ்வுலகத்தை பைத்தியமடையும் வண்ணம் மயக்கியும், மன்மதனைவிடப் பெண்கள் மிகுதியாக விரும்பும்வண்ணம் மயக்கியும், இவ்வண்ணமாக மதுரையைநோக்கி எழுந்தருளினார். எ-று. (ருஅ)

தாவு கந்துக மிந்திய மொத்தன சயமா
வாவு திண்கண மள்ளர்கண் மனங்களை யொத்தார்

மேவி யம்மனந் தொறுமிடை யிடாதுநின் றியக்கு
மாவி யொத்தது நடுவரு மருமறைப் பரியே.

(இ-ள்) தாவாநின்ற குதிரைகள் இந்திரியங்களை ஒத்தன. சயம்பொருந்திய அக்குதிரைகளை ஏறி நடாத்துகின்ற வல்லமைசாலிகளான வீரர்கள் மனங்களை ஒத்தார்கள். நடுவில்வராநின்ற வேதக்குதிரையானது அந்த மனங்கள்தோறும் இடைவிடாமல் இருந்து அம்மனங்களை இயக்குகின்ற ஆத்மாவை ஒத்தது. எ-று.

இயக்குதல்-அசைத்தல். (ருக)

துன்னு மின்னிய முழக்கமுந் துரகத வொலியு
மன்ன வீரர்வா யரவமுந் திசைசெவி டடைப்பக்
கன்னி மாமதில் சூழ்கடி நகர்க்கரைக் காத
மென்ன வெய்தினன் மறைப்பரிப் பாகனவ் வெல்லை.

(இ-ள்.) வேதப்புரவியினராகிய கடவுள்நெருங்கிய இனியமேளங்களின் முழக்கங்களும், குதிரைகளின் கனைப்பும், அந்தக்குதிரைவீரர்களின் வாயில்நின்றும்உண்டாகின்ற சத்தமும், திக்குகளைச் செவிடாக்கும் வண்ணம் அழியாதபெரியமதிலால் சூழப்பெற்ற காவலோடுகூடிய மதுராநகரத்திற்கு அரைக்காததூரத்தில் எழுந்தருளுகின்றனர். அந்தச்சமயத்தில். எ-று. (சுO)

கலிவிருத்தம்.

கண்டவர் கடிதோடிக் கடிநகர் குறுகிக்கார்
விண்டவழ் மணிமாடத் தடுசிறை மிடைகின்ற
கொண்டலி னனையார்முன் குறுகினர் மலர்செவ்வி
முண்டக வதனத்தார் முகிழ்நகை யினர்சொல்வார்.

(இ-ள்.) இவ்வண்ணம் வருதலைக்கண்டவர்கள் விரைந்தோடிவந்து, ஆகாயத்திலுலாவுகின்ற மேகங்கள் தவழுகின்ற அழகிய மாளிகையிற்கொல்லத்தக்க சிறைச்சாலையிலிருக்கின்ற மேகம்போன்ற பரோபகாரத்தினையுடைய மணிவாசகப்பெருமானது எதிரிற்சென்று விரியத்தக்க பருவத்தினையுடைய, கட்டவிழ்ந்த தாமரைமலரைப்போல என்றுகூறும் வண்ணம் விளங்குகின்ற முகத்தினையுடையவர்களாய்ப் புன்னகைப்புடன் கூறுகின்றார்கள். எ-று. (சுக)

மன்னவ னெறிகோடா மந்திர ரடலேறே
பின்னிற வெழுமுந்நீர்ப் பரவைகள் வருமாபோற்
றுன்னின வருகின்ற துரகத முளவெல்லாம்
பொன்னெயின் மணிவாயில் புகுவன விதுபோதில்.

(இ-ள்.) அரசனது நீதியினின்றும் மாறிநடவாத மந்திரியர்களிற் பலம்பொருந்திய சிங்கம்போல்பவரே! பலநிறமான எழுவகைக்கடல்களும் வந்தாற்போல நெருங்கினவாகக் குதிரைகளெல்லாம் வருகின்றன. இப்பொழுது அவைகள் இந்நகரத்தின் பொன்மயமான அழகியவாசலை அடைகின்றன. எ-று. (சுஉ)

ஒல்லையி லதுமன்னற் குரையுமி னெனமேரு
வில்லவ னருள்பெற்ற வேதியர் பெருமான்போய்ச்
செல்லது தளையிட்ட திருமக னருகெய்தி
மல்லணி திணிதோளாய் வருவன பரியென்றார்.

(இ-ள்.) தேவரீரதனைச்சென்று விரைவாகமன்னவனுக்குத்தெரிவிக்கலாம் என்றார்கள்; உடனே மேருமலையாகிய வில்லினையுடைய சிவபெருமான் திருவருளைப்பெற்ற அந்தணர்குலதிலகர்சென்று மேகத்தைவிலங்கிட்டுச் சிறையிலடைத்த பாண்டியன

தருகிலடைந்து, மற்போரையே அழகாகக்கொண்டுள்ள தோள்களையுடைய மன்னவனே! குதிரைகள் வருகின்றன என்றுகூறியருளினர். எ-று. (சுங)

மருத்தென வருகின்ற மாக்கட லெனமன்னன்
றிருத்தணி கடகப்பூண் டெறித்திட வுடல்வீங்கப்
பெருத்தெழு மகிழ்தூங்கிப் பெருவிலை மணியார
மருத்திகொள் கலைநல்கி யமைச்சரை மகிழ்வித்தான்.

(இ-ள்.) குதிரைகளாகிய கடல்கள் காற்றைப்போல வேகமாக வருகின்றன வென்றுகூறுதலும், அரிமர்த்தனமன்னன் சீர்திருத்தப்பட்ட கடகமென்னும் தோளணி தெறிக்கும்வண்ணம் உடல்பூரித்து மிகுதியாக உண்டாகின்ற சந்தோஷத்தினையுடையவனாகி அதிகவிலையினையுடைய இரதனகண்டிகையும் ஆசையைத்தருகின்ற வஸ்திரங்களையும் அளித்து, மந்திரியாரைச் சந்தோஷிப்பித்தான். எ-று. (சுச)

ஏந்தரி யணைநீங்கி யெழுதிய தலைவாயிற்
போந்தரு கொளிர்மாடம் புகுந்தரி யணைமேவிக்
காந்தளின் விரனல்லார் கவரிகள் புடைவீச
வாய்ந்தவர் புறஞ்சூழவடுபரி வரவேற்பான்.

(இ-ள்.) சிங்கங்கள் சுமக்கும் ஆசனத்தைவிட்டெழுந்து சித்திரங்களெழுதியுள்ள தலைவாசலை அடைந்து பக்கத்தில் விளங்குகின்ற மாளிகையின்மீதிலேறி சிங்காதனத்திலிருந்து, காந்தள்மலர்போன்ற கைகளையுடைய பெண்கள் அருகில்நின்று சாமரைவிசிற, மந்திரிமார்கள் அருகிற்சூழ்ந்திருக்க, கொலைத்தொழிலுக்குரிய குதிரைகளின் வருகையை எதிர் ஏற்கும்பொருட்டிருந்த அம்மன்னவன். எ-று. (சுரு)

பரனருள் விளையாடல் காட்டிய பரிவெள்ளம்
வருவன சிறுகாலந் தாழ்த்தலு மதிவேந்தர்
புரவலன் மனம்வெள்கிப் பொய்யிது வெனவுள்கி
யருகணை யுழையோரைக் குறித்தன னழல்கண்ணான்.

(இ-ள்.) சிவபெருமான் தமது திருவருட்டன்மையால் விளையாட்டுக்காட்டிய குதிரைப்படைகள் வருதற்கு சற்றுநாழிகை தாமதமாதலும், சந்திரவமிசத்தனாகிய பாண்டியன் மனத்தில் வெட்கங்கொண்டு இதுபொய் என்று நினைத்து தீப்பொறிபறக்குங் கண்களையுடையவனாகி அருகில் நிற்பவர்களைப் பார்த்தான். எ-று. (சுசு)

மன்னவ னினைவாற்றன் மந்திரர் பெருமானைத்
துன்னினர் கொடுபோயத் தோள்வலி மறமள்ள
ருன்னரி தெனவெஞ்சா தொறுத்தன ரவரோர்தந்
தென்னவர் தமையுள்கிச் சேவடி துதிசெய்வார்.

(இ-ள்.) பாண்டியனது அபிப்பிராயப்படி முதன்மந்திரியாரை, தோள்வலிமையினையும் அஞ்சாமையினையும் உடைய காவலாளிகள் சூழ்ந்து அழைத்துக்கொண்டு சென்று எண்ணுதற்குக்கூட முடியாதவண்ணம் தண்டித்தார்கள், உடனே ஞானவீரராகிய மணிவாசகப்பெருமானும் தமதிறைவராகிய சோமசுந்தரபாண்டியரை நினைத்து அவரது திருவடிகளைத்துதித்தனர். எ-று. (சுஎ)

கலிநிலைத்துறை.

பூவார் முளரிப் புத்தே ளறியா நெறிதந்தாய்
பாவார் தென்சொற் பனுவன் மாலைப் பணிகொண்டாய்
தேவா தேவர்க் கரசே சிறியே னுறுதுன்ப
மாவா வென்னா வஞ்சே லென்னா யறனேயோ.

(இ-ள்) அழகுபொருந்திய தாமரைமலரை ஆதனமாகவுடைய பிரமதேவனும் அறியாத ஞானமார்க்கத்தை அடியேனுக்கு உபதேசித்தருளினீர். பின்னர் யாப்பொடுகூடிய தமிழ்ப்பாடலாகியமாலையை ஏற்றுக்கொண்டீர். தேவரே! தேவர்க்கெல்லாந் தேவராகியமஹாதேவரே! சிறியேனாகிய அடியேனடைகின்ற இத்துன்பத்தைக்கண்டு ஐயோ வென்றாவது, பயப்படாதே என்றாவது கூறியருளினீரில்லை. இது தருமந்தானோ. எ-று. (சுஅ)

நெஞ்சே யுரையே செயலே யெல்லா நினவென்றாய்
வஞ்சே போலு மஃதே யின்று வாராயோ
பஞ்சே ரடியாள் பாகா கூடற் பரமேட்டி
யஞ்சே லென்ன விதுவோ வருளுக் கழகையா.

(இ-ள்.) செம்பஞ்சுச்சாயம் ஊட்டப்பட்ட கால்களையுடைய உமாபாகரே! மதுராநகரிலுள்ள சிவபெருமானே! (தேவரீர் அடியேனை ஆட்கொண்ட அந்நாளில்) நின்மனதும் நின்வாக்கும் நின்செய்கைகளும் உன்னதல்ல; என்னதே என்று திருவாய்மலர்ந்தருளினீர்;அதைஆயுங்கால் வஞ்சனைதானோ? வஞ்சனையாலின்று எழுந்தருளமாட்டீரோ? தேவரீரது திருவருட்டன்மைக்கு இப்படிப்பட்ட துன்பகாலத்தில் பயப்படாதே என்று கூறாதிருப்பது அழகுதானோ? ஐயனே! எ-று.

வஞ்சம் என்னுமொழி ஈறுகெட்டு வஞ்சென்றாயது. (சுக)

காவி நேருங் கண்டா நாயிற் கடையான
பாவி யேனைப் பொருளாக் கொண்டென் பணிகொண்டா
யாவி யோடிவ் வுடலு நினதே யன்றோவின்
றேவி வாளா திருந்தால் யாரென் னுடையானே.

(இ-ள்.) நீலோற்பலமலரையொத்த ஸ்ரீகண்டத்தை உடையவரே! நாயினும் இழிந்த பாவியான அடியேனை ஒருபொருளாகமதித்து அடிமையாக்கி அடியேன்செய்யுந்தொண்டுகளையுங் கைக்கொண்டருளினீர். உயிருடனே உடலும்தேவீரதல்லவோ? இந்நாளில்விலகிச் சும்மாவிருந்தால் என்னை அடிமையாக உடையவரே! வேறேயாவர் காப்பவர்கள்? எ-று. (எ0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றிரங் கிரங்கு மன்ப ரிருசெவி யூடே யெங்குங்
கன்றிளஞ் செவியி னல்லான் கனைகுர லோசை போல
வொன்றிய சின்னங் காளங் காகள மொலிக்கு மோசை
வென்றிகொள் புரவிச் செந்தூ டிசையெலாம் விழுங்கக் கண்டார்.

(இ-ள்.) என்றிவ்வாறாக வேண்டிக்கொள்ளுதலுடன் இரக்கங்கொண்டுகின்ற அடியவரதுகாதில்,வருந்துகின்ற கன்றிற்கு தாய்ப்பசுவின் கெட்டியானகுரலோசையைப்போல பொருந்திய திருச்சின்னம், காளம், காகளமுதலியவை முழங்குமோசையும், வெற்றிபொருந்திய குதிரையின் வருகையாலுண்டான செந்நிறமான புழுதியும், திக்குகளையெல்லாம் மூடிக்கொள்ளுதலைக்கண்டனர். எ-று. (எக)

வழுதியு மறிந்து வாத வூரரை விளித்து வந்த
தொழுகுல வமைச்சர் தம்பாற் றுகடவி ரன்பு கூர்ந்தெம்
பழுதறு கரும நும்போற் பரிக்குநர் யாரை யென்னு
வெழுதரு மகிழ்ச்சி மேற்கொண் டுளவளா யிருக்கு மெல்லை.

(இ-ள்.) பாண்டியனும் குதிரைகள் வருவதையுணர்ந்து, வாதபுரேசரை அழைத்து, தரமழைத்தமையால் வந்த அந்தணர்குலத்திற்பிறந்த மந்திரியாரிடத்தில் களங்க

மற்ற அன்புள்ளவனாகி, எமது குற்றமற்ற காரியங்களையெல்லாம் உங்களைப்போலயாவர் செய்பவரொன்று மேலும் மேலும் உண்டாகின்ற சந்தோஷத்தால் கலந்துபேசிக்கொண்டிருந்தனன்; அச்சமயத்தில். எ-று. (௭௨)

பரயிருட் படலங் கீறிப் பல்கதிர் பரப்பித் தோன்றுஞ்
சேயிளம் பரிதி வானோ ரனையராய்ச் சிறந்த காட்சி
மேயின பாக ரோடும் விலாழியாற் பரவை செய்யும்
வாயின வாகி வந்த மாயவாம் பரிக ளெல்லாம்.

(இ-ள்.) மாயக்குதிரைகளனைத்தும் நுரைநீரினாற் கடலைப்போன்ற பிரவாகத்தை உண்டாக்குகின்ற வாயினையுடையனவாகி, பரவிய இருட்படலத்தைக் கிழித்துக்கொண்டு பல கிரணக்கதிர்களை விரித்து உதிக்கின்ற செந்நிறம்பொருந்திய இளஞ்சூரியர்கள் எண்ணிறந்தவர்கள் உதித்தார்களென்றுகூறத்தக்க பாகர்களுடன்வந்தன.

வண்டுமூழ் தாரி னான்றன் மரபின்மன் னவரு முன்னாட்
கண்டறி யாத காட்சிக் கவனவாம் பரியை நோக்கி
யண்டர்நா யகன்போ னாமு மாயிரங் கண்பெற் றாலு
முண்டமை யாவென் றுள்ளக் குறிப்பொடு முவகை பூத்தான்.

(இ-ள்.) வண்டுகள்மொய்த்தெழுகின்ற பூமாலையணிந்த தோள்களையுடைய பாண்டியன், தனது முன்னோர்களுங்கண்டறியாத தாவுகின்ற வேகமானகுதிரைப்படைகளைப்பார்த்து, தேவராஜனைப்போல நாமும் ஆயிரங்கண்பெற்றிருந்தாலும் இக்குதிரைகளைக் காண்டற்கு அவைகள்போதாவென்று தன்மனதிலுத்தேசித்து மகிழ்வடைந்தனன்.

தானென மகிழ்ச்சி யென்னத் தலைதடு மாறி வேந்தன்
மானவெம் பரிமேல் வந்த வயவரை வியந்து மிக்கா
ரானவ ரிவருள் யாரென் றமைச்சரை வினவ வையா
யானது வறியே னென்றார் யாரையு மறிய வல்லார்.

(இ-ள்.) அம்மன்னவன் தனக்கும் மகிழ்ச்சிக்கும் அபேதமாகி தன்மந்திரியாரைநோக்கி, பெரியவேகமான குதிரைகளின்மீது வந்துள்ள வீரர்களைக்கண்டு ஆச்சரியமுள்ளவனாய் இவர்களித்தனைபேர்களுக்குள் தலைமையானவர் யார் என்றுகேட்டனன். அதற்கு எல்லாரையும் இவர் இன்னார் இன்னார் என்று அறியவல்ல மந்திரியார் அதனை நானறியேன் என்றனர். எ-று. (௭௫)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அண்டமெலா மாதார மாகத் தாங்கு மானந்தத் தனிச்சோதி யண்டந் தாங்குஞ், சண்டமறைப் பரிதனக்கா தார மாகித் தரிக்கவொரு காலத்து மசைவி லாத, புண்டரிகத் தாளசையப் பாச நீக்கும் புனைகரத்தாற் பரிபூண்ட பாசம் பற்றிக், கொண்டரச னெதிர்போந்து மன்னா வெங்கள் குதிரையேற் றஞ்சிறிது காண்டி யென்றார்.

(இ-ள்.) அண்டங்களுக்கெல்லாம் ஆதாரமாகநின்று தாங்குகின்ற இன்பமேவடிவமான ஒப்பற்ற ஜோதிரூபரான சிவபெருமான், அண்டங்களைத்தாங்குகின்ற வேகமான வேதக்குதிரையானது தனக்கு ஆதாரமாகநின்று தன்னைச்சுமக்க, எப்பொழுதுமழியாத திருவடித்தாமரைகள் உதைத்தோட்டுதலாலசைய, அடியவர்களது பாசங்களை ஒழிக்கின்ற வாகுவலயம்முதலியவைகளா லலங்கரிக்கப்பெற்ற திருக்கரத்தினால் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு, அரிமர்த்தனமன்னவனெதிரில்வந்து மன்னனே! எங்கள் குதிரை ஏற்றத்தைக் கொஞ்சம் பார்ப்பீராக என்றனர். எ-று. (௭௬)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இசைத்தவைங் கதியுஞ் சாரி யொன்பதிற் றிரட்டி யாதி
விசித்திர விகற்புந் தோன்ற வேந்தனு மவையு மன்றித்
திசைப்புலத் தவரு மேலைத் தேவரு மருள மேற்கொண்
டசைத்தன ரசைவற் றெல்லா வுலகமு மசைக்க வல்லார்.

(இ-ள்.) அசுவசாஸ்திரத்திற்கூறப்பட்ட ஐந்துவிதமான போக்குகளும், பதினெட்டுவிதமான சாரிகை (சுற்றல்) யாதி விசித்திரமான விகற்பங்களும் தோன்ற, பாண்டியனும் அவன்சபையிலுள்ளவர்களுமன்றி, அட்டதிக்கினிடங்களில் உள்ளவர்களும், விண்ணுலகவாசிகளானதேவர்களும்(இதென்னவென்று) மருளும்வண்ணம், சகலலோகங்களையும் தானசையாது இருந்து அசைக்கவல்ல பெருமான் குதிரையின்மீதிருந்துகொண்டு முறையாக நடத்திக் காட்டினர். எ-று. (எஎ)

ஆண்டகை யவர்போ னின்ற வடுகணத் தவருந் தத்தங்
காண்டகு புரவி யெல்லா நடத்தினர் காட்டக் கண்டு
பாண்டிய னவரை நோக்கி நுங்களிற் பதியாந் தன்மை
பூண்டவர் யாவ ரென்று னிவரென்றார் புரவி வீரர்.

(இ-ள்.) தலைவராகிய சிவபெருமான் வேதக்குதிரையை ஓட்டிக்காட்டியவுடனே, போரிற் பகைவரை கொல்லுகிறகணங்களும், அவரவர்களது பார்க்கத்தக்ககுதிரைகளைநடத்திக்காட்டுதலைப்பார்த்து, பாண்டியன் அவ்வீரர்களை நோக்கி, (குதிரைவீரர்காள்) உங்களுக்குள் தலைவராக உள்ளவர் யாவரென்றுகேட்டனன்; அதற்கு அவர்கள் இவர்தானென்று கூறினார்கள். எ-று. (எஅ)

சுட்டுதற் கரிய சோதி சுருதிவாம் புரவி யோடு
மட்டவிழ் தாரி னான்முன் வருதலுங் கருணை நாட்டம்
பட்டுள மயங்கித் தன்னை மறந்தெழீஇப் பாண்டி வேந்தன்
றட்டவிழ் கமலச் செங்கை தலைமிசைக் கூப்பி நின்றான்.

(இ-ள்.) உடனே அளவைகளாலளந்தறிதற்கரிய கடவுள், வேதமாகிய தாவுகின்ற குதிரையினுடனே தேனுடன் விரிகின்ற மலர்மாலையணிந்த பாண்டியனதெதிரில் வருதலும், இறைவனது கிருபா நோக்கம்பட்டு மனமயங்கித் தன்னைமறந்து எழுந்து அரிமர்த்தனன் முறுக்கவிழ்ந்த தாமரைமலர்போன்ற கரங்களை தலையின் மீதே குவித்துக்கொண்டு நின்றனன். எ-று. (எகூ)

பின்னவ னாணை யாலே மறைப்புண்ட பெருநீர்க் கூடன்
மன்னவ னறிவு தோன்ற வின்றொரு வயமா வீரன்
றன்னைநாங் கண்டெ ழுந்து தடங்கரங் கூப்பி நின்ற
தென்னெனத் தவிசின் மீள விருந்திட நாணி நின்றான்.

(இ-ள்.) பின்னும் அக்கடவுளது கட்டளையால் மிகுதியான நீரால் சூழப்பட்ட மதுரா நகரத்தின் அரசனாகிய அரிமர்த்தனனுக்குப் பழைய அறிவு உண்டாதலும், நாம் இன்றொரு குதிரை வீரனைக்கண்டெழுந்து பெரிய கைகளைக் குவித்து வணங்கி நின்ற காரணம் என்னவெனவெட்கங் கொண்டு முன்னிருந்த வாசனத்திற்பின்னுமிராமல் நின்றுகொண்டிருந்தனன். எ-று. (அ௦)

நிற்கின்றான் முகத்தை நோக்கி நேர்நின்ற மறைமா வீரர்
பொற்குன்றம் புயத்தா யுன்றன் பொருளெலாங் கொண்டு போந்துன்
சொற்குன்றா வமைச்சன் றானே நமக்குநஞ் சூழ னீங்கா
மற்குன்று நமர்க்குமார வழங்கினான் வழங்க லாலே.

(இ-ள்.) அவ்வாறு நிற்கின்ற மன்னவனது முகத்தை வேதப்புரவியின் தலைவராகியவிமலர் நோக்கி, பொன்மலைபோன்ற தோள்களையுடையாய்! உனது சொல்லுக்கு மீறி நடவாத இம்மந்திரியார், உனதுபொருளையெல்லாங் கொண்டுவந்து நமக்கும், நம்மிடத்தைவிட்டு விலகாத நம்மவர்களுக்கும் மிகவும் கொடுத்தனர்; அவ்வாறு கொடுத்தமையால். எ-று. (அக)

வானவர் தமக்கே யன்றி மனிதருக் கிசையத் தக்க
வானவன் றறிஞ ரிட்ட விலைவரம் பகன்ற நூலின்
மானமும் ளனவாய் நல்ல வாசிக ளுனக்கு வந்த
வூனமில் பரியுா விற்கும் வாணிக முறைப்பக் கேட்டி.

(இ-ள்.) தேவர்களுக்கல்லாமல் மனிதர்களுக்குப் பொருந்தத்தக்கவையல்லாதவையும், விவேகிகளான் மதிக்கப்பட்ட விலைகளுக்கு மேற்பட்டனவாயும், நூல்களிற் கூறப்படுகின்ற பெருமிதங்களையுடையனவாயுமுள்ள குதிரைகள் உனக்காக வந்திருக்கின்றன. இனி குற்றமற்ற குதிரைகளை விற்கின்ற வியாபார முறைமையைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. எ-று. (அஉ)

இன்னவாம் பரிக ளென்பா லின்றுநீ கயிறு மாறி
நின்னவாக் கொள்ளு நீரா னின்னவாம் பரியே நாளை
யென்னவா யிருந்த வேனு மெனக்குமுன் றனக்குங் கொண்டு
மன்னவா கரும மில்லை பரிவிலை வழக்கீ தென்றார்.

(இ-ள்.) இந்தத் தாவும்குதிரைகளை என்னிடத்தினின்றும் கயிறுமாறி உன்னதாக வாங்கிக்கொள்ளுதலால் அவைகளனைத்தும் நின்னதேயாம். மன்னவனே! நாளை இக்குதிரைகள் எவ்வாறாயினும் எனக்கும் உனக்கும் இக்குதிரைகளின் விஷயமாக யாதொரு விவகாரமும் கிடையாது. இதுவே குதிரைவியாபாரத்தின் முறைமையென்று கூறியருளினர். எ-று. (அங)

அப்பொழு தரசன் றானு மகமகிழ்ந் ததற்கு நேர்ந்தெம்
மெய்ப்புக ழமைச்சர் தம்மின் மேம்படு வாத வூர
ரொப்பருந் திறத்த ராகி யும்மிடை நட்பான் மிக்க
துப்புர வுடைய ரானா ரெனநனி சொல்லி னானே.

(இ-ள்.) உடனே மன்னவனும் மனமகிழ்வுடன் அதற்குச் சம்மதித்து, எமது மெய்மையான கீர்த்தியினையுடைய மந்திரிமார்களுட்சிறந்த வாதவூரர் ஒப்பற்ற தன்மையினராய், உங்களொடு பழகும்பழக்கத்தால் உங்கள் சுவபாவாதிகளில் நல்லனுபவமுடையராயினர் என்று பலதரம் கூறினன். எ-று. (அச)

உரகத வாரந் தோற்று துயர்மறைப் பரிமேல் வந்தார்
மரகத நிறத்து நிம்ப மாலைதாழ் மார்பி னற்குக்
குரகதங் கயிறு மாறிக் கொடுப்பவர் பொதுமை யாய
துரகத விலக்க ணங்கள் சொல்லுவான் றொடங்கி னாரே.

(இ-ள்.) உயர்ந்த வேதாசுவத்தின்மீது சர்ப்பாபரணமானது விளங்காமல் ஏறிவந்துள்ள, மரகதம்போன்ற நிறத்தினையுடைய வேப்பமாலை தொங்குகின்ற மார்பினையுடைய மன்னவனுக்குக் குதிரையைக் கயிறுமாறிக்கொடுக்கின்ற சிவபெருமான் பொதுவாகிய அசுவலக்ஷணங்களைத் திருவாய்மலர்ந்தருளத்தொடங்கினர். எ-று. (அரு)

காயும்வேன் மன்ன வோரிக் கடும்பரி யமையம் வந்தான்
ஞாயிலுந் தாண்டிச் செல்லு நாட்டமு நுழையாச் சால

வாயிலு நுழையுங் கண்ட வெளியெலாம் வழியாச் செல்லுந்
தீயவெம் பசிவந் துற்றாற் றின்னாத வெனினுந் தின்னும்.

(இ-ள்.) பகைவர்களைக்கொல்லுகின்ற வேற்படையையுடைய மன்னவனே! இவ்வேகமான குதிரைகள் சமயம் வந்தபொழுது மதிலுறுப்புக்களையுந் தாண்டிச்செல்லும்; கண்ணும் நுழையாத சன்னல் வாயில்களிலும் நுழையும்; காணப்பட்டவழிகளையெல்லாம் வழியாகக்கொண்டு செல்லாநிற்கும்; கொடிய வெவ்விய பசிவந்தவுடன் தின்னாதவைகளாயினுந் தின்னும் என்று உணர்வாயாக. எ-று.

ஓரிக்கமெம்பரி – ஓரியாகியகம்பரியென வியாஜத்தா லுண்மைகூறினர். (அசு)

கலிவிருத்தம்.

பொருவில்சீ ரிலக்கணப் புரவி யொன்றுதா
னொருவன திடைவதிந் துறையி னல்லன
மருவுறுந் திருமகண் மல்லற் செல்வமும்
பெருகுறுங் கீர்த்திகள் புல்கும் பெற்றியால்.

(இ-ள்.) ஒருவனிடத்தில் ஒப்பற்ற சிறப்புவாய்ந்த இலக்கணங்களமைந்த ஓர் குதிரையிருக்குமானால் அவனுக்கு லக்ஷ்மிகடாக்ஷமும், மிகுதியான செல்வமும் விருத்தியாகும். கீர்த்திகளும் முறைப்படி யுண்டாகும். எ-று. (அஎ)

நெய்த்திடு மாந்தளிர் நிறத்த நாவின
வைத்திடு குளம்புக ளுயர்ந்த வார்ந்துநே
ரொத்திடு மெயிற்றின வுரமுங் கண்டமும்
பைத்திடு மராப்படம் போன்ற பாடலம்.

(இ-ள்.) இவைகளுள், மிருதுவான மாந்தளிர்போன்ற நாவினையுடையனவும், தூக்கிவைக்கப்பட்ட குளம்புகளையுடையனவும், நீண்டு நேராய் சமானமாயிருக்கின்ற பற்களையுடையனவும், மார்புங்கழுத்தும் பசிய பாம்பின் படத்தைப்போன்றனவுமாகிய குதிரைகளே பாடலமென்னும் பெயருடையன. எ-று. (அஅ)

அகலிய நுதலின வாய்ந்த குஞ்சிபோ
னிகரறு கொய்யுளை நிறமொன் றாயின
புகரறு கோணமூன் றாகிப் பொற்புறு
முகமுடை யனவலி மொய்கொள் கோடகம்.

(இ-ள்.) அகன்ற நெற்றியினவும், சீப்பால் வாரப்பட்ட தலைரோமத்தைப்போல் ஒன்றோடொன்று பிடிக்காமல் ஒரேநிறமானவைகளாயுமுள்ள புறமயிரினையுடையனவும், குற்றமற்ற முக்கோணவடிவமாய் அழகுபொருந்தியமுகத்தினையுடையனவுமாகிய குதிரைகளே பலம்பொருந்திய கோடகம் என்னும் பெயரினையுடையன. எ-று. (அக)

முட்டிய சமரிடை முகத்தில் வாளினால்
வெட்டினு மெதிர்ப்பதாய்க் குரங்கு வேங்கைதோல்
பட்டிமை நரியரி சரபம் பாய்முய
லொட்டிய கதியின விவுளி யென்பவே.

(இ-ள்.) எதிர்க்கப்பட்ட போர்முகத்தில் வாட்படையான் முகத்தில் வெட்டினாலும், பகைவரோடெதிர்ப்பதாய் குரங்கையும், வேங்கையையும், யானையையும், வஞ்சனையினையுடைய நரியையும், சிங்கத்தையும், சர்ப்பத்தையும், தாவுகின்றமுயலினையும் போலச் செல்லும்கதியினையுடையனவாகிய குதிரைகளே இவுளிகளென்னும் பெயரினையுடையன. எ-று. (கூ0)

உன்னத நீளமுண் டாகிச் சங்குவெண்
கன்னலின் வாலிய விலாழி கால்வதாய்ப்
பின்னமா கியதனி வன்னம் பெற்றுமை
வன்னமு முடையது வன்னி யாவதே.

(இ-ள்.) மிகவும் நீண்டவையாய், சங்கைப்போலவும் வெள்ளிய கரும்பைப் போலவும் நுரைநீரைக் கக்குவதாய்; கறுப்புவர்ணத்துடன் வேறொரு நிறம்பெற்றதாய் விளங்குங்குதிரைகளே வன்னியென்னும் பெயரினையுடையன. எ-று. (௬௧)

திண்ணிதரு கழுத்தினிற் சிறந்த தெய்வத
மணியுள தாகியெண் மங்க லத்ததா
யணிதரு பஞ்சகல் யாண முள்ளதாய்க்
குணிதரு நீரது குதிரை யாவதே.

(இ-ள்.) அழுத்தமானகண்டத்தில் சிறந்த தேவமணியென்னும் சுழியுள்ளன வாய், அட்டமங்கலங்களையுடையனவாய், அலங்கரிக்கத்தக்க பஞ்சகல்யாணலக்ஷணமு ள்ளதாய் எண்ணப்படுங்குதிரைகளே குதிரைகளென்னும்பெயரினை யுடையன. எ-று.

குங்குமங் கருப்புரங் கொழுந்திண் கார்அகிற்
பங்கமான் மதமெனக் கமழும் பாலதாய்ச்
சங்கமு மேகமுஞ் சரப முங்கொடுஞ்
சிங்கமும் போலொலி செய்வ தாம்பரி.

(இ-ள்.) குங்குமத்தையும், கர்ப்பூரத்தையும், கொழிய திண்ணிய கரிய அகி ற்குழம்பையும், புனுகையும்போல மணம்வீசுந்தன்மையினையுடையனவாய்; சங்கத்தை யும் மேகத்தையும் சர்பத்தையும் கொடியசிங்கத்தையும்போல கனைக்குந்தன்மையின வாகிய குதிரைகளே பரிகளென்னும் பெயரினையுடையன. எ-று. (௬௩)

நாலுகால் களுங்கடைந் தெடுத்து நாட்டினாற்
போல்வதாய்க் கொட்புறும் போது சுற்றுதீக்
கோலையொப் பாகிமேற் கொண்ட சேவகன்
காலினு ளடங்குவ தாகுங் கந்துகம்.

(இ-ள்.) நான்கு கால்களும் கடைந்தெடுத்துவைத்தாற்போன்று விளங்குவன வாய், சுற்றும்பொழுது கொள்ளிவட்டம்போல்வனவாய், மேலிருக்கும் சேவகனது கா லுக்குள் அடங்கிநிற்பனவாயுள்ள குதிரைகளே கந்துகமென்னும் பெயரினையுடையன.

அரணமுந் துருக்கமு மாறுந் தாண்டிடு
முரணது வாகியிம் முற்றி லக்கணப்
புரணமெல் லர்நிறை புரவி போந்தன
விரணவே லாய்வய தெட்டுச் சென்றவால்.

(இ-ள்.) கோட்டைகளையும், துருக்கங்களையும், ஆறுகளையும் தாண்டத்தக்க வல்லமையினையுடையனவாய் இவ்வெல்லாவித இலக்கணங்களும் நிறைந்துள்ள குதி ரைகள் வந்திருக்கின்றன. போருக்குரியவேலினையுடையாய்! இவைகளுக்கு வயதெட் டாயின. எ-று. (௬௫)

பகைத்திற முருக்குமிப் பரிகண் மன்னநீ
யுகைத்திடத் தக்கவென் றோதி வேதநூற்
சிகைத்தனிச் சேவகர் திரும்பித் தம்மனோர்
முகத்தினை நோக்கினர் மொய்த்த வீரரும்.

(இ-ள்.) சத்துருத்தன்மையை யொழிக்கின்ற இக்குதிரைகள் மன்னவ! நீயே நிடத்தத்தக்கவைகளே யென்று கூறி, வேதசாத்திரத்தின் உச்சியிலுள்ளபரம்பொருளாகிய குதிரைவீரர் திரும்பி தம்மவர்களது முகத்தைப்பார்த்தனர். உடனே அங்கு நெருங்கிநின்ற அவ்வீரர்களும். எ-று (கசு)

வாம்பரி மறைக்கெலாம் வரம்பு காட்டுவ
தாம்படி கண்டவ ரறிவும் பிற்படப்
போம்படி முடுக்கினர் புரவி யாவையும்
வேம்பணி தோளினன் வியப்ப மெய்தியே.

(இ-ள்.) தாவுகின்ற அக்குதிரைகளையெல்லாம் வேதங்களுக்கெல்லாம் எல்லை காட்டுந்தன்மையைப்போல, பார்த்தவர்களறிவும் பின்னிட்டுப்போம்படி விரைந்தோட்டினார்கள். அவ்வாறோடுங்குதிரைகளனைத்தையும் பார்த்து வேப்பமாலையணிந்த தோள்களையுடைய பாண்டியன் ஆச்சரியங்கொண்டு. எ-று. (கள)

ஆத்தராய் மருங்குறை யமைச்சர் யாரையும்
பார்த்தசை யாமுடி யசைத்துப் பைப்பயப்
பூத்தவா ணகையொடு மகிழ்ச்சி பொங்கினன்
றீர்ந்தனு நடத்தினன் றெய்வ மாவினை.

(இ-ள்.) நண்பர்களாக அருகிலிருக்கும் மந்திரிகளைப்பார்த்து அசையாத மகுடத்தையசைத்து மெல்லெனஉண்டாகிய வெள்ளியநகைப்புடன் மிகுதியானமகிழ்ச்சியுடையனனன். உடனேசிவபெருமானும் தமதுதெய்வக்குதிரையை நடத்தியருளினர்.

இருவகைச் சாரியு மெதிர்ந்து வட்டமாய்
வருவழி ஞெகிழிபோன் மறுகெ லாமொரு
துரகத மேநிலை நின்ற தோற்றமொத்
தொருவற நடத்தின ரொருக ணத்தினே.

(இ-ள்.) இடசாரி வலசாரியென்னும் இருவகையான சாரிகளும் நடத்தி வட்டமாயோடும்பொழுது எரிகொள்ளியைச் சுற்றினாற்போல வீதிமுழுமையும் ஒரே குதிரையே நிற்குந்தன்மையைப்போல குற்றமறக்காணும்படி ஒரு க்ஷணப்பொழுதில் நடத்திக்காட்டினர். எ-று. (கக)

இந்நிலை யலமரு மிவுளி மேலொரு
மின்னிலை வேலினன் வினவத் தங்கையின்
மன்னிய கங்கணம் விடுத்து மாநகர்
தன்னிலை காட்டிய தன்மை யொத்ததே.

(இ-ள்.) இவ்வாறு சுழலுங் குதிரை யெவ்வண்ணமிருந்ததெனின், முன்னொரு காலத்தில் மின்னல்போன்ற ஒளியினையும்,இலைபோன்ற தகட்டுவடிவத்தினையுமுடைய வேற்படையையுடைய வொருபாண்டியன் இவ்வூருக்கெவ்வண்ணம் எல்லைதோலுவதென்று கேட்டதற்கு, சித்தர்கோலங்கொண்டுவந்த சிவபெருமானர் தமது திருக்கரத்திலணிந்திருந்த சர்ப்பகங்கணத்தைவிட்டு அப்பெரியநகரத்தின் எல்லையளவைக் காட்டிய தன்மையொத்துளது. எ-று. (௪00)

பன்னிற முடையவாம் பரியும் வீதியுட்
பின்னிய வாவென்ப் பின்னி வட்டமாய்த்
தென்னிகர் மதுரையாந் தையல் கையணி
துன்னிய பன்மணித் தொடியும் போன்றவே.

(இ-ள்.) பல நிறங்களை யுடைய குதிரைக ளனைத்தும் வீதியில் பின்னலிட்டு வைத்ததென்று சொல்லும்படி ஒன்றோடொன்று கலந்து வட்டவடிவமாய் ஒப்பற்ற மதுரையென்னும் பெண்ணினது கையி லழகாகப் பொருந்தியுள்ள பல மணிவளையல்களையும் ஒத்தன. எ-று. (கOக)

இந்திய னுதலினு ரிடித்த பொற்சுணஞ்
சிந்திய மறுகிடை நடக்குந் திண்பரிப்
பந்தியி னெழுந்ததூள் சுவணப் பாரின்மா
வுந்திய வெழுந்தபொற் பூழி யொத்ததே.

(இ-ள்.) இளம்பிறையொத்த நெற்றியினையுடைய பெண்கள் இடித்தபொற் சுண்ணம் சிந்திக்கிடக்கின்ற வீதியின்வழியே செல்லுகின்ற திண்ணிய குதிரைகளின் வரிசைகளினின்றும் எழுந்தபுழுதி, பொன்னுட்டில் குதிரையோட்டியபோது எழுந்த புழுதியையொத்தது. எ-று. (கOஉ)

தேவரு மனிதருந் திருந்து கூடலார்
யாவரு முவப்புற விவுளி விட்டுமண்
காவலன் முன்குறீஇக் கருணை மாக்கடன்
மாவரு திறனெலாம் வகுத்துத் தேற்றுமால்.

(இ-ள்.) தேவர்களும், மனிதர்களும், செவ்வியமதுரையிலுள்ளவர்களனைவரும், மகிழும்படிகுதிரையை நடத்திக்காட்டி, மன்னவனருகில்வந்து கிருபையாற்கடல்போல்பவராகிய கடவுள் அக்குதிரைகளின் உற்பத்திகளையெல்லாம் முறைப்படியே கூறியருளுவாராயினர். எ-று. (கOரு)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வளங்கொள்காம் போச மிப்பரி யிம்மா மந்தர மிந்தவாம் புரவி
விளங்குகாந் தார மிக்குரங் குளைவான் மீகமிக் கந்துகஞ் சிந்து
துளங்கில்பாஞ் சால மிக்கன வட்டந் துளுவமிக் குதிரையித் துரகங்
களங்கமி லிமயப் பருப்பத மிந்தக் கற்கியின் மண்டலங் கலிங்கம்.

(இ-ள்.) இப் பரியென்னும் பேருள்ளகுதிரை வளப்பம்பொருந்திய காம்போசம் என்னும் நாட்டிற்பிறந்தது. இம்மாவென்னும் அது மந்தரகிரியிற்பிறந்தது. இந்தத் தாவுகின்ற புரவி பிரகாசிக்கின்ற காந்தாரநாட்டிற்பிறந்தது. இந்தக்குரங்குளை வான்மீகநாட்டிற் பிறந்தது. இக் கந்துகம் சிந்துநதிக்கரையிற்பிறந்தது. இக்கனவட்டம் கெடுதலில்லாத பாஞ்சாலநாட்டிற்பிறந்தது இந்தக்குதிரை துளுவநாட்டிற்பிறந்தது. இந்த துரகம் களங்கமற்ற இமயமலையிற்பிறந்தது. இக் கற்கிக்கூட்டங்கள் கலிங்கநாட்டிற் பிறந்தன. எ-று. (கOச)

ஆரிய மிந்தப் பாடல மிந்த வச்சுவங் கூர்ச்சர மிந்தச்
சீரியதுரங்கங் கேகைய மிந்தத் திறலுறு கொய்யுளை யவனம்
வேரியம் பணைசூழ் மக்கமிக் கொக்கு விரிபொழில் வனுயுச மிந்தப்
போரிய லிவுளி பல்லவ மிந்தப் பொலம்புனை தார்நெடும் பரிமா.

(இ-ள்.) இந்தப் பாடலம் ஆரியாவர்த்தநாட்டிற் பிறந்தது. இவ் வசுவங்கள் கூர்ச்சரநாட்டிற்பிறந்தன. இந்தச்சிறப்புவாய்ந்த துரங்கங்கள் கேகயநாட்டிற்பிறந்தன. இவ் வெற்றிபொருந்திய கொய்யுளைகள் யவனராச்சியத்திற்பிறந்தன. இக்கொக்குகள் தேன் பொருந்திய மலர்களையுடைய வயல்கள்சூழ்ந்த மக்கநாட்டிற்பிறந்தன. இந்தப்போரிலக்கணமமைந்த இவுளிகள் விரிந்தசோலையினையுடைய வனுயுசதேசத்திற்பிறந்தன. இந்த

பொன்மயமான சிறுசதங்கைகளாலலங்கரிக்கப்பெற்றுள்ள நெடியபாய்மாக்கள் பல்லவ தேசத்திற் பிறந்தன. எ-று. (௧௦௫)

கற்றவர் புகழ்சவ் வீரமிக் கோரங் கன்னிமா ராட்டமில் வன்னி
கொற்றவர் பயில்வா சந்திக மிந்தக் கோடகங் கர்டகங் கன்ன
லுற்றகாஸ் மீர மிவ்வய மிந்த வுத்தம கோணமா ளவமிவ்
வெற்றிசேர் குந்தங் கந்தர மிந்த விறல்புனை யரிசவு ராட்டம்.

(இ-ள்.) இந்தக்கோரங்கள் வித்வான்கள் புகழுகின்ற சவ்வீரநாட்டிற்பிறந்தன. இந்தவன்னிகள் அழியாதமாராட்டதேயத்திற்பிறந்தன. இந்தக்கோடகங்கள் அரசர்கள் வாழ்கின்ற வாசந்திகநாட்டிற் பிறந்தன. இவ்வயங்கள் கரும்புகள் மிகுதியாகப் பயிராகின்ற காஸ்மீரநாட்டிற் பிறந்தன. இந்த உத்தமமான கோணங்கள் மாளவநாட்டிற்பிறந்தன. இந்த வெற்றிபொருந்தியகுந்தங்கள் கந்தரமென்னும் இடத்திற் பிறந்தன. இந்த ஜயம்வாய்ந்த அரிகள் சவுராட்டிரநாட்டிற் பிறந்தன. எ-று. (௧௦௬)

விரிபொழிற் சாலி வேயிமிரு கிள்ளை வேறுதீ வாந்தர மிந்தத்
துரகத மிந்தக் குரகதங் கொண்டல் சூழ்குருக் கேத்திர மின்ன
புரவுபல் வேறு தேயமு முள்ள பரியெலா மிவன்றரு பொருளின்
விரவிய நசையாற் கொணர்ந்திவர் வந்தார் வேந்தகே ளிந்தவாம் பரியுள்.

(இ-ள்.) இந்தக்கிள்ளைகள் விசாலமான சாலிவேயென்னும் நாட்டிற்பிறந்தன. இந்தத்துரகதங்கள் வேறு தீவாந்தரங்களிற் பிறந்தன. இந்தக்குரகதங்கள் மேகங்கள் வந்து சூழ்கின்ற குருக்கேத்திரத்திற்பிறந்தன. இவைகள்புகழத்தக்க வேறு பலதேயங்களிற் பிறந்தன. இவ்விதமான பலதேயத்துக் குதிரைகளையெல்லாம் இவன்கொடுத்த பொன்னிற்பொருந்திய விருப்பத்தால் இவர்கள்கொண்டுவந்தார்கள். மன்னவனே! கேட்பாயாக: இந்ததாவுகின்றகுதிரைகளுக்குள். எ-று. (௧௦௭)

வெண்ணிறஞ் சிவப்புப் பொன்னிறங் கறுப்பும் வேறற விரவிய நான்கு
வண்ணமுள் ளனவும் வேறுவே றுய மரபுமை வண்ணமும் வந்த
வெண்ணிய விவற்றின் சிறப்பிலக் கணத்தை யியம்புதுங் கேளென விகல்கா
யண்ணலங் களிற்றுற் கருமறைப் பரிமே லழகியா ரடைவுற விரிப்பார்.

(இ-ள்.) வெண்மைநிறம், சிவப்புநிறம், பொன்நிறம், கறுப்புநிறம், வேறுபாடில்லாமல்கலந்துள்ள நான்குநிறமுள்ளனவற்றையும், இவையன்றி வேறேவேறே உள்ள வரசுகளும், பஞ்சவன்னங்களும் உடையன. இவைகளின் சிறப்பிலக்கணங்களைச் சொல்லுகின்றோங் கேளென்று, பகைவர்களைக்கொல்லுகின்ற தெய்வீகம்பொருந்திய யானைப் படைகளையுடைய பாண்டியனுக்கு வேதாசுவத்தின்மீது எழுந்தருளிவந்துள்ள சிவபெருமானார் முறையாகக்கூறுநின்றனர். எ-று. (௧௦௮)

வெள்ளிநித் திலம்பால் சந்திரன் சங்கு வெண்பனி போல்வது வெள்ளைத்
துள்ளிய புரவி மாதுளம் போது சுகிர்ந்தசெம் பஞ்சியின் குழம்பிற்
றெள்ளிய நிறத்த செம்பரி மாமை சிறைக்குயில் வண்டுகார் முகில்போ
லொள்ளிய கரிய பரியெரி யழலா னுரோசனை நிறத்தபொற் பரியே.

(இ-ள்.) வெள்ளியும்-முத்தும்-பாலும் - சந்திரனும் - சங்கும் - வெண்பனியும் போன்றுள்ள நிறமே வெள்ளைக்குதிரைக்கு. மாதுளம்பூ, மணமுள்ள செம்பஞ்சிக்குழம்பு என்னும் இவைகளின் தெளிந்த நிறத்தினையுடைய குதிரையே செந்நிறக்குதிரை கரியமேகம். இறகினையுடைய குயில்வண்டு மேகம் என்னும் இவைகளின் நிறங்களையுடையவைகளே கரியகுதிரைகள். பற்றிஎரிகின்ற தீ, பசுவின் உரோசனை என்னும் இவைகளின் நிறமுள்ளவைகளே பொன்வண்ணமானகுதிரைகள். எ-று. (௧௦௯)

தெரிதர வகுத்த விந்நிற நான்குஞ் செறிந்தது மிச்சிர மிதன்பே
ருரை செய்வர் முகமார் புச்சிவால் காலென் றுரைத்தவெட் டுறுப்பினும்வெ
விரவிய தட்ட மங்கலந் தலைவால் வியனுர மென்றவிம் மூன்று [ண்மை
மொருவிய வுறுப்போ ரைந்திலும் வெள்ளை யுள்ளது பஞ்சகல் யாணி.

(இ-ள்.) நீ அறியும்வண்ணம் வகுத்துக்கூறின இந்நாலுநிறங்களு மொன்றோ டொன்று கலந்தநிறமுள்ள குதிரை மிச்சிரமென்னுநிறமுள்ள குதிரை என்றுகூறுவார்கள். முகம், மார்பு, உச்சி, வால், கால் என்றுரைத்த எட்டு உறுப்புக்களிலும் வெண்ணிறம்பொருந்தினகுதிரையே அட்டமங்கலமென்னும்பேருடையது. அன்றித் தலையும் வாலும் பெரியமார்புமாகிய இடங்கள் மூன்றுந் தவிரவுள்ள மற்றைய ஐந்திடங்களிலும் வெண்ணிறமுள்ள குதிரையே பஞ்சகல்யாணி என்றுகூறுவது. எ-று. (கக0)

அணிகிளர் கழுத்தில் வலஞ்சுழித் திருந்தா லறிந்தவ ரதனையே தெய்வ
மணியென விசைப்பர் முகந்தலை நாசி மார்பமிந் நான்குமிவ் விரண்டு
பணிதரு சுழியு நுதன்மேற் பின்னைப் பக்கமு மொவ்வொரு சுழியுந்
துணிதர விருப்ப திலக்கண முளதிச் சுழியில திலக்கண வழுவே.

(இ-ள்.) அழகுவிளங்குகின்ற கழுத்தில் ஒருசுழிவலஞ்சுழியாக சுழித்திருந்தால் அசுவ இலக்கணமுணர்ந்தவர்க ளதனைத்தான் தேவமணி என்றுகூறுவார்கள். முகமும்-தலையும்-மூக்கும்-மார்பும் ஆகிய இந்நாலிடத்திலும் இரண்டு இரண்டாகப்பதியப்பட்டசுழிகளும், நெற்றியினடுவிலும், பின்புறத்திலும் ஒவ்வொருசுழிகளும் ஒளியுண்டாம் வண்ணம் இருப்பது இலக்கணமுள்ளது. இச்சுழிகளில்லாதவை இலக்கணத்தவறுண்டயன. எ-று. (கசக)

பிரிவுற வுரத்தி லைஞ்சுழி யுளது பேர்சிரீ வற்சமா நுதலி
லிருசுழி யாதன் முச்சுழி யாத லிருக்கினு நன்றது வன்றே
லொருவற நான்கு சுழிவலம் புரியா யுள்ளது நல்லது வன்றி
யிருசுழி முன்னங் கால்களின் மூலத் திருக்கினு நல்லதென் றிசைப்பார்.

(இ-ள்.) பிரிவுபொருந்தும்வண்ணம் மார்பிலைந்துசுழிகளையுடையது ஆமானல் அச்சுழிக்கு ஸ்ரீவத்ஸம் என்றுபெயர். நெற்றியில் இருசுழியாவது முச்சுழியாவது இருந்தாலும் நல்லது. அதில்லாதுபோனுல், நீங்காமல் நாலுவலஞ்சுழியுள்ளது நல்லது. அல்லது இரண்டுசுழிகள் முன்னங்கால்களிலாவது பிர்ஷ்டத்தினடியிலாவது இருந்தால் நல்லது என்றுகூறுவார்கள். எ-று. (கசஉ)

களநடு விரட்டைச் சுழியுடைப் பரிதன் கருத்தனுக் கறமிடி காட்டு
மளவறு துன்ப மரணமுண் டாக்கு மவைகணைக் காலுள வாகி
லுளபயந் துன்ப நிகளபந் தனமே லுதடுமுற் காலடி கபோலம்
வளர்முழந் தாளிந் நான்கினுஞ் சுழிகண் மன்னினுந் தலைவனை வதைக்கும்.

(இ-ள்.) கழுத்தின்நடுவி லிரட்டைச்சுழியுள்ள குதிரை தன்னெஜமானுக்கு மிகவும் தரித்திரத்தையுண்டாக்கும். அவ்விரட்டைச்சுழிகளே கணைக்காலிலிருக்குமானுல் அளவற்றதுன்பமும், மரணமும் தன்னிறைவனுக் குண்டாக்கும் மேலுதட்டிற் சுழி இருக்குமானுல் தன்தலைவனுக்கு பயத்தையும் துன்பத்தையும் விலங்குபூணுதலையுமுண்டாக்கும். இதுவன்றி, முன்னங்காலடிகளிலும் கபோலங்களிலும் வளர்கிறமுழங்கால்களிலும் ஆகியநாலிடங்களிலும் சுழிகளிருந்தாலும் அதை உடைய தலைவனை மரணத்துக்குள்ளாக்கும். (கசரு)

இச்சுழி யுடைய புரவிபந் தியில்யாத் திருக்கினும் பழுதிவை கிடக்க [ல்
வச்சமில் பரிக்குப் பிராயநா லெட்டா மவத்தைப்த் தாகுமொவ் வொன்றி

வைச்சது மூன்று வருடமு மிரண்டு மதியமும் பன்னிரு நாளு
நிச்சயித் தளந்தா ரின்னமு மொருசார் நிகழ்த்திடு மிலக்கண மதுகேள்.

(இ-ள்.) இவ்விலக்கணமற்ற சுழிகளையுடைய குதிரைகளை இலக்கணமுடையமற்றைக்குதிரைகளைக்கட்டியிருக்கின்றவரிசையில் கட்டியிருந்தாலும் குற்றமேயாம். இவைகள்நிற்க, பயமற்ற குதிரைகளுக்கு வயது முப்பத்திரண்டாம். அவஸ்தைகள் பத்தாம். அவைகளும் ஒவ்வோரவஸ்தைகளுக்கு மூன்றுவருஷமும், இரண்டுமாதமும், பன்னிரண்டுநாளும் என உத்தேசித்துத் தீர்மானித்திருக்கின்றனர். இதுவன்றி, வேறொருவிதமாகச் சொல்லப்படுகிற இலக்கணமும் உண்டு, அவைகளையும் சொல்லுகின்றேன் கேட்பாயாக. எ-று. (ககச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எவ்வண்ண பேதமிருந் திருந்தாலும் வெள்ளைகலந் திருந்த தானு
லவ்வண்ணப் பரிநன்று கரும்புரவிக் ககடேனு மகன்மார் பேனுஞ்
செவ்வண்ண மிருக்கினது சயமுளதப் படிவெண்மை சேர்ந்தா லந்த
மைவண்ணப் பரியின்பேர் வாருணமாஞ் சயங்கொடுக்கு மாற்றார் போரில்.

(இ-ள்.) எந்தவிதமானபேதங்களிருந்தாலும் வெண்ணிறம் கலந்திருக்குமாயின் அந்தக்குதிரை நல்லதேயாம். கருங்குதிரைக்கு வயிறேனும் அகன்றமார்பேனும் செந்நிறம் உளதாயிருக்குமானால் அது வெற்றியினையுடையதாம். அவ்வண்ணமே வெண்ணிறம்பொருந்தி யிருந்தால் அந்தக் கருநிறக்குதிரையின் பெயர்வாருணம் என்பதாம். அது பகைவர்களைப் போரில் வெல்லும். எ-று. (ககரு)

மகவளிக்கும் பிடர்வெளுப்பு மகிழ்வளிக்கு முரவெளுப்பு மணித்தார் கண்டத், தகவெளுப்புப் பொருள்கொடுக்கு முகவெளுப்புச் சயங்கொடுக்கு மதன்பின் பக்கத், தகவெளுப்புச் சுகம்பயக்கு மிடவெளுப்புச் சந்தானந் தழைக்குஞ் செல்வ, மிகவளர்க்குந் தனம்பலதா னியநல்கும் வலப்புறத்து வெள்ளை மாதோ.

(இ-ள்.) பிடரியில் வெளுப்புள்ள குதிரை தன்னெஜமானனுக்கு புத்திரபாக்யத்தைக்கொடுக்கும். மார்பில்வெண்ணிறமுடையது சந்தோஷத்தைக்கொடுக்கும். அழகிய சிறுசதங்கையணிந்துள்ள கழுத்தில் விசாலமான வெளுப்பு இருக்குமானால் திரவியத்தைக்கொடுக்கும். முகத்தில்வெளுப்பு இருக்குமானால் வெற்றியைக்கொடுக்கும். அதன் பின்பக்கத்தில் வெளுப்பு இருக்குமானால் சுகத்தைக்கொடுக்கும். இடதுபுறத்தில் வெளுப்பு இருந்தால் புத்திரவிர்த்தியுண்டாகும். வலதுபுறத்தில் வெளுப்பு இருந்தால் மிகுதியானசெல்வத்தையும் தனத்தையும் பலவகைதான்யங்களையும் மேலுமேலும் விர்த்தியாக அளிக்கும். எ-று. (ககசு)

நற்புறம்வான் முகமூன்றும் வெளுத்தபரி வென்றிதரு நாபி தொட்டு
முற்புறமெ லாம்பரிதி யெனச்சிவந்து மதியெனப்பின் முழுதும் வெள்கும்
பொற்புடைய வயப்பரிக்குப் பகல்விசய மதியெனமுற் புறம்பு வெள்கிப்
பிற்புறமெல் லாங்கதிர்போற் சிவந்தபரிக் கிராவிசயம் பெருக்கு மன்றே.

(இ-ள்.) நல்லமுதுகும் வாலும் முகமுமாகிய மூன்றும் வெளுத்தகுதிரை வெற்றியைத்தரும். நாபிஸ்தானம்தொட்டு முன்புறத்தில் உயர்ந்தசூரியனைப்போல சிவந்து பின்புறத்தில் சந்திரனைப்போல வெளுத்த அழகுடைய வெற்றிபொருந்திய குதிரைக்கு பகல்வெற்றியாம். சந்திரனைப்போல முன்புறம்வெளுத்து பின்புறமெலாம் சூரியனைப்போல சிவந்துள்ள குதிரைக்கு இராத்திரியில் வெற்றியதிகமாம். எ-று. (ககஎ)

வந்தனவா லிவ்விரண்டு வகைப்பரியும் புரவியடி வைத்தா லொத்த
பந்தெனவு நின்றாலோ மலையெனவு மொலித்தாலோ பகடு சீறும்
வெந்தறுக ணரியெனவும் வேகத்தாற் காற்றெனவு மிதிக்குங் கூத்தாற்
சந்தநட மகனெனவு நடக்கிலரி களிறெனவுந் தகைய தாகி.

(இ-ள்.) இராவெற்றியையும் பகல்வெற்றியையும் தரத்தக்க இருவகையான குதிரைகளும் வந்திருக்கின்றன. இக்குதிரைகள் காலைச்சேர்த்துவைக்குங்கால் பந்தைப்போலவும், நிற்குங்கால் மலையைப் போலவும், கனைக்குங்கால் யானையைக்கண்டு கோபிக்கின்ற வெவ்விய அஞ்சாமையினையுடைய சிங்கத்தைப்போலவும், ஓடுங்கால் வேகத்தில் வாயுவைப்போலவும், நடிக்கு நடனத்தால் அழகிய நாடகியைப்போலவும், நடக்குங்கால் சிங்கத்தைப்போலவும், யானையைப்போலவும் கூறத்தக்கதன்மையினையுடையனவாய். எ-று. (ககஅ)

குலமகள்போற் கவிழ்முகமுங் கருநெய்த லெனக்கண்ணுங் கொண்டு கார்
னிலவியசீர் வண்ணமுங்கார் நெய்தலெனக் கடிமணமு நிறைந்துநாற்ற[போ
மலரகில்சந் தெரிமணிப்பூ ணலங்கரிக்கி லாறுத மகிழ்ச்சி யெய்தி
யிலகுவதுத் தமவாசி யென்றுரைப்பர் பரிவேத மெல்லை கண்டோர்.

(இ-ள்.) நற்குலத்திற்பிறந்த ஒழுக்கமுடைய பெண்ணைப்போல கவிழ்ந்தமுகமும், கருநெய்தல்மலர்போன்ற கண்ணும், பொருந்திவிளங்குகின்ற மேகத்தைப்போல கரிய சிறப்புவாய்ந்த வன்னமும், கருநெய்தல்மலரைப்போல விளங்குகின்ற வாசனை பொருந்தி நல்லமணம்பொருந்திய புஷ்பங்களாலும் சந்தனங்களாலும் ஒளிபொருந்திய மணிகளாலும் அலங்காரம்செய்தால் நீங்காதசந்தோஷத்தையடைந்துவிளங்குவது உத்தமமான குதிரையென்று அசுவவேதசாஸ்திரத்தின் கரையைக்கண்டவர்கள் சொல்லாநிற்பார்கள். எ-று. (ககக)

நூறுவிர லுத்தமவாம் பரிக்குயர்வீ ரெட்டுவிர னூறு நீக்கி
கூறுவிரன் மத்திமவாம் பரிக்கறுபத் தொன்றதமக் குதிரைக் கென்ப
வீறில்புக ழாய்பொருந ரிப்பரியைப் பூசனஞ்செய் திறைஞ்சிப் பாச
மாறுவரா லெனமணித்தார் சதங்கைசிலம் பணிவித்து மதிக்கோ மாறன்.

(இ-ள்.) அழியாப்புகழையுடைய மன்னவ! உத்தமமான குதிரைக்கு உயரம் நூறுவிரலளவாம் மத்திமமான குதிரைக்கு எண்பத்திநாலங்குலஉயரமாம். அதமமான குதிரைகளுடல் அறுபத்தோரங்குல உயரமாம் என்றுகூறுவார்கள். வீரர்கள் இக்குதிரைகளை பூஜைசெய்து வணங்கி கயிறுமாறுவார்களென்று கூறுதலும், சந்திரவம்சத்திற் பிறந்த பாண்டியமன்னன் அக்குதிரைகளுக்கு மணிகளிழைத்த கிங்கிணிமாலைகளையும் சதங்கைகளையும் சிலம்புகளையும் அணிவித்து. எ-று. (கஉ0)

கொத்தவிழ்தார்நறுஞ்சாந்தங்கொண்டுசெழும்புகைதீபங்கொடுத்துப்பூசை
பத்திமையாற் செய்திறைஞ்சி யெதிர்நிற்ப வாலவாய்ப் பரனை நோக்கிக்
கைத்தலந்தஞ் சிரமுகிழ்த்து வாழியெனப் பரிகொடுத்தான் கயிறு மாறி
முத்தொழிலின் மூவராய் மூவர்க்குந் தெரியாத முக்கண் மூர்த்தி.

(இ-ள்.) கொத்தாக விரியப்பட்ட மலராற்கட்டப்பட்ட மாலையும் நல்லசந்தனமும் சாத்தி செழுமையான தூபதீபங்காட்டி பத்தியுடனே பூசைசெய்து வணங்கி எதிரில் நின்றவுடனே, மதுரையின்கண் எழுந்தருளியிருக்கிற பரமேசுவரனைப்பார்த்து கையைத் தனதுதலையின்மீது குவித்துக்கொண்டு வாழியென்றுகூறி, முத்தொழின்முறைமையின் மூவராய் அம்மூவர்களாலும் அறிதற்குக்கூடாத திரிலோசனரான சிவபெருமான் கயிறுமாறி கொடுத்தனர். எ-று. (கஉக)

### மேற்படி வேறு.

உவநிடக் கலனை வாசி யொன்றலா னின்ற மாயக்
கவனவாம் புரவி யெல்லாங் கொடுத்திடக் கவர்ந்து வீறு
தவனனில் விளங்குந் தென்னன் றன்பெருங் கோயி லுய்ப்பப்
பவனமுங் கடலும் போலக் கொண்டுபோய்ப் பந்தி சேர்த்தார்.

(இ-ள்.) தானேறிவந்த உபநிடதமாகிய கலனையையுடைய குதிரை ஒன்றுதவிர மற்றைய மாயாரூபமான வேகத்தோடுகூடிய குதிரைகளையெல்லாங்கொடுத்துவிடவும் அவைகளையெல்லாம் பெற்றுக்கொண்டு பெருமிதத்தாற் சூரியனைவிட விளங்காநின்ற பாண்டியன் தனதுபெரிய அரண்மனைக்கனுப்ப, காற்றையுங்கடலையும்போல குதிரைக்காரர்கள் அக்குதிரைகளைக் கொண்டுபோய்க் குதிரைப்பந்தியிலே சேர்த்தனர். எ-று.

வாசிவா ணிகர்க்குத் தென்னன் வெண்டுகில் வரிசை யாக
வீசினன் பாணற் கேவல் செய்தவர் வெள்கு வாரோ
கூசிலா நேசர்க் காப்பான் குதிரையி னிழிந்தேற் றந்தத்
தூசினை யிரண்டாங் கங்கை யெனமுடி சூடி நின்றார்.

(இ-ள்.) பாண்டியன் குதிரை வியாபாரிக்கு வெள்ளையான ஒரு வஸ்திரத்தை வெகுமதியாகக் கொடுத்தனன். அதனைவாங்குதற்கு பாணபத்திரனுக்கு அடிமைத்தொழில்செய்தவர் வெட்கங்கொள்ளுவாரோ! கூச்சமில்லாத அன்பரை இரக்ஷிக்கும் வண்ணம் குதிரையினின்றும் இறங்கி அவ்வாடையைவாங்கி இரண்டாவது கங்கையென்று கூறும்வண்ணம் திருமுடியின்மீது அணிந்தருளினர். எ-று. (கஉரு)

இனையது சிவன்பா லூர்தி யிழிந்துநின் றேற்றுச் சென்னி
புனைவதென் னிவர்கை யோடும் புனைந்ததிக் குடையும் பூண்ட
கனலராப் பூணு மன்னன் கவருமோ வென்று தம்மில்
வினவினர் வெகுண்டு சொன்னார் கணத்தனி வீர ரெல்லாம்.

(இ-ள்.) இந்தவாடையை இவனிடத்தினின்றும் வாகனத்தினின்றிறங்கி எதிரேசென்று நின்று இரண்டு கையிலும் வாங்கித் தலையின்மீது தரித்துகொண்டதென்ன இவர் திருக்கரத்திற்றாங்கியுள்ள திருவோடும் அணிந்துள்ள திக்காகிய ஆடையையும் தரித்துக்கொண்டுள்ள தீபோன்றவிடத்தினையுடைய அரவாபரணத்தையும் இவ்வரசன் அபகரித்துக்கொள்ளுவானோ என ஒருவர்க்கொருவர் தங்களுக்குள் கோபங்கொண்டு ஒப்பற்ற சிவகணவீரர்களெல்லாங் கூறினர்கள். எ-று. (கஉசு)

அறந்தரு கோலான் வெவ்வே றடுபரி வயவர் யார்க்கு
நிறந்தரு கலிங்க மீந்தா னேர்ந்தவை வாங்கி யன்பிற்
சிறந்தருள் வடிவாய் வந்தார் செழுமறைப் புரவி யோடு
மறைந்தனர் மறைந்தா ரொக்க மாயவாம் பரிமேல் வந்தார்.

(இ-ள்.) பின்னர் தருமபரிபாலனத்தைச் செய்கின்ற செங்கோலினையுடைய அரிமர்த்தனபாண்டியன் போரிற்பகைவர்களைக் கொல்லுகின்ற வீரர்களுக்கெல்லாம் நல்ல நிறம்பொருந்திய ஆடைகளை அளித்தனன். அவைகளை அவர்களும் எதிரிற்சென்று வாங்கினர்கள். உடனே சிறப்புப்பொருந்திய அருளே வடிவமாக வந்தருளினவர் செழுமையான வைதீகக்குதிரையுடனே மறைந்தருளினர். அவர் மறைந்தருளும்போழ்தே மாயாசுவங்களிலேறிவந்தவர்களும் கூடவே மறைந்துபோனர்கள். எ-று. (கஉ௬)

இருமைக்குந் துணையாய் நின்ற விருபிறப் பாளர்க் கேற்ப
வருமைத்தாஞ் சிறப்பு நல்கி யவரிடத் தவரா யுய்த்துப்

பருமத்த யானை வேந்தன் பகற்கதிர் வானத் துச்சி
வருமப்போ தெழுந்து செம்பொன் மாடநீள் கோயில் புக்கான்.

(இ-ள்.) இம்மைமறுமைகளுக்கேற்றவண்ணம் இருபிறப்பினராகிய மணிவாசகப்பெருமான்பொருட்டு அருமையானசிறப்புக்களைச்செய்து நீர் உம்மிருப்பிடத்திற்குப் போம் என்று அவர்களை அவர்களிடத்திற்கு அனுப்பிவிட்டு, பெரிய மத்தகத்தினையுடையயானைப்படைகளோடுகூடிய அரிமர்த்தனபாண்டியன் சூரியன் உச்சியில் வரும்பொழுது தானிருந்த ஆதனத்தினின்றும் எழுந்து சிறந்தபொன்னாற்செய்யப்பட்ட உயர்ந்த மாளிகையிற் போயினான். எ-று. (கஉசு)

ஏனைமந் திரருந் தத்த மில்புகப் புரவி பார்த்த
மானக ரருந் தத்த மனைபுகப் பரியின் பாக
ரானவர் தாமுங் கோயி லடைந்துதம் விளையாட் டெல்லா
மீனெடுங் கண்ணி னுட்கு விளம்பின ரிருந்தா ரன்றே.

(இ-ள்.) மற்றுள்ள மந்திரிமார்களும் தத்தம்வீடுகளுக்குச்செல்ல,குதிரைகளைப் பார்க்கவந்த அப்பெரிய நகரத்திலுள்ள ஜனங்களும் அவரவர்கள் வீட்டிற்குச்செல்ல, குதிரைப்பாகராகவந்த கடவுளும் தமது திருக்கோயிலிற்சென்று தமது விளையாட்டினைத்தையும் நெடியமீன்போலுங் கண்ணினையுடையவளுக்கு சொல்லிக்கொண்டிருந்தனர். எ-று. (கஉஎ)

நரிபரியாக்கியபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உகஉசு.

---

அறுபதாவது,

# பரிநரியாக்கியபடலம்.

---

கலிநிலைத்துறை.

ஞான நாயக னாணையா னரிபரி வெள்ள
மான வாறுரை செய்துமீண் டப்பரி நரியாய்ப்
போன வாறுகண் டமைச்சரைப் புரவலன் கறுப்ப
வான வாறுபோல் வைகைநீர் வந்தவா றுரைப்பாம்.

(இ-ள்.) ஞானநாயகரான கடவுளின் கட்டளையால் நரிகளெல்லாம் குதிரைக் கூட்டங்களாகவந்ததைச்சொன்னோம். திரும்பவும் அந்தக்குதிரைகள் நரிகளாக வாகிச்சென்ற தன்மையைப்பார்த்து மந்திரியாரை மன்னவன் கோபித்துக்கொள்ள, தேவகங்கையைப்போல வைகையாற்றிற் பிரவாகமுண்டானதைச்சொல்லுகின்றோம். எ-று.

நெருங்கு தூரிய முழக்கமுந் தானையு நிமிர
மருங்கி லாதவர் வந்தெதிர் மங்கல மேந்த
வரங்கொல் வேலினா னருளிய வரிசையோ டணைந்து
புரங்கொல் வேதியர்க் கன்பர்தந் திருமனை புகுந்தார்.

(இ-ள்.) சுற்றிலு நெருங்கிநின்று வாசிக்கப்பட்ட மேளங்களின் ஓசையும், சேனைகளும் மிகுதியாகச் சூழ்ந்துவர இடையில்லாதவுமொன்று கூறத்தக்க சிற்றிடையினையுடைய பெண்கள் எதிரிலட்டமங்கலங்களைத் தாங்கிகொண்டு வர அரத்தையும் மழுங்கச்செய்கின்ற வேற்படையினையுடைய பாண்டியனளித்த வரிசைகளுடன் சென்று திரி

புரங்களையழித்த அந்தணராகிய சிவபெருமானது திருவடிக்கன்பாகிய வாதபுரேசர் திருமகள் விலாசம்பொருந்திய தமது மாளிகையை யடைந்தனர். எ-று. (உ)

உடுத்த சுற்றமுங் கழகமு மொட்டிய நட்பு
மடுத்த கேண்மையால் வினவுவா ரவரவர்க் கிசைய
வெடுத்த வாய்மையான் முகமனு மகிழ்ச்சியு மீந்து
விடுத்த வாதவூ ராளிகள் வேறிடத் திருந்து.

(இ-ள்.) தம்மைச் சூழ்ந்துள்ள சுற்றத்தினர்களும் கல்விமாந்தர்களும் மிகவு நெருங்கிய சிநேகிதர்களும்ஆகி பொருந்தியநட்பினுற் கேட்கப்பட்டவர்களுக்குத் தக்க வண்ணம் உண்மையான சுபாவத்தால் உபசாரவசனங்களைக்கூறி சந்தோஷத்தையளித்து அவரவர்களை அனுப்பிவிட்டு வாதபுரேசர் ஏகாந்தமான ஓரிடத்திலிருந்துகொண்டு

கரந்தை சூடிய வாலவாய்க் கண்ணுத லாமன்
றிரந்த வண்ணமே யாங்கொடு போகிய வெல்லாம்
பரந்த வன்பருந் தானுங்கொண் டெம்மையும் பணிகொண்
டரந்தை தீர்த்தன ரன்றியு மரசனுக் கிசைய.

(இ-ள்.) சிவகரந்தையையணிந்த நெற்றிக்கண்ணினையுடைய கடவுள் நாமந் நாளில் கேட்டுக்கொண்டபடியே நாம் அரசனுக்குக் குதிரைவாங்கும்பொருட்டு உத்தேசித்து கொண்டுபோயிருந்த எல்லாவற்றையும் அங்கு மிகுதியாகவந்திருந்த அன்பர்களுந் தானுமாக கைப்பற்றிக்கொண்டு என்னையுமடிமையாக்கி எனது ஊழியத்தையுங் கைப்பற்றினர். இதுவல்லாமலும், அரசனுடைய மனத்துக்குத் திருப்தி யுண்டாகும் வண்ணம். எ-று. (ஙு)

நல்ல வாம்பரி செலுத்தின னமக்கினிக் கவலை
யில்ல வாம்படி யாக்கின னின்னமொன் றுலகை
வெல்ல வாம்படி தன்னருள் விளைக்குமா னந்தம்
புல்ல வாம்படி யெமைத்தவம் பூட்டுவான் வேண்டும்.

(இ-ள்.) நல்ல தாவுங் குதிரைகளைக் கொண்டுவந்து கொடுத்து இனி நமக்குக் கவலையில்லாதவண்ணஞ்செய்தனர். இதுவன்றி இன்னமொன்றுளது. அதுயாதென்னில், இக்காணப்படுமுலகத்தை வெல்லுதற்குத்தக்க தன்றிருவருளினுல் உண்டாகிற ஆனந்தத்தை நானடையும்வண்ணம் அடியேனைத் தவத்தில் பிரவேசிக்கச்செய்தல்வேண்டும்.

என்ற வாதரந் தலைக்கொள விகபரத் தாசை
யொன்று மின்றியே யுணர்வினுக் குள்ளுணர் வாகத்
துன்று பூரண மாகிய சுந்தரச் சோதி
மன்று ளாடிய சேவடி மனம்புதைத் திருந்தார்.

(இ-ள்.) என்ற அவ்வாசையானது அதிகமாக, இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் ஆசையென்பது சற்றுமில்லாமல் அறிவுக்குள் அறிவாக நெருங்கியிருக்கிற பூரணமாகிய சோமசுந்தரப்பெருமான் வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருந்தனர். எ-று. (ரு)

நாளை யுந்திரு வாலவாய் நாயகன் றமரை
யாள மண்சுமந் தருளுமென் றதனையுங் காண்பா
னாளை வெம்பரித் தூளிபோர்ப் புண்டமெய் கழுவி
மீள வேண்டுவான் போற்கடல் குளித்தனன் வெய்யோன்.

(இ-ள்.) இவரிவ்வாறிருக்க, நாளையத்தினமுந் திருவாலவாயிலெழுந்தருளியிருக்கிற கடவுள் தம்மன்பரை ஆட்கொள்ளும்பொருட்டு மண்சுமந்தருளுவார் என அத

னையுங் காணும்பொருட்டு ஊளையிடாநின்ற நரிகளாகிய வெவ்விய குதிரைகளாலுண்டான புழுதியினல் மூடப்பட்டுள்ள உடலைக் கழுவிக்கொண்டு திரும்பிவரச் சென்றவனைப்போல சூரியன் மேற்குக்கடலில்மூழ்கி அத்தமனம் ஆயினன். எ-று. (எ)

ஈச ஞாடல்வெம் பரிக்குழாத் தெழுந்தசெந் தூளான்
மாசு மூழ்கிய வண்டத்தை வானிலா வென்னுந்
தூசி னலறத் துடைப்பவ னெனமணித் தொகுதி
வீசு யாழியுண் முளைத்தனன் வெண்மதிக் கடவுள்.

(இ-ள்) உடனே இறைவன் திருவிளையாடல்செய்தருளிய வேகமானகுதிரைக்கூட்டத்தினின்றும் உண்டான செந்நிறமான புழுதியினல் அழுக்கடைந்ததான இந்த அண்டத்தை வெள்ளிய நிலாவென்கின்ற துணியினல் நன்றாய்த்துடைப்பவனைப்போல அரதனக்கூட்டங்களை அலைகள் வாரி இறைக்கின்ற கடலினுள் வெள்ளிய சந்திரன் உதித்தனன். எ-று. (அ)

சேய தாரகை வருணமாத் தீட்டிய வான
மாய வேட்டினை யிருளெனு மஞ்சனந் தடவித்
தூய வாணிலா வென்னும்வெண் டேினுற் றுடைப்பான்
பாய வேலையின் முளைத்தனன் பனிமதிக் கடவுள்.

(இ-ள்.) செவ்விய நக்ஷத்திரங்களை எழுத்தாக எழுதியுள்ள ஆகாயமாகிய ஏட்டினை இருட்டென்னுமையைத்தடவி பரிசுத்தமான வாலிய நிலாவென்னும் வெள்ளிய வஸ்திரத்தால் திடைக்கும்பொருட்டு குளிர்ந்த கிரணங்களையுடைய மதிக்கடவுள் பரவிய கடலிலே உதயமாகினன். எ-று. (க)

கள்ளொ ழுக்குதார் மீனவன் கடிமனை புகுந்த
புள்ளு வப்பரி நள்ளிருட் போதுவந் தெய்தப்
பிள்ளை யாகிய மதிமுடிப் பிரான்விளை யாட்டா
லுள்ள வாறுதம் வடிவெடுத் தொன்றொடொன் றுசாவும்.

(இ-ள்.) தேனினையொழுக்காநின்ற வேப்பமலர்மாலையையணிந்த பாண்டியனது காவலினையுடைய அரண்மனைக்குள்ளே புகுந்திருந்த மாயக்குதிரைகள் நடுராத்திரி வந்தவுடனே இளம்பிறையணிந்த முடியினையுடைய கடவுள் செய்த திருவிளையாட்டினல் தமது யதார்த்த உருவத்தையடைந்து ஒன்றுடனென்று வினவாநிற்கும். எ-று.

சங்கி னேசையும் பிணிப்பறை யோசையுஞ் சரிந்த
மங்கு லோதிய ரழுகுர லோசையும் வடந்தாழ்
கொங்கை சேப்புறக் கையெறி யோசையுங் குளிற
வெங்கு நாஞ்செவி பருகுவ மின்னமு தென்ன.

(இ-ள்.) நாம் சங்குகளினேசைகளையும் பிணங்கொண்டுவரும்போது கொட்டுகின்ற பிணப்பறையினேசையும் அவிழ்ந்துகிடக்கின்ற மேகம்போன்ற நிறத்தினையுடைய கூந்தலோடுகூடிய பெண்களின் அழுகுரலோசையும் முத்தாரந்தொங்குகின்ற முலையின்மீது செந்நிறமுண்டாகும் வண்ணம் அடித்துக்கொள்ளுகின்ற வோசையும் ஆகிய இந்த ஓசைகளையெல்லாம் இனிய அமிர்தத்தைப்போலக் காதாரக்கேட்போமே.

வாம்ப ரித்திர ளாகினா மனித்தரைச் சுமந்து
தாம்பு சங்கிலி தொடக்குண்டு மத்திகை தாக்க
வேம்ப லுற்றனம் பகலெலா மிப்பொழு தீண்டு
நாம்ப டைத்தன நம்முரு நம்விதி வலத்தால்.

(இ-ள்.) (அதைவிட்டு), தாவுகின்ற குதிரைகளினுருவங்களையடைந்து மனிதர்களைச்சுமிந்து கயிற்றாலும் சங்கிலியாலும் கட்டப்பட்டு சம்மட்டியாலடிக்க பகலெல்லாம் வருத்தப்பட்டோம் நம்முடைய நல்ல ஊழின்வலிமையினால் இப்பொழுதுநாம் நமது சுயரூபத்தை யடைந்தோம். எ-று. (கஉ)

கான கந்தனி லொழுகுநாண் முதலிந்தக் கவலை
யான துன்பநா மறிந்தில மின்னமு மார்த்த
மான வன்றொடர் வடுக்களு மத்திகைத் தழும்பும்
போன வன்றினிப் புலருமுன் போவதே கருமம்.

(இ-ள்.) நாம் காட்டிற் சஞ்சரிக்க வறிந்த அந்நாள்முதல் இந்நாள்வரைக்கும் இப்படிப்பட்ட துன்பத்தை அறிந்தோமில்லை. இன்னமும்கட்டிய பெரியவலிய சங்கிலி முதலியவற்றின் வடுக்களும் சவுக்கடித்தழும்புகளும் போகவேயில்லை. ஆதலால் நாம் விடிதற்குமுன்னேபோய் விடுவதே நல்லகாரியம். எ-று. (கரு)

உள்ள மாரநாந் தின்பதற் கூன்சரிந் தொழுகு
நொள்ளை நாகில நந்தில நுழைந்தளை யொதுங்கு
கள்ள நீள்கவைக் கான்ஞெண்டு மில்லினிக் கடலை
கொள்ளி னோடுபைம் பயறுபுற் கொள்வகை யடாதால்.

(இ-ள்) இங்கே மனப்பூர்த்தியாக நாமுண்ணுதற்கு மாமிசம் நிறைந்து சரிந்தொழுகாநின்ற நொள்ளையான நத்தைகளில்லை. நந்துகளும்இல்லை. இதுவன்றி, வளைகளுக்குள் நுழைந்து ஒளித்துக்கொள்ளுகிற திருட்டுத்தொழிலையுடைய நீண்ட பிளந்தகாலோடுகூடிய நண்டுகளும் இல்லை. இனி, கடலையும்-கொள்ளும்-பசும்பயறும்-புல்லுமுண்ணும்வண்ணம் முடியாது. எ-று. (கசு)

நாடிக் காவலன் றமருளார் நகருளார் கண்டாற்
சாடிக் காய்வரே புலருமுன் சங்கிலித் தொடர்நீத்
தோடிப் போவதே சூழ்ச்சியென் றாக்கமுற் றொருங்கே
கூடிப் பேசின வூளைவாய்க் குறுநரிக் குழாங்கள்.

(இ-ள்.) அரசனுடைய பரிவாரங்களாக வுள்ளவர்களேனும் இவ்வூரிலுள்ளவர்களேனும் உற்றுப்பார்த்துணர்ந்தால் கொன்று கோபிப்பார்களே ஆதலால் பொழுதுவிடிதற்குமுன்னே இச்சங்கிலிகளிற் கட்டுண்டுகிடப்பதை விட்டு ஓடிப்போய்விடுவதே தந்திரமெனத்துணிந்து ஊளையிடுகின்ற வாயினையுடைய குள்ளநரிக்கூட்டங்கள்கூடிப் பேசிக்கொண்டன. எ-று. (கரு)

வெறுத்த காணமுங் கடலையும் விரும்பின கோழன்
றுறுத்த நாகுநந் தலவனைச் சங்கிலித் தொடரை
முறித்த கால்களிற் கட்டிய கயிற்றொடு முளையைப்
பறித்த வூளையிட் டெழுந்தன போம்வழி பார்ப்ப.

(இ-ள்.) அந்நரிகள் தமக்கு உணவாகவைத்த கொள்ளையும் கடலையும் வெறுத்தன. கொழுவிய தசை துறுத்துக்கொண்டிருக்கின்ற நத்துக்களையும் நண்டுகளையும் விரும்பின. சங்கிலிக்கட்டுக்களை முறித்தன. கால்களிற் கட்டப்பட்டுள்ள கயிறுகளுடனே ஊன்றுமுளைகளைப்பறித்தன. ஊளையிட்டுக்கொண்டெழுந்தன. போம்வழிபார்க்கின்றன. எ-று. (கசு)

நின்ற நீணிலைப் பந்தியு ணெருங்குமா நிரையைச்
சென்று தாவிவா ளெயிறுற்ச் சிதைபடக் கடித்து

மென்று சோரியைக் குடிப்பன வீக்கிய முளையோ
டொன்ற வோடவே யண்டத்தி னூறுசெய் வனவால்.

(இ-ள்.) நிற்கப்பட்ட நிலைகளையுடைய பந்திகளிலே நெருங்கிநிற்கின்ற பெரிய குதிரைக்கூட்டங்களைச்சென்று தாவி, ஒளிபொருந்திய பற்கள்பட கெடும்வண்ணங்கடித்துமென்று இரத்தத்தைக்குடிப்பன. அடிக்கப்பட்ட முளையுடனேபொருந்த ஒடினமையால் பீஜத்திற்பட்டு துன்பத்தினை புண்டாக்குகின்றன. எ-று. (௧எ)

ஊளை யோசைகேட் டிம்மென வுறக்கநீத் தெழுந்து
கர்ளை வீரராய் மந்துரை காப்பவர் நெருந
லாளி போல்வரு பரியெலா நரிகளாய் மற்றை
யொளி மானிரை குடர்பறித் துண்பன கண்டார்.

(இ-ள்.) ஊளையிட்ட வோசையைக்கேட்டுத் திடீரென்று தூங்குவதைவிட்டு எழுந்து யவ்வனபுருடர்களாய் அசுவசாலையைக்காக்குமவர்கள் நேற்று யாளியைப்போல வந்த குதிரைகளெல்லாம் இன்று நரிகளாகவாகிப் பழைய வொளிபொருந்திய குதிரைகளின் குடர்களைப்பிடுங்கி உண்ணுவதைக் கண்டார்கள். எ-று.

ஒளியை - வரிசையென்பாருமுளர். (௧அ)

காண்ட லுஞ்சில வலியுள் கடியமுள் ளரணந்
தாண்டி யோடின சிலநரி சாளர முழையைத்
தூண்டி யோடின சிலநரி சுருங்கையின் வழியா
வீண்டி யோடின நூழில்புக் கேகின சிலவே.

(இ-ள்.) காவலாளிகள் கண்டுகொண்டவுடனே சிலநரிகள் கொரேமான முள்ளினாலாகிய கோட்டையைத்தாண்டியோடின. சிலநரிகள்சாலேகங்களின் துவாரங்களைக்கடந்து ஓடின. சிலநரிகள் சுருங்கைகளின் வழியாக நெருங்கி யோடின. சிலநரிகள் துவாரங்களின்வழியே புகுந்து ஓடின. எ-று. (௧௯)

முடங்கு காலுடைச் சம்புவு மூப்படைந் தாற்ற
லடங்கு மோரியுங் கண்குரு டாகிய நரியு
மொடுங்கு நோயுழந் தலமரு மிகலனு மோடு
மிடங்கள் கண்டில பந்தியிற் கிடந்தன வேங்கி.

(இ-ள்.) முடங்கியுள்ள காலினையுடைய சம்புக்களும் கிழமாகி வலிமைகெட்ட ஓரிகளும் கண்குருடாகிய நரிகளும் ஒடுங்கச்செய்கின்ற நோயையனுபவித்து கஷ்டப்படுகின்ற இகலன்களும் ஓடிமறையுமிடங்களைக் காணுதவைகளாய் ஏக்கத்துடன் அசுவசாலையிலேயே கிடந்தன. எ-று.

சம்பு - ஓரி-நரி-இகலன் - என்னும் இவைகள் குள்ளநரியென்னும் ஒருபொருளைக்குறித்த பலசொல். (௨௦)

கிட்டி யோடினர் வெருட்டுவோர் கீழ்விழக் கடித்துத்
தட்டி யோடுவ சிலவெதிர் தடுப்பவ ரடிக்கீ
ழொட்டி யோடுவ சிலகிடந் தூளையிட் டிரங்குங்
குட்டி யோடணைத் தெயிலிறக் குதிப்பன சிலவே.

(இ-ள்.) சமீபமாக ஓடிச்சென்று வெருட்டுபவர்கள் கீழேவிழும்வண்ணம் தள்ளிக்கடித்துத் தட்டியோடாநிற்பன சில. எதிரேவந்து தடுப்பவர்களின் கால்களின்கீழே ஒட்டியோடுவசில. ஓடமாட்டாமற்கிடந்து ஊளையிட்டு அழுகின்ற குட்டிகளை அணைத்துக்கொண்டு மதிலழியும்படி குதிப்பன சில. எ-று. (௨௧)

மறம்பு னைந்தவேன் மீனவன் மாளிகை தள்ளிப்
புறம்ப டைந்தவிந் நரியெலாம் பொய்கையுய் யானை
மறம்ப யின்றநீண் மனைமறு காலயங் கவலைத்
திறம்ப டர்ந்தபன் மாடநீ ணகரெலாஞ் செறிந்த

(இ-ள்.) வீரம்பொருந்திய வேற்படையினையுடைய பாண்டியன் மாளிகைகளை இடித்து வெளியேவந்த இந்தநரிகளெல்லாம், பொய்கைகளிலும் உத்தியானவனங்களிலும், தருமம்விளங்காநின்ற நீண்டவீடுகள் கோவில்கள் சந்திகள் பலவிதமாக விரியப்பட்டுள்ள பலவகைமாளிகைகள் நீண்ட ஊர்கள்முதலிய எவ்விடங்களிலும் நெருங்கின.

மன்றுஞ் சித்திர கூடமு மாடமு மணிசெய்
குன்றுந் தெற்றியு முற்றமு நாளொடு கோள்வந்
தென்றுஞ் சுற்றிய பொங்கரு மெங்கணு நிரம்பி
யொன்றுஞ் சுற்றமோ டூளையிட் டுழல்வன நரிகள்.

(இ-ள்.) சபைகளும் சித்திரகூடங்களும் மாளிகைகளும் அழகிய செய்குன்றுகளும் திண்ணைகளும் முற்றங்களும் நாள்களும் கோள்களும் எப்பொழுதும் வந்துசூழ்ந்துகொள்ளுகிற சோலையுமாகிய எவ்விடங்களிலேயும் பரவிப்பொருந்திய சுற்றங்களுடன் அந்நரிகள் ஊளையிட்டுக்கொண்டுலாவின. எ-று. (௨௫)

கரியி னோசையும் பல்லிய வோசையுங் கடுந்தேர்ப்
பரியி னோசையு மின்றமி ழோசையும் பாணர்
வரியி னோசையு நிரம்பிய மணிநக ரெங்கு
நரியி னோசையாய்க் கிடந்தது விழித்தது நகரம்.

(இ-ள்.) யானையின்முழக்கமும் பலவாத்தியங்களின்முழக்கமும் வேகமாகச் செல்லுகின்ற தேரிற்கட்டிய குதிரைகளின் முழக்கமும் இனியதமிழ்ப்பாடலின் முழக்கமும் பாணர்களின் இசைப்பாட்டுகளினோசையும் நெருங்கியுள்ள அழகிய அவ்வூரின் எவ்விடங்களிலும் நரிகளின் ஊளைத்தொனியாகவே யிருந்தது. அதனால் அவ்வூர்முழுமையும் நித்திரையொழிந்தன. எ-று. (௨௪)

விழித்த ஞாளிகள் விழித்தன கேகயம் வெருவி
விழித்த கோழிகள் விழித்தன மதுகரம் வெருண்டு
விழித்த வோதிமம் விழித்தன குருகினம் விரைய
விழித்த வாரணம் விழித்தன கருங்கொடி வெள்ளம்.

(இ-ள்.) நாய்கள்விழித்தன. மயில்கள் விழித்தன. அச்சத்துடன் கோழிகள் விழித்தன. வண்டுகள்விழித்தன. வெருட்சியுடன் அன்னங்கள்விழித்தன. பக்ஷிஜாலங்கள் விழித்தன. விரைவாக யானைகள்விழித்தன. காக்கைக்கூட்டங்கள் விழித்தன.

அட்டில் புக்கன நிணத்தினை யழற்பசி யுருகப்
பட்ட டுக்கிய கருங்கல முருட்டுவ பாகு
சுட்ட சோறுபல் லுணவுவாய் மடுப்பன சூழ்ந்த
குட்டி யுண்ணவுங் கொடுப்பன கூவிளி கொள்வ.

(இ-ள்.) சமையல்வீடுகளில் புகுந்தன. சடாநின்றபசியானது ஊனினையும் உருக்கப்பட்டு அச்சமயல்வீடுகளில் அடுக்கப்பட்டிருந்த பழங்கலங்களை உருட்டுகின்றன. வெல்லப்பாகினையும் சமைக்கப்பட்டசோற்றினையும் பலவிதவுணவுகளையும் உண்ணுகின்றன. சூழ்ந்துநின்ற குட்டிகள் உண்ணும்வண்ணம் பார்க்கின்றன. கூவென்று கூச்சலிடுகின்றன. எ-று.

பாகு என்பது, பாற்குழம்பு என்னுமாம். (௨௬)

புறவு பூவைபைங் கிள்ளைகள் பூத்தலைச் சேவல்
பிறவும் வாருவ வுறங்கிய பிள்ளையைக் கொடுபோய்
நறவு நாறிய குமுதவாய் நகையெழ நக்கி
யுறவு போல்விளை யாடுவ வூறுசெய் யாவால்.

(இ-ள்.) சிலநரிகள் புறக்களையும் பூவைகளையும் பசியகிளிகளையும் பூவினைத் தலையினிலுடைய ஆண்கோழிகளையும் மற்றுள்ளவைகளையும் அபகரிக்கின்றன. தூங்காநின்ற குழந்தைகளை யெடுத்துக்கொண்டு சென்று நறுமணம்வீசுகின்ற குமுதமலர் போன்றவாயில் நகைதோன்றும்வண்ணம்நக்கி பண்டே பழகினதைப்போல விளையாடுகின்றன. அக்குழந்தைகளுக்கு யாதொருதீங்கையும் செய்கின்றில. எ-று. (௨௭)

பூவை – மயின்; அல்லது நாகணவாய். நறவு என்பதை – தேன் எனினுமாம்.

பறிப்ப வேரொடு முன்றில்வாய்ப் படர்பசுங் கொடியை
கறிப்ப நாகிளங் காயெலாங் கரும்புதேன் கவிழ
முறிப்ப வாயிட்டுக் குதட்டுவ வண்டுவாய் மொய்ப்பத்
தெறிப்ப வூளையிட் டாடுவ திரிவன பலவே.

(இ-ள்.) பல நரிகள் முற்றத்திலுள்ள பச்சைக்கொடிகளை வேரோடு பிடுங்கு கின்றன. அவைகளிலுள்ள இளங்காய்களையெல்லாம் மெல்லுகின்றன. கரும்புகளை சாறொழுகும்படிமுரிக்கின்றன. வாயிலிட்டு குதட்டுகின்றன வண்டுகள் வாய்களில் மொய்த்துக்கொள்ளும்வண்ணம் சிந்துகின்றன. ஊளையிட்டுக்கொண்டு விளையாடுகின்றன. சுற்றித்திரியாநிற்கின்றன. எ-று. (௨௮)

ஆயி ரம்பொரி திரிமருப் படல்கெழு மேட
மாயி ரங்கருந் தாதுநே ராக்கைய வேன
மாயி ரங்கவி ரணையசூட் டவிர்தலைக் கோழி
யாயி ரங்குறும் பார்ப்பொடு மாருயிர் செகுப்ப.

(இ-ள்.) அநேகமான பொருக்குகெழும்பிய முறுகியிருக்கின்ற கொம்புகளையுடைய பலத்தோடுகூடிய செம்மறிக்கடாக்களையும், அனேகமான இரும்புபோன்ற வுடலினையுடைய பன்றிகளையும், அநேகமான முண்முருக்கமலரைப்போல விளங்குகின்ற உச்சிப்பூவினையுடைய கோழிகளையும்,அநேகமான விளம்பார்ப்புகளுடன் அரியவுயிரை அழிக்கின்றன. எ-று.

பார்ப்பென்றது – பறவைக்குஞ்சுகளை. (௨௯)

பின்றொ டர்ந்துநாய் குரைப்பொடு துரந்திடப் பெயர்ந்து
முன்றொ டர்ந்துயிர் செகுப்பன வெஞ்சின மூட்டி
வன்ற டம்புய மள்ளர்போய் வலிசெயப் பொறாது
கன்றி வந்துசெம் புனலுகக் கடிப்பன வனந்தம்.

(இ-ள்.) நாய்கள் பின்னேதொடர்ந்து குரைத்தலுடன் துரத்தவும்,போதலைவிட்டுத்திரும்பி அவைகளின்முன்னேசென்றுகடித்து உயிரைவாங்குகின்றன. மிக்ககோபத்தை உண்டாக்கி வலிய பெரியதோள்களையுடைய வீரர்கள்சென்று துன்புறுத்த தாளாமல் கோபங்கொண்டு திரும்பிவந்து அநேக நரிகளிரத்தம் ஒழுக அவர்களைக்கடிக்கின்றன. எ-று. (௩௦)

பன்றி வாய்விடு மிரக்கமும் பல்பொறி முள்வாய்
வென்றி வாரணச் சும்மையு மேழகத் தொலியு
மன்றி நாய்குரைப் போசையு மாடவ ரார்ப்பு
மொன்றி யூளைவாய் நரிக்குரற் கொப்பதுண் டொருசார்.

(இ-ள்.) பன்றிகள் கத்தாநின்ற கத்தலும், பலபுள்ளிகளையும் முட்போன்ற கூரியவாயினையும் உடைய வெற்றிபொருந்திய கோழிகளின் கூக்குரலும், செம்மறிக் கடாக்களின் சத்தமும், அல்லாமல் நாய்கள் குரைக்கின்ற வோசையும், புருடர்கள் கத்துகின்றகத்தலும், ஒன்றாய்க்கலந்து ஊளையிடுகின்ற வாயோடுகூடிய நரிகளின் கூச்சலுக்கொத்துக் கேட்கப்படுவதுவும் ஒருபுறத்தி லுண்டு. எ-று. (கூக)

கங்கு லெல்லைகா ணியநகர் கண்விழித் தாங்கு
மங்கு ரூய்பெரு வாயில்க் டிறத்தலு மாறு
தெங்கு மீண்டிய நரியெலா மிம்மென வோடிப்
பொங்கு காரிருட் டுணியெனப் போயின கானம்.

(இ-ள்.) இராத்திரியொழிய, அந்தவூர் கண்ணைத் திறந்தாற்போல மேகங்கள் படிந்துகிடக்கின்ற பெரியவாசல்களைத்திறத்தலும், விடாமல் எவ்விடங்களிலும் நெருங்கியிருந்த நரிகளெல்லாம் சீக்கிரமாகவோடி மிக்க கரியவிருளின் துண்டுகளைப்போல காட்டிற்குச்சென்றன. எ-று. (கூஉ)

ஈறி லாச்சிவ பரஞ்சுட ரிரவிவந் தெறிப்பத்
தேறு வாரிடைத் தோன்றிய சிறுதெய்வம் போல
மாறி லாதபன் செங்கதிர் மலர்ந்துவா ளெறிப்ப
வீறு போயொளி மழுங்கின மீன்கண மெல்லாம்.

(இ-ள்.) அழிவில்லாத சிவபரஞ்சுடராகிய சூரியன் உதயமாதலும்,சாதகர்களிடத்து முன்னம் தோன்றி நின்ற சிறுதெய்வங்களைப்போல, ஒப்பற்ற சூரியனது செவ்விய கிரணங்கள் விரிந்து ஒளிவீசுதலும், முன்னிருந்த பெருமைகள்கெட்டு நட்சத்திரக்கூட்டங்களெல்லாம் ஒளிமழுங்கின. எ-று. (கூக)

அண்ட ருக்கரி தாகிய மறைப்பொரு ளழுகைத்
தொண்ட ருக்கெளி தாகிமண் சுமந்தருள் வருத்தங்
கண்ட ருட்கழல் வருடுவான் கைகளா யிரமுங்
கொண்ட ருக்கவெங் கடவுளுங் குணகட லுதித்தான்.

(இ-ள்.) தேவர்களுக் கருமையானதாகிய வேதார்த்தமான சிவம், தன்னை யுத்தேசித்து அழுகின்ற அடியவர்களுக்கு எளிமையாய்த்தோன்றி மண்சுமந்தருளிய வருத்தத்தைப்பார்த்து அருள்வடிவமான அக்கடவுளின் பாதங்களைப் பிடிக்கும்பொருட்டு கிரணங்களாகிய ஆயிரங்கைகளுடன் விருப்பத்தைத் தருகின்ற சூரியனும் கீழ்க்கடலில் உதயமாயினன். எ-று. (கூச)

கவன வெம்பரி செலுத்திமேற் கவலைதீர்ந் துள்ளே
சிவமு ணர்ந்தவர் சிந்தைபோன் மலர்ந்தசெங் கமல
முவமை யில்பரம் பொருளுணர்ந் துரையிறந் திருந்தோர்
மவுன வாயென வடங்கின மலர்ந்தபைங் குமுதம்.

(இ-ள்.) நிருத்தியாசனமாகிய குதிரையை யோட்டி, எதிர்காலத்திலுண்டாகிற கவலைகளினின்றுநீங்கி, தமக்குள் சிவத்தினையுணர்ந்தவர்களது மனத்தைப்போல செந்தாமரை அலர்ந்தன. ஒப்பற்ற சிறந்தபரம்பொருளை யுணர்ந்து வாக்கிறந்து நிற்பவர்களது மவுனம்பொருந்திய வாயைப்போல விரிந்த பசிய செவ்வல்லிமலர்கள் குவிந்தன.

புந்தி யாளர்கள் யாதெனப் பகர்துமென் றச்சஞ்
சிந்தி யாவெழுந் தொல்லைபோய்த் திரண்மதங் கவிழ்க்குந்
தந்தி யானர சிறைகொளு மிருக்கையைச் சார்ந்து
வந்தி யாவுடன் பணிப்புற வந்தது மொழிவார்.

(இ-ள்.) அசுவசாலையைக்காப்பவர்கள் என்னென்று கூறப்போகின்றோமென்று அச்சத்துடன் எண்ணி விரைந்துசென்று திரண்டமதத்தைக் கொட்டுகின்ற யானைப் படைகளையுடைய பாண்டியன் அவைக்களத்திற்புகுந்து அவனைவணங்கி உடனடுக்கத்துடன் இரவில் நடந்த விஷயங்களைக் கூறுவாராயினர். எ-று. (ருசு)

காற்றி னுங்கடுங் கதியவாய்க் கட்கினி யனவாய்
நேற்று விந்தவாம் பரியெல்லா நின்றவாம் பரிக்குக்
கூற்றெ னும்படி நரிகளாய் நகரெலாங் குழுமி
யூற்றஞ் செய்துபோய்க் காட்டகத் தோடிய வென்றார்.

(இ-ள்.) அடிக்குங்காற்றைக்காட்டிலும் அதிகவேகமாய் கண்களுக்கினியனவாய் நேற்றுவந்த தாவுங்குதிரைகளெல்லாம், பழையனவாக இவ்விடத்தில் நின்றுகொண்டிருந்தகுதிரைகளுக்கு எமனென்றுகூறும்படி நரிகளாய் ஊரெல்லாம்நிறைந்து இடையூற்றைச்செய்துபோய் காட்டினிடத்திற்கு ஓடினவென்றுகூறினார்கள். எ-று. (ருஎ)

கருத்து ருத்விச் சொல்லெனுங் கடியகால் செவியாந்
துருத்தி யூடுபோய்க் கோபமாஞ் சுடுதழன் மூட்டி
யெரித்த தீப்பொறி சிதறிடக் கண்சிவந் திறைவ
னுருத்த வாறுகண் டமைச்சரும் வெருவினு ரொதுங்கி.

(இ-ள்.) மனத்திற்கு இயையாத இச்சொல்லென்னுங் கொடுங்காற்றானது காதென்னுந் துருத்தியின்வழியாய்ச்சென்று கோபமென்னுங்கொடிய அக்கினியை மூளச்செய்து எரிக்கப்பட்ட தீப்பொறிகளைச்சிதறிட கண்சிவந்து இறைவன் கோபித்துக்கொண்ட தன்மையைநோக்கி மந்திரிகளும் பயந்துவிலகினார்கள். எ-று. (ருஅ)

அமுத முண்டவ னஞ்சமுண் டாலென முதனாட்
சமர வெம்பரி மகிழ்ச்சியுட் டாழ்ந்தவ னவையே
திமிர வெங்குறு நரிகளாய்ச் சென்றவே யென்னு
வமர ரஞ்சிய வாணையா னாரு ராழ்ந்தான்.

(இ-ள்.) அமிர்தத்தையுண்டவன் நஞ்சத்தையுண்டாற்போல நேற்றையதினம் போருக்குரிய வேகமானகுதிரைகளின் வருகையென்னும் சந்தோஷத்தின் மூழ்கிய அவன், அக்குதிரைகளே கரிய வெவ்வியகுள்ளநரிகளாகவாகிச் சென்றனவென்றுகேட்டு, தேவர்களும் அஞ்சத்தக்க ஆக்கினையினையுடைய அரிமர்த்தனன் மிகுதியான துன்பத்தில் மூழ்கினான். எ-று. (ருகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருகிருக்குந் தொல்லமைச்சர் தமைநோக்கி வாதவூ ராளி யென்னுங்
கருகிருட்டு மனக்கள்வ னம்முடைய பொருண்முழுதுங் கவர்ந்து காட்டிற்
குருதிநிணக் குடர்பிடுங்கித் தின்றுதிரி நரிகளெல்லாங் குதிரை யாக்கி
வரவிடுத்தா னிவன்செய்த மாயமிது கண்டீரோ மதிநூல் வல்லீர்.

(இ-ள்.) பாண்டியன் தனது அருகிலிருக்கின்ற மந்திரிகளைப்பார்த்து புத்திநுட்பமான சாஸ்திரவல்லபர்களே! வாதவூரனென்னும் கருகிய இருள்போன்ற மனத்தினையுடைய திருடன் நம்முடைய திரவியங்களையெல்லாம் அபகரித்துக்கொண்டு காடுகளிற் குருதியோடுகூடிய நிணக்குடர்களைப் பிடுங்கித்தின்றுகொண்டுலாவுகிற குள்ளநரிகளையெல்லாம் குதிரைகளாகச்செய்து அனுப்பிவைத்தான்; இவனாற்செய்யப்பட்டமாயத்தைப்பார்த்தீர்களா? எ-று. (சுo)

இம்மாயஞ் செய்தானை யென்செய்வ தெனவுலகி லெமருக் கெல்லாம்
வெம்மாசு படுபாவம் பழியிரண்டும் படவிழுக்கு விளைத்துத் தீய

கைம்மாறு கொன்றான்றன் பொருட்டினியா மேதுரைக்கக் கடவேமென்று
சும்மாது சிரந்தூக்கி யெதிராடா திருந்தாரச் சூழ்வல் லோர்கள்.

(இ-ள்.) அரசனிவ்வண்ணங்கூறியவுடனே அச்சபையிலிருந்த மந்திரிகள் இப்ப டிப்பட்ட மாயத்தைச்செய்தவனை இனிஎன்னசெய்வதென்று உலகத்தில் மந்திரிகளாகிய எங்களவர்களுக்கெல்லாம் வெவ்வியீகளங்கமுண்டாகத்தக்க பழியும்பாவமுமாகிய இரண்டும் உண்டாகும் வண்ணம் இழிதொழிலைச்செய்து நன்றிகொன்ற தீய விவன் பொருட்டு அரசனுக்கு நாமினி என்னசொல்லப்போகின்றோமென்று சும்மா தலையை மேலுக்கெடுத்துகொண்டு பதில்கூறாதிருந்தார்கள். எ-று. (௪௧)

அவ்வேலை மனக்கினிய பரிசெலுத்தி யரசகா ரியநன் றாக்கி
வெவ்வேலை மனக்கவலை விடுத்தனமென் றகமகிழ்ச்சி விளைவு கூர
மைவ்வேலை விடமுண்ட வானவனை நினைந்தறிவு மயமா மின்ப
மெய்வ்வேலை யிடைவீழ்ந்தார் விளைந்ததறி யார்வந்தார் வேந்தன் மாடே.

(இ-ள்.) அப்பொழுது மனத்திற்குத்தகுந்தகுதிரைகளைச்செலுத்தி இராஜகாரியத்தை நன்றாக நிறைவேற்றி மனக்கவலையென்னுங் கொடிய கடலைக்கடந்தோமென்று மனத்திலே மிகுந்த சந்தோஷமுண்டாக கரிய கடலிலேயுண்டான விஷத்தையுண்ட தேவனை நினைந்து அறிவின்மயமாக விளங்குகின்ற ஆனந்தமான உண்மையான கடலில் மூழ்கிக்கிடப்பவரான மணிவாசகப்பெருமான் இரவில் நடந்த சங்கதிகளொன்றையும் உணராதவராகையாலே அரசனிடத்திற்கு வந்தனர். எ-று. (௪௨)

வந்தவரைச் சிவந்தவிழிப் பொறிசிதறக் கடுகடுத்து மறவோ னோக்கி
யந்தமிலாப் பொருள்கொடுபோய் நல்லவயப் பரிகொடுவந் தழகி தாகத்
தந்தனையன் றோவரச கருமமுடித் திசைநிறுத்தத் தக்கோர் நின்போ
லெந்தவுல குளரேயோ வெனவெகுண்டா னதுகேட்ட வீசன் றொண்டர்.

(இ-ள்.) தம்மருகில்வந்த வாதவூரரை சிவந்த கண்களினின்றுந் தீப்பொறி பறக்க வீரனாகிய அரிமர்த்தனன்பார்த்து நீ அளவற்ற திரவியங்களை எடுத்துக்கொண்டு சென்று நல்ல வெற்றிபொருந்திய குதிரைகளைக் கொண்டுவந்து அழகாகத் தந்தாயல்லவோ! ராஜகாரியங்களை நிறைவேற்றிக் கீர்த்தியை நிலைநாட்டத்தக்கவர் நின்னைப்போல எந்த வுலகத்தி லிருக்கின்றார்களோ என்று கூறிக்கோபித்தனன். அதைக்கேட்ட வவ் வீசனடியவர். எ-று. (௪௩)

குற்றமே தப்புரவிக் கெனக்கேட்டார் கோமகனுங் குற்ற மேது
மற்றதா லரையிரவி னரியாகி யயனின்ற புரவி யெல்லாஞ்
செற்றுவார் குருதியுக நிணஞ்சிதறக் குடர்பிடுங்கித் தின்று நேர்வந்
துற்றபேர்க் கூற்றமிழைத் தூர்கலங்கக் காட்டகத்தி லோடிற் றன்றே.

(இ-ள்.) அந்தக் குதிரைக்குக் குற்ற மென்னவென்று கேட்டனர். உடனே அரசனும் அவை குற்றமற்றவைகளே! அதனாலேதான் பாதி இரவில் எல்லாம் நரிகளாகி, பக்கத்தினின்ற பழைய குதிரைகளையுங்கொன்று, ஒழுகாநின்ற இரத்தம் சிதற நிணமானது சிந்த குடலைப்பிடுங்கித் தின்று, நேரே வந்து தடுத்தவர்களுக்கும் இடையூறுகளை செய்து, ஊர்முழுதுங் கலங்கும்வண்ணங் காட்டியோடின. எ-று. (௪௪)

கண்ணுமிடு கவசமும்போற் காரியஞ்செய் தொழுகியதுங் காலம் பார்த்தெம்
மெண்ணரிய நிதியீட்டங் கவர்வதற்கோர் நின்னமைச்சி னியற்கை நன்றாற்
புண்ணியவே தியர்மரபிற் பிறந்தனமென் றொருபெருமை பூண்டா யேநீ
பண்ணியகா ரியம்பழுதுபிறராகிற் றண்டிக்கப் படுவ ரென்றான்.

(இ-ள்.), கண்ணையும் இட்ட கவசத்தையும்போல எங்காரியஞ்செய்து கொண்டு நடந்ததும், சமயம்பார்த்து எமது அளவற்ற திரவியங்களையெல்லாம் அபகரித்தற்குத்தானோ? உனது மந்திரித்தன்மை நன்றாக விருக்கின்றது! நாம் புண்ணியத்தினையுடைய பிராமணகுலத்திற் பிறந்தோமே என்று ஒரு அகம்பாவங் கொண்டனையே! நீ செய்த காரியம் தப்பானது; இக்காரியம் பிராமணனாகிய நீ அல்லாது வேறே யாராவது செய்திருந்தால் (சிரச்சேதனமாகிய) தண்டனையை அடைவார்கள் என்று கூறினான்.

தண்டலா ளர்களிவனைக் கொடுபோய்நம் பொருண்முழுதுந் தடுத்து மீர்த்து
மிண்டினல் வலிசெய்தும் வாங்குமென வெகுண்டரசன் விளம்பக் கூற்று
மண்டுமேன் மறஞ்செய்யும் வலியுடையார் கதிரையிரு ளடுத்துப் பற்றிக்
கொண்டுபோ னாலென்னக் கொடுபுறம்போ யறவோரைக் கொடுமை செய்வார்.

(இ-ள்.) தண்டற்காரர்களே, இவனைக்கொண்டுசென்று நம்முடைய பணத்தையெல்லாம், தடுத்தும் இழுத்து மிண்டுடன் பலாத்காரப்படுத்தி வாங்குங்கள் என்று கோபித்துக்கொண்டு அரசன் கூறுதலும், எமனும் அருகில் வருவானானால் தமது வீரத்தைக்காட்டவல்ல வலிமையினையுடையவர்கள்; சூரியனை இருட்டானது அணுகிப்பிடித்துக்கொண்டு போனாற்போல் மாணிக்கவாசகப்பெருமானைப்பிடித்துக்கொண்டு சென்று துன்பப்படுத்துகின்றார்கள். எ-று. (ருசசு)

கதிர்நோக்கிக் கனன்மூட்டுங் கடும்பகலுச் சியிலிரவிக் கடவு ணேர்நின்
றெதிர்நோக்க நிலைநிறுத்திக் கரங்களிலு நுதலினுங்கல் லேற்றிச் செந்தீப்
பிதிர்நோக்கத் தவரொறுப்ப வாற்றாராய் வீழ்ந்திருளைப் பிளப்போன் செந்தீ
மதிநோக்கத் தனிச்சுடரை யழைத்தழுது துதிசெய்வார் வாத வூரர்.

(இ-ள்.) சூரியனது உஷ்ணகிரணங்களைக்கொண்டு தீயைப்பற்றச்செய்கின்ற கொடிய பகலான மத்தியானப்பொழுதில் சூரியனெதிரைநோக்கிக்கண்பார்வைபடும்படி நிறுத்தி, கைகளிலும் நெற்றியிலும் கற்களையேற்றி, செந்தீயைக் கக்குகின்ற கண்களையுடைய அத்தண்டற்காரர்கள்தண்டிக்க அதனாற்றுளாதவராகி வாதபுரேசர்கீழேவிழுந்து இருட்டைப்பிளக்கின்ற சூரியனையும் அக்கினியையும் சந்திரனையும் கண்களாகவுடையவரை (சுட்டி)அழைத்து அழுது துதித்தனர். எ-று. (ருசஎ)

### கோச்சகக்கலிப்பா.

நாதவோ நாத முடிவிறந்த நாடகஞ்செய்
பாதவோ பாதகனை யென்னைப் பணிகொண்ட
வேதவோ வேத முடிவின் விளைந்ததனிப்
போதவோ போத நெறிகடந்த பூரணவோ.

(இ-ள்.) ஓ! நாதரே! நாதத்திற்கு அப்பாற்பட்ட இடத்தில் நடக்கின்ற பாதங்களையுடையவரோ! பாதகனாகிய அடியேனை அடிமையாக்கிக்கொண்ட ஞானரூபரோ! வேதாந்தத்திலே உண்டான ஒப்பற்ற போதரூபரோ! மார்க்கமில்லாமனிறைந்தபூரணரோ! ஓ – புலம்பலில்வந்த விடைச்சொல். (ருசஅ)

ஐயவோ வென்னுடைய வன்பவோ வன்பர்க்கு
மெய்யவோ மெய்யில் வினையேன் றலைவைத்த
கையவோ செய்யகழற் காலவோ காலனைக்காய்
செய்யவோ வேதப் பரியேறுஞ் சேவகவோ.

(இ-ள்) ஐயரோ! என்னுடைய அப்பரே! அன்புள்ளவர்களுக்கு மெய்யானவரோ! உண்மையில்லாதபாவியேன் றலைமீது வைத்தகையினையுடையவரோ! செவ்வியகழலணி

ந்தகாலினையுடையவரே! காலனை அழித்த செம்மையானவரே! வேதாசுவத்திலேறுகின்ற வீரரே. எ-று. (சுக)

அத்தவோ கல்லாக் கடையேனை யாட்கொண்ட
பித்தவோ பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ்
சித்தவோ சித்தந் தெளிவித் தெனைத்தந்த
முத்தவோ மோன மயமான மூர்த்தியவோ.

(இ-ள்.) அத்தரே! கல்லாத கடையவனை ஆளாக்கிக்கொண்டபித்தரே! பொய்யுலகை மெய்யாக பேதிக்குஞ் சித்தரே! மனத்தெளிவை யுண்டாக்கி என்னை எனக்களித்த முத்தரே! மேன்மையான மூர்த்தியே. எ-று. (ருo)

கலிவிருத்தம்.

என்றேறிய புகழ்வேதிய ரிரங்குந்துதி செவியிற்
சென்றேறலும் விடையேறுசுந் தரன்மற்றிவர் செயலை
மன்றேறவு முடிமேனதி மண்ணேறவு முதியா
ளன்றேறிய தேரோடும்விண் ணடைந்தேறவு நினைந்தான்.

(இ-ள்.) இவ்வண்ணமாக மிக்க புகழினையுடைய அந்தணரான வாதபுரேசர் அழுதுரைத்த துதிமொழிகள் திருச்செவியில் வந்து பட்டவுடனே, இடபத்தை ஏறி நடத்துகின்ற சோமசுந்தரப்பெருமான் இவரது சரித்திரத்தின்றிறம் கனகசபையிலேறுதற்கும், தமது முடியின்மீது வையையாற்றிலுள்ளமண்ணேறுதற்கும்,பிட்டு வாணிச்சியான கிழவி அத்தினத்திலேயே சிறந்த விமானத்திலேறிக்கொண்டு சிவலோகமடைதற்கு ஆகாயமார்க்கத்தில் வழிக்கொள்ளவும் தமது திருவுள்ளத்தில் நினைத்தனர். எ-று.

கங்கைப்புனல் வடிவாகிய கவ்வைத்திரை வைகைச்
சங்கச்சரி யறலாமலர்த் தாரோதியை நோக்கா
வங்கக்கடல் பேரூழியில் வருமாறென வெவரு
மிங்கற்புத மடையப்பெரு கென்றானருள் குன்றான்.

(இ-ள்.) அருளிலக்கணத்திற்குறையாத சோமசுந்தரப்பெருமான் கங்கையாற்றின் உருவமானவளும் வைகையென்று பேருள்ளவளுமான சங்குகளாகிய வளையலினையும் கருமணலெனக்காகிய மலரணிந்த கரிய கூந்தலினையும் உடையவளை(நதிமாதினை)ப் பார்த்து, நீ கப்பல்களைத் தன்னிடத்திலுள்ள கடல் பெரியபிரளயகாலத்தில் பெருகினாற்போல எல்லாரும் இவ்விடத்தி லாச்சரியமடையும் வண்ணம் பெருகக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (ருஉ)

தும்பைச்சடை முடியானொரு சொல்லாடவு முன்னாள்
வம்பைப்பொரு முலையால்வரி வளையால்வடு வழுத்துங்
கொம்பைத்தவங் குலைப்பானடுங் கோபங்கொடு நடக்குங்
கம்பைப்பெரு நதியிற்கடுங் கதியால்வரும் வைகை.

(இ-ள்.) தும்பைமலரையணிந்த சடாமுடியினையுடைய சோமசுந்தரக்கடவுள் ஒருமொழி கூறுதலும், முற்காலத்தில் கச்சோடு பொருகின்ற தனத்தாலும் கீற்றுக வுள்ள வளையல்களாலும் வடுவுண்டாக வழுத்திய பூங்கொம்பு போன்றவளது தவத்தைக்கெடுக்கும்பொருட்டு கொல்லத்தக்க கோபத்துடனே விரைந்து சென்ற பெரிய கம்பையாற்றைப்போல அதிவேகத்துடன் வைகையாறு வராநின்றது. எ-று. (ருஙு)

பத்திக்குளிர் கமுகின்குலை படியக்கரை முரியக்
குத்திப்பழஞ் சிதறச்செறி கோட்டங்களை வீட்டி

முத்திக்கொடு கதலிப்புதன் முதுசாலிகள் பரித்துத்
தத்திப்புல தருவேரொடுந் தள்ளிக்கடு கியதே.

(இ-ள்.) அவ்வாறு,வரிசையாகநிற்கிற குளிர்ச்சியினையுடைய கமுகின் குலைகள் சிதறவும், கனைகள் முரியக்குத்திப் பழங்கள்சிதற, கிளைகளையுடையமரங்களை ஒடித்து, முத்துக்களையுடைய கரும்புகளுடன் வாழைப்புதர்களையும் பழுத்த நெற்கதிர்களையும் பறித்தெடுத்துக்கொண்டு தத்தி பலமரங்களை வேரோடு வீழ்த்திக்கொண்டு, விரைந்து வந்தது. எ-று. (ருச)

பல்லாயிரஞ் செந்தாமரை பரப்பிக்கொடு வரலா
னல்லாயிரங் கண்ணனெழி னயக்குங்குளிர் நளினங்
கல்லாயிரங் கடிமுல்லையுங் கரும்புங்கொடு வரலால்
வில்லாயிரங் கொடுபோர்செயும் வேள்வீரனு மானும்.

(இ-ள்.) அவ்வாறு பல ஆபரணமான செந்தாமரைமலர்களைத் தன்மீது பரப்பிக்கொண்டு வருதலால்,நல்ல ஆயிரங்கண்களையுடைய இந்திரனுடைய அழகை ஒக்கும். குளிர்ச்சிபொருந்திய தாமரைமலர்களுடன் நீலோற்பலத்தையும் மணம்பொருந்திய முல்லைமலரையுங் கரும்பையுங் கொண்டுவருதலால்,அநேகம் விற்களைக்கொண்டு போர் புரிகின்ற மன்மதனையும் ஒக்கும். எ-று. (ருரு)

மணிமாலையு மலர்மாலையுஞ் சிதறுவிறு மருங்கே
யணிகாஞ்சியு மொளிர்சங்கமு மலறப்புடை யெறியாக்
கணியாவெழின் முகமாதரை கண்ணீரொடுங் கவிழத்
தணியாமுனி வுடனூடிய தடங்கண்ணியர் போலும்.

(இ-ள்.) இவ்வகை,மணிமாலைகளையும் மலர்மாலைகளையுஞ் சிதறிக்கொண்டு உடையப்பட்ட கரைகளின் பக்கத்திலுள்ள அழகிய காஞ்சி விருக்ஷங்களும் சங்குகளும் இரைய, பக்கங்களிற் சிதறி அளவிடப்படாத முகம்போன்ற தாமரைகளின் தேன் நீருடனே சேரும்படி கவிழாநிற்க நீங்காத கோபத்துடனே பிணங்கிய விசாலமான பெரிய கண்களையுடையவர்களை ஒக்கும். எ-று.

இவ்வாறு, பெண்களுடலில் மணிமாலைகளையும் மலர்மாலைகளையுஞ் சிதறுதலைப்போல சிதறி, அளவிடப்படாத முகதாமரையினின்று மவர்கள் கண்ணீரைச்சிதறுதலைப்போல, தானும் கள்ளாகிய நீரைச்சிதறி, அவர்களழுகையுடன்முகத்தைக் கவிழ்ச்செய்துகொண்டு செல்லுந்தொழிலைப்போல தானும் பூவாகிய முகத்தைக்கவிழ்த்துக்கொண்டு செல்லுதலால் ஊடுமாதருக்கிணையானதென்று உத்ப்ரேக்ஷித்தார். (ருசு)

வரையுந்திய மதுமுல்லையி னெய்பாலுயிர் மருதத்
தரையுந்திய கரும்பின்குறை சாறோடுவ ரன்றி
யிரையுந்தெழு தூநீர்வைகை யிந்நன்னகர் வைகுந்
திரையுந்தெழு கடறம்மிடஞ் சென்றுலவை போலும்.

(இ-ள்.) மலைகளிலுள்ள சிறந்த தேனும், முல்லையிலுள்ள நெய்யும் பாலும் தயிரும்,கழனிகளையுடைய மருதத்தினின்று தள்ளிகொண்டு வரப்பட்ட கருப்பங்கழிகளையும் ரசங்களையும் வாரி இரைச்சலிட்டுக்கொண்டு வருகின்ற நல்ல சீரினையுடைய வைகையானது, இந்த நல்ல மதுரா்நகரத்திலிருக்கின்ற ஏழுகடல்களும் தம்மிடங்களுக்குப் பிரயாணமானது லதனை ஒக்குமென்று கூறும்வண்ணம் சென்றது. எ-று. (ருஎ)

கல்லென்றதிர் சும்மைப்புனல் கடிமாமதிற் புறம்போ
யில்லங்களுஞ் சிறுதுச்சிலு மறித்திட்டிருங் கடல்வாய்ச்

செல்லுங்கல நாவாய்பல திமில்போற்சுமந் தேகிப்
புல்லும்புரி சையுந்தள்ளியுள் புகுகின்றதை யன்றே.

(இ-ள்.) கலியொன்ருெலிக்கின்ற வோசையினையுடைய அவ்வாறு, காவலினையுடைய பெரிய மதிலினருகிற்சென்று அங்குள்ள வீடுகளையும் சிறிய குடிசைகளையும் இடித்துத்தள்ளி,பெரியகடலிலோடுகின்றகப்பல்களும் பலபடகுகளுந் திமில்களுமென்று கூறும்வண்ணம் சுமந்துகொண்டுசென்று,ஊறொடுபொருந்திய மதிலையும் இடித்து உள்ளே பிரவேசிக்கின்றது. எ-று. (ருஅ)

மறுகும்பல பொருளாவண மணிவீதியு மன்றுஞ்
சிறுகுங்கண மதமாநிரை சேருந்தெரு வும்போய்
முறுகுஞ்சின மொடுதெண்டிரை மூரிப்புன லூவிக்
குறுகும்படி கண்டஞ்சினர் கொடிமாநக ருள்ளார்.

(இ-ள்.) வீதிகளையும் பலபண்டங்களையுடைய கடைவீதிகளான அழகிய வீதிகளையும் சபைகளையும் சிறுகிய கண்களையுடையவனவாகிய மதம்பொருந்திய யானைகள் போகின்ற வீதிகளையும் அடைந்து, மிக்க வேகத்துடன் தெள்ளிய திரைகளையுடைய மிகுதியான ஜலம் தாவிவருதலைக் கொடிகள்கட்டிய அந்நகரிலுள்ளவர்கள் கண்டு பயந்தார்கள். எ-று. (ருகூ)

சிலர்மைந்தரை யெடுப்பார்களுஞ் சிலர்மைந்தரைக் காணு
தலமந்தழு வாருஞ்சில ரங்கைத்தளிர் பற்றிக்
குலமங்கையர் தமைக்கொண்டுயப் போவார்களுங் குறுகுந்
தலமெங்கெனத் திகைப்பார்களுந் தடுமாறுகின் றாரும்.

(இ-ள்.) சிலர் பிள்ளைகளை எடுப்பவர்களும், வேறு சிலர் பிள்ளைகளைக் காணாமல் அலமந்து அழுபவர்களும், சிலர் தளிர்போன்ற அகங்கைகளைப் பிடித்துக்கொண்டு குலமங்கையர்களுடன் பிழைத்துக்கொள்ளும்பொருட்டு செல்கின்றவர்களும், சிலர் நாமெங்கேபோவது என திகைப்பவர்களும்,சிலர் தடுமாறுபவர்களுமாக ஆனார்கள். எ-று.

பொன்னுள்ளன பணியுள்ளன பொருள்பேணல்செய் வாரு
மின்னுஞ்சில பொருள்கைக்கொள மறப்பார்களு மாட
மின்னுங்கொடி நெடுமாளிகை மேலேறுகின் றாரு
மிந்நன்னகர் துயர்மூழ்குதற் கேதேதுவென் பாரும்.

(இ-ள்.) பொன்னாகவுள்ளனவும் ஆபரணமாகவுள்ளனவும் ஆகியபொருள்களைக் காப்பாற்றுபவர்களும்,நிலைபெற்றசிலபொருள்களை எடுத்துக்கொள்ளுதற்கு மறப்பவர்களும்,கொடிகள்விளங்காநின்ற மாளிகைகளின்மேலே ஏறிக்கொள்பவர்களும்,இந்தநல்ல நகரம் துன்பத்தையடைதற்குக்காரணம் என்னவென்று கேட்பவர்களும் ஆயினார்கள்.

நேற்றும்பரி நரியாயின நெடுமாநக ரெங்கு
மூற்றஞ்செய்த வென்பார்களு மொருகாலமு மிந்த
வாற்றின்பெருக் கிலையென்றயர் வாருங்கட லரசன்
சீற்றங்கொடு முன்போல்வருஞ் செயலேகொலென் பாரும்.

(இ-ள்.) நேற்றுங் குதிரைகளெல்லா நரிகளாகவாயின, இப்பெரிய ஊர்முழுமையுந் துன்பமடையச்செய்தன என்பவர்களும், எந்தக்காலத்திலும் இப்படிப்பட்டபிரவாகம் இந்த ஆற்றிலில்லையென்றுகூறி அயர்பவர்களும், வருணன்முன்னே கோபங்கொண்டு இங்கேவந்ததுபோல வந்ததோ என்பவர்களும் ஆயினார்கள். எ-று. (சுஉ)

நங்கோமகன் செங்கோல்பிழைத் தனனோவென நவில்வா
ரங்கோல்வளை பங்கன்விளையாட்டோவென வறைவா

ரிங்காரிது தணிப்பாரென விசைப்பாரிது தணிப்பான்,
பொங்காலமுண் டருள்சுந்தர னலதியாரெனப் புகல்வார்.

(இ-ள்.) நமது அரசன் செங்கோன்மையிற் பிழைத்தனனே என்றுகூறுவார்கள்; அழகியவளையலணிந்த திருக்கரங்களையுடைய அம்பிகாபங்கரது திருவிளையாட்டோ என்பார்கள்; இதனை இவ்விடத்திலார் தணிப்பவர்களென்று கூறுவார்கள். இதனை அடக்குபவர் சிறியவிடத்தை யுண்டருளின சோமசுந்தரரான சிவபெருமானையன்றி வேறுருளர் என்று கூறுவார்கள், எ-று. (௬௩)

அடுத்தாயிரங் குண்டோதர ரெதிரேற்றிருந் தகல்வாய்
மடுத்தாலுமி தடங்காதென மதிப்பாரிது தனையு
மெடுத்தாயிர முககங்கையி னிறைவன்சடை யேறக்
கொடுத்தாலல தடங்காதிதன் கொடுங்கோபம தென்பார்.

(இ-ள்.) இப்பொழுது ஆயிரங்குண்டோதரர்கள் எதிரேவந்திருந்து பெரியவாயில் விட்டுக்கொண்டாலும் இது அடங்காதென்று எண்ணுவார்கள்;இந்தபிரவாகத்தையும் இறைவனார் ஆயிரமுகங்களையுடைய கங்கையாற்றைப்போல திருச்சடையின்மீதேறும் வண்ணம் இடங்கொடுத்தாலல்லாமல் இதனதுகொடியகோபமடங்காது என்றுகூறுவார்கள் எ-று. (௬௪)

வானூறிழி நதியாயிர முகத்தால்வரு வதுபோ
லானூதெழு நீத்தந்தணி யாவாறுகண் டன்பு
தானாகிய சிவனன்பரை யொறுக்குந்தறு கண்ணர்
போனார்தம தகத்தேயுள பொருள்பேணுதல் கருதா.

(இ-ள்.) ஆகாயத்தின்வழியாக விறங்கியகங்கை ஆயிரமுகத்துடன் வந்தாற்போல, நீங்காமலுண்டான பிரவாகம் குறையாது அதிகமாதலைப்பார்த்து, அன்பே வடிவமான சிவனடியவரைத் தண்டியாநின்ற அஞ்சாமையினையுடைய தண்டற்காரர்கள் தமது வீடுகளிலுள்ள பொருள்களைப் பத்திரஞ்செய்யும்பொருட்டுச் சென்றார்கள். எ-று.(௬௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வழுதிதன் றமர்விட் டேக மதுரைநா யகன்பா லேகி
யழுதிசை பாடுந் தொண்டி லகப்படும் பாதம் போற்றித்
தொழுதுகொண் டறிவா யூறுஞ் சுகப்பெருங் கடலின் மூழ்கி
யெழுதுசித் திரம்போன் மன்னி யிருந்தனர் வாத வூரர்.

(இ-ள்.) பாண்டியனது ஊழியர்கள் தன்னை விட்டுப்போனவுடனே சோமசுந்தராலயத்தை யடைந்து இரக்கத்துடன் இசைபாடாநின்ற அடியவரான மணிவாசகப்பெருமான், பத்தித்தொண்டுக் ககப்படுகிற இறைவன் திருவடிகளைத் துதித்து தொழுதுகொண்டு அறிவின்மயமாக வூறுகின்ற அழகிய சுகமாகிய கடலிலே முழுகி எழுதிய சித்திரத்தைப்போல இருந்தனர். எ-று. (௬௬)

பரிநரியாக்கியபடலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் – உ௬௬௨.

அறுபத்தொன்றாவது,

# மண்சுமந்தபடலம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பண்சு மந்தமறை நாட ரும்பொருள்ப தஞ்சு மந்தமுடி யார்மனம்
புண்சு மந்ததுயர் தீர வந்தபரி நரிக ளாயடவி போனபின்
விண்சு மந்தசுர நதியெ னப்பெருகு வித்த வைகைபுரி திவிடையவன்
மண்சு மந்துதிரு மேனி மேல்டிவ டுச்சு மந்தகதை யோதுவாம்.

(இ-ள்.) இசையினையுடைய வேதங்களாலேயுந் தேடியுணர்தற்குக்கூடாத பரம்பொருளின் திருவடிகளை உச்சிமேற்கொண்ட வாதபுரேசரது மனம் புண்ணாகியிருந்த துன்பந்தீரவந்த குதிரைகள் நரிகளாகிக் காட்டுக்குட்சென்றதற்குப்பின்பு, ஆகாயத்தாலே தாங்கப்பட்ட தேவகங்கையைப்போல பிரவாகமாகச்செய்த வைகையாற்றின் தன்மையிது. இனி இடபவாகனராகிய சிவபெருமான் மண்ணைச்சுமந்து திருமேனியின்மீது அடித்தழும்படைந்த கதையைச் சொல்லுகின்றோம். எ-று. (க)

கருங்க டற்றிரையி டைக்கி டந்துசுழல் கலமெ னக்ககன முகடளாய்
வரும்பு னற்பரவை யுட்கி டந்துநகர் மறுகி யுட்கமற வேலினா
னெருங்க மைச்சரைவி ளித்து நீர்கரைசு மந்தொ துக்கிவரு மோதநீர்ப்
பொருங்க தத்தினைய டக்கு வீரெனவ மைச்ச ருந்தொழுது போயினார்.

(இ-ள்.) கரிய கடலின் அலையினடுவிற்கிடந்து சுழலாநின்ற கப்பலைப்போல, அண்டமுகட்டை அளாவிவந்த பிரவாகப்பரப்பினுள்கிடந்து அவ்வூர் மறுக்கங்கொண்டு வருந்த வீரம்பொருந்திய வேற்படையினையுடைய பாண்டியன் மந்திரிமார்களை யெல்லாம் ஒன்றாக அழைத்து நீங்கள் கரையைப்பெரிதாக மண்சுமந்திட்டுக்கட்டி வராநின்ற ஓதத்தோடுகூடிய வெள்ளத்தின் பெரிய வேகத்தினை அடக்குங்களென்று கூறினான். உடனே அவர்களும் அவ்வாறே செய்கின்றோமென்று அவனை வணங்கிச்சென்றார்கள்.

வெறித்த டக்கைமத யானை மந்திரிகள் வேறு வேறுபல குடிகளுங்
குறித்தெ டுத்தெழுதி யெல்லை யிட்டளவு கோல்கி டத்திவரை கீறியே
யறுத்து விட்டுநக ரெங்க ணும்பறையறைந்த ழைத்துவிடு மாளெலாஞ்
செறித்து விட்டவ ரவர்க்க ளந்தபடி செய்மி னென்றுவரு வித்தனர்.

(இ-ள்.) மதமயக்கம் பொருந்திய யானைப்படைகளையுடைய மந்திரிகளும் அன்றியுள்ள பலவகைக்குடிகளும், ஊரின் சுற்றளவு இத்தனை கோலென்று கணக்கிட்டுணர்ந்து எழுதிக்கொண்டு குடித்தொகையையுமெழுதி இந்த வீட்டுக் கித்தனை கோலென்று கணக்காக்கி கோலாலளந்து கோடுகிழித்து வெட்டிவிட்டு ஊர் முழுமையிலும் பறையறைந்து விளிப்பித்து வந்த கூலியாட்களையெல்லாம் ஒன்றாக நிறுத்தி அவரவர்க்கு அளந்தபடியே செய்யுங்களென்று அழைத்தழைத்துச் சேர்த்தனர். எ-று. (ங)

மண்டொ டுங்கருவி கூடை யாளரும ரஞ்சு மந்துவரு வார்களும்
விண்டொ டும்படி நிமிர்ந்து வண்டுபடு விரிசு ந்தழைப லாலமுங்
கொண்ட திர்த்துவரு வாரும் வேறுபல கோடி கூடிய குழாமுநீர்
மொண்ட ருந்தவரு மேக சாலமென வருபு னற்கரையின் மொய்த்தனர்.

(இ-ள்.) மண்வெட்டிகளையும் கூடைகளையுங் கொண்டு வருபவர்களும், அருமரங்களைச்சுமந்து வருபவர்களும், ஆகாயத்தை யளாவும்படி வண்டுகள் மொய்த்த பசிய

தழைகளையும் வைக்கோல்களையும் சுமந்துகொண்டு ஆரவாரஞ்செய்துகொண்டு வருபவர்களும்,இவையன்றி வேறே பலவிதங்களினாலே கோடிக்கணக்காகச்சேர்ந்த கூட்டங்களும் நீரை மொண்டு குடிக்கவருகின்ற மேகக்கூட்டங்களைப்போல பிரவாகமாக வருகின்ற நீரின்கரையிலே மொய்த்துக்கொண்டார்கள். எ-று. (ச)

கிட்டு வார்பரிநி றுத்து வாரரவு ருட்டுவாரடிகி டத்துவா
ரிட்டு வார்தழைநி ரப்பு வார்விளியெ ழுப்பு வார்பறையி ரட்டுவார்
வெட்டு வார்மணலெ டுத்து வார்செலவெ ருட்டு வார்கடிது துடுமெனக்
கொட்டு வார்கரைப ரப்பு வாருவகை கூரு வார்குரவை குழறுவார்.

(இ-ள்.) அருகிற்செல்லுவார்கள். குதிரைக்கால்களை நடுவார்கள். பழுதைகளைத் திரிப்பார்கள். மண்ணைவெட்டி அடியிலே போடுவார்கள். அதன்மேலே நீண்ட தழைகளைக்கொட்டி நிரப்புவார்கள். கூக்குரலிடுவார்கள். தமுக்கடிப்பார்கள். வெட்டுவார்கள். மணலைவாரிக்கொண்டு போவார்கள். போம்வண்ணம் அதட்டுவார்கள். விரைவாகத் துடுமென்றுகேட்க சுமந்துகொண்டு வந்தவற்றைக் கொட்டுவார்கள். கரையை விசாலமாகச் செய்வார்கள். நமது பங்கடைந்ததேயென்று சந்தோஷமடைவார்கள். குரவை இடுவார்கள். எ-று. (ரு)

கட்டு வார்கரையு டைப்ப நீர்கடுகல் கண்டு நெஞ்சதுக லங்குவார்
மட்டி லாதமுனி வென்னை யன்னையினி யாறு கென்றெதிர்வ ணங்குவார்
கொட்டு வார்மணலு டைப்ப டங்கமகிழ் கொள்ளு வார்குரவை துள்ளுவா
ரெட்டு மாதிரமு மெட்ட வாயொலியெ ழுப்பு வார்பறையி ரட்டுவார்.

(இ-ள்.) கட்டப்பட்ட நீண்ட கரையுடையும்வண்ணம் வெள்ளம்பெருகி வருதலைக்கண்டுமனங்கலங்குவார்கள். அளவில்லாத கோபமென்னை அன்னையே இனி ஆறுக என்று அவ்வெள்ளத்தின் எதிரே வணங்குவார்கள். உடைப்படைபடும்படி மணலைக்கொட்டுவார்கள். அதனால்மகிழ்வடைவார்கள். குரவையாடுவார்கள். அட்டதிக்குகளிலும்சென்றுசேரும்வண்ணமாக வாயினின்றும் ஓசையை யுண்டாக்குவார்கள். தமுக்கடிப்பார்கள்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இந்நிலை யூரி னுள்ளார் யாவர்க்கு கூலி யாளர்
துன்னிமுன் னளந்த வெல்லைத் தொழின்முறை மூண்டு செய்வா
ரந்நிலை நகரின் றென்கீழ்த் திசையுளா ளாவி லாண்டு
மன்னிய நரைமூ தாட்டி யொருத்திபேர் வந்தி யென்பாள்.

(இ-ள்.) இவ்வண்ணம் அவ்வூரிலுள்ளவர்களுக்கெல்லாங் கூலியாட்கள் நெருங்கிவந்து மந்திரிமார்களாலும் பிறஜனங்களாலும் முன்னே அளக்கப்பட்ட அளவினளவு அடைக்குந் தொழின்முறைமையை முயற்சியொடு செய்கின்றார்கள். அந்த ஊரின் அக்கினிமூலையிலே வாழ்பவள் அநேக வயதானவளாக விருப்பவள் நரைத்த கிழவி வந்தியென்று பேருள்ளவள். எ-று. (எ)

செவியுண வான வேத சிரப்பொரு ளுணர்ந்து செந்தீ
யவியுண வூட்டு மீச னன்பரி னுற்ற நோற்ற
தவநிறை பேறு துய்ப்பா ராயிலார்க் கன்னை யொப்பாள்
சுவையுறு பிட்டு விற்றுண் டொழிலினா டமிய ளாவாள்.

(இ-ள்.) செவிக்குணவாகவுள்ள வேதத்தின் தலையிலே விளங்காநின்ற பரமேசுவரனை அறிந்து செவ்விய அக்கினியி லவிசினை உணவாக நிவேதிக்கின்ற அடியவர்க

ளைப்போல மிகவுஞ்செய்த நிறைந்த தவத்தின்பேற்றை யநுபவிப்பவள் வேறே யாருந் திக்கில்லாதவள். எ-று.

தாயிலார் – தமக்குமேற் காரணரில்லாத கடவுள். (அ)

வைகலு மவித்த செவ்விப் பிட்டினை மருங்கு நான்கு
கைகளாய் முளைத்த முக்கட் கரும்பினை யரும்பு மூரற்
செய்கதிர் முகத்தா னந்தத் தேறலை யால வாயெம்
மையனை யகத்தா னோக்கி யன்பினா லருத்தி விற்பாள்.

(இ-ள்.) தினந்தோறும் வேகவைத்த நல்ல ருசியோடுகூடிய பிட்டினை,பக்கங்களிலே நான்கு கைகளாக முளைத்துள்ள மூன்று கண்ணோடுகூடிய கரும்பிற்கு அரும்பப்பட்ட மூரலினையுடைய ஒளிபொருந்திய முகத்துடன் ஆனந்தமாகிய மதுவை ஆலவாயிலெழுந்தருளி யிருக்கின்ற எமது ஐயனை உளக்கண்ணாற்பார்த்து அன்பினாலே நிவேதிப்பவள். எ-று. (கூ)

வளைந்தமெய் யுடைய வந்த மாதவ நரைமூ தாட்டிக்
களந்தபங் கடைப்பான் கூலி யாள்கிடை யாம லாற்றத்
தளர்ந்தினி யென்னே மன்னன் றண்டிக்கி னென்செய் கேனென்
றுளந்தடு மாறிக் கூட லுடையநா யகனை யுன்னா.

(இ-ள்.) கூனிய உடலினையுடைய நரையோடுகூடிய அந்த மாதவத்தினையுடைய கிழவிக்கு அளந்துள்ள பங்கினை அடைத்தற்கு கூலியாள்கிடையாமையினாலே மிகவும் வருந்தி இனி என்செய்வது மன்னவன் தண்டிப்பானே அதற்கினி என்செய்வேனென்று மனந்தமொறி கூடன்மாநகரையுடைய இறைவனை நினைத்து. எ-று. (க0)

பிட்டுவிற் றுண்டு வாழும் பேதையே னிடும்பை யென்ப
தெட்டுணை யேனு மின்றி யிரவியெங் கெழுகென் றின்னுண்
மட்டுநின் னருளா லிங்கு வைகினேற் கின்று வந்து
விட்டதோ ரிடையூ றைய மீனவ னாணை யாலே.

(இ-ள்.) பிட்டினை விற்று அதில்வரும் லாபத்தைக்கொண்டு சீவனஞ்செய்கின்ற அறிவிலியாகிய நான் துன்பமென்பது ஒரெள்ளளவும் இல்லாமல், சூரியன் எந்தப்பக்கத்திலே உதிக்கின்றானென்றுகூட சிந்தியாமல் இத்தினம் வரைக்கும் உனது கிருபையினாலே இங்கே இருந்த வெனக்கு பாண்டியனதுகட்டளையாலே ஐயனே! ஒரு இடையூறுண்டாகிவிட்டது. எ-று. (கக)

துணையின்றி மக்க ளின்றித் தமரின்றிச் சுற்றமாகும்
பணையின்றி யென்று கொள்வார் பிறரின்றிப் பற்றுக் கோடாம்
புணையின்றித் துன்பத் தாழ்ந்து புலம்புறு பாவி யேற்கின்
றிணையின்றி யிந்தத் துன்ப மெய்துவ தறனோ வெந்தாய்.

(இ-ள்.) துணையும் இல்லாமல் மக்களுமில்லாமல் சுற்றமுமில்லாமல் பந்துக்களென்னுங் கிளைகளும் இல்லாமல் ஆதரிப்பவர்களும் வேறே யாருமில்லாமல் ஆதாரமான புணையும் இல்லாமல் துன்பத்திலே மூழ்கிப்புலம்பாநின்ற பாவியான எனக்கு இன்று ஒப்பில்லாத இந்தத்துன்பமுண்டாகுதல் தருமமோ எந்தையே! எ-று. (கஉ)

தேவர்க்கு மரிய னாகுந் தேவனே யன்ப ராவார்
யாவர்க்கு மெளிய னாகு மீசனே வேந்த னாணைக்
காவற்செங் கோலார் சீற்றங் கடுகுமுன் கூலி யாளா
யேவற்செய் வாரைக் காணே னேழையே னினியென் செய்கேன்.

(இ-ள்.) தேவர்களுக்கும் அரியவனாகிய தேவனே! அன்பர்களாக வுள்ளவர்களுக்கெல்லாம் எளிமையானவனாகியவீசனே! அரசனது காவலாளராகிய செங்கோலினையுடையவர்களின் கோபந்தோன்றுதற்கு முன்னே கூலியாளாகப்போந்து ஏவல் செய்பவர்களைக்கண்டிலேன்; எளியவளாகிய நான் இனி என்னசெய்யப்போகின்றேன். எ-று.

கூலியாள் வருவ துண்டோ வென்றுதன் கொங்கை முற்றத்
தாலிபோற் கண்ணீர் சோர்வாள் குறித்துமுன் பருத்தும் பிட்டை
வேலைநீர் ஞாலங் காண மிசைந்தவ ளிடும்பை தீர்ப்பான்
பாலினேர் மொழியாள் பாக மறைத்தருட் படிவங் கொள்வான்.

(இ-ள்.) கூலியாளாக வருபவர்க ளிருக்கின்றார்களோவென்று தன்னிரண்டு கொங்கைகளின்மீது மழைநீரைப்போல கண்ணீரொழுக நிற்பவள் முன்னே மனத்தினால் நிவேதித்த பிட்டையெல்லாம்,இப்பொழுது கடல்சூழ்ந்த உலகிலுள்ளவர் காணும் வண்ணம் தின்று, அவள் துன்பத்தை ஒழிக்கும்பொருட்டு இறைவன் சோமசுந்தரத் திருக்கோலத்தை மறைத்து வேறே ஒரு திருக்கோலங்கொள்கின்றனர். எ-று. (௧௪)

குறட்குநீ ரருத்தி வைகைக் குடிஞையா யொழுகுங் கங்கை
யறற்குழல் பிரிவி னாற்றா தன்பினா லவளைக் காண்பான்
மறக்கய னெடுங்க ணாளை வஞ்சித்து வடிவ மாறிப்
புறப்படு வானைப் போலப் போதுவான் போத மூர்த்தி.

(இ-ள்.) ஞானமூர்த்தியான கடவுள் குண்டோதரனுக்கு நீரூட்டி வைகையென்னும் பேருள்ள ஆறாக ஓடுகின்ற கங்கையாகிய கருமணற்கூந்தலாளின் பிரிவினுக்கு ஆற்றாமல் விருப்பத்துடன் அவளைக் காணும்பொருட்டு வீரத்தோடுகூடிய நெடிய மீனாட்சியை வஞ்சித்து வேற்றுருவங்கொண்டு வந்தாற்போல வருகின்றனர். எ-று. (௧௫)

கோச்சகக்கலிப்பா.

அழுக்கடைந்த பழந்துணியொன் றரைக்கசைத்து விழுத்தொண்டர்
குழுக்கடந்த விண்டநிகர் சுவைமயடைமேற் கூடைகவிழ்த்
தெழுக்கடந்து திசைகடந்திட் டிணைகடந்த திருத்தோண்மேன்
மழுக்கடைந்து விளங்கியவாய் மண்டொடுதிண் படையேந்தி.

(இ-ள்.) இடையிலே அழுக்கேறிய ஒருபழந்துணியைக்கட்டி, சிறந்த அடியவர்களின் கூட்டங்களணிந்த கொண்டைமாலைக்குச் சமானமான சும்மாட்டின்மீது கூடையொன்றைக் கவிழ்த்து, எழுவினையுந் திக்குக்களையும் கடந்த திருத்தோளின்மீது மழுவைப்போல கடையப்பட்டு விளங்கிய வாயோடுகூடிய மண்வெட்டியாகிய திண்ணிய படையொன்றைச் சுமந்து. எ-று. (௧௬)

திடங்காதல் கொண்டறவோர் திருவேள்வி தருமமுது
மிடங்காவல் கொண்டுறைவா ளருத்தமுது மினிதுண்டு
மடங்காத பசியினர்போ லன்னைமுலைப் பாலருந்த
மடங்காத பெருவேட்கை மகவுபோற் புறப்பட்டார்.

(இ-ள்.) முனிவர்களுறுதியான அன்புடனே செய்தளிக்கின்ற அழகிய யாகாமிர்தமும்,இடப்புறத்திலெழுந்தருளி யிருக்கின்ற உமாபிராட்டியாரருத்துகின்ற அமுதமும் நன்றாகவுண்டும் அடங்காத பசியுடையவனைப்போலவும்,மாதாவின் முலையுண்ணுதற்குச்சலியாத குழந்தையைப்போலவும் புறப்பட்டனர். எ-று. (௧௭)

ஆலுமறைச் சிரமுடியா ரடிக்கமல நிலஞ்சூடக்
கூலிகொடுத் தென்வேலை கொள்வாருண் டோவென்றென்

றேலமறைத் திருமொழிபோ லுரைபரப்பிக் கலுழ்கண்ணீர்
வேலையிடைப் படிந்தயர்வாள் வீதியிடத் தணைகின்றார்.

(இ-ள்.) பலவித பொருள்களைப் பிரதிபாதித்துக்கொண்டு சலிக்கிற வேதத்தின் தலையிலிருக்கிற திருவடி பூமியிற்பட நடந்து, கூலியையளித்து என்வேலையை வாங்கிக்கொள்பவர்கள் உண்டோ என்று கூப்பிடாநின்ற வேதத்தின் சிறந்த மொழியைப்போல், வாக்கியங்களை விரித்துக்கொண்டு ஒழுகாநின்ற கண்ணீராகிய கடலிலே விழுந்து வருந்துகின்ற வந்தி வாழ்கின்ற வீதியினிடத்திற்கு வந்தனர். எ-று. (௧௮)

தந்தைதாய் பிறரின்றி வருகின்ற தனிக்கூலி
மைந்தனார் வாய்மலருங் குரல்கேட்டு வந்தியுந்தன்
சிந்தையா குலமிழந்து நல்கூர்ந்தார் செல்வமகத்
தந்தபோ தெழுமகிழ்ச்சி தலைக்கொள்ளப் புறம்போந்தாள்.

(இ-ள்.) மாதாபிதாக்கள் வேறெயாருமில்லாமல்வராநின்ற ஒப்பற்ற கூலியாளராகிய வாலிபர் விளியாநின்ற விளியைக்கேட்டு வந்தியென்பவளுந் தன்மனோவிசாரத்தை விட்டு, தரித்திரர்கள்முன்னில்லாத செல்வத்தைப் புத்திரனாற்கிடைக்கப்பெற்றபோது அடைகின்றமகிழ்ச்சியைப்போல மிக்கமகிழ்ச்சியிற்சிறந்துவீட்டிற்குவெளியேவந்தனள்.

அன்னையெனத் தன்பாலின் னருள்சுரந்து வருகாளை
தன்னையழைத் தெனக்களந்த கரையடைத்துத் தருவாயோ
வென்னவிசைத் தனளாக வடைக்கின்றே னெனக்கன்னை
பின்னையதற் கிடுங்கூலி யாதென்றான் பெருமுதியாள்.

(இ-ள்.) மாதாவைப்போல தன்னிடத்தில் இனிய அருளைக்காட்டிக்கொண்டு வராநின்ற வாலிபனைவிளித்து (மகனே)! நீ எனக்கு அளந்திட்டிருக்கிற என்பங்கினை அடைத்துத்தருவையோவென்று கேட்டனள். உடனே அவர் மாதாவே! நானடைக்கின்றேன் அடைத்தாலெனக்கதற்காக நீங்கள்கொடுக்குங்கூலியென்ன? என்றனர். உடனே விருத்தையான வந்தி. எ-று. (௨௦)

பிட்டிடுவே னுனக்கென்றா ளதற்கிசைந்து பெரும்பசியாற்
சுட்டிடநான் மிகமெலிந்தேன் சுவைப்பிட்டி னுதிர்ந்தவெலா
மிட்டிடுவா யதுமுந்தத் தின்றுநா னிளைப்பாறிக்
கட்டிடுவே னின்னுடைய கரையென்றார் கரையில்லார்.

(இ-ள்.) நானுனக்குக் கூலியாகப் பிட்டுத்தருகின்றேன் என்றுகூறினாள். உடனே அவரதற்குச் சம்மதித்து,அன்னையே! நானிப்பொழுது பெரும்பசியாற் சுடப்பட்டு மிகவும் மெலிந்திருக்கின்றேனாதலா லிந்த ருசியோடுகூடியபிட்டில் உதிர்ந்தனவற்றையெல்லாம் எனக்குக்கொடு; முன்னே அதனைத்தின்று இளைப்பாறிப்பின்னர் உன்னுடையபங்கானகரையைக் கட்டுகின்றேனென்று எல்லையற்ற இறைவர் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (௨௧)

தெள்ளியடு சிற்றுண்டி சிக்கடைந்த பொதிநீக்கி
யள்ளியெடுத் தருந்தப்பா வென்றிட்டா ளரைக்கசைத்த
புள்ளியுடைத் துகினீத்தார் புறத்தானை விரித்தேந்தி
யொள்ளியதென் றவளன்பு முடன்கூட்டி யமுதுசெய்தார்.

(இ-ள்.) தெள்ளியெடுக்கப்பட்ட மாவினாற் சமைக்கப்பட்ட பலகாரத்தைச் சுடுதற்குவைத்திருந்த சிக்கத்திலிருந்த பொதியைநீக்கி வாரியெடுத்து நீ தின்னப்பா என்றளித்தனள். அதனை இடையிற்கட்டிய புள்ளியினையுடைய புலித்தோலாகிய ஆடையை

நீக்கி வேறுடைதரித்து வந்துள்ளவர் புறவாடையை விரித்து வாங்கி நல்லதென்று பிட்டிட்ட வந்தியினன்பையுங் கூடச்சேர்த் தருந்தினர். எ-று. (உஉ)

அன்னைமுலைத் தீம்பாலி னரியசுவைத் திஃதந்தத்
தென்னவரு முலகாண்ட திருவால வாயுடைய
மன்னர்பிரான் றனக்கேயா மெச்சுறென்று வாய்மலர்ந்து
சென்னியசைத் தமுதுசெய்தார் தீவாய்நஞ் சமுதுசெய்தார்.

(இ-ள்.) பெற்றமாதாவின் தனத்திலூறுகின்ற தித்திப்பான பாலைவிட இது இனிப்பானது அதனால் இது அந்தப்பாண்டியனுகவிருந்து உலகத்தை யாண்ட அரசர்க்கரசனுகிய திருவாலவாயுடையவனுக்கே அற்புதமானதென்றுசொல்லிக்கொண்டே தலையையசைத்துக்கொண்டு தீக்குணம்பொருந்திய விஷத்தை யுண்டபெருமான் பிட்டினை உண்டருளினர். எ-று. (உ௩)

தந்தையொடு தாயின்றித் தனிக்கூலி யாளாக
வந்தவெனக் கொருதாயா யருள்சுரந்து மாருத
விந்தவிளைப் பொழித்தனையே யினிவேலைத் தலைச்சென்றுன்
சிந்தைகளிப் பெழவேலை செய்வேனென் றிசைத்தெழுந்தார்.

(இ-ள்.) மாதாபிதாக்கள் இல்லாமல் தனித்துக் கூலியாளாக வந்துள்ள எனக்கு ஒருதாயாக அருள்சுரந்து நீங்காத இந்த இளைப்பினை நீக்கினையே! இனி நான் வேலைசெய்யும் இடத்திற்குச்சென்று உன்மனத்துக்கு மகிழ்வுண்டாகும்வண்ணம் வேலை செய்கின்றேனென்று கூறிப்போந்தனர். எ-று. (உச)

தந்திவாய் மருப்பிடறி வருங்குடிஞைத் தடங்கரையில்
வந்தியான் வந்தியா ளென்றேட்டில் வரைவித்துப்
புந்தியா லுரையானூற் பொருளினு லளப்பரிய
வந்திவான் மதிச்சடையார் கரையடைப்பா ராயினுர்.

(இ-ள்.) யானைகளின் வாய்களிலுள்ள கொம்புகளை சிதறிக்கொண்டு வராநின்ற பிரவாகத்தோடுகூடிய ஆற்றின் பெரிய கரைக்குச்சென்று நான் வந்திக்குக் கூலியாள் என்று ஏட்டிலெழுதுவித்துக்கொண்டு, மனத்தினுலும் வாக்கினுலும் சாத்திரார்த்தங்களாலும் அளந்து காணுதற்கு முடியாத மாலைக்காலத்தில் ஆகாயத்திலுதிக்கும் இளம்பிறையையணிந்த சடையினையுடைய சிவபெருமானுர் கரையடைக்கத்தொடங்கினுர். எ-று. (உரு)

வெட்டுவார் மண்ணைமுடி மேல்வைப்பார் பாரமெனக்
கொட்டுவார் குறைத்தெடுத்துக் கொடுபோவார் சுமடுவிழத்
தட்டுவார் சுமையிறக்கி யெடுத்ததனைத் தலைபடியக்
கட்டுவா ருடன்சுமந்து கொடுபோவார் கரைசொரிவார்.

(இ-ள்.) மண்ணை வெட்டாநிற்பர். வெட்டிய மண்ணை வாரித் தலையின் மீது வைப்பார். சுமையென்று கீழேவிழக் கொட்டுவார். கூடையிலிருந்ததிற் சற்றேகுறைத்துப் பின்னு மெடுத்துக்கொண்டு போவார். சுமையடை கீழே வீழுமாறு தட்டுவார். பின்னர் சுமையை இறக்கி சுமையடையை எடுத்து தலையிற்படியும் வண்ணம் கட்டுவார். பின்னும் மண்கூடையைத் தலைமேலேற்றிச் சுமந்துகொண்டுபோவார். கரையிற் கொட்டுவார். எ-று. (உசு)

இவ்வண்ண மிவரொருகா லிருகான்மண் சுமந்திளைத்துக்
கைவ்வண்ண மலர்கன்றக் கதிர்முடிமேல் வடுவழுந்த

மைவண்ண னறியாத மலரடிசெம் புனல்சுரந்து
செவ்வண்ணம் படைப்பவொரு செழுந்தருவின் மருங்கணைந்தார்.

(இ-ள்.) இவரிவ்வாறாக ஒன்றிரண்டுதரம் மண்ணைச்சுமந்து இளைத்து கையாகிய நிறம்பொருந்திய மலரானது கன்றவும், கதிரினையுடையதாகிய முடியின்மீது வடு வழுந்தவும், நீலநிறமுடையவனான திருமாலுணராத செந்தாமரைமலர்போன்ற திருவடி இரத்தஞ்சுரந்து செந்நிறம் அடையவும் ஒரு செழுமையான மரத்தினருகிற்சென்றனர்.

தருமேவு மலைமகளுஞ் சலமகளு மறியாமற்
திருமேனி முழுதுநில மகடீண்டித் திளைப்பெய்தக்
குருமேவு மதிமுடியைக் கூடையணை மேற்கிடத்தி
வருமேரு வனையார்தம் வடிவுணர்ந்து துயில்கின்றார்.

(இ-ள்.) மரங்கள் பொருந்திய மலைக்கு மகளாகிய பார்வதியாரும் கங்காதேவியாரும் உணராமல் திருமேனிமுழுது நிலமகள்தொட்டுப் புணர நிறம்பொருந்திய மதியையணிந்த முடியை கூடையாகிய அணையின்மீது வைத்துக்கொண்டு சலனத்தினையுடைய மேருமலையையொத்தவர் தமது உண்மை உருவத்தினை எண்ணிக்கொண்டு கண்ணுறங்குகின்றனர். எ-று. (உஅ)

அத்தருவே யாலநெடுந் தருவாக வலைபுரட்டித்
தத்திவரும் புனலடைப்பார் சனகாதி முழுதுணர்ந்த
மெய்த்தவராய்க் கண்களிப்ப மெய்யுணர்ச்சி மோனமயச்
சுத்தவுருத் தெளிவிப்பா ரெனத்துயிலுந் துயிலுணர்ந்தார்.

(இ-ள்.) அந்த மரமே நெடிய ஆலமரமாகவும் அலைகளைப்புரட்டிக்கொண்டு தத்திவாநின்ற பிரவாகத்தையடைப்பவர்கள் சனகாதி முற்றுணர்ந்த முனிவர்களாகவும் மகிழ்வடையும்படி உண்மை யுணர்ச்சியினாலாகிய மௌனவுருவத்தோடுகூடிய தனது யதார்த்தரூபத்தைத் தெளியச்செய்பவரைப்போல உறங்கும் உறக்கத்தை விட்டுணர்ந்தனர். எ-று. (உகூ)

ஆடுவார் சாமமெனத் தித்திக்கு மதுரவிசை
பாடுவார் நகைசெய்வார் தொழில்செய்வார் பராக்கடையக்
கோடுவார் மணல்குவிப்பார் குதிப்பார்தூ ளெழவடிபாய்ந்
தோடுவா ருடன்மீள்வா ருன்மத்த ரெனவிருப்பார்.

(இ-ள்.) ஆடாநிற்பர். சாமவேதத்தைப்போல இனிமையான இசைகளைப் பாடாநிற்பர். சிரியாநிற்பர். அங்குவேலைசெய்பவர்கள் வேலையைவிட்டு பராக்கடையும் வண்ணம் உடல்வளையாநிற்பர். மணலைக்குவியாநிற்பர். அவை தூளாம்வண்ணம் குதியாநிற்பர். காலடி விலக்கிவைத்துப் பாய்ந்தோடாநிற்பர். அத்துடனில்லாமல் திரும்பவரா நிற்பர். உன்மத்தங்கொண்டவரிருந்தாற்போல விருப்பர். எ-று. (௩௦)

வேலையினா லறவருந்தி யிளைத்தார்போன் மெய்வேர்வை
சாலமிசை மூச்செறிந்து வாயொலியாற் காற்றழைத்துச்
சாலநெடும் பசியினர்போற் றளர்ந்தடியா ளிடும்பிட்டின்
மேலடைந்த விருப்பினராய் மீண்டுமவள் பாலணைவார்.

(இ-ள்.) வேலையினாலே மிகவும் வருந்தி இளைத்தவனைப்போல திருமேனியில் வியர்வை ஒழுக மேன்மூச்சுவிட்டு வாயின் பூங்காரத்தாற் காற்றினையுண்டாக்கி மிகவும் அதிகமான பசியினையுடையவரைப்போல இளைத்து அடியவளாலே இடப்பட்ட பிட்டின்மீதுள்ள விருப்பத்தினராகி பின்னும் அவளிருக்கும் இடத்திற்கு வருவார். எ-று. ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இடும்பைநோய் வெள்ள நீந்தி யின்பநீர் வெள்ளத் தாழ்ந்த
கொடும்புற முதியாண் முன்போய்க் கூறுவார் கோலுக்கேற
விடம்படு கரைக ளெல்லா மடைபடு கின்ற வின்னங்
கடும்பசி யுடையே னன்னே பிட்டிடு கடிதி னென்றார்.

(இ-ள்.) பொல்லாங்காகிய துன்பநீரைக்கடந்து சந்தோஷமென்னும் நீரிலே முழுகிக்கிடக்கின்ற கூனியமுதுகினையுடைய வக்கிழவியினெதிரிற்சென்று விசாலமான கரைகளெல்லாம் அடைபடுகின்றன; இன்னங் கொடிய பசியுடையவனாக விருக்கின்றேன் மாதாவே! சீக்கிரமாகப் பிட்டுத்தாவென்றனர். எ-று. (கூஉ)

ஆங்கவ ளப்போ தட்ட சிற்றுண வளித்தா ளையன்
வாங்கியங் கையு நாவுங் கனலெழ வாயிற் பெய்து
பாங்கிரு கொடிறு மொற்றிப் பதமுறப் பருகிக் கொண்டு
நீங்கிமுன் போலப் போந்து நெடுங்கரை யடைக்க லுற்றார்.

(இ-ள்.) அவ்விடத்திலிருந்த அவள் அப்பொழுதுசமைத்த பிட்டினைக்கொடுத்தனள்; கடவுளதனைவாங்கி அகங்கையும் நாவுந் தீப்பறக்க வாயிலிட்டு பக்கத்திலிருகவுளிலுமொதுக்கி பக்குவமாகத்தின்றுகொண்டு முன்னையைப்போலவே அவ்விடத்தினின்றும் வேலைசெய்யும் இடத்திற்குவந்து நெடியகரையை அடைக்கவாரம்பித்தனர். எ-று.

பிட்டுவாய் மிதப்ப வுண்பார் பெருவலி யுடையார் போல
வெட்டுவா ரெடுத்த மண்ணைக் கொண்டுபோய் வேற்றுப் பங்கிற்
கொட்டுவா ருடைப்பு மாறுங் கொள்கைகண் டார்த்துத் திண்டோ
டட்டுவா ரயனின் முரைத் தழுவுவார் களிப்புத் தாங்கி.

(இ-ள்.) பிட்டினை வாயிலிட்டு வாய்க்குவெளியில் விக்கிக்கொண்டுவரும்வண்ணம் உண்பார். நல்லபலசாலியைப்போல வெட்டுவார். வெட்டியெடுத்தமண்ணை வாரிக்கொண்டுசென்று வேறேபங்குகளில் கொட்டுவார். எதிரியின் உடைப்படைதலைப்பார்த்துத் திண்ணியதோளை ஆரவாரித்துக்கொண்டு தட்டுவார். களிப்புள்ளவராகி பக்கத்தில் நிற்பவர்களைக் கட்டிக்கொள்ளுவார். எ-று. (கூசு)

எடுத்தமண் கூடை யோடு மிடறிவீழ் வார்போ லாற்றின்
மடுத்திட வீழ்வர் நீந்தி வில்லைபோய்க் கூடை தள்ளி
யெடுத்தகன் கரைமே லேறி யடித்தடித் தீரம் போக்கித்
தொடுத்தகட் டவிழ்ப்பர் மீளத் துன்னுவர் தொடுவர் மண்ணை.

(இ-ள்.) மண்ணை வாரிவைத்திருக்கின்ற கூடையுடனாற்றில் தவறிவிழுந்தவரைப்போல விழுவார். நீந்திக்கொண்டு சென்று கூடையைத்தள்ளி எடுத்து பெரியகரையையடைந்து அதனைக் கீழேயடித்தடித்து ஈரத்தைநீக்கி கட்டியிருந்தகட்டினை அவிழ்ப்பர். பின்னும் மண்ணைத் தோண்டுவார். எ-று. (கூரு)

கொட்டுமண் சுமந்து செல்வர் கூடையை யுடைப்பில் வீழத்
தட்டுவ ரெடுப்பார் போலத் தாவிவீழ்ந் தலையி லோட
விட்டொரு மரத்தைப் பற்றி மிதப்பர்திண் கரையி லேற
முட்டுவர் சுழியி லாழ்வர் சேட்சென்று முளைப்பர் மீள்வர்.

(இ-ள்.) உடைப்பில்கொட்டவேண்டிய மண்ணைச் சுமந்துகொண்டு போவார். கூடையை எடுப்பவரைப்போலத்தாவிவிழுந்து கூடையை யலையிலே ஓடும்வண்ணம் விட்டு ஒருமரத்தைப்பிடித்துக்கொண்டுமிதப்பர். திண்ணியகரையிலே அடையும்வண்ணம் முட்டுவர். சுழிக்குள்ளாழ்வர். தூரத்திலேபோய் மேலேகிளம்புவர், திரும்பவருவர்.

கொட்டினைக் கழலப் பார்ப்பர் கோப்பர்கோ லிடையாப் பிட்டுத்
தட்டுவ ருயிர்ப்பு வீங்கித் தள்ளாநின் றிளைப்பர் கச்சிற்
பிட்டினை நுகர்வர் வேலை வினைகெடப் பிறர்க்கு மள்ளி
யிட்டுமா றுச்ச நோக்கி நகைப்பர்கை யிரண்டுந் தாக்கி.

(இ-ள்.) கொட்டினைக் காம்புகழலும்வண்ணஞ்செய்வர். பின்னுங் காம்பிற்கோப்பார். கோலின்நடுவில் ஆப்பிட்டுத்தட்டுவர். பெருமூச்சுவிட்டுத் தள்ளாடநின்றிளைப்பர். கச்சிற்கட்டியுள்ளபிட்டினை நுகர்வர். வேலைத்தொழில்கெடும்வண்ணம் அயலார்க்கு மள்ளிக்கொடுத்து மாறுலோச்சுதலைக்கண்டு இரண்டுகையையு நீட்டித் தடுத்துக்கொண்டு சிரிப்பர். எ-று. (௩௭)

வானத்தின் மண்ணிற் பெண்ணின் மைந்தரிற் பொருளி லாசை
தானற்றுத் தமையு நீத்துத் தத்துவ முணர்ந்த யோகர்
ஞானக்கண் கொண்டே யன்றி நாடருஞ் சோதி மண்ணோ
ரூனக்கண் கொண்டுங் காண வுடன்விளை யாடல் செய்வார்.

(இ-ள்.) ஆகாயத்திலும் பூமியிலும் பெண்டிலும் பிள்ளையிலும் பொருளிலும் ஆசையைவிட்டு தன்னையுந்துறந்து தத்துவவிசாரஞ்செய்த யோகிகள் ஞானநேத்திரத்தாலன்றி நாடுதற்கருமையான சோதிரூபமான சிவபெருமான், மண்ணுலகிலுள்ளவர்கள் மாமிசமயமான கண்ணினாலே காணும்படி அவர்களுடனே விளையாடினார். எ-று.

அருளினா லுலக மெல்லா மாக்கியு மளித்து நீத்தும்
பெருவிளை யாடல் செய்யும் பிறைமுடிப் பெருமா னிங்ங
னொருவிளை யாடல் செய்ய வோச்சுகோற் கைய ராகி
யருகுநின் றேவல் கொள்வா ரடைகரை நோக்கப் புக்கார்.

(இ-ள்.) காருண்ணியத்தினாலே உலகத்தை எல்லாஞ்சிருட்டித்துத் திதித்துச் சங்கரித்து பெரியவிளையாடலைச் செய்கின்ற சந்திரசேகரராகிய கடவுள் இவ்விடத்தில் ஒரு திருவிளையாட்டினைச் செய்துகொண்டிருக்க, ஓச்சாநின்ற கோலினையுடைய கையினையுடையவர்களாய் அருகிலேநின்று வேலைவாங்குபவர்கள் அடைக்கப்பட்ட கரையைப் பார்க்கவந்தார்கள். எ-று. (௩௯)

நெட்டலை யொதுங்கி யோட நிவப்புற வரைபோ லிட்டுக்
கட்டிய கரைக ளெல்லாங் கண்டுகண் டொப்பு நோக்கி
யிட்டமே செல்வார் திங்க ளாயிரந் தொழுதாள் பேரால்
விட்டபங் கடைப டாமை கண்டனர் வெகுளி மூண்டார்.

(இ-ள்.) நெடிய அலைகள் ஒதுங்கி ஓடும்வண்ணம் மலைகளைப்போல, உயரமாக வைக்கோல் தழை மரமுதலியவைகளை இட்டுக்கட்டிய கரைகளனைத்தும் பார்த்துப் பார்த்து ஒப்பிட்டு அருகேபோகின்றார்வகள், ஆயிரம்பிறை தொழுதவளாகிய வந்தியின்பங்கு அடைபடாமையைக்கண்டு கோபங்கொண்டார்கள். எ-று. (௪0)

வந்திக்குக் கூலி யாளாய் வந்தவன் யாரென் றோடிக்
கந்தர்ப்ப னெனநேர் நின்ற காளையை நோக்கி யேடா
வந்தப்பங் குள்ள வெல்லா மடைபட்ட தெவனீ யின்ன
மிந்தப்பங் கடையாய் வாளா திருத்தியா றம்பீ யென்றார்.

(இ-ள்.) எவன் வந்திக்குக்கூலியாளாகவந்தவனென்று ஓடிச்சென்று மன்மதனைப்போல எதிரேநின்ற வாலிபனைப்பார்த்து, அடே! மற்றையர் பங்காக உள்ளவைகளெல்லாம் அடைபட்டன. நீயென்ன உன்பங்கினை யடைத்தாயில்லை சும்மாவிருக்கின்றனையோ தம்பீ! என்றார்கள். எ-று. (௪௧)

வேறுரை யாது தம்மை யுணர்ந்தவர் வீறு தோன்ற
வீறிலா னிறுமாப் பெய்தி யிருந்தன ருக மேலிட்
டாறுவந் தடுத்த பங்கி லடைகரை கல்லிச் செல்ல
மாறுகொண் டோச்ச வஞ்சி மயங்கினர் வலிய கோலார்.

(இ-ள்.) வேறு ஒன்றுஞ்சொல்லாமல் தன்னையுணர்ந்தவர்களின் பெருமிதம் விளங்க அழிவற்ற கடவுள் இறுமாப்பினை யடைந்து இருந்தனர். உடனே ஆறுனது மேலேறிவந்து அடுத்த பங்குகளிலுள்ள அடைக்கப்பட்டகரைகளைக் கல்லி எடுத்துக்கொண்டுபோதலும், பெரிய கோற்காரர்கள் மாறின லடித்தற்குப் பயந்தார்கள். எ-று.

பித்தனோ விவன்று னென்பா ரல்லது பேய்கோட் பட்ட
மத்தனோ விவன்று னென்பார் வந்தியை யலைப்பான் வந்த
வெத்தனோ விவன்று னென்பா ரிந்திர சாலங் காட்டுஞ்
சித்தனோ விவன்று னென்பா ராரென்றுந் தெளியோ மென்பார்.

(இ-ள்.) இவன் பித்தனோ என்று கூறுவார்கள். அன்றேல் பேய்கோட்பட்ட மத்தனோ இவனென்று சொல்லுவார்கள். அன்றேல் வந்தியைத் துன்பப்படுத்தும் வண்ணம் வந்த எத்தனோ இவன் என்று கூறுவார்கள். அன்றேல் இந்திரசால வித்தையைக் காட்டுகின்றசித்தனோ இவனென்றுகூறுவார்கள். இவன் இன்னவருணனென்று தெரியவில்லையே என்றுங் கூறினர்கள். எ-று. (ருரு)

பாடல்வி ஞ்சையனோ வென்பார் பண்ணினுற் பாணிக் கேற
வாடல்வி ஞ்சையனோ வென்பா ரரும்பெறற் செல்வத் தாழ்ந்து
வாடிய மகனோ வென்பா ரிசைபட வாழ்ந்து கெட்ட
வேடவிழ் தாரி னருள் யார்மக னிவன்கொ லென்பார்.

(இ-ள்.) இவன்பாடுகின்ற வித்தியாதரனோ என்று கூறுவார்கள். பண்ணினுடன் தாளத்திற்கு ஏற்குமாறு ஆடாநின்ற வித்தையையுடையவனோ என்று கூறுவார்கள். அல்லது பெறுதற்கரிய செல்வத்துடனிருந்து வாட்டமடைந்தவனோ என்று கூறுவார்கள். அல்லது கீர்த்திபொருந்த வாழ்ந்துகெட்ட இதழ்விரிந்த மாலையணிந்தவர்களுக்குள் இவன் எவனுடையமகனோ என்று கூறுவார்கள். எ-று. (ருச)

கரும்பனும் விரும்ப நின்ற கட்டழ குடைய னென்பா
ரரும்பெற லிவன்றன் கூலிக் காட்செய்த தெவனோ வென்பா
ரிரும்பெருங் குரவ ரற்ற நீமியனோ வென்பார் வேலை
புரிந்தவ னல்ல னென்பா ரதுமேனி புகலு மென்பார்.

(இ-ள்.) மன்மதனும் விரும்பும்வண்ணம் நிற்கின்ற கட்டான அழகினையுடையவனென்று கூறுவார்கள். பெறுதற்கரிய இவன் கூலிக்காரனகவந்து வேலை செய்வதென்னவென்று கூறுவார்கள். மிகவும் பெருமிதமுள்ள தாய் தந்தையர்களை இழந்த ஒண்டிக்காரனோ என்று கூறுவார்கள். முன்னே வேலைசெய்து பழக்கமுள்ளவன் அல்லன் என்று கூறுவார்கள். வேலைசெய்யாதவனென்பதை இவனுடம்பே கூறும் என்று கூறுவார்கள். எ-று. (ருரு)

கூலியுங் கொண்டான் றனே கணக்கிலுங் குறிக்கச் சொன்னன்
வேலையுஞ் செய்யா னின்சொல் விளம்பினுங் கேளான் கல்லின்
பாலறை முளையே யாகிப் பராமுகம் பண்ணி நின்று
னேலநா மிதனை வேந்தற் குணர்த்துது மென்று போனர்.

(இ-ள்.) இவன் கூலியையும் வாங்கிக்கொண்டான். தானேவந்து யான்வந்தியாள் என்றுகணக்கிலும் எழுதச்சொன்னன். வேலையும்செய்கின்றானில்லை. இன்னியவச

ஒத்தைக்கூறினாலும் கேட்கின்றானில்லை. கல்லின்மீது அறைகின்றமுளைபோயாகி பராமுகஞ்செய்து நிற்கின்றான். நாமிதனைத் தக்கவாறு அரசனுக்குச்சொல்லுவோம் என்று அவர்கள் போனார்கள். எ-று. (சசு)

தலைமகன் றிருமுன் றாழ்ந்து சாற்றுவா ரடிகே ளிந்த
வலைபுன னகரார் தத்தம் பங்கெலா மளந்த வாற்றான்
மலையினும் வலிய வாகச் சுமந்தனர் வளைந்த சிற்றாண்
விலைநரை யாட்டி தன்பங் கடைத்திலன் வென்றி வேலோய்.

(இ-ள்.) அவர்கள் அரசன்முன்னே சென்று வணங்கிச் சொல்லுகின்றார்கள். மன்னவனே! இந்த ஊரிலுள்ளவர்கள் அலையோடுகூடியவெள்ளத்தைத்தடுக்க அவ்வவர்களுக்கு அளந்துள்ளபடியே தங்கள் தங்கள்பங்குகளை மலையைவிடப் பெரியதாகத்தழை முதலியவற்றைச் சுமந்திட்டுக்கட்டினார்கள். அதனாலவர்கள் பங்கெல்லாங் கட்டப்பட்டன. வெற்றிபொருந்திய வேற்படையினையுடையாய்! பிட்டுவிற்குங் கிழவியின் பங்கொன்றுமாத்திரம் அடைபடவில்லை என்று கூறினார்கள். எ-று. (சஎ)

வேளையும் வனப்பி னாலே வென்றவ னொருவன் வந்தி
யாளென வங்கே வந்து பதிந்தன னரசர் செல்வக்
காளைபோற் களிப்பன் பாடு மாடுவன் காலம் போக்கி
நீளுவன் வேலை யொன்று நெஞ்சினு நினைத்தல் செய்யான்.

(இ-ள்.) மன்மதனையும் அழகினாலேவென்றவனாகிய ஒருவன் நான்வந்திக்கு ஆள் என்றுகூறி அங்கேவந்து கையேட்டிற்பதிந்தனன். அவனோ அரசன்துசெல்வக்குழந்தையைப்போல விளையாடுவான். பாடுவான். ஆடுவான். காலத்தை விருதாவாகச்செய்துவிட்டு தாமதஞ்செய்வன். ஒருவேலையைக்கூட மனதிலு நினைக்கின்றானில்லை. எ-று. ()

ஆண்டகை வனப்பை நோக்கி யடிக்கவுங் கில்லே மஞ்சி
யீண்டினே மென்று கூற விம்மென வமைச்ச ரோடும்
பாண்டிய னெழுந்து நாம்போய்ப் பங்கடை பட்ட வெல்லாங்
காண்டுமென் றெறிநீர் வைகைக் குறையங் கரையைச் சார்ந்தான்.

(இ-ள்.) அவ்வாண்மகனிற் சிறந்தவனது அழகைப்பார்த்து நாங்கள் அடிக்குந் திறமில்லாதவர்களாகப்பயந்து இவ்விடத்திற்கு வந்தோமென்று கூறுதலும், விரைவாக மந்திரிமார்களுடன் பாண்டியனெழுந்து நாம்சென்று பங்கு அடைபட்டனவெல்லாம் பார்ப்போம் என்று கூறிஅலைவீசாநின்ற வைகையாற்றின்கரையை அடைந்தனன். எ-று.

எடுத்ததிண் கரைக ளெல்லா மிறைமக னுள்ளத் தோகை
மடுத்தன னோக்கிச் செல்வான் வந்திபங் கடைப்பா ரின்றி
யடுத்தநோன் கரையுங் கல்லி யழித்தெழு வெள்ள நோக்கிக்
கடுத்துநின் றெங்குற் றானிக் கரைசுமந் தடைப்பா னென்றான்.

(இ-ள்.) அரசன் மனத்திற் சந்தோஷத்துடன் கட்டப்பட்ட அழுத்தமான கரைகளையெல்லாம் பார்த்துக்கொண்டே போகின்றவன் வந்தியின்பங்கை அடைப்பாரில்லாமல் பக்கத்திலுள்ள பெரியகரையையுந் தோண்டி யழித்துக்கொண்டுள்ளே பிரவேசியாநின்ற வெள்ளத்தைநோக்கிக் கோபங்கொண்டுநின்று, இந்தக்கரையை மண்சுமந்து இட்டு அடைப்பவன் எங்குபோனான் என்று கேட்டனன். எ-று. (ருo)

வள்ளறன் கோபங் கண்ட மாறுகோற் கைய ரஞ்சித்
தள்ளருஞ் சினத்த ராகித் தடக்கைதொட் டீர்த்துப் பற்றி
யுள்ளிரோடு புறங்கீழ் மேலா யுயிர்தொறு மொளித்து நின்ற
கள்ளனை யிவன்றான் வந்தி யாளெனக் காட்டி நின்றார்.

(இ-ள்.) அரசனுடைய கோபத்தைப் பார்த்த கோற்காரர்கள் பயந்து நீக்குதற் கரியகோபத்தினையுடையவர்களாகி உள்ளிலும் புறத்திலும் கீழிலும் மேலிலும் ஆகி யுயிர்களிடத்திலெல்லாம் ஒளித்துநின்றகள்வனைக் கையைப்பிடித்திழுத்துக்கொண்டு வந்து அரசன் முன்னே நிறுத்தி இவன் தான்வந்தியாள் என்றுகாட்டினார்கள். எ-று. (ருக)

கண்டனன் கனன்று வேந்தன் கையிற்பொற் பிரம்பு வாங்கி
யண்டமு மளவி லாத வுயிர்களு மாக மாகக்
கொண்டவன் முதுகில் வீசிப் புடைத்தனன் கூடை யோடு
மண்டனை யுடைப்பிற் கொட்டி மறைந்தன னிறைந்த சோதி.

(இ-ள்.) அரசன் அவனைப்பார்த்து கோபங்கொண்டு கையிலுள்ளபொன்னம்பிரம்பினை வீசி, அண்டங்களையும் அளவற்ற ஜீவராசிகளையும் திருமேனியாகக்கொண்டுநிற்கின்ற பரமேசுவரரது முதுகில் வீசியடித்தனன். உடனே எங்குநிறைந்த சோதியானவர் மண்ணையுடைப்பிலேகொட்டி மறைந்தனர். எ-று. (ருஉ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாண்டியன் முதுகிற் பட்டது செழியன் பன்னிய ருடம்பினிற் பட்ட
தாண்டகை யமைச்சர் மேனிமேற் பட்ட தரசிளங் குமரர்மேற் பட்ட
தீண்டிய கழற்கால் வீரர்மேற் பட்ட திவுளிமேற் பட்டது பருமம்
பூண்டவெங் கரிமேற் பட்டதெவ் வுயிர்க்கும் போதன்மேற் பட்டவத்தழும்பு

(இ-ள்.) எல்லாவுயிர்களுக்கும் அறிவுருவமானவராகவிளங்குகின்றவர்மீதுபட்ட அத்தழும்பு அரிமர்த்தனபாண்டியனுடைய முதுகிலேபட்டது. அப்பாண்டியனுடைய மனைவிமார்களின் உடம்பிலேபட்டது. ஆண்டன்மையினர்களாகிய மந்திரிமார்களின் உடம்பிலேபட்டது. அரசர்களாகிய இளங்குமாரர்கள்மீது பட்டது. அங்குநெருங்கிய கழலணிந்தகாலினையுடையவீரர்கள்மீதுபட்டது. குதிரைகள்மீதுபட்டது. போர்வையினையுடைய வெவ்விய யானைகளின்மீதுபட்டது. எ-று. (ருங)

பரிதியு மதியு பாம்புமைங் கோளும் பன்னிறம் படைத்தநாண் மீனு
மிருநிலம் புனல்கா லெரிகடுங் கனல்வா னென்னுமைம் பூதமுங் காருஞ்
சுருதியு மாறு சமயவா னவருஞ் சுரர்களு முனிவருந் தொண்டின்
மருவிய முனிவர் கணங்களும் பட்ட மதுரநா யகனடித் தழும்பு.

(இ-ள்.) சூரியனுஞ் சந்திரனும் இராகுகேதுக்களும் செவ்வாயாதிய மற்றை யைங்கிரகமும் பலவன்னங்களாகவுள்ளநட்சத்திரங்களும் பெரியபூமி நீர் காற்று எரியப்பட்டகொடிய தீ ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களும் மேகங்களும் வேதமும் அறுவகைச்சமயங்களும் தேவர்களும் இருடிகளும் சிவனடிமையாக உள்ள முனிவர்கணங்களும் மதுரை நாயகராகிய கடவுளின் அடித்தழும்பை அடைந்தன. எ-று. (ருச)

வானவர் மனிதர் நாகர்புள் விலங்கு மாசுணஞ் சிதலெறும் பாதி
யானபல் சரமு மலைமரங் கொடிபுல் லாதியா மசரமும் பட்ட
வூனடை கருவும் பட்டன தழும்போ டுதித்தன வுயிரிலோ வியமுந்
தானடி பட்ட சராசர சடங்க டமக்குயி ராயினோன் றழும்பு.

(இ-ள்.) சராசரங்களுக்கு உயிரானவனது அடித்ததழும்பை தேவர்களும் மனிதர்களும், நாகர்களும், பட்சிகளும், மிருகங்களும், பாம்புகளும், சிதலும், எறும்புமுதலிய பலசரவஸ்துக்களும், மலை, மரம், கொடி, புல் முதலியனவாகவுள்ள வசரங்களும் அடைந்தன. மாமிசத்திற்குள்ளிருந்த கருவும்பட்டன. பிறக்கும்போது தழும்புடன்பிறந்தன. உயிரிலாத சித்திரங்களும் அடிபட்டன. எ-று. (ருரு)

துண்ணென மாயோன் விழித்தனன் கமலச் சோதியும் யாதென வியந்தான், விண்ணவர் பெருமான் வெருவினன் வானோர் வேறுளார் மெய்பனிப் படைந்தார், வண்ணயா ழியக்கர் சித்தர்சா ரணர்தம் வடுப்படா வுடம்பினிற் பட்ட, புண்ணையா தென்று தத்தமிற் காட்டி மயங்கினார் புகுந்தவா றறியார்.

(இ-ள்.) திடீரென்று திருமாலும் விழித்துக்கொண்டான். கமலாசனனாகிய பிரமனும் இது என்னவென்று ஆச்சரியமடைந்தான். தேவர்களுக்கு அரசனான இந்திரன் பயமடைந்தனன். மற்றையதேவர்கள் உடல்நடுங்கினார்கள். நடந்தவிஷயத்தை யுணராதவர்களாகிய அழகுபொருந்தியவீணையினையுடைய இயக்கர்களும், சித்தர்களும், சாரணர்களும் தமது வடுப்படாத உடம்பில் பட்ட புண்ணினை இது என்னவென்று ஒருவருக்கொருவர் காட்டி மயங்கினார்கள். எ-று. (௫௬)

ஏகநா யகனெவ் வுயிர்களுந் தானே யென்பது மன்பினுக் கெளிய
னாகிய திறனுங் காட்டுவா னடிபட் டங்கொரு கூடைமண் கொட்டி
வேகநீர் சுருங்கக் கரையினை யுயர்த்தி மிகுத்துடன் வேலைநீத் தொளித்துப்
போகிய வாறு கண்டுகோற் கையர் போய்நரை யாட்டியைத் தொடர்ந்தார்.

(இ-ள்.) எல்லாவுயிர்களுக்குந் தானே ஏகநாயகனென்பதையும் அன்பினுக்கு எளியவனாகியதன்மையும் காட்டும்பொருட்டு, அடிபட்டு ஒருகூடைமண்ணை யுடைப்பிற் கொட்டி வேகமாகவருகின்ற நீரானது வற்றக்கரையினையுயர்த்தி மிகுதியாகச்செய்து உடனே வேலைசெய்வதைவிட்டு ஒளித்துப்போன தன்மையைப்பார்த்து கோற்காரர்கள் சென்று கிழவியாகிய வந்தியைத் தொடர்ந்தார்கள். எ-று. (௫௭)

வன்புதாழ் மனத்தோர் வலிசெய வின்ன மன்னனுன் மறுக்கமுண் டேயோ, முன்புபோ கியவா ளென்செய்தா னென்னாய் முடியுமோ வினியெனத் திரங்கி, யென்புபோல் வெளுத்த குழலினாள் கூட லிறைவனை நோக்கி நின் றிரங்க, வன்புதே னாக வருத்திய பிட்டா ணமுதுசெய் தருளினா ராருளால்.

(இ-ள்.) நம்மை, கொடுமைதங்கிக்கிடக்கின்ற இவர்கள் உபத்திரவஞ்செய்தற்கு இந்தமன்னவனாலேதேனும் அச்சமுண்டாகியதேயோ. அல்லது முன்னேபோன கூலியாளென்னசெய்தான். இனி எப்படியாகுமோ? என்று திரைந்து எலும்பைப்போல வெளுத்தகூந்தலினையுடையவள் மதுராபுரிக்கடவுளைப் பார்த்தவண்ணநின்று வியாகூலப்பட, அன்பைத்தேனாகச்செய்து பிட்டினையருந்த அருந்திய கடவுளின்திருவருளினால். எ-று.

கண்ணுத னந்தி கணத்தவர் விசும்பிற் கதிர்விடு திப்பிய விமான
மண்ணிடை யிழிச்சி யன்னைவா வென்று வல்லைவைத் தமரர்பூ மழையும்
பண்ணிறை கீத வோதையும் வேதப் பனுவலுந் துந்துபி யைந்தும்
விண்ணிடை நிமிரச் சிவனரு ளடைந்தோர் மேவிய சிவபுரத் துய்த்தார்.

(இ-ள்.) நெற்றியிலே கண்ணினையுடைய நந்திகணங்கள் ஆகாயத்திலே ஒளிவீசாநின்ற தேவலோகசம்பந்தமான விமானத்தைப் பூவுலகத்திலே இறக்கி, அன்னையே வருவாயாகவெனவிரைந்து அவ்விமானத்தில்வைத்து தேவர்களால் வருஷிக்கப்படுகிற புஷ்பவருஷமும் பண்ணிறைந்துள்ள கீதங்களினோசைகளும் வேதப்பாட்டும் பஞ்சதுந்துபிகளும் வானத்தினிடத்திலே நிரம்ப சிவபெருமானுடைய திருவருளை அடைந்தவர்கள் அடைகின்ற சிவலோகத்திலே கொண்டுசென்று சேர்த்தார்கள். எ-று. (௫௮)

மன்றுடை யானோர் கூடைமண் கொட்டி மறைந்தது மடைகரை நீண்ட
குன்றென வுயர்ந்த தன்மையுந் தம்மைமற் கோலடி பட்டது நோக்கி

யென்றன்மேற் பட்ட தென்றன்மேற் பட்ட திதுவென வதுவென வமைச்சர்
நின்றவ ருணர்த்து நிகழ்ச்சியும் பிறர்பா னிகழ்ச்சியு நோக்கியந் நிருபன்.

(இ-ள்.) கனகசபையினையுடையகடவுள் ஒருகூடைமண்ணை உடைப்பிற்கொட்டி மறைந்ததையும் அடைக்கவேண்டியதாக இருந்தகரை அடைந்து நீண்டமலையைப்போல உயர்ந்த தன்மையையும் தம்மீது பிரம்படிபட்டதையும் பார்த்து, என்மீதுபட்டது என் மீது பட்டது இதுவென்றும் அதுவென்றும் நிற்பவர்களும் மந்திரிமார்களும் கூறுந் தன்மையும் மற்றையர்களிடத்தில் நடக்கும் நடையையும் அம்மன்னவன்கண்டு. (௬௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசியவிருத்தம்.

உள்ளத்தா சங்கை பூண்டா னாகமண் ணுடைப்பிற் கொட்டிக்
கள்ளத்தா ராகிப் போனார் ககனத்தா ராகிச் சேனை
வெள்ளத்தார் பிறருங் கேட்ப மீனவற் குவகை வெள்ளங்
கொள்ளத்தா மழைத்தா காய வாணியாற் கூற லுற்றார்.

(இ-ள்.) மனத்திலே சந்தேகம்பொருந்தினவனாகவும், மண்ணை உடைப்பிலே கொட்டி மறைந்தவரானகடவுள் ஆகாயத்திலே நின்றுகொண்டு சேனை வெள்ளமுதலிய மற்றையர்களும் கேட்கும்வண்ணம் பாண்டியனிடத்து சந்தோஷமென்னும் வெள்ளம் குடிகொள்ள தாமேவிளித்து ஆகாயவாணியினால் கூறாநின்றார். எ-று. (௬௧)

மறத்தாறு கடந்த செங்கோல் வழுதிநின் பொருள்க ளெல்லா
மறத்தாற்றி னீட்டப் பட்ட வனையவை புனித மான
திறத்தாலே நமக்கு நம்மைச் சேர்ந்தவர் தமக்கு மார்வ
முறத்தாவில் வாத வூர னுதவினா னுத லாலே.

(இ-ள்.) கொடுமையானமார்க்கத்தினின்று நீங்கியுள்ள செங்கோன்மையினை யுடையபாண்டியனே! நினது திரவியங்களெல்லாம் நல்லதருமவழியினாலே சேகரிக்கப்ப ட்டவதனாலே அவைகள் நிர்மலமானதாகிய முறைமையினால் நமக்கும் நம்மைச்சேர்ந்த வர்களுக்கும் ஆசையுண்டாகும்வண்ணம் கெடாத வாதவூரன் அளித்தான் அதனாலே.

அனையனை மறுக்கஞ் செய்தா யரும்பிணப் புலவுத் தீவாய்
வனநரித் திரளை யீட்டி வாம்பரி யாக்கித் தந்தேங்
கனையிருட் கங்குற் போதிற் கழிந்தன பின்னுந் தண்ட
வினையர்பால் விடுத்துத் துன்பம் விளைத்தனை யதுபொ றுத்தேம்.

(இ-ள்.) நீ அந்த வாதவூரனைத் துன்பப்படுத்தினாய்: அதனால் நாம் பொல்லாத பிணத்தின் நாற்றம் வீசுகின்ற கொடிய வாயினையுடைய காட்டிலுள்ள நரிக்கூட்டங் களையெல்லாம் ஒன்றாகச்சேர்த்துத் தாவுகின்ற குதிரையாக்கித் தந்தோம். அவை மிக்க இருளினையுடைய ராத்திரியிற்சென்றன; நீ பின்னு மவனைத் தண்டற்றொழிலாளிகளி டம்விட்டுத் துன்பஞ்செய்வித்தனை அத்துன்பந்தாளாத நாம். எ-று. (௬௨)

வருபுனல் பெருகப் பார்த்தேம் வந்திகைப் பிட்டு வாங்கிப்
பருகிவந் தாளாய் மாறு பட்டன மண்போ கட்டுப்
பொருகரை யுயரச் செய்து போகியவ் வன்னை போல்வாள்
பெருகிய விடும்பை தீர்த்தெம் பேருல கடையச் செய்தேம்.

(இ-ள்.) வராநின்ற வைகை ஜலத்தைப் பிரவாகமாகவரச்செய்தனம். பின்னர் வந்தியின் கையால் அளிக்கப்பட்ட பிட்டினை வாங்கித்தின்று பின்னரவளாளாய் வந்து கோலடிபட்டோம்; பின்னை மண்ணைக்கொட்டி அலைபொராநின்ற கரையை உயரும்

வண்ணம்செய்து அவ்வன்னைபோல்வாளது மிகுதியானதுன்பத்தை நீக்கி எமது பெரிய உலகத்தை அடையுமாறு செய்தேம். எ-று. (௬௪)

இத்தனை யெல்லாஞ் செய்த திவன்பொருட் டிந்த வேத
வித்தகன் றன்மை யொன்று மறிந்திலை வேட்கை யென்பால்
வைத்துனக் கிம்மை யோடு மறுமையுந் தேடித் தந்த
வுத்தமன் றொடைசந் தாதிப் புறப்பற்று மொழிந்த நீரான்.

(இ-ள்.) இவ்வளவையும் செய்தது இவன்பொருட்டேயாம். இந்த வேதவித்தகனுடைய தன்மைகளை யொன்றும் நீயுணர்ந்தாயில்லை. அவன் அன்பை என்னிடத்தில் வைத்து உனக்கு இம்மை மறுமை லாபங்களைத் தேடித்தந்த உத்தமனாக வுள்ளவன். மாலை சந்தனமுதலிய தரித்தலாதிய புறப்பற்றுக்களையும் விட்ட தன்மையினை யுடையான். எ-று. (௬௫)

நிறையுடை யிவனை யிச்சை வழியினு னிறுத்தி யான்ற
மறைவழி நின்று நீதி மன்னவர்க் களந்த வாழ்நாள்
குறைப்படா தானுஞ் செல்வ வாரியுட் குளித்து வாழ்கென்
றிறையவன் மொழிந்த மாற்ற மிருசெவி நிரப்பத் தென்னன்.

(இ-ள்.) மாட்சிமைபொருந்திய இவனை அவனிஷ்டம்போல இருக்கச்செய்து, சிறந்த வேதமுறைப்படி நின்று நீதியினையுடைய அரசர்களுக்கு விதிக்கப்பட்டுள்ள வாழ்நாள் குறைவுறாமல் நீங்காத செல்வமென்னுங் கடலுள் மூழ்கி வாழக்கடவை யென்று கடவுள் கூறிய வசனத்தை இரண்டு காதுகளிலும் பாண்டியன் நிறையக்கேட்டனன். எ-று. (௬௬)

அச்சமுற் றுவகை யீர்ப்ப வதிசய வெள்ளத் தாழ்ந்து
பொச்சமி லன்ப ரெங்குற் றாரெனப் புகுந்து தேடி
நச்சர வசைத்த கூட னாயகன் கோயி லண்ணி
விச்சையி லிருக்கின் றாரைக் கண்டுபோ யிறைஞ்சி வீழ்ந்தான்.

(இ-ள்.) அச்சம்பொருந்தி சந்தோஷமானது இழுக்க, அதிசயமாகிய வெள்ளத்திலே மூழ்கி,மெய்யன்பர் எவ்விடத்தி லிருக்கின்றாரென்று போய்த்தேடி, விடத்தினையுடையபாம்பினை இடையினிலணிந்துள்ள மதுரையெம்பெருமானது ஆலயத்தையடைந்து அங்கு சுயேச்சையாக இருப்பவரைக்கண்டு எதிரிற்சென்று விழுந்து வணங்கினான்.

தொல்லைநீ ருலக மாண்டு சுடுதுயர் நரகத் தாழ
வல்லவென் னறிவுக் கேற்ற வண்ணமே செய்தே னீரென்
னெல்லைதீர் தவப்பே றய்வந் திகபர வேது வாகி
யல்லல்வெம் பிறவி நோய்க்கு மருமருந் தானீ ரையா.

(இ-ள்.) ஐயனே! புராதனமானதாகிய நீராற்சூழப்பட்ட உலகத்தை ஆண்டு சுடாநின்ற நரகத்திலே அழுந்துமாறிருந்த என்னறிவுக்குத்தக்கவாறே செய்தேன் தேவரீர் என்னுடைய அளவற்ற தவத்தின் பயனாகவந்து இம்மை மறுமைகளுக்கு ஏதுவாகித் துன்பத்தினையுடைய வெவ்விய பிறவிநோய்க்கு அரியமருந்தும் ஆயினீர். எ-று. (௬௮)

செறுத்துநா னும்மை யெண்ணா திழைத்தவித் தீங்கு தன்னைப்
பொறுத்துநீர் முன்போ லுங்கள் புவியெலாங் காவல் பூண்டு
மறுத்துடைத் தாள்வ தாகென் றிரந்தனன் மண்ணி லாசை
வெறுத்தவர் நகையுட் டோன்ற வேந்தனை நோக்கிச் சொல்வார்.

(இ-ள்.) உம்மை நானின்னாரென்று உணர்ந்துகொள்ளாமற்செய்த இந்தக்குற்றத்தைப் பொறுத்து பழையபடியே உங்கள்நாடுமுழுமையுங்காத்து எனது மறுவைத்து

டைத்து ஆளவேண்டுமென்று கேட்டுக்கொண்டனன்; உடனே மண்ணுலகத்திலுள்ள ஆசையை விட்டவராகிய மாணிக்கவாசகசுவாமிகள் உள்ளே நகைப்புண்டாக மன்னவனைப்பார்த்துச் சொல்லுகின்றனர். எ-று.

இம்மன்னவன் மணிவாசகப்பெருமானைநோக்கி வணங்கி, ஐயரே! உங்கள் பூமியையெல்லாம் ஆளுங்கள் என்று அவன் பக்குவத்துக்கேற்றவாறு கூறினான். குளகிர்த பாயஸாதிகளுடன் உண்ட அன்னத்தை வாந்தியெடுத்த ஒருவன் அதைவிரும்பாமையைப்போல,உண்மைஞானவான்களும் உலகபோகங்களை விரும்பாமல்காணப்படும் இவ்வுலகத்தையும் இதிலுள்ள சுகங்களையும், அனுமிக்கப்படும் அச்சுவர்க்காதியுலகங்களையும் அதிலுள்ள சுகங்களையும் கேவலம் வாந்தாசனபுரீடாதிகளைப்போல வெகு அருவருப்புடன் வெறுத்தவர்களாதலால், அவர்கள் நாமிச்சித்துமுயற்சித்து அநுபவிக்கும்விஷயபோகங்களை விரும்பமாட்டார்கள் என்று கருதாமல் கேட்டமையால், அவனுடைய பேதைக்குணத்தை மதித்து பரிகாசமாக வுள்ளே அவனை அஞ்ஞானியென்று மதித்தார் என்பார், "மண்ணிலாசைவெறுத்தவர்நகையுட்டோன்றவேந்தனைநோக்கிச்சொல்வார்" என்றார்.

பாய்திரை புரளு முந்நீர்ப் படுகட லுலகுக் கெல்லா
மாயிரஞ் செங்க ணான்போ லரசுவீற் றிருப்பீ ருங்க
ணாயக னருளிச் செய்த வண்ணமே நயந்து செய்வீர்
தூயவ ரன்றோ நுங்கள் சூழல்சேர்ந் தொழுக வல்லார்.

(இ-ள்.) அலைவீசாநின்ற மூவகை நீர்மையினையுடைய தோண்டப்பட்ட கடலால்சூழப்பட்ட உலகிற்கெல்லாம் ஆயிரஞ்செவ்விய கண்களையுடையவனாகிய இந்திரனைப்போல அரசுசெய்துகொண்டிருங்கள். உங்கள்கடவுள் என்ன கட்டளை இட்டனரோ அவ்வண்ணமே விருப்பமாகச்செய்யுங்கள். உம்மைச்சார்ந் தும்மருகில் வாழப்பட்டவர்களெல்லாம் பரிசுத்தர்களல்லவோ. எ-று.

உலகபோகங்களை அநுபவிப்பவர்களுக்குட் சிறந்தவன் இந்திரனன்றி மற்றியாருமில்லை. அதனாலேதான் அவனைப் போகி என்றுங் கூறுகின்றார்கள். இவ்வரிமர்த்தனனும் போகாநுபவபாக்கியங்களில் குறைவொன்றுமில்லாதவனாதலால் "இருப்பீரொன்று" இறந்தகாலத்தாற் கூறினார்.

புதன்முதற்கொண்டுள்ள ஒவ்வொரு மன்னவர்களும், சிவபெருமானே பரம்பொருளென்றுணர்ந்து சிவதீக்ஷையாற் சுத்தர்களாகி ஆன்மார்த்தமாக சோமசுந்தரப்பெருமானை ஆராதித்துக்கொண்டு வந்தவர்களாதலாலும், அவர்களைப்போலவே அரிமர்த்தனனுஞ்சிவபூஜாதுரந்தரனாதலாலும்,பிறருக்கிருக்கும்சுதந்தரத்திலும் மலையத்துவசன்காலந்தொடங்கி சிவசம்பந்தம் தடாதகைப்பிராட்டியாரா லேற்பட்டிருப்பதுடன் கைலைக்கிறைவராகிய நங்கண்ணுதலார் தாமே பாண்டிமன்னவனானமையினாலும், மன்னவனாகவிருந்ததுடனில்லாமல் மகனாக உக்கிரவருமனைப் பெற்று அவன்வழியாக சந்திரவங்கிசம் அநேகதலைமுறை விருத்தியடைந்திருந்தமையாலும், தங்கள் குலசேகரராகச் சிவபெருமானைத் தான் அறிந்தவனாதலாலும், வேதாகமபுராணங்களையெல்லாம் படித்து அறிந்ததில் அவைகளாற் பிரதிபாதிக்கப்படும் பரம்பொருள் சந்திரசேகரரோ என்றுணர்ந்தவனாதலாலும், அம்மன்னவனை நோக்கி மணிவாசகப்பெருமான் சிவபெருமானை "உங்கள் நாயகன்" என்றார். (௭௦)

உம்மைநா னடுத்த நீரா லுலகியல் வேத நீதி
செம்மையா விரண்டு நன்றாய்த் தெளிந்தது தெளிந்த நீரான்
மெய்ம்மையாஞ் சித்த சுத்தி விளைந்தது விளைந்த நீராற்
பொய்ம்மைவா னவரி னீந்திப் போந்தது சிவன்பாற் பத்தி.

(இ-ள்.) உம்மைநான் அடைந்ததன்மையால் உலகநீதியும் வேதநீதியும் ஆகிய இரண்டும் நன்றாகத்தெளியப்பட்டது; தெளிந்ததன்மையால் உண்மையானசித்தசுத்தி உண்டாகியது; உண்டானமையினால் பொய்மையினராகிய தேவர்களிடத்திலிருந்த பிராந்தி ஒழிந்து சிவபெருமானிடத்திலன்புண்டாகியது. எ-று.

இதையசுத்தி யில்லாதவனுக்குத் தெய்வநிச்சயமுண்டாகமாட்டாது. புறவிடயங்களிலொருபொருளைத் தீர்மானமாக உணராதவர்கள் உணரவேண்டுங்காலம்வரைக்கும் மனோநிருமலம் இன்றேல் அவர்கள் அதை உணராதிருத்தலைக்காண்கின்றோம். மனோநின்மலம் வரவேண்டுமானால் உலகநூல்களையும் வேத நூல்களையும் உணரவேண்டும். இவ்விரு வகைய நூலும் உணராதான் மனோ நின்மல மடையவே மாட்டான். ஏனெனில், உலகநூலுணராதபோது சடப்பொருள்களின்உற்பத்திநாசங்களை உணரான். ஒரு வஸ்துவின் ஆரம்பத்தையும் அவஸானத்தையும் உணர்ந்தாலன்றி அதின் இடை நிகழ்ச்சியான திதிகாலத்திலுள்ள சுபாவதருமத்தைச் செவ்வனே அறியமாட்டான். ஆதலால் சடப்பொருள்களின் இயல்புகளை உணரவேண்டுவது முக்கியம். உலகநூலை அரசதரும முதலிய நீதிநூலென்று கொண்டு அதையுணராதவன் லோகவியாபார லக்ஷணங்களை அறியமாட்டான். லோகவியாபாரம்-மனுஷியதருமம். எவன் உலகியலுணர்ந்தானோவவன் அதினியல்பின் வண்ணமாத்திரம் நடக்க அறிகிறான். உலகநூல்களுடன் வேதநூல்களையும் உணரவேண்டும். வேதநூலாவது: அறிவுநூலென்று பொருள். அது ஆரியவேதமுதலியன. வேதநீதிகளையுணர்ந்தால் கருமகாண்ட ஞானகாண்ட லக்ஷணங்களை யுணருகிறான்; உணர்ந்தால் தேவதாதாரதம்மியங்களை அறிகிறான்; தேவதாதாரதம்மியங்களை அறிந்தால் ஆநந்தரூபனான சிவபெருமானைச்சிறந்த மெய்ப்பொருள் என்று அறிகிறான்; அறிந்தால் மற்றைய தேவர்களையெல்லாம் நூதனேசுவரராகவும், பரமேசுவரரொருவரே அநாதிநித்தியேசுவரரென்று அவ்வேதவாக்கியம் உணர்த்த உணர்ந்து அநாதிநித்தரே நம்மையாள்பவர் என்று சித்தசுத்தியுள்ளவன் மற்றையதேவர்களைவிட்டு சிவபெருமானை அடைகின்றான். இவ்வளவுதன்மை ஒருவனுக்கு வருதற்குக் காரணம் நல்லாரிணக்கம். அப்படிப்பட்ட சிவபத்தியை நானடைந்தது மன்னவனே! சிவத்தியானமுடைய உம்மாலன்றோ என்று மன்னவனைச்சிறப்பித்தாரென்பார், "உம்மைநானடுத்தநீரால்" என்றார்.

வந்தவிப் பத்தி யாலே மாயையின் விருத்தி யான
பந்தமாம் பவஞ்ச வாழ்க்கை விளைவினுட் பட்ட துன்பம்
வெந்தது கருணை யாகி மெய்யுணர் வின்பந் தன்னைத்
தந்தது பாதஞ் சூட்டித் தனமய மாக்கிற் றன்றே.

(இ-ள்.) உண்டான இந்த சிவபத்தியினாலே மாயையின் விருத்தியாகிய பந்தரூபமான பிரபஞ்சவாழ்க்கை உண்டானதாலுண்டாகிய துன்பம் ஒழிந்தது. கருணையே வடிவமாகி உண்மைவடிமான உணர்வினையளித்தது. திருவடிதீக்ஷைசெய்து தன்மயமாக்கியது. எ-று.

இறைவனிடத்தில் அன்பில்லாதவனுக்கு மாயாப்பிரபஞ்சத்திலுண்டான பந்தரூபமான உலகவாழ்க்கையிலுள்ள துன்பம் ஒழியாது; அந்த பிரபஞ்சவாசனையான பந்தம் ஒழியாதபோது இறைவன் வெளிப்பட்டு திருவடிதீக்ஷைசெய்து கன்னனை வேடொழித்த கதைபோல தன்னுருவாகச் செய்யான்; செய்யாதபோது இவனுக்கு நிரதிசயமான சத்தியஞானானந்தமுண்டாகாது; சத்தியஞானானந்தம் உண்டாகாதபோது பிறவியொழியாது; பிறவியொழியாதபோது துக்கமும் ஒழியாது. ஆதலால் பேரின்பகாமிக்கு ஈசுவரபத்தி யுண்டாகவேண்டுமென்றும், ஈசுவரபத்தி உண்டானால்தான் அகளங்கவுளின் காருண்ணியத்தினாலே பந்தந்தொலையுமென்றும், பந்தந்தொலைந்தா

லன்றி திருவடிதீக்ஷையும் சிவைக்கியமும்கிடைக்காதென்றும்,சிவைக்கியம்கிடைத்தால் தான் பேரின்பசித்தி என்றும், அந்தப்பேரின்பசித்தியை உம்முடைய ஸகவாசத்தாலே நானடைந்தேனென்றும், மன்னவனை சிறப்பித்து அவனும் இவ்வழியிலேநின்று உய்யும் வண்ணம் இதோபதேசமாகக் கூறினார். (எஉ)

சச்சிதா னந்த மாமத் தனிப்பர சிவனே தன்ன
திச்சையா லகில மெல்லாம் படைத்தளித் திறு செய்யும்
விச்சைவா னவரைத் தந்த மேலவன் பிறவித் துன்பத்
தச்சமுற் றடைந்தோர்க் கானு வின்பவீ டளிக்கு மன்னோன்.

(இ-ள்.) சச்சிதானந்தரூபமாக விளங்குகிற அந்த ஒப்பற்ற சிவபெருமானே சுயேச்சையால் அகிலத்தையும் ஆக்கி அளித்து அழிக்கின்ற அறிவுடையவர்களாகிய தேவர்களை உண்டாக்கின சிறந்தவன். அவன் ஜனனதுன்பத்திலே அச்சத்தை அடைந்துள்ளவர்களுக்கு நீங்காத இன்பமயமான முத்தியைக்கொடுப்பான். எ-று.

இம்மணிவாசகப்பெருமான் தனக்காசிரியராகநின்று ஞானோபதேசம் செய்து தன்னை அழியாத நிரதிசயவின்பவீட்டில் இருக்கச்செய்தவரே என்றும்அழியாத இறைவரென்றும், அவரையன்றி யுள்ளவர்களெல்லாம் அவராலாக்கப்பட்டவர்களும் அதிகாரம் அளிக்கப்பெற்றவர்களுமேயன்றி வேறே யாருமில்லை யென்றும், அவ்விறைவராகிய சச்சிதானந்த தனிப்பரசிவத்தையன்றி வேறே யுள்ளவர்கள் பிறவிப்பெரும்பகைக் கஞ்சிவந்தவர்களை ஆதரிக்கமாட்டார்களென்றும், தன்னையடைந்து நின்று வேண்டிக்கொள்ளுகின்ற பாண்டியன் வேறுவழியில் திரிந்து பேரின்பமெய்தலாமெனத் தவறுதிருக்கும் வண்ணமும் நம்மிறைவன் பிரம விட்டுணு ருத்திரர்களைத் தாமேபடைத்து முத்தொழிலை அவர்களைக்கொண்டு நடத்தித் தான் சருவசாக்ஷியாக இருக்கின்றார் என்றும் விளக்க,"தன்ன - திச்சையாலகிலமெல்லாம்படைத்தளித்திறுசெய்யும் - விச்சைவானவரைத்தந்தமேலவன்" என்றுகூறினார்.

ஒருவருக்கடிமையாகிய ஒருத்தன் பிறரது அடிமைத்தன்மையை எவ்வாறு நீக்குவான்? நீக்கான். அதைப்போல பிறப்பிறப்புக்களிற்சிக்குண்டுகிடக்குந்தேவர்கள் தம்மையடைந்தவர்களுடைய பிறப்பிறப்புக்களை எவ்வண்ண நீக்குவார்கள்? நீக்கமாட்டார்கள். ஆதலால் முமுக்ஷுக்கள் அச்சிவனையே சரணமாக அடையவேண்டும் என்று வற்புறுத்த "பிறவித் துன்பத் தச்சமுற் றடைந்தோர்க்கானுவின்பவீடளிக்கு மன்னோன்" என்றுரைத்தனர். (எங)

மந்தரங் கயிலை மேருப் பருப்பதம் வார ணாசி
யிந்தநல் விடங்க டோறு மிகபர போகம் யார்க்குந்
தந்தருள் செய்தெம் போல்வார் தம்மனம் புறம்போ காமற்
சிந்தனை திருத்தி ஞானத் திருவுரு வாகி மன்னும்.

(இ-ள்.) மந்தரகைலாயம், மஹாகைலாயம்,மேரு, ஸ்ரீசைலம், காசி ஆதிய இந்த நல்ல இடங்களிலே எல்லாம் எப்படிப்பட்டவர்களுக்கும் இகலோகபரலோகங்களாகிய உபலோகங்களிலும்அனுபவிக்கின்றபோகங்களைக்கொடுத்து எம்மைப்போன்றவர்களின் மனத்துக்கு வெளியேபோகாமல் இருந்து சிந்தனையைத்திருத்தி அழகிய அறிவே உருவமாக எழுந்தருளியிருப்பார். எ-று.

பிரமவிட்டுணுருத்திராதிகளைப்படைத்த கடவுளே சிவபெருமானென்றால், அவரை எவ்வாறடைந்துவழிபடுவது என்னும்ஆசங்கை பாண்டியனுக்குநிகழுமன்றோ,ஆதலாலதனை யொழிக்கவேண்டி திரிமூர்த்திபரராகிய இறைவர் அடியவர்களின் உள்ளத்திலெழுந்தருளி யிருப்பதைப்போல, ஸ்ரீமந்தரகைலாசத்திலும், ஸ்ரீமஹாகைலாசத்திலும்,

ஷகலாசத்திலும், மஹாமேருவிலும், ஸ்ரீசைலத்திலும், காசியிலும், இகலோக பரலோக போகங்களை எல்லாருக்கும் வினைக்கீடாக அளித்துக்கொண்டு எழுந்தருளி இருப்பர்; அவ்விடங்களிலடைந்து துதிப்போருக்கு பரமேசுவரர் போகாதிகளை அளித்துக்கொண்டு பக்குவான்மக்களின் மனத்தைத்திருத்தி அவர்களுள்ளிலும் மேற்கூறிய இடங்களிலும் ஞானவடிவமாக எழுந்தருளி இருப்பார் என்று இடங்கூறினர். (எச)

ஒப்பவர் மிக்கோர் வேறற் றொருவனு யெங்குந் தங்கு
மப்பரஞ் சுடரே யிந்த வாலவா யுறையுஞ் சோதி
கைப்படி கனிபோன் மேனுட் கண்ணுவ ஞதி யோர்க்கு
மெய்ப்பொருள் விளங்கித் தோன்று வேதத்தை விருத்தி செய்தான்.

(இ-ள்.) ஒப்பாரும் மிக்காரும் வேறே இன்றி ஏகனுக எவ்விடங்களிலும் எழுந்தருளியிருக்கிற அப்பரஞ்சோதியே இந்த திருவாலவாயிலிலே எழுந்தருளியிருக்கிற கடவுள். அவரே கையிற்பொருந்தியபழத்தைப்போல முன்னுளில் கண்ணுவர்முதலானவர்களுக்கு உண்மைப்பொருள்விளங்கித் தோன்றுத வேதத்தை வியாக்கியானஞ்செய்தனர்.

மேற்கூறிய வண்ணமுள்ள தானங்கள் வேறுநாடுகளிலன்றோ விருப்பதென்று எண்ணி இடரடைந்து பாண்டியன் வருந்தாதிருக்கும்வண்ணம் கைலாயாதிதானங்களிலெழுந்தருளியிருக்கிற அவ்விறைவனே இந்த மதுரையிலுள்ள கடவுளென்று கூறி ஐயமறுத்தனர். இவர் போகாதிகாரியோ போகமோக்ஷாதிகாரியோ என்னுடையபந்தத்தை அறுப்பாரோ என்று சந்தேகப்படுமவனுக்குள்ள சந்தேகமொழிய முமுக்ஷுக்களான கண்ணுவர் முதலானவர்களுக்கு ஞானர்த்தமுபதேசித்தவரென்று புராண வுவமானத்துடன் கூறி ஐயமறுத்தனர். (எடு)

தன்னரு ளான ஞானத் தபனிய மாகுந் தில்லைப்
பொன்னக ரிடத்தி லென்னைப் போகெனப் பணித்தா னீரு
மன்னதற் கிசைந்தீ ராகென் றாலவா யடிக டம்மைப்
பன்னருந் துதியா லேத்தி விடைகொடு பணிந்து போவார்.

(இ-ள்.) தமது அருண்மயமாக விளங்குகின்ற அழகியதில்லைக்ஷேத்திரத்திற்கு என்னைப்போகுமாறு கட்டளையிட்டிருக்கின்றனர்; அதனுல் நீரும் அதற்குச் சம்மதப்பட்டவராகுகவென்று மதுரையிலெழுந்தருளியிருக்கிற இறைவனைப் பிறரால் சொல்லுதற்குக்கூடாத தோத்திரங்களினலே துதித்து வணங்கிச்செல்கின்றர். எ-று. (எசு)

இறைவனது காருணியமே சித்சபையாகவிருக்கொண்டு நிற்பதேயன்றி, மாயாகாரியமான பௌதீக சம்பந்தமானதல்லவென்பார், "தன்னருளானஞானத்தபனியமாகுந் தில்லை" என்றார். (எசு)

தன்றொடக் கறுத்த நாதன் றாட்டொடக் குண்டு போவார்
பின்றொடர்ந் தரசன் செல்லப் பெருந்தவர் நின்மி னின்மி
னென்றனர் செலவுங் கூப்பி டெல்லைசென் றணிய னுகிச்
சென்றடி பணிந்தத் தென்னன் விடைகொடு திரும்பி னுனே.

(இ-ள்.) தனதுபாசத்தைச்சேதித்த பரமாசிரியரது திருவடியிலே பற்றுவைத்துச் செல்லுபவனைப்பின்னே தொடர்ந்து அரசன் வருதலும், பெரியதவத்தினையுடைய மணிவாசகப்பெருமான் அம்மன்னவனைப்பார்த்து நில்லுங்கள்: நில்லுங்களென்று கூறிக்கொண்டு நடக்கவும், ஒருகூப்பிடுதூரம் பாண்டியன் பின்னேசென்று அவரதுமுன்னேபோய் பாதங்களைவணங்கி உத்தரவைப்பெற்றுக்கொண்டு திரும்பினன். எ-று. (எஎ)

உடல்பொருளாவிகளைத் தத்தஞ்செய்தஞானனுபவிக்கு குருபாதஸ்மரணை தவிரவில்லையென்ப தநுபவசித்தமாதலால், "தன்றொடக்கறுத்த நாதன்றாட்டொடக்

குண்டுபோவார்'' என்றார். சிவபெருமானே குருவாகவருதலால் இரண்டாவதுத்தேசிக்கத்தக்கபொருள் இல்லையென்றுணர்க. இதனாலன்றே, "தன்னையெனக்களித்த தம்பிரான்" என்றார் பிறாண்டும்.

பெரியோர்கள் பிரயாணம்போகுங்கால் அவரிற் சிறியவர்கள் ஏழடிவழிவிடுவது வழக்கம். பாண்டிமன்னன் மாணிக்கவாசகசுவாமிகளிடத்தில்பேரன்புவைத்தவனாதலால் கூப்பிடுதூரஞ்சென்றான் என்றுணர்க. (எஎ)

துறந்தவர் போக மீண்டு தொன்னக ரடைந்து தென்ன
னறந்தரு பங்கி னுறை யடைந்துதான் பிரம்பு நீட்டப்
புறந்தரு கருணை வெள்ளம் பூரிப்பத் தாழ்ந்து நெஞ்ச
நிறைந்தது வாய்கொள் ளாம னின்றெதிர் துதிப்ப தானான்.

(இ-ள்.) தமக்கு மந்திரியாராகவிருந்த அவர் துறவடைந்து செல்லுதலும், அவரை வழிவிட்டபாண்டியன் திரும்பிவந்து தருமங்களை வளர்க்கின்ற உமாபிராட்டியை ஒருபுறத்திலுடைய பரமேசுவரரது சந்நிதானத்தை அடைந்து தான்பிரம்பு நீட்டியடித்தற்கு முதுகைத்தந்த கருணைஜலப்பிரவாகமானது பூரிப்படையும்வண்ணம் வணங்கி நெஞ்சில் நிறைந்த அன்பு வாய்க்கொள்ளாமற்றதும்ப, எதிரே நின்று துதிக்கத்தொடங்கினான். எ-று.

இம்மன்னவனிடத்தில் மந்திரியாக விருந்த நாளிலும் உட்டுறவுடையவரென்றுணர்த்த "துறந்தவரென்றார்."

சகல தருமங்களையு முலகில் செய்துகாட்டிய தேவியா ரெழுந்தருளியிருக்குமிடமாதலால், இறைவனிடப்புறத்தை "அறந்தருபங்கு" என்றார்.

உண்மையன்பிலக்கணத்துடன் துதித்தானென்பார், "நெஞ்சநிறைந்தது வாய்கொள்ளாமல் நின்றெதிர் துதிப்பதானான்" என்றார். (எஅ)

கொச்சகக்கலிப்பா.

அடையாளம் படவொருவ னடித்தகொடுஞ் சிலைத்தழும்புந்
தொடையாக வொருதொண்டன் றொடுத்தெறிந்த கல்லும்போற்
கடையானே னெவகுண்டடித்த கைப்பிரம்பு முலகமெல்லா
முடையானே பொறுத்ததோ வுன்னருமைத் திருமேனி.

(இ-ள்.) அடையாளம் உண்டாகும்வண்ணம் ஒருவனடித்த வளைந்தவில்லின் தழும்பும், மாலையாகவுத்தேசித்து ஒரு அன்பனெறிந்தகல்லும்போல, கடையேனாகிய என்னாலே கோபித்து அடிக்கப்பட்ட கைப்பிரம்பும் உலகமெல்லாம் உடையவனே! அருமையான உனது திருமேனி பொறுத்ததோ. எ-று.

இவ்வாறே.

[Grantha script verse, 2 lines]

ப்ரியம்ஜாதம்சஸ்யசித்துநித்யம்பாஷாணதாடநம்
தநுஷாதாடநம்வேத்ரதாடநம்சாத்யமுத்க்ருதம்.—என்று வடநூல் திருவிளையாடலில் வருதலைக்காண்க.

சந்திரவங்கிசத்தரசனாகிய பாண்டுவுக்கு மகனாக இந்திரன் சார்பிற்பிறந்த அருச்சுனன், ஸ்ரீவேதவியாசமகரிஷியினிடத்தில் பாசுபதமந்திரோபதேசம்பெற்று ஸ்ரீகைலாசத்தின் தாழ்வரையையடைந்து ஸ்ரீகண்டரைக்குறித்து பாசுபதாஸ்திரப்பேற்றின்

பொருட்டு தனதான்மார்த்தமான சிவபெருமானை காமியார்த்தமாகப்பூசித்து, ஒற்றைக்காலில் நின்று தவஞ்செய்தகாலத்தில் அவனுள்ளத்தில், எழுந்தருளியிருக்கும் அவ்விறைவன் லீலார்த்தமாக ஒரு கிராதவேஷத்துடன் ஒருபன்றியைத் துரத்திக்கொண்டு அருச்சுனன் நிற்கும் இடத்தையடைந்து, அப்பன்றியின் காரணமாக விற்போர்புரிந்து அவன் வில்லின் நாணியை அறுத்தனர்; அறுத்தவுடனே அவன் மஹா கோபத்துடன் நாணியறுந்த வில்லினல் மோதி அக்கிராதனனசிவபெருமானுடைய தலையில் காயம்பட அடித்தனன். இதன் விரிவை மஹாபாரதமுதலிய நூல்களிற்காண்க.

நற்குலத்திற்பிறந்த வொருவர் சாத்திரவிசாரணை செய்யப்புகுந்து பூருவகருமத்தால் விஷ்ணுவினலுண்டாக்கப்பட்ட பௌத்தமதத்தை யாசரித்துப் புத்தராக விருந்தனர். சிலகாலங்கழித்து அவருக்கு பௌத்தாசாரம் சிறந்ததாகத் தோன்றவில்லை. அதனல் வேறுபல மதநூல்களையும் ஆராயப்புகுந்தார். ஆராய்ந்ததில் அவருக்கு சைவசமயமானது வெகுநல்லசமயமென்னும் புத்தியுண்டாகியது.உண்டாகி,அச்சமயத்தின் உள்ளிலக்கணங்களை ஆராய்ந்தார். ஆராய்ந்ததில் சிவார்ச்சனைசெய்யவேண்டுமென்றும்,அதுவும் மானதபூசையுடன் செய்யவேணுமென்றும் அறிந்துகொண்டார். ஆனல் தாம் அநேகநாளாக புத்தராகவிருந்தமையால் திடீரென்று அம்மதத்தில்நின்றும் வேறுபடுதற்கு முடியாதிருந்ததினலே கபடமாகச் சிவத்தியானஞ்செய்து வந்தனர். பின்னுமனேககாலங்கழித்து ஒருநாள் ஒருமைதானத்தில் பூசையில்லாத இலிங்கமொன்றிருக்கக்கண்ட விவர், அதிகமோகத்துடன் நாயகனை எதிரிற்கண்டநாயகியைப்போல பிரக்ஞை தவறி இன்னது செய்வது என்று தோன்றுமையா லருகிற்கிடந்த ஒருகல்லையெடுத்துவீசி யவ்விலிங்கத்தின் மீதெறிந்தனர். எறிந்த ஒருநிமிஷத்திற்கெல்லாம் சுயபோதமுள்ளவராகி அச்சோ! என்செய்தேம்: என்செய்தேமென்று பரிதபித்தனர். பரிதபித்த நிமிஷத்திற்கெல்லாம் பாவனுப்ரியஸந்துஷ்டன் இறைவனென்று உணர்ந்தமொழி ஞாபகத்துக்கு வந்தது. வருதலும்அன்றுமுதல் கல்லை மலராகக்கருதி தியானத்துடன் எறிந்துகொண்டுவந்தனர். இறைவனும் அதனை மலராகவே ஏற்றுக்கொண்டனர். அநேககாலம் இவ்வண்ணஞ்செய்துகொண்டிருந்து பின்னர் கடவுளின்கருணையால் மீளாவின்பத்திற்கு ஆளாகிச் சிவபுரியையடைந்தனர். இதனை ஸ்காந்தபுராணத்து சங்கரசங்கிதை-ஒன்பதாவதத்தியாயம்-உகு-வது சுலோகம் – ௬-வது பாதம்-உஎ-வது சுலோகம் முதற்பாதம் சாக்கியநாயனர் புராணம்முதலியவற்றுலுணர்க.

அரிமர்த்தனன், மேற்கூறிய இருவரைப்போன்ற குணமொன்றும் இல்லாதவனே தானென்று தன்னைவிளக்க, "கடையானேன்" என்றான் என்றார். (எகூ)

கடியேறு மலர்மகன்மான் முதலாய கடவுளரும்
படியேழு மளவிறந்த பல்லுயிரு நீயேயோ
முடியேற மண்சுமந்தாய் முதுகுதனி லடிபட்ட
தடியேனும் பட்டேனின் றிருமேனி யானேனோ.

(இ-ள்.) சிறந்த மணத்தினையுடைய மலரிலிருக்கின்ற பிரமன் திருமால் முதலான தேவர்களும் ஏழு உலகங்களும் அளவற்ற பலவகையான உயிர்வருக்கங்களும் தேவரீரேயோ? முடியிற்பொருந்த மண்ணைச்சுமந்தவரே! உமதுமுதுகில்பட்ட அடி அடியவனும் பட்டேன்; அதனல் நானும் உமது திருமேனி ஆயினேனே? எ-று.

அடித்தநானும் அடிபட்டிருக்கிறேனெனக்கு நொந்தது. ஓ மண்சுமந்தருளினவரே! சருவவியாபகனென்று வேதஞ்சொல்லுகிற தும்மைத்தானே? என்று வியந்துணாத்தான் என்பார் "ஆனேனே" என்றான் என்றார். (அ0)

கைக்குமருந் தின்சுவைபின் காட்டுமா றெனவினைக்கும்
பொய்க்குமருங் கலனாகி மண்ணாண்டு புலைநரகந்
துய்க்குமருந் துயர்களைவான் மாறாய்நின் றுணையடிக்கே
யுய்க்குமருந் தவரிவரென் றறியாமை யொறுத்தேனே.

(இ-ள்.) கசப்பினையுடைய மருந்து இனிய சுவையைப் பின்னே காட்டுந் தன்மையைப்போல, பாவத்துக்கும் பொய்க்கும் அருமையான பூஷணமாகி மண்ணுலகத்தை ஆண்டு தீட்டினையுடைய அரிய நரகத்தை அநுபவிக்கவேண்டிய அரியதுன்பத்தை நீக்கும்பொருட்டு என் வினைக்கு விரோதமாய் உமது பாதங்களிலேயே சேர்க்கிற அரிய தவத்தினையுடையவர் இவர் என்று உணர்ந்துகொள்ளாமல் தண்டித்தேனே.

நிலவேம்பு முதலியவைகளைக்கலந்துசெய்வதினாலே தின்னும்பொழுது கசப்பைக்காட்டி,உடம்பில் ஊறினால் அதிககுணத்தைக்காட்டும் மஹாவில்வாதிமுதலிய மருந்துகளைப்போல,எனதுபொருள்களைஎடுத்துச்செலவாகச்செய்தபொழுதுகஷ்டத்தையும்,பின்னாளில் சுவர்க்காதி பதப்பிராப்திகளாலே குதூகலத்தையும் உண்டாக்கிய அருந்தவரென்று உணர்ந்துகொள்ளாமற் போனேனென்று பரிதாபப்பட்டானென்பார், "உய்க்குமருந்தவரிவரென்றுணராமலொறுத்தேனே" என்றார். (அக)

பாதியுமை யுருவான பரமேட்டி யெனக்கிம்மை
பூதியமும் பரகதியு முறுதியென விளைவிக்கும்
நீதியினான் மந்திரியாய் நின்னருளா யவதரித்த
வேதியரை யறியாதே வெறுத்துநா னொறுத்தேனே.

(இ-ள்.) பாதித்திருமேனி உமாதேவியின் வடிவமாக விளங்குகின்ற பரமேசுவரரே! அடியேனுக்குஇந்தசனனத்திற்கு வேண்டிய லாபங்களையும் மறுமையிலடையத்தக்க கதியும் திரமானதாக உண்டாக்குகிற நீதிமுறைமையினாலே மந்திரியாகி உன்து திருவருளாகப்பிறந்த அந்தணரை நான்கோபித்துத் தண்டித்தேனே. எ-று. (அஉ)

மாயா விருத்தியினான் மாழாந்து மாதவரை
யாயா தொறுத்தே னருநரகத் தாழ்ந்துநான்
வீயாம லின்றனையார் மெய்ம்மையெலாந் தேற்றியவென்
றாயானாய் தண்ணளிக்கென் றமியேன்செய் கைம்மாறே.

(இ-ள்.) மாயாவியாபாரத்தினான் மயங்கி மகத்தான தவத்தினையுடையவரை ஆராயாமல் தண்டித்தேன்; அதனாலே அரியநரகத்திலே மூழ்கி நான்கெடாமல் இன்று அப்பெரியவரது உண்மைகளையெல்லாம் எனக்குத்தெளிவித்த என்றாயாக வுள்ளவரே! உமது காருணியத்திற்கு அடியேன் என்னகைம்மாறு செய்யப்போகின்றேன்? எ-று. ()

நின்னையுணர்ந் தவர்வேத நெறிவேள்வி செய்தூட்டு
மின்னமுதிற் கழிசுவைத்தோ விவளிடும்பிட் டெவ்வுயிர்க்கு
மன்னவனே செந்துவர்வாய் மலர்ந்தமுது செய்தனையா
லன்னையிலா வுனக்கிவளோ ரன்னையாய் வந்தாளோ.

(இ-ள்.) நின்னை இன்னதன்மையனென் றறிந்தவர்கள் வேதமார்க்கத்தினால் யாகஞ்செய்து ஊட்டுகின்ற இனியஅமிர்தத்தைப்பார்க்கிலும், இவளாலிடப்பட்ட பிட்டு மிக்கசுவையினையுடையதோ? எவ்வகைய உயிர்வருக்கங்களுக்கும் தலைவனே! நீ செந்நிறம்பொருந்திய பவளம்போன்ற வாயைத்திறந்து அதனை உண்டருளினாய். அன்னையில்லாத உன்றனக்கு இவள் ஒருமாதாவாக வந்தனளோ? எ-று. (அச)

அன்றுசிறுத் தொண்டரிடும் பிள்ளைக் கறியமுது
மென்று சுவைதெரிந்த வேடனிட்ட வூனும்போ

னன்று நரையாட்டி யிடுபிட்டு நயந்தருந்தி
யென்று மடியார்க் கெளிவந்தா யெந்தாயே.

(இ-ள்.) முன்னாளில் சிறுத்தொண்டராலிடப்பட்ட பிள்ளைக்கறியமுதையும், மென்றூசுவைகண்டு பின்னரந்த வேடுவனாலிடப்பட்டமாமிசவுணவையும்போல, நன்றாய் நரையினையுடைய வந்தியினாலிடப்பட்ட பிட்டினையும் விருப்பத்துடனுண்டு எப்பொழுதும் எந்தையே! தேவரீர் அடியவர்களுக்கு இலேசாக வெளிப்படுகின்றீர். எ-று.

இவ்வாறே.

𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑌞𑍍𑌚𑌕𑍃𑌤𑌨𑍍𑌤𑍇𑌨 𑌹𑌿𑌤𑌾𑌯𑌜𑌗𑌤𑌾𑌙𑍍𑌕𑌿𑌲 ।
𑌵𑌿𑌷𑌂𑌵𑍍𑌯𑌾𑌧𑌸𑍍𑌯𑌪𑌿𑌶𑌿𑌤𑌂 𑌶𑌿𑌶𑍋𑌰𑍍𑌮𑌾𑌂𑌸𑌞𑍍𑌚𑌪𑌿𑌷𑍍𑌟𑌕𑌃 ॥

நிந்திதஞ்சக்ருதந்தேநஹிதாயஜகதாம்கில ।
விஷம்வ்யாதஸ்யபிசிதம்ஶிஶோர்மாம்ஸஞ்சபிஷ்டக ॥—என்று வடநூல் திருவிளையாடலில் வருதலைக்காண்க.

பிராமணகுலத்திற் பிறந்தவொருவர் ஒருசோழனுக்குச் சேனாபதியாக விருந்துகொண்டு சிவபத்தியிலும் அடியார்பத்தியிலும் சிறந்தவராகி இருந்தனர். இவரது சிவபத்தியின் சிறப்பையுணர்ந்த மன்னவனிவரை வணங்கி இன்றுமுதல் நீர் உம்முடைய இஷ்டம்போலவிருந்து உம்முடைய மனோபீஷ்டங்களை நிறைவேற்றிக்கொள்ளலாமென்று கூறி அநேகமான திரவியங்களையளித்தனன். பின்னரிவர்தமது வீட்டிலேயே இருந்துகொண்டு அடியவர்களுக்கு அமுது அளித்தலை ஒரு நியமமாகக்கொண்டு தினந்தோறும் சிவனடியவர்களுக்கு அன்னம் அளித்துக்கொண்டு தியானத்திலும் சிறந்தவராய்க்கொண்டுவந்தனர். அநேககாலத்திற்குப்பின்னர் ஒருநாள் அடியவர்களாரும் இவர் வீட்டிற்குப் போஜனத்திற்கு வந்தாரில்லை. அதனாலே தாமே வீதிகளிற்சென்று சிவனடியவரைத்தேடினார். ஆரும் அகப்படவில்லை. கடைசியாக இனி என்னசெய்வது என்று துன்புறுவாரை ஆளக் கடவுள் தாமே ஒரு காபாலியாகி அவர் திட்டிக்கெதிரே தோன்றினர். தோன்றுதலும், இவர் மஹாநந்தபரிதராய் அவரை வணங்கி, ஆண்டவனே! தாங்கள் இன்று என்னில்லத்திற்கு பிக்ஷைக்கெழுந்தருளவேண்டுமென்று கூறுதலும், கபடகபாலியர் பக்தசிரோஷ்டரே! நான் ஒரு விரதமுள்ளவனாக விருக்கிறேன்; அந்த விரதத்திற்குப்பங்கம்வராமல் ஆஹாரமளிக்கக்கூடுமானால் நான் சாப்பிடுவேன்; அதாவது: பெற்றமாதாபிதாக்களாலே அறுத்துச்சமைக்கப்பட்ட ஸலக்ஷணமான சிசுமாமிசத்துடன் ஆஹாரம் அளிப்பதாகவிருந்தாலுண்ணுவேன் என்றுகூறுதலும், அதற்கு அவர் உடன்பட்டவராய்தன் வீட்டிற்குச்சென்று மனைவியுந்தானுமாக ஐந்துவயதுள்ள அழகோடுகூடிய தங்கள் பிள்ளையையறுத்துச்சமைத்து காபாலியாருக்கு நிவேதித்தார்கள். அவரும் ஏற்றுக்கொண்டு பின்னர் அக்குழந்தையை எழுப்பி அவர்களுக்கெல்லாம் சிவலோகப்பிராப்தி அளித்தாரென்பது ஜகத்பிரசித்தம். இதன் விரிவை சிறுத்தொண்டர் புராணமுதலியவைகளிற்காண்க.

தமிழ்நாட்டின் வடகோடியிலுள்ள போத்தப்பிநாட்டில் உடுப்பூரென்னும் கிராதபுரியில் அரசனாகவிருந்த நாகனென்பவன் செய்ததவத்தினால் அவன் மனைவியான தத்தையென்பவள் முதிர்ந்தவயதில் ஒரு பிள்ளையைப்பெற்றனள். அப்பிள்ளையை மிகவும் அருமையாக வளர்த்துத் திண்ணனென்று பேரிட்டு அவனுடைய யௌவனவயதில் அக்கிராதபூபதி தன்மகனுக்குத் தன் நாட்டைக்கொடுத்தனன். அவனும்சிறிதுகாலம் கிராதநாடுகளான மலைப்பிரதேசங்களைப்பெருக்கி ஆண்டுகொண்டு இருந்து ஒருநாள்வேட்டையை உத்தேசித்து தனது படர்களான இருளர்கள் நாய்கள் முதலியவைகளுடன் பெருங்காட்டிற் புகுந்து வேட்டையாடினான், வேட்டையாடிய இவனுடைய எதிரிலொரு

காட்டுப்பன்றி காணப்பட்டது. அதனைக் கொல்லவேணும் என்னும் அபிப்பிராயத்தால் அதைப்பின்பற்றிச்சென்றான். அப்பன்றி இவனைவிட்டு ஓடியும்போகாமல்கிட்டவும்வராமல் இவனை நெடுந்தூரம் தன்பின்னே வரச்செய்து கடைசியாக வவனுடைய வாளுக்கிரையாகியது. பின்னரவன் றன்னைத்தொடர்ந்துவந்த இரண்டுகிராதர்களைக்கொண்டு தன்னால் குத்திக்கொல்லப்பட்ட பன்றியை எடுப்பித்துக்கொண்டு ஊருக்குத்திரும்பினவன் வழிதவறி பொன்முகரியாற்றின்கரையை யடைந்தான். அங்கே எதிரிலே காணப்பட்ட சிவபெருமானுடைய கிரிசிகரத்தைநோக்கி உடன்வந்தவர்களை அதோ காணப்படுவது என்னவெனக்கேட்டான். அவர்கள் அது கடவுள் இருக்குமிடம் என்று கூறினார்கள். உடனே தான் அம்மலையின்மீதிலேறிகடவுளைக்கண்டு வருவதாகக்கூறி ஒருகிராதனுடன் அக்கிரியின்மீதிலேறினான். இவனுடைய பூர்வபுண்ணியபரிபாகத்தினால் கடவுள் அங்கிருந்த சிவலிங்கத்திலதிஷ்டித்து பிரத்தியக்ஷமாக விருந்தனர்; இறைவனது காக்ஷியைக்கண்டு பரவசங்கொண்டு பழையகுணமாறி அன்பின்வடிவமே வடிவமாய் அருகினின்றவனைநோக்கி அடே, நீ இக்கடவுண்மீது இலையாதிகள்வந்த வரலாறறிவையாவென்றான். உடனே அவன் நின்றந்தையொடு யான் முன்னொருகாலத்தில் இங்குவந்தேன் அப்பொழுது இங்கு ஒருபிராமணன் இக்கடவுளின் தலையில் நீரைக்கொட்டிப் பூவைச்சூட்டி யெதையோ ஊட்டிச்சென்றனன். என்றுகூறுதலும், தானும் அவ்வண்ணமே செய்யவேண்டுமென்றெண்ணிக் கீழே இறங்கிவந்து பூர்வங்கொன்ற பன்றியைச்சுட்டு மாமிசமெடுத்து வாயிலிட்டுமென்றுருசியாகவுள்ளவைகளை ஒரு தேக்கிலைத்தொன்னையில் உமிழ்ந்தெடுத்துக்கொண்டு, சில பத்திர புஷ்பங்களைப்பறித்துக் குடுமியில் வைத்துப் பின்னர் வாய்நிறைய பொன்முகரி நீரைமொண்டுகொண்டு, மேலேசென்று பாதுகையோடுகூடிய காலினால் பரமேசுவரருடைய சிரசிலிருந்த பத்திரபுஷ்பங்களைத்தள்ளி வாயிலிருந்த நீரையுமிழ்ந்து அபிஷேகித்து, குடுமியிலிருந்த புஷ்பங்களைத்தரித்து, தொன்னையிலுள்ள மாமிசத்தை யெதிரில்வைத்து உண்ணும்படி வேண்டிக்கொண்டனன். கடவுளும் அவனுடைய வேண்டுகோளுக்கிரங்கி அதையருந்தினார். இவ்வண்ணம் இவ்வேடுவர்பெருமான் ஆறுநாள்செய்து கடைசியில் இவர்நிமித்தம் வருத்தமுள்ள சிவகோசரியார்பொருட்டு இறைவனது திருக்கண்ணில் நீரொழுகுவதைக்கண்டுபலபச்சிலைகளைக் கொண்டுவந்து பிழிந்தும் தீராமையால் தன் கண்ணைப்பிடுங்கிச் சாத்தி, அதனால் இறைவரால் கையைப்பிடித்து நில்லு கண்ணப்பவென்றுகூறி தமது சாமீபபதவியையளிக்கப் பெற்றுச் சிவலோகமடைந்தனர். இதன் விரிவைக்காளத்திமான்மியம், பக்தவிலாசம் முதலியதுகளிலும், திருத்தொண்டர்புராணத்திலும் மற்றுள்ளவைகளிலுங்காண்க.

நரியாவும் பரியாக்கி நடத்தியுமம் பரமன்றித்
தரியாயான் றருதுகிலைத் திருமுடிமேற் றரித்துமறைக்
கரியாய்நீ யென்பாச மறுக்கவருந் திருமேனி
தெரியாதே பரியாசை திளைத்திறுமாந் திருந்தேனே.

(இ-ள்.) நரிகளையெல்லாம் குதிரைகளாக்கி நடத்தியும் ஆகாயத்தையன்றி வேறு ஆடை யுடுத்ாதவரே! என்னாலளிக்கப்பட்ட வஸ்திரத்தைத் திருமுடியின்மீது தரித்தும் வேதத்திற்குமருமையானவரே! தேவரீர் எனது பாசத்தைச் சேதஞ்செய்யும் பொருட்டு எடுத்துக்கொண்டுவந்த திருமேனியை இப்படிப்பட்டதென்றுணராமல் குதிரைப்படைகளின்மீதுள்ள ஆசையின்மூழ்கி யிறுமாந்திருந்தேன். எ-று. (௮௬)

விண்சுமக்கும் புள்ளாய் விலங்காய்ச் சுழன்றுமனம்
புண்சுமக்குஞ் சூழ்ச்சி வலியுடைய புத்தேளிர்
மண்சுமக்கு மள்ளராய் வந்திலரே வந்தக்காற்
பண்சுமக்குஞ் சொல்லிபங்கன் பாதமுடி காண்பாரே.

(இ-ள்.) ஆகாயத்தாற் சுமக்கப்படுகின்ற பறவையாகவும் பன்றியாகவும் கீழு மேலுந்திரிந்து மனம்புண்பட்ட தந்திரவன்மையின் மிக்கதேவர்கள் மண்சுமக்குமன்னா ர்களாக வந்தார்களில்லையே! வந்திருப்பார்களாயின் இசையோடுகூடிய சொற்களையுடை ய உமாபிராட்டியை ஒருபாகத்திலுடையவரது அடியையும்முடியையுங்காண்பார்களே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றுபல் முறையாலே துதித்தடைந்தோர்க் கன்பரிவ ரிவரைத் தேறி
னன்றுமிக பரபோகம் விடுபெற லெளிதென்று நகைத்தார் வேந்த
னன்றுதிருப் பணிபூசை பிறவுநனி வளம்பெருக்கி யழகார் வெள்ளி
மன்றுடையா னடிக்கன்பு முயிர்க்கன்புஞ் சுரந்தொழுகி வாழு நாளில்.

(இ-ள்.) எனப்பலவிதமாகத்துதித்து, தன்னையடைந்தவர்களுக் கன்பராக வுள் ளவரிவர்; இவரையுணர்ந்தால் நன்றாய் இகபரபோகங்களையும் வீட்டினையும் எளிதிற்பெ றலாமென்று, ஒளியொடுபொருந்திய மாலையணிந்த பாண்டியன் அவ்விறைவனுக்கு நன் றாய்த் திருப்பணிகளையும் பூசைகளையும் மற்றவைகளையும் மிகவும்வளமாக வதிகமாக்கி அழகுபொருந்திய வெள்ளியம்பலவாணரது பாதங்களிற் பத்தியும் உயிர்களிடத்தி லன் பும் உடையவனாய் வாழுநாளில். எ-று. (அஅ)

முன்புபெருந் துறையார்க்கு மடியார்க்கு மறந்தெரிந்த முறையா லீட்
டுந், தன்பொருள்போ யுடன்பலவாய்த் தழைத்துவரு பயனேபோற் றலை
யு வாவி, னன்பனிகான் மதிகண்ட வுவரியெனப் பலசெல்வ நாளு மோங்க,
வின்புறுவான் சகநாத னெனுமகப்பெற் றின்பத்து ளின்பத் தாழ்ந்தான்.

(இ-ள்.) தருமசாத்திர வழியாகச்சேர்க்கப்பட்ட தமது செல்வங்களெல்லாம் முதலில் பெருந்துறைப்பெருமானுக்கும்அவரடித்தொண்டர்களுக்கும் மணிவாசகப்பெ ருமானாற் செலவழிக்கப்பட்டவுடனே யவைகள் பலவாகத்தழைத்துவரும்பிரயோசனத் தைப்போல, பூரணையினன்று நல்ல சீதளகிரணங்களைக் கக்குகின்ற சந்திரனைக்கண்ட கடலைப்போல, பலவிதமான செல்வங்கள் தினப்பிரதிதினம் விர்த்தியாக அதனால் இன் பம் அடைந்துகொண்டிருக்கின்ற வரிமர்த்தனன் செகநாதனென்றுபேருள்ள ஒருமக னைப்பெற்று ஆனந்தத்தின்மே லானந்தத்தில் மூழ்கினான். எ-று. (அகூ)

அம்மகனை முடிசூட்டி யரசாக்கி வாதவூ ரமைச்சர் சார்பான், மெய்ம்
மைநெறி விளங்கியிரு வினையொப்பி லரன்கருணை விளைந்த நோக்கான், மும்
மைமலத் தொடர்நீந்திச் சிவானந்தக் கடற்படிந்து முக்கண் மூர்த்தி, செம்ம
லர்த்தா ணிழலடைந்தான் றிறலரிமர்த் தனனென்னுந்தென் பார் வேந்தன்.

(இ-ள்.) பாண்டிநாட்டையாண்ட வெற்றிபொருந்திய அரிமர்த்தனனென்னும் பாண்டியன், அச்செகநாத பாண்டியனென்னும் மகனுக்கு முடிசூட்டி யவனை யரசனாக்கி, வாதபுரேசர் என்னும் மந்திரியாரிடத்தில் உண்மையானமார்க்கத்தை யுணர்ந்து, இரு வினையொப்புண்டானபோது இறைவனது கருணைகடாக்ஷத்தால் மூன்றுவகையினதா கிய மலபந்தங்களினின்றும் நீங்கி சிவானந்த சமுத்திரத்தின்மூழ்கி, திரிலோசனராகிய சிவபெருமானது செவ்வியமலர்போன்ற திருவடிநிழலையடைந்தனன். எ-று. (கூ0)

மேற்படி வேறு.

வழுதியால் விடுக்கப் பட்ட வாதவூர் முனிக டம்மைப்
பழுதிலாப் பாடல் கொள்வார் பதிபல பணிந்து போந்து
முழுதுணர் மறையோர் வேள்விப் புகையண்ட முடிகீண் டூழி
பெழுவ டவரைபோற் றோன்று மெழிற்றில்லை மூதூர் சேர்ந்தார்.

(இ-ள்.) பாண்டியனாலனுப்பப்பட்ட முனிவராகிய வாதவூரர் தமது குற்றமற்ற பாடல்களை யேற்றுக்கொள்ளும் சிவபெருமா னெழுந்தருளியிருக்கும்பலதலங்களையும் வணங்கிக்கொண்டுசென்று,சர்வக்ஞர்களாகிய பிராமணர்கள்செய்கின்ற ஓமப்புகை அண்டமுகட்டையுங் கிழித்துங்கொண்டு பிரளயகாலத்தி லுயர்ந்து செல்லுகின்ற உத்தரகைலாசத்தைப்போல விளங்குகின்ற வழகியபெரிய தில்லையம்பதியை யடைந்தனர். எ-று.

வீதிதொறும் வீழ்ந்துவீழ்ந் திறைஞ்சியா லயத்தெய்தி மெய்ம்மை யான
சோதியறி வானந்தச் சுடருருவாஞ் சிவகங்கை தோய்ந்து மேனி
பாதிபகிர்ந் தவள்காணப் பரானந்தத் தனிக்கூத்துப் பயிலா நிற்கு
மாதியரு ளாகியவம் பலங்கண்டு காந்தநே ரயம்போற் சார்ந்தார்.

(இ-ள்.) வீதிகடோறும் விழுந்து விழுந்து வணங்கிக் கோயிலுக்குட்சென் றுண்மையான விறைவனது ஞானனந்த சோதிருபமாய் விளங்குகின்ற சிவகங்கையின் மூழ்கி, தமதிடப்பாகத்தை யபகரித்த உமாபிராட்டியார் காணும்வண்ணம் திருநடஞ் செய்கின்ற முதல்வனதருள்வடிவமாகிய திருச்சிற்றம்பலத்தைக்கண்டு காந்தக்கல்லின் எதிர்முகமாகிய விரும்பைப்போற் சென்றனர். எ-று. (௯௨)

அன்றுகுருந் தடியிலடி வைத்தாண்ட கோலமே யருளா னந்த
மன்றினிடத் தெதிர்தோன்றி வாவென்பா ரெனமூரன் மணிவாய் தோற்றி
நின்றதனிப் பெருங்கூத்தர் நிலைகண்டா ரஞ்சலித்தார் நிலமேல் வீழ்ந்தா
ரொன்றரிய புலன்கரண வழிநீந்தி மெய்யன்பி னுருவ மானார்.

(இ-ள்.) முன்னாளின் குருந்தவிருட்சத்தி னடியில் ஞானசாரியரா யெழுந்தருளி திருவடிதீட்சை செய்து ஆண்ட வவ்வடிவமே அருளானந்தமன்றில் எதிரே வந்து வாவென்றழைப்பவனைப்போல மந்தகாசம் காட்டாநின்ற வழகிய வாயொடு விளங்கி யெழுந்தருளிநின்ற வொப்பற்ற நடராசப்பெருமானது நிலைமையைக்கண்டு கைகுவித்து வணங்கி பூமியிற் சாஷ்டாங்கமாகவிழுந்து ஒடுங்குதற் கருமையான ஐம்புலங்களினதும் அந்தக்கரணங்களினதும் வழியிற்செல்லும் இயல்பினின்றும் நீங்கி மாணிக்கவாசகப்பெருமான் உண்மையான அன்புருவமான உருவமாக வாயினர். எ-று. (௯௩)

வண்டுபோற் புண்டரிக மலரில்விளை சிவானந்த மதுவை வாரி
யுண்டுவா சகம்பாடி யாடியழல் வெண்ணெயென வுருகுந் தொண்டர்
விண்டுழா வியகுடுமி மன்றுடையான் றிருவாக்கான் மிகுந்த நேயங்
கொண்டுபோய்க் குணதிசையி லருந்தவர்வாழ் தபோவனத்தைக் குறுகியங்கண்.

(இ-ள்.) விராட்புருடனது இருதயகமலமாகிய புண்டரிகபுரமென்னும் சிதம்பரக்ஷேத்திரத்திலுள்ள கனகசபையில் எழுந்தருளி நிற்கின்ற நடராசப்பெருமானாகிய தேனினை,வண்டைப்போல (அனுபவித்தலென்னும் வாயினால்)வாரி உண்டருளித் திருவாசகம்பாடி ஆனந்தக்கூத்தாடி தீயிற்பட்ட வெண்ணெயைப்போல வுருகாநின்ற வடியவராகிய மணிவாசகப்பெருமான், ஆகாயத்தையளாவிய சிகரத்தோடுகூடிய கனகசபையையுடைய கடவுளது கட்டளையினன் மிக்க விருப்பத்துடன்சென்று அவ்வூரின் கீழ்ப்புறத்தில் அரிய தவசிகள் வாழாநின்ற தபோவனத்தையடைந்து அவ்விடத்தில். எ-று.

குறிகுணங்கள் கடந்ததனிக் கூத்தனுரு வெழுத்தைந்தின் கொடுவா ளோச்சிப், பொறிகரணக் காடெறிந்து வீசிமனப் புலந்திருத்திப் புனிதஞ் செய்து, நிறைசிவமாம் விதைவிதைத்துப் பசுபோதங் களைந்தருணன் னீர் கால் பாய, வறிவுருவாய் விளைந்ததனிப் பரானந்த வமுதருந்தா தருந்தி நின்றார்.

(இ-ள்.) குறிகுணங்கள் முதலிய சுட்டிலக்கணங்களுக்கப்பாற்பட்டு நிற்கின்ற வொப்பற்ற நடராசப்பெருமான துருவாகவுள்ள பஞ்சாட்சரமென்னும் கொடுவாளை வீசி பொறிகளென்றும் கரணங்களென்றும் கூறப்படுகின்ற காடுகளை வெட்டி, மனமாகிய நிலத்தினைத்திருத்திச் சுத்தஞ்செய்து, பரிபூர்ண்மான வித்தினை விதைத்துப் பசுபோதமாகிய களையைப்பறித்து, அருளாகிய நல்ல நீரைப்பாய்ச்சிக் காலின்வழிபாய ஞானவடிவமாய் விளைந்துள்ள வொப்பற்ற பரானந்தவமுதத்தைத யுண்ணும லுண்டுகொண்டிருந்தனர். எ-று. (௬௫)

மானிரையுங் குயவரியும் வந்தொருங்கு நின்றுரிஞ்ச மயங்கு கானத்
தானிரைகன் றெனவிரங்கி மோந்துநக்க வானந்த வருட்கண் ணீரைக்
கானிரைபுள் ளினம்பருகக் கருணைநெடுங் கடலிருக்குங் காட்சி போலப்
பானிறவெண் ணீற்றன் பரசைவின்றிச் சிவயோகம் பயிலு நாளில்.

(இ-ள்.) மான்கூட்டங்களும் விளைந்தபுள்ளிகளையுடைய வேங்கைகளும்வந்து ஒன்றாய்நின்று உரைத்துக்கொள்ளும்வண்ணம், மயங்காநின்ற காட்டில் பசுக்கூட்டங்கள் கன்றைப்போலமோந்து நாவாற்றடவவும், ஆனந்தத்தாலுண்டாகும் அருட்கண்ணீரை இசையோடிரைகின்ற பறவைகளுண்ணவும், கருணையே வடிவமான நெடியகடலிருக்குங்காட்சியைப்போலப் பால்போன்ற நிறத்தையுடைய வெள்ளிய விபூதிதரித்துள்ள அவ்வடியவர் சலனமற்று (சிவயோகத்தில்) இருக்குங்காலத்தில். எ-று. (௬௬)

புத்தர்சில ரிலங்கையினும் போந்துமூ வாயிரமெய்ப் போதவேத
வித்தகரோ டேழுநாள் வரையறுத்துச் சூளொட்டி விவாதஞ் செய்வா
ரித்தகைய நாளேழில் யாமிவரை வேறுமெனு மெண்ணம் பூண்ட
சித்தமுடை யவராக வவர்கனவி லெழுந்தருளித் தேவ தேவர்.

(இ-ள்.) சிலபுத்தர்கள் இலங்கையினின்றும் இந்நாட்டிற்குவந்து உண்மைஞானத்தினையுடைய தில்லைமூவாயிரவர்களாகிய வைதீகசிரோட்டர்களுடன் ஏழுநாள் எல்லையிட்டுக்கொண்டு சபதஞ்செய்து விவாதஞ்செய்பவர்கள் இந்த ஒருவாரத்துக்குள் நாம் இவ்வந்தணர்களை, வெல்லுதுமென்று எண்ணங்கொண்ட மனமுடையவர்களாதலும் தேவதேவராகிய நடராசப்பெருமான் அத்தில்லைவாழந்தணர்களின் சொற்பனத்திலெழுந்தருளி. எ-று. (௬௭)

வாதவூ ரனைவிடுத்து வாதுசெய்வீ ரெனவிழித்து மறையோ ரநதப்
போதவே தியரைவனம் புகுந்தழைத்தா ரப்போது பொதுவி லாடும்
வேதநா யகன்பணித்த வழிநின்று ரெதிர்மறுப்ப மீண்டு போந்து
காதரா குலமூழ்கி யிருந்தார்முத் தழனிமிர்த்துக் கலியைக் காய்வார்.

(இ-ள்) நீங்கள் வாதவூரனைவிட்டு வாதுசெய்யுங்களென்று கூறுதலும் நித்திரை தெளிந்து எழுந்து அவ்வந்தணர்கள் காட்டிற்குச்சென்று ஞானத்தினையுடைய அந்தணராகிய மணிவாசகப்பெருமானை யழைத்தார்கள்; அப்பொழுது அம்பலத்திலாடாநின்ற வேதநாயகர் இட்டகட்டளைப்படி நடக்குமவர் வாரோமென்றெதிர்மறுக்க திரும்பவும்வந்து திரியாக்கினியைவளர்த்து தரித்திரத்தை யதம்செய்கின்ற அவ்வந்தணர்கள் அச்சத்தின் மூழ்கியிருந்தார்கள். எ-று. (௬அ)

பின்னுமவர் கனவின்கண் மன்றுண்டம் பிரியாத பெருமான் வந்து
முன்னவனைப் பெருந்துறையிற் குருந்தடியி லாட்கொண்ட முறையி னுமி
மின்னிசைவண் டமிழ்மணிபோற் பாடுங்கா ரணத்தானும் யாமன் றிட்ட
மன்னியபேர் மாணிக்கவாசகனென் றழைமின்கள் வருவ னென்றார்.

(இ-ள்.) அம்பலத்திலாடுதலை யென்றும் நீங்காத பெருமான், பின்னும் அவர்கள் கனவிலெழுந்தருளி நீங்கள் முன்னர் சென்றழைத்த வாதபுரேசனை நாம் பெருந்துறையிற் குருந்தடியிலாட்கொண்ட முறையிலும், இனிய இசையினையுடைய வளவிய தமிழை மணிபோற்பாடுங் காரணத்தாலு மன்றிட்ட நிலைபெற்றபெயர் மாணிக்கவாசகன் ஆதலால் நீவிர் அங்குச்சென்று அப்பெயரானழையுங்கள். அழைத்தாலுடனேவருவன் என்று திருவாய்மலர்ந்தருளினர். ஏ-று. (௯௧)

உறக்கமொழிந் தறவோர்சென் றிவர்நாம மொழிந்தழைப்ப வுணர்ந் துநாத, னறக்கருணை யிதுவோவென் றவரோடு மெழுந்துநக ரடைந்து மண்ணுந், துறக்கமுநீத் தருவருத்தார் மன்றாடுந் துணைக்கமலந் தொழுது மீண்டோர், நிறக்கனக மண்டபத்திற் புக்கிருந்தா ரறிஞர்குழா நெருங்கிச் சூழ.

(இ-ள்.) உடனே அந்தணர்கள் நித்திரை நீங்கி எழுந்து வனத்திற்குச்சென்று வாதபுரேசனை அவரது தீக்ஷாநாமத்தைக் கூறியழைத்தலும், நிட்டைதெளிந்து இது கடவுளி னறக்கருணையோ வெனவிருந்த வாதனத்தை விட்டெழுந்து அவர்களுடனூரையடைந்து இகலோக பரலோகசுகங்களை வெறுத்தவராகிய அரியதவத்தினையுடைய மணிவாசகப்பெருமான் அம்பலத்திலாடாநின்ற இறைவனது பதகமலயுகளங்களை வணங்கி வேறோரிடத்திற்குவந்து வித்துவசனக்கூட்டங்கள் நெருக்கமாகத் தன்னைச்சூழ்ந்திருக்கப் பொன்மயமான வொளியோடுகூடிய ஒருமண்டபத்தில் சென்றிருந்தனர். எ-று. ()

மேற்படி வேறு.

தத்துநீர்க் கலத்திற் போந்த சீவரப் போர்வை தாங்கும்
புத்தரை வேறு வைத்துப் புகன்மினும் மிறையு நூலு
மத்தலை நின்றோ ரெய்துங் கதியுமென் றாழ்ந்த கேள்வி
மெய்த்தவ நெறிமா ணிக்க வாசகர் வினவி னாரே.

(இ-ள்.) அலைவீசாநின்ற கடலிலுள்ள கப்பலின்வழியாக இந்நாட்டிற்குவந்த சீவரமென்னும் பேருள்ள ஆடையையணிந்துள்ள புத்தர்களை வேறொருபுறத்தில்வைத்து, சொல்லுங்கள் உங்களிறைவனையும் நூலினையும் அந்நூலின்வழிநின்றவர்களடையுங் கதியையுமென, இந்த ஆழமானகேள்விகளை உண்மையான தவமார்க்கத்திலிருக்கின்ற மாணிக்கவாசகர் கேட்டனர். எ-று.

வேறு வைத்தென்பதை - பிரதிகக்ஷிகளாதலால் எதிர்முகத்தில்வைத்து வாதித்தனரென்பார், புத்தரைவேறுவைத்து என்றார்.

இதனை அவர்கள் நீறிலா நெற்றியராதலாலவருடன்வாதுசெய்யுங்கா லவர் முகாவலோகனஞ்செய்யவேண்டிவரும்; ஆதலாலதுகூடாதென்று திரைமறைவில் வேறொரு இடத்தில்வைத்து வாதித்தனர் என்பாருமுளர். (௯௦௩)

கனவினு நீறு காணாக் கைதவர் காட்சி யானு
மனவனு மானத் தானும் வாசகப் பெருமான் றம்மை
வினவிய மூன்று மூத்தே சாதியின் விதித்தார் வேத
மனையவர் கேட்ட மூன்று மனுவாதஞ் செய்துட் கொள்ளா.

(இ-ள்.) சொப்பனத்திலும் திருநீற்றைக்காணாத கீழ்மையோராகிய புத்தர் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலும் மனத்தாலுணரும் அநுமானப்பிரமாணத்தாலும் மாணிக்கவாசகசுவாமிகள் தங்களைக்கேட்ட இறைவன், நூல், அடைந்தோர்தன்மை, என்னும்மூன்றையும் உத்தேசம் லக்ஷணசோதனை என்னும் மூன்றினால் இவ்வகையானதென்று கூறி

ஞர்கள். உடனே வேதத்தை ஒத்த மாணிக்கவாசகசுவாமிகள் அவர்களாற் கூறப்பட்ட அம்மூவகைப்பொருள்களையும் அநுவாதஞ்செய்து மனதிலமைத்துக்கொண்டு. எ-று.

இன்றிவர்க் கனுமா ஞதி யெடுப்பதென் னென்று காட்சி
யொன்றுகொண் டவர்க டாமே யுடம்படன் மறுத்தார் காட்சி
யன்றியே தின்மை யாலே யனுமான வளவை யாலு
நின்றவன் றுங்கோ ளுதி நிறுத்திய மூன்று மென்றார்.

(இ-ள்.) இப்பொழுது இவர்களுக்காக அநுமானம் முதலியவைகளை எடுத்துக் காட்டவேண்டுவது என்னத்திற்கென்று பிரத்தியக்ஷப்பிரமாண மொன்றையேகொண்டு அவர்களொப்புக்கொள்ளுதலை மறுத்தனர். பிரத்தியக்ஷமின்றி அநுமானமில்லாமையா லே அநுமானப்பிரமாணத்தாலும் உங்கள்புத்தாசிரியன் பூர்வத்தில்நிறுத்திய மூவகைய நிலைமைகளும் நிற்குந்தன்மையினையுடையவனல்ல வென்றுரைத்தனர். எ-று. (கOரு)

பொன்றுதன் முத்தி யென்பார் பூசுரர் பிரானை நோக்கி
யின்றெமைக் காட்சி யொன்றால் வென்றன மென்றீ ராகு
னன்றுநுங் கடவு டன்னை யளவையா லூட்டி யெம்மை
வென்றிடு மென்று ரைந்தும் வென்றவர் முறுவல் செய்யா.

(இ-ள்.) சாதலை முத்தியென்னும்புத்தர் அந்தணர்பெருமானைப்பார்த்து இன்று எங்களைப்பிரத்தியக்ஷப் பிரமாணத்தினாலேயே வென்றோமென்று கூறுவீராயின், நல்லது உம்முடைய இறைவனை பிரமாணங்களாலே தாபித்து எங்களை வெல்லுவீராக என்று கூறினார்கள். உடனே பஞ்சேந்திரியங்களை ஜயித்தவர்கிய மாணிக்கவாசகசுவாமிகள் சிரித்துக்கொண்டு எ-று. (கOசு)

பிறவியந் தகர்க்கு வெய்யோன் பேரொளி காட்ட லாமோ
மறைகளா லளவை தன்னுற் றேவரான் மனத்தால் வாக்கா
லறிவருஞ் சோதி யெங்கோ னவன்றிரு நீற்றுத் தொண்டின்
குறிவழி யன்றிக் காணுங் கொள்கையா னல்ல னென்றார்.

(இ-ள்.) பிறவிக்குருடர்களுக்கு சூரியனுடைய பெரிய ஒளியைக்காட்ட முடியுமோ? வேதங்களாலும் அளவைப்பிரமாணங்களாலும் தேவர்களாலும் மனத்தினாலும் வாக்கினாலும் அறிதற்கு அருமையான ஜோதியான எமதுகடவுளை அவனது திருநீற்றுத் தொண்டின் வழியாக வன்றி காணுதற்குத்தக்க வியல்பினையுடையவனல்லன் என்று கூறினார் எ-று. (கOஎ)

தேற்றமில் லாதா ருங்கள் சிவனுக்குந் திருநீற் றுக்குந்
தோற்றமெப் படிதிட் டாந்தஞ் சொல்லுமி னென்றார் தூயோர்
வேற்றுமை யறநா மின்னே விளக்குது மதனை நீங்க
டோற்றபி னுமக்குத் தண்டம் யாதுகொல் சொன்மி னென்றார்.

(இ-ள்.) தெளிவற்ற புத்தர்கள் மணிவாசகப்பெருமானைப்பார்த்து உங்களிறைவனுக்குந் திருநீற்றுக்கும் உற்பத்தி எவ்வண்ணம்? திட்டாந்தஞ்சொல்லுங்களென்றனர். உடனே தூயவர் நாமதனை வேறுபாடின்றி இப்பொழுதே விளக்கிக்காட்டுகிறோம். நீங்கள் தோற்றபின்னர் உங்களுக்குச் செய்யுந்தண்டனைகள் என்னசொல்லுங்கள் என்று கேட்டனர். எ-று. (கOஅ)

செக்குர லிடையிட் டெம்மைத் திரிப்பது தண்ட மென்னு
வெக்கராம் புத்தர் தாமே யிசைந்தன் ரெரிவாய் நாகங்
கொக்கிற கணிந்தா ரன்ப ருலர்ந்தகோ மயத்தை வாங்கிச்
செக்கரந் தழல்வாய்ப் பெய்து சிவந்திட வெதுப்பி வாங்கி.

(இ-ள்.) எங்களைச் செக்குரலிலிட்டு அரைப்பதே தண்டனை என்று கபடவசனங்களையுடைய புத்தர்கள் தாங்களே ஒத்துக்கொண்டார்கள். தீவாய்நாகத்தையும் கொக்கினிறகையும் அணிந்தவரதன்பராகிய மாணிக்கவாசகசுவாமிகள் உலர்ந்தகோமயத்தை எடுத்து செவ்வானம்போன்ற நிறமுடைய தீயிலிட்டு சிவக்கும்வண்ணம் வெதுப்பி எடுத்து. எ-று. (கOஎ)

இவ்வண்ண மிருக்கு மெங்க ளிறைவண்ண வடிவு மந்தச்
செவ்வண்ண மேனி பூத்த திருவெண்ணீ றதுவு மென்று
மெய்வ்வண்ண முணர்ந்த வேத வித்தக ரவைமுன் காட்ட
வுய்வ்வண்ண மறிபா மூட ருள்ளமு முயிருந் தோற்றார்.

(இ-ள்.) இந்தவண்ணமாக விருக்கும் எங்களிறைவரது அழகிய வடிவமும் அந்த செந்நிறமான திருமேனியாலே உண்டான திருவெண்ணீறுமென்று உண்மைத்திறங்களை அறிந்த வைதீகசிரேஷ்டர் சபையிலே காட்டுதலும், உய்தற்கு வழியறியாத மூடர்கள் மனநிலைமையும் பிர்ராணனையும் இழந்தவர்களானார்கள்.—எ-று. (கOஅ)

இங்கிவர் தோற்ற வுண்மைங் கேட்டவ ரிறப்ப தின்பந்
தங்குவீ டென்று தேற்றுஞ் சமயத்தி லாழ்ந்த வாத்திக்
கொங்கிவர் தாரான் மூங்கைக் குயிற்பெடை யெனத்தா னீன்ற
மங்கையைக் கொண்டு தில்லை மல்லன்மா நகரில் வந்தான்.

(இ-ள்.) இவ்விடத்திலிவர்கள்தோற்ற தன்மையைக்கேள்வியுற்று இவர்களால் இறப்பதே இன்பம்பொருந்திய முத்தியென்று தெளிவிக்கப்பட்ட மனம்பொருந்திய ஆத்திமாலையையணிந்த வொருசோழன் ஊமையானவளும் பெட்டைக்குயிலைப்போல்பவளும் தன்னாற் பெறப்பட்டவளுமாகிய மகளையும் அழைத்துக்கொண்டு வளப்பம்பொருந்திய தில்லையூரினில் வந்தனன். எ-று. (கOகூ)

யாவரோ யாக வின்றிங் கென்மகண் மூங்கை தீர்த்தோ
ராவரோ வென்றோ ரென்றா னற்றவ மானம் பூண்டு
சாவதே முத்தி யென்பார் மணிமுதன் மூன்றுந் தங்க
டேவரோ வென்றென் றுள்கிச் செய்யவுந் தீரா தாக.

(இ-ள்.) யாரானாலும் இன்று இவ்விடத்தில் என்மகளது ஊமைத்தன்மையை நீக்கினவர்களே வென்றவர்களென்று கூறினான்; உடனே மரணமே முத்தியென்னும் புத்தர்கள் மிகவும் அபிமானம்பொருந்தி மணிமந்திர ஔஷதமென்னு மூன்றும் தங்கள் தெய்வங்களே என்றுசிந்தித்து (அநேகசாந்திகளைச்செய்யவும் ஊமைநீங்காதாகவும்.)

அந்தணர் பெருமான் முன்போ யரசன்றன் மகளைப் போகட்
டிந்தநோய் நீரோ தீர்க்க வேண்டுமென் றிரந்தா னையன்
சுந்தர நாதன் மன்று ளாடிய துணைத்தா டன்னைச்
சிந்தைசெய் தருட்க ணோக்காற் றிருந்திழை யவளை நோக்கா.

(இ-ள்) அச்சோழமன்னவன் பிராமண சிரேட்டரான மணிவாசகப்பெருமானுடைய எதிரிலேசென்று தன்மகளை முன்னேநிறுத்தி (என் மகளுக்குள்ள இந்தவியாதியை நீரோ தீர்க்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.) உடனே முனிவரும் அழகினையுடைய கடவுளின் அம்பலத்திலாடிய சரணயுகளங்களைத் தியானஞ்செய்துகொண்டு அருள்மயமான கண்பார்வையினால் செவ்விய ஆபரணமணிந்த அவளைப்பார்த்து.

வேறுவே றிறைவன் கீர்த்தி வினாவுரை யாகப் பாடி
யீறிலா னன்பர் கேட்க விறைமொழி கொடுத்து மூங்கை

மாறிருள் வளவன் கன்னி மடவரல் வளவன் கண்டு
தேறினன் சிவனே யெல்லாத் தேவர்க்குந் தேவ னென்று.

(இ-ள்.) வேறுவேறாக இறைவனுடைய கீர்த்திப்ரதாபங்களை வினவுவாயாகப் பாடி, நர்சரகிதரான பரமேசுவரருடைய அடியவராகவுள்ளவர்வினுதலும், அவ்வினாவிற்கு சேர்ழராஜபுத்திரியாய் ஊமையாகவுள்ளவள் பதின்மொழிகூறி ஊமைத்தன்மையில் நின்றும் நீங்கினள். இந்த ஆச்சரியத்தை அச்சோழன்பார்த்து ஸகலதேவர்களிலும் சிறந்தவர் சிவபெருமானே என்று தேறுதலடைந்தான். எ-று.

மாணிக்கவாசகசுவாமிகள் சோழனுடைய அபிப்பிராயத்தை யுணர்ந்து அவன் பொருட்டு இறைவனுடைய மான்மியத்தைக் காட்டும்வண்ணம் அவ்விறைவனுடைய சரணயுகளங்களைத் தியானித்துத்தன்னுருவத்தைச் சிவோஹம்பாவனையினலே சிவமயமாகச் செய்துகொண்டு, அச்சிவநோக்கமாகவே யவளைப்பார்த்து ஊமைத்தன்மையை மாத்திர நீக்குவதன்றி வாயுள்ளவர்களடையவேண்டிய வித்தியாலாபத்தையும் உண்டாக்க்சுருதி இறைவனது புகழ்களைப் பாட்டாகப்பாடி வினவினர், தற்சுதந்தரமில்லாத எல்லாவான்மாக்களும் இவ்வண்ணஞ் சிவாதிஷ்டானத்தினலேதான் ஒவ்வொருகாரியங்களையுஞ் செய்யவேண்டும். இன்றேலெதுவு மாகாது. இதையுணராதார் இஷ்டம்போலக் கூறுவர்.

மாணிக்கவாசகப்பெருமானும் அரசகுமாரியுங்கூறிய வினவிடையே திருவாசகத்திலுள்ள திருச்சாழல். (௧௧௨)

பின்பர வாரம் பூண்ட பிரானருள் விளையப் பாடு
மன்பனை முனிவர் மூவா யிரவரை யடியிற ரூழ்ந்து
முன்பவர் சொன்ன வாறே மூர்க்கரைத் தடிந்து மன்று
ளின்பனை நடங்கண் டேத்தி யிறைமகன் சைவ னானன்.

(இ-ள்.) பின்னர், அரவாபரணமணிந்த பெருமானுடைய திருவருள்மிகுதியாம் வண்ணம் பாடாநின்ற அன்பராகிய மாணிக்கவாசகசுவாமிகளையும் முனிவர்களாகிய தில்லைமூவாயிரவர்களையும் பாதங்களில்விழுந்து வணங்கி மூர்க்கர்களாகிய புத்தர்கள்முன்னே கூறியவண்ணமே அவர்களைத்தண்டித்து கனகசபையில் திருநடனஞ்செய்யாநின்ற ஆனந்தரூபரானகடவுளின் திருநடனதரிசனஞ்செய்துசோழராஜன்சைவனாகவாயினன்.

மாசறு மணிபோற் புன்னுள் வாசக மாலை சாத்திப்
பூசனை செய்து பன்னாட் புண்ணிய மன்று ளாடு
மீசன தடிக்கீ ழெய்தி யீறிலா வறிவா னந்த
தேசொடு கலந்து நின்றார் சிவனருள் விளக்க வந்தார்.

(இ-ள்.) குற்றமற்ற மாணிக்கத்தைப்போல அநேககாலம் திருவாசகமாகிய மாலையைப்பாடிச்சாத்தி, அநேகநாள் சிவபூசைசெய்து புண்ணியரூபமான திருவம்பலத்திலே திருநடனஞ்செய்கின்ற சிவபெருமானுடைய திருவடிநிழலையடைந்து அழிவற்ற ஞானனந்த ஜோதியோடுசேர்ந்து சிவபெருமானுடைய திருவருளை யுலகத்தில் விளக்க வந்த மாணிக்கவாசகசுவாமிகள் நின்றனர். எ-று. (௧௧௪)

மண்சுமந்தபடல முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௧௦௬.



பாண்டியன்சுரந்தீர்த்தபடலம்.

அறுபத்திரண்டாவது,

# பாண்டியன்சுரந்தீர்த்தபடலம்.

வான லமுத மதிமுடிமேன் மதுரைப் பெருமான் மண்சுமந்து
தேன லமுத வாசகனைக் கதியில் விடுத்த திறமிதுமேற்
பானன் மணிவாய்க் கவுணியனை விடுத்துச் சமணர் படிற்றொழுகுங்
கூனல் வழுதி சுரந்தணித்தாட் கொண்ட கொள்கை கூறுவாம்.

(இ-ள்.) ஆகாயத்திலுலாவுகின்ற நல்ல அமுதமயமான சந்திரகலையைத்தரித்த தலையின்மீது மதுரைக்கடவுள் மண்ணைச்சுமந்து தேன்போலும் நல்ல அமுதவாக்கியத்தினையுடைய மணிவாசகப்பெருமானை முத்தியுலகத்திற்கனுப்பிய சரித்திரம் இது. இனி பால்மணம் வீசாநின்ற நல்ல அழகிய வாயினையுடைய ஞானசம்பந்த சுவாமிகளைக்கொண்டு சைநர்களுடைய வஞ்சனைக்குட்சிக்கி யவர்வழியிலிருக்கின்ற கூனினையுடைய பாண்டியனுடைய சுரத்தை நீக்கி ஆட்கொண்ட சரித்திரத்தைக்கூறுகின்றோம்.

வாகு வலத்தான் சகநாத வழுதி வேந்தன் மகன்வீர
வாகு வவன்சேய் விக்கிரம வாகு வவன்சேய் பராக்கிரம
வாகு வனையான் மகன்சுரத மாற னனையான் றிருமைந்தன்
வாகு வலத்தான் மறங்கடிந்து மண்ணா ளுங்குங் குமதென்னன்.

(இ-ள்.) புஜபலத்தினையுடைய சகநாதபாண்டியனுடைய பிள்ளை வீரவாகு பாண்டியன், அவன் மகன் விக்கிரமவாகு, அவன் பிள்ளை பராக்கிரமவாகு, அவன் மகன் சுரதபாண்டியன், அவனுடைய அழகிய புத்திரன் புஜபலத்தினால் சத்துருக்களைக் கொன்று உலகத்தினையாளுகின்ற குங்குமபாண்டியன். எ-று. (உ)

அன்னான் குமரன் கருப்புரபாண் டியனா மவன்சேய் காருணிய
மன்னா மவன்றன் மகன்புருடோத் தமனா மவன்றன் மகனாகு
மின்னார் மௌலிச் சத்துருசா தனபாண் டியனாம் விறல்வேந்த
னின்னான் மகன்கூன் பாண்டியனா மிவன்றோள் வலியா லிசைமிக்கான்.

(இ-ள்.) அவன்மகன் கர்ப்பூரபாண்டியன், அவன்மகன் காருண்ணியபாண்டியன், அவன்பிள்ளை புருஷோத்தமபாண்டியன், அவன்மகன் ஒளிபொருந்திய மகுடத்தினையுடைய சத்துருசாதன பாண்டியன், வெற்றிபொருந்திய இவன்மகன் கூன் பாண்டியன், இவன் புஜபலத்தினால் மிகுந்த கீர்த்தியினை யுடையவன். எ-று. (௩)

திண்டோள் வலியாற் குடநாடர் செம்ம றனையு மாரலங்கல்
வண்டோ லிடுதா ரிரவிகுல மருமான் றனையு மலைந்துபுறங்
கண்டோர் குடைக்கீழ் நிலமூன்றுங் காவல் புரிந்து கோலோச்சிப்
புண்டோய் குருதி மறக்கன்னிப் புகழ்வேல் வழுதி நிகழ்நாளில்.

(இ-ள்.) திண்ணிய தோளின் வலத்தால் மேனாட்டார்களின் அரசனையும் ஆத்திமாலையில் வண்டுமுழங்கவணிந்த சூரிய வங்கிசத்தரசனாகிய சோழனையும் போரில் முதுகிடச்செய்து தன்னொருகுடைநிழலிலே மூன்றுநாடுகளையுங் காவல்செய்து செங்கோல் நடத்தி இரத்தமளைந்த வேலினையும் வீரலட்சுமியாற் புகழப்படுதலையு முடையவனாகவிருந்தனன். இருக்கின்றகாலத்தில். எ-று. (௪)

விண்டு மூாவுங் கைம்மாவும் வெறுக்கைக் குவையு மணிக்குவையும்
வண்டு வீழுந் தாரளக வல்லி யாரு மொடுநல்கிக்

கண்டு கூடற் கோமகனைக் காலில் வீழ்ந்து தன்னாடு
பண்டு போலக் கைக்கொண்டு போனான் றெனார் பனந்தாரான்.

(இ-ள்.) மேகமண்டலத்தைத் துழாவுகின்ற துதிக்கையினையுடைய யானைக ளையும், பொன்குவியல்களையும், இரத்தினக் குவியல்களையும், வண்டுகள் மொய்க்கின்ற மாலையணிந்த கூந்தலினையுடைய கொடிபோன்ற பெண்களுடனே கப்பமாகக்கொடு த்து பாண்டிமன்னவனைக்கண்டு வணங்கி தன்னாட்டை யவனளிக்கப்பெற்றுப் பழைய படியே கைப்பற்றிக்கொண்டு பனைமலர்மாலையினையுடைய சேரன் தன்னாட்டுக்குச் சென்றான். எ-று. (௬)

சென்னிக் கோனுந் தானீன்ற திலகப் பிடியையுலகமெலா
மின்னிக் கோதில் புகழொளியால் விளக்குஞ் சைவ மணிவிளக்கைக்
கன்னிக் கோல மங்கையருக் கரசி தன்னைக் கௌரியற்கு
வன்னிக் கோமுன் மணம்புணர்த்தி வாங்கி னான்றன் வளநாடு.

(இ-ள்.) சோழராஜனும் தன்னாற் பெறப்பட்ட திலதமணிந்த பிடியானைபோல் பவளை எல்லாவுலகங்களிலும் மின்னிக் குற்றமற்ற புகழாகிய ஒளியினாலே விளக்கு கின்ற சைவமணிவிளக்கினை கன்னித்தன்மையினையும் அழகினையுமுடைய மங்கைய ர்க்கரசியாரைக் கூன்பாண்டியனுக் கக்கினி சாட்சியாகத் திருமணஞ்செய்துகொடுத்து அந்தச்சம்பந்தத்தினால் தனது வளப்பம்பொருந்திய நாட்டை வாங்கிக்கொண்டனன்.

மேற்படி வேறு.

வளவர்கோன் செழியன் கற்பின் மங்கையர்க் கரசி யாருக்
களவறு நிதியஞ் செம்பொற் கலிங்கமு மணியும் போகம்
விளைநில மனைய வாய வெள்ளமும் பிறவுந் தென்ன
னுளமகிழ் சிறப்ப வேந்தர் வரிசையா லுதவிப் பின்னர்.

(இ-ள்.) சோழராஜன் கூன்பாண்டியனுடைய மனைவியான கற்பினையுடைய மங்கையர்க்கரசியான மகளுக்கு அளவில்லாத நிதிகளையும், செவ்விய பொன்மயமான ஆடைகளையும், முப்போகமும் விளைகின்ற நிலங்களையொத்த தாசிகளையும், மற்றுள்ள வைகளையும், பாண்டியன் மனத்தில் மகிழ்வுண்டாகும் வண்ணம் மன்னவர் முறைப்படி கொடுத்துப் பின்னர். எ-று. (எ)

கோதறு குணத்தின் மிக்க குலச்சிறை யென்பா னங்கோர்
மேதகு கேள்வி யானை விடுத்தனன் மீண்டு தென்னன்
காதலி யோடு மாயக் கடவுள்செம் பதுமக் கோயின்
மாதரை மணந்து செல்வான் போல்வந்து மதுரை சேர்ந்தான்.

(இ-ள்.) குற்றமற்ற நற்குணத்திற்சிறந்த குலச்சிறையென்று பேருள்ள சிற ந்த நூற்கேள்விகளையுடையவனையும் சீதனமாகக்கொடுத்தான்; பின்னர் திரும்பிப் பா ண்டியன் மனைவியுடனே திருமால் செந்தாமரை மலரிலிருக்கின்ற திருமகளை மணம் புரிந்து சென்றாற்போல மதுரையை யடைந்தனன். எ-று.

குலச்சிறையார் திருநாமத்தை வடநூற்றிருவிளையாடல் குலபந்தன் என்று கூறுகின்றது. (அ)

மலர்மகண் மார்பன் பொன்னி மன்னவன் பயந்த தெய்வக்
குலமக ளுடனே வந்த குலச்சிறை குணனுங் கேள்வித்
தலைமையு மதியு மிக்க தன்மையுந் தூக்கி நோக்கி
நலமலி யமைச்ச னாக்கி நானிலம் புரக்கு நாளில்.

(இ-ள்.) திருமகள்வாசம்பொருந்திய மார்பினையுடைய கூன்பாண்டியன் சோழராஜன்பெற்ற தெய்வத்தன்மைபொருந்திய சிறந்த மங்கையர்க்கரசியாருடனே அவருக்குச் சீதனமாகவந்த குலச்சிறையாருடைய குணங்களையும், நூற்கேள்விகளின் முதன்மையையும் புத்தியையுங் கெம்பீரமான தன்மையையுஞ் சீர்தூக்கிப்பார்த்து, நன்மைமிக்க மந்திரியாகச்செய்து நால்வகையினதாகிய இவ்வுலகத்தை யாள்கின்ற காலத்தில்.

வல்வினை வலியான் மெய்யில் வலியகூ னடைந்தான் போலக்
கொல்வினை யிலராய் வஞ்சங் கொண்டுழன் றுடுத்த பாசம்
வெல்வினை யறியா நக்க வேடர்சொல் வலையிற் பட்டு
நல்வினை யுதவாத் தென்ன னுன்மறை யொழுக்க நீத்தான்.

(இ-ள்.) தீவினையின் திறத்தால் உடம்பிற் பெரிய கூனினை யடைந்ததைப் போல கொலைத்தொழிலின்றி வஞ்சனை கொண்டு திரிந்து தம்மைச் சூழ்ந்துள்ள பாசத்தை வெல்லத்தக்க தொழிலினையுணராத நிருவாண வேடத்தினையுடையவர்களாகிய சைநர்களின் சொல்லென்னும் வலையிலகப்பட்டு நல்ல புண்ணியத்தினாலே உபகரிக்கப்படாமலிருக்கிற பாண்டியன் சதுர்வேத வாயிலாக நடத்திக்கொண்டிருந்த வைதிக ஒழுக்கத்தை விட்டனன். எ-று. (௧0)

போதவிழ் தாரா னக்கர் புன்னெறி யொழுக்கம் பூண்டோ
னாதலிற் கன்னி நாடு மமணிருண் மூழ்கிப் பூதி
சாதன நெறியாஞ் சைவ சமயமு முத்திச் செல்வ
மாதவ நெறியுங் குன்ற மறைந்தது வேத நீதி.

(இ-ள்.) நாளரும்பலர்ந்த மாலையினையுடைய பாண்டியன் சைநர்களுடைய இழிந்த மார்க்கத்தை மார்க்கமாகக்கொண்டவனாதலால் பாண்டிநாடும் க்ஷமணமாகிய இருட்டிலே முழுகிப் பூதிசாதன மார்க்கமான சைவசமயமும், முத்திச் செல்வத்திற்குரிய மாதவ மார்க்கமும் குறையும் வண்ணம் வைதிக நீதிகள் மறைந்தன. எ-று. (௧௧)

பறிபடு தலையும் பாயி னுடுக்கையும் பாசிப் பல்லு
முறிபொதி கலனு மத்தி நாத்தியென் றுரைக்கு நாவு
மறிவழி யுளம்போ னுணற் றழிந்தவெற் றரையுங் கொண்டு
குறிகெடு மணங்கு சூழ்ந்தா ங்கமணிறை கொண்ட தெங்கும்.

(இ-ள்.) பறிக்கப்பட்ட தலையும் பாயாகிய உடையும், பாசிபொருந்திய பல்லும், உறியால் பொதியப்பட்ட கலசமும், அத்தி நாத்தி யென்று கூறுநின்ற நாவும், அறிவு அற்ற உள்ளத்தைப்போல வெட்கம்விட்டு ஆடையின்றிக்காணப்படுகின்ற வெற்றரையுங்கொண்டு இலக்கணமில்லாத மூதேவி குடிகொண்டாற்போல க்ஷமணகூட்டங்கள் எவ்விடங்களிலும் தங்கி இருந்தன. எ-று. (௧௨)

அருந்தமிழ்ப் பரண்டி வேந்தற் குறுதியா மாக்கஞ் செய்யு
மருந்தினிற் சிறந்த கற்பின் மங்கையர்க் கரசி யாரும்
பெருந்தகை யமைச்சு நீரிற் குழைத்தன் றிப் பிறங்கப் பேறு
தருந்திரு நீறி டாராய்ச் சிவனடிச் சார்பி னின்றார்.

(இ-ள்.) அரிய தமிழினையுடைய பாண்டிமன்னவனுக்கு உறுதியாகிய செல்வத்தினை யுண்டாக்குகின்ற ஔஷதத்தைவிடச்சிறந்த கற்பினையுடைய மங்கையர்க்கரசியாரும் பெரிய தகைமையினையுடைய மந்திரியும் நீரிற்குழைத்தல்லாமல் விளங்கும்படி பேற்றினைத்தராநின்ற திருநீறிடாதவர்களாய்ச் சிவபெருமானுடைய திருவடிச்சார்பினின்றார்கள். எ-று. (௧௩)

பொய்யுரை பிதற்று மிந்தப் புன்சமண் களைகட் டுண்டு
மெய்யுரை வேத நீதி வியன்பயிர் தலைசெய் தோங்கச்
செய்யுந ரெவரே யென்று சிந்தையிற் கவலை பூண்டு
நையுந ராகிக் கூட லுதனை வணங்கப் போனார்.

(இ-ள்.) பொய்யான மொழிகளைப் பிதற்றுகின்ற இந்தப் புல்லிய சமணமாகிய களையைக்களைந்து இந்நாட்டில் உண்மையைக் கூறுகின்ற வேதநீதியான சிறந்த பயிர் தலையெடுத்துச்சிறக்க யாவர் செய்யப்போகின்றார்களென்று மனத்திற் கவலைபொருந்தி வருந்துகின்றவர்களாய் மதுரைக்கடவுளை வணங்கச்சென்றார்கள். எ-று. (கச)

பேதுற்ற முனிவர்க் கன்று பெருமறை விளக்கஞ் செய்த
வேதத்தின் பொருளே யிந்த வெஞ்சமண் வலையிற் பட்டுப்
போதத்தை யிழந்த வேந்தன் புந்தியை மீட்டிப் போதுன்
பாதத்தி லடிமை கொள்வா யென்றடி பணியு மெல்லை.

(இ-ள்.) பொருள்தெரியாமல் மயங்கின கண்ணுவனாதி முனிவர்களுக்கு முன்னாளில் பெரிய வேதத்தின் பொருளை வியாக்கியானஞ்செய்த வேதார்த்தமே. இந்த வெவ்விய சமணமாகிய வலையிலகப்பட்டு அறிவினையிழந்த அரசனுடைய மனத்தைத்திருத்தி இந்நாள் திருவடிக் கடிமையாக்கிக் கொள்வாயாகவென்று வணங்கித் துதித்து நிற்கின்ற சமயத்தில். எ-று. (கரு)

வேதிய னொருவன் கண்டி வேடமும் பூண்டோன் மெய்யிற்
பூதியன் புண்ட ரீக புரத்தினும் போந்தோன் கூட
லாதியைப் பணிவான் வந்தான் மங்கையர்க் கரசி யாரு
நீதிய வமைச்ச ரேறு நேர்பட வவனை நோக்கா.

(இ-ள்.) ஒரு பிராமணன் ருத்திராக்ஷமாகிய சைவாபரணத்தைத் தரித்திருக்கின்றவன் உடம்பிலே விபூதியைத் தரித்திருக்கிறவனாகச் சிதம்பரத்திலிருந்து இவ்விடத்திற்கு வந்து மதுரைக்கடவுளை வணங்கும்பொருட்டு வந்தான். (அவ்வாறு வந்தவனை) நீதியினையுடைய மந்திரிகளி லேறுபோல்பவரான குலச்சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் எதிரிற்கண்டு. எ-று. (கசு)

எங்கிருந் தந்த ணாளீர் வந்தனி ரென்றா ராய்ந்த
புங்கவன் சென்னி பொன்னி நாட்டினும் போந்தே னென்று
னங்கவ ரங்குண் டான புதுமையா தறைதி ரென்றார்
சங்கரற் கன்பு பூண்டோ னுண்டென்று சாற்று கின்றான்.

(இ-ள்.) மறையவரோ! எவ்விடத்திலிருந்து வருகின்றீர் என்று கேட்டார்கள். உடனே நூலாராய்ச்சியினையுடைய அம்மறையவனும் நான் சோழனுடைய காவிரிநாட்டிலிருந்து வந்தேன் என்று கூறினான் பின்னுமவர்கள் அங்கேயுள்ள ஆச்சரியமென்ன அதனைக் கூறுதிர் என்றார்; சிவனடிக் கன்புபூண்டொழுகும் அவ்வந்தணர் ஆச்சரியமிருக்கின்றது என்று கூறத்தொடங்கினார். எ-று. (கஎ)

ஏழிசை மறைவல் லாளர் சிவபாத விதய ரென்னக்
காழியி லொருவ ருள்ளார் காரமண் கங்குல் சீப்ப
வாழியி லிரவி யென்ன வொருமக வளித்தி யென்ன
வூழியி லொருவன் றாளை யுள்கிநோற் றொழுகி நின்றார்.

(இ-ள்.) சத்த சுரங்களையுடைய வேதத்தில் வல்லவரான சிவபாதவிதயரென்று பேருள்ள ஒருவர் சீகாழியிலிருக்கின்றனர். அவர், கரிய சமணமாகிய இருட்டி

னைக், கெடுத்தற்காக (சைநவிருளையபாவப்படுத்த) கடலில் முளைக்குஞ் சூரியனைப் போல, (ஞானசூரியனாக) ஒருபிள்ளையை அளிப்பாயாகவென்று ஊழிகாலத்திலேகனாக நிற்கின்ற சிவபெருமானுடைய பாதங்களைத் தியானித்து தவஞ்செய்திருந்தனர்.-எ-று.

> ஆயமா தவர்பா லீச னருளினா லுலக முய்யச்
> சேயிளங் கதிர்போல் வந்தான் செல்வனுக் கிரண்டாண் டெல்லை
> போயபின் மூன்று மாண்டிற் பொருகடன் மிதந்த தோணி
> நாயகன் பிராட்டி யோடும் விடையின்மே னடந்து நங்கை.

(இ-ள்.) அந்த மாமுனிவரிடத்தில் இறைவனது கருணையால் உலகம் உய்யும் வண்ணம் குமாரக்கடவுள் இளஞ்சூரியனைப்போல குழந்தையாகவந்தனர். அவ்வாறு தவத்தாற்கிடைத்த குழந்தைக்கு இரண்டுவயதாகி மூன்றாவதுவயது நடக்குங்காலத்தில் அலைபொராநின்ற கடலில் மிதந்ததோணியிலெழுந்தருளி இருக்கின்ற கடவுள் உமாபிராட்டியாருடன் இடபவாகனத்திலெழுந்தருளிவந்து உமையம்மையின்.—எ-று.

ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான் மகாதேவருடைய இரண்டாவது திருக்குமாரர், 'இவ ரிச்சிவபாதவிதையர், எனக்கு, சைநமதமாகிய வந்தகாரந்தொலையுமாறெருஞ் ஞான பாநுவான சூநுவை அளிக்கவேண்டுமென்று மாத்திரஞ்சங்கற்பித்துத் தவஞ்செய்தவராதலால் கடவுள் அவருடைய தவத்துக்கிரங்கி தமது இளையமகனை அவ்வுத்தியோகத்தில் நியமித்திருந்தனர். அதனாலவர் இச்சிவபாதவிதையருடைய எண்ணத்திற்கு மாறுபாடின்றி அவர்தவநிலையிற் குழந்தையாக எழுந்தருளிநின்றனர்.

அவரும் மஹா தவசியாகையாலே எதிரிற்காணப்பட்டமகனை இக்குழவி நந்தவத்தை நிறைவேற்றவந்ததேயன்றி வேறல்ல: வேறுள்ளகுழந்தைகளுக்கு இந்தத்திருமேனிப்பிரகாசமேது, இக்குழவி ஸகலகலாப்ர வீணராகிய சண்முகப்பெருமானாகவே இருக்கவேண்டும் என்று உண்முகத்தில் நினைத்து அவனையெடுத்து வளர்த்தனவென்று குறிப்பிக்க "சேய்-இளங்கதிர்போல் வந்தான்" என்றனர்.

வடமொழித்திருவிளையாடலிலும்,

> [கிரந்தம்]
> புத்ரதாமகமத்தஸ்யசரசன்மனுசிவாக்ஞயா. என்றிருக்கிறது.

சிவபாதவிதையரவ்வாறுணராதுபோனாலுலகிலுள்ளவர்கள் இவனை சண்முகப் பெருமானென்றுணருமாறெங்ஙன். மூதுணர்வுடையாராலன்றே உலகிலெவ்வொன்றையும் உணரவேண்டுவது.

சிவபாதவிதையர் ஏனையரைப்போல தம்பயன்கருதி நோலாது பிறர்பயன்கருதி நோற்றனர்.

பிறர்பயனிலும் பிறருக்குப் பந்தத்தையுண்டாக்காது முத்தியையுண்டாக்க நோற்றனர், என்பதைக் குறிப்பிக்க "மாதவர்" என்றார்.

சிவபாதவிதையர், இறைவனுகிய அழலவிர்சடையண்ணலினாலே அகிலமும் ஆக்கிக்காத்தழிக்கப்படுவது, ஆதலாலவர் முன்னிலையாகவே ஏதுவும் நடக்கவேண்டும் என்னும் துணிபே தந்துணிபாகக் கொண்டுநிற்றலேயன்றி வேறிலாதவரென்பதையுணர்த்த "ஈசனருளினால்" என்றார்.

எவ்வளவு முயற்சி இருக்கினும் இறைவனருளில்லாதார்க் கெதுவுமில்லை என்பதைக்குறிப்பிக்க "அருளினாலுலகமுய்ய" என்றார்.

கருநிறக்கட னடுவிலுதிக்கின்ற செந்நிறப்பாநுவை எம்பெருந்தகையரான குமாரசிவத்திற்கு உவமைகூறல் சான்றோர்வழக்கு அது அவர்செந்நிறமுடையராதலால்;

நக்கீரரும் "பலர்புகழ் ஞாயிறு" என்றார், இளங்கதிர் கண்ணுக்கழகாய் காணத்தக்கதா நிலவியதைப்போல குமாரசிவமும் உலகங்காணத்தக்க ஒளியுருவத்துடன் வந்தாரென்பார், "இளங்கதிர்போ" லென்றார்.

கவி தான் அவரிடத்தில் தமக்கிருக்கும் அன்பைவெளியிட "செல்வ"னென்றார்.

இரண்டுவயதுவரைக்கும் அவர்மகிமைக் கடதீபம்போல வெளிப்படாமையால் "இரண்டாண்டெல்லை போயபின்" என்றார்.

முன்னொரு பிரளயத்து இறைவன் ஒருதோணியிலெழுந்தருளி நின்று பிரளய முடிவில் சீகாழியையடைந்து அத்தோணியையே கோயிலாகக்கொண்டு எழுந்தருளி இருந்துதமது நித்தியத்தன்மையை விளக்கினாரென்பதைக்குறிப்பிக்க "பொருகடன் மிதந்ததோணி" என்றார். (கக)

திருமுலைப் பாலி னோடு ஞானமுந் திரட்டிச் செம்பொற்
குருமணி வள்ளத் தேந்திக் கொடுப்பவப் பாலன் வாங்கிப்
பருகியுண் ணிறந்த வேதா கமமிவை பற்றிச் சார்வாய்
விரிகலை பிறவு மோதா துணர்ந்தனன் விளைந்த ஞானம்.

(இ-ள்.) அவ்வுமாதேவியின் திருமுலைப்பாலுடன் ஞானத்தையுங்கலந்து செவ்விய பொன்மயமானதும் நிறம்விட்டு விளங்குகின்ற மணிகளழுத்தியதுமான கிண்ணத்திலேந்திக்கொடுக்க அக்குழந்தை யதனைவாங்கியுண்டு, அளவில்லாதவேதாகமங்களையும் இவைகளைத்தொடர்ந்து சார்பாகவிரிந்துள்ள கலைகள்முதலிய மற்றையவைகளையும் ஓதாதுணர்ந்தனன் அதனால் ஞானம் உண்டாகியது.—எ-று.

சகலகலாவடிவமான அமிர்தத்தை யுட்கொண்டுள்ளதாதலால் எம்பெருமாட்டியின் தனபாரங்களை "திருமுலை" என்றார்.

ஞானந்திரட்டலாவது இவனிதனை யுண்டதனாலே சகலகலாவல்லவனாய் ஞானாசாரியனாக வாகட்டுமென்று சிந்தனைசெய்தல், இவ்வபிப்பிராயத்தினாலேயே "சௌந்தர்யலஹரியும், உனதுசிந்தை தனைழந்தபாலமுது" என்றது. இவ்வாறன்றி ஞானமென்பதொன்று எங்கையோ ஒருகுடத்திலடைத்து வைத்திருக்கின்றதாகவும் அதிற் சற்றேகுடித்தவர்களுக்கு ஞானமுண்டாவதாகவுங்கருதுவாருமுளர். ஞானம் உணர்ச்சி வடிவமாதலாலும் அவ்வாறு ஞானமென்னும் மருந்து ஒருவிடத்தில் பத்திரப்படுத்தப்பட்டதாகவுங் கேட்கப்படாமையாலும் அதுகூடாதென்க.

வியாசர் வேதங்களைச் சரிப்படுத்தி வேதவியாசரான பின்னரவருணராத வேதத்தையும் அவர் மாணவரான யாக்கியவல்கியர் சூரியனிடத்துக் கற்றாரென்று கதையிருத்தலாலும், அது காலத்திற்குத் தக்கவாறு வெளிப்படுதலாலும் நச்சினார்க்கினியர் முதலியோர் பழையவேத மிதுவல்லவென்கையாலும், "ஆயிரம்வேதம் வல்லான்" என்று பிறர் கூறியிருத்தலாலும், வேதங்கள் அளவின வல்ல வென்பார், "எண்ணிறந்த" என்றார்.

வேதாகமங்களைத் துணைக்கொண்டே மற்றைய கலைஞானங்கள் தோன்றி யிருத்தலால், "இவை பற்றிச் சார்பாய்" என்றார்.

வேதமும் ஆகமமும் ஆகிய இரண்டும் ஒரே இறைவனிடத்திலிருந்து தோன்றினமையாலும், ஒன்றுக்கொன்று தாழாதவையாதலாலும், இவ்விரண்டும் முதல்நூல்களாதலாலும், இவ்விரண்டிலொன்றைத் தழுவாதநூல் அப்பிரமாணமாதலாலும், அவைகளை ஒப்புக்கொள்ளப்படாததாலும், ஆயுள்வேதம் தனுர்வேதம் கீதம்முதலிய எல்லாம் வேதாகமங்களைக்கொண்டே தோன்றியிருத்தலாலும், மற்றைய கலைஞானங்களை "இவை பற்றிச் சார்வாய்" என்றார்.

பாலுண்டு சிறிதுபோழ்து கழித்தன்று இவர் ஞானியாகியது, அப்பொழுதே என்று குறிப்பிக்க, "பருகி யுணர்ந்தனன்" என்றார்.

இங்கு ஆகமமென்றது சிவாகமங்களை. வையாகரணரிற்சிலர் புராணாதிகளை ஆகமமென்பர். (உ0)

நம்பந்த மறுப்போன் ஞான நாயகன் ஞானத் தோடு
சம்பந்தஞ் செய்யு ஞான சம்பந்த னாக நாவில்
வம்பந்த முலைமெய்ஞ் ஞான வாணியுங் காணி கொள்ள
வம்பந்த மறைக ளெல்லா மருந்தமி ழாகக் கூறும்.

(இ-ள்.) நமது பந்தத்தை யறுப்பவராகியவவர்ஞானத்திற்கு முதல்வராகிய இறைவருடனே உயிர்களைச் சேர்க்கின்ற ஞானசம்பந்தராகப், பாலுண்டவுடனே யவர் திருநாவில் பூர்வபட்ச வாதங்களான வம்புகளின் முடிவுகளை அழிக்கின்ற சத்தியஞான சரசுவதி குடிகொள்ளுதலும், அவர் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கின்ற ஆரியவேதங்களையெல்லாம் அருமையான தமிழினால் கூறுநின்றனர். எ-று.

நமது பந்த நிவிர்த்தகராகிய சிவபெருமானுடைய ஞானத்துடனே சம்பந்திக்கிறதற்கு ஞானசம்பந்தனாக அவன் நாவில், கச்சணிந்த தனபாரத்தினையுடைய மெய்ஞ் ஞான வாணியும் காணியாட்சியாக அழகிய தளைகளையுடைய வேதங்களை எல்லாம் அரிய தமிழாகக் கூறுகின்றனன் என்பாருமுளர்.

ஞானசம்பந்தப்பெருமான் பாசபந்தமுடையவ ரல்லர் என்றுணர்த்த, "நம்பந்த மறுப்போன்" என்றார்.

இவர் ஞானசம்பந்தராகியது பரப்பிரயோசனங்கருதியே யாதலான், "அறுப் போன்" என்றார்.

எதிரினின்று வினவுகிற அரசியாரு மமைச்சனாருமாகிய இவர்கள் சிவசம்பந்த மானவர்களாதலால், அந்தணர் அவர்களையும் உடன்சேர்த்து உளப்பாட்டுத்தன்மைப் பன்மையால் "நம்பந்தம்" என்றார்.

அன்றியும், மக்கட் பிறப்புள்ளவர்களனைவரும் பந்தநிவிர்த்திக் கிசையந்தவர்களாதலால் உலகனையெல்லாஞ்சுட்டி "நம்பந்தம்" என்றார் என்னினுமாம்.

இவர் குமரக்கடவு ளாதலால் அவர் முன்னமே ஆன்மாக்களின் பாசமோசகரென்பது சாத்திர லோகபிரத்தியட்சமாதலால் அவரது பூர்வ நிலைமையைக்கருதி "நம்பந்த மறுப்போன்" என்றார் என்னினுமாம்.

எடுத்தகோலத்திற்கேற்கநடித்தாரேயன்றி யவர் அஞ்ஞானி அல்லர் என்று குறிப்பிக்க "நம்பந்தமறுக்க" என்றார்.

வைத்தியன் தான் பிணியாளனாகவிருந்து பிறருக்குவைத்தியங்கூறுமாறுபோலவன்றி அரோகிகளாகிய சித்தர்களைப்போல, தானு முத்தர், பிறரையு முத்தராக்குபவர் என்றுணர்த்த "ஞானநாயகன்" என்றார்.

செயற்கையால்வந்தஞானமல்ல, அந்தஞானத்திற்கே அவர்கர்த்தாவென்று குறிப்பிக்க, "ஞானநாயகன்" என்றார்.

ஞானத்துக்கவரதீனரல்லர் ஞானமவரதீனமானது, என்பார் "ஞானநாயர்" என்றார்.

ஞானத்தொடு சம்பந்தஞ்செய்யுமென்றது பிறரையாதலால் அவர் இயற்கைஞானியென்பது தானே பெறப்பட்டது.

மெஞ்ஞானமொன்றிற்கே சித்தாந்தபக்ஷமேற்படும்; இதரமான கலைஞானமாதிகளால் வந்த ஞானம் விவதா ஞானமாதலா லதனைவம்பந்த ஞானம் என்றும்.

பூர்வ பட்சிகளின் முடிவைக்கெடுத்தலால் "உலை" என்றார்.

வாணி, வாக்கு, சரசுவதி என்பனவாதிய, வொருபொருட்கிளவிகளாதலால் வாசகமென்று காட்ட சரசுவதி யென்றும். இதனை வேறு விதமாகக் கூறுவாறுமுளர்.

பிரமன் மனைவியான வாணியென்பவள் இவர் நாவிலேறி யிருந்தாளென்று பொருளல்லவென்றுணர்க. அவள் கலைவாணியென்று பேருள்ளவள்.

சிலநூறாண்டுகளுக்கு முன்னமிருந்த மகாகவியான கம்பரென்பவர், இந்த ஞானசம்பந்தப்பெருமானாற் றிருவாய்மலர்ந்தருளப்பட்ட தமிழ் வேதத்தில் சிதலமான பதிகவரிகளைத் தாம் பூர்த்திசெய்கிறதாகவுத்தேசித்ததாகவும் அந்த வுத்தேசமுண்டான அக்கணத்திலேயே அவர் நாவிலாவிர்ப்பவித்திருந்த கலைவாணியார் அவரெதிரே தோன்றி, கம்ப இதென்ன வம்பு, இது சரியானதல்ல; ஸ்ரீஞானசம்பந்தருடைய நாவிலிருப்பவள் ஞானவாணி, உன்னுவிலிருப்பவள் கலைவாணி ஆதலால் ஞானவாணியை நிரப்பக் கலைவாணியா லாகாதென்றறிந்தடங்கு; என்றுகூறி மறைந்தனளென்று பெரியோர்கள் கூறுகின்றார்கள்.

ஆதலாலிங்கு ஞானவாணி யென்றது ஞானம்பிகையேயாம்.—இவர் ஏனையர்களைப்போல ஏதாவது ஒரு நூல்முதலியவைகளைச் செய்யாமல் ஆரிய வேதங்களையே தமிழிலுங்கூறி இறைவனைத் துதித்தனர். இன்னுந் துதிக்கின்றனர். என்று காட்ட கூறுமென்றார்.

இவர் சதுர்வேதங்களினும் முள்ளவைகளைத் தேவாரப்பதிகங்களாகத் திருவாய்மலர்ந்தருளினர் என்பதைவிளக்க மறைகளெல்லாம் என்றார்.

இவராற் பாடப்பட்டவை எல்லாவேதங்களையு மென்றதனாலே சகலவேதங்களாலும் கூறப்படுகிற பரம்பொருள் சிவபெருமானே என்றுணர்த்த மறைகளெல்லாம் என்றார்.

தமிழிலும் நல்லோசை பொருந்தியதாய் சாமான்யகவிகளா லமைக்கப்படாத சந்தவின்பங்களினிறந்ததாகவே பாடினாரென்றும் வசனநடையிலின்றி யாப்புறுத்தினாரென்றும் ஆரியவேதம் யாப்பாதலால் இதிலும் யாப்பாகவே இயற்றினாரென்றும்.

மற்றையகவிகளைப்போல இன்னயாப்பி லின்னவண்ணம் பாடவேண்டுமென்று கருதிப் பொழுதுபோக்காது விரைவாகப்பேசுவதைப்போல தடையில்லாது பாடினாரென்றும் இலக்கணவமைதி நிரம்பியதேயன்றி கிராமியவியல்பொன்று மில்லையென்றும் வேதஞ் சாமான்ய பண்டிதர்களுக்கு அருத்தமாகாமையைப்போல இதுவும் அருத்தமாகாதென்றும்.

வைதீக இலக்கணங்களை அறிந்தார்க்குக் குருமுகமாக ஆரியவேதப்பொருள் கிடைக்குமாறுபோல இதுவும் ஆமேயன்றி எளிதிற்காவியங்களுக்குப் பொருள்கோடலைப்போல கொள்ளவியலாதென்றும் எவ்வளவுபண்டிதனானாலும் வேதப் பொருளையுணர்தல் அரிதாதலைப்போல விதிலுமென்றும் இலக்கிய இலக்கணங்களைமாத்திரங் கற்றுள்ள பண்டிதர்களுக்கு இது விளங்குவதல்லவென்றும் குறிப்பிக்க. "அருந்தமிழாக" என்றாரென்க. (உக)

கரும்பினிற் கோது நீத்துச் சாறடு கட்டி யேபோல்
வரம்பிலா மறையின் மாண்ட பொருளெலா மாணத் தெள்ளிச்
சுரும்பிவர் கொன்றை வேணிப் பிரானிடந் தோறும் போகி
விரும்பிய தென்சொன் மாலை சிவமணம் விளையச் சாத்தி.

(இ-ள்.) கரும்பினிற் சக்கையையொழித்து சாற்றைக்காய்ச்சியெடுத்த கற்கண்டைப்போல, அளவற்ற வேதத்திலுள்ள மாட்சிமையான பொருளனைத்தையும் நன்றாகத் தெள்ளியெடுத்து, வண்டுகள் மொய்க்கின்ற கொன்றைமலர்மாலையையணிந்தபெருமான் எழுந்தருளி யிருக்கின்ற இடங்கள்தோறுஞ்சென்று அவரால் விரும்பப்பட்ட தமிழ்மொழியாலான பாமாலையைச் சிவமணமானது விளையுமாறு சாத்தி. எ-று.

கரும்பினிற் சுவையிருக்கினும் வேர்முதலியவும் இலைமுதலியவும் கணுமுதலியவும் அசுவையையாதல்போல, வேதமும் எல்லாம் இறைவனையே கூறுவதாகவிருந்தாலும் மந்திரம் பிராமணம் உபநிடதம் என்னும் பகுதியினையுடைய வேதங்களிலே உபசாரிகமாகக் கூறப்பட்ட இதர தேவதாபரத்துவாதிகளையும், நகுஷ்பட்டாபிஷேகமுதலிய கதைபோல்வனவற்றையுங் காருடாதி மந்திராதிகளைப்போல்வன வாதிகளையும் வேதமென்னும் கரும்பின் சக்கையாதிகளைப்போல ஒழித்து சிவப்பிரியமானவைகளையே திரட்டித் துதியாக்கினர் என்றுகுறிப்பிக்க, "கரும்பினிற்கோது நீத்து" என்றார்.

கருப்பஞ்சாற்றினும் அதனைக் காச்சியபின்னுண்டான கற்கண்டுக்கட்டி மிகவும் இனிமையும் சுவையும் தூய்மையுமாய் நிற்றலைப்போல, தமிழ்வேதமும் சொற்களொடு கலந்து இனிமையும் ஞானமாகிய சுவையும் பாசநாசவழியென்னுந்தூய்மையுங்கொண்டு விளங்குவதென்று குறிப்பிக்க, "சாறடுகட்டியேபோல்" என்றார்.

ஆரியவேதாத்தியயனத்தைக்காட்டிலும் திராவிடவேதாத்தியயனம் இறைவற்கு மிகவும் இனிமையானதென்று இதனானே அறியப்படுகிறது.

கற்கண்டிருக்கக் கரும்பைத்தின்னல் உயர்வாகா. கரும்பினிற் சுவைகாணவேண்டுமானால் பன்முதலியவைகளை வருந்த வென்றல்வேண்டும்.

கற்கண்டின் சுவைக்கவ்வண்ணமில்லை; வாயிலிட்டவுடனே இயல்பாகவே கரையும். அதைப்போல தமிழ்வேதம் சொன்னவளவிலேயே அன்பை விளைக்கும்.

ஆரியவேதம் அவ்வாறு அன்பை விரைவி லுண்டாக்காது; ஆரியவேதத்துச் சில பாகங்களில் லருவருப்பைத்தரும்பொருள்களுமுண்டு. திராவிடத்திலெந்த அசையு மவ்வாறில்லை.

கரும்பினாலாகிய கடைசிப்பயன் அதன் இனிமையால் மகிழ்தல். வேதக்கரும்பின் பொருட்பாலிலும் பூர்வபட்ச வண்டல்களைச் சோதனையென்னுந்துணியால் வடிகட்டியெடுத்து ஞானசம்பந்தர் தமதுதிருவாயாகிய வுட்டிலிலமைத்துப் பாகாக்கி ஊற்றி வைத்துள்ள இத்தமிழ்வேதக் கற்கண்டே பிறவிநோய்க்கு மருந்து என்று சைவரனைவரு முணர்வாராதலா லிங்கு விரித்திலேம்.

இவராலியற்றப்பட்ட தமிழ்வேதத்திலுள்ள பொருளைவிடத் தூயபொருளாரிய வேதத்திலில்லை யாதலால் அதைப்படித்துத் தொண்டை கம்மாமல், இதனைப்படித்து எல்லாப்பொருளையும் உணரலாமென்று சித்தாந்திப்பார், "பொருளெலா மாணத்தெள்ளி" என்றார்.

மாலை யென்றதற்கேற்பச் சிவமணமென்றார்.

திருஞானசம்பந்தப்பெருமான் திருத்தோணிபுரத்திறைவன் திருவடிகளை முதன்முதல் துதித்த திருப்பதிகம் வருமாறு.

**திருப்பிரமபுரம் - பண் - நட்டபாடை.**

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிபூசியென்னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனநாட்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௧)

முற்றலாமையிளநாகமோடேனமுளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகலனாப்பலிதேர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடையார்பெரியார்கழல்கையாற்றொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௨)

நீர்பரந்தநிமிர்புன்சடைமேலோர்நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வ
னூர்பரந்தவுலகின்முதலாகியவோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௩)

விண்மகிழ்ந்தமதிலெய்ததுமன்றிவிளங்குதலையோட்டி
லுண்மகிழ்ந்துபலிதேரியவந்தெனதுள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவரவம்மலர்கொன்றைமகிழ்ந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௪)

ஒருமைபெண்மையுடையன்சடையன்விடையூருமிவனென்ன
வருமையாகவுரைசெய்யவமர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல்கொள்ளமிதந்ததோர்காலமிதுவென்னப்
பெருமைபெற்றபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௫)

மறைகலந்தவொலிபாடலோடாடலராகிமழுவேந்தி
யிறைகலந்தவினவெள்வளைசோரவென்னுள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடியார்பொழினீடுயர்சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௬)

சடைமுயங்குபுனலன்னனலனெரிவீசிச்சதிர்வெய்தி
யுடைமுயங்குமரவோடுழிதந்தெனதுள்ளங்கவர்கள்வன்
கடல்முயங்குகழிசூழ்புனல்கானலம்பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௭)

வியரிலங்குவரையுந்தியதோள்களைவீரம்விளைவித்த
வுயரிலங்கையரையன்வலிசெற்றெனதுள்ளங்கவர்கள்வன்
றுயரிலங்குமுலகிற்பலவூழிகடோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௮)

தாணுதல்செய்திறைகாணியமாலொடுதண்டாமரையானு
நீணுதல்செய்தொழியந்நிமிர்ந்தானெனதுள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மகளீர்முதலாகியவையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௯)

புத்தரோடுபொறியில்சமணும்புறங்கூறநெறியில்லா
வொத்தசொல்லவுலகம்பலிதேர்ந்தெனதுள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறுகவ்வுரிபோர்த்ததோர்மாயமிதுவென்னப்
பித்தர்போலும்பிரமாபுரமேவியபெம்மானிவனன்றே. (௧௦)

அருநெறியமறைவல்லமுனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவியபெம்மானிவன்றன்னை
யொருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்தலெளிதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் – **பிரமபுரீசர்,** தேவிபெயர் – **திருநிலைநாயகியம்மை.** (௨௨)

*பருமுத்த முலையாள் பங்க னருளினாற் பசும்பொற் றாளந்*
*திருமுத்தின் சிவிகை காளந் தெண்முத்தின் பந்த ரின்ன*
*நிருமித்த வகைபோற் பெற்றுப் பாலையை நெய்த லாக்கிப்*
*பொருமுத்த நதிசூழ் வீழிப் பொற்படிக் காசு பெற்று.*

(இ-ள்.) பரிய நித்திலமணிமாலையணிந்த தனபாரங்களையுடைய வுமாபிராட்டியாரை யொருபுறத்திலுடைய சந்திரமௌலீசருடைய கருணையினால், பசியபொன்னாந் தாளமும் அழகிய முத்துச்சிவிகையும் முத்துச்சின்னமுந் தெள்ளொளிவீசுகின்ற முத்துப்பந்தரும் ஆகிய இவைகளை அவ்வவ்விடங்களி லுண்டாக்கினமையைப்போல, அடைந்து பாலைவனத்தை நெய்தலாகச்செய்து அலைகள் கரைகளில் மோதியெறிகின்ற முத்துக்களையுடைய ஆறுசூழ்ந்த திருவீழி நகரில் பொன்னாணயமாகிய படிக்காசைப் பெற்று. எ-று.

## திருத்தாளம்பெற்றது.

நம் பாலறாவாயர் இறைவியின் திருமுலைப்பாலை ஞானாமிர்தத்துடன்கலந்து திருவமுது செய்து தோடுடைய செவியனென்னுந் திருப்பதிகம்பாடித் திருமாளிகையடைந்து அன்றிருந்து மற்றைநாள்ச்சீகாழிக்கருகிலுள்ள திருக்கோலக்காவென்னுந் திருத்தலத்துக்குச் சிவபாதவிதையருடைய புண்ணியம் பொருந்திய புஜாரதத்திலாரோகணித்துச்சென்று சந்நிதானத்தையடைந்து சகலலோகாதிபனை வணங்கி, மடையில் வாளையென்று எடுத்த திருப்பதிகத்தைச் சிறுகாந்தளலர்போன்ற விரல்களை நீட்டித் தாளம்போட்டுக்கொண்டு சந்நிதியினின்று பாடுதலும், எம்பெருமானும், எம்பெருமாட்டியும் அவர் திருக்கரங்களுக்குத் துன்பமுண்டாகாதிருக்குமாறு திருவுளத்தெண்ணி பொன்னாலமைக்கப்பட்டு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை இலேகிக்கப்பட்டதாகவுள்ள ஒரு தாளத்தை இவர்திருக்கரத்திலளித்தனர். பெருமான்றாளத்தையும் பெருமாட்டி அத்தாளத்துக்கு ஓசையையும் அளித்தனர். இதனை,

"பெருக்கோலிட் டலையிறங்குங்காவிரிநீர்பிரசமலர்தரளஞ்சிந்த
வரிக்கோலவண்டாடமாதரார்குடைந்தாடுமணிநீர்வாவித்
திருக்கோலக்காவெய்தித் தேவர்பிரான்கோயில்வலஞ்செய்துமுன்னின்
திருக்கோலிட்டறிவரியதிருப்பாதமேத்துவதற்கெடுத்துக்கொண்டார்.

மெய்ந்நிறைந்தசெம்பொருளாம்வேதத்தின்விழுப்பொருளைவேணிமீது
பைந்நிறைந்தவரவுடனேபசுங்குழவித்திங்கள்பரித்தருளுவானை
மைந்நிறந்தமிடற்றானைமடையில்வாளைகள்பாயவென்னும்வாக்கான்
கைந்நிறைந்தவொத்தறுத்துக்கலைப்பதிகங்கவுணியர்கோன்பாடுங்காலை.

கையதனாலொத்தறுத்துப்பாடுதலுங்கண்டருளிக்கருணைகூர்ந்த
செய்யசடைவானவர்தமஞ்செழுத்துமெழுதியசெம்பொற்றாளங்கள்
ஐயரவர்திருவருளாலெடுத்தபாடலுக்கிசைந்தவளவாலொத்த
வையமெலாமுய்யவருமறைச்சிறுவர்கைத்தலத்துவந்தவன்றே." என வரும் திருத்தொண்டர்புராணத்தா லுணர்க.

### பொற்றாளம்பெற்ற திருக்கோலக்காபதிகம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மடையில்வாளைபாயமாதரார்
குடையும்பொய்கைக்கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சங்கீ
ளுடையுங்கொண்டவுருவமென்கொலோ. (௧)

பெண்டான்பாகமாகப்பிறைசென்னிக்
கொண்டான்கோலக்காவுகோயிலாக்
கண்டான்பாதங்கையாற்கூப்பவே
யுண்டானஞ்சையுலகமுய்யவே. (உ)

பூணற்பொறிகொளரவம்புன்சடைக்
கோணற்பிறையன்குழகன்கோலக்கா
மாணப்பாடிமறைவல்லானையே
பேணப்பறையும்பிணிகளானவே. (௩)

தழுக்கொள்பாவந்தளரவேண்டுவீர்
மழுக்கொள்செல்வன்மறிசேரங்கையான்
குழுக்கொள்பூதப்படையான்கோலக்கா
விழுக்காவண்ணமேத்திவாழ்மினே. (௪)

மயிலார்சாயன்மாதோர்பாகமா
வெயிலார்சாயவெரித்தவெந்ததன்
குயிலார்சோலைக்கோலக்காவையே
பயிலாநிற்கப்பறையும்பாவமே. (௫)

வெடிகொள்வினையைவீட்டவேண்டுவீர்
கடிகொள்கொன்றைகலந்தசென்னியன்
கொடிகொள்விழவார்கோலக்காவுளெம்
மடிகள்பாதமடைந்துவாழ்மினே. (௬)

நிழலார்சோலைநீலவண்டினங்
குழலார்பண்செய்கோலக்காவுளான்
கழலான்மொய்த்தபாதங்கைகளாற்
றொழலார்பக்கற்றுயரமில்லையே. (௭)

எறியார்கடல்சூழிலங்கைக்கோன்றன்னை
முறியார்தடக்கையடர்த்தமூர்த்திதன்
குறியார்பண்செய்கோலக்காவையே
நெறியாற்றொழுவார்வினைகணீங்குமே. (அ)

நாற்றமலர்மேலயனுநாகத்தி
லாற்றலணைமேலவனுங்காண்கிலாக்
கூற்றமுதைத்தகுழகன்கோலக்கா
வேற்றான்பாதமேத்திவாழ்மினே. (௯)

பெற்றமாசுபிறக்குஞ்சமணரு
முற்றதுவர்தோயுருவிலாளருங்
குற்றநெறியார்கொள்ளார்கோலக்காப்
பற்றிப்பரவப்பறையும்பாவமே. (௧௦)

நலங்கொள்காழிஞானசம்பந்தன்
குலங்கொள்கோலக்காவுளானையே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையா
ருலங்கொள்வினைபோயோங்கிவாழ்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் – சத்தபுரீசர், தேவிபெயர் – ஓசைகொடுத்தநாயகி.

## திருஞானசம்பந்தப்பெருமான் முத்துச்சிவிகையிலாரோகணித்தது.

ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான் நங்கௌணியகுலாதிபரான சிவபாதவிதையருடைய புயரதாரோகணராகச் சிறப்புப்பொருந்திய விருத்தகாசிவாணனை வணங்கி, திருத்தூங்கானைமாடத்தெய்திச் சுடர்க்கொழுந்தீசனையுங் கடந்தைநாயகியாரையுமிறைஞ்சித் திருவருள்பெற் றத்தலத்திற்குச் சற்றுத் தூரத்திலுள்ள திருவரத்துறையிலெழுந்தருளியிருக்கின்ற ஆனந்தைகாந்தனை வணங்கப் பிரயாணமாகித் தந்தையின் புண்ணியபுயரதத்தினின்றும் அவரோகணித்துப் பூமிதேவியார்செய்த புண்ணியவிசேடத்தால் நம்மருமைத் திருவடியைக்கீழூன்றி நடந்து திருவிரல்கள் செந்நிறத்தின் மேலுஞ்செந்நிறமுற வன்றுமாலையில் அருகிலுள்ள மாறன்பாடியிலாதித்தியாத்தமனகாலையி லடைந் திறைவனடியைப்புதித்த அவரிதையகலமொன்றே விரிந்துநிற்க, வுலககமலநாயகனத்தமனமாதலும் அன்றிரவங்கயர்வொழித்தருளுபவராக நித்திரைசெய்தவுடனே, அரத்துறையண்ணல் தம்மகனுரிளைத்ததையறிந்து அவரேறியருளற்கேற்ற ஆணிமுத்தாலாகிய சிவிகையும் தாளசின்னத்தையும் அமைத்து அவர்பெருமையுந் தங்கருணையு முலகறிந்துய்யுமாறு ஆலயமண்டபத் தகத்தமைத் தவ்வூரடியவர் கனவி லவர்கள்செய்தபாக்கிய யோக்கியத்தாலெழுந்தருளி "எமதுசம்பந்தன் எம்மைக்காணியகருதி மாறன்பாடியில் வந்திருக்கின்றா னவற்கு, நீவிர் எமதாலயத்தி னவீனமாக வமைத்துவைக்கப்பட்டுள்ள சிவிகை-சின்னங்-குடையாதிகளை எடுத்துக்கொண்டுசென்று கொடுங்களென்று வேதமணங்கமழும் வாயினாலருளிச்செய்தலும்,காணுக்காக்ஷியைக்கண்ட வவ்வரத்துறையார் ஆச்சரியமடைந்து மஹாநந்தபூரிதர்களா யாலயத்திற்குச் சென்றார்கள்.

சென்று, குன்றவில்லியின் கட்டளைப்படி இம்மித்துணையு மாறுதலின்றி யெல்லாமிருக்கக்கண்டு இவைகளை யப்பெரியவருக்களிக்குமாறு புலரிதோன்ற வலரிவருத லெஞ்ஞான்றெனக் கடையாமத்தை யொருயுகம்போலக் கழித்தார்கள் ; இவ்வரியதரிசனுக்கிரகத்துடன் வந்தாற்போல அப்போதே பானுவும் உதயமாயினன்; இவர்களும் சிவிகையாதிகளை எடுத்துக்கொண்டு தாயைநாடிச் செல்லுஞ்சேயனையாராய் மாறன்பாடியை நோக்கிச்சென்றார்கள்.

எம்பெருமானும் இரவில் அரவிந்தாக்ஷராகிய சம்பந்தப்பெருமானுடைய கனவிலெழுந்தருளி, மைந்த! இனி நீ நம்மாலளிக்கப்பட்ட சிவிகையிலேறி நம்முன்னர் வருதி; நீ நடவேல் என்று திருவாய்மலர்ந்தருளி மறைதலும், எங்குருநாதருடனே எழுந்து விந்தையான விவ்விஷயத்தைத் தந்தையாதியர்க்குணர்த்திப் புலரியினெல்லையைக்காணிய வபிலாஷையினராயிருந்தனர். உடனே அரத்துறையார் சின்னங்-குடை-சிவிகை யென்னவுள்ள விவைகளை சிவோச்சாரணத்துடன் பிள்ளையார்சந்நிதியில் ஸமர்ப்பித்து இவை உமது தந்தையாரு மெமதிறைவருமாகவுள்ள வரத்துறையராலே அனுப்பப்பட்டன வாதலால் இவைகளை எம்பெருமான் அங்கீகரிக்கவேண்டுமென்று விண்ணப்பித்து பாலார்க்கனைப்போன்ற பெருமை மிக்க சுந்தரசரணயுகளங்களை வணங்கினார்கள். உடனே அருமை மவ்வழகிய சிவிகையை வணங்கி "எந்தையீசனெம்பெருமான்" என்னுந் திருப்பதிகமோதித்துதித்து அச்சிவிகையிலேறியருளினர். உடனே திருச்சின்னமுஞ் சிவகடாக்ஷத்தால் பரசமயகோளரிவந்தான்; பாலறுவாயன்வந்தான் என்று ஊதுவார் வாயினின்றுந்தொனித்தது. இதனை,

> "ஞானசம்பந்தனம்பாலணைகின்றான்
> மானமுத்தின்சிவிகைமளிக்குடை
> யானசின்னநம்பாற்கொண்டருங்கலைக்
> கோனவன்பாலணைந்துகொடுமென.

மாசில்வாய்மைநெல்வாயின்மறையவ
ராசில்சீர்ச்சண்பையாண்டகையார்க்கெதிர்
தேசுடைச்சிவிகைமுதலாயின
வீசரின்னருளான்றருங்கிலேகினர்.

சோதிமுத்தின்சிவிகைசூழ்ந்துபார்
மீதுதாழ்ந்துவெண்ணீற்றொளிபோற்றிநின்
றாதியாரருளாதலிலஞ்செழுத்
தோதியேறினருய்யவுலகெலாம்.''—என வருந் திருதொண்டர் புராணத்
திருவிருத்தங்களாலுணர்க.

முத்துச்சிவிகையி னேதிரிற் றிருவாய்மலர்ந்த பதிகம்.

திருநேல்வாயில் திருவரத்துறை – பண் – பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

எந்தையீசனெம்பெருமானேற்மர்கடவுளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கந்தமாமலருந்திக்கடும்புனனிவாமல்குகரைமே
லந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (க)

ஈரவார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமேத்தாச்சித்தர்கடொழச்செல்வதன்றால்
வாரிமாமலருந்திவருபுனனிவாமல்குகரைமே
லாருஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (உ)

பிணிகலந்தபுன்சடைமேற்பிறையணிசிவனெனப்பேணிப்
பணிகலந்துசெய்யாதபாவிகடொழச்செல்வதன்றான்
மணிகலந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணிகலந்தநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ங)

துன்னவாடையொன்றுடுத்துத்தூயவெண்ணீற்றினராகி
யுன்னிநைபவர்க்கல்லலொன்றுங்கைகூடுவதன்றா
பொன்னும்மாமணியுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லன்னமாடுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ச)

வெருகுரிஞ்சுவெண்காட்டிலாடியவிமலனென்றுள்கி
யுருகிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றான்
முருகுரிஞ்சுபூஞ்சோலைமொய்ம்மலர்சுமந்திழிநிவாவந்
தருகுரிஞ்சுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (ரு)

உரவுநீர்ச்சடைக்கரந்தவொருவனென்றுள்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவர்க்கல்லாற்பரிந்துகைகூடுவதன்றால்
குரவநீடியர்சோலைக்குளிர்புன்னிவாமல்குகரைமே
லரவமாடுநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (சு)

நீலமாமணிமிடற்றுநீறணிசிவனெனப்பேணுஞ்
சீலமார்ந்தர்கட்கல்லாற்சென்றுகைகூடுவதன்றாற்
கோலமாமலருந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லாலுஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (எ)

நெழுந்தண்மால்வரையெடுத்தசெருவலியிராவணனலற
வழுந்தவூன்றியவிரலான்போற்றியென்பார்க்கல்லதருளான்
கொழுங்கனிசுமந்துந்திக்குளிர்புனனிவாமல்குகரைமே
லழுங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (அ)

நுணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநைபவர்க்கல்லான்வந்துகைகூடுவதன்றால்
மணங்கமழ்ந்துபொன்னுந்திவருபுனனிவாமல்குகரைமே
லணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (கூ)

சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும்
பாக்கியப்படகில்லாப்பாவிகடொழச்செல்வதன்றாற்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனனிவாமல்குகரைமே
லார்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகடம்மருளே. (கo)

கறையினுர்பொழில்சூழ்ந்தகாழியுண்ஞானசம்பந்த
னறையும்பூம்புனல்பரந்தவரத்துறையடிகடம்மருளை
முறைமையாற்சொன்னபாடன்மொழியுமம்மாந்தர்தம்வினைபோய்ப்
பறையுமையுறவில்லைபாட்டிவைகற்றும்வல்லார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - அரத்துறைநாதர், தேவிபெயர் - ஆனந்தநாயகி.

## ஸ்ரீ திருஞானசம்பந்தப்பெருமான் முத்துப்பந்தர்பெற்றது.

எங்கள் பரசமயகோளரியார்

"வேனிற்குரிமைகூனிற்றூசெழக்
கோடையேவீசக்குறுகப்பேய்த்தேர்
காடையேவலியான்கம்புள்காகஞ்
சிரவமொலித்தல்புருண்டிசிந்துரம்
பாடலம்பூத்தல்பாலைக்கனியொடு
கோடரநாவல்குமிகங்காய்த்த
னீரலகன்மற்றுமீர்சிரலகிச்சோரலே." என் றிலக்கணமுரைத்தாங்

குலகமிருக்கு முதுவேனிற்காலத்து,

"திருச்சத்திமுற்றத்திற்சென்றெய்தித்தாருமலையா
ளருச்சித்தசேவடிகளார்வமுறப்பணிந்தேத்திக்
கருச்சுற்றிலடையாமற்கைதருவார்கழல்பாடி
விருப்புற்றுத்திருப்பட்டீச்சரம்பணியயேவுங்கால்" என்றபடி, திருப்பட்டீச்சரத்தப்பனடிகளைத் தொழுவா னசைகொண்டு செல்லுமஞ்ஞான்று, இறைவனார் தமதுகிங்கரர்கள் கையில் ஓரழகிய முத்துப்பந்தரையளித்து, நீவிரிதனைக்கொண்டுசென் றெமது சம்பந்தற் கெங்கட்டளையென்றளியுங்கள் என்று திருவாய்மலர்ந்தருளுதலும், அவர்கள் அவ்வாறே பட்டீச்சரத்தைநோக்கி ஆகாயமார்க்கமாகவந்து சம்பந்தப்பெருமானருகிலாகாயத்தில் வந்து நின்று,இதை நம்மிறைவர் நமக்களித்தனர் என்றுகூறியளித்தலும்,சம்பந்தப்பெருமான் பூமியிற்றிசைநோக்கி வணங்கித் திருப்பதிகம்பாடி,இஃதிறைவர் கட்டளையாதலா லங்கீகரிக்க வேண்டியதேயென் றதனை அங்கீகரித்தனர். உடனே பந்தரின்கால்களை அடியவர்கள் தாங்கிக்கொண்டார்கள். சிவபூதங்களு மறைந்தன.

பின்னர் சம்பந்தப்பெருமான் முத்துப்பல்லக்கின்மீது விரிக்கப்பட்ட முத்துப் பந்தரினையுமுடையராய்த் திருப்பட்டீச்சரமடைந்து துதித்தனர்.

## முத்துப்பந்தர்பெற்ற உடனே துதித்த திருப்பதிகம்.

பண்-சாதாரி

திருச்சிற்றம்பலம்.

பாடன்மறைசூடன்மதிபல்வளையோர்பாகமதின்மூன்றோர்கணையாற்
கூடவெரியூட்டியெழில்காட்டிநிழல்கூடுபொழில்சூழ்பழசையுண்
மாடமழபாடியுறைபட்டீச்சரமேயகடிகட்டரவினார்
வேடநிலைகொண்டவரைவீடுநெறிகாட்டிவினைவீடுமவரோ. (க)

நீரின்மலிபுன்சடையர்நீளரவுகச்சையதுநச்சிலையதோர்
கூரின்மலிசூலமதுவேந்தியுடைகோவணமுமானினுரிதோல்
காரின்மலிகொன்றைவிரிதார்கடவுள்காதல்செய்துமேயநகர்தான்
பாரின்மலிசீர்ப்பழசைபட்டீச்சரமேத்தவினைபற்றழியுமே. (உ)

காலின்மடவார்கள்புனலாடுவதுகவ்வைகடியார்மறுகெலா
மாலைமணநாறுபழையாறைமழபாடியழகாயமலிசீர்ப்
பாலையனநீறுபுனைமார்பனுறைபட்டீச்சரமேபரவுவார்
வேலையொருமால்கடல்கள்போற்பெருகிவிண்ணுலகமாளுமவரோ. (ங)

கண்ணின்மிசைநண்ணியிழிவிப்பமுகமேத்துகமழ்செஞ்சடையினான்
பண்ணின்மிசைநின்றுபலபாணிபடவாடவலபான்மதியினான்
மண்ணின்மிசைநேரின்மழபாடிமலிபட்டீச்சரமேமருவுவார்
விண்ணின்மிசைவாழுமிமையோரொடுடனாதலதுமேவலெளிதே. (ச)

மருவமுழவதிரமழபாடிமலிமத்தவிழவார்க்கவனையார்
பருவமழைபண்கவர்செய்பட்டீச்சரமேயபடர்புன்சடையினான்
வெருவமதயானையுரிபோர்த்துமையையஞ்சவருவெள்விடையினா
னுருவமெரிகழல்கடொழவுள்ளமுடையாரடையாவினைகளே. (ரு)

மறையினொலிகீதமொடுபாவனபூதமடிமருவிவிரவார்
பறையினொலிபெருகநிகழ்நட்டமமர்பட்டீச்சரமேயபனிகூர்
பிறையினொடுமருவியதோர்சடையினிடையேற்றபுனறோற்றநிலையா
மிறைவனடிமுறைமுறையினேத்துமவர்தீத்தொழில்களில்லர்மிகவே. (சு)

பிறவிபிணிமூப்பினொடுநீங்கியிமையோருலகுபேணலுறுவார்
துறவியெனுமுள்ளமுடையீர்கள்கொடிவீதியழகாயதொருசீர்
இறைவனுறைபட்டீச்சரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நறவவிரையாலுமொழியாலும்வழிபாடுமறவாதவவரோ. (எ)

நேசமிகுதோள்வலவனாகியிறைவன்மலையைநீக்கியிடலும்
நீசன்விறல்வாட்டிவரையுற்றதுணராதநிரம்பாமதியினா
னீசனுறைபட்டீச்சரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
நாசமறவேண்டுதலினண்ணலெளிதாமமரர்விண்ணுலகமே. (அ)

தூயமலரானுநெடியானுமறியாரவன்றோற்றநிலையின்
னேயவகையானதனையாரதறிவாரணிகொள்மார்பினகலம்
பாயநலநீறதணிவானுமைதனோடுமுறைபட்டீச்சரமே
மேயவனதீரடியுமேத்தவெளிதாகுநலமேலுலகமே. (கூ)

தடுக்கினையிடுக்கிமடவார்களிடுபிண்டமதுவுண்டுவுழறருங்
கடுப்பொடியுடற்கயவர்கத்துமொழிகாதல்செய்திடாதுகமழ்சேர்
மடக்கயல்வயற்கொண்மழபாடிநகர்நீடுபெருழையாறையதனுட்
படைக்கொருகரத்தன்மிகுப்பட்டீச்சரமேத்திவினைபற்றறுதலே. (க0)

மந்தமலிசோலைமழபாடிநகர்நீடுபெழையாறையதனிற்
பந்தமுயர்வீடுநெல்பட்டீச்சரமேயபடர்புன்சடையனை
யந்தண்மறையோரினிதுவாழ்புகலிஞானசம்பந்தனணியார்
செந்தமிழ்கள்கொண்டினிதுசெப்பவலதொண்டர்வினைநிற்பநிலவே (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - பட்டீச்சரநாதர், தேவியார் - பால்வளைநாயகி.

## திருஞானசம்பந்தசுவாமிகள் பாலையைநெய்தலாக்கியது.

ஞானப்பாலுண்ட மூன்றுநாள் திருநனிபள்ளி யந்தணரனைவருங் காழிநகரடைந்து கண்ணுதன்மைந்தனை தம்மூருக்கெழுந்தருள வேண்டுமென்று வேண்டிக்கோடலும் அதற்கிசைந்தவரும் கானடையானே யவ்வூரடைதற்கெண்ணிச் சென்றனர். உடனே தந்தையார் மனந்தாளாது விரைந்துவந்து தோண்மீது எடுத்து வைத்துக்கொண்டு திருநனிபள்ளியை நோக்கிச்சென்றனர். அக்காலத்திற் சீகாழிக்கும் திருநனிபள்ளிக்கும் இடையிலொரு பாலைவனமிருந்தது. அவ்விடத்திற் செல்லுங்கால் வெயிலாலனைவரும் வருந்துதலையுணர்ந்து தந்தையாரைநோக்கி எதிரே காணுஞ்சோலை யெந்தவூரது என்றுகேட்டனர். அதற்கவரும் அதுவே நாம் போகின்ற திருநனிபள்ளியென்றனர். அப்பொழுது ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான் காரைகள் என்னும் பதிகம்பாடி இறைவனைத் துதித்தனர். உடனே இவர் செல்லும் வழியிலிருந்த பாலைநிலமும் நெய்தனிலமாக மாறியது என்று ஆன்றோர் வழக்காலறியப்படுகின்றது.

திருநனிபள்ளி - பண் - பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

காரைகள்கூகைமுல்லைகளவாகையீகைபடர்தொடரிகள்ளிகவினிச்
சூரைகள்பம்பிவிம்முசுடுகாடமர்ந்தசிவன்மேயசோலைநகர்தான்
தேரைகள்சாரைசாயமிதிகொள்ளவாளைகுதிகொள்ளவள்ளைதுவள
நாரைகளாரல்வாரவயன்மேதிவைகுநனிபள்ளிபோலுநமர்காள்.

கடல்வரையோதமல்குகழிகானல்பானல்கமழ்காழியென்றுகருதப்
படுபொருளாறுநாலுமுளதாகவைத்தபதியானஞானமுனிவ
னிடுபறையொன்றவத்தர்பியன்குமேலிருந்துவிசையாலுரைத்தபனுவல்
நடுவிருளாடுமெந்தைநனிபள்ளியுள்கவினைகெடுதலாணைநமதே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - நற்றுணையப்பர் - தேவிபெயர் - பருவதராஜபுத்திரி.

## ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான் பொற்காசுபெற்றது.

சீகாழியண்ணலருண்மைந்தராகிய ஞானசம்பந்தப்பெருமான் திருநாவுக்கரசுபெருமானுடன் திருவீழிமிழலையையடைந்து வீழியப்பரைவணங்கி அவ்விடத்திலேயே சிறிதுகாலந் தங்கியிருந்தனர். அக்காலத்தி லத்திருவீழிமிழலையி லெங்கள் வாகீசரும் வேறொருமடத்தில் அடியவர்கூட்டத்துடன் எழுந்தருளி இருந்தனர். இத்திருநாவுக்கரசருடனே ஞானசம்பந்தப்பெருமான் ஆலயமடைந்து நாடோறும் ஆதிமூர்த்தியான வீழியப்பரை முக்காலங்களிலும் வணங்கிப் பதிகம்பாடித் துதித்துக்கொண்டிருந்தனர்.

அந்நாளிலுலகிற் கிரகநிலைமாறிக் காலமழையொழிந்து பயிர்விருத்தியின்றி க்ஷாமமுண்டாகியது. க்ஷாமகாலத்தில் தரித்திரர்கள் அடைகின்ற துன்பமித்தகையதென்று நாமாராயவேண்டுவதில்லை. இது உலகத்திலடிக்கடி யுண்டாகின்றதாதலால்,

இதுநிற்க, இக்கொடிய க்ஷாமகாலத்தி லடியார்கூட்டத்துடன் ஞானசம்பந்தப்பெருமான் திருவீழிமிழலைத் திருமடத்திலெழுந்தருளி இருந்தனர். இருக்குங்காலொருநாளிரவில் அவரிதையகமலத்தெழுந்தருளி யிருக்குமெம்பெருமான் அவர் கனவிற்றோன்றி இக்கொடியகாலத்தா லுனக்கொன்றுமில்லை, ஆயினும் உன்னுடனிருக்கும் அடியவர்பொருட்டு நங்கோயிற் பலிபீடத்தி லொருபொன்காசுவைக்கின்றோம். அதனை எடுத்து அடியவர்பொருட்டு விநியோகப்படுத்துதி என்றுகூறிமறைந்தனர்.

பிற்றைநாட்காலையி லாலயத்திற் பலிபீடத்திலொரு பொன்னங்காசிருக்கக் கண்டதனையெடுத்து அடியவர்கரத்தளித்து மாற்றிப் போசனசாமான்களை அழைப்பித்துச் சமைத்துப் பறைசாற்றி யடியவரையழைப்பித்து உண்பித்துக்கொண்டுவந்தனர்.

இவர்போலவே இறைவனுலளிக்கப்பட்ட படிக்காசினால் திருநாவுக்கரசுபெருமானும் அடியவர்களுக்கன்னம் அளிப்பித்துவந்தனர்.

இவ்வண்ணஞ் சிலகாலம் நடந்தேறிவருங்கால் ஒருதினம் வாகீசவடிகளின் திருமடத் தடியவர்கள் திருவமுது அருந்தி இளைப்பாறுதலைக்கண்டு தம் பரிசாரகனை அழைத்து ஏன் இன்னம் போசனமாகவில்லை என்றனர். அதற்குப் பாசகன் ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானைவணங்கி, ஆண்டவனே இறைவனுலளிக்கப்பட்ட படிக்காசுகளில் திருநாவுக்கரசுபெருமான் பெறுகின்ற காசினைமாற்றச்சென்றால் வாணிகரதனை வட்டமின்றி வாங்கிக்கொள்ளுகின்றார்கள். அதனாலது விரைவின் மாறுகின்றது, அதனாலம்மடத்திற் போசனம் விரைவிலாகின்றது.

இங்கெம்பெருமா னளித்த காசைக் காணும் வணிகர் அனைவரும் வட்டங்கேட்கின்றார்கள். வட்டங்கேட்பதுடன் அக்காசைப்போல விக்காசிலாசைகொள்ளுகின்றாரில்லை. வெகுநாழிகைகழித்துக் காசுமாறிப் பின்னர் அமுதாக்கவேண்டியதால் நாழிகையாகின்றது என்று கூறினான்.

பின்னர் ஞானசம்பந்தப்பெருமானார் எண்ணுகின்றார். இறைவரப்பருக்கு வாசியில்லாக்காசைத்தொண்டராதலாலளித்தார்போலும். இனி நாமும் வாசியில்லாக் காசினைப் பாடிப்பெறுவோமாக வெனக்கருதி ஆலயமடைந்து அண்ணலைவணங்கிச் சன்னிதியினின்று "வாசிதீரவே" என்னும் திருப்பதிகம்பாடித் துதித்துப் படிக்காசை எடுத்துக்கொடுத்து மாற்றிவர வுத்தரவளித்தனர். அடியவர்களக்காசை கடைவீதியிற் கொண்டுபோய்க் காட்டினவுடனே விரைவில் வட்டமில்லாமலே காசைவாங்கிப் பணமளித்தார்கள்; அன்று முதல் திருஞானசம்பந்தப்பெருமான் திருமடத்திற் றிருநாவுக்கரசு பெருமான் திருமடத்திற்போல காலத்தில் அன்னஞ்சமைக்கப்பட்டு அடியார்களுக்களிக்கப்பட்டுவந்தது.

காசு வாசியின்றி யிருந்ததையறிந்த ஞானசம்பந்தப்பெருமானும் இறைவன் கருணையைக்கருதி ஆனந்தபூரிதராக விருந்தனர். இதனை,

"உலகியல்புநிகழ்ச்சியினிலவீந்ததீயவுறுபசிநோயுமையடையாதெனினுமும்பா
னிலவுசிவநெறிசார்ந்தோர்தம்மைவாட்டநீக்குதற்குநித்தமோரோர்காசுநீடு
மிலகுமணிப் பீடத்துக்குணக்குமேற்கும்யாமளித்தோமுமக்கிந்தகாலந்தீர்ந்தா
லலகில்புகழீர்தவிர்வதாகுமென்றேயருள்புரிந்தார்திருவீழிமிழலையையர்.

தம்பிரானருள்புரிந்துகனவினீங்கச்சண்பையாரிளவேறுதாமுணர்ந்து
நம்பிரானருளிருந்தவண்ணமென்றேநாவினிசையரசோடுங்கூடநண்ணி

வம்புலாமலரிதழிவீழிநாதர்மணிக்கோயில்வலஞ்செய்யப்புகுந்தவேலை
யம்பிகாபதியருளாற்பிள்ளையார்தாமபிமுகத்துப்பீடிகைமேற்காசுகண்டார்.

நாவினுக்குவேந்தர்திருமடத்திற்றொண்டர்நாட்கூறுதிருவமுதுசெய்யக்கண்டு
சேவுகைத்தாரருள்பெற்றபிள்ளையார்தந்திருமடத்திலமுதாக்குவாரைநோக்கி
தீவினைக்குநீரொன்றுமடைவிலாதீர்திருவமுதுகாலத்தாலாக்கியிங்கு
மேவுமிக்கவடியவருக்களியாவண்ணம்விளைந்தவாறென்கொலோவிளம்புகென்றார்.

திருமறையோர்தலைவர்தாமருளிச்செய்யத்திருமடத்திலமுதமைப்போர்செப்புவார்கள்
ஒருபரிசுமறிந்திலோமிதனையும்மையுடையவர்பாற்பெறும்படிக்காசொன்றுங்கொண்டு
கருதியவெல்லாங்கொள்ளவேண்டிச்சென்றாற்காசுதனைவாசிபடவேண்டுமென்பர்
பெருமுனிவர்வாகீசர்பெற்றகாசுபேணியேகொள்வரிதுபிற்பாடென்றார்.

திருஞானசம்பந்தரதனைக்கேட்டுச்சிந்திப்பார்சிவபெருமானமக்குத்தந்த
வொருகாசுவாசிபடமற்றைக்காசுநன்றாகிவாசிபடாதொழிவானந்தப்
பெருவாய்மைத்திருநாவுக்கரசர்தொண்டாற்பெறுங்காசாமாதலினாற்பெரியோன்றன்னை
வருநாள்கடருங்காசுவாசிதீரப்பாடுவனென்றெண்ணியதுமனத்துட்கொண்டார்.

மற்றைநாட்டம்பிரான்கோயில்புக்குவாசிதீர்த்தருளுமெனப்பதிகம்பாடிப்
பெற்றபடிக்காசதனைக்கொண்டுமாந்தர்பெயர்ந்துபோயாவணவீதியினிற்காட்ட
நற்றவத்தீரிக்காசுசாலநன்றுவேண்டுவனநாந்தருவோமென்றுநல்க
வற்றைநாட்டொடங்கிநாட்கூறுதன்னிலடியவரையமுதுசெய்வித்தார்வமிக்கார்.

## வாசியில்லாக் காசுக்காகத் திருவாய்மலர்ந்தருளின பதிகம்.

### திருவீழிமிழலை திருவிருக்குக்குறள் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

வாசிதீரவே, காசுநல்குவீர்
மாசின்மிழலையீ, ரேசலில்லையே. (௧)

இறைவராயினீர், மறைகொண்மிழலையீர்
கறைகொள்காசினை, முறைமைநல்குமே. (௨)

செய்யமேனியீர், மெய்கொண்மிழலையீர்
பைகொளரவினீ, ருய்யநல்குமே. (௩)

நீறுபூசினீ, ரேறதேறினீர்
கூறுமிழலையீர், பேறதருளுமே. (௪)

காமன்வேவவோர், தூமக்கண்ணினீர்
நாமமிழலையீர், சேமநல்குமே. (௫)

பிணிகொள்சடையினீர், மணிகொள்மிடற்றினீர்
அணிகொள்மிழலையீர், பணிகொடருளுமே. (௬)

மங்கைபங்கினீர், துங்கமிழலையீர்
கங்கைமுடியினீர், சங்கைதவிர்மினே. (௭)

அரக்கனெரிதர, விரக்கமெய்தினீர்
பரக்குமிழலையீர், கரக்கைதவிர்மினே. (௮)

அயனுமாலுமாய், முயலுமுடியினீ
ரியலுமிழலையீர், பயனுமருளுமே. (௯)

பறிகொள்தலையினு, ரறிவதறிகிலார்
வெறிகொள்மிழலையார், பிறிவதரியதே. (௧0)

காழிமாநகர், வாழிசம்பந்தன்
வீழிமிழலைமேற், சூழுமொழிகளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - வீழியழகர், தேவிபெயர் - சுந்தரகுசாம்பிகை. (௨௩)

அருமறை வணங்குங் கோயிற் கதவினை யடைக்கப் பாடிப்
பரனுறை பதிக ளெங்குந் தொழுதனர் பாடிப் பாடி
வருமவர் நுங்க ணாட்டு வணங்கவும் வருவ ரென்னுத்
தருமநூ லணிந்த தெய்வத் தாபதன் சாற்ற லோடும்.

(இ-ள்.) அரியவேதங்களாலே அர்ச்சிக்கப்பட்ட திருமறைக்காட்டிலுள்ள கதவினை அடைக்குமாறு திருப்பதிகமுரைத்துப் பரமேசுவரர் எழுந்தருளி இருக்கின்ற ஒவ்வொருதலங்களிலுஞ்சென்று இறைவனைவணங்கித் துதித்துக்கொண்டே வருகின்றவர் உங்கள்நாட்டி லிறைவனை வணங்கவும் வருவாரென்று தருமசாத்திரத்திற்கூறப்படுகிற பூணநூலணிந்த தெய்வத்தன்மைபொருந்திய முனிவன் கூறுதலும், எ-று.

தருமநூல் தருமமியற்றுமாறறையுநூல்.

## ஸ்ரீ திருஞானசம்பந்தப்பெருமான் திருமறைக்காட்டில் திருகதவடைக்கத் திறக்கச்செய்தது.

திருவீழிமிழலையிற் காலம் க்ஷேமமாங்காறுமிருந்து நன்மழைபெய்து நெல்மலிவுண்டானவுடனே பொன்தருவதை யிறைவர் நிறுத்தினர். அதனாலினிப் பிறதலங்களையும் வணங்கவேண்டுமென்று திருவுளங்கொண்டு திருநாவுக்கரசு பெருமானுடன் பிரயாணமாகி வழியிலுள்ள சிவதலங்கள்தோறுஞ் சென்று சிவதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடித்துதித்துத் திருவருள்பெற்றுப் பெற்றுச்செல்பவர் நெய்தல் சூழ்ந்த திருமறைக்காட்டீசரை வணங்க வுத்தேசித்துத் திருமறைக்காட்டை நோக்கிச்சென்றனர்.

இவரது வருகையை முன்னரேயுணர்ந்த அந்நகரவாசிகளனைவரும் அதிகமான மகிழ்ச்சியுடன் நகரலங்காரஞ்செய்து நன்னீர்க்குடங்களையும் பொன்மணி விளக்குகளையும் பன்மலர்க்குவியல்களையுங்கொண்டு வேதகோஷத்துடன் அந்தணரை முன்வைத்துச்சென்று அடிமலர்பணிந்து உபசரித்தழைத்தலும் அவர்களைத் தாமும் பிரதிவந்தனத்தால் மகிழ்வித்துத் திருநாவுக்கரசுபெருமானுடன் ஊருட் பிரவேசித்து வீதிவலமாகச் சென்று தூலலிங்கத்தின் சன்னிதானத்திலேயே யானத்தினின்றும் இறங்கி அலர்ந்து குவிந்த சிறுகமலங்களைப் போல கரங்கள்விளங்க உச்சியிற் குவித்துக்கொண்டு மெல்லென நடந்து கோபுரங்கடந்து கோபுரத்தியைவணங்கி உள்ளே செல்லுபவர் கிழக்குவாசல் பந்தனஞ்செய்திருப்பதைப்பார்த்து அங்குள்ளவர்களைநோக்கி இதென்னவிஷயம் என்று திருவாய்மலர்ந்தனர். உடனே அந்நகரவாசிகளுளுயர்ந்தவர்களும் புராணம் உணர்ந்தவர்களுமாகவுள்ளவர்கள் கூறத்தொடங்கினார்கள்.—எங்கள்பெருமானே பூருவகாலத்திலிம்மஹாதேவரை வேதபுருஷர்கள் அபீஷ்டசித்தியின்பொருட்டு அருச்சித்து சென்றபோழ்து அவர்களால் திருக்காப்பிடப்பட்டுச்சென்ற வந்நாள்முதலிந்நாள்காறும் இக்கதவம் திறக்கப்படாமலே இருக்கின்றது என்று கூறினார்கள்.

உடனே சரவணேற்பவர் தம்மருகினின்ற வாகீசப்பெருந்தகையாரை நோக்கி அப்பரே இவ்விறைவரையருச்சித்துச்சென்ற வேதபுருடர்களாலிடப்பட்ட திருக்காப்பை நீக்கி நாம் எதிர்முகமாகவே இறைவரை வணங்கவேண்டும்; இதுகாறும் எவரும் திறவா

மலிருந்த கபாடத்தை நாம் திறப்பது அழகல்லவாதலால் நீரும்மிறைவனைப்பாடித் திறப்பிப்பீராகவென்று கட்டளையிட்டருளுதலும் அவராணையை அங்கீகரித்த வாகீசர் தம்பெருமானுனைக்குறித்து, "பண்ணினேர்மொழியாளுமை பங்கரோ" என்றெடுத்த திருப்பதிகத்திற் பத்திடங்களிற் கதவினை திறந்தருளல் வேண்டுமென்று வேண்டிக்கோடலாகப்பாடியும் இறைவர் திருக்காப்பு நீக்காமையால் "இரக்கமொன்றிலீரெம்பெருமானிரோ" என்றுவருந்திக் கூறியவுடனே, திருவுளக்கருணையினையுடைய மறைசைநாதர் திருக்காப்பை நீக்குவித்தனர்.

உடனே புட்பவருஷமும் ஹரஹரத்தொனியும் புளகாங்கிதமும் ஆகிய இவைகளுண்டாயின. அப்பொழுது ஸ்ரீஞானசம்மந்தப்பெருமான் அப்பரை உடனழைத்துக்கொண்டு அவ்வழியே அடியவர்கூட்டத்துடன்மூலத்தானத்திறைவன் முன்னேசென்று வணங்கித் துதித்துத்திரும்புதலும்,வாகீசவடிகள் பாலருவாயனைநோக்கி, கருணைக்கடலாகிய நம்மிறைவனை யாவரும் இத்துவாரத்தின்வழியே இந்நாள்முதற்சென்று வணங்குமாறு இக்கதவம் அடைக்கவுந் திறக்கவுமாக இருக்கும் வண்ணஞ் செய்தருளல் வேண்டும் என்று திருவாய்மலர்ந்தருளுதலும், ஞானசம்பந்தப்பெருமான் அவ்வாறே அமைப்போமென்று திருவாய்மலர்ந்து, இறைவரைநோக்கி 'சதுரம்மறை' என்றபதிகந் திருவாய்மலர்ந்தருளினர்.

பதிகத்தின் முதற்கவி நிரம்பினவுடனே அவ்விருநிலைக் கதவும்மூடின. பின்னராழிசூழ்காழியண்ணல் பதிகத்தின் மற்றையகவிகளையும்நிரப்பி நாவுக்கரசுபெருமானுடன் அம்மஹாக்ஷேத்திரத்திலேயே எழுந்தருளி இருந்தனர். இதனை,

சொல்லரசருடன்கூடப்பிள்ளையார்தாந்தூமணிநீர்மறைக்காட்டுத்தொல்லைமூதூர்
மல்குதிருமறுகின்கட்புகுந்தபோதுமாதவர்கண்மறையவர்கண்மற்றுமுள்ளோ [கொ
ரெல்லையில்லாவுகையரவென்றெடுத்தவோசையிருவிசும்புந்திசையெட்டுநிறைந்துபொங்
யொல்லொலிநீர்வேலையொலியடக்கிவிண்மேலும்பர்நாட்டப்புறத்துமுற்றதன்றே.

அடியவரும்பதியவருமருங்குபோற்றவணிமறுகினூடெய்தியருகுசூழ்ந்த, கொடிநுடங்குசெழுந்திருமாளிகையின்முன்னர்க்கோபுரத்தைத்தாழ்ந்திறைஞ்சிகுறுகிப்புக்கு, முடிவிலிமையவர்முனிவர்நெருங்குந்தெய்வமுன்றில்வலங்கொண்டுநேர்சென்றுமுன்னுட் படியின்மறையருச்சித்துக்காப்புச்செய்தபைம்பொன்மணித்திருவாயிற்பாங்குவந்தார்.

அருமறைகடிருக்காப்புச்செய்துவைத்தவக்கதவந்திறந்திடவம்மறைகளோதும்
பெருகியவன்புடையடியாரணைந்துநீக்கப்பெருமையினாலன்றுமுதலாகப்பின்னை [த்
யொருபுடையோர்வாயிலமைத்தொழுகுந்தன்மையுள்ளபடிகேட்டருளியுயர்ந்தசண்பை
திருமறையோர்தலைவர்வியப்பெய்தநின்றுதிருநாவுக்கரசருக்குச்செப்புகின்றார்.

அப்பரேவேதவனத்தையர்தம்மையபிமுகத்துத்திருவாயிறிறந்துபுக்கே
யெப்பரிசுநாமிறைஞ்சவேண்டுநீரேயிவ்வாயிறிருக்காப்புநீங்குமாறு [டென்னை
மெய்ப்பொருள்வண்டமிழ்பாடியருளுமென்னவிளங்குமொழிவேந்தரதுமேற்கொண்
யிப்பரிசுநீரருளிச்செய்தீராகிலிதுசெய்வேனெனப்பதிகமெடுத்துப்பாட.

பாடியவப்பதிகப்பாட்டானபத்தும்பாடநிரம்பியபின்னும்பைம்பொன்வாயிற்
சேடியர்பொற்கதவுதிருக்காப்புநீங்காச்செய்கையினால்வாகீசர்சிந்தைநொந்து
நீடுதிருக்கடைக்காப்பிலரிதுவேண்டிநின்றெடுக்கத்திருக்கதவுநீங்கிக்காட்ட,
ஆடியசேவடியார்தமடியார்விண்ணோரார்ப்பெழுந்ததக்கிலாண்டமனைத்துமூழ்க. என்றும்,

"அன்றரசருளிச்செய்யவருமறைப்பிள்ளையாரும்
வென்றிவெள்விடையார்தம்மைவிருப்பினாற்சதுரமென்னு

மின்றமிழ்ப்பதிகப்பாடலிசைத்திடவிரண்டுபாலு
நின்றவக்கதவுகாப்புநிரம்பிடவடைத்ததன்றே." என்றும் வருந்திருத்தொண்டர் புராணத்தானுணர்க.

திருமறைக்காடு திருக்காப்பிடுவித்தபதிகம்.

பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கு
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
விதுநன்கிறைவைத்தருள்செய்தவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொளுங்கருத்தாலே. (௧)

சங்கந்தந்தரளமவைதான்கரைக்கேற்றும்
வங்கக்கடல்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
மங்கையுமைபாகமுமாகவிதென்கொல்
கங்கைசடைமேலடைவித்தகருத்தே. (௨)

குரவங்குருக்கத்திகள்புன்னைகள்ஞாழன்
மருவும்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
சிரமும்மலருந்திகழ்செஞ்சடைதன்மே
லரவம்மதியோடடைவித்தவழகே. (௩)

படர்செம்பவளத்தொடுபன்மலர்முத்தம்
மடலம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
வுடலமுமைபங்கமதாகியுமென்கொல்
கடனஞ்சமுதாவதுவுண்டகருத்தே. (௪)

வானோர்மறைமாதவத்தோர்வழிபட்ட
தேனேர்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
வேனோர்தொழுதேத்தவிருந்தநீயென்கொல்
கானார்கடுவேடுவனானகருத்தே. (௫)

பலகாலங்கள்வேதங்கள்பாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
வுலகேழுடையாய்கடைதோறுமுன்னென்கொல்
தலைசேர்பலிகொண்டதிலுண்டதுதானே. (௬)

வேலாவலையத்தயலேமிளிர்வெய்துஞ்
சேலார்திருமறைக்காட்டுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல்
காலார்சிலைக்காமனைக்காய்ந்தகருத்தே. (௭)

கலங்கொள்கடலோதமுலாவுகரைமேல்
வலங்கொள்பவர்வாழ்த்திசைக்கும்மறைக்காடா
விலங்கையுடையானடர்ப்பட்டிடவெய்த
வலங்கல்விரலூன்றியருள்செய்தவாறே. (௮)

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றுந்
தேனம்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா

வேனங்கழுகானவருன்னை மூனென்கொல்
வானந்தலைமண்டியுங்கண்டிலாவாறே. (கூ)

வேதம்பலவோமம்வியந்தடிபோற்ற
வோதம்முலவும்மறைக்காட்டிலுறைவா
யேதில்சமண்சாக்கியர்வாக்கிவையென்கொ
லாதரோடுதாமலர்தூற்றியவாறே. (கo)

காழிநகரான்கலைஞானசம்பந்தன்
வாழிமறைக்காடனைவாய்ந்தறிவித்த
வேழினிசைமாலையீரைந்திவைவல்லார்
வாழியுலகோர்தொழவானடைவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - மறைக்காட்டீசர், தேவிபெயர் - யாழைப்பழித்தமென்மொழியம்மை.

கற்பலர் கொடியன் னாருந் தென்னவன் கண்போல் வாரு
மற்புனா யமண்பே யோட்டி யன்றுதங் கோமான் மெய்யிற்
பொற்புறு நீறு கண்டு பூதிசா தனத்தா லெய்துஞ்
சிற்பர வீடு கண்ட மகிழ்ச்சியுட் டிளைத்தோ ரானார்.

(இ-ள்.) கற்பு என்னும் அலரலர்ந்துள்ள கொடிபோல்பவராகிய மங்கையர்க்கரசியாரும், பாண்டியமன்னனுக்குக் கண்போன்ற அமைச்சராகிய குலச்சிறையாரும், இதமானவசனங்களைப்பேசுகின்ற சமணர்களாகிய பைசாசுகளை அகற்றி அந்நாளிலேயே தம்மிறைவனுடலில் அழகுபொருந்திய விபூதியைப்பார்த்து விபூதியான சைவசாதனத்தாலடைகின்ற சிற்பரவீட்டைக்கண்ட சந்தோஷத்துண் மூழ்கினவர்களானார்கள் எ-று.

"பெண்ணிற்பெருந்தக்கயாவுளகற்பென்னுந்
திண்மையுண்டாகப்பெறின்"—என்று தமிழ்வேதங்கூறியாங்கு மாதர்க்கணி மலர்கற்பேயாதலினாசிரியரும் மங்கையர்க்கரசியாரைக் கற்பலர்கொடி என்றார்.

கண்ணுமிடுகெவசமும்போற்காரியம்பார்த்தொழுகியது என்றவிடத்தரசன் றன் அமைச்சனை, கண்ணும் இட்டகவசமும்போல என்றோதினதனானே அமைச்சன் அரசனுக்குக் கண்போல்பவனென்றுணரப்படுகின்றது. அதனாலே இவ்விடத்தும் அமைச்சரை "தென்னவன்கண்போல்வாரும்" என்றார். (உரு)

தங்கள்பேர் தீட்டி யோலை விண்ணப்பஞ் சண்பை நாடர்
புங்கவர்க் குணர்த்த வந்தப் பூசுரன் கையிற் போக்கி
மங்கையர்க் கரசி யாரு மரசற்கு மருந்தன் னாரு
மங்கையற் கண்ணி கோனைப் பணிந்துதம் மகத்திற் புக்கார்.

(இ-ள்.) ஒரு ஓலையில் தங்கள்பெயரை எழுதி தங்கள்விண்ணப்பங்களை சண்பைநாட்டினையுடைய அந்தணர்பெருமானுக் கறிவிக்கும்வண்ணம் யாத்திரையாகவந்த மறையவர்கையிற் கொடுத்தனுப்பிப் பின்னர் மங்கையர்க்கரசியாரும் மன்னவனுக்கு மருந்துபோல்பவராகிய குலச்சிறையாரும் அழகிய சேன்மீன்போன்ற கண்களையுடைய உமாகாந்தனைவணங்கித் தங்களிடத்திற்குச் சென்றார்கள். எ-று. (உசு)

பண்படு வேதச் செல்வன் வல்லைபோய்ப் பழன வேலிச்
சண்பையர் பிரானைக் கண்டு பறியுண்டு தலைச லெல்லாம்
புண்படத் திரியுங் கையர் பொய்யிருள் கடந்தார் தந்த
வெண்படு மோலை காட்டிப் பாசுர மெடுத்துச் சொன்னான்.

(இ-ள்.) இசைபொருந்திய வேத செல்வத்தினையுடைய அவ்வந்தணன் விரைவாகச்சென்று கழனிகள்சூழ்ந்த சீகாழித்தலைவராகிய சம்பந்தப்பெருமானை வணங்கி

தலைரோமங்களைப் பறித்தலினாலே புண்பட்டுத்திரிகின்ற இழிஞராகிய சைநருடைய பொய்யான அந்தகாரத்தைக்கடந்த அரசியாரும் அமைச்சனாருமாகிய இருவரும் எழுதித் தம்மிடத்திற்கொடுத்துள்ள அவரபிப்பிராயம்பொருந்திய ஓலையைக்காட்டி அதிலெழுதியிருந்த பாசுரத்தைப் படித்துக் கூறினன்.—எ-று.

இசைகளெல்லாம் வேதங்களினின்றுமே தோன்றினமையானும் இசையினையுடையதாதலானும் வேதத்தைப் பண்படுவேதம் என்றார். (உஎ)

வெங்குரு வேந்த ரடிபணிந் தடியேன் குலச்சிறை விளம்புவி ண்ணப்ப
மிங்கெழுந் தருளிச் சமணிரு ளொதுக்கி யெம்மிறை மகற்குநீ றளித்துப்
பொங்கிரும் பணைசூழ் தென்றமிழ் நாட்டைப் பூதிசா தனவழி நிறுத்தி
யெங்களைக் காக்க வென்றபா சுரங்கேட் டெழுந்தனர் கவுணியர்க் கிறைவர்.

(இ-ள்.) வெங்குரு வேந்தருடைய பாதங்களை வணங்கி அடியேன் குலச்சிறை சொல்லிக்கொள்ளுகிற விண்ணப்பம் என்னவெனின், தாங்கள் இவ்விடத்திலெழுந்தருளி இங்குள்ள சைநாந்தகாரத்தை யகற்றி எமது மன்னவனுக்கு விபூதி கொடுத்து மிகுதியான பெரிய கழனிகள்சூழ்ந்த தென் தமிழ்நாட்டினை பூதிசாதன வழியிலே நிறுத்தி எங்களைக் காக்கவேண்டுமென்று எழுதி இருந்த பாசுரத்தைக்கேட்டு அப்பொழுதே கவுணியகோத்திரத்தார்க் கிறைவராகிய ஞானசம்பந்தப்பெருமான் மதுரையைக் குறித்துப் பிரயாணமாயினர்.—எ-று.

தென்றமிழ்நாடு, தெற்கின்கணுள்ள தமிழ்நாடு. வெங்குரு - சீகாழி.

ஞானசம்பந்தப்பெருமான் பரப்பிரயோசனங்கருதி திருவவதரித்தவராதலால் ஆலோசனை இன்றி எழுந்தனரென்றுணர்க. கவுணியர், கவுணியகோத்திரத்திற் பிறந்தவர்கள். (உஅ)

ஆதகா திதுவென் றேதுவார் நாவுக் கரையர்நீர் சிறியவ ரவரோ
பாதக மஞ்சார் தம்மொடும் பன்னாட் பழகிய வெனையவர் செய்த
வேதனை யளந்து கூறுவ தென்னை விடுகதில் லம்மவோ வுமக்கிப்
போதுநாள் கோள்கள் வலியில வென்னப் புகலியர் வேந்தரும் புகல்வார்.

(இ-ள்.) இப்பொழுது பாண்டிநாட்டிற் கேகுதல் ஐயோ கூடாது. அது ஏனெனில், நீர் குழந்தைப்பருவமுடையீர் அவர்களோ வயோதிகர்களானவர்கள். அன்றியும், பாதகஞ்செய்தற்கஞ்சாத வவர்களோடு பலகாலம்பழகிய வென்னை அவர்கள்செய்ததுன்பத்தை அளவிட்டுக்கூறுவதெப்படி? ஆதலால், இப்பொழுதுபோதலை விட்டுவிடவேண்டும். உமக்கு இப்பொழுது கிரகபலமில்லை என்று திருநாவுக்கரசுபெருமான்கூறினர். உடனே அவரைப்பார்த்து புகலிக்கிறைவரான ஞானசம்பந்தப்பெருமான் திருவாய்மலர்ந்தருளுகின்றனர். எ-று.

வாகீசர் என்னும் வடமொழியை தென்மொழியில் நாவுக்கரசு என்று மாற்றப்பட்டிருக்கின்றது. (உகூ)

எந்தையெம் பெருமா னருளிலார் போல வின்னண மிசைப்பதெ னவர்செய்
வெந்தவே தனையி னுய்ந்தநீர் நாள்கோள் விலங்குபுள் ளவுணர்பேய் பூத
மந்தமில் பலவு மம்மையே யேப்ப னணைபா னடப்பன வவர்நஞ்
சிந்தையே கோயில் கொண்டிவீற் றிருப்பத் தீங்கிழை யாவென வெழுந்தார்.

(இ-ள்.) எந்தையுமெம்பிரானுமாகவுள்ள இறைவன்திருவருளை இல்லாதவர்களைப்போல அச்சைநர்களால் செய்யப்பட்ட வெந்தவேதனையினின்றும் தப்பித்துக்கொண்டநீர் இவ்வாறேன் இசைத்தல்வேண்டும், நாளும் கோளும் விலங்கும் புள்ளும் அவு

ணரும் பேயும் பூதமும் அள்வற்றனவாகிய மற்றைய பலவும் அம்மையும் அப்பனுமாக வுள்ள விறைவன் கட்டளையினாலே நடக்கின்றன, அவ்விறைவர் நமது மனதையே ஆலயமாகக்கொண்டெழுந்தருளி இருக்கவும், அவைகள் நம்மிடத்து தீக்காரியங்களை இயற்றா என்று திருக்கோளறுபதிகம் இசைத்தெழுந்தனர். எ-று.

இவ்வாறே திருத்தொண்டர்புராணத்தும்

"அருளிச்செய்கின்றார்பிள்ளாயந்தவமண்வஞ்சனைக்கோரவதியில்லை யுரைசெய்வதுளதாறுகோடானுந்தீயதெழுந்தருளவுடன்படவெதொண்ணுதென்னப் பரசுவதுநம்பெருமான்கழல்களென்றாற்படிறணையாதெனப்பகர்ந்துபரமர்செய்ய விரைசெய்மலர்த்தாள்போற்றிப் புகலிவேந்தர் வேயுறுதோளியையெடுத்து விளம்பினா ரே." என்று வருதல்காண்க.

ஸ்ரீஞானசம்பந்தப்பெருமாற்கு இறைவனாவான் பாரமார்த்திகத்தில் தந்தையும் வியவகாரிகத்திறைவனும் ஆக இருத்தலுண்மையாதலால்அவரும் இறந்தகாலவழக்குப்பற்றி எந்தையென்றும், நிகழ்காலவழக்குப்பற்றி எம்பெருமான் என்றும் கூறினாரென்றுணர்க.

இறைவனருளில்லாதார்க் கெய்தும்மிக்கணுளவே லதனையவரே யாற்றுதல்வேண்டும், இறைவனருள்பெற்றாரிடத்துத் துன்பெய்துமேலதனை அவராற்றகில்லர்,அவ்விறைவனே ஆற்றுவான் என்னுந்துணிவிற்கு மாறாகக்கூறல் நீறிடாதார் நியமமன்றி நீறிட்டார் நியமமன்றென்றும்; நீறிட்டாரிலும் திருவருட்குரியார் கூற்றன்றென்றும், திருவருட்குரியாரிலும் திருவருட்சாத்தியர் கூற்றன்றென்றும், சாத்தியராகிய நீரிவ்வாறிசைத்த தமைவுடைத்தன்றென்றும், குறிப்பிப்பான் "அருளிலார்போல" என்றார்.

திருநாவுக்கரசுபெருமான் பூர்வத்தில் சைநராகவிருந்து சூலையின் காரணத்தாற்சைவராகி, திருவேடந்தாங்கிய ஞான்று சைநர்கள் பொறாமையால் தங்களினத்தை அக்கால் நம்பியிருந்த பல்லவர்குல மன்னவனைக்கொண்டு விடம் வேழம் நீற்றறைகல்யாப்புடன் கடற்போக்குமுதலிய கடுந்தண்டங்களைச் செய்வித்தலும் அவைகளினின்றெல்லாம்தப்பிப்பிழைத்துத் தற்காலம் நம்முடனெழுந்தருளி இருப்பவராதலால் சிவனடியார்களுக்குத் தீங்கெய்தாதென்றும் அவ்வாறெய்தாமைக்குச் சான்றாகவுள்ளவர் நீரோ என்றும் விளக்குவான் "வெந்தவேதனையினுய்ந்தநீரின்னணமிசைப்பதென்" என்றார்.

கரதலாமலகம்போல இறைவன் கருணையைக்கண்ட விவரவ்வாறு தடுத்தது முழுவிபரீதமாதலால் இதென்னோவியப்பென்பான். "என்" என்றார்.

இறைவனருளுடையார்க் கெத்துன்பு மெய்தாதெனக் காட்டற்கவைகள் இயக்காலியங்குவன, இயக்குபவன் எம்முள்ளிலிருக்கும் இறைவன் நியந்தாவையே நாம் அகத்துளமைத்திருக்கின்றோம் துன்புறுத்துவன எவ்வாறுதுன்புறுத்து முறுத்தாதென் பான். "தீங்கிழையாது" என்றான் என்றார்.

கோழிக்கொடியருங் காழிப்பதியருமான நங்கருணைவள்ளல் அவைகளிழையா வென்றது வேதயாப்பா லென்றறிக.

## இறைவனைத்தம்முளத்துக்கொண்டார் மாட்டேத்தீங்கு மியலாவென்ற திருக்கோளறு பதிகம்.

பண் – பியந்தைக்காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

"வேயுறுதோளிபங்கன்விடமுண்டகண்டன்மிகநல்லவீணைதடவி
மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுள்மேபுகுந்தவதனா
ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே
யாசறுநல்லநல்லவவைநல்லநல்லவடியாரவர்க்குமிகவே" என்பனவாதியாக,

"தேனமர்பொழில்கொளாலைவிளைசெந்நறுன்னிவளர்செம்பொன்னெங்குநிகழ
நான்முனோதியாயபிரமாபுரத்துமறைஞானஞானமுனிவன்
றானுறுகோளுநாளுமடியாரைவந்துநலியாதவண்ணமுரைசெய்
யானசொன்னமாலையோதுமடியார்கள்வானிலரசாள்வராணைநமதே" என்பதிறுதி
யாகவுள்ள பாசுரங்களாலுணர்க. திருச்சிற்றம்பலம். (௬௦)

மாமுர சொலிப்பச் சங்கங் காகளம் வாய்விட் டேங்கச்
சாமரை பனிப்ப முத்தின் பந்தரிற் றரளத் தெய்வக்
காமரு சிவிகை மேற்கொண் டமணிருள் கழுவுஞ் சோதி
யாமென நெறிக்கொண் டீச னிடந்தொறு மடைந்து பாடி.

(இ-ள்.) பெரியமுரசுகள் முழங்கவும் சங்கங்களும் சின்னங்களும் வாய்விட்டு முழங்கவும் சாமரைகளசையவும் முத்துப்பந்தரின்கீழ் ஆணிமுத்துக்களாலாகிய தெய்வீகமான அழகுபொருந்திய பல்லக்கிலெழுந்தருளிச் சமணமென்னும் இருட்டினை ஒழிக்கின்ற சூரியனே என்றுகூறுமாறு பிரயாணமாகி வழியிலுள்ள சிவதலங்களிலெல்லாஞ் சென்றிறைவனை வணங்கித் திருப்பதிகம்பாடித்துதித்து.—எ-று.

"தெண்டிரைசூழ்கடற்கானற்றிருவகத்தியான்பள்ளி
யண்டர்பிரான்கழல்வணங்கியருந்தமிழ்மாமறையாடிக்
கொண்டல்பயின்மணற்கோடுசூழ்கோடிக்குழகர்தமைத்
தொண்டருடன்றொழுதணைந்தார்தோணிபுரத்தோன்றலார்" என்றும்.
"கண்ணார்ந்ததிருநுதலார்மகிழ்ந்தகடிக்குளமிறைஞ்சி
யெண்ணார்ந்ததிருவிடும்பாவனமேத்தியெழுந்தருளி
மண்ணார்ந்தபதிபிறவுமகிழ்தருமன்பால்வணங்கிப்
பண்ணார்ந்ததமிழ்பாடிப்பரவியேசெல்கின்றார்" என்றும்.
"திருவுசாதனத்துத்தேவர்பிரான்கழல்பணிந்து
மருவியசெந்தமிழ்ப்பதிகமால்போற்றும்படிபாடி
யிருவினையும்பற்றறுப்பாரெண்ணிறந்ததொண்டருடன்
பெருகுவிருப்பினராகிபிறபதியும்பணிந்தணைவார்" என்றுந்திருத்தொண்டர் புராணத்திலிருத்தலால், பரசமயகோளரியார் திருமறைக்காட்டினின்றும், திருவகத்தியான் பள்ளியினுட்சென்று இறைவரைவணங்கி திருப்பதிகமோதித்துதித்து அங்குநின்று திருகோடிக்காவுக்கெழுந்தருளி இறைவனை வணங்கி அவ்விடத்தினின்றுந் திருக்கடிகுளமடைந்து வணங்கி இடும்பாவனத்திலெய்தி இறைவனை வணங்கித்துதித்தவராகவெழுந்தருளினர் என்றுணர்க. (௬௧)

செம்பிய னாடு நீந்தித் தென்னவ னாடு நண்ணி
வெம்பிய சுரமு முல்லைப் புறவமு மேக வில்லைத்
தும்பிகை நீட்டி வாங்கு மலைகளுந் துறந்து பாகத்
தம்பிகை யுடையான் கூட னகர்ப்புற னணுகச் செல்வார்.

(இ-ள்.) சோழநாட்டைக்கடந்து பாண்டியனாட்டையடைந்து சுடுகின்ற பாலைவனங்களையும் முல்லைக் கொடிகளையுடைய முல்லை நிலங்களையும் பின்னாகச்செய்து தேனடைகளை யானைகள் தும்பிக்கையை நீட்டி எடுக்கின்ற மலைகளையுங் கடந்து ஒருபுறத்தி லுமாதேவியாரையுடைய இறைவனெழுந்தருளி இருக்கின்ற மதுரையின் புறநகரத்திற்குச் சமீபமாகச் சென்றனர். எ-று

கள்ளியுமுள்ளியுமடர்ந்துகிடக்குங் கன்முரம்பே பாலையாதலாலதனை "வெம்பியசுரம்" என்றார். முல்லை யந்நிலத்து மலராதலா லொருங்குகூறினர். குறிஞ்சிக் கருப்பொருளில் யானையுமாதலால் குறிஞ்சியொடு யானையையுமுடன்கூறினர். (௬௨)

புண்ணிய நீற்றுத் தொண்டர் குழாத்தினுட் புகலி வேந்தர்
நண்ணிய சிவிகை மீது நகைவிடு தாளப் பந்தர்
கண்ணிய ரேற்றந் தீம்பாற் கடல்வயி றுதித்துத் தீர்ந்து
விண்ணியன் முழுவெண் டிங்கள் விளக்கமே பொத்த தன்றே.

(இ-ள்.) புண்ணியரூபமான விபூதியணிந்த வடியவர்களினடுவிற் காழித்தலைவர் பொருந்திய யானத்தின்மீது ஒளிவிடாநின்ற முத்துப்பந்தர் காணப்படுங் காட்சி இனிய பாற்கடலிற்பிறந்து மேலெழுந்து வானத்திலுலவாநின்ற பூரண சந்திரனுடைய பிரகாசத்தையே யொத்தது. எ-று.

மேற்கட்டியை மதியமாகக்கருதியவற்குப் பாற்கடல்டியவர்களின் திருநீற்று ஒளியும் தாள யானமுமாக நின்றது என்றுணர்க. யானம் - பல்லக்கு. மேற்கட்டி - மேல்விதானம். (ருரு)

தேம்படு குமுதச் செவ்வாய்ச் சிரபுரச் செல்வர் முன்னம்
போம்பரி சனத்தர் தம்மிற் பொன்னெடுஞ் சின்ன மார்ப்போர்
தாம்பர சமய சிங்கஞ் சமணிருள் கிழியப் பானு
வாம்படி வந்தா னென்றென் றூர்த்தெழு மோசை கேளா.

(இ-ள்.) தேனினையுடைய செவ்வல்லிமலர்போன்ற வாயினையுடைய சீகாழித்தலைவனெதிரில் செல்லாநின்ற பரிசனங்களுள் அழகிய நெடிய திருச்சின்னமூதுபவர்கள் பரசமயகோளரி சமணிருளானது கழியவந்த சூரியனென்று கூறுமாறு வந்தனனென்று ஊதிச்செல்லுகின்ற ஓசையைக்கேட்டு. எ-று.

ஊதுவார் வாயினின்றும் இறைவனருளா லவ்வோசை பரசமயகோளரிவந்தான் என விளங்குவதேயன்றிச் சொல்லியூதுவதல்லவென்க.

"பரசைவயக்கடகளிற்றுப்பூழியர்வண்டமிழ்நாட்டுத்
தரைசெய்தவப்பயன்விளங்கச்சைவநெறிதழைத்தோங்க
வுரைசெய்திருப்பேர்பலவுமூதுமணிச்சின்னமெலாம்
பரசமயகோளரிவந்தானென்றுமணிமாற." என்று திருத்தொண்டர்புராணத்தும் வருதல்காண்க. (ருசு)

நின்றுண்டு திரியுங் கைய ரெதிர்வந்து நீவிர் நுங்கள்
கொன்றறஞ் சொன்ன தேவைக் கும்பிட வந்தா லிந்த
வென்றிகொள் சின்ன மென்கோல் வீறென் கொல் யாரை வென்றீ
ரென்றனர் தடுத்தா ரென்று மீறிலா னடியார் தம்மை.

(இ-ள்.) நின்றுண்டு திரிகின்ற கையராகிய சமணர்கள் எதிரேவந்து நீங்கள் கொன்றறங்கூறிய வுங்கள் இறைவனைத்தொழுமாறுவந்தால் இந்த வெற்றிபொருந்திய சின்னமேன், இவ்வளவிறுமாப்பென்னையோ, நீவிர் யாரைவென்றீர்கள்? என்று கூறிக்கொண்டு அழிவற்றவிறைவரின் அடியவர்களைத் தடைசெய்தார்கள். எ-று.

நின்றுண்டுதிரியுங் கையரென்ற தீண்டு சமணரில் நீகண்டவாதிகளை, இவர்கள் பாயுடையும் உறிதூங்குகரமும் பீலியார்தோளு முடையராயுலாவுபவர்கள், இவர்களனைவர்களும் துறவிகளேயாம்.

இவர்களுண்ணவெண்ணுங்கால் இருகரங்களையும் ஒன்றுபடுத்தி விரல்களொடு விரல்களைப் பின்னிக்கொண்டு நின்றருந்துவார்கள். உண்ணும்பொழுதுரையுமாடார்கள்.

இதனை, "ஒருவடிவின்றி நின்றுண்குண்டர் முன்மைக்குண்டுகொலோ
செருவடிவெஞ்சிலைபாற்புரமட்டவன்சென்றடையாத்

திருவுடையார்திருமூலட்டானன்செங்கட்
பொருவிடையானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.''
என்று திராவிடவேதத்து வருதலாலுணர்க. கையர் – சண்டாளர்.

இச்சமணத்துறவினர் நின்றுண்டலாதி செய்கைகளை மாத்திரம் உடையவர்களே அன்றி வேறொன்றும் இல்லாதவர்களென்றும் தம்மதவொழுக்கத்தையும் விட்டவர்கள் என்றும், பிறமதநூல்களை ஆராயுமாற்றலில்லாதார்களென்றும் குறிப்பிக்கவும், சாப்பாட்டுராமர்களே யன்றி வேறொன்றுமறியா தவர்களென்றுணர்த்தவும் "நின்றுண்டுதிரியுங்கையர்'' என்றார்.

தங்கள் இறைவன் கொல்லாதறங்கூறினவனென்றும் மற்றையோர் யாரும் அவ்வாறு கூறிற்றிலர் என்றும் எண்ணும் அபிமதமுடையாராதலால் சிவனடியவர்களைப்பார்த்து "உங்கள்கொன்றறஞ்சொன்னதேவை'' என்றார்கள்.

"பசித்தருகபயசெற்றமோடுவகைமோகசிந்தனைபழித்தனேய்
நசித்தல்வேர்வினொடுகேதமோடுமதம்வேண்டலீண்டதிசயித்தலும்
புசிப்புவந்திடுபிறப்புறக்கமவைவிட்டொரட்டகுணபூதனுய்
வசித்தவன்னுலகின்மேலிருந்தொருசொலிகலனுக்கருளுமென்றனன்.'' என்று அவர்களினிறைவ னிலக்கணத்தைக்கூறி யிருத்தலைக்கொண்டவர்கள் மற்றையனைக் கொன்றறஞ்சொன்ன தேவைப் பணிபவரொன்றிகழ்வது வழக்கமென்றுணர்க.

தேவகுலம் வழிபடச்செல்லு ஞான்றித்தகைய விருதுகளேன்வேண்டும் அன்றியும் வென்றாரன்றோ வெற்றிச்சின்னம் ஊதுவித்துக்கொள்ளவேண்டுவர். இந்நகரிலுள்ள எங்களையன்றியும் பிறநகரங்களிலும் எம்மதத்தினர்களையும் பிறநாடுகளிலும் எம்மதத்தினரையும் நீங்கள் வென்றதாக நாங்கள் யாருங் கூறக்கேட்டிலோம். ஆதலால் இந்நாட்டிலிவ்விடத்திருக்கும் எங்களெதிரே பரசமயகோளரிவந்தான் என்பது அடாது. இந்தவினை இடம்பத்தாற் பயனென்னை. அவ்வாறூதிக்கொள்ள வேண்டுமென்னும் அவாவிருந்தா லெங்களை வென்றபின்ன ரூதுங்கள் என்றார்களென்று தொனியாற் பொருள்படுதல்காண்க.

பிறந்திறந்துழலும் பசுவான அருகனைத்தேவாகக்கொண்டவர்கள் அவர்களென்றுதொனிக்குமாறும், சிவபெருமான் பிறத்தலும் இறத்தலுமாதிய பசுக்குணமொன்றுமில்லாத பதியென்று விளங்கும்வண்ணமும் "ஈறிலானடியார்தம்மை'' என்றனர். (௫௫)

மாமத மொழுகச் செல்லுந் திண்டிறன் மத்த வேழந்
தாமரை நூலாற் கட்டத் தடைபட வற்றோ கொற்றக்
காமனை முனிந்தார் மைந்தர் கயவர்தந் தடையை நீத்துக்
கோமணி மாட மூதூ ரடைந்தரன் கோயில் புக்கார்.

(இ-ள்.) மிகுதியான மதநீரொழுகுமாறு செல்லுகின்ற மிக்க வன்மையினையுடைய மதித்த யானையானது தாமரை நூலினாற் கட்டினால் தடைபட்டு நிற்கக்கூடியதோ? அதைப்போல பிறரைவென்ற மன்மதனை அழித்தவராகவுள்ள சிவபெருமானுடைய திருப்புதல்வராகிய ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான் அவ்விழிஞர்களின் தடையை லட்சியம் செய்யாமல் தடையைக்கடந்து சிறந்த மணிமயமான மாடங்களையுடைய புராதன நகரமாகிய மதுரைக்குட்சென்று சிவபெருமான் திருக்கோயிலை யடைந்தனர்.

சரவணோற்பவரான ஞானசம்பந்தப்பெருமானுடைய ஞானவைராக்கியாதி குணங்களை யானையாகவும் சமணர்களின் விபரீத வாதத்தை தாமரை நூலாகவும் குறித்தார் என்றுணர்க.

யானையிற் பெண்ணானை குட்டியானை யாதிகளைக் கட்டுதற்கே தாமரை நூலாகாதபோது மதயானையிலும் மிகுதியான மதமொழுகுவதுடன் மகத்தான வன்மை

யினையும் வன்மையுடன் மதித்த தன்மையுமுடைய ஆண்யானையை எந்த நூலாலும் கட்டவியலாது கட்டினாலும் அது நில்லாது அது தான் குறித்த இடத்திற்கேசெல்லும் என்பது பிரசித்தம்.

ஞானசம்பந்தப்பெருமானும் சிவசந்நிதியையே நாடிச்செல்பவராதலால் அவரும் இடையிற்றடைப்பட்டு நில்லார் என்பது கருத்து. அன்றியும், ஏனைய அடியவர்களுடனும் வாதத்தி லச்சைநர் நிலைபெற்று நில்லாரென்பதுங்கருத்து.

ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான் சரவணபவனே என்று குறிப்பிக்க ஈண்டும் "காமனைமுனிந்தார் மைந்தர்" என்றார்.

கைம்மலைச் சாபந் தீர்த்த கருணையங் கடலைத் தாழ்ந்து
மும்முறை வளைந்து ஞான முகிழ்முலைப் பாலி னோடு
செம்மணி வள்ளத் தீந்த திருவொடுந் தொழுதா னந்த
மெய்மய வெள்ளத் தாழ்ந்து நின்றனர் வேதச் செல்வர்.

(இ-ள்.) கையினையுடைய மலையாகிய வெள்ளையானையின் சாபத்தையகற்றிய கிருபைக்கடலைவணங்கி மூன்றுதரம்பிரதக்ஷணஞ்செய்து ஞானமிர்தத்தைக்குவிந்ததனபாரத்திலுள்ள பாலினுடன் செவ்வியமணிகளிட்டிழைத்த கிண்ணத்திலளித்தருளிய உமாபிராட்டியாருடன் வணங்கி வேதச்செல்வராகிய ஞானசம்பந்தப்பெருமான் உண்மையான ஆனந்தவெள்ளத்துண் முழுகிநின்றனர்.—எ-று. (கூஎ)

மறைவழி நின்று நின்னை வந்திசெய் துய்ய மாட்டா
நிறைவழி வஞ்ச நெஞ்சச் சமணரை நெறிக ளெல்லாஞ்
சிறைபட வாது செய்யத் திருவுளஞ் செய்தி கூற்றைக்
குறைபட வுதைத்தோ யென்று குறித்துரை பதிகம் பாடி.

(இ-ள்.) வேதவாயிலே வாயிலாகக்கொண்டு உன்னைவணங்கித்துதிக்க மாட்டாத மாசுநிறையற்ற வஞ்சகநெஞ்சத்தினையுடைய சமணர்களுடைய மார்க்கங்களெல்லாம் செல்லவொட்டாமறறடிக்க வாதுசெய்யுமாறு திருவுளஞ்செய்வாயாக எமனழியுமாறு உதைத்தருளியபெருமானேஎன்று குறித்துக்கூறுநின்ற திருப்பதிகம்பாடியருளி.

இதுமுதலிரண்டுபாடல் குளகம்.

சைநர் அவைதிக மார்க்கமான புறப்புறச்சமயத்தினராதலால் அவர்கள் தூய்மையை எள்ளளவும் அடையா என்பதைக்கருதி அவர்கள் மனத்தையிகழ்ந்து "நிறைவழிநெஞ்சம்" என்றார்.

சொல்லுவதொன்றும் செய்வதொன்று மாகவுள்ளவர்களாதலால் வஞ்சரென்றார்.

அவர்கள் தம்மட்டோடிராமல் வைதிகம் பரவியிருந்த உலகிலுள்ளவர்களையும் மயக்கித்தம்வழித்தாக்கியிருத்தலை அறுண்முகத்தானொழித்துப் பின்னரவர்களையும் சைவர்களாக்கினாலொழிய வைதீகர்கள் உயர்வடையார்கள். ஆதலால் நின்னருளைக்கொண்டே வாதுசெய்யக்கருதுகின்றேன், என்று பரதந்திரங்காட்டினரென்றுணர்க.

நீ முன்னாளிலுங் குற்றஞ்செய்தவனைத் தண்டித்திருக்கின்றனை, என்று குறிப்பித்தாரென்பான் "கூற்றைக்குறை படவுதைத்தோய்" என்றார்.

## வாதுசெய்ய விரும்பி வரங்கிடந்த திருப்பதிகம்.

பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காட்டுமாவதுரித்துரிபோர்த்துட
லாட்டமூன்றுடையாயுரைசெய்வன்
வேட்டுவேள்விசெய்யாவமண்கையரை
ஓட்டிவாதுசெயத்திருவுள்ளமே. (க)

மத்தயானையினீருரிமூடிய
வத்தனேயணியாலவாயாய்பணி
பொய்த்தவன்றவவேடத்தராஞ்சமண்
சித்தரையழிக்கத்திருவுள்ளமே. (௨)

மண்ணகத்திலும்வானிலுமெங்குமாந்
திண்ணகத்திருவாலவாயாயருள்
பெண்ணகத்தெழிற்சாக்கியப்பேயமண்
டெண்ணர்கற்பழிக்கத்திருவுள்ளமே. (௩)

ஓதியோத்தறியாவமணாதரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
யாதியேதிருவாலவாயண்ணலே
நீதியாகநினைந்தருள்செய்திடே. (௪)

வையமார்புகழாயடியார்தொழுஞ்
செய்கையார்திருவாலவாயாய்செப்பாய்
கையிலுண்டுழலுமமண்கையரைப்
பையவாதுசெயத்திருவுள்ளமே. (௫)

நாறுசேர்வயற்றண்டலைமிண்டிய
தேறலார்திருவாலவாயாய்செப்பாய்
வீறிலாத்துட்டராமமண்வேடரைச்
சீறிவாதுசெயத்திருவுள்ளமே. (௬)

பண்டடித்தவத்தார்பயில்வாற்றெழுந்
தொண்டருக்கெளியாய்திருவாலவாய்
யண்டனேயமண்கையரைவாதினில்
செண்டடித்துளறத்திருவுள்ளமே. (௭)

அரக்கன்கிரியேற்றவன்றன்முடிச்
செருக்கினைத்தவிர்த்தாய்திருவாலவாய்ப்
பரக்குமாண்புடையாயமண்பாவரைக்
கரக்கவாதுசெயத்திருவுள்ளமே. (௮)

மாலுநான்முகனுமறியாநெறி
யாலவாயுறையுமண்ணலேபணி
மேலைவீடுணராவெற்றரையரைச்
சாலவாதுசெயத்திருவுள்ளமே. (௯)

கழிக்கரைப்படுமீன்கவர்வாரம
ணழிப்பரையழிக்கத்திருவுள்ளமே
செழிக்கும்பூம்புனல்சூழ்திருவாலவாய்
மழுப்படையுடைமைந்தனேநல்கிடே. (௧௦)

செந்தெனமுரலுந்திருவாலவாய்
மைந்தனேயென்றுவல்லமணசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம்
பந்தன்சொற்பகரும்பழிநீங்கவே. (௧௧)

திருச்சிற்றம்பலம். (௩௮)

வேண்டுகோண் டருளைப் பெற்று மீளுமப் போது கண்டு
மூண்டவைம் பொறியும் வென்ற வாகீச முனிக ளென்ன
வாண்டுளா ரொருவர் வேண்ட வவர்திரு மடத்தி லன்பு
பூண்டெழு காத லோடும் போயினார் புகலி வேந்தர்.

(இ-ள்.) இறைவனைவேண்டிக் கோடல்செய்து திருவருளைப்பெற்றுத் திரும்பி யெழுந்தருளிவருகின்ற சமயத்தில் அம்மதுராநகரத்தில் வசிப்பவரும், ஒன்றோடொன்று நெருங்கிநின்று விடயங்களை யநுபவிக்கின்ற பஞ்சேந்திரியங்களை ஜயித்தவருமான வாகீசமுனிகளைப்போல இருக்கின்ற ஒருவர் கண்டு வேண்டிக்கொண்டமையால் அவருடைய திருமடத்தில் அன்புபொருந்திய விருப்பத்துடன் சீகாழித்தலைவராகிய சம்பந்தப்பெருமான் பிரவேசித்தனர். எ-று.

நம்புகலிவேந்தர் ஏனையரைப்போலவன்றி மதுரையிறைவனுகிய அழலவிர்சடையாதியெம்பெருமானுக்கு பாரமார்த்தசுதனுதலால் அவர் வேண்டுகோளுக்கு விடையளித்தல் உடனுக்குடனுதல்பற்றியும் பரநலங்கருதியே அவரது வேண்டுகோடனின்றமையாலும் வனிதேசுவரியும் குலபந்துவுமாகிய அரசி அமைச்சன் என்னும் ஸத்பக்தர்களின் அபீஷ்டஸித்தியின்பொருட்டாதலானும் இறைவன் தடையின்றி யருள்செய்திருப்பாரென்னும் துணிவுபற்றி இலேசானே வேண்டுகொண்டருளைப் பெற்றரென்றார்.

வாகீசவடிகள் சினமதத்தரின் போலிக்கொள்கைகளி லீடுபட்டு முற்றும் அவைகள் அவலக்கொள்கைகளென அநுபவயுக்தமாக உணர்ந்தவராதலானும் யானையின்காலிலிடறல் நீற்றறையிலடைத்தல் விஷான்னமருத்தல் சிலாபந்தனஞ்செய்து சமுத்திரபதனஞ்செய்தல் முதலிய துன்பங்களெல்லாம் அவர்களியற்றியவை தங்கண்மதத்தினின்றும் அன்னியமதப்பிரவேசத்தைச் செய்ததனுலுண்டான கோபத்தால் செய்கின்றார்கள் என்று கருதியேனும் தாம் அப்புறமதத்தை அவலம்பியாது திரஸ்கரித்தவராதலால் வெகுகஷ்டங்களுண்டானபோதும் தமது அவலம்பமதத்தை கைவிடாது நின்றவராதலால் மதுரையிலுள்ள வாகீசவடிகளுக்கு நந்திருநாவுக்கரசுபெருமான் உவமையாயினார். ஏற்றுலென்னில் மதுராபுரியிலுள்ள அனைவரும் சமணரின் துர்ப்போதனைக்குள் சிக்கி சிவபத்தியை திரஸ்கரித்தவர்களானார்கள். யாவரும் சமணர்களாகவிருக்கின்ற மகாநகரத்தின் மன்னவனும் க்ஷமணமதத்தனுகவே யிருக்கின்றான். இவ்வகைய நிகழ்ச்சிகளையுடைய அக்காலத்தில் இவரொருவர் கபித்தவனத்தினின்ற கூவிளத்தைப்போல் அருமையானவராக வைதீகசைவசித்தாந்தியாய் இந்திரிய நிக்ரகராயிருந்தமையால் இவர் அவ்வாகீசவடிகளுக்குபமேயப்பொருளாகினர் என்று குறிப்பிப்பான் "மூண்டவைம்பொறிவென்ற வாகீசவடிகளென்ன" வென்றார் என்பதாம்.

இதனை வேறொருவிதமாகவுங் கூறுவர் அதாவது வருமாறு:—

சீகாழிவள்ளலார் இறைவனைப் பிரார்த்தித்துத் திருவருளைப் பெற்றுத்திரும்பி வருகின்ற சமயத்தில், நெருங்கிய பஞ்சேந்திரியங்களை வென்ற வாகீசமுனியென்று பேருள்ளவரும் அம்மதுரா நகரத்தில் வசிப்பவருமாகிய ஒருவர் இவரைத் தரிசித்து "அடியேன்மடத்திற் கெழுந்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தலும் அவரிடத்திற் பொருந்திய விருப்பத்துடன் அவர் மடத்திற்குப் போகவேண்டுமென்னும் பிரியத்துடன் புகலித்தலைவர் எழுந்தருளினர். எ-று.

இதனல் க்ஷபணர்களுடைய அதிகாரம் நிலைறந்தகாலத்திலும் வைதீகசைவத்துறவினர் எதற்கு மஞ்சாதவர்களாய் சிற்சிலவிடங்களிலிருந்தாரெனப்பெறப்படுகின்றது.

வடமொழித்திருவிளையாடலிலும்.

வாகீஶஇதிகச்ஶித்வைஶிவயோகீமஹாதபா:
ஶ்ரீருத்ராக்ஷதாரீஸன்ஶிவலிங்கார்ச்சகோநிஶம் ॥

வாகீசஇதிகச்சித்வைசிவயோகீமஹாதபா:
பூதிருத்ரர்க்ஷதாரீஸன்சிவலிங்கார்ச்சகோநிசம்-என்றிருத்தலாலறிக. (௯௧)

அங்கெழுந் தருளி யெல்லி னமுதுசெய் திருப்ப வற்றைக்
கங்குல்வா யமணர் செய்யுங் கருதருஞ் செயலுந் தங்கண்
மங்கல மரபின் வந்தாள் வருத்தமுங் காண வஞ்சிச்
செங்கதி ரவன்போய் மேலைச் செழுங்கடல் வெள்ளத் தாழ்ந்தான்.

(இ-ள்.) அவ்வாகீசமுனிவரின் திருமடத்திற்சென்று இரவிற்றிருவமுதருந்தியிருத்தலும் இருள்பொருந்திய க்ஷமணர்களாலே செய்யப்படுகின்ற நினைத்தற்கரிய செய்கையினையும் தமது மங்கலகரமான வம்சத்திற் பிறந்தவளது துன்பத்தையும் பார்த்தற்கஞ்சினவனாய் செவ்விய கிரணங்களையுடைய சூரியனானவன் சென்று மேற்றிசையிலுள்ள கடலின் மூழ்கினான். எ-று.

பதினாறாயிரந்திருவடியவர்களுடன் எழுந்தருளி வந்தவராகவுள்ள ஞானசம்பந்தப்பெருந்தகையார்க்கு விருந்தூட்டுவதற்கு மடத்தில் வசிக்கும் ஒரு முனிவராலியலுமோவென்னும் ஆசங்கையிந்த சந்தர்ப்பத்தில் பலர்க்கும் நிகழலாம். அதனை நான்முகத்தாற் பரிகரிப்பாம். ஸ்காந்தமகாபுராணத்திலுள்ள அகஸ்தியஸம்ஹிதையில் அறுபத்தெட்டாவது அத்தியாயத்தில் எழுபத்தேழாவது சுலோகமுதல் எண்பத்துநாலாவது சுலோகம் வரைக்கும் "ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான், சோமசுந்தரப் பெருமானை வணங்கி மீண்டு வரும்வழியில் குலச்சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் கண்டு துதித்ததாகவும் பின்னோ வாகீசமுனிவர் தம்மடத்திற்கு வருமாறு வேண்டிக்கொண்டதாகவும் அவர் திருமடத்திற்கு எழுந்தருளியதாகவும் இவரதும் இவருடன்வந்த அடியவர்களதும் பசிமுதலியவைகளை யகற்றற்கேற்ற பால், தயிர், நெய், நல்லபழங்கள் முதலானவைகளை யேராளமாயமைப்பித்து அருத்துவித்ததாகவும்" கேட்கப்படுகின்றமையால் மந்திரியாரும் அரசியாரும் செய்த சகாயத்தால் வாகீசசிவயோகியார் விருந்து நடத்தினரென்றுணர்ந்து நிஸ்ஸந்தேகிகளாவார்களாக. இதனை,

மதுராயாம்மடம்க்ருத்வாதிஷ்டதிஸ்வேநதேஜஸா
வாகீஶேநஸதாப்ரியஞ்சப்ராா்த்திதோபோஜநாயச:
ப்ரயயௌதன்மடம்ஸாகம்ஸர்வேஶ்ஶிஷ்யை: ப்ரதாபவான்
குலபந்தநராஜ்ஞீப்யாம்ஸூபஹாரைரநேகஶ:
தன்மட: பூரித:க்ஷீரதத்யாஜ்யஸூபலாதிபி:
ஸர்வேஸம்பூஜிதாஸ்தேநஶிஷ்யாஷட்ரஸபோஜநை: ॥

மதுராயாம்மடம்க்ருத்வாதிஷ்டதிஸ்வேநதேஜஸா
வாகீசேநசதாப்பியஞ்சப்ரார்த்திதோபோஜனுயச:
ப்ரயயௌதன்மடம்ஸாகம்ஸர்வேஸ்ஸிஷ்யை: ப்ரதாபவான்
குலபந்தனராக்ஞீப்யாமுபஹாரைரனேகஶ:
தன்மட: பூரித:க்ஷீரதத்யாஜ்யஸூபலாதிபி:
ஸர்வேஸம்பூஜிதாஸ்தேநஸிஷ்யாஷட்ரஸபோஜநை:

என்றுகூறுந் திருவாலவாய்மான்மியத்தாலுணர்க.

சூரியன் பௌதிகப்பிரபஞ்சத்திற்குச் சாக்ஷிபூதனாதலாலும் மங்கையர்க்கரசியார் சூரியவம்சத்தரசனாகிய சோழனுடைய புத்திரியாதலாலும் ஸாக்ஷியாக நிற்கும்

ஒருவன் தகாத விடயங்களை யிரக்கமின்றிக்காண்டல் தனது பெருந்தகைமைக் குசித மின்மையாலும் பயந்தானென்பான் "அஞ்சி" என்றார்.

நிரபராதியாய் சிவகுனுவாய் கருணாநிதியாயுள்ள சம்பந்தப்பெருமானைக்குறித்து ஆபிசாரஹோமத்தை ஜைனஸந்நியாஸிகள் இயற்றவுத்தேசித்திருத்தலைபுணர்ந்தும் தாம் அதனைக்கண்டு நின்றால் முன்னம் சத்துருபக்ஷத்தில் சார்ந்து நின்றமையினால் பல்லு டைபட்டதுபோல இங்கும் என்னகேடு சித்திக்குமோ என்று பயந்தானென்பார், "காணவஞ்சிச்செங்கதிரவன்போய் மேலைச்செழுங்கடல்வெள்ளத்தாழ்ந்தான்." என்றார்.

கருதருஞ்செயல்-நினைத்தற்கரிய கொடிய செய்கை. (௪0)

மாறுகொ ளமணர் செய்யும் வஞ்சனைக் கிடனா யொத்து
வேற்ற நட்புச் செய்வான் வந்தென விரிந்த கங்குல்
வீறற முளைத்த வான்மீ னினமவர் பறித்த சென்னி
யூறுபட் டெழுந்த மொக்கு ளொத்தவக் கங்கு லெல்லை.

(இ-ள்.) பகைபொருந்திய அமணர்கள் செய்கின்ற வஞ்சனைகளுக்கிடமாகி அவர்களுடன் ஒன்றாய் நட்புச்செய்யும்பொருட்டு வந்தாற்போல இருள் பரவியது; பின்னர் அவ்விரவினிடத்தில் அளவற்றனவாக வுதித்த நட்சத்திரங்கள் அச்சைநர்கள் தீக்ஷையின்போது பிடுங்கிய தலையிற் காயமாகி அதனாலுண்டான கொப்புளங்களைப்போல விருந்தன. எ-று.

இரவிற்கு அவ்வண்ணம் ஞானசம்பந்தப்பெருமானுதியைப் பகைத்து கோடல் வேண்டும் என்னும் எண்ணமாதிகளொன்றும் இன்றேனும் அன்றிரவி லவ்வகைய காரியங்களை யியற்ற முயலுகின்ற வருகந்தர்க்கிடனாய் நிற்றலின், நேற்றில்லா வியல்புடனின்று ஏகீகமாக நண்புகோடற்கு வந்ததுபோ லிருந்ததென்றுரைத்தனர் என்க.

சைநர் விரத்தராகி முனிவிருத்தியை யடையு மந்நாளில் அவரில் விரத்தனாக நிற்கு மவனன்றியுள்ள புலர், க்ஷபணம் என்னும் சிமிட்டாவினால் ஒவ்வொரு தலைரோமங்களைப்பற்றி நமஸ்து நமஸ்து என்று கூறிப் பிடுங்குவது வழக்கம்; இதனாலவர்கள் தலைகளின் பலபாகங்களிலும் விரணமுண்டாதலுமுண்டு,அவ்விரணங்கள் கொப்புளரூபமாக உதிக்குமென்பதை யுத்தேசித்த வாசிரியர், "அவர்பறித்த சென்னியூறு பட்டெழுந்த மொக்குளொத்தது வான்மீனினம்" என்றார். (௪க)

கலிநிலைத்துறை.

வைதி கத்தினி யிளஞ்சிறு மடங்கலே றடைந்த
செய்தி யைத்தெரிந் தயன்மலை யிடங்களிற் றிரண்ட
கைத வத்தவெண் ணாயிரங் கயவரு மொருங்கே
யெய்தி முத்தமிழ் விரகர்மேற் பழித்தழ லிழைத்தார்.

(இ-ள்.) ஒப்புற்ற வைதிக விளவாண்சிங்கமான ஸ்ரீசம்பந்தப்பெருமான் வந்த செய்தியை யறிந்து, அருகிலுள்ள மலையினிடங்களில் நெருங்கியிருக்கின்ற கீழ்மையான தவத்தினையுடைய எண்ணாயிரங் கீழ்மக்களும் ஒன்றாய்ச்சேர்ந்து, முத்தமிழ்விரகரை உத்தேசித்து அபிசார ஓமஞ்செய்தார்கள். எ-று.

"மாழ்கிவிரகங்காம மதன்மேகாமநோயாம்" என்று சூடாமணியிலும்,

"விரகமதனங்காமக்கவலை, காமநோயின்கட்டுரையாகும்" என்று பிங்கலத்திலும் வருதலால், விரகம் என்பது ஒரு பதார்த்தத்தின் பிரிவினை சகிக்காமைக்குப் பெயர் என்றாகின்றது.

ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான் மூவகையினையுடைய தமிழினிடத்து மிக்க பிரிய முள்ளவரென்று குறிப்பிக்க அவரே தம்பெயர் கூறவந்த பல திருமுறைகளில் முத்தமிழ் விரகன்மொழி என்று தாமே திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றனர். இதனானே முத்தமிழ்விரகர் என்பார் ஸ்ரீ ஞானசம்பந்தப்பிள்ளையார் என்றறியப்படுகிறது.

ஒருமாதினை அணையவிரும்பிய ஒருவனும் அவளிணைவிழைச் சடையாதேல் விரகனாகின்றான். அவனம்மாதின் ரூபாதிகளை நேத்திரசோத்திரங்களால் மாத்திர மனுபவித்தற்குணர்ந்தவன். அத்தகைய விரகமன்றிஃது.

இஃது மிகவும் விருப்பத்தினையுடைய சிறுகுழந்தையின் பிரிவுக்காற்றாத தந்தையின் விரகம்போன்றதென்றறிக. தந்தையாவான் மகவின் இனியமொழி முதலியவைகளால் ஆனந்தித்தலுடையவனேயன்றிக் கலந்து அநுபவிப்பவனல்லன்.

பிறர்வீட்டிற்பிறந்து வளர்ந்த மங்கையைக் கூட்டுவார் கூட்ட அவளொடு கலந்து அவள்மீதுள்ள மோகத்தை யாற்றாதவனும், பிறராலியற்றப்பட்ட நூல்களென்னும் மாதர்களை உபாத்தியாயரென்னும் கூட்டுவார் கூட்ட அணையும் புலவனும் அத்தமிழ்மாதரின் அருமை பெருமைகளை யுணர்ந்து அவர்களின் பிரிவினால் விரகமுள்ளவர்களாயினும் எம்பெருமானுடைய விரக மவ்வாறானதன்றென்பது சொல்லாமே யமையும்; ஏனெனின் அவைகளவரிடத்தினின்று முண்டாயினவேயாம்; இது இவ்விடத்து விரிக்கவேண்டுவதின்று. இவர் திருவாய்மலர்ந்தருளிய தமிழ்ச்சுருதியே சான்றாகும்.

"மாலைமாற்றேசக்கரஞ்சுழிகுள மேகபாதமெழுகூற்றிருக்கை
காதைக்கரப்பேகரந்துறைபாட்டே தூசங்கொளலேவாவனனாற்றிக்
கூத்துக்கங்கோமூத்திரியே யோரெழுத்தினத்தாலுயர்ந்தபாட்டே
பாதமயக்கேபாவிற்புணர்ப்பே யொற்றுப்பெயர்த்தலொருபொருட்பாட்டே
சித்திரக்காவேவிசித்திரக்காவே விகற்பநடையேவினுவுத்தரமே
சருப்பதோபத்திரஞ்சார்ந்தவெழுத்தும் வருக்கமுமற்றும்வடநூற்கடலும்
ஒருங்குடன்வைத்தவுதாரணநோக்கி விரித்துமுடிக்குமிறைக்கவிப்பாட்டே
உருவகமாதிவிரவியலீறாய் வருமலங்காரமும்வாழ்ந்தும்வகையும்
கவியேகமகன்வாதிவாக்கியென் றவர்கடன்மையுமவ்வயினமைதியும்
பாடுதன்மரபுந்தாரணைப்பகுதியு மான்ந்தமுதலியவூனச்செய்யுளு
விளம்பினத்தியற்கையும்நரம்பின்விகற்பமும் பண்ணுந்திறனும்பாலையுங்கூட்டமும்
எண்ணியதிணையுமிருதுவுங்காலமும் எண்வகைமணமுமெழுத்துஞ்சொல்லுஞ்
செந்துறைமார்க்கமும்வெண்டுறைமார்க்கமுந் தந்திரயுத்தியுந்தருக்கமுநடமு
முந்துநூன்முடிந்தமுறைமையின்வழாமை வந்தனபிறவும்வயினறிந்துரைப்போன்
அந்தமில்கேள்வி யாசிரியன்னே." என்ற வமுதசாகரன்மொழிப்படி யொருவன் ஆசிரியனாக வேண்டுமாயின், எத்தனைகாலம் தமிழ்முதலிய பலபாடை மாக்களோடு பயிலவேண்டும்; அப்பொழுது அவனுக்கு வயது எத்தனை ஆகும்; எம்பெருமான் மூன்றாவது திருவயதிலன்றே தன்னை முத்தமிழ்விரகன் என்றனன். இத்தமிழினை ஒருவாத்தியினிடத்தும் அடிபணிந்து கல்லாது தானே அனைவருக்கும் பரமாசாரியப் பெருந்தகையானாக முக்காலத்திலும் எழுந்தருளியிருக்கின்றனன்.

இதனால் முத்தமிழ்விரகனென்றது - மக்கண்மீதுள்ள விரகம்போன்ற விரகமென்றுணர்க.

உடம்பிலேறிய வழுக்கினையகற்ற வவாக்கொண்ட வொருவன் உவர்நீரிலிறங்கி உடலுவரக்குளித்தாற்போல, பிறவிகொடியது அதனை யகற்றவேண்டும் என்று கரு

தித் தவம்புரியப்புகுந்து தன்னிகரில்லாத்தலைவனல்லாளுகிய அருகதேவனைத் தன்னிகரில்லாத்தலைவனென்று கருதி அவன்கூறிய் சாமான்ய நீதிகளையே சிறந்த நீதிகளாகக் கருதிப் பனிக்காலத்துச் சீதளநீரிலும் வெயிற்காலத்துச் சுடுபொறையிலும் நின்றும் இருந்தும் உடற்கு வருத்தம் புகுத்துவோராகினும் அவைகளாலடையும் பலன் சாமான்யமானதால் அவரியற்றும் தவத்தினைக் கைதவமென்றும், சைவசமயமாகிய நன்மார்க்கமிருப்பதை யுணர்ந்தும், அதிற்பிரவேசியாமல் அதற்கே தோஷங்கூறி உவர்நீரில் முழுகுபவன் நல்ல கங்கையாதி ஆறுகளின் பிரவாகாதிகளை யுணர்ந்தும் அவைகள் தாழ்ந்தனவென்று அனேக இழிமொழி கூறி உடலைக்கெடுப்பது மழுக்காக்குவதுமான உவர்நீரிலேயே முழுகினாற்போல, தாமுன்னே நின்ற அச்சைநமதத்திலேயே நிற்கும் பிடிவாதமுள்ளவர்களாதலால் மூர்க்கரென்று குறிப்பிக்கக் கய்வரென்றும் இந்நூலாசிரியன் தானடைந்து நிற்கின்ற சமயகௌரவத்தைக் குறிப்பிக்க அவர்களை வேறொருவிதமாக இகழாமலிவ்விடத்தில் சைநத்துறவிகளைச்சுட்டி "கைதவத்தவெண்ணாயிரங்கயவரும்" என்றார் எண்ணினுமாம்.

பழித்தழலாவது பழியையிழைக்கும்தழல், அது மாரணமுதலிய எட்டுவகையினதாக விளங்கும்; அவைகளில்அருகந்தர் ஸ்ரீஞானசம்பந்தப் பெருந்தகையைக் குறித்துச் செய்தது மாரணக்கிரியையே என்றறிக; எட்டிமுதலிய விஷகாஷ்டங்களை ஸமித்ததாகக்கொண்டு வேப்பநெய் முதலிய இழிந்த நெய்களாலும் மிளகாய் இரதமுதலியவைகளாலும் இன்னமனேகமான கெட்டவஸ்துக்களாலும் எமதிசையைநோக்கி இருந்து இயற்றுமொரு ஈனக்கிரியையே பழித்தழலென்றறிக. (சஉ)

மெய்யில் சிந்தையா ரத்தழற் கடவுளை விளித்தாங்
கெய்தி யெம்பகை யாயினோ ரிருக்கையை யமுது
செய்து வாவெனப் பணித்தனர் சிறுவிதி மகத்துக்
கையி ழந்தவன் செல்லுமோ வஞ்சினான் கலங்கி.

(இ-ள்.) அசத்திய சிந்தையினையுடைய சைந ஸன்னியாஸிகள் அந்த அக்கினிதேவனை யழைத்து (அக்கினியே நீ) அவ்விடத்திற்சென்று எங்கள் பகைவர்களாகவுள்ளவர்களின் இருப்பிடத்தை உண்டு வருவாயாகவென்று (மந்திரமுறையால்) கட்டளையிட்டார்கள்; (இவர்களினிழிந்த கூற்றுக்கிணங்கி அவன் செல்லுவானோ!) முன்னாளில் உபப்பிரமாவின் யாகத்தில் கையறுபட்டவன் போவானோ மனக்கலங்கிக்கொண்டு போதற் கஞ்சினான். எ-று.

கொல்லாமை கள்ளாமை முதலியவைகளை முக்கியமாகக் கொண்டுள்ள சித்தாந்தத்தினையுடைய தம்மதத்திற்கு விரோதமாய், கொலைக்குற்றத்திற்குள்ளானவர்களாய் மிகவும் கொடிய காரியத்தை இழைக்கின்றார்களாதலா லவர்களை தம்மத வுண்மையுமில்லாத சழக்கரென்று குறிப்பிக்க, "மெய்யில் சிந்தையா"ரென்றும், அருகந்தர் கூறியவாறு செய்யாம லக்கினிபகவான் சிவபராக்கிரமமுணராது நின்று கையை யிழந்தவனாதலால் சென்றிலனென்றுங் குறிப்பிக்க "செல்லுமோ" என்றும் கூறினார். (சரு)

ஈனர் தாஞ்சடத் தீயினை யெடுத்தன ரேகி,
ஞான போனகர் மடத்தினிற் செருகினார் நந்தா
தான தீப்புகை யெழுவதை யடியவர் கண்டு
வான நாயகன் மைந்தருக் குணர்த்தினார் வல்லை.

(இ-ள்.) இழிந்தவர்களாகிய அச்சைநர்கள் (தங்கள் வசனத்தை) அக்கினிதேவனங்கீகரியாமையை யுணர்ந்து, (இனி என்செய்வதென் றாலோசித்து) மந்திராக்கினி

இல்லாதுபோனால் சடாக்கினியையாவது உபயோகப்படுத்துவதென்று, சடாக்கினியை எடுத்துக்கொண்டு சென்று ஞானமிர்தபோசனராகிய ஸ்ரீசம்பந்தப்பெருமானுடைய திருமடத்திற் செருகினார்கள். உடனே கெடாது வர்த்திக்கின்ற அவ்வக்கினியிற் புகை தோன்றுவதை அடியவர்கள் கண்டு விரைந்துசென்று (சிவசமாதியி லிருக்கின்றவரும்) தேவநாதரான சிவபெருமானுடைய புத்திரருமான சம்பந்தப்பெருமானுக்கு அறிவித்தார்கள். எ-று.

மந்திராக்கினியே நான்மாட்டேனென்றபோழ்து சடாக்கினி அவர்களை என்செய்யும் என்று கருதியடங்காமல் சட்டிகளில் தீயை வாரிக்கொண்டு சென்று திருமடத்திட்டவர்களாதலால், அவர்களை "ஈனர்" என்றார்.

ஞானசம்பந்தப்பெருமானைத் தேவசேனாபதியே என்று விஸ்தாரமாக அகஸ்தியசங்கிதை கூறுதலால், சிவசண்முகப்பெருமானே ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானென்றுணர்த்த, அவரை "வானநாயகன் மைந்தர்" என்றார். (௪௪)

சிட்டர் நோக்கியத் தீயினைத் தென்றமிழ்க் கூட
லட்ட மூர்த்தியை யங்கிருந் தருமறைப் பதிகந்
துட்டர் பொய்புரை மேற்கொண்டு தொன்முறை துறந்து
விட்ட வேந்தனைப் பற்றெனப் பாடினார் விடுத்தார்.

(இ-ள்.) பெரியவரான ஞானசம்பந்தப்பெருமான் அத்தீயினைப்பார்த்து, அழகிய தமிழ்நாட்டிலுள்ள கூடனகரமாகிய மதுரையி லெழுந்தருளியிருக்கின்ற அட்டமூர்த்தமான இறைவனைத் (தியானித்து) அருமையான வேதபதிகத்தை, துட்டர்களான ஆருகதரின் பொய்யுரையை மேற்கொண்டு பழைய வைதீகமுறையைத் துறந்த அரசனைச்சென்று பற்றுவாயாகவெனப் பாடிவிட்டனர். எ-று. சிட்டர்-ஞானசாரமுடையவர்.

இக்கூன்பாண்டியனுக்கு முன்னோரனைவரும் சைவர்களேயென்றும், இவனொருவனே இவ்வாறாயினனென்றும் குறிப்பிக்க, "துட்டர்பொய்யுரை மேற்கொண்டு தொன்முறை துறந்துவிட்ட வேந்தனை" என்றார்.

சாணைபிடித்தலும், தைலம் பூசலும் பன்னாட் பழக்கலுமுடைய எந்த ஆயுதமும் எம்பெருமானுடைய வாக்காயுதத்திற் கிணையாகாதென்பதைக் குறிப்பிக்கவும், இவர் கீர்வாணரோ என்று விளக்கவும் பாடிவிட்டனர் என்றார். கொளற்க, சொல்லேருழவர் பகை என்றிருப்பதுவும் இத்தகையோரா லென்றேயுணர்க.

தானெப்பொழுதும் பரதந்திரங்காட்டி நிற்பவராதலால், இறைவனைச்சுட்டிப் பாடினார்.

இறைவன் மதுரையி லெழுந்தருளியிருப்பவனாயினும் சருவவியாபகன் என்றுணர்த்த "அட்டமூர்த்தியை" என்றார்.

"விரியப்படைப்பாயெனலோடும்விழைந்துமலரோன்போற்றுவான்
மருவுமணஞ்சேர்ந்தகன்றுவிரிமண்ணினுருவாஞ்சருவனா
யிரதமன்னித்தெண்ணீரினுருவாயுறையுமெழிற்பவனா
யுருவம்பொருந்திக்கனல்வடிவாயுற்றேயுறையும்பசுபதியாய்" என்றும்,

"ஊறுயுலவையுருவாகியொழியாதுறையீசானனா
யாறுவெளியாய்வெளியுருவாயமர்ந்தேயுறையும்வீமனாய்
வீறுரொளிசேர்ந்திரவியுருமேவியுறையுமுருத்திரனாய்
மாறு த்திளாநீரமுதாகிமதியாயுறைமாதேவனாய்.

உரைத்தற்கரியவியமானனுருவாயோங்குமுருத்திரனய்
விரித்தற்குரியனய்வேறய்விளம்பலாகாத்தனிமுதலாய்த்
திருத்துமறிவாலறிபொருளே செழுஞ்சேவடிப்போதென்றலைமே
லிருத்தியாள்வாயெனப்பரவியிறைஞ்சிப்படைக்கலுற்றனனல்" என்றும் வாயுசங்கிதையிற் கூறுதலா லிறைவன் அட்டமூர்த்தியாயிருந்த திவ்வண்ணமென் றுணர்க.

## ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான் பாண்டியன்மீது தீயைப் பிணிரூபமாக வேவிய பதிகம்.

பண் - கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

செய்யனேதிருவாலவாய்மேவிய
வையனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்றுபாண்டியற்காகவே. (க)

சித்தனேதிருவாலவாய்மேவிய
வத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெத்தராமமணர்கொளுவுஞ்சுடர்ப்
பத்திமன்றென்னன்பாண்டியற்காகவே. (உ)

தக்கன்வேள்விதகர்த்தருளாலவாய்ச்
சொக்கனேயஞ்சலென்றருள்செய்யெனை
யெக்கராமமணர்கொளுவுஞ்சுடர்
பக்கமேசென்றுபாண்டியற்காகவே. (ங)

சிட்டனேதிருவாலவாய்மேவிய
வட்டமூர்த்தியனேயஞ்சலென்றரு
டெட்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பட்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (ச)

நண்ணலார்புரமூன்றெரியாலவா
யண்ணலேயஞ்சலென்றருள்செய்யெனை
யெண்ணிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பண்ணியற்றமிழ்ப்பாண்டியற்காகவே. (ரு)

தஞ்சமென்றுன்சரண்புகுந்தேனையு
மஞ்சலென்றருளாலவாயண்ணலே
வஞ்சஞ்செய்தமணர்கொளுவுஞ்சுடர்
பஞ்சவன்றென்னன்பாண்டியற்காகவே. (சு)

செங்கண்வெள்விடையாய்திருவாலவா
யங்கணவஞ்சலென்றருள்செய்யெனைக்
கங்குலாரமண்கையரிடுங்கனல்
பங்கமிறென்னன்பாண்டியற்காகவே. (எ)

தூர்த்தன்வீரந்தொலைத்தருளாலவா
யாத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை

யேத்திலாவமணர்கொளுவுஞ்சுடர்
பார்த்திபன்றென்னன்பாண்டியற்காகவே. (௮)

தாவிஞனயன்ருனறியாவகை
மேவிஞய்திருவாலவாயருட்
பேவிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பாவிஞன்றென்னன்பாண்டியற்காகவே. (௯)

எண்டிசைக்கெழிலாலவாய்மேவிய
வண்டனேயஞ்சலென்றருள்செய்யெனக்
குண்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பண்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௧௦)

அப்பனாலவாயாதியருளினல்
வெப்பந்தென்னவன்மேலுறமேதினிக்
கொப்பஞானசம்பந்தனுரைபத்துஞ்
செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம். (௬௫)

அடுத்த தக்கணத் தரசனை வெப்புநோ யாகித்
தொடுத்த திட்டபல் கலன்களுந் துகளெழப் பனிநீர்
மடுத்த சாந்தமுங் கலவையு மாலையுங் கருகப்
படுத்த பாயலுஞ் சருகெழப் புரவலன் பதைத்தான்.

(இ-ள்.) உடனே அத்தீ சுரநோயாக வுருமாறிச்சென்றது; சென்று பாண்டியரா ஜனுடைய அணியப்பட்ட ஆபரணங்களும் தூசாகவும், பனிநீர்விட்டுக்குழைத்த சந்தனமும் கூட்டுக்கலவையும் மாலைகளும் கருகவும் படுத்தபடுக்கைகள் சருகாகவும் அடைந்தது; அதனால் அரசன் துடித்தனன். எ-று.

காம்பரிந்த மல்லிகைமலர் முதலியவைகளைப் பரப்பியுள்ள கிடக்கையிற் கிடத்தல் அக்காலத்து வழக்கமாதலாற் சுரபீடைகொண்டுள்ள மன்னவனுடலம் பட்டபொழுதே அணையிலுள்ள மலர் மலரியனீங்கிச் சருகியலையடைதலால் "சருகெழ" வென்றார்.

வளவர் கோன்றிரு மடந்தையு மந்திரி ரோறுந்
தளர்வ டைந்துநன் மருத்துநூல் விஞ்சையர் தமைக்கூஉய்ப்
பளகில் பன்மருந் தருத்தவும் பார்வையி னாலும்
விளைவ தேயன்றி வெஞ்சுரந் தணிவது காணார்.

(இ-ள்.) சோழராஜகுமாரியான அழகிய மங்கையர்க்கரசியாரும், முதன்மந்திரியாகிய குலச்சிறையாரும் மனத்தளர்வடைந்து, மருந்துநூல் வித்துவான்களாகிய வைத்தியர்களையழைத்து குற்றமற்ற பலமருந்துகளை உண்பிக்கவும் அமிர்தத்தியானமுதலிய பார்வைகளாலும் அவ்வெவ்விய சுரநோய் அதிகமாதலேயன்றி தணிதலைக்கண்டார்களில்லை. எ-று.

பார்வையாவது மஹாதேவிமுதலியவர்களை உபாசிப்பவர்கள், பிணியாளன் உடம்பை அமிர்தமயமாகப் பாவிப்பதாகிய வொருபார்வை. இதனை "ஆடலம்பிகையென்னும்" சௌந்தரியலகரி முதலியவற்றின் பொருளாலுணர்க. (௬௭)

சவலை நோன்புழந் திம்மையு மறுமையுஞ் சாரா
வுவ்ல மாசரா விடுத்தன ரனைவரும் பார்த்துத்

தவவு லத்தினு யருந்தினுந் தணிந்தில தாகக்
கவலை யெய்தினு ரிருந்தனர் விடிந்தது கங்குல்.

(இ-ள்.) சவலைத்தன்மையைத் தருகின்ற விரதங்களை அநுஷ்டித்து இம்மை மறுமைகளை யடையாத அவலமான அஞ்ஞான அழுக்கினையுடையவர்களாகிய சைநர்களை நீங்களிச்சுரத்திற்குப் பரிகாரந் தேடுங்களென்று அழைப்பித்துவிட்டார்கள்; அவர்களனைவரும் பார்த்துத் தங்கள் தபோவல்லபத்தாலும் மருந்தினாலும் சுரம் குறையாமையால் துன்பமடைந்தவர்களாக விருந்தார்கள்; உடனே பொழுதும் விடிந்தது. எ-று.

இச்சைநர்களின் நோன்புகள் சரீரவிளைப்பைமாத்திரம் தருமேயன்றி வேறொரு பயனையும் அளியாதென்பது துணிவாதலால், அவர்கள் நோன்பை "சவலைநோன்பு" என்றனர்.

அவர்களும் மந்திரத்தியானாதிகளைக்கொண்டு வியாதிபோக்கும் பழக்கமுள்ளவர்களென்றும், ஆனால் இந்நாளில் ஞானசம்பந்தப்பெருமான் அநுப்பிய சுரத்தைமாத்திரந் தணித்தற்கு ஆற்றலற்றவர்களாயினார்களென்றும், அவர்கள் கொடுத்த மருந்தும் அவ்வண்ணமே தானென்றும் உணர்க. (சுஅ)

வட்ட வாழியொன் றுடையதேர்ப் பரிதிதன் மருமான்
பெட்ட காதல்கூர் மருகனைப் பற்றிய பிணிகேட்
டிட்ட காரிரு ளொழினியை யெடுத்தெடுத் தங்கை
தொட்டு நோக்குவான் வந்தெனத் தொடுகடன் முளைத்தான்.

(இ-ள்.) வட்டமான ஒருசக்கரத்தினையுடைய தேரினையுடைய சூரியனானவன் தன்வழித்தோன்றலாகிய சோழனுக்காசை பொருந்திய மருமகனாகிய கூன்பாண்டியனை அடைந்துள்ள சுரவியர்தியை கேட்டு, இடப்பட்டுள்ள கரிய இருட்டாகிய திரைச்சீலையை அகற்றியகற்றி அகங்கைத் தொட்டுப் பார்க்கும்பொருட்டு வந்தாற்போல உலகினைத் தொட்டுக்கொண்டிருக்கின்ற கடலில் உதித்தனன். எ-று.

சூரியன் உதிக்க உதிக்க இருள் அபாவப்படுதலேயன்றி எல்லாவிருளும் ஒரேதரமாக விலகுத லின்மையால் இருளொழினியை அகற்றி அகற்றி என்றார்.

தொடுகடலை - தோண்டுதலாகிய கடல் என்பது மொன்று. அது கடலினொரு பாகத்தின் பெயர். அதாவது சகரர் தோண்டின இடத்திற்குப் பெயரென்பர். (சுகூ)

வாலி தாகிய சைவவான் பயிரினை வளர்ப்பான்
வேலி யாகியோ ரிருவரும் வேந்தனை நோக்கிக்
கால பாசமுஞ் சுடுமிநோ யருமறைக் காழிப்
பால ராலன்றித் தீர்த்திடப் படாதெனப் பகர்ந்தார்.

(இ-ள்.) நிருமலமான சிறந்த சைவமென்னும் பயிரினை வளர்த்தற்கு வேலியாகி நின்றுள்ள அரசியும் அமச்சனுமாகிய இருவர்களும் (குப்ஜபாண்டிய) ராஜனைப் பார்த்து, மன்னவ! காலபாசத்தையுஞ் சுடத்தக்க விந்த நோயானது சீகாழிநகரத்தினரும் மறைப்பாலருமாகவுள்ள ஞானசம்பந்தராலன்றி நீக்கமுடியாது என்று கூறினார்கள். எ-று.

வேலி பயிரைக்காக்கும் இயல்பினையுடையது. அதைப்போலவே இவர்களும் சைவத்தை காக்க நின்றவர்களாதலால் இவர்களை வேலிபோல்பவர் என்றனர்.

எல்லாநோயையும்விட காலபாசத்தினால் வரும் நோய் அதிகமானது; இந்நோய் அதைவிட அதிகமானது. என்று வெத்தகையோர்களாலும் ஆற்றமுடியாதது என்று தொனிப்பிக்க, "காலபாசமுஞ் சுடுமிநோய்" என்றனர். (எ0)

பொய்யர் சார்பினை விடாதவ னீங்குநீர் புகன்ற
சைவர் நீறிட்டுப் பார்ப்பது தகுவதோ வென்ன
வைய நீயெனைத் திறத்தினு லாயினு நோய்தீர்ந்
துய்ய வேண்டுமே யிதனில்லா துறுதியென் றுரைத்தார்.

(இ-ள்.) பொய்யான மார்க்கத்தினராகிய சைநர்களின் சார்பினை விடாமல் நிற்பவனான கூன்பாண்டியன் (மனைவியாரையும் அமைச்சனுரையும் பார்த்து) உங்களாற் சொல்லப்பட்ட சைவர்களின் விபூதியை யணிந்து பார்ப்பது தகுந்ததோவென்று கேட்க, (அவர்கள்) ஐயனே நீ எவ்வண்ணத்தினாலேனும் வியாதிநீங்கிப் பிழைத்தல் வேண்டுமே; இதனி லெது உறுதியான்து என்று கூறினார்கள். எ-று.

சைவர்கள் சுரமுதலிய கொடிய நோய்களையெல்லாம் விபூதியினாலேயே போக்கடித்துக்கொண்டிருத்தல் முன்னும் பின்னுமுள்ள சுபாவமாதலால், இளமையிற் சைவனாகவிருந்தகாலத்துத் திருநீறிட்டு உடற்பிணியொழித்தலை யறிந்தவனாகியபாண்டியன், எத்தகையசுரத்திற்குஞ் சைவர்கள் திருநீற்றைக்கொண்டே பரிகாரந்தேடுவோர்கள் என்று துணிந்து "சைவர் நீறிட்டுப்பார்ப்பது தகுவதோ" என்றான்.

நீற்றப்பட்ட வனைத்தும் நீறாயினும் சைவர்நீறு கோமயக்கிரகணமுதல் பஸ்மதாரண மீறாக மந்திரத்தோடுகூடிய கிரியைகளினாலேயே ஆதலன்றி வேறுவிதமாக வியற்றுதலின்மையால் அதுஅவனுக்குக் கூடாமையாயிற்று. (வெறுநீறிடுதற்கு ஒருவாறு ஒப்பினும் ஒப்புவனாயிருக்கலாம்) அதனாற் பிரயோசனமின்மையை யறிந்திருக்கின்றான். (அக்காலத்திலிருந்த சைநர்களின் வழக்கம் திருநீறிட்டவனைக்கண்டாற் பட்டினிகிடந்து பாவந்தொலைத்துக்கொள்ளுவதென்பதாம்; இதனை அவர்களக்காலத்துக்கண்டு முட்டி என்பர்.) இத்தகைய துரபிப்பிராயமுடைய மதத்தினனாதலால், பிறர் தரித்திருத்தலையே பார்க்கப்படாத நிக்ருஷ்டமான நீற்றை நானே உடம்பில் தரித்துக் கண்ணினால் காணுதல் கூடுமோ, அதனிலும் அரசனாகிய எனக்கு அது தகாதகாரியமன்றோ" என்று "சைவர் நீறிட்டுப்பார்த்து தகுவதோ" என்றனன் என்க.

அரசியும் அமைச்சனும் அந்தரங்கத்திற் சைவரும் பகிரங்கத்திற் சைநருமாதலால், (திருநீறுநல்லது) அதனையணிந்தவர்களே தூய்மையானவர்களென்று கூறவியலாமையால், சமயத்தைக்காட்டிலும் பிராணனன்றோ சிறந்தது, பிராணன்போகாதிருத்தலை எதனிலேனும் அடையவேண்டுமேயன்றி, இப்படிப்பட்ட ஆபத்துக்காலத்திற் பிடிவாதம் கூடாதென்று குறிப்பித்து, "நீயெனைத் திறத்தினு லாயினும் நோய்தீர்ந்து உய்ய வேண்டுமே" என்றனர். (௬க)

அழைமி னீண்டென வரசனு மிசைந்தன னூர்வந்
தழையு மந்திரத் தலைமகன் றனிநக ரெங்கும்
விழவு தூங்கநன் மங்கல வினைகளால் விளக்கி
மழலை யின்றமிழ் விரகர்தம் மடத்தில்வந் தெய்தா.

(இ-ள்.) (ஆனால் அப்பார்ப்பனச் சிறுவனை ) இவ்விடத்திற்கு அழையுங்களென்று கூறி அரசனும் அவரதுவருகைக் குடன்பட்டவுடனே (காலம்பார்த்துக்கொண்டிருந்த) முதன்மந்திரியாரான குலச்சிறையார் அவ்வொப்பற்ற நகரத்தினெவ்விடத்திலும் உச்சவகரமாயிருக்க நல்ல மங்கலகரமான செய்கைகளா லலங்கரித்து மழலை பொழிப்பருவத்தினையுடைய இனிய தமிழ்விரகருடைய மடத்திற்குவந்து சேர்ந்து. எ-று.

கரும்பு மாவிலை வாழை கமுகு முதலியவற்றினாலும், பூரணகலசமுதலியவைகளாலும் சுபகரமான அலங்காரம் இயற்றுவித்தன ரென்பார். "மங்கலவினைகளால் விளக்கி" என்றார்.

மழலைச்சொல் நிரம்பாத இளஞ்சொல்லாதலால், மழலையெனபதை சம்பந்தப் பெருமானுடைய, பருவத்தின்மீது ஏற்றினும். (ருஉ)

அன்று கேள்விய லருந்திய ஞானவா ரமுதை
யின்று கண்களா லுண்டுகண் பெற்றபே றெய்திச்
சென்றி றைஞ்சினு னெழுந்திருந் தீயமண் சூழ்ச்சி
வென்ற சிந்தையீ ரென்றனர் பூந்தராய் வேந்தர்.

(இ-ள்.) அமைச்சன் அந்நாளில் காதினுலருந்திய அரிய ஞானுமிர்தத்தை இந்நாளில் கண்களாலருந்திக் கண்பெற்றபேற்றினை அடைந்து ஞானசம்பந்தப்பெருமானுடைய திருவடிகளில் விழுந்து வணங்கினுன். உடனே, பூந்தராய் வேந்தராகிய எம்பெருமானூர் கொடிய சைனதந்திரத்திற்சிக்காமல் அதனை ஜயித்துநிற்கின்ற மனத்தினையுடையவரோ எழுந்திரும் என்று திருவாய்மலர்ந்தருளினுர்.—எ-று.

மனம் கண்டதையெல்லாம்பற்றுமியல்பினதாகவிருக்கக் குலச்சிறையார் மனம மறந்தும் அருகந்தர்கூறும் குயுக்திகளிற் பிரவேசியாமல், சைவ சித்தாந்தத்திலேயே நின்றிருந்த அரிய செய்கையை நோக்கி, வென்ற சிந்தையீர் என்றுர். மந்திரியுஞ் சைவனும் வயோதிகனுமாக விருத்தலால், அந்தணர்பெருமான் அமைச்சனை எழுந்திரும்என்றுர். (ருந

நன்றி ருந்தனி ரேயென நகைமலர்த் தடந்தார்
வென்றி மீனவன் கற்பினுர் தம்மையும் வினவ
வென்று நம்மரு ளுடையவர்க் கெவன்குறை யென்னு
வொன்று கேண்மைகூ ரன்பினு ரிதனையு முரைப்பார்.

(இ-ள்.) விளங்காநின்ற மலராற்கட்டப்பட்ட மாலையணிந்த (தோள்களையுடைய) வெற்றியோடுகூடிய பாண்டியனுடைய மனைவியாரான மங்கையர்க்கரசியாரையும் குறித்து, சுகந்தானுவென்று கேட்டனர். உடனே பொருத்தமான அன்பு பொருந்திய அவர் எம்பெருமானைப்பார்த்து எப்பொழுதும் உம்முடைய திருவருளுடையவர்களுக்கு என்ன குறைவு என்றுகூறிப் பின்னர் இதனை உரைப்பாராயினுர்.

[illegible Grantha verse line]
[illegible Grantha verse line]

அதராக்ஞீசமந்த்ரீசதன்மடம்ப்ராப்யஸத்வரம்

தௌதம்நத்வாசஸம்பிரார்த்யதமாஹூயஸமாகதௌ: என்று வடநூலிலுள்ள அகஸ்திய சங்கிதையிலிருத்தலால் மந்திரியும் அரசியுமாகிய இருவருமே திருஞானசம்பந்தப்பெருமானுடைய திருமடத்திற்குச் சென்றுர்களென்று அறியப்படுகின்றது. அதனுல் யாம் நன்றிருந்தனிரேயென்பது மங்கையர்க்கரசியாரைப்பார்த்து ஸ்ரீசம்பந்தப்பெருமான் கூறியதாக எழுதினேமென்றுணர்க. (ருச)

கையர் மாளவு நீற்றினுற் கவுரியன் றேய
முய்ய தாகவு மின்றுநும் மருளினு லொலிநீர்
வைகை நாடன்மேல் வெப்புநோய் வந்தா லதனை
யைய தீர்த்திடல் வேண்டுமென் றடியில்வீழ்ந் திரந்தார்.

(இ-ள்.) இழிவினராகிய சைனர்களழியவும், பாண்டியநாடு விபூதியினுல் பிழைத்தலையுடையதாகவும், இந்நாளில் உமது திருவருளினுல் ஒலிக்காநின்ற நீரினையுடைய வைகைநாட்டையாளுகின்ற பாண்டியமன்னன்மீது சுரவியாதி வந்துள்ளது

அதனை ஐயனே! நீக்கியருளல்வேண்டுமென்று திருவடிகளில்விழுந்து வேண்டிக்கொண்டனர்.

நல்லோர் சிந்தையி லெஞ்ஞான்றும் இழிதொழிலினர்களின் கேடும் உயர்தொழிலினர்களின் வாழ்வுந் தங்கிநிற்பதியல்பாதலால், கையர்மாளவென்றனர். திருநீறிட்ட சமயத்தில் உய்யுமுய்வே உய்வு அதனாலேயே கௌரியன்றேய் முய்வதாகவும் என்றனர். (௫௫)

இரந்த வன்பருக் கன்னதா மென்றருள் சுரந்து
பரந்த நித்தில யானமேற் பணிக்கதிர் மருமான்
சுரந்த ணிப்பலென் றேகுவா னொத்துமெய்ச் சுருதி
புரந்த ளிப்பவர் பாண்டியன் கோயிலிற் புகுவார்.

(இ-ள்.) இரந்து கேட்டுக்கொண்ட வன்பருக் கவ்வண்ணமே யாகுக வென்று அருள்செய்து மிகுதியான முத்துக்களாலாகிய சிவிகையின்மீது சந்திரன் தன் வழித்தோன்றலின் சுரத்தை நீக்குகின்றேனென்று சென்றாற்போல உண்மையான வைதீக நெறியைப் பரிந்துகாப்பவரான சம்பந்தப்பெருமான் பாண்டியனுடைய அரண்மனைக்குட் பிரவேசிப்பாராயினர்.—எ-று.

அனைவருஞ் சைனமதத்தினராக விரும்பும் நாளில் வேதங்களை யுதாரணமாகக்காட்டிச் சைன்மத விருப்பமுள்ளவர்களைச் சைவமத விருப்பமுள்ளவர்களாக்ச் செய்யும் நியமமுள்ளவராதலால் 'மெய்ச்சுருதி புரந்தளிந்தளிப்பவர்' என்றனர். (௫௬)

வாயி லெங்கணுந் தூபமு மங்கல விளக்குந்
தோய கும்பமுங் கொடிகளுஞ் சுண்ணமுந் துவன்றிச்
சேய காகள வொலிமன்னன் செவிப்புலன் சுவைப்பக்
கோயி லெய்தினு ரமணர்தங் கோளரி யனையார்.

(இ-ள்.) வாசல்களின் எவ்விடங்களிலுந் தூபங்களும் மங்கல தீபங்களும் நீரோடுகூடிய கலசங்களும் கொடிகளும் சுண்ணப்பொடிகளுமாக விருக்கின்றவிடத்தில் நெருங்க செவ்விய காகளவோசை பாண்டியனுடைய காதென்னும் புலனானது அநுபவிக்க சைநர்களென்னும் யானைகளுக்குச் சிங்கம்போல்பவரான ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானார் இராசமாளிகையை யடைந்தனர். எ-று. (௫௭)

காவ லோன்மருங் கிட்டதோர் கதிர்மணித் தவிசின்
மேவி னாரவர் நோக்கினன் மீனவன் றெளிந்து
வாவி தாழ்செழுந் தாமரை யெனமுக மலர்ந்து
பாவி யேன்பிணி தணித்தெனைப் பணிகொண்மி னென்றான்.

(இ-ள்.) அரசனருகிலிட்ட ஒப்பற்ற ஒளியொடுகூடிய மணிகளிட்டிழைத்த வேராசனத்தில் எழுந்தருளியிருந்தனர். பார்வையினாலே இவர்தான் அவர் என்று பாண்டியனுணர்ந்து ஆழமான குளத்திற் பொருந்திய செந்தாமரை மலரைப்போல முகமலர்ச்சிபொருந்தி, பாவியேனுடைய நோயை நீக்கி என்னைத் தங்களூழியனாக வாக்கிக்கொள்ளுங்களென்றனன். எ-று. (௫௮)

புலைத்தொ ழிற்குவித் தாயினோர் கேட்டுளம் புழுங்கிக்
கலைத்த டங்கட னீந்திய காவலோ யுன்றன்
வலப்பு றத்துநோ யிவராயு மற்றைநோ யெமையுந்
தொலைத்தி டப்பணி யென்றனர் கைதவன் சொல்வான்.

(இ-ள்.) இழிதொழில்களுக்குப் பிறப்பிடமானவர்களாகிய அருகந்தர் அவ்வசனத்தைக்கேட்டு மனம்புழுங்கி (அரசனைப்பார்த்து) சாத்திரங்களென்னும் பெரிய

கடலை நீந்திக் கடந்த காவலனே! உனது வலதுபுறத்திலுள்ள நோயினை இவனாயும் இடதுபுறத்துநோயெம்மையும் நீக்குமாறு கட்டளையிடுவென்றனர். (உடனே) பாண்டியன் கூறுவான். எ-று.

குப்ஜபாண்டியன் ஒவ்வொரு நூல்களையும் முறையே படித்துணர்ந்தவனுதலா லவனை அவர்கள் "கலைத்தடங்கடனீந்திய காவலோய்" என்றனர். (ருக)

அனைய செய்திரென் றிசையுமுன் சமணரு மசோகன்
றனைநி னைந்துகைப் பீலியாற் றடவியுங் கரத்துக்
கனைகொ ளாவிநீர் சிதறியு நெய்சொரி கனல்போற்
சினவி மேலிடக் கண்டனர் தீர்ந்திடக் காணார்.

(இ-ள்.) அரசன் அவ்வண்ணமே செய்யுங்களென்று கூறியிசைந்தவுடனே (அச்சைநத்துறவிகளும் அசோகனென்று பெயருள்ள தங்கள் தெய்வத்தை நினைத்து தங்கள் கையில் வைத்திருக்கின்ற மயிற்றோகையினுல் தடவியும் (கமண்டலத்தில் இருக்கின்ற) தங்கையிலுள்ள நீரைத்தெளித்தும் அந்நோய் நெய்யைச்சொரிதலாற் பற்றியெரிகின்ற தீயைப்போல கோபித்து அதிகமாதலையே கண்டார்கள். தீர்தலைக்கண்டார்களில்லை. எ-று.

மிகவும் அவசரமாக இடப்புறத்துநோயை முன்னே தணித்து நாமே வெற்றிபெறலாம் என்று அவசரப்பட்டவர்களென்று குறிப்பிக்க 'இசையுமுன்' என்றார்.

அசோகன்-சோகமற்றவன்; அவன் அருகர்களின் முதற்கடவுள். இவன் வானுலகத்தி லிந்திரனுலியற்றிக் கொடுக்கப்பட்ட பொன்மதில்வட்டத்தினுள் அசோகமரத்தினடியில் மணிமயமான ஆதனத்தில் முக்குடை நிழலில் இந்திராதி தேவர்கள் துதிக்க சின்னமுதலிய முழங்கச் சிலாதன் முதலியவர்களுடன் நிர்விகாரியாகவிருக்கின்றுனென்பது அவர்கள் மதம். இதனை,

"பொன்னுநன்மணியுமுத்தும்புனைந்தமுக்குடைநிழற்ற
மின்னும்பிண்டிநீழல்வீற்றிருந்தவன்" என்றும்,
"துலங்குமுக்குடைநிழற்றத்துந்துபிமுழங்கத்தேவர்
நலம்பெறுகவரிவீசநன்மலர்மாரிதூவ
அலங்குளையரியணைக்கீழமர்ந்தநான்முகனை" என்றும்வரும் அவர்கள் வாய்மொழிகளால் உணர்க. சைநர்கள் பிணியாதிகளையொழிக்க அவர்களிறைவனுகிய வருகனை மனதினினைத்து அவர்கள் கையிலிருந்த மயிற்றோகையால் முன்னே தடவினூர்கள். அதனில் சுரமொழியாமையால் ஜலத்தை ஜபித்து இறைத்தார்கள் என்க.

கனைகொளாவிநீர் என்பதை சத்தம் பொருந்திய மழைநீர் எனினும் ஒக்கும். ஆனுலந்தவனுட்டானமவர்களிடத்தில் இருப்பதாகத் திரமாகவுணரப்படவில்லை.

முன்னெல்லாம் இவ்வாறு யாருக்கேனும் செய்வார்களானுல் அவர்கள் நோய் முதலியவைகள் சாந்தியடைதலைக்கண்டு மகிழ்வார்கள்.

இன்று மகாதேவனுடைய கோபமிருத்தலால் அருகதேவன் வல்லபம் பானுவின் எதிரில் வந்த பனிபோலாகியது. அதனுல் நோயதிகரித்து நின்றதையே கண்டார்கள் என்க. (ருO)

தீயர் மானமிக் குடையராய்ச் செருக்கழிந் திருப்பப்
பாய கேள்வியோர் புண்ணியப் பையுணீ றள்ளிக்
காயு நோயது தணித்திடக் கருதினு ரதனை
மாய நீறென விலக்கினர் மாயைசெய் தழிவார்.

(இ-ள்.) கொடியவர்களாகிய அச் சைநர்கள் மிகுந்த மானமுடையவர்களாய்ச் செருக்கழிந்து இருந்தார்கள். உடனே பரவிய கேழ்வியினையுடைய ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமானார் பைக்குள்ளிருந்த புண்ணியரூபமான விபூதியையெடுத்துக் காய்கின்ற சுரநோயினை நீக்குமாறு நினைத்தனர். அதனை மாயைவித்தைகளைச்செய்து அழிகின்றவர்களாகிய அருகர்கள்பார்த்து இது மாயமன்று, அதனாலிது கூடாது என்று தடுத்தார்கள்.

நார் முற்றிலும் நீக்காது கொஞ்ச நீக்கப்பட்ட தேங்காயைப் பத்திரமாக வுடைத்துப் பாதித்தேங்காயை எடுத்துவிட்டு உள்ளில் எலியைவிட்டு வச்சிரத்தாற்பந்தித்துக் கண்ணின்வழி காற்றுவிடுவித்து எலியசையும்போது தேங்காயுருளுதலை தங்கள் மந்திரவன்மையென்றுகூறிச் சாமான்யஜனங்களை ஏமாற்றுகின்ற போலி மாந்திரீகர்களைப்போல தடவினவுடனேயே சுரத்தை நீக்கத்தக்க எதாயினுந் தக்க மருந்தினைத் திருநீற்றுடன் கலந்து அல்லது அம்மருந்தையே சாம்பராக்கித் தெளித்தல் முதலியவைகளைச்செய்து நோயை நீக்கி இது எங்களிறைவனுடையவிபூதியால் நீங்கியது என்று ஒருவேளை கூறினும் கூறுவன் என்று தங்கள் வழக்கத்தை பிள்ளையார்மீதேற்றி, நீ பையிலிருந்தெடுக்குஞ்சாம்பல் நம்பத்தக்கதாகவில்லை. அதனிலவுடதங்களைக் கலந்திருப்பாய். ஔடதத்தால் சுரநீங்கினால் நின்மருந்து எங்கள் மருந்தைவிடச் சிறந்ததென்று கூறலாமேயொழிய சமயத்தின் உயர்வுந்தாழ்வுமறிவதெப்படி? ஆதலால்து கூடாது. அவ்வாறு செய்வையேல் நீயொரு ஆயுள்வேதியனாகவாவையேயன்றி வேறில்லை என்று காரணங்கூறித் தடுத்தனரென்க.

பாயகேழ்வியோர் என்பதைப் பரவிய நூற்கேள்வியினையுடையவரென்று சிலர் அபிப்பிராயப்படுகின்றார்கள். அது பொருந்தாது. பிறனொருவனாலே கூறப்பட்டவற்றை சுரோத்திரேந்திரியத்தின்வழியாக ஏற்றவனைக் கேழ்வியினான் என்னலாம்.

எம்பெருமான் யாவனிடத்தும் நூல்கேட்டானில்லை. ஆதலால் எவ்வாறு கூறலாகும். கற்கண்டிற்கு இனிமை யியல்பாதல்போல் ஸ்ரீ ஜகத்குருவான ஞானசம்பந்தப்பெருமானுக்கும் சகலகலைஞானங்களும் இயற்கையே அமைந்தனவேயன்றி வேறில்லையென்று யாமெடுத்துக்கூறவேண்டுவதில்லை.

பாயகேள்வியோன் என்பதிற் பரவிய கேள்வியோன் என்றெழுதினேம், பிறநாடுகளிலுள்ளவர்களாலேயும் கேட்கப்பட்ட பிரபாவத்தினை யுடையவனாதலால். ஜபாலசுருதியானது ஒருவிடத்தில் விபூதியைப்பற்றி இவ்வாறு கூறுகின்றது. அதாவது ஆசாரத்தை விரும்பும் பிராமணாதி நான்குவருணத்தினரும் அக்னி மந்திரத்தால் விபூதியை கையிலெடுத்து சர்வாங்கங்களிலும் பூசிக்கொண்டு பின்னர் பொதுதர்மமாயணியவேண்டும்.

[illegible]

அதாசாரம்ஸ்ருண்வதாக்னிரித்யாதினா। பஸ்மம்க்ரஹீத்வாவிம்ர்ஜாங்கானி
ஸம்ப்ருஶேத்தத்ரோபரித்ரிபுண்டரம்தாரயேத் - ப்ராமணாதயம்
தர்மொவர்ணாந்தராணாம்—என்றிருக்கின்றது இதனாலேயே பஸ்மம் புண்ணியரூபமானது என்று அறிக.

தரித்தவர்களுடைய பாவங்களை யெல்லா மொழித்து அவர்களைப் பரிசனவேதையானது, தாம்பிரத்திற் பட்டவுடனே அத்தாம்பிரம் தன்னியனீங்கிப் பொன்னிய

லையடையுமாறுபோல திருநீறும் பாவியின் பாவத்தை யொழித்துப் புண்ணியத்தை யளிப்பாதலால் அதனை புண்ணிப் பையுணீறு என்றனர்.

தூய்மையினையுடைய மான்றோல் புலித்தோல் பட்டு முதலியவற்றில் அடைக்கவேண்டுமென்று சைவநூல்கள் கூறுதலால் பரிசுத்தமான பைக்குள்ளிருந்த நீறென்பதற்குப் புண்ணியப்பை என்றுகூறினர் எனினும்அமையும் ஆனலிது அவ்வளவு சிறப்பான்பொருளன்று; புண்ணிய மென்னு மடையைத் திருநீற்றுக் கேற்றுவதே சிறப்பு.

விபூதி புண்ணியரூபமானதே என்பதை ஸ்ரீ மகாஸ்காந்தத்து உபதேசகாண்டத்து ஒன்பதாவது அத்தியாயமானது இவ்வாறு கூறுகின்றது.

"பஜனம் செய்வதால் சகல பாவங்களையுந் தொலைக்கலுற்றதும் ஸ்மரணஞ் செய்வதனல் ஸகல சுகங்களையும் அளிக்கலுற்றதும் ஆகையா லதற்கு பஸ்மமென்று பெயர், அது போகமோக்ஷமிரண்டையும் பயனாகக்கொடுக்கும்.

[illegible]
[illegible]

பஜனுத்ஸர்வபாபக்னம் (பாபனும்) ஸ்மரணுச்சஸுகம்சரம் (ஸ்ரீவேஸிதர்)
பஸ்சேதிமஸ்மாக்யாதம்புக்திமுக்திப்ப்ரதம்—என்றும்,

முறைப்படி மந்திரத்தினு லவ்விபூதியை யுண்டாக்கி அதனைத் தரித்த ஜீவர்களுக்கு சகல பீடைகளுந் தொலைவதுடன் அபீஷ்டங்களுஞ் சித்திக்கும்.

[illegible]
[illegible]

யஇதம்தாரயேத்பஸ்மமந்திரிதம்விதிவன்னர:
காம்க்ஷிதான்யஸ்யஸித்யந்திநஸீயந்திதுரிதானபி—என்றும்,

ஸ்ரீ உமாகாந்தனுடைய மஹிமை எவ்வண்ணம் அறிதற்கியலாதோ அவ்வண்ணமே திருநீற்றின் மகிமையுமென்று வேதவேதாந்தங்களைக் கண்டுகண்ட பெரியவர்கள் கூறுகின்றார்கள்.

[illegible]
[illegible]

யதாதேவஸ்யமாகாத்மியம்துர்க்ஞேயம்பார்வதீபதே:
ததைவபஸ்மந:ப்ரோக்தம்வேதவேதாங்கபாரகை:—என்றும், இன்னம் அநேக விதமாக விபூதியின் பெருமையைச் கூறுகின்றது.

இவ்வாறு புராணத்தின் மாத்திரமோ வென்னில் சுருதிகளிலும் பஸ்மத்தின் பெருமை யனேகமாகக் கூறப்படுகின்றன. மனித னணியத்தக்க வஸ்துக்களின் மிகவுஞ் சிறந்தது விபூதி யொன்றேயாம்.

அண்ட நாயகன் றிருமடைப் பள்ளிநீ றள்ளிக்
கொண்டு வாருமென் றருமறைக் கவுணியர் கூறக்
கண்டு காவல னேவலாற் கைக்கொடு வந்தார்
வண்டு லாவுதார் வழுதிநோய் தணிப்பவர் வாங்கி.

(இ-ள்.) இவர்களிவ்வாறு கூறியதனைக் கேட்ட அரிய வைதீகவார ண்ருங் கௌணியருமான ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகர் (ஆனலவர்க ளிட்டப்படியே இதனை

நிறுத்தி வேறு பஸ்மத்தால் நோயைத் தணிக்கின்றேனென்று கூறி) நீங்கள் எங்கள் தேவநாதனுடைய சோமசுந்தரனுடைய திருமடைப்பள்ளியிலுள்ள நீற்றினை அள்ளிக் கொண்டு வாருங்களென்று கூறுதலும் (அதனை அரசனறிந்து ஊழியர்களை நோக்கி அவ்வண்ணமே செய்யுங்க ளென்றான்) ஊழியர்களும் அவ்வண்ணமே ஆலயுஞ் சென்று திருமடைப்பள்ளிச் சாம்பலை யெடுத்துக்கொண்டு வந்தார்கள். அதனை வண்டுகளுலாவுகின்ற மாலையணிந்த பாண்டியனுடைய நோயை நீக்குபவரான ஞானசம்பந்தப்பெருமான் வாங்கி. எ-று.

இதுமுதல் மூன்றுபாட்டு குளகம். (௬௨)

மருந்து மந்திரம் யாவையு மறையுரைப் பதுவும்
பொருந்து மின்பவீ டளிப்பதும் போகமும் பொருளுந்
திருந்து மாலவா யான்றிரு நீறெனச் செப்பி
யருந்து மின்னமு தனையசொற் பதிகம தறைந்து,

(இ-ள்.) மருந்தும் சகல மந்திரங்களும் வேதத்தாற் பிரதிபாதிக்கப்படுவதும் பொருத்தமான இன்பவீட்டினைக் கொடுப்பதுவும் போகமும் பொருளும் திருத்தமான திருவாலவாயினையுடைய இறைவனது திருநீறே என்று கூறி உண்ணுகின்ற இனிய அமுதத்தினை யொத்த சொற்களையுடைய பதிகம் பாடித்துதித்து. எ-று.

ஆரவாபரணனுடைய திருநீறே மந்திரமாதியவனைத்தும் என்றார். வல்லான் வகுத்ததேவாய்க்கால் என்னும் வாக்கியததிற்கிணங்க இவர்தம்மனதிற்கு இயைந்தவாறு இத்திருநீறே இவை யனைத்தும் என்று கூறினரோ என்னையோ என்று தமிழ் நூலுணர்ச்சி மாத்திரமுடையவர்களிற் பலர்க்கும் மற்றையருக்கும் ஐயம் விளைக்கும் ஆதலால் நாமிங்கதனை உபகாரார்த்தமாகச் சற்றே விரித்தெழுதுகின்றோம்.

திருநீறே மருந்தாதிகள் என்றார். இனித் திருநீறு என்றுரைப்பதின் உத்பவமெப்படி சாம்பலாதலால் அடுப்புச்சாம்பலுக்கிவ்வளவு மகிமையுண்டோவென்று நினைக்கவு மிடந்தரும். இங்கு திருநீறென்றுரைத்தது அடுப்பின் "சாம்பல் சூளைச்சாம்பல் முதலியன வன்றென்பதை நாம் கீழே எழுதும் பஸ்மஸ்ருஷ்டி விதியைக் கொண்டுணர்க.

"கற்பமநுகற்பமுபகற்பமெனும்விதத்தா
லற்புதநீறெண்ணிடின்மூன்றாம்." என்ற குறட்படி, விபூதியானது கற்பம் அநுகற்பம் உபகற்பம் என மூவகையினதாம் உத்தமம் மத்திமம் அதமம் என்னும் மூவகையினதாகவுள்ளதென்று சிவாகமஙகளும் வேதங்களும் உரைக்கின்றன. இதனில் முன்கூறிய உத்தம விபூதியே சிறந்தது.

### விபூதியையுண்டாக்குகிறவிதி.

பசுவின் சாணத்தா லமைக்கவேண்டுவது விபூதி. பசுவென்ற சொல்லைக் கொண்டே சில நாடுகளிற் சில சைவர்கள் எருதின் சாணத்தாலும் விபூதியமைக்கின்றனர். அது சாத்திரங்களுக்கு முழுவிபரீதமான விதி. அவ்வாறு செய்யும் பஸ்மம் தரிக்க யோக்கியமானதன்றென்றறிக.

பசுவின் கோமயத்திலும் எல்லாப்பசுக்களின் கோமயங்களும் திருநீற்றுக் குசிதமானதாகாதனவாம். "பிறந்திளையகன்றுபெருங்கன்னிப்பிணியா - லிறந்தகன்று மாவிழுக்கு" என்றும், "மூப்புமலடுமூனுடைமலந்தின்பதெனுமாத்தானுந்தூய்தலவாகா" என்றும் கூறிய ஆகமவசனப்பிரமாணக் குறட்பாக்களில் கன்றீன்று பத்துநாளசுத்தத்துடனுர்ந்த பசுவும் கிடாரியும் நோய்தாங்கிய பசுவும் தன்கன்றிறந்த பசுவும் கிழப்

பசுவும் மலட்டுப்பசுவும் ப்வீயுண்ணும் பசுவும் விபூதியின்பொருட்டு கோமயக்கிரக ணஞ் செய்க்கூடாதனவாகிய பசுக்கள் என்று விதித்திருத்தலால் இவையல்லாதன வாகிய பசுக்களே கோமயக்கிரகணத்திற்கு உசிதமானவை; அவைகளிலும் அறுகம் புல் நெற்றாள் முதலிய தூயபுற்களை மேய்ந்து நன்னீருண்டனவாயுள்ள பசுக்களை அன்பொடு பார்த்து பங்குனிமுதலிய உத்தமமாதங்களிலே வருகின்ற அட்டமி பௌர்ணமி அமாவாசை சதுர்த்தசி முதலிய நற்றினங்களி லப்பசுக்களி னருகிற்சென்று அவைகளை யன்பொடுபூசித்துத் துதித்து அவை கோமயத்தை வெளிப்படுத்துகின்ற தருணத்தில் "ஏற்றிடுகசாதத்தாலானின்மனையிலேயான் - மாற்றிடுமேலேவழும்பு" என்றும், "பெய்ததனிற்கவ்வியத்தைவாமத்தினுற்பிசைக - மையவகோரம்பகர்ந்து" என்றும், "உருட்டிப்புருடத்தோமாங்கிதனில்வைக்க - திரட்டிப்பதர்மேற்செறித்து"என்றும், "அன்றெடுத்தன்றுருட்டியன்றழலின்வைத்திடுக - வன்றியுலர்த்திச்சுடலுமாம்" என்றும், "விளைந்ததுணர்ந்துவிளம்பியீசான- மளைந்தேயெடுக்கவவையாய்ந்து" என்றும், "கறுப்புச்சிவப்புக்கடியதொருதூமம் - வெறுப்புடனேபீதம்விடு" என்றும், "வடித்திடுகதூயநல வத்திரத்தினாலே - யெடுக்கநவகும்பத்தினிது" என்றும், "திருநீற்றின் காயத்திரிமந்திரத்தால் - வரமானபூதலத்தில்வை" என்றும், "கந்தமலர்பெய்துவாய் கட்டிநவவத்திரத்தாலெந்தனமீதென்றேயெணி" என்றும், "அணிசுதினமுழுறையுமுறையி - னெனுஞ்சவிதுதான்கற்பமென்று" என்றும் வருங்குறட்பாக்களின் வண்ணம் கோமயத்தினைக் கீழேவிழாமல் தாமரைமுதலிய நல்லிலைகளில் ஓம் சத்தியோஜாதாய நம என்று அதின்மீதுள்ள வழவழப்பையகற்றி பஞ்சகவ்வியத்தை ஓம் வாமதேவாய நமவென்று ஏற்றுவிட்டு ஓம் அகோராயநமவென்று பிசைந்துருட்டி ஓமாக்னியில் ஓம் தத்புருஷாயநம என்று வைத்து மேலே நெற்பதரைக்கொட்டி வெளுக்கும் வண்ணம் வேகவைத்து ஓம் ஈசானுயநம என்று எடுத்து கறுத்ததும் சிவந்ததும் புகைவன்னமானதும் பொன்வண்ணமானதுவும் வேண்டாதவைகளென்று தள்ளி சுத்தமான வஸ்திரத்தினாலே வடிகட்டி புதுப்பாண்டத்திலிட்டு விபூதி காயத்திரி ஜபித்து மல்லிகை முதலிய நறுமலர்களை இட்டு வாய்கட்டி அலட்சியஞ்செய்யாமல் இதுவே எமது திரவியம் என்று சுத்தமான இடத்திலே வைத்துக்கொண்டு தரிக்கவேண்டிய முறைப்படி தரிக்கவேண்டும். இதுதான் விபூதியின் உத்தமசிருட்டிவிதி. இனி மத்திமவிதியைக்கூறுகின்றேன்.

"வனந்தனிற்சித்திரைமாதத்திற்சென்றே- யுலர்ந்தமயங்கொண்டோரிட்டுத்து" "வைத்திடித்துத்தூளாக்கிவார்த்ததனிற்கோசலத்தைக் - கைத்தலத்தினாலேகலந்து" "அள்ளிப்பிசைந்துருட்டியங்கிதனில்வைத்தெடுத்துக்-கொள்கமுனஞ்சொன்னமனுக்கொண்டு" சித்திரை முதலிய மாதங்களில் காடுகளில் விழுந்துகிடக்கின்ற உலர்ந்த கோமயங்களைக்கொண்டுவந்து (இதை இத்தேயவர்கள் காட்டெருமுட்டை என்பர்.) இடித்துத் தூளாக்கி கோசலம் விட்டுப் பிசைந்து முன் கற்பவிதியிற் சொன்னது போலவே அமைத்துக்கொள்க. இவ்வுலர்ந்த கோமயத்திற்கு பசுவின் பகுப்பில்லை.

## இனி அதமவிபூதிசிருட்டி.

"வன்னிவனந்தன்னிலுறவியல்பாய்வாய்த்தபொடி-தன்னையெடுத்திடுகதான்" "வார்த்திடுகவானைந்துமற்றதனிற்கையாலே- சேர்த்திடுபோகந்தெரிந்து" என்ற குறட்படி காடுகள் தானகப்பற்றி எரிதலிலுண்டாகின்ற சாம்பரினை அள்ளிக்கொண்டுவந்து பஞ்சகவ்வியம்விட்டு முன்சொன்ன முறைப்படி அமைப்பதுப்கற்பமென்றறிக.

இவையல்லாதவை யனைத்தும் அகற்பம் என்றறியவும்.

இனி மந்திரவிபூதியே சைவரு மற்றவரும் தரிக்கத்தக்கன என்றறிக.

இவ்வாறான விபூதி ஆகமத்திலும் வேதத்திலும் கூறப்பட்டதென்றறிக.

இனி இவ்விபூதியே மருந்தென்பதை வேதமுகத்தால் விளக்குவாம், [illegible] என்றும்,

[illegible]

தத்ராச்சர்யமதீவாஸீத்ப்ரதிபிம்பசமத்யுதிஃ வாஸுதேவசுத்தமுக்தாபலவர்ணோ பவத்க்ஷணாத் பஸ்மபக்ஷயதக்யுதஃ என்றும், ததாப்ரிருதி சுக்லாபோவாஸுதேவ ப்ரஸன்னவான் என்றும் வேதங் கூறுகின்றது.

அதாவதொருகாலத்தில் மோகாந்தகாரமும் கருநிறமுமடைந்திருந்த திருமால் இறைவன் தன்மார்பிலணிந்திருந்த விபூதியை யெடுத்துக்கொடுக்க அதையுண்ட வவ்வளவில் மயக்கமுமொழிந்து வெண்ணிறமும் அடைந்து அந்நாள்முதல் வெள்ளைமாலாயினனென்று கூறுகின்றது. இதனாலும் இன்னமுள்ள புராணாதி உதாரணாதிகளாலும் விபூதி மருந்தென்றறிந்துகொள்க.

இனி விபூதி மந்திரமென்பதையும் வேதவாக்கியங்களாலுணர்த்துகின்றாம்.

அகலிகையின் பேரழகைக் கண்டு அவளுடைய கல்யாண காலத்தில் அங்கு வந்திருந்த வனைவரும் அவண்மீது காமுற்று வருந்தினார்கள். அதனை யுணர்ந்த துருவாசர் ஸ்ரீவிபூதியை யபிமந்திரித்து மோகமுற்றிருந்தவர்களுக்களித்தனர். அவ்விபூதியைத் தொட்ட வனைவரும் வீண்மோக மொழிந்தவர்களானார்கள் என்று ஜாபால சுருதிமுறையிடுகின்றது.

[illegible]

ஸ்ரீகௌதமவிவாககாலே தாமஹல்யாம் த்ருஷ்டுவாஸர்வே தேவாஃ காமாதுரா அபவந்ததாநஷ்டஞ்ஞா துர்வாஸஸம்கத்வா பப்ரச்சுஸ்ததோஷம் ஸமபாஷ்யா மீத்யுவாசததஸதருத்ரோணமந்திரிதம் மந்திரேண பஸ்மவைபுரா மயாபிதத்தம் ப்ரமஹத்யாதிசாந்தம் இத்யேவமுக்த்வா துர்வாஸாதத்தவான்பஸ்மசோத்தமம் ஜாதாமத்வசனாத்ஸர்வே யாயந்தேதிகதேஜஸஃ சதருத்ரோண மந்திரேண பஸ்மோத்தூளித விக்ரஹாஃ நிர்த்தூதரஜஸஸர்வே தத்க்ஷணச்சவயம்முனே ஆச்சர்யமேதத்ஞானி மோபஸ்மஸாமர்த்தியமீதிர்ஸம் என்று கேட்கப்படுதலைகொணர்க.

இனி எல்லாம் விபூதியே யென்பதை.

ஸஹ்ரிரிதி ஹஸ்ம வாயுரிதி ஹஸ்ம ஜலமிதி ஹஸ்ம-ஸ்தலமிதி ஹஸ்ம வ்யோமேதி ஹஸ்ம தேவாஹஸ்ம ருஷயோஹஸ்ம ஸர்வ்ம ஹவா ஏததிதம் ஹஸ்மபூதம்பாவ நம் நமாமி.

"அக் னிரிதிபஸ்ம வாயுரிதிபஸ்ம ஜலமிதிபஸ்ம ஸ்தலமிதிபஸ்ம வ்யோமேதி பஸ்ம தேவாபஸ்ம இர்ஷயோ பஸ்ம ஸர்வ்ம் ஹவா ஏததிதம் பஸ்மபூதம் பாவநம் நமாமி" என்று ஜபாலசுருதி கோஷித்தலால் பஸ்மமான விபூதி பரமபாவனமும் எல்லாமும் ஆனது என்பதையுணர்க.

இவ்விபூதி வேதத் திற் கூறப்பபடுவதென்பதை நாம் காட்டிய வேதவாக்கியங்களே நிலைப்பிக்கும் ஆதலால் வேறு கூறவேண்டுவதில்லை. (௬௩)

மெய்யி லிட்டனர் வருடலும் வெஞ்சுரந் துறந்த
மையில் சிந்தையோர் வெகுளியிற் றணிந்தது வாசஞ்
செய்த தண்பனி நீர்விரைச் சந்தனந் திமிர்ந்தா
லெய்து தண்மையை தாயின திறைவலப் பாகம்.

(இ-ள்.) அரசனுடைய உடலிலிட்டுத்தடவுதலும் அக்கொடிய சுரமானது துறவுபூண்ட களங்கமற்ற பெரியவர்களின் கோபத்தைப்போல தணிந்தது. உடனே அரசனுடைய வலதுபுறம் செவ்விய தண்ணிய பனிநீரினுற் குழைக்கப்பெற்ற வாசனைபொருந்திய சந்தனத்தைப் பூசிக்கொண்டால் உண்டாகும் குளிர்ச்சியைப்போல வாகியது. எ-று.

பெரியவர்களிடத்திலுண்டாகுங் கோபமானது ஒருகணமேனுமவர்களிடத்து நிலைக்காமல் உடனே எவ்வளவு விரைவாகவந்ததோ அவ்வளவு விரைவாகப்போய் விடும் அதுபோலவே ஸ்ரீசம்பந்தப்பெருமானுடைய திருமந்திரத்திருநீறு பட்ட வுடனே மன்னவனது வலப்புறம் கொஞ்சங்கொஞ்சமாகச்சுரநீங்காமல் ஒருசேர நீங்கினமையால் "மையல்சிந்தையோர் வெகுளியிற்றணிந்தது" என்றனர். (௬௪)

பொழிந்த தண்மதுத் தார்புனை பூழியர் கோனுக்
கிழிந்த செய்கையர் கைதொட வெரிபடு சுரத்தாற்
கழிந்த துன்பமுங் கவுணியர் கைதொடச் சுரந்தீர்ந்
தொழிந்த வின்பமு மிருவினை யொத்தபோ லொத்த.

(இ-ள்.) தேனொழுகுகின்ற குளிர்ச்சிபொருந்திய மலர்மாலையணிந்த பாண்டிமன்னவனுக்கு இழிவுபொருந்திய செய்கையினையுடைய சைனர் கைதொடுதலால் உண்டான மிகுந்த துன்பமும் கௌணியர்பெருமான் கையினுற்றொடச் சுரநீங்கி ஒழிந்ததனுலுண்டான இன்பமும் இருவினையுஞ் சமப்பட்டாற்போல பட்டன. எ-று.

புண்ணியமும் பாவமும் சமப்படுதலே இருவினையொப்பு அதனைப்போல சமணர்தொட்டபுறத்தி லெவ்வளவு துன்பமுண்டாகியதோ அவ்வளவு இன்பம் மிகுதியாக ஞானசம்பந்தப்பெருமான் திருநீறிட்ட வலதுபுறம் இன்பத்தை அளித்தது என்றுணர்த்த "இருவினையொத்தபோலொத்த" என்றனர். (௬௫)

ஐய விச்சுர மாற்றரி தாற்றரி தென்னு
வையை நாடவன் வல்லமண் மாசுதீர்ந் தடியே
னுய்ய வேண்டுமே லதனையு மடிகளே யொழித்தல்
செய்ய வேண்டுமென் றிரந்தனன் சிரபுரக் கோனை.

(இ-ள்.) வையைநாட்டினையுடைய பாண்டியன் சிரபுரத்தலைவராகிய சம்பந்தப்பெருமானைப்பார்த்து ஐயனே! இந்தச்சுரநோய் சகிக்கக்கூடாதது சகிக்கக்கூடாதது என்றுகூறி வலிய சைநமாசில்நின்றும் நீங்கி அடியேன் உய்யவேண்டுமானால் அவ்விடதுபுறத்துநோயையும் சுவாமிகளே நீக்கியருளல்வேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொண்டனன். எ-று.

பெரியவர்களைக்கண்டவுடனே மந்தபக்குவனும் பெரியவர்களைத் தரிசனஞ்செய்த விசேஷத்தினால் பரிசுத்தர்களாவது முறையாதலால் அரசனும் ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானைத் தரிசித்த விசேஷத்தினாலேயே தனது அனுஷ்டான மதத்தை "அமண்மாசு" என்றான் என்க. (௬௬)

பிள்ளை யாரிடப் பாகமும் பண்டுபோற் பெருமான்
வெள்ளை நீறுதொட் டங்கையா னீவுமுன் மேனா
ளுள்ள கூனொடு வெப்புநோ யொழிந்து மீனுயர்த்த
வள்ளன் மாசறக் கடைந்தவிண் மணியெனப் பொலிந்தான்.

(இ-ள்.) உடனே ஞானசம்பந்தப்பெருமான் அவ்வரசனதிடப்பாகத்தையும் முன்னையைப்போலவே சிவபெருமானுடைய வெண்ணிற விபூதியையெடுத்து அகங்கையினாலே தடவுதற்குமுன்னர் முன்னாளிலுள்ளதாகவிருந்த கூனுடனே சுரநோயும் நீங்கி மீனக்கொடியினையுடைய பாண்டியன் களங்கமறக்கடைந்த விண்மணியைப்போல விளங்கினான். எ-று.

விண்மணி-சந்திரன். "மாசறக்கடைந்தமணி" என்றதை மேலுலகத்து களங்கமுள்ள வேறுமணிகளின்மையால் சந்திரனென்றாம். (௬௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அன்னதொரு காரணத்தாற் சவுந்தரிய பாண்டியனென் றாகி யன்ன,
தென்னவர்கோன் கவுணியர்கோன் றிருநோக்காற் பரிசத்தாற் றெருட்டும்வாக்காற், பொன்னடிதாழ்ந் தைந்தெழுத்து முபதேசப் பேறடைந்த பொலிவால் வஞ்சந், துன்னமணர் நெறியிகழ்ந்து தொல்வேதநெறி யடைந்து தூயனானான்.

(இ-ள்.) அந்த ஒருகாரணத்தினாலே சவுந்தரியபாண்டியனென்று விளிக்கப்பெற்றவனாய் அந்தப்பாண்டியன் புகலியிறைவனுடைய திருநோக்கத்தாலும் பரிசத்தாலும் அவர் தெளிவித்த வாசகங்களாலும் அவருடைய பொன்மயமான திருவடிகளில் வணங்கி பஞ்சாக்ஷரோபதேசம்பெற்று விளங்கியவிளக்கத்தால் வஞ்சனைநெருங்கிய க்ஷமணவழியை இகழ்ந்து தான் முன்னே நின்ற வைதீக மார்க்கத்தையடைந்து பரிசுத்தனானான். எ-று.

முன்னஞ் சைவத்துவேஷியாக விருந்த வம்மன்னவன் பரிசவேதிபட்ட உலோகங்கள் பொன்னுமாறுபோல ஞானசம்பந்தப்பெருமானுடைய திருக்கரம்பட்டமையால் துவேஷம் நீங்கி அவரடிமலரிற்பணிந்து உள்ளபடி திருந்திச் சைவனாகி சமணினின்றகன்றனனென்றுணர்க.

பார்வை முதலியவை தீக்ஷைக்கிரமமாம்.

பாண்டியனும் முறையே உபதேசம்பெற்றனன் என்று குறிப்பிக்க, "திருநோக்காற்றெருட்டும்வாக்கால்" என்றனர். (௬௮)

பாண்டியன் சுரந்தீர்த்தபடலம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௩௧௭௪.

உ

சிவமயம்.

# சமணரைக்கழுவேற்றிய படலம்.

பஞ்சவ னடைந்த நோயைப் பாலறா வாயர் தீர்த்து
நஞ்சணி கண்ட னீறு நல்கிய வண்ணஞ் சொன்னேம்
மஞ்சல ராகிப் பின்னும் வாதுசெய் தடங்கத் தோற்ற
வஞ்சரைக் கழுவே றிட்ட வண்ணமுஞ் சிறிது சொல்வாம்.

(இ-ள்.) பாண்டியனடைந்திருந்த சுரநோயை ஞானசம்பந்தப்பெருமான்நீக்கி விடத்தையாபரணம்போல் கண்டத்தினிறுத்திய ஸ்ரீகண்டபரமேசுவரரது திருநீற்றை யளித்த தன்மையையுரைத்தோம் இனி அஞ்சாதவர்களாய் வாதுப்புரிந்து முற்றிலுந் தோற்ற வஞ்சர்களான சைனர்களைக் கழுவிலேற்றிய தன்மையையுஞ் சற்றேசொல்லுகின்றோம். எ-று. (க)

தென்னவன் றேவியாரு மமைச்சருட் சிறந்த சிங்க
மன்னவன் றானுங் காழி யந்தண ரடியில் வீழ்ந்தெம்
மன்னவன் வெப்புங் கூனும் பாசமு மாற்றி னீரோ
யின்னமு மடியேம் வேண்டுங் குறைசெயத் தக்க தென்றார்.

(இ-ள்.) பாண்டிமாதேவியாரும் மந்திரியருட் சிறந்தசிங்கவேற்றையொத்த குலச்சிறையாரும் காழிமறையவரான பாலறாவாயரது திருவடிகளில் விழுந்து எமது அரசனது சுரநோயையும் கூனையும் பாசத்தையும் நீக்கினவரோ! தேவரீர் அடியோங்களால் வேண்டிக்கொள்ளப்பட்ட குறையை இன்னமுஞ் செய்யத்தக்கது என்றுகூறினார்கள். எ-று. (உ)

கன்னிநா டெங்கு மிந்தக் காரமண் காடு மூடித்
துன்னின விதனை யின்னே துணித்திடல் வேண்டு மென்றா
ரன்னவ ராலவா யார் திருவுள்ள மறிவே னென்று
வுன்னிய மனத்த ராகி யொய்யெனக் கோயில் புக்கார்.

(இ-ள்.) இப்பாண்டிநாட்டினெவ்விடங்களிலும் இந்தக் கரியசைனமதமாகிய காடுமூடி நெருங்கின இதனை இப்பொழுதே வெட்டியகற்றல்வேண்டும் என்றனர். உடனே அதனைக்கேட்ட காழியண்ணல் திருவாலவா யிறைவருடைய திருவுளத்தை யறிவேனென்று நினைத்த மனதுடையவராய் விரைவாக வாலயத்தையடைந்தனர்.

அவ்விரு வோருங் கூட வடைந்துபொற் கமலம் பூத்த
திவ்விய தீர்த்தந் தோய்ந்து சேனெடுங் கண்ணி பாக
நவ்வியங் கமலச் செங்கை நாதனைத் தாழ்ந்து வேந்தன்
வெவ்விய வெப்பு நீத்தார் தொழுதிது வினவு கின்றார்.

(இ-ள்.) பாண்டிமாதேவியாரும் குலச்சிறையுமாகிய இருவர்களும் சம்பந்தப்பெருமானுடன் சென்று பொன்னந்தாமரையலர்ந்த சுவர்க்கசம்பந்தமான தீர்த்தத்திலேமுழுகி நெடியசேல்மீன்போன்ற கண்ணினையுடையஉமாபிராட்டியை யொருபுறத்திலுடைய மானணிந்த செவ்வியகமல மலர்போன்ற திருக்கரத்தினனாகிய இறைவனைவணங்கிப் பாண்டியனுடைய உஷ்ணசுரநோயையொழித்த சம்பந்தப்பெருமான் தொழுது இதனை வினவுகின்றனர். எ-று. (ச)

காயமே யொறுத்து நாளுங் கைதவம் பெருக நோற்கும்
பேயரை யிம்மை யோடு மறுமையும் பேறற் றாரை

நீயுரை செய்த வேத வேள்வியை நிந்தை செய்யுந்
தீயரை யொறுத்தல் செய்யத் திருவுளஞ் செய்தி யென்றார்.

(இ-ள்.) காயக்கிலேசத்தையுண்டாக்கி எப்பொழுதும் பொய் அதிகமாக நோன்பனுசரிக்கின்ற பேயர்களான சைனர்களை இகபரசாதகங்களொன்று மில்லாதவர்களை உன்னாலுரைக்கப்பட்ட வேதவேள்விகளை நிந்தைசெய்கின்ற தீயர்களைத்தண்டித்தற்குத் திருவுளஞ்செய்வாயாகவென்று விண்ணப்பித்தனர். எ-று. (ரு)

வெம்மத வேழங் காய்ந்த விடையவர் விசும்பிற் சொலவா
ரெம்மனோ ராவீர் நுங்கட் கிசைந்ததே யெமக்கு வேண்டுஞ்
சம்மத மதனால் வெல்லத் தக்கவ ராக நீரே
யம்மத முடையார் தோற்கத் தக்கவ ராக வென்றே.

(இ-ள்.) வெவ்வியமதத்தினையுடைய யானையைக்கொன்ற இடபவாகனராகிய சிவபெருமானார் ஆகாயவாணியினாற் கூறுகின்றனர். (எவ்வாறென்னில்) நீங்கள் எம்மைச்சேர்ந்தவர்கள்; உங்கட்கெதுசம்மதமோ அதுவே எமக்குவேண்டிய சம்மதம் ஆதலால் நீங்கள் வெல்லத்தக்கவர்களாகுங்கள். அந்தசினமதத்தையுடையவர்கள் தோற்கத்தக்கவர்களாகுக என்று (கூறியருளினார்.) எ-று. (சு)

எம்மொழி தேறி னீர்போ யிறைமக னவையத் தேறிச்
செம்மையி லாரை வாது செய்திர்சீ ரணையார் தோற்று
வெம்முனைக் கழுவி லேறி விளிகுவ ரென்னக் கேட்டு
மைம்மலி களத்தான் மைந்தர் தொழுதுதம் மடத்திற் போனார்.

(இ-ள்.) எமது வாக்கியத்தை யுணர்ந்தவர்களே நீங்கள்சென்று அரசனுடைய சபையையடைந்து ஒழுக்கமற்றவர்களான சைனர்களுடனே வாதம்புரியுங்கள் புரிந்தால் அவர்கள் தோற்று வெவ்விய முனையினையுடைய கழுவிலேறி இறப்பார்கள் என்று கூறியதனைக்கேட்டு விடமிருந்த கண்டத்தினையுடையவருடைய புதல்வர் அவ்விறைவரைவணங்கி விடைபெற்றுத் தமது திருமடத்திற்குச் சென்றார். எ-று. (எ)

இருவரு மீண்டு த்த மிருக்கையிற் போகி யன்றைப்
பருவமங் கழிந்த பின்னாட் பாண்டிமா தேவி யாரும்
பெருமதி யமைச்ச ரேறும் பிள்ளையார் மடத்திற் போகி
யருகரை வெல்லுஞ் சூழ்ச்சி யாதென வளந்து தேர்வார்.

(இ-ள்.) அமைச்சனாரும் அரசியாருமாகிய இருவர்களுந்திரும்பித்தங்களிருப்பிடத்தையடைந்து அத்தினங்கழிந்து பிற்றை நாள் அப் பாண்டிமாதேவியாரும் மிகுந்த புத்தியினையுடைய முதன் மந்திரியாரும் ஞானசம்பந்தப்பிள்ளையாரது திருமடத்திற்குச்சென்று அருகர்களைவெல்லுகின்ற தந்திரம்யாது என்று ஆலோசித்து தேர்பவர்கள். எ-று. (அ)

பேரரு ணிறைந்த காழிப் பெருந்தகை யுடன்போய்த் தங்கோன்
சீரவை குறுகி யீது செப்புவார் செய்ய கோலாய்.
காரமண் காடே யெங்குங் கழியவு மிடைந்த வின்ன
வேரொடுங் களைந்தாற் சைவ விளைபயி ரோங்கு மென்றார்.

(இ-ள்.) மிக்க வருணிறைந்த ஸ்ரீகாழிப் பெருந்தேவரான ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமானுடனே தமதரசனுடைய சிறந்த சபையையடைந்து இதனைக் கூறுகின்றார்கள். செங்கோன் மன்னனே! எவ்விடங்களிலும் மிகவுங் கரிய சைனக்காடே நெருங்

கியிருக்கின்றன. இதனை வேரோடுங் களைந்தால் சைவ மென்னும் விளைபயிரானது ஓங்குமென்றுரைத்தனர். எ-று. (கூ)

அவ்வண்ணஞ் செய்வ தேயென் றரசனு மனுச்சை செய்யச்
செவ்வண்ண வெண்ணீற் றண்ணலனுச்சையுந் தெரிந்து தேய
முய்வ்வண்ண மிதுவென் றங்க ணுண்மகிழ்ந் திருந்தார் நீண்ட
பைவ்வண்ண வாரம் பூண்டார் புகழெங்கும் பரப்ப வல்லார்.

(இ-ள்.) நீண்ட படத்தினையுடைய அழகிய அரவாபரண மணிந்தவருடைய புகழினை எவ்விடங்களிலும் பரவச்செய்தற்கு வல்லுநராகிய ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான் அவ்வாறே சமணக்காட்டை வேரொடுங் களைந்து சைவப்பயிரை வளர்மி னென்று அரசனும் ஆக்கியாபித்ததனையும் இதற்கு முன்னமே செந்நிறமான திருமேனியில் வெண்ணிறமான விபூதியணிந்த சிவபெருமானுடைய கட்டளையையுமறிந்து இது தேயம் உய்தற்கு தக்கது என்று அவ்விடத்தில் மனமகிழ்ச்சியுடனெழுந்தருளி இருந்தனர். எ-று. (௪0)

கலிவிருத்தம்.

அந்த வேலை யருகந்தக் கையரைக்
குந்த வேற்கட் குலமட மாதரு
மைந்த ராகிய மக்களுங் கண்ணழல்
சிந்த நோக்கி யிகழ்ந்திவை செப்புவார்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் கீழ்மக்களான சைநர்களைக் கண்களில் தீப் பறக்கக் குந்தவேல்போலுங் கண்களையுடைய குலமடமாதர்களும் புத்திரர்களாகிய புருடர்களும் இகழ்ந்து இவைகளைக் கூறுவாராயினர். எ-று. (கக)

செழியர் கோமகன் மூழ்கிய தீப்பிணி
கழிய மாற்றும் வலியின்றிக் கற்றிலா
மழலை வாயொரு மைந்தற்குத் தோற்றுவெம்
பழிவி ளைத்தனீர் புகவன் றமர்க்கெலாம்.

(இ-ள்.) நீங்கள் பாண்டியராஜன் அடைந்திருந்த சுரவியாதி நீங்க நீக்கச் சாமர்த்தியமின்றிக் கற்காத மழலைச்சொல்லினை யுடைய வாயோடுகூடிய ஒரு சைவச் சிறுவனுக்குத் தோற்றுப் பகவானென அருகதேவனுடைய அன்பர்களுக்கெல்லாம் பழியை உண்டாக்கினீர்கள். எ-று. (கஉ)

சாம்ப ராடுஞ் சமயம் புகுந்துவெம்
பாம்பணிந் தவனே பகவானென்ன
வேம்ப னுங்கள் விரதநெறி யெலாஞ்
சோம்ப லெய்தத் துறந்தா னிகழ்ந்தரோ.

(இ-ள்.) சாம்பலைப் பூசுகின்ற சமயத்தை யடைந்து வேப்பிலையை யணிந்த பாண்டியன் பாம்பினையணிந்தவனே பகவானென்று கருதி உங்கள் விரதமார்க்கங்களனைத்தையும் சோம்படையத் துறந்து இகழ்ந்தனன். எ-று. (கங)

ஏதுமக்கு நிலையினி யென்றவப்
போதுமற் றவர்தம்மைப் புறகிட
வாதுசெய் தற்கெழுந்தனர் வஞ்சகர்
போது மென்னத் தடுத்தனர் பூவைமார்.

(இ-ள்.) இனி உங்களுக்கென்ன நிலையிருக்கின்றது என்று அவர்கள் கூறிய வுடனே தம்மைச் சுரவியாதி நீக்குவதில் வென்ற ஸ்ரீவைதிகவாரணரான ஸ்ரீஞானசம்பந்ததேசிகரை வெல்லுதற்கு வஞ்சனையினையுடைய அவர்களெழுந்தார்கள். உடனே சைனமாதர் நேற்று தோற்றதே போதும் இனிப் போகாதேயுங்கள் என்று கூறித் தடுத்தார்கள். எ-று. (௧௪)

கலிநிலைத்துறை.

செல்லன் மின் கனுமக்கிது செவ்வியன்
றல்லல்கூர வருந்துன் பத்தாழநா
மெல்லிகண்ட கனவுண்டி தனையாஞ்
சொல்லுகே மின்றுகேண்மெனச் சொல்லுவார்.

(இ-ள்.) போகாதேயுங்கள் உங்களுக்கிது காலமல்ல நீங்கள் கொடிய துன்பத்தின் மூழ்க நாங்கள் இரவிற்கண்ட கனுக்களிருக்கின்றன; அக்கனுத்திறங்களைச் சொல்லுகின்றோம். இதனை இன்று கேளுங்களென்று சொல்லுகின்றார்கள். எ-று.

இடையறாதுநம் பாழியும் பள்ளியு மெங்குஞ்
சடையர் முஞ்சியர் சாம்பலர் தாங்கிய சூலப்
படையர் தீவிழிப் புலவுவாய்ப் பாய்பெரும் புலித்தோ
லுடைய ராய்ச்சிலர் வந்துவந் துலாவுதல் கண்டேம்.

(இ-ள்.) நமது பாழிகளிலும் பள்ளிகளிலுமெல்லாம் சடையர்களும் முஞ்சியர்களும் சாம்பல் பூசினவர்களும் சூலாயுதந் தாங்கினவர்களும் தீவிழியையும் புலவுகமழும் வாயையும் உடைய பெரும்புலித்தோலினை யுடுத்தினவர்களுமாகச் சிலர் வந்து வந்து உலாவுதலைக் கண்டோம். எ-று. (௧௫)

கன்னி யிற்றுற வன்னங்கள் கணவனிற் றுறவின்
மன்னு மாரியாங் கனைகனுல் வாங்குமங் குசைக
ளென்ன மூவகைப் பெண்டவப் பள்ளிக ளெல்லாஞ்
சின்ன வெண்பிறைக் கோட்டுமா சிதைக்கவுங் கண்டேம்.

(இ-ள்.) கன்னிப்பருவத்திலே துறவடைந்த அன்னங்களும் புருடனிருக்கத் துறவடைந்த ஆரியாங்கனைகளும் விதவைகளான அங்குசைகளும் என்று கூறப்பட்ட மூன்று பகுதியினையுடைய பெண்கள் தவஞ்செய்யும் பள்ளிகளனைத்தையும் சிறிய வெள்ளிய பிறைபோன்ற கொம்பினையுடைய யானை அழிக்கவுங் கண்டோம். எ-று.

முண்டி தஞ்செய்த தலையராய் முறுக்குறி தூங்கு
குண்டி கைத்தடங் கையராய்க் கோவணம் பிணித்த
தண்டு தாங்கிய சுவலராய்ச் சடையன்பேர் நாவிற்
கொண்ட சைத்தன ராயெங்குங் குலாவவுங் கண்டேம்.

(இ-ள்.) முண்டிதஞ் செய்யப்பட்ட தலையினையுடையவர்களும் முறுக்கப்பட்ட உறிகளில் தொங்குகின்ற கமண்டலங்களையுடைய பெரிய கைகளையுடையவர்களும் கௌபீனங்கட்டிய தண்டத்தை யேந்திய தோளினையுடையவர்களும் சடையனுடைய பெயரை நாவிற்கொண்டு கூறுபவர்களுமாகி யுள்ளவர்கள் எவ்விடங்களிலும் கலந்து மகிழ்ந்திருத்தலைக் கண்டேம். எ-று. (௧௮)

காந்து வெங்கத முடையமேதார் கபந்தலை வந்து
சூழ்ந்து கொண்டுநம் மடிகண்மார் கணமெலாந் துரத்தி
யேந்து பூஞ்சினை யலைந்திட விரங்கிவண் டிரியப்
பாய்ந்து பிண்டியை வேரொடும் பறிக்கவுங் கண்டேம்.

(இ-ள்.) ஒளிவிடுகின்ற மிக்க கோபத்தினையுடையதாகிய ஒரு யானை இவ்விடத்திற்குவந்து சுற்றிக்கொண்டு நமது அடிகண்மார் இனமனைத்தையும் ஒட்டி புட்பங்களைச் சுமந்துகொண்டு நிற்கிற கிளைகளெல்லாமசையவும், வண்டுகளெல்லாம் இரைந்துகொண்டு விலகியோடவும் முட்டி அசோகினை வேரோடு பறித்ததனையும் பார்த்தோம். எ-று. (கக)

அந்த மூவிலை வேலினு மயின்முனைக் கழுவின்
பந்தி மீதுநீ ரோறவுங் கண்டுளம் பனிப்பச்
சந்த மார்பகஞ் சேப்பவந் தளிர்க்கரம் புடைத்துக்
கந்த வார்குழல் சோரவுங் கலுழவுங் கண்டேம்.

(இ-ள்.) நீங்களந்த மூவிலைவேல்களினும் கூரிய முனையோடு கூடிய கழுவின் வரிசைகளினுமேறவுங்கண்டுமனந்துடிப்ப சந்தனமணிந்தமார்பினிடஞ்சிவக்கஅழகிய தளிர்போன்ற கையினாலடித்து மணம்பொருந்திய கூந்தல் அவிழவுமழவுங்கண்டோம்.

தள்ள ருந்திற லிந்திர சாலமோ காதி
யுள்ள விஞ்சையிவ் வெல்லைவந் துதவில வொன்றுங்
கள்ள ராற்பறி பட்டவோ கனலில்வெந் தனவோ
வெள்ளங் கொண்டவோ சேமத்திற் கிடப்பவோ விளம்பீர்.

(இ-ள்.) நீக்குதற்கரிய சாமர்த்தியத்தினையுடைய இந்திரசாலமோகன முதலியவைகளாகவுள்ள வித்தைகளொன்றும் இந்தசமயத்தில்வந்து உதவினதில்லை. ஆதலாலிவைகள் பகைவர்களாகிய திருடர்களா லபகரிக்கப்பட்டனவோ? அல்லது தீயால் வெந்தனவோ? அல்லது வெள்ளத்தாற் கொண்டுபோகப்பட்டனவோ? அல்லது க்ஷேமத்திற்கிடக்கின்றனவோ? சொல்லுங்கள். எ-று. (உக)

தாவு தீவளர்த் தெழுகரி தன்னையா டரவை
யாவை யேவிமுன் னம்மனோர் பட்டது மறிந்தீர்
காவ லன்பிணி தணித்திலீ ரினிச்செயுங் கருமம்
யாவ தாகுமோ வதனையு மெண்ணுமி னென்றார்.

(இ-ள்.) மேலோங்கி வளர்கின்ற தீயை வளர்த்து அதிலுண்டான யானையையும் ஆடுகின்ற பாம்பினையும் பசுவினையும் அனுப்பி முன்னாளில் நம்மவர்கள் அடைந்ததனையுமறிந்திருக்கின்றீர்கள். நீங்களோ பாண்டியனுடைய சுரநோயை நீக்கினீரில்லை. இனி நீங்கள் செய்யுந்தொழிலென்னாய் முடியுமோ அதனையு மாலோசியுங்கள் என்று கூறினார்கள். எ-று. (உஉ)

இற்றை வைகலுக் கேகன்மி னென்றன ரறத்தைச்
செற்ற வஞ்சகர் செல்லுவார் திரும்பவுங் கையைப்
பற்றி யீர்த்தனர் பெண்டிர்சொற் கேட்பது பழுதென்
றுற்ற தீவினை வழிச்செல்வா ரொளித்தனர் செல்வார்.

(இ-ள்.) இன்றைய தினத்திற்குப் போகாதேயுங்கள் என்று கூறினார்கள் அவர்களவ்வண்ணமுரைத்தும் தருமத்தையழித்த வஞ்சகர்கள் போகத்தொடங்கினார்கள். பின்னும் நீங்கள் போகாதேயுங்களென்று அவர்கள் கையைப்பிடித்து நிறுத்தினார்கள்; அதற்கவர்கள் பெண்கள் வாக்கியங்களை கேட்பது குற்றமென்று பொருந்திய தீவினையின் மார்க்கத்தை அனுசரித்துச் செல்பவர்கள் ஒளித்துச்செல்லுவாராயினர்.

கொங்க லர்க்குழல் சரிந்திடக் குரத்தியர் பின்னு
மெங்கள் சொற்கொளா தேகுவீர் பரிபவ மெய்தி
யுங்க ளுக்கிடை யூறுவந் துறுகெனச் சபித்தா
ரங்க தற்குமஞ் சார்செல்வா ரழியுநா ளடுத்தார்.

(இ-ள்.) மணமலரணிந்த குழல் சரியக் குரத்தியர் பின்னரும் நீங்களெங்கள் வாக்கியங்களைக்கேட்காமல் செல்கின்றீர்கள்; இதனால் உங்களுக்கு காரியவிக்கினமும் அதனால் பரிபவமும் உண்டாகட்டும் என்றுரைத்துச் சபித்தார்கள். மரணஞ்சமீபித்த அவர்கள் இவர்களிவ்வாறு சாப மிட்டதற்கும் அஞ்சாதவர்களாய்ச்சென்றார்கள்.

புட்க ளும்பல விரிச்சியும் போகலென் றெதிரோ
தட்க வுங்கடந் தேகுவார் தடங்கயல் லுகைப்பக்
கட்க விழ்ந்தலர் கிடங்கர்சூழ் கடிநகர்ப் புறம்போ
யுட்கு நெஞ்சரா யாவரு மோரிடத் தீண்டி.

(இ-ள்.) இவர் போகும்பொழுது பறவைகளும் பலவிருச்சிகளும் நீங்கள் போகாதேயுங்களென்று எதிரே தடுக்கவும் அவைகளையுங்கடந்து செல்லுமவர்கள் தடாகங்களிலுமுள்ள கயல்மீன்கள்மோத தேனினைச்சிதறிக்கொண்டலருகின்ற கிடங்குசூழ்ந்த காவலினையுடைய இராஜநகரத்திற்கு வெளியேசென்றுஇடிந்தமனமுடையவர்களாய் அனைவரும் ஒருவிடத்திலெநருங்கி. எ-று. (உ௫)

யாது சூழ்ச்சியென் றெண்ணுவா ரிறைவனைக் கண்டி
தோதி நாமவ னனுமதி யுறுதிகொண் டனைய
வேதி லாளனை வாதினல் வேறுமென் றிசைந்து
போது வார்நகர் புகுந்துவேத் தவைக்களம் புகுவார்.

(இ-ள்.) என்ன ஆலோசனை இதற்கென்று ஆலோசிக்குமவர்கள் நம்மரசனைக் கண்டு இதனைக்கூறி அவனுடைய அனுமதியாகிய வுறுதியைக்கொண்டு அந்தப் பகைவனை வாதினல் வெல்லுவோமென்று சம்மதித்துப்போகின்றவர்கள் ஊருக்குட் சென்று அரசசபையை யடைந்தனர். எ-று- (உ௬)

ஆய போதிளங் காலையிற் கவுணியரால
வாயர் சேவடி பணிந்துதம் மடத்தினிற் செல்லக்
காயு மாதவச் செல்வனை கங்குல்சூழ்ந் தாங்கு
மாய வஞ்சகர் வந்திடை வழித்தலை மறித்தார்.

(இ-ள்.) அப்பொழுது வைகறைப்பொழுதிலேயே கவுணியரான ஞானசம்பந்ததேசிகர் திருவாலவாயுடையவரது செவ்விய திருவடிகளை வணங்கித் தமது திருமடத்திற் செல்லுஞ்சமயத்தில வெயில் வீசுகின்ற பாலசூரியனை இருள்சூழ்ந்தாற் போல் மாயத்தினையும் வஞ்சனையினையும் உடையவர்கள் வந்து நடுவழியில் மறித்தார்கள். எ-று. (உ௭)

மறித்த கையர்பின் செல்லமுன் மன்னுவை குறுகிக்
குறித்த வாளரித் தவிசின்மேற் கொச்சையர் பெருமா
னெறித்த சேயிளம் பரிதியி னேறிவீற் றிருந்தார்.
பறித்த சித்தலைப் புலையர்கள் பொருதிவை பகர்வார்.

(இ-ள்.) கொச்சைத்தலைவராகிய ஞானசம்பந்தப்பெருமான், தடுக்கப்பட்ட கையினையுடைய சைநர் பின்னேவர, முன்னே இராஜசபைக்குச்சென்று, ஒளிவிடுகின்ற சிங்காதனத்தின்மீது கதிர் வீசுகின்ற இளஞ்சூரியனைப்போல ஏறி எழுந்தருளியிருந்தனர்: உடனே பறிக்கப்பட்ட புல்லியதலையினையுடைய வச்சைநர் மனம்பொறாமல் இவைகளைக் கூறுகின்றனர். எ-று.

கொச்சை-சீகாழி. (உ௯)

மழலை யின்னமுந் தெளிகிலா மைந்தகண் மணியொன்
றுழல்க ருங்கொடி யிருந்திடக் கனியுதிர்ந் தாங்குன்
சுழல்கொள் விஞ்சையி னன்மையான் மன்னனைத் தொடுத்த
தழல வித்தன மென்றுநீ தருக்குறத் தகுமோ.

(இ-ள்.) இன்னும் மழலைமொழி நீங்காத மைந்தனே! ஒருமணி இருவிழியிலுமுழலுகின்ற காக்கையிருக்கப் பனம்பழம் விழுந்தாற்போல, உனது சுழற்சிபொருந்திய ஒருவித்தையின் நன்மையினால் இவ்வரசனைப் பற்றியிருந்த சுரத்தைத்தணித்தோமென்று நீ தருக்கடையக்கூடுமோ. எ-று. (உ௧)

நந்து நாகுநீர் வண்டுசென் னடைவழி யெழுத்தாய்
வந்து வீழினும் வீழுமவ் வழக்கினின் கையிற்
சிந்து சாம்பருஞ் சிறுசொலு மருந்துமந் திரம்போற்
சந்து சூழ்மலை யான்சுரந் தணித்தன கண்டாய்.

(இ-ள்.) நத்துக்களும் நாகுக்களும் நீர்வண்டுகளும் செல்லும் வழிகளும் ஒருசமயம் எழுத்தாகவந்தமைந்தாலு மமையும்; அந்த நியாயத்தைப்போல, உனது கையினாற்சிதறிய சாம்பரும் சிறுமொழியும் மருந்தையும் மந்திரத்தையும்போல சந்தனமரங்கள்சூழ்ந்த பொதியமலையினையுடையவனுடைய சுரத்தைத்தணித்தன. எ-று. (௫௦)

உங்கண் மந்திர மேடொன்றிற் றீட்டுக வோரேட்
டெங்கண் மந்திரந் தன்னையுந் தீட்டுக விரண்டு
மங்கி வாயிடின் வெந்தது தோற்றதவ் வங்கி
நுங்கி டாதது வென்றதென் றொட்டியே நுவலா.

(இ-ள்.) நீ உங்கள் மந்திரத்தை யோரேட்டிலெழுதுவாயாக, ஓரேட்டிலெங்கள் மந்திரத்தையு மெழுதலாம். எழுதி, இரண்டையும் தீயினிடத்திலிட்டால், வெந்தது தோற்றது. அத்தீ எந்த வோலையை எரிக்கவில்லையோ அந்த வோலையினையுடையவர்கள் வென்றவர்கள் என்று சபதங்கூறி. எ-று. (௫௧)

செக்க ரஞ்சடை யானுறை பதிகளிற் செய்யத்
தக்க தன்றவ னடுநிலை பிழைத்துநுஞ் சார்வாய்
விக்க மெம்மனோர்க் கியற்றுவான் வேறொரு தலத்திற்
புக்க மர்ந்துவா தஞ்செயப் போதுக மென்னா.

(இ-ள்.) (இக்காரியம்) செந்நிறமான சடையினையுடைய சிவன் வாழ்கின்ற இடங்களிற் செய்யப்படாது. ஏனென்றால், அவன் பொதுமையிற் றவறி உமது பக்கமாயிருக்க, எங்களுக்குத் தீங்கிழைப்பானாதலால் வேறேயொருதலத்திற் சென்றிருந்துவாதஞ்செய்யப்போவோம் என்று. எ-று. (௫௨)

வென்றி மாமுர சறங்கிடா வியனகர்ப் புறம்போய்
மன்றல் வேம்பன்முன் கதழெரி மடுத்திடிற் பிழைப்ப
தொன்று வேவதொன் றீதுநேரன் டுமர்களு மெமரு
மின்று வெல்வதுந் தோற்பதுங் காண்டுமென் றெழுந்தார்.

(இ-ள்.) வெற்றிமுரசொலி நீங்காத பெரிய நகரத்துக்கு வெளியே போய் மணம்பொருந்திய வேப்பமாலையணிந்த பாண்டியனெதிரே பற்றியெரிகின்ற தீயிலிட்டால் பிழைப்பதொன்று, வேவது ஒன்று இதனைக்கொண்டு உங்களவர்களும் எங்களவர்களும் இன்று வெல்வதுந் தோற்பதுங்காணலாம் என்றுகூறியெழுந்தார். எ-று. ()

கலிவிருத்தம்.

ஈட்டுவஞ்ச நெஞ்சரோ யெழீ இநகர்ப்பு றம்புபோய்க்
கீட்டிசைக்க ணோரழற் கிடங்குதொட் டெழுந்துவா
னீட்டு கோட ரங்குறைத்து நிறையவிட்டு நெட்டெரி
மூட்டினார்த மாதரார் வயிற்றுமிட்டு மூட்டினார்.

(இ-ள்.) வஞ்சனைசேர்ந்த நெஞ்சினையுடைய சைனர்களே எழுந்து ஊருக்கு வெளியேசென்று கீழ்ப்புறத்தில் ஒரு அக்கினிகுண்டமமைத்து, ஆகாயமளாவிய மரக்கிளைகளைத்தாமே வெட்டி அக்குழிநிறையவிட்டு எரிமூட்டினார்கள். தங்கள் பெண்களின்வயிற்றிலும் நெருப்பிட்டுமூட்டினார்கள். எ-று. (௫௪)

ஞானமுண்ட முனிவர்தம்மை யெள்ளியெள்ளி நாயினு
மீனரங்கி யைத்தடுத் திருப்பவெண்ணி ராயிர
ரானதொண்ட ருடனெழுந்து சண்பைவேந்து மரசனு
மானனாரு மங்கிரக்கி ழானும்வந்து வைகினர்.

(இ-ள்.) நாயைவிட இழிந்தவர்களான சைனர்கள், ஞானமிர்தமுண்டவரான முனிவரை இகழ்ந்து இகழ்ந்து அக்கினியைத்தம்பனஞ்செய்துகொண்டிருப்பப், பதினாறுயிரம்பேர்களான அடியவர்களுடனே எழுந்து சண்பைத்தலைவரான சம்பந்தப்பெருமானும், பாண்டியனும், மான்போல்பவரான மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் அவ்விடத்திற் சென்றிருந்தார்கள். எ-று. (௫௫)

உள்ளவிழ்ந்த முலைசுரந் தொழுக்குபா லருந்தியே
துள்ளியோடு கன்றுபின் றொடர்ந்துசெல்லு மாவெனு
வெள்ளியம்ப லத்துளாடும் வேதகீர் காதல்கூர்
பிள்ளைபோன வாறுதம் பிராட்டியோடு மெய்தினர்.

(இ-ள்.) உள்ளே விரிந்த முலைசுரந்து ஒழுகிய பாலினையருந்தித் துள்ளியோடுகின்ற கன்றின்பின்றொடருகின்ற தாய்ப்பசுவைப்போல, வெள்ளியம்பலத்தில் திருநடனஞ்செய்கின்ற வேதப்பாட்டினையுடைய இறைவர், தன்மாட்டன்புடைய பிள்ளை சென்றவழியே, தமது பிராட்டியுடனே சென்றனர். எ-று. (௫௬)

ஆறிரண்டு டிரண்டடுத்த வாயிரஞ் சமணரும்
வேறுவேறு தாமுயன்ற மந்திரங்கள் வேறுவே
றாறுநீர் சுரந்தவோலை யிற்பொறித் தொருங்குபோய்ச்
சீறிவா னிமிர்ந்தெழுந்த தீயின்வாய் நிரப்பினர்.

(இ-ள்.) எண்ணாயிரஞ் சமணர்களும் தனியே தனியே தாங்கள் சித்தியாக்கி வைத்திருக்கின்ற மந்திரங்களைத் தனியே தனியே ஊறுகின்ற நீர்சுரந்த பச்சையோலையிலெழுதிக்கொண்டொன்றாகச்சென்று சீறிக்கொண்டாகாயபரியந்தமளாவிய அக்கினியினிடத்து நிறையவிட்டார்கள். எ-று. (௫௭)

அக்கிவாய் மடுத்தவேட னைத்துமக் கணத்தினை
யிக்குவா யுலர்ந்தமேதா டெனக்கரிந்து சாம்பரா
யுக்கவாறு கண்டுநீச ருட்கிடந்து பொங்கவே
திக்குளார்கள் கண்டபேர் சிரித்துளார்க ளாயினர்.

(இ-ள்.) தீயிலிட்ட வேடனைத்தும் அப்பொழுதே கரும்பிற்பொருந்திய உலர்ந்த மேலோலையைப்போற் கரிந்து சாம்பலாய் அழிந்ததனைப்பார்த்து நீசர்களாகியவச்சைநரின் மனங்கிடந்துபொங்க, விதனைக் கண்ட திக்குகளிற் சூழ்ந்து நிற்பவர்கள் சிரித்தார்கள். எ-று. (௫௮)

விரிந்தவேத நாவர்தாம் விரித்தவேத மெய்ப்பொருள்
வரைந்தபுத்த கத்தையுண் கயிற்றினல் வகிர்ந்துதா
மருந்தஞான வமுதளித்த வம்மைபே ரகப்படத்
தெரிந்தவே டெடுத்தடுத்த தீயின்வாயி லிட்டனர்.

(இ-ள்.) விசாலமான வேதங்களையுணர்ந்த நாவினையுடைய ஸ்ரீ ஞானசம்பந்தசுவாமிகள் தம்மாற் றிருவாய்மலர்ந்தருளப்பட்ட வேதத்தின்உண்மைப்பொருளான திரவிட சூக்தங்களை எழுதியுள்ள புத்தகத்தை வளப்பம்பொருந்தியகயிற்றாற்பிளந்து அதில் தாமுன்னமருந்த ஞானமிர்தத்துடன் திருமுலைப்பாலினையுமளித்த பார்வதி தேவியாரது திருப்பெயரான போகமார்த்தபூண்முலை என்னும் திருநள்ளாற்றுத் திருப்பதிகம் வர, அத்திருவேட்டினை எடுத்து சமணர்களாலமைக்கப்பட்ட வத்தீயி லிட்டனர். எ-று. (௫௯)

மறைபுலப் படுத்தநூல் வரைந்தவேடு னந்நா
ளுறைபுனற் கிடந்ததா மெனப்பரந்த தரசனு
நிறையமைச்சு மரசியாரு நின்றபேரு மந்தணர்க்
கிறைவனைப் புகழ்ந்தளப்பி லின்பவெள்ள மூழ்கினர்.

(இ-ள்.) வேதாந்தங்களை விளக்கிய திரவிடசூக்தங்களை வரைந்த வேடானது அநேகநாள் அலைகின்ற நீரிற்கிடந்தது என்று கூறுமாறு பசுமையாகியது. இவ்வற்புதத்தினைக்கண்ட, பாண்டியனும் அன்பு நிறைந்த மந்திரியாரும், அரசியாரும் இவர்களன்றிநின்றவர்களும் மறையவர்தலைவராகிய ஸ்ரீசம்பந்தரைப்புகழ்ந்து அளவற்ற சந்தோஷாம்புதியி லமிழ்ந்தினார்கள். எ-று. (௬௦)

வெந்தசிந்தை யமணர்வாது வெல்வதற்கு வேறிடம்
புந்திசெய்து வந்தவப் பொதுத்தலம் பொதுக்கடிந்
தந்தணாளர் வாதுவென்ற வன்றுதொட்டு ஞானசம்
பந்தனென்ற நாமமே படைத்துயர்ந்த தின்றுமே.

(இ-ள்.) வெந்தமனத்தினையுடைய சைநர்கள் வாதுவெல்லுதற்கு வேறிடஞ் சிந்தித்து வந்தவந்தப் பொதுமையான விடத்திலும் சிறப்பாக மறையவரான சம்பந்தப்பெருமான் வாதுவென்றவந்நாள்முத லின்றுவரைக்கும் அவ்விடமானது ஞானசம்பந்தனென்ற திருநாமத்தையேகொண்டு சிறந்துநிற்கின்றது. எ-று. (௬௧)

அன்னவேடு முறையினோ டிறுக்கியந்த ணாளர்கோன்
மன்னைநோக்க வினையினோடு பாயுடுத்த மாசர்தாஞ்
சொன்னசூள் புலப்படத் துணிந்தும் வாய்மை நாணொரீஇக்
கன்னிநாட னவைசிரிக்க வாற்றலாது கத்துவார்.

(இ-ள்.) திருமுறையுட் னந்த வேட்டினையமைத்து மறையவர் தலைவராகிய சம்பந்தப்பெருமான் கட்டிவிட்டு மன்னனைப்பார்த்தனர் அப்பொழுது தீவினையினோடுபாயினையுடுத்திய மாசினையுடைய அருகந்தர் தாங்கூறிய சபதம் வெளிப்படவறிந்தும் சத்தியத்தையும் வெட்கத்தையும்விட்டு பாண்டியனவைக்களத்தார்சிரிக்க ஆற்றமாட்டாமல் கத்துகின்றார்கள். எ-று. (௬௨)

ஏடநாங்க ளெழுதியிட்ட பச்சையே டெணுயிரம்
வீடவந்த நீவரைந்து விட்டவேலை யொன்றுமென்
வாடலின்றி நீரிலிட்ட வண்ணமான தாவிதுன்
பாடவஞ்செய் விஞ்சைகொண்டு பாவகற் பிணித்ததே.

(இ-ள்.) ஏட ! நாங்களெழுதியிட்ட பச்சையேடுகளெண்ணுயிரமும் வெந்தழிய, நீ எழுதியிட்ட வோலையொன்றுமாத்திரமென்ன வாடுதலின்றி நீரிலிட்டதன்மையாகியது. இது வேறொன்றுமில்லை; நீ உன்னுடைய சாமர்த்தியம் பொருந்திய மந்திரத்தினுல் அக்கினித்தம்பனஞ்செய்ததினுலேயாம். எ-று. (சரு)

உங்களோடு மெங்களோடு மும்பர்வான ளாய்விளா இப்
பொங்கியோடும் வைகைநீரி லிடுகவிட்ட போதுதா
னங்குநீ ரெதிர்க்குமோலை வெல்லுமோலை யன்றியே
துங்கவேலை செல்லுமோலை தோற்குமோலை யாவதே.

(இ-ள்.) உங்கள் ஏடும் எங்கள் ஏடும் இனி, மேலேயுள்ள வானமட்டுமெளாவியோங்கிக் கலந்து ஓடுகின்ற வையையாற்றிலிடுக: இட்டவுடனே அங்கு நீரிலெதிரேறுகின்ற ஓலை வென்றவோலை. அன்றிப் பெரிய கடலையடையுமோலை தோற்குமோலையாம். எ-று. (சச)

வென்றுவீ றடைந்தவர்க்கு வீறழிந்து தோற்றபே
ரொன்றுமேவ லடிமையாவ தென்றிசைந்து கைதவக்
குன்றுபோலு நின்றகுண்டர் கூறமேலாடு மீறிலா
மன்றுளாடு மடிகண்மைந்தர் வாய்மலர்ந்து பேசுவார்.

(இ-ள்.) வென்று பெருமையடைந்தவர்களுக்கு, பெருமைகெட்டுத் தோற்றவர்கள் எப்பொழுதும் ஏவல்புரியுமடிமையாவது என்றுகூறிச் சம்மதித்துக் கைதவமலைகளைப்போல நின்ற அருகந்தர்கூறியவுடனே, அழிவில்லாத அம்பலத்துளாடும் இறைவனுடைய குமாரரான ஸ்ரீ சம்பந்தப்பெருமான் திருவாயைத்திறந்து கூறுவாராயினர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அடியார் பதினு றுயிரவ ருள்ளார் சிவனை யவமதித்த
கொடியார் நீவி ருமக்கேற்ற தண்ட மிதுகொ கொன்றைமதி
முடியாரருளா லுங்களைநாம் வென்றேமாயின் மூவிலைவேல்
வடிவா ணிரைத்த கழுமுனையி லிடுவே மதுவே வழக்கென்றார்.

(இ-ள்.) நமக்கு அடியவர்கள் பதினுறுயிரம்பேர்களிருக்கின்றார்கள், ஆதலால் சிவனை அவமதித்த கொடியவர்களாகிய நீங்கள் உங்களுக்கேற்ற தண்டனை அடிமையாவதோ? நாம் கொன்றைமலர்மாலையையும் சந்திரனையுமணிந்த சடாபாரத்தினையுடைய இறைவனது திருவருளா லுங்களை வென்றோமானல், மூன்று இலைவேல்வடிவமானதும் வடிக்கப்பட்ட வாட்படைகளை நிறைக்கப்பெற்றதுமான கழுமுனையிலிடுவோம். இதுவேமுறைமை யென்றனர். எ-று. (சசு)

ஊழின் வலியா லமணரதற் குடன்பட் டார்க ளஃதறிந்து
சூழி யானைக் குலச்சிறையுந் தச்சர் பலரைத் தொகுவித்துக்
காழி னெடிய பழுமரத்திற் சூல வடிவாக் கழிநிறுவிப்
பாழி நெடிய தோள்வேந்தன் முன்னே கொடுபோய்ப் பரப்பினர்.

(இ-ள்.) ஊழ்வினையின் வன்மையால் அச்சைனர்களதற்குச் சம்மதித்தார்கள். அதனையுணர்ந்து முகபடாமணிந்த யானைகளையுடைய குலச்சிறையாரும் பல

தச்சர்களை ஒன்று சேர்ப்பித்து வயிரத்தினையுடைய நீண்ட ஆலமரங்களில் சூலவடிவங்களாக கழுக்களை நிறுத்தி அகன்ற நெடியதோள்களையுடைய மன்னனெதிரேகொண்டு சென்று சேர்த்தனர். எ-று. (சஎ)

தேறலார் தமைக்காழிச் செம்மலே நோக்கி யினிவம்பி
னீறு பூசிக் கண்டிகையும் பூண்டு நிருத்த மெழுத்தைந்து
மூற வோதிப் பாசமொழித் துய்மி னென்னு வறநோக்கிக்
கூறி னூர்மற் றதுகேட்டுக் குண்ட ரெரியிற் கொதித்துரைப்பார்.

(இ-ள்) பகைவர்களாகிய சைநர்களைக் காழித்தலைவர் பார்த்து வாருங்கள்: நீங்கள் இனித் திருநீற்றைத்தரித்து உருத்திராக்ஷத்தையுமணிந்து நடனமியற்றுகின்ற கடவுளினுடைய ஐந்தெழுத்துக்களையும் நாவிலூறுமாறு ஜெபித்து பந்தத்தை யகற்றி உய்யுங்களென்று தருமத்தை யுத்தேசித்துக் கூறியருளினூர். அதனைக் குண்டராகிய சைநர் கேட்டுத் தீயைப்போலக் கோபித்துக் கூறுகின்றூர்கள். எ-று. (சஅ)

முன்பு தீயில் வென்றனமே நீரில் யாதாய் முடியுமென
வன்பு பேசி யெமையிணக்கி யகலநினைந்தா யல்லதைநீ
பின்பு வாது செயத்துணியும் பெற்றி யுரைத்தா யல்லைபுலா
லென்பு பூணி யடியடைந்த வேழாய் போதி யெனமறுத்தார்.

(இ-ள்) புலாலெலும்பினை யணிந்தவனுடைய கால்களையடைந்த வேழையே. நீ முன்பு நாம் தீயில்வென்ரூமே, இனி நீரிலெவ்வாறுமோ என்று கருதி இவ்வம்பு களைக்கூறி இணக்கிப்போகப் பார்க்கின்றனையே யன்றி பின்னர் புனல்வாதமியற்றுமாறென்றுங்கூறினுயில்லை. நீபோ என்று கூறினூர்கள். எ-று. (சகூ)

ஊகந் தவழும் பழுமரத்தை யுதைத்துக் கரைமா றிடவொதுக்கிப்
பூகந் தடவி வேர்கீண்டு பொருப்பைப் பறித்துப் புடைபரப்பி
மாகந் துழாவிக் கடுகிவரும் வைகைப் புனலை மந்திரத்தால்
வேகந் தணிவித் தேடெழுதி விடுத்தார் முன்போல் வெள்காதார்.

(இ-ள்) குரங்குக ளுலாவுகின்ற பழுமரங்களை யுதைத்துக் கரையில் விலகுமாறடித்துஒதுக்கிப் பாக்குமரங்களைத் தடவி வேரைப்பறித்து மலைகளைப் பிடுங்கிப் பக்கங்களிற்பரவவிட்டு ஆகாயத்தை யளாவி விரைந்துவருகின்ற வைகைநீரை மந்திரத்தினுல் வேகத்தை யடக்கி வெட்கமில்லாத வவ்வருகந்தர் முன்போல ஏடு எழுதி யிட்டார்கள். எ-று. (ருo)

சிறையேய் புனல்சூழ் வேணுபுரச் செல்வர் யாருந் தெளிவெய்த
மறையே வாய்மை யுரையாகின் மறைகண் முழுதுந் துணிபொருடான்
பிறையேய் வேணிப் பிரானுகிற் பெருநீ ரெதிரே செல்கவென
முறையே பதிக மெடுத்தெழுதி விட்டார் முழங்கி வருபுனலில்.

(இ-ள்) தடுக்கப்பட்ட ஏரிநீர்முதலியவற்றுல் சூழப்பெற்ற வேணுபுரமென்று பெயருள்ள காழித்தலைவர், யாவர்களுந் தெளியும் வண்ணம் ஆரவாரத்துடன் வருமந் நீரில், வேதமே சத்திபவசனமானுல் அவ்வேதங்களாற் சித்தாந்திக்கப்படுகிற பொருள் சந்திரமௌலீசுவரனுனுல் இவ்வேடு இப்பெரியபிரவாகநீரிலெதிரோறுக என்று முறைப்படி பதிகமொன்றெடுத்தெழுதி முழங்கிக்கொண்டு வருகின்ற அந்தப்பிரவாகத்தில் விட்டனர். எ-று.

## திருப்பாசுரம்.

பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வாழ்கவந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
வாழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே. (௧)

அரியகாட்சியராய்த்தமதங்கைசே
ரெரியரோறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
பெரியராரறிவாரவர்பெற்றியே. (௨)

வெந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலர்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரா
லெந்தையாரவரெவ்வகையார்கொலோ. (௩)

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்புங்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார். (௪)

ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே. (௫)

ஆடும்மெனவும்மருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்புமறுக்கும்மெனக்கேட்டீராகி
னாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே. (௬)

கடிசேர்ந்தபோதுமலரானகைக்கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண்டங்காட்டிடத்தாதைபண்டு
முடிசேர்ந்தகாலையறவெட்டிடமுக்கண்மூர்த்தி
யடிசேர்ந்தவண்ணமறிவார்சொலக்கேட்டுமன்றே. (௭)

வேதமுதல்வன்முதலாகவிளங்கிவைய
மேதப்படாமையுலகத்தவரோத்தல்செய்யப்
பூதமுதல்வன்முதலேமுதலாப்பொலிந்த
சூதனொலிமாலையென்றேகலிக்கோவைசொல்லே. (௮)

பாராழிவட்டம்பகையானலிந்தாட்டவாடிப்
பேராழியானதிடர்கண்டருள்செய்தல்பேணி
நீராழிவிட்டேறிநெஞ்சிடங்கொண்டவர்க்குப்
போராழியீந்தபுகழும்புகழுற்றதன்றே. (௯)

மாலாயவனுமறைவல்லநான்முகனும்
பாலாயதேவர்பகரில்லமுதூட்டல்பேணிக்

கடலாயமுந்நீர்கடைந்தார்க்கரிதாயெழுந்த
வாலாலமுண்டங்கமரர்க்கருள்செய்ததாமே. (கo)

அற்றன்றியந்தண்மதுரைத்தொகையாக்கிஞனுந்
தெற்றென்றுதெய்வந்தெளியார்கரைக்கோலைதெண்ணீர்ப்
பற்றின்றிப்பாங்கெதிர்வினீரவும்பண்புநோக்கிற்
பெற்றொன்றுயர்த்தபெருமான்பெருமானுமன்றே. (ககக)

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தனல்ல
வெல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களும்மதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே. (கஉ)

திருச்சிற்றம்பலம். (ருக)

---

தேசம் பரவுங் கவுணியர்கோன் விடுத்த வேடு செழுமதுரை
யீச னருளாங் கயிறுபிணித் தீர்ப்ப நதியி லெதிரேற
நாசஞ் செய்யும் பொறிவழியே நடக்கு முள்ள மெனச்சென்று
நீச ரேடெண் ணாயிரமு நீத்த வழியே யொழுகியவால்.

(இ-ள்.) உலகம் துதிக்கின்ற கவுணியர் தலைவர் விட்ட ஏடு செழிய மதுரைக் கிறையவனான சோமசுந்தரப்பெருமானுடைய திருவருளென்று கூறப்படுகின்ற கயிறுபிடித்திழுப்ப, அது அவ்வாற்றி லெதிரேற, நாசமாக்குகின்ற பொறியின் வழியே செல்லுகின்ற மனத்தைப்போலசென்று சைனர்களாகிய விழிஞர்களி னேடுகளான எண்ணாயிரங்களும் அப்பிரவாக வொழுக்கின் வழியே சென்றன. எ-று. (ருஉ)

சிங்க மனையா ரெழுதுமுனை யெதிராற் றேறத் தெரிந்தமர
ரங்க ணறும்பூ மழைபொழிந்தா ரறவோர் துகில்விண் ணெறிந்தார்த்தார்
கங்கை யணிந்தார் திருத்தொண்டர் கண்ணீர்க் கடலி லழுந்தினார்
வெங்க ணமரர் நடுங்கியுடல் வெயர்வைக் கடலி லழுந்தினார்.

(இ-ள்.) சிங்கம்போல்பவரான சம்பந்தர் எழுதிவிட்ட திருப்பாடல் ஆற்றிலெதிரேறுதலும் அதனையுணர்ந்த தேவர்கள் அவ்விடத்தில் நல்ல புட்பவருஷம் பெய்தார்கள். அந்தணர்களெல்லாம் உத்தரீயத்தை மேலேவிசிறி யாரவாரித்தனர். கங்கையணிந்தவருடைய திருத்தொண்டர்கள் கண்ணீர்க்கடலி லழுந்தினர். கொடுமையினையுடைய சைனர்கள் உடல் நடுங்கி வியர்வைக்கடலி லழுந்தினார்கள். எ-று. (ருங)

வேமே யென்ப தறியாதே வெல்வே மென்றே சூளொட்டி
நாமே யிட்ட வேடெரியில் வேவக் கண்டு நதிக்கெதிரே
போமே யின்னம் வெல்வேமென் றிட்டவேடும் புணரிபுகத்
தாமே தம்மைச் சுடநாணி நின்றா ரமணர் தலைதூக்கி.

(இ-ள்.) சைனர்கள் தலையை மேலுக்கெடுத்துக்கொண்டு நமது ஏடுவேகுமேயென்றறியாமல் நாம் வெல்வேமென்று சபதங்கூறி நாமே இட்ட வேடு தீயில்வெந்ததைக்கண்டும் இனி யாமிடுமேடு ஆற்றுநீரினெதிரே செல்லுமே அதனால் இனியேனும் வெல்வோமென்று இரண்டாவது நீரிலிட்டவேடு கடலையடையக்கண்டு தங்களை தாங்களைச் சுட்டமையினால் நாணமுற்று நின்றார்கள். எ-று. (ருச)

பொருப்பே சிலையாப் புரங்கடந்த புனித னேயெத் தேவர்க்கும்
விருப்பேய் போகம் வீடுதரு மேலாங் கடவு ளெனநான்கு

பருப்பேய் களிற்றான் முடிதகர்த்தான் மருமா னறியக் குருமொழிபோ
லெருப்பே யன்றி வேகவதி நீரும் பின்னர்த் தேற்றியதால்.

(இ-ள்.) மலையையே வில்லாகக்கொண்டு புரங்களைவென்ற நிருமலனான சிவனே சகல தேவர்களுக்கும் விருப்பத்தைத் தருகின்ற போகத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கின்ற சிறந்த கடவுளென்று நான்கு கொம்புகளையுடைய ஐராவத வாகனனாகிய இந்திரனுடைய முடியையுடைத்த உக்கிரவர்மனுடைய வழித்தோன்றலாகிய கூன் பாண்டியன் தெரிந்துகொள்ளும் வண்ணம், ஆசிரிய வாக்கியத்தைப்போல நெருப்பல்லாமலும், வேகவதியென்னும் வைகையின் வெள்ளமும் பின்னர்த் தெளியச் செய்தது. எ-று. (ருரு)

பொய்யின் மறையின் புறத்தமணர் புத்தர்க் கன்றி வாய்மையுரை
செய்யு மறைநூல் பலதெரிந்துஞ் சிவனே பரமென் றறியாதே
கையில் விளக்கி னெடுங்கிடங்கில் வீழ்வார் போலக் கலங்கிமன
மைய மடைந்த பேதையர்க்கு மறிவித் தனவே யவையன்றே.

(இ-ள்.) சத்தியரூபமான வேதத்திற்குப் புறம்பான சைனமதத்தர்களுக்கும் புத்தர்களுக்குமல்லாமல், உண்மையை யுரைக்கின்ற பல வேதநூல்களை யுணர்ந்தும் சிவனே பரமென்றுணராமல் கையிற்பிடித்த விளக்கினுடன் பள்ளத்தில் விழுபவர்களைப்போல கலக்கமடைந்து மனமயக்கமெய்தியுள்ள வறிவிலிகட்கும் சிவனேபரமென் றறிவித்தன, அத்தீயு நீருமன்றோ? எ-று. (ருசு)

கண்டு கூடற் கோமகனுங் கற்பு நிறைந்த பொற்புடைய
வண்டு கூடுந் தாரளக வளவன் மகளு மந்திரியுந்
தொண்டு கூடு மடியாருங் காழிக் கரசைத் தொழுது துதி
விண்டு கூடற் கரியமகிழ் வெள்ளத் தழுந்தி வியந்தனரால்.

(இ-ள்) இதனை மதுரையி னரசனான குப்ஜபாண்டியனும் வண்டுகள்மொய்க்கின்ற மலர்மாலையணிந்த கூந்தலினையும் கற்பினையுமுடைய சோழகுமாரியான பாண்டிமாதேவியும் மந்திரியும் சிவபணியினையுடைய அடியவர்களும் காழித்தலைவனை வணங்கித் துதித்து அடைதற்கரிய ஆனந்தவெள்ளத்தின் மூழ்கி யழுந்தினார்கள். (ருஎ)

நன்றி தேறார் பின்புள்ள மான மிழந்து நாணழிந்து
குன்று போலுந் தோணிபுரக் கோமா னெதிரோ யாங்களுமக்
கின்று தோற்றே மெமையீண்டு நீரோ வென்றீ ரெனநேர்ந்து
நின்று கூறக் கவுணியர்கோ னனையா ருய்யு நெறிநோக்கா.

(இ-ள்.) நல்லதை யுணராத வருகந்தரும்பின்னர் உள்ள மானத்தை யிழந்து நாணத்தைவிட்டு மலைபோன்ற தோணிபுரத்திறைவனை யடைந்து அவனெதிரே நின்று இன்று நாங்க ளுமக்குத் தோற்றோம்; எங்களை இன்று நீரே வென்றீர் என்று கூறுதலும், கவுணியர் தலைவர் அவர் உய்யும் வழியை நினைத்து. எ-று. (ருஅ)

இன்ன மறத்தா றிசைக்கின்றே நீரோன் வாளா விறக்கின்றீ
ரன்னை யனையா னெம்மிறைவ னவனுக் காளா யுய்மின்க
ளென்ன வேட சிறியாய்நீ யெவ்வா றெங்கட் கடாதமொழி
சொன்னதென்று மானமுளார் கழுவி லேறத் தொடங்கினர்.

(இ-ள்.) நாம் இன்னம் தருமமார்க்கத்தைக் கூறுகின்றோம்; நீங்களேதற்காக வீணுக விறக்கின்றீர்கள்: எம்மிறைவன் அனைவருக்குந் தாய்போல்பவன்: நீங்க ளவனுக்கு அடிமையாகியுய்யுங்கள் என்றனர். உடனே அவர்கள் ஏட சிறியவனாகிய நீ என்

எங்கட் கிந்தத் தகாதமொழியைச் சொன்னது என்று அபிமான மேலிட்டவர்களாய்க் கழுவிலேறத்தொடங்கினார்கள். எ-று. (ருசு)

மேற்படி வேறு.

மதத்தினின் மாளுமிக்கார் தாங்களே வலிய வேறிப்
பதைத்திட விருந்தா ரேனைப் பறிதலை யவரைச் சைவ
விதத்தினு லொழுக்கம் பூண்ட வேடத்தார் பற்றிப் பற்றிச்
சிதைத்திடர் செய்தே திட்டார் திரிதலைக் கழுக்கோ றன்னில்.

(இ-ள்.) மதத்தி லபிமானமிகுந்தவர்கள் தாங்களே திரிசூலவடிவமான கழுவுகளில் ஏறித் துடிக்க விருந்தார்கள். இவர்க ளன்றியுள்ள பறிக்கப்பட்ட தலையினையுடைய சைனர்களைச் சைவமார்க்கமான வேடத்தினையுடையவர்கள் பிடித்துப்பிடித்து அடித்துத் துன்புறுத்தி ஏறவைத்தனர். எ-று. (சுo)

வழிவழி வருமா ணாக்கர் சாதற்கு வருந்தி நெஞ்ச
மழிபவர் திருநீ றிட்டா ரதுகிட்டா தயர்வா ராவி
னிழிவில்கோ மயத்தை யுள்ளிப் பூசின ரிதுவுங் கிட்டா
தொழிபவ ராவின் கன்றைத் தோளிலிட் டுயிரைப் பெற்றார்.

(இ-ள்.) அச்சைனமத பரம்பரையில் வழிவழி மாணாக்கர்களாக வுள்ளவர்கள் இறத்தற்கு மனம்வருந்தி யழிபவர்களாய்த் திருநீற்றினை இட்டார்கள். அது கிடையாமல் வருந்தினவர்கள் பசுவினழிவற்ற கோமயத்தை யள்ளிப் பூசினார்கள். அக்கோமயமும் கிடைக்காதவர்கள் பசுவின் கன்றைத் தோளிலிட்டு உயிரைப் பெற்றார்கள். எ-று. (சுக)

கூறிட்ட மூன்றுங் கிட்டா தயர்பவர் குற்றந் தீர
நீறிட்டார் நெற்றி யோடு நிருமல கோம யத்தின்
சேறிட்டார் நெற்றி யோடு நெற்றியைச் செறியத் தாக்கி
மாறிட்ட பாசந் தன்னை கழித்திட்டுப் பிறப்பை வெல்வார்.

(இ-ள்.) மேற்கூறிய இம்மூன்றும் கிடைக்காதயர்பவர்கள் குற்றமற முன்னே விபூதியிட்டவர்களின்நெற்றியையும், தூய்மையான கோமயத்தின் சேற்றினை இட்டவர்களுடைய நெற்றியையும் தங்க ணெற்றிகளிற் படும்வண்ணம் பொருத்தி மாறுபாட்டினையுடைய பாசத்தை நீக்கி பிறப்பினை வெல்பவர்களானார்கள். எ-று. (சுஉ)

மற்றிவர் தம்மை யூற்றஞ் செய்திலர் மடிந்தோர் யாருஞ்
சுற்றிய சேனங் காக நரிகளுந் தொடர்ந்து கௌவிப்
பற்றிநின் றீர்த்துத் தின்னக் கிடந்தனர் பருமயானை
வெற்றிகொள் வேந்தன் காழி வேந்தரைத் தொழுது நோக்கா.

(இ-ள்.) இவ்வாறு விபூதி, சாணம், பசுவின் கன்று என்னும் இவைகளைத் தரித்தவர்களைத் தண்டித்தார்களில்லை. கழுவிலேறி இறந்தவர்க ளெல்லாம் சுற்றப்பட்ட பருந்துகளும் காக்கைகளும் நரிகளும் நாய்களும் தொடர்ந்து கவ்விப் பிடித்திழுத்துத் தின்னக் கிடந்தார்கள். இது நிற்க, முகபடாமணிந்த யானைப்படைகளையுடைய வெற்றிபொருந்திய மன்னவன் காழித்தலைவரை வணங்கிப்பார்த்து. எ-று. (சுங)

இன்றுநீ றிட்ட வேடிங் கியார்வருங் காண நேரே
சென்றதே யெங்கே யென்று னதனையாஞ் செம்பொற் கூடன்
மன்றவ ரருளா லின்னே வருவிப்ப மென்று வாது
வென்றவர் நதியின் மாடே மேற்றிசை நோக்கிச் செல்வார்.

(இ-ள்.) இன்று உம்மாலிடப்பட்ட ஏடு இவ்விடத்தில் நின்ற அனைவருங் காண நேரே போயதே அஃதெங்கே என்று அரசன்கேட்டனன். அதற்குச் சைனர்களை வாதில்வென்றவராகிய ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகன் யாமவ்வேட்டினை யின்று செவ்விய பொன்மயமான மதுரையிலுள்ள வெள்ளியம்பலவாணருடைய திருவருளினால் இப்பொழுதே அழைப்பிப்போமென்று அவ்வாற்றின் கரையிலேயே மேற்குத் திக்கு நோக்கிச் சென்றனர். எ-று. (௬௪)

செல்லுநர் காணா வோலை காதவஞ் செல்வ தப்பா
லொல்லையங் கொளித்த லோடும் வியந்தவ ணொருங்கு கூடிக்
கொல்லையான் மேய்த்து நின்றார் சிலர்தமைக் குறித்து நீரிவ்
வெல்லையுள் விசேட முண்டோ விவண்கண்ட திசையி னென்றார்.

(இ-ள்.) செல்லாநின்றவர்கள் காணும் வண்ணம், ஓலை காததூரஞ்செல்ல அதற்கப்புறம் விரைவாக வொளித்தலும் இவ்வாச்சரியத்தைக்கண்டு புகழ்ந்து, ஒன்று சேர்ந்து கொல்லையிற் பசுக்களை மேய்த்துக்கொண்டு நின்ற சிலவரைப்பார்த்து நீங்களிருந்த பிரதேசத்தில் ஏதேனும் புதுமை கண்டதுண்டோ சொல்லுங்கள் என்றனர்.

அவ்விடைச் சிறார்கள் யாங்க ளொன்றையு மறியே மென்ன
விவ்விடை விசேடங் காணல் வேண்டுமெத் திறத்து மென்னாத்
தெவ்விடை வாது செய்யத் திருவுளக் கருணை செய்த
வெவ்விடைக் கொடியி னானைப் பாடினார் வேத நாவார்.

(இ-ள்.) அந்த கோபாலச் சிறுவர்கள் நாங்கள் ஒன்றையுமறியோமென்று கூற எவ்வண்ணமானாலும் இவ்விடத்தில் விசேடங் காணவேண்டுமென்று பகைவர்களிடத்து வாதஞ்செய்யும்வண்ணந் திருவுளக்கருணைசெய்த வெவ்விய விடபக்கொடியினையுடையவனை மறைநாவினராகிய ஸ்ரீசம்பந்தப்பெருமான் பாடியருளினார். எ-று.

பாட்டின்மேற் கருணை வைத்தார் சயம்புவாய்ப் பராரை வில்லக்
காட்டினு ளிருப்ப நேரே கண்டுதாழ்ந் தெழுந்து சண்பை
நாட்டினார் வலங்கொண் டேத்தி யெதிர்நின்றார் நகைத்தார் நிம்பத்
தோட்டினா னதுகேட் டங்கே தோன்றினான் றானை யோடும்.

(இ-ள்.) சம்பந்தப்பெருமான் பாடும் பாடலின்மேல் கருணைவைத்த விறைவனார் சுயம்புவாய் பரியவரையினையுடைய வில்வவனத்தி னெதிரி லிருக்கக்கண்டு,சண்பைநாட்டையுடைய சம்பந்தர் வணங்கி எழுந்து வலமாக வந்து துதித்து சன்னிதானத்தி னின்றனர்; இந்த வாச்சரியத்தை வேப்பமலர்மாலை யணிந்த பாண்டியன் கேட்டுத் தனது சைனியங்களுட னவ்விடத்திற்கு வந்தனன். எ-று. (௬௭)

அந்தமா விலிங்கத் தீச னயிர மதியங் கண்ட
முந்தைவே தியராய்த் தோன்றி முத்தமிழ்க் கரசை நீயென்
மைந்தனு மிளையோ னொப்பாய் வருகென நீறு சாத்திச்
சிந்தைநீ ளார்வங் கூரத் திருவருள் சுரந்து நின்றார்.

(இ-ள்.) அந்த மகத்தான விலிங்கத்தினின்றும் இறையவர் ஆயிரம்பிறைகண்ட பழய வேதியராய் வெளிப்பட்டு முத்தமிழ்க்கிறைவனை நீ எனது இளையமகனை யொப்பாய்: வருகவென்று விபூதி தரித்து மனத்தின் மிகுந்த அன்பதிகரிக்க திருவருள் சுரந்து நின்றனர். எ-று. (௬௮)

நின்றவந் தணனை யன்று நிருமல ஞான மீந்தா
ரொன்றுகண் டிறைஞ்சி யைய நீரில்யா னிட்ட வேடு

சென்றதில் நெடுத்தீர் நீரே யஃது நுஞ் செல்வர்க் கேற்ற
தன்றதைத் தருதி யென்று ரறுமுகச் செம்ம லன்னார்.

(இ-ள்.) அங்கு நின்ற மறையவரான சம்பந்தர் முன்னுளில் தமக்கு ஞான மளித்த இறைவரோ இவரென்று கருதி வணங்கி ஐயரோ! நீரிலென்னு விட்டப்பட்ட வேடு எதிரேவந்தது; அதனை நீரே யெடுத்தீர்; அஃது உமதுபிள்ளைகளுக்கேற்றதன்று ஆதலா லதைக் கொடுமென்றுகேட்டனர் ஆறுமுகக்கடவுளை யொத்த சம்பந்தப்பெருமானர். எ-று. (௬௬)

இன்னமும் பன்னு ளெம்மை யிடந்தொறும் பாடி யெஞ்சும்
புன்னெறி யொழுகு வாரை வென்றுநம் புனித வீடு
பின்னர்நீ பெறுதி யென்னு வேடுதந் தாசி பேசி
மின்னென மறைந்து நின்றார் வேதிய ராய வேடர்.

(இ-ள்.) இன்ன மனேககால மெம்மைத் தலங்கள்தோறுஞ் சென்று பாடி இவர்களன்றியுள்ள மற்றைய விழிந்தமார்க்கத்தினையுடையவர்களையும் வென்று நமது புனிதமான வீட்டினை நீ பின்னர் அடையக்கடவை என்றுகூறி ஏட்டையளித்து ஆசிகூறி வேதியவேடத்துடனே வந்தஇறைவர் மின்னலைப்போல மறைந்தருளினர்.

தாதையார் கவர்ந்து மீளத் தந்தவே டதனை வாங்கிப்
போதையார் ஞான முண்டார் புரிசடைப் பிரானர் வௌவி
யீதையா மிரந்துவேண்டத் தந்தன ரென்று கூறிக்
கோதையார் வேலி னுற்குக் காட்டவக் கொற்கை வேந்தன்.

(இ-ள்.) தந்தையரான சிவபெருமானலே அபகரித்துத் திரும்பக் கொடுக்கப்பட்ட எட்டினை எடுத்து மலரினையுடைய மகாதேவியா ரளித்த ஞானமிர்தத்தை யருந்திய சம்பந்தர் மாலையணிந்த வேலினையுடைய மன்னவனுக்கு இதனை இயற்றப்பட்ட சடையினையுடைய இறைவனுரபகரித்து நாமிரந்து வேண்டவளித்தனர் என்று காட்டினர். உடனே அரசன். எ-று. (௭௧)

கச்சான வரவ மார்த்த கருணையங் கடலிற் றோன்றும்
விச்சான ஞான முண்டீ ராற்றலின் விளைவு தேரு
தச்சான வலியா னும்மை யளந்தன னடியே னிந்தத்
துச்சான பிழைதீர்த் தாள்கென் றிறைஞ்சினான் றுணர்த்தார் வேம்பன்.

(இ-ள்.) அரவக்கச்சணிந்த கருணையங்கடலி லுண்டான வித்தான ஞானத்தை யுண்டவராகிய உம்முடைய சாமர்த்தியத்தின் தன்மையை யுணராமல் அஞ்ஞானவலியினல் உம்மைப் பரிக்ஷித்தேன். அடியேனற் செய்யப்பட்ட இந்தத்துச்சமான பிழையைநீக்கி ஆளுவீராகவென்று கொத்தாகியவேப்பமலர்மாலையணிந்தபாண்டியன்.

அந்நெடு மேரு வாங்கு மாடகச் சிலையி னார்க்குப்
பொன்னெடுஞ் சிகரக் கோயின் மண்டபம் புயலைக் கீண்டு
மின்னெடு மதியஞ் சூடுங் கோபுர மேகந் தாவுங்
கன்னெடும் புரிசை வீதி யாவையுங் களிப்பக் கண்டான்.

(இ-ள்.) அந்த நெடியமேருமலையாகிய வளைத்த பொன்வில்லினையுடைய பொன்மயமான நெடியசிகரத்தினையுடைய கோயில் மண்டபம் மேகத்தைக் கிழித்து ஒளிவிடுகின்ற பூரணச்சந்திரனைத் தன்மீதணியத்தக்க கோபுரம் மேகங்கள் தாவுகின்ற கல்ல பெரிய மதில்கள் வீதிகள் முதலிய வளைத்தையும் மகிழுமாறுண்டாக்கினன்.

அற்றைநா ளாதி யாக வேடக மென்னு நாமம்
பெற்றதா லேட கத்தின் மேவிய பிரானைப் பாண்டிக்

கொற்றவன் சமண ரோடுங் கூடிய பாவ மெல்லாம்
பற்றறப் பூசை செய்து பாசமுங் கழியப் பெற்றான்.

(இ-ள்.) அந்நாண் முதற்கொண்டு திருவேடகமென்னும்பெயரை அத்தலம் அடைந்தது. அவ்வேடகத்தி லெழுந்தருளியிருக்கு மிறைவனைப் பாண்டிமன்னவன் சமணர்களுடனே கூடியிருந்த பாவமனைத்தும் பற்றறும்வண்ணம் பூசைசெய்து பாச முமொழியப்பெற்றனன். எ-று. (எச)

நறைகெழு துழாயி னானுங் கலுழனு நாகர் வேந்து
முறையினு லுகங்கண் மூன்றும் பூசித்தழியா வின்ப
நிறையருள் பெற்றா ரன்ன நிராமய விலிங்கந் தன்னை
யிறுதியா முகத்திற் பாண்டி யிறைமகன் பூசை செய்தான்.

(இ-ள்.) மணம்வீசுகின்ற துளவமாலையணிந்த திருமாலும் கருடனும் நாகர் அரசனும் முறைப்படி மூன்றுயுகங்களிலும்பூசித்து அழியாத இன்பநிறைந்தஅருளைப் பெற்றனர். அந்தநிராமயவிலிங்கத்தைக் கடைசியான கலியுகத்தில் பாண்டியவரசன் பூசித்தான். எ-று. (எரு)

அங்கவிரமா நகர்கண் டாங்கோ ராண்டிறை கொண்டு காழிப்
புங்கவ ரோடும் பின்னாட் பூழியர் பெருமான் மீண்டு
மங்கல மதுரை சேர்ந்து வைகுநா ணீற்றுச் செல்வ
மெங்கணும் விளங்கச் சின்னா ளிருந்துபின் ஞானச் செல்வர்.

(இ-ள்.) அவ்விடத்திலொரு பெரியநகர முண்டாக்கி அதனி லொருவருடந் தங்கியிருந்து, காழியந்தணரான ஸ்ரீசம்பந்தப்பெருமானுடனே பின்னர் பாண்டியரா சன் திரும்பி மங்களகரமான மதுரையையடைந்து இருந்தகாலத்து, வீபூதிச் செல்வ மெவ்விடங்களிலும் விளங்கும்வண்ணம் பின்னுஞ் சிலநா ளிருந்து ஞானசம்பந்தப் பெருமான். எ-று. (எசு)

வட்புலத் துள்ள வீசன் பதிகளும் வணங்கிப் பாடக்
கடவமென் றெழுந்து கூடற் கண்ணுதற் பெருமான் றன்னை
யிடனுறை கயற்க ணாளை யிறைஞ்சிப்பல் வரனும் பெற்று
விடைகொடு தமிழ்நா டெங்கும் பணிந்தனர் மீண்டு போவார்.

(இ-ள்.) வடநாட்டிலுள்ள சிவக்ஷேத்திரங்களிலுஞ்சென்று இறைவனை வண ங்கித் தமிழ்ப்பதிகம்பாடக்கடவோமென்று பிரயாணமாகி மதுரையிலெழுந்தருளியிரு க்கின்ற முக்கண்ணெம்பெருமானையும் அவரதிடதுபுறத்தில் எழுந்தருளியிருக்கின்ற மகாதேவியாரையும் வணங்கிப் பலவரங்களையும்பெற்று விடைபெற்றுக்கொண்டு தமி ழ்நாடுமுழுமையும்சென்று இறைவனைவணங்கித் திரும்பச்செல்லுகின்றனர். எ-று.

தன்பெருங் கற்பி னாளு மமைச்சனுந் தமிழ்நர் கோனும்
பின்புமு னந்தண் காழிப் பிரானடி பிரிவாற் றாரா
யன்புதந் தவர்பா னட்ட வன்றுதொட் டானுக் கேண்மை
யின்பமுந் துன்ப மாகி விளைந்துமுன் னீர்ப்பப் போனார்.

(இ-ள்.) தனது பெரியகற்பினையுடைய மனைவியாரும், மந்திரியாரும், பாண் டிமன்னவனும் பின்பு, முன்னரழகிய காழிப்பெருமானுடைய திருவடிப்பிரிவை யாற் றாதவர்களாய் அன்பையளித்தவரிடத்தில் சிநேகித்த வந்நாள்முதல் நீங்காத சிநேக இன்பமுந் துன்பமாகிவிளைந்து முன்னிழுக்கச் சென்றார்கள். எ-று. (எஅ)

சண்பையர் தலைவர் தாமு மனையராய்த் தம்பின் செல்லு
நண்புடை யவரை நோக்கி நம்மிடத் தன்பு நீங்காப்
பண்பின ராகி நீறு பாதுகாத் தீசன் கீர்த்தி
மண்பட வாழ்மி னீது மறுக்கன்மி னின்மி னென்றார்.

(இ-ள்,) காழித்தலைவரும் அவ்வாறனவராய் தம்பின்னாற்செல்லும் நண்புடையவர்களைப்பார்த்து நீங்கள் நம்மிடத்திலன்புநீங்காத தன்மையினராய் திருநீற்றைப் பாதுகாத்து ஈசனுடைய கீர்த்தி யுலகில்பொருந்த வாழுங்கள்; இதனைத்தடுக்காதேயுங்கள் என்றுகூறினார். எ-று. (எக)

ஆளுடைப் புகலி வேந்த ரருண்மொழி மறுக்க வஞ்சித்
தாளுடைப் பதுமச் செந்தா டலையுறப் பணிந்து மீண்டு
வாளுடைத் தானைத் தென்னன் மதுரையில் வந்தான் கஞ்சத்
தோளுடைச் சிங்க மன்னர் சோழர்கோ னாடு புக்கார்.

(இ-ள்.) அவர்களையாளுகின்ற புகலித்தலைவர்கூறிய அருள்மொழியைத் தடுத்தற்குப்பயந்து தாளுடைய தாமரைமலர்போன்ற செவ்விய திருவடிகளைத் தலையால் வணங்கி வாட்படைச்சேனைகளையுடைய பாண்டியன் மதுரையையடைந்தான். உடனே தாமரைமாலையணிந்த சிங்கம்போன்ற ஸ்ரீசம்பந்தப்பெருமான் சோழராஜனுடைய நாட்டையடைந்தனர். எ-று. (அ0)

ஞானமா மதநீர் சோர ஞானசம் பந்த னென்னு
மானமா யானை வந்து கடம்பமா வனத்திற் றுன்னு
மூனமாஞ் சமண னென்னுந் தருக்களை யொடித்து வெண்ணீ
றுணமாப் பூழி யள்ளித் தூற்றிய தவனி யெங்கும்.

(இ-ள்.) ஞானமாகிய மதநீரொழுக ஞானசம்பந்தனென்னும் அபிமானத்தினையுடைய பெரியவானைவந்து கடம்பமாவனமென்னும் இடத்தில் நெருங்கிநின்ற குற்றம்பொருந்திய சைநர்களென்னும் தருக்களை ஒடித்து உலகமுழுமையும் வெண்ணீறாகிய புழுதியை யள்ளித்தூற்றியது. எ-று. (அக)

கலிநிலைத்துறை.

ஆதி யாலயத் தடலைகொண் டாழிசூழ் காழிச்
சோதி வேதியர் பாண்டியன் சுரந்தணித் துடலிற்
பேதி யாதகூ னிமிர்த்தலாற் பிறங்குகற் பாதிப்
பூதி யாவினுஞ் சிறந்ததவ் வட்டில்வாய்ப் பூதி.

(இ-ள்.) இறைவனாலயத்திலுள்ள விபூதியைக்கொண்டு கடல்சூழ்ந்த சீகாழியிலுள்ள ஒளிபொருந்திய அந்தணர், பாண்டியனுடைய சுரத்தைநீக்கி உடலைவிட்டு விலகாதகூனினை நிமிர்த்தியதனாலே அவ்வாலயத்து மடைப்பள்ளிவிபூதி விளங்காநின்ற கற்பவிபூதிமுதலியவைகளைவிடச் சிறந்தது. எ-று. (அஉ)

சமணரைக்கழுவேற்றியபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருஉருகூ.

---

## அறுபத்துநான்காவது

# வன்னியுங் கிணறும் இலிங்கமும் அழைத்தபடலம்.

---

சென்னிவெண் டிங்கண் மிலைச்சிய மதுரைச் சிவனரு ளடைந்த சம்பந்தர்
துன்னிருஞ் சமணைக் கழுமுனை யேற்றித் துணித்தவா றிசைத்தனம் வணிகக்
கன்னிதன் மன்றற் கரியினை மாற்றாள் காணவக் கண்ணுத லருளால்
வன்னியுங் கிணறு மிலிங்கமு மாங்கு வந்தவா றெடுத்தினி யுரைப்பாம்.

(இ-ள்.) சிரசில் வெள்ளியசந்திரனை யணிந்த மதுரையிறைவனுடைய திருவடியையடைந்த ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான் நெருங்கிய பெரியசைனர்களை கழுமுனையிலேற்றித் தண்டித்ததன்மையை யுரைத்தோம். இனி, செட்டிமகளுடைய மணநாளிலிருந்தசாக்ஷியைச் சக்களத்திபார்க்கஅச்சிவபெருமான் திருவருளால் வன்னியுங் கிணறு மிலிங்கமு மவ்விடத்திற்குவந்ததன்மையை யினியெடுத்துக்கூறுவாம். (௧)

பொன்மலர்க் கைதை வேலிசூழ் வேலைப் புறத்தொரு பட்டினத் துள்ளான்
மின்மணிக் கொடும்பூ ணொருகுல வணிகன் வேறுவே றும்பல செல்வத்
தன்மையிற் சிறந்தோன் மகவில னாகித் தன்மனக் கினியதோர் காட்சி
நன்மனைக்கொடியோடறம்பலபுரிந்தோர்நகைமதிக்கொம்பையீன்றெடுத்தான்

(இ-ள்.) பொன்போலும் மலருகின்ற தாழைவேலியாற் சூழப்பட்ட கடற்கரையினொருபுறத்திலுள்ள ஓர்பட்டினத்தில், ஒளிவிடுகின்றமணிமயமான வளைந்தசந்திரவாரமுதலிய வாபரணங்களையணிந்தகுலசிரேட்டனான ஒருவணிகன் இருந்தான். அவன் பல வேறுவகைப்பட்ட செல்வவியல்புகளில் சிறந்தவன். புத்திரப்பேறில்லாதவனாய்த் தன்மனத்துக்கு இரம்மியமான வுருவத்தினையுடைய நல்ல கற்புடைமனைவியுடன் பலவகைய் தருமங்களை யியற்றி சந்திரிகைபோலும் ஒளிவிடுகின்ற தந்தபந்திகளையுடைய வோர்பெண்ணைப்பெற்றனன். எ-று. (௨)

அத்தன வணிகற் குரியநன் மருக னவன்முதற் கடிமண முடித்தோன்
முத்தமிழ் மதுரைப் பதியுளா னவற்கே முறையினா னோற்றுநான் பயந்த
வித்தக மயிலைக் கொடுப்பலென் றனைய வியற்குல வணிகர்கோன் றன்னோ
டொத்தபல் கிளைஞர் யாவரு மறிய வுணர்த்தினான் சிலபக லொழிய.

(இ-ள்.) அந்தத்தனவணிகனுக்கு உரிமைமருமகன் ஒருவனுளன்; அவன்முதலில் ஒருத்தியை இல்லக்கிழத்தியாகக் கொண்டு மணந்துள்ளவன். மூவகையதமிழ்களுக்கிருப்பிடமாகிய மதுராநகரத்தில் வசிப்பவன். அவனுக்கே நான் தவங்கிடந்துபெற்ற ஞானவுணர்ச்சியினையுடைய மயில்போல்வாளை உரிமையாற் கொடுப்பேனென்று அந்தநல்ல வணிககுலசிரேட்டன் (சாதியாலும் செல்வத்தாலும் கல்வியாலும் ஒழுக்கத்தாலும்) தன்னோடொத்த பலவகைபந்துக்கள் அனைவருமறியுமாறு சொல்லினான். சொல்லிச் சிலகாலமாயினபின்பு. எ-று. (௩)

ஊழ்வினை வலியா லாருயி ரிழந்தா னுயிர்க்குடம் பனையதன் கற்பின்
சூழ்கதிர் மணிப்பூண் மனைவியு மிறப்பத் துணிந்தன ளவரிரு வோர்க்கு
மாழ்கடற் கிளைஞர் செயத்தகு கடன்க ளாற்றியச் செய்தியை மதுரை
வாழ்தரு மருகற் குணர்த்துவா னோலை விடுத்தனர் மருமகன் வாங்கா.

(இ-ள்.) போகூழின்முதிர்வினால் அரியவுயிரையிழந்தனன். இவன் இறந்தவுடனே இவனுயிர்க்குடல்போல்பவளாகிய விவனது கற்பினையுடைய அரதனபரணங்களையணிந்த வில்லக்கிழத்தியும் உடன்சாதற்குத் துணிந்தனள். இறந்தவனுக்கும் அவனுடனிறத்தற்குத் துணிந்தவளுக்கும் ஆழியகடற்கரையிலுள்ள அப்பட்டினத்திலவசிக்கும் உறவினர் செய்யவேண்டுங் காரியங்களைச்செய்துமுடித்துப் பின்னர் அச்செய்தியை மதுரையில்வாழ்கின்ற மருமகனுக்குணர்த்துமாறு ஓலையனுப்பினர். இவர்களாலனுப்பப்பட்ட வவ்வோலையை யவன்வாங்கி. எ-று. (௪)

தன்னருண் மாமன் றுஞ்சினன் கூடத் தாரமுந் துஞ்சிய திப்பா
லன்னவர்க் களவின் றாகிய தனமுண் டவனனி நாண்மக வின்றிப்
பின்னொரு பெண்ணைப் பெற்றன னவளைத் தனக்கெனப் பேசின னனைய
கன்னியை மணந்து செல்கென் முடங்கற் கழறிய பாசுரந் தெரியா.

(இ-ள்.) தனதருண்மாமனிறந்தான் அவனுடனவன் மனைவியுமிறந்தனள். இதுநிற்க வவர்கட்கு அளவற்றதாகியதிரவியமுளது. அவன் அநேககாலம் புத்திரப்பேறின்றியிருந்து பின்னர் ஒரு பெண்ணைப்பெற்றனன். அவளை யுனக்கே கோடுப்பதாகப் பலரிடத்துங் கூறியிருந்தான். அந்தப்பெண்ணை நீவந்து மணம்புரிந்து செல்வாயாகவென்று ஓலையிலிருந்த பாசுரத்தையுணர்ந்து. எ-று. (௫)

வீழ்ந்தனன் றரைமேற் புரண்டன னுயிர்ப்பு வீங்கினன் விழிப்புனல் வெள்ளத், தாழ்ந்தனன் விம்முற் றம்மவோ வென்றென் றரற்றினன் கிளைஞர்நட் படைந்து, வாழ்ந்தவர் தழுவத் தழீஇத்தழீஇக் கரைந்தான் மற்றவர் தேற்றிடத் தெளிந்து, சூழ்ந்தவெந் துயர்நீத் தொருதலை மாமன் றொன்னகர்க் கேகுவான் றுணிந்தான்.

(இ-ள்) பூமியில் விழுந்தான் புரண்டான் பெருமூச்சுவிட்டான் கண்ணீர்வெள்ளத்திலழுந்தினன். விம்முதலடைந்தையோவென்றழுதான் கிளைஞர்களும் நேசங்கொண்டு வாழ்ந்தவர்களும் வந்துசூழ்ந்துகொள்ள வவர்களைக்கட்டிக்கட்டி யழுதான். பின்னர் அவர்கள் தேற்றத் தெளிந்து தன்னைச் சூழ்ந்திருந்த வெவ்வியதுன்பத்தை யொழித்து ஒருதலையாக மாமனது பெரியநகரத்திற்குச் செல்லுமாறு துணிந்தனன்.

அங்குள கிளைஞர் சிலரொடுங் கூடி யருங்கடி மதுரைநீத் தேகிப்
பொங்கிருங் கழிசூழ் பட்டினங் குறுகிப் புகுதுவான் வரவறிந் தங்குத்
தங்குதங் கிளைஞர் வினவநேர் வாரைத் தழீஇத்தழீஇச் செலவிடுத் தேகிக்
கொங்கிவர் தளவத் தாரினன் மாமன் கோயில்புக் கிருந்தன னாக.

(இ-ள்.) அம்மதுரையிலுள்ள சிலபந்துக்களுடன்கூட மிக்ககாவலினையுடைய வம்மதுரைநகரத்தை விட்டுச்சென்று, நீர்மிகுதியாகின்ற பெரியகழியால் சூழப்பட்ட பட்டினத்தையடைந்து மாமன்வீட்டுக்குட்போதற்குச் செல்ல, இவன்வருதலை யுணர்ந்து அப்பட்டினவாசிகளாகிய கிளைஞர்கண்டு எப்பொழுதுவந்தாயென்று வினவுதற்கு எதிரேவருபவர்களை யிப்பொழுதுதான் வருகிறேனென்று காடாலிங்கனஞ்செய்து செய்தனுப்பிப் பின்னுஞ்சென்று மணம்வீசுகின்ற முல்லைமலர்மாலையணிந்த வத்தன வணிகன் தன் மாதுலனுடைய மாளிகையை யடைந்திருந்தனன். எ-று. (௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நாள்சில கழிந்த பின்னர் நாய்கரோ றனையா னன்ன
வாள்புரை கண்ணி னாளை மதுரையிற் கொடுபோ யங்கென்
கேளிர்முன் வேட்ப லென்று கிளந்துதன் மாம னீட்டு
நீள்பெரும் பொருள்கண் மற்றுங் கைக்கொண்டு நெறியிற் செல்வான்.

(இ-ள்.) சிலகாலமாயினபின்பு வணிகருள் ஏறுபோல்பவனாகிய வவன் அந்த வாளனைய கண்ணினளாகிய கன்னியை மதுரைக்கழைத்துக்கொண்டுசென்று அவ்விடத்தில் எனதுகிளைஞரின் எதிரில் மணந்துகொள்வேனென்று அங்குள்ளார்க்குரைத்துத் தனதுமாமனால் சேர்த்துவைக்கப்பட்ட அதிகமான வுயர்ந்த திரவியங்கண் முதலிய மற்றையவைகளையு மெடுத்துக்கொண்டு வழியைநோக்கிப் பிரயாணமாயினான்.

வழிவிட வ்ருவார் தம்மை நிறுத்திப்பின் மதுரா மூதூர்க்
கெழுதரு சுற்றத் தாரை முன்சென்மி னென்று போக்கித்
தொழுபரி சனமுந் தானுந் தோகையும் வைக லொன்றிற்
கழிவழி யளைமேற் செய்த காவத மாகப் போவான்.

(இ-ள்.) வழிவிடுதற்கு வருமவர்களை நீவிர் நின்மினென்று நிறுத்திப் பின்னர் மதுரையை யுத்தேசித்துவரும் கிளைஞர்களை நீங்கள் முன்னேசெல்லுங்களென்றுகூறி யவர்களை முன்னேயனுப்பித் தன்னைவணங்குமூழியர்களும் தானும்தானினி மணஞ்செய்துகொள்ளவேண்டுபவளாகிய மாமன்மகளுமாக நாளொன்றற்கு ஒன்றரைக்காத வழியாகச்செல்லுவான். எ-று. (௯)

வெங்கதிர் வேலை செல்லும் வேலைவந் தணையு முன்ன
மிங்கிருந் தொழிது மென்னாப் புறம்பய மூதூ ரெய்தி
யங்கிறை கோயின் முன்னிக் கூவனீ ராடி யங்குத்
தங்கிய வன்னி மாடே போனகஞ் சமைத்துண் டெல்வாய்.

(இ-ள்.) சூரியன் மேற்றிசைக்கடலை யடையுங்கால மடைதற்குமுன்னே இவ்விடத்திற் றங்குவோமாகவென்று பெரிய புறம்பயமென்னு நகரத்தையடைந்து அங்குள்ள சிவாலயத்துட்சென்று கிணற்றுநீரிற்குளித்து அக்கிணற்றி னருகுநின்ற வன்னிமரத்தினருகில் சமையல்செய்துபுசித்து அன்றிராத்திரியில். எ-று. (௧௦)

மலைவைத்த சிலையான் கோயின் மருங்கொரு படியி னும்பர்த்
தலைவைத்துத் துயிலு மெல்லை விதிவழிச் சார வந்தோர்
கொலைவைத்த விடவாய் நாகங் கடித்தது கொதித்துநீண்ட
விலைவைத்த கொடும்பூ ணய்கன் விடந்தலைக் கொண்டு மாய்ந்தான்.

(இ-ள்.) மலையைவில்லாகக்கொண்டுள்ள சிவபெருமானுடைய வாலயத்தினருகில் ஓர் படியின்மீது தலையைவைத்துக்கொண்டு தூங்குகின்றசமயத்தில்,போகூழின் முதிர்ச்சியானது நெருங்க, அவ்வூழின்வன்மையால் அவ்விடத்திற்கு வந்த ஒரு விடம்பொருந்திய வாயினையுடைய பாம்பு அவனைக்கடித்தது. அதனால் மிகுந்த விலையினையுடைய வளைந்தவணிகளையணிந்த வவ்வணிகன் கொதிப்படைந்துவிடந்தலைச்சேறியிறந்தனன். எ-று. (௧௧)

அங்குள பரிச னங்க ளாவலித் திரங்கிச் சூழக்
கொங்கைகள் புடைத்துச் சேடிக் குற்றிடை மகளிரோங்கச்
சிங்கவே றனையா னாகந் தீண்டிடா தொதுங்கிப் போந்த
பங்கய மலர்க்கொம் பன்னாள் பாவைபோற் புறம்பு நின்றாள்.

(இ-ள்.) அவ்விடத்திலிருந்த வூழியர்கள் ஆவலித்து அழுதுகொண்டு சூழ்ந்துகொள்ளவும், சிறியவிடையினையுடைய சேடிமகளிர்கொங்கைகண்மீதடித்துக்கொண்டழவும், ஆண்சிங்கமனைய வவ்வணிகன துடலைத் தொடாமல் ஒருபுறமாக வொதுங்கி அவனுடன்வந்த பங்கயமலரா நுனியிலுடைய கொம்பினையொத்தவள் இயற்றும் பாவையைப்போல வேறிடத்தினின்றனள். எ-று. (௧௨)

கலிநிலைத்துறை.

ஆளியே றன்னவ னரவின்வாய்ப் பட்டது மவிந்தது
மீளிவே லுண்கணார் கைகுலைத் தழுவதும் விழுவதுங்
கேளிர்சூழ்ந் தயர்வதுஞ் சோர்வதுங் கண்டிளங் கிளியனாள்
வாளியே றுண்டதோர் மயிலின்வீழ்ந் துயங்கினள் மயங்கினாள்.

(இ-ள்.) ஆளியேற்றைப்போன்ற வவ்வணிகன் பாம்பின்விடவாய்க் கோட்பட்டதூஉம் இறந்ததூஉம் வீரர்களின் வேல்போலும் மையுண்ட கண்ணிணையுடைய மடவார் கையைவிரித்துக்கொண் டழுவதூஉம் விழுவதூஉம் சுற்றத்தவர்கள் சூழநின்று சோர்வதூஉம் இளங்கிளிபோலுமவள் பார்த்து அம்பேறுண்ட மயிலைப்போலப் பூமியில்விழுந்து உயங்கி மயங்கினாள். எ-று. (௪௩)

வடிக்கணுட் செருகின வருகின வுயிர்ப்பழல் வாய்ப்படுந்
தொடுத்தபூங் கோதைபோற் சோர்ந்ததா கங்கரஞ் சோர்ந்தன
வடித்தளிர் சோர்ந்தன கன்னியன் னப்பெடை யன்னவ
ளிடிக்கெதிர்ப் பட்டுவீழ்ந் தாளெனக் கிடந்தன ளென்செய்வாள்.

(இ-ள்.) வடிக்கண் உட்செருகின, சுவாசமருகின, தீவாய்ப்பட்ட கட்டிய மாலையைப்போல உடல்சோர்ந்தது, கைகளும் சோர்ந்தன; தளிர்போன்ற கால்களுஞ்சோர்ந்தன; இளம்பெண் ணன்னம்போலுமவள் இடிஇடிக்குங்காலத்து அதனெதிர்ப்பட்டு விழுந்தவளைப்போலக் கிடந்தனள் என்னசெய்வாள். எ-று. (௪௪)

சாயும்பூங் கொம்பரிற் சூழ்ந்திரங் தான்புறஞ் சார்ந்தழூஉ
மாயமென் மகளிர்மீண் டன்பனோ டெங்கைதன் னாவியும்
போயதே கொல்லென மடியுறக் கொடுங்கையாற் புறந்தழீஇத்
தூயதூ செறிந்திளைப் பாற்றினர் சிறிதுயிர் தோற்றவே.

(இ-ள்.) வளைந்த பூங்கொம்பைப்போல இறந்தவனருகிற் சூழ்ந்து அழுகின்ற மகளிர் கூட்டத்தினர் திரும்பி அன்பனுடன் எமது இளையவளுயிரும் போய்விட்டதோ என்று மடியிற்பொருந்தவைத்துக் கொடுங்கையினாற் பின்புறத்தை அணைத்து நல்லாடையால் விசிறிச் சற்றேயுயிர்தோன்ற இளைப்பாற்றினார்கள். எ-று. (௪௫)

மெய்கழிந் தின்னுயிர் மீண்டுதன் யாக்கையின் மெல்லவே
கைகலந் தாங்கிரு காலியங் குற்றன கண்களும்
பொய்கைநீ லஞ்சிறி தவிழ்ந்தென வலர்ந்தன பூவையை
மைகழி நாண்முத னான்குநால் வேலியாய் வளைந்தவே.

(இ-ள்.) உடலைவிட்டுத் திரும்பி யினியவுயிர் தன்னுடலின் மெல்லெனக் கலந்தாற்போல இரண்டுகால்களு மசைந்தன; அவள் கண்களும் பொய்கையில் நீலமலர் சற்றலர்ந்தாற்போல விழித்தன; உடனே அக்கன்னிகையைக் களங்கமற்ற நாணமுதலியன நாலுவேலிகளாக வளைந்தன. எ-று. (௪௬)

கையெற்றி யுங்குழற் கற்றைசோ ருந்திரி காறுளி
நெய்யெனக் கண்புனல் கொங்கைமுற் றத்துக நெஞ்சுகும்
பையவாய் விடும்புறம் பார்க்குநா ணொடுந்தளைப் படுஞ்சிறு
தெய்வந்தொட் டாளெனத் தேம்பிவிம் மாந்தொளி தேயுமால்.

(இ-ள்.) கையை யுதறுவாள், கூந்தற்கற்றை சோருவாள் திரிகக்குகின்ற துளி நெய்யைப்போல கண்ணீர் தனப்பிரதேசத்திலொழுக மனமுடைபடுவள் மெல்லென வாய்திறந்து அழுவள், சுற்றிலும் பார்ப்பள், நாணென்னு நெடிய விலங்கினிடத்தாவள், சிறுதெய்வத்தாற் றொடப்பட்டவளைப்போலத் தேம்பிவிம்மி ஒளிதேய்வள்.

வணங்கில்செல் வந்தழீஇப் பிறந்தநா டொட்டொரு வைகலு
மணங்கெனக் கனவிலுங் கண்டிலா ளன்பன்மே லன்பென
வணங்குதன் னுருவமாய் நிறைவரம் பிற்றென விருந்தொருபெண்
ணணங்குவாய் விட்டழு தாலெனப் புலம்பலுற் றுளரோ.

(இ-ள்.) குறைவில்லாத செல்வத்துடனிருந்து பிறந்தநாள்தொட்டு ஒருதினமாவது துன்பமென்பதனைச் சொப்பனத்திலுங் கண்டறியாதவவள் அன்பன்மீது அன்பென்பது இணங்கிய தனது உருவமாய் நிறைந்தவரம்பு இதுவென்று காட்டுமாறு ஒருபெண்தெய்வம் வாய்திறந்து அழுதாற்போல அழத்தொடங்கினாள். எ-று.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்னு யகனேயோ வென்னிருகண் மணியேயோ வென்னை யீன்றான்
றன்னுயி யன்னதனி மருகாவோ முருகாவோ தாரார் முல்லை
மன்னுவோ வணிகர்குல மணியேயோ விடவரவின் வாய்ப்பட் டாயோ
வுன்னுக நிழலான வென்னைவிடுத் தெவ்வண்ண மொளிப்ப தேயோ

(இ-ள்.) என்னுயகனே! என்னிருகண்மணியே! என்னைப்பெற்ற தந்தையின் உயிரனைய வொப்பற்றமருகனே! முருகனே! முல்லைமலர்மாலைமார்பனே! வணிககுல மணியே! விடவரவின்வாயி லகப்பட்டனையோ? நீ உன்னுடனிழலானவென்னைவிட்டு எவ்வண்ணமொளித்துச்செல்லக்கூடும். எ-று. (௧௯)

பொன்னாட்டின் மடவாரைப் புணர்வதற்கோ நம்மளகா புரத்து வேந்த
னன்னாட்டின் மடவாரை மணப்பதற்கோ வுனைக்கடித்த நாகர் வேந்தன்
றன்னாட்டின் மடவாரைத் தழுவுதற்கோ வென்னுயிர்த் தலைவா வென்னை
யிந்நாட்டி லிருத்தியெனை வஞ்சித்துப் போயினவா றென்னே யென்னே.

(இ-ள்.) என்னுயிர்த்தலைவனே! நீ பொன்னாட்டுமாதர்களைப் புணர்தற்கோ? நமது அளகைநகரத்து அரசனாகியகுபேரனுடைய நல்லநாட்டிலுள்ள பெண்களைப்புணர்தற்கோ? அல்லது உன்னைக்கடித்தசர்ப்பராசனுடைய நாட்டிலுள்ள பெண்களைக் கலத்தற்கோ? என்னுயிர்த்தலைவனே! என்னை இந்தநாட்டிலிருக்கச்செய்து என்னை வஞ்சித்துப்போனவித மென்னவென்ன. எ-று. (௨௦)

தென்னுலகிற் புகுந்தனையோ பணிந்தனையோ மாதுலனைத் தேவி யோடுந்
தன்னிருதோ ளுறவாரத் தழுவினனோ நானுமுடன் சார்ந்தே னாகி
லென்னுரிய குரவரையுங் கண்ணாரக் காணேனோ வெனையிங் கிட்டாய்
பின்னுரிய பரிசனமுங் கைவிட்டாய் தனிப்போயென் பெற்றா யையா.

(இ-ள்.) ஐயனே நீ பிதிர்லோகத்திலடைந்தனையோ? மாமனையும் மாமியையும் வணங்கினையோ? அவன் தனதிரண்டுதோளிலும் படுமாறு உன்னைத்தழுவினனோ? நானுமுன்னுடன் வந்தேனாகில் என்னுடைய உரிய இருமுதுகுரவர்களையும் கண்ணாரக்காணேனோ? என்னை இங்குவிட்டனை. அன்றியும் உனக்குரிய பரிசனர்களையுங் கைவிட்டனை. நீ தனியேசென்று என்னையடைந்தனை. எ-று. (௨௧)

வரிசைமரு மகனரவால் விளிந்ததுநா னறைபோய மனத்தோ டிங்குப்
பரிவுறலு மெனைப்பயந்தார் நோற்றபய னன்றாகப் பலித்த தேயோ
பெரிதவரிக் கட்கலக்கங் காணுமு னிறந்தன்றோ பிழைத்தா ரந்தோ
வரியதிலு மரியபய னிதுவன்றோ வெவர்பெற்றா ரவர்போ லம்மா.

(இ-ள்.) முறையினையுடைய மருமகன் பாம்புகடித்திறந்ததுவும் நான் அறைபோகிய மனத்துடனிங்கு வருந்துதலும் என்னைப்பெற்றவர்கள் செய்ததவம் நன்றாகப்பலித்ததுவோ? மிகவுமவர்களித்த கண்கலக்கத்தைக் காணுமுன்னிறந்தன்றோபிழை

த்தார்கள்; அந்தோ அருமையிலும் அருமையான பிரயோசனமிதுவன்றோ? இவ்வண்ணமிவர்களைப்போல யாவரடைந்தார்கள். எ-று.

அறைபோதல் - கீழறுத்தல். (உ௨)

உன்காதன் மாமனென்னைப் பயந்தவன்றே யுறவறிய வுனக்கே பேசிப்
பின்காதன் மனைவியொடு முயிரிழந்தான் யானுமந்தப் பெற்றியாலே
யென்காத லுயிர்போக வெற்றுடம்போ விருக்குமுடனிறப்பே னென்னுத்
தன்காதற் றுணையிழந்த வன்றிலென விருந்தழுதா டமிய ளானாள்.

(இ-ள்) உனது ஆசைமாமன் என்னைப்பெற்றவத்தினமே உறவினரறிய உனக்கென்றேபேசி முடித்துப் பின்னர் ஆசைமனைவியுடன் உயிரை இழந்தனன். யானுமந்தமுறைமையினாலே என்னுசையுயிர்போக வெற்றுடம்போவிருப்பது! உன்னுடனிறக்கின்றேனென்று தனது காதற்றுணையையிழந்த அன்றிற்பறவையைப்போல தனித்தவளாக விருந்தழுதனள். எ-று. (உ௩)

மேற்படிவேறு.

நன்னக ருறக்க நீங்கி நடுக்கமுற் றழுங்கக் காழித்
தென்னகர் ஞானச் செல்வர் சிவனகர் தொறும்போய்ப் பாடி
யந்நக ரடைந்தா ரங்கோ ரணிமடத் திருந்தார் கேட்டு
மிதன்னென வாள்விட் டாய்ந்து கோயிலி னிடைவந் தெய்தி.

(இ-ள்.) அந்த நல்லவூர் இவளழுதவோசையைக்கேட்டு வருந்துதலுமவ்விடத்திற்கு அழகிய சீகாழிநகரத்திலிருக்கின்ற ஸ்ரீஞானசம்பந்தப்பெருமான் சிவாலயங்கள்தோறுஞ்சென்று பதிகம்பாடித் துதித்துக்கொண்டு அந்நகரத்திற்கெழுந்தருளினவரவ்விடத்திலொரு அழகியமடத்திலிருந்தார். இதனைக்கேட்டு என்னவிடயமிதுவென்று ஆள்விட்டுணர்ந்து அக்கோயிலினிடத்திற்கெழுந்தருளி. எ-று. (உ௪)

கன்னிநீ யாரை யுற்ற தென்னெனக் கன்னி தாழ்ந்து
தன்னரு மரபு மீன்றூந் தம்மையு மருகற் கென்றே
யுன்னினர் மன்றல் பேசி யிறந்தது முயிரன் னானோ
டிந்நெறி யடைந்தீங் குற்ற நிகழ்ச்சியு மெடுத்துச் சொன்னாள்.

(இ-ள்.) கன்னிகையே, நீயார்? நடந்தவிஷயமென்னை? என்று வினவினர். அதற்கவள் அவரைவணங்கித் தனதரியமரபையும்பெற்றவர்களையும் மருகனுக்கு என்றே நினைத்துத் தன்னைக் கல்யாணஞ்செய்து கொடுப்பதாய்ப்பேசி யிறந்ததையும் உயிரனையவனுடனே இவ்வழியையடைந்து இவ்விடத்தினடந்த முறைமையையும் எடுத்துக்கூறினாள். எ-று. (உ௫)

தந்தையுந் தாயு மன்னோர் தமியளா யிரங்கும் பேதைப்
பைந்தொடி யாவி காப்பான் பாம்புகோட் பட்டான் மாடே
வந்தவ னாக மெல்லா மருந்துரு வாகும் வண்ணஞ்
சிந்தைசெய் தருட்கண் வைத்தார் குதித்தது தீவாய் நஞ்சம்.

(இ-ள்) பிதாமாதாக்களையொத்த ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானார் தனித்தவளாக வருந்துகின்ற பேதைமையினளாகிய அப்பசிய வளையலணிந்தவளுடைய உயிரைக்காக்குமாறு பாம்புகடித்திறந்த வவன்றருகிலடைந்து அவனுடல்முழுமையும் அமிர்தவுருவமாகுமாறு திருவுளத்தினினைத்துக்கருணைநோக்காக நோக்கினர்; உடனே, தீவாய்நஞ்சம் அகன்றது. எ-று. (உ௬)

எழுந்தன னுறங்கி னன்போ லிறந்தவன் யாருங்கண்டு
தொழுந்தகை ஞான வேந்தைத் தொழுதனர் துதிசெய் தார்வத்

தழுந்தினர் கன்னி யன்ன மனையவ ளின்பத் தீந்தேன்
பொழிந்தொரு புறத்தே கஞ்சம் பூத்ததோர் கொம்பினின்றாள்.

(இ-ள்.) இறந்தவவ்வணிகன் உறங்கினவன் எழுந்தாற்போல எழுந்தனன். இவ்வற்புதத்தை அனைவரும்பார்த்து யாவராலும் வணங்குதற்குரிய ஞானசம்பந்தப் பெருமானைத்தொழுது துதிசெய்து அன்பின்மூழ்கினார்கள். உடனே கன்னியன்னம் போலுமவள் இன்பமாகிய இனியதேனினை ஒழுகவிட்டுக்கொண்டு ஒருபுறத்தில்நுனி யிற் றாமரை மலர் மலர்ந்த வொருபூங்கொம்பைப்போல நின்றனள். எ-று. (௨௭)

தலைவனை யிழந்த போதுந் தனியுயிர் பெற்ற போதுஞ்
சிலைநுதல் காதன் மாமன் செல்வியா யிருந்துந் தீண்டா
நிலைமையு மன்புங் கற்பி னீர்மையும் வியந்து நோக்கி
மலைமகண் ஞான முண்டார் வணிகனை நோக்கிச் சொல்வார்.

(இ-ள்.) வில்லனைய நெற்றியினளாகிய வம்மாது தன்றலைவன் இறந்தபோழ் தும்ஒப்பற்றஉயிரையடைந்தபோழ்தும் அவனிடத்தன்புள்ள மாமன்மகளாகவிருந்தும் தீண்டாதநிலைமையும் அன்புங் கற்பின்றன்மையும் ஆச்சரியமாகப்பார்த்து உமாபிரா ட்டி யளித்தருளிய ஞானமிர்தத்தையுண்ட ஞானசம்பந்தசுவாமிகள் உயிர்த்தெழுந்த வணிகனைப்பார்த்துரைக்கின்றனர். எ-று. (௨௮)

வருதிநின் மரபுக் கெல்லா மணியனா யுன்றன் மாமன்
றருதிரு வனையா ளின்பஞ் சாருநா டுன்பம் வந்து
பெருகுநா ளன்றி யென்றுன் மெய்தொடப் பெறுவ ளீண்டே
திருமண முடித்துக் கொண்டு போகெனச் செப்ப லோடும்.

(இ-ள்.) வணிககுலத்திற்கு மணிபோல்பவனே, உனது மாமன்பெற்றதிரு மகளையொத்தவள் இன்பமுண்டானபோழ்தும் மிகுந்த துன்பமுண்டாகின்றகாலத்தி லும் அன்றி என்றும் உன் உடலைத் தொடத்தக்கவளாக விருக்கின்றனள்; ஆதலால் நீ இவ்விடத்திலேயே விவாகம்செய்துகொண்டு அவளை உடனழைத்துச்செல்லுதி என்று திருவாய்மலர்ந்தருளுதலும். எ-று. (௨௯)

செங்கணோ றனையா னையன் றிருமொழி தலைமேற் கொண்டு
பங்கயன் படைத்த சாதி நான்கையும் பாது காப்பீ
ரெங்குல வணிக ரின்றிக் கரிகளு மின்றி யீங்கே
மங்கல முடிக்கும் வண்ண மியாதென வணங்கிச் சொன்னான்.

(இ-ள்.) செந்நிறமான கண்ணினையுடைய வத்தனவணிகன் சுவாமியான சம் பந்தருடைய வாக்கியத்தை உச்சிமேற்கொண்டு வணங்கி,பிரமன்படைத்த நால்வகை வருணத்தினரையும் பாதுகாப்பவரே, எமதுகுலவணிகர்களுமில்லாமல் சாக்ஷிகளுமில் லாமல் இவ்விடத்தில் கல்யாணஞ்செய்துகொள்ளுவது எப்படி என்று கூறினான்.

கன்னியை யீன்ற ஞான்றே யுனக்கென்றுன் காதன்மாம
னுன்னிய துறவி னுள்ளா ரறிவரோ யுனக்கீ தன்றி
வன்னியுங் கிணறு மிந்த விலிங்கமுங் கரிகண் மைந்தா
விங்கிலே வதுவை செய்தி யெம்முறை கடவா தென்றார்.

(இ-ள்.) இப்பெண்ணைப்பெற்ற காலத்திலேயே உனக்கென்று உன்னுடைய ஆசைமாமன் நினைத்திருந்ததை உறவின்முறையார்கள் அறிவார்களே, அன்றியும்வணி கனே உனக்கு இங்குள்ள இவ்வன்னிமரமும் மிக்கிணறும் இச்சிவலிங்கமும் சாக்ஷிக ளாம். என்சொல்லைத்தட்டாமல் இவ்விடத்திலேயே கல்யாணஞ்செய்துகொள் என் றனர். எ-று. (௩௧)

மாசறு மனத்தான் காழி வள்ளலைப் பணிந்து நீரே
தேசிகர் குரவர் நட்டோர் தெய்வமுங் கிளையு மென்னப்
பேசிய வாறே வேள்விப் பெற்றியா னிதீஇத்தான் வேட்ட
பாசிழை யோடுதாழ்ந்து விடைகொடு பரவிப் போனான்.

(இ-ள்.) குற்றமற்ற மனத்தினையுடையவவ்வணிகன் ஸ்ரீகாழி வள்ளலாரை வணங்கி எம்பெருமானே ! அடியேற்கு குருவும்நீரே இருமுதுகுரவரும்நீரே நண்பரு நீரேதெய்வமும்நீரே சுற்றமுநீரேஎன்றுகூறி அவராற் கூறப்பட்டவண்ணமே கல்யாணமுறையாகவே அங்குச் செய்யவேண்டியவைகளைச்செய்து தன்னால் மணஞ்செய்து கொள்ளப்பட்ட மனைவியுடனே ஞானசம்பந்ததேசிகரை வணங்கி விடைபெற்றுக் கொண்டுபோனான். எ-று. (௩௨)

ஏவல்செய் யாயத் தாரு மடியரு மீண்ட வீண்டிக்
காவல்செய் மதுரை மூதூர் குறுகித்தன் காதன் மாமன்
பூவையை மணந்த வண்ணங் கேட்டங்குப் புடைசூழ் சுற்றம்
யாவரு முவப்ப வின்புற் றிருந்தன னிளங்கோ மன்னன்.

(இ-ள்.) ஊழியஞ்செய்கின்ற மாதர்களும் தாசர்களும் உடன்வரச்சென்று காவலினையுடைய பெரிய மதுராநகரத்தையடைந்து தனது ஆசைமாமனுடையமகளை மணஞ்செய்துகொண்ட தன்மையைக்கேட்டு அங்கருகிற்சூழ்ந்திருந்த சுற்றத்தினர்களனைவரும் மகிழ அவ்வணிகன் சுகமனுபவித்துக்கொண்டிருந்தனன். எ-று. (௩௩)

தன்பெருந் தனமு மாம னீட்டிய தனமு மீட்டி
மன்பெரு நிதிக்கோ னென்ன வாணிகம் பெருக்கி நாயக
னின்புறு காத லார்க ளிருவரு மீன்ற காத
னன்பொருண் மகிழ்ச்சி செய்ய நலம்பெற வாழு நாளில்.

(இ-ள்.) தனது பெரியதனத்தையும் தன்மாமன் சம்பாதித்த திரவியத்தையுஞ் சேர்த்துவிருத்தியாக்கிக்கொண்டு நிலைபெற்றசெல்வத்தினையுடையகுபேரனைப்போல வர்த்தகத்தை அதிகமாக்கி வணிகன் தன்மீது அன்புள்ள இருமனைவியர்களும்பெற்ற ஆசையினையுடைய நல்லபிள்ளைகள் மகிழ்ச்சியைத்தர நன்மையுண்டாக வாழுகின்றகாலத்தில். எ-று. (௩௪)

மூத்தவள் சிறுவர் சால மூர்க்கரா யுள்ளா ரேனை
மாத்தளி ரியலி னட்கோர் மைந்தனுண் டிவனு மன்ன
தீத்தொழி லுக மன்ன சிறார்களு மல்லற் செல்வம்
பூத்தநீ ணியமத் தூடு போய்விளை யாடல் செய்வார்.

(இ-ள்.) மூத்தவளுடைய பிள்ளைகள் மிகவு மூர்க்கர்களாகவுள்ளவர்கள்; இளையவளான மாந்தளிர்மேனியாட்கு மொருகுழந்தையுளன். அவனும் அந்தகொடுந்தொழிலினையுடைய அரவம்போன்ற குழந்தைகளும் மிக்கசெல்வத்தினையுடைய தாகவிருக்கின்ற வீதிகளிற்போய் விளையாடுவார்கள். எ-று. (௩௫)

முந்திய மனைட்டி மைந்தர் முகிழ்முலை யிளைய பாவை
மைந்தனை யொருநாட் சீறி யடித்தனர் வருந்தி யீன்ற
சந்தணி முலையாண் மாற்று டனையரை னைத்தா லீன்ற
பைந்தொடி தானுஞ் சீறி யிளையளைப் பழித்து வைவாள்.

(இ-ள்.) மூத்தமனைவியின்பிள்ளைகள் அரும்பனைய தனங்களையுடைய இளையவண் மகனை ஒருநாள் கோபித்தடித்தார்கள். அப்பொழுது வருந்திப்பெற்ற சந்தனமணிந்த தனபாரங்களையுடைய அவ்விளையவள் சக்களத்திபிள்ளைகளைத் திட்

டினள். உடனே மற்றைய சிறுவர்களைப்பெற்ற மூத்தவளும் கோபங்கொண்டு இளைய வளைப் பழித்துரைத்தனள். எ-று. (ருசு)

எந்தவூ ரெந்தச் சாதி யார்மகள் யாவர் காணச்
செந்தழல் சான்று வெங்கோன் கடிமணஞ் செய்து வந்த
கொந்தவிழ் கோதை நீயென் கொழுநனுக் காசைப் பட்டு
வந்தவ ளான காமக் கிழத்திக்கேன் வாயும் வீறும்.

(இ-ள்.) நீ எந்தவூர்? நீயெந்தச்சாதி? நீயார்மகள்? நீயார்பார்க்களங்கோனைச் செந்தழலைச் சாக்ஷியாகக்கொண்டு கல்யாணஞ்செய்துவந்தவள்? பின்னை நீ என்னுடையபர்த்தாவுக்காசைகொண்டுவந்த காமக்கிழத்தி; காமக்கிழத்தியான வுனக்கு இவ்வளவுவாயும் வீறுப்புமென்னத்திற்கு. எ-று. (ருஎ)

உரியவன் நீமுன் னாக வுன்னைவேட் டதற்கு வேறு
கரியுள தாகிற் கூறிக் காட்டெனக் கழற லோடு
மெரிசுட வாடிச் சாய்ந்த விணர்மலர்க் கொம்பிற் சாம்பித்
தெரியிழை நாணஞ் சாய்ப்ப நின்றிது செப்பு கின்றாள்.

(இ-ள்.) உன்பர்த்தா வுன்னை அக்கினிசாக்ஷியாகக் கல்யாணஞ்செய்ததற்கு வேறுசாக்ஷியிருந்தால் சொல்லிக்காண்பி என்றுகூறினவுடனே அவ்விளையவள் தீயானதுசுட வதனால் வாடிச்சாய்ந்த கொத்தானமலரிளையுடைய பூங்கொம்பைப்போல வருந்தி நாணமானது தன்னைத்தாழ்த்த நின்று இதனைக்கூறுகின்றாள். எ-று. (ருஅ)

அரவின்வாய்ப் பட்ட வைக லாருயி ரளித்த ஞானப்
புரவல ரருளா லெங்கோன் புறம்பய நாதன் வன்னித்
தருவொடு கிணறுங் காணச் செய்தனன் சாறம் மூன்று
கரிகளு முள்ள வென்றாள் கற்பினு லொப்பி லாதாள்.

(இ-ள்.) பாம்பின்வாயிலகப்பட்டதினத்தில், ஞானவேதாந்தராகிய ஸ்ரீசம்பந்தகுருநாதன் அரியவுயிரையளித்து, புறம்பயநாதனையும் வன்னிமரத்தையும் கிணற்றையுஞ் சாக்ஷியாகவமைத்து திருமணநடத்தினன்; இப்பொழுதுமம்மூவகையசாக்ஷிகளும் இருக்கின்றன என்று ஒப்பற்றகற்பினையுடைய அவ்விளையவள்கூறினாள். ()

மாற்றவ ணகைத்து நன்று நன்றுநின் மன்றல் வேள்விக்
கேற்றன கரியேசொன்னா யிங்குமக் கரிகண் மூன்றுந்
தோற்றுமே லதுவு மெய்யே யென்றன ளோகை யோடும்
வேற்றுமை யிலாத சாய லிளையவள் விழுமங் கூரா.

(இ-ள்.) இதைக்கேட்ட சக்களத்தி சிரித்து, நல்லது! நல்லது! உன்கல்யாணத்திற்சேற்ற சாக்ஷிகளையே சொல்லினை! இவ்விடத்திலும் உன்னால் சொல்லப்பட்ட வம்மூன்றுசாக்ஷிகளும் தோற்றுமானால் அதுவுமுண்மைதான் என்றனள். இதனை மயிற்சாயலைக்காட்டிலும் வேறுபிரித்தறிதற்குக் கூடாத சாயலினையுடைய இளையவள் துன்புற்று. எ-று. (சo)

வெவ்வுயிர்ப் பெறியவில்போய் மெல்விர னெரிக்குங் கையா
லவ்வயி றதுக்கும் வீழுங் கண்புனல் வெள்ளத் தாழுங்
கொவ்வைவாய் துடிக்கு நாணந் தலைக்கொளூங் கூசு மன்னோ
தெய்வமே யாவா வென்னு மென்செய்கேன் சிறியே னென்னும்.

(இ-ள்.) பெருமூச்சுவிட்டுக்கொண்டு வீட்டிற்குள்ளேசென்று மெல்லியவிரல்களை நெரிப்பள்; கையினால் வயிற்றினைப் பிசைவள்; கீழேவிழுவள்; கண்ணீர்வெள்ளத்துள் மூழ்குவள்; கொவ்வைக்கனிபோன்ற வாய்துடிக்கும்; மிகுந்தநாணமடை

வள்; கூசுவள்; ஐயோ தெய்வமே! ஐயோ என்றுரைப்பாள்; சிறியவளாகியயான் இத ற்கென்ன செய்யப்போகின்றேன் என்றுரைப்பள். எ-று. (௬௧)

தாதைதா யிறந்த வன்றே தமியளா யிங்குப் போந்த
பேதையேற் காருண் டைய பேதுறும் வணிகற் கன்று
மாதுல னாகி ஞாதி வழக்கறுத் தூரிமை யீந்த
நாதனே யேதி லாள்வாய் நவையினிற் காத்தி யென்னா.

(இ-ள்.) பிதா மாதாக்கள் இறந்தவப்பொழுதே இம்மதுரா நகரத்திற்கு வந்த பேதையாகிய வெனக்குவேறேயாவர் துணையிருக்கின்றார்கள்? ஐயனே! வருத்தமுற்ற செட்டிமகனுக்கு முன்னாளில் மாமனாகப் போந்து தாயத்தார் வழக்கினைச் சிக்கறுத்து அவனுரிமையை அவனுக்கேயளித்த கருத்தாவே! என்னைப் பகையுடையவளாக விரு க்கின்ற சக்களத்தி கூறும் பழியினின்று நீக்கி இரக்ஷிப்பாயாக என்று. எ-று. (௬௨)

அன்றிர வுண்டி யின்றித் துயிலின்றி யழுங்கிப் பின்னாட்
பொன்றிணி கமல வாவிப் புண்ணியப் புனறோய்ந் தண்டந்
நின்றிழி விமானக் கோயி னிரம்பிய வழகர் முன்னாச்
சென்றிரு தாளில் வீழ்ந்து தன்குறை செப்பி வேண்டும்.

(இ-ள்.) அந்நாளிரவில் உணவருந்தாமலும் துயிலாமலும் வருந்தி மறுநாள் பொற்றாமரைக் குளத்திலுள்ள புண்ணியதீர்த்தத்தில் முழுகி ஆகாய வுலகினின் றிற ங்கிவந்து விமானத்தி லெழுந்தருளி யிருக்கின்ற இறைவன் சந்நிதானத்தை யடை ந்து எதிரில் விழுந்து வணங்கித் தனது குறைகளைக்கூறி வேண்டிக்கொள்ளுகின் றனள். எ-று. (௬௩)

அன்றெனைக் கணவன் வேட்ட விடத்தினி லதற்குச் சான்றாய்
நின்றனைபந் தருவு நீயுங் கிணறுமந் நிலையே யிங்கு
மின்றுவந் தேதி லாள்வாய் நகைதுடைத் தெனைக்கா வாயேற்
பொன்றுவ லென்றாள் கற்பின் புகழினை நிறுத்த வந்தாள்.

(இ-ள்.) கற்பின் கீர்த்தியை உலகினில்தாபிக்கவந்த வவ்வணிகமாது இறைவ னைப்பார்த்து முன்னாளில் என்னை என் கணவன் கல்யாணஞ் செய்துகொண்ட விட த்தினில் அக்கல்யாணத்திற்குச் சாக்ஷியாய்நின்ற பசிய வன்னிமரமும் நீயும் கிணறும் அவ்வண்ணமே இவ்விடத்திலும் இன்று தோன்றி பகையாட்டியின் பரிகாசத்தினை ஒழித்து என்னைக் காக்காதுபோவாயாகில் யான் சாவேன் என்று கூறினாள். எ-று. ()

அல்லலுற் றழுங்கி நின்றாள் பரிவுகண் டந்தண் கூட
லெல்லையில் கருணை மூர்த்தி யருளினா லெவருங் காணத்
தொல்லையின் படியே யன்னாள் சொல்லிய கரிகண் மூன்று
மொல்லைவந் திறுத்த கோயி லுத்தர குணபா லெல்லை.

(இ-ள்.) துன்புற்று வருந்திநின்ற வவ்வணிகமாதின் ஆற்றாமையைப் பார்த்து அழகிய தண்ணிய சதுர்க்கூடபுரேசனாகிய அளவற்ற கருணையினையுடைய இறைவ னது திருவருளினால் அனைவருங் காணுமாறு பழய வண்ணமே அவள் கூறிய மூன்று சாக்ஷிகளும் அவ்வாலயத்தில் ஈசான்யமூலையில் வந்தடுத்தன. எ-று. (௬௫)

அன்னபோ திளையாண் மூத்தாட் கொண்டுபோ யால வாயெம்
முன்னவன் றிருமுன் றாழ்ந்து காட்டுவாண் முகிறோய் சென்னி
வன்னியீ திலிங்க மீது கிணறிதென் மன்றற் சான்றாத்
துன்னிய வென்றாள் கண்டாண் முடித்தலை தூக்கி நின்றாள்.

(இ-ள். அப்பொழுது இளையவள் மூத்தவளை யழைத்துக்கொண்டு சென்று மதுரையிறைவனாகிய எம்பெருமானுடைய சந்நிதானத்தில் வணங்கி காட்டுகின்றாள். மேகந்தோய்கின்ற தலையினையுடையவன்னிமரமிது; இலிங்கம் இது; கிணறிது; ஆகிய இவைகளே என் கல்யாணத்திற்குச் சாக்ஷியாக விருந்தன என்று கூறினாள். அவைகளைக்கண்ட மூத்தவள் முடியினையுடைய தலையை யசைத்துக்கொண்டு நின்றனள். எ-று. (௪௬)

அவ்விடைத் தருவு நீரு மன்றுபோ லின்று சான்றா
யிவ்விடைப் பட்ட தென்ன வதிசய மெவர்க்குந் தேறாத்
தெய்வமு மெளிவந் தங்கைக் கனியினித் திருவி னன்னாள்
கைவசப் பட்ட தென்றாற் கற்பினுக் கரிதே தம்ம.

(இ-ள்.) அப்புறம்பய நகரிலிருந்த மரமும் நீரும் அந்நாளிற்போல விந்நாளிலுஞ் சாக்ஷியாக இவ்விடத்ததாயின. இஃதென்ன வாச்சரியம். யாவராலும் உணர்தற்குக் கூடாத தெய்வமும் எளிதாக வெளிப்பட்டு அங்கையிலமைத்த கனியைப்போல இத்திருமகள் போல்பவளது கைவசப்பட்டதானால் கற்பினுக்கரியதேது. எ-று. (௪௭)

மங்கைதன் கற்பு மீச னிடத்தவள் வைத்த வன்பு
மங்கண னவட்குச் செய்த வருளையும் வியந்து நோக்கி
மங்கல நகரா ரெல்லா மகிழ்ச்சியு ளாழ்ந்தார் முல்லைத்
தொங்கலான் முதும ணாட்டி பொருத்தியுந் துன்பத் தாழ்ந்தாள்.

(இ-ள்.) அம்மங்கையின் கற்பும் ஈசனிடத்தி லவள்வைத்த அன்பும் சிவபெருமா னவட்குச்செய்த வருளையும் ஆச்சரியமாகப் பார்த்து மங்கலகரமான அம்மதுரை நகரா ரனைவரும் சந்தோஷத்தின் மூழ்கினார்கள். முல்லைமலர் மாலையணிந்த வணிகனுடைய மூத்தமனாட்டி யொருத்திமாத்திரம் துன்பத்தின் மூழ்கினாள். எ-று. (௪௮)

மேதகு வணிகர் மூத்த வினைக்கொடி யாளைப் பொல்லாப்
பாதகி யிவளா மென்று பழித்தனர் படிறு பேசிக்
கோதறு குணத்தி னாளைக் குடிப்பழு துரைத்தாய் நீயென்
காதலி யாகா யென்று கணவனுந் தள்ளி விட்டான்.

(இ-ள்.) சிறந்த வணிகர்கள் பாவவினையினையுடைய கொடியாளான மூத்தவளை இவளே பொல்லாப் பாதகி எனறு பழித்தார்கள். அவள் கணவனும் அம்மூத்தவளைப் பார்த்து நீ படிறுரைத்துக் குற்றமற்ற குலத்திற் பிறந்தவளைக் குடிப்பழுதுரைத்தனை அதனால் நீ இனி என் மனையாகாயென்று தள்ளிவிட்டனன். எ-று. (௪௯)

அந்நிலை யிளையாள் கேள்வ னடியில்வீழ்ந் திரப்பா ளைய
வென்னது கற்பை யின்று நிறுத்தின ளிவண்மாற் றாளன்
றன்னையி லாதேற் கன்னை யாயின ளிவளும் யானு
மின்னுயி ருடல்போல் வாழ்வே மெனத்தழீஇத் தம்மி னட்டார்.

(இ-ள்.) அப்பொழுது இளையவள் கணவன் காலில் விழுந்து வேண்டிக்கொள்ளுகின்றனள். ஐயனே! இவள் இன்று எனது பதிவிரதாதன்மத்தை நிலைநாட்டினவள்; ஆதலால் இவள் எனக்கு மாற்றாளல்லள். தாயற்றவெனக் கொருதாய் ஆயினள். இனி இவளும் யானும் இனிய உயிரும் உடலும்போல் வாழ்வோமென்று அவளைத் தழுவிக்கொண்டு ஒருவருக்கொருவர் சிநேகஞ் செய்துகொண்டனர். எ-று. (௫௰)

உடம்பினு லிரண்டே யன்றி யுயிர்ப்பொரு ளிரண்டற் றுள்ள
மடம்பழு மழுக்கா றற்று மைந்தரு மனைய ராக

விடப்படு மைவாய் நாகம் விழுங்கிரை யொத்துத் தம்மி
விடம்படு மன்புற் றின்புற் றிருவரு மிருந்தார் மன்னோ.

(இ-ள்.) உடம்பினால் மாத்திரம் இரண்டேயன்றி உயிரொன்னும் பொருளில் இரண்டற்று உள்ளத்திலிருந்து மடமையினைத்தருகின்றபொருமையையகற்றிப் பிள்ளைகளும் அவ்வண்ணமாகவே இருப்ப விடம்பொருந்திய ஐவாய் நாகமுண்ணு மிரையைப்போல ஒன்றாய் ஒருவருக்கொருவர் மிகுதியான வன்புபொருந்தி இருவரு மிருந்தார்கள். எ-று. (௫௧)

அருந்ததி யனையாள் கேள்வற் காயுளு மானச் செல்வப்
பெருந்தன நிறைவுஞ் சீரு மொழுக்கமும் பீடும் பேறு
தருந்தவ நெறியுங் குன்றாத் தருமமும் புகழும் பல்க
விருந்தனள் கமலச் செல்வி யென்னவீற் றிருந்து மன்னோ.

(இ-ள்.) திருமகளைப்போல செல்வத்தினையும் உருவினையும் உடைய அவ்வருந்ததிக் கற்பினளான அவ்வணிகமாது தன் கணவனுக்கு ஆயுளும் நீங்காத செல்வப்பெருந்தன நிறைவும் சீரும் ஒழுக்கமும் பெருமையும் பலவகைப் பேறுகளைத் தருகின்ற தவமார்க்கமும் குறையாத தருமமும் புகழும் விருத்தியாக வீற்றிருந்தாள்.

பொன்னவிர் கமலம் பூத்த பொய்கைசூ ழால வாயெம்
முன்னவன் விளையாட் டெல்லை கண்டியார் மொழிய வல்லா
ரின்னமு மளவின் றென்ப வென்குரு நாத சாமி
சொன்னவா றுங்கட் கெண்ணெண் காதையுஞ் சொன்னே னம்ம.

(இ-ள்.) பொன்போல விளங்குகின்ற தாமரைமலர்க ளலர்ந்த பொய்கையினாற் சூழப்பெற்ற திருவாலவாயினையுடைய எமது முதல்வனது திருவிளையாட்டைக் கண்டு எவர் கூறவல்லுநர்? அவை இன்னமும் அளவற்றன உள்ளன என்று கூறுவார்கள். எங்குருநாதரான குமாரக்கடவுளெனக் குணர்த்திய வண்ணமேயின்று உங்களுக்கறுபத்துநாலு கதைகளையுங் கூறினேன். எ-று. (௫௩)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றுதென் மலைமே லிருந்தமா தவத்தோ னின்னருட் குருபரன் றனையு
மன்றவன் றிருவாய் மலர்ந்தவா சகமு மருள்கனிந் தொழுகவுள் ளடக்கித்
தென்றமி ழால வாய்த்தனிப் பதியைச் சென்னிமேற் பன்னிரண் டுய்ப
ரொன்றவைத் திமையா வங்கயற் கண்ணி யுடனுறை யொருவனை நினைந்தான்.

(இ-ள்.) என்று பொதியமலைமீதிருந்த மிகுந்த தவத்தினையுடைய அகத்தியன் இனிய வருளினையுடைய குமரகுருபரனையும் அந்நாளி லவனு லுபதேசிக்கப்பட்ட உபதேசமொழியையும் அருளானது சிந்தியொழுக வுள்ளேயடக்கி அழகிய தமிழினையுடைய நாட்டிலிருக்கின்ற ஆலவாய்நகரத்தை தலையின்மீது பன்னிரண்டங்குலத்திற்குமேலே வைத்துச் சிமிட்டாத அழகிய சேற்கண்ணியுடனெழுந்தருளி யிருக்கின்ற ஒப்பற்ற இறைவனைத் தியானித்தான். எ-று. (௫௪)

பரவச மடைந்து வழிகவர்ந் துண்ணும் பழிப்புல வேடர்போ யொளிப்ப
விருள்வெளி கடந்து திருவருள் வழிச்சென் றெண்ணிலாச் சராசரமனைத்தும்
புரைவற நிறைந்து காட்சிகண் காண்பான் புதைபடத் தனித்தபூ ரணமா
யுரையுணர் விறந்த வுண்மையா னந்த வுணர்வினை யுணர்வற வுணர்ந்தான்.

(இ-ள்.) தன்வசங் கெட்டு வழிபறித்துத் துண்ணுகின்ற பழியினையுடைய ஐம்புலவேடர்கள் சென்று ஒளிப்ப, இருளும் வெளியுங்கடந்து திருவருளின் வழியேசெ

ன்று அளவற்றனவாகிய சராசரங்கள் முழுமையும் புரையின்றி நிறைந்த காட்சியைக் கண்காணுமாறு மூடிக்கொண்டு நிற்கின்ற பூரணமாய் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத சத்திய ஞானானந்தத்தைச் சிவோஹம்பாவனையிற் கண்டு மகிழ்ந்திருந்தனன்.

வன்னியுங்கிணறு மிலிங்கமுமழைத்த படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௩௧௧.

அறுபத்தைந்தாவது,

# அருச்சனைப் படலம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கன்னிதன் வதுவைக் கரிகளா யிலிங்கக் கடவுளுங் கவைக்கருங் கோட்டு
வன்னியும் படுநீர்க் கூவலும் வந்த வழியிது மதுரைநா யகனைச்
சென்னியில் வைத்த முனிவனைப் பூசை செய்துமா தவரொருங் கெய்திப்
பன்னிற மலர்தூஉ யாலவா யானைப் பரவிய பரிசது பகர்வாம்.

(இ-ள்.) வணிக்மாதின் கல்யாணத்தின் சாக்ஷிகளாக இலிங்கதெய்வமும், பிளவுபட்ட கொம்பினையுடைய வன்னிமரமும், உண்டாகிய நீரினையுடைய கிணறும் வந்த வரலாறிது. பின்னர் மதுரைநக ரிறைவனைச் சிரசின்மீது தியானிக்கின்ற அகத்திய முனிவனைப் பூசித்து அம்முனிவர்க ளனைவர்களு மொன்றாகவந்து பல நிறமான மலர்களை இறைத்து ஆலவாயிறைவனை வழிபட்ட தன்மையைக் கூறுவாம். எ-று. (க)

போதவா னந்தத் தனிக்கடல் பருகும் புயல்புரை முனிவனை வசிட்ட
மாதவ னாதி முனிவரு முலோபா முத்திரை தன்னொடும் வரித்துப்
போதொடு சாந்த மானமதந் தீபம் புகைமுதற் கருவிகைக் கொண்டு
மேதகு சிறப்பா லருச்சனை செய்து பின்னுமோர் வினவுரை செய்வார்.

(இ-ள்.) ஒப்பற்ற ஞானானந்த சமுத்திரத்தை யுண்ணுகின்ற மேகம்போன்ற வகத்தியனை மாதவனான வசிட்டன் முதலானவர்களும் உலோபாமுத்திரையுடன் வரித்து புட்பஞ் சந்தனம் புனுகு தீபம் தூபம் முதலிய கருவிகளைக் கைக்கொண்டு உயர்ந்த சிறப்பாக வருச்சனைசெய்து பின்னு மொன்றை கேட்பாராயினர். எ-று. (உ)

கோச்சகக்கலிப்பா.

கோட்டஞ் சிலைகுனித்த கூடற் பிரானுடல்
கேட்டஞ் செவிபடைத்த பேறடைந்தேங் கேட்டபடி
நாட்டங் களிப்ப நறுமலர்தூஉய்க் கண்டிறைஞ்ச
வேட்டங்கள் யாங்களென வோதினர் மெய்த்தவரே.

(இ-ள்.) மலையை வில்லாகவளைத்த சதுஷ்கூடபுரேசனுடைய திருவிளையாடல்களைக்கேட்டு அழகிய காதைப்பெற்ற பேற்றினை யடைந்தேம். இனிக் கேட்டவண்ணம் கண்களிக்குமாறு நன்மலர்களையிறைத்துக் கண்டு தரிசிக்கவிரும்பினோம். நாங்களென்று உண்மைத் தவசிகளான அவர்கள் கூறினார்கள். எ-று. (௩)

என்ற வறவோ ரெதிரே முகமலர்ந்து
குன்ற மடக்குங் குறுமுனிவன் கூறுவா
னன்றுமுனி காளிதனை நானுள்ளத் தெண்ணியாங்
கொன்றமொழிந் தீரொன்றன் பின்னும்வியந் தோதுவான்.

(இ-ள்) என்று கூறிய முனிவர்களி னெதிரே முகமலர்ந்து விந்திய மலையை யடக்கிய அகத்தியமுனிவன் கூறுகின்றான். முனிவர்களே நல்லது நான் மனதினினைத்த வண்ணமே பொருத்தமாகக் கூறினீர்கள் என்று; பின்னும் ஆச்சரியமாகக்கொண்டு கூறுகின்றனன். எ-று. (௪)

பண்ணுன் மறைமுடியுந் தேறாப் பரசிவனை
யெண்ணூ லளவிறந்த வெக்கலையாற் கண்டுமுளக்
கண்ணா லறியாதார் வீட்டின்பங் காண்பரோ
மண்ணாதி யாறாறு நீத்ததனி மாதவரே.

(இ-ள்) இசையினையுடைய நான்கு வேதங்களின் உச்சிகளும் உணராத பரசிவனை எண்ணத்தினாலும் அளவற்ற எவ்வித கலைகளினாலும் கண்டு முளக்கண்ணினாலறியாதார் வீட்டின்பத்தைக் காண்பார்களோ பிருதிவி முதலிய முப்பத்தறுவகைத் தத்துவங்களையுங்கடந்த மாமுனிவர்களே. எ-று. (ரு)

அஞ்செவியி னூறுபடக் கேட்டபடி யாலவாய்ப்
பஞ்சமுகச் சோதிப் பரனைப்போ யர்ச்சித்து
நெஞ்ச நெகக்கண்டு நினையா வழிநினைந்து
வஞ்சவினை வேர்களைவான் வம்மின்க ளென்றனனே.

(இ-ள்) அழகிய காதிற் பற்றுமாறு கேட்டவண்ணம் ஆலவாய்நகரி லெழுந்தருளியிருக்கின்ற ஐந்துமுகங்களை யுடைய இறைவனை அர்ச்சித்து மனமுருகத்தித்து நினையாவண்ணமாக நினைத்து வஞ்சனையான வினையின் வேரினை அறுக்குமாறு போவோம் வாருங்கள் என்றனன். எ-று. (சு)

மங்கல வோரை வருதினத்தில் வானிழிந்த
கங்கை படிந்துலக நாயகனைக் கைதொழுது
புங்கவர்முன் சங்கற்பஞ் செய்தனுச்சை பூண்டொழுகி
யங்கவர்வா யாசி மொழிகேட் டகமகிழ்ந்தே.

(இ-ள்) மங்கலகரமான ஓரைவருகின்ற நாளில் ஆகாயத்தினின்றும் இறங்கிய கங்கையின்மூழ்கி விசுவநாதனை வணங்கித் தேவர்களெதிரிற் சங்கற்பஞ்செய்து அனுக்ஞை பெற்றிருந்து அங்குள்ளவர்களின் வாயினின்றும் உண்டாகின்ற ஆசிமொழியைப்பெற்று உளமகிழ்ந்து. எ-று. (எ)

ஐம்புலனுங் கூடற் பெருமா னடிபொதுக்கி
நம்பனுரு வைந்தெழுத்து நாவாட்க் கைகூப்பித்
தம்புனித சைவ தவத்தெய்வத் தேர்மேற்கொண்
டும்பர் வழிநடக்க லுற்றார்க ளற்றவரே.

(இ-ள்) பஞ்சேந்திரியங்களையும் மதுரையிறைவன் திருவடியிலமைத்துச் சிவனுருவமாகிய பஞ்சாக்ஷரங்களும் நாவிலிசையக் கையைக்குவித்துத் தமது புனிதமான சைவத்தேர்மீது ஏறிக்கொண்டு ஆகாயவழியாகச்செல்லத்தொடங்கினார்கள் அந்த நல்ல தவசிகள். எ-று. (அ)

செய்ய சடையர் திருநீறு சண்ணித்த
மெய்யர் தவ நோற்றிளைத்த மேனியின ருட்புறம்புந்
துய்யரணி கண்டிகையர் தோளு மருங்குடைய
ரையர் தவத்துக் கணிகலம்போற் போதுவார்.

(இ-ள்) செந்நிறமான சடையினை யுடையவர்கள் விபூதி பூசப்பெற்ற சரீரத்தினர் மிகவு நோன்பியற்றி இளைப்படைந்த உடம்பினர், உள்ளும்புறம்புந் தூய

மையானவர்கள் உருத்திராக்ஷம் தரித்திருப்பவர்கள் இடையில் தோலுடையினை யுடைய முனிவர்கள் தவத்திற்கலங்காரம்போலப்போயினார்கள். எ-று. (௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புண்ணியந் தழைக்குந் தெய்வத் தலங்களும் புலன்கள் வென்றோர்
நண்ணிய வனமுந தீர்த்த நதிகளுந் தவத்தோர் நோற்கும்
வண்ணமு நோக்கி நோக்கி மலயமா முனிவன் காட்டக்
கண்ணிணை களிப்ப நோக்கிக் கைதொழு திறைஞ்சிச்செல்வார்.

(இ-ள்.) அம்முனிவர்கள் புண்ணியமானது விருத்தியாகின்ற தெய்வீகத்தலங்களையும் ஐம்புலன்களையும் வென்றவர்கள் இருக்கின்ற காட்டினையும் தீர்த்தமான யாறுகளையும் தவத்தினர் தவஞ்செய்யும் வண்ணங்களையும் பார்த்துப்பார்த்துச் சிறந்த மலையாசலமுனிவன் காட்ட கண்ணிணைகள் களிக்கும்வண்ணம் பார்த்து மகிழ்ந்து கைகுவித்து வணங்கிச்செல்லுகின்றனர். எ-று. (௧௦)

சீறுகொ ளிலங்கை வேந்தைச் செகுத்திட விராமன் பூசித்
தாறணி விரூபக் கண்ண னருள்பெறு தலமீ தும்பூ
ரேறிவீழ்ந் திறந்தோர் முன்ன மெண்ணிய வெண்ணி யாங்கே
மாறிய பிறப்பி னல்கு மலையிது காண்மின் காண்மின்.

(இ-ள்.) சீற்றம்பொருந்திய இலங்கைமன்னவனைக்கொல்ல இராமன் பூசித்து கங்காதரராகிய விரூபாக்ஷரின் திருவருளைப்பெற்ற தலமிது. உச்சிமீதேறி விழுந்திறந்தவர்கள் முன்னநினைத்தது நினைத்தவண்ணமே மறுபிறப்பிற்கொடுக்கின்ற மலையிது பாருங்கள் பாருங்கள். எ-று.

இது விருபாக்ஷபுரத்தையும் மல்லிகார்ச்சுனத்தையும் குறிக்கின்றது. (௧௧)

சுரபிநீள் செவியி லிங்கச் சுடருரு வாயி னன்ற
னிரவினிற் றிருத்தேர் மன்ற னடக்குமூ ரிவ்வூர் மேலை
யுரவுநீர்க் கரைத்தேண் மாதத் துயர்ந்தகார்த் திகையிற் றேரூர்ந்
தரவுநீர்ச் சடையான் வேள்வி நடக்குமூ ரவ்வூர் காண்மின்.

(இ-ள்.) இவ்வூர் ஒளிபொருந்திய கோகர்ணம்போன்ற இலிங்கவுருவமானவன்து இரவான சிவராத்திரியில் அழகிய தேர்த்திருவிழா நடக்கின்ற ஊர் இவ்வூர் மேற்புறத்தில் சனிக்கின்ற நீரினையுடைய கடற்கரையினில் கார்த்திகைமாதத்தில் உயர்ந்த கார்த்திகை நக்ஷத்திரத்தில் இரதோற்சவத்துடன் அரவினையும் ஆற்றினையுமணிந்த இறைவனுடைய திருக்கல்யாணநடக்குமூ ரந்தவூர் பாருங்கள். எ-று.

இது கோகர்ணத்தையும் திரு அஞ்சைக்களத்தையும் குறிக்கின்றது. (௧௨)

விற்பயி றடக்கை வேடன் மென்றவூன் பாகம் பார்த்தோன்
பொற்புறு கிரியீ தண்டம் புழைபட விடத்தா ணீட்டி
யற்புதன் காளி தோற்க வாடிய திவமா நீழற்
கற்புடை யொருத்தி நோற்கும் பிலமிது காண்மின் காண்மின்

(இ-ள்.) இது வில்லைப்பிடித்த பெரிய கையினையுடைய கிராதன்மென்ற மாமிசத்தின் பாகத்தைப்பார்த்த இறைவனுடைய அழகுபொருந்திய மலையிது அண்டம் பொத்தலாக இடதுகாலைநீட்டி சிவபெருமான் காளிதோற்கும்வண்ணம் ஆடியவிடம் இது. மாநிழலில்கற்பினையுடைய ஒப்பற்றஉமாதேவியார் தவஞ்செய்கின்ற பிலம்இது.

இது திருவாலங்காட்டையும் காஞ்சீபுரத்தையும் காளத்தியையுங் குறிக்கின்றது. (௧௩)

திருமறு மார்பன் காவற் செயல்பெற வரனைப்பூசித்
திருகர முகிழ்த்து நேர்நின் றேத்திட மிறுவா மோத்தி
னுரைவரம் பகன்ற முக்க ணுத்தமன் சர்தை கூட்டி
யருமறை யறவோர்க் கோது வித்திட மதனைக் காண்மின்

(இ-ள்.) ஸ்ரீவற்சமென்னும் மறுவினையுடைய நாராயணன் இரக்ஷைத்தொழி ல்பெறுதற்கு சிவனைப்பூசித்து இரண்டுகைகளையுங் குவித்து எதிரில் நின்று வணங்கு மிடம் இது; வேதங்களின் வாக்கியங்களின் எல்லைகளுக்கும் அப்பாற்பட்டு நிற்கும் மூன்று கண்களையுடைய உத்தமன் சந்தையென்னும் இலக்கணத்துடனமைத்து அரி ய வேதங்களை அத்தியயனஞ் செய்பவர்களுக்கோதுவித்த அவ்விடத்தைப் பாருங்கள்.

இது திருமாற்பேற்றையும் திருவோத்தூரையும் குறிக்கின்றது. (கச)

அடிமுடிவிலங்கும் புள்ளு மளந்திடா தண்டங் கீண்டு
நெடுகிய நெருப்பு நின்ற நிலையிது முள்வாய்க் கங்க
வடிவெடுத் திருவர் நோற்கு மலையிது பலவே றாழி
யிடையுற முன்னும் பின்னு மிருக்குமிக் குன்றைக் காண்மின்.

(இ-ள்.) அடியும் முடியும் பறவையும் மிருகமும் அளவாமல் அண்டத்தைப் பிளந்து நீண்ட நெருப்புநின்ற இடமிது. நெடிய வாயினையுடைய கழுகுருவடைந்து இரண்டுமுனிவர் தவஞ்செய்கின்ற மலையிது. பலவேறுவகைப்பட்ட ஊழிகளினிடை யிலே தோன்ற முன்னும் பின்னு மிருக்கு மிம்மலையைப் பாருங்கள். எ-று.

இது திருவண்ணமலையையும் திருக்கழுக்குன்றத்தையும் விருத்தாசலத்தையுங் குறிக்கின்றது. (கரு)

அவுணரிற் கள்ள னை வந்தகற் காய்ந்து மூன்று
புவனமுங் கவலை தீர்த்த புண்ணியன் புரமீ தாகுந்
தவலரும் புரங்கண் மூன்றுந் தழனுதற் றிருக்கண் சாத்திப்
புவமறு மூவ ரன்பிற் பட்டவன் பதியைக் காண்மின்.

(இ-ள்.) அசுரர்களுக்குட் கள்வனாகிய அந்தகனென்பவனைக் கொன்று மூன் றுலகங்களுக்கு முண்டாயிருந்த துன்பங்களை ஒழித்த புண்ணியனாகிய இறைவனு டையஇடம் இது. முப்புரங்களையும்தழலொடுகூடிய நெற்றிக்கண்ணாற்பார்த்து பாவ மற்ற மூவர்களின் அன்பினின்றவனுடைய தவத்தைப் பாருங்கள். எ-று.

இது திருவதிகையையும் திருவீரட்டத்தையுங் குறிக்கின்றது. (கசு)

சத்திய ஞான னந்த தத்துவ மசைவற் றாடு
நித்திய பரமா னந்த நிறையருண் மன்ற மீது
முத்தியங் குதித்தோ ரெய்தும் பதியது முதனூ னான்கும்
பத்தியிற் பூசித் தேத்தும் பதியிது வாகும் பார்மின்.

(இ-ள்.) சத்திய ஞானானந்த தத்துவமான இறைவன் அசைவின்றி யாடுகி ன்ற நித்தியபிரமானந்த நிறையருண்மன்றம் இது. அது அவ்விடத்திற்பிறந்தவர்கள் முத்தராமிடம். முதனூல்களான வேதங்கள் நான்கும் பத்தியுடனே பூசித்துத் துதி த்த தலமிதுவாம் பாருங்கள். எ-று.

இது சிதம்பரம், திருவாரூர், திருமறைக்காடு என்னு மூன்றையுங் குறிக்கின் றது. (கஎ)

பிரமன்மான் முதலாந் தேவர் பிரளயத் திறவா வண்ணம்
பரமனூர் தோணி யேற்றும் பன்னிரு நாமம் பெற்ற

புரமிது சடாயு சம்பா திகள் பெரும் பூசை செய்ய
வரமளித் திருநோய் தீர்க்கு மருந்துறை பதியீ தாகும்.

(இ-ள்.) நான்முகன் நாராயணன் முதலிய தேவர்கள் பிரளயத்திலழியாத வண்ணம் இறைவனார் தோணியிலேற்றுகின்றதும் துவாதசநாமம் பெற்றதுவுமான நகரமிது; சடாயுசம்பாதிகள் மிகுந்த பூசையைச்செய்ய அவர்களுக்கு வரமளித்துஇருநோயையாற்றிய வைத்தீசன் இருக்கின்ற இடம் இதுவாம். எ-று.

இது சீகாழியையும், வைத்தீசன் கோவிலையும் குறிக்கின்றது. (௧௮)

மதிநுத லிமயச் செல்வி மஞ்ஞையாய் வழிபட்டேத்து
மிதுதுலாப் பொன்னித் தான மெம்மனோர் மூன்று கோடி
மதிபெறு முனிவர் வந்து வழிபடு மூதூ ரீதிப்
பதியறக் கடவுள் பூசை பண்ணிய தானங் காண்மின்.

(இ-ள்.) சந்திரனையொத்த நெற்றியினையுடைய பார்வதிதேவி மயிலாய்வணங்கிய விது துலாகாவேரித் தானம் எம்மவர்களான மூன்றுகோடி முனிவர் வந்துவணங்குகின்ற இடம் இது. இத்தலம் தருமதேவதை பூசித்ததலம். எ-று.

இது மாயூரத்தையும் திருக்கோடீசுரத்தையும் திருவாவடுதுறையையுங் குறிக்கின்றது. (௧௯)

கோடுநான் குடைய வேழந் தானவன் குறைத்த கோட்டைப்
பாடற நோற்றுப் பெற்ற பதியிது மாலை சாத்துந்
தாடகை மானங் காப்பான் றாழ்ந்துபூங் கச்சிட் டீர்க்கும்
பீடுறு கலைய னன்பி னிமிர்ந்தவெம் பிரானூ ரீதால்.

(இ-ள்.) நாலுகொம்பினையுடைய யானையான ஐராவதம் அசுரனொடித்தகொம்பினையடையப் பெருமையறத் தவஞ்செய்துபெற்ற தலம் இது; மாலைசாத்திய தாடகையின் மானத்தைக் காக்கும் வண்ணம் வளைந்து பின்னர் அழகிய கச்சினையிட்டிழுத்த பெருமை பொருந்திய குங்கிலியக்கலையருடைய அன்பினால் நிமிர்ந்துநின்ற எம்பெருமானுடைய நகரம் இது. எ-று.

இது திருவெண்காட்டையும் திருப்பனந்தாளையுங் குறிக்கின்றது. (௨௰)

கரிமுகத் தவுணற் காய்ந்து கரிமுகத் தண்ணல் பூசை
புரிசிவ நகர மீது தாரகற் பொருது செவ்வே
ளரனையர்ச் சித்த தார்க்கீழ் மணற்குறி பான்பா லாட்டிப்
பரன்முடி மாலை சூடுஞ் சேய்வளம் பதியீ தாகும்.

(இ-ள்.) யானைமுகத்தினையுடைய அசுரனைக்கொன்று யானைமுகத்தினையுடைய இறைவன் பூசித்த சிவதலமிது; குமரக்கடவுள் தாரகனொடு பொருது சிவபெருமானை அருச்சனைபுரிந்தது; ஆத்திமரநிழலில் மணலிலிங்கத்திற் பசுவின்பாலபிஷேகஞ்செய்துசிவபெருமானுடைய முடியிலுள்ள மாலையையணிந்தவளப்பம்பொருந்திய சேய்நல்லூர் இது. எ-று.

இது கணபதீச்சரத்தையும் சேய்ஞலூரையுங் குறிக்கின்றது. (௨௧)

கறுவிவீழ் காலன் மார்பிற் சேவடிக் கமலஞ் சாத்திச்
சிறுவனுக் காயு ளீந்த சேவகப் பெருமான் மேய
வறைபுனற் பழன மூதூ ரதுவிது வானை தந்த
குறையுடற் போர்வை போர்த்து கொற்றவன் கோயில் காண்மின்.

(இ-ள்.) அந்த படுதலுடனடைந்த காலனுடைய மார்பில் செவ்விய திருவடிக்கமலத்தை வைத்து, மார்க்கண்டேயனுக் காயுளளித்த சேவகத்தினையுடைய பெரு

மானெழுந்தருளியிருக்கின்ற புனல்மோதுகின்ற கழனிகள் சூழ்ந்த பழையநகரமானது இது; யானையினாற்கொடுக்கப்பட்ட குறையுடற் போர்வைபோர்த்த தலைவனுடைய ஆலயம் இது. எ-று.

இது திருக்கூடலூரையும் திருவழுவூரையும் குறிக்கின்றது. (உஉ)

பங்கயக் கடவு ளீந்த பரிகலம் வாங்கிக் கொண்ட
வங்கண னிடமீ தாட லனங்கனை யமுது செய்த
செங்கணு னிருக்கை யிது மேழகச் சென்னி தன்னை
மங்கல மாமற் கீந்த மருகனு ரிருக்கை காண்மின்.

(இ-ள்.) பிரமனளித்த உண்கலத்தை வாங்கிக்கொண்ட சிவபெருமானுடைய தானம் இது; வெற்றியினையுடைய மன்மதனைப் பக்ஷித்த செவ்விய கண்ணினையுடைய வருடைய இருப்பிடம் இது; ஆட்டுத்தலையை மங்கலகரமான இயல்புடனிருந்த மாமனுக்களித்த மருமகனார் இருக்குமிடம் இது. எ-று. (உங)

உண்கலமென்றது கபாலம். இது திருக்கண்டியூரையும் திருக்குறுக்கையையும் திருப்பறியலையும் குறிக்கின்றது.

திண்டிற லவுணன் றன்னைப்பெருவிரற் றீட்டுநேமி
யுண்டிட விருந்தாக்கொண்டோ னுறையதா மொருத்திமற்றல்
கண்டிடு கரியாய்க் கூவல் கண்ணுத லிலிங்கம் வன்னி
யெண்டிசை யுறியக் காட்ட நின்றிட மிதனைக் காண்மின்.

(இ-ள்.) திண்ணிய திறலினையுடைய அசுரனைப் பெருவிரலாலமைக்கப்பட்ட சக்கரமருந்த விருந்தாகக்கொண்டவன் இருப்பிடம் அது, ஒருத்தியின் கலியாணசாக்ஷியாகக் கிணறும் சிவலிங்கமும் வன்னிமரமும் எட்டுத்திக்கும் அறியுமாறு காட்டி நிற்கும் இடம் இது; இதனைப்பாருங்கள். எ-று.

இது திருவிற்குடியையும் திருப்புறம்பயத்தையும் குறிக்கின்றது. (உச)

சாபகண் டத்தன் றன்னைத் தானருச் சித்த தென்னர்
கோமகன் பிரம சாயை குறைத்ததிப் பதியாங் கங்கை
மாமகந் தோறும் வந்து வந்துதற் படிந்தோர் விட்டுப்
போமகம் போக மூழ்கும் புனிதநீர்ப் பதியைக் காண்மின்.

(இ-ள்.) சிவபெருமான் தன்னைத்தானே அருச்சித்த திது, அன்றியும் தென்னர்கோமகனான பாண்டியனுடைய பிரமகத்திப் பாவத்தை யொழித்தது; கங்கையானவள் சிறந்த மகாமகங்கள்தோறும் வந்துவந்து தன்னிடத்தில் மூழ்கினவர்கள் விட்டுச்சென்ற பாவங்களைப் போக்க முழுகுகின்ற புனிதமான தீர்த்தத்தினையுடைய நகரம் இது இதைப் பாருங்கள். எ-று.

இது திருவிடைமருதூரையும் கும்பகோணத்தையும் குறிக்கின்றது. (உரு)

குருமொழி தந்தைக் கீந்தெங் குருவுறை மலையீ தெங்கோன்
கருமுகில் வண்ணத் தண்ணல் கண்ணிடந் தடியிற் சாத்தப்
பொருவிற லாழி யீந்த புரமிது நந்தி யெந்தை
திருவுரு வடைய நோற்ற தலமிது தெரிந்து காண்மின்.

(இ-ள்.) தந்தைக்குக் குருவுபதேசஞ்செய்து எமது குருநாதன் எழுந்தருளியிருக்கின்ற மலையிது; கரிய மேகம்போன்ற நிறம்பொருந்திய வடிவத்தினையுடைய திருமால் தன் கண்ணைப்பறித்து தமது திருவடியிலருச்சித்தவுடனே எம்பெருமான் போர்வெற்றியினை அளிக்கின்ற சக்கரமளித்த நகரம் இது; நந்திதேவன் என்னு தந்

தையாகிய சிவபெருமானுடைய சாரூபத்தையடையத் தவஞ்செய்த தலமிது உற்றுப் பாருங்கள். எ-று.

இது சாமிமலையையும் திருவேழிமிழலையையும் திருவையாற்றையும் குறிக்கின்றது. (உ௬)

முடங்குகாற் சிலந்தி யானை மலைமகண் முளரி நாட்டத்
தீடங்கடல் வண்ண னேற்ற தவநக ரிதுமுச் சென்னி
மடங்கலே றனையா னும வரையிது குடைந்தோர் பாவ
மடங்கலும் பருகும் பொன்னி யாறிது காண்மின் காண்மின்.

(இ-ள்.) வளைந்த காலினையுடைய சிலந்திப்பூச்சியும், யானையும், பார்வதிதேவியும், தாமரைமலர்போன்றகண்ணினையும் மேகவண்ணத்தினையுமுடைய திருமாலும் தவஞ்செய்த தவநகரம் இது. ஆண்சிங்கம்போன்ற திரிசிராவின் மலை இது. முழுகினவர்களின் பாவமனைத்தையு மகற்றுகின்ற காவேரியாறு இது. எ-று.

இது திருவானைக்காவையும் திரிசிரபுரத்தையும் காவேரிநதியையும் குறிக்கின்றது. (உ௭)

இந்நதி வெண்முத் தார மெனக்கிடந் திலங்குஞ் சென்னி
மன்னவ னாடு தென்ப தமிழறி வைகைப் பேர்யா
றந்நதி துறக்க மண்மேல் வழுக்கிவீழ்ந் தாங்குத் தோன்றித்
தென்னவ னாடு சேய்த்தாத் தெரிவதே காண்மி னென்றான்.

(இ-ள்.) இக் காவேரியாறனது வெள்ளைமுத்தாரத்தைப்போல் கிடந்துவிளங்குகின்ற சோழமன்னவனுடைய நாடு இது என்று கூறுவார்கள். அதோ காணுநதி தமிழினையுணர்ந்த வைகை யென்னும் பெரிய நதி. சுவர்க்கம் மண்ணின்மீது வழுக்கிவிழுந்தாற்போல காணப்பட்டு பாண்டியநாடு தூரமாகக் காணப்படுகின்றதே பாருங்களென்றுரைத்தனன். எ-று. (உ௮)

பொங்குசூர்மென் புதல்க ளென்னப் பொருநதி சிறுகா லென்னக்
கொங்கலர் தடஞ்சிற் றூறற் குழியெனப் பழனஞ் சில்லி
தங்குமென் பாத்தி யென்னத் தாழைதாழ் சிறுபுல் லென்னப்
பைங்குலைக் கதலி மஞ்சட் பாத்திபோற் றோற்றக் கண்டார்.

(இ-ள்.) சோலைகள் மெல்லிய புதர்களைப்போலவும், அலைமோதுகின்ற யாறுகள் சிறுவாய்க்கால்களைப்போலவும், தடாகங்கள் சிறியஊற்றுக்குழிகளைப்போலவும், வயல்கள் சிறுகீரைகளை உடைய மெல்லிய பாத்திகளைப்போலவும் தென்னைகள் தாழ்ந்த சிறிய புல்லைப்போலவும், பசிய குலைகளையுடையவாழைமரங்கள் மஞ்சட்பாத்திகளைப்போலவும் காணக் கண்டார்கள். எ-று. (உ௯)

பன்னிற மாட மாலை யுபரிகைப் பந்தி செய்குன்
றன்னம்வெண் குருகு செம்போத் தளகுபைங் கிள்ளை மஞ்ஞை
யின்னபுள் வேறு வேறா யொழுங்குபட் டிருப்ப தொப்ப
மின்னுபூங் கொடியப் புட்கள் சிறகென விதிர்ப்பக் கண்டார்.

(இ-ள்.) பலநிறமான மாளிகை வரிசைகளும், உபரிகைவரிசைகளும், கட்டுமலைகளும், அன்னங்களும், வெண் கொக்குக்களும், செம்போத்துக்களும், மாடப்புறாக்களும், பச்சைக்கிளிகளும், மயில்களும் இந்தப் பறவைகள் வேறுவேறாக ஒழுங்குபட்டிருந்தாற்போல ஒளி பொருந்திய பூங்கொடிகள் அப் பறவைகளின் இறகுகளைப் போல அசைதலையுங் கண்டார்கள். எ-று. (௩0)

மேற்படிவேறு.

கண்டு நாட்டு நகர்வளங்க ணடந்து நடந்து கண்கள்விருந்
துண்டு மீள வ்கல்விசும்பா றெழுகி வலமா வருமுனிவர்
விண்டு மாவுங் கொடுங்குன்றும் தளிப்புத் தூரும விரிபொழில்வாய்
வண்டு பாடன் மயிலாடல் பயிலா டானை வளநகரும்.

(இ-ள்.) நாட்டுவளத்தையும் நகர்வளத்தையுங் கண்டுசென்று கண்கள் விருந்தருந்திப் பின்னுந்திரும்பி வானவழியேவழியாகப் பிரதக்ஷணமாகவரும் முனிவர்கள் வானமளாவிய கொடுங்குன்றமும் தளிப்புத்தூரும் விரிந்த பொழில்களில் வண்டுகள் பாடுதலும் மயில்களாடுதலுமுடைய வளப்பம்பொருந்திய திருவாடானைநகரத்தையும்.

சரத வேதம் பரவுபுன வாயி னகரும் தவசித்த
ரிரத வாதஞ் செய்துசிவ னுருவங் கண்ட வெழினகரும்
வரத னாகி யரனுறையுங் கானப் பேரும் மலைமகளை
விரத யோக நெறிநின்று மணந்தார் சுழியல் வியனகரும்.

(இ-ள்.) உண்மை வேதத்தினால் துதிக்கப்படுகின்ற திருப்புனவாயில்நகரமும் தவத்தினையுடைய சித்தர் இரதவாதஞ் செய்து சிவரூபத்தை உண்டாக்கின அழகிய பூவணநகரமும், வரமளிப்பவனாக இறைவனெழுந்தருளியிருக்கின்ற திருக்கானப்பேர் நகரமும் பார்வதிதேவியாரை விரதயோகவழியில்நின்றுமணஞ்செய்த இறைவனுடைய ஆச்சரியம்பொருந்திய திருச்சுழியல்நகரமும். எ-று. (ருஉ)

மறவா ளிலங்கை யிறைமகனை வதைத்த பழிபான் மருண்டரியன்
றறவா ணேமி யளித்தவனை யர்ச்சித் தகன்ற வணிநகரும்
நிறவாண் முத்தும் வயிரமும் நிரையும் பொன்னும் விளைபொருநைத்
துறைவாய்ப் பிறவாக் கடவுள்வேய் வயிற்றிற் பிறந்த தொன்னகரும்.

(இ-ள்.) மறம்பொருந்திய வாட்படையினையுடைய இலங்கையரசனைக் கொன்ற பாவத்தான் மயங்கி நாராயணனன்று அறவாளாகிய சக்கரப்படையினை யளித்த இறைவனை அருச்சித்துச் சென்ற அழகிய இராமேசுவரநகரமும், நல்லொளி பொருந்திய முத்தும் வைரியவரிசையும் பொன்னும் உண்டாகின்ற தாம்பிரபருணித்துறையில் பிறவாதகடவுள் வேயினிடத்துதித்த பழயதிருநெல்வேலிநகரமும். எ-று. (ருரு)

துளபக் குன்றைக் கொன்றைமுடிக் குன்ற மாக்குந் தொன்னகரும்
அளகைப் பொறித்த கொடியிளையோன் மானேர் நோக்கி னணைமகள்
புளகக் குன்றை மணந்துமுத லிருந்த பொருப்பும் போர்விசயன்
வளைவிற் றாக்க வடுக்கிடந்த முடியோன் மேய வளநகரும்.

(இ-ள்.) துளபமலையைக் கொன்றைமலர்முடி மலையாகச்செய்த பழயநகரமும், கோழி யெழுதிய கொடியினையுடைய குமாரதெய்வம் மான்போலும் பார்வையினையுடைய தேவயானையின் புளகம்பொருந்திய தனமலையை யணைந்து முதலிலிருந்த திருப்பரங்குன்றமும் போரினையியற்றும் விசயனுடைய வளைந்த வில்லடிபட்டு வடுவாகியுள்ள முடியினையுடைய இறைவன் எழுந்தருளியிருக்கும் வளப்பம்பொருந்திய திருவேடக நகரமும். எ-று. (ருச)

கொண்டல் படியுந் திருவாப்ப னூருந் தொழுது குளிர்திரைக்கை
வண்டு படியுங் கமலமுகை வைகைப் பிராட்டி யெதிர்வணங்கிக்

கண்டு பணிந்து திசையெட்டும் விழுங்கி யண்டங் கடந்துலக
முண்ட நெடுமா லெனவுயர்கோ புரமுன் னிறைஞ்சி யுள்புகுதா.

(இ-ள்.) மேகந் தவழும் திருவாப்பனூரும் வணங்கிக் குளிர்ந்த திரையாகிய கையினையும் வண்டுபடிகின்ற தாமரையரும்புகளையுமுடைய வைகையாகியபிராட்டியின் எதிரில் வணங்கி எட்டுத்திசைகளையும் மூடி யண்டத்தைக் கடந்து உலகத்தை யுண்ட திருமாலைப்போல உயர்ந்த கோபுரத்தை எதிரிற்கண்டு பணிந்து உள்ளே சென்று. எ-று. (௫௫)

மறுகு தோறும் பணிந்தெழுந்து வளைந்து வளைந்து பொற்கோயில்
குறுகி விதியாற் பொற்கமலங் குடைந்து செய்யுங் குறைநிறுவி
யுறுதி பெறவைந் தெழுத்தெண்ணி யுற்று மதத்து நாற்றடந்தோட்
சிறுகு கண்ணை வைங்கரத்துச் சித்தி யானை யடிவணங்கா.

(இ-ள்.) வீதிகள்தோறும் வணங்கி எழுந்து சுற்றிச்சுற்றி அழகிய ஆலயத்தையடைந்து விதிப்படி பொற்றாமரையின் மூழ்கி அங்குச் செய்யவேண்டியவைகளைச் செய்து உறுதியுண்டாகும்வண்ணம் பஞ்சாக்ஷரத்தை நினைத்துச் சென்று மதத்தினையும் நான்கு பெரிய தோள்களையும் சிறுகிய கண்களையும் ஐந்து கைகளையுமுடைய சித்திவிநாயகனுடைய பாதங்களை வணங்கி. எ-று. (௫௬)

மும்மை யுலகு நான்மறையு முறையா லீன்ற வங்கயற்க
ணம்மை யடிகண் முடியுறத்தாழ்ந் தன்பு கொடுத்தின் னருள்வாங்கி
வெம்மை யொளிகால மணிக்கனக விமானத் தமர்ந்த தனிச்சுடரின்
செம்மை யடித்தா மரைவேணிச் சிரமேன் மலரப் பணிந்தேத்தா.

(இ-ள்.) மூன்றுவகையான வுலகங்களையும், நான்குவகையான வேதங்களையும் முறைப்படிபெற்ற அங்கயற்கண்ணம்மையின் திருவடிகளைத் தலையாரவணங்கி அன்பைக்கொடுத்து இனிய அருளைப்பெற்று வெம்மையான ஒளியைக் கக்குகின்ற மணியும்பொன்னும் இட்டிழைத்த விமானத்திருந்த ஒப்பற்ற சோதிரூபனான இறைவனுடைய செவ்விய திருவடித்தாமரைகளைத் தலையிலுள்ள சடைகளின்மீது அலருமாறு வணங்கித் துதித்து. எ-று. (௫௭)

மேற்படி வேறு.

அன்றிரு போது முண்டி துறந்திரா வறுக்குந் தீவா
ளொன்றெழு முன்னீ ராடி நியதிக ளியற்றி யைந்தும்
வென்றுளத் தன்பு பாய விளைமுழு முதலைப் பார்மேன்
மின்றிரண் டென்ன நின்ற விமான்மீ திருப்பக் கண்டார்.

(இ-ள்.) அன்றையதினம் இரவும் பகலும் உணவைவிட்டு இரவினையறுக்கின்ற உஷ்ணகிரணமாகிய வாளினையுடைய சூரியன் உதித்தற்குமுன்னே நீரிற்குளித்து நித்தியகருமங்களை முடித்துப் பஞ்சேந்திரியங்களை வென்று உள்ளத்தில் அன்பு பரவ உண்டான முழுமுதல்வனாகிய இறைவனை உலகின்மீது மின்னல்திரண்டு நின்றாற்போல நின்ற விமானத்தின்மீது எழுந்தருளியிருப்பக்கண்டார்கள். எ-று. (௫௮)

வாசமஞ் சனந்தேன் கன்னல் பைங்கனி மறுவி லானைந்
தாசறு மமுத மைந்து தென்மலை யாரம் வாசம்
வீசுதண் பனிநீர் வெள்ள மான்மதம் விரைமென் போது
தூசணி மணிப்பூ ணல்ல சுவையமு தின்ன தாங்கா.

(இ-ள்.) வாசனைபொருந்திய திருமஞ்சனந் தேன் கரும்புபசியகனி குற்ற மற்ற பசுவினின்றெடுக்கும் பஞ்சகவ்வியம் குற்றமற்ற பஞ்சாமிர்தம் பொதியமலைச்சந்தனம் வாசனை வீசுகின்ற தண்ணிய பனிநீர் புனுகு மணம்பொருந்திய மெல்லிய மலர் வஸ்திரம் அலங்கரித்தற்கேற்ற ஆபரணங்கள் நல்ல சுவையினையுடைய அன்னம் என்னும் இவைகளைக்கைக்கொண்டு. எ-று. (ருகக)

சதவுருத் திரத்தா லாட்டி மட்டித்துச் சாத்திப் பூட்டிப்
பதமுற மனுவா லட்ட பாலமு தருத்திப் பஞ்ச
விதமுறு வாசம் பாகு வெள்ளிலை யளித்துப் போக
முதவுறு தூப தீபா திகள்பல வுவப்ப நல்கா.

(இ-ள்.) சதருத்திர மந்திரத்தினால் அபிஷேகித்து, சந்தனாதிகளை அப்பிப்புட்ப முதலியவைகளைச் சாத்தி ஆபரண முதலியவைகளை அணிந்து பால்விட்டுப் பக்குவமாகச் செய்த பாலன்னத்தை நிவேதித்து ஐந்துவிதமான வாசனைகளையும் பாக்குவெற்றிலை முதலியவைகளையும் சமர்ப்பித்துப் போகத்தையளிக்கின்றதூபதீபங்களை மகிழுமாறு அளித்து. எ-று. (சு0)

ஐம்முகச் சைவச் செந்தீ யகத்தினுந் துடுவை யார
நெய்ம்முகந் தருத்திப் பூசை நிரப்பினால் வேதஞ் சொன்ன
மெய்ம்மனு நூற்றுப் பத்தான் மூவிலை வில்வ நீலங்
கைம்மல ரேந்திச் சாத்திக் கடவுளை யுவப்பச் செய்து.

(இ-ள்.) ஐந்துமுகத்தினையுடைய சிவபெருமான் உருவமான அக்கினியினிடத்திலும் அகப்பை நிறைய நெய்யைமொண்டு ஆகுதிசெய்து பூசையை நிறைவேற்றிச் சதுர்வேதங்களிலே கூறப்படுகின்ற சகத்திரநாமங்களால் மூன்றிலைகளையுடைய வில்வத்தையு நீலோற்பலத்தையுங் கையிற்கொண்டு அருச்சித்து இறைவனுக்கு மகிழ் உண்டாகுமாறுசெய்து. எ-று. (சுக)

வாசமஞ் சனநீ ரோடு மந்திர மலர்கைக் கொண்டு
பூசையின் பயனை முக்கட் புண்ணியன் கையி னல்கி
நேசநெஞ் சூறக் கண்க ணிறையநீ ரூறிச் சோர
வீசனை யிறைஞ்சி யாரு மஞ்சலித் தேத்தல் செய்வார்.

(இ-ள்.) வாசனைபொருந்திய மஞ்சனநீருடன் மந்திரபூருவமான மலர்களைக் கையில்கொண்டு பூசையின் பலத்தை புண்ணிய ரூபியுந் திரிலோசனருமான சிவபெருமானுக்களித்து நேசமானது நெஞ்சினிலூறக் கண்களில் நிறைய நீரூறிச்சோர இறைவனை வணங்கி அவ்வெல்லாரும் அஞ்சலிசெய்துகொண்டு எதிரினின்று துதிக்கத்தொடங்கினார்கள். எ-று. (சுஉ)

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பழியொடு பாச மாறு கெடவாச வன்செய் பணிகொண்ட வண்ட சரணம்
வழிபடு தொண்டர் கொண்ட நிலைகண்டு வெள்ளி மணிமன்று ளாடி சரணஞ்
செழியன்வி ளிந்தி டாத படிமாறி யாட நெளிவித்த சோதி சரணம்
ஏழுகடல் கூவி மாமி யுடன்மாம னூட விசைவித்த வாதி சரணம்.

(இ-ள்.) பழியொடு பாசமுந் தொலைவெய்த விந்திரன் செய்த பணிவிடையை யங்கீகரித்த தேவனே சரணம். தினமும் வணங்குகின்ற பதஞ்சலிவியாக்கிரபாதரென்னும் இவர்களின் நிலைமையைப் பார்த்து அவர்கள் நிமித்தம் அழகிய வெள்ளியம்ப

யேத் திலாடியவரோ! சரணம். பாண்டியனிறவாதவண்ணம் மாறியாடி அவன் மனதைத் தெளிவித்தசோதியேசரணம்; ஏழு கடல்களையும் அழைத்து அதனில் மாமனும் மாமியும் மூழ்கும்மாறுபுரிந்த ஆதியே சரணம். எ-று. (௬௪)

வெங்கரி யாவி சோர நரசிங்க வாளி விடுவேட ரேறு சரணம்
புங்கவர் தேற வாதி மறையுட் கிடந்த பொருளோது போத சரணம்
வங்கமு தேறி வேலை மகரம் பிடித்த வலையாண் மணாள சரணம்
கங்கண நாகம் வீசி நகரெல்லை கண்ட கறைகொண்ட கண்ட சரணம்.

(இ-ள்.) வெவ்விய யானையின் உயிரழிய நரசிங்காத்திரம் விட்ட கிராத சிங்கமாக வுள்ளவரோ சரணம்; முனிவர்களுணரும்வண்ணம் ஆதிவேதத்தினுள்ளே கிடந்த பொருள்களை வியாக்கியானித்த ஞானசாரியரோ சரணம்; வங்கத்திலேறிக் கடலிற்கிடந்த மகரமீனைப்பிடித்த வலைச்சிமணாளரோ சரணம்; கங்கணமாகவிருந்த பாம்பைவிட்டு ஊரினெல்லையைக்கண்ட நீலம்பொருந்திய கண்டத்தினையுடையவரே சரணம். எ-று.

மைந்தனி வாழி மேரு மகவான கந்தை மடிவித்த நித்தசரணஞ்
சுந்தர நாம வாளி பணிகொண்டு கிள்ளி தொகைவென்ற வீர சரணம்
வெந்திறன் மாறன் முன்க லுருவானை கன்னன் மிசைவித்த சித்த சரண
முந்திய கல்லின் மாதர் பெறவட்ட சித்தி முயல்வித்த யோகி சரணம்.

(இ-ள்.) மகனைக்கொண்டு கடலினதும் மேருவினதும் இந்திரனதும் அகங்காரத்தை நீக்கிய நித்தியரோ சரணம்; சுந்தரப்பேரம்பினைவிட்டுச் சோழனுடைய சைனியங்களை வென்ற வீரரோ சரணம்; மிக்கத்திறலினையுடைய பாண்டியனெதிரே கல்லானையைக் கரும்பைத்தின்னச்செய்த எல்லாம் வல்லசித்தரோ சரணம்; பூருவத்திற் சாபத்தாற் கல்லுருவடைந்த இயக்கமாதர்கள் பெறுமாறு அட்டமாசித்தியை யுபதேசித்த யோகியே சரணம். எ-று. (௬௫)

திருமணி மைந்தன் மைந்தன் முடிசூட விற்ற திருமல்கு செல்வ சரண
மருமக னென்று மாம னுருவாய் வழக்கு வலிபேசு மைந்த சரணங்
குருமொழி தந்து நாரை குருவிக்கு வீடு குடிதந்த வெந்தை சரணம்
வருபழி யஞ்சி வேட மகனுக் கிரங்கு மதுராபு ரேச சரணம்.

(இ-ள்.) அழகிய அரதனங்களைப் பிள்ளையின் பிள்ளையானவன் முடிசூடுமாறு விற்ற அழகு மிக்கசெல்வத்தினையுடையவரோ சரணம்; இவனென்மருமகனே யென்று மாமனுருவாக வந்து வல்வழக்குப் பேசிய மைந்தரோ சரணம்; குருவுபதேசம் புரிந்து நாரைக்குருவிக்கு முத்திவீட்டை குடியிருப்பாக வருளிய எந்தையே சரணம்; வந்த பழிக்கஞ்சிக் கிராதபுருடனுக் கருள்புரிந்த மதுராபுரேசரே சரணம். எ-று. (௬௬)

விருத்தகு மார பால வருண் மேனிகொண்டு விளையாடு மண்ணல் சரணங்
குருத்திரை நச்சு பாவி யுயிருண்டு சோரி குடைவாகை வேல சரணங்
கருத்திசை பாண னிளி னிசைபாடி மாறு களைவேத கீத சரண
நரித்திரள் மாவை மீள நகரங் கலங்க நரிசெய்த நம்ப சரணம்.

(இ-ள்.) விருத்தகுமார பாலராகிய வருணமேனியைக்கொண்டு விளையாடிய அண்ணலே சரணம்; ஆசிரியன் மனைவியை விரும்பிய பாவியின் உயிரையுண்டு இரத்தத்தின் மூழ்கிய வேற்படையுடையவரோ சரணம்; அன்புபொருந்திய இசையினுடைய பத்திரன் ஆளைப்போல சென்று இசைபாடிப் பகையையோட்டின வேதகீதரே சரணம்; நரிக்கூட்டங்களான குதிரைகளைத் திரும்பவும் ஊர்கலங்க நரித் திரளாகவே செய்தநம்பரோ சரணம். எ-று. (௬௭)

முற்பக லாறி ரண்டு சிறுபன்றி யுண்ண முலைதந்த வன்னை சரணம்
பொற்புறு மாய வானவை யடமேறு கொண்டுபொருதட்ட சிட்ட சரணம்
பற்பல ஞால மெங்கு மடையப் பிரம்பு படமேட்ட மூர்த்தி சரணங்
கற்பினொ ருத்தி மன்ற லறிவிக்க மூன்று கரிதந்த வள்ளல் சரணம்.

(இ-ள்.) முன்னாளில் பன்னிரண்டு சிறிய பன்றிக்குட்டிகளுண்ண முலைய ளித்த மாதாவே சரணம்; அழகுபொருந்திய மாயப்பசுவை வன்மைபொருந்திய இட பத்தைக்கொண்டு பொருதுகொன்ற சிட்டரே சரணம்; பல்பல உலகங்களனைத்தி லும் பிரம்படி படுமாறுபுரிந்த அட்டமூர்த்தியே சரணம்; கற்பினையுடைய ஒருத்தியின் கல்யாணத்தை நிரூபிக்க வன்னியுங் கிணறு மிலிங்கமுமாகிய மூன்று சாக்ஷிகளைத் தந்த வள்ளலே சரணம். எ-று. (௪௮)

அளவைக ளாலும் வேத முதனூல்க ளாலு மயன்மாய னாலு மளவாக்
களவையு னக்கு நாம குணசின்ன சாதி கதிசெய்தி யில்லை யவையு
முளவென யாம றிந்து துதிசெய்ய மேவகொ லுலகஞ்செ யன்பி னெளிதாய்
விளையருண் மேனி கொண்டிவ் வறுபத்து நாலு விளையாடல் செய்த படியே.

(இ-ள்.) அளந்தறியும் பிரமாணங்களாலும் வேத முதலிய நூல்களாலும் அய னரிகளாலும் அளந்தறிதற்கியலாத கள்ளரூபமானவரோ! உமக்கு நாமமும் ரூபமும் சின்னங்களும் சாதியும் கதிகளும் இல்லை; அவைகளும் உண்டு என்று யாங்களறிந்து துதிசெய்யும் வண்ணந்தானோ? உலகஞ்செய்கின்ற அன்பிற்கு எளிதாய் உண்டாகி ன்ற அருண்மேனியைக்கொண்டு இந்த அறுபத்துநாலு திருவிளையாடல்செய்தபடி.

எனத்துதித்த வசிட்டாதி யிருடிகளைக் குறுமுனியை யெறிதேனீப
வனத்துறையுஞ் சிவபெருமா னிலிங்கத்தின் மூர்த்தியாய் வந்து நோக்கிச்
சினத்தினைவென் றகந்தெளிந்தீர் நீர்செய்த பூசைதுதி தெய்வத் தான
மனைத்தினுக்கு மனைத்துயிர்க்கு நிறைந்துநமக் கானந்த மாயிற் றென்னு.

(இ-ள்.) என்று துதித்த வசிட்டன் முதலிய இருடிகளையும் அகத்தியனையும் வண்டுகள் மொய்க்கின்ற கதம்பவனத்தி லெழுந்தருளி இருக்கும் இறைவன் இலிங்க த்தினின்றும் ஒருமூர்த்தியாக வெளிப்பட்டுவந்து அவர்களைப்பார்த்து கோபத்தை வென்று உள்ளந்தெளிந்தவர்களே நீங்கள் செய்தபூசை துதிதேவசம்பந்தமான தானம் முதலிய அனைத்தினுக்கும் அனைத்து உயிர்களுக்கு நிறைந்து நமக்கும் ஆனந்தமாயி ற்று என்று. எ-று. (௫௦)

சிறந்தவருள் சுரந்துகுறு முனியைவரு கென்றுகரஞ் சிரமேல் வைத்துப்
புறந்தடவி யெமையொப்பாய் நீயேநின் கற்புடைய பொலங்கொம் பன்னா
ளறந்தழையு முமையொப்பா ளாதலினா லுமையொப்பா ரகிலத் தியாரே
நிறைந்ததவம் புரிந்தோனுந் தவத்துறுதி பெற்றோனு நீயே யன்றோ.

(இ-ள்.) சிறந்த அருள்சுரந்து அகத்தியனை வருவாயாக வென்று அழைத்துக் கையைத் தலையின்மீது வைத்து முதுகைத்தடவி நீ எம்மையொப்பவன் நினது கற்பு டையவளும் பொன்னங்கொம்புபோல்பவளும் ஆன உலோபா முத்திரை தழைத்த தரு மத்தினையுடைய உமையவளை ஒப்பவள் ஆதலால் உங்களுக்கொப்பானவர்களிந்த வுலகத்தில் யாவரிருக்கின்றார்கள் நிறைவான தவத்தைச்செய்தோனும் தவத்தின் உறு தியை யடைந்தவனும் நீயேயன்றோ. எ-று. (௫௧)

உனக்கரிய வரமினியாந் தருவதெவ னுனக்கரிதா மெவ னென்றுங் காணு
மெனக்கருணை செய்திலிங்கத் திடையிச்சை வடிவாய்ச் சென் றிருந்தா னாக

னைக்கரிய வரநல்குஞ் சிவலிங்கந் தன்பெயராற் றாபித் தான்றன்
னினக்கருணை வசிட்டாதி முனிவர்களுந் தம்பெயரா லிலிங்கங் கண்டார்.

(இ-ள்.) இனி உனக்கு அருமையான வரம் நாமென்ன தரப்போகின்றோம், உனக்கரியதானதாக ஒன்றையுங்காணேம் என்று கருணைபுரிந்து இலிங்கத்தில் சுயேச்சையே உருவமாகச்சென்றிருந்தனர். உடனே அகத்தியர்தனக்கு அரியவரமளிக்குஞ் சிவலிங்கத்தைப் பிரதிட்டித்தார், அவரினத்தவர்களாகிய வசிட்டன் முதலானவர்களும் தங்கள் தங்கள் பெயரினு லிலிங்கப்பிரதிட்டை செய்தனர். எ-று. (௫உ)

வத்தியருச் சனைசெய்து நினைவிலரி தாயன்பி லெளிய வட்ட
மூர்த்தியையங்கயற்கண்ணியன்பனைமுப்போதும்போய்முடிதாழ்ந்தின்பம்
பூத்தமனத்தினராகிக்கருவித்தேன்பொதிந்தசிறு புட்போ லந்த
மாத்தலனில் வசிட்டாதி முனிவர்தபோ வனஞ்செய்து வதிந்தார் மன்னோ.

(இ-ள்.) அருச்சனைசெய்து துதித்து நினைத்தற்கரிதானதாய் அன்பிற்கெளிதானதாக விளங்கும் அட்டமூர்த்தியை அங்கயற்கண்ணி அன்பனை திரிகாலங்களிலுஞ்சென்று தலையால் வணங்கி இன்பந்தோன்றிய மனமுடையவர்களாகிக் கூண்டிலிருக்குந் தேனினைச் சூழ்ந்துநிற்கும் ஆறுகாற் சிறு பறவைகளைப்போல அந்தமஹாதலத்தில் வசிட்டாதி முனிவர்கள் தபோவனமுண்டாக்கி அவ்வனத்திலிருந்தார்கள். எ-று.

அருச்சனைப்படல முற்றிற்று.

---

திருவாலவாய்க்காண்ட முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-௩௩௬௪.

---

திருவிளையாடற்புராணம் முற்றிற்று.

